ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க.

# ஆசாரிய ஹ்ருதய மூலம்

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த

## வியாக்கியானத்தின் தமிழாக்கம்

## பகுதி 1–2

சென்னைப் பல்கலைக் கழகம்
தமிழ்த்துணைப்பேராசிரியர்
பண்டித வித்வான்
**B. R.** புருஷோத்தம நாயடு
ஆக்கியது.

சென்னைப் பல்கலைக் கழகம்.

1965

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க.

தேன ருமகிழ்த் தொடையலும் மவுலியும்
திருக்கிளர் குழைக்காதும்
கான ருமலர்த் திருமுகச் சோதியும்
கயிரவத் துவர்வாயும்
மோன மாகிய வடிவமும் மார்வமும்
முத்திரைத் திருக்கையும்
ஞான தேசிகன் சரணதா மரையுமென்
நயனம்விட் டகலாவே.

# முன்னுரை

யான் சென்னைப் பல்கலைக் கழகத்தின் ஆராய்ச்சித் துறையில் தமிழ் விரிவுரையாளராகத் தமிழ்த் தொண்டினை ஏற்குங் காலத்தில், உயர் திருவாளர். தி. மூ. நாராயணசாமிப் பிள்ளை, எம். ஏ., பி. எல்,. அவர்கள் (அண்ணுமலைப் பல்கலைக் கழக முன்னுள் துணைவேந்தர்) என்னைப் பார்த்து, 'திருவாய்மொழி ஈடு முப்பத்தாருயிரப்படி, ஆசார்ய ஹிருதய வியாக்கியானம், ஸ்ரீ வசனபூஷண வியாக்கியானம் என்னும் இம் மூன்றனையும் தமிழ் ஆக்கம் செய்தல் வேண்டும்; இத்தெய்வத் திருப்பணி தமிழ் கூறும் நல்லுலகத்திற்கு மிக்க பயன் தருவனவாம்; இவற்றுள், ஈடுமுப்பத்தாருயிரப்படி வியாக்கியானத்தை முதலில் தமிழ் ஆக்கம் செய்க' என்று ஆணையிட்டு ஏவினுர்கள். அப்பெரியார் பணித்தவாறே, ஈடு முப்பத்தாருயிரப்படி வியாக்கியானம் தமிழாக்கம் செய்யப் பெற்று, சென்னைப் பல்கலைக் கழகத்தாரின் பேராதரவால் நூல்வடிவில் வெளிவந்து பெரியார் பலருடைய பாராட்டுதலுக்கு முரியதாகி ஆசையுடையாரனைவரும் கற்றுப் பயன் துய்க்கும் முறையில் அது விளங்கிவருகின்றது.

இனி, இரண்டாவதாக, ஆசாரிய ஹிருதய வியாக்கியானம் அடியேனுல் தமிழாக்கம் செய்யப்பெற்று இறைவன் திருவருளால் இப்பொழுது வெளிவருகின்றது.

இந்நூலை அடியேன் அமைத்திருக்கும் அமைப்பு: படிப்பவர்களுக்கு எளிதாகவிருத்தலைக் கருதி மூல பாடங்களை-சூத்திரங்களைப் பதப்பிரிவு செய்தே எழுதியிருக்கின்றேன். யாற்றெழுக்காகப்

பொருள் அமைந்திராத சூத்திரங்களைப் பொருள் விளக்கத்திற்காகப் பொருளுக்கு இயையச் சொற்களைப் பிரித்து முன்னும் பின்னும் கூட்டிச் சேர்த்து அடிக்குறிப்பில் தந்திருக்கின்றேன். சூத்திரங்களில் வருகின்ற எச்சங்கட்கு முடிபும், அருஞ் சொற்களுக்குப் பொருளும் அடிக்குறிப்பில் காட்டியும் கொடுத்துமிருக்கிறேன். வியாக்கியான முழுதும் தமிழாக்கம் செய்யப்பட்டிருக்கின்றது. மரபுபற்றி வருகின்ற வடசொற்கள் சிலவற்றை அங்ஙனமே வைத்து அடிக்குறிப்பில் அவற்றிற்குப் பொருள்கள் எழுதப்பட்டிருக்கின்றன. பொருள் இனிது விளங்குவதற்காகச் சிலவிடங்களில் வியாக்கியான வாக்கியங்களில் முன்னுள்ளனவற்றைப் பின்னும் பின்னுள்ளனவற்றை முன்னுமாகப் பிரித்துக் கூட்டியமைத்திருக்கிறேன். வியாக்கியானத்தில் இடையிடையே வடமொழிச் சுலோகங்கள் வருகின்ற விடங்களில் அவ்வச் சுலோகங்களுக்குரிய பிண்டப் பொருளை அவ்வவ் விடங்களிலே எழுதி, அச்சுலோகங்களை அடிக்குறிப்பில் தந்திருக்கின்றேன். வியாக்கியானத்திலும் மூலத்திலும் வருகின்ற மேற்கோட் பகுதிகளான திருப்பாசுரங்கள் சுலோகங்கள் ஆகிய இவற்றிற்குப் பெரும்பாலும் மேற்கோள் விளக்கம் காட்டப்பெற்றிருக்கின்றது. இடம் விளங்கா மேற்கோள்களும் சில உள்ளன.

அடியேன் பெரிய தந்தையார் ஸ்ரீமத் புவனகிரி அழகியமணவாள ஏகாங்கி ஸ்வாமிகள் எழுதிவைத்திருந்த குறிப்பினை ஆதாரமாகக் கொண்டு, இந்நூலில் வருகின்ற 51-ஆம் சூத்திரத்திற்கு ஒரு விளக்கம் எழுதி இந்நூலின் இரண்டாம் பகுதியின் ஈற்றில் பக். 370 இல் சேர்த்திருக்கின்றேன்.

இந் நூலில் வருகின்ற மூலவாக்கியங்கள்

> "சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைச்
> செவ்வ னுடியிற் செறித்தினிது விளக்கித்
> திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம்"

என்னும் சூத்திர விலக்கணத்தவாய்த் திட்பம் நுட்பம் செறிந்து விளங்குதலின் மூல வாக்கியத்திற்குச் சூத்திரம் என்ற குறியீடே கொடுக்கப்பட்டிருக்கின்றது.

இந்நூலிற் கூறப்படும் பொருளெல்லாம் வேதாந்த விழுப்பொருள்களாதலின் வியாக்கியானத்தை எத்துணை எளிமையாக்கினும் சில சில சூத்திரங்களின் உட்பொருள்களை முற்றும் உணர்தற்கு அரிதேயாகும். தொல்காப்பியம் கற்றற்கு அரியதாதலைக் கருதிப் பின்னுள்ளார் நன்னூல் யாப்பருங்கலக்காரிகை முதலிய நூல்களை



இயற்றினர். அவையும் ஓர் ஆசானை அடுத்துக் கேட்டே அறிய வேண்டிய நிலையில்தானே இருக்கின்றன. கருவி நூல்களாகிய அவையே அங்ஙனமாயின், பரமவைதிக சித்தாந்தமான வைணவ மதத்தின் சந்தானத்திற்கு முதற் குரவரான நம்மாழ்வாருடைய திருவுள்ளத்தைக் கூறுகின்ற இவ்வாசாரிய ஹிருதயத்தைப் பற்றிச் சொல்லவேண்டாவே? ஆதலால், சில சில விடங்களைச் சத்சம்பிரதாயம் வல்ல பெரியார்களை யடுத்துக் கேட்டே தெளிதல் வேண்டும்.

இவ் வரிய பெரிய நூலினை நன்முறையில் அச்சிடுவித்து உலகிற்கு உபகரிக்கும், கரும்பு அயிலக் கூலி கொடுக்கும் குலத் தோன்றல்களான சென்னைப் பல்கலைக் கழகத்தின் ஆட்சிக் குழுவினர்க்கும் துணைவேந்தர் அவர்கட்கும் நன்றியறிதலோடு கூடிய என் வணக்கம் என்றென்றும் உரியதாகும்.

இவ்வியாக்கியானத்தைத் தமிழாக்கம் செய்யும் காலத்து மேன்மேலும் அடியேற்கு ஊக்கம் தந்து இந் நூலை முற்றுப் பெறச்செய்த பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனார் அவர்கட்கு நன்றி செலுத்தும் கடப்பாடுடையேன்.

காஞ்சீபுரம் பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீமத் உ. வே. அண்ணங்கராசாரிய ஸ்வாமிகளுடைய நூல்கள், அடியேன் இத் தமிழ் ஆக்கத்தைச் செய்தற்குப் பேருதவியாக விருந்தன. அப் பெரியார்க்கு நன்றி யறிதலோடு கூடித் திசை நோக்கித்தொழும் தீர்க்க பிரணமம் உரித்தாகும்.

'என்நா முதல் வந்து புகுந்து நல்லின் கவி தூ முதல் பத்தர்க்குத் தான் தன்னைச் சொன்ன என் வாய் முதலப்பன்' என்கிறபடியே, கருவிலே திருவுடைய நன்ஞானியர் செய்யத்தகும் சீரிய இத்தெய்வத் தமிழ்த்தொண்டினை 'நான் செய்தேன்' என்று உலகம் கூறும்படி என் நெஞ்சத்துள்ளிருந்து முற்றுவித்த அடியேன் பெரியதந்தையார் ஸ்ரீமத். புவனகிரி அழகிய மணவாள ஏகாங்கி ஸ்வாமிகட்கு அடியேன் செய்யும் கைம்மாறு யாதுளது?

> "மறப்பிலா என்னைத் தன்னாக்கி, என்னால் தன்னை
> உறப்பல இன்கவி சொன்ன உதவிக்கே."

> "உதவிக் கைம்மாறு என்உயிர் என்ன உற்று எண்ணில்
> அதுவும் மற்றுங் கவன்தன்னது, என்னால், தன்னைப்
> பதவிய இன்கவி பாடிய அப்பனுக்கு
> எதுவும் ஒன்றுமில்லை செய்வது, இங்கும்அங்கே."

என்பது ஆழ்வார் அமுதவாக்கு.

நூலின் உயர்வினையே குறிக்கோளாகக்கொண்டு இதனை நன் முறையில் அச்சிட்டு உதவிய இரத்தினம் அச்சக உரிமையாளர்க்கு நன்றி உரியதாகும்.

இத் தமிழாக்கம் தோன்றுதற்குக் காரணராக விருந்த செந் தமிழ்க்குரிசில் உயர் திருவாளர். தி. மூ. நாராயணசாமிப் பிள்ளை, எம்.ஏ., பி.எல். அவர்கட்கு அன்பு நிறைந்த என் மனம் கலந்த வணக்கத்தைச் செலுத்துகின்றேன்.

இங்ஙனம்,

சென்னை, 1—2—65

B. R. புருஷோத்தம நாயடு.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க.

# நூலாசிரியர் வரலாறு

அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர் என்னும் இப் பெரியார், நம் பிள்ளையின் மாணுக்கரும் திருவாய்மொழிக்குப் பகவத்விஷயம் என்று எல்லாராலும் போற்றப்படும் ஈடு முப்பத்தாறுயிரப்படி வியாக் கியானத்தை எழுதியவரும் ஆன வள்ளல் வடக்குத்திருவீதிப்பிள்ளையி னுடைய இளைய திருக்குமாரர். முமுக்ஷுப்படி, ஸ்ரீவசனபூஷணம் முதலிய பதினெட்டுச் சித்தாந்த சாத்திரங்களை (அஷ்டாதச ரஹஸ்யம்) அருளிச்செய்து மக்கள் மனவிருளை மாற்றிய பிள்ளை லோகாசாரியருடைய திருத்தம்பியார். வடமொழி வேத வேதாந்தங் களையும் வேதாங்கங்களையும் கற்றுத் துறைபோய பேரறிஞர். திருவாய் மொழி முதலிய தமிழ் மறைகளையும் அவற்றின் வியாக்கியானங் களையும் தம் அருமைத் தந்தையார்பால் உபதேச முறையில் கற்று உணர்ந்து தெளிந்து அடங்கிய சான்றோர்.

வன்பெருவானகம் உய்ய அமரர் உய்ய மண்ணுய்ய மண்ணுல கில் மனிசர் உய்ய, துன்பமிகு துயரகல அயர்வொன்றில்லாச் சுகம் வளர அகமகிழும் தொண்டர் வாழ, அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளிகொள்ளும் அணி அரங்கன் திருவரங்கத்திலே அவ தரித்தவர். அவ்வூரிலேயே வாழ்ந்தவர். பிரமசரிய நிலையினர்.

இப்பெரியார் இந் நிலவுலகத்தை அலங்கரித்துக்கொண்டு எழுந்தருளியிருந்த காலம் பதின்மூன்றும் நூற்றுண்டாகும். பட்டரைப் போன்றே இப்பெரியாரும் இப்பூவுலகில் நீண்டகாலம் வாழ்ந்திருக்கவில்லை; இளமையிலேயே அந்தமில் இன்பத்தழிவில் வீட்டினை அடைந்தனர்.

*மாமுடும்பை மன்னு மணவாள வண்ணலொடு*
*சேமமுடன் வைகுந்தம் சென்றக்கால்—மாமென்று*
*தொட்டுரைத்த சொல்லும் துயந்தன்னி னும்பொருளும்*
*எட்டெழுத்து மிங்குரைப்பா ரார்*

என்பது இப்பெரியார் திருநாடு அலங்கரித்த காலத்து இவர் திருத்த மையனுர் இரங்கிக் கூறிய செய்யுள்.

இவர் செய்த நூல்கள் :—

1. அமலனுதிபிரான் வியாக்கியானம்.
2. கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியானம்.
3. திருப்பாவை ஆருயிரப்படி வியாக்கியானம்.
4. பட்டோலை.
5. ஆசாரிய ஹிருதயம்.

என்பனவாம்.

**இவற்றுள் ஆசாரிய ஹிருதயம் அவதரித்த காரணம்:—** ஞானதேசிகரான நம்மாழ்வார் அருளிச்செய்த தமிழ்மறை நான் கனுள் சாமவேத சாரமான திருவாய்மொழியின் பொருள் விசேடங்களை வெளியிடுதற்கு ஆருயிரப்படி முதலிய ஐந்து வியாக்கியானங்கள் அவதரித்திருப்பினும், ஆழ்வாருடைய பெருமையினையும் அருளிச்செயலின் சீர்மையினையும் "வகுளாபரணன் ஓவாதுரைத்த, தமிழ் மாமறையின் ஒருசொற் பொறுமோ உலகிற் கவியே" என்கிற படியே திருவாய்மொழியின் ஒப்புயர்வற்ற சிறப்பினையும் இதில் சாரமாக அறியவேண்டிய உள்ளுறைப் பொருள்களையும் விசேடார்த்தங்களையும் அவ்வியாக்கியானங்கள் மூலமாக முற்றும் அறிய முடியாமையின், அவற்றை அறிவிக்கத் திருவுளங்கொண்டு "அருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே" எனப்படுகின்ற தம் பரமகிருபையால் செவ்விய மதுரம் சேர்ந்த நற்பொருளில் சீரிய கூரிய தீஞ்சொற்களாலே இந்நூலை அருளிச்செய்து, தீதில் நன்னெறியை இதன் மூலம் உலகில் பரவச்செய்தார்.

"இப்படி எழுந்தருளியிருக்கும் பிள்ளை லோகாசாரியர், பரம ரஹஸ்யமுமாய்த் திவ்விய சாஸ்திரமுமான ஸ்ரீவசன பூஷணத்தைச் சர்வரும் அதிகரித்து ஈடேறலாம்படி அருளிச்செய்து உலகத்தை வாழ்வித்தருள, அதனைக் கண்டு பாகவத உச்ச்ராயம் பொறுக்க மாட்டாது அழுக்காறு கொண்ட சிலர், நம்பெருமாள் பக்கலிலே சென்று 'ஸ்வாமீ! பிள்ளை லோகாசார்யர் ஸ்ரீவசனபூஷணம் என்று ஒரு ரஹஸ்யகிரந்தமிட்டு நம் தரிசனத்தைப் பாழ்படுத்தி விட்டார்' என்று கோள் சொல்ல, பெருமாளும் அதனைக் கேட்டுச் சீறிப் பிள்ளை லோகாசாரியரை அழைத்துவிட, அவ்வளவிலே அவர் நீராட வெழுந்தருளியிருக்க, நீராடி எழுந்தருளுகிற அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர் இவ் விசேஷம் கேட்டுப் பெருமாள் சந்நிதியிற் சென்ற வாறே, பெருமாளும் அர்ச்சகமுகேந 'நாயனுரே! நாம் அவதாரம் பண்ணினது தர்மத்தை நிலை நிறுத்தும் பொருட்டன்றோ? நீங்கள் இரஹஸ்ய கிரந்தமிட்டு அந்தத் தர்மங்களைக் குலைப்பது என்?' என்று



வினவியருள, அழகிய மணவாளப் பெருமாள் நாயனுரும் ஸ்ரீவசன பூஷண ஸ்தாபநார்த்தமாகத் தாம் செய்தருளின ஆசாரிய ஹிருதய மாகிற நூலை, பெருமாள் சுரோதாவாகத் தாம் வக்தாவாகத் தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலை சொன்னுற்போலே, இவர் ஆசாரிய ஹிருதயத்தை விண்ணப்பம் செய்து தலைக்கட்டினவாறே, பெருமாள் மிகவும் திருவுள்ளம் உகந்தருளி 'இதுவும் நாம் சொன்னது ஒன்றன்றோ!' என்று நாயனுருக்குத் தம் சர்வஜ்ஞ பரிச்சதங்களோடே பிரஹ்மரதம் பிரசாதித்து உபலாளித்துத் திருமாளிகையே போகவிட்டருளினர். இவ்வைபவம் கேட்டுப் பிள்ளை லோகாசாரியரும் நாயனுரை 'வளர்த்ததனுல் பயன் பெற்றேன் வருக வென்று' அதிசந்தோஷத்தோடே தழுவிக்கொண்டார்" என்று, இந்த நூல் வந்த வரலாற்றினை யதீந்திரப்பிரவணர்பிரபாவம் என்ற நூல் கூறுகின்றது.

**பெயர்க் காரணம் :—** பரமவைதிக சித்தாந்தமான வைணவ மதத்தின் சந்தாநத்திற்கு முதற்குருநாதரான நம்மாழ்வாரால் அருளிச்செய்யப்பட்ட திவ்வியப்பிரபந்தங்களால் அறியப்படும் அவர் தம் திருவுள்ளக் கருத்தினை எல்லாரும் அறியும்படி தெளிவுற வெளியிடுகையாலே இந்நூலுக்கு 'ஆசாரிய ஹிருதயம்' என்ற பெயர் அமைந்தது. ஆசாரியருடைய ஹிருதயம் என விரியும். ஆசாரியர்—நம்மாழ்வார். ஹிருதயம்—மனம். **மாறன் மனம்** என்றபடி. இவ்வுண்மையை இந்நூலின் உரைப்பாயிரத்தாலும்,

> "பணவாள் அரவணைப் பள்ளி பயில்பவர்க் கெவ்வுயிரும்
> குணபோக மென்று குருகைக் கதிபன் உரைத்த துய்ய
> உணர்பாவி னுட்பொருள் ஒன்று மறியா வுலகறிய
> மணவாளன் மாறன் மனமுரைத் தான்வண் முடும்பை
> [வந்தே."

என்னும் இந்நூல் தற்சிறப்புப்பாயிரத்தானும் உணர்தல் தகும்.

**நூல்வந்தவழி:—** அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர் தாம் அருளிச்செய்த ஆசாரிய ஹிருதயம் என்னும் இந் நூலைத் தோதவத்தித் தூய்மறையோரான பெற்றுர்க்கு அளித்தார். அப் பெரியார் திரு நாராயணபுரத்து ஆய்க்கு அளித்தார். அப் பெரியார் மணவாள மாமுனிகளுக்கு அளித்தார். மணவாள மாமுனிகளும் இவ்வுலகமக்கள்பால் வைத்த தம்முடைய பேரருளால் அந்நூலுக்குத் தேனும் பாலும் அமுதுமாகித் தித்திக்கும்படியான பேருரை ஒன்றனை எழுதி, ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள் கூறு மென்று பேசி, இம் மலர்தலையுலகின் மல்கிருள் இரியும்படி அதனை இவ்வுலகினர்க்கு அளித்தனர்.

## நூலின் பெருமை

இந்நூல் ஒப்புயர்வற்றது. அருமறை துணிந்த பொருண் முடிவை இன்சொல் அமுதொழுகுகின்ற தமிழினில் விளம்பியருளிய சடகோபர்க்கு ஒப்பு உலகில் ஒருவர் உளராயின், இந்நூலுக்கும் ஒப்பு உலகில் உண்டு, இது உயர்வு நவிற்சியன்று. வடவேங்கடம் தென் குமரியாயிடைத் தமிழ் கூறும் நல்லுலகத்து இது போன்ற தொரு நூல் இது காறும் தோன்றியதில்லை. இதனுடைய அருமை பெருமைகள் சொல்லில் அடங்கா.

பூத்தொடுப்பதில் வல்லான் ஒருவன் பலவகைப் பட்ட பூக்களுள் நறிய நன்மலர்களை நாடிச் சேர்த்துப் பொலிவுறத் தொடுத்த வொரு பூமாலையைப்போன்று, இப்பெரியார் இந்நூலை யாத்திருக்கின்றார். ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்வியப்பிரபந்தங்கள், ஆசாரியர்கள் அருளிச்செய்த தோத்திர ரத்தினங்கள், இதிகாச புராணங்களான ஸ்ரீராமாயணம் ஸ்ரீவிஷ்ணுபுராணம் ஆகிய இவற்றுள் நின்றும் சொற்களையும் சொற்றொடர்களையும் எடுத்து ஒழுகிய வோசையும் விழுமிய பொருளும் பயப்பத் தொடுத்து யாத்திருக்கின்றார். இவற்றுள்ளும் செவிக்கினிய செஞ்சொல்லாய்ப் பண்ணார் பாடலாய்ப் பாலேய் தமிழர் இசைகாரர் பத்தர் பரவும் ஆயிரமான திருவாய் மொழியின் சொற்றொடர்களையே மிகுதியும் எடுத்துக் கையாளுகின்றார்.

இங்ஙனம் தொடுத்திருக்கும் அழகினை— ஆற்றலை ஒரு சூத்திரம் மூலமாகப் பார்ப்போம்.

"காருணிகனான சர்வேச்வரன் அறிவிலா மனிசர் உணர் வென்னும் சுடர் விளக்கேற்றிப் பிறங்கிருள் நீங்கி மேலிருந்த நந்தா வேத விளக்கைக் கண்டு நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின பிரதீபமான கலைகளை நீர்மையினால் அருள் செய்தான்."

என்பது இந் நூலின் முதற் சூத்திரம். 'அறிவில்லாத இவ்வுலக மக்கள் மனத்தின்கண் செறிந்த அறிவின்மையாகிற இருள் நீங்க, ஞானச்சுடர் விளக்கினை ஏற்றி, வேதவிழுப்பொருளாகிய இறைவனைக் கண்டு, செய்வன தவிர்வனவற்றைப் பகுத்துணர்தற்குத் தகுதியாக, கருணையங்கடலான இறைவன் அகர வெழுத்தினின்றும் விரிந்த வேத சாஸ்திரங்களைத் தனது பேரருளால் அருள் செய்தான்' என்பதே இச் சூத்திரத்தில் சொல்லவேண்டிய பொருள். இங்ஙனம் சொல்லவேண்டிய இப்பொருளினை வேறு சொற்களாலும் அமைத்திருக்கலாம். அங்ஙனம் அமைக்காது, பட்டர், தொண்டரடிப்பொடியாழ்வார், பேயாழ்வார், பூதத்தாழ்வார், திருமங்கை மன்னன், பெரியாழ்வார், நம்மாழ்வார், திருமழிசைப்பிரான் என்னும் இப் பெரியார்களுடைய திருப்பாசுரப்பகுதிகளைக்கொண்டு தொடுத்திருக்கும் வனப்புத்தான் என்னே! ஆற்றல்தான் என்னே! கற்ற கல்வியின் பரப்புத்தான் என்னே! அவற்றில் இவருடைய நுண்மாண் நுழைபுலம்தான் என்னே! பாரீர், பாரீர்.



இங்ஙனம் தொடுக்கும் இப் பேராற்றல் இப் பெரியார் ஒருவர்க்கே அசாதாரணமாக அமைந்தது ஒன்று.

"இல்லாத வுலகத் தெங்கு மிங்கிவ னிசைகள் கூரக்
கல்லாத கலையும் வேதக் கடலுமே என்னும் காட்சி
சொல்லாலே தோன்றிற் றன்றே யார்கொலிச் சொல்லின்
[செல்வன்"

என்ற பொருள் பொதிந்த புகழுரைக்கு இப்பெரியார் ஒருவரும் உளர் என்றே உணர்தல் தகும்.

மேலே காட்டிய சூத்திரத்தில், பொருளுக்குஇயையத் திரித்துள்ள எச்சத்திரிபுகள் சிலவும் இடைச்சொற்கள் சிலவும் தவிர ஏனைய வெல்லாம் முன்னோர் மொழிந்த மொழிகளேயாகும்.

"காருணிகனான சர்வேச்வரன் விவேகிக்கைக்கு—பிரதீபமான" என்ற சொற்றொடர்கள் பராசரபட்டருடைய ஸ்ரீசூக்திகள். "விவேக்தும் ஈச: மாநம் பிரதீபமிவ காருணிகோ ததாதி" என்பது அப்பெரியாருடைய அமுதவாக்கு. (ஸ்ரீரங்கராஜஸ்தவம் உத்தர சதகம், *1.*)

அதற்குமேல் உள்ள 'அறிவிலா மனிசர்' என்பது திருமாலை. "அறிவிலா மனிசரெல்லாம் அரங்கமென் றழைப்பா ராகில்" என்பது அப்பகுதி. அதற்குமேல் உள்ள 'உணர்வென்னும் சுடர்விளக்கேற்றி' என்பது, இரண்டாந் திருவந்தாதியினின்றும், மூன்றாந் திருவந்தாதியினின்றும் எடுக்கப்பட்டது. "உணர்வென்னும் ஒளி கொள் விளக்கேற்றி" என்பது இரண்டாந்திருவந்தாதி. "ஞானச் சுடர்விளக்கேற்றினேன் நாரணற்கு" என்பது மூன்றாந்திருவந்தாதி.

அதற்குமேல் உள்ள 'பிறங்கிருள் நீங்கி' என்பது, பெரிய திருமொழியினின்றும், பெரியாழ்வார் திருமொழியினின்றும் எடுக்கப்பட்டது. "பிறங்கிருள் நிறம்கெட வொருநாள், அன்னமா யன்றங் கருமறை பயந்தான்" என்பது பெரிய திருமொழி. "பின்னிவ்

வுலகினில் பேரிருள் நீங்க வன்று அன்னமதானேனே '' என்பது பெரியாழ்வார் திருமொழி.

அதற்கு மேல் உள்ள "மேலிருந்த நந்தா வேத விளக்கைக் கண்டு'' என்பது, பெரியாழ்வார் திருமொழி, பெரிய திருமொழி, திருவாய்மொழி என்னும் இவற்றினின்றும் எடுக்கப்பட்டது. "வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கு'', "நந்தா விளக்கே அளத்தற்கரியாய்'', "மிக்க ஞானமூர்த்தியாய வேதவிளக்கினைக் கண்டு'' என்பன அப்பகுதிகள்.

அதற்குமேல் உள்ள 'நல்லதும் தீயதும்' என்பது, 'இவையன்றே நல்ல இவையன்றே தீய'' என்ற பெரிய திருவந்தாதி. அதற்கு மேல் உள்ள 'விவேகிக்கைக்கு' என்பது மேலே விளக்கப்பட்டது.

அதற்கு மேல் உள்ள 'மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின' என்பது, பெரியதிருமொழி, திருச்சந்த விருத்தம் இவற்றினின்றும் எடுக்கப்பட்டது. "மறையாய் விரிந்த விளக்கை'' என்பது பெரிய திருமொழி. "துளக்கமில் விளக்கமாய்'' என்பது திருச்சந்த விருத்தம்.

அதற்கு மேல் உள்ள 'பிரதீபமான' என்பது மேலே விளக்கப்பட்டது.

அதற்கு மேல் உள்ள 'கலைகளை நீர்மையினால் அருள் செய்தான்' என்பது, பெரிய திருமொழியினின்றும் எடுக்கப்பட்டது. "கலைகளும் வேதமும் நீதி நூலும் கற்பமும் சொற்பொருள் தானும் மற்றை, நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினால் அருள் செய்து'' என்பது அப்பகுதி.

இந்நூலில் மேலே வருகின்ற எல்லாச் சூத்திரங்களும் ஒரு சில தவிர இவ்வகையிலேயே அமைந்திருத்தலை அவ்வச் சூத்திரங்களின் அடிக்குறிப்பால் தெளிக.

நூலில் சொல்லப்பட்ட பொருளின் சுருக்கம் :—

திருவாய்மொழியின் பெருமையினையும் அதனை அருளிச்செய்த ஆழ்வாருடைய சீர்மையினையும் திருவாய்மொழியிற் சொல்லப்பட்ட பொருள் விசேடங்களையும் கூறப்புகுந்த ஆசிரியர் அவற்றிற் குறுப்பாக—முன்னுரையாக முதலில், கருணையங்கடலான இறைவன் தன் பேரருளால், அறிவில்லாத மக்கள் உண்மை ஞானத்தை யடைந்து நல்லதும் தீயதும் பகுத்தறிதற்குக் கருவியாகச் சாத்திரங்களைக் கொடுத்தபடியை பதினைந்து சூத்திரங்களால் அருளிச்



செய்து, அதற்குமேல் ஒரு சூத்திரத்தால் (*16*) அந்தச் சாத்திரங்களால் உண்மை ஞானம் பிறப்பதற்கு உளதாகும் அருமையை நினைந்து சாத்திரங்களின் கருத்துப் பொருளான திருமந்திரத்தை வெளியிட்டபடியை அருளிச்செய்து, அதற்கு மேல் இருபத்திரண்டு சூத்திரங்களால் (*17—38*). அந்தச் சாத்திரங்களிலும் சாத்திரங்களின் கருத்துப் பொருளான திருமந்திரத்திலும் சொல்லப்பட்ட விஷயங்களின் வேறுபாடு முதலியவற்றையும் அந்தச் சாத்திரங்களிலும் திருமந்திரத்திலும் ஊன்றி நிற்பவர்களான அதிகாரிகளின் தன்மைகளையும் அருளிச்செய்கிறார்.

அதற்குமேல் இருபத்தாறு சூத்திரங்களால் (*39—74*) திருவாய்மொழியினுடைய பெருமையை அருளிச்செய்து, அதற்குமேல் பத்தொன்பது சூத்திரங்களால் (*75—93*) திருவாய்மொழியை அருளிச்செய்த ஆழ்வாருடைய பிரபாவத்தை வெளியிட்டு, அதற்கு மேல் இருபத்து நான்கு சூத்திரங்களால் (*94—117.*) ஆழ்வாருடைய அந்தப் பிரபாவத்திற்கு மூலமான இறைவனுடைய திருவருளையும் அத்திருவருள் காரணமாக ஆழ்வார்க்கு உண்டான ஞானத்தையும் பக்தியையும் விரித்துக் கூறுகிறார்.

அதற்கு மேல் நான்கு சூத்திரங்களால் (*118 - 121*) அந்த ஞான நிலையிலும் பக்தி நிலையிலும் இவர் பேசுகின்ற பேச்சுக்களை விளக்கி, அவற்றுள் பக்தி நிலையில் பிராட்டிமாரோடும் இறைவனுடைய அடியார்கள் அனைவரோடும் இவர்க்கு உளதாகும் ஒப்புமையை அதற்குமேல் பதினொரு சூத்திரங்களால் (*122 - 132*) விளக்கி, அந்தப் பக்திநிலையில் இவர் பேசுகின்ற அந்யாபதேசங்களுக்குச் சுவாபதேசப் பொருள்களை அதற்குமேல் இருபத்தாறு சூத்திரங்களால் (*133 - 158*) வெளியிடுகிறார்.

அந்தப் பக்திக்கு நிலைக்களமான திவ்விய தேசங்களில் எழுந்தருளியிருக்கின்ற இறைவனுடைய குணவிசேடங்களை அதற்குமேல் இருபத்தெட்டு சூத்திரங்களால் (*159 - 186.*) வெளியிட்டு, அந்தக் குணங்களையுடைய இறைவனிடத்தில் உண்டான அனுபவங்களால் தோன்றின அன்பினாலே தூண்டப்பட்டு இப் பிரபந்தங்கள் அவதரித்தன என்னுமதனை அதற்குமேல் இரண்டு சூத்திரங்களால்(*187-188*) வெளியிடுகிறார்.

அதற்குமேல் ஆறு சூத்திரங்களால் (*189 - 194*) திருவாய்மொழியிற் கூறப்படும் பொருளின் ஒற்றுமையால் ஸ்ரீகீதையோடு திருவாய்மொழிக்குண்டான ஒப்புமையினையும் அதனைக் காட்டிலும் இதற்குள்ள ஏற்றத்தினையும் அருளிச்செய்கிறார்.

அதற்குமேல் பதின்மூன்று சூத்திரங்களால் (*195 - 207.*) இத் திருவாய்மொழியில் இவர் உபதேசிக்கின்ற விஷயபேதங்களையும் அந்த அந்த விஷயங்கள் தோறும் உபதேசிக்கிற அர்த்த விசேடங்களையும் அதன் மூலமாக உபதேசத்திற்குரியனை மாணுக்கன் இலக்கணத்தையும் உபதேசம் கேட்பதற்குத் தகுதியில்லாதார்க்கும் இவர் உபதேசிப்பதற்குரிய காரணங்களையும் புகழ் பொருள் முதலிய வற்றில் விருப்பமின்றிப் பகவானுக்குச் செய்யப்படும் தொண்டு என்னும் எண்ணத்தால் உபதேசிக்கையாலே உபதேசம் பயன்பெற்றபடியையும் அருளிச்செய்கிருர்

அதற்குமேல் ஐந்து சூத்திரங்களால் (*208 - 212.*) இப்பிரபந்தங்கள்தாம் திருமந்திரம் துவயம் சரமச்சுலோகம் என்னும் இரஹஸ்யத்திரயங்களின் பொருள்களைக் கூறுகின்றன என்பதனையும் அந்த இரஹஸ்யத்திரயத்தில் சொல்லப்படுகின்ற ஐம்பொருள்களும் இப் பிரபந்தங்களிலே சுருக்கமாகவும் விரிவாகவும் சொல்லப்படுகின்ற வகையினையும் வெளியிடுகின்ருர்.

அதற்குமேல் ஒரு சூத்திரத்தால் (*213*) நூலின் தொடக்கத்திலே சொல்லப்படவேண்டிய வாழ்த்து வணக்கம் வருபொருளுரைத்தல் என்னுமிவைகள் இப் பிரபந்தத்தின் முதலிலே அமைந்துள்ளபடியை விளக்குகிருர்.

அதற்குமேல் ஒரு சூத்திரத்தால் (*214*) சர்வேச்வரனுகிய இறைவனுடைய பத்து அவதாரங்கள் போலே இத் திருவாய்மொழியும் பத்துப் பத்துக்களாக அவதரித்தபடியை வெளியிடுகிருர்.

அதற்குமேல் ஒரு சூத்திரத்தால் (*215*) இப் பத்துக்களையும் இப் பத்துக்களின் தொகுதியான பிரபந்தத்தையும் ஆழ்வார் சிறப்பித்துப் பேசின திருப்பாசுரங்களில் அவருடைய திருவுள்ளக் கருத்தினைத் திருஷ்டாந்தத்தோடு அருளிச்செய்கிருர்.

அதற்குமேல் ஒரு சூத்திரத்தால் (*216*) பத்துக்கள் தோறும் உபதேசபரமான ஒவ்வொரு திருப்பதிகம் முக்கியமானதாய் அவ்வப் பத்துக்களுக்கு அவ்வத் திருப்பதிகத்திலே நோக்காக விருக்கும்படியைத் திருஷ்டாந்தத்தோடு விளக்குகிருர்.

அதற்குமேல் ஒரு சூத்திரத்தால் (*217*) திருவாய்மொழியிலே பகவானுடைய பக்தர்களைப்பற்றி வருகின்ற திருப்பாசுரங்களுக்குக் கருத்து இன்னது என்பதனைத் தெரிவிக்கிருர்.



அதற்குமேல் ஒரு சூத்திரத்தால் (*218*) பரத்துவம் முதலான குணங்களோடு கூடின சர்வேச்வரன் திருவாய்மொழியில் ஒவ்வொரு பத்திலும் ஆழ்வார்க்குப் பிறப்பித்த நிலை வேறுபாடுகளைச் சுருக்கமாக வருளிச்செய்கிருர்.

அதற்குமேல் பத்துச் சூத்திரங்களால் (*219 - 228*) திருவாய்மொழியில் பத்துப் பத்துக்களாலும் சொல்லப்படுகின்ற பரத்துவம் முதலான பத்துக் குணங்களையும், இப் பத்துக் குணங்களோடும்கூடின இறைவன் பத்துப் பத்துக்களிலும் இவ்வாழ்வார்க்குத் தத்துவ ஞானம் முதலாக மோக்ஷம் இறுதியாகப் பிறப்பித்த நிலை விசேடங்களையும், பத்துத்தோறும் இவர்தாம் இவ்வுலக மக்கட்கு உபதேசித்த உபதேச வகைகளையும் வெளியிடுகிருர்.

அதற்குமேல் ஒரு சூத்திரத்தால் (*229*) முதன் முதலிலேயே இவ்வுலக வாழ்விலே துன்பமும் வெறுப்பும் இவ்வாழ்வார்க்குப் பிறந்திருக்கச்செய்தேயும் இறைவன் இவரை இவ்வுலகில் வைத்திருந்ததற்கு உரிய காரணங்களை வெளியிடுகிருர்.

அதற்குமேல் மூன்று சூத்திரங்களால் (*230—232*) இறைவன் இவர்க்குப் பிறப்பித்த பரபக்தி, பரஞான, பரம பக்திகளாகிற நிலை வேறுபாடுகளைக் காட்டுகின்ற திருவாய்மொழிகள் இன்னவை என்பதனைத் தெரிவிக்கிருர்.

அதற்குமேல் ஒரு சூத்திரத்தால் (*233*) பரபக்தி முதலிய வற்றின் தன்மையை இறைவன் வார்த்தைகளைக் கொண்டு விளக்குகிருர்.

திருமகள் கேள்வனுன சர்வேச்வரனுடைய (ஒரு காரணத்தையும் பற்ருத) பேரருளே இவ்வுலக வாழ்வினை அறுத்து மோக்ஷத்தைக் கொடுக்கவல்லது என்னுமதுவே திருவாய்மொழியால் தேறிய கருத்து என்னுமதனை அதற்குமேல் ஒரு சூத்திரத்தால் (*234*) கூறிப் பிரபந்தத்தை முடிக்கிருர்.

இருள் தரு மா இஞ்ஞாலத்தே இன்பமுற்று வாழவிரும்பும் ஒவ்வொருவரும் அன்போடு இந்நூல் முழுதினையும் படித்தறிதல் தகும். மாட்டிற்றிலராகில், முதல் தொண்ணூறு சூத்திரங்களையாவது அவற்றின் உரையோடு படித்தறிதல் தகும்.

*14, 15, 16, 52, 53, 54, 57, 83, 131, 132, 157, 187, 188, 203, 229, 230, 231, 232* இவ்வெண்ணுள்ள சூத்திரங்கள் படித்து மனத்திற் பதித்தற்குரியனவும் இன்புறுதற்குரியனவுமாம்.

*12, 20, 21, 22, 23, 24, 102, 103, 104, 112, 113, 121, 122, 211, 212* இவ்வெண்ணுள்ள சூத்திரங்கள் வைணவ சித்தாந்த நூல்களிலே உள்ள கருத்துக்களை உணர்த்துகின்றன வாதலின், அந் நூல்களின் பயிற்சியின் துணைகொண்டு அறியத்தக்கனவாகும்.

*133* முதல் *155* முடியவுள்ள சூத்திரங்கள் புலவர் பெரு மக்கட்கு ஒரு பெரு நல்விருந்தாகும். அகப்பொருள் சம்பந்தமான கிளவிகளுக்கு உள்ளுறை (அந்யாபதேசங்கடகுச் சுவாபதேசம்) கூறுகின்றனவாதலின். இத்தகைய வுள்ளுறைப் பொருளை வேறு எவரும் இதுகாறும் உரைத்திலர்.

" திருவாத வூர்மகிழ் செழுமறை முனிவர்
ஐம்பொறி கையிகந் தறிவா யறியாச்
செம்புலச் செல்வ ராயின ராதலின்
அறிவனூற் பொருளு முலகநூல் வழக்குமென்
றிருபொருளும் நுதலி யெடுத்துக் கொண்டனர் ;
ஆங்கவ் விரண்டனுள்,
ஆகமநூல் வழியின் நுதலிய ஞான
யோகநுண் பொருளினை யுணர்த்துதற் கரிது ;
உலகநூல் வழியின் நுதலிய பொருளெனும்
அலகில் தீம்பால் பரவைக் கண்ணெம்
புலனெனும் கொள்கலன் முகந்த வகைசிறிது
உலையா மரபின் உரைக்கற் பாற்று "

என்று திருக்கோவையாருக்கு உரை எழுதிய பேராசிரியர் கூறுவர்.

அழகியமணவாளப் பெருமாள் நாயனூர் அடியிணைகள் வாழ்க.

---

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க.

## உரையாசிரியரைப்பற்றிய சில குறிப்புகள்

பரமவைதீக சித்தாந்தமாய்த் தமிழ்ப்பெருமக்களின் மதமாகிய வைணவ மதத்தின் தத்துவங்களை உலகிற்கு உபதேசித்து எங்கும் பரவச்செய்து அதனை வளர்த்த பெரியோர்களை ஆழ்வார்கள் என்றும் ஆசாரியர்கள் என்றும் வழங்குவர். மறையின் குருத்தின் பொருளை யும் செந்தமிழ் தன்னையும் ஒன்றத் திரித்துத் திருவாய்மொழிமுதலான பிரபந்தங்களை அருளிச்செய்து தீதில் நன்னெறியாகிய ஞானச்சுடர் விளக்கினை ஏற்றினவர்கள் ஆழ்வார்கள் என்று பேசப்படுவர். ஸ்தோத்திரரத்தினம் முதலான தோத்திரங்கள் மூலமாகவும் சுந்தர பாஹுஸ்தவம் வரதராஜஸ்தவம் முதலிய ஸ்தவங்கள் மூலமாகவும் வியாக்கியானங்கள் மூலமாகவும் தங்கள் ஞான அநுஷ்டானங்கள் மூலமாகவும், ஆழ்வார்கள் ஏற்றிய அந்த ஞானச்சுடர் விளக்கினை உலகமக்கள் எல்லாருடைய உள்ளங்களிலும் பிரகாசிக்கச் செய்த வர்கள் ஆசாரியர்கள் என்று பேசப்படுவர்.

ஆழ்வார்களுள் முதல்வராய் எய்தற்கரிய மறைகளை ஆயிரமின் தமிழால் செய்தற்குலகில்வந்த நம் சடகோபரே ஆசாரிய பரம்பரைக்கு முதல்வராவர். இவருடைய சிஷ்யர், ஆரப்பொழில் தென்குருகைப் பிரான் அமுதத் திருவாய் ஈரத்தமிழின் சீரைப் பயின்றுய்யும் சீலம் கொள் நாதமுனி ஆவர். இவர் அந்தணர் மரபினர் ; ஒன்பதாம் நூற்றுண்டிலிருந்தவர். இவருடைய சிஷ்யர் உய்யக்கொண்டார். இவருடைய சிஷ்யர் மணக்கால் நம்பி. இவருடைய சிஷ்யர் ஆளவந் தார். இவருடைய சிஷ்யர் பெரிய நம்பி. இவருடைய சிஷ்யர் இராமா நுசர். [1]இவருடைய சிஷ்யர் எம்பார். இவருடைய சிஷ்யர் பட்டர். இவ ருடைய சிஷ்யர்நஞ்சீயர். இவருடைய சிஷ்யர் நம்பிள்ளை .[2]இவருடைய சிஷ்யர் வடக்குத் திருவீதிப்பிள்ளை. இவருடைய சிஷ்யர் பிள்ளைலோகா

---

1. கூரத்தாழ்வான், எம்பார் இவர் இருவரும் இராமாநுசருடைய சிஷ்யர்கள்.

2. பெரியவாச்சான் பிள்ளை, வடக்குத்திருவிதிப் பிள்ளை இவ்விரு வரும் நம்பிள்ளையின் சிஷ்யர்கள்.

சாரியர். இவருடைய சிஷ்யர் திருவாய்மொழிப்பிள்ளை என வழங்கும் திருமலையாழ்வார். இவருடைய சிஷ்யர் மணவாள மாமுனிகள். இவருடைய காலம் பதினான்காம் நூற்றாண்டாகும். இவரோடு பூர்வாசாரியர்கள் பரம்பரை முடிவுறுகின்றது. சந்தான பரம்பரையில் ஆசார்யர்களுள் முதல்வர் நம்மாழ்வார். கடைக்குட்டி ஆசாரியர் மணவாள மாமுனிகள்.

ஆக, ஒன்பதாம் நூற்றாண்டு முதல் பதினான்காம் நூற்றாண்டு இறுதியாக உள்ள இந்த ஆறு நூற்றாண்டுகளும் இப்பெரியார்கள் ஒருவர்பின் ஒருவராகத் திருவரங்கம் பெரிய கோயிலில் நித்திய வாசம் செய்துகொண்டு, தீதில் நன்னெறியாகிய வைணவ நெறியினை மக்கட்கு ஓதி, ஆழ்வார்கள் ஏற்றிய ஞானச்சுடர் விளக்கின் பேரொளி எண்திக்குகளிலும் பரவும்படி செய்து வந்தமையால் திருவரங்கம் பெரிய கோயிலானது உலகிற்கே ஒரு நடுநிலைத் தீபமாகப் "பத்தர்களும் பகவர்களும் பழமொழிவாய் முனிவர்களும் பரந்த நாடும், சித்தர்களும் தொழுதிறைஞ்சத் திசை விளக்காய் நிற்கின்ற திருவரங்கமே" என்ற பெரியாழ்வார் திருப்பாசுரத்தின் பொருளை மெய்ப்பித்துக்கொண்டு விளங்கிற்று. தமிழ் நாட்டிற்கு - ஏன் இத் தேசத்திற்கே இக்காலம் ஒரு பொற்காலமாகும்!

ஆசாரிய பரம்பரையில் கடைக்குட்டி ஆசாரியரான மணவாள மாமுனிகளே இந்நூலுக்கு உரை வகுத்த பேராசிரியர். இவர், திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த ஆழ்வார் திருநகரி என வழங்கப்படுகின்ற திருக்குருகூர் என்ற திவ்விய தேசத்திலே அவதரித்தவர். திருநாவீறுடையபிரான்தாதர் அண்ணருடைய திருக்குமாரர். அந்தணர் மரபினர். 'அழகிய மணவாளன்' என்பது இவருடைய இயற்பெயர். இப் பெரியார், சொல்லார் தமிழ் ஒரு மூன்றும் சுருதிகள் நான்கும் எல்லையில்லா அறநெறியாவும் தெரிந்தவராய், மறந்திகழும் மனமொழித்து வஞ்ச மாற்றி வன்புலன்கள் அடக்கி இடர்ப்பாரத்துன்பம் துறந்து இருமுப்பொழுது ஏத்தி எல்லையில்லாத் தொன்னெறிக்கண் நிலை நின்ற தொண்டராய் இல்லறத்தில் வாழ்ந்து வரும் காலத்தில் இவருக்கு ஒரு திருக்குமாரர் அவதரித்தார். அக் குழந்தைக்கு ஆசாரியர் நியமனத்தின்படி 'இராமாநுசப்பிள்ளை' என்ற திருப்பெயரைச் சூட்டினர். ஜீயர் நயினார் என்றும், ஆசார்ய பௌத்திரர் என்றும் பிரசித்தராய் மகாபண்டிதோத்தமராய் விளங்கினவர் இவருடைய பௌத்திரர் ஆவர்.

பிள்ளைலோகாசாரியருடையசிஷ்யரும் ஆழ்வார்களுடைய ஈரச் சொற்களிலே ஈடுபட்ட பக்தி காரணத்தால் திருவாய்மொழிப்பிள்ளை



என்ற சிறப்புப்பெயர் பெற்றவருமான 'திருவாய்மொழிப்பிள்ளை' என்ற பெரியார் இவருடைய ஆசாரியராவர், அவரும் இவரை 'ஆம் முதல்வன்' என்று குளிரக் கடாக்ஷித்துத் தம் திருவடிவாரத்திலே நிழலும் அடிதாறும் போன்று வைத்திருந்து, தம்முடைய சேம வைப்பான அர்த்தவிசேடங்கள் எல்லாவற்றையும் முறையாக உபதேசித்தருளினார், இவரும் தேவு மற்றறியாது அவர் திருவடிகளிலே செய்கின்ற அத்தாணிச்சேவகத்தையே போதுபோக்காகக்கொண்டு வாழ்ந்து வந்தார்.

இங்ஙனம் இருக்கும் நாளில் ஆசாரியரான திருவாய்மொழிப் பிள்ளை, புகழ் மலிந்த பா மன்னு மாறன் அடிபணிந்து உய்ந்தவரான இராமாநுசருக்குத் திருக்குருகூரிலே குன்றமன்னதோர் கோயிலை எடுப்பித்து, இராமாநுச சதுர்வேதிமங்கலம் என்றதோர் வீதியையுமுண்டாக்கி, இராமாநுசனைத் தொழும் பெரியோர்களை அங்கே குடியேறச்செய்து, அக்கோயில் நிர்வாக மனைத்தையும் தம் சிஷ்யரான மணவாளமாமுனிகளிடத்திலேயே ஒப்படைத்தார்.

இவரும் இராமாநுசரிடத்தில் மிக்க ஈடுபாடுடையவராய் அக் கோயில் நிர்வாகமனைத்தையும் திறம்பட நடத்தி வந்தார். நடத்தி வரும் இவருடைய ஈடுபாட்டினைக் கண்ட ஆசிரியர், இவருக்கு 'யதீந்திரப் பிரவணர்' என்ற திருப்பெயரைச் சூட்டி, இராமாநுசர் விஷயமாக ஒரு நூல் இயற்றுக என்று கட்டளையிட, அக்கட்டளையைச் சிரமேற்றாங்கி 'எதிராஜவிம்சதி' என்றதொரு நூலை அப்பொழுதே இவர் அருளிச்செய்தனர். இது, திருக்குருகூரில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் இராமாநுசர் விஷயமாகச் செய்யப் பட்டதொரு வடமொழி நூல். இருபது சுலோகங்களையுடையது. எதிராசர் - துறவிகட்குத் தலைவர்; இராமாநுசர். விம்சதி - இருபது.

மேலும், ஆசிரியராகிய திருவாய்மொழிப்பிள்ளை தம் மாணாக்கராகிய மணவாள மாமுனிகளைப் பார்த்து, "வாரீர் அழகியமணவாளரே! ஆழ்வான், பட்டர், நம்பிள்ளை முதலான நம் முன்னோர்கள் எல்லாச் சாஸ்திரங்களையும் முற்று முணர்ந்தவர்களாக விருந்தும், ஆழ்வார்களுடைய ஈரச் சொற்களின் அநுபவங்களிலே ஊன்றியிருந்து அவற்றை உலகில் பரப்புவதனையே சிறந்த தொண்டாகக் கொண்டு வாழ்ந்து வந்ததனை நீர் அறிவீரே! 'முற்படத் துவயத்தைக் கேட்டு, இதிகாச புராணங்களையும் அதிகரித்து, பரபக்ஷப்ரதிக்ஷேபத்துக் குடலாக நியாயமீமாம்சைகளையும் அதிகரித்து, போது போக்கும் அருளிச்செயலிலேயாம் நம்பிள்ளையைப் போன்று' (பெரியதிருமொழி, 5. 8: 7.) என்று பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்திருப்

***

பதீனயும் நீர் அறிவீரே ! ஆதலால், நீரும் சம்ஸ்கிருத கிரந்தங்களில் பலகாலும் கண்வையாமல் ஸ்ரீ பாஷ்யத்தை ஒருக்கால் கேட்டு, நமக்கும் எம்பெருமானுர்க்கும் பிரியமாகத் திருவாய்மொழி முதலிய அருளிச்செயல்களிலே அநவரதம் பரிசீலநம் பண்ணிக்கொண்டு, தென்னரங்கர் செல்வமுற்றும் திருத்திவைத்து, மறையதனிற் பொருளனைத்தும் வாய்மொழிந்து, மாறன் உரை செய்த தமிழ்மறையை வளர்த்து, இந்த லீலாவிபூதியை நித்திய விபூதியாகவே ஆக்கிக்கொண்டு, நம் முன்னேர்களைப் போலவே திருவரங்கம் பெரியகோயிலில் நித்தியவாசம் செய்துகொண்டு பெருமாளுக்கு மங்களாசாசனபரராய் வாழக்கடவீர்" என்று ஆசிரியர் இட்ட ஆணையை அப்படியே நிறைவேற்றியவர்.

செந்தமிழ் வேதியர் சிந்தை தெளிந்து சிறந்து மகிழ்ந்திடுநாள்
சீருல காரியர் செய்தருள் நற்கலை தேசு பொலிந்திடுநாள்
மந்த மதிப்புவி மானிடர் தங்களை வானி லுயர்த்திடுநாள்
மாசறு ஞானியர் சேரெதி ராசர்தம் வாழ்வு முளைத்திடுநாள்
கந்த மலர்ப்பொழில் சூழ்குரு காதிபன் கலைகள் விளங்கிடுநாள்
காரமர் மேனி யரங்க நகர்க்கிறை கண்கள் களித்திடுநாள்
அந்தமில் சீர்மண வாள முனிப்பரன் அவதா ரஞ்செயுநாள்
அழகு திகழ்ந்திடு மைப்பசி யில்திரு மூலம தெனுநாளே

என்ற செய்யுளால் இவருடைய அவதாரத்தின் சிறப்பினை அறியலாகும். இச்செய்யுள் பின்னுள்ளார் பாடியது.

*பூதூரில் வந்துதித்த புண்ணியனே? பூங்கமழும்*
*தாதார் மகிழ்மார்பன் தானிவனே? தாதூர*
*வந்தநெடு மாலோ? மணவாள மாமுனிவன்*
*எந்தையிவர் மூவரிலும் யார்?*

என்ற செய்யுளால் இவர் ஓர் அவதார விசேடம் என்பதனை அறிகிறேம். இது திருநாராயணபுரத்து 'ஆய்' என்னும் பெரியார் பாடியது. இவர் சமகாலத்தவர்.

"நாயனரும், தேவரீர் அவதார விசேஷம் என்று நிச்சயமாகவறிந்தேன், எனக்கு அத்தை ஒளிக்கவேண்டா, உள்ளபடி காட்டவேண்டுமென்று அருளிச்செய்ய, ஆகில், ஆசாரியராகவிருக்கிற தேவரீருக்கு ஒளிகக ஒண்ணுதே, பெரிய பெருமாளுடைய ரஹஸ்ய நியோகத்தை ஒருவரும் அறியவேண்டா என்று விண்ணப்பம் செய்துகொண்டு, ஏகாந்த ஸ்தலத்திலே மங்கள தீபத்தை ஸ்ப்புரித்து அஞ்சாமலிருக்கவென்று விண்ணப்பம் செய்து, அஹிபதிநிஜாகாரத்தைக் காட்டக் கண்டருளிப் பீதியுக்தராய் இத்தை உபஸம்ஹரிக்கவேணுமென்று அபேக்ஷிக்க, உபஸம்ஹரித்து எப்போதும் போலே நாயனர் எழுந்தருளியிருக்க," (யதீந்திரப் பிரவணர் பிரபாவம். பக். 40.) என்பது போன்ற இவருடைய சரித்திரப் பகுதிகள், இவர் ஆதிசேஷனுடைய அவதாரம் என்பதனை மெய்ப்பித்துக் காட்டுகின்றன.



திவ்வியதேச யாத்திரை செய்ய விரும்பித் திருவரங்கம் பெரிய கோயிலினின்றும் புறப்பட்டுப் பல திவ்விய தேசங்களையும் சேவித்துக் கொண்டு காஞ்சீபுரத்தை யடைந்து அங்கு எழுந்தருளியுள்ள வரத ராஜனைச் சேவித்து அவன் வடிவழகில் ஈடுபட்டு, அவன் விஷயமாக 'ஸ்ரீதேவராஜ மங்களம்' என்றதொரு நூலையும் அருளிச்செய்து அங்கு எழுந்தருளியிருக்கும் காலத்தில், ஸ்ரீபாஷ்யம் பாடம் கேட்பதற்கு விரும்பிய அங்குள்ள பெரியார் பலருடைய வேண்டுகோட்கு இணங்கி, ஒருவருட காலம் அங்குத் தங்கியிருந்து, அவர்கட்கு ஸ்ரீபாஷ்யத்தைப் பிரவசனம் செய்தார் என்று சரித்திரம் கூறுகின்றது. ஸ்ரீதேவராஜ மங்களம் என்ற நூல் வடமொழியில் உள்ளது.

"ஸ்ரீரங்கநாதர் 'நமக்கு அழகியமணவாள மாமுனியிடத்திலே திரவிடவேதமான நாலாயிரத் திவ்வியப்பிரபந்த வியாக்கியானங்களைக் கேட்க அபிநிவேசமாயிருக்கிறது. ஆகையால், இந்த மணவாளமாமுனியைக் கருட மண்டபமான பெரிய திருமண்டபத்திலே அழைப்பியும்' என்று அர்ச்சகரிடத்திலே ஆவிஷ்டராய்ச் சந்தோஷத்துடனே அருளிச்செய்து, தாமும் அங்கே எழுந்தருளிச் சமஸ்த ஜனங்களோடே கூடியிருந்து ஒரு சம்வத்சரம் இப்படியே வியக்தமாக ஜீயர் அருளிச்செய்த கிரமத்திலே கேட்டருளினர்" என்றும், "ஜீயரைத் தனித்து அருள்பாடிட்டருளி, ஸ்ரீ சடகோபனையும் பிரசாதித்தருளி நாளை முதலாக நம்முடைய பெரிய திருமண்டபத்திலே பெரிய வண் குருகூர்நகர் நம்பியான ஆழ்வாருடைய திருவாய்மொழிப் பொருளை ஈடுமுப்பத்தாருயிரத்துடனே நடத்தும்" என்றும் கூறி, அதற்குமேல் நூல் முடிவுபெறும் அன்று அரங்கநகரப்பன் ஆசாரியரான மணவாளமாமுனிகட்குக் குருதக்ஷிணை கொடுத்த வகையையும் விரிவாகக் கூறுகின்றது யதீந்திரப்பிரவணர் பிரபாவம் என்ற நூல். பக். 88, 89, 90 காண்க.

இதனல் நல்லாசிரியருக்குக் கூறப்பட்ட இலக்கணங்கள் முற்றும் நிறையப்பெற்றவர் இப்பெரியார் என்பதனை நாம் அறிகிறேம்.

இறைவன் குருதக்ஷிணையாகக் கொடுத்த சுலோகம் இதுவாகும்:

*"ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணர்ணவம்*
*யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்."*

இது, திருவரங்கநாதன் ஒரு குழந்தை வடிவாக வந்து, கால க்ஷேபம் நடக்கும் அவையின் நடுவில் நின்றுகொண்டு அருளிச் செய்தது.

இப் பெரியாருக்குச் சரீரங் காரணமாக வந்த உறவினர்கள் பலர். அடிக்கடி உண்டாகின்ற உறவினர்கள் சூதகம் காரணமாகப் பெருமாள் சேவையும் கிரந்த காலக்ஷேபங்களும் தடைபட்டு வந்தன. இல்லறம் காரணமாக இத்தடைகள் வருவதனுல் இல்லறத்தினின்றும் நீங்கித் துறவறத்தை மேற்கொள்ளத் திருவுள்ளங்கொண்டனர். (சந்நியாசிகளுக்கு உறவினர்கள் காரணமாக வருகின்ற சூதகம்—தீட்டு கிடையா). அக்கால்த்தில் திருவரங்கத்தில் மிகப் பிரசித்த ராய் ஞான அநுட்டானங்களில் சிறந்தவராய் விளங்கிய ஸ்ரீசடகோப ஜீயர் என்ற பெரியாரை யடைந்து தமது எண்ணத்தைத் தெரிவித்து, அவர்தர, துரீயாச்சிரமத்தை—துறவறத்தை மேற்கொண்டனர். இது காரணமாக அது முதற்கொண்டு இவருக்கு '**அழகிய மணவாள மாமுனிகள்**' என்ற திருப்பெயர் வழங்கலாயிற்று.

திக்குற்ற கீர்த்தி இராமாநுசரைப் போன்றே இப்பெரியாரும் திருவரங்கம் பெரிய கோயிலில் வாழ்ந்தருளுங் காலத்தில் இவரை ஆசாரியராக வரித்து உய்ந்தவர்கள் பற்பலராவர். அவர்களுள் முக்கியமாக எண்ணத்தக்கவர்கள் எண்மர். அவர்கள் '**அஷ்டதிக் கஜங்கள்**' என்று சிறப்பித்துப் பேசப்படுவர். அவர்களாவார்:

1. வானமாமலை சீயர்.
2. பட்டர்பிரான்சீயர்.
3. திருவேங்கடராமாநுஜ சீயர்.
4. கோயில் அண்ணன்.
5. பிரதிவாதி பயங்கரம் அண்ணன்.
6. எறும்பியப்பா.
7. அப்பிள்ளை.
8. அப்பிள்ளார்.

எனப்படுவர். இவர்களுள் முதல் மூவர் துறவிகள். மற்றை ஐவரும் இல்லறத்தார்கள்.



**இவர் செய்த வேறு நூல்கள்:**

பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த பதினெட்டு இரஹஸ்யங்களுள் ஸ்ரீவசநபூஷணம், தத்துவத்திரயம், முமுக்ஷுப்படி என்னும் மூன்று இரஹஸ்யங்களுக்கு வியாக்கியானங்கள்.

பெரியாழ்வார் திருமொழியில் முதல் 401 திருப்பாசுரங்களுக்கு வியாக்கியானம். இத்திருப்பாசுரங்களுக்குப் பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்த வியாக்கியானம் கிடைத்திலது; ஆதலின் அவற்றிற்கு மட்டும் வியாக்கியானம் அருளிச்செய்தனர்.

அருளாளப் பெருமாள் எம்பெருமானுர் அருளிச்செய்த ஞான சாரம், பிரமேயசாரம் என்னும் இருநூல்களுக்கும் பொருத்தமான புராண சுலோகங்கள்.

ஈடு முப்பத்தாருயிரப்படிக்கும் தாம் அருளிச்செய்த இரஹஸ்ய கிரந்தங்களின் வியாக்கியானங்களுக்கும் பிரமாணத்திரட்டு.

எதிராஜ விம்சதி.

ஸ்ரீதேவராஜ மங்களம்.

உபதேசரத்தினமாலை.

திருவாய்மொழி நூற்றந்தாதி.

ஆர்த்திப் பிரபந்தம்.

என்பனவாம்.

இவற்றுள் உபதேசரத்திநமாலை என்பது, ஆழ்வார்கள் அவதரித்த மாதங்கள் நாள்கள் ஊர்கள், திவ்வியப்பிரபந்தத்திற்கு வியாக்கியானம் அருளிச்செய்த ஆசாரியர்களின் பெயர்கள், பிள்ளை லோகாசாரியரின் பெருமை, அவர் அருளிச்செய்த ஸ்ரீவசனபூஷணத்தின் பெருமை, அந்நூலில் சொல்லப்படும் பொருள் விசேடங்கள் முதலியவற்றை வெண்பாயாப்பினுல் விரித்துக் கூறுவது. இது தமிழ் நூலாகும்.

திருவாய்மொழி நூற்றந்தாதி என்பது, திருவாய்மொழி சம்பந்தமாகப் பாடப்பட்ட நூறு வெண்பாக்களையுடைய அந்தாதி என்பதாம். திருவாய்மொழி நூறு திருப்பதிகங்களையுடையதல்லவா? அவற்றுள் ஒவ்வொரு திருப்பதிகத்திற்கு ஒவ்வொரு வெண்பாவாக, நூறு திருப்பதிகங்கட்கும் நூறு வெண்பாக்களையமைத்துப் பாடப்பட்டுள்ளது. இந்நூலின் அருமை பெருமைகள் சொல்லில் அடங்கா. என்னை? எனின், ஒரு திருப்பதிகத்திற் கூறப்பட்ட சாரமான

கருத்துப்பொருள் அத் திருப்பதிகம் சம்பந்தமான வெணபாவில் அமையவேண்டும். அதற்குமேல் அத்திருப்பதிகத்தின் முதற்செய்யுளின் முதலடியின் முதலிலேயுள்ள எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும், ஈற்றுச் செய்யுளின் ஈற்றடியின் ஈற்றிலேயுள்ள எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அந்த வெண்பாவின் முதலிலும் ஈற்றிலும் முறையே அமையவேண்டும். அதற்குமேல் ஆழ்வாருடைய திருப்பெயரும் அவ்வெண்பாவில் அமையவேண்டும். இம் மூன்று நியதிகளையும் ஒரு வெண்பாவில் வைத்துப் பாடுதல் அருமையன்றோ? இங்ஙனம் நூறு திருப்பதிகங்களையும் நூறு வெண்பாக்களில் அமைத்துப் பாடியிருக்கின்றார். "புலவர்க்கு வெண்பா புலி" என்பது ஆன்றோர் வாக்கு. இது அரியசெயல் அன்றோ?

*உயர்வே பரன்படியை உள்ளதெல்லாம் தான்கண்டு*
*உயர்வேதம் நேர்கொண் டுரைத்து—மயர்வேதும்*
*வாராமல் மானிடரை வாழ்விக்கும் மாறன்சொல்*
*வேராக வேவிளையும் வீடு.*

இது, திருவாய்மொழி நூற்றந்தாதியின் முதற் செய்யுள். திருவாய்மொழியின் முதல் திருப்பதிகத்தைப் பற்றிக் கூறுவது. மேலே கூறியன வெல்லாம் இதில் அமைந்திருத்தல் காண்க,

ஆர்த்திப் பிரபந்தத்தின் தன்மையை கீழே வரும் வெண்பாக்களால் உணர்தல் தகும்.

*தேன்பயிலும் தாரான் எதிராசன் சேவடிமேல்*
*தான்பரம பத்தி தலையெடுத்து—மாந்தர்க்கு*
*உணவாக ஆர்த்தியுடன் ஒண் தமிழ்கள் செய்தான்*
*மணவாள மாமுனிவன் வந்து.*

*வம்பவிழ்தார் வண்மை மணவாள மாமுனிவன்*
*அம்புவியில் கால்பொருந்தா ஆர்த்தியினால்—உம்பர்தொழும்*
*விண்ணுலகிற் செல்ல விரைந்தெதிரா சன்பதங்கள்*
*நண்ணி யுரைத்தான் நமக்கு.* ஆர்த்தி—துன்பம்.

வியாக்கியானத்தின் பெருமை :—ஸ்ரீவசநபூஷணம் முதலிய இரஹஸ்ய நூல்களுக்கு இவருடைய வியாக்கியானம் இன்றேல் அவற்றின் ஆழ்பொருள்களை யெல்லாம் அறிந்து அநுபவித்துப் பயன் துய்க்க இடமே இராது. இவருடைய வியாக்கியானம் அமுதிலும் ஆற்ற இனியது. கங்கையின் பெருக்கோ அல்லது கங்கையிற் புனிதமாய காவிரியின் பெருக்கோ என்று சொல்லத்தக்க நடையோடு கூடியது. எளிமையும் தெளிவும் உடையது. பொருட்செறிவும்



அழகும் மிக்கது. வேத வேதாந்தங்களிலும் வேதாங்கங்களிலும் இதிகாச புராணங்களிலும் அருளிச்செயல்களிலும் இவ்வுரையாசிரியருக்கு இருக்கும் பரந்தபுலமைக்கு இவ்வுரையே தக்கதொருசான்றாகும்.

அவற்றுள் இவ் வாசாரியஹ்ருதய வியாக்கியானத்தின் அமைப்பு: நூலின் தொடக்கத்தில் ஒருமுன்னுரை அமைந்துள்ளது. அது, நூலின் பொருளைச் செவ்வன் ஆடியிற் செறித்து இனிது விளக்கிக்கொண்டு அளப்பரிய வாகாயத்திற்கு விளக்கமாகிய திங்களும் ஞாயிறும் போன்று நிற்கின்றது. ஒவ்வொரு சூத்திரத்தின் தொடக்கத்திலும் ஒரு முன்னுரை அமைந்திருக்கின்றது. அது பொருத்தமான வளவில் அமைந்து சூத்திரப்பொருளை நன்கு அறிந்து கொள்ளுதற்குத் தகுதியாகப் படிப்பவரின் உள்ளத்தை அமைத்துவிடுகின்றது. ஒரு சூத்திரத்திற்கும் அதன் பின் வரும் சூத்திரத்திற்குமுள்ள தொடர்பினை விளக்கிக்காட்டுகிறார்; இங்ஙனம் விளக்கிக் காட்டுவது, படிப்பவருடைய அறிவு தைலதாரைபோன்று இடையறாது செல்வதற்கு ஏதுவாக நிற்கிறது. மேலும், ஒரு பொருள் முடிவுறும் போது அதுகாறும் கூறிய கருத்துக்களைத் தொகுத்துக் காட்டுகிறார்; இங்ஙனம் காட்டுவது, படித்தவற்றைத் தெளிவாக உள்ளத்தில் இருத்திக்கொண்டு மேலே செல்லுதற்கு நமக்குப் பேருதவிசெய்கின்றது. அழகிய உவமைகள் இடையே இடையே அமைந்திருக்கின்றன.

சில சூத்திரங்களுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களும் காட்டப்படுகின்றன. அவ்விடங்களில் முதலிற் கூறிய பொருளுக்கும் இரண்டாவதாகக் கூறும் பொருளுக்கும் உள்ள வேற்றுமை நுணுகி அறியத்தக்கதாகவுள்ளது. சில விடங்களில் இவர் எழுதும் பதசாரம் படிப்பவர்களுடைய மனங்களைப் பேரின்பத்தில் மூழ்கச்செய்கின்றது.

நூலாசிரியர் முன்னோர் மொழி பொருளையேயன்றி அவர் மொழிகளையும் மொழித்தொடர்களையும் எடுத்து அமைத்துத் தம்முடைமை போன்றே ஆளுகின்றார். (எடுத்தாளும் திறத்தை நூலாசிரியர் வரலாற்றிற் காட்டியுள்ளேன்.) அவற்றையெல்லாம் முழுவடிவத்தில் தந்து அவை வந்துள்ள இடங்களையும் சுட்டி அவற்றிற்கு அருமையான விளக்கங்களும் தரும் திறம் வியக்கத்தக்கதாம்.

வைணவ சமய ஐதிஹ்யங்களையும் உருவகங்களுக்கு அமைந்த உள்ளுறைப் பொருள்களையும் எடுத்து விளக்கும் திறம் போற்றற்குரியதாம். இத்திறங்களையெல்லாம் இந்நூலைக் கற்பார் ஆங்காங்குப் பலகாலும் கண்டு மகிழ்வர் என்ற துணிவுடையேனாதலின் தனியே இங்கே எடுத்துக்காட்டுக்கள் தாராது அமைகின்றேன்.

இவர் அவ்வக்காலத்துப் பாடிய தனிப் பாடல்களுள் சிலவற்றை ஈண்டுத் தருகின்றேன்:

1. *இன்றே எதிராசர் இவ்வுலகில் தோன்றியநாள்!*
*இன்றே கலியிருள் நீங்குநாள்!—இன்றேதான்*
*வேதியர்கள் வாழ, விரைமகிழோன் தான்வாழ,*
*வாதியர்கள் வாழ்வடங்கு நாள்!*

இது, திருக்குருகூரிலே ஒரு திருவாதிரை திருநக்ஷத்திரத்தினன்று தம் ஆசாரியரும் தாமுமாகப் பாடியது. அன்று, தம் ஆசாரியரான திருவாய்மொழிப்பிள்ளை முதலிகளோடு கூடியிருந்து ஆசாரியகுணானுபவம் பண்ணிக்கொண்டிருக்கும் போது ஆசாரியர் முன்னிரண்டு அடிகளையும் அருளிச்செய்து, அதிலே ஈடுபட்டு, மேலே போகமாட்டாமல் அதனையே சொல்லிக்கொண்டிருக்க, அவ்வளவிலே இவர் ‘இன்றேதான்’ என்று தொடங்கிப் பின் இரண்டு அடிகளையும் பாடி முடித்தார். ஆசாரியர் அதனைக் கண்டு பெருமகிழ் வெய்தினர். விரைமகிழோன் - நம்மாழ்வார்.

2. *வாழியுல காசிரியன், வாழியவன் மன்னுகுலம்,*
*வாழி முடும்பையெனும் மாநகரம்—வாழி*
*மனம்சூழ்ந்த பேரின்பம் மல்குமிகு நல்லார்*
*இனம்சூழ்ந் திருக்கும் இருப்பு.*

இது, ஆசாரியருடைய ஆணையின்படி நித்தியவாசம் செய்வதற்குத் திருவரங்கம் பெரியகோயிலுக்கு எழுந்தருளி நம்பெருமாளைச் சேவித்து மீண்டு, பிள்ளை லோகாசார்யர் எழுந்தருளியிருந்த திருமாளிகைக்குச் சென்று கண்டு ‘இது இரஹஸ்யம் விளைந்த மண் அன்றே’ என்று பணிந்து வணங்கி ஈடுபட்டுப் பாடியது.

3. *இவ்வுலகந் தன்னில் எதிராசர் கொண்டருளும்*
*எவ்வுருவும் யான்சென் றிறைஞ்சினக்கால்—அவ்வுருவம்*
*எல்லா மினிதேனும் இவ்வரங்கத் திந்நிலைபோல்*
*நில்லாவென் நெஞ்சில் நிறைந்து.*

இது, திருவரங்கத்தில் உள்ள உடையவர் சந்நிதிக்கு எழுந்தருளி அவரைச் சேவித்த காலத்தில் ஈடுபட்டுப் பாடியது.

4. *இதுவோ பெரும்பூதூர்! இங்கே பிறந்தோ*
*எதிராசர் எம்மிடரைத் தீர்த்தார்—இதுவோதான்*
*தேங்கும் பொருநல் திருநகரிக் கொப்பான*
*ஓங்கு புகழுடைய ஊர்!*



5. *எந்தை எதிராசர் எம்மை எடுத்தளிக்க*
*வந்தபெரும் பூதூரில் வந்தேமோ!—சிந்தை*
*மருளோ! தெருளோ! மகிழ்மாலை மார்பன்*
*அருளோஇப் பேற்றுக் கடி!*

இவை, எம்பெருமானாரைச் சேவிப்பதற்கு ஸ்ரீபெரும்பூதூர்க்கு எழுந்தருளும்போது அவ்வூர் அணித்தானவாறே அதனைக் கண்டு ஈடுபட்டுப் பாடியவை. பொருநல் - தாமிரபரணி. திருநகரி - ஆழ்வார் திருநகரி. ஊர் - ஸ்ரீபெரும்பூதூர். மகிழ்மாலை மார்பன் - நம்மாழ்வார்.

6. *ஈதோ கிளியாறிவ் வூரோ திருமதுரை!*
*ஈதோ திருமகிழும் கோபுரமும்!—ஈதோ*
*பெரியநம்பி தாமுகந்து பின்னெதிரா சர்க்குத்*
*துயமளித்த தூய பதி!*

இது மதுராந்தகத்தை அடைந்த காலத்து ஈடுபட்டுப் பாடியது. மதுரை - மதுராந்தகம். திருமகிழ் - மதுராந்தகத்தில் ஏரிகாத்த பெருமாள் கோயிலில் இருக்கும் மகிழமரம். இம்மரத்தின் அடியில் இருந்துதான் பெரியநம்பிகள் இராமாநுசருக்குத் திருவிலச்சினை செய்து துவயத்தை உபதேசித்தது. துயம் - துவயம் என்னும் மந்திரம்.

7. *ஈதோ திருவரசு! ஈதோ மணங்கொல்லை!*
*ஈதோ எழிலாலி என்னுமூர்!—ஈதோதான்*
*வெட்டுங் கலியன்வேல் காட்டி நெடுமாலை*
*எட்டெழுத்தும் பெற்ற இடம்!*

இது, திருமங்கை மன்னன் அவதரித்த திவ்ய தேசத்திற்குச் செல்லும்போது, அதனைக் கண்டு ஈடுபட்டுப் பாடியது. திருவரசு - அரசமரம். மணங்கொல்லை - ஓர் ஊர். திருமங்கை மன்னன் வழிபறிப்பதற்குத் தங்கியிருந்த இடங்கள் இவை. ஆலி - அவருடைய நாடு.

8. உறைகழித்த வாளையொத்த விழிமடந்தை மாதர்மேல்
உருகவைத்த மனமொழித்து, உலகளந்த நம்பிமேல்
குறையைவைத்து மடலெடுத்த குறையலாளி, திருமணம்
கொல்லைதன்னில் வழிபறித்த குற்றமற்ற செங்கையான்,
மறையுரைத்த மந்திரத்தை மாலுரைக்க வவன்முனே
மடியொதுக்கி மனமடக்கி வாய்புதைத்து, ஒன்னலார்
கறைகுளித்த வேலணைத்து நின்றவிந்த நிலைமைஎன்
கண்ணைவிட் டகன்றிடாது கலியன்ஆணை ஆணையே.

****

9. வேலணைத்த மார்வும் விளங்குதிரு வெட்டெழுத்தை
மாலுரைக்கத் தாழ்த்த வலச்செவியும்—காலணைத்த
தண்டையும்வீ ரக்கழலும் தார்க்கலியன் வாண்முகமும்
கண்டு களிக்குமென் கண்.

இவை, திருமங்கை மன்னனைச் சேவித்தபோது ஈடுபட்டுப் பாடியவை. சித்திரம் எழுதிக்காட்டுவது போன்று திருமங்கை மன்னனுடைய திருவுருவத்தை நம் கண்முன்னே காட்டுகின்றன இச்செய்யுட்கள். இவர் காட்டும் இக்காட்சியை இன்றைக்கும் நாம் திருவாலி திருநகரியில் சேவிக்கலாம்.

10. நாமார்! பெரியதிரு மண்டபமார்! நம்பெருமாள்
தாமாக நம்மைத் தனித்தழைத்து—நீமாறன்
செந்தமிழ் வேதத்தின் செம்பொருளை நாளுமிங்கு
வந்துரையென் றேவுவதே வாய்ந்து.

இது, 'நம்முடைய பெரிய திருமண்டபத்திலே பெரியவண் குருகூர்நகர் நம்பியான நம் சடகோபருடைய தமிழ் வேதத்தை ஈடுமுப்பத்தாறுயிரத்தோடே நாளைமுதல் நடத்தும்' என நம்பெருமாள் அருளிச்செய்த போது பாடியது.

11. தேவியரும் தாமும் திருத்தேரின் மேலரங்கர்
மேவிவர விக்கிரமன் வீதிதனில்—சேவைசெயும்
அந்தச் சுவர்க்கம் அநுபவிக்கப் பெற்றிலமே
இந்தத் திருநாளில் யாம்!

இது, தாம் திருக்குருகூரில் எழுந்தருளியிருந்த காலத்து, ஸ்ரீரங்கநாதனுடைய திருவீதிப் புறப்பாட்டினைச் சேவிக்கப்பெறுத இழவால் இரங்கிக்கூறியது. விக்கிரமன் வீதி - திருவரங்கத்தில் உள்ளதொரு திருவீதியின் பெயர். இதனை,

மாட மாளிகை சூழ்திரு வீதியும் மன்னு சேர்திரு விக்ரமன் வீதியும்
ஆடல் மாறன் அகளங்கன் வீதியும் ஆலி நாட னமர்ந்துறை வீதியும்
கூடல் வாழ்குல சேகரன் வீதியும் குலவு ராச மகேந்திரன் வீதியும்
தேடு தன்மவன் மாவவன் வீதியும் தென்ன ரங்கர் திருவா வரணமே

என்ற செய்யுளால் உணர்க.

12. தென்னரங்கர் சீரருளுக் கிலக்காகப் பெற்றோம்
திருவரங்கந் திருப்பதியே இருப்பாகப் பெற்றோம்
மன்னியசீர் மாறன்கலை யுணவாகப் பெற்றோம்
மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்



முன்னவராம் நம்குரவர் மொழிகள்உள்ளப் பெற்றோம்
முழுதுநமக் கவைபொழுது போக்காகப் பெற்றோம்
பின்னையொன்று தனில்நெஞ்சு பேராமை பெற்றோம்
பிறர்மினுக்கம் பொறாமையிலாப் பெருமையும் பெற்றோமே.

மணவாள மாமுனிகளுடைய குணபூர்த்தியையும் மன நிறைவினையும் இச்செய்யுளில் நாம் காண்கின்றோம்.

மணவாள மாமுனிகள் மலரடி வாழ்க.

---

மன்னுயிர்காள்! இங்கே மணவாள மாமுனிவன்
பொன்னடியாம் செங்கமலப் போதுகளை—உன்னிச்
சிரத்தாலே தீண்டில், அமானவனும் நம்மைக்
கரத்தாலே தீண்டல் கடன்.

பூருவா சாரியர்கள் போதமநுட் டானங்கள்
கூறுவார் வார்த்தைகளைக் கொண்டுநீர்—தேறி
இருள்தருமா ஞாலத்தே இன்பமுற்று வாழ்மின்;
தெருள்தருமா தேசிகனைச் சேர்ந்து.

மாறன் மலரடி வாழ்க.

---

குறிப்பு:—"பூவேந்தர் தங்கள்கிளை பொன்னகரி லீண்டிற்றே
கோவேந்தன் மாதைக் குறித்து." (நளவெண்பா)

என்ற செய்யுளில் 'தங்கள்கிளை' என்றதனை அலகிடுவதுபோன்று, இங்கும் (பக். 22.) "வம்பவிழ்தார்" என்ற செய்யுளில் 'உம்பர் தொழும்' என்பதனை 'ரகர' வொற்றினை நீக்கி, கூவிளங்காய்ச் சீராக அலகிட்டுக்கொள்க.

Rathnam Press, Madras - 1.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க.

அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்

அருளிச்செய்த

# ஆசாரிய ஹ்ருதயம்

—(o)—

## பொதுத் தனியன்கள்

[1] ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்
யதீந்த்ர ப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.

[2] லக்ஷ்மீநாத ஸமாரம்பாம் நாத யாமுந மத்யமாம்
அஸ்ம தாசார்யபர்யந்தாம் வந்தே குரு பரம்பராம்.

[3] யோ நித்யம் அச்யுதபதாம்புஜயுக்ம ருக்ம
வ்யாமோகதஸ் ததிதராணி த்ருணாய மேநே
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே.

---

1. இது திருவரங்கநாதன் அருளிச் செய்தது. திருமலையாழ்வார் என்னும் திருவாய்மொழிப் பிள்ளையினுடைய திருவருளுக்குப் பாத்திரமானவரும், ஞானம் பக்தி முதலிய குணங்களுக்குக் கடல் போன்றவரும், எம்பெருமானாரிடத்தில் பக்தி நிறைந்தவரும் ஆன மணவாளமாமுனிவரை வணங்குகிறேன் என்பது சுலோகத்தின் பிண்டப்பொருள்.

2. இது கூரத்தாழ்வான் அருளிச்செய்தது. திருமகள் கேள்வனான இறைவன் முதலாக, ஸ்ரீநாதமுனிகள் ஸ்ரீஆளவந்தார் நடுவாக, என்னுடைய ஆசாரியர் இறுதியாக வருகின்ற ஆசாரிய பரம்பரையை வணங்குகிறேன் என்பது சுலோகத்தின் பிண்டப் பொருள்.

3. இதுவும் கூரத்தாழ்வான் அருளிச் செய்தது. எவர், ஈறில்லாதவனான எம்பெருமானுடைய பொன்போன்ற இரண்டு திருவடித் தாமரைகளில் எப்பொழுதும் வைத்திருக்கும் பக்தியினாலே உலகில் உள்ள மற்றை எல்லாப் பொருள்களையும் மிக அற்பமாக நினைத்தார்; அத்தகைய பகவானும் கருணைக்கடலும் என்னுடைய ஆசாரியருமான இந்த இராமாநுசருடைய இரண்டுதிருவடிகளையும் உபாயமாகப் பற்றுகிறேன் என்பது சுலோகத்தின் பிண்டப் பொருள்.

[1] மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதி:
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்
ஆத்யஸ்ய ந: குலபதே: வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரி யுகளம் பிரணமாமி மூர்த்நா.

[2] பூதம் ஸரச்ச மஹதாஹ்வய பட்டநாத
ஸ்ரீபக்திஸார குலசேகர யோகிவாஹாந்
பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ர மிச்ராந்
ஸ்ரீமத் பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம்.

## ஆசாரிய ஹிருதயத் தனியன்கள்

[3] ஆசார்ய ஸ்வாந்த வக்தாரம் அபிராமவராபிதம்
ஸ்ரீக்ருஷ்ண தநயம் வந்தே ஜகத்குருவராநுஜம்.

[4] த்ராவிடாம்நாயஹ்ருதயம் குருபர்வ க்ரமாகதம்
ரம்ய ஜாமாத்ரு தேவேந தர்சிதம் க்ருஷ்ணஸூநுநா.

---

1. இது ஸ்ரீ ஆளவந்தார் அருளிச்செய்தது. தாயும் தந்தையும் மனைவியும் மக்களும் செல்வமும் மற்றும் உபாய உபேயங்களுமான எல்லாம், என்னோடு சம்பந்தமுடையார்களுக்கெல்லாம் ஆதியாயும் என்னுடைய குலத்திற்குப் பதியாயும் இருக்கின்ற நம்மாழ்வாருடைய வகுளமலர் மாலையால் அலங்கரிக்கப்பட்ட எந்த இரண்டு திருவடிகளாக இருக்கின்றனவோ, அத்தகைய இரண்டு திருவடிகளை என் தலையாலே வணங்குகின்றேன் என்பது சுலோகத்தின் பிண்டப் பொருள்.

2. இது, பட்டர் அருளிச்செய்தது. பூதத்தாழ்வாரும், பொய்கையாழ்வாரும், பேயாழ்வாரும், பெரியாழ்வாரும், திருமழிசையாழ்வாரும், குலசேசர ஆழ்வாரும், திருப்பாணாழ்வாரும், தொண்டரடிப்பொடியாழ்வாரும், திருமங்கையாழ்வாரும், எம்பெருமானாரும், ஸ்ரீமத் நம்மாழ்வாரும் ஆகிய பெரியோர்களை எப்பொழுதும் வணங்குகிறேன்.

3. ஆசாரிய ஹிருதயத்தை அருளிச் செய்தவரும், வடக்குத் திருவீதிப் பிள்ளையின் திருக்குமாரரும், பிள்ளை லோகாசாரியரின் திருத்தம்பியாரும் ஆன அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் என்னும் திருப்பெயரை யுடையவரை வணங்குகிறேன் என்பது சுலோகத்தின் பிண்டப்பொருள்.

4. ஆசார்ய பரம்பரையிலே வந்த தமிழ் வேதத்தினுடைய கருத்தானது வடக்குத் திருவீதிப் பிள்ளையின் திருக்குமாரரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனாராலே வெளியிடப்பட்டது என்பது சுலோகத்தின் பிண்டப்பொருள்.



[1] பணவாள் அரவணைப் பள்ளி பயில்பவர்க் கெவ்வுயிரும்
குணபோகம் என்று குருகைக்கதிபன் உரைத்த துய்ய
உணர்பாவி னுட்பொருள் ஒன்று மறியா வுலகறிய
மணவாளன் மாறன் மனமுரைத்தான் வண்முடும்பை
[வந்தே.

[2] மாதவத்தோன் மாறன் மனம்கூறும் மணவாளன்
தோதவத்தித் தூய்மறையோ ரானபெற்றார்—நீதியினல்
ஆங்கவர்தாள் சேர்பெற்றார் ஆய்மண வாளமுநி
பூங்கமலத் தாள்கள் நெஞ்சே போற்று.

---

1. பணம்வாள்அரவணைப் பள்ளி பயில்பவர்க்கு எவ்வுயிரும் குணபோகம் என்று, குருகைக்கு அதிபன் உரைத்த துய்ய உணர் பாவின் உட்பொருளாகிய மாறன் மனத்தை, மணவாளன் வண் முடும்பை வந்து, ஒன்றும் அறியா உலகு அறிய உரைத்தான் என்று முடிக்க. பள்ளிபயில்பவர் - திருவரங்கநாதன். குணபோகம் - அடிமை. குருகைக்கு அதிபன் - நம்மாழ்வார். மாறன் மனம் - ஆசாரிய ஹிருதயம். மணவாளன் - அழகிய மணவாளப் பெருமாள் நாயனர். முடும்பை - குடிப்பெயர்.

2. இச்செய்யுள், ஆசாரியஹிருதயம் வந்த வழிவகையினைக் கூறி, அப்பெரியார்களை நான் வணங்குகிறேன் என்று வணக்கம் கூறுகிறது. 'மாறன் மனம் கூறும் மணவாளன்' என்றது, ஆசாரியஹிருதயத்தை அருளிச் செய்த அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரை. அவர், தாம் அருளிச்செய்த ஆசாரியஹிருதயத்தை 'பெற்றார்' என்ற பெயரையுடைய ஒரு பெரியாருக்குத் தந்தார். அதனைக் கூறுகின்றது 'தோதவத்தித் தூய்மறையோரான பெற்றார்' என்ற சொற்றொடர். 'தோதவத்தித் தூய்மறையோரான' என்பது பெற்றார்க்கு அடைமொழி. அவர், பெற்றார் என்னும் பெயரையுடைய மற்றொரு பெற்றார்க்கு அந்நூலைத் தந்தார். அதனைக் கூறுகின்றது 'நீதியினல் ஆங்கவர்தாள் சேர்பெற்றார்' என்ற தொடர்மொழி. 'ஆங்கவர்தாள் சேர்' என்பது பெற்றார்க்கு அடைமொழி; மாணக்கர் என்பது பொருள். அவர், திருநாராயணபுரத்திலே எழுந்தருளியிருந்த 'ஆய்' என்பாருக்குத் தர, அவர் மணவாள மாமுனிக்குத் தந்தார் என்பதனைக் கூறுகின்றது 'ஆய் மணவாள முநி' என்ற சொற்றொடர். பின்னர் மணவாள மாமுநிகள் வாயிலாக உலகில் பரவிற்று ஆசாரிய ஹிருதயம் என்னும் இந்நூல்; ஆதலால், அவர்களுடைய திருவடிகளை மனமே போற்றுவாயாக என்பதாம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே அரண்

மாறன் மலரடி வாழ்க.

அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்

அருளிச்செய்த

# ஆசாரிய ஹ்ருதயமும்

மணவாள மாமுனிகள் அருளிச்செய்த

வியாக்கியானத்தின்

# தமிழாக்கமும்.

## உரைப்பாயிரம்

[1]திருமகள் கேள்வனாய் மூவுலகங்கட்கும் முதல்வனான சர்வேச்வரன், எல்லையில்லாத இன்பவடிவமான ஸ்ரீவைகுண்டத்திலே, என்றும் உள்ளதாயும் குற்றம் இல்லாததாயும் உள்ள ஞானம் முதலான குணங்களையுடையராய், இறைவனான தன்னுடைய நினைவினைப் பின்பற்றிச் செல்லுகின்ற சொரூபம் நிலைபேறு முயற்சி என்னும் வேறுபாடுகளையுடையரான நித்திய சூரிகளாலே எப்பொழுதும் தொண்டு செய்யப்படுகின்ற திருவடித் தாமரைகளை

1. "திருமகள் கேள்வனாய்" என்றது முதல் "வேத சாஸ்த்திரத்தைக் கொடுத்தான்" என்பது இறுதியாக, இறைவன் இவ்வுலக மக்கட்கு வேத சாஸ்திரங்களைக் கொடுத்தபடியை அருளிச்செய்கிறார். நடுவில் உள்ள வாக்கியங்கள் இறைவன் வேத சாஸ்த்திரங்களைக் கொடுப்பதற்குரிய காரணங்களைக் கூறுகின்றன.



யுடையவனாய்க் கொண்டு எழுந்தருளியிராநிற்க, இவ்வுலகில் உள்ளார் நித்தியசூரிகளைப்போன்று தன்னை அநுபவிப்பதற்குச் சம்பந்தம் உண்டாயிருக்கவும் அதனைப் பெறாது இழந்து கிடக்கிற படியைக் கண்டு, மிக்க துக்கிதனாய், இவர்களை உய்விக்கவேண்டும் என்னும் நசையாலே, [1]"அழிவுகாலத்தின் முடிவிலே அறிவில் பொருளுக்குச் சமானமாகத் திரிகின்ற இவ்வான்மாக்களை இந்திரியங்களோடும் சரீரங்களோடும் சேர்ப்பிப்பதற்காக இரங்கின மனத்தினை யுடையவனாய்" என்கிறபடியே இந்திரியங்களும் சரீரங்களும் இல்லாதவர்களாய் அறிவில் பொருளைப் போன்றவர்களாய் அது காரணமாகப் போக மோக்ஷங்கள் அற்றவர்களாய்க் கிடக்கின்ற நிலையிலே, இரங்கின மனத்தினை யுடையவனாய்க் கொண்டு, தன்னுடைய திருவடித் தாமரைகளைப் பற்றுவதற்குக் கருவியான இந்திரியங்களோடு கூடின சரீரத்தைக் கொடுத்து, அறிவின் மலர்ச்சியையும் தொழில் செய்தல் செய்யாமைகட்குரிய ஆற்றலையும் உண்டாக்கி, இந்த ஞானத்தின் காரியமாய் விடவேண்டுவன வற்றையும் பற்றவேண்டுவனவற்றையும் பகுத்தறிதற்குக் கருவியாக, [2]"அருட்கடலான இறைவன் பெரிய விளக்குப்போன்ற பிரமாணமான சாஸ்த்திரத்தைக் கொடுக்கிறான்" என்கிறபடியே வேத சாஸ்த்திரத்தைக் கொடுத்தான்.

[3]பின்னர், மநுமுதலானவர்களுக்கு உள் நின்று மக்களுடைய சரீரத்தோடு கூடின ஆன்மாவினை விஷயமாகவுடைய சாஸ்த்திரத்தை வெளியிட்டருளினான். [4]அந்தச் சாஸ்த்திரத்தைக் கற்பதற்குப் பலப்பல தகுதிகள் வேண்டியிருத்தலாலும் அதனைக் கற்க நெடுங்காலம் வேண்டியிருத்தலாலும் அரிதாக இருக்கிறபடியைத்

1. " அசிதவிசேஷிதாந் ப்ரளயஸீமநி ஸம்ஸரத:
கரண களேபரை: கடயிதும் தயமாந மநா:"
என்பது, ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் உத். 41.

2. "மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி"
என்பது, ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் உத். 1.

3. "பின்னர்" என்றது முதல் "வெளியிட்டருளினான்" என்பது முடிய, ஸ்மிருதி இதிகாச புராணங்களை வெளியிட்டமையை அருளிச்செய்கிறார்.

4. "அந்தச் சாஸ்த்திரத்தை" என்றது முதல் "வெளிப்படுத்தினான்" என்பது முடிய, திருமந்திரமாகிய திருவெட்டெழுத்தினை வெளிப்படுத்திய படியையும், அதற்குரிய காரணங்களையும் அருளிச்செய்கிறார்.

திருவுள்ளம்பற்றி, அத்தகைய தகுதிகள் ஒன்றும் வேண்டாமையாலே கற்பதற்கு எளிதாய் மக்களுடைய தனித்த ஆன்மாவினை மாத்திரம் விஷயமாக உடையதுமான [1] திருவெட்டெழுத்தாகிய பிரஹ்மவித்யையைத் தானே வெளிப்படுத்தினான்.

[2] அங்ஙனம் வெளிப்படுத்தின அளவிலும் பயன்படாமையாலே, ஓலைப்புறத்திற் செல்லாத இராச்சியத்தை எடுத்துவிட்டுச்செலுத்திக் கொள்ளும் அரசர்களைப்போலே, 'நாமே சென்று திருத்தக் கடவோம்' என்று இராமன் கிருஷ்ணன் முதலிய அவதாரங்கள் மூலமாக இவர்கள் இருக்கிற இடத்திற்குத் தானே வந்து திருத்தப் பார்த்தான். [3] அங்ஙனம் திருத்தப் பார்த்த இடத்திலும் ஒருவரும் திருந்திலர்; அதனைக்கண்டு, இவர்கட்கு வேற்றினமான நம்மால் ஒருபடியாலும் இவர்களைத் திருத்தவொண்ணாததாக இருந்தது; இனி, [4] "இணைக்குப் பார்வை இட்டு மிருகம் பிடிப்பாரைப் போலே இவர்கள் இனத்தாரைக் கொண்டே காரியம் கொள்ளுவோம்' என்று அறுதியிட்டு, அதற்கு 'ஆம்முதல்வரை' உண்டாக்குகைக்காக, எல்லா உயிர்களிடத்தும் அன்பினான தன்னுடைய பேரருளாலே எங்கும் பார்த்து இலக்குக் காணாமல் வாரா நிற்க, அந்தப் பார்வை, தனக்குப் பள்ளமடையான தென்திசையிலே சென்ற அளவிலே, [5] "மாறி மாறிப் பலபிறப்பும் பிறந்து" என்கிறபடியே தொடர்ந்து வருகிற பிறவிகளிலே தோள் மாறி உழன்று திரிந்து போருகிற இவர் மேலே பட, ஒருவித காரணமும் பற்றாமலே தம்மேலே விழுந்த அந்த விசேட கடாக்ஷத்தாலே

---

1. 'சம்சாரிகள் தங்களையும் ஈஸ்வரனையும் மறந்து, ஈஸ்வர கைங்கர்யத்தையும் இழந்து, இழந்தோம் என்கிற இழவும் இன்றிக்கே, சம்சாரமாகிற பெருங்கடலிலே விழுந்து நோவுபட, சர்வேஸ்வரன் தன் கிருபையாலே இவர்கள் தன்னை அறிந்து கரைமரம் சேரும்படி தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று, திருமந்திரத்தை வெளியிட்டருளினான்" என்பது மும்முட்சுப்படி.

2. அதற்குமேல் 'அங்ஙனம்' என்றது முதல் 'திருத்தப்பார்த்தான்' என்பது முடிய இறைவன் இவ்வுலகில் வந்து அவதரித்தமைக் குரிய காரணத்தை அருளிச்செய்கிறார்.

3. அதற்குமேல் 'அங்ஙனம்' என்பது முதல் 'பக்தியையும் பெற்றார்' என்பது முடிய இறைவன் ஆழ்வார்க்குப்பேரருள் புரிந்தமையையும் அங்ஙனம் புரிதற்குரிய காரணங்களையும் ஆழ்வார் பெற்ற பேற்றினையும் அருளிச் செய்கிறார்.

4. 'இணைக்குப் பார்வை' 94-ஆம் சூத்திரத்தின் குறிப்புப் பார்க்கவும்.

5. திருவாய். 2. 6 : 8.



திவ்வியமான ஞானத்தையும் பக்தியையும் பெற்றார்; [1] அங்ஙனம் பெற்ற ஆழ்வார், இறைவனுடைய சொரூப ரூப குண விபூதிகளை விசத விசததர விசததமமாக அநுபவித்து, அந்த அநுபவம் உள்ளடங்காமல் பொங்கிப் பெருக்கெடுத்து மேலே வழிந்து வருகிற பாசுரங்களானவை, சோக வேகத்தால் உண்டான [2] "மாநிஷாத" என்று தொடங்கும் சுலோகம் பிரமனுடைய அருளாலே எல்லா இலக்கணங்களும் அமைந்து முடிந்தாற்போன்று, சர்வேச்வரனுடைய திருவருள் அடியாக எல்லா இலக்கணங்களும் அமைந்த பிரபந்தங்களாக அமைந்தன.

[3] இதுதானும் தமிழ்மறை ஆகையாலே மிகவிரிவாய்ப் பலவிதமான பொருள்களைச் சொல்லுவதாக இருக்கையாலே, இதில் கருத்துப் பொருள் எல்லாருடைய அறிவிற்கும் விஷயமாதல் அரிது என்று திருவுள்ளம் பற்றி, இத்தமிழ்மறையில் சொல்லப்படும் அர்த்த விசேடங்களையும், இவற்றில் ஆழ்வார் திருவுள்ளக் கருத்தின் விதத்தையும், இவ்வாசாரியார்க்கு விருப்பமான அர்த்தமே எல்லார்க்கும் தஞ்சம் என்னுமதனையும் இந்நூலாசிரியர் தம்முடைய பரம கிருபை

---

1. 'அங்ஙனம் பெற்ற' என்றது முதல் 'பிரபந்தங்களாக அமைந்தன' என்பது முடிய திருவிருத்தம் முதலான நான்கு பிரபந்தங்களும் அவதரித்தமையைத் தெரிவித்தபடி. விசதம்-தெளிவு. தரம் - உயர்ந்தது. தமம்-எல்லாவற்றிலும் உயர்ந்தது.

2. மாநிஷாத ப்ரதிஷ்டாம் த்வம் அகம: ஶாஶ்வதீஸ்ஸமா:
யத் க்ரௌஞ்ச மிதுநாதேகம் அவதீ: காமமோஹிதம்.
என்பது, ஸ்ரீராமா. பால. 2 : 15.

ஓ வேடனே! நீ யாதொரு காரணத்தால், சேர்ந்திருக்கிற இரண்டு அன்றில் பறவைகளில் காமத்தால் மோகத்தை அடைந்திருக்கிற ஆண் பறவையாகிற ஒன்றனைக் கொன்றாயோ, (கொன்ற அக்காரணத்தால்) நிலைத்திருக்கின்ற உன் ஆயுட்காலத்தின் இருப்பை நீ அடைய மாட்டாய் என்பது இதன் பொருள்.

ஓ ஸ்ரீநிவாசனே! தேவரீர் யாதொரு காரணத்தால், இராக்கதர்களான இராவணன் மண்டோதரி என்ற இருவரில், மன்மதனால் பீடிக்கப்பட்ட ஒருவனான இராவணனைக் கொன்றாயோ (அதனால்) நிலைத்திருக்கின்ற ஆண்டுகளின் இருப்பை நீர் அடைவீர் என்பது இச்சுலோகத்தின் உள்ளுறை.

3. ஆசாரியஹிருதயம் என்னும் இந்நூல் அவதரித்தமைக்குக் காரணத்தை அருளிச் செய்கிறார் 'இது தானும்' என்றது முதல் 'இந்நூல் மூலமாக அருளிச்செய்கிறார்' என்றது முடிய.

யினாலே விளக்கமுறச் செய்துகொண்டு ஆசாரிய பரம்பரையில் வந்த இவ் அர்த்தங்களை எல்லாரும் அறிதற்குத் தகுதியாம்படி மிகச் சுருக்கம் இல்லாமலும் மிகவிரிவு இல்லாமலும் 'ஆசாரியஹ்ருதயம்' என்னும் நூல் மூலமாக அருளிச்செய்கிறார்.

[1] "நம்முடைய முன்னோரான குலநாதரான ஆழ்வாருடைய" என்கிறபடியே வைதிக குலத்திற்கு முதல் ஆசாரியரான ஆழ்வார் அருளிச்செய்த திவ்வியப் பிரபந்தங்களில் அவருடைய திருவுள்ளக் கருத்தினைச் சொல்லுகையாலே இந்நூலுக்கு 'ஆசாரியஹ்ருதயம்' என்று பெயர் அமைந்தது. [2] மயர்வறமதிநலம் அருளப்பெற்றவர்கள் பேசின திவ்விய சூக்திகள் ஆகையாலே மிகவும் நம்பத்தக்கனவாய் மிகமிக இனியவுமாய் இருக்கிற இதுவே தம்மால் எப்பொழுதும் விரும்பப்படுமதாகையாலும், முகமறிந்தவன் கோத்த முத்து பெரு விலையனுமாறு போலே சொற்களைத் தாம்சேர்த்த ஆற்றலாலே அருளிச் செயலின் சுவையை அநுபவிக்கின்றவர்களுக்கு இதனுடைய பொருளைக்காட்டிலும் சொற்களே மிகமிக இனியனவாக இருக்கும் என்னும் கொள்கையாலும், இப்பிரபந்தத்தில் இவர் அருளிச்செய்யும் வாக்கியங்களை எல்லாம் அருளிச் செயலில் உள்ள சொற்களையே கொண்டுசேர்த்து அருளிச் செய்கிறார். ஆகையால், இப்பிரபந்தம் சொற்கள் சொற்களின் பொருள்கள் என்னும் இவ்விரண்டனுடைய சுவையாலும் பெரியோர்களுடைய மனத்திற்கு உகப்பாக இருக்கும்.

உரைப்பாயிரம் முற்றிற்று.

மாறன் மலரடி வாழ்க.

1. ஆசாரியஹ்ருதயம் என்ற பெயரின் காரணத்தை அருளிச்செய்கிறார் 'நம்முடைய' என்று தொடங்கி. "ஆத்யஸ்ய ந: குலபதே:" என்பது, ஆளவந்தார் ஸ்தோத். 5.

2. இந் நூலின் பெருமையை அருளிச்செய்கிறார் 'மயர்வற' என்று தொடங்கி.

# முதல் பகுதி

## நூல்

காருணிகனான சர்வேச்வரன் அறிவிலா மனிசர் உணர்வெனும் சுடர்விளக்கு ஏற்றிப், பிறங்கிருள் நீங்கி, மேலிருந்த நந்தாவேத விளக்கைக் கண்டு, நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு, மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின பிரதீபமான கலைகளை நீர்மையினால் அருள்செய்தான்.

என்பது சூத்திரம்.

வியாக்கியானம்:— [2] "அருட்கடலாயும் மூவுலகங்கட்கும் இறைவனாயும் உள்ள சர்வேச்வரன் அறிவின்மையாகிய இருளைப் போக்குதற்கும் நலம் தீங்கு ஆகியவற்றை அறிகைக்கும் பெரிய விளக்குப்போன்ற பிரமாணமான சாஸ்த்திரத்தைக் கொடுக்கிறான்" என்கிறபடியே, ஒருகாரணம் இன்றிக்கே தானே திருவருள் புரியும் தன்மையனான சர்வேச்வரன், அறிவிலிகளாய்ப் பிறப்பு இறப்புக்களிலே உழன்று திரிகின்ற இம்மக்கள் நன்மை தீமைகளை அறிதற்குக் கருவியாக இவர்களுக்குச் சாஸ்த்திரத்தைக் கொடுத்தபடியை அருளிச்செய்கிறார் முதற் சூத்திரத்தால்.

1. இச் சூத்திரத்தை, சர்வேச்வரன், அறிவிலாமனிசர் விளக்கு ஏற்றி, இருள்நீங்கி, வேதவிளக்கைக் கண்டு, விவேகிக்கைக்குக் கலைகளை நீர்மையினால் அருள்செய்தான் என எச்சங்களைக் கூட்டி முடிக்க. 'மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின பிரதீபமான' என்பது 'கலைகளுக்கு' அடைமொழி.

ஏற்றி, நீங்கி, கண்டு என்னும் செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள் ஈண்டு எதிர்காலத்தின்கண் வந்தன. "செய்தென் னெச்சத் திறந்த காலம், எய்திட னுடைத்தே வாராக் காலம்" (தொல். சொல். 239) என்ற சூத்திரத்தையும், 'ஈண்டுச்செய்தெனெச்சத்து இறந்த காலம் என்றது முடிபாய்வரும் வினைச்சொல்லால் உணர்த்தப்படும் தொழிற்கு அவ்வெச்சத்தால் உணர்த்தப்படும் தொழில் முன் நிகழ்தலை. அது வாராக்காலம் எய்துதலாவது, அம்முன் னிகழ்வு சிதையாமல் அவ்வெச்சம் எதிர்காலத்து வருதல்' என்னும் சேனாவரையர் உரையினையும் ஈண்டுக் காணல் தகும். இந்நூலில் இங்ஙனமே ஆங்காங்கு வருவனவற்றிற்கும் இதனையே விதியாகக் கொள்க.

2. "ஹார்த்தம் தமஸ் ஸதஸதீச விவேக்துமீசோ
மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி"
என்பது ஸ்ரீரங்கராஜஸ்தவம் உத். 1.

காருணிகனான சர்வேச்வரன் - அருளோடு கூடிய சுவதந்திரன். தனக்குரியன் என்றபடி. அருளாளன் ஆனாலும் சுவதந்திரன் அல்லனாகில் தான் நினைத்தபடி காரியம் செய்யப்போகாதாகையாலும், கேவல சுவதந்திரன் ஆனாலும் பிறவியிலே தள்ளுதல் மோக்ஷத்தைக் கொடுத்தல் ஆகிற இரண்டற்கும் பொதுவான சுவதந்திரம் மக்கள் உய்வு பெறுதற்பொருட்டுச் செய்யும் செயலுக்கு உறுப்பாகமாட்டாதாகையாலும், அருளோடு கூடிய சுவதந்திரமே பிறவிப் பெருங்கடலில் அலைந்து திரியும் மக்கள் உய்வுபெறும் பொருட்டு அவன் செய்யும் செயலுக்குக் காரணம் ஆகும் ஆதலாலே 'காருணிகனான சர்வேச்வரன்' என்கிறார். அன்றிக்கே, 'சர்வேச்வரன்' என்ற பெயரால் ஏவுதல், ஏவப்படுதல் ஆகிற சம்பந்தத்தைச் சொல்லுகிறார் ஆகவுமாம். [1] "நித்தியமான அருளோடு கூடியிருத்தலாலும்" என்றதன்பின்னர் [2] "ஏவுகிறவன், ஏவப்படுகின்றவன் (பரமாத்மா, சீவாத்மா) என்னும் இவர்களுடைய உடையவன், உடைமை என்னும் பழமையான சம்பந்தத்தாலும்" என்று சொல்லுகையாலே அருளோடு கூடி யிருத்தல், சம்பந்தம் என்னும் இரண்டும், இம்மக்கள் உய்வு பெறுதற்காக இறைவனால் செய்யப்படும் செயலுக்குக் காரணமாதல் தெளிதல் தகும். இங்கு அருளோடுகூடி யிருத்தலுக்கு மேலே சர்வேச்வரன் என்ற பதத்தால் சம்பந்தம் சொல்லப்படுகையாலே சம்பந்தத்திற்கு முதன்மை சொல்லிற்றாகிறது.

இதனால், இவை நம் உடைமையன்றோ என்கிற மனப்பற்றோடு பிறருடைய துக்கத்தைப் பொறுக்காததான அருளும் கூடியிருத்தலாலே மேலும் மேலும் மக்கள் உய்வுபெறுதற்குத் தக்க செயல்களைச் செய்து போருமவன் இறைவன் என்பதனைத் தெரிவித்தபடி.

அறிவிலா மனிசர் - [3] "அறிவிலா மனிசர் எல்லாம்" என்கிறபடியே அறிவின்மையாகிற இருளையுடையவர்களான மக்கள்,

---

1. *இரண்டாவது பொருளுக்குப் பிரமாணம் காட்டி அதனைத் தெளிவுபடுத்துகிறார் "நித்தியமான" என்று தொடங்கி.*

*"க்ருபாயோகாச்ச ஶாஶ்வதாத்"*
*என்பது லக்ஷ்மீதந்த்ரம்.*

2. *"ஈசேசி தவ்ய ஸம்பந்தாத் அநிதம் ப்ரதமாதபி"* *எனபது லக்ஷ்மீ தந்த்ரம்.*

3. *இது, திருமாலை,* 13.



[1] "அறிவின்மை பொருள்களை மறைக்கும் இருளினைப் போன்றது' எனப்படுமன்றோ. "இருளினைப் போக்குவதற்கு" என்று அறியாமையை இருள் என்ற சொல்லால் அருளிச்செய்தார்கள்.

இதனால், அநாதியான அறிவின்மையாகிற இருளால் மறைக்கப்பட்டவர்களாய், அதனால் சரீரம் வேறு ஆன்மா வேறு என்பது முதலான பகுத்தறிவு ஒருசிறிதும் இன்றிக்கே இருக்கிற இவ்வுலக மக்களைக் குறித்தபடி.

உணர்வு என்னும் சுடர்விளக்கு ஏற்றி - இதனை, உணர்வு என்னும் விளக்கு ஏற்றி என்றும், சுடர்விளக்கு ஏற்றி என்றும் தனித் தனியே கூட்டுக. [2] "உணர்வென்னும் ஒளிகொள் விளக்கு ஏற்றி" என்றும், [3] "ஞானச் சுடர்விளக்கு ஏற்றினேன்" என்றும் சொல்லுகிறபடியே எண்ணெய் திரி இவற்றால் உளதாய அழுக்கு இன்றிக்கே திணுங்கின பேரொளியாய் இருக்கிற ஞானமாகிற கொழுந்து விட்டு எரிகின்ற விளக்கினது பிரகாசத்தை யுடையதாய். தன்னையும் பிறபொருளையும் காட்டுகின்ற தன்மையின் ஒப்புமையாலே ஞானத்தை விளக்கு என்கிறார்.

பிறங்கு இருள் நீங்கி - [4] "பிறங்கு இருள் நிறம் கெட" என்றும், [5] "பின்னிவ்வுலகினில் பேரிருள் நீங்க" என்றும் சொல்லுகிறபடியே மிகுந்த அறிவின்மையாகிற இருள்போய்.

மேல் இருந்த நந்தா வேதவிளக்கைக் கண்டு - இதனை, மேல் இருந்த விளக்கை என்றும், நந்தா விளக்கை என்றும், வேதவிளக்கை என்றும் தனித்தனியே கூட்டுக. [6] "வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கு" என்றும், [7] "நந்தா விளக்கு" என்றும், [8] "வேத விளக்கினை" என்றும் சொல்லுகிறபடியே, வேதங்களின் முடிவிலே எல்லா உயிர்கட்கும் தலைவனாக விளங்காநிற்பானுமாய்,

---

1. *அறிவின்மையை இருளாகக் கூறியதற்குப் பிரமாணங்கள் காட்டுகிறார் "அறிவின்மை" என்று தொடங்கியும், "இருளினை" என்று தொடங்கியும். "அந்தம் தம இவ அஜ்ஞாநம்" என்பது, ஶ்ரீவிஷ்ணுபு.* 6-5 : 62. *"ஹார்த்தும் தம:" என்பது, ஶ்ரீ ரங்கராஜஸ்தவம் உத்.* 1.

2. *மூன்றாம் திருவந்.* 94. 3. *இரண்டாந்திருவந்.* 1.

4. *பெரியதிருமொழி,* 5. 7 : 3. 5. *பெரியாழ்வார்திரு.* 1. 8 : 10.

6. *பெரியாழ்வார் திரு.* 4. 3 : 11. 7. *பெரியதிரு.* 3. 8 : 1.

8. *திருவாய்.* 4. 7 : 10.

என்றும் உள்ளதாய் ஒளி உருவமான ஞானத்தைச் சொரூபமாக உடையனுமாய், வேதங்களாலேயே அறியப் படுகின்றவனுமான தன்னை, [1] "என் தக்க ஞானக் கண்களாலே கண்டு" என்கிறபடியே ஞானக்கண்ணாலே கண்டு,

நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு - [2] "இவை அன்றே நல்ல, இவை அன்றே தீய" என்கிறபடியே நன்மை தீமைகளைப் பகுத்தறிதற்கு; [3] "நல்லதையும் தீயதையும் அறிகைக்கும்" என்றாரே அன்றோ. 'நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு' என்கிற இது, பொதுவாகச் சிறப்புடைப் பொருள், சிறப்பில் பொருள்களை அறியும் அறிவினைக் காட்டுமேயாகிலும், இவ்விடத்தில் பகவத்விஷயம் நன்று, இவ்வுலக வாழ்வு தீது என்று பகுத்தறியும் அறிவினைக் காட்டக்கடவது. என்னை? எனின், 'நந்தா வேதவிளக்கைக் கண்டு நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு' என்கையாலும், பகுத்தறியும் அறிவிற்குப் பலமான விடுதலுக்கும் பற்றுதலுக்கும் விஷயங்கள், இவ்வுலக வாழ்வாகவும் மோக்ஷமாகவும் மேலே சொல்லுகையாலும் என்க. நன்று; பகவத் விஷயத்தைக் கண்டபின்பு, நல்லதும் தீயதும் பகுத்தறிகை யாவது என்? என்னில், எதிர்த்தலையைக் கண்டால் ஒழிய அதனுடைய குற்றங்கள் உள்ளது உள்ளவாறு தோன்றாமையாலும், இதனைப்பற்ற இது நன்று இது தீது என்னும்போது இரண்டு தலையையும் கண்டுகொள்ள வேண்டுகையாலும் சொல்லிற்று.

மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின பிரதீபமான கலைகளை - இதனை, மறையாய் விரிந்த விளக்கில் என்றும், துளக்கம்இல் விளக்கில் என்றும் தனித்தனியே கூட்டுக. மறையாய் விரிந்த விளக்கில் - [4] "மறையாய் விரிந்த விளக்கை" என்று சொல்லுகிறபடியே, [5] "அகாரம் என்னும் எழுத்தானது எல்லா வேதங்களாகவும் விரிந்தது" என்கையாலே வேதங்களாக விரிவினையடைந்தது தான் என்னும்படி எல்லா வேதங்கட்கும் காரணமாய், துளக்கமில் விளக்கில் [6] - "துளக்கமில் விளக்கமாய்" என்று

1. திருவாய். 4. 7: 10. 2. பெரியதிருவந். 3.

3. இதற்குப் பிரமாணம் காட்டுகிறார் "நல்லதையும்" என்று தொடங்கி. "ஸதஸதீச விவேக்தும்" இது ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் உத். 1.

4. பெரியதிருமொழி, 8. 9: 4.

5. அகரம் மறையாக விரிந்ததற்குப் பிரமாணம் காட்டுகிறார் "அகாரம்" என்று தொடங்கி. "அகாரோவை ஸர்வாவாக்" என்பது பிரமாணம்.

6. திருச்சந்தவிருத். 4.
"இது எடுத்துக்காட்டு உவமை. அகரத்திற்குத் தலைமை விகாரத்தானன்றி நாதமாத்திரையாகிய இயல்பாற் பிறத்தலானும்" என்பது பரிமேலழகருரை. குறள். 1.



சொல்லுகிறபடியே அகாரமாகிய தனக்கு வேறு ஒரு காரணம் இல்லாமையாலே அசைவு இன்றிக்கே, எல்லாப் பொருள்களையும் தனக்குள்ளே காட்டிக்கொண்டு நிற்கின்ற அகாரத்தில் நின்றும், கொளுத்தின - தோன்றியவையாய், பிரதீபமான கலைகளை - விளக்கில் நின்றும் கொளுத்தின பெருவிளக்குப் போன்று, [1] "பெரிய விளக்குப் போன்ற பிரமாணமான சாஸ்திரத்தை" என்கிறபடியே விடத்தக்கனவும் பற்றத்தக்கனவுமான அர்த்த விசேடங்களை மிகத் தெளிவாக விளக்குகின்ற [2] "பன்னுகலை நால்வேதம்" என்பதாலும், [3] "கலைகளும் வேதமும்" என்பது போன்றவைகளாலும் சொல்லப் படுகின்ற சுருதியும், அவற்றின் பொருளை விளக்குகின்ற இதிகாச புராணங்களுமான சாஸ்திரங்களை.

"மறையாய் விரிந்த விளக்கை" என்றும், "துளக்கம் இல் விளக்கமாய்" என்றும் அகாரத்தைச் சர்வேச்வரனோடு ஒப்புமைப் படுத்திக் கூறியது [4] "அகாரம் என்பது பரம்பொருள்" என்கிற படியே பொருளுக்கும் சொல்லுக்கும் உள்ள தொடர்பினாலே.

நீர்மையினால் அருள் செய்தான் - தன்மையாலே கொடுத்தான் என்கை. நீர்மை - தன்மை. ஈண்டுத் தன்மையாவது, எல்லாப் பொருள்களையும் ஏவிக்கொள்ளும் தன் இறைமைத்தன்மை. அன்றிக்கே, அருளாளனான தன்னுடைய அருட்டன்மை என்னுதல். அன்றிக்கே, இவ்விரு தன்மைகளாலும் என்னுதல். இம்மூன்றனுள் முதற் பொருள் "கலைகளும் வேதமும்" (பெரிய திருமொழி, 2. 8 : 5). என்ற திருப்பாசுரத்தில் "நீர்மையினால்" என்ற சொல்லுக்கு நம் பெரியோர்கள் அருளிச் செய்துள்ள வியாக்கியானத்திற்கும், "இந்த உதரத்தரிப்பு திரைகுண்ய விஷயமானவற்றுக்குப் பிரகாசகம்" (சூத். 13) என்று இவர்தாம் மேல் அருளிச் செய்வதற்கும் பொருந்தும். இரண்டாவது பொருள், "காருணிகனான" என்று இவர் முதன் முதலிலே எடுத்ததற்கும் [5] "அருளாளனான இறைவன் கொடுக்கிறான்" என்று பட்டர் அருளிச்செய்ததற்கும் பொருந்தும். மூன்றாவது பொருள் "காருணிகனான சர்வேச்வரன்" என்பதற்கு அருளிச்செய்த இரண்டாவது பொருளுக்குப் பொருந்தும்.

1. "மாநம் ப்ரதீபம் இவ" இது, ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் உத். 1.

2. பெரியதிருமொ. 7. 8: 2. 3. பெரிய திருமொ. 2. 8: 5.

4. "அ இதி ப்ரஹ்ம" என்பது, பிரமாணம்.

5. "காருணிகோ ததாதி" ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் உத். 1.

ஆக, இச்சூத்திரத்தால் அறிவிலிகளாய்ப் பிறப்பு இறப்புக் களிலே உழன்று திரிகின்ற இம் மக்கள் தெளிந்த அறிவினையுடை யவர்களாய், அந்த அறிவின்மையாகிற இருள் நீங்கித் தன்னைக் கண்டு, நல்லதையும் தீயதையும் பகுத்தறிதற்கு உறுப்பாக இறைவன் சாஸ்திரத்தைக் கொடுத்தபடியை அதற்குரிய காரணத்தோடு அரு ளிச்செய்தாராயிற்று. (1)

2

*விவேக பலம் வீடுபற்று.*

என்பது சூத்திரம்.

வியாக் :—இப்பகுத்தறிவிற்குப் பலன் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, இப்படி அவன் கொடுத்த சாஸ்திரங்களால் உண் டாய ஞானத்தாலே நல்லதும் தீயதும் பகுத்தறிதற்குப் பயன், விடத்தக்கனவற்றை விடுகையும், பற்றத்தகுந்ததைப் பற்றுகையும் என்றவாறு.

விடுதல், பற்றுதல் என்று கூறாமல் 'வீடு பற்று' என்று கூறுகையாலே, [1]"வீடுமின் முற்றவும்", [2]"அற்றிறை பற்றே" என்ற ஆழ்வார் திருப்பாசுரங்களைத் திருவுள்ளம்பற்றி அருளிச் செய்தமை தோற்றுகிறது. (2)

3

*தியாஜ்ய உபாதேயங்கள் சுகதுக்கங்கள்.*

என்பது சூத்திரம்.

வியாக்:—விடத்தகுவனவும் பற்றத்தகுந்ததும் யாவை? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, [3]"சுகமுடையவனுவேன், துக்கமுடையவனுவேனல் லன்" என்கிறபடியே, எல்லார்க்கும் துக்கம் விருப்பம் இல்லாத தாய், சுகம் விரும்பத்தக்கதாய் இருக்கையாலே துக்கம் வெறுக்கத் தக்கது, சுகம் விரும்பத்தக்கது என்றவாறு. (3)

---

1. *திருவாய்.* 1. 2: 1. 2. *திருவாய்.* 1. 2: 5.

3. *"ஸுகீபவேயம், துக்கீமாபூவம்" என்பது பிரமாணம்.*



4

*[1]இவற்றுக்கு எல்லை இன்புதுன்பளி பன்மா மாயத்து அழுந்துகையும், களிப்பும் கவர்வுமற்றுப் பேரின்பத்து இன்புறுகையும்.*

என்பது சூத்திரம்.

வியாக் :— இவைதாம் அவர் அவர்கள் செய்த இரு வினை களுக்குத் தகுதியாக நின்றநின்ற நிலைகளிலே உளவாகையாலே இவற்றின் முடிந்த எல்லையை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, இவற்றுள் துக்கத்துக்கு எல்லை - துக்கத்திற்கு முடிந்த எல்லை, "இன்பு துன் பளி பன் மா மாயத்து அழுந்துகை- [2]'இன்புதுன்பளி" என்று தொடங்கிக் கூறுகின்றவாறே இன்பத் துன்பங்களுக்குக் காரணமாய், நித்தியமாய்க், கடக்க அரிதான பிரகிருதியின் தொடர்பால் வருகின்ற பிறவிகளில் நின்றும் ஒரு காலும் நீங்காமைக்கு உறுப்பானவையாய், பலவகைப்பட்டிருப்பன வாய், அகப்பட்டார் தப்புதற்கு அரிதாமவையாய், [3]"இன்னமுது" என்கிறபடியே தோன்றி, எத்துணை அறிவுடையாரையும் கலங்கப் பண்ணுகையாலே வியக்கத்தக்கனவாய் இருக்கின்ற ஐம்புல இன் பங்களிலே அகப்பட்டு "அழுந்துமா" என்கிறபடியே, எல்லை இல்லாத துக்கங்களுக்குக் காரணமான பிறப்புக்களிலே அழுந்துகை என்றவாறு.

இவற்றுள் சுகத்துக்கு எல்லை - சுகத்திற்கு மேல் எல்லை, களிப்பும் கவர்வும் அற்றுப் பேரின்பத்து இன்புறுகை - [5]"களிப்பும் கவர்வும் அற்று" என்று தொடங்கிச் சொல்லுகிறவாறே சிறியதாய் இருக்கும் தன்மை, நிலையற்றதாயிருக்குந் தன்மை முதலிய குற்றங் கள் நிறைந்த ஐம்புல இன்பங்களைப்பெற்று அநுபவித்தலால் வரும் செருக்கும், அவற்றை அநுபவிக்கப் பெறாமையாலே வரும் துக்கமும் நீங்கி, அறுவகைப்பட்ட விகாரங்களும் நீங்கி, சுத்த சத்வம் ஆகை யாலே ஒளிமயமாய் இருக்கிற, இப்பிரகிருதி சம்பந்தம் இல்லாத

---

1. "இவற்றுக்கு" என்ற சுட்டு மேலேகூறிய சுகதுக்கங்களைக் குறிக் கின்றது. இவ்விரண்டனுள், துக்கத்துக்கு எல்லை, இன்புதுன்பளி பன்மா மாயத்து அழுந்துகை என்றும், சுகத்துக்கு எல்லை, களிப்பும் கவர்வும் அற்றுப் பேரின்பத்து இன்புறுகை என்றும் சூத்திரத்தைப் பிரித்துக் கூட்டி முடித்துக் கொள்க.

2. *திருவாசிரியம்,* 6. 3. *திருவாய்.* 7. 1: 8

4. *திருவாய்.* 2. 3:10.

திருமேனியைப் பெற்று, [1]" அந்தம்இல் பேரின்பம் " என்கிறபடியே, அளவற்ற இன்பமயமான பரமபதத்திலே அடியார்கள் குழாங்களை உடன் கூடி, [2]" சுழிபட்டோடும் சுடர்ச்சோதி வெள்ளத்து இன்புற்று " என்கிறபடியே எக்காலத்தும் பகவானை அநுபவிக்கிற அநுபவத்தாலே ஆனந்தம் நிறைந்தவனாய் இருக்கை என்றவாறு. (4)

## 5

*[3] அநந்த கிலேச நிரதிசயாநந்த ஹேது, மறந்தேன் அறியகிலாதே உணர்விலேன் ஏணிலேன் அயர்த்து என்றும், உய்யும்வகை நின்றஒன்றை நன்கறிந்தனன் உணர்வினுள்ளே ஆம்பரிசு என்றும் சொல்லுகிற ஜ்ஞாதவ்ய பஞ்சக ஜ்ஞாந அஜ்ஞாநங்கள்.*

என்பது சூத்திரம்.

வியாக் :—இந்த விதமான துக்கமும் சுகமும் இவனுக்கு உண்டாகைக்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அநந்த கிலேச ஹேது - [4]" மிகக்கொடியதும் எல்லை இல்லாத துக்கத்திற்கு இருப்பிடமானதுமான பிறவிப் பெருங்கடலை " என்கிறபடியே, பிறவிகள் காரணமாக வருகின்ற எல்லை இல்லாத துக்கத்துக்குக் காரணம், மறந்தேன் - [5]" மறந்தேன் உன்னை முன்னம் " என்கிறபடியே பரம்பொருளைப்பற்றிய அறிவில்லாமையும், அறியகி

---

1. திருவாய். 10. 9: 11.
2. திருவாய். 8. 10:5.
3. இச்சூத்திரத்தை, அநந்த கிலேச ஹேது, மறந்தேன் அறியகிலாதே உணர்விலேன் ஏணிலேன் அயர்த்து என்று சொல்லுகிற ஞாதவ்ய பஞ்சக அஞ்ஞானம் என்றும், நிரதிசய ஆநந்த ஹேது, உய்யும்வகை நின்றஒன்றை நன்கறிந்தனன் உணர்வினுள்ளே ஆம்பரிசு என்று சொல்லுகிற ஞாதவ்ய பஞ்சக ஞானம் என்றும் பிரித்து முறை நிரல்நிறையாகவும் எதிர்நிரல் நிறையாகவும் கூட்டிப் பொருள் காணல் தகும். ஞாதவ்யம்—அறிய வேண்டியவை. பஞ்சகம்—ஐந்து. மோக்ஷத்திற்குக் காரணம் ஐம்பொருள் உணர்வு என்றும், அஃது இல்லாமை பிறப்பிற்குக் காரணம் என்றும் கூறியபடி.
4. " ஸம்ஸாரஸாகரம் கோரம் அநந்த க்லேச பாஜநம் " என்பது, ஜிதந்தா, 1.
5. பெரிய திருமொழி, 6. 2: 2.



லாதே [1]" என்னை அறியகிலாதே " என்கிறபடியே ஆன்மாவாகிய தன்னை அறியும் அறிவின்மையும், உணர்விலேன் - [2]" ஓடியும் உழன்றும் உயிர்களே கொன்றேன் உணர்விலேன் " என்கிறபடியே விரோதியை அறியும் அறிவின்மையும், ஏணிலேன் - [3]" பிறவிநோய் அறுப்பான் ஏணிலேன் இருந்தேன் " என்கிறபடியே அவனை அடையும் நெறியை அறியும் அறிவின்மையும், அயர்த்து - [4]" ஆழி அம் கை அம்மானை ஏத்தாது அயர்த்து " என்கிறபடியே பேற்றினை அறியும் அறிவின்மையுமாகிற, ஞாதவ்ய பஞ்சக அஜ்ஞாநம் - அறியத் தக்க ஐம்பொருள்களின் ஞானம் இல்லாமையேயாம்.

நிரதிசய ஆநந்த ஹேது - [5]" பிரமன் முதலானோர்களுடைய உலகங்களின் இன்பங்களையும் தள்ளத்தக்கதான மேன்மையையுடைய ஆனந்தமே வடிவமான சுகம் ஒன்றையே வடிவாக உடையது " என்கிறபடியே, பகவானை அநுபவிக்கையாகிற மோக்ஷம் காரணமாக வருகின்ற அந்தம் இல் இன்பத்துக்குக் காரணம், உய்யும் வகை - [6]" நின்னை நெஞ்சில் உய்யும் வகை உணர்ந்தேன் " என்கிறபடியே பரம்பொருள் விஷயமான ஞானமும், நின்ற ஒன்றை- [7]" நின்ற ஒன்றை உணர்ந்தேன் " என்கிறபடியே ஆன்மாவாகிய தன்னை உணரும் ஞானமும், நன்கறிந்தனன் - [8]" அகற்ற நீ வைத்த மாய வல் ஐம்புலன்களாமவை நன்கு அறிந்தனன் " என்கிறபடியே விரோதியை அறியும் ஞானமும், உணர்வினுள்ளே - [9]" அவனது அருளால் உறற்பொருட்டு என் உணர்வினுள்ளே இருத்தினேன் " என்கிறபடியே அவனை அடையும் நெறியை அறியும் ஞானமும், ஆம்பரிசு - [10]" ஆம் பரிசு அறிந்துகொண்டு " என்கிறபடியே பேற்றினை அறியும் ஞானமுமாகிற, ஞாதவ்ய பஞ்சக ஞாநம்-அறியத்தக்க ஐம்பொருள்களை அறியும் ஞானம் என்றவாறு.

---

1. திருவாய். 2. 9: 9.
2. பெரியதிருமொழி, 1. 6: 6.
3. பெரியதிருமொழி, 1. 6: 1.
4. பெரியதிருவர். 82.
5. " நிரஸ்த அதிஶய ஆஹ்லாத ஸுகபாவைக லக்ஷணு " என்பது, ஸ்ரீ விஷ்ணு புரா. 6. 5: 59.
6. பெரியதிருமொழி, 6. 3: 6.
7. திருவாய். 8. 8: 4.
8. திருவாய். 5. 7: 8.
9. திருவாய். 8. 8: 3.
10. திருமாலை, 38.

ஆக, இவற்ருல் ஞானத்தாலே மோக்ஷமும் அஜ்ஞானத்தாலே பிறவியும் ஆகையாலே, [1] "அடையத்தக்க பரம்பொருளின் சொரூபத்தையும் அடைகின்ற ஜீவாத்மாவின் சொரூபத்தையும் அடைவதற்குரிய வழியையும் அடைவதால் உளதாம் பயனையும் அடைவதற்குத் தடையாக உள்ளனவற்றையும் இதிகாச புராணங்களுடன் கூடின எல்லா வேதங்களும் சொல்லுகின்றன; வேதங்களையும் வேதங்களின் பொருள்களையும் அறிந்த மஹாத்மாக்களும் முனிவர்களும் சொல்லுகிருர்கள்." என்கிறபடியே, எல்லாச் சாஸ்திரங்களினுடைய கருத்துப் பொருளாயும் ஆன்மாக்கள் உய்வு பெறுதற்கு ஒருதலையாக உணரத் தக்கதாயுமுள்ள ஐம்பொருள்களையும் அறியாமை பிறவிக்குக் காரணம்; அறிதல் மோக்ஷத்திற்குக் காரணம் என்ருராயிற்று. (5)

## 6

*[2] இவற்றுக்குக் காரணம் இரண்டில் ஒன்றினில் ஒன்றுகைகள்.*

என்பது சூத்திரம்.

**வியாக்** :-இவ் ஐம்பொருள்களை அறியாமையாகிற அஜ்ஞானத்திற்கும் அறிதலாகிற ஞானத்திற்கும் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

அதாவது, இவற்றுள் ஞாதவ்ய பஞ்சக அஜ்ஞானத்திற்குக் காரணம் - இவ் ஐம்பொருள்களை அறியாமையாகிற அஜ்ஞானத்திற்குக் காரணம், இரண்டில் ஒன்றுகை - [3] "முத்திறத்து வாணியத்து இரண்டில் ஒன்றும் நீசர்கள்" என்கிறபடியே இரண்டில் ஒன்றுகையாகிற இராசதகுண தாமதகுணங்களால் மிகுந்து அவற்றில் ஊன்றியிருத்தல். இவற்றுள் ஞாதவ்ய பஞ்சக ஞானத்துக்குக் காரணம் -

1. "ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோரூபம் ப்ராப்துஶ்ச ப்ரத்யக் ஆத்மந:
ப்ராப்தி உபாயம் பலம் ப்ராப்தே: ததாப்ராப்தி விரோதிச,
வதந்தி ஸகலா வேதாஸ்ஸேதிஹாஸ புராணகா:,
முநய: ச மஹாத்மாநோ வேத வேதார்த்த வேதிந:."
என்பது, ஹாரீத சம்ஹிதை. 9.

2. "இவற்றுக்கு" என்பது, ஐம்பொருள் உணர்வு உண்டாகையையும் அஃது உண்டாகாமையையும் குறிக்கிறது. இவற்றுள் ஐம்பொருள் உணர்வு உண்டாகாமைக்குக் காரணம் இரண்டில் ஒன்றுகை என்றும், அஃது உண்டாதற்குக் காரணம் ஒன்றினில் ஒன்றுகை என்றும் சூத்திரத்தைப் பிரித்து முறை நிரல்நிறையாகக் கொள்க.

3. திருச்சந்தவிருத். 68.



இவ் ஐம்பொருள்களை அறியும் ஞானத்துக்குக் காரணம், ஒன்றினில் ஒன்றுகை - [1] "முக்குணத்து இரண்டவை அகற்றி ஒன்றினில் ஒன்றி நின்று" என்கிறபடியே ஒன்றினில் ஒன்றுகையாகிற சத்வ குணத்தால் மிகுந்து அதிலே ஊன்றியிருத்தல்.

இராசத தாமத குணங்கள் [2]அந்யதா ஞானத்துக்கும் விபரீத ஞானத்துக்கும் காரணமாயும், சத்வகுணம் உண்மை ஞானத்துக்குக் காரணமாயும் இருக்கும்.

## 7

*சத்வாசத்வ நிதானம், இருள்தரும் அமலங்களாக என்னும் ஜந்மஜாயமான கால கடாக்ஷங்கள்.*

என்பது சூத்திரம். [3]

**வியாக்** :—பலர் இராசத தாமத குணங்களிலே ஒன்றியிருத்தற்கும் சிலர் சத்வ குணத்தில் ஒன்றியிருத்தற்கும் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச் சூத்திரத்தால்.

அதாவது, அசத்வ நிதாநம் - சத்வ குணத்திற்கு மறுதலையான இராசத தாமத குணங்களுக்குக் காரணம், இருள் தரும் என்னும் ஜன்மம் - [4] "இருள்தருமா ஞாலத்துள் இனிப் பிறவி" என்கிறபடியே அறிவின்மைக்குத் தோற்றுவாயான இவ் உலகத்தில் உண்டாகும் பிறவி. சத்வநிதாநம் - சத்துவ குணத்திற்குக் காரணம், அமலங்களாக என்னும் ஜாயமான கால கடாக்ஷம் - [5] "இவ் உலகத்தில் பிறக்கும்போது எந்தப்புருடன் மதுசூதனனுகிய பகவானுல்

1. திருவெழுகூற்றிருக்கை, 17.

2. அந்நியதா ஞானமாவது, பொருளின் தன்மையை மாறுபட உணர்தல்; விபரீத ஞானமாவது, பொருளையே மாறுபட உணர்தல்; முறையே, இறைவனுகிய திருமாலுக்கு அடிமையான இவ்வுயிரை மற்றைத் தேவர்கட்கும் அடிமையாக உணர்தலும், சிப்பியை வெள்ளி என்று உணர்தலும் போல்வன.

3. இச்சூத்திரத்தை, சத்வநிதாநம் அமலங்களாக என்னும் ஜாயமான கால கடாக்ஷம் என்றும், அசத்வநிதாநம் இருள்தரும் என்னும் ஜன்மம் என்றும் பிரித்துக் கூட்டி எதிர்நிரல்நிறையாகக் கொள்க. அசத்வம்-சத்துவகுணம் அல்லாத இராசத தாமத குணங்கள். நிதானம்-காரணம்.

4. திருவாய். 10. 6: 1.

5. "ஜாயமாநம் ஹி புருஷம் யம்பஶ்யேத் மதுசூதந: ஸாத்விகஸ்ஸது விஜ்ஞேய: ஸவை மோக்ஷார்த்த சிந்தக:" என்பது, பாரதம் மோக்ஷதர்மம்.

கடாக்ஷிக்கப்படுகின்றானே அவனே சத்துவ குணத்தையுடையவனாக அறியத்தக்கவன்; அவனே மோக்ஷத்தை அடைவதற்குரிய மனத்தை யுடையவன்." என்கிறபடியே பிறக்கிற காலத்தில், [1] " அவன் கண்கள் ாலே அமலங்களாக விழிக்கும்" என்கிறபடியே, பகவானுடைய தூய்மையைச் செய்யும் திருவருட்பார்வையாம் என்றவாறு. (7)

### 8

*இவற்றுக்கு மூலம் இருவல் அருள் நல்வினைகள்.*

என்பது, சூத்திரம். [2]

**வியாக் :**—பிறவிக்கும், பிறக்கிற காலத்தில் இறைவனுடைய திருவருட்பார்வை உண்டாதற்கும் மூலம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, இப்பிறவிக்கு மூலம், இருவல்வினைகள் - [3] " சார்ந்த இருவல்வினை " என்கிறபடியே ஆத்மாவை விட்டுப் பிரிக்க ஒண்ணாதபடி பொருந்திக் கிடக்கிற மிக்க வலிமை வாய்ந்த நல்வினை தீவினைகள். இறைவனுடைய திருவருட்பார்வைக்கு மூலம், அருள் நல்வினை - [4] " தொல்லருள் நல்வினை " என்கிறபடியே இறைவனிடத்தில் இயல்பாகவே அமைந்து கிடக்கின்ற திருவருளாகிய புண்ணியம் என்கை. (8)

### 9

*கர்ம கிருபாபீஜம், பொய்ந்நின்ற அருள்புரிந்த என்கிற அவித்யா ஸௌஹார்த்தங்கள்.*

என்பது சூத்திரம். [5]

**வியாக் :**—மேலே கூறிய இரு வல்வினைகளுக்கும் இறைவனுடைய திருவருளுக்கும் அடி யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

1. திருவாய். 1. 9: 9.

2. இச்சூத்திரத்தில் " இவற்றுக்கு " என்றது, மேலேகூறிய இருள் தரும் ஜன்மத்தையும், ஜாயமாந கால கடாக்ஷத்தையும் குறிக்கின்றது. ' இருவல் அருள்நல்வினை " என்பதனை "இருவல்வினை" என்றும் "அருள் நல்வினை" என்றும் பிரித்துக் கூட்டுக. கூட்டி, இருள்தரும் ஜன்மத்துக்கு மூலம் இருவல்வினை என்றும், ஜாயமானகால கடாக்ஷத்துக்கு மூலம் அருள் நல்வினை என்றும் முறைநிரல் நிறையாகப் பொருள் காண்க.

3. திருவாய். 1. 5: 10. 4. திருவாய். 5. 9: 10.

5. இச் சூத்திரத்தை, கருமத்திற்குப் பீஜம் பொய்ந் நின்ற என்கிற அவித்யை என்றும், கிருபைக்குப் பீஜம் அருள் புரிந்த என்கிற ஸௌஹார்த்தம் என்றும் நிரல்நிறையாகக் கொள்க. சௌகார்த்தம்-எப்பொழுதும் நன்மையே சிந்தித்திருத்தல்; அழகிய சிநேகம்.



அதாவது, கர்ம பீஜம் - இரு வல்வினைகளுக்குக் காரணம், பொய்ந்நின்ற என்கிற அவித்யை - [1] " பொய்ந்நின்ற ஞானம் " என்ற திருப்பாசுரத்திற் கூறியுள்ள அறிவின்மையாம். கிருபாபீஜம் - இறைவனுடைய திருவருளுக்குக் காரணம், அருள்புரிந்த என்கிற சௌகார்த்தம் - [2] " அருள்புரிந்த சிந்தை " என்கிற திருப்பாசுரத்திற் சொல்லப்படுகின்ற அழகிய சிநேகமேயாம்.

[3] " சர்வேச்வரனுடைய சிநேகமும் " என்று, இவ் ஆத்மாக்கள் பிறவிப் பெருங்கடல் நீந்துவதற்கு, அவன் செயல் புரிகையில் இழிவதற்கு மூலகாரணமாக இந்தச் சிநேகத்தையே சொல்லிற்று சாஸ்திரமும். இந்தச் சிநேகம் அடியாக ஆயிற்று, இவ் ஆன்மாக்கள் விஷயத்தில் அவன் திருவுள்ளத்தில் இரக்கம் பிறப்பது. (9)

### 10

*ஏதந் நிமித்தம் முன்னமே முதல் முன்னமேயான அசித் அயந அநாதி சம்பந்தங்கள்.*

என்பது சூத்திரம். [4]

**வியாக் :**—மேலே கூறிப்போந்த பொய்ந்நின்ற ஞானத்திற்கும் இறைவனுடைய சௌகார்த்தத்திற்கும் அடி யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, அவித்யைக்கு நிமித்தம்-பொய்ந்நின்ற ஞானத்துக்குக் காரணம், முன்னமேயான அநாதி அசித் சம்பந்தம் [5] "மூதாவியில் தடுமாறும் உயிர் முன்னமே" என்கிற திருப்பாசுரத்தில் 'முன்னமே' என்ற சொல்லால் தெரிவிக்கப்படுகின்ற அநாதியான இந்தப் பிரகிருதியின் சம்பந்தமாம். சௌகார்த்தத்துக்கு நிமித்தம் - இறைவனுடைய சிநேகத்துக்குக் காரணம், முதல் முன்னமேயான அநாதி அயந சம்பந்தம் - [6] " அடியேன் அடைந்தேன் முதல் முன்னமே " என்னும் திருப்பாசுரத்தில் ' முதல் முன்னமே ' என்ற சொல்லால் தெரிவிக்கப்படுகின்ற அநாதியான நாராயண சம்பந்தமாம். இங்கு 'அயந' என்ற சொல் சர்வேச்வரனைச் சொல்லுகிறது. நாராயணன் அலனோ.

1. திருவிருத்தம், 1. 2. இரண்டாந் திருவந். 59.

3. " ஈச்வரஸ்ய ச ஸௌஹார்த்தம் " என்பது பிரமாணம்.

4. ஏதத் என்றது, மேலேகூறிய அவித்யையும் சௌகார்த்தத்தையும் சுட்டுகிறது. ஏதத்-அவற்றிற்கு. மேற்கூறிய இரண்டனுள், அவித்யைக்கு நிமித்தம் முன்னமேயான அநாதி அசித் சம்பந்தம் என்றும், சௌகார்த்தத்திற்கு நிமித்தம் முதல் முன்னமேயான அநாதிஅயந சம்பந்தம் என்றும் பிரித்துக் கூட்டுக.

5. திருவிருத்தம், 95. 6. திருவாய். 2. 3: 6.

[1]ஆக, அநாதியான பிரகிருதியின் சம்பந்தம் அடியாகப் பொய்ந் நின்ற ஞானமும், அது காரணமாக நல்வினை தீவினைகளும், அவை காரணமாக அறிவின்மைக்குக் காரணமாய பிறவியும், அப் பிறவி காரணமாக இராசத தாமத குணங்களின் மிகுதியும், அவற்றாலே ஐம்பொருள் உணர்வு இல்லாமையும், அதுகாரணமாக [2]"அறிவின்மையாலே இவ்வுலகத்திலே உழலுகிறான்" என்கிறபடியே இவ் உலகத்தில் துக்கம் அடைகிறான் என்பதனையும்; அநாதியான நாராயண சம்பந்தம் அடியாகப் பகவானுடைய சிநேகமும், அதுகாரணமாக அவனுடைய திருவருளும், அதுகாரணமாக அவனுடைய விசேஷ கடாக்ஷமும், அதுகாரணமாகச் சத்துவ குணத்தின் மிகுதியும், அது காரணமாக ஐம்பொருள் உணர்வும் உண்டாக, அதுகாரணமாக [3]"ஞானத்தாலே மோக்ஷம் உண்டாம்" என்கிறபடியே மோக்ஷ இன்பம் உண்டாம் என்பதனையும் அருளிச்செய்தாராயிற்று. (10)

## 11

இவை கிட்டமும் வேட்டுவேளானும் போலே
ஒண்பொருள் பொருள் அல்லாதவை என்னுதே
நானிலாத யானும் உளனுவன் என்கிற சாம்யம்
பெறத் தின்று ஊதி அந்தமும் வாழ்வும் ஆகிற ஹாநி
சத்தைகளை உண்டாக்கும்.

என்பது சூத்திரம்,[4]

**வியாக் :—** மேலே கூறிப்போந்த பிரகிருதி சம்பந்தமும் நாராயண சம்பந்தமும் ஆன்மாவுக்குச் செய்யும் தீமை நன்மைகளை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

---

1. நான்காம் சூத்திரம் முதல் இச் சூத்திரம் இறுதியாகக் கூறியனவற்றைத் தொகுத்து அருளிச் செய்கிறார் 'ஆக' என்று தொடங்கி.

2. "அஜ்ஞாநாத் ஸம்ஸார:" என்பது பிரமாணம்.

3. "ஜ்ஞாநாந்மோக்ஷ:" என்பது பிரமாணம்.

4. சூத்திரத்தில் 'இவை' என்ற சுட்டு மேலே கூறிய அசித்சம்பந்தத்தையும் நாராயண சம்பந்தத்தையும் குறிக்கின்றது. இவற்றுள் ஒன்றான அசித் சம்பந்தமானது, கிட்டம்போலே ஒண்பொருள் என்னுதே நான் இலாத என்கிற சாம்யம் பெறத் தின்று அந்தமாகிற ஹாநியை உண்டாக்கும் என்றும், மற்றையதான நாராயண சம்பந்தமானது, வேட்டுவேளான்போலே பொருள் அல்லாத என்னுதே யானும் உளன் ஆவன் என்கிற சாம்யம்பெற ஊதி வாழ்வாகிற சத்தயை உண்டாக்கும் என்றும் நிரல்நிறையாகக் கொள்க. 'போலே', 'என்னுதே', 'என்கிற', 'சாம்யம் பெற' என்கிற சொற்களை இரண்டிற்கும் தனித்தனியே கூட்டுக. கிட்டம்-இரும்பு முதலிய உலோகங்களின் மேலே பிடிக்கும் துரு. வேட்டுவேளான்-குளவி.



அதாவது பிரகிருதி சம்பந்தம், கிட்டம் போலே - தன்னோடே சேர்ந்த மாணிக்கத்தை ஒளி அறத் தின்று உருஅழித்துத் தன்னைப் போலே ஆக்கும் கிட்டம் போலே, ஒண்பொருள் என்னுதே - [1]"எண் பெருக்கு அந்நலத்து ஒண்பொருள்" என்ற திருப்பாசுரத்திற் சொல்லப்படுகின்றபடியே சிறந்த ஞானமாகிற குணத்தையுடையதாய் ஒளிமயமாய் இருக்கிற ஆன்மாவை இது 'ஒண்பொருள்' என்று இதன் சீர்மை பாராதே, நான் இலாத என்கிற சாம்யம் பெற - [2]"இல்லது" என்றும், [3]"யாதொரு அசித்துப் பொருள் இல்லை என்ற சொல்லால் சொல்லப்படுகின்றதோ" என்றும் சொல்லப்படுகிற அசத்தாகிய தன்னோடே [4]"நான் இலாத முன் எலாம்" என்ற திருப்பாசுரத்தில் சொல்லப்படுகின்றபடியே ஆன்மாவுக்கு இல்லாத தன்மை சொல்லும்படி ஒப்புமை பெறுமாறு, தின்று - ஞானம் சிறிது கூட இல்லாதபடி உருவழித்து, அந்தமாகிற ஹாநியை உண்டாக்கும் - [5]"அந்தமும் வாழ்வுமாய எம்பெருமான்" என்ற திருப்பாசுரத்தில் சொல்லப்பட்டவற்றுள் அந்தமாகிய தீமையை உண்டாக்கும். அதாவது, [6]"பரம்பொருளை அறியும் ஞானம் ஒருவனுக்கு இல்லையாகில் அவன் இருந்தும் இல்லாதவன் ஆகிறான்" என்கிறபடியே அவனுடைய உண்மையை இன்மை ஆக்கும் என்றபடி.

நாராயண சம்பந்தம், வேட்டுவேளான் போலே - [7]"குளவியினால் கொண்டுவரப்பட்டு அடைபட்ட புழுவானது சுவர் நடுவில் இருப்பைப் பாராமல், பரபரப்பு அச்சம் முதலியவற்றின் சம்பந்தத்தால் அந்தக் குளவியின் உருவத்தை அடைகிறது" என்கிறபடியே யாதாயினும் ஒரு புழுவைக் கொண்டுவந்து வைத்து ஊதித் தனது உருவத்தை அடையச் செய்கின்ற குளவியைப் போன்று, பொருள் அல்

---

1. திருவாய். 1. 2: 10. 2. திருவாய். 1. 2: 4.

3. "யந்நாஸ்தி" என்பது ஸ்ரீ விஷ்ணுபுரா. 2. 12: 37.

4. திருச்சந்தவிருத். 65. 5. பெரியதிருமொழி, 5. 7: 2.

6. "அஸந்நேவ ஸபவதி" என்பது, தைத்திரீயஉப.

7. "கீட: பேசக்ருதா ருத்த: குட்யாந்தரநுசிந்தயந், ஸம்ரம்பபயயோகேந விந்ததே தத்ஸ்வரூபதாம்" என்பது பிரமாணம்.

அடங்கிய விருத்தி யானென் றறிந்தபின் செறிந்த மண்ணின்
குடம்பையுட் புழுமுன் னூதும் குளவியின் கொள்கைபோலத்
தொடங்கிய குருவும் ஆன்ம சொரூபமே மருவவேண்டி
உடம்பினுட் சீவனைப் பார்த் துபதேசம் ஓதுவாரே.

என்பது கைவல்ய நவநீதம், 18.

லாதவை என்ருதே-[1] "பொருள் அல்லாத என்னை" என்கிற திருப்பாசுரத்தில் சொல்லியபடி ஞானம் இல்லாத காரணத்தால் 'பொருள் அல்லாதது' என்ற சொல்லால் கூறப்படுவதாய்க் கிடக்கின்ற இதன் சிறுமை பாராமல், யானும் உளனுவன் என்கிற சாம்யம் பெற - சொரூபத்தால் எங்கும் பரந்து நிறைந்து என்றும் உளனுயிருக்கிற தன்னேடு [2] "பரம்பொருளோடு பூரணமான ஒப்புமையை அடைகிருன்" என்கிறபடியே [3] "உள்ள உலகு அளவும் யானும் உளன் ஆவன்" என்னும் திருப்பாசுரத்தில் சொல்லுகிறபடியே ஞானத்தின் மூலமாக வரும் எங்கும் பரந்திருத்தலாகிற ஒப்புமை பெறும்படி, ஊதி - தன் நிறமாக ஊதி, வாழ்வாகிற சத்தையை உண்டாக்கும் - [4] "அந்தமும் வாழ்வுமாய எம்பெருமான்" என்ற திருப்பாசுரத்தில் கூறிய இரண்டாவதாகிய வாழ்வாகிற இருப்பை உண்டாக்கும் என்கை. [5] "பரம்பொருளை அறியும் ஞானம் ஒருவனுக்கு இருக்குமேயாகில் அவனை உள்ளவனுக அறிகிருர்கள்" என்று பகவானை அறியும் ஞானம் ஒருவனுக்கு உண்டான பின் அவன் உள்ளவனுக ஆகிருன் என்று உபநிடதமும் சொல்லிற்று. (11)

## 12

ஒன்று கூடினதாய்ப் பற்று அறுக்க மீண்டொழி
கையாலே பழவடியேன் என்னுமது ஒன்றுமே ஒழிக்க
ஒழியாதது.

என்பது சூத்திரம்.

**வியாக் :—**இப்படி அநாதியாகச் சொல்லப்பட்ட பிரகிருதி சம்பந்தம் நாராயண சம்பந்தம் என்னும் இரண்டும் ஆன்மாவிற்கு என்றும் உள்ளனவாக இருக்குமோ என்னும் விஞவிற்கு விடை அருளிச்செய்கிருர் இச் சூத்திரத்தால்.

அதாவது, ஒன்று கூடினதாய் - பிரகிருதி சம்பந்தம், [6] "பெருந்துயர் இடும்பையில் பிறந்து கூடினேன்" என்ற திருப்பாசுரத்தில் கூறியபடியே ஆன்மாவிற்கு இயல்பிலே அமைந்ததாயன்றிக்கே

1. திருவாய், 5. 7: 3.
2. "பரமம் ஸாம்யம் உபைதி" என்பது முண்டகோபநிடதம். 3. 1 3.
3. பெரியதிருவந். 76.
4. பெரியதிருமொழி, 5. 7: 2.
5. ஸந்தமேநம் ததோவிது: என்பது, தைத்திரீய உப. ஆனந்தவல்லி.
6. பெரியதிருமொழி, 1. 1: 1.



வந்தேறியாய், பற்று அறுக்க மீண்டு ஒழிகையாலே - [1] "வினைபற்று அறுக்கும் விதியே" என்கிறபடியே எல்லாம் வல்ல இறைவன் வாசனையோடு போக்க, [2] "அடைந்த அருவினையோடு அல்லல் நோய் பாவம் மிடைந்தவை மீண்டு ஒழிய" என்கிறபடியே நீங்கி விடுகையாலே, பழ அடியேன் என்னுமது ஒன்றுமே - [3] "திருமாலே நானும் உனக்குப் பழ அடியேன்" என்கிறபடியே அநாதியாக இருக்கிற சேஷ சேஷியாம் தன்மையால் வந்த பகவானுடைய சம்பந்தம் ஒன்றுமே, ஒழிக்க ஒழியாதது - [4] "உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது" என்கிறபடியே இறைவனுலும் கழிக்கப் போகாது; மக்களாலும் கழிக்கப் போகாது என்கை.

ஆக, இச் சூத்திரத்தால், இச் சரீரத்தின் சம்பந்தம் இடையில் வந்தேறியாய் நல்வினை தீவினைகள் காரணமாக வருவதாகையாலே யாதானும் ஒரு காலத்திலே அழியக் கூடியதாக இருக்கும் என்றும், நாராயண சம்பந்தம் அநாதியாய் ஒருவித காரணமும் பற்ருமல் வந்ததாகையாலே என்றும் உள்ளதாயிருக்கும் என்றும் தெரிவித்தபடி. நன்று; இடையில் வந்தேறியான இச் சரீர சம்பந்தத்தை 'அநாதி' என்பான் என்? என்னில், வந்தேறின காலத்துக்கு அடி தெரியாமையாலே அநாதி என்று பிரமாணங்கள் சொல்லுகையாலே இவரும் 'அநாதி' என்கிருர் என்க. ஒருநாள் வரையிலே இறைவனுடைய திருவருளால் அது கழியக் காண்கையாலே வந்தேறி என்னுமிடம் ஒரு தலை. (12)

## 13

[5]இந்த உதரத் தரிப்பு திரைகுண்ய விஷயமான
வற்றுக்குப் பிரகாசகம்.

என்பது சூத்திரம்.

**வியாக் :—**முதற் சூத்திரத்தில் "காருணிகனுன சர்வேச்வரன் ...............கலைகளை நீர்மையினுல் அருள் செய்தான்" என்று

1. பெரியதிருமொழி, 11. 4:9.
2. முதல் திருவந். 59.
3. திருப்பல்லாண்டு, 11.
4. திருப்பாவை, 28.
5. "உதிரத்தரிப்பு" என்ற பாடமும் உண்டு; இரத்த சம்பந்தம் என்றபடி. "தெறிப்பு" என்ற பாடம் ஓதுவர் சிலர்.

அருளிச்செய்தபடி கலைகளைத் தந்தமைக்குக் காரணம், இந்த நாராயண சம்பந்தமே என்கிருர் இச் சூத்திரத்தால். உதரத் தரிப்பு - வயிற்றில் தாங்கி யிருத்தலாகிற தேக சம்பந்தம். தரிப்பு - தரித்தல்; தாங்குதல்.

அதாவது, இந்த உதரத் தரிப்பு - [1] நாரங்களுக்கு அயநமாக இருக்கும் காரணத்தால் வந்த குடல் தொடக்கு, திரைகுண்ய விஷயமானவற்றுக்குப் பிரகாசகம்-[2] "வேதங்கள், சத்துவம் இராசதம் தாமதம் என்னும் முக் குணங்களையுடைய மனிதர்களை இலக்காக உடையன" என்கிறபடியே, சத்துவம் இராசதம் தாமதம் என்னும் மூன்று குணங்கட்கு வசப்பட் டிருக்கின்ற மக்களை இலக்காகவுடைய வேதங்களை வெளிப்படுத்துகைக்குக் காரணமாம்.

தாமத குணம் மிக்கவர்களாகவும் இராசத குணம் மிக்கவர்களாகவும் சத்துவகுணம் மிக்கவர்களாகவும் உள்ள மக்களுடைய ருசிகளுக்குத் தகுதியான பேறுகளையும் பேறுகளைப் பெறுதற்குரியவான அந்த அந்தச் சாதனங்களையும் பூர்வபாகத்தில் பரக்கச் சொல்லுகின்றனவாகையாலே வேதத்தை "மூன்று குணங்களை யுடைய மக்களை இலக்காக உடையது" என்கிருர். இதனுல், "நீர்மையினுல் அருள் செய்தான்" என்று மேலே கூறியபடி சாஸ்திரங்களைத் தந்தமைக்கு முதன்மையான காரணம் சம்பந்தம் என்ருராயிற்று.

(13)

1. 'நாரங்கள்' என்றது, நித்தியவஸ்துக்களினுடைய (ஆத்மாக்கள்) திரள். அயநம் - இருப்பிடம். ஆன்மாக்கள் அனைத்திற்கும் ஆதாரமாக இருப்பவன் நாராயணன் என்றபடி.

"நாராயணன் என்றது நாரங்களுக்கு அயநம் என்றபடி." "நாரங்களாவன, நித்திய வஸ்துக்களினுடைய திரள்" "அவையாவன, ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகளும் ஜ்ஞாநசக்தியாதிகளும் வாத்சல்ய சௌசீல்யாதிகளும் திருமேனியும் காந்தி சௌகுமார்யாதிகளும் திவ்ய பூஷணங்களும் திவ்யாயுதங்களும் பெரிய பிராட்டியார் தொடக்கமான நாய்ச்சிமார்களும் நித்யசூரிகளும் சத்ரசாமராதிகளும் திருவாசல் காக்கும் முதலிகளும் கணதிபரும் முக்தரும் பரமாகாசமும் பிரகிருதியும் பத்தாத்மாக்களும் காலமும் மஹதாதி விகாரங்களும் அண்டங்களும் அண்டத்துக்குட்பட்ட தேவாதி பதார்த்தங்களும்."

என்பன முமுட்சுப்படி, 95, 96, 97. சூத்.

2. "த்ரைகுண்ய விஷயா வேதா:" என்பது, ஸ்ரீகீதை, 2: 45.



## 14

வத்சலையான மாதா பிள்ளை பேகணியாமல் மண் தின்னவிட்டுப் பிரதிஔஷதம் இடுமாபோலே, எவ்வுயிர்க்கும் தாயிருக்கும் வண்ணமான இவனும் ருசிக்கு ஈடாகப் பந்தமும் பந்தம் அறுப்பதோர் மருந்தும் காட்டுமிறே. [1]

என்பது சூத்திரம்:

**வியாக்:**—இப்படிச் சம்பந்தம் காரணமாகக் கலைகளை அருளிச செய்தானுகில், மோக்ஷத்திற்குக் காரணமான சாஸ்திரங்களை மட்டும் காட்டாமல், இவ் உலக இன்பங்களையும் சுவர்க்கம் முதலிய மேல் உலக இன்பங்களையும் அவற்றைப் பெறுதற்குச் சாதனங்களையும் விதிக்கிற காரணத்திஞல் பந்தத்திற்குக் காரணமான சாஸ்திரங்களையும் அருளிச்செய்வான் என்? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிருர் இச் சூத்திரத்தால். (வத்சலை - அன்பினை யுடையவள்.)

அதாவது, வத்சலையான மாதா - அன்பினையுடைய தாயானவள், பிள்ளை [2] பேகணியாமல் - மண்ணைத் தின்னுதற்கு ஆசைப்பட்ட பிள்ளை வருந்தாமல், மண் தின்னவிட்டு - முந்துற மண்ணைத் தின்ன விட்டு, பிரதி ஔஷதம் இடுமா போலே, - பின்னர் அதற்கு மாற்று மருந்து இடுமாறு போலே, எவ்வுயிர்க்கும் தாயிருக்கும் வண்ணமான இவனும் - [3] "எல்லா எவ்வுயிர்க்கும் தாயோன்" என்றும், [4] "தாயிருக்கும் வண்ணமே" என்றும் சொல்லுகிறபடியே எல்லா ஆன்மாக்கள் அளவிலும் தாயைப் போன்ற அன்பினை யுடையனுன இவனும், ருசிக்கு ஈடாக - மக்களுடைய ருசிக்குத் தகுதியாக, பந்தமும் காட்டிப் பந்தம் அறுப்பதோர் மருந்தும் காட்டும் - தளைகளையும் காட்டி, பின்னைத் தளைகளை நீக்குவதற்கு மருந்தினையும் காட்டுவான் என்கை.

இதனுல், இப்படிச் செய்தது சம்பந்தம் காரணமாக வருகின்ற அன்பின் காரியம் ஆகையாலே சம்பந்தத்திற்குக் குற்றம் வாராது என்ருராயிற்று.

(14)

1. பந்தமும் காட்டும், பந்தம் அறுப்பதோர் மருந்தும் காட்டும் எனக் காட்டும் என்னும் சொல்லை மூன்னும் கூட்டுக.

2. பேகணித்தல்-வருந்துதல்; "பின் சென்று காதல்கூரப் பேழ்கணித்திரங்குகின்ற" என்பது, கம்ப. கிஷ். மராமரப்ப. 12.

3. திருவாய். 1. 5: 3.

4. பெரியதிருமொழி, 11. 6: 6.

## 15

அது தானும் ஆஸ்திக்ய விவேக அந்யசேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தி பாரதந்த்ர்யங்களை உண்டாக்கின வழி. [1]

என்பது சூத்திரம்.

**வியாக்:**—இப்படி அன்பினாலே செய்தானாகிலும் முக்குணங்களுக்கு வசப்பட்டிருக்கிற மக்களுக்கு ருசிக்குத் தகுதியான பலவகைப்பட்ட சாதனங்களை விதிக்கிற, பிறவியிலே கட்டுண்டு கிடப்பதற்குக் கருவியான சாஸ்திரத்தைக் காட்டினால், அம்மக்கள் பிறவிகளிலே உழன்று திரிவதற்குக் காரணம் ஆகாதோ.? என்ன, அங்ஙனமாய சாஸ்திரத்தை அருளிச் செய்ததும் முறையாக அவர்கள் கரை ஏறுதற்கு இட்ட வழி என்கிறார் இச் சூத்திரத்தால்.

அது தானும் - மோக்ஷ சாஸ்திரத்தை மாத்திரம் காட்டாமல் [2] சியேநவிதி முதலான பிறவியிலே கட்டுண்டு கிடப்பதற்குக் காரணமான சாஸ்திரங்களைக் காட்டியது தானும், ஆஸ்திக்யம் உண்டாக்கி- தமோகுணம் மிக்கவர்களாய்ப் பொருள் ஈட்டுவதற்காகப் பிறரை வருத்திக் கொன்று திரிதலையே இயல்பாகக் கொண்டுள்ள நாஸ்திகர்களுக்கு மோக்ஷத்தை விதித்தால் அவர்களுக்கு அது ருசியாமையாலே, பிறரை வருத்திக் கொன்று திரிதற்கு உறுப்பாக இருக்கின்ற அபிசார கர்மத்தை [3] "பகைவர்களைக் கொல்ல விரும்புகிறவன் சியேநம் என்னும் பெயருடைய வேள்வியாலே தனது விருப்பத்தைச் சாதித்துக் கொள்ளக் கடவன்" என்று விதித்து, அந்த யாகத்தாலே 'சாஸ்திரம் உண்டு' என்னும் ஆஸ்திக புத்தியை அவனுக்கு உண்டாக்கி; அவன் ஆஸ்திகனான பின்பு,

விவேகம் உண்டாக்கி - [4] "சுவர்க்க இன்பத்தை விரும்புகிறவன் ஜ்யோதிஷ்டோமம் என்னும் யாகத்தினாலே தனது விருப்பத்தை

---

1. சூத்திரத்திலே உள்ள 'உண்டாக்கி' என்னும் சொல்லை, முன்னே உள்ள ஆஸ்திக்யம், விவேகம், அந்யசேஷத்வ நிவ்ருத்தி, ஸ்வஸ்வாதந்த்ர்யநிவ்ருத்தி என்பனவற்றோடும் தனித்தனியே கூட்டுக. ஆஸ்திக்யம்-மறுபிறப்பும் இருவினைப்பயனும் கடவுளும் உண்டு என்ற எண்ணம். விவேகம்-பகுத்தறிவு. அந்யசேஷத்வ நிவ்ருத்தி-பிறருக்கு அடிமை என்ற நினைவு நீங்குதல். ஸ்வஸ்வாதந்தர்ய நிவ்ருத்தி-தனக்குத்தானே உரியன் என்ற எண்ணத்தினின்றும் நீங்குதல்.

2. ஸியேநம்-ஒருயாக விசேடம்.

3. "ச்யேநேந அபிசரந் யஜேத." என்பது ஆபஸ்த்தம்ப சூத்.



முடித்துக் கொள்ளக் கடவன்" என்பது முதலானவைகளாலே சுவர்க்கம் முதலான பேறுகளைப் பெறுதற்குரிய சாதனங்களை விதித்து, அவ்வழியாலே ஆன்மா வேறு, சரீரம் வேறு என்னும் பகுத்தறிவை உண்டாக்கி; இப்படி ஆன்மா வேறு, சரீரம் வேறு என்ற பகுத்தறிவு பிறந்த பின்பு,

அந்ய சேஷத்வ நிவ்ருத்தி உண்டாக்கி - நிலை அற்றவையான சுவர்க்க முதலான பேறுகளைப் பெற்றுத் துன்பம் கலந்த இன்பத்தை நுகர்ந்து மீள்வதைக் காட்டிலும், இன்பமயமான நிலையுள்ளதான பேற்றினைப்பெற்று நிலைத்து வாழலாமே என்கிற ஆசையை உண்டாக்க வல்ல ஆன்ம இன்பமாகிற கைவல்யத்துக்கு வழிகாட்டி, அவ்வழியாலே அந்யசேஷத்வ நிவ்ருத்தியை உண்டாக்கி; அந்யசேஷத்வ நிவ்ருத்தியாவது - பிறருக்கு அடிமைப்பட்டிருக்கும் அடிமையினின்றும் நீங்குதல். அது உண்டான பின்பு,

ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தி உண்டாக்கி - தன்னைத் தானே அநுபவிக்கிற கேவல ஆன்ம இன்பத்தைக் காட்டிலும், மிக மேலானதாய் அந்தமில் இன்பமாய மோக்ஷ இன்பத்தையும் அதனை அடைதற்குச் சாதனமான பக்தியையும் காட்டி, அவ்வழியாலே ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தியை உண்டாக்கி: ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தி - தனக்குத் தானே உரியவனாக இருக்கும் தன்மையினின்றும் நீங்குதல். அது உண்டான பின்பு,

பாரதந்த்ர்யத்தை உண்டாக்கின வழி - செய்தற்கு அரிய பக்தி முதலானவற்றைச் செய்து தளருமளவில் தன்முயற்சி இல்லாத தன்மையதான பிரபத்தியிலே மூட்டி, ஆன்மாவிற்கு என்றும் உள்ள தன்மையதான பாரதந்திரியத்திலே மூட்டி; இந்த முறையாலே ஆன்மா கரை ஏறுதற்கு இட்ட வழி என்றவாறு. பாரதந்த்ர்யம் - ஈச்வரனுக்கு அடிமைப்பட்டு, அவன் விதித்த வழியிலே நின்று ஒழுகுதல்.

ஆக, பதினோராம் சூத்திரம் முதல் இச் சூத்திரமுடிய, பிறவிக்கும் மோக்ஷத்திற்கும் உரிய காரண பரம்பரைகளிலே முடிந்த நிலமான பிரகிருதி சம்பந்தமும் நாராயண சம்பந்தமும் இவ்ஆன்மாவிற்குச் செய்யும் காரியங்கள் இவை என்பதனையும், அவற்றுள் பிரகிருதி சம்பந்தம் யாதானும் ஒரு காலத்தில் அழியக்கூடியது, நாராயண சம்பந்தம் அழியாது என்றும் நிலைத்திருப்பது என்பதனையும், அந்த நாராயண சம்பந்தமே "கலைகளை நீர்மையினால் அருள் செய்தான்" என்று கூறியபடி கலைகளைத் தந்தமைக்குக் காரணம்

என்பதனையும், மக்கள் மாட்டுத் தாய் போன்ற அன்பினன் ஆகையாலே மக்களுடைய ருசிக்குத் தகுதியாக அவற்றுள் விடுவிக்கும் சாஸ்திரத்தை மட்டுமல்லாமல் பிறவியிலே கட்டுப்படுத்தக் கூடிய சாஸ்திரங்களையும் கொடுத்தான் என்பதனையும், அங்ஙனம் கொடுத்தது தானும் முறையிலே அவர்கள் உயர்வு பெற்றுக் கரை ஏறுதற்கு இட்ட வழி என்பதனையும் அருளிச் செய்தாராயிற்று. (15)

## 16

(சதுர்விதமான தேஹ வர்ண ஆச்ரம அதிகார பல மோக்ஷ சாதந கதி யுக தர்ம வியூக ரூப கிரியாதிகளை அறிவிக்கிற பாட்டுப் பரப்புக்குப்) (பெரிய தீவினில், ஒன்பதாம் கூறும் மானிடப் பிறவியும் ஆக்கை நிலையும் ஈரிரண்டில் ஒன்றும் இளமையும் இசைவும் உண்டாய்ப் புகுவரேலும்) என்கிறதுக்குள்ளே, (விக்நமற நின்றவாறில்லாப் பிரமாதியைக் கொண்டு அறக் கற்கை அரிது என்றிறே) (வேதசார உபநிஷத் சாரதர அநுவாகசாரதம காயத்ரியில் முதல் ஓதுகிற பொருள் முடிவான சுருக்கைத் தெய்வ வண்டாய் அன்னமாய் அமுதம் கொண்டவன் சாகைகளிலும் ஓதம்போல் கிளர் நால் வேதக் கடலிலும் தேனும் பாலும் அமுதுமாக எடுத்துப் பெருவிசும்பு அருளும் பேரருளாலே சிங்காமை விரித்தது.)

என்பது சூத்திரம்.

**வியாக்:—** [1]இனி, மேல் சாஸ்திரங்களாலே சொல்லப்படுகின்ற அர்த்த விசேடங்களைச் சுருக்கமாக அருளிச் செய்து, இவ்விதமான சாஸ்திரங்களைக் கற்பதற்குப் பலப்பல தகுதிகள் வேண்டியிருப்பதனாலே அந்தச் சாஸ்திரங்களைக் கற்பது அருமை என்று

1. *முதற் சூத்திரத்தில் "கலைகளை நீர்மையினால் அருள் செய்தான்" என்று எடுக்கப்பட்ட கலைகளிலே சொல்லப்படும் பொருள்கள் இன்னவை இன்னவை என்று இச்சூத்திரத்தில் விவரிக்கிறார், 'சதுர்விதமான' என்றது முதல் 'பாட்டுப்பரப்புக்கு' என்றது முடிய. அதற்குமேல் 'பெரிய தீவினில்' என்பது முதல் 'உண்டாய்ப்புகுவரேலும்' என்றது முடிய அக்கலைகளைக் கற்பதற்கு வேண்டிய தகுதிகளை விவரிக்கிறார். அதற்குமேல் 'விக்நமற' என்பது முதல் 'அரிதென்றிறே' என்றது முடிய, அத்தகுதிகள் இருந்து கற்க முயன்றாலும் சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினோர்கள் ஆகையாலே கற்று அவற்றின் பொருளை அறிந்து தெளிதல் அரிது என்கிறார். அங்ஙனம் அரிது ஆகையினாலே பக்தியுடையார் எல்லாரும்*



தானே திருவுள்ளம்பற்றி, இத்தகைய தகுதிகள் பல வேண்டப்படாத காரணத்தினாலே கற்பதற்கு எளியதாய், சாஸ்திரத்தின் தாத்பரியமுமான திருமந்திரத்தை சர்வேச்வரன் வெளியிட்டபடியை அருளிச் செய்கிறார் இச் சூத்திரத்தால்.

'சதுர்விதமான' என்கிற இது, மேலே வருகின்ற 'தேஹம்' முதல் 'கிரியை' முடிய உள்ள சொற்கள் எல்லாவற்றோடும் தனித்தனியே சேர்கிறது. அதாவது, சதுர்விதமான தேஹம் - தேவர் மனிதர் திரியக்குத் தாவரம் என்னும் தன்மையால் நான்கு வகைப்பட்ட சரீரங்கள். சதுர்விதமான வர்ணம் - அந்தணன் அரசன் வணிகன் வேளாளன் என்ற தன்மையால் [1]நான்கு வகைப்பட்ட வருணம். சதுர்விதமான ஆச்ரமம் - பிரஹ்மசரியம் இல்லறம் வானப்பிரஸ்தம் சந்நியாசம் என்ற தன்மையால் [2]நான்கு வகைப்பட்ட ஆச்ரமம். சதுர்விதமான அதிகாரம் - [3]போன செல்வத்தை மீண்டும் அடைவதற்கு விரும்பும் ஆர்த்தனும், புதிய செல்வத்தை விரும்பும் அர்த்தார்த்தியும், ஆன்ம இன்பத்தை விரும்பும் கேவலனும், பகவானை அடைய விரும்பும் பகவத்பிராப்திகாமனும் என்ற நான்கு வகைப்பட்ட அதிகாரிகளும், சதுர்விதமான பலம் - அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு வகைப்பட்ட பலமும், சதுர்விதமான மோக்ஷம் -

*அதிகாரிகளாம்படி எளிதான திருமந்திரத்தை வெளியிட்டமையை அருளிச்செய்கிறார் 'வேதசார' என்பது முதல் 'சிங்காமை விரித்தது' என்றது முடிய.*

*சூத்திரத்தில் 'வேதஸார, உபநிஷத்ஸாரதர, அநுவாக ஸாரதம காயத்ரியில் ஓதுகிற பொருள் முடிவான சுருக்கை' என்ற வாக்கியத்தால் திருமந்திரத்தின் பெருமை ஓதுகிறபடி. அதற்கு மேல், 'தெய்வ வண்டாய்' என்று தொடங்கும் வாக்கியம், அத்திருமந்திரம் "தேனும் பாலும் அமுதுமாய திருமால் திருநாமம்" ஆகையினாலே, அதனை வேதத்தினின்றும் இறைவன் எடுத்த வகையினை விவரிக்கின்றது.*

1. *நான்குவகைப்பட்ட வருணங்களை, தொல்காப்பியம் பொருளதிகாரம் மரபியல் 70 - 84 சூத்திரங்களைக் கொண்டு உணர்தல் தகும்.*

2. *"இல்வாழ்வான் என்பான்" என்ற திருக்குறளுக்குப் பரிமேலழகர் எழுதிய விசேடவுரை இங்கு நினைவு கூர்க.*

3. *"ஆர்த்தோ ஜிஜ்ஞாஸு: அர்த்தார்த்தீ ஜ்ஞாநீ" என்பது; ஸ்ரீகீதை, 7: 16.*

[1] சாலோக்ய சாமீப்ய சாருப்ய சாயுஜ்யங்கள் என்னும் நான்கு வகைப்பட்ட மோக்ஷமும், சதுர்விதமான சாதநம் - கர்மம் ஞானம் பக்தி பிரபத்தி என்கிற நான்கு வகைப்பட்ட உபாயங்களும்,

சதுர்விதமான கதி - பஞ்சாக்நி வித்யையில் சொல்லப்படுகின்ற வகையால் வரும் [2] கர்ப்பகதி யாம்யகதி தூமாதிகதி அர்ச்சிராதிகதி என்னும் நான்கு வகைப்பட்ட கதிகளும், சதுர்விதமான யுகம் - கிருதயுகம் திரேதாயுகம் துவாபரயுகம் கலியுகம் என்னும் நான்கு வகைப்பட்ட யுகங்களும், சதுர்விதமான யுகதர்மம் - [3] "கிருத யுகத்தில் தியானம் செய்தும் திரேதா யுகத்தில் யாகம் செய்தும் துவாபர யுகத்தில் அருச்சனை செய்தும் எது அடையப்படுகிறதோ அது கலியுகத்தில் கேசவனைத் துதிப்பதாலேயே அடையப்படுகிறது" என்கிறபடியே தியானம் செய்தல், யாகம் செய்தல், அருச்சனை செய்தல், துதித்தல் ஆகிற நான்கு வகைப்பட்ட யுக தர்மங்களும், சதுர்விதமான வியூகம் - வாசுதேவர் சங்கர்ஷணர் பிரத்யும்நர் அநிருத்தர்களாகிற நான்கு வகைப்பட்ட் வியூகங்களும், சதுர்விதமான ரூபம் - கிருதம் முதலிய நான்கு வகைப்பட்ட யுகங்களில் [4] "பாலின் நீர்மை" என்னும் திருப்பாசுரத்திற் சொல்லுகிறபடியே வெண்மை பசுமை சியாமம் நீலம் என்னும் நான்கு வகைப்பட்ட நிறங்களும், சதுர்விதமான கிரியை - படைத்தல் அளித்தல் அழித்தல் மோக்ஷத்தையருளல் எனனும் நான்கு வகைப்பட்ட தொழில்களும்,

1. *சாலோக்யம்-இறைவனோடு ஒரே உலகத்தில் இருத்தல். சாமீப்யம் - இறைவன் அருகில் இருத்தல். சாரூப்யம் - இறைவனுடைய உருவத்தை அடைதல். சாயுச்சியம் - இறைவனுடைய அநுபவத்தைப் பெறுவது. சமானமான அநுபவத்தையுடையவன் 'சயுக்கு' எனப்படுவான்; அவனுடைய தன்மை சாயுஜ்யம். "சாலோக சாமீப சாரூபமும் புசிப்பித் தாலோகந் தன்னை அகற்றுவித்து" என்றார் பிறரும். (கந்தர்கலி வெண்பா).*

2. *கர்ப்பகதி-கருவிலே செல்லுதல்; பிறப்பு. யாம்யகதி-யமலோகத்திற்குச் செல்லுதல். தூமாதிகதி-சுவர்க்கம் முதலிய உலகங்கட்குச் செல்லுதல். அர்ச்சிராதிகதி-மோக்ஷ உலகிற்குச் செல்லுதல்.*

3. *"தியாயந் க்ருதே யஜந் யஜ்ஞை: த்ரேதாயாம் த்வாபரே அர்ச்சயன், யதாப்நோதி ததாப்நோதி கலௌ ஸங்கீர்த்ய கேசவம்." என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 6- 2: 16.*

4. *"பாலினீர்மை செம்பொனீர்மை பாசியின் பசும்புறம், போலும் நீர்மை பொற்புடைத் தடத்து வண்டு விண்டுலாம், நீலநீர்மை" என்பது, திருச்சந்த விருத். 44.*



'ஆதி' என்ற சொல்லால் மற்றும், நந்நான்கு வகையாகச் சொல்லப்பட்டிருக்கிற பொருள்களைச் சொல்லுகிறது. அதாவது, வாசுதேவமூர்த்தியினின்றும் தோன்றின கேசவ நாராயண மாதவர்கள், சங்கர்ஷணமூர்த்தியினின்றும் தோன்றின கோவிந்த விஷ்ணு மதுசூதநர்கள், பிரத்யும்ந மூர்த்தியினின்றும் தோன்றின திரிவிக்கிரம வாமந ஸ்ரீதரர்கள், அநிருத்த மூர்த்தியினின்றும் தோன்றின இருடீகேச பத்மநாப தாமோதரர்கள் எனப்படுகின்ற நான்கு வகைப்பட்ட வியூகத்தின் வேறுபாடுகளும், ஆமோதம் பிரமோதம் சம்மோதம் வைகுண்டம் எனப்படுகின்ற வியூகமூர்த்திகள் தங்கியிருக்கும் இடங்களும் முதலானவற்றையும் கொள்க. ஆக, இப்படி நான்கு விதமான அர்த்த விசேடங்களைச் சொல்லுகின்ற [1] "பாட்டும் முறையும்" என்னும் திருப்பாசுரத்திற் சொல்லப்படுகின்ற சாஸ்திரங்களைக் கற்பதற்கு;

பெரிய தீவினில் - [2] "நாவலம் பெரிய தீவு" என்னும் திருப்பாசுரத்திற் சொல்லுகின்றபடியே இவ்உலக இன்பத்தையும் மோக்ஷ உலக இன்பத்தையும் அடைதற்குரிய சாதனங்களைச் செய்தற்குத் தக்க பூமி ஆகையினாலே மற்றைய தீவுகளைக் காட்டிலும் சாலச் சிறந்ததான நாவலம் தீவில், ஒன்பதாம் கூறும் - ஒன்பது வகையான கண்டங்களிலே வைத்துக் கொண்டு மற்றைய கண்டங்களைப் போன்று இவ்வுலகோடு சம்பந்தப்பட்டிருக்கின்ற, சுவர்க்க லோகம் என்னலாம்படி போக பூமியாய் இராமல், சுவர்க்கத்தையும் மோக்ஷத்தையும் அடைதற்குரிய சாதனங்களைச் செய்வதற்குத் தக்க இடமாய், [3] "தேவர்கள் மேலே கண்டவாறு பாட்டுக்களைப் பாடுகின்றார்கள்; சுவர்க்கம் மோக்ஷம் ஆகிற பேறுகளை அடைவதற்கு வழியாக இருக்கிற பரத கண்டத்திலே, தெய்வத் தன்மையை அடைந்து அது முடிந்தவுடன் மீண்டு மனிதர்களாக எவர்கள் பிறக்கின்றார்களோ அவர்கள் சிறந்தவர்கள்" என்கிறபடியே தேவர்களும் கொண்டாடும்படியான ஒன்பதாம் கண்டமான பரத கண்டத்திலே பிறக்கும் பிறப்பும்,

1. *நான்முகன் திருவந். 76.*

2. *பெரியாழ்வார் திரு. 3. 6: 1.*

3. *"காயந்தி தேவா: கிலகீதகாநி தந்யாஸ்து யே பாரத பூமிபாகே, ஸ்வர்க்க அபவர்க்காஸ்பத மார்க்க பூதே பவந்தி பூய: புருஷா: ஸுரத்வாத்" என்பது; ஸ்ரீவிஷ்ணுபுரா. 2. 3: 24.*

மானிடப் பிறவியும் - அங்ஙனம் பிறந்தாலும் [1] "பல சரீரங்களைப் பெறுகின்ற ஆன்மாக்களுக்கு நொடிப் பொழுதில் அழிந்து போகிற மனித சரீரம் கிடைத்தல் அரிது" என்றும், [2] "உத்தமரான ஒ மைத்திரேயரே! ஓர் ஆன்மாவானது இப் பரத கண்டத்திலே புண்ணியத்தின் மிகுதியினுல் ஆயிரம் ஆயிரம் பிறவிகளுக்குப் பின்னர் மனிதப் பிறவியை அடைகிறது" என்றும், [3] "மானிடப் பிறவி அந்தோ" என்றும் சொல்லுகிறபடியே அரிதான மனிதப் பிறவியிலே பிறத்தலும்,

ஆக்கை நிலையும் - அங்ஙனம் மனிதப் பிறவியிலே பிறந்தாலும் [4] "பல சரீரங்களைப் பெறுகின்ற இவ் ஆன்மாக்களுக்கு மிக அரிதாகக் கிடைக்கின்ற மனித சரீரம் நொடிப்பொழுதில் அழிந்து விடுகிறது" என்றும், [5] "மின்னின் நிலையில மன்னுயிர் ஆக்கைகள்" என்றும் நிலையற்றதாகச் சொல்லப்பட்ட இச்சரீரமானது நிலைத்திருத்தலும், ஈர் இரண்டில் ஒன்றும் - நிலையுள்ள சரீரத்தைப் பெறினும் சாஸ்திர ஞானத்தைப் பெறுதற்குத் தகுதியுள்ள சாதிகளிலே முதன்மை பெற்றதாய் [6] "குலங்களாய ஈர் இரண்டில் ஒன்று" என்று சிறப்பிக்கப்படுகின்ற அந்தணர் குலத்திலே பிறத்தலும், இளமையும் - அந்தணர் குலத்திலே பிறப்பினும் "[7] ஆகையால் ஞானமுள்ள ஒருவன் எப்பொழுதும் இளமையிலேயே புகழுக்குரிய காரியங்களைச் செய்ய முயற்சி செய்யக் கடவன்" என்கிறபடியே அறிவு கொழுந்துவிட்டுக் கற்கைக்கு உறுப்பான [8] "கிளர் ஒளி இளமை" என்னும் இளமைப் பருவத்தோடிருத்தலும், இசைவும் உண்டாய் -

1. "துர்லபோ மாநுஷோ தேஹோ தேஹிநாம் க்ஷண பங்குர:" என்பது, ஸ்ரீபாகவதம், 11. 2: 21.
2. "அத்ர ஜந்ம ஸஹஸ்ராணும் ஸஹஸ்ரைரபி ஸத்தம,
கதாசித்லபதே ஜந்து: மாநுஷ்யம் புண்ய ஸஞ்சயாத்." என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 2. 3: 24.
3. திருக்குறுந்தாண்டகம், 8.
4. "துர்லபோ மாநுஷோ தேஹோ தேஹிநாம் க்ஷணபங்குர:." என்பது, ஸ்ரீபாகவதம், 11. 2: 21
5. திருவாய். 1. 2: 2.
6. திருச்சந்த விருத்தம், 90.
7. "தஸ்மாத் பால்யே விவேகாத்மா யதேத ச்ரேயஸே ஸதா." என்பது, ஸ்ரீவிஷ்ணு புரா. 1. 17: 75.
8. திருவாய். 2. 10: 1.



இளமைப் பருவத்தோடிருப்பினும் [1] "யானும் என் நெஞ்சும் இசைந்தொழிந்தோம்" என்கிறபடியே எல்லாவற்றுக்கும் இசைவு வேண்டுகையாலே அதிலே மூளுகைக்கு உறுப்பான இச்சையும் உண்டாகி, புகுவரேலும் - இவற்றை எல்லாம் அடைந்து [2] "வேதநூற் பிராயம் நூறு மனிசர்தாம் புகுவரேலும்" என்றும், [3] "மனிதன் நூறுவயதினையுடையவன்" [4] என்றும் சொல்லுகிறபடியே வேத சாஸ்திரங்களிலே சொல்லப்பட்ட ஆயுள் நூறும் பெற்று மக்கள் தாங்கள் புகுந்தார்களேயாகிலும்.

என்கிறதுக்குள்ளே - புகுகின்ற இந்த நூறு ஆயுளுக்குள்ளே, விக்நம்அற - [4] "எல்லை இல்லாத கரையையுடைய சாஸ்திரங்கள் பல அறியத் தக்கனவாக இருக்கின்றன, காலமோ அல்பம், வருகின்ற தடைகளோ அளவில்லாதவைகள்" என்றும், [5] "மஹான்கள் செய்யும் காரியங்களுக்கும் கூட தடைகள்பல வருகின்றன" என்றும் சொல்லுகிறபடியே சாஸ்திரங்களைக் கற்க ஒண்ணுதபடி வருகின்ற தடைகளும் அற்று, நின்றவா நில்லா பிரமாதியைக் கொண்டு - [6] "நின்றவா நில்லா நெஞ்சு" என்றும், [7] "கிருஷ்ணனே! அலைந்து திரியும் தன்மையுடைய மனமானது எந்தக் காரணத்தால் வலிமை உள்ளதோ அதனுல் அது யாரையும் கலங்கும்படி செய்யும்; இது உறுதி" என்றும் சொல்லுகிறபடியே ஒரு விஷயத்தில் அரைக்கணமும் நில்லாமல் இவனை அடர்த்துத் தன் வழியே இழுக்கும் மனத்தினைக் கொண்டு, அறக் கற்கை - [8] "கலையறக் கற்ற மாந்தர்" என்கிறபடியே சுருதி ஸ்மிருதி முதலான சாஸ்திரங்களை அவற்றின் கருத்துப்பொருள் கைப்படும்படி கற்றல், அரிது என்றிறே- [9] "ஆமாறு அறிவுடையார் ஆவது அரிது அன்றே" என்கிறபடியே கருத்துப்

1. பெரியதிருவந். 26.
2. திருமாலை, 3.
3. "சதாயு: வை புருஷ:" என்பது, பிரமாணம்.
4. "அநந்த பாரம் பஹுவேதிதவ்யம் அல்பஸ்ச காலோ பஹவஸ்ச விக்நா:." என்பது, உத்தர கீதை, 7: 10.
5. "ச்ரேயாம்ஸி பஹுவிக்நாநி பவந்தி மஹதாமபி" என்பது பிரமாணம்.
6. பெரியதிருமொழி, 1. 1: 4.
7. "சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம்" என்பது, ஸ்ரீகீதை, 6: 34. பிரமாதி-அலைந்து திரியும்.
8. திருமாலை, 7.
9. பெரியதிருவந், 37.

பொருளிலே பொருந்தி நிற்றல் அரிது என்று திருவுள்ளம்பற்றி அன்றோ. 'சுருக்கைப் பேரருளாலே சிங்காமை விரித்தது' என்று மேல் வரும் வாக்கியத்தோடு இதனை முடிக்க.

[1] "சாரம் இல்லாத புறம்பான சாஸ்திரங்களையும் அல்பசாரமான வேதத்தின் பூர்வபாகத்தையும் சாரமான உபநிடதத்தையும் சாரதரமான நாராயண அநுவாகத்தையும் விடவேண்டும்; கடலிலே அமுதம் போன்று சாரதமமான விஷ்ணு காயத்திரியை எடுத்துக் கொள்ளவேண்டும்" என்கிறபடியே சாரதமமான சாஸ்திரத்தை எடுத்துக்கொள்வான் என்கையாலே தாம் இனி அருளிச் செய்யப் புகும் திருவெட்டெழுத்தின் சீர்மையை எடுத்துக் காட்டுகிறார் மேல் :-

வேதசார உபநிஷத் - வேதத்தின் முன் பாகத்தில் சாரமான வேதாந்தம் என்றபடி. உண்மையல்லாத பொருள்களைத் தெரிவிக்கின்றன ஆகையாலே சாரம் இல்லாத புறம்பான சாஸ்திரங்கள் போல் அன்றிக்கே உள்ளதை உள்ளவாறே கூறுவதாக இருந்ததேயாகிலும், [2] சியேநவிதி முதலாக ஜ்யோதிஷ்டோமம் முதலானவைகள் ஈறாக, இவ் உலக இன்பத்தையும் சுவர்க்க முதலான மேல் உலகங்களின் இன்பத்தையும் பெறுதற்குரிய சாதனங்களைச் சொல்லுகிற வேதத்தின் முன் பாகம், மிகச் சிறிய பேறுகளைப் பெறுதற்குரிய சாதனங்களைச் சொல்லுகையாலும், சாஸ்திரங்களில் நம்பிக்கை, சரீரம் வேறு ஆன்மா வேறு என்னும் பகுத்தறிவு என்னும் இவற்றைப் பிறப்பிக்குமளவினதாகையாலும் அல்ப சாரமாக இருக்கும். அந்தமில் இன்பத்து அழிவில் வீடு, பரம்பொருள் சொரூபம் முதலானவற்றையும் அதனை அடைவதற்குரிய சாதனங்களையும் சொல்லுகையாலே உபநிடதபாகம் அவ்விதமின்றிச் சாரமாக இருக்கும்.

சார தர அநுவாகம் - அது தன்னிலும் அவ் உபநிடதங்களிற் சொல்லுகிற பரம்பிரஹ்ம, பரதத்வ, பரஞ்ஜ்யோதி:, பரமாத்மா என்பன போன்று பொதுவாகச் சொல்லுகிற சொற்களாலும் விசேடித்துச் சொல்லுகிற சம்பு சிவன் முதலிய சொற்களாலும் அறுதியிட்டுச் சொல்லப்படுகிறவன் 'நாராயணனே' என்று பகவானுடைய முதன்மையை மிகத் தெளிவாக அறுதியிட்டுச் சொல்லுகிற தனக்கே உரித்தான நாராயண அநுவாகம் சாரதரமாக இருக்கும்.

---

1. "அஸாரம் அல்பஸாரஞ்ச ஸாரம் ஸாரதரம் த்யஜேத், பஜேத்ஸாரதமம் சாஸ்த்ரம் ரத்நாகர இவாம்ருதம்." என்பது, வைகுண்ட தீக்ஷிதீயம்.

2. சியேனம், ஜ்யோதிஷ்டோமம் என்பன யாக விசேடங்கள்.



சார தம காயத்ரியில் - அது தன்னிலும் காட்டில் எல்லார்க்கும் அறப் பெரியவனாக இருக்கும் இறைமைத் தன்மைக்குச் சிறந்த அடையாளமான அவனுடைய ஸர்வ அந்தராத்மத்வத்தை (சராசரங்களனைத்திலும் உயிருக்குள் உயிராய்த் தங்கியிருக்கும் தன்மை)த் தெளிவிக்கின்றதாய், அவ்யாபகமான (எங்கும் பரந்து நிறைந்திராமையைக் குறிக்கின்றவையான) பகவானுடைய மந்திரங்கள் எல்லாவற்றிலும் சிறந்தனவாய் இருக்கிற வியாபக மந்திரங்கள் (எங்கும் பரந்து நிறைந்திருத்தலைக் குறிக்கும் மந்திரங்கள்) [1] மூன்றனையும் சொல்லுகிற விஷ்ணு காயத்ரி சாரதமமாய் இருக்கும்.

முதல் ஓதுகிற பொருள் முடிவான சுருக்கை - இப்படி இருந்துள்ள காயத்ரியிலே பரந்துஉறைதற்கு இடமான பொருள்களைக் காட்டக் கூடிய சொற்களை அவாவிக் கொண்டிருக்கின்ற விஷ்ணு, வாசுதேவன் என்னும் மந்திரங்களில் வேறுபாடுள்ளதாகையாலே [2] "நாராயணனை உபாசிக்கிறோம்" என்று ஆதரம் தோற்ற முதலிலே ஓதப்படுகிற [3] "ஓத்தின் பொருள் முடிவும் இத்தனையே - மாதவன் பேர், சொல்லுவதே ஓத்தின் சுருக்கு" என்கிறபடியே வேதாந்தத்தின் கருத்துப் பொருளாய், [4] "இருக்கு வேதம் யசுர் வேதம் சாம வேதம் அப்படியே அதர்வண வேதம் மற்றும் உண்டான இதிகாசம் முதலானவைகள் எல்லாம் திருவெட்டெழுத்தினுள் பொதிந்து கிடக்கின்றன" என்கிறபடியே எல்லா வேதங்களின் சுருக்கமுமான திருமந்திரத்தை.

---

1. 'மூன்றனையும்' என்றது, விஷ்ணு, வாசுதேவன், நாராயணன் என்னும் மந்திரங்கள் மூன்றனையும்.

"பகவந் மந்திரங்கள்தான் அநேகங்கள்", "அவைதாம் வியாபகங்கள் என்றும் அவ்யாபகங்கள் என்றும் இரண்டு வர்க்கம்", "அவ்யாபகங்களில் வியாபகங்கள் மூன்றும் ச்ரேஷ்டங்கள்", "இவை மூன்றிலும் வைத்துக் கொண்டு பெரிய திருமந்த்ரம் ப்ரதாநம்", "மற்றையவை இரண்டுக்கும் அசிஷ்டபரிக்ரஹமும் அபூர்த்தியும் உண்டு", "இத்தை வேதங்களும் ரிஷிகளும் ஆழ்வார்களும் ஆசார்யர்களும் விரும்பினார்கள்." (முமுக்ஷுப்படி 8-13.) என்ற திவ்யசூக்திகள் இங்குச் சிந்திக்கத்தக்கன.

2. "நாராயணாய வித்மஹே" என்பது புருஷசூக்தம்.

3. இரண்டாந் திருஅந். 39.

4. "ருசோ யஜூம்ஷி ஸாமாநி ததைவ அதர்வணாநிச, ஸர்வம் அஷ்டாக்ஷராந்தஸ்தம்." என்பது, பாஞ்சராத்ரம்.

வேதங்களின் சாரமாய் [1] "தேனும் பாலும் அமுதுமாய திருமால் திருநாமம்" என்னும்படி இருக்கிற இதனை வேதத்தில் நின்றும் அவன் எடுக்கிறபோது எடுத்த விதத்தை மூன்று வகையாகப் புணைந்து அருளிச்செய்கிறார் மேல்: [2] தெய்வ வண்டாய் அன்னமாய் அமுதங்கொண்டவன் சாகைகளிலும் ஓதம்போல் கிளர் நால் வேதக் கடலிலும் தேனும் பாலும் அமுதுமாக எடுத்து - தெய்வ வண்டாய் சாகைகளிலே தேனாக எடுத்து - [3] "தூவியம் புள்ளுடைத் தெய்வ வண்டு" என்கிறபடியே இறைவன் தெய்வ வண்டு ஆகையாலே, வண்டானது சாகைகளிலே அலைந்து திரிந்து தேனை எடுக்குமாறு போன்று, சாரமான எல்லாப் பொருள்களையும் அறிவிக்கின்ற காரணத்தாலே எல்லாச் சாஸ்திரங்களின் ரசமாய்த் தேன் போலே இருக்கிற இதனை வேத சாகைகளிலே தேனை எடுக்குமாறு போலே எடுத்தான்; எடுத்துப் 'பேரருளாலே சிங்காமை விரித்தான்' என்று மேலே கூட்டுக.

அன்னமாய் ஓதம்போல் கிளர் வேத நீரிலே பாலாக எடுத்து - [4] "அன்னமாய் அன்று அங்கு அருமறை பயந்தான்" என்கிறபடியே இறைவன் அன்னமாக அவதரித்தவன் ஆகையாலே அன்னமானது நீரிலே கலந்து கிடக்கின்ற பாலைப் பிரித்து எடுக்குமாறு போன்று, [5] "நானும் சொன்னேன் நமரும் உரைமின்" என்னும்படி இருக்கையாலே இன்னார் இனியார் என்னாது எல்லாரும் உட்கொள்ளும்படி இருக்கிற பால் போன்ற இதனை [6] "ஓதம்போல் கிளர்வேத நீரிலே" பாலைப் பிரித்து எடுக்குமாறு போலே எடுத்தான்; எடுத்துப் 'பேரருளாலே சிங்காமை விரித்தான்' என்று மேலே கூட்டுக.

அமுதம் கொண்டவன் நால் வேதக் கடலிலே அமுதமாக எடுத்து - [7] "அமுதம் கொண்ட பெருமான்" என்கிறபடியே அசுரர்களுக்கு அஞ்சினவர்களாய் இறவாமை விரும்பினவர்களான தேவர்களைப் பாதுகாக்கும் பொருட்டுத் திருப்பாற்கடலைக் கடைந்து அமு

1. *பெரியதிருமொழி*, 6. 10: 6.

2. *இவ்வாக்கியத்தை 'தெய்வ வண்டானவன் சாகைகளிலே தேனாக எடுத்து' என்றும், 'அன்னமானவன் ஓதம் போல் கிளர் வேதநீரிலே பாலாக எடுத்து' என்றும், 'அமுதம் கொண்டவன் நால் வேதக்கடலிலே அமுதாக எடுத்து' என்றும் பிரித்துக் கூட்டி நிரல் நிறையாகப் பொருள் கொள்க.*

3. *திருவாய்*. 9. 9: 4. 4. *பெரியதிருமொழி*, 5. 7: 3.

5. *பெரியதிருமொழி*, 6. 10: 6. 6. *திருவாய்*. 1. 8: 10.

7. *பெரியதிருமொழி*, 6. 10: 3.



தத்தை எடுத்தாற்போன்று, பிறப்பு இறப்புகட்கு அஞ்சினவர்களாய் மோக்ஷத்தை அடைய விரும்பினவர்களைப் பாதுகாக்கும் பொருட்டு வேறுபட்ட இனிமையை யுடையதாய்ப் பிறப்பு இறப்புக்களை அழிப்பதுமாகையாலே அமுதம் போன்றிருக்கின்ற இதனை [1] "நால்வேதக் கடலிலே" அமுதத்தை எடுக்குமாறு போன்று எடுத்தான்; எடுத்துப் 'பேரருளாலே சிங்காமை விரித்தான்' என்று மேலே கூட்டுக.

பெருவிசும்பு அருளும் பேரருளாலே சிங்காமை விரித்தது - ஆக, இப்படி வேதசாரமான இத் திருமந்திரத்தைத் தானாகவே எடுத்து, [2] "அமரர் பெருவிசும்பு அருளும் பேரருளாளன் - வதரியாச்சிராமத்துள்ளானே" என்கிறபடியே நித்திய சூரிகளுக்கு இனியதாய், '**பரமாகாசம்**' என்னும் சொல்லிற்குப் பொருளாக உள்ள பரமபதத்தைக் கொடுப்பதான காரணம் பற்றாத பேரருளாலே [3] "நர நாரணனாய் உலகத்து அறநூல் சிங்காமை விரித்தவன்" என்கிறபடியே [4] ஸ்ரீவதரியாச்சிரமத்திலே நர நாராயணர்களாக அவதரித்துத் தானே சிஷ்யனுமாய்த் தானே ஆசாரியனுமாய் நின்று, ஆன்ம சொரூபத்தைத் தெளிவாக்குகின்ற சாஸ்திரமானது குறைவு படாமல் உபதேச அநுஷ்டானங்களாலே விரிவினையடையும்படி செய்தருளினான். (16)

### 17

*முனிவரை இடுக்கியும் முந்நீர்வண்ணனாயும் வெளியிட்ட சாஸ்த்ர தாத்பர்யங்களுக்கு விசிஷ்ட நிஷ்கிருஷ்ட வேஷங்கள் விஷயம்.* [5]

என்பது சூத்திரம்.

1. *பெரியாழ்வார்திருமொழி* 4.3:11. 2. *பெரியதிருமொழி*, 1. 4: 4.

3. *பெரியதிருமொழி*, 10. 6: 1.

4 *"சம்சாரிகள் தங்களையும் ஈச்வரனையும் மறந்து, ஈச்வரகைங்கர்யத்தையும் இழந்து, இழந்தோம் என்கிற இழவும் இன்றிக்கே, சம்சாரமாகிற பெருங்கடலிலே விழுந்து நோவுபட, சர்வேச்வரன், தன் கிருபையாலே இவர்கள் தன்னை அறிந்து கரைமரம் சேரும்படி, தானே சிஷ்யனுமாய் ஆசாரியனுமாய் நின்று திருமந்திரத்தை வெளியிட்டருளினான்", "சிஷ்யனாய் நின்றது சிஷ்யன் இருக்கும் இருப்பு நாட்டார் அறியாமையாலே அத்தை அறிவிக்கைக்காக", "சகல சாஸ்திரங்களாலும் பிறக்கும் ஞானம் ஸ்வயமார்ஜிதம் போலே; திருமந்திரத்தால் பிறக்கும் ஞானம் பைத்ருகதநம் போலே." (முமுக்ஷுப்படி, 5- 7.) என்னும் ஸ்ரீசூக்திகள் இங்கு அறியத்தக்கன.*

5. *இச்சூத்திரத்தை, முனிவரை இடுக்கி வெளியிட்ட சாஸ்திரத்துக்கு விசிஷ்டவேஷம் விஷயம் என்றும், முந்நீர் வண்ணனாய் வெளியிட்ட தாத்பர்யத்துக்கு நிஷ்கிருஷ்ட வேஷம் விஷயம் என்றும் பிரித்து நிரல் நிறையே கூட்டிப் பொருள்காண்க. விசிஷ்ட வேஷம்-சரீரத்தோடுகூடின ஆத்மாவின் தன்மை. நிஷ்கிருஷ்ட வேஷம்-சரீரம் இல்லாத சுத்த ஆத்மாவின் தன்மை. நிஷ்கிருஷ்டம்-வடிகட்டுதல்.*

வியாக்:— ஆக, சர்வேச்வரன் தன் பேரருளாலே, பிறவிப் பெருங்கடலில் உழன்று திரிகின்ற மக்களை உய்விப்பிக்கும் பொருட்டுச் சாஸ்திரங்களையும் சாஸ்திரங்களின் தாத்பர்யமான திருமந்திரத்தையும் வெளியிட்டருளினன் என்று அருளிச்செய்தார் மேல். இவை இரண்டனையும் வெளியிட்ட வகை என்? இவற்றிற்கு இலக்கு யாவை? என்னும் வினவிற்கு விடை அருளிச்செய்யுமுகத்தால் அவற்றை வெளியிட்ட வகைகளையும் தோற்றுவித்துக் கொண்டு அவற்றிற்கு இலக்குகளையும் அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, முனிவரை இடுக்கி வெளியிட்ட சாஸ்திரத்துக்கு - [1]"இருள்கள் கடியும் முனிவர்" என்கிறபடியே, ஸ்மிருதிகளுக்குத் தலைவர்களான வியாசர் முதலான மஹரிஷிகளை [2]"கிருஷ்ணத்வைபாயநர் என்ற பெயர் உள்ள வியாச முனிவரை இறைவனை நாராயணனாக அறிவாயாக; செந்தாமரைக் கண்ணனை அவ் இறைவனைத் தவிர மற்றையோர் எவர்தாம் மஹாபாரதத்தைச் செய்தவராக ஆவார்" என்கிறபடியே தானாகச் சொல்லலாம்படி உயிர்க்குயிராய் நின்று வியாசர் மூலமாக வெளியிட்ட சாஸ்திரத்துக்கு விஷயம், விசிஷ்ட வேஷம் - இலக்கு, சரீரத்தோடு கூடிய ஆன்மா. முன்னீர் வண்ணனாய் வெளியிட்ட தாத்பர்யத்துக்கு - [3]"வதரியாச் சிராமத்துள்ளானைக் கருங்கடல் முந்நீர் வண்ணனை" என்கிறபடியே ஸ்ரீவதரியாச்சிரமத்திலே தானே சிஷ்யனுமாய்த் தானே ஆசார்யனுமாய் நின்று வெளியிட்ட சாஸ்திரத்தின் கருத்துப் பொருளான திருமந்திரத்துக்கு, விஷயம் நிஷ்க்ருஷ்ட வேஷம் - இலக்கு, ஆன்ம சொரூபம். இவற்றால், சாஸ்திரத்துக்குச் சரீரத்திலே நோக்கு, கருத்துப் பொருளான திருமந்திரத்துக்கு ஆன்மாவிலே நோக்கு என்றதாயிற்று. (17)

## 18

[4]தோல்புரையே போமதுக்குப் பழுதிலா யோக்யதை வேணும்; மனமுடையீர் என்கிற சிரத்தையே அமைந்த மர்மஸ்பர்சிக்கு நானும் நமரும் என்னும்படி சர்வரும் அதிகாரிகள்.
என்பது சூத்திரம்.

1. திருவாய். 10. 7: 7.
2. "க்ருஷ்ணத்வைபாயநம் வ்யாஸம் வித்தி நாராயணம் ப்ரபும், கோஹ்யந்ய: புண்டரீகாக்ஷாத் மஹாபாரதக்ருத்பவேத்." என்பது ஸ்ரீவிஷ்ணுபுரா. 3. 4: 5.
3. பெரியதிருமொழி, 1. 4: 10.
4. தோல்புரையேபோமது-சாஸ்திரங்கள். மர்மஸ்பர்சி-திருமந்திரம்; ஆத்மாவிலே சம்பந்த முடையது.



வியாக்:— மேலே கூறிய இவை இரண்டும் அனைவராலும் கற்கத் தக்கவையோ, அன்றிக் குறிப்பிட்ட ஒரு சிலராலேதாம் கற்கத் தக்கவையோ? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச் சூத்திரத்தால்.

தோல் புரையே போமதுக்கு - சரீரத்தோடு கூடிய ஆன்மாவையே நோக்காகக் கொண்டுள்ளதாகையாலே உட்பொருளான ஆன்மாவில் ஊற்றம் இன்றிக்கே மேலெழச் சரீரத்திலே நோக்காய் நடக்கிற சாஸ்திரங்களுக்கு, பழுதிலா யோக்யதை வேணும் - [1]"பழுதிலா ஒழுகலாற்று" என்னும் திருப்பாசுரத்திற் சொல்லுகிறபடியே தொடர்ந்து நெடுகப் போருகிற சாதிகளிலே பிறக்கும் பிறவியிலேயாதல், ஆசாரத்திலேயாதல் ஒரு பழுது அற்றிருக்கையாகிற தகுதி வேண்டும். மனமுடையீர் என்கிற சிரத்தையே அமைந்த - [2]"கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர்" என்றும், [3]"ஆடவர்களுக்குத் திருவெட்டெழுத்தினைக் கற்பதற்குச் சிரத்தையே காரணம்" என்றும் சொல்லுகிறபடியே மனஎழுச்சி மாத்திரமே போதியதான, மர்மஸ்பர்சிக்கு - ஆன்மாவிலே நோக்குள்ள திருமந்திரத்திற்கு, நானும் நமரும் என்னும்படி சர்வரும் அதிகாரிகள் - [4]"நானும் சொன்னேன் நமரும் உரைமின் நமோ நாராயணமே" என்று சொல்லுகிறபடியே, தக்கவர் தகாதவர் என்னும் வேறுபாடு இன்றி எல்லாரும் அதிகாரிகள் ஆவார்கள் என்கை.

இத்தால், சாஸ்திரங்களை எல்லாரும் கற்கப் போகாமைக் குரிய காரணத்தையும், திருமந்திரம் எல்லாரும் கற்கலாம்படி இருக்கும் காரணத்தையும் அருளிச் செய்தபடி. (18)

## 19

[5]சாஸ்திரிகள் தெப்பக்கையரைப்போலே இரண்டையும் இடுக்கிப் பிறவிக் கடலை நீந்த, சாரஜ்ஞர் விட்டத்தில் இருப்பாரைப் போலே இருகையும் விட்டுக் கரை குறுகும் காலம் எண்ணுவர்கள்.
என்பது சூத்திரம்.

1. திருமாலை, 42. 2. திருவாய். 10. 5: 1.
3. "ச்ரத்தைவ காரணம் பும்ஸாம் அஷ்டாக்ஷர பரிக்ரஹே." என்பது, பாஞ்சராத்திரம்.
4. பெரியதிருமொழி, 6. 10: 6.
5. சாஸ்திரிகள் தெப்பக்கையரைப் போலே இரண்டையும் இடுக்கிப் பிறவிக்கடலை நீந்த எண்ணுவர்கள் என்றும், ஸாரஜ்ஞர் விட்டத்திலிருப்பாரைப் போலே இருகையும் விட்டுக் கரைகுறுகும் காலம் எண்ணுவர்கள் என்றும் 'எண்ணுவர்கள்' என்னும் சொல்லை முன்னும்

வியாக் :— சாஸ்திரங்களிலே ஊன்றினவர்களாயும் சாஸ்திரத்தின் கருத்துப் பொருளான திருமந்திரத்திலே ஊன்றினவர்களாயும் இருக்கும் முமுக்ஷுக்கள்படியை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

சாஸ்திரிகள் - [1]"ஏ மைத்ரேயி! பரம்பொருள் கேட்கத் தக்கவன், மனனம் செய்யத் தக்கவன், தியானம் செய்யத் தக்கவன், நேரே பார்க்கத் தக்கவன்" என்றும், [2]"ஆன்மா என்றே வாழ்த்தி வணங்க வேண்டும்" என்றும், [3]"ஆன்மாவை ஓம் என்று தியானம் செய்யவேண்டும்" என்றும் பிறவிப் பெருங்கடலில் நின்றும் நீங்கி இறைவனை அடைவதற்குச் சாதனமாக இறை வணக்கத்தை விதித்து, [4]"இந்தப் பரம்பொருளே மோக்ஷத்திற்குக் காரணன்" என்றும், [5]"எல்லாப் பலன்களும் இந்தப் பரம்பொருளிடமிருந்துதான் கிடைககின்றன; அது யுக்திக்குப் பொருந்தியது" என்றும் இறைவனே பலன்களைக் கொடுக்கின்றவனாகவும் சொல்லும் சாஸ்திரங்களிலே ஊன்றி நிலைநின்ற சாஸ்திரிகள், தெப்பக் கையரைப் போலே - ஆற்றிலே நீந்துகிறவர்கள் ஒரு கையிலே தெப்பத்தை இடுக்கிக் கொண்டு ஒரு கையாலே நீரைத் துழாவுமாறு போன்று, இரண்டையும் இடுக்கி - தம் முயற்சியும் தம் முயற்சியாலே சாதிக்கப்படுகின்ற இறைவனுடைய அருளும் ஆகிற இரண்டனையும் பற்றிக் கொண்டு, பிறவிக் கடலை நீந்த எண்ணுவர்கள் - [6]"புணைவன் பிறவிக் கடல் நீந்துவார்க்கு" என்கிறபடியே பிறவிப் பெருங் கடலைக் கடக்க எண்ணுவர்கள்.

சாரஜ்ஞர் - இவ்ஆன்மா தன் முயற்சியை உதறித் தள்ளிவிட்டு இறைவன் ஒருவனையே உபாயமாகப் பற்றி இருக்கத் தக்கது என்று தெரிவிக்கின்ற சாஸ்திர சாரமான திருமந்திரத்தை அறிந்து அதில் நிலைநிற்கும் ஞானிகள், விட்டத்தில் இருப்பாரைப் போலே -

கூட்டுக. சாஸ்திரிகள்-வேத சாஸ்திரங்களிலே ஊற்றமுள்ளவர்கள். ஸாரஜ்ஞர்-திருமந்திரத்திலே ஊற்றமுள்ளவர்கள்; திருமந்திர நிஷ்டர்கள் என்றபடி.

1. "ஆத்மாவா அரே த்ரஷ்டவ்ய: ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:" என்பது, பிரு. உப.
2. "ஆத்மா இதிஏவ உபாஸீத." என்பது, பிரு. உப.
3. "ஓம்இதி ஆத்மாநம் த்யாயத" என்பது, முண்டகோபநி.
4. "அம்ருதஸ்ய ஏஷ ஸேது:" என்பது, முண்டகோபநி.
5. "பலமத உபபத்தே:" என்பது, உத்தர மீமாம்சை, 3. 2: 8.
6. திருவாய். 2. 8: 1.



ஆற்றினைக் கடப்பதற்கு ஓடம் ஏறினவர்கள் கரை ஏறுதற்குச் செய்ய வேண்டிய தங்கள் முயற்சியையும் கைவிட்டுத் தெப்பத்தையும் கைவிட்டுக் 'கரை குறுகுவது எப்போது' என்று பார்த்துக் கொண்டு அதன் விட்டத்திலே இருக்குமாறு போலே, இரு கையும் விட்டு - [1]"பிறவிப் பெருங்கடலில் மூழ்கிக் கிடக்கிற இம் மக்களுக்கு எங்கும் பரந்துறையும் விஷ்ணுவாகிற ஓடத்தைத் தவிற வேறு ஒரு சாதனம் இல்லை" என்கிறபடியே அக்கரையும் இக்கரையும் ஊடுருவ நின்று பிறவிப் பெருங்கடலைக் கடத்தும் [2]"வைகுந்தன் என்பதோர் தோணியை"ப் பிறவிக் கடலைக் கடப்பதற்காகப் பற்றி, இறைவனுடைய ஞானம் சக்தி முதலிய குணங்களை நினைக்கும் நினைவாலும் தங்களுடைய பாரதந்திரியத்தை நினைக்கும் நினைவாலும் பாரம் அற்றவர்களாய் இருக்கையாலே, இரண்டு கைகளையும் விடுமாறு போலே, தங்கள் முயற்சியால் செய்யப்படுகின்ற வாழ்த்து வணக்கம் முதலியவற்றையும் அவ்வணக்கம் முதலியவற்றால் சாதித்துக் கொள்ளப் படுகின்ற பகவானுடைய அருளையும் பற்றுக்கோடாகப் பற்றுதலை விட்டு, பகவானுடைய திருவருள் மாத்திரமே நிலைத்த சாதனம் என்று அறுதியிட்டு, கரை குறுகும் காலம் எண்ணுவர்கள்- [3]"கூவிக் கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ" என்றும், [4]"ஆக்கை விடும்பொழுது எண்ணே" என்றும் சொல்லுகிறபடியே இறைவனை அடைதலாகிற கரையைக் குறுகுகைக்குத் தகுதியான காலத்தை எண்ணாநிற்பார்கள்.

இதனால், சாஸ்திரங்களிலே ஊன்றி நிற்கின்றவர்களுடையவும் திருமந்திரத்தில் ஊன்றி நிற்கின்றவர்களுடையவும் நினைவுகளின் முறைபாடு சொல்லிற்றாயிற்று. (19)

## 20

[5]இவை ஸ்வரூபத்தை உணர்ந்து உணர்ந்து உணரவும், உணர்வைப் பெற ஊர மிக உணரவும் உண்டாம்.

என்பது சூத்திரம்.

1. "ஸம்ஸாரார்ணவ மக்நாநாம் விஷயாக்ராந்த சேதஸாம்,
   விஷ்ணுபோதம் விநாநாந்யத் கிஞ்சிதஸ்தி பராயணம்."
என்பது, விஷ்ணு தர்மம்.
2. நாய்ச்சியார் திரு. 5: 4. 3. திருவாய். 6. 9: 9.
4. திருவாய். 1. 2: 9.
5. இவை என்ற சுட்டு, மேலே கூறிய சாஸ்திரிகள் இரண்டையும் இடுக்கிப் பிறவிக் கடலைக் கடக்கப் பார்த்தலையும், சாரஜ்ஞர் இருகையும் விட்டுக் கரைகுறுகும் காலம் எண்ணியிருத்தலையும் சுட்டுகின்றது. இவ்விரண்டனுள், முன்னது, ஸ்வரூபத்தை உணர்ந்து உணர்ந்து உணர

**வியாக் :—** மேலே கூறிய இருதிறத்தார்க்கும் இந்தத் தன்மைகள் உண்டாகைக்குக் காரணங்கள் இன்னவை என்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, இவை ஸ்வரூபத்தை உணர்ந்து உணர்ந்து உணர உண்டாம் - [1] "உணர்ந்து உணர்ந்து இழிந்து அகன்று உயர்ந்து உருவியந்த இந்நிலைமை, உணர்ந்து உணர்ந்து உணரிலும்" என்கிற படியே ஆன்ம சொரூபத்தினை, ஞானமாத்திர மன்றிக்கே ஞானமாகிய குணத்தை என்றும் உடையதாய் அந்த ஞானத்தாலே எங்கும் ஒக்கப் பரந்து சரீரத்தைக் காட்டிலும் வேறுபட்டிருக்குமதாய் ஞானமாகிற குணத்தை யுடைமையால் தொழில் புரிதல் இன்பநுகர்தல் முதலியன வற்றோடு கூடியதாய் இறைவனுக்கு அடிமையாக இருக்கும் என்று கேள்வியாலும் நினைதலாலும் அறியவே தம் முயற்சியாலே பிறவிப் பெருங்கடலைக் கடத்தற்குத் தேடுகையாகிற இது உண்டாகும்.

உணர்வைப் பெற ஊர - திருமந்திரத்திலே ஊன்றி நிற்பவர் களுக்கு ஆன்ம சொரூபத்தைக் காண்பிக்கைக்கு உடலாக, [2] "உணர் வும் உயிரும் உடம்பும் மற்று உலப்பிலனவும் பழுதேயாம் உணர்வைப் பெற ஊர்ந்து" என்கிறபடியே உலக ஞானமும் உயிரும் உடலும் மற்றும் எல்லை இல்லாதனவான பிரகிருதி விகாரங்களும் பிரகிருதியும் விடத்தக்கவை என்னும் அறிவைப் பெறும்படி இறைவன் யாதொரு காரணமும் இல்லாமலே நடத்த, மிக உணர - [3] "மெய்ம்மையை மிகஉணர்ந்து" என்கிறபடியே ஆன்ம சொரூபத்தைச் சரீரம் முதலான வற்றிற்கு வேறுபட்டதாய், ஞான ஆனந்தங்களை வடிவாகவுடைய தாய், அறியும் தன்மை முதலானவற்றைக் குணமாக வுடையதாய், அடியார்கட்கு அடிமையாதலை முடிவாக வுடைய பகவானுக்கு அடிமையாதலை யுடையதாய், அவ்வடிமைக்கு எல்லை நிலமான பாரதந்திரியத்தையும் இனியதாயிருக்குந் தன்மையையும் தனக்குத் தன்மையாக வுடைத்தாய் இருக்கும் என்று உணரவே, உண்டாம் - தம்முடைய பாரத்தை அவ்விறைவன் மேலே போகட்டு, தம் முயற்சியில்லாதவராய் இருத்தலாகிற இது உண்டாகும் என்கை.

---

உண்டாம் என்றும், பின்னது, உணர்வைப் பெற ஊர மிக உணர உண்டாம் என்றும் கூட்டுக. ஸ்வரூபம்-ஆன்மாவின் தன்மை. ஊர-இறைவன் நடத்த; இது இறைவன்வினை. மிக உணர்தல்-ஆன்மாவின் வினை.

1. திருவாய். 1. 3: 6.
2. திருவாய். 8. 8: 3.
3. திருமாலை, 38.



இதனால், இவர்களுடைய ஆன்ம சொரூப ஞானத்தின் ஏற்றத் தாழ்வே மேலே கூறிய தன்மைகள் இவர்களுக்கு உண்டாகைக்குக் காரணங்கள் என்றாராயிற்று.

ஆக, "முனிவரை இடுக்கியும்" (சூத். 17.) என்று தொடங்கி இதுவரையிலும் சாஸ்திரங்களும் சாஸ்திரங்களின் சாரமான திரு மந்திரமும் என்னும் இவற்றின் விஷயபேதமும், அதிகாரிபேதமும், அவ்வதிகாரிகளின் நினைவுகளின் பேதமும், அவற்றிற்கு அடியான ஞானத்தின் ஏற்றத்தாழ்வும் கூறினாராயிற்று. (20)

## 21

*[1] சேஷத்வ போக்த்ருத்வங்கள் போல் அன்றே,*
*பாரதந்த்ர்ய போக்யதைகள்.*

என்பது சூத்திரம்.

**வியாக் :—** ஆன்மாவின் தன்மை விஷயமான ஞானம், [2] சொரூப ஞானம் என்றும், சொரூப யாதாத்மிய ஞானம் என்றும் அவை தம்முள் உள்ள ஏற்றத்தாழ்வுகளினால் இருவகைப்படும். அவற்றுள், [3] "உலகத்திற்குத் தலைவன் இறைவன்" என்றும், [4] "இறைவ னுக்கு அடியவனாக இருக்கிறேன்" என்றும், [5] "ஞானத்திற்கு இருப் பிடமான இவ்வுயிரினுடைய ஞானத்திற்கு அழிவில்லை" என்றும்,

---

1. சேஷத்வத்தைக் காட்டிலும் பாரதந்திரியம் சிறந்தது. போக்த் ருத்வத்தைக் காட்டிலும் போக்யதை சிறந்தது என்கிறார் இச்சூத்திரத் தால். இச்சூத்திரத்தை, சேஷத்வம் போல் அன்றே பாரதந்திரியம், போக்திருத்வம் போல் அன்றே போக்யதை என்று பிரித்துக் கூட்டுக.

2. சொரூப ஞானம் என்றது சேஷத்வ ஞானத்தையும், போக்த் ருத்வ ஞானத்தையும். சொரூபயாதாத்மிய ஞானம் என்றது பாரதந் திரிய ஞானத்தையும், போக்யதா ஞானத்தையும். யாதாத்மிய ஞானம்- உண்மை ஞானம்.

3. "பதிம் விஶ்வஸ்ய" என்பது புருஷசூக்தம்.

4. "யஸ்யாஸ்மி" என்பது, அச்சித்ரம்.

5. "நஹிவிஜ்ஞாது: விஜ்ஞாதே: விபரிலோபோ வித்யதே" என்பது, பிரு. உப. 6 3: 10.

[1] "உயிர் அறியும் பொருள்" என்றும் பகவானுக்கு அடிமைப்பட்டிருக்கும் தன்மையையும் அறியும் தன்மையையும் ஆன்மாவிற்குச் சொல்லி, அங்ஙனம் அறியும் தன்மையின் காரியமான இன்ப நுகர்ச்சியைப் பயனாக [2] "அந்தப் பரம்பொருளோடு கூட எல்லா இன்பங்களையும் இவ்வுயிர் நுகர்கின்றது" என்று பகவானுடைய அநுபவத்தையும் சொல்லுகிற சாஸ்திர முகத்தாலே ஆன்மாவின் தன்மையை அறியுமளவில் பகவானுக்கு அடிமைப்பட்டிருக்கும் சேஷத்வமும், பகவானோடு கூட இன்பத்தை அநுபவிக்கிற போக்திருத்வமும் ஆகிற இரண்டு தன்மைகளும் விளங்குவனவாம். அந்தச் சாஸ்திரங்களின் சாரமான திருமந்திரத்தில் உட்புக்கால் பாரதந்திரியமும் இறைவனுக்கு இனிய பொருளாக இருக்கும் தன் போக்யதையும் ஆகிற ஆன்ம சொரூபத்தின் உண்மைநிலை விளங்குவனவாம். பிற்கூறிய இதுவே ஆன்ம சொரூபத்தின் உண்மை நிலை என்னுமிடத்தை அறிவிக்கிறார் இச் சூத்திரத்தால்.

[3] சேஷத்வமாவது, இறைவன் தன் விருப்பின்படி செய்யும் காரியங்களுக்குத் தகுதியாக இருத்தல். பாரதந்திரியமாவது, இறைவன் தன் விருப்பின்படி செய்யும் காரியங்களுக்குப் பயன்படுதல். [4] "கட்டிப் பொன் போலே சேஷத்வம், பணிப் பொன் போலே பாரதந்த்ர்யம்" என்று பெரியாரும் பணித்தார். (ஆகையாலே சேஷ வஸ்துவை சேஷிக்கு இஷ்டமானபடியே விநியோகப்படுத்துமது பாரதந்திரியம்). [1] "போக்த்ருத்வமாவது, அறியும் தன்மையின் பயனாலே இன்பநிலையில் விளைகிற சுவைகளைத் தான் அநுபவிக்கின்றவனாக இருத்தல். [2] "போக்யதையாவது, ஒரு பொருளில் உள்ள சுவை, நிறம் முதலியவைகள் அநுபவிக்கின்றவனுக்கே இனியனவாக இருப்பது போலே ஆன்மாவில் உள்ள ஞானம் முதலானவைகளும் இறைவனுக்கே இனியனவாக இருத்தல்.

ஆகையால், சேஷத்வம் போல் அன்றே பாரதந்த்ர்யம்-இறைவன் தன் விருப்பின்படி காரியம் கொள்ளுதற்குத் தகுதிமாத்திரமுள்ள சேஷத்வம் போல் அன்று, இவ்வான்மாவை இறைவன்தன் விருப்பின்படி காரியம் கொள்ளுதற்கு அமைத்துக் கொடுக்கிற பாரதந்திரியம்; போக்த்ருத்வம் போல் அன்றே போக்யதை - இன்ப நுகர்ச்சியில் நம்முடைய இன்பம் என்று அபிமானம் உண்டாதற்குக் காரணமான போக்திருத்வம் போலன்று, அந்தப் போக்திருத்வத்தை இறைவனுடைய விருப்பத்திற்குப் பயன்படும்படி ஆக்கிக் கொடுக்கிற போக்யதை என்றபடி. (21)

---

1. "ஜாநாதி ஏவாயம் புருஷ:" என்பது பிரு. உப.

2. "ஸோஸ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹப்ரஹ்மணா விபஶ்சிதா" என்பது தைத்திரீயம்.

3. சேஷன்-பிறனுடைய (இறைவன்) பயனையே தனக்கு முக்கியமான பயனாகக் கொண்டிருப்பவன்; இவனுடைய தன்மை சேஷத்வம். பரதந்திரன்-பிறன் ஒருவனைப் பிரதானமாகக் கொண்டிருப்பவன்; இவனுடைய தன்மை பாரதந்திரியம்.

4. 'கட்டிப் பொன் போலே' என்றது, இஷ்ட விநியோகத்திற்குத் தகுதியாக இருத்தலை நோக்கி. 'பணிப் பொன் போலே' என்றது, பணியிலே (தொழில்) பயன்பட்டுக்கொண்டிருக்கின்ற பொன் போலே என்றபடி. அன்றிக்கே ஆபரணங்களாக இருக்கின்ற பொன் என்றலுமாம்.

---

1. போக்தாவின்தன்மை - போக்த்ருத்வம்; போக்தா-அநுபவிக்கின்றவன்.

2. போக்யதை-இனிய பொருளாக இருத்தல். ஆன்மாவின் தன்மையைச் சாஸ்திர முகத்தாலே அறியுமளவில் 'இவ்வான்மா பகவானுக்கு அடிமைப் பட்டது, பகவானுடைய அநுபவத்தை நுகர்வது' என்னும் சேஷத்வமும் போக்திருத்வமுமே ஆன்மாவின் சொரூபமாக விளங்கும். சாஸ்திரங்களின் சாரமான திருமந்திரத்தில் உட்புக்கால் பாரதந்திரியமும் போக்யதையுமாகிற ஆன்மாவின் உண்மைநிலை விளங்காநிற்கும். இவற்றில் 'இஷ்ட விநியோகத்திற்குத் தகுதியாக இருக்கும் தன்மை' என்னுமளவேயான சேஷத்வத்தைக் காட்டிலும் இறைவனுக்கு விருப்பமானபடி விநியோகப் பட்டுத்தீர்தலாகிற பாரதந்திரியம் சிறந்தது என்பதும், இன்பத்தில் 'இந்த இன்பம் நம்முடைய இன்பம்' என்று அபிமானம் உண்டாவதற்குக் காரணமான போக்த்ருத்வத்தைக் காட்டிலும் அந்த அபிமானத்தை வேர் அறுப்பதாய் போக்த்ருத்வத்தை இறைவனுடைய மகிழ்ச்சிக்கு உபயோகப் படும்படி ஆக்கிக் கொடுப்பதான போக்யதை சிறந்தது என்பதும் நாம் இங்கு அறியத்தக்கன.

## 22

[1]ஜ்ஞாந சதுர்த்திகளின் மேலேயிறே ஆநந்த ஷஷ்டிகளுக்கு உதயம்.

என்பது சூத்திரம்.

வியாக்:— மேலே கூறிய பொருளை ஆன்ம சொரூபத்தின் உண்மைநிலையைக் கூறுகின்ற திருமந்திரத்தைக் கொண்டு விளக்கிக் காட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

---

1. இச்சூத்திரத்தை ஞானத்துக்கு மேலே இறே ஆநந்தத்துக்கு உதயம் என்றும், சதுர்த்தியின் மேலேஇறே ஷஷ்டிக்கு உதயம் என்றும் கூட்டுக.

இச்சூத்திரத்தின் பொருளைப் படிப்பதற்குப் புகுமுன் திருமந்திரத்தின் பொருளை ஈண்டுச் சுருக்கமாகவாவது அறிந்து கொள்வது நலம்.

"ஓம் நமோ நாராயணாய" என்பது திருமந்திரம். இத்திருமந்திரத்தில் முதலில் உள்ளது 'ஓம்' என்ற பிரணவம். இது அகரம், உகரம், மகரம் என்னும் மூன்றெழுத்துக்களாலாயது. இவற்றுள் அகரம் என்பது உலககாரணனாய திருமாலைக் குறிக்கும். உகரம் பிரிநிலைப் பொருளது. மகரத்திற்கு உயிர்கள் என்பது பொருள். அகரத்தின்மேல் 'ஆய' என்னும் நான்கனுருபு புணர்ந்து கெட்டுள்ளது. அதற்குப் பொருள் அடிமை என்பது. ஆக, பிரணவத்தால் அகரத்தின் பொருளான ஸ்ரீமந்நாராயணனுக்கே மகாரத்தின் பொருளான உயிர்கள் அனைத்தும் அடிமை என்பது போதரும் பொருளாம். இதனால் ஆத்மாவினுடைய சேஷத்வமும் போக்திருத்வமும் தெளிவாகின்றன. இம்மூன்று எழுத்துக்களின் பொருளை விரித்துக் கூறுகின்றன, பின்னே வருகின்ற 'நம:' பதமும், 'நாராயணாய' பதமும்.

இனி, நம: பதத்தை ந என்றும், ம: என்றும் பிரித்துக் கோடல் வேண்டும். 'ம:' என்பதற்கு என்னுடைய என்பது பொருள். 'ந' என்பதற்கு இல்லை என்பது பொருள். ஆக, நம: பதத்திற்கு, என்னுடைய இரக்ஷணத்தில் எனக்குச் சம்பந்தம் இல்லை என்பது பொருளாம்; இதனால் பாரதந்திரியத்தைத் தெரிவித்தபடி. இனி அடுத்ததான 'நாராயண' என்ற பதத்திற்குப் பொருள் வருமாறு:— இப்பதம் 'நார' 'அயந' என்ற இரண்டு பதங்களால் ஆயது. நாரங்களுக்கு அயநமாக இருப்பவன் நாராயணன். அன்றி, நாரங்களில் தான் தங்கியிருப்பவன் நாராயணன். நாரம்-நித்தியமான உயிர்கள். அயநம்-இடம். எல்லாப் பொருள்களிலும் இறைவன் உளன்; எல்லாப் பொருள்களும் இறைவனிடத்து உள்ளன என்பது இதன் திரண்ட பொருள். இப்பொருள்களால் இறைவனுடைய பரத்துவம் சௌலப்யம் என்ற திருக்குணங்கள் வெளியாகின்றன. இனி, நாராயண பதத்தின் மேலே உள்ள 'ஆய' என்ற உருபிற்குப் பொருள், கைங்கர்யத்தை வேண்டுவது என்பது. இதனால் ஸ்ரீமந்நாராயணனுக்கே எல்லா அடிமைகளும் செய்யப் பெறுவேனாக வேண்டும் என்பது போதரும். இதனால் ஆன்மாவினுடைய போக்யதை அறிகிறோம்.

ஆக, திருவெட்டெழுத்திற்குக் கருத்து, இறைவனான ஸ்ரீமந்நாராயணனுக்கே உரியேனான நான், எனக்கு உரியன் அன்றிக்கே ஒழிய வேண்டும்; எல்லார்க்கும் இறைவனான நாராயணனுக்கே எல்லா அடிமைகளும் செய்யப் பெறுவேனாக வேண்டும் என்பது.



அதாவது, [1]ஞானத்தின்மேலேயிறே ஆநந்தத்துக்கு உதயம்-பிரணவத்திலே உள்ள ஆன்மாவினைக் காட்டுகின்ற மகாரத்திலே மந-ஜ்ஞாநே என்கிற தாதுவிலே தோன்றினதாய், அநுபவிக்கும் தன்மைக்கு விளக்கமாய் இருக்கிற ஞானத்தின்மேலே அன்றோ, அந்த மகாரத்தின் பொருளை விரித்துக் கூறுவதாய், போக்யதையை விளக்குகின்ற நான்காம் வேற்றுமையில் ஆனந்தத்திற்கு உதயம். சதுர்த்தியின் மேலேயிறே ஷஷ்டிக்கு உதயம்-பிரணவத்தில் முதல் எழுத்தான அகரத்தில் சேஷத்வத்தைக் காட்டுகின்ற, புணர்ந்து கெட்ட நான்காம் வேற்றுமையின் மேலே அன்றோ, பாரதந்திரியத்தை விளக்கிக் காட்டுகின்ற நமஸ்ஸுக்கு உதயம் என்கை.

இதனால், ஆன்ம சொரூபத்தினுடைய சேஷத்வமும் போக்திருத்வமும் உதித்திருக்கச் செய்தே, அவற்றின் மேலே, ஆன்ம

---

1. ஈண்டு 'ஞானம்' என்றது, திருவெட்டெழுத்திலே பிரணவத்தின் ஈற்றிலே உள்ள மகாரத்தின் பொருள். இதனால் போக்திருத்வத்தைத் தெரிவித்தபடி. 'ஆநந்தம்' என்றது, 'நாராயணாய' என்ற பதத்திலே உள்ள 'ஆய' என்னும் நான்காம் வேற்றுமையின் பொருள். இதனால் போக்யதையைத் தெரிவித்தபடி. 'சதுர்த்தி' என்றது, பிரணவத்தின் முதலிலே உள்ள அகாரத்தின் மேலே புணர்ந்து கெட்ட 'ஆய' என்னும் நான்காம் வேற்றுமை உருபினை. இதனால் சேஷத்வத்தைத் தெரிவித்தபடி. 'ஷஷ்டி' என்றது, 'நம:' பதத்தினை. இப்பதத்தின் ஈற்றிலே 'அ:' என்னும் ஆறாம் வேற்றுமை உருபு ஏறியிருத்தலால் இச்சொல்லை 'ஷஷ்டி' என்கிறார். இதனால் பாரதந்திரியத்தைத் தெரிவித்தபடி. ஆக, இச்சூத்திரத்தால் போக்திருத்வத்துக்கு மேலே போக்யதையும், சேஷத்வத்துக்குமேல் பாரதந்திரியமும் கூறியிருப்பதைத் தெரிவித்தருளினாராயிற்று.

திருமந்திரத்தில் முதல் பதமான பிரணவத்தில், அகாரத்திலே புணர்ந்து கெட்ட 'ஆய' என்னும் நான்கனுருபாலே சேஷத்வமும், மகாரத்தாலே போக்திருத்வமும் சொல்லப்பட்டிருந்தும், பிரணவத்திற்கு மேலே உள்ள 'நம:' பதத்தாலும் 'நாராயணாய' பதத்தாலும் ஆன்மாவின் உண்மைத் தன்மைகளாய பாரதந்திரியமும் போக்யதையும் சொல்லப்படுகின்ற காரணத்தால் 'முற்கூறியதில் பிற்கூறியது சிறப்புடையது' என்னும் நியாயத்தால் பிற்கூறிய பாரதந்திரியம் போக்யதைஎன்ற இரண்டும் மிக மிகச் சிறந்தது என்பது விளங்குகின்றது என்றபடி. இங்கு முற்கூறிய இரண்டும் ஆன்ம சொரூபங்கள்; பிற்கூறிய இரண்டும் ஆன்ம சொரூபத்தின் உண்மைநிலைகள். ஆதலால், சேஷத்வம்போல் அன்று, பாரதந்திரியம்; போக்திருத்வம் போல் அன்று, போக்யதை என்று மேற்சூத்திரத்தோடு கூட்டி முடிக்க. இதுவே முதலிலே கூறப்படுகின்ற பொருளுக்குக் கருத்து. இங்குக் கூறிய ஆனந்தம் போக்யதையைக் காட்டுகிற ஆனந்தம்,

சொரூபத்தின் உண்மை நிலையின் உருவமாகப் பாரதந்திரியமும் போக்யதையும் உதித்திருக்கின்றன ஆகையாலே, சேஷத்வம் போக்திருத்வம் என்னும் இவற்றைக் காட்டிலும், பாரதந்திரியம் போக்யதை என்னும் இவற்றிற்கு நெடுவாசி உண்டு என்றதாயிற்று.

[1] மேலே கூறிய பொருளுக்குச் சிறிது பொருத்த மின்மை உண்டு. 'ஷஷ்டி' என்கிற இது, [2] முக்கியவிருத்தியாலேயாதல் கௌண விருத்தியாலேயாதல் நமஸ்ஸைக் காட்டாமையாலே. ஏன்? ஷஷ்டியை ஈற்றிலேயுடைய சொல்லை ஷஷ்டி என்றே கூறினர் என்று கொள்ளலாகாதோ? எனின், அங்ஙனம் கொள்ளுதற்கு இல்லை; என்னை? எனின், 'நமஸ்ஸு' இரண்டு சொற்கள் ஆகையாலும் அவற்றில் பின்னே உள்ள 'ம:' என்ற சொல்லே ஷஷ்டியை ஈற்றிலேயுடைய தாகையாலும் என்க.

---

1. 'நம:' பதம், சில சமயங்களில் ஒருமொழியாகவும் சில சமயங்ளில் தொடர்மொழியாகவும் கொள்ளப்படும். 'நம:' இது ஒரு மொழி; 'ந, ம:' இது தொடர்மொழி. ஒருமொழியாக இருக்கும்போது அகண்ட நமஸ்ஸு என்றும், தொடர்மொழியாக இருக்கும்போது சகண்ட நமஸ்ஸு என்றும் அதனைக் கூறுவர். ஈண்டு 'ஷஷ்டி' என்றது, ஷஷ்டியை ஈற்றிலேயுடைய நம: பதத்தினை. ஷஷ்டி-ஆறும் வேற்றுமை. அது, நம: பதத்திலே உள்ள அ: என்னும் உருபினை. நம: என்பதனை ஒருமொழியாகக் கொள்ளும் போது இந்த ஷஷ்டி அதனை ஈற்றிலேயுடைய நம: பதத்தினைக் காட்டும். தொடர் மொழியாகக் கொள்ளும்போது இந்த ஷஷ்டி அதனை ஈற்றிலேயுடைய ம: என்பதனை மட்டும் காட்டுமேயன்றி அதற்கு மேலே உள்ள 'ந' என்ற பதத்தினையும் சேர்த்துக் காட்டாது.

மேலே கூறப்பட்டுள்ள பொருளில் 'நம:' பதத்தைத் தொடர் மொழியாகக் கொண்டு பொருள் கூறியுள்ளார். இப்பொருளுக்கு 'ஷஷ்டி' என்ற பிரயோகம் அதனை ஈற்றிலேயுடைய 'ம:' என்பதனை மட்டும் காட்டுமேயன்றி அதற்கு மேலே உள்ள நகரத்தையும் சேர்த்துக் காட்டமாட்டாது. ஆனால், பாரதந்திரியம் என்ற பொருள் பயக்க வேண்டுமேயானல் மகரத்தின் மேலே உள்ள நகரத்தையும் அந்த 'ஷஷ்டி' என்ற பிரயோகம் காட்ட வேண்டும். அங்ஙனம் காட்டாமையால் மேலே கூறிய பொருளுக்குச் சிறிது பொருத்த மின்மை உண்டு. இதனையே, 'மேலே கூறிய பொருளுக்கு' என்று தொடங்கி அருளிச் செய்கிறார்.

2. முக்கிய விருத்தி-ஒருசொல் நேரே தனக்கு உரிய பொருளைக் காட்டுவது. கௌண விருத்தி-ஒருசொல் தனக்கு உரிய பொருளை விடுத்துத் தன்னோடு தொடர்புடைய வேறொரு பொருளைக் காட்டுவது. இதனை, முறையே வெளிப்படைப் பொருள் என்றும், குறிப்புப் பொருள் என்றும் சொல்லுவர்.



ஆனல், செய்ய அடுப்பது என்? என்னில், இதற்கு வேறும் ஒரு பொருள் கூறப்படுகிறது. அதாவது, [1] பிரணவத்திலே உள்ள மூன்றும் எழுத்தான மகாரத்திலே 'மந-ஜ்ஞாநே' என்கிற தாதுவிலே தோன்றிப் போக்திருத்வத்தைப் பிரகாசிப்பிக்கின்ற ஞானத்தின்மேலே அன்றோ, மகாரத்தை விரித்துக் கூறுகின்ற நான்காம் வேற்றுமையில் சொல்லப் படுகின்ற இன்பத்தில், காகாக்ஷி நியாயத்தாலே 'நம:' என்ற சொல்லால் கழிக்கப்படுகின்ற, தன்னுடைய பயனுகக் கொள்ளற்கு உரியதான ஆனந்தத்திற்கு உதயம். [2] பிரணவத்தில் முதல் எழுத்தான அகாரத்தில் சேஷத்வத்தைக் காட்டுகின்ற, புணர்ந்து கெட்ட நான்காம் வேற்றுமையின் மேலே அன்றோ, 'ந' என்னும் எழுத்தாலே விலக்கப்படுகின்ற, தன்னைப் பாதுகாத்துக்

---

1. பிரணவத்தின் ஈற்றெழுத்தாகிய மகாரத்தால் போந்த பொருள் போக்திருத்வம் என்பது. மகரத்தின் விவரணமாய் நாராயண பதத்தின் மேலே உள்ள 'ஆய' என்னும் நான்கன் உருபால் கூறப்படுகின்ற இன்பத்தில், நம: பதத்தால் கழிக்கப் படுகின்ற தனக்குரித்தாய ஆனந்தம் தோன்றுகிறது. தனக்குரித்தாய ஆனந்தம் என்பது சொரூப விரோதி. போக்திருத்வம் அதனைத் தாங்கிக் கொண்டிருக்கின்றது. ஆக, ஞானம் காரணமாக வந்த போக்திருத்வமானது, மேலே வருகின்ற தன் பொருட்டாய ஆனந்தம் என்னும் குற்றத்தைத் தாங்கிக் கொண்டிருக்க, இடையிலே உள்ள 'நம:' பதத்தை இடைநிலைத் தீவகமாகக் கொண்டு 'நாராயணாய நம:' என்று 'நாராயணாய' என்ற பதத்தோடும் சேர்த்து அக்குற்றத்தைக் கழிக்க வேண்டிய நிலையில் இருக்கிறது. நம: என்பதற்கு எனக்கு அன்று என்பது பொருள். போக்யதைக்கு இத்தகைய குற்றம் இல்லை. ஆதலால், போக்யதை போலன்று, போக்திருத்வம் என்கிறார் என்பது, இக்கருத்தையே 'பிரணவத்திலே' என்று தொடங்கி அருளிச் செய்கிறார். காகாக்ஷி நியாயம்-காகத்து இரு கண்ணிற்கு ஒன்றே மணிகலந்தாங்கு, ஓரிடத்து நின்ற சொல் மற்றோரிடத்தும் சென்று இயைந்து பொருள் பயப்பது.

2. பிரணவத்திலே உள்ள அகரத்தில் புணர்ந்து கெட்ட 'ஆய' என்னும் நான்கன் உருபிற்குப் பொருள் சேஷத்வம் என்பது. இந்தச் சேஷத்வத்திற்கு மேலே, தன்னைத் தானே பாதுகாத்துக் கொள்ளும் முயற்சியைச் செய்வதற்குக் காரணமான சுவாதந்திரியத்தைக் காட்டுகின்ற, 'நம:' பதத்திலே உள்ள 'ம:' என்னும் ஷஷ்டி தோன்றியிருக்கின்றது. இந்தச் சுவாதந்திரியம் சேஷத்வத்திற்கு ஒரு விரோதி. இந்தச் சுவாதந்திரியமான விரோதியைக் கழிக்கிறது 'ந' என்னும் பதம். ஆக, சேஷத்வமும், தனக்கு மேலே தோன்றுகின்ற ஒரு விரோதியைப் பொறுத்திக் கொண்டிருக்க, பின்னர் அதனை நீக்க வேண்டிய நிலையில் இருக்கின்றது. எனவே, ஒரு விரோதியைத் தாங்கிக்கொண்டிருந்து பின்னர் அதனைக் கழிக்கவேண்டிய நிலையில் உள்ள சேஷத்வத்தைக் காட்டிலும் அக்குற்றம் இல்லாத பாரதந்திரியம் சிறந்தது என்பது கருத்து. ஆதலால், சேஷத்வம் போலன்று, பாரதந்திரியம் என்கிறார் என்பது. இக்கருத்தினையே 'பிரணவத்தில்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

கோடற்குத் தான் செய்யும் முயற்சிக்குக் காரணமான சுவாதந்திரியத்தைக் காட்டுகின்ற ஷஷ்டிக்கு உதயம் என்கை.

[1] இதனால், சேஷத்வத்தைக் காட்டுகின்ற நான்காம் வேற்றுமையின்மேலே, தன்னைப் பாதுகாத்துக் கோடற்குக் காரணமான சுவாதந்திரியத்தைச் சொல்லுகின்ற ஷஷ்டி உதிக்கையாலும், போக்திருத்வத்துக்குப் பிரகாசகமான ஞானத்தின் மேலே, தனக்காக இன்பம் என்னும் புத்திமூலமான ஆனந்தம் உதிக்கையாலும், சேஷத்வம் போக்திருத்வம் என்னும் இரண்டும் சொரூபத்திற்கு விரோதிகள் தோன்றுவதற்கு உடன்பட்டவைகளாக இருக்கும். நமஸ்ஸிலே பாரதந்திரியம் தோன்றிய பின்பு தன்னைப் பாதுகாத்துக் கோடற்குச் செய்யும் தன் முயற்சி விலக்கப் படுகையாலும், 'நம:' என்ற பதத்தோடு கூடநின்ற 'நாராயணாய' என்ற பதத்திலே உள்ள 'ஆய' என்னும் நான்காம் வேற்றுமையிலே இறைவனுக்குப் போக்யமாக இருத்தலே ஆன்மாவின் தன்மை என்று தோன்றின பின்பு தன்பயன் விலக்கப் படுதலாலும் பாரதந்திரியம் போக்யதை என்னும் இரண்டும் தனக்கு

---

1. ஆக, சேஷத்வம் மாத்திரம் எற்பட்டால் அதற்குமேல் ஒரு விரோதி உண்டாக, அதனைப் பாரதந்திரிய வேஷத்தால் விலக்கவேண்டி யிருக்கிறது. போக்திருத்வம் மாத்திரம் எற்பட்டால் அதற்கு மேல் ஒரு விரோதி உண்டாக, அதனைப் போக்யதாவேஷத்தால் விலக்க வேண்டியிருக்கிறது. பாரதந்திரியமும் போக்யதையும் உண்டான பின்பு இவற்றின்மேல் யாதானும் ஒரு விரோதி உண்டாகின்றதோ என்று பார்த்தால் ஒரு விரோதியும் உண்டாக வழிஇல்லை. ஆகவே, சேஷத்வ போக்திருத்துவங்களைக் காட்டிலும் பாரதந்திரிய போக்யதைகள் சிறந்தவை என்பது கருத்து.

இப்படி மிகச் சிறந்த பாரதந்திரிய போக்யதைகளை ஆன்மாவிற்கு வடிவாகத் திருமந்திர நிஷ்டர் உணர்ந்தமையால் அவர்களுக்குத் தம் முயற்சி இல்லையாயிற்று. இவற்றில் தாழ்ந்த சேஷத்வ போக்திருத்வங்களை ஆன்மாவிற்கு வடிவாகச் சாஸ்திரிகள் உணர்ந்தமையால் அவர்களுக்குத் தம் முயற்சியிலே நோக்கு உண்டாயிற்று என முடித்துக்கொள்க.

நன்று; மகரத்திற்கு ஞானம் என்பது தானே பொருள்; அதற்குப் போக்திருத்வம் என்று பொருள் கூறல் யாங்ஙனம்? எனின், ஞானம் என்பது ஆகுபெயரால் ஞானமுடைய ஆன்மாவினைக் காட்டுகிறது. ஆன்மா ஞானமுடையதாகும் போது அது கர்த்தாவாக வேண்டுதலானும் கர்த்தாவாகும்போது அது போக்தாவாகவேண்டுதலானும் போக்தாவின் தன்மை போக்திருத்வமாதலானும் இவ்வழியால் அச்சொல் போக்திருத்வத்தைக் காட்டுகிறது. போக்தா-அநுபவிக்கிறவன்.



விரோதி தோன்றுவதைப் பொறுத்துக் கொள்வன அல்ல; ஆகையால், தனக்கு விரோதி தோன்றுவதனைப் பொறுத்துக் கொள்வனவான சேஷத்வ போக்திருத்வங்கள் போல் அன்றே, அதனைப் பொருதபடி இருக்கும் பாரதந்திரியமும் போக்யதையும் என்கிறாராயிற்று. (22)

## 23

முளைத்து எழுந்த சூர்ய துல்ய யாதாத்ம்ய சரமம், விதியில் காணும் பிரதம மத்யம தசைகளைப் பகல் விளக்கும் மின்மினியும் ஆக்கும். [1]

என்பது சூத்திரம்.

**வியாக் :**—இப்படி ஆன்ம சொரூபத்தின் உண்மை நிலையை உணரும் ஞான நிலையில் தோற்றுகிற பாரதந்திரியமும் போக்கி

---

நன்று; 'ஆய' என்னும் நான்கன் உருபிற்கு அடிமை என்பது தானே பொருள்; அதற்கு ஆனந்தம் என்று பொருள் கூறுமாறு யாங்ஙனம்? எனின், அடிமையின் வேலை அடிமைத் தொழில் செய்தலே யாதலானும் அவ்வடிமைத் தொழில் செய்யும் போது ஆனந்தம் உண்டாதலானும் ஆனந்தம் என்று பொருள் கூறப் பட்டது. நன்று; அடிமை வேலை செய்வது துக்க ரூபமாகவன்றோ உலகில் காணப்படுகின்றது? அது சுகரூபமாமாறு யாங்ஙனம்? எனின், தன்னால் காதலிக்கப்படுகின்ற ஒருவருக்குச் செய்யும் அடிமை வேலை ஆனந்த ரூபமாகக் காண்கையாலே இங்கும் ஆனந்தமாகத் தட்டில்லை என்க.

1. சரமம், விதியில் காணும் பிரதம தசையையும் மத்யம தசையையும் பகல் விளக்கும் மின்மினியும் ஆக்கும் என்க. சரமம் ஆக்கும் என்க. பகல் விளக்கும் மின்மினியும் ஆக்கும் என்றதன் கருத்து, பயன் அற்றவைகளாகச் செய்யும் என்பது. துல்யம் - ஒப்பு. 'சரமம்' என்றது, பாரதந்திரியத்தையும் போக்யதையையும். இவை, திருமந்திரத்தில் பின்னே உள்ள நம: பதத்தாலும் நாராயண பதத்தாலும் கூறப்படுபவை யாகையால் இவற்றிற்குச் சரமம் என்று பெயர் வைத்தனர். சரமம் - முடிவு; இறுதி நிலை. 'பிரதம தசை' என்றது, சேஷத்வத்தை. இது பிரணவத்திலே முதலிலே உள்ள அகாரத்தின் மேலே புணர்ந்து கெட்ட 'ஆய' என்னும் உருபின் பொருளாகையாலே பிரதம தசை - முதல் நிலை எனப் பட்டது. 'மத்யம தசை' என்றது, போக்திருவத்தை. இது, பிரணவத்திலே உள்ள மூன்றாம் எழுத்தான மகாரத்தின் பொருளாதலால் மத்யம தசை - இடைநிலை எனப்பட்டது. ஆக, திருமந்திரத்தில் சொல்லப்படுகின்ற சேஷத்வம், போக்திருத்வம், பாரதந்திரியம், போக்யதை என்ற நான்கும், அது அது நிற்கின்ற நிலை நோக்கிப் பிரதம தசை, மத்யம தசை, சரம தசை என்று பேசப்பட்டது என்க.

யதையும், ஆன்ம ஞான நிலையில் தோற்றுகிற சேஷத்வத்தையும் போக்திருத்வத்தையும் மறைபட்டனவாகச் செய்யும்படியை அருளிச் செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, முளைத்து எழுந்த - [1] "முளைத்து எழுந்த திங்கள் தானாய்" என்றும், சூர்ய - [2] "எப்படிச் சூரியனோ அப்படி ஞானம்" என்றும், துல்ய - ஒப்பாகச் சொல்லப்பட்ட, யாதாத்ம்ய சரமம் - ஆன்ம சொரூபத்தின் உண்மை நிலையை உள்ளவாறே உணருகின்ற ஞானத்தினுடைய உண்மை நிலையான சரமமானது. என்றது, ஆன்ம சொரூபத்தின் உண்மை நிலைகளாக 'நம:' பதத்தாலும், 'நாராயணாய' பதத்தாலும் பின்பு சொல்லப்பட்ட பாரதந்திரியத்தையும் போக்யதையையும் தெரிவித்தபடி. ஆன்ம சொரூபத்தின் உண்மை நிலையை உள்ளவாறே உணரும் ஞானத்திற்கு, சந்திரனை எடுத்துக் காட்டாக [3] ஆழ்வார் அருளிச்செய்தது, தமக்குப் பகவானுடைய திருவருளாலே கிடைத்த தாகையாலே, தம் முயற்சி இல்லாமலே கிடைத்த தாகையாலும், அந்த ஞானம் தான் மகிழ்ச்சியைத் தரக் கூடியதாயிருக்கையாலுமே அன்றோ. இந்நூலிலும் "**உணர்வைப் பெற ஊர மிகஉணரவும்** உண்டாம்" (சூத். 20). என்று, ஆன்மாவின் உண்மை நிலையை உள்ளவாறே உணரும் உண்மை ஞானத்தைப் பகவானுடைய திருவருளாலே கிடைப்பதாக அன்றோ சொல்லிற்று. "சூரியன் எப்படியோ" என்கிற இதிலே தன் முயற்சியால் வந்த வருத்தம் தோற்றிற்றுகிலும் இவ்விடத்திலே அது ஆசிரியருக்குக் கருத்து அன்று; ஞானத்தினுடைய பிரகாசத்தின் மிகுதியைச் சொல்லுகிற மாத்திரமே வேண்டுவது. இப்படி இருந்துள்ள ஆன்ம ஞானத்தினுடைய உண்மை நிலையில் பிரகாசிக்கின்ற பாரதந்திரியமும் போக்யதையும் ஆகிற முடிவு நிலைகள்,

---

1. திருநெடுந்தாண்டகம், 1.

2. "யதா ஸூர்ய: ததா ஜ்ஞாநம்" என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 6. 5 : 62.

3. 'ஆழ்வார் அருளிச்செய்தது' என்னும் இத் தொடர்மொழியை, மேலே வருகின்ற 'மகிழ்ச்சியைத் தரக் கூடியதாயிருக்கையாலும்' என்றதனோடு கூட்டுக.



விதியில் காணும் பிரதம மத்யம தசைகளை - "ஸ்வரூபத்தை உணர்ந்து உணரவும்" (சூத். 20). என்று மேலே கூறிய நியாயத்திலே [1] "விதியில் காண்பார்" என்கிறபடியே சாஸ்திரங்கள் விதித்த முறையிலே கேட்டல் நினைத்தல் முதலியவைகளாலே காணப்படுகின்ற முதல் நிலையான சேஷத்வத்தையும் இடை நிலையான போக்திருவத்தையும், பகல் விளக்கும் மின்மினியும் ஆக்கும் - பகல் விளக்கைப் போன்று பயன் அற்றதாகவும், மின்மினியைப் போன்று சிறிய ஒளியை யுடையதாகவும் செய்யும் என்கை.

[2] பிரணவத்திலே தோன்றுகின்ற ஆன்மாவினுடைய உண்மை நிலைகளாக 'நம:' பதத்திலும் 'நாராயண' பதத்திலும் பின்பு தோன்றுமவை யாகையாலே பாரதந்திரியத்தையும் போக்யதையையும் சரமம் (இறுதி) என்கின்றது. 'ஓம்' என்ற பிரணவத்திலே உள்ள முதல் எழுத்தான அகாரத்திலே மறைந்து கிடக்கின்ற 'ஆய' என்கிற நான்காம் வேற்றுமையிலே முதலிலே சேஷத்வம் தோன்றுகையாலும், அதன் பின்னர் அந்தப் பிரணவத்திலே உள்ள ஈற்று எழுத்தான ஆன்மாவை உணர்த்துகிற மகாரத்திலே, மேலே உள்ள 'நம:' பதத்திலே பாரதந்திரியமும் 'நாராயண' பதத்திலே போக்யதையும் தோன்றுதற்கு முன்னே, நடுவே அறியும் தன்மை காரணமாகப் போக்திருத்வம் தோன்றுகையாலும் இவற்றை முதல் நிலை, இடை நிலை என்கிறது.

ஆக, இவ்வாக்கியத்தால், தன் முயற்சி, தனக்குப் பயன் என்னுமிவை சிறிதும் இல்லாதவையாய், தன் தலைவனுடைய இன்பத்திற்கே முழுதும் அநுகூலங்களாய்க் கொண்டு ஆன்மாவினை ஒளி பெறச் செய்யும் இப் பாரதந்திரியமும் போக்யதையும் ஆகிற இரண்டும், இத்தன்மைகள் இல்லாத சேஷத்வத்தையும் போக்திருத்வத்தையும் மறைபட்டனவாகச் செய்து, தானே மேலாக இருக்கும் என்றுராயிற்று. (23)

---

1. திருக்குறுந்தாண்டகம், 18.

2. இதன் விளக்கம், இச்சூத்திரத்தின் குறிப்புரையின முதலில் எழுதப்பட்டுள்ளது.

## 24

[1] நாலில் ஒன்று பிரவர்த்தகம்; ஒன்று நிவர்த்தகம்.
என்பது சூத்திரம்.

**வியாக் :—** இப்படி இருந்துள்ள ஆன்ம ஞானத்தையும், ஆன்மாவின் உண்மை நிலையை உணரும் உண்மை ஞானத்தையும் உடையவர்களாய், "சாஸ்திரிகள்" (19) என்ற சூத்திரத்தில் முயற்சி செய்கின்றவர்களாகவும், முயற்சி செய்யாதவர்களாகவும் சொல்லப்பட்ட அதிகாரிகளை, முயற்சியைச் செய்யத் தூண்டுவதும் முயற்சியினின்றும் விலகச் செய்வதும் இன்னவை என்கிறார் இச் சூத்திரத்தால்.

நாலில் ஒன்று - சேஷத்வம், போக்திருத்வம், பாரதந்திரியம், போக்யதை என்னும் இந்நான்கிலும் வைத்துக்கொண்டு, சேஷத்வமும் போக்திருத்வமும் என்னும் இரண்டுமே ஆன்மாவிற்குச் சொரூபம் என்று கண்ட சாஸ்திரிகளை, போக்திருத்வமானது, பிரவர்த்தகம் - இன்பத்தை நுகர்கின்றவன் இன்பம் கிடைப்பதற்கு முயற்சி செய்ய வேண்டாவோ என்னும் நினைவாலே, இனியனான பகவானை அடைதற்குரிய வழியாகிற சில செயல்களிலே மூள்விக்கும். ஒன்று - பாரதந்திரியமும் போக்யதையும் ஆகிற இரண்டுமே ஆன்மாவினுடைய உண்மைத் தன்மைகள் என்று கண்ட சாரஜ்ஞரை, போக்யதையானது, நிவர்த்தகம் - அநுபவிக்கின்றவனான ஈச்வரன் அன்றோ தனக்கு இனிய பொருளான இவ் வான்மாவினைப் பெறுகைக்கு முயற்சி செய்வான்; அவனுக்கு இனிய பொருளாக இருக்கின்ற இவ்வான்மாவிற்குத் தன் பயனுக்காக முயற்சி செய்யத் தகுதி இல்லை என்னும் நினைவாலே, அவனைப் பெறுதற்குரிய வழியாகிய சில செயல்களைச் செய்கையினின்றும் மீள்விக்கும் என்றபடி. (24)

## 25

முற்பாடர்க்குக் கிரியாங்கமானவை இரண்டும்,
செயல்தீர்ந்தார் விருத்தியில் ஸ்வநிர்ப்பந்தம்
அறுக்கும். [2]
என்பது சூத்திரம்.

---

1. 'நாலில்' என்றது, மேலே கூறியுள்ள சேஷத்வம் முதலிய நான்கனையும். 'ஒன்று' என்றது, போக்திருத்வத்தை. பிரவர்த்தகம் - செயலிலே மூட்டுதல். 'ஒன்று' என்றது, பாரதந்திரியத்தை. நிவர்த்தகம் - செயல் செய்கையினின்றும் நீக்குவது.

2. முற்பாடர் - மேலே கூறப்பட்ட இருவரில் முன்னவரான உபாசகர். உபாசகர் ஆவார், மோக்ஷத்தை அடையும் பொருட்டுத் தம் முயற்சியால் செய்யக் கூடியனவான கருமத்தையும் ஞானத்தையும் அங்கமாக வுடைய பக்தி உபாயத்தால் வழிபடுகின்றவர்கள். இரண்டு - சேஷத்



**வியாக் :—** ஆனால், சேஷத்வமும் போக்திருத்வமும் திருமந்திரத்தில் ஊன்றி நிற்பவர்களுக்கும் உண்டே? அவை செய்வன என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, முற்பாடர்க்கு - சாஸ்திரிகள் என்று முதலிலே சொல்லப்பட்ட உபாசகர்க்கு, கிரியாங்கமானவை இரண்டும் - போக்திருத்வமானது, அநுபவிப்பதற்குரிய இனிய பொருள் கிடைப்பதற்கு உடலான முயற்சியிலே மூட்டுகையாலும், அந்த முயற்சியும் ஆன்ம ஞானம் முன்னாகச் செய்ய வேண்டுகையாலே சேஷத்வமும் அதற்கு உறுப்பு ஆகையாலும், வழிபாட்டிற்கு முதலிலே தோன்றுவதான கருமத்தின் தோற்றத்திற்கு உதவி செய்யுமுகத்தாலே கருமத்திற்கு உறுப்புக்களாக இருக்கும் அந்தச் சேஷத்வமும் போக்திருத்வமும் ஆகிற இரண்டும், செயல் தீர்ந்தார் விருத்தியில் - [1] "செயல் தீரச் சிந்தித்து வாழ்வாரே வாழ்வார்" என்கிறபடியே 'இவ் வான்மா செய்யக்கூடியது ஒன்றும் இல்லை; எம்பெருமானே நிர்வாஹகன்' என்று நினைந்து, உபாய ரூபமான செயல்களில் நின்றும் நீங்கிய பிரபந்நருடைய கைங்கர்ய ரூபமான செயல்களில், அவன் உகப்பைப் பின் செல்லுமதொழிய, ஸ்வ நிர்ப்பந்தம் அறுக்கும் - தங்களுக்கு என்னும் நிர்ப்பந்தத்தைத் தவிர்க்கும் என்கை.

---

வமும் போக்திருத்வமும். செயல் தீர்ந்தார் - பிரபந்நர்கள். பிரபந்நர் ஆவார், சதாசார்ய முகத்தாலே திருமந்திரத்தில் மத்யமபதத்தில் சொல்லப்படுகிற ஆன்மாவினுடைய அத்யந்த பாரதந்திரிய சொரூபத்தை உணர்ந்து, பிரபத்தி ஒழிந்த மற்றைய உபாயங்கள் அசேதனங்களாய், சொரூப விருத்தங்களாய், பலத்துக்குச் சமானமல்லாதவைகளாய், சேதனனால் சாதிக்கப்படுமவைகளாய்ப் பரம கஷ்டத்துடன் செய்யப்படுமவைகளாய் இருக்கிறபடியையும், சர்வேச்வரனாகிய பிரபத்தி உபாயம் பரம சேதனமாய், சொரூபத்திற்குத் தக்கதாய், பலத்திற்கு ஒத்ததாய், சித்தமாய், வருத்தமின்றிச் சுகமாகச் செய்யப்படுமதாய் இருக்கிறபடியையும் சீர்தூக்கி, சம்சார நிவ்ருத்தி பூர்வகமான பகவத் அநுபவ சித்தியின் பொருட்டு ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமு முடையவராய், வேறு உபாயங்களை வாசனையோடே விட்டு, மகா விஸ்வாச பூர்வகமாகச் சர்வேச்வரன் திருவடிகளே உபாயம் எனப் பற்றிப் பயமற்றிருக்கும் பாக்யவான்கள். விருத்தி - கைங்கரியம். 'ஸ்வ' என்றது, செயல் தீர்ந்தாராகிய பிரபந்நர்களை.

1. நான்முகன் திருவந். 88.

சேஷத்வம் தன்னுடைய நிர்ப்பந்தத்தைத் தவிர்க்கையாவது-[1]"மற்றொன்றுக்கு அதிசயத்தை உண்டுபண்ண வேண்டுமென்ற விருப்பத்தால் கொள்ளப்படும் தன்மை எதற்கு வடிவாக அமைந்துளதோ அது அடிமைப்பட்டது" என்கிறபடியே அங்ஙனை பரம்பொருளுக்குப் பெருமையை உண்டுபண்ணக் கூடியதான சேஷத்வமானது, தான் பற்றி நிற்கும் ஆன்மாவின் இச்சையால் வருகின்ற தன்னுடைய நிர்ப்பந்தத்தைத் தவிர்க்குமே அன்றோ.

இனி, போக்திருத்வம் தன்னுடைய நிர்ப்பந்தத்தைத் தவிர்க்கையாவது, பாரதந்திரியஞானமும் போக்யதா ஞானமும் பிறந்தவனுடைய போக்திருத்வமாகையாலே தன்னுடைய சுவைக்கு உடல் அன்றிக்கே இறைவனுடைய சுவைக்கு உடலாய் இருக்கை.

[2]'ஆனந்தம் அவன் பிரீதியைத் துளிர் எழுப்ப' என்கிறபடியே இவனுடைய போக்திருத்வம் இறைவனுடைய பிரீதியை வளர்ப்பதாக அன்றோ இருப்பது. [3]ஆகையாலே அன்றோ, "நான் இறைவனுக்கு இனியன், நான் இனியன்" என்று தான் இனியனாதலை முன்னிட்டு இறைவனை உகப்பிக்க இழிந்தவன், "நான் இறைவனாகிய இனிய பொருளை அநுபவிக்கிறவன்" என்று தான் இன்பத்தை அநுபவிக்

1. 'மற்றொன்றுக்கு' என்று தொடங்கும் வாக்கியம், சேஷத்வம் தன்னுடைய நிர்ப்பந்தத்தைத் தவிர்ப்பதற்கு மேற்கோள்.

"பரகதாதிசயா தாநேச்சயா உபாதேயத்வமேவ
யஸ்ய ஸ்வரூபம் ஸ சேஷ:"

என்பது, ஸ்ரீபாஷ்யம்.

2. மேலே கூறிய பொருளை ஆசிரியவசனம் காட்டி விளக்குகிறார் 'ஆனந்தம்' என்று தொடங்கி. இது, நம்பிள்ளை அருளிச்செயல். ஆனந்தம் - ஆன்மாவினுடைய ஆனந்தம். 'அவன்' என்றது, இறைவனை. நீங்கள் கூறுமுறையிலே பார்த்தால் ஆன்மாவிற்கு ஆனந்தம் என்ற குணமே இல்லை என்று ஆகின்றதே? அக்குணம் ஆன்மாவிற்கு இல்லையோ? எனின், இல்லை என்று சொல்லுகிறோம் அல்லோம்; அது உண்டு; எவ்வகையில் உண்டு என்னில், இவ்வான்மாவோடு இறைவன் அநுபவிக்கும்போது இறைவனுக்கு உண்டாகிற ஆனந்தத்தை வளரச்செய்யும் காரியத்திற்கு இவ்வான்மாவினுடைய ஆனந்தம் உதவும். இவ்வான்மா ஆனந்தத்தைச் சிறிது காட்டிக்கொள்ளாத போழ்து, ஒரு அசேதனத்தை அநுபவிப்பதாக இறைவனுக்கு இருக்குமே ஒழிய ஒரு சேதனனோடு அநுபவிப்பதாக இராதே? அதற்காக, இவன் சிறிது ஆனந்தத்தைக் காட்டிக்கொள்ளவேண்டும். அத்துணையேதான் என்பது அவ்வாசிரிய வசனத்திற்குக் கருத்து.

3. இதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'ஆகையாலே' என்று தொடங்கி.

"அஹமந்நம் அஹமந்நம் அஹமந்நம்
அஹமந்நாத: அஹமந்நாத: அஹமந்நாத:"

என்பது தைத்திரீயம்.



கின்றவனாக இருக்குத் தன்மையையும் முன்னிடுகிறது. இப்படி அல்லாதபோது ஒரு சேதனனோடு அநுபவித்ததாக இராதே அன்றோ. இவை எல்லாவற்றையும் திருவுள்ளம்பற்றியாயிற்று 'விருத்தியில் ஸ்வ நிர்ப்பந்தம் அறுக்கும்' என்று அருளிச்செய்தது. (25)

## 26

[1]*கர்ம கைங்கர்யங்கள், சத்யாசத்ய நித்யாநித்ய*
*வர்ண தாஸ்ய அநுகுணங்கள்.*

என்பது சூத்திரம்.

**வியாக்:—** மேலே கிரியை விருத்தி என்ற சொற்களால் சொல்லப்பட்ட கர்ம கைங்கர்யங்கள், இவர்களுக்கு எதற்குத் தகுந்தனவாக இருக்கும்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

கர்மம் அசத்ய அநித்ய வர்ண அநுகுணம் - மேலே கிரியை என்ற சொல்லால் சொல்லப்பட்ட கர்மமானது, பொய்மையுமாய்ச் சிலநாளில் அழியக்கூடியதுமான சாதிக்குத் தகுந்ததாக இருக்கும். கைங்கர்யம் சத்ய நித்ய தாஸ்ய அநுகுணம் - மேலே விருத்தி என்ற சொல்லால் சொல்லப்பட்ட கைங்கர்யமானது, மெய்மையாய் என்றும் நிலைபெற்றுள்ளதுமான அடிமைக்குத் தகுந்ததாக இருக்கும்.

ஆன்மாவுக்கு உளதாய வடிவு அல்லாமையாலே ஒரே தன்மையதாய் அன்றிக்கே, ஒரு காரணம் பற்றி வந்ததாய்ச் சில நாள்களே இருக்கக்கூடியதாய் அழிந்துபோகின்ற இச்சரீரத்தளவிலே போருகையாலே சாதியை '**அசத்யம் அநித்யம்**' என்கிறார். [2]"திருமாலே நானும் உனக்குப் பழ அடியேன்" என்கிறபடியே, அது ஆன்மாவுக்கு ஏற்பட்ட வடிவு ஆகையாலும், என்றும் ஒரே தன்மையதாய் உயிர் உள்ள வரையிலும் தொடர்ந்து செல்வதாகையாலும் அடிமையை '**சத்தியம் நித்யம்**' என்கிறார். வர்ண அநுகுணம் என்றது, சாதிக்குச் சேர்ந்தது என்றபடி. தாஸ்ய அநுகுணம் என்பதும் அப்படியே. (26)

1. இச்சூத்திரத்தை, கர்மம், அசத்ய அநித்ய வர்ணத்துக்கு அநுகுணம் என்றும், கைங்கர்யம், சத்ய நித்ய தாஸ்யத்துக்கு அநுகுணம் என்றும் பிரித்துக் கூட்டுக. கர்மம் என்றது, செய்யவேண்டும் என்று சாஸ்திரங்களால் விதிக்கப்படும் காரியங்களை.

2. திருப்பல்லாண்டு, 11.

## 27

இவற்றுக்கு விதிராகங்கள் பிரேரகங்கள்.[1]

என்பது சூத்திரம்.

**வியாக்:—** இந்தக் கர்மம் கைங்கரியம் என்னும் இரண்டினையும் செய்யத் தூண்டுவன யாவை? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, கர்மத்துக்குப் பிரேரகம் விதி - [2]"வேள்வியைச் செய்யக்கடவன்." [3]"அவியை இடக்கடவன்." என்பன போன்ற சாஸ்திர விதிகள் கர்மத்தைச் செய்யத் தூண்டுவனவாம். கைங்கர்யத்துக்குப் பிரேரகம் ராகம்-எல்லா அடிமைகளிலும் ஆசையுற்று உளதாய இராகமானது கைங்கரியத்தைச் செய்யத் தூண்டுவதாம். பகவானை அநுபவித்தலால் உண்டாகின்ற பிரீதியின் காரியமே கைங்கர்யமாதலின் '**ராகம் பிரேரகம்**' என்கிறார். [4]"உகந்து பணி செய்து" என்னப்படுவதன்றோ அது. (27)

## 28

மண்டினாரும் மற்றையாரும் ஆச்ரயம்.[5]

என்பது சூத்திரம்.

**வியாக்:—** மேலே கூறிய கர்மத்தையும் கைங்கர்யத்தையும் செய்வதற்குரிய கருத்தாக்கள் யாவர்? என்ன, அதற்கு விடை இச் சூத்திரத்தால் அருளிச்செய்கிறார். அதாவது, கைங்கர்யத்துக்கு

1. சூத்திரத்தில் 'இவற்றுக்கு' என்றது, மேலே கூறிய கர்மத்தையும் கைங்கர்யத்தையும் சுட்டுகிறது. இவற்றுள் கர்மத்துக்குப் பிரேரகம் விதி; கைங்கர்யத்துக்குப் பிரேரகம் ராகம் என்று சூத்திரத்தைப் பிரித்துக் கூட்டுக. பிரேரகம் - செய்யத் தூண்டுதல். ராகம் - ஆசை.

2. "யஜேத" என்பது, யஜுர் வேதம்.

3. "ஜுஹுயாத்" என்பது, கர்மமீமாம்சை.

4. திருவாய். 10. 8: 10.

5. மேற்சூத்திரத்துள்ள 'இவற்றுக்கு' என்னும் சொல்லை இச்சூத்திரத்தும் கூட்டிக்கொள்க. ஈண்டு, 'இவற்றுக்கு' என்னும் சொல், மேலே கூறிய கர்மத்தையும் கைங்கர்யத்தையும் சுட்டுகிறது. இச் சூத்திரத்தை, மேலே கூறிய கைங்கர்யத்துக்கு ஆச்ரயம் மண்டினார் என்றும், கர்மத்துக்கு ஆச்ரயம் மற்றையார் என்றும் பிரித்துக் கூட்டிப் பொருள் கொள்க. ஆச்ரயம் - செய்தற்குரியவர்கள்.



ஆச்ரயம் மண்டினார் - [1]"கண்டியூர் அரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லை என்று மண்டினார்" என்ற திருப்பாசுரத்தில் சொல்லுகிறபடியே இறைவன் உகந்து எழுந்தருளியிருக்கின்ற திவ்ய தேசங்களிலே பற்று வைத்துள்ள பிரபந்நர்கள் கைங்கரியத்துக்குக் கருத்தாக்கள். கர்மத்துக்கு ஆச்ரயம் மற்றையார் - [2]"விளக்கினை விதியில் காண்பார்" என்று, மேல் திருப்பாசுரத்திற் சொன்ன [3]"மற்றையாரா"ன பக்திமான்கள் கர்மத்தைச் செய்வதற்குக் கருத்தாக்கள். இதனால், கர்மத்தைச் செய்தற்குரியாரையும் கைங்கரியத்தைச் செய்தற்குரியாரையும் சொல்லினாராயிற்று. (28)

## 29

[4]அருள் முடிய நிறுத்தி அடைய நின்றதும், நல்லதோர் அருள்தன்னாலே நன்றும் எளியனாகிறதும் விஷயம்.

என்பது சூத்திரம்.

**வியாக்:—** கர்மத்தைச் செய்வதற்கு இலக்கு யாது? கைங்கரியத்தைச் செய்வதற்கு இலக்கு யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, அருள் முடிய நிறுத்தி அடைய நின்றது கர்மத்துக்கு விஷயம்; அருள் முடிய - [5]"எத்தவம் செய்தார்க்கும் அருள்முடிவது ஆழியான்பால்" என்கிறபடியே அந்த அந்தத் தெய்வங்களைப் பற்றி வணங்குவதனாலே கிடைக்கின்ற பலன், தன்னுடைய அருளாலே யாம்படி, நிறுத்தி - [6]"தன்மூர்த்தி நிறுத்தினான் தெய்வங்களாக" என்கிறபடியே தனக்குச் சரீரமாக இருக்கின்ற தெய்வங்களை

1. திருக்குறுந்தாண். 19. 2. திருக்குறுந்தாண். 18.
3. திருக்குறுந்தாண். 19.
4. "இவற்றுக்கு" என்னும் சொல்லை அதிகாரத்தால் இச் சூத்திரத்தும் கூட்டிக்கொள்க. இதனை, அருள்முடிய நிறுத்தி அடைய நின்றது கர்மத்துக்கு விஷயம் என்றும், நல்லதோர் அருள் தன்னாலே நன்றும் எளியனாகிறது கைங்கரியத்துக்கு விஷயம் என்றும் பிரித்துக் கூட்டிக் கொள்க. விஷயம் - இலக்கு; குறி.

கர்மாநுஷ்டானங்களில் நெருப்பு, இந்திரன், சந்திரன், வருணன், பிரமன், பசுபதி, பிருஹஸ்பதி என்கிற தேவதைகளின் பெயர்கள் பலகாலும் வரும். அந்தத் தேவதைகளை நோக்கி வழிபாடுகள் செய்யப்படும். ஆனால், அந்த வழிபாடுகள் அனைத்தும் அந்தத் தேவதைகளுக்கு அந்தர்யாமியான ஸ்ரீமந்நாராயணனிடமே போய்ச் சேருகின்றன என்பது வேதாந்திகள் சித்தாந்தம். ஆனதுபற்றியே, கர்மங்களுக்கு 'அருள் முடிய நிறுத்தி அடைய நின்றது விஷயம்' என்கிறார்.

5. நான்முகன் திருவந். 2. 6. திருவாய். 5. 2: 8.

நிறுத்தி, அடைய நின்றது [1] "அவர் அவர் விதிவழி அடைய நின்றனர்" என்கிறபடியே வழிபட்டு வணங்குகிற மக்கள் சாஸ்திரங்களில் கூறியுள்ள விதிவகையே அடைந்து வழிபட்டுப் பலன்களைப் பெறும்படி தெய்வங்களுக்கு உயிர்க்குயிராய் நின்ற இடம் கர்மங்களைச் செய்வதற்கு இலக்கு.

நல்லதோர் அருள் தன்னாலே நன்றும் எளியன் ஆகிறது கைங்கர்யத்துக்கு விஷயம் - [2] "நல்லதோர் அருள் தன்னாலே காட்டினான் திருவரங்கம்" என்றும், [3] "கருத்துக்கு நன்றும் எளியனாய்" என்றும் சொல்லுகிறபடியே, தன்னுடைய திருவருள் மாத்திரத்தாலேயே மிகமிக எளியனாய்க் கொண்டு அர்ச்சாவதாரமாய் நிற்கின்ற இடம் கைங்கரியம் செய்வதற்கு இலக்கு. (29)

## 30

இவற்றாலே சாதாரணம் அசாதாரணம் என்னும். [4]

என்பது சூத்திரம்.

வியாக்:— மற்றைய தெய்வங்களுக்குள் உயிர்க்குயிராய் நின்று அருள் புரியும் நாராயணனை இலக்காக உடையது கர்மமாதலானும், அர்ச்சாவதாரத்தை இலக்காக உடையது கைங்கரியமாதலானும், இவ்விரண்டும் மேலே கண்டவாறு சொல்லப்பட்டன என்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, இவற்றாலே - இக் கர்மமும், கைங்கரியமும் இப்படித் தெய்வங்களுக்குள் உயிர்க்குயிராய் நின்று அருள் புரியும் இறைவனையும், அர்ச்சாவதாரத்து இறைவனையும் இலக்காக உடைய இத்தன்

1. திருவாய்.1. 1 : 5. 2. திருமாலை. 10.

3. திருவாய். 3. 6: 11. "நன்று பெரிதாகும்" தொல். சொல். 343.

4. 'என்னும்' என்பதனை மூன்னும் கூட்டுக. கர்மத்தை, சாதாரணம் என்னும்; கைங்கர்யத்தை அசாதாரணம் என்னும் என்க. சாதாரணம்- சிறப்பு இல்லாதது. அசாதாரணம் - ஒன்றற்கே உரியது; சிறப்புடையது. என்னும்-என்று சாஸ்திரம் சொல்லும் என்றபடி. சாதாரணமான வடிவோடு கூடிய எம்பெருமானை விஷயமாகவுடைய கர்மம் சாதாரணம் எனப்பட்டது; அசாதாரணமான திவ்விய மங்கள விக்கிரஹத்தோடு கூடிய எம்பெருமானை விஷயமாகவுடைய கைங்கரியம் அசாதாரணம் எனப்பட்டது என்றபடி.



மைகளாலே, சாதாரணம் என்னும் - பிரமன் சிவன் முதலான தேவர்களைத் தனக்குச் சரீரமாகக் கொண்டு அவர்களுக்குள் தங்கியிருந்து அருள் புரியும் இறைவனை விஷயமாகவுடைய கர்மத்தைச் சாதாரணம் என்று சொல்லும். அசாதாரணம் என்னும் - அவ்வாறு இல்லாமல் தனக்கே உரிய திவ்ய மங்களவிக்கிரஹமான அர்ச்சாவதாரத்தை இலக்காகவுடைய கைங்கர்யத்தை அசாதாரணம் என்று சொல்லும். (30)

## 31

ஜாதி ஆச்ரம தீக்ஷைகளில் பேதிக்கும் தர்மங்கள் போலே, அத்தாணிச் சேவகத்தில் பொதுவானது நழுவும். [1]

என்பது சூத்திரம்.

வியாக்:— இந்த அசாதாரணமான கைங்கர்யத்திலே துணிந்தார்க்கு, சாதாரணமான அந்தக் கர்மத்தின் சேர்க்கை தன்னடையே கழியும்படியை எடுத்துக்காட்டோடு அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, சாதியில் பேதிக்கும் தர்மம் போலே - [2] "பிராமணன் தான் செய்யவேண்டிய செயல்களாவன: வேதம் ஓதல் ஓதுவித்தல், யாகம் செய்தல் செய்வித்தல், தானம் கொடுத்தல் வாங்குதல், தாய பாகத்தால் கிடைத்த செல்வம், கதிர்நெல் பொறுக்குவது, வேறு ஒருவராலும் எடுத்துக்கொள்ளப்படாத பழங்களையும் கிழங்குகளையும்

1. சாதியில் பேதிக்கும் தர்மம் போலே, ஆச்ரமத்தில் பேதிக்கும் தர்மம் போலே, தீக்ஷையில் பேதிக்கும் தர்மம் போலே என்று 'பேதிக்கும் தர்மம் போலே' என்பதனை முன்னுள்ள சொற்களோடு தனித் தனி கூட்டுக.

'பொதுவானது' என்றது, மேலே சாதாரணம் என்று கூறப்பட்ட கர்மத்தை.

2. "ஸ்வகர்ம ப்ராஹ்மணஸ்ய அத்யயநம் அத்யாபநம்,
யஜநம் யாஜநம், தாநம் ப்ரதிக்ரஹணம், தாயாத்யம்
ஸிலோஞ்ச்ச: அந்யச்ச அபரிக்ருஹீதம்.
ஏதாந்யேவ க்ஷத்ரியஸ்ய அத்யாபந யாஜந
ப்ரதிக்ரஹணாநி பரிஹார்யாணி; தண்டயுத்தாதிகார:.
க்ஷத்ரியவத் வைச்யஸ்ய, தண்டயுத்தவர்ஜம் க்ருஷி கோரக்ஷண
வாணிஜ்யாதிகம் க்ராஹ்யம்"
என்பது, ஆபஸ்தம்ப சூத்.

விரும்புதல் என்னும் இவையாம்; [1] மேற்கூறிய ஆறு தொழில்களில் வேதம் ஓதுவித்தல், யாகம் செய்வித்தல், தானம் வாங்குதல் என்னும் இம் மூன்றும் நீங்கலாக உள்ள மற்றைய மூன்றும் க்ஷத்திரியனுக்கும் உரியனவாம்; இவற்றோடு தண்டித்தல், போர் செய்தல் என்னும் இவை க்ஷத்திரியனுக்கே உரியனவாம். வைசியனுக்கு க்ஷத்திரியனுக்குக் கூறப்பட்டனவற்றுள் தண்டித்தல், போர் செய்தல் என்னும் இரண்டும் நீங்கலாக உள்ள மற்றைய தொழில்கள் மூன்றும் உரியனவாம்; அவற்றோடு பயிர் இடுதல், பசுக்களைக்காத்தல், வியாபாரம் செய்தல் என்னும் இவை வைசியனுக்கே உரியனவாம்.'' என்கையாலே வேதம் ஓதுதல் ஓதுவித்தல், யாகம் செய்தல் செய்வித்தல், தானம் வாங்குதல் தானம் கொடுத்தல் என்னும் ஆறு தொழில்களும் பிராமணனுக்குச் செய்யத்தக்கவையாய், க்ஷத்திரியனுக்கும் வைசியனுக்கும் வேதம் ஓதுவித்தல், யாகம் செய்வித்தல், தானம் வாங்குதல் என்னும் மூன்றும் ஒழிய, வேதம் ஓதல், யாகம் செய்தல், தானம் கொடுத்தல் என்னும் மூன்றுமே செய்யத்தக்கவைகளாய், அவ்விருவகையாரிலும் தண்டித்தல், போர்செய்தல் என்னும் இரண்டும் க்ஷத்திரியனுக்கே உரியனவாய், பயிரிடுதல், பசுக்களைக் காத்தல், வியாபாரம் செய்தல் என்னும் மூன்றும் வைசியனுக்கே உரியனவாய், [2] "மற்றைச் சாதியினர்கள் மேற்கூறிய காரியங்களைச் செய்யும்போது அவர்கட்கு உதவிபுரிதல் நான்காம் வருணத்தானுக்கு உரிய தொழிலாம்." என்கையாலே மற்றைய மூன்று சாதியினர்க்கும் வேண்டிய உதவிகளைச் செய்தல் நான்காம் வருணத்தானுக்குத் தர்மமாய், இப்படி, அந்த அந்தச் சாதிக்குத் தகுதியாக

---

1. "அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்
ஐவகை மரபின் அரசர் பக்கமும்
இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்."
(தொல். பொருள். புறத். 16)

"அந்த ணாளர்க் குரியவும் அரசர்க்கு
ஒன்றிய வரூஉம் பொருளுமா ருளவே.
(தொல். பொருள். மர. 73.)

என்பன போன்ற நூற்பாக்களையும், இளம்பூரணம், நச்சினார்க்கினியம், பேராசிரியம் என்னும் அவற்றின் உரைகளையும் ஈண்டுப் படித்து அறிதல்தகும்.

2. "சுச்ரூஷா சூத்ரஸ்ய இதரேஷாம் வர்ணாநாம்"
என்பது, ஆபஸ்தம்ப சூத்திரம்.

"மேன் மூவரும் மனம் புகல
வாய்மையான் வழியொழுகின்று."



ஒரு சாதியினால் செய்யத் தக்கவை மற்றொரு சாதியினால் விடத் தக்கவையாய்க் கொண்டு தர்மங்கள் வேறுபட்டிருக்கின்றன அல்லவா?

ஆச்ரமத்தில் பேதிக்கும் தர்மங்கள் போலே - ஒருவன் பிரமசாரியான நிலையில் பிச்சைஎடுத்தல், சமிதை கொண்டுவருதல் முதலான தர்மங்கள், இல்லறத்தான் ஆன நிலையில் விடத் தக்கவைகளாய், தீயோம்புதல், விருந்தினரை உபசரித்தல் முதலானவைகள் செய்யத் தக்கவைகளாய், வானப்பிரஸ்த்தனான நிலையில் [1] "கிராமத்தில் உள்ள எல்லாவிதமான உணவுகளையும் ஆடை ஆபரணங்கள் முதலானவற்றையும் விட்டு" என்கையாலே இல்லறத்தானான நிலையில் கொள்ளத் தக்கனவான கிராமத்தில் உள்ள உணவுகள் அலங்காரங்கள் முதலானவைகள் விடத்தக்கவைகளாய், [2] "தோலையாவது மரவுரியையாவது உடுத்திக்கொள்ள வேண்டும்" என்று தொடங்கிச் சொல்லப்பட்ட தோலையாவது மரவுரியையாவது உடுத்திக் கொள்ளுதல், சடையைவளர்த்தல், தாடியைவளர்த்தல், நகங்களைவளர்த்தல், காட்டில் உள்ள உணவுகளைக் கொள்ளுதல் செய்ய வேண்டியவைகளாக இருத்தலாலும், துறவறத்தை மேற்கொண்ட நிலையில், இல்லற நிலையிலும் வானப்பிரஸ்த்த நிலையிலும் மேற்கொள்ள வேண்டியவைகளான தீயோம்புதல், விருந்தினரை உபசரித்தல் முதலானவைகளும் விடத் தக்கனவாய், [3] "நெருப்பு இல்லாதவனும் வீடு இல்லாதவனும் இருக்கவேண்டும்" என்பது போன்ற பிரமாணங்களால் நெருப்பு இல்லாமல் இருத்தல், வீடு இல்லாமல் இருத்தல், துணை

---

"மூவரும் நெஞ்சமர முற்றி அவரவர்
ஏவல் எதிர்கொண்டு மீண்டுரையான் - ஏவல்
வழுவான் வழிநின்று வண்டார் வயலுள்
உழுவான் உலகுக் குயிர்." (வெண்பாமாலை. 165.)

என்பதனை ஈண்டு ஒப்பு நோக்கல் தகும்.

1. "ஸந்த்யஜ்ய க்ராம்யம் ஆகாரம் ஸர்வஞ்சைவ பரிச்சதம்"
என்பது, மநுஸ்மிருதி.

2. "வஸீத சர்ம சீரம் வா" என்பது, மநுஸ்மிருதி.

நீர்பலகால் மூழ்கி நிலத்தசைஇத் தோலுடீஇச்
சோர்சடை தாழச் சுடரோம்பி - ஊரடையார்
கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல்
வானகத் துய்க்கும் வழி.

என்பது வெண்பாமாலை, 168.

3. "அநக்நி: அநிகேதஸ் ஸ்யாத்" என்பது, மநுஸ்மிருதி.

மற்றும் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை.

என்பது திருக்குறள்.

இல்லாமல் இருத்தல் முதலாயினவற்றை மேற்கொள்ள வேண்டியிருத்தலாலும், ஒவ்வொரு ஆச்ரமத்துக்கும் தர்மங்கள் வேறுபட்டிருக்கின்றன அல்லவா ?

தீக்ஷையில் பேதிக்கும் தர்மம் போலே - ஜ்யோதிஷ்டோமம் முதலிய யாகங்களைச் செய்வதற்காக அதற்குரிய தீக்ஷையை மேற்கொண்டவனுக்கு, மூவகைப்பட்ட சாதியினர்க்கும் நால்வகைப்பட்ட ஆச்ரமத்தார்க்கும், பொதுவாய் (அத்தர்மங்களைச்) செய்யாவிடின் குற்றம் வருமாதலாலே அவசியம் செய்யத் தக்கனவாய்ப் போரும் நித்தியகர்மங்கள் செய்ய வேண்டாவாய், ஜ்யோதிஷ்டோமம் முதலிய தர்மங்களே செய்யத் தக்கனவாதலாலே தீக்ஷையிலே தர்மங்கள் வேறுபட்டிருக்கின்றன அல்லவா !

அத்தாணிச் சேவகத்தில் பொதுவானது நழுவும் - ஆக, இப்படிப் பிராமணன் முதலான சாதிகளிலும், பிரஹ்மசரியம் முதலான நிலைகளிலும், ஜ்யோதிஷ்டோமம் முதலான வேறுபட்ட தர்மங்களையுடைய தீக்ஷைகளிலும், வேறுபடுகின்ற தர்மங்கள் போலே, தனக்கே உரியதான திவ்யமங்கள விக்கிரஹத்தோடு கூடிய சர்வேச்வரன் விஷயமாகையாலே சிறப்புடையதாய், அப்படியே, [1]"அத்தாணிச் சேவகம்" என்கிறபடியே அந்தரங்கமான தொண்டு ஆக இருக்கிற கைங்கர்யத்திலே ஊற்றமுள்ளவர்கட்கு, தேவர்களுக்கு அந்தர்யாமியாக இருக்கிற இறைவன் விஷயமாய், இறைவனுகிய தனக்குச் சரீரமாக இருக்கின்ற தேவர்கள் மூலமாகத் தனக்குச் செய்யப்படும் ஆராதனம் ஆகையாலே சிறப்பில்லாதனவாக இருக்கும் கர்மங்கள், உறங்குவான் கைப் பண்டம் போலே தன்னடையே நழுவும் என்கை.

இத்தால், நால்வகைப்பட்ட சாதி தர்மங்கள், நால்வகைப்பட்ட ஆச்ரமதர்மங்கள் முதலான தர்மங்களிலே ஊன்றி நிற்பவர்கட்கு, அந்த அந்தச் சாதிக்கும் அந்த அந்த நிலைகட்கும் அந்த அந்தத் தீக்ஷைக்கும் தக்கனவான தர்மங்கள் ஒழிய, தக்கனவல்லாத தர்மங்கள் விலக்கப் படுவன ஆகையாலே கழிக்கப்படுமாறுபோலே, சொருபத்தின் உண்மை நிலையைக் கண்ட பெரியோர்கட்கு அதற்குத் தக்கதான தர்மம்ஒழிய, தக்கன அல்லாத தர்மங்கள் விடத்தக்கனவாய்த் தன்னடையே விட்டுக்கழியும் என்றதாயிற்று.

இப்படி இருக்கச்செய்தேயும், பெரியோர்கள் நித்திய கர்மங்களைச் செய்து கொண்டு போருவது, தனது ஒழுக்கத்தைப் பின்பற்றி உலகம் நசிக்க ஒண்ணுது என்னும் பேரருளாலேயாம் என்க.

1. *திருப்பல்லாண்டு, 8.*



[1]"ஏ பார்த்தனே ! நான் என்னுடைய குலத்துக்குரிய தர்மங்களை எப்போதும் செய்துகொண்டே இருப்பேனேயானுல் என்னுடைய வழியை மனிதர்கள் எல்லாவகையாலும் பின்பற்றுவார்கள் ; நான் என்னுடைய தர்மங்களைச் செய்யாமற் போவேனேயானுல் இந்த மனிதர்கள் கெட்டுப்போவார்கள் ; கலப்புச் சாதிகளையும் உண்டு பண்ணினவன் ஆவேன் ; இம் மனிதர்களைக் கொன்றவனுகவும் ஆவேன்." என்கிறபடியே பிறர் பொருட்டாகவன்றே இவர்களும் சாதிக்குரிய தர்மங்களைச் செய்து போருவது. (31)

## 32

*சாதந சாத்தியங்களில் முதலும் முடிவும், வர்ண தர்மிகள் தாசவிருத்திகள் என்று துறை வேறிடுவித்தது.*[2]

என்பது சூத்திரம்.

வியாக்:— இந்தக் கைங்கரியத்தில் ஊன்றிநிற்பவர்களுக்கு, கர்மத்தில் ஊன்றிநிற்பவர்களோடு சேர்த்தி இல்லாமையை அருளிச்செய்கிறுர் இச்சூத்திரத்தால்.

அதாவது, சாதனத்தில் முதலும் - பேற்றினை அடைவதற்குரிய வழிகளில் முதல் அடியான கர்மமும், சாத்யத்தில் முடிவும் - (வழிகளால்) அடையத்தக்க பேறுகளில் முடிந்த நிலமான கைங்கரியமும், வர்ணதர்மிகள் என்றும் தாசவிருத்திகள் என்றும் துறை வேறு இடுவித்தது - இந்த மிக்க வேறுபாட்டினை அறிந்தவர்களை நீங்கள் சாதிக்குரிய தர்மங்களை அநுஷ்டிக்கின்றவர்கள் என்றும், நாங்கள் இறைவனுக்கு உகந்த தொண்டுகளைச் செய்யும் ஸ்ரீவைஷ்ணவர்கள் என்றும் உறவுஅறுத்துத் துறை வேறிட்டுப் போகச் செய்தது.

என்றது, திருவயிந்திரபுரத்திலே 'வில்லிபுத்தூர்ப்பகவர்' என்பார் ஒருவர் எல்லாரும் சென்று காலைக்கடன்களைச் செய்து

1. *"யதி ஹ்யஹம் நவர்த்தேயம் ஜாது கர்மண்ய தந்த்ரித:*
*மம வர்த்மாநுவர்த்தந்தே மநுஷ்யா: பார்த்த ஸர்வச:"*
*"உத் ஸீதேயுரிமே லோகா ந குர்யாம் கர்மசேதஹம்*
*ஸங்கரஸ்ய ச கர்த்தா ஸ்யாம் உபஹந்யாம் இமா: ப்ரஜா:."*
*என்பன, ஸ்ரீ கீதை, 3. 23-24.*

2. *இச் சூத்திரத்தை, சாதனத்தில் முதல் வர்ணதர்மிகள் என்று துறை வேறு இடுவித்தது என்றும், சாத்யத்தில் முடிவு தாச விருத்திகள் என்று துறை வேறு இடுவித்தது என்றும் பிரித்துக் கூட்டிக்கொள்க. சாதனம்-உபாயம் ; வழி. சாத்யம்-உபேயம் ; பேறு ; கைங்கரியம்.*

போரும் துறைக்குச் செல்லாது, தாம் தனியே வேறொரு துறையிலே சென்று காலைக்கடன்களை முடித்து மீள்வர்; இங்ஙனம் செல்லாநிற்க, ஒருநாள் அங்கிருந்த மற்றைய அந்தணர்கள் இவரைப் பார்த்து 'ஜீயரே! காலைக்கடன்களை முடிப்பதற்கு எங்கள் துறைக்கு வாராமைக்குக் காரணம் என்? என்ன [1] "ஓ பிராமணர்களே? நாங்கள் வைஷ்ணவர்கள்; விஷ்ணுவிற்கு அடிமை செய்கிறவர்கள்; நீங்கள் பிராமணர்கள்; சாதிக்கு ஏற்பட்ட தர்மங்களைச் செய்பவர்கள்; கைங்கரியத்தைச் செய்து போருகின்ற எங்களுக்கும் சாதிக்குரிய தர்மங்களைச் செய்து போருகின்ற உங்களுக்கும் ஒரு சேர்க்கை இல்லை." என்று துறை வேறிட்டுப் போயினர் என்றதனைக் குறித்தபடி. (32)

## 33

> வேதவித்துக்களும் மிக்க வேதியரும், சந்தஸாம் மாதாவாலும் அதுக்கும் தாயாய்த் தாயினுமாயின செய்யுமத்தாலும் பிறப்பிக்குமது இருவர்க்கும் சிரேஷ்ட ஜந்மம். [2]

என்பது சூத்திரம்.

**வியாக்:**— மேலே "ஜாதி ஆதிகளில் பேதிக்கும் தர்மம்போலே" என்ற சூத்திரத்தில் குறிப்பாற் கூறிப் போந்த அதிகார வேற்றுமைக்கும், துறை வேறிட்டுப் போகும்படியான நெடுவாசிக்கும் விளக்கம் தோன்றுமாறு, கர்மத்திலே ஊன்றி நிற்பவர்களுக்கும் கைங்கர்யத்திலே ஊன்றி நிற்பவர்களுக்கும் உண்டான பலவகையான விசேடங்களைக் கூறத் திருவுள்ளம்பற்றி, முதலில் பிறவியின் விசேடத்தை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வேத வித்துக்கள் - [3] "எந்த அந்தணர்கள் வேதத்தின் முன் பாகத்தை அறிந்தவர்களோ" என்கிறபடியே வேதத்தின் முன்

1. *விஷ்ணு தாஸாவயம்யூயம் ப்ராஹ்மணா வர்ணதர்மிண:*
*அஸ்மாகம் தாஸ வ்ருத்திநாம் யுஷ்மாகம் நாஸ்திஸங்கதி:*

*என்பது, வில்லிபுத்தூர் பகவர் வார்த்தை.*

2. *வேதவித்துக்கள் சந்தஸாம் மாதாவால் பிறப்பிக்குமது (அவர்களுக்கு) சிரேஷ்ட சன்மம் என்றும், மிக்கவேதியர் அதுக்கும் தாயாய்த் தாயினுமாயின செய்யுமத்தால் பிறப்பிக்குமது (இவர்களுக்கு) சிரேஷ்ட சன்மம் என்றும் பிரித்துக் கூட்டுக. தாயாய்த் தாயினுமாயின செய்யுமது-திருமந்திரம்.*

3. *"யேசவேத விதோ விப்ரா:" என்பது, பாரதம்.*



பாகத்தை அறிந்து அதிலே ஊன்றிநிற்பவர்கள், சந்தஸாம் மாதாவால் - [1] "சந்தஸ்ஸுகளுக் கெல்லாம் தாய் காயத்திரீ" என்கிறபடியே, சந்தஸ்ஸுகளுக்கு எல்லாம் தாயாய் இருக்கிற காயத்திரி உபதேசத்தாலே, பிறப்பிக்குமது சிரேஷ்ட சன்மம் - பிறப்பிக்குமது, மேற்கூறிய இருவகையாரில் ஒருவகையினரான கர்மத்திலே ஊன்றி நிற்பவர்களுக்கு உயர்ந்த பிறவியாகும். மிக்க வேதியர் - [2] "எந்த மக்கள் வேதாந்தம் அறிந்தவர்களோ" என்கிறபடியே, மிக்க வேதியராய் வேதங்களின் தாத்பர்யத்தை அறிந்த ஞானிகள், அதுக்கும் தாயாய் - [3] "இருக்கு வேதங்கள் யசுர்வேதங்கள் சாம வேதங்கள் அப்படியே அதர்வண வேதங்கள் மற்றும் உண்டான இதிகாச புராணங்கள் எல்லாம் திருவெட்டெழுத்தினுள் பொதிந்து கிடக்கின்றன." என்கிறபடியே எல்லா வேதங்களினுடைய சுருக்கமாகையாலே அந்தக் காயத்திரிக்கும் தாயாய், தாயினும் ஆயின செய்யுமத்தால் - [4] "பெற்ற தாயினும் ஆயின செய்யும்" என்கிறபடியே, இந்தச் சரீரத்தைத் தந்த தாயின் அளவு அன்றிக்கே மோக்ஷத்தைப் பெறுதற்கு உறுப்பான ஞானத்தை உண்டாக்கும் திருமந்திர உபதேசத்தாலே, பிறப்பிக்குமது சிரேஷ்ட சன்மம் - மற்றொரு வகையினரான கைங்கர்யத்தில் ஊன்றி நிற்பவர்களுக்குச் சிறந்த பிறப்பாகும். [5] "ஆசாரியன் ஞானத்தினால் அவனைப் பிறப்பிக்கிறான்; அந்த ஞானத்தால் அடையும் பிறவியே ஒருவனுக்கு உயர்ந்த பிறவியாகும்" என்கையாலே வாளா 'சன்மம்' என்னாது **'சிரேஷ்டசன்மம்'** என்கிறார்.

முற்கூறிய பிறப்பு, சாதிகளுக்குத் தகுதியான விதிவிலக்குகளுக்கும், அவற்றிற்குத் தக்க ஒழுக்கத்திற்கும், அதற்குத் தக்க பலனை அடைவதற்கும் உறுப்பு ஆகையாலே அவர்களுக்குச் சிறந்த பிறப்பு ஆம். பிற்கூறிய பிறப்பு, ஆத்மாவின் சொரூபத்துக்குத் தக்கவையான விதி விலக்குகளுக்கும், அவற்றிற்குத் தக்க ஒழுக்கத்திற்கும், அதற்குத் தக்க பலனை அடைவதற்கும் உறுப்பு ஆகையாலே இவர்களுக்குச் சிறந்த பிறப்பு ஆம். (33)

1. *"காயத்ரீம் சந்தஸாம் மாதா" என்பது, தைத்திரீயம்.*
2. *"யேசாத்யாத்மவிதோ ஜநா:" என்பது, பாரதம்.*
3. *ருசோ யஜூம்ஷி ஸாமாநி ததைவ அதர்வணாநிச*
*ஸர்வம் அஷ்டாக்ஷராந்தஸ்தம் யச்சாந்யதபிவாங்மயம்.*

*என்பது, பாஞ்சராத்ரம்.*

4. பெரிய திருமொழி, 1. 1: 9.
5. *"ஸஹி வித்யாத: தம்ஜநயதி தச்ச்ரேஷ்டம்ஜந்ம" என்பது, ஆபஸ்தம்பசூத்.*

## 34

அந்தணர் மறையோர் என்றும், அடியார் தொண்டர் என்றும் இவர்களுக்கு நிருபகம்.[1]

என்பது சூத்திரம்.

வியாக் :— இங்ஙனம் சிறந்த பிறவிகளையுடையரான இவ் இருவர்க்கும் பெயர்கள் இன்னவை என்கிறார் இச் சூத்திரத்தால்.

இவர்களில் ஒரு வகையாருக்கு, அந்தணர் மறையோர் என்று நிருபகம் - [2]" சாதி அந்தணர் " என்றும், [3]" துணைநூல் மார்வில் அந்தணர் " என்றும், [4]" தீ ஓம்பு கை மறையோர் " என்றும், [5]" நந்தா வண்கை மறையோர் " என்றும் வருகின்றவாறே விசேடணமான சரீரம் காரணமாக வந்த சாதியும், அதன் அடியாக வந்த வேதநெறி நிற்றலும் நிருபகம். மற்றொரு சாரார்க்கு, அடியார் தொண்டர் என்று நிருபகம் - [6]" திருமால் அடியார் " என்றும், [7]" அணி அரங்கன் திருமுற்றத்து அடியார் " என்றும், [8]" திருமாலுக்கு உரிய தொண்டர் " என்றும், [9]" திருநாரணன் தொண்டர் " என்றும் வருகின்றவாறே ஆன்மாவிற்கு ஞானானந்தங்களைக் காட்டிலும் முக்கிய இலக்கணமாகச் சொல்லப்படுகின்ற அடிமைத் தன்மையும், அதன் காரணமாகச் செய்யப்படுகின்ற கைங்கரியமும் நிருபகம். நிருபகம் - வேறுபடுத்தும் தருமம். (34)

## 35

ஒருதலையில் கிராம குலாதி வியபதேசம், குலம் தரும் என்னும் மாசில் குடிப் பழி என்று, பதியாகக் கோயிலில் வாழும் என்பர்கள்.[10]

என்பது சூத்திரம்.

---

1. சூத்திரத்தில் ' இவர்களுக்கு ' என்றது, மேற்கூறிய கர்மத்தில் ஊன்றி நிற்பவர்களையும், கைங்கர்யத்தில் ஊன்றி நிற்பவர்களையும் குறிக்கின்றது.
2. திருமாலை, 43. 3. பெரியதிருமொழி, 1. 5: 9.
4. பெரியதிருமொழி, 7. 9. 7. 5. பெரியதிருமொழி, 6. 7: 8.
6. திருவாய். 5. 6: 11. 7. பெருமாள் திருமொழி, 1: 10.
8. திருவாய். 6. 9: 11. 9. திருவாய். 3. 7: 4.
10. இச்சூத்திரத்தை ஒரு தலையில் கிராம குலாதிகளால் வரும் வியபதேசத்தை, குலம் தரும் என்னும் மாசில் குடிக்குப் பழி என்று கருதி, அதனை நீக்கிப் பதியாகக் கோயிலில் வாழும் வயிட்டணவன் என்று கூறுவர்கள் என்று இடை இடையே சில சொற் பெய்து கூட்டிமுடிக்க. வியபதேசம் - பெயர் வழக்கு. 'குடிப்பழி' என்றவிடத்து 'குடிக்குப் பழி' என்ற பாடம் இருந்திருக்கும் போலும்.



வியாக் :—கேவலம் இவைதாமோ நிருபகம் ? கிராமம் குலம் முதலியவற்றால் வழங்கப்படுகின்ற பெயர் வழக்குகளும் இல்லையோ ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, ஒரு தலையில் - கர்மங்களிலே ஊன்றி நிற்பவர்கள் என்று சொல்லப்பட்ட ஒரு சாரார் மாட்டு, கிராம குல ஆதி வியபதேசம் - கிராமம் குலம் முதலியவைகளை இட்டு வழங்குகிற அப் பெயர் வழக்கினை, குலம் தரும் என்னும் மாசு இல் குடி - கைங்கரியத்தில் ஊன்றி நிற்பவர்கள் என்று சொல்லப்படுகின்ற மற்றொரு சாரார் [1]" குலம் தரும் " என்னும் திருப்பாசுரத்திற் கூறியவாறே, திருமந்திரத்தால் அறியப்பட்ட பகவத் சம்பந்த ஞானமடியாக வந்ததாய், [2]" மாசில் குடி " என்கிறபடியே, அடிமை செய்தற்கு விரோதியான 'யான் எனது' என்னும் செருக்கு இல்லாமையாலே குற்றம் இல்லாததாய் இருக்கிற இக் குலத்துக்கு, பழி என்று - பழியாம் என்று கருதி, பதியாகக் கோயிலில் வாழும் என்பர்கள் - [3]" வேங்கடத்தைப் பதியாக வாழ்வீர்காள் " என்றும், [4]" கோயிலில் வாழும் வயிட்டணவன் " என்றும் வருகின்றவாறே இறைவன் தங்கியிருக்கின்ற தேசத்தின் சம்பந்தத்தை இட்டு வழங்குவார்கள் என்றவாறு. இது, பகவானுடைய சம்பந்தத்தைக் கொண்டும், பகவானுடைய சம்பந்தத்தையுடைய பொருள்களின் சம்பந்தத்தைக் கொண்டும் வழங்குவதற்கும் உபலக்ஷணம். [5]" பரம ஞானியானவன் கிராமம் குலம் இவை முதலியனவற்றைக் கொண்டு சொல்லத் தக்கவன் அல்லன்; பகவானுடைய சம்பந்தத்தை இட்டுச் சொல்லத் தக்கவன் ; அந்தப் பரமஞானிக்கு, எல்லாம் அவனே அல்லவா ?" என்பது விதி. (35)

## 36

[6] விப்ரர்க்கு கோத்ர சரண சூத்ர கூடஸ்த்தர், பராசர பாராசர்ய போதாயநாதிகள் ; பிரபந்நஜந கூடஸ்த்தர், பராங்குச பரகால யதிவராதிகள்.

என்பது சூத்திரம்.

---

1. பெரிய திருமொழி, 1. 1: 9. 2. மூன்றாம் திருவந். 10.
3. நாய்ச்சியார் திரு. 8: 9. 4. பெரியாழ்வார் திரு. 5. 1: 3.
5. ஏகாந்தீ வ்யபதேஷ்டவ்யோ நைவ க்ராம குலாதிபி:
 விஷ்ணுநா வ்யபதேஷ்டவ்ய: தஸ்ய ஸர்வம் ஸஏவஹி.
 என்பது, பரமைகாந்திதர்மம்.
6. இதனை, விப்ரர்க்குக் கோத்ர கூடஸ்தர் பராசராதிகள் என்றும், சரண கூடஸ்தர் பாராசர்யாதிகள் என்றும், சூத்ர கூடஸ்தர் போதாயநாதிகள் என்றும் நிரல் நிறையே கூட்டுக. பிரபந்நஜநங்களுக்குக் கூடஸ்

**வியாக் :**—இனி, மேல் கூறப்பட்ட இருபிரிவினர்க்கும் மூல புருஷர்களை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, விப்ரர்க்கு கோத்ர கூடஸ்த்தர் பராசர ஆதிகள் - அந்தணர் மறையோர் என்கிற பிராமணர்களுடைய குலத்திற்கு மூல புருஷர்கள் பராசரர் முதலாயினோர். கோத்ரமாவது, மக்கட் பேற்றின் பரம்பரை. [1] "சந்ததி, கோத்ரம், ஜநநம், குலம், அபிஜநம், அந்வயம்" என்பன ஒரு பொருட் சொற்கள். அந்தக் கோத்திரம் தான் பலவாய், அந்த அந்தக் கோத்திரத்திற்கு மூல புருஷர்களான வசிஷ்டர், காசிபர், பரத்வாசர், வத்சர் முதலாகப் பலர் உளராகை யாலே '**பராசர ஆதிகள்**' என்கிறார்.

விப்ரர்க்கு சரண கூடஸ்த்தர் பாராசர்யாதிகள்-சரணங்களாவன-வேதசாகைகள். அந்த அந்த வேத சாகைகளை ஒழிய, புருஷர்களையும் [2] 'சரண' என்ற சொல்லால் கௌணமாகச் சொல்லப்படும். கௌணம் - முக்கியம் அல்லாதது; "சரண என்ற சொல் காடகம் காலாபம் முதலிய வேத சாகைகளில் முக்கியப் பொருளையுடையது; அந்த அந்த வேத சாகைகளை ஓதுகிற புருஷர்களிடத்தில் முக்கியம் இல்லாத பொருளையுடையது" என்கையாலே. இவ்விடத்தில் சாகை களைச் சொல்லுகிறது. எல்லா வேத சாகைகளையும் உலகத்தில் பரவச் செய்ததில் வியாசபகவான் தலைவராக இருக்கச் செய்தேயும், பின்பு ஒவ்வொரு சாகையைத் தனித் தனியாகப் பரவச்செய்த கட, கலாப, கண்வர் முதலானவர்களும் உளராகையாலே '**பாராசர்ய ஆதிகள்**' என்கிறது. பாராசர்யர்-பராசர முனிவருடைய புதல்வர்; வியாசர்.

விப்ரர்க்கு சூத்ர கூடஸ்த்தர்கள் போதாயந ஆதிகள் - சூத்ர மாவது, கர்மாநுஷ்டானங்களைப் பற்றிச் சொல்லுகிற **கல்பம்.** [3] "சிக்ஷை என்னும் வேதாங்கத்தில் எழுத்துக்கள் ஒலிக்கிற முறை சொல்லப்படுகிறது" என்று தொடங்கிச் சொல்லிவருமளவிலே

---

*தர் பராங்குச பரகால யதிவராதிகள் என்க. கூடஸ்தர்-முதல்வர். பாரா சர்யர்-வேதவியாசர்.*

1. *இது, அமரம்.*
2. *"சரணசப்த: காடக காலாபாதி சாகாவிசேஷேஷு-முக்ய:, தத் அத்யாயிஷு புருஷேஷு கௌண:."*
*என்பது, பிரமாணம்.*
3. *"சிக்ஷாயாம் வர்ணசிக்ஷா"*
*என்பது, ஸ்ரீரங்கராஜஸ்தவம் உத்தர சதகம், 18.*



[1] "கல்ப சூத்திரத்தில் கர்மாநுஷ்டான முறை சொல்லப்படுகிறது" என்றாரே அன்றோ. அதுதானும் பலவாய் அந்த அந்தச் சூத்திரங் களுக்குத் தலைவர்களான ஆபஸ்தம்பர் ஆச்வலாயநர் முதலாகப் பலரும் உளர் ஆகையாலே, '**போதாயந ஆதிகள்**' என்கிறார். ஆக, இவர்கள் பிராமணர்களுக்கு மூல புருஷர்கள்.

பிரபந்நஜந கூடஸ்த்தர் பராங்குச பரகால யதிவரஆதிகள் - "அடியார், தொண்டர்" என்கிற பிரபந்நர்களுக்கு மூல புருஷர்கள், [2] "திருமாலின் திருவருளால் கிடைத்த முற்றுணர்வாகிற செல் வத்தையுடையவரும், பிரபந்நஜநங்களுக்கு மூலபுருஷருமான நம்மாழ் வாரைச் சரண் அடைகிறேன்" என்கிற நம்மாழ்வார், திருமங்கை யாழ்வார் தொடக்கமான ஆழ்வார்களும், எம்பெருமானார் தொடக்க மான ஆசாரியர்களும் என்கை. கூடஸ்த்தராவார், மூலமாக இருப் பவர்கள்; உபதேசத்தாலும் அநுஷ்டானத்தாலும் பிரபத்தி நெறியை நிலைநிறுத்தி வளர்த்தவர்களாகையாலே இவர்களைப் பிரபந்ந ஜந கூடஸ்தர்கள் என்கிறது. (36)

## 37

அத்யயந ஜ்ஞாந அநுஷ்டானங்களாலே பிராஹ்
மண்யம் ஆகிறாப் போலே, சந்தங்கள் ஆயிரமும்
அறியக் கற்று வல்லாராகில் வைஷ்ணவத்வ சித்தி.

என்பது சூத்திரம்,

**வியாக் :**—மேலே கூறப்பட்ட இருசாரார்கள் ஒரு சாரார் பிராமணர் ஆதலும், மற்றொரு சாரார் வைஷ்ணவர் ஆதலும் எப் பொழுது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத் திரத்தால்.

அதாவது, அத்யயந - [3] "வேதமானது கற்கத்தக்கது" என்கிற படியே, முதன் முதலில் வேதத்தை ஆசாரியனுடைய [4] உச்சாரண அநூச்சாரண மூலமாக எழுத்துக்களின் கூட்டத்தை அறிதலாகிற

---

1. *"கல்பேநுஷ்ட்டாநம் உக்தம்"*
*என்பது, ஸ்ரீரங்கராஜஸ்தவம் உத்தரசத. 18.*
2. *"பத்யு: ச்ரிய: ப்ரஸாதேந ப்ராப்த ஸார்வஜ்ஞ்ய ஸம்பதம் ப்ரபந்நஜநகூடஸ்த்தம் ப்ரபத்யே ஸ்ரீபராங்குசம்."*
*என்பது, பராங்குசாஷ்டகம், 4.*
3. *"ஸ்வாத்யாயோத்யேதவ்ய:" என்பது ஆரணம்.*
4. *உச்சாரணம் - சொல்லுதல். அநூச்சாரணம் - பின்தொடர்ந்து சொல்லுதல்.*

அத்யயனத்தைச் செய்து, ஞான அநுஷ்டானத்தாலே - மீமாம்சா சாஸ்திரத்தைக் கேட்டல் முதலியவற்றால் வேத வாக்கியங்களின் பொருளை அறியும் அறிவு பிறந்து, அதற்குத் தக்கதான ஒழுக்கம் உண்டானால், பிராஹ்மண்யம் ஆகிறாப் போலே - பிராமணன் ஆகும் தன்மை சித்திக்குமாறு போலே, சந்தங்கள் ஆயிரமும் - [1] "சந்தங்கள் ஆயிரம்" என்கிறபடியே, வேதத்தின் உருவமாய் ஆயிரம் சாகையாய் இருக்கிற திருவாய்மொழியை, அறியக் கற்று வல்லார் ஆனால் - [2] "அறியக் கற்று வல்லார் வைட்ணவர்" என்கிறபடியே, [3] "வேதரூபமாகச் செய்யப்பட்ட இத் திருவாய்மொழி அந்தணர்களால் அத்யயனம் செய்யத்தக்கது" என்கிற விதத்தாலே ஆசாரியனுடைய உச்சாரண அநூச்சாரண மூலமாகப் பயிலுதலாகிற அத்யயனத்தைச் செய்து, உபதேச முகத்தாலே அதன் பொருளை அறியும் அறிவு பிறந்து, அதற்குத் தகுதியாக ஒழுகவும் வல்லர் ஆனாலாயிற்று வைஷ்ணவனாகும் தன்மை சித்திப்பது என்கை. (37)

## 38

இந்த உட்பொருள் கற்றுணர்ந்து மேலைத் தலை
மறையோர்ஆகாதாரை ,அயற்சதுப்பேதிமார் என்று
உத்பத்தி நிரூபிக்கும்.

என்பது சூத்திரம்.

வியாக்:-அந்த வேதத்தை அத்யயனம் செய்து அதன் பொருளையும் உணர்ந்து ஒழுக்கத்தையுமுடையவர்கள், இந்தச் சந்தங்கள் ஆயிரமும் அறியக்கற்று வல்லர் அல்லராயின், அவர்கட்கு வைஷ்ணவராகும் தன்மை இல்லையே ஒழிய, பிராமணராகும் தன்மைக்குக் குறை இல்லையே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, இந்த உட்பொருள் - [4] "மிக்க வேதியர் வேதத்தின் உட்பொருள்" என்கிறபடியே உபநிடதங்களின் உட்பொருளான இந்தத் தமிழ்மறையின் பொருளை, கற்று உணர்ந்து மேலைத் தலை மறையோர் ஆகாதாரை - [5] "கற்றுணர்ந்த மேலைத் தலைமறையோர்" என்கிறபடியே ஆசாரிய உபதேச முகத்தாலே கற்று அறிந்து சிறந்த

1. திருவாய். 10. 9: 11. 2. திருவாய். 5. 5: 11.

3. "அத்யேதவ்யம் த்விஜ ச்ரேஷ்டை: வேதரூபம் இதம் க்ருதம்" என்பது, பிரமாணம்.

4. கண்ணிநுண்சிறுத்தாம்பு, 9. 5. முதல் திருவந். 66.



வேதாந்திகள் ஆகாதாரை, அயல் சதுப்பேதிமார் என்று -[1] "அடிமையிற் குடிமை இல்லா அயல் சதுப் பேதிமார்கள்" என்கிறபடியே, வேதங்களைக் கற்று உணர்ந்ததற்குப் பயன் இறைவனை உள்ளபடி அறிந்து, ஆன்ம சொரூபத்திற்குத் தக்கதான பேறு கைங்கரியம் என்று இருக்கவேண்டியிருக்க, இந்த ஞானம் இன்மையாலே, நான்கு வேதங்களையும் கரை கண்டிருக்கச் செய்தேயும் அந்த வேதத்தோடு தங்களுக்கு ஒட்டு இன்றி அதற்குப் புறம்பானவர்கள் என்று அறுதியிட்டு, உத்பத்தி நிரூபிக்கும் - [2] "எவன் ஒருவன் எல்லா வேத சாஸ்திரங்களையும் அறிந்தவனாக இருந்தும், விஷ்ணுவினிடத்தில் பக்தி இல்லாமல் இருக்கின்றானோ அவனுக்குப் பிராமணனும் தன்மை சித்தியாது; அவனுடைய பிறவி ஆராயத்தக்கதாகும்." என்கிறபடியே இவர்கள் பிராமணர்கள் அல்லர் என்று அவர்கள் பிறவி ஆராயப்படும் என்கை. [3] "எந்தப் புத்திரன் தந்தையை வெறுக்கின்றானோ அந்தப் புத்திரனை வேறு ஒருவனுக்குப் பிறந்தவனாக அறிதல் வேண்டும்; எவன் விஷ்ணுவை வெறுக்கிறானோ அவனைச் சண்டாளனுக்குப் பிறந்தவனாக அறிதல் வேண்டும்." என்பது பிரமாணம்.

ஆக, "கர்ம கைங்கரியங்கள்" என்ற சூத்திரம் முதல் இச் சூத்திரம் இறுதியாக, கர்மமும் கைங்கர்யமும் என்னும் இரண்டும் இதற்கு இதற்குத் தக்கது என்றும், கர்மம் கைங்கரியம் என்னும் இரண்டையும் செய்யத் தூண்டுமவை இன்னவை என்றும், இவற்றிற்கு அதிகாரிகளாவார் இன்னார் இன்னார் என்றும், இவற்றுக்கு இலக்கு இன்னது இன்னது என்றும், இவற்றினுடைய சாதாரண அசாதாரணத் தன்மைகளையும், அசாதாரணத்தைச் செய்யும் போது சாதாரண தருமம் தன்னடையே நீங்குவதனையும், கைங்கரிய நிஷ்ட

1. திருமாலை, 39.

2. விஷ்ணுபக்தி விஹீநோய: ஸர்வசாஸ்த்ரார்த்த வேத்யபி ,
ப்ராஹ்மண்யம் தஸ்ய ந பவேத் தஸ்யோத்பத்தி: நிரூப்யதாம்.
என்பது, பாத்மபுராணம்.

3. ய: புத்ர: பிதரம் த்வேஷ்டிதம் வித்யாதந்யரேதஸம்.
யோ விஷ்ணும் ஸததம் த்வேஷ்டிதம் வித்யாதந்த்யரேதஸம்.
என்பது, பிரமாணம்.

நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக்
குலத்தின்கண் ஐயப் படும்.
என்ற திருக்குறள் இங்கு ஒப்பு நோக்கத்தகும்.

ருக்குக் கர்ம நிஷ்டரோடு பொருந்தாமையையும், அதற்கு அடியான இவ்விருவருடைய பிறவிகளின் வேறுபாடுகளையும், பெயர் வழக்கின் வேறுபாடுகளையும், மூல புருஷர்களின் வேறுபாடுகளையும், இருவர்க்கும் பிராமணனுக்கும் தன்மையும் வைஷ்ணவனுக்கும் தன்மையும் சித்திக்கும் காரணங்களையும், தமிழ்மறையின் பொருளை உணரும் உணர்வில்லாத காலத்தில் தாம் கற்றுத் தெளிந்த வடமொழி மறைகளில் தொடர்பு இல்லாதவர்களாய் ஆராயத்தக்க பிறப்பினை யுடையவராம் படியையும் அருளிச்செய்தாராயிற்று. (38)

## 39

"எவ்வுலகத்தெவ்வெவையும்" என்கையாலே வேதம் பஹுவிதம்.

என்பது சூத்திரம்.

**வியாக்:—** இனிமேல், [1] "சந்தங்கள் ஆயிரம்" என்று திருவாய்மொழிக்குச் சொன்ன வேதத்தின் தன்மையை உறுதிப்படுத்துவதற்குத் திருவுள்ளம்பற்றி, இந்த விதமாக இருப்பதொரு வேதம் உண்டோ? என்ற ஐயத்திற்கு முதலில் விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, எவ்வுலகத்து எவ்வெவையும் என்கையாலே வேதம் பஹுவிதம் - [2] "ஓதுவார் ஓத்து எல்லாம் எவ்வுலகத்து எவ்வெவையும்" என்கையாலே அத்யயனம் செய்கின்றவர்களுடைய வேற்றுமையாலும் உலகங்களின் வேற்றுமையாலும் வேதமானது பலவகைப் பட்டிருக்கும். ஆகையாலே, அவற்றிலே இதுவும் ஒருவகை என்பது கருத்து. (39)

## 40

இதில் சம்ஸ்கிருதம் திராவிடம் என்கிற பிரிவு ருகாதிபேதம் போலே.

என்பது சூத்திரம்.

**வியாக்:—** ஆயின், ஒரே மொழியாக இருக்கவேண்டாவோ? வடமொழியும் தென்மொழியுமாய் ஒன்றற்கொன்று வேறுபட்டதாய் இருக்கின்றதே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

1. திருவாய். 10. 9: 11.
2. திருவாய். 3. 1: 6.



அதாவது, இதில் - இப்படிப் பலவகைப்பட்டிருக்கும் இவ்வேதத்தில், சம்ஸ்கிருதம் திராவிடம் என்கிற பிரிவு - வடமொழி தென்மொழி என்கிற பிரிவு, ருக் ஆதி பேதம் போலே - வடமொழி வேதத்திற்குள்ளேயே இருக்குவேதம் யசுர்வேதம் சாமவேதம் அதர்வணவேதம் என்கிற பிரிவு இருப்பது போலே என்கை.

இதனால்:-வேதங்களின் தொகுதி ஒன்றாக இருக்கச் செய்தேயும், அந்த வடமொழி வேதத்திலேயே இருக்குவேதம் என்பது முதலாகப் பலபடியாகப் பிரிந்தாற் போலே, மொழி வேற்றுமையாலும் இப்படிப் பிரிந்திருக்கும் என்றபடி. (40)

## 41

"செந்திறத்த தமிழ்" என்கையாலே ஆகஸ்தியமும் அநாதி.

என்பது சூத்திரம்.

**வியாக்:—** அங்ஙனம் கூறலாமோ? வடமொழி அநாதியாக இருப்பது; அதுபோன்று, தென்மொழி அநாதியாக இருப்பதொன்று அன்றே? தென்மொழி அகத்தியரால் தோற்றுவிக்கப்பட்டதாயிற்றே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, செந்திறத்த தமிழ் என்கையாலே ஆகஸ்தியமும் அநாதி - [1] "செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி" என்று வடமொழியோடு ஒருசேரப் பேசப்படுகையாலும், "செந்திறத்த தமிழ்" என்று தமிழ் வடமொழிக்கு முன்னம் கூறப்படுகையாலும் தென்மொழியும் அநாதியாக உள்ளது ஒன்று என்கை. [2] அகத்தியரால் உலகத்தில் விளக்கமுற்றபடியால் தென்மொழி 'ஆகஸ்தியம்' என்று பேசப்படுகின்றதித்தனையேயாம்.

இதனால் [3] அநாதியாக உள்ள தன்மை வடமொழி தென்மொழி

1. திருநெடுந் தாண்டகம், 4.
2. "நிழற்பொலி கணிச்சிமணி நெற்றியுமிழ் செங்கண் தழற்புரைசுடர்க்கடவுள் தந்த தமிழ் தந்தான்."

என்பது கம்பராமாயணம் அகத். 41.

"வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி அதற்கிணையாத் தொடர்புடைய தென்மொழியை உலகமெலாம் தொழுதேத்தும் குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகர்."

என்றார் பிறரும்.

3. "என்றுமுள தென்தமிழ் இயம்பி இசை கொண்டான்"

என்பது, கம்பராமாயணம் அகத். 47.

என்னும் இரண்டற்கும் உள்ளது ஒன்று என்றுராயிற்று. ஆகஸ்தியம் - அகத்திய முனிவரால் பரப்பப்பட்டது; தமிழ். (41)

**42**

"வடமொழிமறை" என்றது, தென்மொழி மறையை நினைத்திறே.

என்பது சூத்திரம்.

**வியாக்:—** ஆனுல், தமிழ் மொழி அநாதியேயாகுக; திருவாய்மொழியைத் '**தமிழ் மறை**' என்று கூறுவதற்குப் பிரமாணம் உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

அதாவது, ஆழ்வார், வேதத்தைக் குறிக்கும்போது வேதத்தைக் குறிக்கின்ற 'மறை' என்ற சொல்லாலே சொல்ல அமைந்திருக்க, [1] "**வடமொழி மறை**" என்று மறைக்கு 'வடமொழி' என்ற அடை கொடுத்து அருளிச்செய்தது '**தென்மொழி மறை**' உண்டு என்று திருவுள்ளம்பற்றி அன்றோ என்கை. [2] மறுதலைப் பொருள் இல்லாத போது இப்படி அடைகொடுக்க வேண்டியதில்லையே என்பது கருத்து. (42)

**43**

வேத சதுஷ்டய அங்க உபாங்கங்கள் பதினுலும் போலே, இந்நாலுக்கும் இருந்தமிழ் நூற்புலவர் பனுவல் ஆறும் மற்றை எண்மர் நன்மாலைகளும்.

என்பது, சூத்திரம்.

**வியாக்:—** ஆனுல், அந்த வேதத்துக்கு அங்கங்களும் உபாங்கங்களும் இருப்பது போன்று, இந்தத் தமிழ்மறைக்கும் அங்கங்களும் உபாங்கங்களும் உளவோ? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிருர் இச்சூத்திரத்தால்.

அதாவது, வேத சதுஷ்டய அங்க உபாங்கங்கள் பதினுலும் போலே - இருக்கு முதலான நான்கு வேதங்களுக்கும், சிக்ஷை வியாகரணம் நிருக்தம் சந்தஸ் கல்பம் ஜோதிஷம் என்கிற ஆறு அங்கங்களும், மீமாம்சை நியாயம் புராணம் தர்மசாஸ்திரம் முதலான [3] எட்டு உபாங்கங்களும் ஆக இருக்கின்ற பதினுன்கும் போலே, இந் நாலுக்கும் - நம்மாழ்வார் அருளிச்செய்த தமிழ் மறை நான்கற்கும், இருந்

---

1. *திருவாய்.* 8. 9: 8.
2. *"வடமொழிமறை" என்றது, 'தாமரைக் கண்ணன்' என்பது போன்ற இனச்சுட்டு உள்ள அடை என்பது கருத்து.*
3. *'எட்டு உபாங்கங்களும்' என்றது, ஆராய்தற்குரியது.*



தமிழ் நூற்புலவர் பனுவல் ஆறும் - [1] "இருந்தமிழ் நூற்புலவன் மங்கையாளன்" என்கிறபடியே, ஒருவரால் கரைகாண ஒண்ணுதபடி இருக்கிற தமிழ்மறையாகிய சாஸ்திரத்தைக் கரைகண்ட ஞானத்தின் மிகுதியையுடையவரான திருமங்கையாழ்வாருடைய [2] "கலியன் வாய் ஒலி செய்த பனுவல்" என்கிறபடியே சாஸ்திர வடிவங்களான பிரபந்தங்கள் ஆறும், மற்றை எண்மர் நன் மாலைகளும் - மற்றை ஆழ்வார்கள் எண்மரும் அருளிச்செய்த சிறந்த பிரபந்தங்களும் அங்க உபாங்கங்களுமாம் என்கை. [3] "நயநின்ற நன்மாலை" என்று முதலாழ்வார் அருளிச்செய்தது, மற்றைய ஆழ்வார்கள் பிரபந்தங்கட்கும் ஒக்கும் என்று திருவுள்ளம்பற்றிப் பொதுவிலே '**நன்மாலைகள்**' என்கிருர்.

நம்மாழ்வார் [4] "பொய்ந்நின்ற ஞானமும்" என்ற திருப்பாசுரத்திலே ஆன்ம சொரூபத்திற்கு விரோதியாய் வந்தேறியான குற்றங்களை முதலடியிலே பேசினுற் போன்று, திருமங்கை மன்னனும் முதன் முதலிலே [5] "வாடினேன் வாடி வருந்தினேன்" என்ற திருப்பாசுரத்தாலே ஆன்ம சொரூபத்திற்கு வந்தேறியான குற்றங்களைக் கண்டு நொந்து பேசுதலும், பகவானிடத்தில் உள்ள அன்பின் மிகுதியும், அதில் அர்ச்சாவதாரத்தில் ஊற்றமும், புணர்ச்சியும் பிரிவும் மாறி மாறி வருகையும், [6] அந்யாபதேசப் பேச்சும், அது தன்னிலே இரவின் துன்பம், தூது விடுதல், அநுகாரம், மடல் எடுத்தல், தோழி தாய் மகள் என்னும் மூன்று நிலை வேறுபாடுகளை அடைதலும், இந்திரியங்களுக்கு அஞ்சிக் கூப்பிடுதலும், இறைவனுடைய சுவாதந்திரியத்துக்கு அஞ்சுதலும், பலமுறை பிரபத்தியைச் செய்தலும், கரை புரண்ட ஆர்த்தியும், பிறர் துக்கம் பொறுக்க மாட்டாமையாலே பலகாலும் நலம் சொல்லுதலும் தொடக்கமான கட்டளையாலே, மாறன் பணித்த நான்கு தமிழ்மறைகளின் பொருள்களை நினைவூட்டுவனவாயிருக்கையாலே, மற்றைய ஆழ்வார்கள் பிரபந்தங்களைக் காட்டிலும் திருமங்கை மன்னன் பிரபந்தங்களை இவற்றுக்கு **அங்கங்கள்** என்கிறது. மற்றைய ஆழ்வார்கள் பிரபந்தங்களும் இவற்றின் பொருள்களை அநுசரித்துச் செல்வனவாய் இவற்றின் பொருள்களை உறுதிப்படுத்துவதற்கு உறுப்புக்களாக இருக்கையாலே இவற்றுக்கு உபாங்கங்கள் என்கிறது.

---

1. *பெரியதிருமொழி*, 1. 7: 10.
2. *பெரியதிருமொழி*, 1. 4: 10.
3. *முதல்திருவ.* 57.
4. *திருவிருத்தம்*, 1.
5. *பெரியதிருமொழி*, 1. 1: 1.
6. *அந்யாபதேசப் பேச்சு - பிறர் பேசும் பேச்சு.*

ஆக, [1] "ஸ்ரீரங்கநாதனே! சிக்ஷை என்னும் வேதாங்கத்தில் எழுத்துக்களை உச்சரிக்கும் முறையும், வியாகரணத்தாலும் நிருக்தத்தாலும் பதங்களின் அறிவும், சந்தஸ் என்னும் வேதாங்கத்தில் காயத்திரி முதலான சந்தஸ்ஸுக்களின் இலக்கணமும், ஜோதிஷத்தில் கர்மங்களைச் செய்யவேண்டிய காலமும், கல்ப சூத்திரத்தில் கர்மாநுஷ்டானமும், தர்க்க சாஸ்திரத்திலும் மீமாம்சையிலும் தெளிவான பொருள்களும், புராணங்களிலும் ஸ்மிருதிகளிலும் கருத்துப் பொருள்களும் சொல்லப்படுகின்றன; இந்த வேதாங்கங்களோடு கூடின வேதங்கள் தேவரீரைத் தேடுகின்றன." என்கிறபடியே அந்த 'அங்கங்களும் உபாங்கங்களும் அந்த நான்கு வேதங்கட்கும் உபகாரங்களாக இருக்குமாறு போலே, இவையும் மேற் கூறியபடியே இந்தத் தமிழ் மறை நான்கற்கும் உபகாரங்களாக இருக்கும் என்றதாயிற்று. (43)

## 44

*சகல வித்யாதிக வேதம்போலே, இதுவும் திவ்யப் பிரபந்த பிரதானம்.* [3]

என்பது சூத்திரம்.

**வியாக் :**—அங்கு, அங்க உபாங்கங்களைக் காட்டிலும் வேதம் முதன்மை பெற்றிருக்குமாறு போன்று, இங்கு மற்றைய பிரபந்தங்களைக் காட்டிலும் நம்மாழ்வார் அருளிச்செய்த பிரபந்தங்களும் முதன்மை பெற்றிருக்குமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

---

1. *சிக்ஷாயாம் வர்ணசிக்ஷா பதஸமதிகமோ*
   *வ்யாக்ரியா நிர்வசோப்யாம்*
   *சந்தச் சந்தச் சிதௌ ஸ்யாத் கமயதி*
   *ஸமயம் ஜ்யௌதிஷம் ரங்கநாத,*
   *கல்பே நுஷ்டான முக்தம் ஹ்யுசித கமிதயோ:*
   *ந்யாய மீமாம்ஸயோ: ஸ்யாத்*
   *அர்த்த வ்யக்தி: புராண ஸ்மிருதிஷு*
   *ததநுகா: த்வாம் விசிந்வந்தி வேதா:.*

   *என்பது ஸ்ரீரங்கராஜஸ்தவம் உத். 18.*

2. *இதுவும்-நம்மாழ்வார் அருளிச் செய்த நான்கு பிரபந்தங்களும்.*



அதாவது, சகல வித்யாதிக வேதம்போலே-[1]" ஆறு அங்கங்கள், நான்கு வேதங்கள், மீமாம்சா சாஸ்திரம் தர்க்க சாஸ்திரம் புராணம் தர்ம சாஸ்திரம் என்னும் இவைகள் பதினான்கு கலைகள்." என்று மற்றக் கலைகளோடு வேதமும் ஒருசேரப் பேசப்பட்டிருக்கச் செய்தே, தனக்கு அங்கங்களாயும் உபாங்கங்களாயுமுள்ள எல்லாக் கலைகளிலும் தன் ஏற்றத்தால் மேலாக இருக்கும் வேதம்போன்று, இதுவும் திவ்ய பிரபந்த பிரதானம் - நம்மாழ்வார் அருளிச்செய்த நான்கு பிரபந்தங்களும், திவ்வியப் பிரபந்த எண்ணிக்கையில் ஒரு சேரப் பேசப்பட்டிருப்பினும் தனக்கு அங்கங்களாயும் உபாங்கங்களாயும் உள்ள எல்லாப் பிரபந்தங்களிலும் மேலானவையாக இருக்கும் என்கை. (44)

## 45

*வேதநூல் இரும்தமிழ்நூல், ஆஜ்ஞை ஆணை, வசையில் ஏதமில், சுருதி செவிக்கினிய, ஓதுகின்றதுண்மை பொய்யில் பாடல், பண்டை நிற்கும் முந்தை அழிவில்லா என்னும் லக்ஷணங்கள் ஒக்கும்.*

என்பது சூத்திரம்.

**வியாக் :**—ஆனால், அந்த வேதத்தின் ஏற்றத்திற்கு, காரணங்களான, சாஸ்திரமாக இருத்தல், பகவானுடைய ஆணையாக இருத்தல், குற்றமில்லாததாக இருத்தல், செவி வாயிலாகக் கேட்கப்பட்டு வருதல், மெய்ம்மையாய் இருத்தல், அநாதியாக இருத்தல், அழிவில்லாதிருத்தல் என்னும் தன்மைகள் இவற்றிற்கும் உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, வேதநூல் இரும் தமிழ்நூல் - [2]" வேதநூல் பிராயம் நூறு" என்ற திருப்பாசுரத்தில் அதனை வேத சாஸ்திரம் என்றாற் போன்று, [3]" இருந்தமிழ் நூற்புலவன்" என்ற இடத்தில் இதனையும் பெரிய தமிழ் சாஸ்திரமாகச் சொல்லுகையாலும், ஆஜ்ஞை ஆணை - [4]" சுருதிகளும் ஸ்மிருதிகளும் என்னுடைய ஆணை" என்று அதனை

---

1. *"அங்காநி வேதா: சத்வாரோ மீமாம்ஸா நியாய விஸ்தர:*
   *புராணம் தர்ம சாஸ்த்ரஞ்ச வித்யா ஹ்யேதா: சதுர்தச"*

   *என்பது ஸ்மிருதி.*

2. *திருமாலை.* 3.
3. *பெரியதிருமொழி.* 1. 7: 10.
4. *"ஶ்ருதி: ஸ்மிருதிர் மமைவாஜ்ஞா" என்பது பாஞ்சராத்ரம்.*

பகவானுடைய ஆணையாகச் சொன்னது போன்று, [1] "ஆணை ஆயிரம்" என்று இதனையும் இறைவனுடைய ஆணையாகச் சொல்லுகையாலும், வசைஇல் ஏதம்இல் - [2] "வசையில் நான்மறை" என்று அதனை வஞ்சித்தல் முதலான குற்றங்கள் இல்லாதது என்று சொன்னது போன்று, இதனையும் [3] "ஏதம் இல் ஆயிரம்" என்று குற்றம் இல்லாததாகச் சொல்லுகையாலும், சுருதி செவிக்கு இனிய - அதனை [4] "சுடர்மிகு சுருதி" என்று [5] "கேட்கப்பட்டு வருகின்ற காரணத்தால் சுருதி என்று பெயர்" என்கிறபடியே முன்னையோர் முன்னையோர் உச்சரித்துப் போந்த முறையிலே செவிகளாலே அறியப்படுவதாகச் சொன்னது போன்று, இதனையும் [6] "கேட்டு ஆரார் வானவர்கள் செவிக்கு இனிய செஞ்சொல்லே" என்று கேட்கப்படுவதாகச் சொல்லுகையாலும், ஓதுகின்றதுண்மை பொய்யில் பாடல் - அதனை [7] "வேதநூல் ஓதுகின்றது உண்மை" என்று அது சொல்லுமதில் ஒரு பொய் இல்லை என்றாற் போலே, இதனையும் [8] "பொய்யில் பாடல்" என்கிறபடியே, பொய் என்பது சிறிதும் இல்லாதது என்கையாலும், பண்டை நிற்கும் முந்தை அழிவில்லா - அதனை [9] "பண்டை நான்மறை" என்று அநாதியாகவும் [10] "நிற்கும் நான்மறை" என்று மேல் அழிவில்லாததாகவும் சொன்னதுபோன்று, இதனையும் [11] "முந்தை ஆயிரம்" [12] "அழிவில்லா ஆயிரம்" என்பவைகளால் அநாதியாய் அழிவற்றிருக்குமதாகச் சொல்லுகையாலும், என்னும் லக்ஷணங்கள் ஒக்கும் - மேற்கூறிய தன்மைகள் எல்லாம் வடமொழி மறை, தமிழ் மறை என்னும் இரண்டற்கும் ஒக்கும் என்கை. (45)

## 46

[13] "சொல்லப்பட்ட" என்ற இதில் கர்த்ருத்வம், ஸ்மிருதி அத்தை ஸ்வயம்பூ படைத்தான் என்றது போலே.

என்பது சூத்திரம்.

வியாக் :— ஆனால், அந்த வேதம்போன்று இத் தமிழ்மறையும் ஒருவரால் செய்யப்படாததாக இருக்க வேண்டாவோ ? ஆழ்வார்கள்

1. திருவாய். 6. 3: 11.
2. பெரியதிருமொழி, 5. 3: 2.
3. திருவாய். 1. 6: 11.
4. திருவாய். 1. 1: 7.
5. "ச்ரூயதே இதி ச்ருதி:"
6. திருவாய். 10. 6: 11.
7. திருச்சந்தவிருத். 72.
8. திருவாய். 4. 3: 11.
9. பெரியதிருமொழி, 5. 7: 1.
10. திருவாய். 6. 5: 4.
11. திருவாய். 6. 5: 11.
12. திருவாய். 9. 7: 11.
13. அத்தை - அந்த வடமொழி வேதத்தை. ஸ்வயம்பூ - பிரமன்.



இதற்குக் கருத்தாக்கள் என்கையாலே 'என்றும் உள்ளதாக இருத்தல்', 'ஒரு புருஷனால் செய்யப்படாததாக இருத்தல்' என்னும் தன்மைகள் இதற்குப் பொருந்தாதே ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, சொல்லப்பட்ட என்ற இதில் கர்த்ருத்வம் - [1] "சடகோபன் சொல்லப்பட்ட ஆயிரம்" என்கிறபடியே இதில் ஆழ்வாருக்குச் சொன்ன கர்த்ருத்வம், (ஆழ்வார் கருத்தாவாக இருக்கும் தன்மை) ஸ்மிருதி அத்தை ஸ்வயம்பூ படைத்தான் என்றது போலே - [2] "தோற்றக் கேடு இல்லாததாய் இருக்கிற இந்த வேத வாக்கானது பிரமனாலே உண்டாக்கப்பட்டது" என்கிறபடியே அந்த வேதத்தைப் பிரமன் படைத்தான் என்று ஸ்மிருதி சொன்னதைப் போன்றது என்கை.

'ஸ்வயம்பூ சிருஷ்டித்தான்' என்னாமல் 'படைத்தான்' என்றது, [3] "முன்னம் திசைமுகனைத் தான் படைக்க மற்றவனும் முன்னம் படைத்தனன் நான்மறைகள்" என்ற ஆழ்வார் திருப்பாசுரத்தை நினைப்பூட்டுதற்காக என்க.

தோற்றக்கேடு இல்லாததாய் இருக்கிற வேதங்கள் பிரமனுடைய வாக்கில் நின்றும் தோன்றிய மாத்திரம் கொண்டு பிரமனுக்கு ஸ்மிருதியில் சொல்லப்பட்ட கர்த்ருத்வத்தைப் போன்று, இதிலும் ஆழ்வார்க்குச் சொல்லப்பட்ட கருத்தாவாக இருக்கும் தன்மையும் ஆகையாலே இதனுடைய 'என்றும் உளதாம் தன்மை' 'ஒரு புருஷனால் செய்யப்படாத தன்மை' என்னும் இவற்றின் இன்மை வாராது என்பது கருத்து. (46)

## 47

நால்வேதம் கண்ட புராண ரிஷி மந்த்ரதர்சிகளைப் போலே, இவரையும் ரிஷி முனி கவி என்னும். [4]

என்பது சூத்திரம்.

1. திருவாய். 8. 10: 11.
2. "அநாதி நிதநா ஹ்யேஷா வாகுத்ஸ்ருஷ்டா ஸ்வயம்புவா" என்பது ஸ்மிருதி.
3. பெரிதிருமடல், 10.
4. இச் சூத்திரத்தை, நால்வேதம் கண்ட புராணரிஷியை ரிஷி, முனி, கவி என்னுமது போலேயும், மந்த்ரதர்சியை ரிஷி, முனி, கவி என்னுமது போலேயும், இவரையும் ரிஷி, முனி, கவி என்னும் என்று பிரித்துக் கூட்டுக. புராணரிஷி - வியாசர். மந்த்ரதர்சி - சௌநகபகவான்,

வியாக் :— முன்னரே உள்ள சொற்களின் சேர்க்கைகளை இவர் பார்த்துப் பேசினதே உள்ளது என்னுமிடத்தை அறிவிக்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, நால்வேதம் கண்ட புராண ரிஷி - நால்வேதங்கண்ட புராணரிஷி என்று, [1] "நால்வேதம் கண்டானே" என்கிறபடியே சர்வேச்வரன் தான் முதல் முன்னம் செய்தது போலவே, நான்கு வேதங்களையும் அறிந்து, [2] "சத்தியவதியின் பிள்ளையான வியாச முனிவர் பதினெட்டுப் புராணங்களையும் செய்தவர்." என்கிறபடியே. பதினெட்டுப் புராணங்களினுடைய முன்புள்ள கிரமத்தைப் பார்த்துச் சொன்ன வேதவியாச பகவானைச் சொல்லுகிறது. அன்றிக்கே, "நால்வேதம் கண்டான்" என்கிற இடத்தில் தன்னுடைய அசாதாரண உருவத்தோடு நின்று பார்த்தமை அன்றிக்கே, வியாசமுனியாய் நின்று பார்த்தமையைச் சொல்லுகிறது என்று இந்நூலை இயற்றிய பெரியார்க்குத் திருவுள்ளமாகவுமாம். [3] "கலங்கின அறிவினையுடைய பிரமன் சிவன் முதலான தேவர்கள், எல்லா வுயிர்கட்கும் புகலிடமானவனும் ஒருவித குற்றமும் இல்லாதவனுமான நாராயணனைச் சரணமாக அடைந்தார்கள்; அவர்களால் கூறப்பட்ட விண்ணப்பத்தைக் கேட்ட புருடோத்தமனே என்னில், பராசர முனிவருக்குச் சத்தியவதியினிடத்தில் மஹாயோகியாக அவதரித்தார்." என்றும், [4] "கிருஷ்ணத்வைபாயனர் என்ற பெயருள்ள வியாச முனிவரை, இறைவனான நாராயணனாக அறியக்கடவாய்." என்றும் சொல்லுகிற

1. பெரியதிருமொழி, 8. 10: 1.

2. "அஷ்டாதச புராணானாம் கர்த்தா ஸத்யவதீஸுத:" என்பது, பிரமாணம்.

3. இரண்டாவது கூறிய பொருளுக்குப் பிரமாணம் காட்டுகிறார் 'கலங்கின' என்று தொடங்கி

"ஸங்கீர்ண புத்தயோ தேவா ப்ரஹ்மருத்ர புரஸ்ஸரா:
சரண்யம் சரணம் ஜக்மு: நாராயண மநாமயம்
தைர் விஜ்ஞாபித கார்யஸ்து பகவான் புருஷோத்தம:
அவதீர்ணோ மஹாயோகீ ஸத்யவத்யாம் பராசராத்"

என்பது பிரமாணம்.

4. "க்ருஷ்ண த்வைபாயநம் வ்யாஸம் வித்தி நாராயணம் ப்ரபும்" என்பது, பாரதம்.



படியே பகவானுடைய [1] ஆவேச அவதாரமாகையாலே பகவான் தானாகச் சொல்லக்கடவது வியாசமுனிவரை.

ரிஷி முநி கவி என்னுமது போலேயும் - இப்படி இருந்துள்ள வேதவியாச பகவானை, வேதங்களின் முன்னரே இருந்த கிரமத்தைப் பார்த்துச் சொன்னபடியாலே, [2] "பார்ப்பதனாலே ருஷி; மனனசீலத்தையுடையவனாகையாலே முநி; கவி, நூல்களைப் பார்ப்பவன்." என்கிற பொருள்களை நினைத்துக்கொண்டு [3] "ஜனமேஜயனே! அறத்திலும் பொருளிலும் காமத்திலும் மோக்ஷத்திலும் மஹாத்மாவாகிய அந்த வியாசரிஷியினுடைய சிங்கநாதம் போன்ற இது கேட்கப் படட்டும்" என்றும், [4] "எந்த மஹாத்மாவால் இவ்விதமான பாரதம் சொல்லப்பட்டதோ அந்த இந்த வியாசராகிய மஹாமுனிவர்" என்றும், [5] "உலகங்களைத் தூய்மை செய்கிற கவிகளுக்குள் முதன்மை பெற்றவர் வியாசர்" என்றும் ரிஷி, முநி, கவி என்ற சொற்களால் சொல்லப்பட்டது போலேயும்,

மந்த்ரதர்சியை ரிஷி முநி கவி என்னுமது போலேயும் - மந்திரங்களைப் பார்த்துச் சொன்னவர்களை, முன்னரே இருந்த சொற்களின் சேர்க்கையை அறிந்து சொன்னவர்கள் என்பது தோன்ற [6] "மந்தி

1. இறைவன் அவ்வக்காலத்து எடுக்கும் அவதாரங்கள் முக்கியம் என்றும், கௌணம் என்றும் இருவகைப்படும். இவற்றுள் கௌணமாவது ஒரு காரியத்தினிமித்தம் உயிர்களிடத்து ஆவேசித்து நிற்கிற நிலையாம். இந்த ஆவேசமும் சொரூப ஆவேசம் என்றும், சக்தி ஆவேசம் என்றும் இருவகைப்படும். இவற்றுள், சொரூப ஆவேச அவதாரமாவது, பரசுராமன், பலராமன் முதலிய அவதாரங்களாம். சக்தி ஆவேச அவதாரமாவது, பிரமன், சிவன், வியாசர் முதலிய ஆன்மாக்களிடத்தில் தனது சக்தியை அதிஷ்டிப்பித்து நிற்கிற அவதாரமாம்.

2. "தர்சநாத் ருஷி:, மநந சீலோ முநி:, கவி:க்ராந்ததர்சீ"

3. "ச்ரூயதாம் ஸிம்ஹநாதோயம் ருஷேஸ்தஸ்ய மஹாத்மந:
தர்மேச அர்த்தேச காமேச மோக்ஷேச பரதர்ஷப."

என்பது, பாரதம்.

4. "ஏவம் விதம் பாரதம் து ப்ரோக்தம் யேநமஹாத்மநா
ஸோயம் நாராயணஸ் ஸாக்ஷாத் வ்யாஸரூபீ மஹாமுநி:"

என்பது, பாரதம்.

5. "ஸாக்ஷாத் லோகாந் பாவயமாந: கவிமுக்ய: பாராசர்ய:" என்பது, பாரதம்.

6. "நம ருஷிப்யோ மந்த்ர க்ருத்ப்ய:" என்பது, ஆரணம்.

ரங்களைக் கூறிய ரிஷிகளுக்கு வணக்கம்'', [1]"பகவானாகிய சௌனகமுனி'' என்பன போன்றவைகளால் ரிஷி, முனி என்று சொல்லப்பட்டது போலேயும், மந்திரங்களைச் சொன்ன இவர்கள் திறத்திலும் கவி என்ற வழக்கு வந்த இடத்தில் கண்டுகொள்வது.

இவரையும் ரிஷி முனி கவி என்னும் - ஆக, இப்படி இவர்களைச் சொன்னது போன்று, தமிழ்மறையான இதனை முன்னரே இருந்த கிரமத்தை அறிந்து பேசின இவ்வாழ்வாரையும் [2]"பரம்பொருள் விஷயமாய்த் தமிழிலே உள்ள ஆயிரம் பாசுரங்களையுடைய திருவாய்மொழி என்னும் உபநிடதத்தை எவர் அறிந்தாரோ, அப்படிப்பட்டவராய், இவ்வுலகத்தில் அவதரித்த கிருஷ்ணபகவான் விஷயத்தில் உண்டான ஆசையின் உருவம்போல் இருக்கிற ரிஷியாகிய நம்மாழ்வாரை வணங்குகிறோம்.'' என்றும், [3]"சடருடைய அறிவினைக் கெடுப்பவரும் ஞானம் இல்லாதவர்கட்கு ஞானத்தை உண்டுபண்ணுபவரும் திருப்புளிஆழ்வாரின்கீழ் எழுந்தருளியிருப்பவருமான முனிவரான ஸ்ரீ சடகோபரை வணங்குகிறேன்.'' என்றும், [4]"உலகம் படைத்தான் கவியாயினேற்கு'' என்றும், முன்புண்டான சொற்களின் சேர்க்கையைப் பார்த்துப் பேசினவர் என்னுமிடம் தோன்ற இவரையும் ரிஷி என்றும் முனி என்றும் கவி என்றும் சொல்லுவார்கள் என்கை. (47)

## 48

"படைத்தான் கவி'' என்றபோதே, இதுவும்
யதா பூர்வகல்பநமாமே.[5]

என்பது சூத்திரம்.

**வியாக்:—** இன்னமும், இத் தமிழ்மறை அநாதியாகவே உள்ளது என்பதனைக் குறிப்பாகக் காட்டுவதொரு பிரமாணத்தை அருளிச் செய்கிறார் இச் சூத்திரத்தால்.

1. "பகவாந் சௌநகமுநி:''
என்பது, பிரமாணம்.

2. ருஷிம் ஜுஷாமஹே க்ருஷ்ண த்ருஷ்ணா தத்வமிவோதிதம்
ஸஹஸ்ர சாகாம் யோத்ராக்ஷீத் த்ராவிடீம் ப்ரஹ்ம ஸம்ஹிதாம்.
என்பது, ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் பூர்வசத. 6.

3. சடகோப முநிம் வந்தே சடாநாம் புத்திதூஷகம்
அஜ்ஞாநாம் ஜ்ஞாந ஜநகம் திந்த்ரிணீ மூல ஸம்ச்ரயம்.
என்பது, பராங்குச அஷ்டகம்.

4. திருவாய். 3. 9: 10.

யதா பூர்வகல்பநம் - முன்புபோலே படைக்கப் படுதல்.



அதாவது, (உலகம்) படைத்தான் கவி என்றபோதே - "உலகம் படைத்தான் கவி'' என்கையாலே [1]"ஒன்றி ஒன்றி உலகம் படைத்தான்'' என்கிறபடியே ஒருப்பட்டு மேன்மேலும் உலகத்தைப் படைக்குமிடத்து [2]"பிரமன், சூரியனையும் சந்திரனையும் முன் கல்பத்தில் இருந்தது போலவே படைத்தார்'' என்கிறபடியே படைப்புத்தோறும் சந்திரன் சூரியன் முதலிய எல்லாப் பொருள்களும் முன்பு போலவே படைக்கப்பட்டு வருமாறு போலே, இதுவும் யதாபூர்வ கல்பநமாமே - தமிழ்மறையான இப் பிரபந்தமும் படைப்புத்தோறும் முன்புபோலவே படைக்கப்பட்டதாய் வரும் என்று தோன்றுகிறது அன்றோ என்கை. (48)

## 49

[3](உறக்கம் தலைக்கொண்ட பின்னை மறை நான்கும் உணர்ந்த) தங்கள் அப்பனோடே ஓதின சந்தச்சதுமுகன், (சலம்கலந்த வெண்புரிநூல் மானுரி திரிதந்துண்ணும் காமனுடல் இருக்கிலங்கு) ஜ்யேஷ்ட புத்ராதிகளுக்கு மறைபயந்தாப்போலே, (ஆதும் இல் காலத்து எந்தையான வாய்முதலப்பன் பிரம குருவாய் இராப்பகல் முன்சொல்ல, கற்றனமே என்ற இவரும், நாவினால் நன்மையால் என்னும் ஓதவல்ல பிராக்களை, கன்மின்கள் என்று சொல் பயிற்ற,) (வேதம் ஓதுவார் ஒத்து ஆகையாலே ஆதர்வணாதிகள் போலே இதுவும் பேர் பெற்றது.)

என்பது சூத்திரம்.

1. "ஒன்றி ஒன்றி உலகம் படைத்தான் கவி'' என்ற திருப்பாசுரத்தில், பிரளயம் கொண்ட உலகத்தை முன்புபோல் படைத்த எம்பெருமானைக் கவிபாடுகிறவன் நான் என்ற பொருள் விளங்குதல் காண்க. இது, திருவாய். 3. 9: 10.

2. "ஸூர்யா சந்த்ரமஸௌ தாதா யதா பூர்வமகல்பயத்''
என்பது, தைத்திரியோபநிட.

3. இச் சூத்திரத்தில், 'சந்தச் சதுமுகன்' என்பது முடிய உள்ள பகுதி, இறைவன், பிரமனுக்கு வேதத்தை ஓதுவித்த தன்மையைக் கூறுவது. 'உறக்கம் தலைக்கொண்ட பின்னை மறை நான்கும் உணர்ந்த' என்பது 'அப்பனு'க்கு அடைமொழி. 'தங்கள்' என்பது பிரமனைக் குறித்தது. சதுமுகன் - பிரமன். அதற்குமேல் 'மறை பயந்தாப்போலே' என்பது முடிய உள்ள பகுதி, பிரமன், தன் புத்திரனான சிவனுக்கும் மற்று முன்னார்க்கும் அந்த மறையை ஓதுவித்த தன்மையைக் கூறுவது. இவற்றுள் 'சலம் கலந்த' என்பது முதல் 'இருக்கிலங்கு' என்பது முடிய உள்ள பகுதி, சிவனுக்கு அடைமொழி. இவ்வடைமொழிகளால் வேதத்தை ஓதுவதற்குரிய சிவனுடைய பிரமசரிய நிலையைக் குறித்தபடி. அதற்கு

**வியாக் :**—இவ்வகையான இத் தமிழ் மறையானது இறைவனுடைய திருவருளாலே ஆழ்வார்க்குக் கிடைக்க, ஆழ்வார் திருவருளாலே இவ்வருகுள்ளாருடைய அநுபவத்திற்குக் காரணமாய், இவர் திருப்பெயரோடு சேர்த்துச் சொல்லப்படுமதாய் இருக்கின்றமையை எடுத்துக்காட்டு மூலம் அருளிச் செய்கிறுர் இச் சூத்திரத்தால்.

அதாவது, உறக்கம் தலைக்கொண்ட பின்னை - [1] "உன்னிய யோகத்து உறக்கம் தலைக்கொண்ட பின்னை" என்கிறபடியே, பிரளய காலத்தில் பெயர் வேருகவும் உருவம் வேருகவும் பிரிப்பதற்குத் தகுதியில்லாததாய்ச் 'சத்' என்ற பொருள்நிலை மாத்திரமேயான நிலையினையுடையதாய்க் கிடந்த இதனை, படைப்புக் காலம் வந்தவாறே தன்னின்வேருக்கி, மஹத்து முதலான எல்லாத் தத்துவங்களையும் அண்டத்தையும் படைத்துப் பிரமனைப் படைப்பதற்கு முன்னுக, பிரளய வெள்ளத்திலே, 'இவை நல்வழியைப் பெற்றுக் கரை சேரும் விரகு யாதோ' என்று நினைக்கையாகிற யோகநித்திரையைச் செய்த பின்னர். மறை நான்கும் உணர்ந்த - [2] "உணர்ந்தாய் மறை நான்கும்" என்கிறபடியே 'உறங்கி எழுந்தவன்' நியாயத்தாலே நினைவின் காரண அளவாய்க் கிடந்த நான்கு வேதங்களையும் உச்சாரண கிரமம் தப்பாதபடி நினைந்த, தங்கள் அப்பனேடே - [3] "திசைமுகனுர் தங்கள் அப்பன்" என்கிறபடியே தன் தந்தையான சர்வேச்வரனேடே, ஓதின சந்தச் சதுமுகன் - [4] "எந்தப் பரம புருஷன் அந்தப் பிரமனுக்கு நான்கு வேதங்களையும் உபதேசிக்கின்றுனே" என்கிறபடியே ஓதின [5] "சந்தச் சதுமுகன்" என்கிறபடியே வேதங்களைத் தனக்கு அடையாளமாக வுடைய பிரமன்.

*மேல், 'ஆதுமில் காலத்து' என்பது முதல் 'சொல் பயிற்ற' என்றது முடிய உள்ள பகுதிகள் இறைவன் ஆழ்வார்க்குக் கற்பித்தபடியையும், ஆழ்வார் மதுரகவிகளுக்குக் கர்பித்தபடியையும் தெரிவிக்கின்றது. அதற்குமேல் உள்ள பகுதியாலே, திருவாய்மொழி 'சடகோபன் சொல்' என்று பெயர் பெற்ற காரணத்தை அருளிச்செய்கிறுர்.*

1. *பெரிய திருமடல்,* 8. 2. *இரண்டாம் திருவந்.* 48.
*'உறங்கிஎழுந்தவன் நியாயம்' என்பது, உணர்ந்திருக்கையில் எதனை நினைத்திருக்கிறுனே அதனையே உறங்கி உணரும்போதும் நினைத்தல்.*

3. *பெரிய திருமொழி,* 2. 2: 7.

4. *"யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணேதி தஸ்மை"* *என்பது, சுவேதாச்வதரஉபநி.*

5. *பெரியாழ்வார் திருமொழி,* 2. 5: 8.



சலம் கலந்த வெண்புரிநூல் மானுரி திரிதந்துண்ணும் காமனுடல் இருக்கு இலங்கு ஜ்யேஷ்ட புத்ர - சலங்கலந்த - [1] "சலங்கலந்த செஞ்சடை" என்கிறபடியே நாடோறும் நீராட்டத்தோடே கூடியிருப்பவனும், வெண்புரிநூல் - [2] "வெண்புரிநூல் மார்வன்" என்கிறபடியே பூணுநூலைத் தரித்திருப்பவனும், மான்உரி - [3] "மான் உரியதளும் உடையவர்" என்கிறபடியே மான்தோலை யுடையவனும், திரிதந்து உண்ணும் - [4] "பிறர்மனை திரிதந்து உண்ணும்" என்கிறபடியே பிச்சை ஏற்று உண்பவனும், காமன் உடல் - [5] "காமன் உடல் கொண்ட தவத்தான்" என்கிறபடியே ஐம்பொறிகளையும் வென்றவனும், இருக்கு இலங்கு - [6] "இருக்கு இலங்கு திருமொழி வாய் எண்தோள் ஈசர்" என்கிறபடியே எப்பொழுதும் வேதங்களை ஓதுகின்றவனும் உள்ள தன்மைகளாலே பிரஹ்மசர்ய நிலைக்குரிய இலக்கணங்களையுடையவனுன, ஜ்யேஷ்ட புத்ர ஆதிகளுக்கு-[7] "பிரமனுடைய முதல் புதல்வனுனவனுக்கு" என்கிறபடியே தனக்கு முதற் புத்திரனுன சிவன் முதலாயினுர்கட்கு, மறை பயந்தாப் போலே - [8] "சரணும் மறை பயந்த" என்கிறபடியே பேற்றிற்கும் அதன் சாதனங்கட்கும் உரிய ஞானத்துக்கு உபாயமான வேதத்தை ஓதுவித்தாற் போலே.

ஆதும் இல் காலத்து எந்தையான வாய்முதல் அப்பன் - [9] "ஆதும் இல் காலத்து எந்தை" என்றும், [10] "ஒன்றும் தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதும் இல்லா அன்று" என்றும் சொல்லுகிறபடியே ஒன்றும் இல்லாத சங்கார காலத்திலே பெயரையும் உருவத்தையும் இழந்தது போன்று சத்தையையும் இழந்து போகாமல், என்தந்தையான முறையாலே தன்மேலே ஏறிட்டுக்கொண்டு நோக்கி, மீளவும் கைகால் முதலியவற்றைத் தந்து,ஞான விரிவை உண்டாக்கி, [11] "வாய் முதல் அப்பன்" என்கிறபடியே வாய்த்த காரணனுன உபகாரகன். பிரம குருவாய் இராப் பகல் முன் சொல்ல - [12] "பீதக வாடைப் பிரானுர் பிரம குருவாகி வந்து" என்கிறபடியே தானே ஆசாரியனுய், [13] "இராப் பகல் ஓதுவித்து" என்கிறபடியே இரவு

1. *திருச்சந்த விருத்.* 113. 2. *முதல் திருவந்.* 46.
3. *பெரிய திருமொழி,* 10. 9: 4. 4. *திருக்குறுந்தாண்.* 19.
5. *நான்முகன் திருவந்.* 78. 6. *பெரிய திருமொழி,* 6, 6: 8.
7. *"ப்ரஹ்மண: புத்ராய ஜ்யேஷ்டாய" என்பது, பிரமாணம்.*
8. *முதல் திருவந்.* 60. 9. *திருவாய்.* 3. 4: 4.
10. *திருவாய்.* 4. 10: 1. 11. *திருவாய்.* 7. 9: 3.
12. *பெரியாழ்வார் திரு.* 5. 2: 8. 13. *பெரியாழ்வார் திரு.* 5. 2: 3.

பகல் என்னும் வேற்றுமை இல்லாமல், [1] "என்முன் சொல்லும்" என்கிறபடியே முன்னுருச் சொல்ல, கற்றனமே என்ற இவரும் - [2] "திருநாமச் சொல் கற்றனமே" என்கிறபடியே பின்னே சொன்னேன் என்று இப்படியே அவனோடே கற்ற இவரும்;

நாவினல் நன்மையால் என்னும் ஓதவல்ல பிராக்களைக் கன்மின்கள் என்று சொல் பயிற்ற - நாவினல் - [3] "நாவினல் நவிற்று இன்பம் எய்தினேன்" என்று தொடங்கி [4] "குருகூர் நம்பி பாவின் இன்னிசை பாடித் திரிவனே" என்று தம் ஆசிரியரிடத்தில் வைத்துள்ள பக்தியையும், நன்மையால் என்னும் - [5] "நன்மையால் மிக்க நான்மறையாளர்கள் புன்மையாகக் கருதும்" படியான என்னை [6] "அன்னையாய் அத்தனாய் என்னை ஆண்டிடும் தன்மையான் சடகோபன்" என்கிறபடியே அடிமை கொண்டு பாதுகாத்தலாலாய செய்ந்நன்றியறிதலையும் முன்னிட்டுக் கொண்டு, ஓதவல்ல பிராக்களை - [7] "ஓதவல்ல பிராக்கள்" என்கிறபடியே இதனைக் கற்கவல்ல உபகாரகர் என்னும்படி அன்பு முன்னாக ஓதும் ஸ்ரீ மதுரகவிகள் போல்வாரை, கன்மின்கள் என்று - [8] "கன்மின்கள் என்று உம்மை யான் கற்பியாவைத்த மாற்றம்" என்கிறபடியே இதனைப் பயில்மின் என்று சொல்லி, சொல்பயிற்ற - [9] "சொல் பயிற்றிய" என்கிறபடியே இத் தமிழ் மறையைப் பயில்விக்க;

வேதம் ஓதுவார் ஒத்து ஆகையாலே ஆதர்வணஞதிகள் போலே - வேதமானது [10] "ஓதுவார் ஓத்தெல்லாம் எவ்வுலகத் தெவ்வெவையும்" என்கிறபடியே ஓதுகின்ற தலைவர்களைக் கொண்டு நிரூபிக்கப் படுமதாகையாலே ஆதர்வணம் தைத்திரியம் காண்வம் என்று பெயர் பெற்றாற் போலே, இதுவும் பேர் பெற்றது - இவ் வாழ்வார் இத் தமிழ் மறையை முதன் முன்னம் ஓதினமை கொண்டு இத் தமிழ் மறையும் [11] "சடகோபன் சொல்" என்று பேர் பெற்றது என்கை.

ஆக, "எவ்வுலகத்து" என்று தொடங்கும் முப்பத்தொன்பதாம் சூத்திரம் முதல் இச் சூத்திரம் இறுதியாக, மேல் "அத்யயந"

1. திருவாய். 7. 9: 2.
2. திருவிருத்தம், 64.
3. கண்ணிநுண் சிறுத்தாம்பு, 2.
4. கண்ணிநுண் சிறுத்தாம்பு, 2.
5. கண்ணிநுண் சிறுத்தாம்பு, 4.
6. ஷை ஷை 4.
7. திருவாய். 9. 1: 11.
8. திருவாய். 6. 8: 6.
9. திருவாய். 9. 5: 8.
10. திருவாய். 3. 1: 6.
11. திருவாய். 1. 2: 11.



என்று தொடங்கும் முப்பத்தேழாம் சூத்திரத்தில் "சந்தங்கள் ஆயிரம்" என்ற சொற்றொடரால்போந்த திருவாய்மொழிக்கு உள்ள வேதத் தன்மையை உறுதிப்படுத்தினாராயிற்று. (49)

## 50

[1] இயற்பா மூன்றும், வேதத்ரயம் போலே; பண்ணார் பாடல், பண்புரை இசைகொள் வேதம் போலே.

என்பது சூத்திரம்.

வியாக் :—இங்குக் கூறிய வேதத்தன்மை திருவாய்மொழி ஒன்றுக்குமே அன்று; அத்தன்மை இவருடைய பிரபந்தங்கள் நான்கற்கும் ஒக்கும். ஆகையாலே "வேத சதுஷ்டய" என்று தொடங்கும் நாற்பத்து மூன்றாம் சூத்திரத்தில் இவருடைய பிரபந்தங்கள் நான்கனையும் வேதங்கள் நான்கனுடைய தானத்திலே அருளிச்செய்தார். அவற்றில் எந்தப் பிரபந்தத்தை எந்த வேதத்தினுடைய தானத்திலே கோடல் தகும்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, இயற்பா மூன்றும் வேதத்ரயம் போலே - திவ்வியப் பிரபந்தத்தின் பிரிவு நான்கனுள் இயற்பா என்னும் பிரிவில் சேர்ந்திருக்கின்ற திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்னும் பிரபந்தங்கள் மூன்றனையும், அடைவே இருக்கு, யசுர், அதர்வணம் என்னும் மூன்று வேதங்களினுடைய தானங்களிலே கோடல் வேண்டும். பண்ணார் பாடல் பண்புரை இசை கொள் வேதம் போலே - [2] "பண்ணார் பாடல்" என்கிறபடியே பண்ணோடே சேர்ந்துள்ள இசையை யுடைய திருவாய்மொழியை, [3] "பண்புரை வேதம்" என்றும், [4] "இசைகொள் வேதம்" என்றும் ஓதப்படுகின்ற பண்ணையும் இசையையு முடைத்தான சாமவேதத்தின் தானத்தே கோடல் வேண்டும்.

திருவாய்மொழியின் வியாக்கியானங்களில் "பண்புடை வேதம்" என்ற பாடமே காணப்படுகின்றது. "பண்புரை வேதம்" என்ற பாடம் காணப்படவில்லை. "இசைகொள் வேதம்" என்பதற்குத் திருமொழி வியாக்கியானத்தில் சாமவேதம் என்ற பொருளும் காணப்

1. "பண்புரை இசை கொள் வேதம் போலே" என்பதனை, பண்புரை வேதம் போலே என்றும்; இசைகொள் வேதம் போலே என்றும் தனித் தனியே கூட்டுக. ஒரே வாக்கியமாகக் கோடலுமாம்.
2. திருவாய். 10. 7. 5.
3. திருவாய். 6. 6: 5.
4. பெரிய திருமொழி, 5. 3: 2.

படவில்லை. ஆயினும், மிகவும் நம்பிக்கைக்கு உரிய இவர் இப் பிரபந்தத்தில் இப்படி அருளிச்செய்கையாலே இப்படியும் கொள்ளுதல் வேண்டும். "பண்புரை வேதம்" "இசைகொள் வேதம்" என்பன போன்ற இடங்களில் சாமவேதத்தினது சிறப்பினை நோக்கிச் சாமவேதத்தினை அருளிச்செய்தாராயினும் உபலக்ஷணத்தால் மற்றை வேதங்களையும் கோடல் வேண்டும்.

"பண்புரை வேதம்" என்றது, பண்ணைப் புரைந்திருக்கின்ற வேதம் என்ற பொருளதாய் பண்ணுக்கு நிலமான வேதம் என்றபடி. "இசைகொள் வேதம்" என்றது, இசையையுடைத்தான வேதம் என்றபடி. சாமவேதத்தினைக் காட்டுகின்ற சொற்றொடர்கள் பல, பிரபந்தங்களில் ஆங்காங்குப் பொதிந்துகிடக்க, "பண்புரை வேதம்", "இசைகொள் வேதம்" என்னும் இந்தத் தொடர்களை இப்போது இவர் எடுத்தது, "பண்ணார் பாடல்" என்கிறபடியே திருவாய்மொழி பண்ணையும் இசையையுமுடைத்தாகையாலே, சாமவேதத்துக்குப் பண்ணும் இசையும் உண்டு என்னுமதனை அறிவிக்கைக்காக ஆயிற்று. (50)

## 51

[1] ருக்கு சாமத்தாலே சரசமாய், ஸ்தோபத்தாலே பரம்புமா போலே, சொல்லார் தொடையல் இசை கூட்ட அமர் சுவை ஆயிரம் ஆயிற்று.

என்பது சூத்திரம்.

வியாக் :—ஆனால், அந்த வடமொழிவேதம்நான்கனுள் இருக்கு வேதமானது சாமவடிவமாகப் பரம்புகிற தன்மை, இத் தமிழ்மறைகளிலும் உளதோ ? என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, ருக்கு சாமத்தாலே சரசமாய் - சாமத்திற்குச் சுருக்கமான ருக்கானது, தனக்கு விரிவாய் [2]"ருக்குக்கு சாமம் ரசமாகும்" என்கிறபடியே தனக்குச் சுவையாய் இருந்துள்ள இசை ரூபமான சாமத்தாலே சுவையோடு கூடியதாய், ஸ்தோபத்தாலே பரம்புமா போலே - "ஹாவு ஹாவு ஹாவு" என்பது போன்ற ஸ்தோபத்தாலே விரிவை அடையுமாறுபோலே.

1. சரசம் - ரசத்தோடு கூடியது; ரசம் - சுவை. ஸ்தோபம் - இசைநிறைச்சொற்கள்.

2. "ருசஸ் ஸாமரஸ:" என்பது, சாந்தோக்யஉப.



சொல்லார் தொடையல் இசை கூட்ட அமர்சுவை ஆயிரம் ஆயிற்று - சொல்லார் தொடையல் - இருக்கு வேதத்தின் தானத்தில் இருக்கின்ற [1]"சொல்லார் தொடையல்" ஆன திருவிருத்தம் நூறு திருப்பாசுரங்களும், இசைகூட்ட - [2]"இசைகூட்டி" என்கிறபடியே இசையிலே கூட்டினவாறே சாமவேதத்தின் தானத்தையுடையதாய், அமர்சுவை ஆயிரம் ஆயிற்று - [3]"அமர்சுவை ஆயிரம்" என்கிறபடியே சுவையோடு கூடியிருக்கின்ற ஆயிரம் திருப் பாசுரங்களாகப் பரம்பிற்று என்கை. (51)

## 52

[4] சந்தோகன் என்று, சாமாந்யமாகாமல் முதலிலே பிரித்து, யாழ் பயில் கான ஸ்வரூபியைப் பாலையாகி என்று விசேஷிக்கையாலே, வேதகீதசாமி நான் என்ற (சாமம்) தோன்ற, உத்கீத பிரணவத்தைப் பிரதமத்திலே மாருடி, சரமகதி முடிவாக, தொண்டர்க்கு அமுது என்னத் தேவான்னமாக்கி, மஹாகோஷ நல்வேத ஒலிபோலே மஹாத்யயனம் என்னப் பாடுகையாலே) இத்தைச் சாந்தோக்ய சமம் என்பர்கள்.

என்பது சூத்திரம்.

வியாக் :— இனி, இந்தச் சாமவேதமானது பலவகைப்பட்டிருக்கையாலே, திருவாய்மொழி அவற்றுள் எந்தச் சாமத்தோடு ஒக்கும் ?

1. திருவிருத்தம், 100. 2. திருவாய். 2. 4: 11

3. திருவாய். 1. 3: 11.

திருவிருத்தத்தில் உள்ள நூறு திருப்பாசுரங்களும் நூறு திருப்பதிகங்களாகப் பரம்பின என்றபடி. இதன் விளக்கத்தை இந்நூலின் இறுதியில் காண்க.

4. வேதங்களுள் சாமவேதம் சிறந்தது என்பதும், அந்தச் சாமவேதத்தில் அதன் உபநிடத பாகமான சாந்தோக்யம் சிறந்தது என்பதும், அந்தச் சாந்தோக்ய உபநிடதமே திருவாய் மொழியாக அவதரித்தது என்பதும் ஆகிற மூன்று விஷயங்கள் பிரமாணங்களோடு கூறப்படுகின்றன இச்சூத்திரத்தில். இச்சூத்திரத்தில், 'வேத கீத சாமி நான் என்ற சாமம்' என்பது முடிய வேதங்களுள் சாமவேதம் சிறந்தது என்பதும், அதனுள் சாந்தோக்யம் சிறந்தது என்பதும் கூறப்படுகின்றது. அதற்குமேல் 'சாமம் தோன்ற' என்பது முதல் 'பாடுகையாலே' என்பது முடிய, அந்தச் சாந்தோக்ய உபநிடதமே திருவாய் மொழியாக அவதரித்தது என்பது கூறப்படுகின்றது.

என்னும் வினாவிற்கு, சந்தோக சாமத்தில் உபநிடத பாகமான சாந்தோக்யத்தை ஒக்கும் என அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, [1] சந்தோகன் என்று சாமாந்யம் ஆகாமல் முதலிலே பிரித்து - [2] "சாமவேதகீதனாய சக்ரபாணி அல்லையே", [3] "திசை முகனார் தங்கள் அப்பன் சாமி அப்பன்" என்று பெரியோர்களும், [4] "வேதங்களில் சாமம் நான் ஆகிறேன்" என்று இறைவனாகிய தானும் அருளிச்செய்த இடங்களிலே உள்ள '**சாமம்**' என்ற சொல்லானது, பொதுவிலே சாமவேதத்தைக் காட்டாமல் அந்த சாமவேதத்தின் விசேடமான சந்தோக சாமம் என்பதனைக் காட்டுகிறது என்பது தோன்ற, [5] "சந்தோகன் பௌழியன் ஐந்தழல் ஓம்பு தைத்திரியன் சாமவேதி" என்ற திருப்பாசுரத்தில் '**சந்தோகன்**' என்று முதலிலே பிரித்து, இத்திருப்பாசுரத்தில் 'சாமவேதி' என்று பின்னர் சாமவேதத்தை அருளிச்செய்வதனாலே முன்னர் '**சந்தோகன்**' என்ற சொல்லால் அதன் விசேஷமான சந்தோக சாமத்தைக் குறித்து அருளிச்செய்கிறார் என்பது தெளிவாம். இது, திருவுள்ளம் இல்லையாகில் இங்ஙனம் பிரித்து அருளிச்செய்ய வேண்டாவே என்க. யாழ் பயில் கான ஸ்வரூபியை - அதாவது, [6] "யாழ் பயில் நூல் நரம்பின் முதிர் சுவையே" என்கிறபடியே யாழ் சம்பந்தமாகக் கற்கப்படுகின்ற நூலிற் சொன்ன இலக்கணத்தையுடைய நரம்பிலே பிறந்த பண்பட்ட சுவை என்னும்படி இசை வடிவம் போலே மிக இனியன் ஆனவனை, பாலையாகி என்று விசேஷிக்கையிலே - இசையின் பொதுவாகாமல் [7] "யாழ் நரம்பில் பெற்ற பாலையாகி" என்ற திருப்பாசுரத்தில் அந்தச் சந்தோக சாமத்தின் [1] நிறமான பாலையாழ் என்கிற பண்ணை இட்டு விசேடிக்கையாலே. இங்கே இந்தப் பண்ணைச் சொல்லுதற்குக் காரணம் என்னை? எனின், "சாமவேதகீதன்" என்று எம்பெருமானை வேதகீதத்தோடு ஒற்றுமைப்படுத்திக் கூறியவதனாலே, அந்தக் கீதமும் 'சந்தோக சாமகீதம்' என்று தெளிவித்தற்காக என்க.

வேத கீத சாமி நான் என்ற சாமம் தோன்ற-அதாவது, '**சந்தோகன்**' என்று முதலிலே பிரித்துப் '**பாலையாகி**' என்று இப்படி விசேடிக்கையாலே, [2] பச்வதிகரண நியாயத்தாலே "சாம வேத கீதன்", "சாமியப்பன்", "வேதங்களில் சாமம் நான் ஆகிறேன்" என்ற இடங்களில் உள்ள 'சாமம்', 'கீதம்' என்ற சொற்கள் பொதுவிலே சாமவேதத்தையும் இசையையும் காட்டாமல் அதன் விசேஷமான சந்தோக சாமத்தையும் அதன் பண்ணாகிற பாலையாழ் என்கிற பண்ணையும் காட்டாநிற்கும் என்க. இங்ஙனம் காட்டுகையால் இங்குச் சொல்லப்பட்டது சந்தோக சாமமே ஆம். இப்படி ஆழ்வார்களும், இறைவனாகிய தானும், இறைவனாகிய தன்னோடு ஒற்றுமைப்படுத்திச் சொல்லும்படி சிறப்புடையதாய் இறைவனால் விரும்பப்படுவதாய் உள்ள சந்தோக சாமமே இத் திருவாய்மொழி என்பது தோன்றும்படியாக;

உத்கீதப் பிரணவத்தைப் பிரதமத்திலே மாறாடி - அதாவது, ஒரு சாமத்திற்கே பிரஸ்தாவம், உத்கீதம், பிரதிஹாரம், உபத்ரவம், நிதானம் என்று ஐந்து பாகங்கள் உள வாகையாலே, அவற்றுக்குள்ளே உத்கீதம் ஒன்றாயிருக்கச் செய்தே, [3] "சாமத்துக்கு உத்கீதம் சுவையாக இருப்பது" என்கிறபடியே சாமத்திற்குச் சுவையாகச் சொல்லப்படுமதாய், பிரணவத்தை முன்னிட்டு இசைபாடப்படுமதாய் இருப்பது ஒன்று உத்கீதம்; ஆகையால் அந்த உத்கீதத்தின் உறுப்

---

*சூத்திரத்தின் ஈற்றிலே உள்ள 'பாடுகையாலே' என்னும் சொல்லை 'சாமம் தோன்றப் பாடுகையாலும், உத்கீத பிரணவத்தைப் பிரதமத்திலே மாறாடிப் பாடுகையாலும், சரமகதி முடிவாகப் பாடுகையாலும், தொண்டர்க்கு அமுது என்னத் தேவான்னமாக்கிப் பாடுகையாலும், மஹாகோஷ நல்வேத ஒலிபோலே மஹாத்யயனம் என்னப் பாடுகையாலும், என மேல் உள்ளனவற்றோடு தனித்தனியே கூட்டுக.*

1. *'சந்தோகன் என்று சாமாந்யம் ஆகாமல் முதலிலே பிரித்து' என்னும் இவ்வாக்கியத்தை, 'சாமான்யம் ஆகாமல் சந்தோகன் என்று முதலிலே பிரித்து' என்று மாற்றுக. சாமாந்யம்-பொது.*
2. *திருச்சந்தவிருத்.* 14.
3. *பெரியதிருமொழி,* 2. 2: 7.
4. *"ஸாமவேதோஸ்மி" என்பது ஸ்ரீகீதை.* 10: 22.
5. *பெரியதிருமொழி,* 5. 5: 9.
6. *திருவாய்.* 2. 3: 7.
7. *பெரியதிருமொழி,* 7. 3: 7.



1. *'திறமான' என்றிருக்க வேண்டும் என நினைக்கிறேன்.*
2. *பச்வதிகரணநியாயம் என்பது, பசுவைக் கொண்டு யாகம் செய் என்ற விதியில் உள்ள பசு என்னும் சொல்லானது பொதுவாக விலங்குகளைக் குறிப்பதாயினும், மேல் வருகின்ற மந்திரத்தில் சாகம் என்று கூறியிருப்பதனால் இங்குப் பசு என்னும் சொல் வெள்ளாட்டினைக் குறிக்கும் என்பது.*
3. *"ஸாம்ந உத்கீதோ ரஸ:" என்பது, சாந்தோக்யம்.*

பான பிரணவத்தை [1]"உத்கீதம் என்ற பாகத்துக்கு உறுப்பான ஓம் என்னும் இந்த எழுத்தினைத் தியானம் செய்யக்கடவன்" என்று சாந்தோக்ய உபநிடதத்தில் முதலிலே எடுத்தாற் போன்று, இத் திருவாய்மொழியிலும் முதலிலே எடுக்கிற அளவிலே 'ஓம்' என்று, தொகை யெழுத்து வடிவமாக எடுத்தால் 'திருவாய்மொழி ஒரு சிலர்க்கே ஓதத் தக்கதாம்; பலருக்கு முரியதாகாது' என்று திருவுள்ளம் பற்றி, அப்பிரணவத்தைத் தொகைவடிவமாகக்கொள்ளாமல் அ.உ.ம. என்ற மூன்று எழுத்துக்களாகப் பிரித்து, அம்மூன்று எழுத்துக்களையும் [2]"உயர்வற உயர்நலம்" என்ற முதல் திருப்பாசுரத்தில் முதல் மூன்று அடிகளில் முதல் எழுத்தாக வைக்கின்றவர், அகரத்தை முதல் அடியில் முதல் எழுத்தாக வைக்காமல் உகரத்தை வைத்தமையால் எழுத்தின் முறையை மாற்றினார் என்க.

இங்ஙனம் எழுத்துக்களின் முறையை மாற்றி உகரத்தை முதலிலே வைத்தற்குப் பயன் என்? என்னில், அந்தச் சாந்தோக்கியத்திற்குச் சுவைபாகமான உத்கீதத்துக்கு நோக்கான 'உத்' என்ற திருப் பெயர், இத் திருவாய்மொழிக்கு உள்ளுறை ஆயினமை தோன்ற "உயர்வற" என்று உகரத்தை முதலாக எடுத்து ஈற்றில் [3]"உயர்ந்தே" என்று தகரம் இறுதியாக முடித்தல் பயன். இக் கருத்து மேற்கூறும் சூத்திரத்தால் நன்கு விளங்கும். ஆக, இப்படி மூன்று எழுத்து வடிவமாகப் பிரணவத்தை முதலிலே கூறுகின்றவர் மேற்கூறிய கருத்தினைத் தெளிவுபடுத்துவதற்காக எழுத்துக்களின் முறையை மாற்றி;

சரமகதி முடிவாக - அதாவது, சாந்தோக்யத்தின் நடுவிலே சொல்லப்பட்டிருக்கின்ற 'அர்ச்சிராதி' யான முடிவு நெறியை [4]"சூழ்விசும் பணிமுகில்" என்ற திருவாய்மொழியிலே பேசுகையாலே, முடிவு நெறியை முடிவாகக் கொண்டு என்கை. [5]"கர்ப்ப கதி, யாம்யகதி, தூமகதி முதலிய கதிகள் போல் அல்லாமல் எல்லை

1. "ஓம்இதிஏதத் அக்ஷரம்உத்கீதம் உபாஸீத" என்பது, சாந்தோக்யம்.

2. 'உயர்வற உயர்நல முடையவன்' என்றும், 'மயர்வறமதிநலம் அருளினன்' என்றும், 'அயர்வறும் அமரர்கள் அதிபதி' என்றும் முதல் திருப்பாசுரத்தில் முதல் மூன்று அடிகளில் முதல் மூன்று சீர்களிலும் உகரம் மகரம் அகரம் என்று முதல் எழுத்தினை மாற்றியிருத்தல் காண்க.

3. திருவாய். 10. 10: 11.    4. திருவாய். 10. 9: 1.

5. கர்ப்பகதி முதலியவற்றின் விளக்கத்தை மேலே பக்.32இல் காண்க.



நிலமான முக்தி நெறி ஆகையாலே அர்ச்சிராதி கதியைச் 'சரமகதி' என்கிறார்.

தொண்டர்க்கு அமுது என்னத் தேவான்னம் ஆக்கி - அதாவது, அந்தச் சாமம், [1]"அந்தச் சாமத்தைக் கானம் செய்துகொண்டிருக்கிறான்" என்கிறபடியே, பகவானை அநுபவிக்கும் அநுபவத்தால் உண்டாகும் பெருமகிழ்ச்சிக்குப் போக்கு வீடாக "ஹாவு ஹாவு" என்பது போன்ற முறையில் சாமகானம் செய்து, [2]"நான் பரமாத்மாவாகிற இனிய பொருளை அனுபவிக்கிறவன்" என்று களிக்கும் நித்தியரும் முக்தருமான தேவர்களுக்கு இனிய பொருளாக இருப்பது போன்று, [3]"தொண்டர்க்கு அமுது உண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்கிறபடியே இத் திருவாய்மொழியும் பகவானை அநுபவிக்கும் அநுபவத்திலே ஆசையுள்ளவர்கட்கு இனிய பொருளாகும்படி செய்து;

மஹாகோஷ நல்வேத ஒலிபோலே மஹாத்யயனம் என்னப் பாடுகையாலே - அதாவது, [4]"எல்லா வேதங்களைக் காட்டிலும் சாம வேதத்தின் ஒலியானது பெரியதாக ஆயிற்று; அந்தச் சாமவேதத்தின் ஒலியாலே பிரமாண்டமாகிய மண்டபமானது மிகவும் எதிர்ஒலி செய்தது" என்றும், [5]"பாடு நல் வேத ஒலி" என்றும் சொல்லப்படுகின்ற பெரிய ஒலியையுடைத்தான சாமவேதம் போலே, இத் திருவாய்மொழியைப் [6]பெரிய திருவத்யயனம் என்னப் பாடுகையாலும்;

இத்தைச் சாந்தோக்ய சமம் என்பர்கள் - ஆக, மேலே கூறிய தன்மைகளைக் கொண்டு இத் திருவாய்மொழியை, சந்தோக சாமத்

1. "ஏதத் ஸாம காயந்நாஸ்தே" என்பது, தைத்திரீயம்.

2. "அஹமந்நாத: அஹமந்நாத: அஹமந்நாத: என்பது, தைத்திரீயம்.

3. திருவாய். 9. 4: 9.

4. "ஸர்வேப்யோபிஹி வேதேப்ய; ஸாமகோஷோ மஹாநபூத் அந்வகோஷய தத்யர்த்தம் தேநப்ரஹ்மாண்ட மண்டப:" என்பது பிரமாணம்.

5. திருவாய். 5. 9: 3.

6. திருவரங்கத்தில் மார்கழி மாதத்தில் நடக்கும் திருவத்யயன உத்ஸவத்தில், முதலாயிரமும் பெரிய திருமொழியும் சேவிக்கப்படுகிற பகற் பத்துத் திருநாளைச் சிறிய திருவத்யயனம் என்றும், திருவாய்மொழி சேவிக்கப்படுகிற இராப்பத்துத் திருநாளைப் பெரிய திருவத்யயனம் என்றும் கூறுதல் மரபு.

தில் உபநிடத பாகமான சாந்தோக்யத்துக்கு ஒப்பு என்று பெரியோர்கள் சொல்லுவர்கள். (52)

## 53

புரவி ஏழ் ஒரு கால் உடைய தேரிலே, திருச் சக்கரம் ஒத்துக் காலசக்கரச் செங்கோல் நடாவி, ஜ்யோதிச் சக்ர ஒளி சுருக்கி, அக்நீஷோமீய தேஜ அம்ருதத்துக்கு ஊற்றும் மந்தேஹர்க்குச் செந்தீயும் முக்தி மார்க்கத் தலைவாசலும் கண்ணுவான் கண்ணில் பிறந்த கண்மணியும் த்ரயீ மயமுமான மண்டலத்திலே, தண் தாமரை சுமக்கத் தோள்வளையும் குழையும் திருச்செய்யமுடியும் ஆரமும் படையும் திகழும் பொன் மேனியும் செஞ்சுடர்த் தாமரைக் கண்ணுமாய், அணிநிறமூர்த்தி ஈதென்னும்படி இரண்டையும் தன்னிறம் ஆக்குகிற செய்யாளான வித்யையோடே அருக்கன் மேவின சதா த்யேய தேஜஸ்ஸின், ஸாமரச உத்கான நாமம் உள்ளுறையான ஆதி அந்தங்களாலே ஓர் ஆயிரமாமவற்றிலே ஒன்றை, ஆயிர முகத்தினால் அருளின தீர்த்தம் போலே, தீர்த்தங்கள் ஆயிரமுமாக விஸ்தரிக்கிறார் என்று வேதகுரு உபதேசம்.[1]

என்பது சூத்திரம்.

---

1. 'புரவி எழ் ஒருகாலுடைய' (தேரிலே) என்றது, சூரியனுடைய தேருக்கு அடைமொழி. அதற்குமேல் 'திருச்சக்கரம் ஒத்து' என்றது முதல் 'மண்டலத்திலே' என்றது முடிய உள்ள வாக்கியங்கள், சூரிய மண்டலத்தைப் பற்றிக் கூறுவன. அதற்குமேல் 'தண்டாமரை' என்றது முதல் 'ஸதா த்யேய தேஜஸ்ஸின்' என்றது முடிய உள்ள வாக்கியங்கள், சூரிய மண்டலத்தில் எழுந்தருளியிருக்கின்ற இறைவனைப் பற்றிக் கூறுவன. அதற்குமேல் 'ஸாமரச' என்றது முதல் விஸ்தரிக்கிறார்' என்றது முடிய உள்ளவை, திருவாய்மொழி சாந்தோக்ய உபநிடதம் என்பதற்குக் கூறும் காரணங்கள். செங்கோல் நடாவி, ஒளி சுருக்கி, ஊற்றும் செந்தீயும் தலைவாசலும் கண்மணியும் திரயீமயமும் ஆன எட்டுத் தன்மைகளோடு கூடின சூரியமண்டலம் என்க. அத்தகைய மண்டலத்திலே தண்தாமரை சுமக்கும்படி, தோள்வளையும் குழையும் திருச்செய்ய முடியும் ஆரமும் படையும் பொன்மேனியும் தாமரைக் கண்ணும் உடையதாய். செய்யாளான வித்யையோடே அருக்கனை மேவின தேஜஸ் என்க. தேஜஸ்-பேரொளிப் பிழம்பான இறைவன். அவனுடைய நாமம் சாமரசமான 'உத்' என்பது.



வியாக்:—"உத்கீத பிரணவத்தைப் பிரதமத்திலே மாருடி" என்று மேலே அருளிச்செய்ததன் கருத்தினை ஒரு பெரியார் அறிவுரை மூலமாக அறிவிக்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, புரவி ஏழ் ஒரு கால் உடைய தேரிலே - [1]"காரார் புரவி ஏழ் பூண்ட தனி ஆழி" என்றும், [2]"ஒரு கால் உடைய தேர்" என்றும் சொல்லுகிறபடியே காயத்ரீ, பிருஹதீ, உஷ்ணிக், ஜகதீ, திரிஷ்டுப், அநுஷ்டுப், பங்க்தி: என்கிற சந்தஸ்ஸுக்கள் ஏழும் குதிரைகளாகத் தாங்குகையாலே ஏழு குதிரைகளை யுடையதாய், காலசக்கர மயமான ஒரு சக்கரத்தையு முடையதான தேரிலே என்க. [3]"ஒரு சக்கரத்தையுடைய தேரினை ஏழு குதிரைகள் தாங்குகின்றன" என்றும், [4]"குதிரைகளோ என்றால் ஏழு சந்தஸ்ஸுக்கள்; அவற்றின் பெயர்களை என்னிடமிருந்து கேள்: காயத்ரீ, பிருஹதீ, உஷ்ணிக், ஜகதீ, திரிஷ்டுப், அநுஷ்டுப், பங்க்தி: என்று கூறப்படுகின்ற சந்தஸ்ஸுக்கள்; இவை சூரியனுக்குக் குதிரைகள்." என்றும் வருகின்றவற்றைக் காண்க. [5]"ஏழு பெயர்கள் உள்ள ஒரு குதிரை சூரியன் தேரினைத் தாங்குகின்றது" என்றதன் கருத்தினை அதற்குத் தகுதியாக வியாக்கியானம் செய்யப்பட்ட இடத்திலே கண்டு

---

அந்த 'உத்' என்ற திருப்பெயர் உள்ளுறையான ஆதியந்தங்களாலே ஓராயிரமா மவற்றிலே ஒன்றைத் தீர்த்தங்கள் ஆயிரமுமாக விஸ்தரிக்கிறார் என்பது சூத்திரத்தின் பிண்டப் பொருள். 'அணிநிற மூர்த்தி ஈது என்னும்படி இரண்டையும் தன்னிறமாக்குகிற' என்பது செய்யாளான வித்யைக்கு அடைமொழி. வித்யை - பிராட்டி.

சாந்தோக்ய உபநிடதத்தில் சூரிய மண்டலத்தில் எழுந்தருளியிருக்கின்ற இறைவனைக் குறித்து "ய ஏஷோந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே" என்று தொடங்கி "தஸ்ய உத்இதி நாம" என்று சொல்லியிருப்பதனை முற்றும் தழுவி இச் சூத்திரம் அருளிச்செய்யப்பட்டிருக்கின்றது என்று பெரியோர்கள் கூறுவர்கள்.

1. சிறிய திருமடல். 2. பெரியதிருமொழி, 5. 7: 8.

3. "ஸப்த யுஞ்ஜந்தி ரதம் ஏகசக்ரம்" என்பது, ஆரணம்.

4. ஹயாஶ்ச ஸப்த சந்தாம்ஸி தேஷாம் நாமாநி மே ச்ருணு
காயத்ரீச ப்ருஹத்யுஷ்ணிக் ஜகதீ த்ரிஷ்டுபேவச
அநுஷ்டுப் பங்க்தி: இத்யுக்தா: சந்தாம்ஸி ஹரயோரவே:
என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 2. 8: 4.

5. ஏகோ அச்வோ வஹதி ஸப்தநாமா என்பது, ஆரணம்.

கொள்வது. [1] "நந்நான்கு மாதங்களாகப் பிரிக்கப்பட்ட மூன்று பாகங்களோடு கூடின நாபியை உடையதாய், சம்வத்சரம் பரிவத்சரம் இதாவத்சரம் அநுவத்சரம் இத்வத்சரம் என்று சொல்லப்பட்ட ஐந்து ஆண்டுகளையும் அரங்களாக உடையதாய், இளவேனில் முதுவேனில் கார் கூதிர் முன்பனி பின்பனி என்னும் ஆறு பெரும் பொழுதினையும் நேமியாக உடையதாய், இடையறுது ஒழுகும் பெருவெள்ளம் போன்று அழிவற்றதான கால சக்கரத்திலே, [2] "எல்லாம் அடங்கியிருக்கின்றன" என்கையாலே, ஒரே சக்கரமான இது, காலசக்கரம் என்று சொல்லும்படியாக அன்றோ இருக்கிறது, ஆக, இப்படி இருந்துள்ள ஏழு குதிரைகளையும் ஒரு சக்கரத்தையு முடையது ஆகையாலே மற்றையவற்றினும் வேறுபட்டிருக்கின்ற பெருமையை யுடைய தேரிலே என்றபடி.

இனி, 'திருச் சக்கரம் ஒத்து' என்றது முதல் 'த்ரயீமயமுமான மண்டலத்திலே' என்பது முடிய, சூரியமண்டலத்தை வர்ணிக்கிறது- திருச் சக்கரம் ஒத்து - [3] "அம் மேருவில் செஞ்சுடரோன் திருமால் திருக்கைத் திருச் சக்கரம் ஒக்கும்" என்கிறபடியே வட்டமான வடிவாலும் பேரொளி விசேடத்தாலும் திரு ஆழியோடு ஒத்திருக்கை. கால சக்கரச் செங்கோல் நடாவி - [4] "அகல் விசும்பும் நிலனும் இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர்" என்கிறபடியே இரண்டு உலகங்களிலும் சர்வேச்வரன் தன் ஆணையை நடத்துவதற்குக் கருவியான திரு ஆழியைப் போலே, [5] "கால சக்கரத் தாய்" என்கிறபடியே கால சக்கரத்தைச் செலுத்துகின்றவனுடைய கால சக்கர விஷயமான ஆணையை, [6] "தனிவளர் செங்கோல் நடாவு தழல்வாய் அரசு" எனகிறபடியே (சூரியனுகிற தான்) நடத்துதல். ஜ்யோதிச் சக்கர ஒளி சுருக்கி - [7] "சுடர் ஒளி பரந்தன சூழ்திசை எல்லாம்" என்கிறபடியே, எல்லாத் திசைகளிலும் பரந்திருக்கின்ற

---

1. த்ரிநாபி மதிபஞ்சாரே ஷண்ணேமிர்யக்ஷயாத்மகே
ஸம்வத்ஸர மயே க்ருத்ஸநம் காலசக்ரே ப்ரதிஷ்டிதம்.
என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 2. 8: 3.

நாபி - சக்கரத்தின் மத்தியிலுள்ள குடம். அரம் - ஆரக்கால். நேமி- வட்டை.

2. "ஸர்வம் ப்ரதிஷ்டிதம்" என்பது பிரமாணம்.

3. திருவிருத்தம், 88.
4. திருவிருத்தம், 33.
5. திருவாய். 7. 2: 7.
6. திருவிருத்தம், 13.
7. திருப்பள்ளியெழுச்சி, 3.



தன்னுடைய ஒளியின் மிகுதியாலே [1] "துன்னிய தாரகை மின் ஒளி சுருங்கி" என்கிறபடியே நக்ஷத்திரங்கள் முதலானவற்றின் ஒளியைக் குறையச் செய்து;

அக்நீ ஷோமீய தேஜ அம்ருதத்துக்கு ஊற்றும் - அக்நீ தேஜஸ்ஸுக்கு ஊற்றும், ஸோமீய அம்ருதத்துக்கு ஊற்றும் என்று இவ்வாக்கியத்தைப் பிரித்துக் கூட்டுக. [2] "சூரியன் மாலை நேரத்தில் நெருப்பினுள் புகுகின்றுன்; ஆகையால், நெருப்பு தூரத்திலே இரவிலே காணப்படுகிறது; இந்த இரண்டு ஒளிகளும் சேர்கின்றன." என்றும், [3] "சூரியன் மறையும் காலத்தில் சூரியனுடைய ஒளியானது நெருப்பில் புகுகின்றது; ஆதலால், இரவில் நெருப்பானது தூரத்திலே பிரகாசிக்கின்றது." என்றும் சொல்லுகிறபடியே சூரியன் மறையும் காலத்தில் தன்னுடைய ஒளியை நெருப்பிலே புகுவித்து இரவிலே நெருப்பிற்கு ஒளியை உண்டாக்குகையாலே நெருப்பினுடைய ஒளிக்கு ஊற்று என்கிறது. [4] "ஓ மைத்ரேயரே! தேவர்களால் அமிர்தத்தைப் புசிக்கப்பட்டவனும் அதனுல் கலைகள் குறைந்தவனும் ஒருகலைமாத்திரமுள்ளவனுமான சந்திரனை ஒளியுள்ள சூரியன் சுஷும்நை என்னும் ஒரு கிரணத்தாலே வளரும்படி செய்கிறுன்; தேவர்களால் எம்முறையில் இந்தச் சந்திரன் புசிக்கப்பட்டானே அம்முறையிலே சூரியனுல் ஒவ்வொரு நாளும் வளர்க்கப்படுகிறுன்." என்கிறபடியே, கிருஷ்ணபக்ஷத்தில் பிரதமை முதல் சதுர்த்தசி முடிய நாள் ஒன்றுக்கு ஒரு கலையாக அமிருதமயமான பதினுன்கு கலை

---

1. திருப்பள்ளியெழுச்சி, 3.

2. "அக்நிம் வாவாதித்ய: ஸாயம் ப்ரவிசதி
தஸ்மாத் அக்நிர் தூராத் நக்தம் தத்ருசே
உபேவா தேஜஸீ ஸம்பத்யேதே"
என்பது, அஷ்டகம், 2.

3. "ப்ரபா விவஸ்தோ ராத்ரௌ அஸ்தம் கச்சதிபாஸ்கரே
விசத்யக்நிமதோ ராத்ரௌ வஹ்நிர் தூராத் ப்ரகாசதே"
என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 2. 8: 20.

4. க்ஷீணம்பீதம் ஸுரைஸ்ஸோமம் ஆப்யாயயதி தீப்திமாந்
மைத்ரேயைககலம் ஸந்தம் ரச்மிநைகேந பாஸ்கர:
க்ரமேணயேந பீதோஸௌ தேவைஸ்தேந நிசாகரம்
ஆப்யாயயத்யநுதிநம் பாஸ்கரோ வாரிதஸ்கர:
என்பது, ஸ்ரீ விஷ்ணுபுரா. 2. 12: 3.

கலையும் தேவர்கள் புசிக்க, பதினைந்தாவது கலையை அமாவாசையன்று மாலை நேரத்திலே பிதிரர்கள் புசிக்க, இப்படிக் கலைகள் குறைந்த சந்திரனுக்குச் சுக்கிலபக்ஷத்துப் பிரதமை முதல் நாள் ஒன்றுக்கு ஒரு கலையாக பௌர்ணமி முடியப் பதினைந்து கலைகளையும் தன்னுடைய கிரணங்களாலே வளரச் செய்கையாலே **'சந்திரனுடைய அமிர்தத்துக்கு ஊற்று'** என்கிறது. ஆக, இப்படி நெருப்பினுடைய ஒளிக்கும் சந்திரனுடைய அமிருதத்துக்கும் பிறப்பிடமாய் இருப்பான் சூரியன் என்கை.

மந்தேகர்க்குச் செந்தீயும் - மந்தேகர்க்கு எரிகின்ற நெருப்பாக இருக்கும் என்கை. மந்தேகர் என்பார் இராக்கதர்களில் சிலர்; இவர்கள் சந்தியா காலத்திலே சூரியனுடைய தேரினைப் பற்றிக்கொண்டு போகவொட்டாமல் சூரியனோடே பெரிய போரைச் செய்து அவனைக் கொல்லத் தொடங்குவார்கள்; அவ்வளவிலே பிராமணர்கள் காயத்திரி மந்திரத்தாலே மந்திரிக்கப்பட்ட தண்ணீரை மேலே தூக்கி எறிய, காயத்திரி மந்திரத்தால் மந்திரிக்கப்பட்ட அந்தத் தண்ணீரின் சக்தியாலே சூரிய மண்டலத்திலே எரிந்துகொண்டு தோன்றின சிவந்த நெருப்பிலே விழுந்து முடிந்து போவர்கள் என்பதனைக் கூறியபடி. [1]"மீண்டவற்றுள் எரிகொள் செந்தீ வீழ் அசுரரைப் போல" என்பது ஆழ்வார் அருளிச்செயல். ஆகையால் மந்தேகர்க்கு எரிகின்ற அக்கினியா யிருக்கும் என்கிறது.

இராக்கதர்களான மந்தேகர்களை இத்திருபாசுரத்தில் அசுரர்கள் என்று ஆழ்வார் அருளிச்செய்தது, [2]"தானவன் ஆகம் தரணியில்" என்றும், [3]"தானவன் வாள் அரக்கன்" என்றும் அருளிச்செய்தது போன்று அசுரத்தன்மை வாய்ந்தவர்கள் ஆகையாலே என்க.

[4]"ஆகையாலேதான் இந்த வேதாத்யயனம் செய்தவர்கள் சந்தியா காலத்திலே கிழக்கு முகமாக இருந்துகொண்டு காயத்திரியினால் மந்திரிக்கப்பட்ட தண்ணீரை மேல்தூக்கி எறிகிறார்கள்."

---

1. *திருவிருத்தம்*, 82. 2. *பெரிய திருமொழி*, 1. 4: 1

3. *பெரியதிருமொழி*, 2. 2: 2.

4. *ததுஹ்வா ஏதே ப்ரஹ்மவாதிந: பூர்வாபிமுகா:*
*ஸந்த்யாயாம்காயத்ரியா அபிமந்த்ரிதா ஆப ஊர்த்த்வம்விக்ஷிபந்தி.*

என்பது, **ஆரணம்.**



என்றும், [1]"பயங்கரமும் மிகக் கொடுமையும் வாய்ந்த சந்தியா காலம் வந்தபோது கொடியவர்களான மந்தேஹர் என்ற இராக்கதர்கள் சூரியனைக் கொல்ல விரும்புகின்றனர்; மைத்ரேய முனிவரே! சரீரத்துக்குக் குறைஇல்லாத தன்மையும் நாள்தோறும் மரணமும் என்னும் இவ்விரண்டும் பிரமனால் அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட சாபம் ஆகும்; அதனால், சூரியனுக்கும் அந்த இராக்கதர்களுக்கும் மிக்க பயங்கரமான போர் உண்டாயிற்று; மஹாமுனிவரான மைத்ரேயரே! அதற்காகப் பிராமணோத்தமர்கள் ஓங்காரத்துடன் கூடின காயத்திரியினால் மந்திரிக்கப்பட்ட தண்ணீரை மேல் தூக்கி விடுகிறார்கள்; வச்சிரமாக மாறுகின்ற அந்தத் தண்ணீரால் அந்தப் பாவிகள கொல்லப்படுகிறார்கள்." என்றும் பிராமணர்கள் இங்கு மேல்தூக்கி எறிகிற அந்தத் தண்ணீரே வச்சிரமாக மாறி அந்த இராக்கதர்களை அழிக்கின்றது என்று வேதத்திலும் புராணத்திலும் சொல்லப்படுகையாலும் மந்திரிக்கப்பட்ட அந்தத் தண்ணீர் சூரியமண்டலத்தையும் எரியச் செய்து, அணுகச் செல்லில் அழியும்படியாகச் செய்யும் என்றும் சொல்லலாம்.

முத்திமார்க்கத் தலைவாசலும் - அதாவது, அர்ச்சிராதிகதியாகிற முத்திநெறியாலே போமளவில் [2]"அக்நியையே அடைகிறார்கள்" என்பது போன்றவைகளால் கூறப்படுகின்றவாறே அக்நி முதலான

---

1. *"ஸந்த்யா காலேது ஸம்ப்ராப்தே ரௌத்ரே பரமதாருணே*
*மந்தேஹா ராக்ஷஸா கோரா: ஸூர்யமிச்சந்தி காதிதும்*
*ப்ரஜாபதிக்ருதச்சாப: தேஷாம் மைத்ரேயரக்ஷஸாம்*
*அக்ஷயத்வம் சரீராணாம் மரணம்ச திநேதிநே*
*ததஸ் ஸூர்யஸ்ய தேஷாம் வை யுத்தமாஸீத் ஸுதாருணம்*
*ததோ த்விஜோத்தமாஸ்தோயம் ப்ரக்ஷிபந்திமஹாமுநே*
*ஓங்கார ப்ரஹ்மஸம்யுக்தம் காயத்ரியா சாபிமந்த்ரிதம்*
*தேநதஹ்யந்தி தேபாபா வஜ்ரபூதேந வாரிணா."*

என்பது, **ஸ்ரீ விஷ்ணுபுரா.** 2. 8: 48.

*கருதி யந்தணர் யாவரும் தம் கடன் கழிப்பச்*
*சுருதி என்னும் மெய்ச் சாபமே லம்புகை தொடுத்துப்*
*பருதி தன் பெரும் பகைவர்மேல் விடுத்தலின் பரந்த*
*குருதி யாமென நிவந்தெழச் சிவந்தது குடபால்.*

*தரங்க வாரிதிப் புறத்தெதிர் மலைந்த வெம்சமரில்*
*உரங்கொள் கூர்நெடும் படைகளால் உடன்ற மந்தேகர்*
*துரங்கம் எழுடைக் கடவுளை நிரைநிரை துணித்த*
*கரங்கள் போன்றன கரைதொறும் வளர்துகிர்க் காடு.*

என்பன, வில்லி பாரதம்.

2. *"அர்ச்சிஷ மேவாபிஸம் பவந்தி"* என்பது, பிரமாணம்.

வர்களைச் சென்று கிட்டிப் போகிற அளவு அன்றிக்கே, [1] "சூரியனுடைய மண்டலத்தைப் பிளந்துகொண்டு" என்றும், [2] "தேரார் நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டு புக்கு" என்றும், [3] "வெங்கதிர்ப்பருதி வட்டத்தூடு போய்" என்றும் சொல்லுகிறபடியே இம்மண்டலத்தூடே போகையாலும், அண்டகடாகத்தைப் பிளந்துகொண்டு புறப்படுமதற்கு முற்பட்டதாகையாலும் சூரியமண்டலத்தை முத்திநெறிக்குத் தலைவாசல் என்கிறது.

கண்ணுவான் கண்ணில் பிறந்த கண்மணியும் - [4] "கண்ணுவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு", [5] "விண்ணோர்க்கும் மண்ணோர்க்கும் கண்ணுவான்" என்கிறபடியே எல்லார்க்கும் கண் போன்றவனாக இருக்கிற சர்வேச்வரன் கண்ணிலே [6] "பகவானுடைய கண்ணிலிருந்து சூரியன் உண்டானான்" என்கிறபடியே தோன்றி, [7] "உலகத்திற்கெல்லாம் கண்ணாக இருப்பவன்" என்கிறபடியே உலகத்துக்குக் கண்போன்றவனாக இருக்கும் என்கை.

திரயீமயமுமான மண்டலத்திலே - [8] "வேதமயமான" என்கிறபடியே வேதமயமாய் இருக்கிற சூரியமண்டலத்திலே என்கை. இதனால், [9] "தாமரை ஆசனத்தில் வீற்றிருப்பவனும் தோள்வளைகளையுடையவனும் மகரகுண்டலங்களையுடையவனும் கிரீடமுடையவனும் ஆரத்தைத் தரித்திருப்பவனும் பொன்மயமான திருமேனியையுடையவனும் திருவாழி திருச்சங்குகளைத் தாங்கியிருப்பவனும் ஆன

1. "தத் பித்வா ஸூர்ய மண்டலம்" என்பது, பிரமாணம்.
2. சிறியதிருமடல். 3. பெரியதிருமொழி, 4. 5: 10.
4. திருவாய். 1. 8: 3.
5. "சக்ஷுர் தேவாநாமுதமர்த்யாநாம்" என்பது யஜுர்வேதம்.
6. "சக்ஷோஸ் ஸூர்யோ அஜாயத" என்பது புருஷசூக்தம்.

எண்ணில் திகிரிப் பிறப்பிடமானதும், எண்ணுமவர்
நண்ணிச் சிறக்க இருப்பிடமானதும், நாசமில்லா
விண்ணின் பதிக்குக் கடைத்தலையானதும், விண்ணவர்தம்
கண்ணில் சிறந்ததும் மாநீர் அரங்கர்தம் கண்ணில் ஒன்றே.

என்பது, திருவரங்கத்து மாலை.

7. "ஜகதேக சக்ஷுஷே" என்பது, பிரமாணம்.
8. "த்ரயீமயாய" என்பது, பிரமாணம்.
9. "த்யேய: ஸதா ஸவித்ருமண்டல மத்யவர்த்தி
நாராயண: ஸரஸிஜாஸந ஸந்நிவிஷ்ட:
கேயூரவாந் மகரகுண்டலவாந் கிரீடீ
ஹாரீ ஹிரண்மயவபு: த்ருதசங்கசக்ர:"

என்பது, சாந்தோக்யம்.



நாராயணன் எப்பொழுதும் சூரியமண்டலத்தின் நடுவில் இருப்பவனாகத் தியானம் செய்யத் தக்கவன்" என்கிற இதில் அவன் எழுந்தருளியிருக்கின்ற சூரிய மண்டலத்தை வருணித்தாராயிற்று.

இனி, சூரியமண்டலத்தில் அவன் எழுந்தருளியிருக்கிறபடியை வருணிக்கிறார் 'தண் தாமரை சுமக்க' என்றது முதல் 'அருக்கன் மேவின' என்றது முடிய. தண் தாமரை சுமக்க - [1] "தண் தாமரை சுமக்கும் பாதப் பெருமான்" என்கிறபடியே "ஸரஸிஜாஸந ஸந்நிவிஷ்டனு"யிருக்கையைத் தெரிவிக்கிறது. [2] தோள்வளையும் குழையும்- இத்தால் "கேயூரவாந் மகரகுண்டலவாந்" என்றதனைச் சொல்லுகிறது. [3] திருச்செய்யமுடியும் ஆரமும் படையும்-"கிரீடீ ஹாரீ த்ருத சங்க சக்கர:" என்றதனைச் சொல்லுகிறது. திகழும் பொன்மேனியும்- அதாவது, [4] "ஆரமும் படையும் திகழ" என்கிறபடியே மேலே கூறிய ஆயுத ஆபரணங்கள் எல்லாம் விளங்கும்படி இருப்பதாய், [5] "பொன்மேனி கண்டேன்" என்னும்படி பொன்மயமான திருமேனியும். [6] "சூரியன் நடுவில் பொன்மயமாய் எந்தப் புருஷன் யோகிகளால் காணப்படுகிறானோ அவன் பொன்மயமான மீசையையுடையனும் பொன்மயமான திருக்குழலை யுடையவனும் இருக்கிறான்; அவனுடைய நகம் முதலிய எல்லா உறுப்புக்களும் பொன்மயமானவையே" என்றும், [7] "பொன்மயமான திருமேனி" என்றும் சொல்லப்படுகின்ற தன்றோ.

செஞ்சுடர்த் தாமரைக் கண்ணும் - அதாவது, [8] "அஞ்சுடர வெய்யோன் அணிநெடும் தேர் தோன்றுதால்" என்றதன்பின் 'செஞ்சுடர்த் தாமரைக்கண் செல்வனும் வாரானால்" என்றது, அந்தச் சூரிய மண்டலத்தில் எழுந்தருளியிருக்கின்ற இறைவனை நினைந்தே

1. திருவாய். 4. 5: 8. 2. பெரியாழ்வார் திருமொழி, 1. 5: 10.
3. திருவாய். 8. 4: 7. 4. திருவாய். 8. 4: 7.
5. மூன்றாந்திருவந். 1.
6. மேலே கூறியதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'சூரியன் நடுவில்' என்றும், 'பொன்மயமான' என்றும் தொடங்கி.

ய ஏஷோந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே
ஹிரண்யச்மச்ரு: ஹிரண்யகேச: ஆப்ரணகாத் ஸர்வஏவ ஸுவர்ண:

என்பது, சாந்தோக்யம்.

7. "ஹிரண்மயவபு:" இதனைமேலே 104 ஆம் பக். காண்க.
8. திருவாய். 5. 4: 9.

அன்றே. [1] "காலையில் கதிரவனுடைய ஒளியால் மலர்ந்த தாமரை எங்ஙனம் விளங்குமோ, பரம்பொருளான அந்த நாராயணனுடைய திருக் கண்களும் அங்ஙனமே இருக்கின்றன" என்று வேதம் கூறிய தும் அவ் விருப்பிலே யாம். ஆகையாலே சூரியனுடைய கிரணங் களாலே மலர்ந்த அப்போதைய சிவந்த ஒளியையுடைய தாமரை போன்ற திருக்கண்களுமாய் என்கை.

அணி நிற மூர்த்தி ஈது என்னும்படி இரண்டையும் தன்னிற மாக்குகிற செய்யாளான வித்யை யோடே - அணி நிற மூர்த்தி ஈது என்னும்படி - [2] "திருக்கண்டேன்" என்று முதலிலே பிராட்டியாகிய தன்னைக் கண்ட பின்பு [3] "பொன் போன்ற வடிவை" என்னும்படியா யிருக்கிற அவன் திருமேனியைக் கண்டு "பொன்மேனி கண்டேன்" என்றிருக்கச் செய்தேயும், பிராட்டியாகிற தன் திருமேனி நிறத்தின் பரப்பிலே இளவெயில் கலந்தாற் போலே விளங்கிக் காட்சிக்கு இனிய தாய் இருக்கிற அவன் திருமேனி நிறத்தைக் கண்டு, "திக்கும் அருக்கன் அணிநிறமும் கண்டேன்" என்னும்படியாகவும், [4] "செய்ய தோர் ஞாயிற்றைக் காட்டிச் சிரீதரன் மூர்த்தி ஈது என்னும்" என்று, அந்தச் சூரியமண்டலத்தில் வசிக்கின்றவளான தன்னுடைய திரு மேனியின் ஒளியின் பரப்பாலே சிவந்த ஒளியாலே ஒப்பற்றதாய் இருக்கிறபடியைக் கண்டு ஸ்ரீதரனுடைய வடிவு இது என்று கலங்கிச் சொல்லும்படியாகவும், இரண்டையும் தன் நிறமாக்குகிற - இறைவ னுடைய திருமேனியும் சூரியமண்டலமும் ஆகிற இரண்டையும் தன் நிறமாம்படி செய்கிற, செய்யாளான வித்யையோடே - சிவந்த நிறத்தை யுடையவள் ஆகையாலே [5] "பொன்னிறமான நிறமுடைய வளே" என்பது போன்ற பிரமாணங்களின்படியே [6] "கமலமலர் மேல் செய்யாள்" என்று நிருபகமாம்படி இருப்பாளாய், [7] "வித்யை என்று சொல்லப்பட்ட பிராட்டியுடன் கூடியவனும் வித்யையைக்

1. 'செஞ்சுடர்த் தாமரைக்கண்' என்பதற்குப் பிரமாணம் காட்டு கிறார் 'காலையில்' என்று தொடங்கி.

"தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ"

என்பது, சாந்தோக்யம்.

2. மூன்றாந் திருவந். 1.
3. "ருக்மாபம்" என்பது பிரமாணம்.
4. திருவாய். 4. 4: 2.
5. "ஹிரண்யவர்ணாம்" என்பது, ஸ்ரீசூக்தம்.
6. திருவாய். 9. 4: 1.
7. "வித்யாஸஹாயமாதித்ய ஸமஸ்தம் வித்யாப்ரஸாதகம்" என்பது பிரமாணம்.



கொடுப்பவனும் சூரியனிடம் இருப்பவனுமான பகவானை" என்றும், [1] "பிராட்டியைத் துணையாக வுடையவனும் சூரியனிடமிருப்பவனும் என்றும் உள்ளவனுமான என்னை" என்றும் சொல்லுகிறபடியே வித்யை என்ற சொல்லிற்குப் பொருளாக உள்ள பிராட்டியோடு கூட;

அருக்கன் மேவின - அதாவது, [2] "வானிடை அருக்கன் மேவி நிற்பாற்கு" என்கிறபடியே சூரியமண்டலத்தின் நடுவில் வசிக்கின்ற வனை, [3] "ய ஏஷோந்தராதித்யே - சூரியன் நடுவில் எந்தப் புருஷன் பொன்மயமாய் யோகிகளால் காணப்படுகிறானோ" என்றதனைச் சொல்லுகிறது. ஸதா த்யேய தேஜஸ்ஸின் - [4] "ஸதா த்யேய: - சூரியமண்டலத்தின் நடுவில் இருப்பவனாக எப்பொழுதும் தியானம் செய்யத் தக்கவன்" என்கிறபடியே எல்லாக்காலமும் தியானம் செய் வார்க்கு விஷயமாய், [5] "பிரஹ்மம் என்ற பெயர் உள்ள பறவை பொன் நிறமுள்ளது; எந்த ஒளியால் சூரியன் பிரகாசிக்கப்பட்டவ னாய்க் கொண்டு விளங்குகிறானோ" என்றும், [6] "உலக காரணனான பகவானுடைய உபாசிக்கத்தக்க அந்த ஒளியைத் தியானம் செய் கிறோம்" என்றும், [7] "வேதங்களிலே சொல்லப்பட்டதாயும் சிறந்த தாயும் உபாசிக்கத் தக்கதாயும் உள்ள சூரியன் சம்பந்தப்பட்ட ஒளி யாக வேதங்கள் சொல்லுகின்றன; உயர்ந்த ஒளியாலே விரல் நுனி வரையிலும் பொன்னாகவும் தாமரைக்கண்ணனாகவும் சொல்லு கின்றன" என்றும் சொல்லுகிறபடியே பேரொளி மயமாயிருக்கிற பகவானுடைய, சாம ரச உத்கார நாமம் உள்ளுறையான ஆதி அந்தங்களாலே - அதாவது, [8] "சாமத்துக்கு உத்கீதம் ரசமாகும்" என்கையாலே சந்தோக சாமத்துக்குச் சுவையாக இருந்துள்ள உத்கா னம் உண்டு-உத்கீதம்; அதில் 'உத்' என்று சொல்லப்பட்ட [9] "அந்த சந்தோக சாமத்தில் சொல்லப்பட்ட உத் என்ற இந்தத் திருநாமம்" இத் திருவாய்மொழிக்கு உள்ளுறை ஆனமை தோற்றும்படியான

1. "வித்யாஸஹாயவந்தம் மாம் ஆதித்யஸ்தம் ஸநாதநம்" என்பது, பிரமாணம்.

2. பெரியதிருமொழி, 2. 1: 7. 3. இதனை 105 ஆம் பக். காண்க.

4. இதனைமேலே 104 ஆம் பக். காண்க.

5. "ஹிரண்மயச் சகுநிர் ப்ரஹ்மநாம, யேந ஸூர்ய: தபதி தேஜ ஸேத்த:" என்பது காடகம்.

6. "தத்ஸவிதுர் வரேண்யம் பர்க்க:" என்பது காயத்ரி.

7. "தேஜ: பரம்தத் ஸவிதுர் வரேண்யம் தாம்நா பரேணாப்ரணகாத் ஸ்வர்ணம்" என்பது ஸ்ரீரங்கராஜஸ்தவம் உத். சத. 79.

8. இதனை மேலே 95 ஆம் பக். காண்க. 9. தஸ்யஉதிதிநாம: என்பது.

ஆதியையும் முடிவினையும் உடைத்தாய் இருக்கையாலே என்கை என்றது, முதலில் "உயர்வு" என்று எடுத்து "உயர்ந்தே" என்று முடிக்கையாலே 'உகரம்' முதலும் 'தகரம்' முடிவுமாய் அன்றோ திருவாய்மொழி அமைந்து இருக்கிறது என்றபடி. 'ஆதி அந்தங்களாலே' என்றது, மேலே சொல்லுகிறதற்குக் காரணம் இது என்று தோற்றுகைக்காக,

ஓர் ஆயிரமாம் அவற்றிலே ஒன்றை - அதாவது, [1] "ஓராயிரமாய் உலகேழ் அளிக்கும் பேராயிரம்" என்கிறபடியே ஒரு திருப்பெயரே ஆயிரமுகமாக நின்று உலகத்தைப் பாதுகாக்க வல்ல திருப்பெயர்களிலே ஒரு திருப் பெயரை, ஆயிரமுகத்தினால் அருளின தீர்த்தம் போலே - [2] "ஆயிரமுகத்தினால் அருளி மந்தரத்து இழிந்த கங்கை" என்கிறபடியே கங்கை தானும் ஒன்றாய் இருக்க, உலகத்தின் தூய்மையின் பொருட்டு ஆயிரமுகமாகப் பெருக்கெடுத்து ஓடுமாறு போலே, தீர்த்தங்கள் ஆயிரமுமாக விஸ்தரிக்கிறார் என்று வேதகுரு உபதேசம் - [3] "தீர்த்தங்கள் ஆயிரம்" என்கிறபடியே உலகத்திலே மிகச் சிறந்தனவான ஆயிரம் திருப் பாசுரங்களாக விரிக்கிறார் என்று வேதாசார்ய பட்டர் உபதேசித்தருளும்படி.

'விஸ்தரிக்கிறார்' என்பதற்குரிய வினைமுதலை ஒருவரால் செய்யப்படாத தன்மைக்கு முரண் ஆகாதவாறு [4] மேலே கூறியவாறே கொள்க.

ஆக, "எவ் உலகத் தெவ்வெவையும்" என்ற சூத்திரமுதல் (39) இச் சூத்திரம் இறுதியாக, இவ் ஆழ்வார் அருளிச்செய்த நான்கு பிரபந்தங்களும் நான்மறைகள் என்பதனையும், இந் நான்மறைகட்கும் அங்க உபாங்கங்கள் இவை என்பதனையும், வேதங்கட்குச் சொல்லப்பட்ட சாஸ்திரத்வம் முதலான இலக்கணங்கள் இந்நான் மறைகட்கும்உண்டு என்பதனையும்,இவற்றை இவர் அருளிச்செய்தார் என்றதனால் இவற்றினுடைய என்றுமுளவாம் தன்மைக்கும் இவை ஒருவரால் செய்யப்படாதவை என்று கூறுவதற்கும் ஒருவித குற்றமும் சாராமையையும், இவற்றில் இன்ன பிரபந்தம் இன்ன வேதத்தோடு ஒக்கும் என்னுமதனையும், அவற்றில் சாமவேதத்தோடு ஒக்கும் என்ற திருவாய்மொழி சாமவேதத்தில் சிறந்ததான சந்தோக சாம உபநிடதத்தை ஒக்கும் என்னுமதனையும் அருளிச் செய்தாராயிற்று. (53)

1. திருவாய். 9. 3: 1.
2. பெரியதிருமொழி, 1. 4: 7.
3. திருவாய். 7. 10: 11.
4. மேலே 83 ஆம் பக். காண்க.



## 54

அன்றிக்கே ஸ்வரூப குண விபூதி சேஷ்டிதங்களை விசதமாக்குகிற பஞ்சராத்ர புராண இதிகாசங்கள் போலே, நீல பாரூப உக்தி தெரியச் சொன்ன வேத உப பிர்ம்ஹணம் என்பர்கள்.

என்பது சூத்திரம்.

**வியாக் :**—ஆக, இப்படி இப்பிரபந்தங்கள் நான்கற்கும் வேதங்களோடு உள்ள ஒப்புமையை அறுதியிட்டார் மேல். இங்ஙன் அன்றிக்கே, இவற்றிற்கு வேத உபபிரும்ஹணத்தோடு ஒப்புமையும் சொல்லுவர்கள் என்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, அன்றிக்கே - இப்படி வேதத்தோடு ஒப்புமை சொல்லுகை அன்றிக்கே. ஸ்வரூப குணங்களை விசதமாக்குகிற பஞ்சராத்ரம்போலே - பகவானுடைய சொரூபம் உருவம் குணம் உலகங்கள் செயல்கள் இவ் வனைத்தும் ஒருசேரப் பேசப்படுகின்ற வேதத்தில், [2] "ஞானேந்திரியங்களுக்கு அப்பாற்பட்டது, கை முதலிய உறுப்புக்களால் அறியத் தகாதது, கோத்திரம் இல்லாதது, பிராமணன் முதலிய சாதி இல்லாதது, கண் காது முதலிய ஞானேந்திரியங்கள் இல்லாதது, கை கால் முதலிய கர்மேந்திரியங்கள் இல்லாதது, என்றுமுள்ளது, எல்லா இடத்திலும் பரந்துள்ளது, எல்லாப் பொருள்களின் உள்ளும் பிரவேசித்திருப்பது, மிக நுட்பமானது, இப்படிப் பட்டது எதுவோ அது அக்ஷரம் என்ற சொல்லால் சொல்லப்பட்டது, பிரமஞான முடையவர்கள் யாதொரு அக்ஷரத்தை உலகத்திற்குக்

1. இச்சூத்திரத்தை, ஸ்வரூப குணங்களை விசதமாக்குகிற பஞ்சராத்திரம்போலேயும், விபூதியை விசதமாக்குகிற புராணங்கள்போலேயும், சேஷ்டிதங்களை விசதமாக்குகிற இதிகாசங்கள் போலேயும், நீல பாரூப உக்தியைத் தெரியச்சொன்ன (இத்திருவாய் மொழியை) வேத உப பிரும் ஹணம் என்பர்கள் என்று பிரித்துக் கூட்டிப் பொருள் காண்க. பஞ்சராத்ரம் — இறைவனால் சொல்லப்பட்டதொரு ஆகமம்.

புராணங்கள் என்றது, ஸ்ரீவிஷ்ணுபுராணம், ஸ்ரீபாகவதம் முதலாயினவற்றை. இதிகாசங்கள் என்றது, ஸ்ரீ ராமாயணம், மஹாபாரதம் என்பனவற்றை. உபபிரும்ஹணம் என்பது, வேதத்தின் பொருளை விரித்துக் கூறுவது.

2. "யத்ததத்ரேச்யமக்ராஹ்யமகோத்ரமவர்ண
மசக்ஷுச் ச்ரோத்ரம் தத்பாணிபாதம்
நித்யம் விபும் ஸர்வகதம் ஸுஸூக்ஷ்மம் தத்வ்யயம்
யத்பூத யோநிம் பரிபச்யந்தி தீரா:"

என்பது, முண்டகோபநிடதம்.

காரணமாகப் பார்க்கிறார்களோ.'' என்றும், [1] ''பிரஹ்மமானது என்றும் நிலைத்துள்ளது, ஞானமயமானது, தேச காலம் முதலியவை களால் அளவிடப்படாதது.'' என்றும், [2] ''ஒருவித செயலும் இல்லாதது, பசி முதலானவை இல்லாதது, பழிக்கப்படாதது, குற்றம் இல்லாதது, தீய குணங்கள் இல்லாதது'' என்றும் வருகின்ற இன்னோரன்ன வாக்கியங்களால் சொல்லப்படுகின்ற சொரூபத்தையும்,

[3] ''எந்த அக்ஷர பிரஹ்மம் எல்லாவற்றையும் அறிந்ததோ, எல்லாப் பொருள்களின் வகைகளையும் அறிந்ததோ'' என்றும், [4] ''இந்தப் பரமாத்மாவினுடைய பலவிதமான சக்தியும் ஞானம் பலம் நியமனம் என்னும் இவைகளும் உயர்ந்தவைகளாகவும் இயற்கையிலே அமைந்தவையாகவும் கேட்கப்படுகின்றன'' என்றும், [5] ''நித்தியமான விருப்பங்களை யுடையவன், நித்தியமான சங்கல்பத்தை யுடையவன்'' என்றும் வருவன போன்றவைகளால் சொல்லப்படுகிற குணங்களையும்,

[6] ''உயர்ந்த அந்தப் பரம்பொருளின் சொரூபத்தை என்னிடமிருந்து கேள்; சூக்ஷ்மமானது, எல்லாம் அறிந்தது, அப்படியே எல்லாவற்றையும் தாங்குகிறது, ஞானமே சொரூபமானது, முதலும் முடிவும் இல்லாதது, விவகாரம் இல்லாதது, தூக்கம் இல்லாதது, கண் காது இல்லாதது, ஊறு (ஸ்பரிசம்) இல்லாதது, கை கால்கள் இல்லாதது, என்றுமுள்ளது, பெயர் சாதி முதலியவைகள் இல்லாதது, வர்ணமில்லாதது, முக்குணம் இல்லாதது, எல்லாவற்றையும் காதாக உடையது, எல்லாவற்றையும் கண்ணாக உடையது, எல்லாவற்றை

---

1. ''ஸத்யம் ஜ்ஞாநம் அநந்தம் பிரஹ்ம''
என்பது, தைத்ரீயோபநிடதம்.

2. ''நிஷ்கலம் நிஷ்க்ரியம் சாந்தம் நிரவத்யம் நிரஞ்ஜநம்''
என்பது, சுவேதாச்வதரம்.

3. ''யஸ்ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்,''
என்பது, முண்டகோபநிடதம்.

4. ''பராஸ்ய சக்தி: விவிதைவச்ரூயதே
ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியாச''
என்பது, சுவேதாச்வதரம்.

5. ''ஸத்ய காம: ஸத்ய ஸங்கல்ப:''
என்பது, சாந்தோக்யோபநிடதம்.

6. ''ச்ருணு தத்பரமம் சூக்ஷ்மம் ஸர்வஜ்ஞம் ஸர்வப்ருத்ததா
ஜ்ஞாநரூபம் அநாதி அந்தம் அவிகாரி நிராமயம்
அசக்ஷுச் ச்ரோத்ரம் அஸ்பர்சம் அபாணி சரணம் த்ருவம்
நாமஜாதி ஆதிரஹிதம் அவர்ணம் அகுணம் த்வபி
விச்வச்ரவோ விச்வசக்ஷு: விச்வபாணி பதம்பரம்



யும் கைகளாகவும் கால்களாகவும் உடையது, பற்றற்றது, சஞ்சாரம் இல்லாதது, சாந்தமானது, தானே பிரகாசமாக இருப்பது, ஒப்பு இல்லாதது, சேய்மையில் உள்ளது, அருகில் இருப்பது, ஞானத்தால் அடையத்தக்கது, குற்றம் இல்லாதது, பூதங்களைத் தாங்குவது, எல்லாரிடமும் சமமானது, ஒளிமயமான பொருள்களுக்கெல்லாம் ஒளியாக இருப்பது, பிரகிருதி மண்டலத்துக்கு மேற்பட்டது, அழிவு இல்லாதது, எல்லாப் பொருள்களிடமும் இருப்பது, அந்த விஷ்ணுவினுடைய உயர்ந்த சொரூபம்'' என்பது போன்றவைகளாலும்,

[1] ''குற்றம் இல்லாதவரே! நாரதரே! பிரகிருதி சம்பந்தமான குணம் இல்லாமையால் பரம்பொருள் 'நிர்க்குணம் - குணமில்லாதது' என்று சொல்லப்படுகிறது. என்றால் சொல்லப்படுகிற ஆறு குணங்களையும் கேள்: பரம்பொருளினுடைய கல்யாண குணங்களைத் தியானிக்கின்ற பெரியோர்கள், அறிவுடையதும் தானே பிரகாசித்துக் கொண்டிருப்பதும் எல்லாப் பொருள்களையும் பற்றியதும் எப்பொழுதும் பிரகாசித்துக் கொண்டிருக்கச் செய்வதுமான ஞானம் என்கிற குணத்தை முதலாவதாகச் சொல்கிறார்கள்; அந்த ஞானமும் பரம்பொருளுக்குச் சொரூபமாகவும் குணமாகவும் சொல்லப்படுகிறது; உலகத்திற்கு முதற்காரணமாக இருப்பது யாதொன்று உண்டோ அது, சக்தி என்று சொல்லப்பட்டது; அந்தப் பரம்பொருளுக்குச் சுவாதந்திரியத்தோடு கூடிய கர்த்தாவாக இருக்கும் தன்மை என்பது யாதொன்று உண்டோ அது, குணங்களின் உண்மைப் பொருளைத் தியானம் செய்யுமவர்களால் ஐச்வர்யம் என்று சொல்லப்பட்டது; எப்பொழுதும் உலகத்தைப் படைக்கிற அவனுக்குச் சிரமம் இல்லாமை

---

அஸக்தம் அசரம் சாந்தம் ஸ்வயம் ஜயோதிரநுபமம்
தூரஸ்த்தம் அந்திகசரம் ஜ்ஞாந கம்யம் நிரஞ்ஞநம்
பூத பர்த்ருஸமம் ஜ்யோதி: ஜ்யோதிஷாம் தமஸ: பரம்
அக்ஷரம் ஸர்வபூதஸ்த்தம் தத்விஷ்ணோ: பரமம்பதம்.''
என்பது, பாஞ்சராத்ரம்.

1. அப்ராக்ருத குணஸ்பர்சாத் நிர்குணம் பரிகீயதே
ச்ருணுநாரத ஷாட்குண்யம் கத்த்யமாநம் மயாநக
அஜடம் ஸ்வாத்ம ஸம்போதி நித்யம் ஸர்வாவகாஹநம்
ஜ்ஞாநம் நாமகுணம் ப்ராஹு: ப்ரதமம் குண சிந்தகா:
ஸ்வரூபம் ப்ரஹ்மணஸ்தச்ச குணச்ச பரி கீயதே
ஜகத் ப்ரக்ருதி பாவோய: ஸா சக்தி: பரிகீர்த்திதா
கர்த்ருத்வம் நாமயத் தஸ்ய ஸ்வாதந்த்ர்யம் பரிப்ரும்ஹிதம்
ஐச்வர்யம் நாம தத்ப்ரோக்தம் குண தத்வார்த்த சிந்தகை:

என்பது யாதொன்று உண்டோ அது, குணத்தினைத் தியானம் செய்யுமவர்களால் அப் பரம்பொருளுக்குப் **பலம்** என்ற குணமாகச் சொல்லப்பட்டது; அச்யுதன் என்ற மறுபெயரையுடைய அப் பரம் பொருள் உலகத்திற்கு முதற் காரணமாக இருந்தாலும் விகாரம் இல்லாதிருத்தல் என்பது யாதொன்று உண்டோ அது, **வீரியம்** என்ற குணமாகும். உதவியைத் தேடாதது என்பது யாதோ அது, **தேஜஸ்ஸு** என்று சொல்லப்பட்டது" என்பது போன்றவைகளாலும் தெளிவாக்குகிற **பஞ்சராத்ரம்** போலேயும்.

விபூதிகளை விசதமாக்குகிற புராணங்கள் போலே - [1] "எதனிடமிருந்து இந்தப் பூதங்கள் உண்டாகின்றனவோ, பிறந்தன எல்லாம் எதனால் உயிர் வாழ்கின்றனவோ, பிரளயத்தை சார்ந்தவைகளாய் எதனுள் புகுந்து அடங்குகின்றனவோ அதனை நீ அறியவேண்டும்; அது பிரஹ்மம்" என்றும், [2] "அந்தப் பரமபுருடனுடைய முகத்திலிருந்து பிராமணன் உண்டானான்; க்ஷத்திரியன் தோளிலிருந்து உண்டானான்; வைசியன் துடையிலிருந்து உண்டானான்; சூத்திரன் கால்

---

ச்ரமஹானிஸ்து யாதஸ்ய ஸததம் குர்வதோ ஜகத்
பலம் நாம குணஸ்தஸ்ய கதிதோ குணசிந்தகை:
தஸ்யோபாதாந பாவேபி விகார விரஹோ ஹி ய:
வீர்யம் நாம குணஸ் ஸோயம் அச்யுதத்வாபராஹ்வய:
ஸஹகார்யநபேக்ஷாயா தத் தேஜஸ் ஸமுதாஹ்ருதம்."

என்பது, அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை.

1. "யதோவா இமானி பூதானி ஜாயந்தே யேந ஜாதானி
ஜீவந்தி யத் ப்ரயந்தி அபிசம்விசந்தி"

என்பது, தைத்திரீயோபநிடதம்.

2. "ப்ராஹ்மணோஸ்ய முகம் ஆஸீத் பாஹூ ராஜந்ய: க்ருத:
ஊருததஸ்ய யத் வைச்ய: பத்ப்யாம் சூத்ரோ அஜாயத."

என்பது, புருஷசூக்தம்.

வேதியர் முகத்தில், வேந்தர் விறல்கெழு துணைத்தோள் வெற்பில்,
நீதறு வணிகர் செம்பொற் குறங்கினில், சதுர்த்தர் செய்ய
பாதபங்கயத்தில் ஈன்றான் பதுமன், முன் படைத்த மூவர்
ஓதிய மகங்கள் யாவும் ஆற்றுதற் குரிய ராவார்.

என்பது, கூர்மபுராணம்.

முருகுயிர்த் தலர்ந்த மலரவன் தனது
முகமுதல் உறுப்பெலாம் தாங்கிச்
சரணமென் றுரைக்கும் உறுப்பினில் தோன்றிச்
சாற்றுமம் முகமுதல் உறுப்பில்
வருமொரு மூவர் தங்களை உழவின்
வண்மையால் நிலைபெறத் தாங்கும்
உரிய வேளாண்மை பூண்டபேர் தமக்கே
உடையவர் இடம் பல அவண.

என்பது, காஞ்சிப்புராணம்.



களிலிருந்து உண்டானான்" என்றும், [1] "எல்லாப் பிராணிகளுடைய உள்ளே பிரவேசித்து ஏவுகிறான்" என்றும், [2] "அந்தப் பரமபுருடனுக்கு எல்லாப் பிராணிகளும் ஒருபாதம்." (கால்கூறு என்பது பொருள்.) என்றும் வருவன போன்றவைகளாலும், [3] "அந்த யாஜ்ஞவல்கியர் பதில் சொன்னார்; இந்த முப்பத்து மூன்று தேவர்களுக்கு, முன்பு கூறின மூவாயிரத்து முந்நூற்றுமூன்று தேவர்கள் குணமாக இருப்பவர்கள்; தேவர்கள் முப்பத்து மூவரே; எங்ஙனம் முப்பத்து மூவர் என்றால்; வசுக்கள் எண்மர், உருத்திரர் பதினொருவர், சூரியர் பன்னிருவர், ஆக இவர்கள் முப்பத்தொருவர்; இந்திரனையும் பிரமனையும் சேர்க்க முப்பத்து மூவர் ஆவர்." என்பது போன்றவைகளாலும், [4] "பௌதிமாஷ்யர் என்பவர் கௌபவநரிடமிருந்து கல்வியைப் பெற்றார்; கௌபவநர் கௌசிகரிடமிருந்து கல்வியைப் பெற்றார்; கௌசிகர் கௌண்டிந்யரிடமிருந்து கல்வியைப் பெற்றார்; கௌண்டிந்யர் சாண்டில்யரிடமிருந்து கல்வியைப் பெற்றார்; சாண்டில்யர், கௌசிகர் கௌதமர் என்னும் இருவரிடமிருந்தும் கல்வியைப் பெற்றார்; கௌத

---

1. "அந்த: ப்ரவிஷ்ட: சாஸ்தா ஜநாநாம்"

என்பது, ஆரணம்.

2. "பாதோஸ்ய விச்வா பூதானி"

என்பது, புருஷசூக்தம்.

3. "ஸ ஹோவாச மஹிமாந ஏவைஷாம்
ஏதே த்ரயஸ்த்ரிம்சதேவ தேவா இதி
கதமேதே த்ரயஸ்த்ரிம்சதிதி
அஷ்டௌ வஸவ: ஏகாதச ருத்ரா:
த்வாதசாதித்யா: த ஏகத்ரிம்சத்
இந்த்ரச்சைவ ப்ரஜாபதிச்ச த்ரயஸ்த்ரிம்சாவிதி."

என்பது, பிரமாணம்.

"திதியின் சிறாரும் விதியின் மக்களும்
மாசில் எண்மரும் பதினொரு கபிலரும்
தாமா இருவரும்"

என்பது பரிபாடல், 3.

விதியின் மக்கள் - ஆதித்தர் பன்னிருவர். எண்மர் - வசுக்கள் எண்மர். பதினொரு கபிலர் - உருத்திரர் பதினொருவர். தாமா இருவர் - மருத்துவர் இருவர். ஆக, முப்பத்து மூவர்.

4. "பௌதிமாஷ்யோ கௌபவநாத் கௌபவந:
கௌசிகாத் கௌசிக: கௌண்டிந்யாத் கௌண்டிந்ய:
சாண்டில்யாத் சாண்டில்ய:
கௌசிகாச்ச கௌதமாச்ச கௌதம:
அக்நிவைச்யாதக்நி வைச்ய:
சாண்டில்யாத்"

என்பது பிரமாணம்.

மர் ஆக்நிவைச்யரிடமிருந்து கல்வியைப் பெற்றார்; சாண்டில்யரிடமிருந்து ஆக்நிவைச்யர் கல்வியைப் பெற்றார்'' என்பது போன்றவைகளாலும் உலகத்தின் படைப்பு முதலியவைகளையும் பிராமணன் முதலிய சாதிகளையும் தேவசாதிகளின் பகுப்புக்களையும் இருடிகளுடைய வம்சம் முதலானவைகளையும் சொல்லுகிற வாக்கியங்களால் சொல்லப்படுகின்ற உலகங்களை.

[1] "படைத்தல், அழித்தல், வம்சம், மந்வந்தரங்கள், வம்சத்தைப் பின்பற்றி வருகின்ற சரிதங்கள் என்னும் ஐந்தையும் பற்றிக் கூறுகின்ற தன்மையுடையது புராணம்'' என்கிறபடியே படைப்பு முதலானவைகளையும் வம்சங்களையும் மந்வந்தரங்களையும் வம்சத்தைப் பின்பற்றி வருகின்ற சரிதங்களையும் விரிவாகச் சொல்லுவதன் மூலமாகத் தெளிவுபடுத்துகின்ற புராணங்கள் போலவும்.

சேஷ்டிதங்களை விசதமாக்குகிற இதிகாசங்கள் போலவும் - [2] "ஏ பூமியே! வராக அவதாரம் எடுத்த பகவானால் செய்யப்பட்ட பெரிய முயற்சியால் உயர எடுக்கப்பட்டாய்'' என்றும், [3] "பகவான் இந்த உலகினை அளந்தார், மூன்று விதமாக அடியை வைத்தார்'' என்றும் வருவன போன்றவைகளால் சொல்லப்பட்ட அவதாரத்தின் செயல்களை, [4] "இராமாயணம், நாராயணனுடைய கதை'' என்கிறபடியே ஸ்ரீராமாவதார ஸ்ரீ கிருஷ்ணாவதாரங்களில் செய்யப்பட்ட

---

1. "சர்க்கச்ச ப்ரதிசர்க்கச்ச வம்சோ மந்வந்தராணிச
வம்சாநுசரிதஞ்சைவ புராணம் பஞ்சலக்ஷணம்''
என்பது அமரம்.

2. "உத்த்ருதாஸி வராஹேண''
என்பது தைத்திரீயோபநிடதம்.

"புருவத்துக் கருவல் கந்தத்தால்
தாங்கி இவ்வுலகம் தந்தடிப் படுத்ததை நடுவண்
ஓங்கிய பலர்புகழ் குன்றினோ டொக்கும்''
என்ற பரிபாடற் பகுதியையும் அதன் உரையையும் ஈண்டு நோக்குக.

3. "இதம் விஷ்ணுர் விசக்ரமே த்ரேதா நிததே பதம்''
என்பது, விஷ்ணு சூக்தம்.

4. "ராமாயணம் நாராயண கதாம்''
என்பது, பிரமாணம்.



செயல்கள் விரிவாகச் சொல்லப்படுகின்றன; [1] "பிறகு மிகப் பெரிய ஆற்றலையுடைய விஷ்ணு அதிதியினிடத்தில் அவதரித்தார், வாமந சரீரத்தை மேற்கொண்டு விரோசனன் புதல்வனான பலியின் அருகில் சென்றார், உலகத்துக்கெல்லாம் ஓருயிராய் எல்லாருடைய நலத்தில் பற்றுள்ளவரான பகவான் பிறகு செருக்கு இல்லாதவராய் மூன்று அடிகளை இரந்து பெற்று உலகங்களைத் தனக்கு ஆக்கிக்கொண்டு பராக்கிரமத்தால் பலியை அடக்கிவிட்டு இந்திரனுக்கு மீண்டும் இராச்சியத்தைக் கொடுத்தார்'' என்பது போன்றவைகளாலே மற்றை அவதாரங்களிற் செய்த செயல்களும் இடைப்பிறவரலாகப் பேசப் படுகின்றன ஸ்ரீ ராமாயணத்தில்.

மஹாபாரதத்திலே மோக்ஷ தர்மத்திலே அவதார இரஹஸ்யத்திலே [2] "நாரதரால் இப்படிச் சொல்லப்பட்ட பகவான் பதில் சொல்லலானான்'' என்று தொடங்கி, "முதலில் மீனாக ஆகப்போகிறேன், பூமியை நிலை நிறுத்தப்போகிறேன், பெரிய கடலில் அழுந்திக் கிடக்கிற வேதங்களையும் மேலே எடுக்கப்போகிறேன்; பிராமணோத்தமரான நாரதரே! கூர்ம அவதாரம் எடுத்து ஏமகூடம் என்ற மலைக்கு ஒப்பான ஒளியையுடைய மந்தர மலையை அமுதத்துக்காகத் தரிக்கப்போகிறேன்; இது இரண்டாவது அவதாரம்'' என்பது போன்றவைகளாலே தசாவதாரங்களில் செய்த செயல்களும் தெளிவுறப் பேசப்படுகின்றன. ஆக, இங்ஙனம் பேசுகின்ற இதிகாசங்கள் போலேயும்,

---

1. அத விஷ்ணுர் மஹாதேஜா அதித்யாம் ஸமஜாயத
வாமநம் ரூபமாஸ்த்தாய வைரோசநிமுபாகமத்
த்ரீந் க்ரமாநத பிக்ஷித்வா ப்ரதி க்ருஹ்ய ச மாதவ:
ஆக்ரம்யலோகாந் லோகாத்மா ஸர்வலோக ஹிதேரத:
மஹேந்த்ராய புந: ப்ராதாத் நியம்ய பலிமோஜஸா.
என்பது, ஸ்ரீராமா. பால. 29: 19.

2. "நாரதேநைவ முக்தஸ்து ப்ரதிஉவாச ஜநார்த்தந:
— — — — — — — —
பூர்வம் மத்ஸ்யோ பவிஷ்யாமி ஸ்த்தாபயிஷ்யாமி மேதிநீம்
வேதாம்ச்சைவ உத்தரிஷ்யாமி மஜ்ஜமாநாந் மஹார்ணவே
த்விதீயம் கூர்மரூபேண ஹேமகூட ஸமப்ரபம்
மந்தரம் தாரயிஷ்யாமி அம்ருதார்த்தே த்விஜோத்தம''
என்பது பாரதம் சாந்தி பர்வம், 348: 3-4.

நீல பாரூப உக்தி தெரியச்சொன்ன - [1] "கறுத்த மேகத்தின் நடுவில் இருக்கின்ற மின்னற்கொடி போல் ஒளியுடன் கூடிய" என்றும், [2] "பரிசுத்தமான மனத்தினுல் அறியத் தக்கவன், பிராணனைச் சரீரமாகவுடையவன், பிரகாசிக்கின்ற திவ்விய மங்கள விக்கிரஹத்தையுடையவன்" என்றும் வருவன போன்றவைகளாலே சொல்லப்பட்ட திவ்விய மங்கள விக்கிரஹத்தை, திருவாய் மொழியின் முதல் நடு இறுதிகளிலே பல இடங்களிலும் வர்ணித்துக் கொண்டு பேசுகையாலே [3] "தெரியச் சொன்ன" என்கிறபடியே தெளிவுறச் சொன்ன இவர் பிரபந்தங்களையும், வேத உப பிரும்ஹணம் என்பர்கள் - வேத உப பிரும்ஹணம் என்று சொல்லுவார்கள்.

இவருடைய பிரபந்தங்கள் நான்கனுள் திருவிருத்தத்தில் தொடக்கத்தில் [4] "முழுநீர் முகில் வண்ணன்" என்று திருமேனியைக் கூறி, முடிவில் [5] "மைப்படி மேனியும் செந்தாமரைக் கண்ணும்" என்று அதனையே கூறியிருத்தலாலும், திருவாசிரியத்தில் முதலில் [6] "மீதிட்டுப் பச்சைமேனி மிகப் பகைப்ப" என்று திருமேனியைக் கூறி, முடிவில் [7] "தாமரைக்காடு மலர்க் கண்ணோடு கனிவாயுடையதுமாய்" என்று அதனையே கூறியிருத்தலாலும், பெரிய திருவந்தாதியில் முதலில் [8] "நற் பூவைப்பூ ஈன்ற வண்ணன்" என்று திருமேனியைக் கூறி, முடிவில் [9] "கார்கலந்த மேனியான்" என்று அத்திருமேனியைக் கூறியிருத்தலாலும், திருவாய்மொழியில், [10] "துயரறு சுடரடி" என்று திருமேனியில் தொடங்கி [11] "புனக் காயா நிறத்த புண்டரீகக்கண் செங்கனிவாய்" என்று அத் திருமேனி தன்னையே கூறி முடித்திருத்தலாலும், இறைவனுடைய திவ்ய மங்கள விக்கிரகத்தைக் கூறுதலே இவற்றிற்குப் பெரு நோக்கமாம் என்க.

---

1. "நீலதோயத மத்த்யஸ்த்தா வித்யுல்லேகேவபாஸ்வரா" என்பது, நாராயணநுவாகம்.

2. "மநோமய: ப்ராணசரீரோ பாரூப:" என்பது, முண்டகோப. 2. 2: 7.

3. திருவாய், 6. 9: 11.
4. திருவிருத்தம், 2.
5. திருவிருத்தம், 94.
6. திருவாசிரியம், 1.
7. திருவாசிரியம், 5.
8. பெரியதிருவந். 1.
9. பெரிய திருவந். 86.
10. திருவாய். 1. 1: 1.
11. திருவாய், 10. 10: 6.



"தெரியச் சொன்ன" என்கிற இது திருவாய்மொழித் திருப்பாசுரமேயாகிலும் உபப்பிரும்ஹணமாக இருக்கும் தன்மை மற்றைப் பிரபந்தங்கள் மூன்றற்கும் ஒக்கும் என்றே கொள்க. [1] முன்னர் வேதத்தின் தன்மையைச் சொன்னபோது இப் பிரபந்தங்கள் நான்கற்கும் பொதுவாகச் சொன்னது இங்கும் ஒக்கும் எனக் கொள்க.

பாஞ்சராத்ரத்திலும் புராணங்களிலும் இதிகாசங்களிலும் இவர் பிரபந்தங்களிலும் ஸ்வரூபம் குணம் விபூதி அவதரித்துச் செய்த செயல்கள் ஆகிய எல்லாமும் சொல்லப்பட்டிருக்கின்றன ஆனாலும், பாஞ்சராத்ரங்களுக்கு ஸ்வரூபம் குணம் என்னும் இவற்றிலே நோக்கு. புராணங்களுக்கு உலகங்களின் விரிவினைச் சொல்லுவதிலே நோக்கு. இதிகாசங்களுக்கு அவதாரங்களைப்பற்றிச் சொல்லுவதிலே நோக்கு. நம்மாழ்வார் அருளிச்செயல்களுக்குத் திவ்வியமங்கள விக்கிரஹத்திலே நோக்கு. ஆகையாலே இப்படி வகையிட்டுச் சொல்லக் குறை இல்லை என்று அறிக. (54)

## 55

*கல்பாதியில் தோற்றிற்று வர்ணிக்கும் சதுர்முகன் சந்தஸ்ஸூம், மோஹ சாஸ்திரப் பிரவர்த்தகன் பிணச்சுடலை வெந்தார்அக்கும் ஆறும் அணிந்து ஏறுஏறிச் சுழன்று ஆடும் ஆலம் அமர் பிச்சுத் தெளிந்து தான் வணங்குமாறு உரைக்கக் கேட்ட சஜாதீயர் பிரசாதமும் ஆர்ஷமூலம்.* [2]

என்பது சூத்திரம்.

---

1. 'முன்னர்' என்றது முப்பத்து ஒன்பதாம் சூத்திரம் தொடங்கிக் கூறுவனவற்றை.

2. சதுர்முகன் சந்தஸ்ஸூம், சஜாதீயர் பிரசாதமும் ஆர்ஷத்துக்கு மூலம் என்றபடி. சந்தசு - நினைவு; வரம். 'மோஹ சாஸ்திரப் பிரவர்த்தகன்' என்று தொடங்கி மேலே கூறுவன எல்லாம், சஜாதீயர்க்கு, தான் வணங்குமாறு உரைத்த சிவனுக்கு அடைமொழிகள். மோஹ சாஸ்திரப் பிரவர்த்தகன் - சிவன். ஆர்ஷம் - இருடிகளால் கூறப்பட்டது. பிரசாதம் - அருள்.

ஆழ்வாருடைய திவ்யப்பிரபந்தங்களும் மஹரிஷிகளின் இதிகாச புராணங்களும் வேதங்களுக்கு உபப்பிரும்ஹணங்கள் என்னும் ஒப்புமையை ஒருவாறு பெற்றிருந்தாலும், ஆழ்வாருடைய திவ்யப்பிரபந்தத்துக்கு உண்டான ஏற்றம், மஹரிஷிகளுடைய நூல்களுக்குக் கிடையாது என்று மேலே விரிவாக விளக்கப்படும் விஷயத்துக்கு அடியிடுவது இச்சூத்திரம். மேல் சூத்திரத்தையும் கொண்டு இதன் கருத்தினை உணர வேண்டும். இராஜச தெய்வமான பிரமனுடைய வரம் காரணமாக அவதரித்த வால்மீகி ராமாயணம் என்ன, தாமத தெய்வமான சிவனிடத்தில் உபதேசம் கேட்ட இருடிகளில் ஒருவரான புலஸ்தியருடைய திருவருள் காரணமாக

**வியாக்:—** ஆழ்வார் அருளிச்செயல்களும் மஹரிஷிகள் கூறிய நூல்களும் வேதங்களுக்கு உபப்பிரும்ஹணம் என்னும் தன்மையாலே ஒருவாறு ஒப்புமை பெற்றிருந்தாலும், ஆழ்வார் அருளிச் செயல்களுக்கு உண்டான ஏற்றம், ரிஷிகள் இயற்றிய புராணம் முதலானவற்றுக்கு இல்லை என்பதனை அறிவிப்பதற்காக, ரிஷிகள் கூறிய புராணம் முதலானவைகளும் ஆழ்வார் அருளிச்செயல்களும் பிறந்த காரணங்களை அருளிச்செய்யத் திருவுள்ளம் பற்றி, ரிஷிகள் கூறிய புராணம் முதலானவைகள் பிறந்த காரணத்தை முதலில் அருளிச் செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, கல்பாதியில் தோற்றிற்று வர்ணிக்கும் சதுர்முகன் சந்தஸ்ஸும்- [1] "முன்பு, பிரமனாலே எந்தக் கல்பத்தில் (நாளில்) எது சொல்லப்பட்டதோ அதனுடைய பெருமை அந்தத் தன்மையாகவே பேசப்படுகிறது" என்கிறபடியே, முக்குணங்களுக்கும் வசப்பட்ட பிரமனை தனக்கு, காலபேதத்தால் முக்குணங்களும் கலந்தவையாயும், அவற்றிலே ஒவ்வொரு குணம் மிக்கதாயும் இருக்கும் தன்மையைக் கொண்டு [2] "முக்குணங்களும் கலந்துள்ளனவாகவும் சாத்விகங்களாகவும் இராசதங்களாகவும் தாமசங்களாகவும்" என்கிறபடியே, முக்குணங்களும் கலசியிருப்பவைகள் என்றும் சாத்விகங்கள் என்றும் இராஜசங்கள் என்றும் தாமசங்கள் என்றும் சொல்லப்படுகிற நாள்களாகிற கல்பங்களினுடைய ஆதிகளிலே தோன்றுகிற குணங்களுக்குத் தகுதியாகத் தோற்றுகிறபடியே [3] "தாமதகுணம் பொருந்திய நாள்களிலே அக்நி, சிவன் என்னும் இவர்களுடைய பெருமை பரக்கச் சொல்லப்படுகிறது; இராஜச குணம் கலந்துள்ள

*அவதரித்த ஸ்ரீ விஷ்ணுபுராணம் என்ன, மற்றும் இங்ஙனம் தோன்றிய மஹரிஷிகளினுடைய நூல்கள் என்ன, ஆகிய இவையெல்லாவற்றைக் காட்டிலும், சுத்த சத்துவ தெய்வமான ஸ்ரீமந் நாராயணனுடைய திருவருளாலே அவதரித்த ஆழ்வார் பிரபந்தம் மிகமிகச் சிறப்பு வாய்ந்தது என்பது கருத்து.*

1. *யஸ்மிந் கல்பேது யத் ப்ரோக்தம் புராணம் ப்ரஹ்மணாபுரா*
   *தஸ்யதஸ்யது மாஹாத்மியம் தத்ஸ்வரூபேண வர்ண்யதே.*

*என்பது மாத்ஸ்யபுராணம்.*

2. *"ஸங்கீர்ணாஸ் ஸாத்விகாச்சைவ ராஜஸாஸ் தாமஸாஸ் ததா"*

*என்பது மாத்ஸ்யபுராணம்.*

3. *அக்நேச்சிவஸ்ய மாஹாத்மியம் தாமஸேஷு ப்ரகீர்த்திதம்*
   *ராஜஸேஷுச மாஹாத்மியம் அதிகம் ப்ரஹ்மணோவிது:*
   *ஸாத்விகேஷ்வத கல்பேஷு மாஹாத்மியமதிகம் ஹரே:*
   *தேஷ்வேவயோக ஸம்ஸித்தா கமிஷ்யந்தி பராம்கதிம்*
   *ஸங்கீர்ணேஷு ஸரஸ்வத்யா: பித்ரூணாம்ச நிகத்யதே.*

*என்பது மாத்ஸ்யபுராணம்.*



நாள்களிலே பிரமனுடைய பெருமை அதிகம் என்று அறிகிறார்கள்; சத்துவகுணம் கலந்துள்ள நாள்களிலே ஸ்ரீமந் நாராயணனுடைய பெருமை அதிகமாகச் சொல்லப்படுகிறது; அந்த நாள்களிலேயே யோகசித்தி உடையவர்கள் மோக்ஷமாகிற உயர்ந்த கதியை அடையப் போகிறார்கள்; முக்குணங்களும் கலந்திருக்கும் நாள்களிலே சரஸ்வதி, பிதிரர்கள் என்னும் இவர்களுடைய பெருமை சொல்லப்படுகிறது." என்கிறபடியே, தாமதகுணம் கலந்திருக்கும் நாள்களிலே அக்நி, சிவன் என்னும் இவர்களுடைய பெருமைகளையும், இராசத குணம் கலந்திருக்கும் நாள்களிலே தன்னுடைய பெருமையினையும், சத்துவ குணம் கலந்திருக்கும் நாள்களிலே சர்வேச்வரனுடைய பெருமையினையும், முக்குணங்களும் கலந்திருக்கும் நாள்களிலே பிதிரர்கள், சரஸ்வதி என்னும் இவர்களுடைய பெருமையினையும் பேசுகின்ற பிரமனுடைய, [1] "ஓ பிராமணரான வான்மீகியே! இந்த வாக்கியமானது என்னுடைய நினைவாலே உம்மிடம் வந்தது." என்கிறபடியே, வால்மீகி முனிவர் வாக்கிலே இவ்வாக்கியம் பிறப்பதற்கு அடியான திருவருளின் காரியமான நினைவும்; சந்தஸ்ஸு என்கிற இதற்கு, இவ்விடத்தில் நினைவு என்கிற பொருள் கோடல் வேண்டும். சந்தம் என்பதே நினைவினைக் குறிக்கும். சந்தஸ்ஸு என்கிற இதுவும் நினைவு என்ற பொருளில் வருவதற்கு மேற்கோள் வந்த இடங்களில் கண்டுகொள்வது. ஆக, இப்படி இருக்கிற பிரமனுடைய நினைவும்.

மோஹசாஸ்திரப் பிரவர்த்தகன் பிணம் சுடலை வெந்தார் அக்கும் ஆறும் அணிந்து ஏறுஏறி சுழன்று ஆடும் ஆலம் அமர் பிச்சுத் தெளிந்து தான் வணங்குமாறு உரைக்கக் கேட்ட சஜாதீயர் பிரசாதமும் - மோஹசாஸ்திரப் பிரவர்த்தகன் - [2] "தேவனே ! கேசவனே ! தேவர்களுக்கெல்லாம் தலைவனே ! நீயே மனிதனாக வந்து என்னை ஆராதிக்கவேண்டும்; என்னைத் தலைவனாகக் கொள்ள வேண்டும்; என்னிடமிருந்து வரங்களைப் பெற்றுக்கொள்ள வேண்டும்; எந்த வரத்தினாலே, எல்லாஉயிர்களுக்குள்ளே; பூசைக்குரியவர்களைவிட மேம்பட்ட பூசைக்குரியவனாக ஆவேனோ, அத்தகைய வேறு வரத்தை

1. *"மச்சந்தாதேவதே ப்ரஹ்மந் ப்ரவ்ருத்தேயம் ஸரஸ்வதீ"*

*என்பது, ஸ்ரீராமா. பால. 2: 30.*

2. *அந்யம்தேஹி வரம்தேவ ப்ரஸித்தம் ஸர்வஜந்துஷு*
   *மர்த்யோ பூத்வா பவாநேவ மாமாராதய கேசவ*
   *மாம்வ்ருணீஷ்வச தேவேச வரம் மத்தோ க்ருஹாணச*
   *யேநாஹம் ஸர்வபூதாநாம் பூஜ்யாத் பூஜ்யதரோபவம்.*

*என்பது, பிரமாணம்.*

"எனக்குக் கொடுத்தருள வேண்டும்" என்று வரம் வேண்டின தன் பெருமையில் விருப்பமுள்ளவனாகையாலே, [1] "பெரிய தோள்களை யுடைய சிவனே ! மோஹசாஸ்திரங்களைச் செய்விப்பாயாக" என்று பகவான் கட்டளையிட்டதைப் போலிக் காரணமாகக் கொண்டு ஆகமம் முதலான மோஹசாஸ்திரங்களை உலகத்தில் பரப்பினவனான சிவன்,

பிணம் - [2] "பிணங்கள் இடுகாடதனுள் நடமாடு பிஞ்ஞகன்" என்றும், சுடலை - [3] "சுடலையில் சுடு நீறன்" என்றும், வெந்தார் - [4] "வெந்தார் என்பும் சுடுநீறும் மெய்யிற்பூசி" என்றும், அக்கும் - [5] "அக்கும் புலியின் அதளும் உடையார்" என்றும், ஆறும் அணிந்து - [6] "ஆறும் பிறையும் அரவமும் அடம்பும் சடைமேல் அணிந்து" என்றும், ஏறுஏறி [7] "எரி உருவத்து ஏறுஏறி" என்றும், சுழன்று ஆடும் - [8] "சுழன்றாடும் கொன்னவிலும் மூவிலை வேல் கூத்தன்" என்றும், ஆலம் அமர் - [9] "ஆலம் அமர் கண்டத்தரன்" என்றும் சொல்லுகிறபடியே, தாமத குணம் மிக்கவனாகையாலே இழிதொழில்களோடு கூடினவனாய், பிச்சுத் தெளிந்து - [10] "ஓ ஈச்வரனே ! பைத்தியத்தன்மை இல்லாதவரும் பிரபுக்களுக்கெல்லாம் பிரபுமானவருமான நீர் பைத்தியம் பிடித்தவர்போல் இரவில் இடுகாட்டில் அலைந்து திரிகின்றீர் ; உமக்கு இது வரக் காரணம் யாது ?" என்பது போன்றவைகளாலே, 'இடுகாட்டில் அலைந்து திரிதல் தொடக்கமான இழிதொழில்களை நீர் செய்கைக்குக் காரணம் என் ?' என்று தேவியாகிய பார்வதி கேட்கும்படி சுடுகாட்டிலே சஞ்சரித்து, பிணங்கள் சுடும் நீற்றை உடம்பெங்கும் பூசி, எலும்பு மாலையைப் பூண்டு, புலித்தோலை உடுத்து, கங்கை சந்திரன் அரவு என்னுமவைகளைச் சடையில் அணிந்து, சர்வேச்வரன் தன்னுடைய முற்றும் உணர்தலுக்குத் தகுதியாக வேத மயமான பறவைகட்கு அரசனான கருடனை மேற்கொண்டு உலாவு மாறு போன்று,

1. "த்வஞ்ச ருத்ர மஹா பாஹோ மோஹசாஸ்த்ராணி காரய" என்பது பிரமாணம்.
2. பெரியதிருமொழி, 2, 6: 9. 3. பெரியதிருமொழி, 10. 1: 5.
4. பெரியதிருமொழி, 1. 5: 8. 5. பெரியதிருமொழி, 9. 6: 1.
6. பெரியதிருமொழி, 6. 7: 9. 7. இரண்டாந் திருவந். 63.
8. பெரியதிருமடல், 70. 9. முதல் திருவந். 4.
10. "உந்மத்தவதநுந்மத்த : ப்ரபு : ப்ரபவதாமபி
ராத்ரௌ ச்மசாநேப்யடஸிதத் கிமே தத் தவேச்வர"
என்பது, பிரமாணம்.



தன்னறிவுகேட்டிற்குத் தகுதியாக அறிவில் குறைந்த பொருளான இடபத்தை வாகனமாக உடையவனாய், உன்மத்தர் களித்து ஆடுமாறு போன்று சக்கரத்தின் சுழற்சிபோலே சுழன்றாடுவது, விஷத்தைக் கண்டத்திலே தரிக்கையாலே தன்னைக் காட்டிலும் மேம்பட்டார் இலர் என்று தன்னை ஈச்வரனாக நினைத்திருப்பது ஆகிற மயக்கம் நீங்கி;

தான் வணங்குமாறு உரைக்கக் கேட்ட - சத்துவகுணம் தலையெடுத்து, சத்துவகுணம் விஷ்ணுவைக் காட்டுவது ஆகையாலே [1] "ஆல் மேல் வளர்ந்தானைத் தான் வணங்குமாறு - நால்வர்க்கு மேலையுகத்து உரைத்தான்" என்கிறபடியே, பொருந்தாதவற்றையும் பொருந்தச் செய்யும் ஆற்றலுடையவனான சர்வேச்வரனைத் தான் வணங்கும் விதத்தை உபதேசிக்கக் கேட்டவர்கள் ஆகையாலே சத்துவ குணத்திலே ஊன்றி நிற்பவர்களாய், சஜாதீயர் பிரசாதமும் - இருடியாம் தன்மையால் வந்த தன் இனமாம் தன்மையையுமுடையவர்களான அகத்தியர், புலத்தியர், தக்ஷர், மார்க்கண்டேயர் என்னும் நால்வரிலே ஒருவனான புலத்தியன் [2] "குழந்தாய் ! (பராசரரே) நீர் புராண சம்ஹிதைகளைச் செய்பவராக ஆகப் போகிறீர் ; நீர் பரம்பொருளின் உண்மையையும் உள்ளபடி அறியப் போகிறீர்." என்று ஸ்ரீ பராசர பகவானுக்கு வரத்தைக் கொடுக்கையாலே தம் இனத்தவரான ரிஷிகளுடைய அருளும்;

ஆர்ஷமூலம் - ரிஷிகளாலே சொல்லப்பட்ட புராண இதிகாசங்கள் தோன்றியதற்குக் காரணம்.

ஸ்ரீ வால்மீகிபகவானுக்குத் திருவருள் புரிந்த பிரமனைப்போன்று வேற்றினமாக இராமல், ஸ்ரீ பராசர பகவானுக்குத் திருவருள் புரிந்த புலத்தியனும் ரிஷியாகையாலே அவனை ஸ்ரீ பராசர பகவானுடைய இனம் என்னத் தட்டுஇல்லை. மற்றும் உண்டான இதிகாச புராணங்களைச் செய்தவர்களுடைய பிரபந்தங்களுக்கு மூலமும் ஆராய்ந்தால் இப் புடையிலேயாயிருக்குமத்தனை அல்லது, நேரே பகவானுடைய திருவருள் ஒரு பிரபந்தத்துக்கும் இல்லையாதலின் 'ஆர்ஷமூலம்' என்று திரள அருளிச்செய்கிறார். (55)

1. நான்முகன் திருவந், 17.
2. புராணஸம்ஹிதா கர்த்தா பவாந் வத்ஸ பவிஷ்யதி
தேவதா பாரமார்த்யஞ்ச யதாவத் வேத்ஸ்யதேபவாந்.
என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 1. 1: 25.

## 56

[1] பரம சத்வத்தோடே உள்ளி உரைக்கும், நிறை ஞானத்து, அயனும் சிவனும் திருமால் அருள்கொண்டு இவர் பாடினர்.

என்பது சூத்திரம்.

**வியாக் :**—இனி, இவ் ஆழ்வார் பிரபந்தங்களுக்கு மூலம் இன்னது என்று அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, பரம சத்துவத்தோடே - 'கல்பத்தின் ஆதியில் மிக்குத் தோன்றிய குணத்திற்குத் தகுதியாகத் தோற்றியனவற்றைப் பேசும்' என்றதற்கு எதிர்த்தட்டாம்படி இராசத, தாமதங்களோடும், அவற்றுடன் ஒரு சேரச் சேர்த்துப் பேசப்படுகின்ற சத்துவத்தோடும் தொடர்பு இன்றிக்கே, [2] "எவன் தனக்கு மேல் இல்லை என்னும்படி மேலான சத்வகுணத்துக்கு நிலமாக இருப்பவனோ" என்கிறபடியே தனக்கு மேல் இல்லை என்னும்படியான சுத்த சத்துவகுணத்தை யுடையவனாய், உள்ளி உரைக்கும்-தான் சொன்னவை அடைய வேதப் பொருளாக இருக்கச்செய்தே, சடக்கெனச் சொன்னால் 'ஆராயாமல் வாய்வந்தபடி சொன்னான்' என்பர்கள் என்று, உயிர்களிடத்து வைத்த வாத்சல்ய குணத்தின் மிகுதியாலே இவர்கள் நம்புவதற்கு உறுப்பாக [3] "நெறி உள்ளி உரைத்த" என்கிறபடியே வேத நெறியை விசாரித்து அருளிச் செய்யுமவனாய்,

நிறை ஞானத்து - பிச்சுத் தெளிந்து சொன்னவன் (சிவன்) வார்த்தை கேட்டு உண்டான ஞானமாத்திரத்தை யுடையவர்களைப் போல் அன்றியே, [4] "நெறி எல்லாம் எடுத்துரைத்த நிறைஞானத்தொரு மூர்த்தி" என்கிறபடியே நிறைந்த ஞானத்தையே தனக்கு அறிகுறியாக வுடையவனுமாய், அயனும் சிவனும் திருமால்-[5]"அயனும் சிவனும் திருமாலால்" என்கிறபடியே மேலே கூறப்பட்ட பிரமன் சிவன் என்னும் இவர்களுக்கும் அந்தர்யாமியாய் நின்று படைத்தல் அழித்தல்களாகிற அக் காரியங்களைச் செய்து போருகையாலே

1. பரம ஸத்வத்தோடே உள்ளி உரைக்கும் திருமால், நிறை ஞானத் திருமால், அயனும் சிவனும் திருமால் என்று எல்லாச் சொற்களையும் திருமாலுக்கு அடையாக்குக.

2. "பரம ஸத்வ ஸமாச்ரய:" என்பது, தோத்திர ரத்நம், 12.

3. திருவாய். 1. 3: 5.

4. திருவாய். 4. 8: 6.



அயன் சிவன் என்ற சொற்களால் சொல்லப்படுமவனாய், அறப் பெரியனான திருமகள் கேள்வனாலே, அருள்கொண்டு இவர் பாடினர்- [1] "அருளப்பட்ட சடகோபன்" என்கிறபடியே மயர்வற மதிநலம் அருளப் பெற்றவராய், [2] "அருள்கொண்டு ஆயிரம் இன்தமிழ் பாடினன்" என்கிறபடியே பகவானுடைய நேரான திருவருளை மூலமாகக் கொண்டு இவர் இப் பிரபந்தங்கள் பாடியருளினர். (56)

## 57

[3] கருவுள் வேறலாமை அரன் அயன் எனச் செய்யுமவை போலே, மூவுருவாம் முதல்வன், துப்பரவாலே பரம கவிகளால் பாடுவியாது, நேர்படச் சொல்லும் நீர்மை இலா என்னைத் தன்னாக்கி, என் நாமுதல் வந்து புகுந்து, தப்புதல் அறத் தன்னை வைகுந்தனாகத் தன் சொல்லால் தானே துதித்து, மலக்கு நா இயல் மொய்ய சொல்லால் சொல்ல வல்லேன் என்று நானும் சொல்லி, நாடும் கை எடுக்கும்படி என் சொல்லால் யான் சொன்ன இன்கவி என்பித்தான் என்றாரிறே.

என்பது சூத்திரம்.

**வியாக் :**—பிரமனுடைய திருவருளால் ஸ்ரீ வால்மீகி பகவான் ஸ்ரீ ராமாயணம் பாடினர் என்பதனை ஸ்ரீ ராமாயணத்திலே உள்ள [4] "மச்சந்தாதேவதே பிரஹ்மந்" என்ற சுலோகத்தாலும், புலத்தியருடைய திருவருளால் ஸ்ரீ பராசர பகவான் ஸ்ரீ விஷ்ணு புராணம் பாடினர் என்பதனை, ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் உள்ள [5] "புராண ஸம்ஹிதா கர்த்தா பவாந் வத்ஸ பவிஷ்யதி" என்ற சுலோகத்தாலும் நாம் தெளிகிறோம். இவற்றால் பிரமனுடைய திருவருளும் சிவனுடைய திருவருளும் இதிஹாஸ புராணங்களுக்குக் காரணங்கள் என்பது

1. திருவாய். 8. 8: 11.

2. கண்ணிநுண் சிறுத்தாம்பு, 8.

3. இச் சூத்திரத்தை, மூவுருவாம் முதல்வன் அரன் அயன் எனச் செய்யுமவை போலே, என்னைத் தன்னாக்கி, என் நா முதல் வந்து புகுந்து, தன் சொல்லால் தானே துதித்து, சொல்லவல்லேன் என்று நானும் சொல்லி, நாடும் கையெடுக்கும்படி யான் சொன்ன இன்கவி என்பித்தான் என்று கூட்டுக. "சொல்லி" என்பது, செயவென்னெச்சத்திரிபு.

4. இச் சுலோகத்தை மேலே பக். 119 காண்க.

5. இச் சுலோகத்தை மேலே பக். 121 காண்க.

விளங்கிற்று. அதுபோலவே, ஆழ்வார், பிரபந்தங்கள் பாடுதற்குக் காரணம் எம்பெருமானுடைய திருவருளே என்பதற்கு அவர் பிரபந்தத்தில் அகச் சான்று யாதேனும் உளதோ? என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, கருவுள் வேறலாமை - [1]"ஓ பிரமனே! உனக்குள் அந்தர்யாமியாக இருந்துகொண்டு உலகத்தைப் படைக்கப்போகிறேன்" என்றும், [2]"எவன் கல்பத்தின் முடிவில் உருத்திரன் உருவமாக இருந்துகொண்டு எல்லா உலகங்களையும் அழிக்கின்றானோ" என்றும், [3]"அளவில்லாத ஒளியையுடையவனும் பகவானுமான சிவனுக்கு விஷ்ணு அந்தராத்மாவாக இருக்கிறார்" என்றும் சொல்லப்படுகிறபடியே, [4]"திசைமுகன் கருவுள் வீற்றிருந்து படைத்திட்ட கருமங்களும்" என்றும், [5]"வெள்ள நீர்ச்சடையானும் நின்னிடை வேறலாமை விளங்க நின்றதும்" என்றும் சொல்லும்படி பிரமனுக்கும் சிவனுக்கும் அந்தர்யாமியாய்க் கொண்டு படைத்தல் அழித்தல்களைச் செய்யாநிற்கச்செய்தே, அரன் அயன் எனச் செய்யுமவை போலே - [6]"புரமொரு மூன்று எரித்து அமரர்க்கு அறிவியந்து, அரன் அயன் என உலகழித்து அமைத்துளனே" என்ற திருப் பாசுரத்தின்படியே உலகத்தைப் படைத்தல் வேதத்தை உபதேசித்தல், உலகத்தை அழித்தல் முப்புரங்களை எரித்தல் ஆகிற இவற்றைத் தானே செய்துவிட்டு, பிரம உருத்திரர்கள் தாமே செய்தார்கள் என்று உலகத்தார் சொல்லும்படி செய்தாற் போலே.

மூவுருவாம் முதல்வன் - [7]"என் முன் சொல்லும் மூவுருவாம் முதல்வனே" என்கிறபடியே, தன் உருவத்தோடு நின்று காரியம் செய்யுமிடத்தில் தனக்குத் தானே காரணனானாற்போலே, பிரம உருத்திரர்களுக்கும் தானே காரணனாய் அவர்களைச் சரீரமாகக் கொண்டு நின்று படைத்தல் அழித்தல்களைச் செய்து அவர்கள் செய்தார்கள் என்று பிரசித்தமாக்குமவன்.

---

1. *"ஸ்ருஷ்டிம் தத: கரிஷ்யாமி த்வாமாவிச்ய ப்ரஜாபதே" என்பது, விஷ்ணுதர்மம்,* 69, 50

2. *"கல்பாந்தே ருத்ரரூபீ யோ க்ரஸதே ஸகலம் ஜகத்" என்பது, பிரமாணம்.*

3. *"விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்யாமிததேஜஸ:" என்பது, பாரதம் கர்ணபர்வம்,*

4. *திருவாய்.* 5. 10: 8.
5. *திருவாய்.* 5. 10: 4.
6. *திருவாய்.* 1. 1: 8.
7. *திருவாய்.* 7. 9. 2.



துப்பரவாலே - [1]"திறத்துக்கே துப்பரவாம் திருமால்" என்கிறபடியே யாதேனும் ஒரு காரியத்தில் வந்தாலும் ஒரு புல்லைக் கொண்டு காரியத்தைத் தலைக்கட்டிக் கொள்ளவல்ல ஆற்றலையுமுடையவன் ஆகையாலே,

பரம கவிகளால் பாடுவியாது - [2]"இன்கவி பாடும் பரம கவிகளால், தன் கவி தான் தன்னைப் பாடுவியாது" என்கிறபடியே, தன்னைக் கவி பாடுவித்துக்கொள்ள வேண்டினால் அதற்குத் தகுதியான ஞானம் சக்தி முதலியவைகளால் குறைவற்றவர்களாய் இனிய கவிகளைப் பாடவல்லவர்களாய் மேலான கவிகளான வியாசர், பராசரர், வால்மீகி முதலியவர்களும், செந்தமிழ் பாடுவாரான முதலாழ்வார்களும் உளராக இருக்க, அவர்களைக் கொண்டு பாடுவித்துக் கொள்ளாதே;

நேர்படச் சொல்லும் நீர்மை இல்லா என்னைத் தன் ஆக்கி - [3]"நேர்பட யான் சொல்லும் நீர்மை இலாமையின், ஏர்விலா என்னைத் தன் ஆக்கி" என்கிறபடியே தனக்குத் தகுதியாம்படி வாய்க்கச் சொல்லுகைக்கு அடியான ஞானம் முதலான குணங்கள் எனக்கு இன்றிக்கே இருக்க, என்னைத் தன்னோடு ஒத்த ஞானம் சக்தி இவைகளையுடையேனாம்படி செய்து, என் நா முதல் வந்து புகுந்து - [4]"ஆம் முதல்வன் இவன் என்று தன்தேற்றி, என் நா முதல் வந்து புகுந்து" என்கிறபடியே என்னுடைய வாக்கின் செயலுக்குக் காரணனாய் வந்து புகுந்து, தப்புதல் அற - [5]"என்னாகியே தப்புதல் இன்றித் தனைக் கவி தான் சொல்லி" என்கிறபடியே என்னைக் கருவியாகக் கொண்டு பாடாநிற்கச் செய்தே என்னுடைய சம்பந்தத்தால் வரும் குற்றம் தட்டாதபடியாகக் கொண்டு, தன்னை வைகுந்தன் ஆக - [6]"என்னால் தன்னை வைகுந்தனாகப் புகழ்" என்கிறபடியே, நான் புகழ்ந்த இதனாலே ஸ்ரீ வைகுண்டநாதனாய் அங்குத்தை இறைமைத் தன்மை பெற்றானாக நினைத்து, தன் சொல்லால் தானே துதித்து - [7]"தன் சொல்லால் தான் தன்னைக் கீர்த்தித்த மாயன்" என்றும், [8]"தானே யான் என்பானாகித் தன்னைத் தானே துதித்து" என்றும், சொல்லுகிறபடியே, சொல்லும் தன்னது, சொன்னானும் தான், சொல்லிற்றும் தன்னை என்னும்படி எனக்கு அந்தராத்மாவாய் நின்று தன்னைத் தானே துதித்து,

---

1. *திருவாய்.* 7. 9: 9.
2. *திருவாய்.* 7. 9: 6.
3. *திருவாய்.* 7. 9: 5.
4. *திருவாய்.* 7. 9: 3.
5. *திருவாய்.* 7. 9: 4.
6. *திருவாய்.* 7. 9: 7.
7. *திருவாய்.* 7. 9: 2.
8. *திருவாய்.* 10. 7. 2.

மலக்கு நா இயல் மொய்ய சொல்லால் சொல்ல வல்லேன் என்று நானும் சொல்லி - மலக்கு - [1] "வலக்கை ஆழி இடக்கைச் சங்கம் இவையுடை மால் வண்ணனை, மலக்கு நாவுடையேற்கு" என்கிற படியே ஒன்றுக்கும் நிலை வேறுபடாத அறப் பெரியவனை சர்வேச் வரனை என் சொற்கள் மாத்திரத்தாலே நிலை வேறுபடும்படி செய்ய வல்ல நாவீறுடைய எனக்கு என்றும், நா இயல் - [2] "நாவியலால் இசை மாலைகள் ஏத்தி நண்ணப் பெற்றேன்" என்கிறபடியே மனம் ஒழிய வாக்கின் செயலினாலேயே இசைமாலைகளைக் கொண்டு துதித்துக் கிட்டப் பெற்றேன் என்றும், மொய்ய சொல்லால் - [3] "மொய்ய சொல்லால் இசை மாலைகள் ஏத்தி உள்ளப் பெற்றேன்" என்கிறபடியே, செறிந்த சொற்களாலே உண்டாய் இசையோடே கூடி யிருந்துள்ள தொடைகளாலே ஏத்தி நினைக்கப் பெற்றேன் என்றும், சொல்லவல்லேன் என்று - [4] "வானக்கோனைக் கவி சொல்ல வல் லேற்கு" என்கிறபடியே, ஸ்ரீ வைகுண்டநாதனைக் கவி சொல்ல வல்ல எனக்கு என்றும், நானும் சொல்லி - நான் பாடினேனாக நினைத்து நானும் சொல்ல;

நாடும் கை எடுக்கும்படி - [5] "சடகோபன் சொல்" என்றவாறே நான் இதனைப் பாடினேனாக நினைத்து நாடும் கை கூப்பி வணங்கும்படி, என் சொல்லால் யான் சொன்ன இன்கவி என்பித்தான் - [6] "என் சொல்லால் யான் சொன்ன இன்கவி என்பித்து" என்கிறபடியே, என்னுடைய சொற்களாலே நான் கர்த்தாவாகச் சொன்ன இனிய கவி என்று நாட்டிலே பிரசித்தம் ஆக்கினான், என்றார் இறே - என்று அருளிச்செய்தாரே அன்றோ. ஆகையாலே இவர் சர்வேச்வரன் அருள் அடியாகவே பாடினமை ஒரு தலை என்பது தெளிவாம். (57)

## 58

> [7] தர்ம வீர்ய ஞானத்தாலே தெளிந்து ஹ்ருஷ்டராய் மேலே மேலே தொடுப்பாரைப் போல் அன்றே, அருளின பக்தியாலே உள்கலங்கிச் சோகித்து மூவாறு மாசம் மோஹித்து வருந்தி ஏங்கித் தாழ்ந்த சொற்களாலே நூற்கிற இவர்.

என்பது சூத்திரம்.

1. திருவாய். 6. 4: 9.
2. திருவாய். 4. 5: 4.
3. திருவாய். 4. 5: 2.
4. திருவாய். 4. 5: 9.
5. திருவாய். 2. 2: 11.
6. திருவாய். 7. 9: 2.
7. இச் சூத்திரத்தை, பக்தியாலே உள்கலங்கித் தாழ்ந்த சொற்களாலே நூற்கிற இவர், ஞானத்தாலே மேலே மேலே தொடுப்பாரைப் போல் அன்றே என்று கூட்டுக. ஹிருஷ்டராய் - மகிழ்ச்சி யுடையவராய்.



வியாக் :—இப்படி இப்பிரபந்தங்கள் சர்வேச்வரன் அருள்மூல மாக அவதரித்தவை என்கிற ஏற்றம் உண்டு என்று அறிவித்த அளவும் அன்றிக்கே, ஆழ்வாருடைய சிறப்பினால் வந்த ஏற்றமும் உண்டு என்று அறிவித்தற்காக ரிஷிகளைக் காட்டிலும் ஆழ்வார்க்கு உண்டான வேறுபாட்டினை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, தர்ம வீர்ய ஞானத்தாலே - [1] "ஸ்ரீ ராமபிரானுடைய புன்முறுவல் வார்த்தைகள் என்னும் இவற்றையும் சஞ்சாரத்தையும் செயல்களையும் மற்றும் எல்லாவற்றையும் பிரமனுடைய வரபலத்தால் உள்ளபடியே நன்கறிகின்றார்." என்கிறபடியே தாம் தாம் செய்து போந்த தவத்தின் உருவமான தர்மத்தினுடைய சக்தியாலே உண் டான ஞானத்தாலே, தெளிந்து - [2] "கண்டும் தெளிந்தும்" என்கிற படியே அறியவேண்டுமவற்றைத் தெளிய அறிந்து, ஹ்ருஷ்டராய் - அதுதான் [3] "ஞானத்தைத் தவிர வேறு இன்பம் இல்லை" என்னும்படி இருக்கையாலே அவ்வறிவினாலே மகிழ்ச்சியினை யுடையவர்களாய், மேலே மேலே தொடுப்பாரைப் போல் அன்றே - அந்தத் தெளிவும் மகிழ்ச்சியும் காரணமாக (பகவானுடைய குணங்களில் மோகிப்பது என்பது ஒன்றும் இல்லாமல்) மேலே மேலே சொற்களைத் தொடுக்கும் ரிஷிகளைப்போல் அல்லரே ஆழ்வார். யாங்ஙனம்? எனின்,

அருளின பக்தியாலே - தர்மத்தின் ஆற்றலால் வந்ததற்கும் அங்ஙனம் வந்ததும் ஞானமாத்திரம் ஆனதற்கும் எதிர்த்தட்டாம்படி [4] "மயர்மற மதிநலம் அருளினன்" என்கிறபடியே ஒரு காரணமும் பற்றாமல் பகவானுடைய திருவருளால் வந்ததாய் ஞானத்தின் பரி பக்குவ நிலையாகிய பக்தியினாலே, உள்கலங்கி - தெளிவிற்கும் மகிழ்ச் சிக்கும் எதிர்த்தட்டாம்படி [5] "மதி எல்லாம் உள் கலங்கி" என்கிற படியே பகவானைப் பிரிந்த பிரிவாற்றாமையாலே ஞானமெல்லாம் அடிமண்டியோடே கலங்கி, சோகித்து - அப்படியே தான் விரும்பிய

1. ஹஸிதம் பாஷிதம் சைவ கதிர்யா யச்சசேஷ்டிதம்
   தத் ஸர்வம் தர்மவீர்யேண யதாவத்ஸம்ப்ரபச்யதி.

என்பது, ஸ்ரீராமா. பால. 3: 4.

2. திருவாய். 7. 5: 7.
3. "ந போதாத் அபரம் ஸுகம்" என்பது, பிரமாணம்.
4. திருவாய். 1. 1: 1.
5. திருவாய். 1. 4: 3.

வாறே பகவானுடைய அநுபவம் பெருமையாலே, [1]“ஆடி ஆடியகம் கரைந்து” என்பது முதலான திருப்பதிகங்களில் கூறுகிறபடியே சோகித்து, மூவாறு மாசம் மோஹித்து - மேலே மேலே தொடுக்குமதற்கு எதிர்த்தட்டாம்படி [2]“எத்திறம் உரலினோடு இணைந்திருந்து ஏங்கிய எளிவே” என்று, எல்லார்க்கும் அறப்பெரியவனாய் விரும்பப் படுகின்ற பொருள்கள் முழுதும் நிறைவுபெற்றவனா யிருக்கச்செய்தே, சிறியராய் ஆசையுடையராய் இருப்பாரைப் போலே அவன் செய்த வெண்ணெய் களவு கண்ட செயலையும் [3]“பிறந்தவாறும் வளர்ந்த வாறும்” என்று, கர்மங்கட்குக் கட்டுப்படாதவனாக இருக்கச் செய்தே, கர்மங்கட்குக் கட்டுப்பட்டவர்களைப் போலே பிறந்தபடியையும், [4]“கண்கள் சிவந்து பெரியவாய்” என்று கூறுகின்றபடியே “மாயக் கூத்தா” என்ற திருப்பதிகத்தில் தான் கண்ணும் வாயும் துவர்ந்தது போலே, தம்மைப் பிரிகையாலே அவன் கண்ணும் வாயும் துவர்ந்து, தம்மோடு கலந்த பின்பு அவை தம் நிறம்பெற்றபடியையும் நினைந்து ‘ஈதென்ன பிரகாரம், ஈதென்ன பிரகாரம்’ என்று ஒவ்வொரு செயலிலும் ஆறு ஆறு மாதமாக மூவாறு மாசம் மோஹித்து.

வருந்தி - [5]“வருந்தி நான் வாசக மாலை கொண்டு” என்கிற படியே, ஒரு சொல் எடுக்கும்போது ஒரு மலை எடுக்குமாறு போலே வருத்தப்பட்டு, ஏங்கி-[6]“என்று என்று ஏங்கி அழுதக்கால்” என்கிற படியே அநுபவத்தைப் பெறாத வருத்தத்தாலே அவன் படிகளைப் பல காலும் சொல்லிப் பொருமிப் பொருமி அழுது, தாழ்ந்த சொற்களாலே நூற்கிற இவர் - [7]“அங்கே தாழ்ந்த சொற்களால் அந்தண் குருகூர்ச் சடகோபன்” என்கிறபடியே “எங்கே காண்கேன்” என்கிற கட்டுக் குலைந்த மனத்தாலே தழுதழுத்த ஈரச் சொற்களாலே [8]“வண் தமிழ் நூற்க நோற்றேன்” என்கிறபடியே இப்பிரபந்தத்தைச் செய்கிற இவ் வாழ்வார் என்கை. (58)

1. திருவாய். 2. 4: 1.
2. திருவாய். 1 3: 1.
3. திருவாய். 5. 10: 1.
4. திருவாய். 8. 8: 1.

“பத்துடையடியவர்”, “பிறந்தவாறும்”, “கண்கள் சிவந்து” என்னும் இந்த மூன்று திருவாய்மொழிகளைப் பாடும்போது ஆறு ஆறு மாதங்கள் மோகித்துக் கிடந்தார் என்க.

5. திருவாய். 3. 8: 10.
6. திருவாய். 8. 5: 3.
7. திருவாய். 8. 5: 11.
8. திருவாய். 4. 5: 10.



## 59

[1]ஸ்வாத்யாய யோகங்களைக் கற்றும் தெளிந்தும் கண்டமை மைப்பாலே ஓதி உணர்ந்தவர் இன்னும் ஆசாபாசபத்தர்; அவன் வழங்கும் திவ்ய சக்ஷுஸ்ஸாலே நேரே கார்செறிந்த நீருடி கட்கரிய அரும் பொருளைக் கண்டபோதே யாம் உருமை என்னும்படி இவர்க்கு வன்பாசங்கள் நீங்கிற்று.

என்பது சூத்திரம்.

வியாக் :—இப்படிப் பகவானிடத்தில் வைத்த பக்தியினாலே ரிஷிகளைக் காட்டிலும் மேம்பட்டவராதல் அன்றிக்கே, வேறு விஷயங்களில் விருப்பு அற்றதன்மையாலும் அவர்களைக் காட்டிலும் ஆழ்வார் மேம்பட்டவர் என்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, ஸ்வாத்யாய யோகங்களைக் கற்றும் தெளிந்தும் - [2]“வேதத்தாலே பொருளை அறிந்து அஷ்டாங்க யோகத்தை அடையக் கடவன்; யோகத்தாலே வேதத்தை மீண்டும் சொல்லக் கடவன்; வேதம் யோகம் இவ்விரண்டின் நிறைவினால் பரம்பொருள் பிரகாசிக்கிறான்; அந்தப் பரம்பொருளைப் பார்ப்பதற்கு வேதம் ஒரு கண்; அப்படியே யோகம் சிறந்த கண்; பரம்பொருளாகிய அவன் ஊனக் கண்களால் பார்ப்பதற்கு முடியாதவன்.” என்கிறபடியே வேதமும் யோகமும் என்னும் இவ்விரண்டு கண்களாலும் ஒழிய ஊனக் கண்களால் பரம்பொருளைக் காணப் போகாமையாலே, ஸ்வாத்யாயம் என்ற சொல்லால் சொல்லப்படுகின்ற வேதத்தை ஓதியும் [3]இயமம் நியமம் முதலான அஷ்டாங்க யோகத்தைப் பயின்றும் அவ் வழியாலே

1. இச் சூத்திரத்தை, ஓதி உணர்ந்தவர் கண்டமை மைப்பாலே இன்னும் ஆசாபாசபத்தர்; அவன் வழங்கும் திவ்விய சக்ஷுஸ்ஸாலே நேரே கண்டபோதே இவர்க்கு வன் பாசங்கள் நீங்கிற்று என்று முடிக்க. ஸ்வாத்யாயம் - வேதம். கண்டமை - கண்ட காட்சியில். மைப்பாலே - கலக்கத்தாலே; மயக்கத்தாலே. “வானமே நோக்கும் மையாக்கும்” என்பது, திருவாய். 7. 2: 3.

2. ஸ்வாத்யாயாத் யோகமாஸீத யோகாத் ஸ்வாத்யாய மாமநேத்
ஸ்வாத்யாய யோகஸம்பத்த்யா பரமாத்மா ப்ரகாசதே.
ததீக்ஷணாய ஸ்வாத்யாயச் சக்ஷுர்யோகஸ் ததாபரம்
ந மாம்ஸ சக்ஷுஷா த்ரஷ்டும் ப்ரஹ்ம பூதஸ்ஸசக்யதே.
என்பன, ஸ்ரீவிஷ்ணுபுரா. 6. 6: 2, 3.

3. இயமம், நியமம், ஆசனம், வளிநிலை, தொகைநிலை, பொறைநிலை, நினைதல், சமாதி என்னும் எட்டுமாம்.

பொய் கொலை களவே காமம் பொருணசை
இவ்வகை யைந்தும் அடக்கிய நியமம்.

வேதம் யோகம் என்னும் இரண்டாலும் பார்க்கக்கூடிய பரம்பொருளை இத்தகையது என்று தெளிந்தும், கண்டமை - இவ்வழியால் தம் முயற்சியாலே கண்ட காட்சியில், மைப்பாலே - தெளிவில்லாமை யாலே, ஓதி உணர்ந்தவர் இன்னும் ஆசாபாசபத்தர்-[1] "ஓதி உணர்ந் தவர் முன்னு" என்கிறபடியே வேத சாஸ்திரங்களை ஓதி விடவேண்டு வனவற்றையும் பற்றவேண்டுமதனையும் அறிந்திருக்கிற ரிஷிகள் இன்றளவும் [2] "ஆசைகளாகிற பலவகைப்பட்ட தளைகளால் கட் டுண்டு இருப்பர்கள்." என்கிறபடியே இவ்வுலக வாழ்வாகிற சிற்றின் பங்கள் என்னும் ஆசைகளாகிற பலவகைப்பட்ட தளைகளாலே கட்டப் பட்டிருப்பர்கள்.

அவன் வழங்கும் திவ்ய சக்ஷுஸ்ஸாலே - [3] "உனக்குத் தெய் வத் தன்மை பொருந்திய கண்ணைக் (ஞானக்கண்) கொடுக்கிறேன்" என்கிறபடியே தன்னைக் காண்கைக்குக் கருவியாக அவன் கொடுத்த திவ்விய ஞானக்கண்ணாலே, நேரே கார் செறிந்த நீருடி கட்கரிய -

---

பெற்றதற் குவத்தல் பிழம்புநனி உணர்தல்
கற்பன கற்றல் கழிகடும் தூய்மை
பூசனைப் பெரும்பயம் ஆசாற் களித்தலொடு
நயனுடை மரபின் நியமம் ஐந்தே.

நிற்றல் இருத்தல் கிடத்தல் நடத்தல் என்று
ஒத்த நான்கின் ஒல்கா நிலைமையொடு
இன்பம் பயக்கும் சமய முதலிய
அந்தமில் சிறப்பின் ஆசன மாகும்.

உந்தியொடு புணர்ந்த இருவகை வளியும்
தந்தம் இயக்கம் தடுப்பது வளிநிலை.

பொறியுணர் வெல்லாம் புறத்தின் வழாமல்
ஒருவழிப் படுப்பது தொகைநிலைப் புறனே.

மனத்தினை ஒருவழி நிறுப்பது பொறையே.

நிறுத்திய அம்மனம் நிலைதிரி யாமல்
குறித்த பொருளொடு கொளுத்தல் நினைவே.

ஆங்ஙனம் குறித்த ஆய்முதற் பொருளொடு
தான்பிற னாகாத் தகையது சமாதி.

1. திருவாய். 3. 5: 5.

2. "ஆசாபாச சதை: பத்த"
என்பது, ஸ்ரீகீதை. 16: 12:

3. "திவ்யம் ததாமி தே சக்ஷு:"
என்பது, ஸ்ரீ கீதை, 11: 8.



[1] "நேரே கடிக்கமலத்துள் இருந்தும் காண்கிலான்" என்றும், [2] "கார் செறிந்த கண்டத்தான் எண்கண்ணன் காணுன்" என்றும், [3] "நீருடி தான் காணமாட்டாத தார் அகல சேவடி" என்றும், [4] "கட்கரிய பிரமன் சிவன் இந்திரன் என்றிவர்க்கும், கட்கரிய கண்ணன்" என் றும் சொல்லுகிறபடியே இவ்வருகு உள்ளாரைக் காட்டிலும் ஞானம் சக்தி முதலியவைகளால் உயர்ந்தவர்களாய், [5] "தாமோதரனைத் தனிமுதல்வனை ஞாலமுண்டவனை-ஒருவர்க்கும் தரம் அறியலாமோ" என்கிறபடியே தங்களை ஒழிய மற்று ஒருவர்க்கும் அறியப்போகாது என்றிருக்கும் பிரமன் சிவன் என்னும் இவர்களுக்கும் காண அரியனுய், அரும் பொருளை - [6] "அறிந்தன வேத வரும் பொருள் நூல்கள், அறிந்தன கொள்க அரும்பொருளாதல்" என்கிறபடியே [7] "எவன் பரம்பொருளை அளவிடப்பட்டதாக எண்ணவில்லையோ அவன் பரம்பொருளை அறிகிறுன்" என்பது போன்றவைகளால் வேதங்களும் அறிய அரிய பொருள் என்றே அறியும்படியாய், [8] "கேட் பார்க்கு அரும்பொருளாய் நின்ற" என்று, [9] "இந்தப் பரம்பொருள் மனனத்தாலும் அடையத் தக்கவன் அல்லன், தியானத்தாலும் அடையத் தக்கவன் அல்லன், கேள்வியாலும் அடையத் தக்கவன் அல்லன்" என்கிறபடியே, இறைவனுகிய தன்னுடைய திருஅருளால் ஒழிய [10] கேள்வி விமரிசம் பாவனைகளைச் செய்து தம் முயற்சியால் அறிய முயல்வார்க்கு அரிய பொருளான சர்வேச்வரனை.

கண்டபோதே - [11] "கண்டேன் கமலமலர்ப்பாதம்" என்கிற படியே அவன்தானே காட்டுகையாலே மிகத் தெளிவாகக் கண்ட போதே, யாம் உறுமை என்னும்படி - [12] "பொய்ந்நின்ற ஞானமும்" என்று தொடங்கி, "இந்நின்ற நீர்மை இனி யாம் உறுமை" என்று பொய்ந்நின்ற ஞானம் முதலானவற்றை விடுவித்தருளவேண்டும் என்று அவனைக் கால்கட்டும்படி, இவர்க்கு வன்பாசங்கள் நீங்கிற்று-

---

1. முதல்திருவந். 56.
2. நான்முகன் திருவந். 73.
3. நான்முகன் திருவந். 27.
4. திருவாய். 7. 7: 11.
5. திருவாய். 2. 7: 12.
6. திருவாய். 9. 3: 3.
7. "யஸ்யாமதம் தஸ்ய மதம்"
என்பது, கேநோபநிடதம்.
8. நான்முகன் திருவந். 60.
9. "நாயமாத்மா ப்ரவசநேந லப்யோ நமேதயா நபஹுநாச்ருதேந"
என்பது, கடோபநிடதம்.
10. கேள்வி, விமரிசம், பாவனை - கேட்டல், சிந்தித்தல், தெளிதல்.
11. திருவாய். 10. 4: 9.
12. திருவிருத்தம், 1.

[1] "மற்ற வன் பாசங்கள் முற்றவிட்டு" என்கிறபடியே தம் முயற்சியால் போக்க ஒண்ணுதபடி பிரபலமான புறப்பற்றுக்கள் [2] "பாசங்கள் நீக்கி என்னை உனக்கே அறக்கொண்டிட்டு" என்கிறபடியே அவனுடைய திருவருளாலே வாசனையோடு விட்டகன்றன என்கை. (59)

## 60

அவர்களுக்குக் காயோடு என்னும் இவையே தாரகாதிகள்; இவர்க்கு எல்லாம் கண்ணனிறே.

என்பது சூத்திரம்.

**வியாக் :—** இவ்வளவும் அன்றிக்கே உண்டி முதலியவற்றின் வேறுபாட்டினாலும் அவர்களைக் காட்டிலும் இவர்க்கு உண்டான வேறுபட்ட சிறப்பினை அருளிச்செய்கிருர் இச் சூத்திரத்தால்.

அதாவது, அவர்களுக்கு - பராசரர் வியாசர் வால்மீகி முதலான மஹரிஷிகளுக்கு, காயோடு என்னும் இவையே தாரக ஆதிகள் - [3] "காயோடு நீடு கனி உண்டு வீசு கடுங்கால் நுகர்ந்து" என்றும், [4] "வீழ்கனியும் ஊழ்இலையும் என்னும் இவையே நுகர்ந்து" என்றும் சொல்லுகிறபடியே கனிகள் கிழங்குகள் இலைகள் காற்றுத் தண்ணீர் என்னும் இவைகளே [5] தாரக போஷக போக்கியங்கள். இவர்க்கு எல்லாம் கண்ணனிறே - [6] "ரிஷியாகிற நம்மாழ்வாரை வணங்குகிறேன்" என்று இவரையும் ரிஷி என்று சொல்லிற்றேயாகிலும் உணவு முதலானவை அவை அல்ல; கிருஷ்ணனிடத்தில் உளதாய காதலின் உருவம்போல் இருக்கிற இவ்வாழ்வார்க்கு, [7] "உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்" என்கையாலே தாரக போஷக போக்கியங்கள் எல்லாம் கண்ணனே அன்றோ என்கை. (60)

---

1. திருவாய். 8. 2: 11.
2. திருவாய். 7. 8: 5.
3. பெரிய திருமொழி, 3. 2: 2.
4. பெரிய திருமடல், 12.
5. தாரகம் - தரிக்கச் செய்வது; நீர் முதலாயின. போஷகம் - புஷ்டியை (பலத்தை)த் தருவது; சோறு முதலாயின. போக்யம் - இன்பத்தைத் தருவது; தின்னும் வெற்றிலை முதலாயின.
6. "ருஷிம் ஜுஷாமஹே" என்பது பராங்குசாஷ்டகம்.
7. திருவாய். 6. 7: 1.



## 61

அழுநீர் துளும்பக் கடலும் மலையும் விசும்பும் துழாய், திருமால் என்று, எங்கே காண்கேன் என்னும் இவர் அலமாப்பு, அவர்களுக்குப் புத்திர வியோகத்திலே. [1]

என்பது சூத்திரம்.

**வியாக் :—** இப்படி எல்லா வகையாலும் இவ் உலக விஷயங்களில் நசை அற்றுப் பகவானிடத்திலேயே ஈடுபட்ட இவர், பகவானைப் பிரிந்த பிரிவிலே படுவன எல்லாம், அவர்கள், இவ் உலக விஷயங்களிலே பற்று அருமையாலே அவற்றைப் பிரிந்த பிரிவிலே படுவர்கள் என்கிருர் இச் சூத்திரத்தால்.

அதாவது, அழுநீர் துளும்ப - [2] "சேயரிக்கண் அழுநீர் துளும்ப அலமருகின்றன" என்கிறபடியே பகவானைப் பிரிந்த பிரிவின் துன்பத்தாலே கண்ணும் கண்ணீருமாய், கடலும் மலையும் விசும்பும் துழாய் - [3] "கடலும் மலையும் விசும்பும் துழாய்" என்கிறபடியே அளவிட்டு அறியமுடியாத கடலோடு அசைவில்லாத மலையோடு அச்சமான ஆகாசத்தோடு வாசிஅற எங்கும் தேடி, திருமால் என்று - [4] "சிந்தை கலங்கித் திருமால் என்று அழைப்பன்" என்கிறபடியே, மனம் கலங்கித் திருமாலே என்று கூப்பிட்டு, எங்கே காண்கேன் என்னும் இவர் அலமாப்பு - [5] "எங்கே காண்கேன் ஈன் துழாய் அம்மான் தன்னை", [6] "உன்னைக் காண்பான் நான் அலப்பாய்" என்கிறபடியே. எங்கே காணக் கடவேன் என்று இவர் படும் அலமாப்பு;

அவர்களுக்குப் புத்திர வியோகத்திலே-அந்த மஹரிஷிகளுக்குப் புதல்வர்களைப் பிரிந்த பிரிவிலேயாய் இருக்கும். எங்ஙனே? என்னில், [7] "அந்தப் பகவானன வசிஷ்ட முனிவர் மேரு மலையின் சிகரத்திலிருந்து விழுந்தார்; அவருடைய தலை கல்லில் பஞ்சுக் குவியலில் விழுவதுபோல் விழுந்தது; அப்போது அந்த முனிவர்தலைவன்

---

1. வியோகம் - பிரிவு.
2. திருவிருத்தம், 2.
3. திருவாய். 2. 1: 4.
4. திருவாய். 9. 8: 10.
5. திருவாய். 8. 5: 11:
6. திருவாய். 5. 8: 4.
7. ஸ மேரு கூடாதாத்மாநம் முமோச பகவாந்ருஷி:
 சிரஸ் தஸ்ய சிலாயாஞ்ச தூலராசாவிவாபதத்
 ந மமார ச பாதேந ததாஸ முநிஸத்தம:

அப்படி விழுந்ததனுல் இறந்தார் இலர்; ஏ முனிவரே! அந்த வசிஷ்ட பகவான் அப்படியே நெருப்பினை மூட்டி அதிலே புகுந்தார்; நெருப்பு மிக்க ஆற்றல் வாய்ந்ததாயினும் அப்போது அந்த நெருப்பு எரிந்துகொண்டிருந்தாலும் அவரை எரிக்கவில்லை; சோகத்தினுல் பீடிக்கப்பட்டிருக்கும் அந்த வசிஷ்ட முனிவர் கடலை அடைந்து பெரிய கல்லினைக் கழுத்தில் கட்டிக்கொண்டு அந்தக் கடலில் விழுந்தார்.'' என்கிறபடியே, ஸ்ரீ வசிஷ்ட பகவான் புத்திரனைப் பிரிந்த பிரிவின் துன்பத்தாலே மலையிலே ஏறி விழுவது, நெருப்பிலே புகுவது, கழுத்திலே கல்லைக் கட்டிக்கொண்டு கடலிலே விழுவது ஆகிய செயல்களைச் செய்தமையாலும், [1] ''வியாசர், புத்திரரான சுகரைப் பிரிந்த பிரிவிற்கு அஞ்சினவராய்ப் புத்திரனே! என்று கூப்பிட்டார்'' என்கிறபடியே, ஸ்ரீ வேதவியாச பகவான் புத்திரனைப் பிரிந்த பிரிவு பொறுக்கமாட்டாமல் புத்திரனே! என்று வாய்விட்டுக் கூப்பிட்டு அழுதுகொண்டு காணப் பெருமையால் அலமந்து திரிந்த செயலாலும் அவர்களுக்குப் புத்திரப் பிரிவிலே செல்லுமென்பது புராணப் பிரசித்தமாம் என்கை. (61)

## 62

[2] பல சாதன தேவதாந்தரங்களில் இவர்கள்
நினைவு பேச்சிலே தோன்றும்.

என்பது சூத்திரம்.

**வியாக் :**—மேற்கூறிப் போந்த அளவன்றியே, பலன் பலத்தினைப் பெறுதற்குரிய வழி முதலாயினவற்றில், இவர்களுடைய நினைவின்

---

ததாக்நிமித்த்வா பகவாந் ஸ விவேச மஹாவநே
தம் ததா ஸுஸமித்தோபி ந ததாஹ ஹுதாசந:
தீப்யமாநோப்யமித்ரக்நம் சிதோக்நிரபவத்ததா
ஸ ஸமுத்ரமபிப்ரேத்ய சோகாவிஷ்டோ மஹாமுநி:
கண்டே பத்த்வா சிலாம் குர்வீம் நிபபாத ததம்பஸி.

என்பது. பிரமாணம்.

1. "த்வைபாயநோ விரஹகாதர ஆஜுஹாவ, புத்ரேதி" என்பது, ஸ்ரீ பாகவதம், 1. 2: 2.

2. பகவானை அடைதலே உபேயம் என்றும், கர்மஞானபக்திகளே உபாயம் என்றும், மற்றைத் தெய்வங்களையும் வணங்கலாம் என்றும் கூறியிருக்கின்ற மஹரிஷிகளைக் காட்டிலும், பகவத்கைங்கர்யமே உபேயம் என்றும், பிரபத்தியே உபாயம் என்றும், மறந்தும் புறம் தொழலாகாது என்றும் அருளிச் செய்திருக்கிற ஆழ்வார் பரமவிலக்ஷணர் என்கிறார் இச் சூத்திரத்தால்.



விசேடத்தாலும் மஹரிஷிகளுக்கும் ஆழ்வாருக்கும் உண்டான நெடுவாசியை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, பல சாதந தேவதாந்தரங்களில் - பலன் என்ன, அதனைப் பெறுதற்குரிய வழி என்ன, வேறு தெய்வங்கள் என்ன, இவற்றின் விஷயத்தில், இவர்கள் நினைவு பேச்சிலே தோன்றும் - அவர்கள் நினைவும் இவர் நினைவும் அவர்களுடைய பேச்சிலும் இவருடைய பேச்சிலும் தெரியும் என்கை.

யாங்ஙனம்? எனின், [1] ''தனக்குமேல் ஒன்றும் இல்லாததான ஆனந்த ரூபமான சுகம் ஒன்றையே வடிவாகவுடையதும் துக்கம் இல்லாததும் மீண்டு வருதல் இல்லாததுமான பகவானை அடையும் பேறுனது, சம்சார துக்கத்துக்கு மருந்தாக இருக்கும்; ஆகையால் பண்டிதர்களான மனிதர்கள் அந்த எம்பெருமானை அடைவதற்கு முயற்சி செய்யக் கடவர்; மைத்ரேய முனிவரே! ஞானமும் கர்மமும் அவனை அடைவதற்கு உபாயமாகச் சொல்லப்பட்டன'' என்பன போன்றவைகளால் பகவானை அடைதலே பலமாகவும், கருமமும் ஞானமுமே அவனை அடைதற்குரிய வழியாகவும், இந்திரன் முதலான தேவர்களிடத்தில் அந்தரியாமியாக உள்ள சர்வேச்வரனே உத்தேச்யனுகையாலே இந்திரன் முதலான தேவர்கள் பற்றத்தக்கவர்கள் என்பதாகவும் மஹரிஷிகள் சொல்லுவர்கள். ஆழ்வாரோ என்றால், [2] ''தனக்கேயாக எனைக் கொள்ளும் ஈதே'', [3] ''வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்'' என்கிறபடியே கைங்கரியத்தைப் புருஷார்த்தமாகவும், அதற்கு வழியும் [4] ''நாகணைமிசை நம்பிரான் சரணே சரண்'', [5] ''அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே'' என்கிறபடியே பிரபத்தியாகவும், [6] ''மற்றொரு தெய்வம் தொழாள்'' என்கிறபடியே மற்றைத் தேவர்கள் வணங்கத் தக்கவர் அல்லர் என்றும் இவர் அருளிச்செய்வர். ஆதலால், அவர்கட்கும் ஆழ்வார்க்கும் மிக்க வேற்றுமை உண்டு என்க.

---

1. நிரஸ்தாதிசயாஹ்லாத ஸுக பாவைகலக்ஷண
பேஷஜம் பகவத் ப்ராப்திரேகாந்தாத்யந்திகீமதா.
தஸ்மாத் தத் ப்ராப்தயே யத்ந: கர்த்தவ்ய: பண்டிதைர்நரை:
தத் ப்ராப்தி ஹேதுர் ஜ்ஞாநஞ்ச கர்ம சோக்தம் மஹாமுநே.
என்பன, ஸ்ரீவிஷ்ணுபுரா. 6. 5: 59, 60.

2. திருவாய். 2. 9: 4.
3. திருவாய் 3. 3: 1.
4. திருவாய். 5. 10: 11.
5. திருவாய். 6. 10: 10.
6. திருவாய். 4. 6: 10.

எல்லா வேதங்களினுடைய சுருக்கமான திருமந்திரத்தில் முதற் பதமான பிரணவத்தாலே சேஷத்வத்தாலேயே அறியத் தகுந்ததாகச் சொல்லப்பட்ட ஆன்மாவிற்கு, அதனுடைய சொரூபத்திற்குத் தகுந்த தான பயன் 'நாராயணாய' என்ற பதத்திலே உள்ள 'ஆய' என்னும் நான்காம் வேற்றுமையால் சொல்லப்பட்ட கைங்கரியமே ஆகை யாலும், 'நம:' பதத்தாலே சொல்லப்பட்டதான பகவானுக்கே வசமாயிருத்தலாகிற பகவானிடத்தில் கொண்ட அத்யந்த பாரதந் திரியத்துக்கு, (மோக்ஷத்திற்குச் சாதனமான காரியங்களிலும் சம்பந்த மற்றிருத்தல்) அந்த இறைவனையே உபாயமாகக் கொள்ளுமதொழியத் தன்னுடைய காவலுக்குத் தான் முயற்சி செய்தல் கூடாமையாலும், பிரணவத்தில் நடு எழுத்தான உகாரத்தால் சொல்லப்பட்டதான பகவான் ஒருவனுக்கே அடிமைப்பட்டிருத்தலான பகவதநந்யார்ஹத் வத்துக்கு, (பகவான் ஒருவனுக்கே உரியவனாக இருத்தல்) மற்றைத் தெய்வங்களை வழிபாடு செய்தல் சிறிதும் பொருந்தாமையாலும்; பகவானை அடைதல் மாத்திரத்தையே பலமாகவும் தன் முயற்சியால் செய்யப்படும் கருமம் முதலானவைகளை உபாயமாகவும் அகங்காரத் தோடு கூடிய மற்றைத் தெய்வங்கள் பகவானுக்குச் சரீரமாக இருப் பதனாலே அவர்களும் அத் தன்மையால் வணங்கத்தக்கவர்கள் என்றும் கொள்ளுமது, ஆன்ம சொரூபத்தை உள்ளபடி உணர்ந்த ஞானிகளுக்கு விடத்தக்கதாயன்றோ இருக்கின்றது.

ஆனபின்பு, பலன், பலத்தை அடைதற்குரிய சாதனம், பலத் தைக் கொடுக்கும் தெய்வங்கள் என்னும் இம் மூன்றன் திறத்திலும் அம் முனிவர்கள் நினைவிற்கும் இவ் வாழ்வார் திருவுள்ளத்திற்கும் மிக்க வேற்றுமை உண்டு ஆகையாலே, இவ் வழியாலும் அம் முனிவர்களைக் காட்டிலும் இவ் வாழ்வார்க்கு வேற்றுமை மிகமிக உண்டு என்றதாயிற்று. (62)

### 63

[1] *ராமாயணம் நாராயண கதை என்று தொடங்கி, கங்கா காங்கேய சம்பவாதி அசத்கீர்த் தனம் பண்ணின எச்சில்வாய் சுத்தி பண்ணுமல், திருமாலவன் கவி என்ற வாயோலைப்படியே, மாற்றங் கள் ஆய்ந்து சொண்டு உரிய சொல் வாய்த்த இது, வேதாதிகளில் பௌருஷ மாநவ கீதா வைஷ்ணவங் கள் போலே அருளிச்செயலில் சாரம்.*

1. இச்சூத்திரத்தில் முற்பகுதியை ராமாயணம் என்று தொடங்கிக் கங்கா காங்கேய சம்பவாதி அசத்கீர்த்தநம் பண்ணின எச்சில் வாய் சுத்தி பண்ணுமல் என்றும், நாராயணகதை என்று தொடங்கிக் காங்கேய சம்ப வாதி அசத்கீர்த்தநம் பண்ணின எச்சில் வாய் சுத்தி பண்ணுமல் என்றும் தனித்தனியே பிரித்துக் கூட்டுக. எச்சில் வாய் சுத்தி பண்ணினவர்கள்,



என்பது சூத்திரம்.

வியாக் :—ஆக, "தர்ம வீர்ய ஞானத்தாலே" என்ற சூத் திரமுதல் மேற் சூத்திரமுடிய இத் தமிழ்மறையை அருளிச்செய்த ஆழ்வாருடைய ஒப்புயர்வற்ற சீர்மையினை அருளிச்செய்தார். இனி, இத் தமிழ்மறையின் ஈடும் எடுப்புமில்லாத சீர்மையினை அருளிச் செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, ராமாயணம் என்று தொடங்கி - [1] "இராமாயண காவியம் முழுதும் இத்தகைய சுலோகங்களால் நான் செய்கிறேன்" என்கிறபடியே இராம சரிதையைச் சொல்வதாக இராமாயணம் என்று தொடங்கி. கங்கா காங்கேய சம்பவ ஆதி அசத் கீர்த்தனம் பண்ணின எச்சில்வாய் - கங்கையின் தோற்றம், முருகன் பிறப்பு, புஷ்பக விமான வர்ணனை முதலான பொருள் அல்லாத கதைகளைப் பரக்கப் பேசுகையாலே வாக்கிற்குத் தூய்மை இன்மை வந்தது ஸ்ரீ வால்மீகி பகவானுக்கு.

நாராயண கதை என்று தொடங்கி - [2] "நாராயணனுடைய இந்தக் கதையைச் சொல்லப் போகிறேன்" என்றபடி நாராயண கதையைத் தொடங்கி. காங்கேய சம்பவ ஆதி அசத் கீர்த்தனம் பண்ணின எச்சில்வாய் - பாரதத்திலே சம்பவ பர்வத்திலே ஸ்ரீ வீடுமருடைய பிறப்பு முதலாகப் பலருடைய பிறப்புக்களையும் மிக விரிவாகப் பேசுவதாலும், 'பூசல் பட்டோலை' (போரைப் பற்றிக் கூறும் நூல்) என்னும்படி பாரதப் போர் வகைகளையே பரக்க நின்று வர்ணித்தபடியாலும் பொருள் அல்லாதனவற்றைப் பேசுகையிலே மிகவும் பரந்து தூய்மை இழந்த வாக்கினை, [3] "பொருள் அல்லாத வற்றைப் பேசுதலாகிற காட்டிலே சுற்றியதால் புழுதி அடைந்த

ஸ்ரீ வால்மீகிபகவானும் ஸ்ரீ வியாசபகவானும். காங்கேயன் - முருகன்; வீடுமன். சம்பவம் - பிறப்பு. பௌருஷம் - புருஷசூக்தம். மாநவம் - மநுதர்ம சாஸ்திரம். கீதா - பகவத்கீதை. வைஷ்ணவம் - ஸ்ரீவிஷ்ணு புராணம்.

1. "காவ்யம் ராமாயணம் க்ருத்ஸ்நம் ஈத்ருசை: கரவாண்யம்" என்பது, ஸ்ரீராமா. பால. 2: 42.

2. "நாராயண கதாம் இமாம்" என்பது, பாரதம் ஆதிபர்.

3. அசத்கீர்த்தந காந்தார பரிவர்த்தந பாம்ஸுலாம்
வாசம் சௌரி கதாலாப கங்கயைவ புநீமஹே.
என்பது, ஹரிவம்சம்.

வாக்கினைக் கண்ணபிரானுடைய சரிதையைச் சொல்லுதலாகிற கங்கை நீராலே தூய்மை ஆக்குகிறேன்" என்கிறபடியே பொருள் அல்லாதவற்றைப் பேசுதலாகிற காட்டிலே அலமந்து புழுதிபடைத்த வாக்கினைப் பகவானுடைய சரிதையைப் பேசுதலாகிற கங்கையாலே தூய்மை ஆக்குகிறேன் என்று தூய்மை ஆக்கினார் ஸ்ரீ வேத வியாச பகவான்.

ஸ்ரீ வால்மீகி பகவான் இப்படிக் கழிவிரக்கம் கொண்டு வருந்தி வாக்கினைத் தூய்மை செய்ததாக ஸ்ரீ ராமாயணத்தில் இல்லையே யாயினும் இந்த நியாயம் அவருக்கும் ஒக்கும் என்று திருவுள்ளம்பற்றி அவரையும் கூட்டி அருளிச் செய்கிறார்.

சுத்தி பண்ணுமல் - ஆக, இப்படித் தொடங்கியதற்குச் சேராத படி பொருள் அல்லாதனவற்றைப் பேசி வாக்கினைத் தூய்மை இழக்கச்செய்து பின் அதற்கு இரங்கிச் சுத்திபண்ண வேண்டாதபடி, திருமாலவன் கவி என்ற வாயோலைப்படியே - [1] "திருமாலவன் கவி யாது கற்றேன்" என்கிறபடியே திருமகள் கேள்வனுடைய கவி என்று முதல் பிரபந்தமாகிய திருவிருத்தத்தில் வாயோலை இட்ட வகையிலே. மாற்றங்கள் ஆய்ந்து கொண்டு - [2] "மாற்றங்கள் ஆய்ந்து கொண்டு மதுசூதபிரான் அடிமேல்" என்கிறபடியே வேறு பொருளைக் குறிக்கும் சொற்கள் ஒன்றும் ஊடு கலசாதபடி சொற்களைத் தெரிந்தெடுத்து, உரிய சொல் வாய்த்த இது - [3] "உரிய சொல்லால் இசை மாலைகள் ஏத்தி" என்கிறபடியே விஷயத்துக்குத் தகுதியவான சொற்களாலே சொல்லப்பட்டதாய், [4] "வாய்த்த ஆயிரம்" என்கிறபடியே சொற்களுக்குப் பொருளான சர்வேச்வரனுக்கு வாய்த்த இப் பிரபந்தம்;

வேதாதிகளில் பௌருஷ மாநவ கீதா வைஷ்ணவங்கள் போலே- [5] "வேதங்களுக்குள் புருஷ சூக்தமும், தர்ம சாஸ்திரங்களுக்குள் மநு தர்ம சாஸ்திரமும், பாரதத்தில் பகவத் கீதையும். புராணங்களில் ஸ்ரீ விஷ்ணு புராணமும் உயர்ந்தவைகளாம்" என்கிறபடியே வேதங்களில் புருஷ சூக்தமும், தர்ம சாஸ்திரங்களில் மநுவினால் சொல்லப்பட்ட மநுதர்ம சாஸ்திரமும். மஹா பாரதத்தில் ஸ்ரீ கீதையும்,

1. திருவிருத்தம், 48.
2. திருவாய். 6. 8: 11.
3. திருவாய். 4. 5: 6.
4. திருவாய். 2. 2: 11.
5. வேதேஷு பௌருஷம் ஸூக்தம் தர்மசாஸ்த்ரேஷு மாநவம் பாரதே பகவத்கீதா புராணேஷு ச வைஷ்ணவம்.

என்பது, பிரமாணம்.



புராணங்களில் ஸ்ரீ விஷ்ணு புராணமும் சாரமாக இருக்குமாறு போலே, அருளிச் செயலில் சாரம் - வேறு கதைகளின் சம்பந்தம் சிறிதும் இல்லாத நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் சாரமாக இருக்கும்.

இத்தால், [1] "தீது இல் அந்தாதி" என்கிறபடியே இறைவன் சரித சம்பந்தமானவைகள் தவிர வேறு கதைகளைச் சொல்லுதலாகிற குற்றம் சிறிதும் இல்லாமையாலே, மஹரிஷிகளால் சொல்லப்பட்ட நூல்களைக் காட்டிலும் வேறுபட்ட சிறப்பினையுடையதாய், பகவானைப் பற்றிச் சொல்லுகிற ஆற்றலாலே பகவானையே பற்றிப் பேசுகிற மற்றை ஆழ்வார்கள் பிரபந்தங்களிலும் சாரமாக இருக்கும் என்று திருவாய்மொழியினுடைய சிறப்பு சொல்லிற்றாயிற்று. (63)

## 64

> குரு சிஷ்ய கிரந்த விரோதங்களைப் பரமதாதிகளாலே பரிஹரியாமல், செஞ்சொல் செந்தமிழ் இன் கவி பரவி அழைக்கும் என்று அந்யோந்யம் கொண்டாடிப் பேசிற்றே பேசும் ஏக கண்டரில், என்னில் மிகும் என்னும் இவர் உரை கொள் இன்மொழி கொண்டு சாஸ்திரார்த்தங்கள் நிர்ணயிக்க வேண்டுகையாலே வலங்கொண்ட இதுக்குச் சேராதவை மநு விபரீதங்கள் போலே. [2]

என்பது சூத்திரம்.

வியாக் :—இனிமேல் இப்படி நாலாயிரத் திவ்யப்பிரபந்தத்தில் சாரமாக இருக்கின்ற இத்திருவாய்மொழி மேம்பட்ட பிரமாணமாகும் தன்மையை விளக்குவதற்காக ஆழ்வார்கள் பதின்மரும் பேசிற்றே பேசுமவர்கள் என்பதனையும், அவர்களில் தலைவரான இவர் அருளிச் செய்த இத் திருவாய்மொழியினுடைய ஏற்றத்தையும் அருளிச் செய்யாநின்றுகொண்டு, இத்தகைய இத் திருவாய்மொழிக்குச் சேராத சாஸ்திரங்கள் ஆராய்வார்க்குத் தக்கன அல்ல என்று அருளிச் செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, குரு சிஷ்ய கிரந்த விரோதங்களை - இருடிகளில் குரு சிஷ்யர்களான வியாசர் சைமினி என்னும் இவர்களில், குருவான

1. திருவாய். 8. 2: 11.

2. இச்சூத்திரத்தின் ஈற்றில் 'விலக்கப்படுவனவாம்' என ஒரு சொல் கொணர்ந்து கூட்டிச் சூத்திரப் பொருளை முடிக்க.

வியாசருடைய நூலான [1]பிரஹ்ம **சூத்திரத்**தோடு, சிஷ்யனான சைமிநியுடைய நூலான [2]கர்ம சூத்திரத்திற்குத் ‘தெய்வம் இல்லை’ என்று கூறல் முதலியவைகளால் [3] வந்த முரண்பாட்டினை,

[4]“ ஸம்பத்தே: இதி ஜைமிநி: - பிராணாஹுதி ஹோமங்களை அக்நி ஹோத்ர ஹோமங்களாகச் செய்வதற்காக உபாசகனுடைய மார்பு முதலான உறுப்புக்களை நெருப்புக்களாகக் கூறியுள்ளது என்று ஜைமிநி சொன்னார்” என்றும், [5] “ அந்யார்த்தம் து ஜைமிநி: - வேறு பயனுக்காகவே இங்கு ஜீவனைச் சொல்லுகிறது என்று ஜைமிநி சொல்லுகிறார்” என்றும், [6] “ பரம் ஜைமிநி: முக்யத்வாத் - பரப் பிரஹ்மத்தை உபாசிக்கின்றவர்களையே ஆதிவாஹிகர்கள் அழைத்துக் கொண்டு போகிறார்கள் என்று ஜைமிநி எண்ணுகிறார்; ‘பிரஹ்ம கமயதி’ என்ற இடத்திலுள்ள பிரஹ்மசப்தம் பிரஹ்மத்தினிடமே முக்கியமாக இருப்பதால்” என்றும், [7] “ ப்ராஹ்மேண ஜைமிநி: - பிரஹ்ம சம்பந்தியான அபஹத பாப்மத்வம் முதலான குணங்களோடு முக்தன் தோன்றுகிறான் என்று ஜைமிநி சொல்லுகிறார்” என்றும் வருவன போன்ற பிரஹ்ம சூத்திரங்களாலே, பரம்பொருள் சொரூபத்திலும் அதனுடைய குணங்களிலும் அதனை உபாசிப்பதிலும் உபாசிப்பதால் உளவாகும் பலன்களிலும் ஜைமிநிக்கு உடன்பாடு உண்டு என்னுமிடம் தோற்றுகையாலும், மகாபாரதத்திலே ஹயசிர சரிதம் முதலானவைகளிலே வியாசபகவானுடைய உபதேசத்தாலே கிடைக்கப்பெற்ற பரம்பொருள் தத்துவஞானத்தை யுடையவரானார் ஜைமிநி என்று சொல்லுகையாலும் ஸ்ரீ வேதவியாசரும் ஜைமிநியும் [8] ஏக கண்டர்கள்.

---

1. *பிரஹ்ம சூத்திரம் என்பது, வேதத்தின் பின்பாகங்கட்கு ஸ்ரீ வேதவியாசபகவானால் சூத்திர ரூபமாக அருளிச் செய்யப்பட்ட விசாரத்தோடு கூடிய வியாக்கியானம். இதனை; உத்தர மீமாம்சை என்றும் கூறுவர்.*

2. *கர்ம சூத்திரம் என்பது, வேதத்தின் முன்பாகங்கட்கு ஜைமிநி முனிவரால் சூத்திர ரூபமாக அருளிச் செய்யப்பட்ட விசாரத்தோடு கூடிய வியாக்யானம். இது பூர்வமீமாம்சை என்றும் பெயர் பெறும்.*

3. *‘வந்த முரண்பாட்டினை’ என்னும் இதனை, பின்னே வருகின்ற ‘பரிஹாரம் செய்திருக்கின்றார்கள்’ என்றதனோடு கூட்டி முடிக்க.*

4. *பிரஹ்மசூத்.* 1. 2: 32.   5. *பிரஹ்மசூத்.* 1. 4: 18.

6. *பிரஹ்மசூத்.* 4. 3: 11.   7. *பிரஹ்மசூத்.* 4. 4: 5.

8. *ஏக கண்டர்கள் - பேசிற்றே பேசும் குரலையுடையவர்கள்.*



பர மத ஆதிகளாலே பரிஹரியாமல் - இங்ஙனம் இருக்கவும், ஜைமிநி ‘தெய்வம் இல்லை’ என்று கூறின இது, ‘வேதம் இறைவனால் சொல்லப்பட்டது’ என்று சிலர் சொல்லுகையாலே புருஷனால் சொல்லப்பட்ட அத்தன்மை காரணமாக வஞ்சித்தல் முதலான குற்றங்களை வேதத்திற்குக் கற்பித்து, அதனால் வேதம் பிரமாணம் ஆகமாட்டாது என்று சொல்லுவது, வைதிக கர்மங்களை நிந்திப்பது ஆகிற செயல்களைச் செய்கின்ற புறச் சமயத்தாரை மறுத்து, ‘வேதம் சிறந்ததொரு பிரமாணம், கர்மங்கள் அவசியம் செய்யத் தக்கவை’ என்பனவற்றை அறுதியிடுகையில் உண்டான இச்சையாலே, தன்னுடைய கொள்கை அல்லாததாக இருந்தும் பிறர் தம் மதத்தை மேற்கொண்டு சொன்னார் என்றுதல்; அன்றிக்கே, ‘கடவுள் இல்லை’ என்று சொல்லுவதில் கருத்து அன்று; வேதங்களைக் கேட்கலாகாதார்க்குக் கருமங்களைச் செய்வதில் விருப்பம் இன்மையை விலக்குவதற்காகக் கருமங்களினுடைய முக்யத்வத்தைச் சொல்லுகையிலே கருத்து ஆகையாலே, [1] “நிந்தையானது, நிந்திக்கும் பொருளை நிந்திப்பதற்கு வரவில்லை; நிந்திக்கும் பொருளைக் காட்டிலும் வேறானதொரு பொருளைத் துதிப்பதற்காக வந்தது” என்கிற நியாயத்தாலே ‘கடவுள் இல்லை’ என்று கூறின இது, கர்மங்களை அவசியம் செய்ய வேண்டும் என்பதன் பொருட்டு ஆகையாலே வேறொன்றிலே நோக்கு என்றுதல் கொள்ள வேண்டும் என்று, இப்படி, பிறர் தம் மதம் மேற்கொண்டு கூறினார், வேறொன்றனை உட்கொண்டு கூறினார் என்று பரிஹாரம் செய்திருக்கிறார்கள்.

செஞ்சொல் செந்தமிழ் இன்கவி பரவி அழைக்கும் என்று அந்யோந்யம் கொண்டாடி - அப்படியே இங்கும் ஒருவர் கூற்றுக்கு மற்றொருவர் கூற்று முரண்பட்டதாய் அதற்கு ஒரு பரிஹாரம் செய்ய வேண்டாதபடி [2] “செஞ்சொற் கவிகாள்” என்றும், [3] “செந்தமிழ் பாடுவார் தாம் வணங்கும்” என்றும், [4] “இன்கவி பாடும் பரம கவிகளால்” என்றும், [5] “பதியே! பரவித்தொழும் தொண்டர்” என்றும், [6] “அரங்கவோ என்று அழைக்கும் தொண்டர்” என்றும் ஒருவருக்

---

1. *“நஹி நிந்தா நிந்த்யம் நிந்திதும் ப்ரவர்த்ததே,*
   *நிந்திதாத் இதரத் ப்ரஸம்ஸிதும்”*

*என்பது, பிரமாணம்.*

2. *திருவாய்.* 10. 7: 1.   3. *பெரியதிருமொழி,* 2. 8: 2.

4. *திருவாய்.* 7. 9: 6.   5. *பெரியதிருமொழி,* 7. 1: 7.

6. *பெருமாள் திரு.* 2: 2.

கொருவர் பெருமைபடப் பேசிக் கொண்டு, பேசிற்றே பேசும் ஏககண்டரில்-[1] "பேசிற்றே பேசல் அல்லால்" என்கிறபடியே ஒருவர் பேசினதையே எல்லாரும் பேசும் ஒரே குரலினரான ஆழ்வார்களில் வைத்துக் கொண்டு, என்னில் மிகும் என்னும் இவர் - [2] "என்னில் மிகு புகழார் யாவரே" என்கிறபடியே, தலைவனுக்கு மகிழ்ச்சியினை உண்டாக்குமவராகப் பெற்ற பிரீதியின் மிகுதியாலே என்னிற் காட்டிலும் மிக்க புகழையுடையார் யார் என்று பேசிய சர்வ அதிகாரான (எல்லார்க்கும் பெரியர்) இவருடைய, உரைகொள் இன் மொழி கொண்டு - [3] "உரைகொள் இன் மொழியாலே" என்கிறபடியே ஸ்ரீ ராமாயணம் முதலானவைகளையும் தம்முடைய வேறுபட்ட சிறப்பினாலே வெல்லும் படியான சொற்களின் ஆற்றல்களைக் கொண்டு, சாஸ்திரார்த்தங்கள் நிர்ணயிக்க வேண்டுகையாலே - வேதங்களிலும் அவற்றின் பொருள்களை விவரித்துக் கூறுகின்ற இதிகாச புராணங்களிலும் ஐயம் தருகின்ற பொருள்களை அறுதியிட வேண்டும்படி இருக்கையாலே, வலம் கொண்ட இதுக்குச் சேராதவை - [4] "வலம் கொண்ட ஆயிரம்" என்கிறபடியே பரம் பொருளின் தன்மையை உள்ளபடியே சொல்ல வல்ல ஆற்றலையுடைத்தான இத்திருவாய்மொழிக்குச் சேராத சாஸ்திரங்கள், மநு விபரீதங்கள் போலே - [5] "எந்த ஸ்மிருதியானது மநுவினால் சொல்லப்பட்ட பொருளுக்கு மாறுபட்டிருக்கிறதோ அது, புகழப்படுவதில்லை" என்கிறபடியே மநு தர்மசாஸ்திரத்திற்கு மாறுபட்ட ஸ்மிருதிகள் விலக்கப்படுவன போன்று விலக்கப் படுவனவாம் என்கை. (64)

## 65

[6] பாஷ்யகாரர் இதுகொண்டு சூத்ரவாக்யங்கள் ஒருங்க விடுவர்.

என்பது சூத்திரம்.

வியாக்: இப்படி இத் திருவாய்மொழியின் துணைகொண்டு சாஸ்திரங்களின் பொருள்களை அறுதியிட்டவர் யார் என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

---

1. திருமாலை, 22. 2. பெரியதிருவந். 4.
3. திருவாய். 6. 5: 3. 4. திருவாய். 3. 8: 11.
5. "மந்வர்த்த விபரீதா து யாஸ்மிருதி: ஸா ந சஸ்யதே" என்பது, பிரமாணம்.
6. பாஷ்யகாரர் - ஸ்ரீ இராமாநுசர், சூத்ரம் - பிரஹ்ம சூத்திரம்.



அதாவது, பாஷ்யகாரர் - இராமாநுசர் பிரஹ்ம சூத்திரத்திற்கு ஸ்ரீ பாஷ்யம் செய்தருளும் போது, சூத்ர வாக்யங்கள் - சூத்ர வாக்யங்களில் ஐயப்பட்ட அர்த்த விசேடங்களை எல்லாம், இது கொண்டு - இத் திருவாய்மொழியின் ஸ்ரீ சூக்திகளைக் கொண்டு, ஒருங்க விடுவர் - அறுதியிட்டு ஒருங்கவிட்டருளுவர் என்கை. (65)

## 66

அதுக்கு மூலம் 'விதயஶ்ச' என்கிற பரமாசார்ய வசனம்.

என்பது சூத்திரம்.

வியாக்: அவர்தாம் அப்படி அருளிச் செய்வதற்குக் காரணம் யாது? என்னும் வினாவிற்கு விடை அருளிச் செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, அதுக்கு மூலம்-இராமாநுசர், திருவாய் மொழியின் ஸ்ரீ சூக்திகளைக் கொண்டு சூத்திர வாக்கியங்களை ஒருங்க விட்டருளுவதற்குக் காரணம், 'விதயஶ்ச' என்கிற [1] பரமாசார்ய வசனம் - [2] "வேதத்தில் சொல்லப்படுகின்ற விதிகள், தேவரீரைச் சரணமாகப் பற்றியிருக்கின்ற பெரியோர்களுடைய கம்பீரமான மனத்தினை அநுசரித்தவைகளாக ஆகின்றன" என்று கூறப்படும் சுலோகத்தில், [3] "இதனைச் செய்க", "இதனைச் செய்யற்க" என்கிற சுதந்திரமான வேத விதிகளும், வேறொரு பயனையும் கருதாதவர்களாய் உன்னையே பற்றியிருக்கின்ற பெரியோர்களுடைய, செல்வம் முதலியவற்றால் கலக்க வொண்ணாதபடி கம்பீரமான மனத்தினைப் பின் செல்லும் என்று இவ்வாழ்வார் போல்வார் நினைவினைச் சாஸ்திரங்கள்தாம் பின் செல்லுவனவாகப் பரமாசார்யரான ஸ்ரீ ஆளவந்தார் அருளிச்செய்த வார்த்தை என்கை. (66)

## 67

ஆப்திக்கு, இவர் சுருதி மார்க்கண்டேயன் பார்த்தன் என்கிற இவை, வியாச மநு பிரஹ்ம வாதிகளை வேதம் சொல்லுமா போலே.

என்பது சூத்திரம்.

---

1. பரமாசார்யர் - ஸ்ரீ ஆளவந்தார்.
2. "விதயஶ்ச வைதிகாஸ்த்வதீய கம்பீர மநோநுஸாரிண:" என்பது, தோத்திர ரத்நம், 20.
3. "இதம் குரு; இதம் மாகார்ஷீ:" என்பது, ஆரணம்.

வியாக்: இப்படிப் பிரமாணங்களை அறுதியிடும் பெரியோர்கள், இத் திருவாய்மொழியினைக் கொண்டு சாஸ்திரங்களின் நுண் பொருளினை அறுதியிடும்படி, எல்லா வேதங்களைக் காட்டிலும் இதிகாச புராணங்களைக் காட்டிலும் மிக்க பிரபலமாய், இத்துணையே அன்றி, மேற்கூறியபடியே தமிழ்மறையாய்க்கொண்டு வேத சமமாய் நம்பிக்கை மிக்க இத் திருவாய்மொழியிலே, நம்பிக்கைக்கு உறுப்பாக, இவர் வேறே சில சான்றுகளை எடுத்துப் பேசுவான் என்? என்னும் வினவிற்கு விடை அருளிச் செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, ஆப்திக்கு - இத் திருவாய்மொழியில் சொல்லுகிற அர்த்தங்களில் நம்பிக்கைக்கு உறுப்பாக, இவர் சுருதி மார்க்கண்டேயன் பார்த்தன் என்கிற இவை - இவர் [1] "உளன் சுடர்மிகு சுருதியுள்" என்றும், [2] "மார்க்கண்டேயனும் கரியே" என்றும், [3] "பார்த்தன் தெளிந்தொழிந்த பைந்துழாயான் பெருமை" என்றும் சுருதியையும் மார்க்கண்டேயனையும் அருச்சுனனையும் சொல்லுதல், வேதம் வியாச மநு பிரஹ்மவாதிகளைச் சொல்லுமா போலே - உண்மைப் பொருளை உள்ளவாறு சொல்லுவதில் ஒப்புயர்வற்று விளங்குகிற வேதமானது [4] "பராசர முனிவருடைய புதல்வரான அந்த வியாசர் சொன்னார்" என்றும், [5] "எது ஒன்றனை மநுவானவர் சொன்னாரோ அது மருந்து" என்றும், [6] "பிரஹ்மத்தை அறிந்தவர்கள் சொல்லுகிறார்கள்" என்றும் நம்புதலுக்கு உறுப்பாக வியாசரையும் மநுவையும் பிரஹ்மத்தை அறிந்தவர்களையும் சொல்லுமாறு போலே என்றவாறு. ஆனபின்பு அது தாழ்வன்று; நம்பிக்கையின் மிகுதிக்கு உறுப்பு என்றபடி.

இதனால், மேலே வேதத்தோடு ஒப்புமை சொன்ன விடத்திலே இதனைச் சொல்ல வேண்டியிருக்க, அங்குச் சொல்லா தொழிந்த காரணத்தால் இங்கு அருளிச் செய்தாராயிற்று. (67)

---

1. திருவாய். 1. 1: 7. 2. திருவாய். 5. 2: 7.
3. திருவாய். 2. 8: 6.
4. ஸ ஹோவாச வ்யாஸ: பாராசர்ய:
என்பது, ஆரணம்.
5. யத்வை கிஞ்ச மநுரவதத் தத் பேஷஜம்.
என்பது, யஜுர் வேதம்.
6. ப்ரஹ்ம வாதிநோ வதந்தி. என்பது, யஜுர்வேதம்.



## 68

[1]பாரத கீதைகளின் வேத உபநிஷத்வம் போலே,
இதுவும் வியாக்யை ஆனாலும் வேதரஹஸ்யமாம்.

என்பது சூத்திரம்.

வியாக்: ஆனால், இதனை உபப்பிரும்ஹணமாகச் சொன்ன விடத்தில் இது வேதத்துக்கு விரிவுரையாகுமே ஒழிய, [2] "வேதரூபமாகச் செய்யப்பட்டது இத் திருவாய்மொழி" என்றும், [3] "தமிழ் மொழியான, பிரஹ்ம விஷயமான திருவாய் மொழி என்னும் உபநிடதத்தை" என்றும், [4] "தமிழ் ரூபமான வேத சூக்தங்களாலே" என்றும் பெரியோர்கள் சொல்லுகிற வேதத்தன்மை இதற்குக் கூடுமோ? என்னும் வினவிற்கு விடை அருளிச் செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, பாரத கீதைகளின் வேத உபநிஷத்வம் போலே - வேதத்திற்கு உபப்பிரும்ஹணமாய் அதன் பொருளை விரித்துப் பேசுகின்ற மஹாபாரதமும் அதில் சாரமான ஸ்ரீகீதையும், [5] "மஹாபாரத மென்கிற ஐந்தாவது வேதங்களை அத்யயனம் செய்வித்தார்" என்றும், [6] "பகவத்கீதையாகிற உபநிடதங்களில்" என்றும் சொல்லுகிறபடியே வேதமும் உபநிடதமும் ஆவன போன்று, இதுவும் வியாக்யை ஆனாலும் வேத ரஹஸ்யமாம் - இத் திருவாய்மொழியும் வேதத்தின் விரிவுரையான உபப்பிரும்ஹணமானாலும் வேதரஹஸ்ய

---

1. இச்சூத்திரத்தில் 'பாரதகீதைகளின்வேதஉபநிஷத்வம் போலே' என்றதனை பாரதத்தின் வேதத்வம் போலே, கீதையின் உபநிஷத்வம் போலே என்று பிரித்துக் கூட்டுக. வியாக்யை - வியாக்யானம்; உபப்பிரும்ஹணம் என்றபடி. வேதரஹஸ்யம் - வேதத்தின் இரகசியமான உபநிடதம். மேலே, சாந்தோக்ய உப நிடதமாக வன்றோ இதனை அருளிச் செய்தார்.
2. "வேத ரூபம் இதம் க்ருதம்" என்பது பிரமாணம்.
3. "த்ராவிடீம் ப்ரஹ்ம ஸம்ஹிதாம்"
என்பது, ஸ்ரீரங்கராஜஸ்தவம்பூர். 6.
4. "த்ராவிடவேத ஸூக்தை:" என்பது, ஸ்ரீரங்கராஜஸ்தவ. பூர். 16
5. "வேதாந் அத்யாபயாமாஸ மஹாபாரத பஞ்சமாந்"
என்பது, ஸ்ரீ விஷ்ணுபு.
"நீடாழி யுலகத்து மறைநாலொ டைந்து என்று நிலைநிற்கவே"
என்பது, வில்லிபாரதம்.
6. "பகவத்கீதாஸூபநிஷத்ஸு" என்பது, பிரமாணம்.

மான உபநிடதமாம் என்கை. வேதரஹஸ்யமாவது - வேதத்தில் இரஹஸ்யபாகமான உபநிடதம். மேலே இத் திருவாய்மொழியை சாந்தோக்ய உபநிடதத்திற்கு ஒப்பாக அன்றோ சொல்லப்பட்டது. ஆகையால், இதனை உபப்பிரும்ஹணமாகச் சொன்னாலும் தமிழ் மறையாம் இதனுடைய தன்மை இதனைவிட்டு நீங்காது என்பது கருத்து. (68)

## 69

> உதாத்தாதி பத கிரம ஜடா வாக்ய பஞ்சாதி பாத விருத்த பிரச்ந காண்ட அஷ்டக அத்யாய அம்ச பர்வ ஆதி அலங்காரங்கள் போலே, எழுத்து அசை சீர் பந்தம் அடி தொடை நிரைநிரை ஓசை தளை இனம் யாப்புப் பாத் துறை பண் இசை தாளம் பத்து நூறு ஆயிரம் முதலான செய்கோலம் இதுக்கும் உண்டு.

என்பது சூத்திரம்.

வியாக்:—ஆக, இப்படி இத் திருவாய்மொழியை வேதத்துக்கு ஒப்பு, வேதங்களின் உபப்பிரும்ஹணங்களுக்கு ஒப்பு என்றுநின்றீர்; அவை இரண்டற்கும் அவ்வவ்வற்றிற்குத் தக்கவையாய் இருப்பன சில அலங்காரங்கள் உண்டே அன்றோ, அத்தகைய அலங்காரங்கள் இதற்கும் உண்டோ? என்ன, வடமொழியான அவ்வவ்வற்றிற்குத் தகுதியான அலங்காரங்கள் பலவும் உளவாமாறுபோலே, தமிழ்மொழியான இதற்கும் அதற்குத் தக்கனவான அலங்காரங்கள் பலவும் உண்டு என்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, உதாத்தாதி - [1] உதாத்தம் முதலான ஒலி விசேடங்களும்; ஆதி பதத்தினால் அநுதாத்தம் ஸ்வரிதம் பிரசயம் என்பனவற்றைக் கொள்க. இந்த உதாத்தம் முதலிய ஒலிவகைகளும், கிரம ஜடா பஞ்சாதிகளும், பிரச்ந அஷ்டகங்களும் என்னுமிவை

1. உதாத்தம்-எடுத்தல் படுத்தல் இன்றி ஒலியைச் சமமாக வைத்து அத்யயனம் செய்வது. அநுதாத்தம் - ஒலியைப் படுத்து அத்யயனம் செய்வது. ஸ்வரிதம் - ஒலியை எடுத்து வைத்து அத்யயனம் செய்வது. பிரசயம் - முதலில் ஓசையை எடுத்துக் கூறிப் பின்னர் மற்றைய பதங்களையும் அதற்குச் சமமாக வைத்து அத்யயனம் செய்வது. ஜடை என்பது ஒருசொல்லை மாற்றி மாற்றி இரண்டு மூன்று முறை கூறுதல். பஞ்சாதி-50 சொற்கள் கொண்டது ஒரு தொகுதி. ஒத்து, இயல் என்பன போன்ற சிறு சிறு பகுதிகளுக்குப் பிரச்நம் என்று பெயர். பிரச்னம் எட்டு கொண்டதற்கு அஷ்டகம் என்று பெயர்; அஷ்டகம் - பெரும் பிரிவு.



வேதத்திற்கேஉரியனவாம். [1] அம்சம் பர்வம் முதலானவைகள் உபப்பிரும்ஹணங்களுக்கே உரியனவாம். 'பர்வம் முதலானவைகள்' என்றதனால் ஸ்கந்தம் முதலானவைகளைக் கொள்க. பதம் வாக்யம் [2] பாதம் விருத்தம் காண்டம் அத்தியாயங்கள் என்னுமிவை வேதங்களுக்கும் உபப் பிரும்ஹணங்களுக்கும் பொதுவானவை. ஸ்ரீ ராமாயணத்தில் பிரதானமான பிரிவுகளிலே காண்டம் என்ற வழக்கு உண்டு. கௌஷீதகி முதலான உபநிடதங்களிலே அத்யாயம் என்ற பிரிவின் வழக்கு உண்டு.

ஆக, இப்படி, வேதத்துக்கும் வேதங்களினுடைய உபப்பிரும்ஹணங்களுக்கும் உண்டான அலங்காரங்களைச் சொல்லி, அப்படியே இத்திருவாய்மொழிக்கும் உளவாய அலங்காரங்களை எல்லாம் அருளிச்செய்கிறார் மேல்: எழுத்து - [3] குறில் நெடில் முதலான பதின்மூன்றெழுத்துக்கள். அசை - [4] நேரசை நிரையசை ஆகிற இரண்டு அசை. சீர்-[5] ஆசிரிய உரிச்சீர் நான்கு, [6] வெண்பா உரிச்சீர் நான்கு, [7] வஞ்சிஉரிச்சீர் நான்கு, [8] பொதுச்சீர் பதினாறு, ஓரசைச்சீர் இரண்டு; ஆக, முப்பது சீர்கள். பந்தம் எனினும் தளை எனினும் ஒக்கும்

1. அம்சம் என்பது, ஒத்து இயல்களைப் போன்ற சிறு பிரிவு. பர்வம் - அதிகாரம் என்பது போன்ற பெரும் பிரிவு.

2. பாதம் - அடி. விருத்தம் - செய்யுள்.

3. குறிலும், நெடிலும், உயிரும், குற்றியலுகரமும், குற்றியலிகரமும், ஐகாரக் குறுக்கமும், ஆய்தமும், மெய்யும், வல்லினமும், மெல்லினமும், இடையினமும், உயிர்மெய்யும், அளபெடையும் என்னும் பதின்மூன்றெழுத்துக்கள். இவை அசைக்கு உறுப்பாக நிற்கும்.

4. குறிலே நெடிலே குறிலிணை எனைக் குறில் நெடிலே
   நெறியே வரினும் நிரைந்து ஒற்றடுப்பினும்
   நேரும் நிரையுமாம்.

5. நேர்நேர், நிரைநேர், நேர்நிரை, நிரைநிரை.
என்பன ஆசிரிய உரிச்சீர்.

6. நேர் நேர் நேர், நிரை நேர் நேர், நேர் நிரை நேர்,
   நிரை நிரை நேர்.
என்னும் நான்கும் வெண்பா உரிச்சீராம்.

7. நேர் நேர் நிரை, நிரை நேர் நிரை, நேர் நிரை நிரை,
   நிரை நிரை நிரை.
என்னும் நான்கும் வஞ்சி உரிச்சீராம்.

8. மேற்கூறிய ஈரசைச் சீர் நான்கன் இறுதியிலும் நேர் நேர், நேர் நிரை, நிரை நேர், நிரை நிரை என்னும் ஈரசைச் சீர்கள் நான்கனையும் தனித்தனியே தந்து உறழ்ந்தால் பொதுச்சீர் பதினாறனையும் காணலாம். நேர், நிரை என்பன, ஓரசைச்சீர்.

ஆதலின், இங்கே பந்தம் என்றும் மேலே தளை என்றும் கூறுதல் கூறியது கூறல் ஆகையாலே இரண்டனில் ஒன்றனை நீக்க வேண்டும். [1] அடியாவது - குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி என்னும் ஐந்து அடிகள். [2] தொடையாவது-மோனை, இயைபு, எதுகை, முரண், அளபெடை என்கிற ஐந்திலும், அடிமோனை முதலாக ஓர் ஒன்றிலே எவ்வெட்டுத் தொடையாக நாற்பதும், அந்தாதித்தொடை, இரட்டைத் தொடை, செந்தொடை என்னு மூன்றுமாக நாற்பத்து மூன்று தொடைகள். [3] நிரை நிரையாவது, நேர் நிரை நிரை, நிரை நிரை நிரை முதலானவை.

ஓசையாவது - [4] செப்பல், அகவல், துள்ளல், தூங்கல் என்னும் நான்கு ஓசைகள். தளையாவது-நேரொன்றாசிரியத்தளை, நிரையொன்

---

1. குறள் இருசீரடி, சிந்து முச்சீரடி, நேரடி நாலொருசீர், ஐந்து சீர் நெடிலடி, ஐந்து சீர்க்கு மேற்பட்ட சீர்களையுடைய அடிகள் எல்லாம் கழிநெடிலடியாம்.

2. எழுவாய் எழுத்தொன்றின் மோனை; இறுதி இயைபு; இரண்டாம்
வழுவா எழுத்தொன்றின், மாதே! எதுகை; மறுதலைத்த
மொழியான் வரினும் முரண்; அடிதோறும் முதன்மொழிக்கண்
அழியா தளபெடுத் தொன்றுவ தாகும் அளபெடையே.
அந்தமுதலாத் தொடுப்ப தந்தாதி; அடிமுழுதும்
வந்தமொழியே வருவ திரட்டை; வரன் முறையான்
முந்தியமோனை முதலாமுழுதும் ஒவ்வாது விட்டால்
செந்தொடை நாமம் பெறும்; நறுமென்குழல் தேமொழியே.

என்பனவற்றால் தொடையின் இலக்கணத்தையும் அவற்றின் தொகையையும் உணர்தல் தகும்.

3. மேலே அசையைப்பற்றியும் சீரைப்பற்றியும் கூறிவிட்டதனால் மீண்டும் 'நிரை நிரை' என்பது கூறவேண்டுவதின்று. ஆதலால், இது 'நிரனிறை' ஆக இருக்கவேண்டும் என எண்ணுகிறேன். இதனால் 'பொருள்கோளை' த் தெரிவிக்கிறார்.

நிரனிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்று
அவை நான் கென்ப மொழிபுணர் இயல்பே.

என்பது தொல்காப்பியம் சொல். எச். சூ. 8.

"நிரனிறை முதலிய பொருள்கோட் பகுதியும்"

என்பது யாப்பருங்கலம், சூ. 95.

4. வெண்பாவிற்குரியது செப்பலோசை; அகவலோசை ஆசிரியப்பாவிற்குரியது; கலிப்பாவிற்குரியது துள்ளலோசை; தூங்கலோசை வஞ்சிப்பாவிற்குரியது.



றாசிரியத்தளை, இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை, கலித்தளை, ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்றாத வஞ்சித்தளை என்னும் ஏழு தளைகள். இனமாவது-தாழிசை, துறை, விருத்தம் என்னும் பாஇனம் மூன்று. [1] யாப்பாவது - நூல். பாவாவது - வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்னும் பாக்கள் நான்கு. [2] துறை என்கிற இதுவும் பாவினத்தில் ஒன்றாகையாலே கூறியது கூறலாம். வேறு பொருள் உண்டாகில் கண்டுகொள்வது. பண்ணாவது - முதிர்ந்த குறிஞ்சி, நட்டபாடை, நட்டராகம், செந்திரி, பியந்தை, இந்தளம் முதலானவை. [3] இசையாவது-குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் பெயர்களால் சொல்லப்படுகிற நிஷாத ரிஷப காந்தார ஷட்ஜ மத்யம தைவத பஞ்சமங்கள் என்னும் இசைகள் ஏழு. தாளமாவது, [4] "கஜகர்ணம், சோரகதி, மகரத்வஜ:, லக்ஷ்மீ கீர்த்தி:, பாணி, பாதம், கௌரீ, பஞ்சானனம், சதுராம் நாயம், கருடத்வஜம் என்னும் இவைகள் சங்கீதம் அறிந்தவர்களால் தாளங்க

---

1. தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்ப்பு
எனத்தகு நூல்யாப்பு ஈரிரண் டென்ப.

என்பது நன்னூல்.

2. ஈண்டுத் 'துறை' என்றதனால், செந்துறை மார்க்கத்தையும், வெண்டுறை மார்க்கத்தையும் திருவுள்ளம் பற்றி அருளிச் செய்கின்றாரோ என்று நினைக்கிறேன்.

"நாற்பெருபண்ணும் இருபத்தொருதிறனும், ஆகிய இவையெலாம் செந்துறை என்பது; மேற்புறமும் பதினோ ராடலும், என்றிவை எல்லாம் வெண்டுறையாகும். என்பது வாய்ப்பியம். செந்துறை என்பது பாடற்கேற்பது; வெண்டுறை என்பது ஆடற்கேற்பது. என்னை? 'செந்துறை என்பது ஒலி குறித்தற்றே, வெண்டுறை என்பது கூத்தின் மேற்றே' என்பவாகலின்"

என்பது யாப்பருங்கலவிருத்தி.

3. "நரம்பு எழுவகைய:— குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என. என்னை?

இளிகுரல் துத்தம் நான்கு மாத்திரை
விளரி கைக்கிளை மூன்றே யாகும்
தாரம் உழை இரண் டாகத் தகுமே"

என்பது யாப்பருங்கலவிருத்தி.

4. கஜகர்ணச் சோரகதி: மகரத்வஜ தாளக:

லக்ஷ்மீ: கீர்த்தி: பாணி பாதௌ கௌரீ பஞ்சாநநஸ்ததா
சதுராம்நாய தாளச்ச தாளோயம் கருடத்வஜ:

ளாகச் சொல்லப்பட்டன'' என்கிறபடியே, கஜகர்ணம், சோரகதி, மகரத்வஜம் முதலான தாளங்கள்.

பத்தாவது - வடமொழியில் கூறப்பட்ட அம்சம் பர்வம் முதலியவைகளின் உட்பிரிவுகளான அத்யாயம் முதலியவைகள் போன்று, நூற்றினுடைய உட்பிரிவாய் [1] ''இப்பத்தும்'', [2] ''இவை பத்தும்'' என்று சொல்லப்பட்ட திருப்பதிகங்கள். நூறாவது - வடமொழியில் பிரதானமான பிரிவுகளான அம்சம் பர்வம் காண்டம் முதலியவைகள் போலே [3] ''நூறே சொன்ன'', [4] ''பத்து நூற்றுள்'' என்னும்படி நூறு நூறு திருப்பாசுரங்களாக இருந்துள்ள பிரதானமான பிரிவுகள். ஆயிரமாவது - [5] ''வால்மீகி முனிவர் இருபத்து நாலாயிரம் சுலோகங்களைக் கூறினார்'' என்னுமாறுபோலே இருந்துள்ள பெரிய பாகம்.

'முதலான' என்கையாலே திருவாய்மொழியின் முதல் மூன்று பத்துக்கள் துவயம் என்னும் மந்திரத்தின் பின்வாக்கியத்தின் பொருளை விவரிப்பதாய், அதற்குமேல் உள்ள மூன்று பத்துக்கள் துவயத்தின் முன் வாக்கியத்தின் பொருளை விவரிப்பதாய், அதற்கு மேல் உள்ள மூன்று பத்துக்கள் அதற்குத் தக்கனவான பொருள்களைக் கூறுவனவாய், பத்தாம் பத்து, பலத்தைப் பெறுதலைக் கூறுவதாக இருக்கையாலே உளவாய பிரிவு வேறுபாடுகளும் ஆழ்வாருக்குக் கருத்தாகும் என்று தோற்றுகிறது. செய்கோலம் இதுக்கும் உண்டு - [6] ''செய்கோலத்தாயிரம்'' என்று, கவிக்குச் சொல்லுகிற அலங்காரங்களால் குறைவற்ற ஆயிரம் என்கையாலே இவை முதலான எல்லா அலங்காரங்களும் இதற்கும் உண்டு என்கை. (69)

---

ஸங்கீத சாஸ்த்ர வித்வத்பி ரேதே தாளா: ப்ரகீர்த்திதா:.
என்பது பிரமாணம்.

ஆதி, ரூபகம், சாபு, ஜம்பை, ஏகம், மட்டியம், துருவம், அட என்பன போன்றவைகள் தாளவேறுபாடுகள்.

1. திருவாய். 9. 4: 11.  2. திருவாய். 5. 5: 11.

3. திருவாய். 9. 4: 11.  4. திருவாய். 6. 7: 11.

5. ''சதுர்விம்சத் ஸஹஸ்ராணி ச்லோகாநாம்''
என்பது, ஸ்ரீராமா. பால. 4: 2.

6. திருவாய். 4. 1: 11.



## 70

[1] அதவா, வேத வேத்ய நியாயத்தாலே, பரத்வ பர முதுவேதம், வியூக வியாப்தி அவதரணங்களில், ஓதின நீதி கேட்டமநு படுகதைகளாய், ஆகமூர்த்தியில் பண்ணிய தமிழானவாறே, வேதத்தைத் திராவிடமாகச் செய்தார் என்னும்.

என்பது சூத்திரம்.

வியாக்:— திவ்யப்பிரபந்தத்துக்கு வேதங்களோடு ஒப்புமையும், வேதங்களின் உபப் பிரும்ஹணங்களான ஸ்மிருதி இதிகாச புராணங்களோடு ஒப்புமையும் அருளிச்செய்தார் இதுகாறும். இனி, வேதத்தின் அவதார விசேஷமாய், இவ்வாழ்வாராலே அருளிச்செய்யப்பட்டதாய், உலகறிந்த விஷயமாய் இருப்பது ஒன்று என்று இதற்கு வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, அதவா - திருவாய்மொழிக்கு வேதத்தோடு ஒப்புமையும், ஸ்மிருதி இதிகாச புராணங்களோடு ஒப்புமையும் மேலே கூறிப்போந்த வழியே அல்லாமல், வேதவேத்ய நியாயத்தாலே - [2] ''வேதங்களால் அறியப்படும் பரமபுருஷனானவன் சக்கரவர்த்தித் திருமகனாக அவதரித்தவாறே அந்த வேதங்களும் பிரசேதஸ்ஸின் புதல்வரான வால்மீகி பகவானிடமிருந்து ஸ்ரீராமாயணமாகப் பிறந்தது'' என்கிறபடியே, வேதங்களால் அறியப்படுகின்ற பரம புருஷனானவன் தசரத புத்திரனாக அவதரித்த இடத்தில், ஒரு புருஷனால் செய்யப்படாத தான அந்த வேதமும் ஸ்ரீ வால்மீகி பகவான் பக்கல் ஸ்ரீ ராமாயணமாக அவதரித்தது என்கிற நியாயத்தாலே, பரத்வ பர முது வேதம் - [3] ''இந்த இராஜச தாமச குணங்களின் மயமான இப்பிரகிருதி மண்ட

---

1. இச் சூத்திரத்தை, வேத வேத்ய நியாயத்தாலே பரத்வபரமுது வேதம், வியூகத்திலே ஓதின நீதியாய், வியாப்தியில் கேட்ட மநுவாய், அவதரணத்தில் படுகதைகளாய், ஆகமூர்த்தியில் பண்ணிய தமிழ் ஆயிற்று; ஆதலால், வேதத்தைத் திராவிடமாகச் செய்தார் என்னும் என்று கூட்டி முடிக்க. அதவா - அப்படி அன்றியும். வியாப்தி - கரந்த சில் இடந்தொறும் இடம் திகழ் பொருள் தொறும் பரந்து நிற்றல். ஓதின நீதி - பாஞ்சராத்திரம். கேட்டமநு - மநுதர்ம சாஸ்திரம். படுகதைகள் - ஸ்ரீராமாயணமும் மகாபாரதமும். ஆகமூர்த்தி - அர்ச்சாவதாரம்.

2. வேத வேத்யே பரேபும்ஸி ஜாதே தசரதாத்மஜே
வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா.
என்பது, ஸ்ரீராமா. பால.

3. ''க்ஷயந்தமஸ்ய ரஜஸ: பராகே''
என்பது, தைத்திரீய உபநிடதம்.

லத்தின்மேல் (பரமபதத்தில்) எழுந்தருளியிருப்பவரான ", [1] " சூரியனுடைய வர்ணம் போன்ற வர்ணத்தையுடைய இந்தப் பரமபுருஷனை நான் அறிவேன்; அவன் தமஸ்ஸாகிற பிரகிருதி மண்டலத்திற்கு அப்பால் (பரமபதத்தில்) இருக்கின்றான்", [2] " விஷ்ணுவினுடைய அந்த உயர்ந்த இடத்தை (பரமபதத்தை) நித்யசூரிகள் எப்பொழுதும் பார்த்துக்கொண்டிருக்கின்றார்கள் ", [3] " இருதய குகையில் வைக்கப்பட்டிருக்கிற இந்தப் பிரஹ்மத்தை எவன் வழிபடுகிறானோ அவன் பிரகிருதி சம்பந்தம் இல்லாதது என்று சொல்லப்படும் பரமபதத்தில் அந்தப் பிரஹ்மத்துடன்கூட எல்லாக் கல்யாண குணங்களையும் அனுபவிக்கிறான் " என்பன போன்றவைகளாலே பல இடங்களிலும் சர்வேச்வரன் பரனாய் எழுந்தருளியிருக்கும் நிலையைச் சொல்லுகையாலே பரத்துவத்திலே நோக்காய், [4] " முதுவேதம் " என்கிறபடியே, புருஷனுடைய புத்திமூலமாக வருகின்ற குற்றம் சிறிதும் இல்லாதபடி அநாதியாகையாலே பழையதாய் இருக்கிற வேதமானது;

வியூகத்தில் ஓதின நீதியாய் - [5] " தேவரீர் பரவாசுதேவ விக்கிரஹத்தோடு கூடினவராய் ஆறுகுணங்களால் முக்தர்களுக்கு இனியர் ஆகாநின்றீர் " என்கிறபடியே ஆறு குணங்களாலும் நிறைந்தவனாய் முக்தர்களுக்கு இனியனாய் இருக்கின்ற அந்தப் பரன் ஆனவன், [6] " வலிமையோடு கூடின ஞானத்தாலே சங்கர்ஷணர் ஆகிற நீர் அழித்தலைச் செய்கின்றீர், சாஸ்திரங்களையும் நன்றாக விரிவு படுத்துகின்றீர்; பிரத்யும்நராய் ஐச்வர்யத்தாலும் வீரியத்தா

1. " ஆதித்ய வர்ணம் தமஸ: பரஸ்தாத் "
என்பது, புருஷசூக்தம்.

2. " தத்விஷ்ணோ: பரமம்பதம் ஸதாபச்யந்தி ஸூரய: "
என்பது, யஜுர்வேதம்.

3. யோ வேத நிஹிதம் குஹாயாம் பரமே வ்யோமந்
ஸோச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணாவிபச்சிதா.
என்பது, தைத்திரீய உபநிடதம்.

4. திருவாய். 1. 6: 2.

5. "ஷாட்குண்யாத் வாஸுதேவ: பர இதி ஸ பவாந் முக்தபோக்ய:"
என்பது, ஸ்ரீரங்கராஜஸ்வதம், உத். 39.

6. " பலாட்யாத் போதாத் ஸங்கர்ஷண: த்வம் ஹரஸி
விதநுஷே சாஸ்த்ர மைச்வர்ய வீர்யாத்
ப்ரத்யும்ந: ஸர்க்க தர்மௌநயஸி சபகவந்
சக்திதேஜோ நிருத்தோ பிப்ராண: பாஸிதத்வம்
கமயஸிச ததா வ்யூஹ்ய "
என்பது, ஸ்ரீரங்கராஜஸ்தவம் உத்த. சத. 39.



லும் படைத்தலைச் செய்கின்றீர், தர்மத்தையும் பரப்புகின்றீர்; அப்படியே அநிருத்தராய் சக்தியையும் ஒளியையும் தரித்துக்கொண்டு காப்பாற்றுகின்றீர், தத்துவத்தையும் பரப்புகின்றீர். " என்கிறபடியே படைத்தல் அழித்தல் முதலான காரியங்களைச் செய்யும் பொருட்டு வியூகமாக அவதரித்த நிலையில், [1] " உலகத்துக்கு நலம் செய்ய வேண்டுமென்னும் இச்சையால் சங்கர்ஷணன் முதலான வியூகநிலைகளை அடைகிறேன்; முறையாக அழித்தல் படைத்தல் அளித்தல் என்னும் இவைகளால் உயிர்களுக்கு அநுகிரஹம் ஏற்படுகின்றது; பின்னும் சாஸ்திரம், சாஸ்திரங்களின் பொருளான தர்மம், அவற்றாலாய தத்துவஞானம் முதலான பயன்களும் இருக்கின்றன; நான்கு வியூகங்களிலும் துரியம் சுஷுப்தி இவை முதலான நிலைகளையும் அறிந்து கோடல் வேண்டும். " என்பது போன்றவைகளாலும், [2] " அந்த வியூகத்தில் ஞானம் பலம் என்னும் குணங்களின் சேர்க்கையால் விஷ்ணுவினுடைய சங்கர்ஷண உருவம் உண்டாகின்றது; ஐச்வரியம் வீரியம் என்னும் இவைகளின் சேர்க்கையால் பிரத்யும்நனுடைய திருமேனி உண்டாகின்றது; விஷ்ணுவுக்கு, சக்தி ஒளி என்னும் இவைகளின் சேர்க்கையால் அநிருத்தருடைய திருமேனி உண்டாகின்றது; இந்த சக்திமயங்களான வியூகங்கள் குணங்களின் பிரகாசங்களுக்கு இலக்கணங்கள். " என்பது போன்றவைகளாலும் அந்த வியூக விசேடத்தினுடைய குணங்கள், உருவங்கள், செயல்கள்

1. ஸங்கர்ஷணாதி ஸத்பாவம் பஜே லோகஹிதேப்ஸயா
க்ரமச: ப்ரளயோத்பத்தி ஸ்திதிபி: ப்ராண்யநுக்ரஹ:
ப்ரயோஜந மதாந்யச்ச சாஸ்த்ர சாஸ்த்ரார்த்த தத்பலே:
தசாஸ்துர்ய ஸுஷுப்த்யாத்யாச் சதுர்வ்யூஹேபிலக்ஷயே.
என்பது, விஷ்வக்சேநசம்ஹிதை.

2. தத்ர ஜ்ஞாந பலத்வந்த்வாத் ரூபம் ஸங்கர்ஷணம் ஹரே:
ஐச்வர்யம் வீர்ய ஸம்பேதாத் ரூபம் ப்ராத்யும்நமுச்யதே
சக்தி தேஜஸ் ஸமுத்கர்ஷா தாநிருத்த தநுர்ஹரே:
ஏதே சக்திமயா வ்யூஹா குணோந்மேஷ ஸ்வலக்ஷணா:
என்பது, விஷ்வக்சேநசம்ஹிதை.

லீலாவிபூதியினுடைய படைப்பு, அளிப்பு, அழிப்புகளைச் செய்வதன் பொருட்டும், போகத்திலே இச்சையுடையவர்களுக்கு விரோதியைப் போக்கி விருப்பங்களைக் கொடுப்பதன் பொருட்டும், மோக்ஷ இச்சையுடையவர்களுக்கு மோக்ஷத்தை அளிக்கும் பொருட்டும், ஆமோத, சம்மோத, பிரமோத பிரதேசங்களிலும், திருப்பாற்கடலிலும் சங்கர்ஷண பிரத்யும்ந அநிருத்த வாசுதேவ மூர்த்திகளாய் எழுந்தருளியிருக்கிற நிலை வியூகமாம்.

முதலானவற்றை விரிவாகச் சொல்லுகைக்காக [1] "எல்லாப் பாஞ்ச ராத்ரங்களையும் சொன்னவன் நாராயணனே" என்கிறபடியே, எல்லா வற்றையும் முதலிலே கூறினவன் சர்வேச்வரன்தா னுகையாலே [2] "ஓதினாய் நீதி" என்று சொல்லப்பட்ட பஞ்சராத்திரமாய் அவ தரித்து;

வியாப்தியில் கேட்ட மநுவாய் - இப்படி வியூகமாக அவதரித்த மாத்திரம் அன்றிக்கே, எல்லாச் சொற்களுக்கும் தானே பொருளாய் எல்லாராலும் செய்யப்படும் ஆராதனங்களையெல்லாம் ஏற்றுக் கொள்ளுகிறவனைக் கொண்டு எல்லா உயிர்களுக்கும் உள் நின்று அவற்றை ஏவுதல் செய்கிற வழியால் பரந்து நிற்கும் நிலையில், (அந் தர்யாமித்வ நிலையில்). [3] "தண்ணீரானது, நரன் என்று சொல்லப்படு கின்ற பரமாத்மாவினிடமிருந்து தோன்றியது; ஆதலால், தண்ணீர் நாரம் என்று சொல்லப்படுகின்றது. முன்பு யாது காரணத்தால் அந்த நீரானது இந்தப் பரமாத்மாவிற்குச் சரீரமாயிருந்ததோ அதனுல் நாராயணன் என்று எண்ணப்படுகின்ருன்." என்பது போன்றவை களாலும், [4] "பரம புருஷனை, எல்லாவற்றையும் நியமிக்கப்படுகின் றவனுகவும் சூக்ஷ்மமானதைக் காட்டிலும் சூக்ஷ்மமானவனுயும் ஓட வைத்த பொன்னினிறமுடையவனுகவும் கனவில்உள்ள புத்திபோன்ற யோகத்தால் அடையத் தக்கவனுகவும் அறிதல் வேண்டும்." [5] "இவ னைச் சிலர் நெருப்பு என்று சொல்லுகிருர்கள். வேறு சிலர் மருத்துக் களாகவும் சொல்லுகிருர்கள்; சிலர் பிரமனுகவும் இந்திரனுகவும் மற்றவர் பிராணனுகவும், மற்றும் சிலர் நித்யமான பிரஹ்மமாகவும்

---

1. "பஞ்சராத்ரஸ்ய க்ருத்ஸ்நஸ்ய வக்தா நாராயண: ஸ்வயம்" என்பது, பாரதம்.

2. இரண்டாந் திருவந். 48.

3. ஆபோ நாரா இதி ப்ரோக்தா ஆபோவை நரஸூநவ:
தா யதஸ்யாயநம் பூர்வம் தேந நாராயண: ஸ்ம்ருத:
என்பது, மநுஸ்மிருதி, 1: 19.

4. ப்ரசாஸிதாரம் ஸர்வேஷாம அணீயாம்ஸமணீயஸாம்
ருக்மாபம் ஸ்வப்நதீகம்யம் வித்யாத்து புருஷம்பரம்.
என்பது, மநுஸ்மிருதி, 12: 122.

5. எநமேகே வதந்த்யக்நிம் மருதோந்யே ப்ரஜாபதிம்
இந்த்ரமேகேபரே ப்ராணமபரே ப்ரஹ்ம சாச்வதம்.
என்பது, மநுஸ்மிருதி, 12: 123.



சொல்லுகிருர்கள்." [1] "இவன், எல்லா உயிர்களையும், மண் முதலிய ஐந்து பூதங்களாலான சரீரங்களால் பரந்து பிறத்தல் வளர்தல் இறத்தல் என்னும் இவைகளால் எப்பொழுதும் சக்கரம் போன்று சுழலும்படி செய்கிருன்" என்பன போன்றவைகளாலும், [2] "ஸ: ஆத்மா" என்ற சொற்களால் சொல்லப்பட்டவனே பரமாத்மா, மற்றைத்தேவர்கள் அவனுக்குச் சரீரங்கள்" என்கிறபடியே எல்லாத் தேவர்களையும் சரீரமாகக் கொண்டு இருப்பதனுலே எல்லாராலும் செய்யப்படுகின்ற ஆராதனங்கள் எல்லாவற்றுலும் ஆராதிக்கப்படு கின்றவன் இவனே என்று தோற்றும்படி, வேதத்தின் முன் பாகத்தின் பொருளை விவரணம் செய்வதாகக் கொண்டு, எல்லா உயிர்களுக்கும் உள்ளுயிராய் இருப்பதனுலே எங்கும் பரந்து நிறைந்துள்ள தன்மை யைச் சொல்லுவதற்காகக் [3] "கேட்ட மநு" என்கிறபடியே உண்மை யாகக் கேட்கப்பட்ட மநு முதலான ஸ்மிருதியாக அவதரித்து;

அவதரணத்தில் படு கதைகளாய் - அப்படிக் கண்களுக்குப் புலப்படாதவனுக நிற்கிற அவன், நல்லாரை நலம் புரிந்து காத்தல் முதலியவைகளுக்காக இராமன் கிருஷ்ணன் முதலிய அவதாரங்களைச் செய்த நிலையில், அந்த அந்த அவதாரங்களில் செய்த செயல்கள் முதலானவற்றைச் சொல்லுவதற்காகப் [4] "படுகதையும்" என்கிற படியே செயல்களைக் கூறுகின்ற ஸ்ரீ ராமாயணம் மஹாபாரதம் என் னும் இதிகாசங்களாக அவதரித்து;

ஆக மூர்த்தியில் பண்ணிய தமிழ் ஆனவாறே - அப்படி அவ தார முகத்தால் முன்னின்று காப்பாற்றுகின்றவன், அவதாரத்திற் குப் பிற்பாடரும் இழவாதபடி [5] "ஆக மூர்த்தியாய வண்ணம் என் கொல்" என்று அறிவிற் சிறந்த பெரியோர்கள் ஈடுபடும்படி

---

1. ஏஷ ஸர்வாணி பூதாநி பஞ்சபிர் வ்யாப்ய மூர்த்திபி:
ஜந்ம வ்ருத்தி க்ஷயை: நித்யம் ஸம்ஸாரயதிசக்ரவத்.
என்பது, மநுஸ்மிருதி, 12: 124.

2. "ஸ ஆத்மா அங்காந்யந்யா தேவதா:"
என்பது, தைத்திரீய உபநிடதம்.

3. நான்முகன் திருவந். 76.

4. நான்முகன் திருவந். 76.

5. திருச்சந்த விருத். 17.

'ஆகமூர்த்தி' என்பது அர்ச்சாவதாரத்திற்குத் திருமழிசையாழ்வார் வைத்த திருப்பெயர். யாகமூர்த்தி என்பது, ஆகமூர்த்தி என மருவிற்று; யாடு - ஆடு, யாறு - ஆறு என்பன போன்று. "யஜ - தேவபூஜாயாம்" ஆகையாலே அருச்சிக்கத்தக்க மூர்த்தி என்றபடி. அன்றிக்கே, இப்படி யாகவேண்டும் என்று சங்கல்பித்துக் கொண்டு தோன்றின மூர்த்தி என்னவுமாம்.

அடியார்களுடைய மனக்கருத்துக்குத் தகுதியாகத் [1] "தமர் உகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே" என்கிற திருப்பாசுரத்தின்படியே திருமேனியாகக் கொள்ளும் பொருள்கள் திருப்பெயர்கள் திருஉருவம் இருக்கை படுக்கை முதலானவைகளிலும், தேசம் காலம் அதிகாரம் ஆகிய இவை முதலானவைகளிலும், நீராடல் உணவு உண்ணல் ஆகிய இவை முதலானவைகளிலும் ஒரு வரையறை இல்லாதபடி செய்துகொண்டு மிக்க சுலபனாய் இருக்கும் அர்ச்சாவதாரமான நிலையில், அர்ச்சாவதாரத்தின் பெருமையைச் சொல்லும் பொருட்டு [2] "சடகோபன் பண்ணிய தமிழ்" என்னும்படி அர்ச்சாவதாரத்தைப் போலே தானும் எல்லா வகையாலும் சுலபமாய் எல்லாரும் கற்பதற்கு உறுப்பாகத் தமிழின் வடிவாகக் கொண்டு ஆழ்வார் பக்கலிலே அவதரிக்கையாலே வடமொழியாயுள்ள வேதத்தைத் தமிழ் மொழியாகச் செய்தார் என்று சொல்லுவதும் ஒருவகை உண்டு. [3] "எய்தற்கரிய மறைகளை ஆயிரம் இன்தமிழால், செய்தற்குலகில் வரும் சடகோபனை" என்னக் கடவதன்றோ.

மேற்கூறப்பட்ட வேதம், பாஞ்சராத்திரம், மநுதர்ம சாஸ்திரம், ஸ்ரீ ராமாயணம், மஹாபாரதம், திருவாய்மொழி என்னும் இவைகளில் எல்லாப் பொருள்களும் சொல்லப்பட்டிருக்கின்றனவே யாகிலும், ஒவ்வொன்று ஒவ்வொன்றிலே நோக்காக இருக்கையாலே அன்றோ இவர் இப்படி அருளிச்செய்தது. ஒவ்வொன்றிற்கு ஒவ்வொன்றிலே நோக்கு என்னுமிதுதான் "பரத்வபர முது வேதம்" என்கையாலே தெளிவாகிறது. (70)

## 71

[4] மண்ணுடின சஹ்யஜலம், தோதவத்தி சங்கணி துறையிலே துகில்வண்ணத் தெண்ணீராய் அந்தஸ்ஸ்தத்தைக் காட்டுமாபோலே, அல்ப சுருதர் கலக்கின சுருதி, நன் ஞானத்துறை சேர்ந்து தெளிவுற்று ஆழ் பொருளை அறிவித்தது.

என்பது சூத்திரம்.

---

1. முதல் திருவந். 44. 2. திருவாய். 2. 7: 13.
3. இராமாநுச நூற்றந்தாதி, 18.
4. சஹ்யம் - மேற்குத் தொடர்ச்சி மலை. தோதவத்தித் துறை - திருவரங்கத்திலுள்ள காவிரியின் நீர்த்துறை; தோதவத்திகளின் துறை என்பது தோதவத்தித் துறை என்றாயிற்று; தோதவத்திகள் - தூய்தாகத்



வியாக் :—[1] ஆனால், ஒருவரால் செய்யப்படாத வேதம் இப்படி வேறு நிலையினை அடைந்ததாகில் கலக்கத்தை அடைந்ததாய்ப் பொருட்டெளிவு பிறப்பித்தல் குன்றாதோ? என்ன, பாடின ஆழ்வாருடைய விசேடத்தாலே அது மற்றைப்படி ஆயிற்று என்னுமதனை எடுத்துக்காட்டோடு அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, மண்ணுடின ஸஹ்ய ஜலம் - மேட்டு நிலத்தில் நின்றும் வேகத்தோடே வந்து பூமியிலே விழுகையாலே மண் கலந்ததாய்க் கலங்கி, மலையில் நின்றும் வருகின்ற காவிரி, தாமிரபரணி என்னும் இவ் விரு நதிகளின் தண்ணீரானது, தோதவத்தி சங்கணி துறையிலே துகில்வண்ணம் தெண்ணீராய் - [2] "தோதவத்தித் தூய் மறையோர் துறை" என்றும், - [3] "பொருநல் சங்கணி துறை" என்றும் சொல்லுகிற துறைகளிலே வந்தவாறே துறைகளின் வேறுபாட்டினாலே [4] "தெண்ணீர்ப்பொன்னி" என்றும், [5] "துகில்வண்ணத் தூநீர்" என்றும் சொல்லுகிறபடியே தெளிந்த நீராய், அந்தஸ்ஸ்தத்தைக் காட்டுமாபோலே - தனக்குள்ளே கிடக்கிற பொருள்களைக் காட்டுமாறு போலே;

---

தோய்த்து உலர்த்தின வஸ்திரங்களை யுடையவர்கள். சங்கணி துறை - ஆழ்வார் திருநகரியில் உள்ள தாமிரபரணியின் நீர்த்துறை. அந்தஸ்ஸ்தத்தை - உள்ளே கிடக்கும் பொருளை.

1. இதனால், தெளிவான பொருளை வெளியிடும் தன்மை வேதத்திற்கு அரிது என்றும், திருவாய்மொழியே கலக்கமறத் தெளிவான பொருளைக் காட்டவல்லது என்றும் கூறியபடி.

"செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளிய ஓதித்
தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே"

என்பது தேசிகன் ஸ்ரீ சூக்தி.

"திருவாய்மொழி செப்பலுற்றால்
அயிர்த்தார் அயிர்த்த பொருள் வெளியாம் எங்கள் அந்தணர்க்கே."

என்பர் கம்பநாடர்.

2. பெரியாழ்வார் திரு. 4. 8: 1.
3. திருவாய். 10. 3: 11.
4. பெருமாள் திரு. 1: 1. 5. திருவாய். 7. 2, 11.

அல்ப சுருதர் கலக்கின சுருதி - [1] "வேதமானது, சிறிது கற்றவனிடமிருந்து இவன் என்னை ஏமாற்றிவிடுவான் என்று அஞ்சுகிறது" என்கிறபடியே, வேதம் தான் நடுங்கும்படி அதனுடைய பொருள் முடிவினை அறியாமல் தன்னெஞ்சில் தோன்றும் பொருள்களைச் சொல்லும் கேள்விஞானம் சிறிதே உடையவர்கள் ஒரு வாக்கியத்துக்குப் பொருள் சொல்லப்புக்கால் அப் பொருளில் நின்று மயங்கித் 'துவைதம்' என்பார், 'அத்வைதம்' என்பார், 'துவைதாத்வைதம்' என்பாராய் இப்படிக் கலக்கக் கலங்கின வேதமானது, நன் ஞானத்துறை சேர்ந்து - [2] "நன் ஞானத்துறை" என்று இவ் வாழ்வார் தாம் அருளிச்செய்தபடியே உண்மை ஞானத்துக்குத் துறையான இவ்வாழ்வார் பக்கலிலே சேர்ந்து, தெளிவுற்று-[3] "தெளிவுற்ற ஆயிரம்" என்கிறபடியே முன்புற்ற கலக்கம் தீர்ந்து தெளிவினை அடைந்து, ஆழ்பொருளை அறிவித்தது - [4] "அறிவித்தேன் ஆழ் பொருளைச் சிந்தாமற் கொண்மின்" என்கிறபடியே மிக ஆழ்ந்ததாய்ப் பரமரஹஸ்யமான அர்த்த விசேடங்களை எல்லாம் தோற்றுவித்தது என்கை. (71)

## 72

[5] மேகம் பருகின சமுத்ராம்பு போலே, நூற்கடல்
சொல் இவர் வாயனவாய்த் திருந்தினவாறே,
சர்வதா சர்வ உபஜீவ்யமாமே.

என்பது சூத்திரம்.

வியாக் :—ஆனால், வேதத்துக்கு அத்யயனம் செய்வதற்குக் கால வரம்பும், அதிகாரிகள் வரம்பும் உளவாய் இருக்கின்றனவே? அந்த வேதத்தின் அவதாரமான இத் திருவாய்மொழிக்கு அவை இல்லாமல் ஒழிவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச் சூத்திரத்தால்.

---

1. "பிபேத்யல்ப ச்ருதாத் வேதோ மாமயம் ப்ரதரிஷ்யதி" என்பது; பார்ஹஸ்பத்யஸ்மிருதி.
2. திருவிருத்தம், 93. 3. திருவாய். 7. 5: 11.
4. நான்முகன் திருவந். 1
5. சமுத்ராம்பு - கடல்நீர். சர்வதா - எப்பொழுதும், சர்வ உபஜீவ்யம் - எல்லாரும் கற்பதற்கு உரியதாதல்.



அதாவது, மேகம் பருகின சமுத்ர அம்பு போலே - உப்புத் தன்மை வாய்ந்ததாய், அந்தக் கடலுக்குள் வசிக்கின்ற மீன் முதலான பொருள்களுக்கு ஒழியப் புறம்புள்ளார்க்கு உள்ளே புகுவதற்கும் அரிதாய், பௌர்ணமி முதலிய பருவ காலங்களில் ஒழிய ஏனைய காலங்களில் தீண்டலாகாது என்கையாலே முழுகுதற்குக் கால நியதியையுமுடைத்தாய் இருக்கிற கடல் நீரானது, மேகம் பருகி மழையாகப் பெய்ய, அம் மேகத்தின் சம்பந்தத்தாலே கடல் நீரினது உப்புத் தன்மை நீங்கி, எப்பொழுதும் எல்லார்க்கும் பயன்படுமாறு போன்று;

நூற்கடல் சொல் - [1] "பிராமணன் ஆவணி மாதத்திலாவது புரட்டாசி மாதத்திலாவது சாஸ்திரத்தில் சொல்லியபடி உபாகர்மங்களைச் செய்து நியமத்துடன் கூடினவனாய் நாலரை மாதங்களில் வேதங்களை அத்யயனம் செய்யக் கடவன்: இதற்குப் பிறகு நியமத்துடன் கூடினவனாய் சுக்கிலபக்ஷத்தில் வேதங்களை ஓதக்கடவன்; வேதாங்கங்களையும் உபநிடதங்களையும் கிருஷ்ணபக்ஷத்தில் நன்றாக அத்யயனம் செய்யக் கடவன்" என்கிறபடியே அத்யயனம் செய்வதற்குக் காலநியதியும், மேல் மூன்று வருணத்தாரே அதிகாரிகள் ஆகையாலே அதிகாரி நியதியையு முடைத்தாயிருக்கிற [2] "நூற்கடல்" என்கிற வேதக்கடலிலே உள்ள வாக்கியங்கள், இவர் வாயன வாய்த் திருந்தினவாறே - [3] "இவள் வாயனகள் திருந்தவே" என்கிற படியே இவருடைய திருவாக்குமூலமாக வெளிவந்து காலநியதி அதிகாரி நியதிகளை வேண்டாத தன்மையை அடைந்து கட்டளைப் பட்டவாறே [4] "வேதரூபமாகச் செய்யப்பட்ட இத் திருவாய்மொழி பிராமணோத்தமர்களாலும் பெண்களாலும் நான்காம் வருணத்தவர்களாலும் அத்யயனம் செய்யத்தக்கது; இதனை அத்யயனம் செய்யும்

---

1. ச்ராவண்யம் ப்ரௌஷ்ட்ட பத்யாம் வாஉபாக்ருத்ய யதாவிதி
யுக்தச் சந்தாம்ஸ்யதீயீத மாஸாந் விப்ரோர்த்த பஞ்சமாந்
அத ஊர்த்வம் து சந்தாம்ஸி சுக்லேது நியத: படேத்
வேதாங்காநி ரஹஸ்யம் ச க்ருஷ்ணபக்ஷேது ஸம்படேத்.
என்பது மநுஸ்மிருதி, 4: 95.
2. மூன்றாம் திருவந். 32. 3. திருவாய். 6. 5: 7.
4. அத்யேதவ்யம் த்விஜச்ரேஷ்டை: வேதரூபமிதம் க்ருதம்
ஸ்திரீபி: சூத்ராதிபிச்சைவதேஷாம் முக்தி: கரேஸ்திதா.
என்பது, பாஞ்சராத்திரம்.

அவர்களுக்கு மோக்ஷம் கையில் இருக்கிறது'' என்கிறபடியே ஒரு காலவரையறை இன்றிக்கே எல்லாக் காலமும் எல்லார்க்கும் கற்றற்குரியதாம் என்கை. (72)

## 73

[1] மிருத்கடம் போலன்றே, பொற்குடம்.

என்பது சூத்திரம்.

**வியாக்:**—இத் திருவாய்மொழி வேதத்தின் காரியமாயிருக்கச் செய்தே, காரணமான அந்த வேதத்தைப் போன்று ஒரு சிலர்க்கே உரியதாக இல்லாமல், இது எல்லார்க்கும் உரியதாக இருக்கக் குறை இல்லை என்னுமதனை ஒரு எடுத்துக்காட்டு மூலம் காட்டுகிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, மிருத்கடம் போல் அன்று பொற்குடம் - மட்குடம் தொடுமவர்களே தொடுமித்தனை போக்கி, எல்லார்க்கும் தொடவொண்ணாததாயிருக்க, மண்ணில் உண்டானதா யிருக்கச் செய்தே, பொற்குடமானது எல்லாராலும் தொடக்கூடியதாய் இராநின்றதே என்கை. இதனால், காரணமான வேதம் ஒரு சிலர்க்கே உரியதாக இருந்தாலும் அந்த வேதத்தின் காரியமான இத் திருவாய்மொழி ஸம்ஸ்கார விசேடத்தாலே எல்லார்க்கும் உரியதாகக் குறை இல்லை என்றதாயிற்று. 'மிருத்கடம் பொற்குடம்' என்ற உபமானத்தில் தோன்றுகிற, காரணத்தைக் காட்டிலும் காரியத்திற்கு உண்டான சிறப்பு முதலானவைகள், உபமேயமான வடமொழி வேதம் தமிழ் வேதத்துக்கும் உண்டு என்பது ஆசிரியர்க்குக் கருத்தாகும், (73)

---

1. மிருத்கடம் - மட்குடம். ஸம்ஸ்காரம் - வேறு செயலுக்கு உரியதாக்குதல்.

> திருவார் பெருந்துறைச் செழுமலர்க் குருந்தின்
> நீழல்வாய் உண்ட நிகரில் ஆனந்தத்
> தேன்தேக் கெறியும் செய்ய மாணிக்க
> வாசகன் புகன்ற மதுர வாசகம்
> யாவரும் ஓதும் இயற்கைத் தாதலின்
> பொற்கலம் நிகர்க்கும்; பூசுரர் நான்மறை
> மட்கலம் நிகர்க்கும்; மதுர வாசகம்
> ஓதின் முக்தி உறுபயன்;
> வேதம் ஓதின் மெய்ப்பயன் அறமே,

என்றார் பிறரும்.



## 74

[1] பெரும்புறக்கடலும் சுருதி சாகரமும் அலைத்து ஆழ்ந்து ஓடும் இடங்களில், அயோக்கியர்க்குச் சமைத்த மடுவும் சாய்கரகமும் மாந மேய சரமம்.

என்பது சூத்திரம்.

**வியாக்:**—இப்படியிருந்துள்ள திருவாய்மொழியும் திருவாய்மொழியில் பேசப்படுகின்ற அர்ச்சாவதாரமும் ஆகிற பிரமாண சரமமும் பிரமேய சரமமும், [2] இத் திருவாய்மொழியின் முன்னைய நிலைகளையும் அர்ச்சாவதாரத்தில் முன்னைய நிலைகளையும் அறிந்து வணங்கும் ஆற்றல் இல்லாதார்க்குச் சுலபமாகச் செய்யப்பட்டவை என்று ''வேதவேத்ய'' (சூத். 70) என்ற சூத்திரத்திற் கூறப்பட்ட பிரமாண பிரமேய சரமங்களை முடிக்கிறார் இச் சூத்திரத்தால்.

---

1. இச் சூத்திரத்தை, பெரும் புறக்கடல் அலைத்து நிற்குமிடத்திலும் ஆழ்ந்து நிற்கும் இடத்திலும் ஓடுமிடத்திலும் அயோக்யர்க்குச் சமைத்த மடு மேய சரமம் என்றும், சுருதி சாகரம் அலைத்து நிற்குமிடத்திலும் ஆழ்ந்து நிற்குமிடத்திலும் ஓடுமிடத்திலும் அயோக்யர்க்குச் சமைத்த சாய்கரகம் மாந சரமம் என்றும் சில சொற்பெய்து தனித்தனியே கூட்டி முடிக்க.

பெரும்புறக்கடல் - இறைவன். அலைத்து நிற்குமிடம் - வியூகநிலை. ஆழ்ந்து நிற்குமிடம் - உயிர்க்குயிராய் (அந்தர்யாமியாய்) நிற்கும் நிலை. ஓடுமிடம் - அவதாரங்கள். அயோக்யர் - இம்மூன்று நிலைகளையும் அறிந்து வழிபடும் தன்மை இல்லாதவர்கள். சமைத்த மடு - அர்ச்சாவதாரம். மேய சரமம் - இறைவனுக்குரிய நிலைகள் ஐந்தனுள் ஐந்தாவதான அர்ச்சாவதாரம். மேயம் - பிரமேயம்; பிரமாணத்தால் அறியப்படும் பொருள் பிரமேயம்; இறைவன். சரமம் - முடிவு. இறைவனைப் பெரும்புறக்கடலாக உருவகித்ததற்கு ஏற்ப அவனுடைய நிலைகளையும் அலைத்து ஆழ்ந்து ஓடும் இடம் என்றும், சமைத்தமடு என்றும் உருவகித்தார்.

சுருதிசாகரம் - வேதக்கடல். அலைத்து நிற்குமிடம் - வியூகமூர்த்தியைப்பற்றிப் பேசுகின்ற பாஞ்சராத்திரம். ஆழ்ந்து நிற்குமிடம் - அந்தர்யாமித்வத்தைப் பற்றிப் பேசுகின்ற மநுதர்மம் முதலான ஸ்மிருதிகள். ஓடுமிடம் - அவதாரங்களைப்பற்றிப் பேசுகின்ற இதிகாச புராணங்கள். சமைத்த சாய்கரகம் - அர்ச்சாவதாரத்தைப்பற்றிப் பேசுகின்ற திருவாய்மொழி. மாநசரமம் - பிரமாணங்களில் முடிந்த பிரமாணம். மாநம் - பிரமாணம்.

2. திருவாய்மொழியின் முன்னைய நிலை - வேதம், பாஞ்சராத்திரம், மநுதர்மசாஸ்திரம், ஸ்ரீராமாயண பாரதங்கள். அர்ச்சாவதாரத்தின் முன்னையநிலை - பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்வம்.

அதாவது, பெரும்புறக்கடல் - [1] "பெரும்புறக் கடலை" என்கிற படியே எல்லாக் கடலுக்குப் புறம்பாய்த் தான் பெருத்திருக்கிற கடல் போலே, அளவிடற்கரியதாய் இருக்கிற பரம்பொருளான பிரமேயம், அலைத்து ஆழ்ந்து ஓடும் இடங்களில் - அலைத்து (நிற்கும்) இடத்தில் - கடல் அலைகளோடு கூடினதாய் அலைந்து நிற்கும் இடம்போலே, ஞானம் முதலான ஆறு குணங்களும் நிறைந்தவனை தானே, அவ் வாறு குணங்களிலே [2] இவ்விரண்டு குணங்களைப் பிரகாசிப்பித்துக்கொண்டு சங்கர்ஷணன் பிரத்யும்நன் அநிருத்தன் என்னும் உருவங்களோடு சேர்ந்திருக்கும் வியூகத்திலும், கடலில் ஆழ்ந்து (இருக்கும்) இடத்தில் - கடலில் நிலைகாண ஒண்ணாதபடி ஆழ்ந்திருக்கும் இடம்போலே, [3] "எந்தப் பரம்பொருளை ஆன்மா அறிய வில்லையோ" என்றும், [4] "கட்கிலீ" என்றும் சொல்லுகிறபடியே காணமுடியாத தன்மையாலே அந்தர்யாமியாய் நிற்குமிடத்திலும், கடல் ஓடும் இடத்தில் - கடலானது கழிகளாய்க் கொண்டு ஓடும் இடம்போலே, [5] "மனிதலோகத்தில், நித்தியரான விஷ்ணுவானவர் பிறந்தார்" என்றும், [6] "உலகநாதனாய் நித்தியனான விஷ்ணுவானவர் எவ்விடத்தில் அவதரித்தாரோ" என்றும், [7] "திருவனந்தாழ்வானாகிற படுக்கையைத் தனக்கு முன்னே அவதரிக்கும்படி போக விட்டு மதுரை என்ற நகரத்திற்கு எழுந்தருளினாரன்றோ" என்றும்,

1. பெரியதிருமொழி, 7. 10: 1.

2. பலம், ஞானம் என்னும் இரண்டு குணங்களோடு கூடி சங்கர்ஷணன் என்ற உருவத்தில் நின்று அழிக்கின்றான் என்றும், ஐச்வரியம், வீரியம் என்னும் இரண்டு குணங்களோடுகூடி பிரத்யும்நன் என்ற வடிவில் நின்று படைக்கிறான் என்றும், சக்தி, ஒளி என்னும் இரண்டு குணங்களோடுகூடி அநிருத்தன் என்ற வடிவில் நின்று அளிக்கிறான் என்றும் நூல்கள் கூறும். பக். 152, 153. காண்க.

3. "யம் ஆத்மாந வேத" என்பது, பிருஹதாரண்யம். 5. 7: 22.

4. திருவாய். 7. 2: 3.

5. "மாநுஷேலோகே ஜஜ்ஞே விஷ்ணு: ஸநாதந:" என்பது, ஸ்ரீராமா. அயோத். 1: 7.

6. "யஸ்யாம் ஜாதோ ஜகந்நாத: ஸாக்ஷாத் விஷ்ணு: ஸநாதந:" என்பது, பிரமாணம்.

7. "நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம்புரீம்" என்பது, ஹரிவம்சம், 113: 62.



[1] "விஷ்ணுவானவர் மனித உருவத்தோடு பூலோகத்தில் சஞ்சரித்தார்" என்றும் பேசப்படுகிறபடியே கண்காண வந்து தோன்றி ஞாலத்தூடே நடந்து திரிந்த அவதாரமான இடத்திலும், அயோக்யர்க்கு - தேசத்தின் சேய்மையாலும் கரணங்களின் சேய்மையாலும் காலத்தின் சேய்மையாலும் கிட்டி அநுபவிக்கத்தக்க தன்மை இல்லாதார்க்கு, சமைத்த மடுவும் - [2] "அதிலே தேங்கின மடுக்கள் போலே" என்கிறபடியே தேசத்தால் சேய்மையும் கண் முதலிய கரணங்களுக்குச் சேய்மையும் காலத்தாற் சேய்மையும் இல்லாதபடி செய்யப்பட்ட மிக்க சுலபமான விஷயம், இறைவனுடைய ஐவகை நிலைகளில் முடிவு நிலையான அர்ச்சாவதாரம்.

சுருதி சாகரம் - [3] "எந்த வியாசபகவானால் வேதமாகிற கடலில் நின்றும் ஞானமாகிற மத்தை யிட்டுக் கடைந்து" என்கிறபடியே அளவிடற்கரியதாய் இறைவனுடைய பரத்துவ நிலையைப் பற்றிப் பேசும் வேதமானது, அலைத்து ஆழ்ந்து ஓடும் இடங்களில் - அலைத்து நிற்கும் இடத்திலும் - கடலில் அலைசெறிந்த இடம்போன்ற, இறைவனுடைய வியூக நிலையைப் பேசுவதனாலே வேறொரு நிலையினை அடைந்ததாய்ப் பஞ்சராத்ரமான இடத்திலும், ஆழ்ந்துஇருக்கும் இடத்திலும் - கடலில் ஆழ்ந்த இடம்போன்ற, இறைவனுடைய அந்தர்யாமித்வத்தைப் பேசுவதனாலே தோய்ந்து பொருள் நிச்சயம்பண்ண அரிதாம்படி மநுதர்மம் முதலான ஸ்மிருதிகளாக மாறின இடத்திலும், ஓடும் இடத்திலும் - கடல் கழிகளாய் ஓடும் இடம் போன்ற, இறைவனுடைய அவதாரங்களைப் பற்றிச் சொல்லுவதனாலே இதிகாசங்களாய் விரிந்து நடக்கிற இடத்திலும்;

அயோக்யர்க்கு - ஞானம் சக்தி முதலானவற்றின் குறைவாலே, தோய்ந்து விடாய்தீர மாட்டாதார்க்கு, சமைத்த சாய் கரகம் - விடாய் கொண்டவன் வாயினை அங்காத்திருக்கத் தானே தண்ணீர் வந்து கொட்டும்படி செய்யப்பட்ட சாய்கரகம் போலே, மாந சரமம் - வருத்தம்

1. "விஷ்ணு: மாநுஷரூபேண சசார வஸுதாதலே" என்பது, பிரமாணம்.

2. "பூகத ஜலம்போலே அந்தர்யாமித்வம், ஆவரண ஜலம் போலே பரத்வம், பாற்கடல் போலே வியூகம், பெருக்காறு போலே விபவங்கள், அதிலே தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம்." என்பது, ஸ்ரீவசபூஷணம், சூ. 39.

3. "மதிமந்தாந மாவித்ய யேநாஸௌ ச்ருதிஸாகராத்" என்பது, பிரமாணம்,

சிறிதும் இன்றிக் கற்கலாம்படி மிக மிகச் சுலபமான சாஸ்திரம், பிரமாணமாக இருக்கின்ற வேதத்தினுடைய அவதார பரம்பரையில் முடிந்த நிலையான திருவாய்மொழி என்கை.

[1] இதனால், அர்ச்சாவதாரத்தை மடு என்றும், திருவாய்மொழியினைச் சாய்கரகம் என்றும் சொல்லுகையாலே பிரமாண பிரமேயங்களினுடைய ஒளியும் எளிமையும் இனிமையும் தொடக்கமான நற் குணங்களின் சேர்க்கை சொல்லப்பட்டது. (74)

## 75

[2]வீட்டின்ப இன்பப் பாக்களில் திரவிய பாஷா
நிரூபண சமம்; இன்பமாரியில் ஆராய்ச்சி.

என்பது சூத்திரம்.

வியாக் :—திருவாய்மொழியின் சிறப்பினையும் அர்ச்சாவதாரத்தின் வைபவத்தையும் அருளிச்செய்தார் இதுகாறும். திருவாய்மொழியும் திருவாய்மொழியிற் பேசப்படுகின்ற அர்ச்சாவதாரமும் இப்படி வேறுபட்ட சிறப்பினவாய் இருந்தனவேயாகிலும், திருவாய்மொழியை அருளிச்செய்த நம்மாழ்வார் நான்காம் வருணத்தில் அவதரித்தவரன்றோ? என்ன, திருவாய்மொழியினைப் பாஷையைக் கொண்டும் அர்ச்சாவதாரத்தை அது செய்யப்பட்ட பொருள்களைக் கொண்டும் இகழ்ந்தால் பாவம் உளதாம் என்று மேலே கூறவில்லையேயாயினும், அவை உளவாகத் திருவுள்ளம்பற்றி, அவற்றை உவமையாக்கிக் கொண்டு, பாகவதோத்தமரான இப் பெரியாருடைய பிறவியை ஆராய்தல் பெருங்குற்றமாம் என்பதனை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, வீட்டின்பத்தில்-[1] "கனிவார் வீட்டின்பமே என் கடற்படா அமுதே" என்கிறபடியே பகவத் விஷயம் என்றால் உளம் கனிந்திருக்குமவர்களுடைய வீடுகளிலே அவர்கள் உகந்தது ஒரு பொருளைத் திருமேனியாகக் கொண்டிருந்து இன்பத்தை விளைக்கின்ற அர்ச்சாவதாரத்தை, திரவிய நிரூபணம் - அது செய்யப்பட்ட மரம் கல் முதலிய பொருள்களைக் கொண்டு அதனை இகழ்வதற்கும், இன்பப் பாவில் - [2] "அந்தமிழ் இன்பப் பாவினை அவ் வடமொழியை" என்கிறபடியே தமிழ் உருவமாய்ப் பகவானுடைய கல்யாண குணங்களைச் சொல்லுவதாலே பெரியோர்கட்கு ஆனந்தத்தை உண்டாக்கக் கூடியதாய் இருக்கிற திருவாய்மொழியை, பாஷா நிரூபணம் - அது செய்யப்பட்ட பாஷையைக் கொண்டு அதனை இகழ்வதற்கும், சமம்- ஒப்பாகும்; இன்ப மாரியில் - [3] "அடியார்க்கு இன்பமாரியே" என்கிறபடியே ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குத் திருவாய்மொழி முகத்தாலே பேரானந்தமாகிய மழையினைப் பெய்யும் மேகமான ஆழ்வார் பக்கல், ஆராய்ச்சி - அவர் அவதரித்த பிறவியை ஆராய்தல் என்கை.

[4] "எவன் விஷ்ணுவின் அர்ச்சாவதாரங்களில் உலோகம் (தாம்பரம் முதலியன). என்ற புத்தியைச் செய்கிறானோ, எவன் குருவினிடத்தில் மனிதன் என்ற எண்ணத்தைச் செய்கிறானோ, அவ்

---

1. இச்சூத்திரத்தைப் படிக்கும்போது மூன்று விதமான கடல்களை மனத்திற் கோடல் வேண்டும். எல்லாரும் காண்கிற உப்புக்கடல் ஒன்று, பெரும்புறக்கடல் என்று சொல்லப்பட்ட எம்பெருமானாகிற கடல் ஒன்று, சுருதிசாகரம் என்று சொல்லப்பட்ட சாஸ்திரமாகிற கடல் ஒன்று. ஆக, இம்மூன்று கடல்களிலும் நாம் இறங்கமுடியாத சில நிலைமைகளும் இறங்கக்கூடிய ஒரு நிலைமையும் உண்டு. உப்புக் கடலில் அலைத்து ஆழ்ந்து ஓடும் இடங்கள் இறங்குதற்குத் தகுதி இல்லாத இடங்கள். கடல் நீரே மேகம் வாயிலாக வரப்பெற்றுத் தடாகமாகத் தேங்கின இடம் இறங்கிப் பயன் பெறுதற்குத் தகுதியான நிலைமை. இறைவனாகிற கடலில் அலைத்த இடமான வியூகமும், ஆழ்ந்த இடமான அந்தர்யாமித்வமும், ஓடும் இடமான அவதாரங்களும் நம்போல்வார்க்குக் காணமுடியாத நிலைமைகள்; அர்ச்சாவதாரம் கண்டு வணங்கிப் பயன் பெறக்கூடிய நிலைமை. சாஸ்திரமாகிற கடலில் அலைத்த இடமாகிற பாஞ்சராத்திரமும், ஆழ்ந்த இடமான மநு முதலான ஸ்மிருதிகளும், ஓடும் இடமான இதிகாசங்களும் அனைவரும் கற்றுப் பயன் பெறக்கூடாத நிலைமைகளையுடையன; திவ்யப்பிரபந்தம் எல்லாரும் கற்றுப் பயன் பெறக்கூடிய நிலைமையையுடையது. ஆகவே, உப்புக்கடலின் முடிந்த நிலையான தடாகமும், எம்பெருமானாகிற கடலில் முடிந்த நிலையான அர்ச்சாவதாரமும் போன்று, சாஸ்திரமாகிற கடலில் முடிந்த நிலையாகத் திவ்யப்பிரபந்தத்தை அருளிச்செய்தபடி. பயன் பெற வேண்டில்; தடாகம் சிறந்தது போலவும், அர்ச்சாவதாரம் சிறந்தது போலவும், பயன் பெறுதற்குத் திவ்யப்பிரபந்தமே சிறந்தது என்று நிரூபிக்கப்பட்டபடி.

2. இதனை, இன்பமாரியில் ஆராய்ச்சி, வீட்டின்பத்தில் திரவிய நிரூபண சமம் என்றும், இன்பப்பாவில் பாஷா நிரூபண சமம் என்றும் பிரித்து நிரல் நிறையே கூட்டுக. இன்பமாரி - நம்மாழ்வார். வீட்டின்பம்- அர்ச்சாவதாரம். இன்பப்பா - திருவாய்மொழி. திரவியம் - மண், கல், மரம் முதலியன.

1. திருவாய். 2. 3: 5. 2. பெருமாள் திருமொழி, 1: 4.

3. திருவாய். 4. 5: 10.

4. விஷ்ணோர் அர்ச்சாவதாரேஷு லோஹபாவம் கரோதிய:
யோகுரௌ மாநுஷம் பாவமுபௌ நரகபாதிநௌ.

என்பது, பிரம்மாண்ட புராணம்.

விருவர்களும் நரகத்தில் விழுமவர்களாவர்'' என்றும், [1] ''எவன் விக்கிரஹமாய் எழுந்தருளியிருக்கும் பகவானிடத்தில் உலோகம் என்ற புத்தியைச் செய்கிருனே, எவன் குருவினிடத்தில் மனித புத்தியைச் செய்கிருனே, அவ்விருவரும் நரகத்தில் விழுமவர்கள்'' என்றும், [2] ''ஞானிகள், அர்ச்சாவதாரத்தில் முதற் காரணத்தை நினைப்பதும் ஸ்ரீ வைஷ்ணவனுடைய பிறப்பினை நினைப்பதும் தாயின் யோநி பரீட்சைக்கு ஒப்பாம் என்று சொல்லுகின்றுர்கள்'' என்றும், ''[3] அரசனே! பிராமணன் விஷ்ணுவினுடைய புகழைத் தவிர வேருன தமிழ்ச் செய்யுட்கள் பாடலாகாது; ஆனதால், (நீ, தமிழில் பாடினுய் என்று நாட்டினை விட்டுத் துரத்தின காரணத்தால்) உன்னுல் பாப காரியம் செய்யப்பட்டது'' என்றும், [4] ''யோகிகள் இந்தப் பூமியில் எல்லாப் பிறவிகளிலும் பிறக்கிருர்கள்; ஜீவாத்மாவிற்குத் தலைவனுன பரமாத்மாவை நேரே கண்டறிந்த இந்த யோகிகளுடைய குலம் தொழில் முதலியன சிறிதும் நினைக்கத்தக்கனவல்ல'' என்றும், [5] ''பகவத் பக்தனுன நான்காம் வருணத்தானையாவது, வேடுவனை யாவது, நாய் இறைச்சித்தின்னும் நீசனையாவது அந்த அந்த சாதி யைக் கொண்டு எவன் பார்க்கிருனே அவன் நரகத்தினை அடை

1. யோ விஷ்ணௌ ப்ரதிமாகாரே லோஹபாவம் கரோதிவை
குரௌச மாநுஷம் பாவமுபௌ நரகபாதிநௌ.

என்பது, பிரமாணம்.

மானிடவன் என்றும் குருவை மலர்மகள்கோன்
தானுகந்த கோலம் உலோகமென்றும்—ஈனமதா
எண்ணுகின்ற நீசர் இருவருமே எக்காலும்
நண்ணிடுவர் கீழாம் நரகு.

என்பது ஞானசாரம், 32.

2. அர்ச்சாவதாரோபாதாநம் வைஷ்ணவோத்பத்தி சிந்தநம்
மாத்ருயோநி பரீக்ஷாயா: துல்யமாஹு: மநீஷிண:.

என்பது, பிரமாணம்.

3. ஹரிகீர்த்திம் விநைவாந்யத் ப்ராஹ்மணேந நரோத்தம
பாஷாகாநம் ந காதவ்யம் தஸ்மாத்பாபம் த்வயாக்ருதம்.

என்பது, மாத்சபுராணம்.

4. கிமப்யத்ராபிஜாயந்தே யோகிநஸ் ஸர்வயோனிஷு
ப்ரத்யக்ஷிதாத்மநாதாநாம் நைஷாம் சிந்த்யம் குலாதிகம்.

என்பது பவிஷ்யோத்தரம்.

5. சூத்ரம்வா பகவத்பக்தம் நிஷாதம் ச்வபசம்ததா
வீக்ஷதே ஜாதி ஸாமாந்யாத் ஸயாதி நரகம்நர:.

என்பது, பிரமாணம்.



வான்'' என்றும் வருகின்ற இவை முதலான சாஸ்திர வசனங்களைத் திருவுள்ளம்பற்றியன்றே இவர் இப்படி அருளிச்செய்தது.

[1] ''மனித சரீரத்தை அடைந்திருக்கிற அறப் பெரியனுன என்னை அறிவில்லாத மாக்கள் (என் தன்மையை அறியாமல்) அவ மதிக்கிருர்கள்'' என்கிறபடியே வாசி அறியாமல் அவமதிக்கின்ற மூடர்களுக்கும், [2] ''எல்லாரையும் விட மேம்பட்டவராயிருக்கும் தேவரீ ரது தன்மையை, தேவரீரைத் தவிர வேறு பொருள்களில் எண்ணத் தைச் செலுத்தாத ஒரு சிலர் எப்போதும் பார்க்கிருர்கள்'' என்கிற படியே வாசி அறிந்து ஆதரிக்கும் ஞானிகளுக்கும் மூன்று இடமும் ஒக்கும். (75)

## 76

[3] பேச்சுப் பார்க்கில் கள்ளப்பொய்ந்நூல்களும்
கிராஹ்யங்கள்; பிறவி பார்க்கில் அஞ்சாம் ஒத்தும்
அறு மூன்றும் கழிப்பனும்.

என்பது சூத்திரம்.

**வியாக்** — இங்ஙன் அன்றிக்கே, தமிழ் மொழியிலும் தமிழ் மொழியில் திருவாய்மொழியை அருளிச்செய்த ஆழ்வாருடைய பிறவியிலும் தாழ்வினைக் கற்பித்து இப் பிரபந்தத்தினை இகழுமவர் களுக்கு, விரும்பத்தகாத நூல்களையும் ஒரு தலையாக ஏற்றுக்கொள்ள வேண்டிவரும் என்று அருளிச்செய்கிருர் இச் சூத்திரத்தால்.

அதாவது, பேச்சுப் பார்க்கில் - வடமொழியாயினுமாம், தென் மொழியாயினுமாம், பகவானைப் பற்றிப் பேசுகின்ற நூல்கள் ஆதரிக் கத்தக்கவை; வேற்றுப் பொருள்களைப் பற்றிப் பேசுகிற நூல்கள் விடத் தக்கவை என்று கொள்ளாமல், மொழியை மாத்திரம் அளவாகக் கொண்டு விதித்தனவும் விலக்கியனவும் அங்கீகரித்து, தமிழ் மொழியாகையாலே இத் திருவாய்மொழி விடத்தக்கது என்னில்,

1. ''அவஜாநந்திமாம் மூடா:''

என்பது, ஸ்ரீகீதை, 9: 11.

2. ''பச்யந்தி கேசிதநிசம் த்வத் அநந்யபாவா:''

என்பது, தோத்திரரத்நம், 16.

3. கிராஹ்யங்கள் - கொள்ளத்தக்கவைகள். அஞ்சாமோத்து - மகாபாரதம். அறுமூன்று - பதினெட்டு அத்தியாயங்களையுடைய பகவத் கீதை.

கள்ளப் பொய்ந் நூல்களும் கிராஹ்யங்கள் - [1] "வெள்ளியார் பிண்டியார் போதியார் என்றிவர் ஓதுகின்ற, கள்ளநூல்" என்றும், [2] "பொய்ந் நூலை மெய்ந்நூல் என்று என்றும் ஓதி, மாண்டு" என்றும் சொல்லப் படுகின்ற புறச் சமயநூல் முதலியவைகளும் வடமொழியில் இருக் கின்ற காரணத்தாலே ஆதரிக்கத்தக்கவைகளாக இருக்கவேண்டும். பிறவி பார்க்கில் - இந்நூலை அருளிச்செய்த ஆழ்வார் நான்காம் வருணத்திற் பிறந்தவர் என்று பிறவியைப் பார்த்து இத் திருவாய் மொழியினை இகழுமளவில், அஞ்சாம் ஓத்தும் அறுமூன்றும் கழிப்பன ஆம் - மச்சகந்தியின் புத்திரனான வியாசமுனிவர் சொன்ன ஐந்தாம் வேதமான மஹாபாரதமும், ஆயர்குலத்தில் அவதரித்த கிருஷ்ணன் சொன்ன பதினெட்டு அத்தியாயங்களை யுடையதான பகவத் கீதை யாகிய உபநிடதமும் விடத்தக்கவைகளாகவேண்டும் என்க. இதனால், மொழி மாத்திரத்தையும் ஆழ்வாருடைய சாதியினையும் பார்த்து இப் பிரபந்தத்தை இகழுமளவில் வரும் விரோதம் காட்டப்பட்டது.

அன்றிக்கே, மொழியினுடையவும் ஆழ்வாருடைய பிறவியி னுடையவும் தாழ்வினை ஆராயலாகாது என்று மேலே கூறியபடி அன்றிக்கே, வடமொழியிலே உள்ள நூல்களும், உயர்ந்த சாதியினர் சொன்னவையுமே ஏற்றுக்கொள்ளத் தக்கவை என்று கொள்ளுமவர் களுக்கு, விருப்பம் இல்லாத நூல்களையும் ஒரு தலையாக ஏற்றுக் கொள்ளவேண்டிவரும் என்கிறார் 'பேச்சுப் பார்க்கில்' என்னும் இச் சூத்திரத்தாலே என்னுதல்.

அதாவது, பேச்சுப் பார்க்கில் - பகவானைப் பற்றியதாக இருத் தலையும் மற்றைப் பொருள்களைப் பற்றியதாக இருத்தலையும் ஏற்றுக் கொள்ளுதற்கும் ஏற்றுக்கொள்ளாது விடுவதற்கும் காரணமாக்காமல் வடமொழியானது ஏற்றுக்கொள்ளததக்கது என்று மொழியினுடைய பெருமையை மாத்திரம் பார்க்கில், கள்ளப் பொய்ந்நூல்களும் கிராஹ் யங்கள் - "கள்ளநூல்", "பொய்ந்நூல்" என்று கழிக்கப்பட்ட புறச் சமய நூல்களும் ஏற்றுக்கொள்ளத் தக்கவைகளாம், பிறவி பார்க்கில் - உண்மை ஞானிகள் சொன்னவை கொள்ளத்தக்கவை; பொய்ந்நின்ற ஞானமுடையவர்கள் சொன்னவை தள்ளத்தக்கவை என்று கொள்ளாமல் உயர் பிறவியுடையார் சொன்னது கொள்ளத் தக்கது; அல்லாதார் சொன்னது தள்ளத்தக்கது என்று பிறவி மாத்திரத்தையே பார்க்கில், அஞ்சாம் ஓத்தும் அறுமூன்றும் கழிப்

1. *பெரிய திருமொழி*, 9. 7: 9.

2. *பெரிய திருமொழி*, 2. 5: 2.



பன ஆம் - மச்சகந்தியின் புத்திரனான வியாசமுனிவர் சொன்ன ஐந்தாம் வேதமான பாரதமும், ஆயர்குலத்திற் பிறந்த கிருஷ்ணன் கூறிய கீதையாகிய உபநிடதமும் தள்ளத்தக்கனவாக வேண்டும் என்கை.

இத்தால் மொழியில் கௌரவத்தையும், சொல்லுமவர்கள் பிறவியில் கௌரவத்தையும் ஒரு நூலை ஏற்றுக் கொள்ளுதற்குக் காரணமாகக் கூறுமளவில் வரும் குற்றம் காட்டப்பட்டது. (76)

## 77

[1] கிருஷ்ண கிருஷ்ணத்வைபாயந உத்பத்திகள்
போல் அன்றே; கிருஷ்ண திருஷ்ணாதத்வ ஜன்மம்.

என்பது சூத்திரம்.

**வியாக் :**—இவ் வாழ்வாருடைய பிறவியை, வியாசமுனிவர் கிருஷ்ணன் என்னும் இவர்களுடைய பிறவிக்கு ஒப்பாக அருளிச் செய்தார் மேல். அவர்கள் பிறவிகளைக் காட்டிலும் இவர் பிறவிக்கு உண்டான சிறப்பினை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, கிருஷ்ண கிருஷ்ணத்வைபாயநர் உத்பத்திகள்போல் அன்றே - ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓர் இரவில் ஒருத்தி மகனாக கிருஷ்ணனுடைய பிறவியையும், கன்னிகையான மச்சகந்தியி னுடைய புத்திரனான வியாசமுனிவருடைய பிறவியையும் போல் அன்றே, கிருஷ்ணதிருஷ்ணாதத்வ ஜன்மம் - [2] கண்ணன் நீண்மலர்ப் பாதம் பரவிப் பெறப்பட்டவராய், [3] "அவதரித்த கிருஷ்ணனிடத்தில் வைத்த ஆசையே ஒரு வடிவுகொண்டாற் போன்றவரான நம்மாழ் வார்" என்கிறபடியே கிருஷ்ணன் விஷயத்தில் உண்டான ஆசையே ஒரு வடிவு கொண்டாற் போலே இருக்கின்ற ஆழ்வாருடைய அவதாரம் என்கை. (77)

1. *கிருஷ்ணத்வைபாயநர் - வியாசமுனிவர். கிருஷ்ணதிருஷ்ணா தத்வம் - கிருஷ்ணனிடத்தில் வைத்த ஆசையே ஒருவடிவு கொண்டாற் போன்றவரான நம்மாழ்வார்.*

2. *திருவிருத்தம்*, 37.

3. *"கிருஷ்ண த்ருஷ்ணாதத்வமிவோதிதம்" என்பது, ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் பூர்வசத.* 6.

## 78

[1] பெற்றும் பேறு இழந்தவளும், கன்னிகையான வளும், எல்லாம் பெற்றுளாயும் தத்துக் கொண்டாள் என்பர் நின்றார் என்னுமவளும், நெடுங்காலமும் நங் கைமீர் என்னுமிவளுக்கு நேர் அன்றே.

என்பது சூத்திரம்.

வியாக் :— "போல் அன்றே" என்னுமது யாங்ஙனம் ? என்னும் வினவிற்கு விடையாகப் பல காரணங்கள் காட்டி இவருடைய பிற வியின் சிறப்பினை விளக்குகிறார் மேல் மூன்று சூத்திரங்களால். அவற்றுள், அவர்களைப் பெற்றவர்கள் இவரைப் பெற்றவருக்கு ஒப்பாகார் என்னுமதனை ஒப்புக்கொள்ளச் செய்கிறார் இச் சூத் திரத்தால்.

அதாவது, பெற்றும் - [2] "திருவின்வடிவொக்கும் தேவகி பெற்ற" என்கிறபடியே கிருஷ்ணனைப் பிள்ளையாகப் பெற்றிருக்கச் செய்தேயும், பேறு இழந்தவளும்-அவனுடைய இளமைப் பருவத்தின் சுவை ஒன்றும் அநுபவிக்கப் பெறாமையாலே [3] "திருவிலேன் ஒன் றும் பெற்றிலேன்" என்கிறபடியே பேறு இழந்தவளான தேவகியும், பெற்றும் - [4] "இலங்தைக் காடு கலந்த காட்டில் சத்யவதி என்பவள் பராசரரிடமிருந்து, பகைவனைத் தபிக்கச் செய்யும் விஷ்ணுவின் அம்சமான வியாச முனிவரைப் பிள்ளையாக அடைந்தாள்" என்கிற படியே வியாசரைப் பிள்ளையாகப் பெற்றிருக்கச் செய்தேயும், கன்னி கையானவளும்-அப் பிள்ளையால் உளதாம் சுவை சிறிதும் அநுபவிக்

---

1. "பெற்றும் பேறிழந்தும்" என்பது முன்னுள்ள பாடம். நங்கை மீர் என்னுமிவளுக்கு, பெற்றும் பேறிழந்தவளும் நேர் அன்று ; பெற்றும் கன்னிகையானவளும் நேர் அன்று ; என்னுமவளும் நேர் அன்று என்று கூட்டுக. பெற்றும் பேறிழந்தவள் - தேவகி. கன்னியானவள்-மச்சகந்தி. நின்றார் என்னுமவள் - யசோதை. நங்கைமீர் என்னுமிவள் - உடைய நங்கையார் ; ஆழ்வாருடைய திருத்தாயார்.

2. பெரியாழ்வார் திருமொழி, 1. 2: 17.

3. பெருமாள் திருமொழி, 7.5.

4. த்வீபே பதரிகாமிச்ரே பாதராயண மச்யுதம்
பராசராத் ஸத்யவதீபுத்ரம் லேபே பரந்தபம்.

என்பது, பாரதம்.



கப் பெறாதபடி [1] "மீளவும் கன்னியாகக் கடவாய்" என்ற பராசர முனிவருடைய வார்த்தையாலே மீளவும் கன்னிப்பெண்ணான மச்ச கந்தியும், எல்லாம் பெற்றுளாயும் - [2] "எல்லாம் தெய்வ நங்கை யசோதை பெற்றாளே" என்கிறபடியே கிருஷ்ணனுடைய இளமைப் பருவத்தின் செயல்கள் முதலானவைகளை எல்லாம் அநுபவிக்கப் பெற்றிருந்தும், தத்துக் கொண்டாள் என்பர் நின்றார் என்னு மவளும் - [3] "தத்துக் கொண்டாள் கொலோ தானே பெற்றாள் கொலோ" என்றும், [4] "இம்மாயம் வல்லபிள்ளை நம்பி உன்னை என் மகனே என்பர் நின்றார்" என்றும் அவனுடைய மனிதச் செயல் களுக்கு அப்பாற்பட்ட செயல்கள் அடியாகத் தானும் பிறரும் ஐயப் படும்படியான தாயின் தன்மையையுடைய யசோதையும்,

நெடுங்காலமும் நங்கைமீர் என்னுமிவளுக்கு நேர் அன்றே - நெடுங் காலமும் - [5] "நெடுங்காலமும் கண்ணன் நீண்மலர்ப் பாதம் பரவிப் பெற்ற" என்கிறபடியே சர்வேச்வரனைச் சரணமாகப் பற்றுதல் ஒருமுறை செய்தல் மாத்திரமே போதியதாக இருக்க, பக்தியின் மேலீட்டால் நீண்ட காலம், அடியார்க்கு எளியனான கண்ணன் திரு வடிகளை அடைந்து இவளைப் பெற்றவளாகவும், நங்கைமீர் என்னு

---

1. "புந: கந்யா பவிஷ்யதி" என்பது, பிரமாணம்.
பரிதி தந்த மா நதிமருங் கொருபகற் பராசரன் மகப்பேறு
கருதிவந்து கண்டென்னையு மெனது மெய்க்கமழ் புலவையு மாற்றிச்
சுருதி வாய்மையின் யோசனைப் பரப்பெழு சுகந்தமு மெனக்கீந்து
வருதி நீயெனப் பனியினல் மறைத்தொரு வண்துறைக்குறை சேர்ந்
[தான்.

முரணிறைந்தமெய்க்கேள்வியோன் அருளினல் முஞ்சியும் புரிநூலும்
இரணியஞ்செழும்கொழுந்துவிட்டனவென இலங்குவேணியும்
[தானும்

தரணிஎங்கணும் வியாதன்என் றுரைகெழு தபோதனமுனி அப்போ
தரணியின் புறத் தனல்என என்வயி னவதரித்தனன் அம்மா.

"சென்னியால் எனைவணங்கி யாதொரு பகல்சிந்தி நீ சிந்திக்கு
முன்னையான் அருகுறுவலென் றுரை செய முனிமகன், முனிமீளக்
கன்னியாகென விதித்துடன் கரந்தனன்."

என்பன, வில்லிபாரதம் சம்பவச்சருக். 6, 7, 8.

2. பெருமாள் திருமொழி, 7: 5. 3. பெரியாழ்வார் திருமொழி, 2.1:7.

4. பெரியாழ்வார் திருமொழி, 3. 1: 3. 5. திருவிருத்தம், 37.

மிவளுக்கு - [1] "நங்கைமீர் நீரும் ஓர் பெண் பெற்று நல்கினீர்" என்று தொடங்கி, எல்லாம் நிறையப்பெற்றவர்களான நீங்களும் ஒரு பெண்பிள்ளை பெற்று வளர்த்தீர்கோள, பகவானுடைய சங்கு சக்கரம் முதலானவைகளைப் பகல் இரவு என்ற வேற்றுமை இல்லாமல் எப்பொழுதும் வாய்புலற்றுநின்றுள்ள ஆசை மிக்கவளான என் பெண் பிள்ளை படியை எங்ஙனம் சொல்லுவேன் என்று பேசுவதற்கு முடியாத படியான இவருடைய திருவாயினின்றும் வருகின்ற வார்த்தைகளை அநுபவித்தவளாகவும் சொன்ன இவரைப் பெற்ற திருத்தாயார்க்கு, நேர்அன்றே - ஒப்பு அல்லர் அன்றே என்கை. (78)

## 79

[2] மீன நவநீதங்கள் கந்திக்குமிடமும், வெறிகொள் துழாய் கமழுமிடமும் தன்னில் ஒக்குமோ?

என்பது சூத்திரம்.

வியாக் :—இனி, வியாசர் கிருஷ்ணன் ஆழ்வார் என்னும் இம் மூவரும் அவதரித்த இடங்களின் வாசனை விசேடங்களைப் பார்த்தால் மற்றைய இரண்டு இடங்களைக் காட்டிலும் இவர் அவதரித்த இடத்திற்கு உண்டான பெருமை வேறுபட்டது என்னுமிடத்தினை மூதலிக்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, மீனம் நவநீதங்கள் கந்திக்கும் இடமும்-மீன் வெறி நாறுகின்ற வியாசர் பிறந்த இடமும், வெண்ணெய் முடை நாற்றம் நாறுகின்ற கிருஷ்ணன் அவதரித்த இடமும். வெறி கொள் துழாய் கமழும் இடமும் - [3] "வெறி கொள் துழாய் மலர் நாறும் வினையுடையாட்டியேன் பெற்ற" என்றும், [4] "இவள் அம்தண் துழாய் கமழ்தல்" என்றும் பகவானுடைய சம்பந்தத்திற்கு அறிகுறியான திருத்துழாய் மணம் நாறுகின்ற ஆழ்வார் அவதரித்த இடத்திற்கு, ஒக்குமோ - ஒப்பாகுமோ என்றபடி.

இவ் உலக விஷயசேர்க்கையால் உண்டான இழிவான நாற்றங்கள் அல்லவோ அவை; இவ்வுலக சம்பந்தம் இல்லாத பொருளின் சேர்க்கையால் உண்டான விரும்பும் படியான நாற்றம் அன்றோ

1. திருவாய். 4. 2: 9.

2. மீனம் கந்திக்குமிடம் - வியாசர் பிறந்த இடம். நவநீதம் கந்திக்குமிடம் - கண்ணன் அவதரித்த இடம். துழாய் கமழுமிடம் - ஆழ்வார் அவதரித்த இடம். கந்தித்தல் - நாறுதல்.

3. திருவாய். 4. 4: 3. 4. திருவாய். 8. 9: 10.



இது. இதனால், அத்தகைய இடங்களில் உண்டான அவர்களுடைய பிறவிகளைக் காட்டிலும் இத்தகைய இடத்தில் உண்டான இவருடைய அவதாரத்தின் ஏற்றம் காட்டப்பட்டது. (79)

## 80

[1] ஆற்றில் துறையில் ஊரில் உள்ள வைஷம்யம் வாசாமகோசரம்.

என்பது சூத்திரம்.

வியாக் :—இன்னமும் அவர்கள் பிறந்த இடத்திற்கும் இவர் அவதரித்த இடத்திற்கும் உள்ள வேறுபாட்டின் மிகுதியை அருளிச் செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, ஆற்றில் உள்ள வைஷம்யம் துறையில் உள்ள வைஷம்யம் ஊரில் உள்ள வைஷம்யம் வாசாமகோசரம் - வியாசர் பிறந்த இடம், சிவபெருமானுடைய சம்பந்தமுடைய கங்கையாய், அத் துறை ஓடத்துறையாய், ஊர் வலைச்சேரியாக இருக்கும். கிருஷ்ணன் அவதரித்த இடம், ஆறானது கருநிறமுள்ள தண்ணீர்ப் பெருக்கோடு கூடியதனாலே தமோமயமான யமுனையாய், துறையும் அதில் காளியன் என்னும் பாம்பின் விஷத்தாலே கெடுக்கப்பட்ட துறையாய், ஊர்தானே [2] "அறிவொன்றும் இல்லாத ஆய்க்குலம்" என்கிற படியே செய்வன தவிர்வன அறியாதார் வாழ்கின்ற ஆயர் சேரியாக இருக்கும்.

இவ்வாழ்வாருடைய அவதார இடம், ஆறு [3] "பவள நன்படர்க் கீழ்ச் சங்குறை பொருநல்" என்கிறபடியே சிறப்புடைய பொருள்களுக்குப் பிறப்பிடமாய் வசிக்குமிடமுமாய்க் கொண்டு மேன்மை வாய்ந்ததாக இருக்கும் தாமிரபரணியாய், துறை, [4] தூய்மையான தன்மையனவாய் வெண்மையனவாய் இருக்கும் சங்கங்கள் வந்து சேருகின்ற திருச்சங்கணி துறையாய், ஊர், [5] "நல்லார் நவில்குருகூர்" என்கிறபடியே பெரியோர்கள் எல்லாராலும் புகழப்பட்டதால் [6] "சயப்புகழார் பலர் வாழும் தடங்குருகூர்" என்றும், [7] "நல்லார் பலர் வாழ் குருகூர்" என்றும் சொல்லுகிறபடியே பிறவியின் துயரைக்

1. வைஷம்யம் - வேறுபாடு. வாசாமகோசரம் - வார்த்தைகளைக் கொண்டு பேச முடியாதது.

2. திருப்பாவை, 28. 3. திருவாய். 9. 2: 5.

4. திருவாய். 10. 3: 11. 5. திருவிருத்தம், 100.

6. திருவாய். 3. 1: 11. 7. திருவாய். 10. 8: 11.

கடந்த புகழையுடையராய்ப் பகவானை அநுபவித்துக் கொண்டு வாழ்கின்ற நன்ஞானியர்கள் பலரும் எப்பொழுதும் வசித்துக் கொண்டிருக்கிற திருக்குருகூராகவிருக்கும்.

ஆகையால், அந்த ஆறுகளையும் துறைகளையும் ஊர்களையும் நோக்க, இந்த ஆற்றுக்கும் துறைக்கும் ஊர்க்கும் உண்டான வேறுபாடு பேசமுடியாததாக இருக்கும் என்கை. ஆக, கிருஷ்ணன் வியாச முனிவர் என்னும் இவர்களுடைய பிறவிகளைக் காட்டிலும், கிருஷ்ணனிடத்தில் வைத்த ஆசையே ஒருவடிவு கொண்டாற் போன்றவரான ஆழ்வாருடைய அவதாரத்தின் ஏற்றத்துக்கு உடலாக மேலே சொல்லவேண்டியவற்றை அடைய வெளியிட்டார் ஆயிற்று. (80)

## 81

> [1] தேவத்வமும் நிந்தையானவனுக்கு ஒளிவரும் ஜநிகள்போலே, பிரஹ்ம ஜன்மமும் இழுக்கு என்பார்க்கு, பண்டை நாளிற் பிறவி உண்ணாட்டுத் தேசிறே.

என்பது சூத்திரம்.

வியாக் :—எங்ஙனமாயினும் முதல் மூன்று சாதிகளில் பிறக்கும் பிறவிகள் போலே, நான்காம் சாதியில் பிறக்கும் பிறவி ஒளியுடையதாகாதே? என்ன, அடிமையின் சுவை அறிந்த மேன்மக்களுக்கு இது ஒளியை உண்டாக்குவது என்னுமதனை எடுத்துக்காட்டோடு அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, தேவத்வமும் நிந்தையானவனுக்கு - இராவணனைக் கொன்ற பின்னர், பிரமன் முதலான தேவர்கள் [2]"தேவரீர் நாராயணன் என்ற தெய்வம்" என்று கூறியது பொருமல், [3]"என்னை மனிதனாகவும் இராமன் என்னும் பெயரினனாகவும் தசரத சக்கரவர்த்திக்குப் புத்திரனாகவும் எண்ணுகிறேன்" என்கையாலும், கோவர்த்தன மலையைக் குடையாகத் தூக்கிப் பிடித்த பின்னர், மனிதச் செயலுக்கு அப்பாற்பட்ட அச் செயலைக் கண்டு ஆச்சரியமடைந்த ஆயர்கள்

1. தேவத்வம் - தெய்வத்தன்மை. நிந்தையானவனுக்கு - நிந்தையாக நினைத்த ஸ்ரீராமபிரானும் கிருஷ்ணனுமான சர்வேச்வரனுக்கு. ஜநிகள் - அவதாரங்கள். உண்ணாட்டுத்தேசு - பரமபதத்தில் ஒளி.

2. "பவாந் நாராயணோ தேவ:"
என்பது, ஸ்ரீராமா. யுத். 120: 13.

3. "ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தஶரதாத்மஜம்"
என்பது, ஸ்ரீராமா. யுத். 120: 11.



[1]"இளமையும் மிகுந்த வீர்யமும் எங்களிடத்தில் தோன்றிய நன்மையற்ற பிறவியும் நினைக்கும்போது ஐயம் உண்டாகிறது; தேவரீர் தேவனா? அசுரனா? இயக்கனா? கந்தர்வனா?" என்று ஐயமுற்றுச் சொல்ல, [2]"இந்தக் கிருஷ்ணன் சிறிது போழ்து பிரணய கோபமுள்ளவனாய்க் கணநேரம் வாய்திறவாமல் இருந்து" என்கிறபடியே அது பொறுதவனாய்ச் சிறிதுபோழ்து வாய்திறவாமல் இருந்து, பின்னை [3]'"நான் தேவன் அல்லன், கந்தர்வனும் அல்லன், இயக்கனும் அல்லன், அசுரனும் அல்லன். நான் உங்களுக்கு உறவினனாகத் தோன்றினேன்; ஆதலால், வேறுவிதமாக இது நினைக்கத்தக்கதன்று" என்கையாலும், தேவர்க்கும் தேவனான தான் உலகத்தைக் காப்பாற்றும் பொருட்டு மக்கள் இனத்தானாய் அவதரித்த அளவில் தேவனாகச் சொல்லுகையும் இழிவாம்படி புரை அறப் பிறக்கும் சீல குணம் மிக்கவனான சர்வேச்வரனுக்கு,

ஒளிவரும் ஜநிகள் போலே-[4]"அந்தப் பரமபுருடன் பிறந்ததனாலே ஒளியுடையவன் ஆனான்" என்றும், [5]"பல பிறப்பாய் ஒளிவரும் முழுநலம்" என்றும் வருகிறபடியே, தாழ இழிந்ததித்தனையும் கல்யாண குணங்கள் ஒளிபெற்றுவரும், மீனம் ஆமை ஏனம் முதலிய பிறவிகள் போலே, பிரஹ்ம ஜன்மமும் இழுக்கு என்பார்க்கு - [6]"எனக்குப் பிரமனாகவும் பிறவி வேண்டா" என்கிறபடியே பிராஹ்மண்யத்துக்கே எல்லைநிலமான பிரமனாகப் பிறக்கையும், அடிமைத் தன்மைக்கு விரோதியான அகங்காரத்துக்குக் காரணமாகையாலே ஆன்மாவிற்குத் தாழ்வு என்று இகழும்படி அடிமைச்சுவடு அறிந்தார்க்கு,

1. பாலத்வஞ்சாதி வீர்யஞ்ச ஜந்மசாஸ்மாஸ்வஶோபநம்
சிந்த்யமாநமமேயாத்மந் சங்காம் க்ருஷ்ணப்ரயச்சதி
தேவோவா தாநவோவா த்வம்யக்ஷோ கந்தர்வ ஏவ வா.
என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 5. 13: 7.

2. "க்ஷணம் பூத்வா த்வஸௌ தூஷ்ணீம்கிஞ்சித்ப்ரணயகோபவாந்"
என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 5. 13: 9.

3. நாஹம் தேவோ ந கந்தர்வோ நயக்ஷோ நசதாநவ:
அஹம்வோ பாந்தவோ ஜாத: நைவ சிந்த்ய மதோந்யதா.
என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 5. 13: 12.

4. "ஸ உ ச்ரேயாந் பவதி ஜாயமாந:"
என்பது, யஜுர்வேதம், 3. 6: 3:

5. திருவாய். 1. 3: 2.

6. "மாஸ்ம பூதபிமே ஜந்ம சதுர்முகாத்மநா"
என்பது, தோத்திர ரத்நம், 55.

பண்டைநாளிற் பிறவி - [1] "பண்டை நாளால்" என்ற திருவாய் மொழியால் "பல் படிகால் குடி குடி வழி வந்து ஆட்செய்யும் தொண்டர்" என்றும், "உன் பொன்னடிக் கடவாதே வழிவருகின்ற அடியர்" என்றும், "தொல் அடிமை வழிவரும் தொண்டர்" என்றும் அருளிச்செய்தபடியே, அடிமைக்கு விரோதியான பிறவி முதலியவற்றால் வரும் செருக்கு இன்றிக்கே கைங்கரியத்துக்குத் தகுதியான குடிப்பிறவி, உண்ணாட்டுத் தேசிறே - [2] "ஆழி அம் கைப் பேர் ஆயர்க்கு ஆளாம் பிறப்பு - உண்ணாட்டுத் தேசன்றே" என்கிற படியே, பகவானிடத்தில் விருப்பம் இல்லாதவர்கள் மிகுதியாக உள்ள உலகமாகையாலே புறநாடான இவ் உலகம்போல் அன்றிக்கே, பகவானுக்கு அநுகூலமாக இருக்கையாகிற இன்பச்சுவையிலே நெருங்கிப் பேரின்ப உலகமாய் அவனுக்கு அந்தரங்கமாய் இருக்கிற பரம பதத்தில் வசிக்கிற பிரகிருதி சம்பந்தம் இல்லாத சரீரம் போலே ஒளியை யுடையது என்கை.

பரமபதத்தில் பகவானுடைய கைங்கர்யத்துக்குத் தகுதியாக மேற்கொள்ளும் சரீரத்தைப் போன்று, அடிமைப் பொருளான ஆன்மாவிற்கு இதுவும் ஒளியை உண்டாக்குவது என்பது கருத்து. (81)

## 82

> [3] ஜனக தசரத வசுதேவ குலங்களுக்கு, மூத்த பெண்ணும் நடுவிற்பிள்ளையும் கடைக்குட்டியும் போலே, இவரும் பிறந்து, புகழும் ஆக்கமும் ஆக்கி, அம்சிறையும் அறுத்தார்.

என்பது சூத்திரம்,

வியாக்:— இனி, இவர் அவதாரத்தின் பரோபகாரத் தன்மையை எடுத்துக்காட்டுகளோடு அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, ஜனக குலத்துக்கு மூத்தபெண் பிறந்து புகழை ஆக்கினாற் போலே-ஜனக குலத்துக்கு மூத்த பெண்ணான பிராட்டி பிறந்து [2] "என் புத்திரியான பிராட்டி, சக்கரவர்த்தித் திருமகனான ஸ்ரீராம பிரானைக் கணவனாக அடைந்து ஜனகர்களுடைய குலத்துக்குக் கீர்த்

1. திருவாய். 9. 2: 1. 2. பெரிய திருவந். 79.

3. ஜனக குலத்துக்கு மூத்த பெண் பிறந்து புகழை ஆக்கினாற் போலேயும், தசரத குலத்துக்கு நடுவிற் பிள்ளை பிறந்து ஆக்கத்தை ஆக்கினாற் போலேயும், வசுதேவ குலத்துக்குக் கடைக்குட்டி பிறந்து அம்சிறை அறுத்தாற்போலேயும், இவரும் பிறந்து புகழும் ஆக்கமும் ஆக்கி அம் சிறையும் அறுத்தார் என்று பிரித்துக் கொண்டுகூட்டி முடிக்க. மூத்த பெண்-சீதாபிராட்டி. நடுவிற் பிள்ளை-ஸ்ரீபரதாழ்வான். கடைக்குட்டி-ஸ்ரீகண்ணபிரான்.



தியை உண்டாக்கப் போகிறாள்" [1] என்கிறபடியே தான்பிறந்த குலத்திற்குக் கீர்த்தியை உண்டாக்கினது போன்றும்,

தசரத குலத்துக்கு நடுவிற்பிள்ளை பிறந்து ஆக்கம் ஆக்கினாற் போலே - தசரத குலத்திற்கு நடுவிற்பிள்ளையான ஸ்ரீ பரதாழ்வான் பிறந்து, [2] "இராச்சியமும் நானும் ஸ்ரீராமபிரானுடைய செல்வம்; இந்த விஷயத்தில் தர்மத்தைச் சொல்லக்கடவீர்; தசரதனுக்கு மகனாகப் பிறந்தவன் இராச்சியத்தை அபகரிப்பவனாக எப்படி ஆகக்கூடும்?" என்பது போன்றவைகளாலே மூத்தார் இருக்க இளையார் முடிசூடக் கடவர் அல்லர் என்னும் குலமரியாதையை நடத்தின அளவன்றிக்கே, [3] "சடையை உடையவனும் மரவுரியை உடுத்துக் கொண்டிருப்பவனும் கைகூப்பி வணங்கினவனாய்ப் பூமியில் விழுந்தவனுமான ஸ்ரீ பரதனைப் பார்த்தார்" என்றும், [4] "பரதனே சடைமுடியுடையவனாய்ச் சரீரம் எங்கும் அழுக்கடைந்தவனாய்த் தேவரீருடைய வருகையை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறான்" என்றும் சொல்லுகிறபடியே மூத்தவரான பெருமாளுடைய பிரிவில் சடைபுனைந்து வற்கலை உடுத்துக் கண்ணநீரால் உண்டான சேற்றிலே தரைக்கிடை கிடந்து, குலத்திற்கு முன்பு இல்லாத ஏற்றத்தை உண்டாக்கினது போன்றும்.

வசுதேவ குலத்துக்கு கடைக்குட்டி பிறந்து அம் சிறை அறுத்தாற் போலே - வசுதேவ குலத்திற்கு [5] "மக்கள் அறுவரைக் கல்லிடை மோத இழந்தவள் தன் வயிற்றில், சிக்கென வந்து பிறந்து நின்றாய்" என்கிறபடியே கடைக்குட்டியான ஸ்ரீ கிருஷ்ணன் பிறந்து, [6] "தந்தை காலில் பெருவிலங்கு தாள் அவிழ" என்கிறபடியே தங்களால் விடுவித்துக் கொள்ள ஒண்ணாத, தாய் தந்தையர்களது கால்கட்டினை அறுத்தது போலேயும்,

1. ஜநகாநாம்குலே கீர்த்தி மாஹரிஷ்யதி மேஸுதா
ஸீதா பர்த்தார மாஸாத்ய ராமம் தஶரதாத்மஜம்

என்பது, ஸ்ரீராமா. பால. 67, 21.

2. ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய தர்மம் வக்தும் இஹார்ஹஸி
கதம் தஶரதாஜ் ஜாதோ பவேத் ராஜ்யாபஹாரக:.

என்பது, ஸ்ரீராமா. அயோத். 82: 12.

3. "ஜடிலம் சீரவஸநம் ப்ராஞ்ஜலிம் பதிதம்புவி"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 100: 1.

4. "பங்கதிக்தஸ்து ஜடிலோ பரதஸ் த்வாம் ப்ரதீக்ஷதே"

என்பது, ஸ்ரீராமா. யுத். 127: 5.

5. பெரியாழ்வார் திரு. 5. 3: 1. 6. பெரியதிருமொழி, 7. 5: 1.

இவரும் பிறந்து புகழும் ஆக்கமும் ஆக்கி அம்சிறையும் அறுத்தார் - இவரும் திருவவதரித்து [1]"மலிபுகழ் வண்குருகூர்" என்னும்படி தாம் அவதரித்த ஊருக்குப் புகழ் உண்டாக்கி, [2]"குடிக்கிடந்து ஆக்கம் செய்து" என்கிறபடியே அடிமைக் குலமரியாதை தப்பாதபடி நின்றமாத்திரமன்றிக்கே, தலைவனுடைய பிரிவினால் உளதாய துன்பத்தின் மிகுதியாலே [3]"காணவாராய் என்று என்று கண்ணும் வாயும் துவர்ந்து" [4]"கண்ண நீர் கைகளால் இறைத்து" [5]"இட்டகால் இட்ட கையரா"ம்படி செயல் அற்றவராய், தரைக்கிடை கிடந்த அன்பின் விசேஷத்தாலே இக்குடிக்குப் பண்டு இல்லாத ஏற்றத்தையும் உண்டாக்கி, [6]"அறுவர் தம் பிறவி அம்சிறையே" என்கிறபடியே தம்முடைய பிரபந்தத்தைக் கற்கு முகத்தாலே தம்மோடு தொடர்புடையரான இவர்களுடைய பிறவியாகிற அறவைச் சிறையையும் அறுத்தார் என்கை.

உபமானமாக எடுத்துக் காட்டப்பட்ட மூவர் செய்த செயல்களையும் இவர் ஒருவரே செய்கையாலும், இத்தனையும் ஆன்ம சொரூபத்திற்குத் தகுதியாகச் செய்கையாலும் இவர் அவதாரம் அன்றோ மிக்க பரோபகாரம் ஆயிற்று என்றபடி. (82)

## 83

> [7] ஆதித்ய ராமதிவாகர அச்யுதபாநுக்களுக்குப் போகாத உள்ளிருள் நீங்கி, சோஷியாத பிறவிக் கடல் வற்றி, விகசியாத போதிற் கமலம் மலர்ந்தது; வகுளபூஷண பாஸ்கரோதயத்திலே.

என்பது சூத்திரம்.

**வியாக்:**—மேலும் இவருடைய அவதாரத்தால் உலகத்துக்கு உண்டான நன்மைகளை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

---

1. *திருவாய்.* 4. 2: 11. 2. *திருவாய்.* 9. 2: 2.
3. *திருவாய்.* 8. 5: 2. 4. *திருவாய்.* 7. 2: 1.
5. *திருவாய்.* 7. 2: 4. 6. *திருவாய்.* 1. 3: 11.

7. *வகுளபூஷணபாஸ்கரோதயத்தில் ஆதித்யனுக்குப் போகாத உள்ளிருள் நீங்கிற்று, ராமதிவாகரனுக்குச் சோஷியாத பிறவிக்கடல் வற்றிற்று, அச்யுதபானுக்கு விகசியாத போதிற்கமலம் மலர்ந்தது என்று பிரித்துக் கூட்டுக. 'நீங்கி, வற்றி' என்னும் எச்சங்களை 'நீங்க, வற்ற' எனத் திரித்தலுமாம். ஆதித்யன் - சூரியன். சோஷியாத - வற்றாத. அச்யுதபானு - கிருஷ்ணனாகிற சூரியன். விகசியாத - மலராத. வகுளபூஷண பாஸ்கரர் - நம்மாழ்வார்.*



அதாவது, ஆதித்யனுக்குப் போகாத உள்ளிருள் நீங்கி- [1]"கதிரவன்குணதிசைச் சிகரம் வந்தணைந்தான் கனஇருள் அகன்றது" என்னும்படி புறஇருளைப் போக்கிக் கொண்டு உதிக்கும் சூரியனுக்குப் போகாத உள்ளிருளான அறிவின்மையானது [2]"நெருப்பு சூரியன் என்னும் இவர்கள் முன்னிலையில் புறஇருள் நாசம் அடையும்; விஷ்ணு பக்தனாகிற சூரியன் முன்னிலையில் புற இருளோடு உள்ளிருளும் நாசம் அடையும்" என்கிறபடியே நீங்க, ராமதிவாகரனுக்குச் சோஷியாத பிறவிக் கடல் வற்றி - [3]"ஏ அநும, அம்புக் கூட்டங்களாகிற கிரணங்களையுடைய வீரனான இராமசூரியன், பகைவர்களாகிற இராக்கதக் கடலை வற்றும்படி செய்யப்போகிறார்" என்கிறபடியே அம்புக் கூட்டங்களாகிற கிரணங்களையுடையவராய்க் கொண்டு, பகைமையையுடைய இராக்கதர்களாகிற கடலை வற்றப்பண்ணின இராம திவாகரனுக்கு வற்றாத [4]"பிறவி என்னும் கடல்" என்கிற பிறப்பாகிற கடல் வற்ற, அச்யுதபாநுக்கு விகசியாத போதிற்கமலம் மலர்ந்தது - [5]"தேவகிப் பிராட்டி கருத் தரித்த பின்பு எல்லா உலகங்களாகிற தாமரையை மலர்த்துவதற்காகத் தேவகியாகிற கிழக்குத் திக்கில் ஒளியையுடைய கிருஷ்ணனாகிற சூரியன் தோன்றினான்" என்கிறபடியே உலகமாகிற தாமரை மலரும்படி தேவகியாகிற கிழக்குத் திசையிலே தோன்றின அச்யுதபானுவான கிருஷ்ணனுக்கு மலராத [6]"போதில் கமல வன் னெஞ்சம்" என்கிற மனமாகிற தாமரை மலர்ந்தது;

---

1. *திருப்பள்ளியெழுச்சி,* 1.
2. *தமோபாஹ்யம் விநச்யேத்து பாவகாதித்ய ஸந்நிதௌ*
   *பாஹ்யமாப்யந்தரஞ்சைவ விஷ்ணுபக்தார்க்க ஸந்நிதௌ.*

*என்பது, பிரமாணம்.*

3. *சரஜாலாம்சுமாந்சூர: கபேராமதிவாகர:*
   *சத்ருரக்ஷோமயம் தோயம் உபசோஷம் நயிஷ்யதி.*

*என்பது, ஸ்ரீராமா. சுந்.* 37: 16.

4. *பெரியாழ்வார் திருமொழி,* 5. 4: 2.
5. *ததோகில ஜகத்பத்ம போதாயாச்யுத பாநுநா*
   *தேவகீபூர்வ ஸந்த்யாயாம் ஆவிர்ப்பூதம் மஹாத்மநா.*

*என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா.* 5. 3: 2.

6. *பெரியாழ்வார் திருமொழி,* 5. 2: 8.

வகுளபூஷண பாஸ்கர உதயத்திலே - [1] "எவருடைய திருவாய்மொழியின் திருப் பாசுரங்களாகிற ஆயிரம் கிரணங்கள் மனிதர்களுடைய அறிவின்மையாகிற இருளைப் போக்கடிக்கின்றனவோ, திருவாழி திருச்சங்குகளைத் தரித்த ஸ்ரீமந்நாராயணன் எவரிடத்தில் வசிக்கின்ருரோ, காதுகளை அடைந்திருக்கின்ற எந்தத் தேசத்தை பிராமணர்கள் வணங்குகின்றுர்களோ, அந்த ஆழ்வாராகிற சூரியனுக்கு வணக்கம்" என்கிறபடியே திருவாய்மொழி ஆயிரமுமாகிற கிரணங்களையுடையராய், பிராட்டியோடும் திவ்விய ஆபரணங்களோடும் திவ்விய ஆயுதங்களோடும் சேர்ந்திருக்கிற நாராயணனைக் [2] "கண்கள் சிவந்து" என்கிற திருவாய்மொழியிற் கூறியவாறே உள்ளே உடையராய், வேதவித்துக்களான பிராமணர்கள் அனைவராலும், கேட்டபோதே தாம் இருந்த தேசத்தை நோக்கி வணங்கும் படியான பெருமையினையுடையராய், வகுளாபரணராய் இருக்கிற ஆழ்வாராகிற சூரியனுடைய உதயத்திலே என்கை.

[3] ஆதித்தியன், திவாகரன், பாநு என்று அவர்களைக் கூறிய சொற்களால் கூருது, பாஸ்கரன் என்ற சொல்லால் ஆழ்வாரைக் கூறுவதால் [4] "ஊரும் நாடும்" என்ற திருப்பாசுரத்திற் கூறியவாறே தம்முடைய சம்பந்தம் உடையார் எல்லார்க்கும் பிரகாசத்தைச் செய்யுமவர் என்று தோற்றுகிறது. (83)

## 84

[5] வம்ச பூமிகளை உத்தரிக்கக் கீழ்க்குலம் புக்க வராஹ கோபாலரைப் போலே, இவரும் நிமக்நரை உயர்த்தத் தாழ இழிந்தார்.

என்பது சூத்திரம்.

---

1. யத்கோ ஸஹஸ்ர மபஹந்தி தமாம்ஸி பும்ஸாம்
நாராயணே வஸதி யத்ர ஸசங்கசக்ர:
யந்மண்டலம் ச்ருதிகதம் ப்ரணமந்தி விப்ரா:
தஸ்மை நமோ வகுளபூஷண பாஸ்கராய.
என்பது, பராங்குசாஷ்டகம்.

2. திருவாய். 8. 8: 1.

3. ஆதித்யன் - அதிதியின் புத்திரன். திவாகரன் - பகலைச் செய்கிறவன். பாநு-பிரகாசிக்கிறவன். பாஸ்கரன் - பிரகாசிக்கச் செய்கிறவன்.

4. திருவாய். 6. 7: 2.

5. இதனை, வம்சத்தை உத்தரிக்கக் கீழ்க்குலம் புக்க கோபாலனைப் போலேயும், பூமியை உத்தரிக்கக் கீழ்ப்புக்க வராஹனைப் போலேயும், இவரும் நிமக்நரை உயர்த்தத் தாழ இழிந்தார் எனப் பிரித்துக் கூட்டுக. உத்தரித்தல் - உயர எடுத்து நிறுத்தல். கீழ்க்குலம் - யாதவ குலம். கோபாலன் - கிருஷ்ணன். நிமக்நர் - பிறவிக்கடலில் மூழ்கினவர்கள்.



வியாக் :—இப்படிப் பிறர் பொருட்டாகவே அவதரித்த இவ் ஆழ்வார், மேலே உள்ள மூன்று சாதிகளில் ஒன்றிலே அவதரியாமல் நான்காம் சாதியிலே அவதரிப்பான் என்? என்ன, அங்ஙனம் அவதரித்ததும் பிறரைக் காக்கும் பொருட்டேயாம் என்று அதற்கு விடை அருளிச்செய்கிறுர் இச் சூத்திரத்தால்,

அதாவது, வம்சத்தை உத்தரிக்கக் கீழ்க்குலம் புக்க கோபாலனைப் போலே - [1] "இந்த வம்சம் யயாதியினுடைய சாபத்தால் இராச்சியத்தை ஆள்வதற்குத் தகுதி அற்றது" என்கிறபடியே யயாதி சாபத்தாலே இராச்சியத்திற்குத் தகுதி இல்லாதபடி கீழ் நிலையை அடைந்த யயாதி வம்சத்தை, [2] "புராணங்களின் பொருளை அறிந்த பெரியோர்களால், அத்தகைய இந்தக் கிருஷ்ணன் மூழ்கிக் கிடந்த யதுவின் வம்சத்தை மேல் நிலைக்குக் கொண்டுவரப் போகிறுர் என்று சொல்லப்படுகிறது" என்கிறபடியே மேல் நிலைக்குக்கொண்டு வருவதற்காக, [3] "அங்கோர் ஆய்க்குலம் புக்கதும்" என்கிறபடியே ஆயர்குலத்திலே உள்புக்குக் கோபாலன் ஆன கிருஷ்ணனைப் போலேயும், பூமியை உத்தரிக்கக் கீழ்ப் புக்க வராஹனைப் போலே - இரணியாக்ஷனுடைய பலத்தாலே நிலைகுலைந்து பெருவெள்ளத்திலே புகுந்த பூமியை [4] "ஏ பூமியே, வராஹ அவதாரம் எடுத்த பகவானுடைய பெருமுயற்சியால் மேலே எடுக்கப்பட்டாய்" என்றும், [5] "விளையாட்டாக பூமியை மேலே எடுத்த வராக நயினருக்கு வணக்கம்" என்றும் சொல்லுகிறபடியே மேலே எடுப்பதற்காகக் [6] "கேழலாய்க் கீழ்புக்கு இடந்திடும்" என்கிறபடியே பாதாளத்திலே தாழ இழிந்த வராக நாயனுரைப் போலேயும்,

---

1. "யயாதி சாபாத்வம்சோயம் ராஜ்யாநர்ஹோஹி ஸாம்ப்ரதம்" என்பது, ஸ்ரீவிஷ்ணுபு. 5: 21: 12.

யயாதியின் சாபவரலாற்றினை, வில்லிபாரதம் ஆதிபர்வம் குருகுலச் சருக்கம் 16 முதல் 25 முடிய உள்ள செய்யுட்களில் காணல் தகும்.

2. "அயம் ஸ கத்யதே ப்ராஜ்ஞை: புராணார்த்த விசாரதை:
கோபாலோ யாதவம் வம்சம் மக்நமப்யுத்தரிஷ்யதி."
என்பது, ஸ்ரீவிஷ்ணுபு. 5. 20: 49.

3. திருவாய். 6. 4: 5.

4. "உத்த்ருதாஸி வராஹேண" என்பது
தைத்திரீயநா. உப.

5. "நமஸ்தஸ்மை வராஹாய லீல யோத்தரதே மஹீம்" என்பது, ஸ்ரீவராகநாயனர் புராணம்.

6. திருவாய். 2. 8: 7.

இவரும் நிமக்நரை உயர்த்தத் தாழ இழிந்தார் - குலம் தாங்கும் செருக்கால், இவ் உலகத்தில் கீழ்நிலையிலே உள்ளவர்களை அந்நிலையில் நின்றும் வேறுபடுத்தி, [1] "அபிமான துங்கன்" என்னும் உயர்த்தியைஉடையர்ஆக்குகைக்காக, அகங்காரத்திற்குக் காரணமான மேல் மூன்று சாதிகள் கேட்டினை விளைப்பனவாம் என்று தோற்றும்படி, அந்த அகங்காரம் இல்லாத நான்காம் வருணத்திலே தாழ இழிந்தார் என்கை.

இதனால், தாம் உயர்குலத்தார் என்னும் செருக்காலே பிறவிப் பெருங்கடலில் அழுந்துகிறவர்கள், அவ் உயர்குலப் பிறப்பு தள்ளத் தக்கது என்று அறிந்து, அச்செருக்கு அற்றுக் கரை ஏறுகைக்காக, அவர்கள் உயர்வாக நினைத்திருக்கும் சாதிகளை இழிவானது என்று விட்டுத் தாழ்ந்த சாதியிலே தாழ இழிந்தார் என்றதாயிற்று.

ஆக, "வீட்டின்பம்" என்ற சூத்திர முதல் இச்சூத்திரம் இறுதியாக, அறிவிலிகளுடைய ஐயத்தை நீக்கும்பொருட்டு, ஆழ்வாருடைய பிறப்பினை ஆராய்வதால் வரும் குற்றத்தையும், வியாசர் முதலியவர்களைப் பார்க்கிலும் இவ் வாழ்வாருடைய அவதாரத்தின் வேறுபட்ட சிறப்பினையும், அவதாரமும் பிறர் பொருட்டே என்னுமதனையும், பெரிய பெருமையினையுடைய இவர் தாழ அவதரித்ததற்குக் காரணத்தையும் அருளிச்செய்தாராயிற்று. (84)

## 85

[2] மிலேச்சனும் பக்தன் ஆனல் சதுர்வேதிகள் அநுவர்த்திக்க அறிவு கொடுத்துக் குலதைவத்தோடு ஒக்கப் பூஜை கொண்டு பாவநதீர்த்தப் பிரசாதனும் என்கிற திருமுகப்படியும், விச்வாமித்ர விஷ்ணுசித்த துளசீப்ருத்யரோடே உள்கலந்து தொழுகுலமான வன் நிலையார் பாடலாலே பிராஹ்மண வேள்விக் குறை முடித்தமையும், கீழ்மகன் தலைமகனுக்குச் சம சகாவாய்த் தம்பிக்கு முன் பிறந்து வேலும் வில்லும் கொண்டு பின் பிறந்தாரைச் சோதித்துத் தமையனுக்கு இளையோன் சத்பாவம் சொல்லும்படி ஏத குலமானமையும், தூதுமொழிந்து நடந்து வந்தவர்களுடைய சம்யக் சகுண சகபோசனமும், ஒரு பிறவியிலே இருபிறவி ஆனர் இருவர்க்குத் தர்மசூநுஸ்வாமிகள் அக்ரபூஜை கொடுத்தமையும், ஐவரில் நால்வரில் மூவரில் முற்பட்டவர்கள் சந்தேகியாமல் சகஜரோடே புரோடாசமாகச் செய்த புத்ர கிருத்யமும், புஷ்ப தியாக போக மண்டபங்களில் பணிப் பூவும் ஆலவட்டமும் வீணையும் கையுமான அந்த ரங்கரை முடி மன்னவனும் வைதிகோத்தமரும் மஹாமுனியும் அநுவர்த்தித்த கிரமமும், யாக அநுயாக உத்தர வீதிகளில் காய அந்ந ஸ்தல சுத்தி பண்ணின விருத்தாசாரமும் அறிவார்க்கிறே ஜன்ம உத்கர்ஷ அபகர்ஷங்கள் தெரிவது.

என்பது சூத்திரம்.

வியாக் :—மேலும், ஆழ்வாருடைய பெருமைக்கு உறுப்பாகப் பரம ஸ்ரீ வைஷ்ணவர்களான பாகவதர்களுடைய பெருமையைப் பொதுவாகப் பல உதாரணங்களாலும் விளக்காநின்றுகொண்டு, இத் தன்மைகளை அறிவார்க்கே அன்றோ,பிறவியின் உயர்வும் தாழ்வும் தெரிவது என்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, மிலேச்சனும் பக்தன் ஆனல் சதுர்வேதிகள் அநுவர்த்திக்க அறிவுகொடுத்துக் குல தைவத்தோடு ஒக்கப் பூஜை கொண்டு பாவன தீர்த்தப் பிரசாதன் ஆம் என்ற திருமுகப்படியும் - மிலேச்சனும் பக்தன் ஆனல் - [1] "என்னுடைய அடியார்கள் பக்கல் அன்பும், என்னை ஆராதிப்பதில் உகப்பும், தானே ஆராதிக்கையும், என்னிடத்தில் ஆடம்பரம் இன்றி இருத்தலும், என் கதையைக் கேட்குமிடத்தில் பக்தியும், பக்தியின் காரியமான குரல் தழுதழுத்தலும், கண்ணநீர் சொரிதலும், மயிர்கூச்செரிதலும், எப்பொழுதும் என்னை நினைப்பதும், என்னிடமிருந்து வேறு பயன்களைக் கொள்ளா

---

1. திருப்பல்லாண்டு, 11.

2. இதனை, திருமுகப்படியையும், குறைமுடித்தமையையும், ஏக குலமானமையையும், சகபோஜனத்தையும், பூஜை கொடுத்தமையையும், புத்ரகிருத்யத்தையும், அநுவர்த்தித்த கிரமத்தையும் அறிவார்க்கிறே ஜந்ம உத்கருஷ அபகருஷங்கள் தெரிவது என்று முடிக்க. இவ்விடத்தில், 226 முதல் 239 முடியவுள்ள ஸ்ரீவசநபூஷண சூத்திரங்களையும் அதன் வியாக்யானத்தையும் படித்தறிதல் தகும்.



1. மத்பக்த ஜந வாத்ஸல்யம் பூஜாயாஞ்சாநு மோதநம்
ஸ்வயமப்யர்ச்சநஞ்சைவ மதர்த்தே டம்பவர்ஜநம்
மத்கதா ச்ரவணேபக்தி: ஸ்வரநேத்ராங்க விக்ரியா
மமாநு ஸ்மரணம் நித்யம் யச்சமாம் நோபஜீவதி
பக்திரஷ்டவிதா ஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சேபிவர்த்ததே.

என்பது, பகவச்சாஸ்திரம்.

திருத்தலும் ஆகிய எட்டுவிதமான பக்தியானது எந்தக் கீழ்க்குலத்தானிடமும் இருக்கிறதோ'' என்கிறபடியே கீழ்க்குலத்தவனாய் உள்ளவனும் இந்த எட்டுவிதமான பக்தியையுடையவன் ஆனால், சதுர்வேதிகள் அநுவர்த்திக்க அறிவுகொடுத்து - [1] "எட்டுவிதமான பக்தியையுடைய அவன் கீழ்க்குலத்தானாயினும் அவனே பிராமணோத்தமன், அவனே முனிவன், அவனே செல்வத்தையுடையவன், அவனே துறவி, அவனே பண்டிதன், அவனுக்கு ஞானத்தைக் கொடுக்கக் கடவன், அவனிடமிருந்து ஞானத்தைப் பெற்றுக்கொள்ளக் கடவன்'' என்றும், [2] "பழுதிலா ஒழுகலாற்றுப் பல சதுப்பேதிமார்கள், இழிகுலத்தவர்களேனும் எம் அடியார்களாகில், தொழுமினீர் கொடுமின் கொண்மின்'' என்றும் சொல்லுகிறபடியே எல்லாரிலும் மேம்பட்டவர்களாய் உயர்சாதியினர்களான பிராமணர்கள் உயர்குலத்திற் பிறத்தல் முதலியவற்றால் உளவாய செருக்கினால் கெடுக்கப்பட்ட தங்களுடைய ஆன்ம சொரூபம் தூய்மை பெறும் பொருட்டுச் சார்ந்து பழகுவதற்கு உரியவர்களாய், அவர்கள் ஞானத்தைப் பெற விரும்பினால் அவர்களுக்கு ஞானத்தைக் கொடுத்து,

குல தைவத்தோடு ஒக்கப் பூஜை கொண்டு - [3] "நான் பூசிக்கப் படுவது போன்று அவனும் பூசிக்கத் தக்கவன்'' என்றும், [4] "நின்னொடும் ஒக்க வழிபட அருளினாய்போல் மதிள் திருவரங்கத்தானே'' என்றும் சொல்லுகிறபடியே, [5] "என்னுடைய நாதனும் என்னுடைய குலதெய்வமுமான ஸ்ரீரங்கநாதன்'' என்று குலதெய்வமாகச் சொல்லப்படுகின்ற சர்வேச்வரனோடு ஒக்க, [6] "கடல்மல்லைத் தலசயனம் ஆர் எண்ணும் நெஞ்சுடையார் அவர் எங்கள் குலதெய்வமே'' என்கிறபடியே குலதெய்வமாக அவர்களைப் பூசை கொண்டு, பாவந

---

1. "ஸவிப்ரேந்த்ரோ முநி: ஸ்ரீமாந் ஸயதிஸ்ஸ சபண்டித:
 தஸ்மைதேயம் ததோ க்ராஹ்யம்''

என்பது, பகவச்சாஸ்திரம்.

2. திருமாலை, 42.

3. "ஸசபூஜ்யோ யதாஹ்யஹம்''

என்பது, பிரமாணம்.

4. திருமாலை, 42.

5. "மமநாதம் மம குலதைவதம்''

என்பது, கத்யத்ரயம்.

"யாவர்க்கும் தொழுகுலமாம் இராமன்''

என்பது, கம்பராமாயணம் குகப்படலம், 68.

6. பெரிய திருமொழி, 2. 6: 4.



தீர்த்தப் பிரசாதன் ஆம் என்ற திருமுருகப்படியும் - [1] "அவன் திருவடி விளக்கின தண்ணீர் ஒப்பு இல்லாத தீர்த்தம், அவன் உண்டு கழித்த சேடம் மிக்க தூய்மை உடையது'' என்கிறபடியே, அவன் திருவடி விளக்கின தண்ணீர் ஒப்பற்ற தீர்த்தம், அவன் அமுது செய்த சேடம் மிக்க தூய்மையுடையது என்று சொல்லுகையாலே, அகங்காரமான மதுவை உண்டு அதனாலே உன்மத்தரான தூய்மை இல்லாதவரும், இந்தத் தீர்த்தம், உண்ட உணவின் சேடம் இவற்றின் சம்பந்தத்தாலே தூய தன்மையராம்படி பாவந தீர்த்தப் பிரசாதன் ஆம் என்று அருளிச்செய்த பகவானுடைய வார்த்தையான திருமுகப் பாசுரத்தையும், அதன்படி எடுப்பான [2] ஆழ்வார் திருப் பாசுரத்தையும் அறிவார்க்கிறே ஜந்ம உத்கர்ஷ அபகர்ஷங்கள் தெரிவது என்க.

[3] விச்வாமித்ர விஷ்ணுசித்த துளசீபிருத்யரோடே உள் கலந்து தொழுகுலமானவன் நிலையார் பாடலாலே பிராஹ்மண வேள்விக் குறை முடித்தமையும் - விச்வாமித்ரரோடே - [4] "கௌசல்யையினுடைய சிறந்த புதல்வனான சீராமனே! மனிதர்களிலே உயர்ந்தவனே! வைகறைப் பொழுது வருகிறது; துயில் எழுவாய்; தேவர்கள் சம்பந்தமான காலைக்கடன்கள் செய்யத் தக்கன'' என்று ஸ்ரீராம பிரானைத் துயில் உணர்த்தின விச்வாமித்திர முனிவரோடும், விஷ்ணு சித்தரோடே - [5] "அரவணையாய்! ஆயர் ஏறே! அம்மம் உண்ணத் துயிலெழாயே'' என்று கண்ணபிரானைத் துயில் எழுப்பின பெரியாழ்வாரோடும், துளசீபிருத்யரோடே - [6] "அரங்கத்தம்மா! பள்ளி எழுந்தருளாயே'' என்று திருவரங்கநாதனைத் திருப்பள்ளி உணர்த்தின

---

1. "தத்பாதாம்பு அதுலம் தீர்த்தம் ததுச்சிஷ்டம் ஸுபாவநம்''

என்பது, பகவச்சாஸ்திரம். பாவநம் - தூய்மை.

2. வானுளார் அறியலாகா வானவா! என்பராகில்
 தேனுலாம் துளபமாலைச் சென்னியாய்! என்பராகில்
 ஊனமாயினகள் செய்யும் ஊனகாரகர்களேலும்
 போனகம் செய்த சேடம் தருவரேல் புனிதமன்றே.

என்பது, அதன்படி எடுப்பான ஆழ்வார் திருப்பாசுரம்.

3. விஷ்ணுசித்தர் - பெரியாழ்வார். துளசிபிருத்யர் - துளவத் தொண்டு செய்தவர்; தொண்டரடிப்பொடியாழ்வார். தொழுகுலமானவன் - நம்பாடுவார். பிராஹ்மணன் - சோமசர்மா என்னும் பிராமணன்.

4. கௌஸல்யா ஸுப்ரஜாராம பூர்வாஸந்த்யா ப்ரவர்த்ததே
 உத்திஷ்ட நரசார்த்தூல கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம்.

என்பது, ஸ்ரீராமா. பால. 23: 2.

5. பெரியாழ்வார் திரு. 2. 2: 1. 6. திருப்பள்ளியெழுச்சி.

துளபத் தொண்டாய தொல் சீர்த் தொண்டரடிப்பொடியாழ்வாரோடும் ஒத்த கோத்திரமுடையவராய், உள்கலந்து - பின் இரவிலே சென்று பாடித் திருக்குறுங்குடி நம்பியைத் திருப்பள்ளி உணர்த்துகையாலே மேற்கூறிய மூவரோடும் ஒருசேர எண்ணப்பட்டு, - [1] "வலந் தாங்கு சக்கரத்து அண்ணல் மணிவண்ணற்கு ஆள் என்று உள் கலந்தார்" என்கிறபடியே பகவானுக்கு அடிமைப்பட்டவர் நாம் என்ற ஞானம் முன்னாக வேறு ஒரு பயனையும் கருதாமல் பாடுதல் தொழிலிலே சேர்ந்தவராய் ஒப்புமை பெற்று, தொழுகுலமானவன் - [2] "எம் தொழுகுலம் தாங்களே" என்று பெரியாரும் விரும்பும்படியான ஏற்றத்தை, அடைந்த பிறவியிலேயே அமைந்த தாழ்மையையுடைய பாகவதன், (நம்பாடுவான்)

நிலையார் பாடலாலே - [3] "உயர்ந்த ஸ்வரமான யாதொரு கைசிகம் என்னும் பண் என்னால் ஈற்றில் கானம் பண்ணப்பட்டதோ அந்தப் பண்ணின் பலத்தால் இந்தப் பாபத்திலிருந்து விடுவிக்கிறேன்; உனக்கு நன்மை உண்டாகட்டும்" என்கிறபடியே திருக்குறுங்குடி நம்பி சந்நிதியில் பின்பு பாடின [4] "நிலையார் பாடல்" ஆன கைசிகப் பண்ணாலே, பிராஹ்மண வேள்விக் குறை முடித்தமையும் - சரக குலத்தில் பிறந்தவனான சோமசர்மா என்னும் பிராமணன் தொடங்கிய யாகத்தைச் செய்யவேண்டிய முறைப்படி செய்யாமையாலும் அது முடிவதற்கு முன்னே அவன் இறக்கையாலும் பிரமரக்ஷசாகப் பிறந்து திரிந்துகொண்டு, [5] "நீ உனது பண்ணின் மஹிமையால் இப் பாவத்தினின்றும் கரை ஏற்றுவதற்குத் தகுந்தவன் என்று, இப்படிச் சொல்லி, இராக்ஷசன் சண்டாள வம்சத்தில் பிறந்த நம்பாடுவானைச் சரணம் அடைந்தான்" என்கிறபடியே நீ உனது பண்ணின் பெருமையாலே என்னை இவ் ஆபத்திலிருந்து கரை ஏற்ற

1. *திருவாய். 3. 7: 9.*   2. *திருவாய். 3. 7: 8.*

3. *யந்மயா பஶ்சிமம் கீதம் ஸ்வரம் கைசிகமுத்தமம்*
*பலேநதஸ்ய பத்ரம்தே மோக்ஷயிஷ்யஸி கில்பிஷாத்.*
*என்பது, கைசிகமாஹாத்மியம்.*

4.

5. *த்வம்வை கீதப்ரபாவேந நிஸ்தாரயிதுமர்ஹஸி*
*ஏவமுக்த்வாத சண்டாலம் ராக்ஷஸ: சரணம் கத:.*
*என்பது, கைசிகமாஹாத்மியம்.*



வேண்டும் என்று சரணம் புக, [1] "பிரமராக்ஷசன் அங்கு இவ்விதம் வரத்தைப் பெற்று, பெரிய கீர்த்தியை யுடைய சோமசர்மாவானவன் வேள்வி சாபத்தினின்றும் விடுபட்டான்" என்கிறபடியே வேள்விக் குறையால் வந்த இராக்ஷசத் தன்மையைப் போக்கி வாழ்விக்கையாலே அந்தப் பிராமணனுடைய யாகத்தில் குறையைத் தலைக் கட்டின படியையும் அறிவார்க்கிறே ஜந்ம உத்கர்ஷ அபகர்ஷங்கள் தெரிவது.

கீழ்மகன் தலைமகனுக்குச் சம சகாவாய்த் தம்பிக்கு முன் பிறந்து வேலும் வில்லும் கொண்டு பின் பிறந்தாரைச் சோதித்துத் தமையனுக்கு இளையோன் சத்பாவம் சொல்லும்படி ஏககுல மானமையும் - கீழ்மகன் - வேடர் குலத்தில் பிறந்தவராகையாலே [2] "ஏழை ஏதலன் கீழ்மகன்" என்கிறபடியே பிறவியாலும் ஒழுக்கத்தாலும் ஞானத்தாலும் தண்ணியரான ஸ்ரீ குகப்பெருமாள், தலைமகனுக்கு - அயோத்தியர் கோமானாகையாலே அவை எல்லாவற்றாலும் உயர்வு பெற்றவாரயிருக்கிற அளவுமன்றிக்கே, [3] தர்மி ஒன்றாகையாலே [4] "வானோர் தலைமகன்" ஆக இருக்கிற சக்கரவர்த்தித் திருமகனுக்கு, சம சகாவாய் - [5] "உகந்து தோழன் நீ" என்கையாலே ஒத்த தோழனாய், தம்பிக்கு முன் பிறந்து - [6] "மாழை மான் மடநோக்கி உன் தோழி; உம்பி எம்பி என்று ஒழிந்திலை" என்கிறபடியே இவர் தம்பியான இளையபெருமாளுக்கு முன்னே பிறந்தவராய், பின் பிறந்தாரை வேலும் வில்லும் கொண்டு சோதித்து - குகப் பெருமாளாகிய தம்மை இப்படி அங்கீகரித்த அன்று இரவு பெருமாள் பள்ளிகொண்டருளாநிற்க, அவருடைய ஸௌகுமார்யத்தை நினைந்துகொண்டே இருப்பதனால் உண்டான பரிவாலே கண் உறக்கம் அற்று, கையும் வில்லுமாய்க் காத்துக்கொண்டு நிற்கிற இளையபெருமாளிடத்தில் ஐயம் கொண்டு,

1. *ஏவம் தத்ர வரம் க்ருஹ்ய ராக்ஷஸோ ப்ரம்ஹ ஸம்ஜ்ஞித:*
*யஜ்ஞசாபாத் விநிர்முக்த: ஸோமசர்மா மஹாயசா:*
*என்பது, கைசிக மாஹாத்மியம்.*

2. *பெரிய திருமொழி, 5. 8: 1.*

3. *'தர்மி ஒன்றாகையாலே' என்றது, ஆதியஞ்சோதி உருவை அங்கு வைத்து இங்குப் பிறந்தவனாகையாலே என்றபடி.*

4. ... ... ... ...   5. *பெரிய திருமொழி, 5. 8:1.*

*ஆழநீர்க் கங்கை அம்பி கடாவிய*
*ஏழை வேடனுக்கு, எம்பி நின்தம்பி, நீ*
*தோழன், மங்கை கொழுந்தி எனச்சொன்ன*
*வாழி நண்பினை உன்னி மயங்குவாள்.*
*என்பது, கம்பராமாயணம்.*

6. *பெரிய திருமொழி, 5. 8: 1.*

[1] "கூர் அணிந்த வேல்வலவன்" என்றும், [2] "அதற்குப் பின்னர் நான் உயர்ந்த வில்லையும் அம்பையுமுடையவனாய் எங்கு அந்த இலக்குமணன் இருந்தானோ அங்கு நானும் இருந்தேன்" என்றும் சொல்லுகிறபடியே ஆயுதங்களோடு கூடினவராய்க் கொண்டு இளையபெருமாள் மேலே கண்ணாய் நின்று அவருடைய நினைவினைச் சோதித்து,

தமையனுக்கு - ஸ்ரீ ராமபிரானைப் பிரிந்த பிரிவால் வருந்தியவனாய்த் திருச்சித்திரகூடத்திற்குச் செல்வதற்காக வந்த தமையனான ஸ்ரீ பரதாழ்வானுக்கு, இளையோன் சத்பாவம் சொல்லும்படி - [3] "பிறகு காட்டினையே இருப்பிடமாகக் கொண்ட குகப்பெருமாள் அறியமுடியாத நிலைமையிலுள்ள பரதனுக்கு இலக்குமணனுடைய நல்ல தன்மையைச் சிறிது சொன்னார்" என்கிறபடியே, தம்பியான இளையபெருமாளுடைய [4] "இளமைப் பருவம் தொடங்கி ஸ்ரீராமபிரானிடத்தில் இலக்குமணன் மிக்க பக்தியுள்ளவனாக இருந்தான்"

1. பெரியாழ்வார் திருமொழி, 3. 10: 4.

2. ததஸ்த்வஹஞ்சோத்தம பாணசாப த்ருத்
ஸ்திதோபவம் தத்ர ஸ யத்ர லக்ஷ்மண:

என்பது, ஸ்ரீராமா. அயோத். 87: 23.

"இளையபெருமாளை ஸ்ரீகுகப்பெருமாள் அதிசங்கை பண்ண, இருவரையும் அதிசங்கை பண்ணி ஸ்ரீ குகப்பெருமாள் பரிகரம் பெருமாளை நோக்கிற்றிறே. ஒருநாள் முகத்திலே விழித்தவர்களை வடிவழகு படுத்தும் பாடாயிற்று இது"

என்பது, ஸ்ரீவசநபூஷணம்.

மாலைவாய் நியமம் செய்து மரபுளி இயற்றி வைகல்
வேலைவா யமிர்தன் னாளும் வீரனும் விரித்த நாணல்
மாலைவாய்ப் பாரின்பாயல் வைகினன் ; வரிவிலேந்திக்
காலைவா யளவும் தம்பி இமைப்பிலன் காத்து நின்றான்.

தும்பியின் குழாத்தின் சுற்றும் சுற்றத்தன் தொடுத்த வில்லன்
வெம்பிவெந் தழியாநின்ற நெஞ்சினன் விழித்த கண்ணன்
தம்பிநின் றானை நோக்கித் தலைமகன் தனிமை நோக்கி
அம்பியின் தலைவன் கண்ணீர் அருவிசோர் குன்றின் நின்றான்.

என்ற கம்பராமாயணச் செய்யுட்கள் இங்கு நினைத்தல் தகும்.

3. ஆசசக்ஷே ஸத்பாவம் லக்ஷ்மணஸ்ய மஹாத்மந:
பரதாயாப்ரமேயாய குஹோ கஹநகோசர:

என்பது, ஸ்ரீராமா. அயோத். 86: 1.

4. "பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:"

என்பது, ஸ்ரீராமா. பால. 18: 27.



என்றும், [1] "ககுத்த வம்சத்தில் பிறந்தவரே! உமக்கு நான் பரதந்திரனாக இருக்கிறேன்" என்றும் சொல்லுகிறபடியே பெருமாள் பக்கல் உள்ள பக்தியும் பாரதந்திரியமும் ஆகிய இவையே அறிகுறிகளாகக் கொள்ளவேண்டும்படி இருக்கையாகிற ஆன்மாவோடு என்றுமுள்ள தன்மையைச் சொல்லும்படி, ஏக குலம் ஆனமையும் - இக்ஷ்வாகு குலத்தாரோடு ஒன்றாகக் கலந்தபடியையும் அறிவார்க்கிறே ஜந்ம உத்கர்ஷ அபகர்ஷங்கள் தெரிவது.

[2] தூது மொழிந்து நடந்து வந்தவர்களுடைய சம்யக் சகுண சக போஜனமும் - தூது மொழிந்தவருடைய சம்யக் போஜனமும் - [3] "முன்னோர் தூது வானரத்தின் வாயில் மொழிந்து" என்கிறபடியே பிராட்டிக்குத் தூதவாக்கியத்தைத் திருவடியாலே சொல்லிவிட்ட சக்கரவர்த்தித்திருமகன் [4] "சக்கரவர்த்தித் திருமகனான ஸ்ரீராமபிரான் சபரியினால் நன்றாகப் பூஜிக்கப்பட்டார்" என்கிறபடியே ஸ்ரீ சபரி கையால் செய்த சம்யக் போஜனமும், தூது நடந்தவருடைய சகுண போஜனமும் - [5] "குடை மன்னரிடை நடந்த தூதா" என்கிறபடியே பாண்டவர்களுக்காகத் தூதுசென்ற கிருஷ்ணன், வீடுமன் துரோணன் முதலிய பெரியோர்களுடைய வீடுகளை விட்டு,

1. "பரவாநஸ்மி காகுத்ஸ்த த்வயி வர்ஷஶதம் ஸ்திதே"

என்பது, ஸ்ரீராமா. ஆரண். 15: 7.

2. இந்த வாக்கியத்தால் சபரி, விதுரர், அநுமான் இவர்களுடைய பெருமை சொல்லப்படுகிறது. இந்த வாக்கியத்தை, தூது மொழிந்தவருடைய சம்யக்போஜனமும், தூது நடந்தவருடைய சகுண போஜனமும், தூது வந்தவருடைய சஹபோஜனமும் என்று பிரித்துக் கூட்டுக. தூது மொழிந்தவர் - ஸ்ரீராமபிரான். சம்யக்போஜனம் - நல்ல உணவு. தூது நடந்தவர் - கிருஷ்ணபகவான். சகுணபோஜனம் - குணத்தோடு கூடிய உணவு. தூது வந்தவர் - அநுமான். சகபோஜனம் - ஓரிலையில் ஒருசேர உண்டல்.

3. பெரிய திருமொழி, 2. 2: 3.

4. "ஸபர்யா பூஜிதஸ்ஸம்யக் ராமோ தஶரதாத்மஜ:"

என்பது, ஸ்ரீராமா. பால. 1: 57.

ஆண்டவன் அன்பின் எத்தி யழுதிழி அருவிக்கண்ணள்
மாண்டதென் மாயப் பாசம்; வந்தது வரம்பில் காலம்
பூண்ட மாதவத்தின் செல்வம்; போயது பிறவி என்பாள்
வேண்டிய கொணர்ந்து நல்க விருந்துசெய் திருந்தவேலை.

என்பது. கம்பராமாயணம் சபரிபிறப்.

5. பெரிய திருமொழி, 6. 2: 9.

[1] "தூய்மையையுடையனவும் குணமுடையனவுமான விதுரருடைய அன்னங்களை உண்டார்" என்கிறபடியே தூய்மை இனிமை முதலிய குணங்களைக் கண்டு உகந்து ஸ்ரீ விதுரர் திருமாளிகையில் அமுது செய்த சகுண போஜனமும், தூது வந்தவருடைய சகபோஜனமும் - [2] "தூது வந்த குரங்கு" என்கிற திருவடி [3] "பார்க்கப் பட்டாள் பிராட்டி" என்ற பிரீதியாலே [4] "ஸ்ரீராமபிரான் செய்த உபகாரத்துக்காகச் சுக்கிரீவன் கைங்கரியம் செய்தவன், விபீஷணன் இராச்சியத்தை விரும்பினவன், ஒன்றையும் விரும்பாமல் திருவடி பெருமாளுக்குக் கைங்கரியம் செய்தான், ஆதலால், உடன் உண்பது அதற்குத் தகுந்தது" என்று திருவுள்ளம்பற்றி, [5] "கோதில் வாய்மையினொடும் உடனே உண்பன் நான் என்ற ஒண்பொருள்" என்கிறபடியே திருவடியோடு ஸ்ரீ ராமபிரான் செய்த சகபோஜனத்தையும் அறிவார்க்கிறே ஜந்ம உத்கர்ஷ அபகர்ஷங்கள் தெரிவது.

[6] ஒரு பிறவியிலே இருபிறவி ஆனார் இருவர்க்குத் தர்மசூநு ஸ்வாமிகள் அக்ரபூஜை கொடுத்தமையும்-ஒரு பிறவியிலே இரு பிறவி ஆனார் இருவர்க்கு - யது குலத்திலே பிறந்து ஆயர் குலத்திலே அவ்வினத்தானாகவே வளருகையாலே ஒரு பிறவியிலே இருபிறவியான கிருஷ்ணனுக்கும், ரிஷி புத்திரராகப் பிறந்து பிரம்பன் குடியிலே அவ்வினத்தாராகவே வளருகையாலே ஒரு பிறவியிலே இரு பிறவியான திருமழிசைப்பிரானுக்கும், தர்மசூநு ஸ்வாமிகள் அக்ரபூஜை கொடுத்தமையும் - தர்மபுத்திரர் தாம் செய்த இராயசூய யாகத்தில் (கண்ணபிரானுக்கு) அக்ரபூஜை கொடுத்தமையையும், பெரும்புலியூர் அடிகள் தம்முடைய யாகத்திலே (திருமழிசைப்பிரானுக்கு) அக்ரபூஜை கொடுத்தமையையும். (அக்ரபூஜை - முதல் மரியாதை). அறிவார்க்கிறே ஜந்ம உத்கர்ஷ அபஹர்ஷங்கள் தெரிவது.

[1] ஐவரில் நால்வரில் மூவரில் முற்பட்டவர்கள் சந்தேஹியாமல் சகஜரோடே புரோடாசமாகச் செய்த புத்ர கிருத்தியமும் - ஐவரில் முற்பட்டவர் சந்தேஹியாமல் செய்த புத்ரகிருத்யமும் - பாண்டவர்கள் ஐவரில் முதல்வரான தருமபுத்திரர் ஸ்ரீ விதுரர்க்கு, அவருடைய ஞானத்தின் மேம்பாட்டினைக் கண்டு, அசரீரி வாக்கியத்தை உட்கொண்டு ஐயப்படாமல் செய்த புத்திர கிருத்யமும். (புத்ர கிருத்யம்- தந்தை இறந்த பின்னர் மகன் செய்யவேண்டிய இறுதிக் கடன்.) நால்வரில் முற்பட்டவர் சகஜரோடே செய்த புத்ரகிருத்யமும் - தசரத சக்கரவர்த்தியினுடைய புதல்வர்கள் நால்வரில் முதல்வரான பெருமாள் [2] "இலக்குமணா! விறகுகளைக் கொண்டு வா, நெருப்பினைக் கடைகிறேன், என் பொருட்டு மரணம் அடைந்த சடாயுவைச் சுட விரும்புகிறேன்" என்கிறபடியே உடன் பிறந்தவரான இளையபெருமாளும் உடன் நிற்கச்செய்தே அவர் கையிலும் காட்டாமல், [3] "இவ்விதம் சொல்லிப் பறவைகட்கு அரசனை சடாயுவை எரிகின்ற

---

1. "விதுராந்நாநி புபுஜே சுசீநி குணவந்திச"
என்பது, பாரதம் உத்யோகபர்.

2. பெரிய திருமொழி, 10. 2: 6.

3. "த்ருஷ்டா ஸீதா" என்பது, ஸ்ரீராமா. பால. 1. 78.
"கண்டனன் கற்பினுக் கணியைக் கண்களால்"
என்பது, கம்பராமாயணம்.

4. "உபகாராய ஸுக்ரீவோ ராஜ்ய காங்க்ஷீவிபீஷண:
நிஷ்காரணாய ஹநுமாந் தத்துல்யம் ஸஹபோஜநம்"
என்பது, பாத்மோத்தர புரா.

5. பெரிய திருமொழி, 5. 8: 2.

6. இந்த வாக்கியத்தால் கண்ணபிரான், திருமழிசைப்பிரான் இவர்களுடைய பெருமை சொல்லப்படுகிறது. ஒரு பிறவியிலே இருபிறவியானார் இருவர் - கண்ணபிரானும், திருமழிசைப்பிரானும். தர்மசூநு - தருமபுத்திரன். ஸ்வாமிகள் - பெரும்புலியூரில் உள்ள பிராமணர்கள். தர்மபுத்திரன் தான் செய்த இராயசூய யாகத்தில் கண்ணபிரானுக்கு அரசவையில் அக்ரதாம்பூலம் கொடுத்தான். பெரும்புலியூரில் உள்ள பிராமணர்கள் தாங்கள் செய்த யாகத்தில் திருமழிசைப்பிரானைக் கௌரவித்தார்கள். பெரும்புலியூர் என்பது தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவையாற்றுக்கு மேற்கே ஒரு மைல் தொலைவில் இருக்கிறது.

1. இந்த வாக்கியத்தில் விதுரர், ஜடாயு, மாறநேரிநம்பி என்னும் இவர்களுக்கு நேர்ந்த சரம சம்ஸ்காரங்கள் சொல்லப்படுகின்றன. இதனை, ஐவரில் முற்பட்டவர் சந்தேஹியாமல் செய்த புத்ரகிருத்யமும், நால்வரில் முற்பட்டவர் சஹஜரோடே செய்த புத்ரகிருத்யமும், மூவரில் முற்பட்டவர் புரோடாசமாகச் செய்த புத்ரகிருத்யமும் என்று பிரித்துக் கூட்டுக. ஐவரில் முற்பட்டவர் - தருமபுத்திரன். நால்வரில் முற்பட்டவர் - ஸ்ரீராமபிரான். சகஜரோடே - தம்பியான இளையபெருமாளோடே. மூவரில் முற்பட்டவர் - பெரியநம்பிகள். புரோடாசம் - தேவர்களுக்காக வேள்வித் தீயில் இடும் அரிசி மாவாலாகிய ஓமப் பொருள்.

2. ஸௌமித்ரே ஹர காஷ்டாநி நிர்மதிஷ்யாமி பாவகம்
க்ருத்ரராஜம் திதக்ஷாமி மத்க்ருதே நிதநம்கதம்.
என்பது, ஸ்ரீராமா. ஆரண். 68: 27.

3. ஏவமுக்த்வா சிதாம் தீப்தாமாரோப்ய பதகேச்வரம்
ததாஹ ராமோ தர்மாத்மா ஸ்வபந்துமிவ துக்கித:
என்பது. ஸ்ரீராமா. ஆரண்: 68: 31.

இந்தன மெனைய என்னக் காரகில் ஈட்டத்தோடும்
சந்தனம் குவித்து வேண்டும் தருப்பையும் திருத்திப் பூவும்
சிந்தினன் மணலின்வேதி தீர்தர இயற்றித் தெண்ணீர்
தந்தனன் தாதைதன்னைத் தடக்கையால் எடுத்துச் சார்வான்.

சிதையில் ஏற்றித் தர்மாத்மாவான ஸ்ரீராமபிரான் துக்கம் அடைந்தவராய்த் தம் உறவினர்களை எரித்தாற்போன்று முறையில் எரித்தார்'' என்கிறபடியே [1] பெரியவுடையார்க்குச் செய்த புத்ரகிருத்யமும், மூவரில் முற்பட்டவர் புரோடாசமாகச் செய்த புத்ரகிருத்தியமும் - பெரிய நம்பி, திருக்கோட்டியூர் நம்பி, பெரிய திருமலை நம்பி என்று ஒரு சாலை மாணுக்கர்களாய்க் கொண்டு ஆளவந்தார் திருவடியிலே சேவிக்கையாலும், உடையவர்க்கு ஆசாரியர்கள் ஆகையாலும் பிரசித்தரான நம்பிகள் மூவரிலும் முதல்வரான பெரியநம்பி, மாறனேரி நம்பிக்கு 'புரோடாசத்தை நாய்க் கிடாதே கொள்ளும்' என்று அவர் அருளிச்செய்துபோந்தபடியே புரோடாசமாக நினைத்துச் செய்த புத்ரகிருத்யமும்,

[2] புஷ்ப தியாக போக மண்டபங்களில் பணிப்பூவும் ஆலவட்டமும் வீணையும் கையுமான அந்தரங்கரை முடி மன்னவனும் வைதிகோத்தமரும் மஹாமுனியும் அநுவர்த்தித்த கிரமமும்-

---

எந்தினன் இருகைதன்னால் ஏற்றினன் ஈமம் தன்மேல்
சாந்தொடு மலரும் நீரும் சொரிந்தனன் தலையின் சாரல்
காந்தெரி கனல மூட்டிக் கடன்முறை கடவா வண்ணம்
நேர்ந்தனன் நிரம்பு நன்னூல் மந்திர நெறியின் வல்லான்.

என்பன, கம்பராமாயணம்.

1. பெரியவுடையார் - ஜடாயு.

2. இவ்வாக்கியத்தில் குறும்பறுத்தநம்பி, திருக்கச்சிநம்பி, திருப்பாணாழ்வார் என்னும் இவர்கள் பெருமை பேசப்படுகிறது. இதனை புஷ்ப மண்டபத்தில் பணிப்பூவும் கையுமான அந்தரங்கரை முடிமன்னவன் அநுவர்த்தித்த கிரமமும், தியாக மண்டபத்தில் ஆலவட்டமும் கையுமான அந்தரங்கரை வைதிகோத்தமர் அநுவர்த்தித்த கிரமமும், போகமண்டபத்தில் வீணையும் கையுமான அந்தரங்கரை மஹாமுநி அநுவர்த்தித்த கிரமமும் என்று பிரித்துக் கூட்டுக. புஷ்பமண்டபம் - திருவேங்கடம். அந்தரங்கர் - குறும்பறுத்த நம்பி. முடிமன்னவன் - தொண்டைமான் சக்கரவர்த்தி. தியாகமண்டபம் - பெருமாள் கோயில். அந்தரங்கர் - திருக்கச்சிநம்பி. வைதிகோத்தமர் - இராமாநுசர். போகமண்டபம் - திருவரங்கம். அந்தரங்கர் - திருப்பாணாழ்வார். மஹாமுநி - உலோக சாரங்க மஹாமுனிகள்.



புஷ்ப மண்டபத்தில் பணிப்பூவும் கையுமான அந்தரங்கரை முடி மன்னவன் அநுவர்த்தித்த கிரமமும் - [1] "சிந்து பூ மகிழும் திருவேங்கடம்'' என்கிறபடியே மலர் மண்டபமான திருவேங்கடத்தில் பணிப்பூவும் கையுமாய்த் திருவுள்ளம் அறியத் தொண்டு செய்கையாலே திருவேங்கட முடையானுக்கு அந்தரங்கரான குறும்பறுத்த நம்பியை, [2] "துளங்கு நீண்முடி அரசர்தம் குரிசில் தொண்டை மன்னவன்'' என்கிற முடிசூடிய அரசர்களில் தலைவனை தொண்டைமான் சக்கரவர்த்தி சார்ந்து பின் பற்றிய முறையையும், (பணிப்பூ - மண்ணால் செய்யப்பட்ட பூ; மண் பூ). தியாக மண்டபத்தில் ஆலவட்டமும் கையுமான அந்தரங்கரை வைதிகோத்தமர் அநுவர்த்தித்த கிரமமும் - [3] "வேகவதியின் வடகரையில் புண்யகோடி விமானத்தில் விஷ்ணுவானவர் எல்லா உயிர்களுக்கும் வரம் கொடுக்கும் பெருமானாய் இன்றும் எல்லாராலும் காணப்படுகிறார்'' என்கிறபடியே கொடை மண்டபமான பெருமாள் கோயிலிலே விசிறியும் கையுமாய்ப் பெருமாளுக்கு அந்தரங்கராய் நின்ற திருக்கச்சிநம்பியை வைதிகோத்தமரான உடையவர் சார்ந்து பின்பற்றிய முறையையும், போக மண்டபத்தில் வீணையும் கையுமான அந்தரங்கரை மஹாமுனி அநுவர்த்தித்த கிரமமும் - [4] "தெண்ணீர்ப் பொன்னித் திரைக் கையால் அடிவருடப் பள்ளி கொள்ளும்'' என்கிறபடியே இன்ப மண்டபமான திருவரங்கம் பெரிய கோயிலிலே வீணையும் கையுமாய்ப் பெருமாளுக்கு அந்தரங்கராய் ஒழுகிப் போந்த திருப்பாணாழ்வாரை உலோக சாரங்க மஹாமுனிவர் சார்ந்த முறையையும், அறிவார்க்கிறே ஜந்ம உத்கர்ஷ அபகர்ஷங்கள் தெரிவது.

[5] யாக அநுயாக உத்தர வீதிகளில் காய அந்ந ஸ்தல சுத்தி பண்ணின விருத்த ஆசாரமும் - யாகத்தில் காயசுத்தி பண்ணின விருத்த ஆசாரமும் - "யஜ தேவ பூஜாயாம்'' என்கையாலே யாகம்

---

1. திருவாய். 3. 3: 2. 2. பெரிய திருமொழி, 5. 8: 9.

3. வேகவத்யுத்தரே தீரே புண்யகோட்யாம் ஹரிஸ்ஸ்வயம்
வரதஸ்ஸர்வ பூதாநாம் அத்யாபி பரித்ருச்யதே.

என்பது, ஸ்ரீகாஞ்சீ மாஹாத்மியம்.

4. பெருமாள் திருமொழி, 1: 1.

5. இவ்வாக்கியத்தில் பிள்ளையுறங்காவில்லி தாசர், பிள்ளையேறு திருவுடையார் தாசர், பிள்ளைவானமாமலை தாசர் என்னும் பரம ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பெருமை கூறப்படுகிறது. இதனை, யாகத்தில் காயசுத்தி பண்ணின விருத்தாசாரம் என்றும், அநுயாகத்தில் அன்னசுத்தி பண்ணின விருத்தாசாரம் என்றும், உத்தரவீதியில் ஸ்தலசுத்தி பண்ணின விருத்தாசாரம் என்றும் பிரித்துக் கூட்டுக.

என்னும் சொல்லுக்குப் பொருளான திருவாராதனத்தில் பிள்ளை யுறங்காவில்லிதாசரைத் தீண்டுதலாலே காயசுத்தி பண்ணின ஞானவயோதிகரான உடையவருடைய அநுஷ்டானத்தையும், அநுயாகத்தில் அன்னசுத்தி பண்ணின விருத்த ஆசாரமும் - பகவானுடைய திருவாராதனம் முடிந்த பின்னர் அத் திருவாராதனம் முடிவுறச் செய்யப்படுமது ஆகையாலே அநுயாகம் என்ற சொல்லின் பொருளான, ஆராதனத்தைச் செய்த அப் பிரசாதத்தை உண்ணும் போது, பிள்ளை ஏறு திருவுடையார் தாசருடைய கரத்தாலே அப் பிரசாதத்தைத் தொடச்செய்து அன்னசுத்தி செய்த ஞான வயோதிகரான நம்பிள்ளையினுடைய அநுஷ்டானத்தையும், உத்தர வீதியில் ஸ்தல சுத்தி பண்ணின விருத்த ஆசாரமும் - திருவரங்கத்தில் வடக்கு வீதியில் குடிபுகும்போது பிள்ளை வான மாமலை தாசருடைய நடையாட்டத்தினாலே நிலத்தைச் சுத்தி பண்ணின ஞான வயோதிகரான நடுவில்திருவீதிப்பிள்ளை பட்டருடைய அநுஷ்டானத்தையும், அறிவார்க்கிறே ஜந்ம உத்கர்ஷ அபகர்ஷங்கள் தெரிவது - இப்படி மேலே கூறிய இவை எல்லாவற்றையும் அறிவார்க்கே அன்றோ 'இன்ன பிறப்பு உயர்ந்தது, இன்னபிறப்பு தாழ்ந்தது' என்று பிறப்பினுடைய உயர்வு தாழ்வுகள் தோன்றுவன என்றபடி.

இதனால், பிறவி முதலியவற்றால் தாழ்ந்த நீசர்கள் பகவானிடத்தில் பக்தியையுடையவர்கள் ஆனால் உயர்சாதியினரால் சார்ந்து ஒழுகப்படுமவர்களாய், அவ்வுயர் சாதியினருக்கு ஞானத்தை உபதேசிக்கக் கூடியவர்களாய், சர்வேச்வரனைப் போன்று அவர்களால் பூஜிக்கத்தக்கவர்களாய், தங்களுடைய தீர்த்தம் பிரசாதம் இவற்றால் எல்லாரையும் தூயராக்குமவர்களாம் படியையும், தீவினையிலே மூழ்கிக் கிடக்கின்ற உயர் சாதியினரையும் தங்களுடைய சம்பந்தத்தாலே உயர்ந்த நிலையை அடையச் செய்யும் தன்மையையும், அவர்கள் அளவில் இறைவனுடைய ஆதரமும் அவனைப் பற்றிய அடியாருடைய ஒழுகலாறு இவற்றின் வகைகளையும் அவர்களுடைய பரிசமே மிகமேலானது என்னுமதனையும், பிரமாணங்களால் அறியப்படுகின்றவனான சர்வேச்வரன் என்ன, அப் பிர

யாகத்தில் காயசுத்தி பண்ணினவர் - ஸ்ரீராமாநுசர். யாகம் - திருவாராதனம். காயம் - சரீரம். அநுயாகத்தில் அன்ன சுத்தி பண்ணிவர் - நம்பிள்ளை. அநுயாகம் - இறைவனுக்கு நிவேதித்த பிரசாதத்தை உண்ணுதல். அன்னம் - சோறு. உத்தரவீதியில் ஸ்தல சுத்தி பண்ணினவர் - நடுவில் திருவீதிப் பிள்ளைபட்டர். ஸ்தலசுத்தி - இல்லத்தைத் தூய்மை செய்தல்.



மாணங்களைக் கொண்டு அறிகின்ற பெரியோர்கள் என்ன இவர்களுடைய வார்த்தைகளாலும் அநுஷ்டானங்களாலும் சிற்றறிவினர்களும் அறியும்படி பிரகாசிப்பித்தாராயிற்று. (85)

## 86

[1]அஜ்ஞர் பிரமிக்கிற வர்ண ஆச்ரம வித்யா விருத்தங்களை, கர்த்தப ஜன்மம் ச்வபசாதமம் சில்ப நைபுணம் பஸ்மாஹுதி சவவிதவாலங்காரம் என்று கழிப்பர்கள்.

என்பது சூத்திரம்.

வியாக் :— [2]"ஜன்மஉத்கர்ஷ அபகர்ஷங்கள் தெரிவது" என்ற இடத்தில், அந்தப் பிறவியின் உயர்வு தாழ்வுகளுக்கு உடலாகச் சொல்லப்பட்டுள்ளனவற்றை வெளியிடுகிறார் இச் சூத்திரத்தால். அவற்றில் தாழ்ந்த பிறவி இன்னது என்று தோற்றும்படி, பகவானைப் பற்றிய ஞானம் இல்லாத சாதி முதலாயினவற்றின் தாழ்வினைப் பிரமாணத்தோடு காட்டுகிறார் முதலில்.

அதாவது, அஜ்ஞர் - பகவானுக்கு அடிமையாக இருத்தலே ஆன்மாவிற்கு நிரூபகம் என்று அறுதியிட்டு அதற்குத் தகுதியாகத் தள்ளத்தக்கனவற்றையும் கொள்ளத்தக்கனவற்றையும் பகுத்து அறியத்தக்க ஞானம் இல்லாதவர்கள், பகவத் சம்பந்தமான ஞானம் இல்லாத காரணத்தாலே தாழ்ந்தவர்களாக இருக்க, பிரமிக்கிற

1. இச் சூத்திரத்தில் உள்ள 'அஜ்ஞர் பிரமிக்கிற' என்ற தொடர் மொழியைப் பின்வருகின்ற 'வர்ணம்' முதலான நான்கு சொற்களோடும் தனித்தனியே கூட்டுக. 'சவவிதவாலங்காரம்' என்பதிலுள்ள அலங்காரம் என்னும் சொல்லை 'சவ' என்ற சொல்லோடும் கூட்டுக. அஜ்ஞர் பிரமிக்கிற வர்ணத்தைக் கர்த்தப ஜன்மம் என்றும், ஆச்ரமத்தைச் ச்வபசாதமம் என்றும், வித்யையைச் சில்பநைபுணம் என்றும், விருத்தத்தைப் பஸ்மாஹுதி என்றும் நிரல் நிறையாகக் கொள்க. அங்ஙனம் கொண்டு, சவ அலங்காரம் என்றும் விதவா அலங்காரம் என்றும் கழிப்பர்கள் என்று கூட்டிப் பொருள் முடிவு காண்க.

அஜ்ஞர் - அறிவில்லாதவர். வர்ணம் - சாதி. ஆச்ரமம் - பிரமசரியம் முதலிய நிலைகள். வித்யா - கல்வி. விருத்தம் - ஒழுக்கம். கர்த்தப ஜன்மம் - கழுதைப் பிறப்பு. ச்வபச அதமம் - நாய் இறைச்சி தின்னும் நீசனைக் காட்டிலும் தாழ்ந்தது. சில்பநைபுணம் - செய்தொழில் திறன். பஸ்மாஹுதி - சாம்பலில் இட்ட ஆகுதி. சவம் - பிணம்.

பகவானுடைய சம்பந்தம் இல்லாத வர்ணமும், ஆச்சிரமமும், ஞானமும், அநுஷ்டானமும் தாழ்ந்தவை ஆதலால் தள்ளத்தக்கன என்கிறார் இச் சூத்திரத்தால்.

வர்ண ஆச்ரம வித்யா விருத்தங்களை - உத்தம சாதி என்றும், உத்தம ஆச்சிரமம் என்றும், நல்ல கல்வி என்றும், நல்லொழுக்கம் என்றும் உயர்வாக மயங்குகின்ற சாதி முதலாயின அவற்றை, கர்த்தப ஜன்மம் என்று - மேல்சாதியானை, [1] "எந்தப்பிராஹ்மணன் நான்கு வேதங்களையும் அறிந்தவனாயினும் எங்கும் பரந்திருக்கிற வாசுதேவனை அறியாமல் இருக்கின்றானோ அவன், வேதங்களாகிற பாரத்தைச் சுமந்து கொண்டிருக்கின்ற பிராமணக்கழுதை" என்கிற படியே நான்கு வேதங்களையும் அத்யயனம் செய்து வைத்தும், [2] "யாதொரு பரம்பொருளை எல்லா வேதங்களும் சொல்லுகின்றனவோ", [3] "எல்லா வேதங்களாலும் அறியத்தக்கவன் நானே" என்கிறபடியே எல்லா வேதங்களாலும் சொல்லப்படுகின்ற சர்வேச்வரனை அறியாதவன் குங்குமம் சுமந்த கழுதை போலே, தான் பரித்துக்கொண்டு திரிகிற வேதத்தின் வாசனை அறியாத பிராமணக்கழுதை என்றும்.

ச்வபசாதமம் - உத்தம ஆச்சிரமத்தில் உள்ளவனை, [4] "ஓ அரசனே! விஷ்ணுவினிடம் பக்தி உள்ளவன் நாய் இறைச்சி தின்பவனாயினும் பிராமணனைக் காட்டிலும் மேலானவன்; விஷ்ணுபக்தி இல்லாத சந்நியாசியும் நாய் இறைச்சி தின்பவனைக் காட்டிலும் தாழ்ந்தவன்" என்கிறபடியே முற்றத் துறந்த முனிவனே ஆயினும் பகவானிடத்தில் பக்தி இல்லாதவன் நாய் இறைச்சி தின்னும் சண்டாளனைக் காட்டிலும் தண்ணியன் என்றும்,

சில்பநைபுணம் - நல்ல கல்வியை உடையனை, [5] "யாதொரு செயலானது சம்சார பந்தத்தின் பொருட்டு இல்லையோ அதுதான் நல்ல செயல்; எந்தக் கல்வியானது மோக்ஷத்திற்குப் பயன் படுகிறதோ அதுதான் சிறந்த கல்வியாம்; பொருள் இன்பங்களின் பொருட்டுச் செய்யப்படும் வாணிகமானது சிரமத்திற்குக் காரணமாகிறது; மற்றைய கல்வியானது செருப்புக் குத்தக் கற்ற கல்விக்குச் சமமாகும்" என்கிறபடியே பகவானைப் பற்றியதாக இருத்தலாலே மோக்ஷத்தைக் கொடுப்பதாக இருப்பதுவே கல்வி; அல்லாதது செருப்புக் குத்தக் கற்றதற்கு ஒப்பாம் என்றும்,

1. சதுர்வேததரோ விப்ரோ வாஸுதேவம் நவிந்ததி
வேதபார பராக்ராந்தஸ் ஸவை ப்ராஹ்மண கர்தப:
என்பது, பிரமாணம்.

2. "ஸர்வே வேதா யத்பதமாமநந்தி"
என்பது, கடவல்லி.

3. "வேதைச்ச ஸர்வை: அஹமேவவேத்ய:"
என்பது, ஸ்ரீகீதை, 15: 15.

4. ச்வபசோபி மஹீபால விஷ்ணுபக்தோ த்விஜாதிக:
விஷ்ணுபக்தி விஹீநஸ்து யதிச்ச ச்வபசாதம:
என்பது, பிரமாணம்.

5. தத்கர்ம யந்ந பந்தாய ஸாவித்யா யாவிமுக்தயே
ஆயாஸாயாபரம் கர்மவித்யாந்யா சில்பநைபுணம்.
என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 1. 19: 41.



பஸ்மாஹுதி - [1] "எந்த நாராயணனுடைய திருவடித் தாமரைகளில் நினைவில்லாமல் செய்யப்படும் வேதாத்யயனமானது காட்டில் இருந்து அழுவது போன்று பயன் அற்றது; வேதத்தில் சொல்லப்பட்ட விரதங்களை நாள்தோறும் அநுஷ்டிப்பதும் சரீரம் இளைத்தலையே பயனாக உடையது; குளம் வெட்டுதல் முதலான தர்மங்களும் சாம்பலில் பண்ணப்பட்ட ஆஹுதிபோல் பயன் அற்றவையேயாம்; கங்கை முதலிய நதிகளில் நீராடுவதும் யானை முழுகுவதுபோல் பயன் அற்றதேயாம்; அந்தத் தேவனான நாராயணன் விளங்குகிறான்" என்று சொல்லுகிறபடியே பகவானைத் தியானம் செய்யாதவர்கள் செய்கிற கர்மாநுஷ்டானங்கள் சாம்பலில் போடப்பட்ட ஆஹுதி போன்று பயன் அற்றது என்றும்,

சவ அலங்காரம் என்றும் - [2] "எல்லாருடைய பாவங்களைப் போக்குவனவும் மங்களங்களைக் கொடுப்பனவும் ஆன கிருஷ்ணனுடைய குணங்களோடும் செயல்களோடும் அவதாரங்களோடும் சேர்ந்திருக்கின்ற வாக்குகள் உலகத்தினை வாழச்செய்கின்றன, விளங்கச் செய்கின்றன, பரிசுத்தத்தைச் செய்கின்றன; அவை நீங்கின வாக்குகள் எவையோ அவை பிணத்திற்குச் செய்யப்பட்ட அலங்காரங்கள் என்று பெரியோர்களால் சொல்லப்பட்டன" என்

1. ஆம்நாயாப்யஸநாந் யரண்யருதிதம் வேதவ்ரதாந் யந்வஹம்
மேதச்சேதபலாநி பூர்த்தவிதயஸ் ஸர்வே ஹுதம் பஸ்மநி
தீர்த்தாநாமவகாஹநாநி ச கஜஸ்நாநம் விநா யத்பத
த்வந்த்வாம்போருஹ ஸம்ஸ்ம்ருதிர் விஜயதே தேவஸ் ஸ
நாராயண:
என்பது, முகுந்தமாலை, 25.

2. ... ஸுமங்கலை: வாசோவிமிச்ரா குணகர்மஜந்மபி:
ப்ராணந்தி சும்பந்தி புநந்திவை ஜகத் யாஸ்தத்வி
முக்தாச்சவ சோபநா மதா:
என்பது, ஸ்ரீபாகவதம், 10. 18: 12.

றும், [1] "விஷ்ணுபக்தி இல்லாதவனுடைய வேதாத்யயனம், ஜபம், தபம் என்னும் இவைகள் உயிர் இல்லாத சரீரத்துக்கு, உலகத்தார் உகப்பதற்குச் செய்கின்ற அலங்காரம் போன்றவை" என்றும் சொல்லுகிறபடியே பகவானுடைய சம்பந்தம் இல்லாத சொற்களும், பகவானிடத்தில் பக்தி இல்லாதவனுடைய கல்வியும், ஒழுக்கமும் பிணத்திற்குச் செய்த அலங்காரத்தைப் போன்றது என்றும்,

விதவா அலங்காரம் என்றும் கழிப்பர்கள் - [2] "சர்வேச்வரன், அவதாரங்களால் தேவர் மனிதர் இவர்கள் இனத்தனுகிருன்; பாகவதர்களும் சாதியினுலும், ஒழுக்கத்தாலும் குணங்களாலும் அப்படியே ஆகின்ருர்கள்; இதில் ஒரு குற்றம் இல்லை; ஆனுல், அவை மிக உயர்ந்தவையாம்; உலகத்தைப் பாதுகாக்கும் பொருட்டு அவதரிப்பதனுல் உயர்ந்தவையாம்; அடியார் அல்லாதவரிடத்து உளவாய கல்வியாலும் ஒழுக்கத்தாலும் ஆய மேன்மையானது விதவைக்குச் செய்த அலங்காரம் போல் பழிப்புக்கு இடமாகின்றது" என்கிறபடியே பகவானுடைய சம்பந்தம் இல்லாதவருடைய கல்வியாலும் ஒழுக்கத்தாலும் உளதாய உயர்வானது, பகவத் சம்பந்த ஞானமாகிற மாங்கல்யம் இன்மையாலே விதவா அலங்காரம் என்றும் ஞானிகள் இகழ்வர்கள் என்றபடி.

ஆக, இப்படிப் பகவானுடைய விஷய சம்பந்தம் இல்லாத சாதியும் ஆச்சிரமமும் ஞானமும் ஒழுக்கமும் தள்ளத்தக்கவை என்கையாலே, மேல் தாழ்ந்த பிறவியாகக் கருதப்பட்ட பிறவியானது இன்னது என்று நிரூபிக்கப்பட்டதாயிற்று. (86)

ஆசாரிய ஹிருதய வியாக்கியானம்

**முதல் பகுதி முற்றிற்று.**

அழகியமணவாளப் பெருமாள் நாயனுர் திருவடிகளே அரண்.

பெரிய சீயர் திருவடிகளே பேறு.

---

1. விஷ்ணுபக்தி விஹீநஸ்ய வேதசாஸ்த்ரம் ஜப: தப:
அப்ராணஸ்யேவ தேஹஸ்ய மண்டநம் லோக ரஞ்ஜநம்.
என்பது, பிரமாணம்.

2. ப்ராதுர்பாவை: ஸுரநரஸமோ தேவதேவ: ததீயா
ஜாத்யா வ்ருத்தைரபிச குணதஸ்தாத்ருசோ நாத்ரகர்ஹா
கிந்து ஸ்ரீமத்புவந பவந த்ராணதோந்யேஷு வித்யா
வ்ருத்த ப்ராயோபவதி விதவா கல்பகல்ப: ப்ரகர்ஷ:
என்பது, பிரமாணம்.

# இரண்டாம் பகுதி

## 87

([1]அணைய, ஊர, புனைய,) அடியும் பொடியும் பட,
பர்வத பவனங்களிலே ஏதேனுமாக, ஜனிக்கப் (பெறு
கிற) (திரியக் ஸ்தாவர ஜன்மங்களைப் பெருமக்களும்
பெரியோரும் பரிக்ரஹித்துப் பிரார்த்திப்பர்கள்.

என்பது சூத்திரம்.

**வியாக்:—** இனி, மேல், ஆன்மாவினை வேறுபடுத்துந் தன்மையதான அடிமைத் தன்மைக்குத் தக்கதான பிறவியே ஆன்மாவிற்கு உயர் பிறவியாம் என்னுமதனை, இவ்வுலக சம்பந்தம் சிறிதும் இல்லாதவர்களான நித்தியசூரிகளும் முமுக்ஷுக்களும் ஆன மகாத்மாக்களுடைய ஆதரத்தின் வழியாக விளக்குகிருர் இச் சூத்திரத்தால்.

அதாவது, அணையப் பெறுகிற திரியக்கு ஜன்மத்தை - [2] "அணைவது அரவணைமேல், பூம்பாவை யாகம் புணர்வது" என்கிறபடியே பிராட்டியினுடைய திருமேனி ஊற்றின்பத்தோடு ஒப்பாகக் கூறலாம்படியான மிக மேம்பட்ட ஊற்றின்பத்தினையுடையதாய், குளிர்த்தி மென்மை நறுமணம் இவைகளை இயல்பாக உடையதாய்க் கொண்டு, திருமகள்கேள்வன் திருக்கண்வளர்ந்தருளுகைக்குப் பாங்காக அணை

---

1. இச் சூத்திரத்தை, (அணையப்பெறுகிற, ஊரப்பெறுகிற, புனையப் பெறுகிற திரியக்குத் தாவர ஜன்மங்களைப் பெருமக்கள் பரிக்ரஹித்தார்கள் என்றும்,) (அடிபடப் பெறுகிற, பொடிபடப் பெறுகிற, பர்வதத்திலே ஏதேனுமாகப் பெறுகிற, பவனங்களிலே ஜனிக்கப் பெறுகிற திரியக்குத் தாவர ஜன்மங்களைப் பெரியோர் பிரார்த்திப்பர்கள்) என்றும் பிரித்துக் கூட்டி முடிக்க. பெருமக்கள் - நித்தியசூரிகள். அடிபடப் பெறுகிற தாவர ஜந்மத்தைப் பிரார்த்தித்தவர் — ஸ்ரீசுகப் பிரமரிஷி. பொடிபடப் பெறுகிற தாவர ஜந்மத்தைப் பிரார்த்தித்தவர் - உத்தவர். பர்வதத்திலே ஏதேனுமாகப் பிரார்த்தித்தவர் - ஸ்ரீ குலசேகரப் பெருமாள். பவனங்களிலே ஜனிக்கப்பெறுகிற திரியக்கு ஜன்மத்தைப் பிரார்த்தித்தவர் - ஸ்ரீ ஆளவந்தார். பர்வதம் - மலை. பவனம் - வீடு. ஜநித்தல் - பிறத்தல். திரியக்கு-விலங்கு, பறவை, ஊர்வன முதலாயின. தாவரம் - மரம், செடி கொடி முதலாயின. ஜந்மம் - பிறவி. பரிக்ரஹித்தல் - மேற்கோடல். பிரார்த்தித்தல் - வேண்டுதல்.

2. திருவாய். 2. 8: 1.

யப் பெறுகிற ஆதிசேஷனாகிற பாம்பின்பிறவியினையும், ஊரப் பெறுகிற திரியக்கு ஜன்மத்தை- [1] "ஊரும் புள், கொடியும்.:.தே" என்கிறபடியே துன்புறுகிறவர்களைப் பாதுகாப்பதற்கும் தன்னை அநுபவிக்க விரும்பும் அடியார்களை அநுபவிப்பிக்கைக்கும் தன் உகப்புக்குமாக அவன் பலகாலும் மேற்கொண்டு நடத்துகைக்கு வாகனமாகப் பெறுகிற கருளப் புள்ளாகிய பறவையின் பிறவியினையும், புனையப் பெறுகிற தாவர ஜன்மத்தை - [2] "தோளிணை மேலும் நன்மார்பின் மேலும் சுடர்முடி மேலும், தாளிணை மேலும் புனைந்த தண் அம்துழாய்" என்கிறபடியே அவன் விரும்பிச் சாத்துகைக்குத் தக்கதான திருத்துழாயாகப் பெறுகிற செடிகளின் பிறவியினையும், பெருமக்கள் பரிக்ரஹித்தார்கள் - [3] "பெருமக்கள் உள்ளவர்" என்கிறபடியே பறிக்கப்படாத எப்பொழுதும் இயல்பாகவேஅமைந்த அடிமையையுடையவர்கள் ஆகையாலே [4] "பரம் பொருளை உளன் என்று அறிகிரு னில்லையாகில் அவன் இல்லாதவனாகிறான்" என்பது, "பரம்பொருள் உளன் என்று அறிகிறானாகில் இவனை உள்ளவனாகப் பெரியோர்கள் அறிகிறார்கள்" என்பதாக வேண்டாதபடி, என்றும் ஒக்க உளராயிருக்கிற மஹாத்மாக்களான நித்தியசூரிகள் பகவானுக்குச் செய்யும் கைங்கரியத்திலே உள்ள இச்சையாலே ஏற்றுக் கொண்டார்கள்.

அடிபடப் பெறுகிற தாவர ஜன்மத்தை - [5] "பிரமனுடைய செல்வத்தையும் சிவனுடைய செல்வத்தையும் நான் ஆசைப் படவில்லை; யமுனையாற்றங்கரையில் கடம்பமரமாகவாவது குருந்தமரமாகவாவது இருக்கப் பெறுவேனாக" என்று பிரமனுடைய செல்வத்தையும் சிவனுடைய செல்வத்தையும் வேண்டேன்; [6] "பூத்த நீள்கடம்பு ஏறி" என்றும், [7] "பூங்குருந்து ஏறி இருத்தி" என்றும் சொல்லுகிறபடியே யமுனைக்கரையில் அவன் திருவடிகளால் மிதித்து ஏறின கடம்பு ஆகவாதல், குருந்தம் ஆகவாதல் பிறக்க வேண்டும் என்று இத்தகைய பிறப்பையும், பொடிபடப் பெறுகிற

1. திருவாய். 10. 2: 3.
2. திருவாய். 1. 9: 7. 3. திருவாய். 3. 7: 5.
4. "அஸந்நேவ ஸ பவதி அஸத் ப்ரஹ்மேதி வேதசேத்
அஸ்தி ப்ரஹ்மேதி சேத்வேத ஸந்தமேநம் ததோவிது:இதி"
என்பது, தைத்திரீயம்.
5. பத்யு: ப்ரஜாநாமைச்வர்யம் பசூநாம்வா ந காமயே
அஹம்கதம்போ பூயாஸம் குந்தோவா யமுநாதடே.
என்பது, பிரமாணம்.
6. நாய்ச்சியார் திரு. 4: 4. 7. நாய்ச்சியார் திரு. 3: 3.



தாவர ஜன்மத்தை - [1] "யாவர் பெண்கள் சிலர் விடமுடியாத தங்கள் உறவினர்களையும் பெரியோர்கள் சென்ற வழியையும் விட்டு, வேதங்களால் தேடப்படுகின்ற கிருஷ்ணன் சென்ற வழியைப் பின் தொடர்ந்தார்களோ அந்தப் பெண்களுடைய பாதத்துகள் சேர்ந்த பிருந்தாவனத்தில் உள்ள சிறுசெடிகள், கொடிகள், ஓஷதிகள் என்னும் இவற்றில் யாதேனும் ஒன்றாக நான் ஆகக்கடவேன்" என்று வேதங்களால் தேடப்படுகின்ற கிருஷ்ணன் சென்ற வழியைத் தங்கள் உறவினர்களையும் மீறிக் கொண்டு யாவர் பெண்கள் சிலர் பின் தொடர்ந்தார்கள், அவர்களுடைய பாததூளியை அடைந்திருப்பனவாய்ப் பிருந்தாவனத்தில் இருக்கும் சிறு செடிகள் கொடிகள் ஓஷதிகள் என்னும் இவற்றில் யாதேனும் ஒன்றாக வேண்டும் என்று இத்தகைய பிறப்பையும்,

பர்வதத்தில் ஏதேனுமாகப் பெறுகிற திரியக்குத் தாவர ஜன்மங்களை - [2] "கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே", [3] "மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே", [4] "செண்பகமாய் நிற்கும் திருவுடையேன் ஆவேனே", [5] "தம்பகமாய் நிற்கும் தவமுடையேன் ஆவனே", [6] "எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனும் ஆவேனே" என்று திருமலையாழ்வாருடைய சம்பந்த முடைய திரியக்குத் தாவர ஜன்மங்களில் ஏதேனும் ஒன்றாகப் பெறுவேனாக வேண்டும் என்று இத்தகைய பிறப்பையும், பவனங்களில் ஜநிக்கப் பெறுகிற திரியக்கு ஜன்மத்தை - [7] "தேவரீருடைய கைங்கரியத்தினால் உளதாகும் இன்பம் ஒன்றிலேயே ஆசை உடையவர்களுடைய திருமாளிகைகளில் எனக்குப் புழுவாகிய பிறவியும் இருக்கட்டும்; மற்றையோர் வீடுகளில் பிரமனாகவும் பிறவி உண்டாக வேண்டா" என்று தேவரீருடைய அடிமைச் சுகம் ஒன்றிலுமே பற்றினையுடையவரான ஸ்ரீவைஷ்ணவர் திருமாளிகைகளிலே பிறத்தல் இறத்தல்

1. ஆஸாமஹோ சரணரேணு ஜுஷா மஹம் ஸ்யாம்
ப்ருந்தாவநே கிமபி குல்ம லதௌஷதீநாம்
யா துஸ்த்யஜம் ஸ்வஜநமார்ய பதஞ்ச ஹித்வா
பேஜு: முகுந்தபதவீம் ச்ருதிபி: விம்ருக்யாம்.
என்பது, ஸ்ரீபாகவதம், 10. 48: 61.
2. பெருமாள் திருமொழி, 4: 1. 3. பெருமாள் திரு. 4: 2.
4. பெருமாள் திரு. 4: 4. 5. பெருமாள் திரு. 4: 5.
6. பெருமாள் திரு. 4: 10.
7. "தவ தாஸ்ய ஸுகைக ஸங்கிநாம்
பவநேஷு அஸ்த்வபி கீட ஜந்ம மே"
என்பது, தோத்திர ரத்தினம், 55

இரண்டும் அங்கேயாம்படியான புழுவின் பிறவியே எனக்கு உண்டாக வேண்டும் என்று இத்தகைய பிறப்பையும்,

பெரியோர் பிரார்த்திப்பர் - ஆக, இப்படி, அவன் அடிபடவும், அவனை அணைந்தார் அடியில் பொடி படவும், அவன் உகந்தருளின நிலத்திலேயாதல் அவன் அடியார் விரும்புகிற நிலத்திலேயாதல் வாழவும் தகுதியாகப் பிறக்கப் பெறுகிற திரியக்குத் தாவரங்களின் பிறவிகளைப் [1] "பேராளன் பேரோதும் பெரியார்களான" ஸ்ரீ சுகப்ரிஷி, உத்தவர், ஸ்ரீ குலசேகப்பெருமாள், பெரியமுதலியார் முதலான முமுக்ஷுக்கள் வேண்டினார்கள் என்றபடி.

இதனால், [2] "சொற்களால் ஏற்பட்ட வினைக்குற்றங்களால் பறவைகளின் தன்மையும் விலங்குகளின் தன்மையும், மனத்தால் ஏற்பட்ட வினைக் குற்றங்களால் சண்டாளத் தன்மையும், சரீரத்தால் உண்டான வினைக் குற்றங்களால் தாவரங்களின் தன்மையும் ஜீவன் அடைகிறான்" என்கிறபடியே இந்த உலகத்தில் விலங்கு, பறவை, மரம், செடி முதலிய பிறவிகள், சொற்குற்றங்களால் வரும் தீவினையின் பலமாகவும் சரீர குற்றங்களால் வரும் தீவினையின் பலமாகவும் சாஸ்திரம் சொல்லாநிற்க, அப்படி அன்றிக்கே, பகவானுடைய கைங்கர்யத்துக்குத் தகுதியாக இந்தப் பிறவிகளை நித்திய சூரிகள் தங்கள் இச்சையாலே ஏறிட்டுக் கொள்வர்கள் என்றும், அடிமையின் இனிமையை அறிந்த முமுக்ஷுக்கள் பகவானுடைய சம்பந்தமும் அவன் அடியார்களுடைய சம்பந்தமும் உள்ள விலங்கு, பறவை, மரம், செடி முதலிவற்றின் பிறவிகளை வேண்டுவர்கள் என்றும் சொல்லுகையாலே அடிமை செய்வதற்குத் தக்க பிறவியே உயர்ந்தது என்றதாயிற்று (1)

## 88

[3] சேஷத்வ பஹிர்ப்பூத ஞாநாநந்தமயனையும்
சஹியாதார், தியாஜ்ய உபாதியை ஆதரியார்களே.

என்பது சூத்திரம்.

1. பெரியதிருமொழி, 7. 4: 4.

2. வாசிகை: பக்ஷி ம்ருகதாம் மாநஸை: அந்த்ய ஜாதிதாம்,
சரீரஜை: கர்மதோஷை: யாதி ஸ்தாவரதாம் நர:

என்பது, மநுஸ்மிருதி, 12: 9.

3. சேக்ஷத்வம் - அடிமைத் தன்மை. பஹிர்ப்பூதம் - புறம்பாக உள்ளபோது. ஞாநாநந்தமயன்-ஞானமும் ஆனந்தமுமே சொரூபமாக உள்ள ஆன்மா. சஹியாதார் - ஆதரித்து ஏற்றுக் கொள்ளாதவர்கள். தியாஜ்யம்- தள்ளத் தக்கது. உபாதி - கர்மம் காரணமாக இடையிலே வந்த வருணத்தை.



வியாக் :— பகவானுடைய கைங்கரியத்துக்குத் தகுந்தனவாய் இருக்கின்றனவாகையாலே விலங்கு, பறவை, மரம், செடி முதலியவற்றின் பிறவிகளை நித்தியசூரிகள் ஏறிட்டுக்கொள்ளுதல் தக்கதாம்; அங்ஙன் அன்றிக்கே, முமுக்ஷுக்களான இவர்கள், பகவானுக்கும் பாகவதர்களுக்கும் தொண்டு செய்யவேண்டுமென்ற ஆசையாலே விலங்கு, பறவை, மரம், செடி முதலிய பிறவிகளை வேண்டினார்களேயாகிலும், உயர்ந்ததாகச் சாஸ்திரத்திலே அறுதியிடப்பட்டிருக்கின்ற வருணத்தை இப்படிக் கழிக்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, சேஷத்வ பஹிர்ப்பூத ஞான ஆனந்தமயனையும் சஹியாதார் - [1] "தேவரீருடைய அடிமையின் பெருமைக்குப் புறம்பாக உள்ள சரீரத்தையும் கண நேரமும் விரும்பேன், பிராணனையும் விரும்பேன், எல்லாரும் விரும்புகிற சுகத்தையும் விரும்பேன், ஆன்மாவினையும் விரும்பேன், பின் வேறொன்றனையும் விரும்பேன், நாத! அவைகள் நூறு தூள்களாக அழியக்கடவன; மதுசூதனனே! இந்த விண்ணப்பம் மனத்தொடு படாதது அன்று; இது சத்தியம்" என்கிறபடியே, தேவரீருடைய அடிமைத் தன்மைக்குப் புறம்பான தேகம் முதலானவற்றில் ஒன்றனையும் கணமும் விரும்பேன்; அவ்வளவன்றியே, ஞான ஆனந்தமயமான ஆன்மப் பொருளையும் பொறுக்கமாட்டேன்; அவை நூறு விதமாக அழியக்கடவன; இந்த விண்ணப்பம் மனத்தொடு படாதது அன்று; சத்தியம்; திருமுன்னர் பொய் சொன்னேனாகில் தேவரீருக்குப் பொய்யனான மது பட்டது படுகிறேன் என்கையாலே, அடிமைத் தன்மைக்குப் புறம்பானபோது [2] "ஆன்மா ஞானவடிவமானது, ஆனந்த வடிவமானது" என்கிறபடியே ஞான ஆனந்தமயமாக இருப்பதனாலே புகழப்படுகின்ற ஆன்மாவையும் பொறாதவர்கள், தியாஜ்ய உபாதியை ஆதரியார்களே - அடிமைத் தன்மைக்கு விரோதியான அகங்காரத்துக்குக் காரணம் ஆகையாலே விடத்தக்கதாய், கர்மம் காரணமாக வந்ததாகையாலே வந்தேறியாய் இருக்கிற வருணத்தை விரும்புவர்களோ என்கை.

1. நதேஹம் நப்ராணாந் நசஸுகம் அசேஷாபிலஷிதம்
நசாத்மாநம் நாந்யத் கிமபிதவ சேஷத்வ, விபவாத்
பஹிர்பூதம்நாத! க்ஷணமபி ஸஹேயாது சததா, விநாசம்.

என்பது, தோத்திரரத்நம், 56.

2. "ஜ்ஞாநாநந்தமயஸ்த்வாத்மா"

என்பது, பிரமாணம்.

உபாதி பற்றி வந்த இதனை 'உபாதி' என்றது காரியத்தில் காரண உபசாரம். உபாதி - காரணம். (2)

## 89

[1] இதின் ஔபாதிகத்வம், ஒரு ராஜா, தன்னை மறை முனிவன் ஆக்கினவன் நீசன் ஆக்குவித்த ராஜாவை, வாரே உறுப்பாக யஜிப்பித்துச் சுவர்க்கம் ஏற்றின போதே தெரியும்.

என்பது சூத்திரம்.

வியாக்:— வருணமானது வந்தேறி என்னுமதனை உதாரண முகத்தால் தெளிவிக்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, இதின் ஔபாதிகத்வம் - இந்த வருணங்கள் இடையிலே வந்தவை என்பது, ஒரு ராஜா - குசிககுலத்தினனாய் அரசனான விச்வாமித்திரன், தன்னை - பிரமரிஷியாக வேண்டும் என்று விரும்பினவனாய் நெடுங்காலம் தவம் செய்த தன்னை, மறைமுனிவன் ஆக்கினவன் - [2] "மந்திரம் கொள் மறை முனிவன்" என்னும்படி பிரமரிஷி ஆக்கின ஆற்றல் வாய்ந்தவனான வசிஷ்டன், நீசன் ஆக்குவித்த ராஜாவை - தன் வார்த்தை கேளாமல் தன்னை இழிவுபடுத்திப் போனது கொண்டு, தன் புதல்வர்கள் கொடுத்த சாபத்தாலே மார்வில் அணிந்துள்ள பூணூலே வாராம்படி சண்டாளன் ஆக்குவித்த, இக்ஷ்வாகு குலத்தனாயிருந்துள்ள திரிசங்குவாகிற அரசனை, வாரே உறுப்பாக யஜிப்பித்து - அந்த வார்தன்னையே யாகத்துக்கு உறுப்பான உறுப்புத் தோலாகக் கொண்டு தன்னுடைய தவவலிமையாலே யாகத்தை முற்றுவித்து, சுவர்க்கம் ஏற்றினபோதே தெரியும் - சுவர்க்கத்திற்குப் போகச் செய்தபோதே குன்றின்மேலிட்ட விளக்குப்போன்று தெளிவாம் என்கை.

இதனால், ஓர் அரசன் தான் செய்த புண்ணிய விசேடத்தாலே அந்தச் சரீரத்தோடேயே பிரமரிஷியாகையாலும், ஓர் அரசன் தான்

1. ஔபாதிகத்வம் - ஒரு காரணம் பற்றி வந்தேறியாகிற தன்மை. ஒரு ராஜா-விச்வாமித்திரன். தன்னை மறைமுனிவன் ஆக்கினவன்-விச்வாமித்திரனாகிய தன்னை பிரமரிஷியாகும்படி செய்தவன்; வசிஷ்ட பகவான். நீசன் ஆக்குவித்த ராஜா - வசிஷ்ட பகவானாலே நீசனாகும்படி சபிக்கப்பட்ட திரிசங்கு என்னும் அரசன். வார் - தோலாகிய வார். உறுப்பாக - வேள்விக்கு அங்கமான உறுப்புத் தோலாக. யஜிப்பித்து - வேள்வியைச் செய்வித்து.

2. பெருமாள் திருமொழி, 10: 2.



செய்த தீவினையின் விசேடத்தாலே அந்தச் சரீரத்தோடேயே சண்டாளனாகையாலும், அரசனும் தன்மை நீங்கிப் பிரமரிஷியானவன், தான் பிரமரிஷியாவதற்கு முன்னரே, அரசனும் தன்மை நீங்கிச் சண்டாள வேஷத்தோடே நிற்கிறவனை அந்த வேஷத்தோடே யாகம் செய்வித்துச் சுவர்க்கத்திலே ஏற்றுகையாலும் வருணங்கள் நல்வினை தீவினைகள் காரணமாக வந்தவை என்பது எல்லார்க்கும் தோன்றும் என்றதாயிற்று. (3)

## 90

[1]மா உருவில் கள்ளவேடம், திருந்துவேத மலமான மானிடம் பாடல், சர்வ வர்ண சூத்ரத்வம்; காடுவாழ் சாதியில் கடல் வண்ணன் வேடம், தென்னுரையில் அரிகீர்த்தி, ச்வபசரில் பத்திபாசனமும் அறிவார் ஆர் ஆர் அமரர் என்ன ஏற, அறியாதார் சாதி அந்தணர்களேலும் தகர விழுவர்.

என்பது சூத்திரம்.

வியாக்:— இனி, மேல், இவ்விடந்தொடங்கி, ஆழ்வாருடைய பெருமையை நிலை நிறுத்துவதற்கு உறுப்பாக, பிரமாண பிரமேயங்களையும் சேர்த்துக்கொண்டு, பிரமாணம் பிரமேயம் பிரமாதா என்னும் மூன்றிலும் கொள்ளத்தக்கனவும் உண்டு, தள்ளத்தக்கனவும் உண்டு என்னுமிடத்தைப் பாகுபடுத்திச் சொல்லி, இவ் விசேடத்தை அறிவார் பெறும் பேற்றையும், இதனை அறியாமல் பாகவதர்களுடைய பிறப்பினைத் தாழ்வாக எண்ணுவார் கீழ் நிலையினை அடையும் படியையும் அறிவிக்கிறார் இச் சூத்திரத்தால்.

1. பிரமேயம், பிரமாணம், பிரமாதா என்னும் மூன்றிலும் தள்ளத் தக்கவைகளும் உண்டு, கொள்ளத் தக்கவைகளும் உண்டு என்று அறிவிக்கிறார் இச் சூத்திரத்தால். பிரமேயம் - வேதம் முதலிய சாஸ்திரங்களால் அறியப்படுகின்ற இறைவன். பிரமாணம் - அவனைப்பற்றிக் கூறுகின்ற வேதம் முதலிய சாஸ்திரங்கள். பிரமாதா - வேதம் முதலிய சாஸ்திரங்களை அறியுமவன். மாவுருவில் கள்ள வேடம் - பிரமேயத்தில் தள்ளத் தக்கது. திருந்து வேத மலமான மானிடம் பாடல்-பிரமாணத்தில் தள்ளத் தக்கது. சர்வவர்ண சூத்ரத்வம் - பிரமாதாக்களில் தள்ளத்தக்கது. இனி, மூன்றிலும் கொள்ளத் தக்கனவற்றை அருளிச்செய்கிறார்: காடுவாழ் சாதியில் கடல்வண்ணன் வேடம் - பிரமேயத்தில் கொள்ளத்தக்கது. தென்னுரையில் ஹரிகீர்த்தி - பிரமாணத்தில் கொள்ளத் தக்கது. ச்வபசரில் பத்தி பாசனம் - பிரமாதாக்களில் கொள்ளத் தக்கது. இவ்வேற்றுமைகளை, அறிவார் ஆர் ஆர் அவர்கள் அமரர் என்ன ஏற, இவற்றை அறியாதார் சாதி அந்தணர்களேலும் தகர விழுவர் என்க.

அதாவது, [1] மாஉருவில் கள்ள வேடம் - [2] "எம் மா உருவும் வேண்டுமாற்ருல் ஆவாய் எழில் ஏறே" என்கிறபடியே இறைவனுடைய எல்லா உருவங்களும் இவ்வுலக சம்பந்தம் இல்லாதவை ஆகையாலே புகழப்படுவனவாய் இச்சையினுலே ஏறிட்டுக் கொள்ளுவனவாயும் இருக்கும் பகவானுடைய அவதார விக்கிரஹங்களில் வைத்துக்கொண்டு, **'வேதம் பிரமாணம் அன்று'** என்று கூறி, வேத நெறியிலே உள்ள சுவையைக் குலேப்பதற்காக [3] "கள்ளனைப் போல், வேதத்திற்குப் புறத்தனை புத்தனும் தள்ளத் தக்கவன்" என்கிறபடியே [4] "கள்ளவேடத்தைக் கொண்டு போய்ப் புரம் புக்க வாறும்" என்னும்படி ஏறிட்டுக்கொண்ட புத்தமுனியான விக்கிரஹம் விடத்தக்கது.

[5] திருந்து வேத மலமான மானிடம் பாடல் - பகவானுடைய சொரூபம் முதலாயினவற்றை உள்ளவாறே சொல்லுகையாலே கட்டளைப்பட்டிருந்துள்ள வேதத்தில் [6] "வேதமந்திரமாயினும் விஷ்ணு சம்பந்தம் இல்லாத மந்திரம் விசேடமாக நினைக்கத் தக்கதன்று" என்கிறபடியே நினைக்கவும் ஆகாதபடி குற்றம் பொருந்திய பாகமான [7] "மானிடம் பாடல் என் ஆவது" என்கிறபடியே வினைவயப்பட்ட பிறப்பினையுடைய மற்றையோரைப் பற்றிச் சொல்லுகின்ற வாக்கியங்கள் விடத்தக்கவை.

---

1. மாஉருவில் கள்ளவேடம் - இறைவனுடைய பெருமை பொருந்திய விக்கிரகங்களிலே புத்த முனியாக அவதரித்த கள்ள வேடம் விலக்கத் தக்கது.

2. திருவாய். 5. 8: 2.

3. "யதா ஹி சோர: ஸததா ஹி புத்த:"
என்பது, ஸ்ரீராமா. அயோத். 109: 33.

4. திருவாய். 5. 10: 4.

5. திருந்து வேத மலமான மானிடம் பாடல்-எல்லா வகையாலும் திருந்திய வேதங்களிலே, இறைவனைத் தவிர மற்றையோரைப் பற்றிப் பேசுகின்ற வாக்கியங்களும் விடத்தக்கவை.

6. "நஸ்மர்த்தவ்யோ விசேஷேண வேதமந்த்ரோப்யவைஷ்ணவ:"
என்பது, பிரமாணம்.

7. திருவாய். 3. 9: 3.



[1] சர்வ வர்ண சூத்ரத்வம் - [2] "பகவானுடைய பக்தர்களானவர்கள் சூத்திரர்கள் அல்லர்; பிராமணர்களோடு ஒத்தவர்கள் என்றும், பாகவதர்களென்றும் சொல்லப்பட்டார்கள்; எல்லாச் சாதிகளிலும் எவர்கள் பகவானிடத்தில் பக்தி இல்லாதவர்களோ அவர்களே சூத்திரர்கள்" என்கிறபடியே எல்லாச் சாதிகளிலும் பகவானுடைய அடியவர்கள் அல்லாதவர்கள் சூத்திரர்கள். ஆக, பிரமேயத்திலும் பிரமாணத்திலும் பிரமாதாக்களிலும் உளவாய் இருக்கின்ற விட வேண்டுவனவும்;

[3] காடுவாழ் சாதியில் கடல் வண்ணன் வேடம் - [4] "காடுவாழ் சாதியுமாகப் பெற்ருன்" என்கிறபடியே ஊர்மனையில் வசிக்காமல் பசுக்களுக்குப் புல்லும் தண்ணீரும் உள்ள காடுகளிலே வசிக்கையாலே "காடுவாழ் சாதி" என்கிற ஆயர் குலத்தில் அவர்களினத்தாளுய் வந்து அவதரித்து நிற்கிற கிருஷ்ணனுடைய [5] "காலிப் பின்னே வருகின்ற கடல் வண்ணன் வேடத்தை வந்து காணீர்" என்கிறபடியே தாம் அனுபவித்து பிறர்க்கும் அழைத்துக் காட்டும்படி பசு மேய்த்து வருகிறபோதை அலங்காரத்தோடே கூடி இருக்கிற விக்கிரஹம் போற்றத் தக்கது.

[6] தென்னுரையில் அரிகீர்த்தி - [7] "தென்னுரையில் கேட்டறிவதுண்டு" என்கிறபடியே தென் திசையில் வழங்குவது கொண்டு தென்னுரை என்று சொல்லப்படுகின்ற தமிழ் மொழியிலே உள்ள பிரபந்தங்களில் [8] "ஓ அரசனே! விஷ்ணுவினுடைய புகழைப்பற்றிய பாக்களைத் தவிர வேருன பாக்களைப் பிராமணன் பாடலாகாது" என்கிறபடியே பகவானைப்பற்றிய பாக்கள் போற்றத்தக்கவை.

---

1. சர்வவர்ண சூத்ரத்வம் - நால்வகைப்பட்ட சாதிகளிலும் சூத்திரராக இருக்கும் தன்மையும் விடத்தக்கது.

2. ந சூத்ரா பகவத் பக்தா விப்ரா பாகவதாஸ் ஸ்ம்ருதா:
ஸர்வவர்ணேஷுதே சூத்ரா யேஹ்யபக்தா ஜநார்தநே.
என்பது, பார. ஆச்வ. 118: 32.

3. காடுவாழ் சாதியில் கடல் வண்ணன் வேடம் - காட்டிலே முல்லை நிலத்திலே வாழ்கின்ற சாதியினரான ஆயர் குலத்தில் அவதரித்த ஸ்ரீ கிருஷ்ணனுடைய விக்கிரஹம் போற்றத் தக்கது.

4. நாய்ச்சியார் திரு. 12: 8. 5. பெரியாழ்வார் திரு. 3. 3: 1.

6. தென்னுரையில் ஹரிகீர்த்தி - தமிழ் மொழியில் உள்ள இறைவன் சம்பந்தமான பாடல்கள் போற்றத் தக்கன.

7. பெரியதிருமடல், 6.

8. ஹரிகீர்த்திம் விநைவாந்யத் ப்ராஹ்மணேந நரோத்தம
பாஷாகாநம் ந கர்த்தவ்யம் தஸ்மாத் பாபம் த்வயா க்ருதம்.
என்பது, மாத்ஸ்ய புராணம்.

[1] ச்வபசரில் பத்திபாசனமும் - [2] "ஓ அரசனே! நாயின் இறைச்சி தின்னும் கீழ்ப் பிறப்பினனும் விஷ்ணுவிடம் பக்தியுள்ள வன் பிராமணனைக் காட்டிலும் மேலானவன்" என்கிறபடியே கீழ்ப் பிறப்பினரில் [3] "பெறற்கரிய நின்ன பாத பத்தியான பாசனம்" என்கிறபடியே தன் முயற்சியால் பெறுதற்கு அரிதாய் இருந்துள்ள பகவானுடைய திருவடித் தாமரைகளில் வைத்த பக்தியாகிற செல்வ முடையவர்கள் போற்றத்தக்கவர்கள். ஆக, பிரமேயம் பிரமாணம் பிர மாதாக்கள் என்னும் மூன்றிலும் உளவாய கொள்ளத்தக்கனவும்;

அறிவார் ஆர் ஆர் அமரர் என்ன ஏற - ஆகிய இவ்வேறுபாட் டினை அறிகின்றவர்கள் [4] "நீரார் முகில்வண்ணன், பேரார் ஓது வார், ஆரார் அமரரே" என்கிறபடியே எப்பிறவியினையும் எவ் வொழுக்கத்தினையும் உடையரேயாகிலும், நித்தியசூரிகளுக்கு ஒப் பாவார் என்னும் சிறப்பினையுடையராய் [5] "இலங்கு வான் யாவரும் ஏறுவர் சொன்னாலே" என்கிறபடியே மிக்க பேரொளிமயமான பரமபதத்தை அடைய; அறியாதார் - பிரமேயம் பிரமாணம் பிர மாதாக்கள் என்னும் இம் மூன்றிலும்உள்ள மேலே கூறிய வேறு பாட்டினை அறியாதவர்களாய்க் கொண்டு பாகவதர்களுடைய பிறப் பினை ஆராய்கின்றவர்கள், சாதிஅந்தணர்களேலும் தகர விழுவர் - [6] "அமரவோர்அங்கமாறும்" என்னும் திருப்பாசுரத்தில் அங்கங்க ளோடு கூடின எல்லா வேதங்களையும் அத்யயனம் செய்து, அடியார் களுக்குள் உயர்ந்தவர்களுமாய் உயர்ந்த பிறப்பினராய் இருந்தார் களேயாகிலும், தேவரீர் திருவடிகளின் சம்பந்தத்தைக் கொண்டே அறியத் தக்கவர்களான ஸ்ரீ வைஷ்ணவர்களைப் பிறப்பு முதலான வற்றைக் கொண்டு நிந்திப்பார்களேயாகில், வேறு காலத்திலேயா வது வேறு தேசத்திலேயாவது அல்லாமல், அப்போதே அவ்விடத்தி லேயே அவர்கள்தாம் சண்டாளர்கள் ஆவார்கள் என்கிறபடியே உயர்ந்த பிறப்பினையுடையவர்களேயாகிலும் கர்ம சண்டாளர்களாய் இனி ஒருகாலமும் கரை ஏறத் தகுதி இல்லை என்னும்படி தாழ்

1. ச்வபசரில் பத்தி பாசனம் - நாய் இறைச்சி தின்னும் சண்டாள ரில் பக்தியாகிய செல்வத்தை யுடையவர்களும் போற்றத் தக்கவர்கள்.

2. "ச்வபசோபி மஹீபால விஷ்ணுபக்தோ த்விஜாதிக:" என்பது, பிரமாணம்.

3. திருச்சந்த விருத்தம், 100. 4. திருவாய். 10. 5: 8.

5. திருவாய். 3. 8: 11. 6. திருமாலை, 43.



நிலையை அடைவர்கள் என்கை. [1] "ஆசாரத்தை விட்டவர்களும் கெட்ட ஆசாரத்தையுடையவர்களும் ஞானம் இல்லாதவர்களும் தாழ்ந்த சாதியில் பிறந்தவர்களுமான என் பக்தர்களை பிராமணோத்த மன் இகழ்வானாகில் உடனே அவன் சண்டாளத் தன்மையை அடை வான்" என்னக் கடவதன்றோ.

ஆக, "வீட்டின்பம்" (75) என்ற சூத்திர முதல் "வம்ச பூமி களை" (84) என்ற சூத்திர முடிய, ஆழ்வாருடைய வைபவத்தை அருளிச்செய்து, அவ்வைபவத்தை நிலைநிறுத்துவதற்காக "மிலேச்ச னும் பக்தனானல்" (85) என்ற சூத்திர முதல் மேற் சூத்திரமுடிய, பாகவதர்கள் அனைவருடைய வைபவத்தை விரிவாக அருளிச்செய்து, "வீட்டின்பம்" என்ற சூத்திரத்திற் கூறியது போன்றே, பிரமாண பிரமேயங்களுடன் சேர்த்துப் பிரமாதாவாகிய ஆழ்வாருடைய வைப வத்தை முடித்தாராயிற்று. (4)

## 91

[2] தமிழ் மாமுனி திக்கு சரண்யம் என்றவர்க ளாலே க்வசித் க்வசித்து என்று, இவர் ஆவிர்ப்பாவம் 'கலியும் கெடும்' போலே சூசிதம்.

என்பது சூத்திரம்.

வியாக்:— இப்படிப் பாகவதப் பொதுமையைப் பற்றி வந்த பெருமைமாத்திர மன்றிக்கே, "ஜனக தசரத" என்ற சூத்திரத் தாலே கூறிய பெருமை விசேடத்தை விளக்கக் கூடிய பிரமாணம் யாது? என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்தி ரத்தால்.

1. அநாசாராந் துராசாராந் அஜ்ஞாத்ருந் ஹீநஜந்மந:
மத்பக்தாந் ச்ரோத்ரியோ நிந்தந் ஸத்ய: சண்டாளதாம்
என்பது, பிரமாண்ட புராணம். வ்ரஜேத்.

2. தமிழ் மாமுனி - அகத்தியர். திக்கு - அவர் தங்கியிருக்கும் தென் திசை. சரண்யம் என்றவர்கள் - ஸ்ரீ வால்மீகி பகவான் போன்ற மகரிஷி கள். க்வசித்க்வசித் - ஒவ்வோரிடத்திலே. ஆவிர்ப்பாவம் - அவதாரம். கலியும் கெடும் போலே - 'கலியும் கெடும் கண்டுகொண்மின்' என்ற திருப் பாசுரத்தில் இவ்வாழ்வார் கூறியது போன்று. சூசிதம் - குறிப்பு.

அதாவது, தமிழ் மாமுனி திக்கு சரண்யம் என்றவர்களாலே - [1]" நற்காரியங்களையே செய்கின்ற எந்த அகத்தீயரால் தென் திசையானது புகலிடமாகச் செய்யப்பட்டதோ" என்றும், "வண்தமிழ் மாமுனி" என்றும் வருகிறபடியே தமிழ் மொழியினை உலகில் பரவச்செய்த அகத்திய முனிவர் இருக்கும் திசை எல்லார்க்கும் புகலிடம் என்ற மஹரிஷிகளாலே; இப்போது அகத்தியரைப் பற்றி இங்குக் கூறியது, வைதிகர்களான ரிஷிகள், தமிழ்ப் பிரபந்தத்தைச் செய்த ஆழ்வாரை இப்படித் துதித்துச் சொல்லுவார்களோ என்று ஐயம் கொள்வார்க்கு, தமிழை அறிந்த ஒரு முனிவராலே தென் திசைக்கு நன்மை உண்டாயிற்று என்று சொன்னவர்கள், தமிழ்ப் பிரபந்தம் மூலமாக உலகினரையே உய்விக்கச் செய்த ஆழ்வாரையும் இப்படித் துதித்துச் சொல்லக் குறை இல்லை என்று தோற்றுகைக்காக.

க்வசித் க்வசித்து என்று இவர் ஆவிர்ப்பாவம் [2]- "ஓ அரசனே! கிருதயுகம் முதலான யுகங்களில் உள்ள மக்கள் கலியுகத்தில் பிறக்கும் பிறப்பினை விரும்புகிறார்கள்; அரசனே! கலியுகத்திலே நாராயணனே அடையத்தக்க பரம்பொருள் என்று எண்ணுகின்ற பெரியோர்கள் அங்கும் இங்கும் பிறப்பார்கள்; தமிழ்த் தேசத்திலோ அதிகமாகப் பிறப்பார்கள்; எவ்விடத்தில் தாமிரபரணி, கிருதமாலா, பாலாறு, மிகுந்த பெருமையை யுடைய காவேரி, மேலைக் கடலில் சென்று விழுகின்ற பேரியாறு என்னும் இவ்வாறுகள் ஓடுகின்றனவோ அங்குப் பிறப்பார்கள்; அரசனே! எந்த மனிதர்கள் அந்த நதிகளின் தண்ணீரைக் குடிக்கின்றார்களோ அவர்களுக்கு நாராயணனிடத்தில், துன்பம் என்பது சிறிதும் இல்லாமல் மிகுந்த பக்தி உண்டாகின்றது." என்று பெரியோர்கள் வந்து அவதரிக்கும் தலவிசேடங்களை அந்த அந்த நதி விசேடங்களாலே விளங்க வைத்து,

1. "தக்ஷிணாதிக் க்ருதா யேந சரண்யா புண்யகர்மணா" என்பது, குருகாம்மாகாத்மியம்.

2. "க்ருதாதிஷு ப்ரஜா ராஜந் கலாவிச்சந்தி சம்பவம்
கலௌகலு பவிஷ்யந்தி நாராயண பராயணா:
க்வசித் க்வசித் மஹாராஜ த்ராவிடேஷு சபூரிச:
தாம்ரபர்ணீ நதீயத்ர க்ருதமாலா பயஸ்விநீ
காவேரீச மஹாபாகா ப்ரதீசீச மஹாநதீ
யேபிபந்தி ஜலம் தாஸாம் மநுஜா மநுஜேச்வர
தேஷாம் நாராயணே பக்தி: பூயஸீ நிருபத்ரவா"
என்பன, ஸ்ரீபாகவதம், 11. 5: 38-39.

அந்த நதி விசேடங்களில் தண்ணீரைக் குடிக்குமவர்களுக்குப் பகவானிடத்தில் பக்தி மிகும்படியையும் சொல்லுகிற அளவில், முதலில் "தாமிரபரணி நதி எவ்விடத்தில்" என்று இவர் அவதரித்த தலத்தைச் சொல்லுகையாலே இவ் ஆழ்வாருடைய அவதாரமானது, கலியும் கெடும் போலே சூசிதம் - இவர் தாம் மயர்வற மதிநலம் பெற்றவராகையாலே [1]"கலியும் கெடும் கண்டுகொண்மின்" என்று திருமங்கையாழ்வார், உடையவர் போல்வார் அவதரிக்க, கலியுகத்தின் தன்மையும் கழியும் என்று, மேல்வரும் பகுதியை முன்னரே அறிந்து அருளிச்செய்தாற் போலே, முக்காலமும் உணர்ந்த முனிவர்களான ஸ்ரீ சுகப்பிரமரிஷி முதலியவர்களாலே குறிப்பிக்கப் பட்டது என்கை.

[2]"நாஸ்திகர்களால் கலங்கும்படி செய்யப்பட்ட கொடிய கலியுகம் வந்தபோது, விஷ்ணுவினுடைய அம்சத்துக்கு அம்சமாகப் பிறந்த வரும் வேதம் வேதாந்தங்கள் இவற்றின் உண்மையை அறிந்தவரும் தத்துவ ஞானிகளுக்குள் சிறந்தவருமான நம்மாழ்வார் தமிழ் மொழியாலே வேதத்தின் உருவமான துதிகளைச் செய்வதற்கு, உலகத்திற்கு நலத்தைச் செய்யும் எண்ணத்தோடு உண்டாகப் போகிறார்" என்பது போன்றவைகளும் இவருடைய அவதாரத்தைக் குறிப்பிடுவன ஆகையாலே இவற்றையும் இங்குக் கோடல் வேண்டும்.

தனித்ததொரு பிறப்பினைக் குறிக்குஞ் சொற்களில் ஒன்றனைச் சொல்லாமல் அவதாரம் என்ற பொருளைக் காட்டுகின்ற 'ஆவிர்ப்பாவம்' என்ற சொல்லைக் கூறியதனுல் இவர் பிறப்பும் சர்வேச்வரன் பிறப்பினைப் போன்று பிறர் நலத்தின் பொருட்டு என்று தோன்றுகிறது. இதனுல் இவர் ஓர் அவதார விசேடம் என்றதாயிற்று. (5)

1. திருவாய். 5. 2: 1.

2. க்ரூரே கலியுகே ப்ராப்தே நாஸ்திகை: கலுஷீக்ருதே
விஷ்ணோரம்சாம்ச ஸம்பூதோ வேதவேதார்த்த தத்வவித்
ஸ்தோத்ரம் வேதமயம் கர்த்தும் த்ராவிட்யாபிச பாஷயா
ஜநிஷ்யதி ஸதாம் ச்ரேஷ்டோ லோகாநாம் ஹிதகாம்யயா.
என்பது, குருகாமாஹாத்மியம்.

## 92

[1] அத்ரி ஜமதக்நி பங்க்திரத வசு நந்த சூநு வானவனுடைய யுக வர்ண கிரம அவதாரமோ? வியாசாதிவத் ஆவேச அவதாரமோ? மூதுவர் கரை கண்டோர் சீரியரிலே ஒருவரோ? முன்னம்நோற்ற அனந்தன்மேல் புண்ணியங்கள் பலித்தவரோ என்று சங்கிப்பர்கள்?

என்பது சூத்திரம்.

வியாக்: இப்படி அவதரித்த இவர்தாம் யார் என்னும் வினவிற்கு விடையாக, மாபெரும் ஞானிகளும் இவரை இன்னர் என்று அளவிடமாட்டாமல் ஐயப்படும் படியை அருளிச்செய்கிறுர் இச் சூத்திரத்தால்.

அதாவது, [2] அத்ரி ஜமதக்நி பங்க்திரத வசு நந்த சூநுவான வனுடைய யுக வர்ண கிரம அவதாரமோ - அத்ரி ஜமதக்கிநி சூநுவாய் - கிருதயுகத்திலே அத்திரியும் ஜமதக்கிநியுமாகிற பிராமணேத்தமர்களுக்குப் பிள்ளைகளாய்க்கொண்டு தத்தாத்திரேயனும் பரசுராமனுமாய், பங்க்திரத சூநுவாய் - திரேதாயுகத்திலே க்ஷத்திரியனுன தசரத சக்கரவர்த்திக்குப் பிள்ளையாய், வசு நந்த

1. அத்திரி - ஒரு முனிவர்; இவருக்கு, கிருதயுகத்திலே தத்தாத்திரேயன் என்னும் பெயருடைய புத்திரனுக அவதரித்தான் இறைவன். ஜமதக்நி - ஒரு முனிவர்; இவருக்கு, கிருதயுகத்தில் பரசுராமன் என்ற பெயருடைய புத்திரனுக அவதரித்தான் இறைவன். இவர்கள் இருவரும் அந்தண வருணத்தர். பங்க்திரதன் - தசரத சக்கரவர்த்தி; பங்க்தி - பத்து - தச. இவருக்கு, திரேதாயுகத்தில் ஸ்ரீராமன் என்ற பெயருடைய புத்திரனுக அவதரித்தான் இறைவன். இந்த அவதாரம் அரச வருணம். வசு - வசுதேவன்; நந்த - நந்தகோபன்; இவர்கட்குக் கிருஷ்ணன் என்ற பெயரையுடைய புத்திரனுகத் துவாபரயுகத்தில் அவதரித்தான் இறைவன். இந்த அவதாரம் வைசிய வருணம். சூநு-புத்திரன். வியாசாதிவத் - வியாசர் முதலிய முனிவர்களுடைய அவதாரங்களைப் போன்று. மூதுவர் - நித்திய சூரிகள். கரைகண்டோர் - முக்தர்கள். சீரியர் - சுவேதத் தீவின் வாசிகள். அனந்தன் - ஆதிசேடன். சங்கிப்பர் - ஐயப்படுவர்.

2. இந்த வாக்கியத்தில் உள்ள 'சூநு' என்னும் சொல்லை, முன்னே உள்ள 'அத்திரி' முதலிய சொற்களோடும் தனித்தனியே கூட்டுக.



சூநுவானவனுடைய-துவாபரயுகத்திலே, [1] யயாதி சாபத்தாலே முடிக்குத் தகுதி இல்லாத யது குலத்திலே பிறந்தவராகையாலே க்ஷத்திரியரில் தண்ணியராய் வைசியரை ஒத்தவராய் இருக்கிற வசுதேவர்க்கும், [2] "பயிர்செய்தல் பசுக்களைக்காத்தல் வாணிகம்செய்தல் என்னுமிவை வைசியனுக்கு இயல்பான தொழில்கள்" என்கிறபடியே பசுக்களைக்காத்தல் முதலான தர்மங்களையுடைமையால் நேரே வைசியராக உள்ள ஸ்ரீநந்தகோபாக்கும் புத்திரனுய் அவதரித்த சர்வேச்வரன், யுக வர்ண கிரம அவதாரமோ - இப்படிக் கிருத, திரேதா, துவாபர யுகங்களிலே பிராமண, க்ஷத்திரிய, வைசிய ஜாதிகளிலே முறையாக அவதரித்து, நான்காவதாகிய கலியுகத்திலே நான்காம் வருணத்திலே வந்து அவதரித்தபடியோ? என்கை.

முன்னைய மூன்று யுகங்களிலும் அடைவே மூன்று சாதிகளிலும் அவதரித்து வருகையாலும், [3] "உலகத்தாரைக் காட்டிலும் மேம்பட்டவரும் உலகமே உருவமானவரும் ஆன அந்த விஷ்ணுவானவர், பாபத்தில் பற்றுடையவர்களால் சூழப்பட்ட இக் கலியுகத்தில் எல்லா மக்களையும் நன்கு பாதுகாப்பதற்காக, அடியார்களிடத்தில் அன்புள்ளவன் ஆதலால் ஒருபக்தனுக அவதரித்தார்" என்று கலியுகத்திலே சர்வேச்வரன் ஒரு பக்தன் ஆக அவதரித்தான் என்று மஹரிஷிகள் சொல்லுகையாலும் இவர் பெருமை கண்டவர்களுக்கு இப்படி ஐயப்படுதற்குத் தகுதி உண்டு என்க.

வியாசாதிவத் ஆவேசமோ- [4] "கிருஷ்ணத்வைபாயநர் என்னும் பெயரையுடைய வியாசரை இறைவனுன நாராயணனுக நீ அறிக" என்றும், [5] "அந்தத் தன்மையையுடைய இந்த வியாசமுநிவர் அந்த நாராயணனே" என்றும் சொல்லுகிறபடியே வேதங்களை வகுத்தல் முதலிய காரியங்களைச் செய்வதற்காக வியாசர் முதலாயினுர் பக்கல்

1. இந்தச் சாபவரலாற்றினை, வில்லிபாரதத்தில் குருகுலச் சருக்கம் 16 முதல் 25 முடிய உள்ள செய்யுட்களால் உணர்க.

2. "க்ருஷி கோரக்ஷ வாணிஜ்யம் வைச்யம் கர்மஸ்வபாவஜம்" என்பது, ஸ்ரீகீதை, 18: 44.

3. கலௌபுந: பாபரதாபிபூதேஸஉத்பபூவாச்ரிதவத்ஸலத்வாத் பாக்தாத்மநா ஸர்வ ஜநாந் ஸுகோப்தும் விச்வாதிகோவிச்வ மயோஹி விஷ்ணு: என்பது, பிரமாணம்.

4. "க்ருஷ்ணத்வைபாயநம் வ்யாஸம் வித்தி நாராயணம் பிரபும்" என்பது, ஸ்ரீவிஷ்ணுபு. 3. 4 5.

5. "ஸோயம் நாராயணஸ் ஸாக்ஷாத் வ்யாஸரூபீ மஹாமுநி:" என்பது, பாரதம்.

புக்கு நின்றுற்போலே, இவரைக் கொண்டு தமிழ் வேதத்தை வெளிப்படுத்துவதற்காக இவர் பக்கல் ஆவேசித்தானே என்கை. இவரைக் கொண்டு உலகத்தைத் திருத்துவதற்காக இவர்பக்கல் ஆவேசித்து நிற்கவும் கூடுமாகையாலே இப்படியும் ஐயப்படலாம் அன்றே.

[1] மூதுவர் கரைகண்டோர் சீரியரிலே ஒருவரோ - மூதுவரில் ஒருவரோ - [2] "விண்ணுட்டவர் மூதுவர்" என்கிறபடியே பரம பதத்துக்கு நிலத்தாளிகளான நித்தியசூரிகளிலே, இவ்வுலகினைத் திருத்துகைக்காகச் சர்வேச்வரனுடைய கட்டளையாலே அவதரித்தார் ஒருவரோ? கரைகண்டோரில் ஒருவரோ - [3] "கலக்கமில்லா நல்தவ முனிவர் கரைகண்டோர்" என்கிறபடியே பிறவிப் பெருங் கடலைக்கடந்து, அக் கரைப்பட்டிருக்கும் முக்தரிலே இவ் உலக மக்களைத் திருத்துகைக்காகப் பகவானுடைய கட்டளையால் அவதரித்தார் ஒருவரோ? சீரியரிலே ஒருவரோ - [4] "சுவேதத் தீவினில் வசிப்பவர்களாய், முக்தர்களைப் போன்றவர்களுக்கும் இது இலக்கணமாம்" என்கிறபடியே முக்தர்களைப் போன்றவர்களாய் [5] "பாற்கடல் பாம்பணை மேல் பள்ளிகொண்டருளும், சீதனையே தொழுவார் விண்ணுளாரிலும் சீரியர்" என்கிற சுவேதத் தீவினில் வசிக்கின்றவர்களிலே இவ் வருகுள்ளாரைத் திருத்துகைக்காகச் சர்வேச்வரனுடைய இச்சையாலே அவதரித்தார் ஒருவரோ? என்கை.

இவருடைய வைபவம் பார்த்தால் எல்லார் படியும் சொல்லலாம்படி இருக்கையாலே இப்படியும் தனித் தனியே ஐயப்படுவார்க்கு ஐயப்படலாம் அன்றே. [6] "பின்னைகொல் நிலமாமகள்கொல் திருமகள்கொல்" என்கிறபடியே பிராட்டிமாரோடு சேர்த்துப் பார்க்கும் போதும் தனித்தனியே ஐயப்படும்படி அன்றே இருப்பது! இங்ஙனம் இருப்பதனுல் மற்றும் உள்ள அவன் அடியார்களோடு பின்னர் சொல்ல வேண்டாவே அன்றே.

---

1. இந்த வாக்கியத்தில் உள்ள 'ஒருவர்' என்னும் சொல்லை, முன்னே உள்ள 'மூதுவர்' முதலிய சொற்களோடும் தனித்தனியே கூட்டுக.

2. திருவிருத்தம், 2. 3. திருவாய். 8. 3: 10.

4. "முக்தாநாம் லக்ஷணம் ஹ்யேதத் ச்வேத த்வீபநிவாஸிநாம்" என்பது, பாரதம் சாந்தி பர்வம்.

5. திருவிருத்தம், 79. 6. திருவாய். 6. 5: 10.



[1] முன்னம் நோற்ற அனந்தன் மேல் புண்ணியங்கள் பலித்தவரோ - முன்னம் நோற்ற புண்ணியங்கள் பலித்தவரோ - மேலே சொல்லப்பட்டவர்கள் ஒருவரும் அன்றிக்கே, பிறப்பு இறப்புக்களிலே உழன்று திரிகின்ற இவ் உலகமக்களிலே [2] "முன்னம் நோற்ற விதி கொலோ" என்கிறபடியே ஆயிரக்கணக்கான முற்பிறவிகளிலே ஈட்டப் பெற்ற தம்முடைய புண்ணியங்களின் பலமாய்க் கொண்டு இப்படித் திருந்தினுர் ஒருவரோ? அனந்தன் மேல் புண்ணியம் பலித்தவரோ - அன்றிக்கே, [3] "அனந்தன் மேல் கிடந்த எம் புண்ணியா" என்கிறபடியே யாதொரு காரணத்தையும் பற்றுத திருவருள் விசேடத்தாலே, பிறப்பு இறப்புக்களிலே உழன்று திரிகின்றவர்களை நித்திய சூரிகளுக்கு ஒப்பாக்கவல்ல ஆதிசேடசயனத்தையுடையவனுன சநாதன புண்ணியம் முழு நோக்காகப் பலித்து இப்படித் திருந்தினுர் ஒருவரோ? என்று சங்கிப்பர்கள் - என்று ஐயப்படுவார்கள். அதாவது, இப்படி மேலே சொல்லிப்போந்த வகைகளாலே இவரை இன்னுர் என்று அறுதியிடமாட்டாமல் பேரறிஞர்களும் ஐயப்படாநிற்பர்கள் என்றபடி. (6)

**93**

[4] *இதற்கு மூலம், யான் நீ என்று மறுதலைத்து, வானத்து மண்மிசை மாறும் நிகரும் இன்றி, நிலை இடம் தெரியாதே, தெய்வத்தினம் ஒருவகைக்கு ஒப்பாக, இனத்தலைவன் அந்தாமத்து அன்பு செய்ய, சேர்ந்தமைக்கு அடையாளம் உளவாக, உகந்து உகந்து திமிர் கொண்டால் ஒத்து, நாட்டியல்வு ஒழிந்து, சடரை ஓட்டி, மதாவலிப்தர்க்கு அங்குசமிட்டு, நடாவிய கூற்றமாய், தீயன மருங்கு வாராமல், கலியுகம் நீங்கிக் கிதயுகம் பற்றி, பட்டெழு போது அறியாது இருந்த பிரபாவம்.*

என்பது சூத்திரம்.

---

1. இவ் வாக்கியத்தை, முன்னம் நோற்ற புண்ணியங்கள் பலித்தவரோ என்றும், அனந்தன் மேல் புண்ணியம் பலித்தவரோ என்றும் தனித்தனியே கூட்டுக.

2. திருவாய். 6 .5: 7. 3. திருச்சந்தவிருத். 45.

4. இச் சூத்திரத்தை, இதற்கு மூலம்-இருந்த பிரபாவம் எனமுடிக்க. அந்தப் பிரபாவங்கள் 'யான் நீ' என்று தொடங்கி இடையே பேசப் படுகின்றன. பிரபாவம் - மேன்மை; சீர்த்தி. அன்றிக்கே, 'பிரபாவம்' என்னும் சொல்லை, மேலே உள்ள 'யான் நீ என்று மறுதலைத்து' என்பது முதலான வாக்கியங்களோடு தனித்தனி கூட்டி முடித்தலுமாம்.

**வியாக் :—** இப்படி இவரை ஞானிகள் ஐயப்படுவதற்குக் காரணம் யாது? என்னும் வினாவிற்கு விடையாக, 'இவருடைய பிரபாவமே காரணம்' என்று இவருடைய பிரபாவங்களை அருளிச் செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, இதற்கு மூலம்-இவரைக் கண்ட பேரறிஞர்கள் 'இவர் இன்னார்' என்று அறுதியிட்டுரைக்கமாட்டாமல் இங்ஙனம் ஐயப் படுதற்குக் காரணம், யான் நீ என்று [1] மறுதலைத்து இருந்த பிரபாவம் - [2] "புவியும் இருவிசும்பும் நின்னகத்த" என்று தொடங்கி இருவகைப்பட்ட இந்த உலகங்கள் எல்லாம் உன் நினைவின் ஒரு கூற்றிலே கிடக்கின்றன; இத்தகையனான நீ என்னுடைய செவி வழியாகப் புகுந்து பிரிவு என்பது சிறிதும் இல்லாமல் என் மனத்திலே மன்னியிருக்கின்றாய்; இப்படியான பின்பு, உலகத்தை எல்லாம் ஒருகூற்றிலே வைத்திருக்கின்ற நீயோ? உலகத்தை எல்லாம் ஒரு கூற்றிலே வைத்திருக்கின்றவனான உன்னை என் மனத்திலே அடக்கி வைத்திருக்கின்ற நானோ? பெரியார் யார் என்று அறிவார் யார்? யாதொரு தடையும் இல்லாத சக்தியையுடைய நீயேதான் இதனை ஆராய்ந்து அறிந்துகாண் என்று உபயவிபூதிகளையுமுடைய சர்வேச் வரனோடு மறுதலைத்துப் பேசும்படி இருந்த பிரபாவம்.

[3] வானத்து மண்மிசை மாறும் நிகரும் இன்றி இருந்த பிரபா வம் - [4] "தண்தாமரை, சுமக்கும் பாதப்பெருமானைச் சொன்மாலை கள் சொல்லுமாறு, அமைக்கவல்லேற்கு இனி யாவர் நிகர் அகல் வானத்தே" என்றும், [5] "வலக்கை ஆழி இடக்கைச் சங்கம் இவை யுடை மால்வண்ணனை, மலக்கு நாவுடையேற்கு மாறு உளதோ இம் மண்ணின் மிசையே" என்றும் அவன் உபய விபூதிகளையுமுடை யனும் தன்மைக்கும் அவனுடைய மென்மைத் தன்மைக்கும் தகுதி யாம்படியாகவும், சர்வேச்வரனாய் விரும்பப்படும் பொருள்கள் எல்லாம் நிறைவுபெற்றவனாய் ஒன்றுக்கும் மனம் வேறுபடாதவன்,

---

1. *மறுதலைத்து - மாறுபட்டு.*
2. *புவியும் இருவிசும்பும் நின்னகத்த; நீ என்*
   *செவியின் வழிபுகுந்தென் உள்ளாய்;—அவிவின்றி*
   *யான்பெரியன் நீ பெரியை என்பதனை யாரறிவார்?*
   *ஊன்பருகு நேமியாய்! உள்ளு.*

*என்பது, பெரிய திருவந்தாதி, 75.*

3. *இவ்வாக்கியத்தை, வானத்து நிகரும் இன்றி, மண்மிசை மாறும் இன்றி என்று பிரித்துக் கூட்டுக. வானம் - பரமபதம். நிகர் - ஒப்பு. மாறு - ஒப்பு.*
4. *திருவாய். 4. 5: 8.*  5. *திருவாய். 6. 4: 9.*



தம்முடைய திருவாய்மொழியைக் கேட்ட மிக்க மகிழ்ச்சியாலே தெருடு ஆடும்படியாகவும், திருவாய்மொழி பாடுகிற நாவீறு உடை மையால் இவ்வுலகம் என்ன, பரமபதம் என்ன ஆகிற இரண்டு உலகங்களிலும் ஒப்பு இல்லாதவராயும் இருந்த பிரபாவம்.

நிலைஇடம் தெரியாதே இருந்த பிரபாவம் - கலவியும் பிரிவும் கலந்து நடக்கையாலே, கலவியால் வந்த இன்பமேயாய்ச் செல்லும் பரமபதத்தில் உள்ளார் படியும் இன்றி, பகவானுடைய குணங்களின் அநுபவத்தாலே தரித்திருக்கையாலே, சோறு நீர் முதலியவைகளாலே தரித்திருக்கும் இங்குள்ளார் படியும் இன்றி, இப்படி இவ்வுலகம் என்ன, பரமபதம் என்ன ஆகிற இரண்டு உலகங்களிலும் அடங் காமையாலே [1] "வைகுந்தமோ வையமோ நும் நிலைஇடம்" என்கிற படியே வசிக்குமிடம் அறியமுடியாதபடி இருந்த பிரபாவம்.

[2] தெய்வத்து இனம் ஒருவகைக்கு ஒப்பாக இருந்த பிரபாவம் - [3] "தெய்வத்தினம் ஓரனையீர்களாய்" என்கிறபடியே ஒருவர் இருவர் அன்றிக்கே நித்தியசூரிகள் எல்லாரும் கூடினாலும் தமக்கு ஒரு வகைக்கு ஒப்பாம்படியாய் இருந்த பிரபாவம்.

[4] இனத்தலைவன் அம்தாமத்து அன்புசெய்ய இருந்த பிரபாவம்- [5] "வானோர் இனத்தலைவன் கண்ணன்" என்கிறபடியே அந்த நித்திய சூரிகள் கூட்டத்துக்குத் தலைவனான சர்வேச்வரன் [6] "அம்தாமத்து அன்பு செய்து என் ஆவிசேர் அம்மானுக்கு" என்கிறபடியே அழகிய இடமான பரமபதத்தில் செய்யும் காதல் முழுதினையும் தம்பக்கல் ஒரு மடைகொள்ளப் பண்ண இருந்த பிரபாவம்.

சேர்ந்தமைக்கு அடையாளம் உளவாக இருந்த பிரபாவம் - [7] "திருஅருள்களும் சேர்ந்தமைக்கு அடையாளம் திருந்தஉள" என் கிறபடியே மேன்மேலும் அவனுடைய திருஅருள்களைப் பெற்றமைக்கு நல்ல அடையாளமான, உதடுகளில் செந்நிறம் தோன்றுதல் முத லான கலவிக்குறிகள் உளவாகிச் செல்ல இருந்த பிரபாவம்.

---

1. *திருவிருத்தம், 75.*
2. *தெய்வத்து இனம் - நித்தயசூரிகளின் கூட்டம்.*
3. *திருவிருத்தம், 23.*
4. *இனத்தலைவன் - பரமபதநாதன். அம்தாமம் - பரமபதம்.*
5. *பெரிய திருவந். 25.*  6. *திருவாய். 2. 5: 1.*
7. *திருவாய். 8. 9: 6.*

உகந்து உகந்து திமிர்கொண்டால் ஒத்து இருந்த பிரபாவம் - [1]" உகந்து உகந்து உண்மகிழ்ந்து குழையுமே " என்றும், [2]" திமிர் கொண்டால் ஒத்து நிற்கும் " என்றும் சொன்னபடியே அவனுடைய அழகு சீலம் முதலியவைகளை நினைந்து, மேலும் மேலும் விளைகிற உள்ளும் புறம்பும் உண்டான மகிழ்ச்சியாலே, உறுப்புக்கள் கட்டுக் குலைந்தவராவது, [3]" திமிர்கொண்டவனைப் போன்றிருக்கின்றாய், அந்தப் பரம்பொருளைக் கேட்டறிந்தனையோ " என்கிறபடியே எல்லாப் பொருள்களையும் ஏவுகின்ற பரம்பொருளை நேரே அறிந்தவர்களைப் போலே திமிர்கொண்டவராவதாய் இருந்த பிரபாவம்.

நாட்டியல்வு ஒழிந்து இருந்த பிரபாவம் - [4]" நாட்டாரோடு இயல்வொழிந்து நாரணனை நண்ணினமே " என்கிறபடியே உண்டியே உடையே என உகந்து ஓடி, [5]" யானே என் தனதே " என்று யான் எனது என்னும் செருக்கின் வசப்பட்டிருக்கின்ற உலகத்தாரோடு சம்பந்தம் அற்று இருந்த பிரபாவம்.

சடரை ஓட்டி இருந்த பிரபாவம் - சடகோபர் ஆகையாலே [6]" வேதசாஸ்திரத்துக்கு மாறுபாடு இல்லாத " என்கிறபடியே பிரமாணங்களுக்கு அநுகூலமான உக்திகளாலே நடுநிலைமையில் இருந்து பொருளை நிச்சயம் செய்யாமல், தங்கள் தங்கள் புத்தியாலே கற்பிக்கப்பட்ட வீண் வாதங்களாலே தங்கள் தங்கள் மதங்களை நிலை நிறுத்தப் பார்க்கின்ற புறச்சமயத்தாரும் [7]குத்ருஷ்டிகளும் ஆகிற சடரை வேதாந்தத்தின் தாத்பர்யமான தம் திருவார்த்தைகளாலே தம்முன் நில்லாதபடி ஓட்டி இருந்த பிரபாவம்.

மத ஆவலிப்தர்க்கு அங்குசம் இட்டு இருந்த பிரபாவம் - பராங்குசர் ஆகையாலே, [8]" கல்வியால் உண்டாய களிப்பு, செல்வத்தால் ஆய களிப்பு, மூன்றாவது குடிப்பிறப்பால்ஆய களிப்பு என்னுமிவை,

1. திருவாய். 6. 5: 4. 2. திருவாய். 6. 5: 2.

3. " ஸ்தப்தோஸ்யுத தமாதேசமப்ராக்ஷ்ய: " என்பது, சாந்தோக்யம்.

4. திருவாய். 10. 6: 2. 5. திருவாய். 2. 9: 9.

6. " ஆர்ஷம் தர்மோபதேசம்ச வேதசாஸ்த்ராவிரோதிநா ". என்பது, மநுதர்மசாஸ்திரம், 12: 106.

7. குத்ருஷ்டிகள் - வேதசாஸ்திரங்களின் நேர் பொருளை அறியாதவர்கள் ; இங்கு அத்வைதிகள். சடரை - வஞ்சிக்கிறவர்களை.

8. " வித்யாமதோ தநமத: த்ருதீயோபிஜநோமத:
ஏதே மதாவலிப்தாநாம் "
என்பது, பிரமாணம்.



செருக்குக் கொண்டவர்களுக்கு மதத்தை உண்டாக்குகின்றன." என்கிறபடியே, செருக்குக்கொண்ட யானையைப்போலே குடிப்பிறப்பு கல்வி செல்வம் இவற்றால் உண்டாகும் மூன்று மதங்களோடு கூடிச் செருக்குக் கொண்டவர்களாய்த் திரியுமவர்கள், செருக்கு நீங்கின வர்களாய்த் தலை வணங்கும்படி உபதேசமாகிற அங்குசத்தை அவர் களுக்கு இட்டு இருந்த பிரபாவம்.

நடாவிய கூற்றமாய் இருந்த பிரபாவம் - [1]" பறவையின் பாகன் மதன செங்கோல் நடாவிய கூற்றம் " என்கிறபடியே வேதங்களாலே அறியப்படுகின்ற தன் தன்மைக்கு விளக்கமாம்படி வேதமயமான கருடனை வாகனமாகக் கொண்ட சர்வேச்வரன் விஷயத்திலே [2]" நின் கண் வேட்கை எழுவிப்பன் " என்கிறபடியே எல்லார்க்கும் பக்தியை உண்டாக்கிக்கொண்டு தம்முடைய பார்வையில் அகப் பட்டவர்களுடைய பிறப்பிற்குக் கூற்றமாய் இருந்த பிரபாவம்.

தீயன மருங்குவாராமல் இருந்த பிரபாவம் - [3]" கொன்று உயிர் உண்ணும் விசாதி பகை பசி தீயன எல்லாம்" என்கிறபடியே சரீரத்தை முடித்து உயிரைக் கவர்கின்றதான நோய் பகை பசி முதலிய குற்றங்களும், பிறப்பு இறப்புக்களால் வருகின்ற எல்லாத் துயரங் களுக்கும் காரணமான பாவங்களும் [4]" வன்துயரை மருங்கும் கண்டில மால் " என்னும்படி அருகும் வாராதபடியாக இருந்த பிரபாவம்.

[5]கலியுகம் நீங்கிக் கிதயுகம் பற்றி இருந்த பிரபாவம் - "திரியும் கலி

ஆவலிப்பு - செருக்கு; ஆவலிப்தர் - செருக்குக் கொண்டவர்கள். " நின்நாமம் கற்ற, ஆவலிப்புடைமை கண்டாய் அரங்கமா நகருளானே " என்பது, திருமாலை, 1.

" மாவலிச் சூலியார் வாழ்த்துநர்க் குயர்வரம்
ஓவலற் றுதவல்நின் ஒருதனிப் பெயரியம்
பாவலிப் புடைமையா லாகும் "
என்பது, கம்பராமா. வாலிவதைப். 123.

1. திருவிருத்தம், 6. 2. திருவிருத்தம், 96. கூற்றம் - யமன்.

3. திருவாய். 5. 2: 6.

4. பெரிய திருவந். 54.

5. நீங்கி, பற்றி என்னும் செய்தென்னும் வாய்பாட்டு எச்சங்களைச் செயவென் எச்சமாகத் திரிக்க. திருவாய். 5. 2: 3.

யுகம் நீங்கி'' என்றும் [1] "பொருள்களின் தன்மைகள் தலைகீழாக மாறப் போகின்றன" என்றும் கூறப்படுகிறபடியே பொருள்களின் தன்மை கள் மாறும்படி செய்யுமதாய், [2] "மைத்ரேயரே! கலியுகத்தில், உலகத்துக்குத் தலைவனும் எங்கும் பரந்துள்ளவனும் எல்லாப் பொருள் களையும் படைப்பவனும் எல்லாரையும் நியமிப்பவனுமான எம்பெரு மானை, பாவங்களால் கெடுக்கப்பட்ட மக்கள் வணங்கமாட்டார்கள்'' என்கிறபடியே பகவானிடத்து வைக்கும் பக்திக்கு விரோதியுமான கலியுகம் நீங்க, [3] "பெரிய கிதயுகம் பற்றி" என்கிறபடியே கேவலம் வைஷ்ணவதர்மமே நடக்குமதாய், வேறுயுகங்களின் இடையீடு இன் றிக்கே ஒரு போகியான கிருதயுகம் புகும்படியாக இருந்த பிரபாவம்.

பட்டெழுபோது அறியாதிருந்த பிரபாவம் - இங்கு, பட்டபோது எழுபோது எனப் போது என்பதனை முன்னும் கூட்டுக. [4] "பட்ட போது எழுபோது அறியாள் விரை, மட்டலர் தண்துழாய் என்னும்'' என்கிறபடியே பகவானை அநுபவிக்கின்ற பேரின்பத்திலேயே மூழ்கிய மனத்தினராதலின், [5] "சூரியன் உதயமானவுடன் (பொருள் ஈட்டு தற்குரிய காலம் வந்தது) என்று மகிழ்வார்கள்; சூரியன் மறைந்த வுடனே (மனைவியோடு இன்பம் நுகர்தற்குரிய காலம் வந்தது) என்று மகிழ்வார்கள்.'' என்கிறபடியே சூரியன் உதயமானவாறே பொருள்ஈட்டும் காலம் வந்தது என்று உகப்பார்கள்; அவன் மறைந்த வாறே காதலியோடே இன்பம் அநுபவிப்பதற்குக் காலம் வந்தது என்று உகப்பார்கள் என்றும், [6] "மக்கள் காலையில் மூத்திரம் மலம் இவற்றினாலும், நடுப்பகலில் பசியினாலும் தாகத்தாலும், மாலையில் காமத்தாலும், இரவில் தூக்கத்தாலும் துன்புறுத்தப்படுகின்றார்கள்''

1. "பவிஷயத்யதரோத்தரம்''
என்பது, பாரதம்.

2. "கலௌ ஜகத்பதிம் விஷ்ணும் ஸர்வ ஸ்ரஷ்டாரமீச்வரம்
நார்ச்சயிஷ்யந்தி மைத்ரேய பாஷண்டோபஹதாஜநா:''.
என்பது, ஸ்ரீ விஷ்ணுபு. 6. 1: 50.

3. திருவாய். 5. 2: 3.

4. திருவாய். 2. 4: 9.

5. "நந்தந்த்யுதித ஆதித்யே நந்தந்த்யஸ்தமிதே ரவௌ''
என்பது, ஸ்ரீராமா. அயோத். 105: 24.

6. ப்ராத: மூத்ர புரீஷாப்யாம் மத்யாஹ்நே க்ஷுத் பிபாஸயா
ஸாயம் காமேந பாத்யந்தே ஜந்தவோ நிசிநித்ரயா.
என்பது, ஸ்ரீவிஷ்ணுபு. 1. 17: 62.



என்றும் சொல்லுகிறபடியே உலகத்தார்க்குப் புறம்பே காலங்கழிப் பதற்கு உடலாகச் செல்லுகின்ற பகல் இரவு என்னும் வேறுபாடும் அறியாமல், காலம் நடையாடாத பரமபதத்திற்போலே பகவானுடைய அநுபவத்திலே மூழ்கினவராய் இருந்த பிரபாவம்.

இதனால் மேலே கூறப்பட்ட ஐயப்பாட்டிற்குக் காரணம் இன் னவை என்று எல்லாரும் அறியும்படி அருளிச்செய்தாராயிற்று. (7)

## 94

[1] இதற்கு ஏது-ஊழிதோறும் சோம்பாது ஒன்றிப் பொருள் என்று அளி மகிழ்ந்து முற்றுமாய் நின்று, நூல் உரைத்து, யோகுபுணர்ந்து, கண்காண வந்து ஆள்பார்க்கிறவன், உலகினது இயல்வை நல்வீடு செய்ய, இணக்குப்பார்வை தேடி, கழல் அலர் ஞானமுருவின முழுதும் ஒட்டின பெருங்கண், எங்கும் இலக்கு அற்று, அன்பொடு நோக்கான திசையிலே, ஆக்கையில் புக்கு உழன்று மாறிப் படிந்து துளங்கு கிறவர் மேலே பட, பக்கம் நோக்கறப் பண்ணின விசேஷகடாக்ஷம்.

என்பது சூத்திரம்,

**வியாக்:—** இவருடைய இந்தப் பிரபாவத்துக்கு அடி யாது? என்னும் வினாவிற்கு, யாதொரு காரணத்தையும் பற்றாத பகவத் கடாக்ஷமே அதற்குக் காரணம் என்று விடை அருளிச்செய்கிறார்; அப்படி யாதொரு காரணத்தையும் பற்றாமல் பகவான் இவர்க்குத் திருவருள் புரிந்ததுதான், இந்த உலகத்தாரை இவரைக் கொண்டு திருத்துகைக்காக என்னுமதனையும், இவ்வாழ்வாருடைய முன்னைய நிலையையும், இவருக்குத் திருவருள்புரிந்த வகையினையும் தெளிவாக அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, இதற்கு ஏது - இவருடைய இந்தப் பிரபாவத்துக்குக் காரணம், ஊழிதோறும் சோம்பாது ஒன்றிப் பொருள் என்று அளி

1. இச்சூத்திரத்தை, ஆள்பார்க்கிறவன், நல்வீடு செய்ய, தேடி, முழுதும் ஒட்டின பெருங்கண், இலக்கு அற்று, அன்பொடு நோக்கான திசையிலே, துளங்குகிறவர்மேலே பட, பக்கம் நோக்குஅறப் பண்ணின விசேஷகடாக்ஷம் எனக் கூட்டி எச்சங்களை முடிக்க.

மகிழ்ந்து-[1] "ஊழிதோறும் தன்னுள்ளே படைத்து" என்றும், [2]"சோம்பாது இப்பல்உருவை எல்லாம் படர்வித்த வித்தா" என்றும், [3]"ஒன்றி ஒன்றி உலகம் படைத்தான்" என்றும், [4]"பொருள் என்றிவ்வுலகம் படைத்தவன்" என்றும், [5]"அளிமகிழ்ந்து உலகம் எல்லாம் படைத்து" என்றும் சொல்லுகிறபடியே, செய்த வேளாண்மை தப்பினாலும் சோம்பிக் கைவாங்காதே பின்னும் அவ்வேளாண்மையினையே செய்யும் வேளாளனைப் போலே, கல்பந்தோறும் படைக்கச் செய்தே பயன் பெறுதே போகவும், முசியாதே மிகவும் ஒருப்பட்டு, என்றேனும் ஒருநாள் பயன்படும் என்று, செய்கையை விரும்பி உலகத்தைப் படைத்து, முற்றுமாய் நின்று,-[6]"நிலம்நீர் எரிகால் விண்உயிர் என்றிவைதாம் முதலா முற்றுமாய் நின்ற எந்தை" என்றும், [7]"அத்தகைய எல்லாப் பொருள்களையும் படைத்து அவற்றிற்குள் அநுப்பிரவேசித்தான்" என்றும் சொல்லுகிறபடியே படைக்கப்பட்ட உலகத்திலே இவை பொருளாம்தன்மையினையடைதற்கும், பெயரினைப் பெறுதற்கும் தொழில் செய்தல் செய்யாமைகட்குரிய ஆற்றலைப் பெறுதற்குமாக அநுப்பிரவேசித்து, இவற்றைக் கூறும் சொற்கள் தன்னளவிலே வந்து முடியும்படி உயிராய் நின்று,

நூல் உரைத்து - [8]"அன்னமதாய் இருந்து அங்கு அறநூல் உரைத்த" என்கிறபடியே கேட்பார் அறியமாட்டாமையாலே இழக்க வேண்டாதபடி அன்னப்பறவையாகத் தன்னைத் தாழவிட்டு நின்று அறியவேண்டிய தர்மங்களை விளக்கிக்கொண்டிருக்கிற சாஸ்திரத்தை உபதேசித்து, யோகுபுணர்ந்து - [9]"குறைவில் தடம் கடல் கோள்அரவேறித் தன்கோலச் செந்தாமரைக்கண், உறைபவன்போல ஓர் யோகுபுணர்ந்த ஒளி மணிவண்ணன்" என்கிறபடியே திருப்பாற்கடலிலே திருவனந்தாழ்வான் மேலே ஏறிப் படுக்கை வாய்ப்பாலே திருக்கண்வளர்ந்தருளுவதுபோன்று உலகத்தைக் காப்பதற்குரிய உபாயத்தைச் சிந்தித்துக் கண்வளர்ந்து, கண் காண வந்து -

---

1. *திருவாய். 10. 7: 9.* 2. *பெரியதிருவந்தாதி, 18.*
3. *திருவாய். 3. 9: 10.* 4. *திருவாய். 2. 10: 11.*
5. *திருவாய். 3. 4: 8.* 6. *திருவாய். 7. 6: 2.*
7. *"தத் ஸ்ருஷ்ட்வா ததேவாநுப்ராவிஶத்" என்பது, தைத்திரியோபநிடதம்.*
8. *பெரியதிருமொழி, 11. 4: 8.* 9. *திருவாய். 3. 10: 2.*



சிந்தித்த உபாயத்திற்குத் தகுதியாக, [1]"துயரில் மலியும் மனிசர் பிறவியில் தோன்றிக் கண் காண வந்து" என்கிறபடியே [2]"ஒருவனும் இந்தப் பரமபுருடனை ஊனக்கண்களாலே பார்ப்பதற்கு இல்லை" என்றும், [3]"ஊனக்கண்களையுடையவன் அந்தப் பரமபுருடனைக் காண்கிறான் இல்லை" என்றும், [4]"கட்கண்ணால் காணாத அவ்வுரு" என்றும் சொல்லப்படுகிற தான், துக்கங்களுக்கு இருப்பிடமான மனிதர்களுடைய பிறவியிலே தோன்றி, அவர்களுடைய ஊனக்கண்களுக்கு விஷயமாம்படி வந்து, ஆள் பார்க்கிறவன் - இப்படி அவதாரம் முதலியவைகளாலே [5]"ஆள் பார்த்து உழிதருவாய்" என்கிறபடியே 'எனக்கு அடிமை ஆவார் உண்டோ' என்று இதுவே வேளாண்மையாகத் தேடித் திரிகின்றவன்,

உலகினது இயல்வை நல்வீடு செய்ய - உண்மைப் பொருளை உள்ளவாறு உணர்ந்த பெரியோர்கள் கண்டால் [6]"ஓ ஓ உலகினது இயல்வே" என்று பொறுக்கமாட்டாமல் துன்புறும்படி, [7]"பெற்றதாய் இருக்க மணை வெந்நீர் ஆட்டுவாரை"ப் போல, எல்லாப் பொருள்களுக்கும் தந்தையாய் எல்லாவகையாலும் காக்கின்றவனாய்ப் போருகிற பரம்பொருளான தன்னை விட்டு, கிடந்த இடம் தெரியாதபடி பிரசித்தம் இல்லாத புன்சிறுதெய்வங்களை, ஆட்டை அறுத்தல், மகனை அறுத்தல், மிகமிகத் தாழ்ந்த பொருளான கள் முதலிய பொருள்களைப படைத்தல் ஆகிற உயிர்க்கொலை முதலான சாதனங்களாலே பூசித்து, அதன்பலமாகத் துக்கம் கலந்த சுகத்தைத் தருவனவாய், காலம் அறியப்படாததாய்க் கடத்தற்கு அரியதாய் இருக்கிற பிரகிருதி சம்பந்தம் காரணமான பிறவிகளினின்றும் ஒருகாலும் நீங்காமைக்கு உறுப்பாய்ப் பலவகைப்பட்டுத் தப்புதற்கு அரிதாய் இருந்துள்ள ஐம்புல இன்பங்களிலே துக்கப்பட்டு அழுந்துகிற உலகத்தார் தன்மையை [8]"யாதானும் பற்றி நீங்கும் விரதத்தை நல்வீடு செய்யும்" என்கிறபடியே தொன்றுதொட்டு வருகின்ற வாசனையாலே இச்சரீரத்திலும் சரீரசம்பந்தப்பட்ட பொருள்களிலும் யாதா

---

1. *திருவாய். 3. 10: 6.*
2. *"ந சக்ஷுஷா பஶ்யதி கஶ்சநைநம்" என்பது, கடோபநிடதம்.*
3. *"நமாம்ஸ சக்ஷுரபிவீக்ஷதேதம்" என்பது, பிரமாணம்.*
4. *பெரியதிருவந். 28.* 5. *நான்முகன் திருவந். 60.*
6. *திருவாசிரியம், 6.* 7. *பெரிய திருமொழி, 11. 6: 6.*
8. *திருவிருத்தம், 95.*

யினும் ஒன்றனைப் பற்றிக்கொண்டு தன்னைவிட்டு அகலுகையையே தன்மையாகவுடைய இம்மக்களுடைய எண்ணத்தை நன்ருக விடுவிக்கும் என்கிறபடியே வாசனையோடு போக்குவதற்காக,

[1] இணக்குப்பார்வை தேடி - விலங்குகளையும் பறவைகளையும் பிடிப்பார், தன்னினம் என்ற எண்ணத்தாலே தன்னேடே சேர்க்க வற்ருன விலங்குகளையும் பறவைகளையும் பார்வையாக வைத்துப் பிடிப்பதுபோன்று, பார்வை வைத்து இணக்குவதற்காக, அதற்கு ஆவார் யார் என்று தேடி, கழல் அலர் ஞானம் உருவின முழுதும் ஓட்டின பெருங்கண் - [2] "கழல்தலம் ஒன்றே நிலமுழுதாயிற்று ஒரு கழல் போய், நிழல்தர எல்லா விசும்பும் நிறைந்தது நீண்ட அண்டத்து, உழறலர் ஞானச்சுடர்விளக்காய் உயர்ந்தோரை இல்லா, அழறலர் தாமரைக்கண்ணன்" என்கிறபடியே ஒரு திருவடித்தலமே பூமிஅடையத் தாஞயிற்று, ஒரு திருவடி பூமியில் இடம் இல்லாமையாலே சென்று, எல்லார்க்கும் எல்லாக் காலத்திலும் இந்தச் சம்பந்தத்தை நினைத்துத் தன் நிழலிலே ஒதுங்கலாம்படி நிழலைக்கொடுப்பதற்காக மேல்உலகங்கள் எல்லாவற்றிலும் நிறைந்தது; பரப்பையுடைத்தான அந்த அண்டத்தை அடையப் புக்கு உழறுகையாலே மலர்ந்ததாய் இருந்துள்ள ஞானமாகிற ஒளியையுடைய தீபத்தையுடையஞய் என்கிறபடியே, கழல்தலமும் உழறுஅலர்ஞானமும் மறுபாடு உருவின பரப்பு எங்கும் ஓட்டிப் பார்த்த, சூரியனைக் கண்டு அலர்ந்த தாமரைபோன்ற செவ்வியையுடைய [3] "பெருங்கண்மலர்" என்கிற பெரிய திருக்கண்களானவை, எங்கும் இலக்கு அற்று - ஓர் இடத்திலும் அதற்கு ஆவாரைக் காணமல், ஒரு பொருளை அப்படிக்கு ஆக்குவதாகப் பார்க்கிற அளவில்,

1. *இணக்குப் பார்வை - மிருகங்களை வேட்டையில் அகப்படுத்துவதற்காக வளர்த்துப் பழக்கம் செய்யப்படும் விலங்கு; பார்வை - பார்வை விலங்கு.*

*"பார்வை மடப்பிணை தழீஇப் பிறிதோர்"*

*என்பது, புறநானூறு,* 320.

*"பார்வை யாத்த பறைதாள் விளவின்"*

*என்பது, பெரும்பாணற்றுப்படை,* 95.

*"பன்றியும் புலியும் எண்கும் கடமையும் மானின் பார்வை*
*அன்றியும் பாறை முன்றில் ஐவனம் உணங்கும் எங்கும்"*

*என்பது, பெரியபுரா. கண்ணப்ப நாய.* 3.

2. *திருவிருத்தம்,* 58. 3. *திருவிருத்தம்,* 45.



அன்பொடு நோக்கான திசையிலே, ஆக்கையில் புக்கு, உழன்று மாறிப் படிந்து துளங்குகிறவர்மேலே பட - [1] "அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளிகொள்ளும்" என்கிறபடியே ஸ்ரீவிபீஷணுழ்வான் விஷயமாக எப்போதும் அன்போடு பார்த்துக்கொண்டு கிடக்கையாலே தனக்குப் பள்ளமடையான தென்திசையிலே, [2] "யாதானும் ஓர் ஆக்கையில் புக்கு" என்றும், [3] "ஆக்கையின் வழி உழல்வேன்" என்றும், [4] "பல் பிறவியில் படிகின்ற யான்" என்றும், [5] "பிறவிக் கடலுள் நின்று நான் துளங்க" என்றும் சொல்லுகிறபடியே இன்ன சாதி என்ருதல் இன்ன குலம் என்ருதல் ஒரு வரையறை இன்றிக்கே நல்வினை தீவினைகட்குத் தகுதியாக யாதாயினும் ஒரு சரீரத்திலே புகுந்து, அச்சரீரத்தின் வழியே சென்று, தொடர்ந்து வருகின்ற பிறவிகளிலே தோள்மாறி அந்தக் கேட்டினிலே வெறுப்பு இன்றி அதிலே மூழ்கித் தரைகாண ஒண்ணுத பிறவிப் பெருங்கடலின் நடுவே இருந்து நடுங்குகிற இவர் மேலேபட, பக்கம் நோக்கு அறப் பண்ணின விசேஷ கடாக்ஷம் - இப்படி இவர் மேலே பட்ட இப்பார்வையை [6] "நம் மேல் ஒருங்கே பிறழவைத்தார்" என்கிறபடியே ஒருமடைப்படுத்திப் [7] "பக்கம் நோக்கறியான் என் பைந்தாமரைக்கண்ணனே" என்கிறபடியே நாய்ச்சிமார் திருமுலைத்தடத்தாலே நெருக்கியணைத்தாலும் புரிந்துபார்க்க அறியான் என்னும்படி, [8] "இந்தப் பகவான் ஆகிய யான் புருஷகாரத்தாலும் வேறு சாதனங்களாலும் ஒருவனைக் கடாக்ஷிக்கிறேனல்லேன், என் இச்சையாலேயே ஒருவனை ஒருகால் கடாக்ஷிக்கிறேன்" என்றும், [9] "சிறந்த அறிவினையுடையவனே! என்னுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்தால் உண்டான ஆசாரியனுடைய அங்கீகாரத்தால் உயர்ந்த பேற்றினை அடைகிருர்கள்" என்றும் சொல்லுகிறபடியே தன் இச்சையாலே, ஒருவித காரணமும் பற்ருமல் இறைவனுல் செய்யப்பட்ட விசேஷ கடாக்ஷம்.

1. *பெருமாள் திருமொழி,* 1: 10. 2. *திருவிருத்தம்,* 95.
3. *திருவாய்.* 3. 2: 1. 4. *திருவாய்.* 3. 2: 2.
5. *திருவாய்.* 5. 1: 9. 6. *திருவிருத்தம்,* 45.
7. *திருவாய்.* 2. 6: 2.

8. *நாஹம் புருஷகாரேண நசாப்யந்யேநஹேதுநா*
*கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந.*

*என்பது, பாஞ்சராத்திரம்.*

9. *நிர்ஹேதுக கடாக்ஷேண மதீயேந மஹாமதே*
*ஆசார்ய விஷயீகாராத் ப்ராப்நுவந்தி பராம்கதிம்.*

*என்பது, பாஞ்சராத்திரம்.*

இதற்கு ஏது, இப்படிப் பண்ணின விசேஷ கடாக்ஷம் என முடிக்க. ஆக, மேலே கூறப்பட்ட இவருடைய பிரபாவத்துக்குக் காரணம் தெளிவாகத் தெரிவித்தாராயிற்று. இதனால் மேல் சூத்திரத்தில் கூறிய ஐயப்பாடுகளுக்குள்ளே "அனந்தன்மேல் புண்ணியம் பலித்தவர்" இவர் என்பது ஒருதலையாகத் தெரியலாயிற்று. (8)

## 95

[1] *சிரமணீ விதுர ரிஷி பத்நிகளைப் பூதர் ஆக்கின புண்டரீகாக்ஷன் நெடுநோக்கு, சாபம் இழிந்து என்னப் பண்ணுமிறே.*

என்பது சூத்திரம்.

வியாக் :—நெடுங்காலம் பிறவிகளிலே உழன்று போந்தார் ஒருவர்க்கு, பகவானுடைய திருவருட்பார்வை பட்ட அளவில் எல்லாப்பாவங்களும் நீங்கி, மேற்கூறிய பெருமை எல்லாம் வரக் கூடுமோ? என்னும் வினாவிற்கு விடையாக, பகவானுடைய கடாக்ஷத்தின் பெருமையை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, சிரமணீ பூதர் ஆக்கின புண்டரீகாக்ஷன் நெடுநோக்கு - [2] "விருந்தினரை உபசரிக்கும் ஆற்றலையுடையவளும் சந்யாசினியுமான சபரியை அடைவாயாக" என்று கவந்தன் சொன்னபின்னர் [3] "மிகப்பெரிய ஒளியையுடையவரான அந்த இராமபிரான் சபரியிடம் சென்றார்" என்கிறபடியே தானாகவே சென்று

1. *சிரமணியைப் பூதர் ஆக்கின, விதுரரைப் பூதர் ஆக்கின, ரிஷி பத்நிகளைப் பூதராக்கின என்று 'பூதர் ஆக்கின' என்பதனை மேல் உள்ளனவற்றோடுங் கூட்டுக. சிரமணீ - துறந்தவள்; சபரி. பூதர் ஆக்குதல் - தூயர் ஆக்குதல்.*

2. *"ச்ரமணீம் தர்மநிபுணா மபிகச்ச"*
*என்பது, ஸ்ரீராமா. பால. 1: 57.*

> *"தாயினும் உயிர்க்கு நல்கும் சவரியைத் தலைப்பட் டன்னாள்*
> *எயதோர் நெறியின் எய்தி யிரலையின் குன்றமேறி"*

*என்பது, கம்பராமாயணம்.*

3. *"ஸோப்ய கச்சந் மஹாதேஜாச்சபரீம்"*
*என்பது, ஸ்ரீராமா. பால. 1: 57.*



அங்கீகரித்த வேட்டுவிச்சியும் துறந்தவளுமான சபரியை [1] "இரகு வம்சத்தில் அவதரித்தவரே! உன்னுடைய குளிர்ந்த திருக்கண்களால் தூயவளாக ஆயினேன், பகைவர்களைக் கொல்லுகின்றவனே! உன்னுடைய அருளால் மீண்டுவருதல் இல்லாத உலகத்தை அடையப் போகிறேன்" என்கிறபடியே தேவரீருடைய அழகிய திருக்கண் பார்வையாலே பேற்றிற்குத் தடையாக இருந்த பாவங்கள் எல்லாம் நீங்கித் தூயள் ஆயினேன் என்று சொல்லும்படியாகச் செய்த தாமரைக் கண்ணன் நெடுநோக்கு,

விதுரரைப் பூதர் ஆக்கின புண்டரீகாக்ஷன் நெடுநோக்கு - வெள்ளமானது பள்ளத்திலே தானே சென்று விழுமாறுபோலே உயர் சாதி முதலியவற்றால் வருகின்ற அகங்காரத்துக்குத் தகுதியும் இல்லாமையாலே [2] "மஹாத்மாவான விதுரருடைய வீட்டிற்குத் தங்கியிருப்பதற்குச் சென்றார்" என்கிறபடியே தானே சென்று விதுரருடைய வீட்டிலே புகுந்து, [3] "பிரயோஜனத்தை எதிர்பாராதனவாய் குணமுடையனவுமான விதுரருடைய அன்னங்களை உண்டார்" என்கிறபடியே தம்முடைய பரிசமுள்ளவற்றை விரும்பி அமுது செய்யப்பெற்ற ஸ்ரீவிதுரரை [4] "மதுசூதனனே! தாமரைக்கண்ணனே! ஸ்ரீவீடுமரையும் துரோணரையும் என்னையும் கடந்துகொண்டு சென்று சூத்திரராகிய விதுரருடைய அன்னத்தை நீ எதற்காக உண்டாய்?" என்கிறபடியே பகைவனான துரியோதனன் சீறிச்சொல்லச் செய்தேயும் "புண்டரீகாக்ஷ" என்னும்படி அழகிய திருக்கண்களின் பார்வையாலே பிறவியாலாய எல்லாக் குற்றங்களும் நீங்கிப் பரிசுத்தராம்படி நோக்கின நெடுநோக்கு,

1. *"சக்ஷுஷா தவஸௌம்யேந பூதாஸ்மி ரகுநந்தந*
*பாதமூலம் கமிஷ்யாமி யாநஹம் பர்யசாரிஷம்"*
*என்பது, ஸ்ரீராமா. ஆரண். 74: 12.*

> *ஆண்டவள் அன்பின் எத்தி யழுதிழி அருவிக் கண்ணள்*
> *மாண்டதென் மாயப் பாசம்; வந்தது வரம்பில் காலம்*
> *பூண்ட மாதவத்தின் செல்வம்; போயது பிறவி என்பாள்*
> *வேண்டிய கொணர்ந்து நல்க விருந்துசெய் திருந்தவேலை.*

*என்பது, கம்பராமாயணம்.*

2. *"நிவாஸாய யயௌவேச்ம விதுரஸ்ய மஹாத்மந:"*
*என்பது, பாரதம்உத்தியோகபர்.*

3. *"விதுராந்நாநி புபுஜே சுசீநி குணவந்திச"*
*என்பது, பாரதம்உத்தியோகபர்.*

4. *பீஷ்ம த்ரோணாவதிக்ரம்ய மாஞ்சைவ மதுஸூதந*
*கிமர்த்தம் புண்டரீகாக்ஷ புக்தம் வ்ருஷல போஜநம்.*
*என்பது, பாரதம்உத்தியோகபர்.*

ரிஷிபத்நிகளைப் பூதர் ஆக்கின புண்டரீகாக்ஷன் நெடுநோக்கு - [1]"வேர்த்துப் பசித்து வயிறசைந்து வேண்டடிசில் உண்ணும்போது ஈதென்று, பார்த்திருந்து நெடுநோக்கு"க் கொள்ளுகிற போதை நெடு நோக்காலே பக்த விலோசனத்திலே ரிஷிகளுடைய மனைவிமார்களிலே ஒருத்தியை [2]"அங்கு ஒருத்தி கணவனால் தடுக்கப்பட்டவளாய்த் தான் கேட்டிருந்தபடியே கண்ணபிரானை மனத்தால் கட்டிக்கொண்டு கர்மத்தால் உண்டான சரீரத்தை விட்டாள்" என்கிறபடியே தன்னிடத்து வைத்த அன்பினாலே அப்போதே சம்சாரத்தில் நின்றும் விடுபட்டவளாகும்படியாகவும், ஏனையோரைப் பாவம் கழிந்தவர்களாய் முக்தியைப் பெறுதற்குத் தகுந்தவராம்படி பரிசுத்தராகவும் பண்ணின சர்வேச்வரனுடைய பார்வையானது,

சாபம் இழிந்து என்னப் பண்ணுமிறே - [3]"அங்கண் இரண்டும் கொண்டு எங்கள்மேல் நோக்குதியேல் எங்கள்மேல் சாபம் இழிந்து" என்கிறபடியே அழகிய திருக்கண்களாலே எங்களைப் பார்த்தருளினாயாகில் சாபத்தால் பீடிக்கப்பட்டவர்களைப்போன்று அநுபவித்தால் அல்லது அழியாத எங்கள் பாவமானது போய்விடும் என்கிறபடியே அநுபவித்துக் கழிக்கவேண்டிய எல்லாப் பாவங்களும் அழிந்துபோம்படி செய்யும் அன்றோ. பகவானுடைய பார்வையானது எல்லாப் பாவங்களையும் அழிக்கவல்ல ஆற்றலையுடையதாகையாலே அப்பார்வை பட்ட இடம் [4]"அமலங்களாக" என்னும்படி குற்றம் அற்றதாம் அன்றோ என்றபடி. (9)

## 96

[5]கோவிருத்திக்கு நெருஞ்சியைப் புல்லாக்கினவன்,
ஜகத்ஹிதார்த்தமாக 'எனக்கே நல்ல அருள்கள்'
என்னும்படி சர்வ சௌகார்த்த பிரசாதத்தை
ஒருமடை செய்து, இவரைத் தன்னாக்க, லோகமாகத்
தம்மைப் போலே ஆக்கும்படி ஆனார்.

என்பது சூத்திரம்.

1. நாய்ச்சியார் திருமொழி, 12: 6.
2. தத்ரைகா வித்ருதா பர்த்ரா பகவந்தம் யதாச்ருதம்
ஹ்ருதோபகூஹ்ய விஜஹௌ தேஹம்கர்ம நிபந்தநம்.
என்பது, ஸ்ரீபாகவதம், 10. 23: 34.
3. திருப்பாவை, 22. 4. திருவாய். 1. 9: 9.
5. கோவிருத்திக்கு - பசுக்களைப் பாதுகாப்பதற்கு. சௌகார்த்தம் - சிநேகம். பிரசாதம் - திருவருள்.



வியாக்:—இப்படி இவரை ஈச்வரன் காரணம் பற்றாமல் விஷேகடாக்ஷம் பண்ணியது எதற்காக? விசேஷகடாக்ஷத்தின் தன்மைதான் யாது? இவர்தாம் பின்பு ஆனபடி யாங்ஙனம்? என்னும் வினாக்களுக்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது கோ விருத்திக்கு நெருஞ்சியைப் புல்லாக்கினவன் - [1]"திவத்திலும் பசுநிரை மேய்ப்பு உவத்தி" என்கிறபடியே பரமபதத்தைக்காட்டிலும் பசுநிரை மேய்ப்பதை விரும்பியிருக்குமவன் ஆகையாலே, [2]"ஞானம் முதலான ஆறு குணங்களையுடையவனும் வருத்தம் இல்லாமல் காரியத்தைச் செய்பவனும் பசுக்களின் நலத்தை விரும்புகின்றவனுமான கண்ணபிரானால் நல்ல மனத்தால் நெருஞ்சில்காடு புல்தரையாகுமாறு நினைக்கப் பட்டது" என்கிறபடியே, பசுக்களைப் பாதுகாப்பதற்காக, நெருஞ்சில் காடானது, [3]"மனத்தினைக் கவரக் கூடியதும் புதியதுமான புற்களால் நிறைந்ததாக ஆயிற்று" என்கிறபடியே அவற்றிற்கு இனிய புல்லாகும்படி, பிறருடைய மனம் நிறைவு பெறுதலுக்குரிய காரியங்கள் செய்தலையே பிரயோஜனமாகக் கொண்ட திருவுள்ளத்தால் நினைத்த அளவிலா ஆற்றலையுடைய சர்வேச்வரன்,

ஜகத்து ஹிதார்த்தமாக- [4]"பிராமணர்களுக்குத் தேவனும் பசுக்களுக்கும் பிராமணர்களுக்கும் நலத்தைச் செய்பவனுமான பகவானுக்கு வணக்கம்; உலகத்துக்கு நலத்தைச் செய்பவனும் கோவிந்தனுமான கிருஷ்ணனுக்கு வணக்கம் வணக்கம்" என்கிறபடியே பசுக்களைப் பாதுகாப்பது போன்றே உலகத்தாரைப் பாதுகாப்பதற்கும் கடவன் தானே ஆகையாலே உலகத்தினுடைய நன்மைக்காக,

எனக்கே நல்ல அருள்கள் என்னும்படி - [5]"எனைத்தோர் பிறப்பும்-எதிர் சூழல்புக்கு-எனக்கே அருள்கள் செய்ய-அம்மான் திரிவிக்கிரமனை - விதிசூழ்ந்தது" என்கிறபடியே நான் பிறந்த பலபல பிறவி

1. திருவாய். 10. 3: 10.
2. ப்ருந்தாவநம் பகவதா க்ருஷ்ணேநாக்லிஷ்டகர்மணா
சுபேநமநஸா த்யாதம் கவாம் வ்ருத்திமபீப்ஸதா.
என்பது, ஸ்ரீவிஷ்ணுபு. 5. 6: 28.
3. "உத்பந்ந நவசஷ்பாட்யா"
என்பது, ஸ்ரீவிஷ்ணுபு. 5. 6: 37.
4. நமோ ப்ரஹ்மண்ய தேவாய கோ ப்ராஹ்மண ஹிதாயச
ஜகத்திதாய க்ருஷ்ணாய கோவிந்தாய நமோநம:.
என்பது, பாரதம்.
5. திருவாய். 2. 7: 6.

களுக்கு எதிரே பிறந்து வந்து எனக்கே தன் அருளைச் செய்யும்படி சர்வேச்வரனை அவனுடைய திருவருள் கால்கட்டிற்று என்றும், [1] "நல்ல அருள்கள் நமக்கே தந்து அருள் செய்வான்" என்றபடியே இத்தலையில் குற்றமாதல், அறிவின்மையாதல், முற்றும் உணர்தலாகிற தன் தன்மையையாதல் பாராதே, தன் பேறுகச் செய்யுமதான அருள்களை நமக்கே உரியதாகத் தந்தருளுகின்றவன் என்றும் இவர் பேசும்படி,

சர்வ சௌகார்த்தப் பிரசாதத்தை ஒருமடை செய்து - [2] "எல்லா உயிர்களுடைய நலத்தை எண்ணுகிற என்னை" என்கிறபடியே, எல்லா உயிர்களின் பக்கலிலும் நடக்கிற சிநேகத்தின் பலமான தன் பேரருளை இவர் ஒருவர் விஷயமாகவும் ஒருமடைப்படுத்தி, இவரைத் தன் ஆக்க - [3] "என்னைத் தன்னுக்கி" என்கிறபடியே அறிவின்மைக்கும் ஆற்றல் இன்மைக்கும் எல்லையாயிருக்கிற இவரைத் தன்னேடு ஒத்த ஞான சக்திகளையுடையராம்படி செய்ய, லோகமாகத் தம்மைப் போலே ஆக்கும்படி ஆனுர் - இப்படி அவனுலே திருந்தின இவர் [4] "ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல் அவனுடைய, பேரும் தார்களுமே பிதற்றி" என்கிறபடியே தம்மோடு சேர்ந்த உலகத்தில் உள்ளவர்களை எல்லாம் தம்மைப் போலே பகவானையே அனுபவிக்குமவர்களாகப் பண்ணும்படி ஆனுர் என்கை. (10)

## 97

அதாவது, மயர்வற மதிநலம் அருளுகை.

என்பது சூத்திரம்.

**வியாக்:—** மேலே "தன்னுக்க" என்றதுதான் யாது? என, அதற்கு விடைஅளிக்கிருர் இச் சூத்திரத்தால்.

'அது' என்றது, மேற் சூத்திரத்தில் "தன்னுக்க" என்றதனைச் சுட்டுகிறது. மயர்வற மதிநலம் அருளுகையாவது, அறிவின்மையை அடியோடே போக்கிப் பக்தியின் வடிவத்தை யடைந்த ஞானத்தைக் கொடுக்கை. (11)

1. திருவாய். 8. 6: 1. 2. "ஸுஹ்ருதம் ஸர்வ பூதாநாம்" என்பது, ஸ்ரீகீதை, 5: 29.

3. திருவாய். 7. 9: 1. 4. திருவாய். 6. 7: 2.



## 98

[1] இருள் துயக்கு மயக்கு மறப்பு என்கிற அநுதய சம்சய விபர்யய விஸ்மிருதிகள் அற்று, மலர் மிசை எழுகிற ஞானத்தைக் காதல் அன்பு வேட்கை அவா என்னும் சங்க காம அநுராக சிநேகாதி அவஸ்தா நாமங்களோடே பரமபக்தி தசை ஆக்குகை.

என்பது சூத்திரம்.

**வியாக்:—** மேற் சூத்திரத்தில் "மயர்வற மதிநலம் அருளுகை" என்றதனை இச் சூத்திரத்தால் விளக்குகிருர்.

மயர்வற மதிநலம் அருளுகையாகிறதுதான், இருள் என்கிற அநுதயம் - [2] "இருள் தரு மா ஞாலம்" என்றும், [3] "இருள் தீர்ந்து இவ் வையம் மகிழ" என்றும் இருள் என்ற சொல்லால் சொல்லப்படும் அறிவு தோன்றுமையும், துயக்கு என்கிற சம்சயம் - [4] "துயக்கன் மயக்கன்" என்பது போன்ற இடங்களில் துயக்கு என்ற சொல்லால் சொல்லப்படும் "குற்றி கொல்? மகன் கொல்?" என்கிறபடியே அறியவேண்டிய பொருளை இன்னது என்று நிச்சயிக்கமாட்டாத ஐயமும், மயக்கு என்கிற விபர்யயம் - மயக்கு என்ற சொல்லால் சொல்லப்படும், கயிறு கிளிஞ்சல் முதலிய பொருள்களைப் பாம்பு வெள்ளி முதலிய பொருள்களாக நினைக்கும் அறிவு போலே அதுவல்லாததனை அதுவாக நினைக்கும் அறிவாகிற திரிபுணர்ச்சியும், மறப்பு என்கிற விஸ்மிருதி - [5] "மறப்பும் ஞானமும்", [6] "மறப்பற என்னுள்ளே மன்னினுன்" என்பன போன்ற திருப்பாசுரங்களிலே 'மறப்பு' என்ற சொல்லால் சொல்லப்படுகின்ற, முன்னரே அறியப்பட்ட பொருளாய் அநுபவத்தால் உண்டாகிய சம்ஸ்காரமாத்திரத்தாலேயே உண்டான நினைவு இன்மையாகிற மறப்

1. இச்சூத்திரத்தில் உள்ள இருள், துயக்கு, மயக்கு, மறப்பு என்னும் நான்கனையும் அநுதய, சம்சய, விபர்யய, விஸ்மிருதி என்னும் நான்கனேடும்; காதல், அன்பு, வேட்கை, அவா என்னும் நான்கனையும் சங்க, காம, அநுராக, சிநேகம் என்னும் நான்கனேடும் நிரல் நிறையே கூட்டுக. அநுதயம் - தோன்றுமை. சம்சயம் - ஐயம். விபர்யயம் - ஒன்றனை மற்றென்ருக அறிதல்; திரிபுணர்ச்சி. விஸ்மிருதி - மறதி.

2. திருவாய். 10. 6: 1. 3. பெரிய திருமொழி, 11. 4: 8.

4. திருவாய். 1. 9: 6. 5. திருவாய். 1. 10: 10.

6. திருவாய். 1. 10: 10.

7. சம்ஸ்காரம் - நினைவிற்குக் காரணமாக இருப்பது.

பும், அற்று - என்று கூறப்பட்ட நான்குவித அறிவின் குறைபாடுக ளாகிற நிலைகள் நீங்கி, மலர்மிசை எழுதரு ஞானத்தை - [1] "மனனக மலமற மலர்மிசை எழுதரும்" என்கிறபடியே மனத்தின் தூய்மை யாலே மலர்ந்து கொழுந்து விட்டு, [2] "தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு" என்கிறபடியே அடையத்தக்க பொருளான தன்னை நோக்கி வளர்கின்ற ஞானத்தை,

காதல் என்னும் சங்கம் - [3] "உளப்பெருங் காதல்" என்றும், [4] "நேரிய காதல்" என்றும், [5] "காணக் கழி காதல்" என்றும், [6] "கழிய மிக்கதோர் காதல்" என்றும், [7] "காதல் கடல்புரைய" என்றும், [8] "காதல் கடலின் மிகப்பெரிதால்" என்றும், [9] "காதல் உரைக்கில் - நீள் விசும்பும் கழியப் பெரிதால்" என்றும், [10] "மெய் யமர் காதல்" என்றும் இப்படிப் பல இடங்களிலே காதல் என்ற சொல்லால் சொல்லப்படுகின்ற, ஒரு பொருளைப் பார்க்குமிடத்து முதன் முதலில் மனத்தில் தோன்றுவதாய் சிநேகத்தின் முளையா யிருக்கின்ற சங்கமும், அன்பு என்னும் காமம் - [11] "அன்பு சூட்டிய" என்றும், [12] "அன்பில் இன்பு" என்றும், [13] "அன்பே பெருகும் மிக" என்றும், [14] "ஆரா அன்பு" என்றும் இப்படிப் பல இடங்களிலே அன்பு என்ற சொல்லால் சொல்லப்படுகின்ற, [15] "சங்கத்தினின்றும் காமம் உண்டாகின்றது" என்கிறபடியே அச் சங்கத்தின் பின்னே தோன்றுவதாய், பார்க்கப்பட்ட பொருளை அநுபவித் தல்லது நிற்க ஒண்ணாதபடியிருக்கும் அதன் முதிர்ந்த நிலையான காமமும், வேட்கை என்னும் அநுராகம் - [16] "வேவாரா வேட்கை நோய்" என்

1. திருவாய். 1. 1: 2.
2. முதல் திருவந். 67.
3. திருவிருத்தம், 59.
4. திருவாசிரியம், 2.
5. இரண்டாந் திருவந். 56.
6. திருவாய். 5. 5: 10.
7. திருவாய். 5. 3: 4.
8. திருவாய். 7. 3: 6.
9. திருவாய். 7. 3: 8.
10. திருவாய். 6. 8: 2.
11. திருவிருத்தம், 2.
12. திருவாசிரியம், 2.
13. பெரியதிருவந். 8.
14. திருவாய். 6. 10: 2.
15. "ஸங்காத் ஸஞ்ஜாயதே காம:" என்பது, ஸ்ரீகீதை, 2: 62.
16. திருவாய். 2. 1: 10.



றும், [1] "பெருகுமால் வேட்கையும்" என்றும், [2] "ஆவியின் பரமல்ல வேட்கை" என்றும் இப்படிப் பல இடங்களிலே வேட்கை என்ற சொல்லால் சொல்லப்படுகின்ற, அந்தக் காமத்தின் காரியமாய், அநுபவிக்கப்படுகின்ற பொருளில் வைத்த ஆசையானது இடைவீடு இன்றியே இருக்கின்ற அநுராகமும், அவா என்னும் சிநேகம் - [3] "அவா ஒருக்கா வினையொடும்" என்றும், [4] "காண்பான் அவா வுவன் என்றும், [5] "சூடுதற்கு அவா" என்றும், [6] "அதனில் பெரிய என்னவா" என்றும் இப்படிப் பல இடங்களிலும் அவா என் னும் சொல்லால் சொல்லப்படுகின்ற, அப் பொருளை மேலும் மேலும் அநுபவிக்குமது ஒழிய விட்டுப் பிடிக்கப் பற்றாதபடி அந்த அநுராகத் தின் பின் விளையும் சிநேகமும்,

ஆதி அவஸ்தா நாமங்களோடே பரம பக்தி தசை ஆக்குகை - முதலான நிலைகளுக்குத் தக்கனவான பெயர்களையுடையதாய்க் கொண்டு [7] பரமபக்திநிலை அளவாக ஆம்படி செய்கை.

காதல், அன்பு, வேட்கை, அவா என்னும் இவை, ஒன்றற்கு ஒன்று காரியமாய், மேலே மேலே உண்டாகின்ற சங்கம் காமம் அநு ராகம் சிநேகம் என்னும் இந் நிலைகளைச் சொல்லக்கூடிய சொற்களாக இருக்க, பிரபந்தத்தில் முறையே வாராது முன்பின் கலந்து வந்தனவே யாகிலும், எல்லா நிலைகளும் எப்போதும் இவர்க்கு இருந்துகொண்டே இருக்கையாலே அப்போது அப்போது தம்முடைய ஆற்றாமைக்கு ஈடாகப் பேசுகின்றாராகையாலே முரண் இல்லை.

ஆக, இதனால் சொல்லிற்றாயது, மயர்வற மதிநலம் அருளுகை யாவது, அஞ்ஞானத்தின் வேறுபாடாகச் சாஸ்திரத்தில் சொல்லப் பட்ட ஞானம் தோன்றாமை முதலிய நால்வகையினவான அறிவின் குறைகளும் நீங்கி, மலர்ந்து கொழுந்து விட்டுப் பொருளை நோக்கிக் கிளருகின்ற ஞானத்தை, சிநேகத்திற்கு அடிப்படையாகத் தோன்று கின்ற முளையான சங்கமும், அதன் காரியமான காமமும், அதன் காரியமான அநுராகமும், அதன் காரியமான சிநேகமும் என்னும் இந் நால்வகை நிலைகளுக்குத் தக்கனவான காதல், அன்பு, வேட்கை,

1. திருவாய். 9. 6: 1.
2. திருவாய். 10. 3: 2.
3. திருவிருத்தம், 64.
4. திருவிருத்தம், 84.
5. திருவாசிரியம், 2.
6. திருவாய். 10. 10: 10.
7. பரமபக்தி என்றதன் பொருளை 232-ஆம் சூத்திரவுரையிற் காண்க.

அவா என்னும் பெயர்களை அடைந்து, அன்பின் எல்லை நிலமான பரமபக்தியின் நிலையை அடையும்படி செய்கை என்றபடி.

ஆக, மேல் "அத்ரிஜமதக்நி" என்னும் சூத்திரத்திற் சொன்ன ஐயத்திற்கு மூலம் இவர் பிரபாவம் என்றும், அதற்குக் காரணம் யாதொரு காரணத்தையும் பற்றாத பகவானுடைய திருவருட்பார்வை என்று திருவருட்பார்வையின் சக்தியும், இப்படி இவரைப் பார்த்துத் திருவருள் புரிந்தது உலகத்தாரின் நலத்தின் பொருட்டு என்றும், திருவருள் புரிதலாவது, மயர்வற மதிநலம் அருளுகை என்றும், மயர்வற மதிநலம் அருளின வகையும் கூறப்பட்டது. (12)

## 99

[1] சந்மாந்தர சஹஸ்ர நல்தவங்களாலே கியாத குலங்களிலே பிறந்து, எழுதி வாசித்துத் தத்வஜ்ஞராய், குளித்து ஓதி உரு எண்ணும் அந்தி ஐவேள்வி அறுதொழில்களால் மிக்கு, ஊன்வாடப் பொருப்பிடைத் தாம் வருந்தி, துன்பவினைகளை விடுத்து, விவேக சமாதிகள் வளர, எட்டுநீக்கி, எட்டும் இட்டு, எட்டினைய பேதப்பூவில் சாந்தொடு தேவ கார்யம் செய்து, உள்ளம் தூயராய் வாரிப்புன்புல அகத்தினுள் இளைப்பினை அடைவே விளக்கினைக் கண்டு, யோகநீதி நண்ணி, அறம் திகழும் மறையோர் மனம்தன்னுள் அமர்ந்து உறையும் அரும் பெரும்சுடரைக் கண்கள் சிவந்திற்படியே மனவுட்கொண்டு, நிரந்தரம் மறவாமை தொடக்குஅருஸ்மிருதியாய், கனவில்மிக்க தர்சநஸமமாய், ஆகத்துப் புல்கும் அத்யர்த்த பிரியமாய், வைகும் சிறப்புவிட்டுக் குற்றேவல் எண்ணாத அநந்யப் பிரயோஜனமாய் வேதந உபாசந சேவ தியாந ஆதிகள் என்று சொல்லுமது, சாத்ய சாதன பக்தியாகச் சாஸ்திர சித்தம்.

என்பது சூத்திரம்.

1. இச்சூத்திரத்தில் முற்பகுதி எல்லாம் சாதந பக்திக்கு வேண்டிய அங்கங்கள். சாதநபக்தி - இறைவனை அடைவதற்குச் சாதனமாக - கருவியாகச் செய்யப்படும் பக்தி. ஜந்மாந்தர ஸஹஸ்ரம் - வெவ்வேறான ஆயிரம் பிறவிகள்; இது, பல பிறவிகளைக் காட்டுகிறது. கியாதகுலம் - புகழ்நிறைந்த மேல்குலம். விளக்கினை என்பது, ஈண்டு ஆத்மாவினை. அரும் பெரும் சுடர் என்றது, பரமாத்மாவினை. ஏனையவற்றிற்கு விளக்கம் வியாக்கியானத்தின் அடிக்குறிப்பில் காண்க.



**வியாக்** :—இனி, இவருடைய பக்திதான், [1] கர்மத்தாலும் ஞானத்தாலும் உண்டாகக்கூடியதாய்ப் பகவானை அடைவதற்குச் சாதனமாய் இருக்கும் உபாசகர் பக்தியிலும், பிரபந்நர்கள் பகவானிடத்திலே விரும்பிப் பெறுகின்ற கைங்கரியத்திற்கு உதவியாக இருக்கின்ற பக்தியிலும் வேறுபட்டது என்னுமிடம் அறிவிப்பதற்காக, முதலில் சாதனபக்தியின் தன்மையைக் காட்டுகிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, ஜந்மாந்தர சஹஸ்ர நல்தவங்களாலே - [2] "ஆயிரக் கணக்கான பல பிறவிகளிலே செய்த கர்ம ஞான பக்திகளால் அழிந்த பாவங்களையுடைய மக்களுக்குக் கண்ணபிரானிடத்தில் பக்தி உண்டாகின்றது" என்றும், [3] "ஒன்றி நின்று நல்தவம் செய்து ஊழி ஊழி தோறெலாம்" என்றும் சொல்லுகிறபடியே ஆயிரக்கணக்கான பல பிறவிகளிலே [4] மூன்று விதமான தியாகங்கள் முன்னாகப் பகவான் விஷயத்தில் செய்து, போந்த சமாராதனங்களான நல்வினைகளாலே, கியாத குலங்களிலே பிறந்து - [5] "யோகத்தின் ஆரம்ப காலத்தில் யோகத்தில்நின்றும் நழுவினவன் பரிசுத்தர்களும் ஸ்ரீமான்களுமானவர்களுடைய குலத்திலே பிறக்கிறான்; அன்றிக்கே, யோகம் செய்கின்றவர்களும் சிறந்த ஞானிகளுமானவர்களுடைய பெரிய குலத்திலே பிறக்கிறான்" என்றும், [6] "நான், உலகில் பிரசித்தமான கீர்த்தியையுடையவர்களும் பரிசுத்தர்களும் யோகம் செய்து கொண்டிருப்பவர்களும் குணமயமான பிரகிருதி உயிர் இவற்றின் உண்மை நிலையை அறிந்தவர்களும் ஆனவர்களு

1. சூத்திரத்தில் 'உள்ளம் தூயராய்' என்பது முடியக் கருமத்தைக் கூறுவது; கருமம் - செய்யும் நற்செயல்கள். அதற்குமேல், 'யோக நீதி நண்ணி' என்பது முடிய ஞானத்தைக் கூறுவது. உபாசகர், பிரபந்நர் இவர்கள் தன்மையை, பக். 56, 57-இல் காண்க.

2. ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு தபோஜ்ஞாந ஸமாதிபி:
நராணாம் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணேபக்தி: ப்ரஜாயதே.
என்பது, ஸ்மிருதி.

3. திருச்சந்தவிருத். 75.

4. மூன்றுவிதமான தியாகம் - மேல் 'உள்ளம் தூயராய்' என்பதன் உரையில் காண்க.

5. சுசீநாம் ஸ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோபிஜாயதே
அதவாயோகிநாமேவ குலே மஹதி தீமதாம்.
என்பது, ஸ்ரீகீதை, 6: 41.

6. ஜநித்வாஹம் வம்சே மஹதி ஜகதி க்யாதயசஸாம்
சுசீநாம் யுக்தாநாம் குணபுருஷ தத்வஸ்திதிவிதாம்.
என்பது, தோத்திர ரத்நம், 61.

டைய குலத்தில் பிறந்து'' என்றும் சொல்லுகிறபடியே, தத்துவ ஞானிகளாய்ப் பரமயோகிகள் என்று உலகில் பிரசித்தரானவர்களுடைய குலங்களிலே பிறந்து,

எழுதி வாசித்துத் தத்வஜ்ஞராய் - [1] "தெரித்து எழுதி வாசித்தும் கேட்டும்'' என்கிறபடியே பகவானை நினைந்து அவன் சம்பந்தமான சொற்களை எழுதுவது, வாசிப்பது, பிறர் சொல்லக் கேட்பதாய்க் கொண்டு, இந்தச் சாஸ்திரங்களின் பயிற்சி மூலமாகப் பிறந்த உண்மை ஞானத்தையுடையராய், குளித்து ஓதி உரு எண்ணும் அந்தி ஐவேள்வி அறுதொழில்களால் மிக்கு - [2] "குளித்து மூன்றுஅனலை ஓம்பும்'' என்கிறபடியே ஆராதனம் செய்வதற்கு அங்கமான நித்தியகர்மாநுஷ்டானங்களுக்கு உறுப்பாகச் சரீர சுத்தியின் பொருட்டு நீராடி, [3] "ஓதி உரு எண்ணும் அந்தியால்'' என்று சொல்லுகிற சந்தியாவந்தன காயத்திரீ ஜபம் என்ன, [4] "ஐவேள்வி'' என்று சொல்லுகிற தேவபலி தென்புலத்தார் பலி பூதபலி மனிதபலி பிரமபலி என்று சொல்லப்படுகின்ற ஐந்து வேள்விகள் என்ன, [5] "அறுதொழில் அந்தணர்'' என்று சொல்லுகிற ஓதல் ஓதுவித்தல் யாகம் செய்தல் செய்வித்தல் தானம் கொடுத்தல் தானம் வாங்கல் என்று சொல்லப்படுகின்ற ஆறு தொழில்கள் என்ன, ஆக, இப்படி இருந்துள்ள [6] நித்திய நைமித்திக கர்ம அநுஷ்டானங்களால் நிறைந்தவராய்,

ஊன் வாடப் பொருப்பிடைத் தாம் வருந்தி - [7] "ஊன் வாட உண்ணாது உயிர் காவலிட்டு'' என்று சொல்லுகிறபடியே நாடோறும் செய்யவேண்டிய கர்மம் முதலானவற்றைக் குறைவில்லாமல்செய்து போதலாலே, தவத்தைச் செய்தற்குத் தகுதி பிறந்தவாறே, சரீரம் வாடும் பொருட்டு உணவினைக் குறைத்து, அந்த உணவினை உயிர் தரித்திருப்பதற்குத் தக்க அளவாக்கி, [8] "பொருப்பிடையே நின்றும் புனல் குளித்தும் ஐந்து, நெருப்பிடையே நிற்கவும்'' என்று சொல்கிறபடியே, வேனிற் காலத்தில் மலையின் உச்சியிலும் ஐந்து நெருப்பின் மத்தியிலும் நின்றும், கார்காலத்தில் அருக்கயமான

1. நான்முகன் திருவந்தாதி, 63. 2. திருமாலை, 25.

3. முதல் திருவந். 33. 4. பெரிய திருமொழி, 3. 8: 4

5. திருவெழுகூற்றிருக்கை.

6. நித்தியம் - நாடோறும் செய்யப்படும் ஆராதனம் முதலியன. நைமித்திகம் - நித்தியத்தில் தாழ்வு தீரச் செய்யப்படுவது; ஆவணி அவிட்டம் முதலிய நாட்களில் செய்யப்படுவது.

7. பெரிய திருமொழி, 3. 2: 1. 8. மூன்றாந் திருவந். 76.



குளத்தில் மூழ்கிக் கிடந்தும், [1] "வீழ் கனியும் ஊழ் இலையும் என்னுமிவையே நுகர்ந்து உடலம் தாம் வருந்தி'' என்று சொல்லுகிறபடியே ஊழ்இலை வீழ்கனி என்னும் இவற்றை உணவாகக் கொண்டவராய், இப்படித் தவவொழுக்கத்தாலே சரீரத்தை வாடச்செய்து,

துன்பவினைகளை விடுத்து - மேலே கூறிய செயல்களை நாடோறும் செய்து போருகையாலே [2] "மேவு துன்ப வினைகளை விடுத்து'' என்கிறபடியே, எள்ளில் எண்ணெய் போன்று ஆன்மாவினை விட்டுப் பிரிக்க ஒண்ணாதபடி பொருந்திக் கிடக்கிற துக்கத்திற்குக் காரணமான பாவங்களை [3] "நாடோறும் செய்யவேண்டிய கர்மங்களைச் செய்கையாலே பாவங்களைப் போக்குகிறான்'' என்கிறபடியே போக்கி,

விவேக ஆதிகள் சம ஆதிகள் வளர - தடையாக இருந்துள்ள பாவங்கள் இப்படி நீங்குகையாலே மனத்தின் தூய்மைக்குக் காரணமான விவேகம் முதலான ஏழும், [4] "மனத்தினை அடக்குவது, புற இந்திரியங்களை அடக்குவது என்னுமிவற்றில் நியமத்துடன் கூடிய மனத்தையுடையவன் எல்லா உயிர்களிடத்திலும் அருள் பொருந்தியவன்'' என்பது முதலாகச் சொல்லப்பட்ட சமம் தமம் முதலானவைகளும் மேலும் மேலும் வளர,

விவேகம் முதலான ஏழாவன :- விவேகம், விமோகம், அப்யாசம், கிரியை, கல்யாணம், அநவசாதம், அநுத்தர்ஷம் என்பனவாம். இவற்றுள் விவேகமாவது, சரீரத்தின் தூய்மை. [5] "சாதி ஆச்ரயம் நிமித்தம் என்னும் இம் மூவகையான குற்றங்கள் இல்லாத அன்னத்தால் உண்டாகும் காயசுத்தி விவேகம்'' என்கிறபடியே சாதிகுற்றமும் ஆச்ரய குற்றமும் நிமித்த குற்றமும் இன்றிக்கே இருந்துள்ள அன்னத்தால் உண்டான காயசுத்தி – சரீரத்தின் தூய்மை. சாதி குற்றங்களாவன, வெங்காயம், காளான் (நாய்க்குடை) முதலான

1. பெரிய திருமடல், 12. 2. திருவாய். 3. 2: 8.

3. "தர்மேண பாபமபநுததி'' என்பது, தைத்திரியோபநிட.

4. "சமதம நியதாத்மா ஸர்வபூதாநுகம்பீ'' என்பது, பிரமாணம்.

5. "ஜாத்யாச்ரய நிமித்தா துஷ்டாத் அந்நாத் காயசுத்தி: விவேக:'' என்பது, போதாயந விருத்தி.

பொருள்கள். ஆச்ரய குற்றமாவது, [1] அபிசஸ்தன் பதிதன் சண்டாளன் முதலானவர்களுடைய பொருள். ஈண்டு ஆச்ரயம் என்பது, பொருட்கு உரியவனான தலைவனைக் குறிக்கின்றது. நிமித்த குற்றமாவது எச்சில், மயிர், கல் முதலியவற்றோடு கூடிய பொருள். இம்மூவகைக் குற்றங்களும் இல்லாத உணவினைப் பகுத்தறிதலின் பயனான சரீரத்தின் தூய்மையை 'விவேகம்' என்றது, காரிய காரண உபசாரம். அன்றிக்கே, இம்மூவகை குற்றங்களும் இல்லாத உணவினை உட்கொள்ளுவதாலே இராஜச தாமச உணவுகளால் வளர்க்கப்பட்ட சரீரத்தைக் காட்டிலும் தன்னுடைய சரீரத்தின் வேறுபாட்டினை அறியும் அறிவு '**விவேகம்**' என்னவுமாம். சுத்தியாவது, அசுத்தங்களில் நின்றும் பிரித்தறிதல். "காயசுத்தி" என்கிற இடத்தில் **காயம்** என்னும் சொல், ஈண்டு அந்தக் கரணத்தைக் காட்டுகிறது. [2] "சத்துவகுணத்திற்குரிய உணவினை உண்பவர்களுக்குச் சத்வம் தூய்மை அடைகிறது" என்றே அன்றோ சுருதி சொல்லிற்று. சத்வமாவது – அந்தக்கரணம். [3] "சத்துவத்திற்குத் தூய்மை பயம் அற்றிருத்தல்" என்றும், [4] "எல்லோருக்கும் சிரத்தையானது சத்வத்திற்குத் தகுதியாக உண்டாகிறது" என்றும் சொல்லுகிற இடங்களில் சத்வம் - அந்தக்கரணம் என்று, சத்வம் என்னும் சொல்லுக்கு அந்தக்கரணம் என்பது பொருளாக ஸ்ரீபாஷியகாரர் அருளிச்செய்தார். இதனைத் திருவுள்ளம்பற்றி அன்றோ 'விவேகமாவது, ஆஹார சுத்தௌ சத்வ சுத்தி : என்கிறபடியே அந்தக்கரணசுத்திக்கு அடியான அன்ன சுத்தி' என்று ஆச்சான் பிள்ளை அருளிச்செய்தது.

**விமோகமாவது,** [5] "விமோக : காம அநபிஷ்வங்க :" என்கிறபடியே காமத்தில் அநபிஷ்வங்கம். அநபிஷ்வங்கமாவது, அபிஷ்வங்கம் இல்லாமை. அபிஷ்வங்கமாவது, தான்விரும்பியதொரு பொருளை

1. அபிசஸ்தன் - பிறரால் இகழப்பட்டவன். பதிதன் - தன்நிலையினின்றும் இழிந்தவன்; கர்மசண்டாளன். சண்டாளன்-சாதி சண்டாளன்.

2. "ஆஹார சுத்தௌ ஸத்வசுத்தி:" என்பது, சாந்தோக்ய உபநிட.

3. அபயம் ஸத்வஸம் சுத்தி:" என்பது, ஸ்ரீகீதை, 16: 1.

4. "ஸத்வாநுரூபா ஸர்வஸ்ய ச்ரத்தாபவதி" என்பது, ஸ்ரீகீதை, 17: 3.

5. போதாயன விருத்தி.



அநுபவிக்காமல் நில்லாமைக்கு உறுப்பான விகாரம். [1] "காமத்தாலே குரோதம் உண்டாகிறது" என்பது போன்றவைகளாலே குரோதம் இன்மை முதலானவைகளும் இங்குக் கோடல் தகும்.

**அப்யாசமாவது,** [2] "ஆரம்பண சம்சீலநம் புந: புந: அப்யாச:" என்கிறபடியே தியானத்திற்குப் பற்றுக்கோடான பொருளிலே பலகாலும் சோதனை செய்தல். 'ஆரம்பணம்' என்றது, ஆலம்பனம் என்றபடி. இவ்விடத்தில் ஆலம்பனம் என்றது தியானத்திற்குரிய பொருளினை.

**கிரியையாவது,** [3] "ஐவேள்வி முதலானவற்றைத் தன் சக்திக்குத் தகுந்தவாறு செய்தல் கிரியை" என்கிறபடியே ஐவேள்வி முதலான நித்தியகர்மங்களை வல்லவாறு செய்தல்.

**கல்யாணமாவது,** [4] "சத்யம் ஆர்ஜவம் தயை தானம் அஹிம்சை அநபித்யை என்னுமிவை கல்யாணம் எனப்படும்" என்கிறபடியே சத்தியம், ஆர்ஜவம், தயை, தானம், அஹிம்சை, அநபித்யை ஆகிற இவை. இவற்றில் சத்தியமாவது, உயிர்கட்கு நலம் செய்தல். ஆர்ஜவமாவது, மனம் வாக்குக் காயம் என்னும் இவை மூன்றும் ஒருபடிப் பட்டிருத்தல். தயையாவது, தனக்கு என்று ஒரு பயனையும் கருதாததோடு பிறர் துக்கம் பொறுமை. தானமாவது, உலோபம் இன்மை. அஹிம்சையாவது, முக்கரணங்களாலும் பிற உயிர்களைத் துன்புறுத்தாமை. அநபித்யையாவது, அபித்யை இல்லாமை; அபித்யையாவது, பிறர் பொருளைத் தன் பொருளாகக் கருதுதல். அன்றிக்கே, பயன் இல்லாத சிந்தனை ஆதல். அன்றிக்கே, பிறர் செய்த அபகாரத்தை நினைத்தல் ஆதல்.

**அநவசாதமாவது,** அவசாதம் இன்மை. அவசாதமாவது, [5] "தேசகால வைகுண்யாத் சோகவஸ்து ஆதி அநுஸ்ம்ருதேச்ச தஜ்ஜம் தைந்யம் அபாஸ்வரத்வம் மநஸோ அவசாத:" என்கிறபடியே தேச காலங்களினுடைய குணக்கேட்டினாலும், சோகத்திற்குக் காரணமாயும் அச்சத்திற்குக் காரணமாயுமுள்ளபொருள்களில் வைத்த இடை

1. "காமாத் க்ரோதோபிஜாயதே" என்பது, ஸ்ரீகீதை, 2: 62.
2. போதாயநவிருத்தி. சம்சிலநம் - பரிசோதித்தல்.
3. "பஞ்சமஹாயஜ்ஞாத் யநுஷ்டாநம் சக்தித: க்ரியா" என்பது, போதாயநவிருத்தி. ஐவேள்வியை முன்னர்க் காண்க.
4. "ஸத்யார்ஜவ தயா தாநாஹிம்ஸாநபித்யா" என்பது, போதாயநவிருத்தி.
5. போதாயநவிருத்தி.

யீடு இல்லாத நினைவினாலும் உண்டான தைந்யமாகிற மனத்தெளிவின்மையாம். சுலோகத்தில் "சோகவஸ்து" என்றது, சோகத்திற்கு நிமித்தமான பொருள் என்றபடி. அதாவது, முன்னே நிகழ்ந்த புத்திர மரணம் முதலானவைகள். சுலோகத்தில் "வஸ்து ஆதி" என்ற இடத்திலே உள்ள "ஆதி" என்னும் சொல்லால் அச்சத்திற்குக் காரணமாய் இனி நிகழப்போகும் காரியங்களைக் கோடல் வேண்டும். **சோகம்** என்பது, முன்னே நிகழ்ந்துபோன காரியத்தின் சம்பந்தமாகவும், **பயம்** என்பது, இனிநிகழப்போகும் காரியத்தின் சம்பந்தமாகவும் நிகழ்வது. "அபாஸ்வரத்வம்" என்ற சொல்லானது "தைந்யம்" என்ற சொல்லின் விவரணம். **தைந்யமாவது,** விரும்பிய காரியத்தில் முயற்சி செய்யமாட்டாமல் இருத்தல். இனி, "அபாஸ்வரத்வம்" என்பதனைத் "தைந்யம்" என்ற சொல்லின் விவரணமாகக் கொள்ளாது, அதனைத் தைந்யத்திற்கு அடைமொழியாகக் கொண்டு, பாஸ்வரத்திற்கு விரோதியான தைந்யம் என்று பொருள் கூறலுமாம். பாஸ்வரம் - விளக்கம்; தெளிவு. அபாஸ்வரம் - தெளிவின்மை. தைந்யம் - வறுமைத்தன்மை.

அநுத்தர்ஷமாவது, [1] உத்தர்ஷம் இல்லாமை, உத்தர்ஷமாவது, தேச காலங்களினுடைய அநுகூலத்தாலும், பிரியமான பொருள்களில் வைத்த இடையறுத நினைவினாலும் உண்டான மகிழ்ச்சி. எனவே, மகிழ்ச்சிக்குக் காரணங்கள் உளவானாலும் அவற்றைக் கண்டு கழிபேருவகையன் ஆகாதொழிகை என்றபடி.

இனி, 'சமம்' முதலிய எட்டனுள் சமமாவது, அந்தக்கரணத்தை அடக்குதல்; தமமாவது, புறக்கரணங்களை அடக்குதல்; [2] "சமமாவது மனத்தினை அடக்குதல்; தமமாவது இந்திரியங்களை அடக்குதல்" என்னக் கடவதன்றோ. [3] "க்ஷமா சத்யம் தமச்சம:" என்கிற இடத்தில் "தமமாவது புறக்கரணங்களை ஐம்புல இன்பங்களில் செல்லாதபடி அடக்குதல்; சமமாவது அந்தக் கரணத்தை அப்படியே அடக்குதல்." என்றே அன்றோ ஸ்ரீபாஷியகாரர் அருளிச்செய்தது. மாறிச் சொல்லும் இடங்களும் உண்டு. ஆன்மகுணங்

1. *"தத்விபர்யயஜா துஷ்டிருத்தர்ஷ:"* *என்பது, போதாயநவிருத்தி.*

2. *"சம: சித்த ப்ரசாந்திஸ் ஸ்யாத் தமச்சேந்த்ரிய நிக்ரஹ:"* *என்பது, பிரமாணம்.*

3. *என்பது, பிரமாணம்.*



களில் முதன்மையானவை அன்றோ இவைகள். [1] "மனத்தினை அடக்கினவனும், புற இந்திரியங்களை அடக்கினவனும், காமிய கர்மங்களில் ஆசை இல்லாதவனும், பொறுமையுள்ளவனும், சமாதானம் அடைந்த மனத்தினை யுடையவனும் ஆகி, இந்த உயிரினிடத்திலேயே பரம்பொருளைப் பார்க்கக் கடவன்" என்கிறபடியே பக்தி நெறியில் இழியுமவனுக்கு முதன் முதலில் இருக்க வேண்டுவன இவையாக அன்றோ சுருதியும் சொல்லிற்று. மற்றும் உண்டான ஆன்மகுணங்களுக்கும் பொருந்துமாற்றிலே பொருள் கண்டு கொள்வது.

ஆக, இப்படி இருந்துள்ள விவேகம் முதலானவைகளும் சமம் முதலான குணங்களும் மேன் மேலும் ஓங்கி வளர;

எட்டும் நீக்கி - [2] "ஈனமாய எட்டும் நீக்கி" என்கிறபடியே ஞானக்குறைவினைத் தருதலாலே ஆன்மாவிற்குக் குறையான அவித்யை, அஸ்மிதை, (செருக்கு) இராகம், துவேஷம், அபிநிவேசம் என்னும் ஐந்தும், சரீரசம்பந்தம் காரணமாகத் தன்னைப்பற்றியும் பிற உயிர்களைப் பற்றியும் தெய்வத்தைப் பற்றியும் வருகின்ற மூவகைத்துன்பங்களும் ஆகிற எட்டினையும் நீக்கி. நன்று; "துன்பவினைகளை விடுத்து" என மேலேயும் பாவங்களை நீக்குதல் சொல்லப்பட்டுள்ளதே! எனின், அங்குச் சொல்லப்பட்டது, ஞானம் உண்டாவதற்குத் தடையான பழைய இருவினைகளையே யாதலால் கூறியது கூறிற்றாகாது. அன்றிக்கே, ஆன்மாவிற்குத் தீங்கினை விளைப்பனவான காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாத்சர்யம், அஞ்ஞானம், அசூயை ஆகிற எட்டினையும் போக்கி என்னலுமாம். இவற்றுள் காமமாவது, விரும்பப்பட்ட பொருளை அநுபவித்தால் அல்லது நிற்க ஒண்ணாத நிலை. குரோதமாவது, அதன் காரியமாய், விரும்பப்பட்ட பொருள் கிடைக்காமற்போயின் அண்மையிலிருப்பவர்கள் பக்கல் பிறக்கும் சீற்றம். உலோபமாவது, தன்னிடத்துள்ள பொருளில் பேராசை. மோகமாவது, செய்வன தவிர்வனவற்றைப் பகுத்தறியமாட்டாமை. மதமாவது, பொருள் முதலாயின பெறுமவற்றால் வரும் களிப்பு. மாத்சர்யமாவது, பிறருடைய செல்வம் முதலானவற்றைக் கண்டு பொறாமைப்படுதலோடு அமையாது அதனைச் செயலிலும்

1. *"சாந்தோ தாந்த உபரதஸ் திதிக்ஷு: ஸமாஹிதோ பூத்வா ஆத்மந்யேவ ஆத்மாநம் பச்யேத்"* *என்பது, பிருகதாரண்ய உப.* 6. 4: 23.

2. *திருச்சந்த விருத்தம்,* 114.

காட்டுதல். அஜ்ஞானமாவது, இவற்ருல் மேல்வரும் கேட்டினை ஆராயாமை. அசூயையாவது, குணங்களிலே குற்றங்களை ஏறிடுதல். ஆக, இவ்விதமானவற்றைப் போக்கி என்றபடி.

எட்டும் இட்டு - [1] "இனமலர் எட்டும் இட்டு" என்றும், [2] "கந்த மா மலர் எட்டும் இட்டு" என்றும் சொல்லுகிறபடியே திருவெட்டெழுத்திலே உள்ள ஒவ்வோர் எழுத்தும் நறுநாற்றம் மிக்குள்ள மலர்போலே அவனுக்கு இனியவாம்படி இருக்கையாலே எட்டுவிதமான மலர்களைத் தூவுவாரைப்போலே திருமந்திரத்தை ஒதி; [3] "அவன் பெயர், எட்டெழுத்தும் ஓதுவார்கள் வல்லர் வானம் ஆளவே" என்றும், [4] "ஆர்வமோடு இறைஞ்சி நின்று அவன் பெயர் எட்டெழுத்தும், வாரமாக ஓதுவார்கள் வல்லர் வானம் ஆளவே" என்றும் சொல்லப்பட்டுள்ளன வன்றே. அன்றிக்கே, எட்டும் இட்டு என்பதற்கு [5] "பிற உயிர்களுக்குத் துன்பம் செய்யாதிருப்பது முதல் புஷ்பம், இந்திரியங்களை அடக்குவது இரண்டாவது புஷ்பம், எல்லா உயிர்களிடத்தும் அருள் உள்ளவனுக இருப்பது மூன்ருவது புஷ்பம், பொறுமை நான்காவது புஷ்பம், இது சிறந்தது. ஞானம் ஐந்தாவது புஷ்பம், தவம் ஆருவது புஷ்பம், அப்படியே தியானம் ஏழாவது புஷ்பம், சத்யம் எட்டாவது புஷ்பம், இப்படி எட்டு விதமான இந்த மலர்கள் விஷ்ணுவிற்குப் பிரீதியைச் செய்கின்றவை ஆகின்றன." என்கிறபடியே அஹிம்சை முதலான எட்டு விதமான மலர்களை இட்டு என்று பொருள் கூறலுமாம். நன்று; மேலே கூறிய "விவேக சமாதிகள்" என்றவற்றில் அடங்கிக் கிடக்கின்றவைகள் இவற்றிலும் வந்துள்ளனவே? எனின், சர்வேச்வரனுக்கு, இவற்றை இனியவையாக நினைந்து மேற்கொண்டு நடக்கவேண்டும் என்று சொல்லுகிறதாகையாலே முரண் இல்லை. ஆகையாலே அன்ரே இவற்றைப் புஷ்ப சமர்ப்பணமாகச் சொல்லுகிறது.

எட்டினுய பேதம் - [6] "எட்டினுய பேதமோடு இறைஞ்சி" என்

1. *பெரிய திருமொழி*, 1. 2: 7. 2. *பெரியதிருமொழி*, 3. 5: 6.
3. *திருச்சந்த விருத்*. 77. 4. *திருச்சந்த விருத்*. 78.
5. *" அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம், புஷ்பமிந்த்ரிய நிக்ரஹ:*
*ஸர்வபூததயா புஷ்பம், க்ஷமா புஷ்பம் விசேஷத:,*
*ஜ்ஞாநம் புஷ்பம், தப: புஷ்பம், த்யானம் புஷ்பம், ததைவச,*
*ஸத்யம் அஷ்டவிதம் புஷ்பம் விஷ்ணோ: ப்ரீதிகரம் பவேத் "*
*என்பது, பிரமாணம்.*
6. *திருச்சந்த விருத்*. 77.





கிறபடியே [1] "மனம் புத்தி செருக்கு என்னும் இவைகளோடு, இரண்டு கைகளையும் இரண்டு கால்களையும் அங்கேயே தலையையும் ஐந்தாவதாக பூமியில் வைத்து" என்கிறபடியே செருக்கு அற்றவனுய் விழுகையும் மனத்திற்கும் புத்திக்கும் சர்வேச்வரனே விஷயமாகையும் இரண்டு கால்களும் இரண்டு கைகளும் தலையும் பூமியிலே பொருந்துகையுமாகிற அஷ்டாங்க நமஸ்காரத்தைச் செய்து, பூவில் சாந்தொடு- [2] "பூவில் புகையும் விளக்கும் சாந்தமும் நீரும் மலிந்து" என்றும், [3] "சாந்தொடு விளக்கம் தூபம் தாமரை மலர்கள் நல்ல, ஆய்ந்து கொண்டு" என்றும் சொல்கிறபடியே மலர் சந்தனம் முதலான ஆராதனத்திற்குரிய பொருள்களைப் பலனும் பற்றும் நாம்செய்கிரேம் என்ற செருக்கும் ஆகிற துராலும் மயிரும் புழுவும் படாதபடி ஆராய்ந்து நன்ருக ஈட்டிக்கொண்டு, தேவகார்யம் செய்து - [4] "தேவ கார்யம்செய்து" என்கிறபடியே பகவானுக்கு ஆராதனத்தைச்செய்து, உள்ளம் தூயராய் -" [5] "ஒன்றி நின்று நற்றவம் செய்து ஊழி ஊழிதோறெலாம், நின்று நின்று அவன் குணங்கள் உள்ளி உள்ளம் தூயராய்" என்கிறபடியே நாடோறும் செய்யவேண்டிய செயல்கள் முதல் பகவானுடைய ஆராதனம் இறுதியாகப் பலனை விரும்பாமை, பற்று வையாமை, நாம் செய்கிரேம் என்ற செருக்கு இல்லாமை என்னும் மூன்று விதமான தியாகங்கள் முன்னுகச் செய்யப்படும் கர்மானுஷ்டானத்தாலும் பகவானுடைய குணங்களை நினைக்கும் நினைவினுலும் நாடோறும் செய்யவேண்டிய [6] "கர்மங்களைச் செய்வதனுல் பாவம் ஆழிந்தவளவில் பின்னர் ஞானம் தோன்றுகிறது" என்கிறபடியே ஞான உலகத்தை அடைவதற்குத் தகுதியாம்படி நீங்கின பாவத்தினையுடையராகையாலே தூய்மையுற்ற உள்ளத்தினை உடையராய்;

**வாரிப் புன் புல அகத்தினுள் இளைப்பினை அடைவே விளக்கினைக் கண்டு** - வாரி - [7] "பரந்திருக்கிற விஷயமாகிற காட்டிலே

1. *மனோ புத்தி அபிமானேன ஸஹர்யஸ்ய தராதலே*
*கூர்மவச்சதுர: பாதாந் சிரஸ்தத்ரைவ பஞ்சமம்.*
*என்பது பிரமாணம்.*
2. *திருவாய்*. 5. 2: 9. 3. *திருவாய்*. 10 2: 10.
4. *பெரியாழ்வார் திருமொழி*, 4. 4: 1. 5. *திருச்சந்தவிருத்*. 75.
6. *" கஷாயே கர்மபி: பக்வே ததோ ஜ்ஞாநம் ப்ரவர்த்ததே "*
*என்பது, பிரமாணம்.*
7. *ப்ரகீர்ணே விஷயாரண்யே ப்ரதாவந்தம் ப்ரமாதிநம்*
*ஜ்ஞாநாங்குசேந க்ருஹ்ணீயாத் வச்ய மிந்த்ரிய தந்திநம்,*
*என்பது, பிரமாணம்.*

ஓடிக்கொண்டிருப்பதும் அகப்பட்டாரைக் கொல்லுவதுமான இந்திரியங்களாகிற யானையை, தள்ளத்தக்கனவற்றையும் கொள்ளத்தக்கனவற்றையும் பகுத்தறியும் ஞானமாகிற அங்குசத்தாலே தன் வசப்படுத்தவேண்டும்'' என்கிறபடியே [1] "வாரிசுருக்கி மதக்களிறு ஐந்தினையும், சேரிதிரியாமல் செந்நிறீஇ'' என்று மதம் பிடித்த யானைகளைத் தண்ணீரிலே செறுப்பிக்குமாறு போலே, இந்திரியங்களாகிற மதயானைகளை விஷய நுகர்ச்சியாகிற இன்பத்தைக் குலைத்து, அத்துணையோடு அமையாது, அது சம்பந்தமான பொருள்கள் நடையாடுமிடத்தில் போகாதபடி ஆன்மாவினை நோக்குதலாகிற செவ்வையிலே நிறுத்தி என்றும்;

புன் புலம் - [2] "புன்புல வழியடைத்து அரக்கு இலச்சினை செய்து, நன்புல வழிதிறந்து ஞானநற் சுடர்கொளீஇ'' என்று சிறுமை, நிலைநில்லாமை முதலிய குற்றங்களையுடைய சிற்றின்பப் பொருள்களைப் பற்றிப் போகின்ற இந்திரியங்களின் வழியினை அடைத்து, அவற்றின் சிறுமையின் நினைவாலே வாசனையின் தொடர்ச்சியும் அறும்படி அதனை உறைப்பித்து, ஆத்ம விஷயத்தில் இந்திரியங்களின் வழியை விளங்கச்செய்து, நன்றான ஞானச் சுடரை மிகவும் உண்டாக்கி என்றும், அகத்தினுள் - [3] "ஐம்புலன் அகத்தினுள் செறுத்து'' என்று செவி முதலான இந்திரியங்கள் ஐம்புல இன்பங்களிற் போகாமல் உள்ளே அடக்கி என்றும் சொல்லுகிறபடியே அடக்கப்பட்ட இந்திரியங்களை யுடையவராய்;

இளைப்பினை அடைவே விளக்கினைக் கண்டு - [4] "இளைப்பினை இயக்கம் நீக்கி இருந்து முன் இமையைக் கூட்டி, அளைப்பில் ஐம்புலன் அடக்கி அன்பு அவர்கண்ணே வைத்து, துளக்கம் இல் சிந்தை செய்து தோன்றலும் சுடர் விட்டு ஆங்கே, விளக்கினை விதியில் காண்பார் மெய்ம்மையைக் காண்கிற் பாரே'' என்கிற திருப்பாசுரத்தில் சொல்லுகிற அடைவிலே [5] "அறியாமை, செருக்கு, ஆசை, துவேஷம், அபிமானம் என்னுமிவை ஐந்து கிலேசங்கள் எனப்படுகின்றன'' என்று சொல்லப்படுகிற கிலேசங்களினுடைய சஞ்சாரத்தைத் தவிர்த்து, [6] "அதிக உயரமும் அதிக தாழ்வும் இல்லாத ஆசனம்'' என்பது போன்ற இடங்களில் சொல்லப்படுகிற

1. *முதல் திருவந்தாதி*, 47. 2. *திருச்சந்த விருத்தம்*, 76.
3. *திருவெழுகூற்றிருக்கை*. 4. *திருக்குறுந்தாண்டகம்*, 18.
5. *"அவித்யாஸ்மித ராகத்வேஷாபிநிவேசா: பஞ்சக்லேசா:" என்பது, யோகசூத்திரம்.*
6. *"நாத்யுச்ச்ரிதம் நாதி நீசம்" என்பது, ஸ்ரீகீதை*, 6: 11.



படியே ஓர் ஆசனத்திலே இருந்து, [1] "தன்னுடைய மூக்கின் நுனியை நன்றாகப் பார்த்துக்கொண்டு திசைகளையும் பார்க்காதவனாய்'' என்கிறபடியே மூக்கின் நுனியில் வைத்த பார்வையினையுடையராய், ஓர் அளவில் நில்லாத இந்திரியங்களை உள் நோக்கச்செய்து, தியானத்திற்கு விஷயமான பகவானிடத்தில் அன்பினை வைத்து, விடாமல் நினைந்து, சுடர்விட்டுத் தோன்றுகிற ஞானத்தாலே சுயம் பிரகாசமான ஆன்ம சொரூபத்தைச் சாஸ்திரத்திற் கூறிய முறையாலே அறிந்து. என்றது, நல்வினைகளைச் செய்வதனாலே பாவம் நீங்கினவனாய்க் குற்றம் அற்ற மனத்தினையுடையவனுக்கு, பகவானை நேரே காண்டலுக்கு உறுப்பாக விளையும் யோகத்தால் உளதாகும் ஞானமானது, முதலில் ஆன்மாவின் தன்மையினை அறிந்துகொண்டே அன்றோ மேலே போவது; அதனைத் தெரிவித்தபடி.

"விளக்கினை விதியில் காண்பார்'' என்பதற்குப் பகவானை நேரே காணுதலாக [2] முன்னைய பெரியோர்கள் வியாக்கியானம் செய்து போந்தார்களேயாகிலும், இவர் ஆன்மபரமாகவே அருளிச் செய்கிறார் என்று கொள்ளவேண்டும். என்னை? எனின், மேலே 'யோக நீதி நண்ணி' என்று தொடங்கிப் பகவானைத் தியானித்தலைப் பற்றியும் காணுதலைப்பற்றியும் அருளிச்செய்கையாலே. அன்றியும், "விதியில்காணும் பிரதம மத்யம தசைகளை'' (சூத், 23.) என்று ஆன்மபரமாகவே அன்றோ மேலும் இவர் அருளிச்செய்தது. இங்ஙனம் வருவனவற்றைக் கருத்து வேறுபாடுகள் என்று கோடல் தகும்.

யோகநீதி நண்ணி - [3] "நன்றிருந்து யோகநீதி நண்ணுவார்கள்'' என்கிறபடியே யோகமாகிற உபாயத்தாலே கிட்டி, அறந்திகழும் மறையோர் மனந்தன்னுள் அமர்ந்துறையும் அரும்பெரும் சுடரை - அறம் திகழும் - [4] "மறம் திகழும் மனமொழித்து வஞ்சமாற்றி வன்புலன்கள் அடக்கி இடர்ப் பாரத்துன்பம், துறந்து இருமுப்பொழுது ஏத்தி எல்லை இல்லாத் தொன்னெறிக்கண் நிலைநின்ற தொண்டரான, அறந்திகழும் மனத்தவர்தம் கதியை'' என்று கொலையும் சினமும் கொடுமையும் ஆகிற மறத்தால் விளங்காநின்றுள்ள மனத்தினை வாசனையோடே போக்கி, பொய்யைத் தவிர்ந்து, வன்புலச் சேக்களைப் பட்டிபுகாமே கட்டி, மிக்க துக்கத்தை

1. *"ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்ரம் ஸ்வம் திசச்சாநவலோகயந்" என்பது, ஸ்ரீகீதை*, 6: 13.
2. *'முன்னைய பெரியோர்கள்' என்றது, பெரியவாச்சான் பிள்ளையினை.*
3. *திருச்சந்த விருத்தம்*, 63. 4. *பெருமான் திருமொழி*, 1: 7.

விளைப்பதான பாரமான பழவினையைப் பற்று அறுத்து, சிறந்தன வான காலை நடுப்பகல் மாலை ஆகிற மூன்றுபொழுதிலும் ஏத்தி, அளவிறந்த பழைய மரியாதையிலே சிலவரால் கலக்க ஒண்ணாதபடி நிலை நின்ற வைஷ்ணவர்களாய்ப் பேரருளாலே விளக்க மடைந்திருக் கின்ற மனத்தினையுடையவர்களுக்குக் கதியாக இருப்பவனை என்றும், மறையோர் மனம் தன்னுள் - [1] "மறையோர் மனந்தன்னுள் விண்ணுளார் பெருமானை" என்று பிராமணர்களுடைய மனங்களைத் தனக்கு வசிக்கு மிடமாகவுடையனா யிருக்கும் அயர்வறும் அமரர்கள் அதிபதியை என்றும், அமர்ந்து உறையும் - [2] "மாதவ, மானவர் தங்கள் சிந்தை அமர்ந்துறைகின்ற எந்தை" என்று மிகப்பெரிய தவத்தினையுடையராக இருக்கும் மக்களுடைய மனங்களிலே வேறொரு பயனையும் கருதாதவனாய்க் கொண்டு நித்தியவாசம் செய் கிற சுவாமி என்றும் சொல்லுகிறபடியே, தூய்மை பொருந்திய மனத்தினையுடையவர்களான பரமயோகிகளுடைய இதயங்களிலே, அரும் பெரும் சுடரை - [3] "ஆரமார்வன் அரங்கன் என்னும் அரும் பெரும் சுடர் ஒன்றினைச் சேரும் நெஞ்சினர்" என்னும்படி ஆபரணங்கள் முதலியவற்றாலே அலங்கரிக்கப் பட்டதாய் மிக்க பேரொளியோடே கூடிய விக்கிரஹத்தோடே எழுந்தருளியிருக்கும் சர்வேச்வரனை;

கண்கள் சிவந்தில்படியே - [4] "கண்கள் சிவந்து" என்ற திருப் பாசுரத்தில் சொல்லுகிறபடியே அவயவசோபை ஆபரணசோபை ஆயுதசோபைகளோடே கூடிக் காளமேகம் போன்ற கரிய நிறம் பொருந்திய திவ்விய மங்கள விக்கிரஹத்துடனே, மனஉட்கொண்டு - [5] "கற்றவர் தம் தம் மனஉட்கொண்டு" என்று அறிவுடையரான யோகிகள் தங்கள் தங்களுடைய மனத்திலே கொள்வதாகச் சொல் லியிருக்கிறபடியே இதயத்தாமரையிலே தியானம் செய்து, நிரந்தரம் மறவாமை - [6] "நிரந்தரம் நினைப்பதாக" என்றும், [7] "மன்னுசேவடிக்கே மறவாமை வைத்தாய்" என்றும் சொல்லுகிறபடியே அந்தத் தியானத்திற்கு இடையீடும் மறதியும் அற்று, தொடக்கு அரு மனத் தராய் - [8] "சோர்விலாத காதலால் தொடக்கு அரு. மனத்தராய்" என்கிறபடியே உலக வியவகாரங்களால் கவரப்படாத அன்பினை எக்

1. பெரிய திருமொழி, 7. 3: 7.
2. பெரிய திருமொழி, 2. 1: 1.
3. பெருமாள் திருமொழி, 2: 7.
4. திருவாய். 8. 8: 1.
5. பெரியதிருமொழி, 7. 3: 1.
6. திருச்சந்த விருத்தம், 101.
7. பெரியதிருமொழி, 3. 5: 4.
8. திருச்சந்த விருத்தம், 78.



காலத்திலும் உடையராகையாலே அவனுடைய சேர்க்கையாலும் பிரிவாலும் உண்டாகின்ற சுகத்தையும் துக்கத்தையுமுடையராம்படி [1] "அந்தக்கரணம் தூய்மை அடைந்தால் இடையறாத தியானம் உண்டாகும்" என்கிறபடியே தியானிக்கப்படுகின்ற பொருளில் தொடக்கு அறாமல் நடக்கும் இடையறாத அநுசந்தானமாய்;

கனவில் மிக்க தர்சன சமமாய் - [2] "கனவில் மிகக் கண்டேன்" என்று இந்திரியங்களால் கலக்க வொண்ணாதபடி மன உணர்வினாலே அழகிதாகக் கண்டேன் என்னலாம்படி, [3] "அந்த நினைவு தானும் நேரே கண்கூடாகக் காண்பதுபோல் இருப்பது" என்கிற படியே அந்த நினைவுதான் நேரே கண்கூடாகக் காண்பது போன்ற தாய், ஆகத்துப் புல்கும் அத்யர்த்த பிரியமாய் - அப்படிக் கண்கூடாகக் காண்பது போன்ற அதுதான், [4] "ஞானத்தால், ஆகத்து அணைப் பார்க்கு" என்றும், [5] "ஆகத்து அணைப்பார் அணைவரே" என்றும், [6] "எல்லையில் அந்நலம் புல்கு" என்றும், [7] "ஆர்வம்புரியப் பரிசினால் புல்கில்" என்றும் அணைப்பதாகவும் புல்குவதாகவும் சொல்லுகை யாலே மகளிரை அணைப்பது போன்று [8] "நான் ஞானியர்க்குச் சொல்லவொண்ணாத பிரியமானவன்" என்கிறபடியே நினைக்கப் படுகின்ற விஷயத்தின் இன்பத்தாலே தானும் மிகவும் பிரியமாய்;

வைகும் சிறப்பு விட்டுக் குற்றேவல் எண்ணாத அநந்யப் பிரயோஜனமாய் - வைகும் - [9] "நின்புகழில், வைகும் தம் சிந்தையிலும் மற்றினிதோ நீ அவர்க்கு, வைகுந்தம் என்றருளும் வான்" அதாவது, உன்னுடைய கல்யாண குணங்களிலே பிரிவு இல்லாமல் செல்லுகிற சிந்தையைக் காட்டிலும் இனிதோ நீ அவர்க்கு நல்லது என்று சொல்

1. "ஸத்வ சுத்தௌ த்ருவாஸ்மிருதி:" என்பது, சாந்தோக்ய உப.
2. இரண்டாந்திருவந்தாதி, 81.
3. "ஸாச ஸ்ம்ருதி: தர்ஸநசமாநாகாரா" என்பது, ஸ்ரீபாஷ்யம் லகுசித்தாந்தம்;
4. திருவாய் 10. 4: 6.
5. முதல் திருவந்தாதி, 32.
6. திருவாய். 1. 2, 4
7. முதல் திருவந்தாதி, 50.
8. "ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோத்யர்த்தமஹம்" என்பது, ஸ்ரீகீதை, 7: 17.
9. பெரியதிருவந்தாதி, 53.

லிக் கொடுக்கும் பரமபதம்? என்றும், சிறப்புவிட்டு - [1] "அமுத வெள்ளத்தானும் சிறப்புவிட்டு ஒரு பொருட்கு, அசைவோர் அசைக - நல்வீடு பெறினும், கொள்வதெண்ணுமோ தெள்ளியோர் குறிப்பே" அதாவது, பரத்வம் சௌலப்யம் முதலிய குணங்களால் நிறைந்த வஞன சர்வேச்வரனுடைய எல்லை இல்லாத இனிமை பொருந்திய திருவடிகளை அநுபவிக்கையில் உண்டான ஆசையிலே நீர்ப்பண்ட மாய் ஓர் வடிவமாக்கிக் காண ஒண்ணுதபடி மங்கின உயிரிலே அந்த ஆசை அடியாகப் பிறந்த வேறுபட்ட சிறப்பினையுடைய சங்கம் காமம் முதலிய நிலை வேறுபாடுகளையுடைய பக்தியால் விளை கிற அந்தமில் இன்பத்திலே உளனுகையாகிற பயனைவிட்டு, மிகமிகச் சிறிய பேற்றிற்கு வருந்துவார் அங்ஙனே வருந்துக; பெருமை பொருந்திய செல்வம், அதனைக் காட்டிலும் வேறுபட்ட சிறப்பினை யுடைய ஆன்மாநுபவம், அவ்வளவன்றிக்கே அந்தமில் இன்பத்து அழிவில் வீடான மோக்ஷம் என்னும் இவற்றைப் பெறுமளவானுலும், நல்லன தீயனவற்றைப் பகுத்தறியும் பேரறிஞர்களுடைய மனத்தில் அவற்றை ஏற்கவும் நினைவுண்டோ? என்றும், குற்றேவல் எண்ணுத அநந்யப் பிரயோஜனமாய் - [2] "உனது பாலேபோல் சீரில் பழுத் தொழிந்தேன், மேலால் - பிறப்பின்மை பெற்று அடிக்கீழ்க் குற்றேவல் அன்று, மறப்பின்மை யான் வேண்டும் மாடு" அதாவது, நினைக்கப் படுங்காலந் தொடங்கி இனியனவான உன்னுடைய குணங்களிலே பழுத்தொழிந்தேன்; பின்பு ஒருகால் பிறவாமை பெற்றுத் திருவடி களில் என்றும் கைங்கரியம் செய்தல் அன்று எனக்கு வேண்டுவது, எனக்கு வேண்டும் செல்வமானது பிறந்த ஞானத்துக்கு மறப்பில் லாமை என்றும் சொல்லுகிறபடியே சர்வேச்வரனைப் பற்றிய நினை வாலே பரமபதத்தில் அநுபவத்தையும் வெறுக்கும்படி தானே பரமப் பிரயோஜனமாம்படி இனியதாயிருக்கையாலே வேறொரு பயனையும் கருதாத நிலையினதாய்;

வேதந உபாசந சேவா தியாந ஆதிகள் என்று சொல்லுமது [3] சாத்திய சாதன பக்தியாகச் சாஸ்திர சித்தம் - வேதநம் என்றும் உபாசனம் என்றும் சேவை என்றும் தியானம் என்றும் இவை முத லான சொற்களால் சொல்லப்படுகிற பக்தியானது [1] "கர்மம் ஞானம் என்னும் இரண்டாலும் அலங்கரிக்கப்பட்ட அந்தக்கரணத் தையுடையவனுக்கு" என்கிறபடியே கர்மத்தாலும் ஞானத்தாலும் பக்தியைச் செய்வதற்குத் தகுதியாக்கிய மனத்தினையுடையவனுக் குப் பிறக்குமது ஒன்ருகையாலே மக்களால் செய்யப்படுமதாய்ப் பகவானுடைய திருவருளைப் பெறுதற்குக் காரணமாய் இருப்பத ஞலே அவனை அடைவதற்குச் சாதனமான பக்தியாக இதிகாச புரா ணங்களோடு கூடின வேதாந்த சாஸ்திரத்திலே சொல்லப்பட்டது என்கை. (13)

1. திருவாசிரியம், 2.

2. பெரியதிருவந்தாதி, 58.

3. சாத்திய சாதந பக்தி - மக்களால் சாதித்துக் கொள்ளப்படுவ தாய் மோக்ஷத்திற்குச் சாதநமாக - உபாயமாக இருக்கும் பக்தி.



## 100

[2] ஸ்வீகிருத சித்த சாதனர் இத்தைச் சாத்திய மாக இரக்கப் பிராப்திக்கு முன்னே சித்திக்கும்.

என்பது சூத்திரம்.

வியாக் :— இவ்வாறு சாதனமாக இருந்துள்ள இந்தப் பக்தி போல் அன்றிக்கே, பலனுன கைங்கர்யத்துக்குச் சாதனமாக, பிரபந் நர், பகவான் பக்கல் வேண்டிப்பெறுகின்ற பக்தி விசேடத்தை - சாத் திய பக்தியை அருளிச்செய்கிறுர் இச்சூத்திரத்தால்,

அதாவது, ஸ்வீகிருத சித்த சாதநர் - [3] "தேவரீருடைய திருவடி களைப் புகலாக அடைகின்றேன்" என்றும், [4] "தேவரீருடைய இரண்டு திருவடித்தாமரைகளையே புகலாக நான் அடைகிறேன்" என்றும் சொல்லுகிறபடியே பற்றப்பட்ட சித்தோபாயத்தையுடைய வர்கள், இத்தை - இந்தப் பக்தியை, சாத்தியமாக இரக்க - உணவுக் குப் பசிபோலே கைங்கர்யத்துக்கு இந்தப்பக்தி சாதனமாகையாலே பலனுன கைங்கர்யத்தைப் போன்று இந்தப் பக்தியும் நமக்குப் பலன்

1. "உபய பரிகர்மித ஸ்வாந்தஸ்ய" என்பது, ஆத்மசித்தி.

2. ஸ்வீக்ருத சித்த சாதநர்-சித்தோபாயத்தை மேற்கொண்ட பிரபந்நர்கள். இத்தை - பக்தியை. சாத்யமாக - பலனுக. பிராப்திக்கு இறைவனை அடைவதற்கு.

3. "த்வத் பாதமூலம் சரணம் ப்ரபத்யே" என்பது, தோத்திர ரத்நம், 22

4. "த்வத் பாதாரவிந்தயுகளம் சரணமஹம் ப்ரபத்யே" என்பது, சரணுகதி கத்யம்.

என்று நினைந்து [1] " பகவானே! அடியேனுக்குப் பக்தியையும் கொடுத்தருள வேண்டும் " என்றும், [2] " மூன்று இடங்களில் சொல்லப்பட்ட பரபக்தி உடையவனாக அடியேனைச் செய்தருள வேண்டும் " என்றும், [3] " பரபக்தி, பரஞான, பரமபக்தி என்னும் இவைகளையே தன்மையாகவுடையவனாக என்னைச் செய்தருளவேண்டும் " என்றும் சொல்லுகிறபடியே பகவான் பக்கலிலே வேண்டிக்கொள்ள, பிராப்திக்கு முன்னே சித்திக்கும் - [4] " தூலமாயும் சூக்ஷமமாயும் இருந்துள்ள இந்தச் சரீரத்தை விட்டு விட்டு அப்போதே " என்று தொடங்கிச் சொல்லுகிறபடியே சரீரம் நீங்கிய பின்னர் பகவானை அடைவதற்கு முன்னே சித்திக்கும் என்கை. (14)

**101**

> [5] இது உபயமும் அன்றிக்கே, அறியாக்காலத்தே ஒக்கப்பிறந்து, தழுவி நின்று, கட்டமே நோயாய், உலர்த்தி, வீழ்ந்து, அலப்பாய், தியாக ஸ்வீகார நிஷ்டாஹாநிகள் ஆக்கி, சத்தா போக விருத்தி உபகரணமாவது ஒன்று.

என்பது சூத்திரம்.

---

1. " பகவந் பக்திமபி ப்ரயச்ச மே " என்பது, தோத்திரரத்நம், 54.
2. " ஸ்தாந த்ரயோதித பரபக்தியுக்தம் மாம் குருஷ்வ " என்பது சரணாகதிகத்யம்.
3. " பரபக்தி பரஜ்ஞான பரமபக்த்யைகஸ்வபாவம் மாம் குருஷ்வ " என்பது, சரணாகதி கத்யம்.
4. " இமாம் ப்ரக்ருதிம் ஸ்தூல ஸூக்ஷ்ம ரூபாம் விஸ்ருஜ்ய ததாநீமேவ " என்பது, சரணாகதி கத்யம்.

நிலம் நீர் தீக் காற்று ஆகாயம் என்னும் ஐந்து பூதங்களின் சேர்க்கையால் உண்டானதாய், இந்திரியங்கட்கு நிலைக்களனாய், தோல் இரத்தம் இறைச்சி நிணம் எலும்பு நரம்பு சுக்கிலம் என்னும் எழுதாதுக்களும் எழுபத்திராயிரம் நாடிகளும் கூடியிருக்கிற உடம்பு ஸ்தூல உடம்பாம். மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அந்தக்கரணங்களும், பிராணன் முதலான ஐந்து வாயுக்களும் கூடின சூக்கும பூதங்களாகிய சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் தன்மாத்திரைகள் ஐந்தாலும் கற்பத்தின் முதலில் உண்டாக்கப்பட்டு, ஆத்மாக்கள் கர்மங்கட்குத் தகுதியாக எய்தும் ஒவ்வொரு பிறப்பின் ஆயுள் முடிவில் முன்னுடம்புவிட்டு வேறு சரீரம் எடுத்தற்கேதுவாய் மோக்ஷம் வரையிலும் அழியாதிருப்பது சூக்ஷ்ம உடம்பு - அருஉடம்பு ஆம்.

5. இது - ஆழ்வாருடைய இந்தப் பக்தியானது. உபயம் - இரண்டு; மேலே கூறிப்போந்த சாதன சாத்யபக்திகளைக் குறிக்கின்றது. சத்தா - சத்தை; இருப்பு. விருத்தி - கைங்கரியம்.



வியாக் :- இனி, இவ்வாழ்வாருடைய பக்தி விசேடம் இருக்கும்படியை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்,

அதாவது, இது - மேலே (97 ஆம் சூத்,) கூறப்பட்ட இவ்வாழ்வாருடைய பக்தி, உபயமும் அன்றிக்கே - தன்முயற்சியாலே செய்யப்படுவதாய் உபாயமாய் இருக்கும் [1] சாதன பக்தியும், பகவானைப் பற்றிய பின் விரும்ப உபாயபலமாய் வரும் சாத்திய பக்தியுமாகிற நடுவிற் சொல்லுகிற இரண்டும் அன்றிக்கே, அறியாக் காலத்தே ஒக்கப் பிறந்து - [2] " அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து " என்று, [3] " இளையபெருமாள் சக்கரவர்த்தித் திருமகனிடத்தில் தொட்டில் பருவமே தொடங்கி எப்பொழுதும் பக்திமிக்கவராக இருந்தார் " என்று சொல்லுகிறபடியே அறிவிற்கு இடம் இல்லாத இளம் பருவத்திலே பேற்றின் பலமான அடிமையிலே மிகப் பெரிய காதலைப் பிறப்பித்து என்னும்படி, திருத்துழாய்க்கு மணம் போலே ஒக்கப்பிறந்து, தழுவி நின்று - [4] " தழுவிநின்ற காதல் தன்னால் " என்கிறபடியே விடுவேன் என்றாலும் விடஒண்ணாதபடி உடன் வந்தியாய், கட்டமே நோயாய் - [5] " கட்டமே காதல் என்று மூர்ச்சிக்கும் " என்றும், [6] " வேட்கைநோய் " என்றும் வருகின்றவாறே அநுபவிக்கின்ற விஷயத்தை விரும்பியவாறு அநுபவிக்கப் பெறாதபோது, உணவுபெறாதபோது பசிபோலே கஷ்டம் என்பது, நோய் என்பதாம்படி வெறுப்பினை விளைத்து,

உலர்த்தி - [7] " வேவாரா வேட்கைநோய் மெல்லாவி உள் உலர்த்த " என்று சொல்லுகிறபடியே உலர்த்த முடியாத உயிரைக் குருத்துவற்றும்படி உலர்த்தி, வீழ்ந்து - [8] " உன்னைக் காணும் அவாவில் வீழ்ந்து " என்று சொல்லுகிறபடியே கடலிலே விழுந்தாற்போலே கரைஏற ஒண்ணாதபடி காதலே உருவமான தன்னுள்ளே ஆழ்ந்து, அலப்பாய் - [9] " உன்னைக் காண்பான் நான் அலப்பாய் " என்று சொல்லுகிறபடியே இனியவனான இறைவனைக் காணவேண்டும் என்று அலமாக்கச்செய்து,

---

1. சாதநபக்தி- பேற்றினைப் பெறுதற்குச் சாதனமாக - உபாயமாக - வழியாக இருக்கும் பக்தி. சாத்யபக்தி - அங்ஙனம் உபாயமாக இராமல் பேறாகவே இருக்கிறபக்தி; பக்தியே பேறாக இருக்கும் என்றபடி.
2. திருவாய். 2. 3 : 3.
3. " பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்த: லக்ஷ்மணோ லக்ஷ்மி வர்த்தந: " என்பது, ஸ்ரீராமா. பால. 18 : 27.
4. திருவாய். 4. 7 : 11.
5. திருவாய். 7. 2 : 4.
6. திருவாய். 9. 6 : 7.
7. திருவாய். 2. 1 : 10.
8. திருவாய். 5. 7 : 2.
9. திருவாய். 5. 8 : 4.

தியாக ஸ்வீகார நிஷ்டா ஹாநிகளாக்கி - இவ்வாக்கியத்தைத் தியாக நிஷ்டைக்கு ஹாநி ஆக்கி என்றும், ஸ்வீகார நிஷ்டைக்கு ஹாநி ஆக்கிஎன்றும் தனித்தனியே பிரித்துக் கூட்டுக. தியாக நிஷ்டா ஹாநி ஆக்கி - [1] "உன்னால் அல்லால் யாவராலும் ஒன்றும் குறை வேண்டேன்" என்கிறபடியே மற்றைய உபாயங்களை அடியோடு விடுதல் முன்னாக அவனே உபாயம் என்று அறுதியிட்டிருக்குமிவரை [2] "குதிரியாய் மடல் ஊர்தும்" என்றும், [3] "யாம் மடல் ஊர்ந்தும் எம் ஆழியங்கைப்பிரானுடைத் தூமடல் தண்ணந்துழாய் மலர் கொண்டு சூடுவோம்" என்றும் கூறுகின்றபடி விட்ட உபாயத்திலே மூட்டுகையாலே தியாக நிலைக்குக் கேட்டினை விளைத்தும், ஸ்வீகார நிஷ்டாஹாநி ஆக்கி-[4] "ஆறு எனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்" என்றும், [5] "கழல்கள் அவையே சரணாகக் கொண்ட" என்றும், [6] "அடிமேல் சேமம்கொள் தென்குருகூர்ச் சடகோபன்" என்றும், [7] "நாகணைமிசை நம்பிரான் சரணே சரண்" என்றும் [8] "அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே" என்றும், [9] "நோற்ற நோன்பு" என்னும் திருப்பதிகம் தொடங்கி அடுத்து அடுத்துப் பிரபத்தி செய்யும்படி ஆக்குகையாலே, [10] "சாஸ்திரத்தின் பொருளான இந்தப் பிரபத்தி ஒருமுறையே செய்யப்படவேண்டியதாய் மனிதனைப் பிறவியினின்றும் தாண்டச்செய்யும்" என்றும், [11] "ஒரேமுறை பிரபத்தி செய்தவன் பொருட்டும், நான் உனக்காக இருக்கிறேன் என்று இரக்கின்றவன் பொருட்டும், எல்லா உயிர்களிடமிருந்தும் அச்சம் இன்மையைக் கொடுக்கிறேன்; இது என்னுடைய விரதம்" என்றும் சொல்லுகிறபடியே ஒருமுறையே செய்யவேண்டிய பிரபத்தியின் நிலைக்குக் கேட்டினை உண்டாக்கியும்,

[12] சத்தா போக விருத்தி உபகரணம் ஆவது ஒன்று - பகவானை

---

1. திருவாய். 5. 8 : 3.
2. திருவாய். 5. 3 : 9.
3. திருவாய். 5. 3 : 10.
4. திருவாய். 5. 7 : 10.
5. திருவாய். 5. 8 : 11.
6. திருவாய். 5. 9 : 11.
7. திருவாய். 5. 10 : 11.
8. திருவாய். 6 : 10 : 10.
9. திருவாய். 5. 7 : 1.

10. "ஸக்ருதேவஹி சாஸ்த்ரார்த்த: க்ருதோயம் தாரயேந் நரம்" என்பது, இலக்ஷ்மீ தந்திரம்.

11. ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதிசயாசதே
அபயம் ஸர்வபூதேப்ய: ததாமி ஏதத் வ்ரதம் மம.
என்பது, ஸ்ரீராமா. யுத். 18 : 33.

12. இவ்வாக்கியத்தை, சத்தைக்கும் போகத்திற்கும் விருத்திக்கும் உபகரணமாவது ஒன்று என்று உம்மை கொடுத்து முடிக்க. சத்தை- இருப்பு. போகம் - இன்பம். விருத்தி - கைங்கரியம்.



நினையாமை என்றும், உளதாந்தன்மைக்குக் கேடு என்றும் இரண்டு இல்லை என்றிருக்கும் இவர்க்கு, எப்பொழுதும் அவன் விஷயமான நினைவிற்குக் காரணமாகையாலே இருப்பிற்கும், [1] "எல்லாம் கண்ணன்" என்றிருக்கும் இவர்க்கு, அவனை அநுபவிக்கையிலுள்ள இச்சையை மேலும் மேலும் விளைக்கையாலே போகத்துக்கும், [2] "வழுவிலா அடிமை செய்ய வேண்டும்" என்றிருக்கும் இவர்க்கு, எல்லா விதமான அடிமைகளின் சுவையை அநுபவிப்பதற்கு உறுப்பு ஆகையாலே கைங்கரியத்துக்கும் உதவியாக இருப்பது ஒன்று என்கை.

இனி, சத்தாபோக விருத்தி உபகரணம் என்பதற்கு, [3] "தொண்டு செய்யாத உயிர்க்கு அடிமையாம் தன்மை இல்லை" என்கிறபடியே கைங்கரியம் செய்யாத ஆன்மாவிற்கு அடிமையாந் தன்மை இல்லையாகையாலே, அடியவன் என்ற தன்மையினாலேயே அறியத்தக்கவனான இவன், உள்ளவனும் தன்மை, அடிமை செய்வதனாலேயாதலால் இவனுடைய இருப்பிற்குக் காரணமாய், [4] "தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே" என்றும், [5] "உன்தன் திருவுள்ளம் இடர் கெடுந்தோறும் வியக்க இன்புறுதும்" என்றும், [6] "நான் தேவரீரை எப்பொழுது சந்தோஷப்படுத்தப்போகிறேன்" என்றும் சொல்லுகிறபடியே இதுதான் பரமப்பிரயோஜனமாகப் பண்ணுமதாகையாலே அவனுக்கு இன்பமாக இருக்குமதான கைங்கரியத்தைச் செய்வதற்கு உதவியாக இருப்பது ஒன்று என்று பொருள் கூறலுமாம்.

ஆக, இவருடைய பக்தியானது சாதனத்தைச் செய்து பெற்றதும் அன்று; விரும்பிப் பெற்றதும் அன்று; ஒக்கப்பிறந்து தழுவி நிற்பதாய், தம்முடைய இருப்புக்கும் தம்முடைய இன்பத்துக்கும் தாம் செய்யும் கைங்கரியத்துக்கும் உதவியாக இருப்பது ஒன்று என்றுஆயிற்று. (15)

---

1. திருவாய். 6. 7 : 1.
2. திருவாய். 3. 3 : 1.
3. "நாகிஞ்சித் குர்வத: சேஷத்வம்" என்பது, பிரமாணம்.
4. திருவாய். 2. 9 : 4.
5. திருவாய் 10. 3 : 9.
6. "கதாப்ஹர்ஷயிஷ்யாமி" என்பது, தோத்திர ரத்நம், 46.

## 102

[1] "இடகிலேன், நோன்பறிவிலேன், கிற்பன், கீழ் நாள்கள்" என்கையாலே, சாதநத்திரய பூர்வ அப்யாஸஜம் அல்ல.

என்பது சூத்திரம்,

**வியாக் :-** இங்ஙன் அன்றிக்கே, இவருடைய இந்தப் பரமபக்தி, கர்மம் ஞானம் பக்தி என்னும் மூன்று சாதனங்களையும் இப்பிறவியில் மேற்கொண்டு செய்தலால் உண்டாயிற்று என்றுதல், முற்பிறவிகளின் பயிற்சியாலே உண்டாயிற்று என்றுதல் கூறின் என் ? என்னும் வினவிற்கு, இரண்டு படியாலும் வந்தது அன்று என்னுமதனை இவருடைய திருவார்த்தைகளைக் கொண்டே அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, இடகிலேன் என்கையாலும் - [2] "இடகிலேன் ஒன்று அட்டகில்லேன் ஐம்புலன் வெல்லகில்லேன், கடவனாகிக் காலம் தோறும் பூப்பறித்து ஏத்தகில்லேன்." அதாவது, பசித்து வந்தார்க்குச் சோற்றினை இடுதல், நீர்வேட்கை கொண்டவர்க்குத் தண்ணீர் வார்த்தல் செய்தேனாகில் [3] "வேள்வி, தானம், தவம் முதலியவை முன்செய்த பாவங்களைப் போக்குவன" என்கிறபடியே தானமும், கர்மயோகத்தில் அடங்கியது ஆகையாலே கர்மயோகத்திலே சேர்க்கலாம்; அதுசெய்யமாட்டுகிறிலேன். இந்திரியங்களை விஷயங்களில் போகாதபடி அடக்கினேனாகில் ஞானயோகத்தில் சேர்க்கலாம்; அதுவும் செய்யமாட்டுகிறிலேன். ஒருவரையறைக்கு உட்பட்டவனாய்க் கொண்டு சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட காலங்களில் மலர்முதலான துணைப் பொருள்களைச் சேகரித்து ஆராதித்துத் துதித்தேனாகில் பக்தியோகத்திலே சேர்க்கலாம்; அதுவும் செய்ய மாட்டுகிறிலேன் என்றும்,

---

1. "என்கையாலே" என்பதனை மேல் உள்ளனவற்றோடும் கூட்டுக. சாதநத்ரயம் - கர்மம், ஞானம், பக்தி என்னும் மூன்று சாதனங்கள். 'சாதநத்ரய பூர்வ அப்யாஸஜம் அல்ல' என்பதனை, சாதநத்ரயஜம் அல்ல, பூர்வ அப்யாஸஜம் அல்ல என்று பிரித்துக் கூட்டுக. பூர்வம் - முன்பு. அப்யாஸஜம் - செய்து போந்தவற்றால் உண்டாவது. ஜம் - உண்டாவது.

2. திருவாய். 4. 7 : 9.

3. "யஜ்ஞோ தாநம் தப : கர்ம" என்பது, ஸ்ரீகீதை, 18 : 5.



நோன்பு அறிவிலேன் என்கையாலும் - [1] "நோற்ற நோன்பு இலேன் நுண்ணறிவிலேன்." அதாவது, பலத்தோடு கூடியிருக்கும்படி செய்யப்பட்ட கர்மயோகமுடையேன் அல்லேன், அது இல்லாமையாலே நுண்ணிய வடிவமான ஜீவாத்ம பரமாத்ம விஷயமான ஞானயோகத்தையுமுடையேன் அல்லேன். ஆகையாலே கர்மத்தாலும் ஞானத்தாலும் சாதித்துக்கொள்ளப்படுகின்ற பக்தி இல்லை என்னுமிடம் பொருள் ஆற்றலால் தானே போதரும்; இங்ஙனம் தாமே அருளிச்செய்கையாலே. சாதன த்ரயஜம் அல்ல - இந்தப்பிறவியில் கர்மம் ஞானம் பக்தி என்னும் மூன்று வகையான சாதனங்களைச் செய்தமையால் உண்டானது அன்று,

கிற்பன் என்கையாலே - [2] "கிற்பன் கில்லேன் என்றிலன் முன நாளால்." அதாவது, முன்பு உளவாய நாட்கள் எல்லாம் [3] "செய்யத் தகும்" என்கிறபடியே நன்மைசெய்ய அடுக்கும் என்றால் 'வல்லேன்' என்று இசைந்திலன்; [4] "செய்யத்தகாதது" என்கிறபடியே தீமை செய்யலாகாது என்றால் 'மாட்டேன்' என்று தவிர்ந்திலேன்; இப்படி விதித்தனவற்றைச் செய்யாது விலக்கியனவற்றைச் செய்து போந்தேன் என்கையாலும், கீழ்நாள்கள் என்கையாலே - [5] "தெரிந்துணர்வொன்றின்மையால் தீவினையேன்...ஆழியங்கை அம்மானை ஏத்தாது அயர்த்து வாளாவிருந்தொழிந்தேன்." அதாவது, பகவானைப் பற்றிய விஷயங்களை ஆராயும் ஞானம் ஒன்றும் இல்லாமையாலே பகவானுடைய அநுபவத்துக்குத் தகுதியான காலத்தைப் பாழே போக்கின பாவியான நான், பிராட்டி சொன்னது செய்தல்லது நிற்க மாட்டாமையாலே மாயமானை அன்று பின்பற்றிச் சென்ற, அருளாழியைத் திருக்கையிலேயுடைய சர்வேச்வரனை மங்களாசாசனம் செய்யப்பெறாமல் அறிவுகெட்டு வாளா இருந்து விட்டேன் கழிந்து போன காலம் எல்லாம் என்று அருளிச்செய்கையாலும், பூர்வ அப்யாசஜம் அல்ல - முற்பிறவிகளின் பயிற்சியால் உண்டானதும் அன்று எனகை. (16)

## 103

[5] "இப்பிறப்பே சிலநாளில்" என்றபோதே இரண்டும் கழியும்.

என்பது சூத்திரம் :

---

1. திருவாய். 5. 7 : 1.
2. திருவாய். 3. 2 : 6.
3. "குர்யாத்"
4. "ந குர்யாத்"
5. பெரியதிருவந்தாதி, 82.

வியாக் :- இன்னமும் இவருடைய ஒரு திருவார்த்தை விசேடத்தாலே இதனைத் தெளிவாக்குகிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, இப்பிறப்பே சிலநாளில் என்ற போதே - [1] "குறிக்கொள் ஞானங்களால் எனைஊழி செய்தவமும், கிறிக்கொண்டு இப்பிறப்பே சிலநாளில் எய்தினன் யான்." அதாவது, இயமம், நியமம் முதலிய யோகங்களின் பயிற்சியை மேற்கொண்டு சம்பாதிக்க வேண்டும் வேதநம் தியானம் உபாசநம் முதலான நிலை வேறுபாடுகளான ஞானங்களாலே பல கல்ப காலங்கள் சேர்ந்து கேள்வியாலும் மனனத்தாலும் இடையறாத நினைவினாலும் வரக்கூடிய பக்தியோகமாகிற தவத்தினுடைய பலத்தினை, ஒரு முயற்சியும் இன்றிக்கே, நல் விரகனான சர்வேச்வரனாலே இப்பிறப்பிலே இப்பிறப்பிலும் சில நாள்களிலே பெற்றேன் என்கையாலே,

இரண்டும் கழியும் - முற்பிறவிகளின் பயிற்சியால் உண்டானது என்றும், இப்பிறப்பிலே கர்மம் ஞானம் பக்தி என்னும் மூன்று விதமான சாதனங்களையும் செய்து போந்தமையாலே உண்டானது என்றும் சொல்லுகிற இரண்டும் போகும் என்றபடி.

'இப்பிறப்பே' என்றும் 'சிலநாளில்' என்றும் இரண்டும் அருளிச்செய்தது, முற்பிறவிகளில் பயிற்சியையும், இப்பிறப்பிலேயும் பல காலம் செய்து போரும் கர்மம் ஞானம் பக்தி என்னுமிவற்றில் தமக்குச் சம்பந்தம் இன்மையையும் வேறுபடுத்திக் காட்டுவதற்காக என்று தெளிக.

அன்றிக்கே, முற்சூத்திரத்திற் கூறிய "இடகிலேன்", "நோன்பறிவிலேன்", "கிற்பன்", "சிலநாளில்" என்ற திருப்பாசுரங்களின் பகுதிகளாலே, முற்பிறவிகளில் சாதனமாகச் செய்து போந்த கர்மம் ஞானம் பக்தி என்னும் இவற்றாலே இவர்க்கு இப்பக்தி வந்தது அன்று என்பதனைச் சாதித்து நின்றார் மேல். அங்ஙனம் வந்ததன்றாயின், அம்மூன்று விதமான சாதனங்களையும் இப்பிறவியிலே இவர் செய்து கொண்டுவர அதனாலே இந்தப்பக்தி இவர்க்கு வந்தது என்றால் என்னை? என்னும் ஐயம் வர, முற்பிறவியாலும் இப்பிறவியாலும் இவர்க்கு அவற்றில் சம்பந்தம் இல்லை என்னுமிடத்தை "இப்பிறப்பே சிலநாளில் எய்தினன்" என்னும் இவருடைய திருவார்த்தை விசேடத்தாலே தெளிவுபடுத்திக்கொண்டு அவ் இருஐயத்தையும் சேரத் தள்ளுகிறார் என்று இங்ஙனே பொருள் கூறலுமாம். இப்பொருளைக் காட்டிலும் முற்கூறிய பொருளே இதனுடைய பட்டோலையான பெரியபடிக்குச் சேருவது. (17)

1. திருவாய். 2. 3 : 8.



## 104

[1] பெரும் பாழில் க்ஷேத்ரஜ்ஞன் பெரும்செய் - கலியார் ஏவ, ஆளும் வன்குறும்பர் குடிஏறி, பெருங்குடியும் தங்கள் கருத்துள்ளே ஆக்கி, படிந்து உண்ணும் போகத்தே, தூராதே பொறுக்கொணுப் போகத்துக்குக் காவல் செய்து, குமைத்துத் திரித்து வீழ்த்து வலித்து எற்றி அருவி அறுத்துக் கடன் ஆயின இறுப்பிக்க, பாழ்த்த விதியானவாறே, தன்பால் மனம் வைப்பிப்பதாக, தேய்ந்து அற, மன்னி, ஒள்வாள் உருவி வினைத்தூற்றை வேர் அறுவித்துத் தீக்கொளீஇக் கவ்வை எருவிட்டு, அமுதஆறு தலைப்பற்றி ஈரியாய்க் கசிந்ததிலே ஈரநெல் வித்தி, எழுநாற்றுக் களையையும் வேர் முதல் மாய்த்து, பட்டிச்சேவை அதக்கி, மீது கொள்ளாமல் குறிக்கொள் வித்து, கடல் புரைய விளைந்து தலைவணக்கினவாறே, நாளுநாள் கோட் குறையாக, நின்றார் அறியாமல் குந்தம் கொண்டு ஆராமை உண்டு, காலக்கழிவாலே நிலத்து உகாமல், பற்றுஅறுத்துத் தண்டால் அடித்துப் பதர் அறுத்து, போர்த்த தோல் விடுத்து, சூக்ஷ்ம ஒட்டும் நீரிலே கழுவி, வேறு ஓர் கலத்திட்டு, பைந்தொடி மடந்தையரைக்கொண்டு ஷட்குணரசான்னமாக்கி, வானோர்க்கு ஆரா அமுதானவாறே, முற்றும் உண்ண முன்னம் பாரித்து, உழுவது ஓர் நாஞ்சில் கொண்டு பெருக முயலும் பத்தி உழவன் கிருஷி பலமிறே.

என்பது சூத்திரம்.

1. இச்சூத்திரத்தில் 'பெரும்பாழில்' என்றது முதல் 'பாழ்த்த விதியானவாறே' என்றது முடிய ஒரு தொடர். 'பெரும்செய் - பாழ்த்த விதியானவாறே' என முடிக்க. இதற்கு இடையில் உள்ளன வெல்லாம் பெரும்செய் பாழ்த்தமைக்குக் காரணம் கூறியவாறு. பெரும்பாழ் - மூலப் பகுதி. க்ஷேத்ரஜ்ஞன் - ஆன்மா. பெரும்செய - மனம்; வயலாக உருவகம்.

வியாக் :- நன்று; இவர்க்கு இந்தப்பக்தி உண்டாகைக்குக் காரணம்தான் என் ? என்னும் வினவிற்கு, பலத்தினை அநுபவிக்கின்றவனை சர்வேச்வரனுடைய வேளாண்மையின் பலன் என்பதனை விடையாகக் கூறத் திருவுள்ளம் பற்றி, அதற்குத் தக, விளைநிலமும், பயிர்செய்பவனும், பயிரும், அதன் பலனுமாக உருவகம் செய்து அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்,

அதாவது, பெரும் பாழில் க்ஷேத்ரஜ்ஞன் பெரும்செய் - [1] "முடிவில் பெரும்பாழ்" என்கிறபடியே என்றும் உள்ளதாய் அளவிடற்கு அரியதாய் உயிர்கட்கு போகத்தையும் மோக்ஷத்தையும் விளைத்துக் கொள்ளலாம் நிலமான மூலப்பகுதியில் கட்டுப்பட்டிருக்கின்ற அறிவுப் பொருளான இவ்வான்மாவினுடைய [2] "நெஞ்சப் பெரும் செய்" என்று கூறுகின்ற பக்திக்கு விளைநிலமான மனதானது, கலியார்ஏவ- [3] "ஏவினார் கலியார் நலிக வென்று என்மேல்" என்கிறபடியே கலியுகமாகிற பகைவன் இவனை நலியுங்கோள் என்று ஏவ. இந்திரியங்களினுடைய நலிவிற்குக் கலிகாலத்தின் செயல் காரணமாகையாலே 'கலியார் ஏவ' என்கிறார். தனக்கு என்ன பகையுடையாரைப் போலே நலிகிற கொடுமையை நினைந்து 'கலியார்' என்று உயர்திணையாக அருளிச்செய்கிறார். 'கலியார்' என்று ரகர ஈற்றிலே ஆழ்வார் அருளிச்செய்தது கலிகாலத்துக்கு அஞ்சினபடியாலே அன்றோ. ஆளும் வன்குறும்பர் - [4] "மனம் ஆளும் ஓர் ஐவர் வன்குறும்பர்" என்கிறபடியே ஆன்மாவிற்கு உரியதான மனத்தினைத் தங்களுக்கு உரியதாக்கிக் கொண்டு நடத்துமவர்களாய் முன்கை மிடுக்கராய் ஒப்பற்றவர்களாய் இருந்துள்ள ஐம்பொறிகளாகிற குறும்பர். பகைமையுடையாரைப் போன்று நலிகிற கொடுமையை நோக்கி 'ஐவர்' என உயர்திணையாக அருளிச்செய்கிறார். குடி ஏறி - [5] "கோவாய் ஐவர் என்மெய் குடிஏறி" என்கிறபடியே இவ்வுயிரை நியமிப்பாரைப் போன்று சரீரத்திலே குடிபுகுந்து,

பெருங்குடியும் தங்கள் கருத்துள்ளே ஆக்கி - முன்னின்று முறை போக்கும் [6] பெருங்குடி போன்று தங்களுக்குப் பிரதானமான

---

1. திருவாய். 10. 10 : 10.
2. திருவாய். 5. 3 : 4.
3. பெரியதிருமொழி, 1. 6 : 8.
4. பெரிய திருவந்தாதி, 51.
5. பெரிய திருமொழி, 7. 7: 9.
6. ஈண்டுப் 'பெருங்குடி' என்றது, மனத்தினை.



மனத்தினையும் [1] "ஐம்புலன் கருதும் கருத்துளே திருத்தினேன் மனத்தை" என்கிறபடியே தாங்கள் நினைத்த வழியே ஒழுகும்படி செய்து, படிந்து உண்ணும் போகத்தே - [2] "புலன் படிந்துண்ணும் போகம்" என்கிறபடியே விஷயங்களிலே மூழ்கி அநுபவிக்கிற போகத்திலே, தூராதே - [3] "தூராக்குழி" என்கிறபடியே ஒருகாலும் நிறைவு பெறாதே, பொறுக்கொணாப் போகத்துக்கு - [4] "பொறுத்துக் கொண்டிருந்தால் பொறுக்கொணாப் போகமே நுகர்வான்" என்கிறபடியே இவற்றால் வந்த நலிவை ஆற்றியிருப்போம் என்றால் ஆற்ற ஒண்ணாதபடியான விஷயபோகங்களை அநுபவிக்கவேண்டும் என்று, காவல்செய்து - [5] "கடியார் காளையர் ஐவர் புகுந்து காவல் செய்த அக்காவலை" என்கிறபடியே கொடியராய் நலிய நலிய இளகிப் பதியாநின்ற பருவத்தினையுடையராய்க் கொண்டு இவனைச் சிறை செய்து,

குமைத்து - [6] "கூறை சோறு இவை தா என்று குமைத்துப் போகார்" என்கிறபடியே தனக்கு விருப்பமானவற்றைத் தா என்று துகைத்து இழுத்து, திரித்து - [7] "செக்கில்இட்டுத் திரிக்கும் ஐவர்" என்கிறபடியே சரீரமாகிற செக்கில் இட்டுச் சுழற்றி, வீழ்த்து - [8] "கொடு வன்குழியினில் வீழ்க்கும் ஐவர்" என்கிறபடியே கொடியன வாய்க் கரைஏற ஒண்ணாதபடியாய் இருக்கும் விஷயங்களாகிற படுகுழியிலே தள்ளி, வலித்து எற்றி - [9] "ஐவர் திசை திசை வலித்து எற்றுகின்றனர்" என்கிறபடியே அவ் இந்திரியங்கள்தாம் பல ஆகையாலே தத்தம் விஷயங்களிலே கொடு போகைக்காக நான்கு திசைகளிலும் இழுத்து நலிந்து, அருவிஅறுத்து - [10] "ஐவர் அருவித் தின்றிட", [11] "ஐவர் அறுத்துத் தின்றிட" என்கிறபடியே அருவித தின்னுமாறு போலவும் அறுத்துத் தின்னுமாறு போலவும் 'என் விஷயத்தைக் காட்டு, என் விஷயத்தைக் காட்டு' என்று நெருக்கி இப்

---

1. பெரியதிருமொழி, 1. 1: 8.
2. பெரியதிருமொழி, 1. 6 : 2.
3. திருவாய். 5. 8 : 6.
4. பெரியதிருமொழி, 7. 7 : 7.
5. பெரியதிருமொழி, 7. 7 : 8.
6. பெரிய திருமொழி, 7. 7: 9.
7. திருவாய். 7. 1: 5.
8. திருவாய். 7. 1: 9.
9. திருவாய். 7. 1. 10.
10. பெரியதிருமொழி, 7. 7: 1.
11. பெரியதிருமொழி, 7. 7: 7.

படிப் பலவிதமாகத் தண்டித்து, கடமையின இறுப்பிக்க - [1] "பொருள் இன்பம் என இரண்டும், இறுத்தேன் ஐம்புலன்கட்குக் கடமையின" என்கிறபடியே செவிமுதலான இந்திரியங்களுக்கு உரியனவாய் இருக்கிற பொருள் இன்பம் என்று சொல்லப்படுகிற இரண்டனையும் கடமை இறுப்பாரைப் போலே அவற்றாலே அடக்கப்பட்டவனாய்க் கொடுத்துப் போந்தேன் என்னும்படி தங்களுக்குத் தக்க கப்பத்தை இறுப்பித்துக்கொள்ள, பாழ்த்த விதியானவாறே - அதனால், [2] "வாழ்த்தி அவன் அடியைப் பூப்புனைந்து நின்தலையை, தாழ்த்தி இருகை கூப்பு என்றால் கூப்பாத - பாழ்த்த விதி" என்கிறபடியே வகுத்த சர்வேச்வரனை வாழ்த்தி ஆராதித்து வணங்கிக் கும்பிடுதல் என்னும் இவற்றில் ஒன்றிலும் சாராமையாலே அவன் அங்கீகரிப்பதற்குப் பற்றாசான புண்ணியம் சிறிதும் இன்றிப் பாழ் பட்டவாறே;

[3] தன்பால் மனம் வைப்பிப்பதாக - [4] "தன்பால் மனம் வைக்கத் திருத்தி" என்கிறபடியே இந்திரியங்களுக்கு வசப்பட்ட படியாலே இப்படிப் பாழ்பட்ட மனத்தினைப் பயிர்படும்படி தன்பால் வைக்கப் பண்ணுகைக்காக, தேய்ந்து அற மன்னி - [5] "எனது ஏழை நெஞ்சு ஆளும், திருந்தாத ஓர் ஐவரைத் தேய்ந்து அற மன்னி, இருந்தான்" என்கிறபடியே கண்ட எல்லாவற்றிலும் ஆசை வைககிற மனத்தினை அதுவே பற்றாசாகப் பொதி எடுத்து ஆளாநிற்பாராய், எத்தனையேனும் வலியுடையார் திருத்தப்புக்காலும் திருந்தாதே, இனி இப்படி ஓர் ஐவர் இலர் என்னும்படியிருக்கிற இந்திரியங்களாகிற ஐவர் வலி குறைந்து முடிந்து போம்படி, ஆசனபலத்தாலே குறும்பரை அழிக்கும் அரசர்களைப் போலே, நிலையியற்பொருள் போலே மன்னி இருந்து, ஒள்வாள் உருவி - [6] "நீ பணித்த அருள் என்னும் ஒள்வாள் உருவி" என்கிறபடியே, - [7] "என்னையே சரணமாகப் பற்று" நீ உய்வுபெறுதற்கு வழியாக என்னுடைய இரண்டுதிருவடிகளையே

1. பெரியதிருமொழி, 6. 2: 1. 2. பெரியதிருவந். 84.

3. "தன்பால்" என்ற இதிலிருந்து "ஈரநெல் வித்தி" என்றது முடிய, பயிர் செய்பவனாகிய இறைவன், பாழ்பட்ட மனமாகிய வயலைச் செப்பன் இட்டுப் பக்தியாகிய நெல்லை விதைத்தமை கூறப்படுகின்றது.

4. திருவாய். 1. 5: 10. 5. திருவாய். 8. 7: 2.

6. பெரியதிருமொழி, 6. 2: 4.

7. "மாமேகம் ஶரணம் வ்ரஜ"
என்பது, ஸ்ரீகீதை, 18: 73.



திடமாக நம்பிஇரு என்ன, [1] "ஐயம் நீங்கினவனாய் நிலைத்துநிற்கிறேன்" என்னும்படி ஐயங்கள் எல்லாவற்றையும் துணித்துப் பொகடவற்றாய் [2] "உன்னை எல்லாப் பாவங்களினின்றும் விடுவிக்கிறேன்" என்று அருளிச்செய்தபடியே எல்லாப் பாவங்களையும் அழித்தற்கு ஆற்றலையுடையதுமான ஒண்மையையுடைய அருளாகிற வாளைத் தடைபடாமல் செய்து;

வினைத்தூற்றை - பக்தியாகிற பயிருக்கு விளைநிலமாக அமைந்துள்ள மனமானது பாழே கிடந்து போம்படி, [3] "கொடு வினைத் தூறு" என்கிறபடியே இவனால் அடிகாணவும் அறுக்கவும் ஒண்ணாதபடி மூடின பாவமாகிற தூற்றினை, வேர் அறுவித்து - [4] "வினைகளை வேர்அற" என்றும், [5] "வல்வினைத் தொடர்களை முதல் அரிந்து" என்றும் சொல்லுகிறபடியே மறுகிளை உண்டாகாதபடி வாசனை ருசி என்னும் ஊசிவேரோடும் பக்கவேரோடும் அறுப்பித்து, 'வேர் அறுத்து' என்னாது, அறுவித்து என்று பிறவினையாகக் கூறியதனால் [6] 'மோக்ஷயிஷ்யாமி' என்றவிடத்திலுள்ள பிறவினை விகுதியின் பொருள்கள் இங்குத் தோற்றுகிறது. வினையை அறுப்பதில் ஏவுதல் கருத்தாவாயிருக்கும் தன்மை இறைவனுக்கும், இயற்றுதல் கருத்தாவாயிருக்கும் தன்மை திருவருளுக்கும் கொள்ளலாம் அன்றோ. தீக்கொளீஇ - வெட்டின காட்டினைச் சுட்டுப் பொகடுமாறுபோலே "விடுவிக்கிறேன்" என்கிற அருளை அடியாகக் கொண்ட நினைவாலே, முந்துற அடிஅறுத்தவற்றை [7] "இறவு செய்யும் பாவக்காடு தீக்கொளீஇ வேகின்றதால்" என்கிறபடியே இவ் ஆன்மாவினை முடிக்கிற கர்மங்களின் தொடர் நெருப்புக்கொளுந்தி வேகாநின்றது

1. "ஸ்திதோஸ்மி கத ஸந்தேஹ:"
என்பது, ஸ்ரீகீதை, 18: 66.

2. "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி"
என்பது, ஸ்ரீகீதை, 18: 73.

3. திருவாய். 3. 2: 9. 4. திருவாய். 3. 2: 1.

5. திருவாய். 3. 2: 2.

6. மோக்ஷயிஷ்யாமி - பாவங்களினின்றும் விடுவிக்கக்கடவேன். "ணிச்சாலே நானும் வேண்டா, நீயும் வேண்டா, அவைதன்னடையே விட்டுப் போங்காண் என்கிறான்" என்பது முமுட்சுப்படி, சூத்-255. 'ணிச்சு' என்பது பிறவினையைக் காட்டும் விகுதி. "மோக்ஷயிஷ்யாமி" என்பதில் 'இ' என்பது பிறவினையைக் காட்டுவது.

7. பெரியாழ்வார் திருமொழி, 5. 4: 2.

என்னும்படி [1] "நெருப்பில் போடப்பட்ட நாணற்பஞ்சு எப்படி உடனே கொளுத்தப்படுகின்றதோ அப்படியே இந்த உபாசகனுடைய எல்லாப் பாவங்களும் கொளுத்தப்படுகின்றன" என்கிறபடியே உருமாய்ந்து போம்படி சாம்பலாக்கி;

கவ்வை எரு இட்டு [2] "ஊரவர் கவ்வை எருவிட்டு" என்கிறபடியே பகவானிடத்தில் மருவித் தொழும் மனம் உண்டானவாறே இவன் பாகவதன் ஆனான் என்று சம்சாரிகள் சொல்லும் பழிமொழியைப் பக்தியாகிற பயிரை வளர்க்கும் படியான எருவாக இட்டு, அமுதஆறு தலைப்பற்றி - [3] "அறிவை என்னும் அமுத ஆறு தலைப்பற்றி வாய்க்கொண்டது" என்கிறபடியே ஞானமாகிற அமுத ஆற்றினை வாய்அளவாய்த் தலைக்குமேலே போம்படி பெருகப்பண்ணி, ஈரியாய்க் கசிந்ததிலே - [4] "கண்ணனுக்கு என்று ஈரியாய் இருப்பாள்" என்றும், [5] "கசிந்த நெஞ்சினளாய்" என்றும் சொல்லுகிறபடியே அந்த ஞான வெள்ளத்தாலே நல்லது கண்டால் அவனுக்கு என்னும் நினைவாலே அன்பு விளையும்படி நெஞ்சுபதம் செய்து, செவ்வி வாய்த்தவாறேஅந்நெஞ்சிலே ;

ஈர நெல் வித்தி - சங்கமாகிற நெல்லை விதைத்து, [6] "எழுநாற்று - [7] "செய்த்தலை எழுநாற்று" என்கிறபடியே அவனுடைய அண்மையிலுள்ளதாய் அவனுக்கே பரதந்திரப்பட்டதாய் அவனுக்கே இனியதாய் வளருகிற இப்பயிரில், களையையும் வேர்முதல் மாய்த்து- நான் செய்கிறேன் நான் அநுபவிக்கிறேன் என்கிற புத்தியை விளைக்கும் யான் எனது என்னும் செருக்கு ஆகிற களையையும் [8] "நீர்நுமது என்றிவை, வேர் முதல் மாய்த்து" என்கிறபடியே ஊசிவேரோடே பறித்துப் பொகட்டு, பட்டிச் சேவை அதக்கி - களை பறித்தாலும் போராதே, பட்டிபுகாமல் நோக்கினால் அன்றோ பயிர்

1. யதேஷிகாதூல மக்னௌ ப்ரோதம் ப்ரதூயேத
ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே.
என்பது, சாந்தோக்ய உப. 5. 24: 3.

2. திருவாய். 5. 3: 4. 3. பெரியாழ்வார்திரு. 5. 4: 2.

4. திருவாய். 6. 7: 9. 5. திருவாய். 6. 7: 8.

6. "எழுநாற்று" என்ற இதிலிருந்து "தலைவணக்கினவாறே" என்பது முடிய, மனமாகிற வயலிலே விதைத்த பக்தியாகிற நெல் முளைத்துக் கருவிருந்து ஈன்று காய்த்து முற்றின படியைக் கூறுகிறது.

7. பெரியாழ்வார் திரு. 3. 7: 9.

8. திருவாய். 1. 2: 3.



தலைபெற்றுச் செல்லுவது! ஆகையாலே [1] "வன்புலச் சேவை அதக்கி" என்கிறபடியே இவ்வுலகவிஷயங்களிலே ஆசையை வைத்துப் பகவானிடத்தில் வைக்கவேண்டிய பக்தியைத் தலை அழிக்கையாலே, பக்தியாகிற இப்பயிருக்குப் பட்டியான இந்திரியங்களாகிற சேக்களினுடைய தம் விருப்பின்படி திரிதற்குக் காரணமான செருக்கினைப் போக்கி, மீது கொள்ளாமல் - பயிர்செழித்து வளர்ந்து பயன் தரக்கூடிய காலமாயினும், அந்தப்பயனை இரவில் திரிகின்றவர்கள் கொள்ளை அடிப்பதற்குக் காரணம் உண்டு ஆகையாலும் அங்ஙனம் கொள்ளை அடிக்காமல் காவல்செய்து வைக்க வேண்டுமாகையாலும் [2] "விளைந்த தானியமும் இராக்கதர் மீது கொள்ளகிலார்கள்" என்கிறபடியே அவனுக்கே உரியதாக, [3] "அரக்கர் அசுரர் பிறந்தீர் உள்ளீரேல்" என்கிறபடியே இராக்கதர்களாகவும் அசுரர்களாகவும் சொல்லலாம்படியான பாகவதர் அல்லாதவர்கள் 'எங்களுக்கும் இவன் சிநேகம் உள்ளவன்' என்றிருக்கும் அவ்வழியாலே இதனைக் கவர்வதற்கு இடம் இல்லாதபடி;

குறிக்கொள்வித்து - பக்தியாகிற பயிர் விளைந்து கிடக்கிற நெஞ்சுக்கு, [4] "பறவை அரையா! உறகல்; பள்ளியறை குறிக்கொண்மின்" என்கிறபடியே காவல் அடைத்து, கடல் புரைய விளைந்து- [5] "காதல் கடல்புரைய விளைவித்த காரமர் மேனி" என்கிறபடியே எருவும் நீரும் உண்டானாலும் மேல் மழை இல்லாதபோது பயிர் தலை குளிர்ந்து வாராது என்று, காளமேகம் போன்ற கரியநிறத்தையுடைய வடிவழகாகிய மழையினைப் பெய்து வளர்க்கையாலே, அந்தப் பக்தியாகிற பயிர் கடல்போலே அளவிடற்கு அரிதாம்படி பலித்து, தலை வணக்கினவாறே - [6] "வரம்புற்ற கதிர்ச் செந்நெல் தாள்சாய்த்துத் தலைவணக்கும்" என்கிறபடியே பலித்த பயிரானது காய்த்து முற்றித் தலைவணக்குமாறு போலே, பலித்ததான அதனுடைய பரிபாகம் காரணமான ஆர்த்தியால் வரும் தன்வசம்இன்மை பிறந்தவாறே;

[7] நாளு நாள் கோட்குறையாக நின்றார் அறியாமல் - நாளு நாள்- பக்தியின் முதிர்ச்சியினைச் சொன்ன இதனால் பலித்தது,

1. பெரியாழ்வார் திரு. 5. 2. 3:
2. பெரியாழ்வார் திரு. 4. 4: 8. 3. திருவாய். 5. 2: 5.
4. பெரியாழ்வார் திரு. 5. 3: 9. 5. திருவாய். 5. 3: 4.
6. பெரியாழ்வார் திரு. 4. 9: 8.

7. மேலே கூறியவாறு காய்த்து முற்றி விளைந்த நெல்லினை, உரிய காலத்திலே அறுத்து நெற்களை வேறாகப் பிரித்த பின் அரிசியாக்கிப் பின் சோறு ஆக்கி உண்டு பயன் பெற்றமையைக் கூறுகிறார் 'நாளு நாள்' என்றது முதல் 'முன்னம் பாரித்து' என்றது முடிய.

அந்தப் பக்திக்கு இருப்பிடமான ஆன்மாவானது பகவானுக்கு இனிய தாம்படி திருந்தினமை அன்றோ ! ஆகையாலே, [1] "நாளும் நாள் வந்து என்னை முற்றவும் தான் உண்டான்" என்று சொல்லுகிறபடியே ஒருநாள் அநுபவித்து விடுகை அன்றிக்கே, நாள்தோறும் வந்து அநுபவித்துக் கொண்டிருக்க மனம் நிறைவு பெறாதவனாகிப் படுகிற அலமாப்புக் கண்டு, கோள் குறையாக - [2] "கோள் குறைபட்டது என்னாருயிர்" என்று சொல்லுகிறபடியே இத்தலையிலே சிறிது தொங்கிற்று உண்டு என்று ஆராய்ந்து அறியவேண்டும் படியாக, நின்றார் அறியாமல் - [3] "நின்றார் அறியா வண்ணம் என் நெஞ்சும் உயிருமவை உண்டு" என்று சொல்லுகிறபடியே இவ் அநுபவத்தில் தலைநின்ற பிராட்டி, திருவடி, திருவனந்தாழ்வான் முதலாயினாரும் அறிய மாட்டாதபடி, குந்தம் கொண்டு ஆராமை உண்டு - பெரும் பசியரானவர்கள் விளைந்த நெல்லைச் சேர அறுத்துக்கொண்டுபோய்ச் சமைத்து உண்ணுகிற வரையிலும் தரிக்க மாட்டாமல் முற்றின அளவுகளை வயற்காட்டிலேயே கிள்ளி எடுத்து உண்ணுமாறு போலே, இவ் உலக வாழ்விலே கட்டுப்பட்டிருந்த ஆன்மா விடுபட்டு முக்தனானவாறே, பின்னைச் சேர அநுபவிக்குமளவும் பொறாத தன் பேரவாவினாலே, இச் சரீரத்தோடே இருக்கும் பொழுதே விளைந்த பக்திக்குத் தகுதியாக [4] "மனக்கு ஆராமை மன்னி உண்டிட்டாய்" என்கிற படியே ஒருகாலும் நிறைவு பெறாமலே மேன் மேலும் அநுபவித்து;

காலக் கழிவாலே நிலத்து உகாமல் - [5] "காலக்கழிவு செய்யேல்" என்றும், [6] "மன்னும் வறுநிலத்து வாளாங்கு உகுத்தது போல்" என்றும் சொல்லுகிறபடியே பரிபக்குவ நிலையை யடைந்த இவ் ஆன்மா காலக்கழிவினாலே தரைப்பட்டு மங்கிப் போகாமல், பற்று அறுத்து - [7] "வினைபற்று அறுக்கும்" என்கிறபடியே பேற்றிற்குத் தடையான கர்மங்களை அறுத்து, தண்டால் அடித்துப் பதர் அறுத்து - அறுத்த நெற்கதிர்களைத் தடியாலே அடித்துப் பதரும் மணியும் பிரிக்குமாறு போலே, [8] "அருள் என்னும் தண்டால் அடித்து" என்கிறபடியே தன்னுடைய அருளாகிற மிக்க திடமான கருவியாலே, நெல்லோடு ஒக்க விளைந்திருப்பதாய்ச் சாரம் இல்லாத பதர் போலே இருக்கிற ஆன்ம அநுபவத்தில் ருசியை அறுத்து;

---

1. திருவாய். 9. 6: 8.
2. திருவாய். 9. 6: 7.
3. திருவாய். 10. 7: 1.
4. திருவாய். 10. 10: 6.
5. திருவாய். 2. 9: 2.
6. பெரியதிருமடல், 89.
7. பெரியதிருமொழி, 11. 4: 9.
8. பெரியதிருவந்தாதி, 26



போர்த்த தோல் விடுத்து - அந்நெல்லில் உமியை விடுவிக்குமாறு போலே, [1] "போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பு இவை பேர்த்து" என்கிறபடியே ஆன்மாவினைப் பொதிந்து கொண்டு கிடப்பதாய், [2] ஆதி வியாதிகளுக்கும் [3] அறுவகையான விகாரங்களுக்கும் அடியான தூலசரீரத்தினை விடுவித்து, சூக்ஷ்ம ஒட்டும் நீரிலே கழுவி-பின்னர் அரிசியைத் தவிடு அறக் கழுவுமாறு போலே, தூல சரீரம் கழிந்தாலும் தான் கழியாது பிறப்பு இறப்புக்களிலே உழன்று திரிவதற்குக் காரணமாய்க் கொண்டு போந்ததாய், பகவானுடைய அநுபவத்துக்கு விரோதியுமாய் இருக்கச் செய்தே, விரஜை நதி வரையிலும் செல்லுதற்குச் சாதனமாகக் கிடந்த சூக்ஷ்ம சரீரத்தையும், [4] "அந்த விரஜையின் தண்ணீரைத் தொட்ட அளவினாலே" என்கிறபடியே விரஜை நதியின் தண்ணீரின் பரிசத்தாலே வாசனை அணுக்களோடே போக்கி, "நல்வினை தீவினைகளின் சம்பந்தம் அறுகையாலே சூக்ஷ்மசரீரம் இருப்பதற்குக் காரணம் இல்லாமையாலே இங்கே கழிந்து விடலாமாயினும், விரசை வரையிலும் இவன் செல்லுவதற்குச் சாதனமாக ஈச்வரன் தன் இச்சையாலே வைத்து, விரஜையில் உள்புக்கவாறே கழித்து விடுகிறான் என்றே அன்றோ நம் ஆசாரியர்கள் அருளிச் செய்வது. சூக்ஷ்ம சரீர சம்பந்தம் கிடக்குமளவும் வாசனையின் அணுவும் கிடக்கையாலே அதுவும் அப்போதாயிற்று நீங்குவது. "விரஜையைச் சென்று கிட்டியவன் சேற்று அள்ளலையும் வாசனாரேணுவையும் கழுவி" என்றார் [5] அர்ச்சிராதியில் இவர் திருத்தமையனாரும். வேறு ஓர் கலத்து இட்டு - [6] "சீரார் தயிர் கடைந்து வெண்ணெய் திரண்டதனை, வேரார் நுதல் மடவாள் வேறு ஓர் கலத்திட்டு" என்கிறபடியே தூல சூக்ஷ்ம வடிவமான சரீரத்தில் நின்றும் பிரித்து வாங்கின இவ் ஆன்மாவை அமாநவனுடைய கையின் பரிசத்தாலே பிரகிருதி சம்பந்தம் இல்லாத சரீரத்திலே புகுவித்து;

---

1. திருவாய். 7. 5: 10.
2. ஆதிவியாதி-மனத்தின் நோயும், சரீர நோயும்.
3. உண்டாதல், பிறத்தல், வளர்தல், பெருத்தல், குறைதல், நசித்தல் என்பனவாம்.
4. "தத்தோயஸ்பர்ஶமாத்ரேண" என்பது, பிரமாணம்.
5. அர்ச்சிராதி என்பது, பதினெட்டு ரகஸ்யங்களில் ஒன்று. திருத்தமையனார்-பிள்ளை லோகாசாரியர்.
6. சிறியதிருமடல், 30.

பைங்தொடி மடந்தையரைக் கொண்டு - [1] "அணைவர் போய் அமர் உலகில் பைங்தொடி மடந்தையர்தம் வேய்மருதோளிணை" என்கிறபடியே [2] "அந்த முக்தனை ஐந்நூறு தேவமாதர்கள் எதிர் கொள்ளுகிறார்கள், நூறு பெண்கள் மாலைகளைக் கையில் ஏந்தினவர்களாய், நூறு பெண்கள் அஞ்சனத்தைக் கையில் ஏந்தினவர்களாய், நூறு பெண்கள் ஸ்ரீசூர்ணம் ஏந்தினவர்களாய், நூறுபெண்கள் வஸ்திரங்களைக் கையில் ஏந்தினவர்களாய், நூறுபெண்கள் திரு ஆபரணங்களைக் கையில் ஏந்தினவர்களாய் அந்த முக்தனை பிரம்மாலங்காரத்தால் அலங்கரிக்கிறார்கள்" என்கிறபடியே எதிர் கொண்டு தங்கள் கைகளாலே இம்முக்தனுக்கு பிரம்மாலங்காரத்தைச்செய்து உபசாரம் செய்கின்ற தேவமாதர்களைக் கொண்டு தன்னுடைய இன்பத்துக்குத் தகுதியாம்படி அலங்கரிப்பித்து;

ஷட்குண ரச அன்னமாக்கி - [3] "தன்னுடைய சொரூபத்தோடு தோன்றுகிறான்" என்கிறபடியே தன்னுடைய சொரூபத்தின் தோற்றம் பிறந்து, முன்பு மறைந்து கிடந்த ஆன்மகுணங்கள் எல்லாம் விளங்கத் தோன்றுகிற இவ் ஆன்மாவினை, ஞானம் முதலான ஆறு குணங்களாகிற அறுசுவையோடு கூடியதாக [4] "அஹமந்நம்" என்கிற அன்னமாம்படி அவர்கள் கரத்தாலே பக்குவமாக்கி. என்றது, அடிமைப்பொருளான ஆன்மாவிடத்திலே உள்ள ஞானம் சக்தி முதலான ஆறு குணங்களும், தலைவனுடைய அனுபவத்திற்கு உறுப்பாகையாலே இக் குணங்களோடே கூடி "அஹமந்நம்" என்றிருக்கும் இவ் ஆன்மா, அவனுக்கு அறுசுவை அடிசிலாக அன்றோ இருப்பது என்றபடி.

வானோர்க்கு ஆரா அமுது ஆனவாறே - [5] "வானோர்க்கு ஆராவமுதே" என்கிறபடியே [6] "வைகுந்தன்தமர் எமர் எமதிடம்புகுது"

---

1. திருவாய். 10. 2: 11.

2. "தம் பஞ்ச சதாந்யப்ஸரஸாம் ப்ரதிதாவந்தி சதம் மாலா ஹஸ்தா:, தம் ப்ரஹ்மாலங்காரேணாலங்குர்வந்தி"
என்பது, கௌஷீதகி, 1: 35.

3. "ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே"
என்பது, சாந்தோக்ய உப.

4. "அஹமந்நம்-நான் பரமாத்விற்கு இன்பத்தைத் தருகின்றவன்"
என்பது, தைத்திரீயோப நிடதம்.

5. திருவாய். 5. 7: 11. 6. திருவாய். 10. 9: 9.



என்பது, [1] "விதிவகை புகுந்தனர்" என்பதாய், [2] "பதியினில் பாங்கினில் பாதங்கள் கழுவினர்" என்பது போன்ற திருப்பாசுரங்களில் கூறப்படுகின்றவாறே ஆதரிக்கும் நித்திசூரிகளுக்கு மிக மிக இனிய பொருள் ஆனவாறே, முற்றும் உண்ண - [3] "என்னை முற்றும் உயிர் உண்டு" என்கிறபடியே இவ் உயிரை முழுவதும் அநுபவிப்பதாக, முன்னம் பாரித்து - [4] "என்னில் முன்னம் பாரித்து" என்கிறபடியே இவ்உயிருக்கு ருசிபிறப்பதற்கு முன்னரேயே பாரித்து;

[5] உழுவது ஓர் நாஞ்சில் கொண்டு - [6] "உழுவதோர் படையும்" என்றும், [7] "ஒற்றைக் குழையும் நாஞ்சிலும்" என்றும் கூறப்படுகின்றபடியே இவன் பயிர் இடுவோன் என்று தோற்றும்படி பயிர்த்தொழிலுக்கு வேண்டிய கருவியைக் கையிலே கொண்டு, பெருக முயலும் - [8] "அரியது எளிதாகும் ஆற்றலால் மாற்றி, பெருக முயல்வாரைப் பெற்றால்" என்கிறபடியே அரிதான தன் திருவடிகளைப் பெறுதலும் எளிதாம்படி இவ்உயிர் உய்வு பெறுதற்கு மிக்க முயற்சியைச் செய்யும் தன்மையனாய், பத்தி உழவன் - [9] "பத்தி உழவன்" என்கிறபடியே இவ் உயிருக்குத் தன் விஷயத்தில் பக்தியை விளைக்கைக்கு வேண்டிய செயலைச் செய்து திரியும் சர்வேச்வரனுடைய, கிருஷிபலமிறே - முயற்சியின் பலம் அன்றோ, இவ் ஆழ்வார்க்கு உண்டான இந்தப் பக்தி என்றபடி. இதனால் பகவானுடைய செயலே இவருக்குப் பக்தி உண்டானதற்குக் காரணம் என்றதாயிற்று. (18)

## 105

[10] *கோசல கோகுல சராசரம் செய்யும் குணம் ஒன்றின்றியே அற்புதம் என்னக் கண்டோம்.*

என்பது சூத்திரம்.

---

1. திருவாய். 10. 9: 10. 2. திருவாய். 10. 9: 10.

3. திருவாய். 10. 7: 3. 4. திருவாய். 9. 6: 10.

5. இதற்கு மேல் உள்ளன வெல்லாம், சர்வேச்வரனைப் பயிர்த்தொழில் செய்யும் உழவனாக உருவகம் செய்வனவாம்.

6. பெரியாழ்வார் திருமொழி, 4. 7: 5.

7. பெரிய திருமொழி, 8. 8: 8. 8. இரண்டாந் திருவந். 22

9. நான்முகன் திருவந். 23.

10. இச்சூத்திரத்தை, கோசல சராசரம் ஒன்றின்றியே என்னக் கண்டோம் என்றும், கோகுல சராசரம் செய்யும் குணம் அற்புதம் என்னக் கண்டோம் என்றும் கூட்டி முடிக்க.

**வியாக்:-** இப்படி இத்தலையில் ஒருநன்மையும் இல்லாதிருக்கச் செய்தே, ஈச்வரனுடைய செயல் பலிக்கக் கண்ட இடம் உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, கோசல சராசரம் ஒன்றின்றியே [1] "அருளாகிய அமுதக்கடலே! புலவர்கள், தேவரீரை ஞானயோகம் கர்மயோகம் பக்தியோகம் என்னும் இவைகளால் அடையத் தகுந்தவனாயும் மற்றைய வழிகளால் அடைய முடியாதவனாகவும் சொல்லுகிறார்கள்; வரதனே! உத்தரகோசல தேசத்தில் உள்ள உயிர்கள் புற்களோடு கூட மேற்கூறிய உபாயங்களுள் எந்த உபாயத்தினால் தேவரீரை அடைந்தன?" [2] "அயோத்தியில் வாழும் சராசர முற்றவும் - ஒன்றின்றியே நற்பாலுக்கு உய்த்தனன்" என்று சொல்லுகிறபடியே திருவயோத்யை முதலான கோசல தேசத்தில் வாழ்கின்ற சராசரங்கள் எல்லாம் யாதொரு காரணமும் பற்றாமல், என்னக் கண்டோம் - [3] "இராமன் அரசாளும் காலத்தில் மக்களுக்கு இராமன் இராமன் இராமன் என்பதாகவே எல்லாவார்த்தைகளும் உண்டாயின; உலகமும் இராமனுடைய சொரூபமாகவே ஆயிற்று" என்றும், [4] "சக்கரவர்த்தியே! உம்முடைய தேசத்தில் மரங்களும் இராமபிரானைப் பிரிந்த துக்கத்தால் மலர் அரும்பு மொட்டு இவைகளோடு கூட மிக வாடி வதங்கிக் கருகி உலர்ந்தன" என்றும், "ஆறுகளும் இராமபிரானுடைய பிரிவின் துக்கத்தாலே கரைஅருகும் கூடக் கிட்ட ஒண்ணாதபடி அதிகமாகக் கொதிக்கின்ற தண்ணீரை உடையவைகளாக ஆயின; சிறுகுட்டைகளும் பெரியகுளங்களும் அங்ஙனமே ஆயின; காடுகளும் தோட்டங்களும் எங்கும் ஒக்க உலர்ந்த இலைகளையுடையனவாக

1. த்வாமாமநந்தி கவய: கருணாம்ருதாப்தே
ஜ்ஞாந க்ரியா பஜந லப்ய மலப்ய மந்யை:
ஏதேஷு கேந வரதோத்தர கோஸலஸ்தா:
பூர்வம் ஸதூர்வமபஜந்தஹி ஜந்தவஸ்த்வாம்.
என்பது, வரதராஜஸ்தவம், 69.

2. திருவாய். 7. 5: 1.

3. ராமோ ராமோ ராமஇதி ப்ரஜாநாமபவந் கதா:
ராமபூதம் ஜகதபூத் ராமே ராஜ்யம் ப்ரசாஸதி.
என்பது, ஸ்ரீராமா. யுத். 131: 96.

4. அபிவ்ருக்ஷா: பரிம்லாநா: ஸபுஷ்பாங்குர கோரகா:
விஷயேதே மஹாராஜ ராம வ்யஸந கர்சிதா:
உபதப்தோதகா நத்ய: பல்வலாநி ஸராம்ஸிச
பரிசுஷ்க பலாசாநி வநாநி உபவநாநிச.
என்பன, ஸ்ரீராமா. அயோத். 59: 4. 5.



ஆயின" என்றும், [1] "எல்லா மரங்களும் காலம் அல்லாத காலத்திலும் பழங்களையுடையனவாகவும், பெருக்கு எடுக்கின்ற தேன்களையுடையனவாகவும்" என்றும் வருவன போன்றவைகளாலே தன்னுடைய சேர்க்கையால் சுகத்தையும் தன்னுடைய பிரிவால் துக்கத்தையும் அடைதல் ஆகிற நல்ல தன்மையையுடையவாம்படியைக் கண்டோம்.

கோகுல சராசரம் செய்யும் குணம் - ஆயர்பாடியில் உண்டான சராசரங்கள் எல்லாம் [2] "அவன் ஒருவன் குழல் ஊதினபோது, மரங்கள் நின்று மது தாரைகள் பாயும் மலர்கள் வீழும் வளர் கொம்புகள் தாழும், இரங்கும் கூம்பும் திருமால் நின்ற நின்ற பக்கம் நோக்கி அவை செய்யும் குணமே" என்றும், [3] "மருண்டு மான் கணங்கள் மேய்கை மறந்து மேய்ந்த புல்லும் கடைவாய் வழிசோர, இரண்டு பாடும் துலுங்காப் புடைபெயரா எழுது சித்திரங்கள் போல நின்றனவே" என்றும், [4] "பறவையின் கணங்கள் கூடுதுறந்து வந்து சூழ்ந்து படுகாடு கிடப்ப, கறவையின் கணங்கள் கால் பரப்பிட்டுக் கவிழ்ந்து இரங்கிச் செவியாட்ட கில்லாவே" என்றும், [5] "கோவலர் சிறுமியர் இளங்கொங்கை குதுகலிப்ப உடலுள் அவிழ்ந்தெங்கும், காவலும் கடந்து கயிறு மாலையாகி வந்து கவிழ்ந்து நின்றனரே" என்றும் சொல்லுகிறபடியே அறிவு நடையாட்டமில்லாத மரங்களோடு அறிவு சிறிதேயுடைய திரியக்குகளோடு விசேடமான அறிவினையுடைய மக்கட் சாதியினரான சிறு பெண்களோடு வேற்றுமை அற ஒரு காரணமும் பற்றாது பகவானிடத்துண்டான அன்பினால் பரவசப்பட்டமை கண்டு, அற்புதம் என்னக் கண்டோம் - [6] "நங்கைமீர்கள் இது ஓர் அற்புதம் கேளீர்" என்று ஈடுபட்டவர்களாய்ப் பெரியோர்கள் சொல்லும்படியாகக் கண்டோம்.

இதனால் பகவான் ஒருகாரணமும் பற்றாமல் செய்யும் அங்கீகாரம் இப்படிப் பலிக்கக் காண்கையாலே, ஆழ்வாருடைய பக்தியும் பகவான் யாதொரு காரணமும் பற்றாமல் செய்கின்ற செயலின் பலன் என்னத் தட்டு இல்லை என்றதாயிற்று. (19)

1. "அகால பலிநோ வ்ருக்ஷா: ஸர்வேசாபி மதுஸ்ரவா:"
என்பது, ஸ்ரீராமா. யுத். 127: 17.

2. பெரியாழ்வார்திருமொழி, 3.6:10. 3. பெரியாழ்வார்திரு. 3.6:9.

4. பெரியாழ்வார்திரு. 3. 6: 8. 5. பெரியாழ்வார்திரு. 3. 6: 1.

6. பெரியாழ்வார்திரு. 3. 6: 1.

## 106

> [1] பட்டத்துக்குரிய ஆனையும் அரசும் செய்யுமவை
> ஆராயாது.

என்பது சூத்திரம்.

**வியாக் :—** ஆயின், காரணம் ஒன்றும் இன்றியே அங்கீகரிக்குமளவில் எல்லோரையும் அங்கீகரிக்க வேண்டுமே ? இங்ஙனே இவர் ஒருவரை மட்டும் அங்கீகரிக்கைக்கு அடி என் ? என்ன, தடை இல்லாத சுதந்திரத்தையுடையனான சர்வேச்வரன் ஈச்வரத்தன்மையாகிற செருக்காலே செய்யுமவற்றுக்கு அடி ஆராயப்படாது என்று அதற்கு விடை கூறத் திருவுள்ளம்பற்றி, உலகில் வழங்குகிற ஓர் எடுத்துக்காட்டு மூலம் அதனை விளக்குகிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, பட்டத்துக்கு உரிய ஆனை செய்யுமது ஆராயாது - [2] அரசன் இல்லாத தேசத்திலே பட்டத்துக்கு உரிய யானையைக் கண்களைக் கட்டிவிட்டால் அவ்யானையால் எடுக்கப்பட்டவன் ஒருவன் அரசன் ஆமளவில், மற்றையோர் எல்லாம் கிடக்க, இவனை இப்படி எடுக்கைக்கு அடி என் ? என்று ஆராய்வார்இலர். அரசுசெய்யுமது ஆராயாது - அரசனானவன் தன்செருக்காலே ஒரு பெண்ணைத் தனக்குத் தேவியாக ஏற்றுக்கொள்ளுமளவில், இவளைப்போன்ற பெண்கள் பலரும் உளராக இருக்க, இவளை இப்படி இவ்வரசன் ஏற்றுக்கொள்ளுகைக்கு அடி என்? என்று ஆராய்வார் இலர்.

இதனால் என்சொல்லியவாறோ ? எனின், [3] "இறைவன் ஈச்வரனாக இருப்பதால் அவன் சுவாதந்திரியம் 'இதனை ஏன் செய்தாய், இதனை ஏன் செய்யவில்லை' என்று ஒருவராலும் கேட்கத் தகுந்தது அன்று" என்கிறபடியே ஒரு தடையும் இல்லாத ஈச்வரத்தன்மையாகிற சுவாதந்திரியத்தையுடையனாய், "ஸ்ரீரங்கநாதனே ! ஒருவன் தேவரீராலேயே பிறவிக்கும் மோக்ஷத்திற்கும் உரியவனாகச் செய்யப்படுகிறான்; தேவரீரே காத்தருள வேண்டும்" என்கிறபடியே தனக்கு உரிமைப்பட்டனவான இவ் உலகவாழ்க்கையினையும் மோக்ஷத்தையும் உடையவனாகையாலே வேண்டினபோது வேண்டப்பட்ட ஒருபொருளை வேண்டினபடி ஆக்கவல்லனான சர்வேச்வரன், காரணம் இன்றிக்கே இருக்க, எல்லோருடைய விருப்பத்துக்கும் விஷயமாம்படி பட்டத்துக்குரிய யானையும் அரசனும் செய்யுமவைபோல, தனக்கு உரிமைப்பட்டனவுமாய் தன்பொருட்டு இருப்பனவுமான இவ் ஆன்மாக்களிலே ஒரொன்றனை ஈச்வரனும் தன்மையாகிற செருக்குக் காரணமான தன்இச்சையாலே தன்னுடைய உபயோகத்துக்குத் தகுதியாம்படி அங்கீகரித்தால், மற்றைய ஆன்மாக்கள் எல்லாம் கிடக்க இவ்ஆன்மாவினை இவன் இப்படி அங்கீகரிப்பான் என் ? என்று இதற்கு அடி ஆராயப்படமாட்டாது என்பது சொன்னபடி. (20)

1. கழுமலத்து யாத்த களிறும் கருவூர்
விழுமியோன் மேற்சென் றதனால் - விழுமிய
வேண்டினும் வேண்டா விடினும் உறற்பால
தீண்டா விடுதல் அரிது.

என்ற செய்யுளின் பொருள் இங்கு அறிதல்தகும்.

2. "ஸ்வாதந்த்ர்யமைஶ்வரமபர்யநுயோஜ்யமாஹு:" என்பது, ஸ்ரீவைகுண்டஸ்தவம், 55.

3. "பவமோக்ஷணயோ: த்வயைவஜந்து: க்ரியதே" என்பது, ஸ்ரீரங்கராஜஸ்தவம் உத்தரசதகம், 88.



## 107

> [1] முந்நீர், வாழ்ந்தார், சூட்டும், கோவை, ஆழி
> என்கிற சாக்ஷாத்க்ருத ஸ்வ பர விருத்தாந்தர்க்கு,
> யாத்ருச்சிகாதிகள் உண்டாகில் தோன்றும்.

என்பது சூத்திரம்.

**வியாக் :—** நன்று; இறைவன் இவரை அங்கீகரிப்பதற்கு இவர் அறிந்து செய்த புண்ணியங்கள் இவரிடத்து இல்லையேயாயினும், இவர் அறியாமலேயே [2] யாத்ருச்சிகம், பிராசங்கிகம் என்பனவாகச் சொல்லப்படுகின்ற சில புண்ணிய விசேடங்கள் இவரிடத்து உளவாகவிருக்க அவை அடியாக இறைவன் இவரை அங்கீகரித்தான்

1. சாக்ஷாத்க்ருத - கண்கூடாகக்கண்ட. ஸ்வபர விருத்தாந்தர்க்கு - தம்முடைய பிறருடைய செயல்களையுடையவர்; அதாவது தம்முடைய செயல்களையும் பிறருடைய செயல்களையும் அறிந்தவர் என்றபடி. ஈண்டு, 'பர' என்ற சொல், பிறரையும் இறைவனையும் காட்டுகிறது.

2. யாத்ருச்சிகமாவது, ஒருவன் சூது சொக்கட்டான் ஆடுதற்குக் கட்டிவைத்த புறத்திண்ணையில், மழையில் நனைந்து வரும் ஓர் அடியவர் ஒதுங்கிப் போக, அதுகாரணமாக 'என்னடியார்க்கு ஒதுங்க நிழலைக் கொடுத்தான்' என்பது போன்ற சிலவற்றை ஈச்வரன் தானே எறிட்டருளும் சேதனன் அறியாத புண்ணியமாம்.

பிராசங்கிகமாவது, கொலையும் களவும் செய்து திரிவான் ஒரு கொடியன் திருடிக் கொண்டுவந்து 'திருவரங்கத்து அரிசி' என்று விற்க, அது காரணமாக, 'திருவரங்கம் என்று என் ஊரைச் சொன்னான்; அரிசி என்று ஸ்ரீய: பதியாகிய என் பெயரைச் சொன்னான்' என்பது போன்ற சிலவற்றை ஈச்வரன் தானே எறிட்டருளும் சேதனன் அறியாத புண்ணியமாம்.

என்றாலோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, முந்நீர் என்கிற ஸ்வ விருத்தாந்தர்க்கு - [1] "முந்நீர் ஞாலம் படைத்த எம் முகில் வண்ணனே" என்று தொடங்கும் திருப்பதிகத்தில் [2] "சர்வேச்வரனை வணங்கும் பொருட்டுக் கைகால் முதலிய உறுப்புக்களுடன் கூடின இச்சரீரம் முற்காலத்தில் நமக்குக் கொடுக்கப்பட்டது" என்கிறபடியே இறைவனாகிய தன்னுடைய திருவடித்தாமரைகளை அடைவதற்குக் கருவியான இச் சரீரத்தை இவ் ஆன்மாவிற்கு உண்டாக்கி மோக்ஷத்தினை அடைவித்தல் ஒன்றனையே பிரயோஜனமாகக் கொண்டு உலகத்தினைப் படைக்க, நான் அவன் தந்த சரீரத்தைக் கொண்டு அவனை அடையாமல் அதன் வழியே ஒழுகிப் பிறந்து இறந்து உழன்று போந்தேன் என்று தம்முடைய செயல்களையும், வாழ்ந்தார் என்கிற பர விருத்தாந்தர்க்கு - "ஒரு நாயகமாய்" என்ற திருப்பதிகத்தில் [3] "வாழ்ந்தார்கள் வாழ்ந்தது" என்று தொடங்கி முன்பு வாழ்ந்தவர்கள் வாழ்ந்த வகை மாமழையில் தோன்றுகிற மொக்குளைப் போன்று நசித்து நசித்து ஆழ்ந்தார்கள் என்னுமதொழியப் படைப்புக்காலம் முதல் இன்று அறுதியாக வர வாழ்ந்தவர்கள் ஒருபடிப்பட வாழ்ந்தே போந்தார்கள் என்னும் இப்பொருள் தானும் இல்லை என்று செல்வவான்களாய் முன்பு வாழ்ந்து போந்தவர்களுடைய செயல்களையும்,

சூட்டும் - திருவிருத்தத்தில் [4] "சூட்டு நன்மாலைகள் தூயன ஏந்தி விண்ணோர்கள் நன்னீர், ஆட்டி அம் தூபம் தராநிற்கவே அங்கொர் மாயையினால், ஈட்டிய வெண்ணெய் தொடு உண்ணப் போந்து இமில் ஏற்று வன் கூன், கோட்டிடை ஆடினை கூத்து அடல் ஆயர் தம் கொம்பினுக்கே" என்கிறபடியே பரமபதத்தில் உளளவர்கள் சமாராதனம் செய்தற்குரிய பொருள்களைத் தரித்துக்கொண்டு சமாராதனம் செய்து கொண்டிருக்கையிலேயே அதனை வெறுத்துத் திருவாய்ப்பாடியில் வெண்ணெயை விரும்பி வந்து அவதரித்தமையைச் சொல்லுகையாலே பரமபதத்தில் உள்ளார் செயலையும்,

1. *திருவாய். 3. 2: 1.*
2. *விசித்ரா தேஹ ஸம்பத்தி: ஈச்வராய நிவேதிதும் பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந் ஹஸ்தபாதாதி ஸம்யுதா.* *என்பது, விஷ்ணுதத்வம்.*
3. *திருவாய். 4. 1: 6,* 4. *திருவிருத்தம், 21.*



கோவை - [1] "கோவை வாயாள் பொருட்டு ஏற்றின் எருத்தம் இறுத்தாய்! மதிள் இலங்கை, கோவை வீயச் சிலை குனித்தாய்! குலநல் யானை மருப்பொசித்தாய்!, பூவை வீயா நீர் தூவிப் போதால் வணங்கேனேலும் நின், பூவை வீயாம் மேனிக்குப் பூசும் சாந்து என் நெஞ்சமே" என்கிற திருப்பாசுரத்தில் தேசத்தாலும் காலத்தாலும் சேய்மையவான இராம கிருஷ்ண அவதாரங்களில் பகைவர்களை அழித்தலான பெரும் செயல்களை அந்த அந்தத் தேசகாலங்களிற் காண்பது போலவே கண்டு, நீ இப்படிப் பகைவர்களை அழிக்கின்ற நிலைகளிலே உதவி செய்து சிரமபரிகாரம் செய்யப் பெற்றிலேனாகிலும், என்னுடைய நெஞ்சு முதலான உறுப்புக்களே உன்னுடைய போகத்துக்குக் கருவியாம்படி என் பக்கல் காதல் உடையனாவதே! என்கையாலும்,

ஆழி - [2] "ஆழி எழச் சங்கும் வில்லும் எழ" என்ற திருப்பதிகத்தில் மூன்றடி அளத்தல், கடல் கடைதல், பூமியை எடுத்து நிறுத்துதல், உலகினை உண்டல், பாரதப்போரினை நடத்தல், இரணிய வதம், இராவணவதம், வாணனுடைய கரங்களைத் துண்டித்தல், உலகினைப் படைத்தல், கோவர்த்தன மலையை எடுத்துப் பிடித்தல் ஆகிற முன்னைய சரிதங்களைப் பத்தும் பத்தாகப் பேசுகையாலும்,

என்கிற சாக்ஷாத்கிருத பர விருத்தாந்தர்க்கு - சர்வேச்வரன் செய்த செயல்களையும் ஒரு தடையும் இல்லாமல் ஒரு போகியாக அறிந்து அருளிச்செய்கிற இவர்க்கு, யாத்ருச்சிக ஆதிகள் உண்டாகில் தோன்றும் - அறியாதது ஒன்று இல்லாமையாலே தம்மைச் சர்வேச்வரன் அங்கீகரிக்கைக்கு அடியான யாத்ருச்சிகம் முதலான புண்ணியங்கள் உண்டாகில் மற்றையவை போன்று இவையும் விளங்கும் என்றபடி.

விளங்கியிருந்தால் அருளிச் செய்வர்; அப்படி அருளிச்செய்யக் காணாமையாலும் வெறிதே அருள் செய்தமையை விளக்குகின்ற [3] வசனங்கள் பலவும் அருளிச்செய்யக் காண்கையாலும் அவையும் இவர்க்கு இல்லை என்றதாயிற்று. (21)

1. *திருவாய். 4. 3: 1.* 2. *திருவாய். 7. 4: 1.*
3. *'வசனங்கள் பலவும்' இவற்றை மேலே காண்க.*

## 108

[1] செய்த நன்றி தேடிக் காணுதே "கெடுத்தாய்" "தந்தாய்" என்ற அத்வேஷ ஆபிமுக்யங்களும் சத்கர்மத்தால் அல்ல.

என்பது சூத்திரம்.

வியாக் :— இப்படி இறைவனுடைய அங்கீகாரத்திற்குக் காரணமாய் இருப்பது ஒரு நல்வினை இவரிடம் இல்லையேயாகிலும் இவரிடமுள்ள அத்வேஷ ஆபிமுக்யங்கள் நல்வினை காரணமாக வந்தனவானுலோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

அதாவது, செய்த நன்றி தேடிக் காணுதே - [2] "வாட்டாற்றுற்கு எந்நன்றி செய்தேனு என் நெஞ்சில் திகழ்வதுவே" என்கிறபடியே சர்வேச்வரன் தம்மை அங்கீகரிக்கைக்கு உடலாகத் தாம் செய்த நல்வினை யாதேனும் உண்டோ? என்று தேடிக் காணுமல், கெடுத்தாய் என்ற அத்வேஷமும் தந்தாய் என்ற ஆபிமுக்யமும் - [3] "என்னைத் தீமனம் கெடுத்தாய்" என்கிறபடியே தீமனம் போகையாகிற அத்வேஷமும், [4] "மருவித் தொழும் மனமே தந்தாய்" என்கிறபடியே மருவித்தொழும் மனம் உண்டாகையாகிற ஆபிமுக்யமும், சத்கர்மத்தால் அல்ல - ஆகிற இரண்டும் அவனுலே உண்டாயின என்று தாமே அறுதியிட்டு உரைக்கையாலே அத்வேஷமும் ஆபிமுக்கியமும் நல்வினை காரணமாக வந்தன அல்ல என்கை. (22)

## 109

[5] எண்ணிலும் வரும் கணனைக்கு "எண்தானும்" இல்லை.

என்பது சூத்திரம்.

வியாக் :— ஆயின், இறைவன் பரமபக்திக்கு முகம் காட்டுவது போன்று, எண்ணுகைக்கும் முகம் காட்டுவான் என்று இவர் தாமே அருளிச்செய்கையால் அந்த எண்ணுகைதான் இவர்க்கு உண்டாக அது காரணமாக இவர்க்கு இறைவன் அருள் செய்தான் என்ருல் என்ன? என, அதற்கு விடை அருளிச் செய்கிருர் இச் சூத்திரத்தால்.

அதாவது, எண்ணிலும் வரும் கணனைக்கு - [1] "எண்ணிலும் வரும் என்னினி வேண்டுவம்" என்றது, எம்பெருமானுடைய குணப் பெருமை கூறியதித்தனை போக்கி, அந்த எண்ணுகைதானும் தம்மிடத்தில் இல்லை என்பதனைக் கண்டு, எண்தானும் இல்லை - [2] "நெஞ்சே! கருமங்கள் வாய்க்கின்று ஓர் எண்தானும் இன்றியே வந்தியலுமாறு - கண்டாயே" என்கிறபடியே காரியங்கள் பலிக்குமிடத்து "எண்ணிலும் வரும்" என்றது மிகையாம்படி ஓர் எண் தானும் இன்றி இருக்கச்செய்தே பலித்துக் கொடு நிற்கிறபடி கண்டாயே என்று தம் திருவுள்ளத்திற்கு மூதலிக்கையாலே அதுவும் இவர்க்கு இல்லை என்றபடி. (23)

## 110

[3] "மதியால் - இசைந்தோம்" என்னும் அநுமதி இச்சைகள் "இருத்துவம்" என்னுத என்னை இசைவித்த என் இசைவினது.

என்பது சூத்திரம்,

வியாக் :— அது தான் வேண்டுமோ? [4] "வைத்தேன் மதியால் எனதுள்ளத் தகத்தே" என்றும், [5] "யானும் என்நெஞ்சும் இசைந் தொழிந்தோம்" என்றும் தமக்கு அநுமதியும் இச்சையும் உளவாக இவர் தாமே அருளிச்செய்கையால் அவை காரணமாக இறைவன் இவரை அங்கீகரித்தான் என்ருல் என்னை? என, அவையும் அவனுலே தமக்கு உண்டாயின என்று இவர் தாமே அருளிச்செய்கையாலே அங்ஙனம் கூற ஒண்ணுது என்று அதற்கு விடை அருளிச் செய்கிருர் இச் சூத்திரத்தால்.

---

1. கெடுத்தாய் என்ற அத்வேஷமும், தந்தாய் என்ற ஆபிமுக்யமும் என்று கூட்டுக. அத்வேஷம்-வெறுப்பின்மை; மருவித்தொழும் மனத்தையுடையனுக இருத்தல். ஆபிமுக்யம் - எதிர்முகமாதல்; தீமனம் இல்லாதவனுக இருத்தல்.
2. திருவாய். 10. 6: 8. 3. திருவாய். 2. 7: 8.
4. திருவாய். 2. 7: 7.
5. கணனை - எண்ணுதல்.

---

1. திருவாய். 1. 10: 2. 2. திருவாய். 1. 10: 5.
3. மதியால் என்னும் அநுமதி என்றும், இசைந்தோம் என்னும் இச்சை என்றும் கூட்டுக. அநுமதி இச்சைகள் இசைவினது என்று முடிக்க. இசைவினது - இசைவுதானுக இருக்கின்ற இறைவனுடையது.
4. திருவாய். 8. 7: 10. 5. பெரியதிருவந்தாதி, 26.

அதாவது, மதியால் என்னும் அநுமதி - “வைத்தேன் மதியால் எனதுள்ளத்தகத்தே” என்று அநுமதி மாத்திரத்தாலே அவனை என் நெஞ்சுக்குள்ளே வைத்தேன் என்று தமக்கு உளதாகச் சொன்ன அநுமதியும், இசைந்தோம் என்னும் இச்சை - “யானும் என் நெஞ்சமும் இசைந்தொழிந்தோம்” என்று விரோதியைப் போக்கும்படியாக நானும் என்னெஞ்சமும் இசைந்தொழிந்தோம் என்று தமக்கு உளவாகச் சொன்ன இச்சையும்,

இருத்துவம் என்றது என்னை - [1] “யான் ஒட்டி என்னுள் இருத்துவம் என்றிலன்” அதாவது, அவன் தம்முள்ளே புகுந்திருப்பதாகக் கேட்ட அளவில் நான் இசைந்து என்னுடைய மனத்திலே இருத்துவேன் என்றிலேன் என்கிறபடியே அவனை உள்ளே இருத்துவோம் என்று இசையாத தம்மை, இசைவித்த என்இசைவினது - [2] “இசைவித்து என்னை” என்கிறபடியே வருந்தி இசையச்செய்து, [3] “என் இசைவினை” என்கிறபடியே நான் அல்லேன் என்று அகலாதபடி என் இசைவுதானாய்ப் புகுந்தவனை என்னும்படி முயற்சி செய்த சர்வேச்வரனுடைய செயலின் பலன் என்கை.

என்றது, அநுமதியும் இச்சையும் தமக்கு முன்னே உளவாக இருப்பின் “இருத்துவம் என்றிலன்” என்றும், “இசைவித்து என்னை” என்றும் அருளிச்செய்யக்கூடாதே அன்றோ என்பது கருத்து. (24)

### 111

[4] மாதவன் மலை நீர் நிழல் என்று ஏறிடுமது,
வியாவிருத்தியுக்தி, அந்யார்த்தம், அபுத்திபூர்வகம்,
அவிஹிதம், பலவிசத்ருசம், பலாந்தர ஹேது.
என்பது சூத்திரம்.

---

1. திருவாய். 1. 7: 7.　　2. திருவாய். 5. 8: 9.

3. திருவாய். 1. 7: 4.

4. மாதவன் மலை என்று ஏறிடுமது வியாவிருத்தியுக்தி என்றும், நீர் நிழல் என்று ஏறிடுமது அந்யார்த்தம் என்றும் கூட்டுக. வியாவிருத்தியுக்தி-வேறுபாட்டினை அறிவிக்கும் சொல். அந்யார்த்தம்-வேறு ஒன்றன் பொருட்டு. அபுத்திபூர்வகம்-நினைவின்றிக்கே சொல்லல். அவிஹிதம்-சாஸ்திரங்களால் விதிக்கப்படாதவை. பலவிஸத்ருசம்-பலனுக்கு ஒத்ததாகாதவை. பலாந்தரஹேது - வேறுசிறிய பலன்களுக்குக் காரணமாமவை.



வியாக் :— இவை ஒன்றும் இல்லையேயாகிலும் “மாதவன்” என்றும், “திருமாலிருஞ்சோலைமலை” என்றும் இவர் கூறிய வார்த்தைகளை மாத்திரம் பற்றாசாகக்கொண்டு ஈச்வரன் தம்மை அங்கீகரித்தானாக இவர்தாமே அருளிச்செய்திருக்கையால் அவற்றினைக் காரணமாகக் கூறினால் என்னை? எனின், அவை பேற்றுக்கு அடியாகச் சொல்லத்தக்கவை அல்ல என்னுமிடத்தை மற்றும் அவற்றோடு ஒருசேர எண்ணத்தக்கனவற்றையும் சேர்த்துக்கொண்டு அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, மாதவன் என்று - [1] “மாதவன் என்றதே கொண்டு என்னை இனி இப்பாற்பட்டது, யாதவங்களும் சேர்கொடேன் என்று என்னுள் புகுந்திருந்து, தீது அவம் கெடுக்கும் அமுதம்” என்கிறபடியே, அந்தப்புரத்தில் வசிக்கிறவர்கள் சொல்லும் ‘மாதவன்’ என்னும் திருப்பெயரை மனத்தொடு படாமல் சொன்ன அளவிலே அதனையே குவாலாகக் கொண்டு மற்றைத் திருப்பெயர்கட்கும் இதற்கும் வாசி அறியாத என்னை அங்கீகரித்து என்னுள்ளே புகுந்திருந்து எல்லாப்பாவங்களையும் போக்கினான் என்றும், மலை என்று - [2] “திருமாலிருஞ்சோலைமலை என்றேன் என்ன, திருமால் வந்து என் நெஞ்சு நிறையப் புகுந்தான்” என்கிறபடியே, ஒவ்வோர் தேசத்திலே மலைகளைச் சொல்லா நின்றால் ஒவ்வொரு விசேடத்தை இட்டுச் சொல்லுமாறு போன்று, யாத்ருச்சிகமாகத் “திருமாலிருஞ்சோலைமலை என்றேன்” என்ற வளவிலே தான் எழுந்தருளியிருக்கின்ற திருமலையின் பெயரை விரும்பிச் சொன்னேனாகக் கொண்டு ஒன்றனையும் வேண்டுதல் இல்லாத தான் பிராட்டியோடே கூட வந்து என்னுள் நிறையப் புகுந்தான் என்றும் சொல்லும்படி, ஏறிடுமது - மாதவன் என்று நம் பெயரைச் சொன்னான், திருமாலிருஞ்சோலைமலை என்று நம் ஊரைச் சொன்னான் என்றும் ஏறிடுமவைகள்,

---

மானத்து வண்டலுழ வோர் எழுத்தின் வடிவுற்ற சீர்
மானத் துவண்ட வினையாளராயினும் மால்வளர்வி
மானத்து வண்டலமா மரங்கம் வழியா வரினும்
மானத்து வண்டமர் தார் அண்டராம்பதம் வாய்க்கு மங்கே.

என்ற திருவரங்கத்தந்தாதியின் பொருளை ஈண்டுச் சிந்தித்தல் தகும்.

1. திருவாய். 2. 7: 3.

2. திருவாய். 10. 8: 1:

வியாவிருத்தியுக்தி - ஈச்வரன் உகந்த திருப்பெயர் என்றும் அவன் உகந்து வாழ்கின்ற திருமலை என்றும் சொன்னவை அல்ல; இப் பெயர்க்கும் மற்றைப்பெயர்க்கும், இம் மலைக்கும் மற்றைய மலைக்கும் வேறுபாடு சொன்ன அளவே.

நீர் நிழல் என்று ஏறிடுமது - மற்றும் இவற்றோடு ஒருசேரப் பேசப்படுமவையான 'என் அடியார் விடாயைத் தீர்த்தான், என்னடியார் ஒதுங்க நிழலைக் கொடுத்தான்' என்று ஏறிடுகிறவை, அந்யார்த்தம் - தன்பயிர் தீயாமைக்காக நீர் உள்ள இடத்தில் நின்றும் நெடும்துலையிட்டு இறைக்கிறதும், தனக்குச் சூது சதுரங்கம் பொருகைக்கும் காற்று வாங்குவதற்குமாக விரிவுண்டாகப் புறந்திண்ணை கட்டிவைக்கிறதும் ஒழிய, பாகவதர்கள் விடாயைத் தீர்க்கைக்கும் அவர்கள் ஒதுங்க நிழல் ஆகைக்கும் செய்கிறவை அல்லாமையாலே இவை வேறு ஒன்றனைக் கருதியவை.

அபுத்திபூர்வகம் - இவைதாம் இத்தனையும் இத்தலையில் நினைவின்றிக்கேயிருக்க, அவன் அடித்து ஏறிடுகிறவை ஆகையாலே புத்தி முன்னாகச் செய்கின்றவையும் அல்ல. அவிஹிதம் - இவைதாம் பலத்துக்குக் காரணங்களாகச் சாஸ்திரங்களிலே விதிக்கப்பட்டவையும் அல்ல. பலவிசத்ருசம் - பகவானாலே அங்கீகரிக்கப் படுதலாகிற மிகப்பெரிய பலத்துக்கு இவை ஒத்தவையும் அல்ல. பலாந்தரஹேது - இவை உளவாகில் இவ்வருகே வேறு சிறிய பிரயோஜனங்கள் சிலவற்றிற்குக் காரணமாமித்தனை. ஆகையால், இவை பகவானுடைய அங்கீகாரத்துக்குக் காரணம் ஆக மாட்டா என்றபடி.

நன்று; மேலே "யாத்ருச்சிகாதிகள் உண்டாகில் தோன்றும்" (சூத். 107) என்றதனோடு இச் சூத்திரத்தில் "மாதவன்மலை - ஏறிடுமது" என்று அவன் ஏறிடத்தக்கவை சில உளவாக இவருடைய வார்த்தைகளாலே கண்டெடுத்துக் கழிக்கிற இது முரண் ஆகாதோ? எனின், யாத்ருச்சிகாதிகள்தாம் பல வகைப்படும். மிகப் பெரியவைகளாய்ப் பெரியபெரிய பலன்களுக்கு உறுப்பாவனவாய் வந்து விழுவன சில; மிகச் சிறியவைகளாய் இருப்பன சில. அங்கே கூறியது மிகப் பெரியவைகளாய்ப் பெரிய பெரிய பலன்களுக்கு உறுப்பாக வந்து விழுவனவற்றை; இங்கே கூறியது மிகச் சிறியவைகளாய் அவனாலே ஏறிட்டுக்கொள்ளத் தக்கனவற்றை என்று இவ்வாறு வேறுபடுத்திக்கொள்ளும்போது முரண் ஆகாது என்க.





## 112

[1] இவன், நடுவே அடியான் என்று, ஓலைப்படாப் பிரமாணம், பக்ஷபாதி சாக்ஷி, வன்களவில் அநுபவமாக, இந்திர ஞாலங்கள் காட்டி, கொள்ள, காப்பார் அற்று விதி சூழ்ந்தது.

என்பது சூத்திரம்.

**வியாக் :—** ஆயின், இவரை இப்படி ஒருகாரணமும் இல்லாமல் அங்கீகரிப்பான் என்? என்ற வினாவிற்கு விடை அருளிச் செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, இவன் - இப்படி ஒன்றனை ஏறிட்டாகிலும் அங்கீகரிக்கும் இவன், நடுவே - [2] "நடுவே வந்து உய்யக் கொள்கின்ற நாதன்" என்கிறபடியே நாதன் ஆகையாலே ஒருகாரணமும் இல்லாமலே வந்து, அடியான் என்று - [3] "அடியான் இவன் என்று எனக்கு ஆரருள் செய்யும் நெடியான்" என்றும், [4] "நீ எனக்கு அடியவன் என்று இறைவன் சொல்ல" என்றும் வருகின்றவாறே இவன் என் அடியான் என்று மடிபிடிக்க, "நான் எனக்கே

---

1. இவன் - சர்வேச்வரன். ஓலைப்படாப் பிரமாணம் - வேதம். சாக்ஷி - பக்ஷபாதி என மாற்றுக.

2. திருவாய். 1. 7: 5. 3. திருவாய் 9. 4: 10. [ஞத்

4. த்வம்மே அஹம்மே குதஸ்தத் ததபிகுத: இதம் வேத மூலப்ரமாணத்ச்சாநாதி ஸித்தாதநுபவ விபவாத் ஸோபி ஸாக்ரோச ஏவ,
[ ஸ்யாத்
க்வாக்ரோச: கஸ்ய கீதாதிஷு மமவிதித: கோத்ரஸாக்ஷீஸுதீ:
ஹந்த த்வத் பக்ஷபாதீ ஸஇதி ந்ருகலஹே ம்ருக்யமத்யஸ்தவத்வம்·

என்பது, பட்டர் ஸ்ரீ சூக்தி.

ஒருநாள் ஓர் ஏகாதசியன்று திருவரங்கநாதன் திருமஞ்சனம் கண்டருள, அதனைச் சேவித்துக்கொண்டு அருகில் நின்றபட்டர் உத்பிரேக்ஷையாக அருளிச்செய்த சுலோகம் இது. இறைவன் இவ்வுயிரைப் பார்த்து 'நீ எனக்கு உரியவன்' என்ன, இவ்வுயிர், 'நான் எனக்கு உரியவனே அன்றி உனக்கு அடியவன் அல்லன்' என்று கூற, அதனைக் கேட்ட இறைவன், நீ உனக்கு உரியவன் என்று கூறுவது யாங்ஙனம் பொருந்தும்? என்ன, அதனைக்கேட்ட உயிர், நான் உனக்கு அடிமைப்பட்டவன் என்று நீ கூறுவது யாங்ஙனம் பொருந்தும்? என்ன, இறைவன் வேதவாக்கியங்களைக் கொண்டு கூறுகிறேன் என்ன, உயிர், தொன்று தொட்டுவருகின்ற என் அநுபவத்தைக்கொண்டு நான் கூறுகிறேன் என்ன, இறைவன், நீ சொல்லும் அநுபவத்திற்கு இடையில் தடை செய்யப்பட்டுள்ளதே? என்ன, உயிர், எங்கே? எப்பொழுது? என்ன, இறைவன், கீதை முதலிய

உரியவன்'' என்கிறபடியே இவர் அதற்கு இசையாமல் 'நீ என்னை உன் அடியான் என்றது எதனாலே?' என்ன, [1] "உலகத்துக்குத் தலைவன் இறைவன்" என்றும், [2] "பிரகிருதி உயிர்கள் என்னும் இவற்றுக்குத் தலைவன் இறைவன்" என்றும், [3] "சர்வேச்வரன் ஒருவனே பிரகிருதியையும் உயிர்களையும் ஏவுகிறான்" என்றும் வருகின்ற இன்னோரன்னவைகளாலே அறிவுடைப்பொருள் அறிவில்பொருள்கள் அடையத் தனக்கு அடிமை என்னுமிடத்தைச் சொல்லுகிற வேதத்தினை,இவரை இசைவிக்கைக்காக "இதற்குவேதம் பிரமாணம் ஆகையாலே" என்கிறபடியே இறைவன் காட்ட, ஓலைப் படாப் பிரமாணம்-அது எழுதாமறையாகையாலே அது ஓலைப்படாப் பிரமாணம் என்று இவர் அதனைத் தள்ளி, தொன்று தொட்டு வருகின்ற தம்முடைய அநுபவத்தை உறுதியாகக்கொண்டு நிற்க,

ஆட்சியிலும் பிரபலமான தொடர்ச்சியை அவன் முன்னிட்டவாறே, சாக்ஷி-அதற்கு சான்று யார் என்று இவர் கேட்க, "ஞானிகள்" என்கிறபடியே தத்துவங்களை உள்ளவாறு உணர்ந்த ஞானிகளை அவன் சான்றாகக் காட்ட, பக்ஷபாதி - "அவன் உன்னுடைய பக்ஷபாதி" என்கிறபடியே அவர்கள் உன்னிடம் வாரம் வைத்தவர்கள் என்று அதற்கும் இவர் கண்ணழிவு சொல்ல;

வன்களவில் அநுபவமாக-[4]"வன்கள்வனேன்" என்று, இறைவனாலே அங்கீகரிக்கப்பட்ட பின்னர், அநாதிகாலம் "நான் எனக்கு உரியவன்" என்றிருந்து போந்த அநுபவம், ஆன்ம அபகாரமாகிற வலிய களவாலே வந்தது என்று இவர் வருந்தும்படி, இந்திர

உபநிடதங்களிலே என்ன, உயிர், அதற்குச் சான்று யார்? என்ன, இறைவன், ஞானிகள் என்ன, உயிர், ஞானிகளா? அவர்கள் உன்னிடம் பக்ஷபாதம் உள்ளவர்கள் ஆயிற்றே? என்ன, அவ்வாறாயின், நீ எனக்கு அடியவன் என்பதற்கு நானே சூளுறவு செய்கிறேன் என்று சூளுறவு செய்வது போன்று இருக்கின்றது இறைவன் திருமஞ்சனம் கண்டருளி ஈரவாடையோடு திருத்துழாய் மாலையைத் தரித்துக்கொண்டு சேவை சாதிப்பது என்பது மேலேகாட்டிய சுலோகத்தின் பிண்டப் பொருள்.

1. "பதிம்விர்வஸ்ய"
என்பது, புருஷசூக்தம்.

2. "ப்ரதாந க்ஷேத்ரஜ்ஞபதி:"
என்பது சுவேதா உப.

3. "க்ஷராத்மாநாவீஶதேதேவ ஏக:"
என்பது, சுவேதா உப,

4. திருவாய். 5. 1: 4.



ஞாலங்கள் காட்டி - [1] "இந்திர ஞாலங்கள் காட்டி இவ் ஏழ் உலகும் கொண்ட" என்கிறபடியே இந்திரஞாலங்கள் போலே கண்களையும் சித்தத்தையும் கவர்வனவான வடிவழகையும் சீலத்தையும் செயல்களையும் காட்டி வாய்மாளச்செய்து, கொள்ள - அசுரத் தன்மை வாய்ந்த மஹாபலி 'என்னது' என்றிருந்த உலகத்தைத் தன்னதாக்கிக் கொண்டது போலவே, வடிவழகையும் சீலம் முதலானவைகளையும் காட்டி வாய்மாளச்செய்து, இவர் 'என்னது' என்றிருந்த ஆன்மாவினைத் தன்னதாக்கிக் கொள்ளும்படியாக;

காப்பார் அற்று - [2] "விதிவாய்க்கின்று காப்பார் ஆர்" என்கிறபடியே, கிருபைக்குப் பிறப்பிடமான இவள் காக்கவோ? கிருபைக்குப் பரதந்திரப் பட்டவனான நீ காக்கவோ? கிருபைக்குப் பாத்திரமான நான் காக்கவோ என்னும்படி ஒருவரால் தடுக்க ஒண்ணாதபடி பெருகுவதாய், விதி சூழ்ந்தது - சுதந்திரனான தன்னாலும் தப்ப ஒண்ணாதபடி இருக்கையாலே 'விதி' என்ற சொல்லால் சொல்லப்படுகின்ற அருள், [3] "எனைத்தோர் பிறப்பும் - எதிர் சூழல் புக்கு எனக்கே அருள்கள் செய்ய - அம்மான் திரிவிக்கிரமனை - விதிசூழ்ந்தது" என்கிறபடியே நான் பிறந்த பலபிறவிகளுக்கு எதிராகப் பிறந்துகொடு வந்து, என் ஒருவனுக்குமே தன் அருளைச் செய்யும்படியாக, சர்வேச்வரனாய்வைத்துத் திரிவிக்கிரம அவதார முகத்தாலே எல்லார் தலைகளிலும் திருவடிகளை வைத்த [4] சுசீலனைக் கிருபை சூழ்ந்தது என்னும்படி இவரை அங்கீகரித்தல்லது நிற்க ஒண்ணாதபடி வளைந்து கொண்டது என்கை. மூலத்திலே உள்ள 'காட்டி' என்னும் பதத்தை, பிரமாணம், சாக்ஷி என்பனவற்றோடும் கூட்டுக. (26)

## 113

[5] "வரவாறு - இல்லை - வெறிதே" என்று அறுதியிட்டபின் "வாழ்முதல்" என்கிற சுக்ருதம் ஒழியக் கற்பிக்கலாவது இல்லை.

என்பது சூத்திரம்,

1. திருவாய். 9. 5: 5. 2. திருவாய். 5. 1: 1.
3. திருவாய். 2. 7: 6.

4. சௌசீல்யம் - பெரியவன் தாழ்ந்தவர்களோடே புரையறக் கலக்கும் தன்மை; அதனையுடையவன் சுசீலன்.

5. வாழ்முதல் - வாழ்விற்கு முதலாக நிற்பவன்; இறைவன். சுக்ருதம் - புண்ணியம்.

**வியாக் :—** எல்லாம் செய்தாலும், இந்தவிதமான அருள்தான் இத்துணைக்காலம் இவ் உயிர் விஷயத்தில் பெருகாமல் இன்று பெருகுமளவில், இதற்கு ஓர் அடி வேண்டுகையாலே, இதற்கு உடலாகக் கற்பிக்கலாவது ஒரு நல்வினை இல்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, வரவாறு இல்லை என்று - [1] "வரவாறு ஒன்று இல்லையால் வாழ்வினிதால்" என்று, இது வந்தவழி இன்னது என்று இதற்குச் சொல்லலாவது ஒரு காரணம் இல்லை, பேறும் மிகவும் இனிதாய் இராநின்றது என்றும், வெறிதே என்று - [2] "வெறிதே அருள் செய்வர் செய்வார்கட்கு" என்று, தாம் அருள் செய்ய நினைத்தவர்களுக்கு யாதொரு காரணமும் இல்லாமலே அருள் புரிவர் என்றும், அறுதியிட்டபின் - இறைவன் தம்மை அங்கீகரித்ததற்கு யாதொரு காரணமும் இன்று என்று இப்படித் தாமே அறுதியிட்டபின்பு, வாழ்முதல் என்கிற சுக்ருதம் ஒழிய - [3] "தனியேன் வாழ்முதலே" என்கிறபடியே இவ் உலக வாழ்க்கையில் ஒரு துணை இன்றிக்கே இருக்கிற என்னுடைய அநுபவத்துக்கு மூலமான புண்ணியமே! என்று தம்முடைய பேற்றுக்கு மூல புண்ணியமாக இவர் அருளிச்செய்த அவனை ஒழிய, கற்பிக்கலாவது இல்லை - வேறு கற்பிக்கலாவது ஒரு புண்ணியம் இல்லை என்கை.

அன்றிக்கே, "யாத்ருச்சிகாதிகள் உண்டாகில் இவர்க்குத் தோன்றும்" (சூத். 107) என்று இவர் அறியாத புண்ணியமும் இவர்க்கு இல்லை என்றவாறே, நேராக இப்படிக் கழிக்க வேண்டுமோ? இத்துணைக்காலம் அங்கீகரியாதவன் இன்று அங்கீகரிக்கையாலும், மற்றைய ஆன்மாக்கள் எல்லாம் கிடக்க இவரை இப்படி அங்கீகரிக்கையாலும் இதற்குக் காரணமான யாதேனும் ஒரு நல்வினை இவர்க்கு உண்டாகக் கூடும் என்று காரியத்தைக் கொண்டு அநுமித்தாகிலும் கல்பிக்கலாவது ஒன்று இல்லையோ? என்ன, அப்படிக் கல்பிக்கலாவது ஒன்று இல்லை என்னுமிடத்தை விரிவாக அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால் என்றலுமாம். அப்பொழுது, "செய்த நன்றி தேடிக் காணாதே" (சூத். 108) என்றது முதல் "வரவாறு இல்லை" என்னும் இச்சூத்திரமுடிய, இவ்வாழ்வாருடைய திருவுள்ளக்கருத்தைச் சொல்லிக்கொண்டு செல்லுகின்ற ஒரே வாக்கியம் என்று கோடல் வேண்டும்.

---

1. *பெரியதிருவந்.* 56.     2. *திருவாய்.* 8. 7. 8.

3. *திருவாய்.* 2. 3: 5.



யாங்ஙனம்? எனின், "எந்நன்றி செய்தேனா என் நெஞ்சில் திகழ்வதுவே" என்கிறபடியே பகவானுடைய அங்கீகாரத்துக்கு உடலாகத் தாம் செய்த நல்வினை உண்டோ? என்று தேடினர்; கண்டிலர்; அங்கீகாரத்துக்கு உடலானது இல்லையாகில், அத்வேஷ ஆபிமுக்கியங்களுக்குத் தக்கவைதாம் உண்டோ? என்னில், அதுவும் அவனாலே வந்தது; நல்வினை காரணமாக அன்று. "எண்ணிலும் வரும்" என்கிறபடியே எண்ணுகைதான் உண்டோ? எனின், அதற்கு எண்தானும் இன்று. "வைத்தேன் மதியால்", "யானும் என் நெஞ்சும் இசைந்தொழிந்தோம்" என்கிற அநுமதி இச்சைகள் தாம் உண்டோ? என்னில், அவையும் அவன் உண்டாக்கினவை. "மாதவன் என்றதே கொண்டு", "திருமாலிருஞ்சோலைமலை என்றேன் என்ன" என்பன போன்றவைகளால் ஈச்வரன் வலிய ஏறிடுகிறவை, வேறுபடுத்திக் காட்டும் வார்த்தை முதலானவைகளாம். இவன், நடுவே வந்து, அடியான் என்று பிடித்து, பிரமாணத்தையும் சான்றுகளையும் காட்டி, அவை பயன்படாத அளவில், வடிவழகைக் காட்டி, இவ்வான்மாவினை இப்படித் தனக்குரித்தாக்கிக் கொள்ளும்படி தடைசெய்யப்படாத அருள் இவனைச் சூழ்ந்து கொண்டது. இவ் அங்கீகாரத்துக்கு "வரவாறு ஒன்று இல்லை" "வெறிதே அருள் செய்ததித்தனை" என்று இவர்தாமே அறுதியிட்டபின்பு "தனியேன் வாழ்முதலே" என்று தம் பேற்றுக்கு மூல புண்ணியமாக இவர் அருளிச்செய்த ஈச்வரனை ஒழிய வேறு கல்பிக்கலாவது ஒரு புண்ணியம் இவர்க்கு இல்லை என்கிறார் என்றபடி. இப்பொருள் இதன் **பட்டோலையான** நூலில் இவர் அருளிச்செய்த மரியாதைக்குச் சேரும்.

ஆக, இதுகாறும் இவர் பிரபாவத்தையும், அதற்கு அடி இறைவன் புரிகின்ற ஒரு காரணமும் பற்றாத திருவருள் என்னுமதனையும், அதனால் இவர்க்கு உண்டான பக்தியின் வேறுபாட்டினையும், அதுதான் கர்மத்தாலும் ஞானத்தாலும் உண்டானது அன்று என்னுமதனையும், இவரை ஈச்வரன் அங்கீகரித்ததற்குக் கேவலம் கிருபை ஒழிய வேறு காரணம் இல்லாமையையும் அருளிச் செய்தாராயிற்று. (27)

**114**

*[1] நலம் "அருளினன் - என்கொல்" என்று ஆமூலசூடம் அருளால் மன்னும் இவர்க்கு, அன்புக்கு அடியானதுவே அடிசேருகைக்கும் சாதனம்.*

என்பது சூத்திரம்.

---

1. *ஆமூலசூடம் - முதலிலிருந்து முடிவுவரையிலும்.*

வியாக் :— காரணம் ஒன்று இன்றியே பகவானுடைய அங்கீ காரத்துக்குப் பாத்திரமான இவருடைய பக்தி, பகவானுடைய அருளாலேயே உண்டானதாக இருந்தாலும், வழிபடுகின்றவனுக் குக் கர்மத்தாலும் ஞானத்தாலும் உண்டாகும் பக்திபோன்று, இவருடைய பேற்றிற்கும் காரணம் இதுவேயோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறுர் இச்சூத்திரத்தால்.

அதாவது, நலம் அருளினன் என்று - [1] "மயர்வறமதிநலம் அரு ளினன்" என்று தமக்குப் பக்தி உண்டாதற்குக் காரணம் கேவலம் பகவானுடைய திருவருள் என்று தொடங்கி, என்கொல் என்று - [2] "என்கொல் அம்மான் திருவருள்கள்" என்று முடித்து, ஆமூல சூடம் - ஞானநிலேயோடு பேற்று நிலேயோடு வேறுபாடுஅற முதலி லிருந்து முடிவுவரையிலும், அருளால் மன்னும் இவர்க்கு - [3] "மால் அருளால் மன்னு குருகூர்ச் சடகோபன்" என்கிறபடியே பிடி தோறும் நெய் ஒழியச் செல்லாத சுகுமாரரைப்போலே, நின்ற நின்ற நிலேதோறும்அவன்அருள்கொண்டே தரிக்கவேண்டும் தன்மையரான இவர்க்கு, அன்புக்கு அடியானதுவே - "நலம் அருளினன்" என்கிற படியே பக்திக்குக் காரணமாகச் சொன்ன அருளே, அடிசேருகைக் கும் சாதனம் - [4] "ஆரு அன்பில் அடியேன் உன் அடிசேர் வண் ணம் அருளாயே" என்கையாலே அடிசேருகையாகிற பேற்றிற்கும் காரணமாம் என்கை,

(28)

## 115

"புணர்தொறும்" என்னக் கலந்து பிரிந்து ஞானபக்திகளே வளர்த்தது, கனங்குழைஇடக் காது பெருக்குதலும் மாசஉபவாசி போஜனப் புறப்பூச் சும் போலே, ஆற்ற நல்ல மா போகச் சிரமமாக. [5]

என்பது சூத்திரம்.

வியாக் :— இப்படிப் பேற்றிற்குக் காரணம் அவனுடைய அருளேயாகில், [6] "இந்நின்ற நீர்மை இனி யாம் உருமை" என்ற போதே இவருடைய விருப்பத்தை முடித்துவிடலாயிருக்க, இவரை வைத்து, தன்னுடைய கலவியால் ஞானத்தையும் தன்னு டைய பிரிவால் பக்தியையும் வளர்த்தது எதற்காக? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறுர் இச்சூத்திரத்தால்.

1. திருவாய். 1. 1: 1.
2. திருவாய். 10. 7: 4.
3. திருவாய். 1. 5: 11.
4. திருவாய். 6. 10: 2.
5. சிரமம் - பயிற்சி.
6. திருவிருத்தம், 1.



அதாவது, புணர்தொறும் என்னக் கலந்து பிரிந்து - [1] "தட முலே புணர்தொறும் புணர்ச்சிக்குஆரா, சுகவெள்ளம் விசும்பு இறந்து அறிவை மூழ்க்கச் சூழ்ந்து அது கனவென நீங்கி ஆங்கே, அகவுயிரகம் அகந்தோறும் உள்புக்கு ஆவியின் பரமல்ல வேட்கை அந்தோ!" என்று புணருந்தோறும் புணர்ச்சிக்குத் தக்க அளவல் லாத இன்ப வெள்ளமானது, அளவிடமுடியாத ஆகாசத்தையும் கடந்து அவ்வருகுபட்டு, மோக்ஷ உலகம் என்ன, இவ்வுலகம் என்ன ஆகிய இருவகைப்பட்ட உலகங்களேயும் விளாக்குலே கொள்ள வல்ல அறிவையும் முழுத்தும்படி பெருகி, இப்படிப் பெருகினஇது, பிரிந்த காலத்திலே, பெருக்காறு வற்றி அடி சுடுமாறு போலே, கனவு கண்ட பொருள் என்னலாம்படி வற்றிப்போய், அந்நிலேயிலே உயிரின் இடமான இருதயத்தில் முன்பு புணர்ந்த புணர்ச்சியால் உண்டான புடைதோறும் உள்ளே புகுந்து பற்றுக்கோடான ஆன் மாவிற்குப் பொறுக்க ஒண்ணுதபடி காதல் பெருகிவாராநின்றது என்று சொல்லும்படியாகப் புணர்வதும் பிரிவதுமாய், ஞானபக்தி களே, வளர்த்தது - கலவியாலே ஞானத்தையும் பிரிவாலே பக்தி யையும் வளர்த்தது,

கனம் குழை இடக் காது பெருக்குதல் போலே - கனத்த ஆபர ணம் இடுகைக்கு இடமாம்படி நூல் இட்டுத் திரிஇட்டுக் குதம்பை இட்டுக் காதினேப் பெருக்குமாறு போலவும், மாசஉபவாசி போஜ னப் புறம் பூச்சு போலே - மாத உபவாசம் மேற்கொண்டவர்களுக்கு முதலிலே உணவினே இடில் பொருது என்று சோற்றினே அரைத்து உடம்பிலே பூசி, பொரிக்கஞ்சி கொடுத்து, பொரிக்கூழ் கொடுத்து, ஒடுக்கத்திலே உணவு பொறுப்பிக்குமாறு போலவும், ஆற்ற நல்ல - [2] "ஆற்ற நல்ல வகை காட்டும் அம்மான்" நான் பொறுக்கப் பொறுக்கத் தன் குணங்களேயும் செயல்களேயும் எனக்குக் காட்டி, அவ்வழியாலே என்னே அடிமை கொண்டவன் என்கிறபடியே பகவானுடைய அநுபவத்தைக் கனுவிலும் கண்டறியாத இவர்க்கு, மா போகம் - [3] "எம் மா வீடு" என்றும், [4] "கட்டெழில் வானவர் போகம்" என்றும் சொல்லுகிறபடியே எல்லா வகையாலும் வேறு பட்ட சிறப்பினதாய்க் கொண்டு கட்டடங்க நன்ருய் இருப்பதாய் அளவிடற்கரிய ஞானத்தையும் சக்தியையுமுடையவர்களான நித் தியசூரிகள் அநுபவிக்கிற போகத்தை, சிரமமாக - முதலிலே

1. திருவாய். 10. 3: 2.
2. திருவாய். 4. 5: 5.
3. திருவாய். 2. 9: 1.
4. திருவாய். 6. 6: 11.

கொடுக்கில் பொறுக்காது என்று கருதி, அது பொறுப்பதற்காகப் பயிற்சியினை உண்டாக்கினபடி என்கை.

ஆனபின்பு ஞானபக்திகளை வளர்த்தது, பேற்றிற்குக் காரணமாக அன்று என்றபடி. மாத உபவாசத்தை மேற்கொண்டவர்களுக்குப் புறப்பூச்சு மாத்திரத்தால் உணவு பொருமையாலே, புறப்பூச்சு சொன்ன இது, பொரிக்கஞ்சிக்கும் பொரிக்கூழுக்கும் உபலக்ஷணம். சூத்திரத்தில் 'மா போகம்' என்றது "மாவீடு" "வான வர் போகம்" என்கிற திருப்பாசுரங்களின் பகுதிகளிலே உள்ள முதல் ஈறுகளை. (29)

## 116

[1] இவற்றால் வரும் சம்ஶ்லேஷ விஶ்லேஷங்களாகிறன, எளியனாய் நிற்கும் அரியனாய் எய்தான் என்கிற தரிசன சமமான மாநசஅநுசந்தானமும், திண்கொள்ளப் பெறாத மனச்சைதில்யமும்.

என்பது சூத்திரம்.

**வியாக் :—** ஆனால், ஞானத்தையும் பக்தியையும் வளர்த்தது, ஆற்ற நல்ல மா போகம் சிரமத்திற்கு ஆகிறது; "முனியே நான்முகனே" என்ற திருவாய்மொழி அளவும் மனத்தால் அநுபவிக்கும் அநுபவம் ஒழிய, புறக்கண்களால் நேரே கண்டு அநுபவிக்கும் அநுபவம் இல்லாத இவர்க்கு, ஞானத்தையும் பக்தியையும் வளர்ப்பதற்கு உறுப்பாகக் கூறப்படுகின்ற கலவியும் பிரிவும் என்பன யாவை? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

இவற்றால் வரும் சம்ஶ்லேஷ விஶ்லேஷங்கள் ஆகிறன - மேலே கூறிய ஞானம் பக்தி இவற்றின் அடியாக வரும் கலவியும் பிரிவும் என்பவை யாவை? எனின், எளியனாய் - [2] "கருத்துக்கு நன்றும் எளியனாய்" என்றும், நிற்கும் - [3] "நிற்கும் முன்னே வந்து"

1. இவற்றால் வரும் சம்ஶ்லேஷமாவது, எளியனாய், நிற்கும், அரியனாய், எய்தான் என்கிற தரிசன சமமான மாநச அநுசந்தானம் என்றும், விஶ்லேஷமாவது, திண்கொள்ளப் பெறாத மனச்சைதில்யம் என்றும் நிரல் நிறையே கூட்டுக.

தர்சநசமமான - நேரே கண்களால் காணுதலைப் போன்றதான. மாநசஅநுசந்தானம் - மனத்தின்நினைவு. மநச்சைதில்யம் - மனம் உருக்குலைதல்.

2. திருவாய். 3. 6: 11. 3. திருவாய். 7. 3: 6.



என்றும், அரியனாய் - [1] "கண்கள் காண்டற்கு அரியனாய்" என்றும், எய்தான் - [2] "என் கைக்கும் எய்தான்" என்றும், என்கிற - என்று சொல்லப்படுகின்ற, தர்சன சமமான மானச அநுசந்தானம் - மனத்தினுடைய மிகத்தெளிவான அநுபவத்துக்கு விஷயமாய்க் கொண்டு தம் முன்னே வந்து நின்று, புறக்கண்களுக்குப் புலப்படாதவனாய்க் கொண்டு கைகளால் அணைப்பதற்கு எட்டாமல் இருக்கிற, நேரே காண்டலுக்குச் சமானமான மனத்தின் அநுபவம் கலவி எனப்படும்.

திண்கொள்ளப் பெறாத மனச் சைதில்யம் - [3] "கண்கட்குத் திண்கொள்ள ஒருநாள் அருளாய் உன் திருவுருவே" என்கிறபடியே விரும்பியவாறே புறக்கண்களால் கண்டு அநுபவிக்கும் அநுபவம் பெறாமையாலே, பெற்ற மனத்தின் அநுபவமும் அடிமண்டியோடே கலங்கும்படி பிறந்த மனக் கலக்கம் பிரிவு எனப்படும். (30)

## 117

[4] புண்ணியம் பாவம் புணர்ச்சி பிரிவை, அவை சரித்தவர்க்கு, பிரிய ஹித பரன்தான் துளக்கற எங்கும் தழைக்க நடத்தும்.

என்பது சூத்திரம்.

**வியாக் :—** புணர்ச்சியும் பிரிவும் நல்வினை தீவினைகள் காரணமாக அன்றோ உலகத்தார்க்கு உண்டாகின்றன; இவ்வுலக நடைக்கு வேறுபட்ட இவர்க்கு, புணர்ச்சியும் பிரிவும் வருகைக்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

புண்ணியம் பாவம் புணர்ச்சி பிரிவை - [5] "புண்ணியம் பாவம் புணர்ச்சி பிரிவு என்றிவையாய்" என்கிறபடியே உலகத்தார்க்கு நல்வினை தீவினைகளின் பயனாய்க்கொண்டு வருகின்ற புணர்ச்சியையும் பிரிவினையும், அவை சரித்தவர்க்கு - [6] "சார்ந்த இரு வல் வினை

1. திருவாய். 3. 6: 11. 2. திருவாய். 7. 3: 6.

3. திருவாய். 5. 10: 7.

4. சரித்தவர் - இறைவனாலே புண்ணிய பாவங்களைப் போக்கப்பட்ட ஆழ்வார். 'பிரிய ஹித பரன்தான்' என்பதனை, பிரியபரன் தான் என்றும், ஹிதபரன் தான் என்றும் பிரித்துக் கூட்டுக.

5. திருவாய். 6. 3: 4. 6. திருவாய். 1. 5: 10.

களும் சரித்து" என்று, [1] "எள்ளில் எண்ணெய் போலவும் மரத்தில் நெருப்புப் போலவும்" என்று கூறப்படுகிறபடியே, ஆத்மாவோடே பிரிக்க வொண்ணாதபடி பொருந்திக்கிடக்கிற நல்வினை தீவினைகளின் காரணமாக வருகின்ற பிரபலமான கர்மங்களை விரகர் நெடுஞ்சுவர் தள்ளுமாறு போலே தான் போக்குகையாலே அவை இரண்டும் அற்றிருக்கிற இவர்க்கு, பிரியபரன் ஹிதபரன் தான் - பிரியபரனும் ஹிதபரனுமான ஈச்வரன்தான் ஞானபக்திகளை வளர்க்கையில் நினைவாலே,

துளக்கற - [2] "துளக்கற்று அமுதமாய் எங்கும், பக்கம் நோக்கறியான் என் பைந்தாமரைக் கண்ணனே" என்கிறபடியே, உலகத்தைப் பாதுகாத்தல் முதலிய மற்றைய நோக்கங்கள் சிறிதும் கலசாதபடி அவற்றை ஒருங்கவிட்டுக்கொண்டு வந்து, இனிப்போராதபடி என்னுள்ளே புகுந்து, அத்தாலே, இயல்பாகவே மலர்ந்திருக்கின்ற முற்றறிவினனுமாய், "[3] ஸ்ரீராமபிரான் ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு முடிசூட்டிய பின்னர் செய்யவேண்டிய காரியங்களை எல்லாம் செய்து முடித்தவராய் நடுக்கமற்றவராய் மகிழ்ந்தார்" என்கிறபடியே உள் நடுக்கமும் தீர்ந்து, எனக்கு எல்லை இல்லாத இனியனுமாய் நாய்ச்சிமாரையும் புரிந்து பாராமல் என்னையே பார்த்துக்கொண்டு இதனாலே திருக்கண்களும் செவ்விபெற்று, இப்படி என்னோடே கலந்திருந்தான் என்று இவர் மிக்க பிரீதியையுடையவராம்படியாகவும், எங்கும் தழைக்க - [4] "தழை நல்ல இன்பம் தலைப்பெய்து எங்கும் தழைக்கவே" என்கிறபடியே பிரிவின் துன்பத்தாலே நான் முடியாநின்றேன்; இனி என்துக்கம் காணாமையாலே உலகமெல்லாம் விரிந்த நன்றான சுகத்தைப்பெற்று நிறைந்திருக்கக் கடவது என்னும்படி எல்லை இல்லாத துன்பத்துள் அழுந்தினராம் படியாகவும், நடத்தும் - நடத்திக் கொண்டு போரும் என்றபடி. (31)

---

1. "*திலதைலவத் தாருவஹ்நிவத்*"
*என்பது, கத்யத்ரயம்.*

2. *திருவாய்.* 2. 6: 2.

3. *அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம்*
*க்ருதக்ருத்யஸ்ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ.*
*என்பது, ஸ்ரீராமா. பால.* 1: 85.

4. *திருவாய்.* 9. 5: 10.



## 118

[1] *ஞானத்தில் தம்பேச்சு; பிரேமத்தில் பெண் பேச்சு.*

என்பது சூத்திரம்.

**வியாக் :—** இப்படிச் சர்வேச்வரனாலே வளர்க்கப்படுகின்ற ஞானத்தையும் பக்தியையுமுடைய இவருடைய ஞானநிலையிலும் பக்திநிலையிலும் உளவாகும் பேச்சுக்கள் இருக்கும்படி யாங்ஙனம்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, ஞானத்தில் தம் பேச்சு - ஞானநிலையில் தாமான தன்மையிலே நின்று பேசுவர். பிரேமத்தில் பெண்பேச்சு - அன்பு நிலையில் வேறு ஒரு நிலையினை அடைந்தவராய்ப் பெண் பேச்சாகப் பேசுவர் என்றபடி. (32)

## 119

[2] "*தேறும் - கலங்கி*" *என்று, தேறியும் தேறாதும் ஸ்வரூபம் குலையாது.*

என்பது சூத்திரம்.

**வியாக் :—** இப்படித் தெளிவும் கலக்கமுமான இந்நிலைகளில் பேச்சுக்களில் பேதம் ஒழிய, சொரூபத்திலும் பேதம் உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, தேறும்- [3] "தேறும் கை கூப்பும்" என்றும், கலங்கி- [4] "கலங்கிக் கைதொழும்" என்றும், என்று - என்று சொல்லுகிறபடியே தெளிந்த நிலையிலும் கலங்கின நிலையிலும் அடிமைத் தன்மைக்குப் பிரகாசகமான அஞ்சலி மாறாமையாலே, தேறியும் தேறாதும் - மண் பிண்டமாந்தன்மை குடமாந்தன்மை ஓடாந்தன்மை பொடியாம்தன்மை ஆகிற நிலைவேறுபாடுகளை அடைந்தாலும் மண்ணாகிற தன்மைக்கு அழிவில்லாதவாறு போன்று, [5] "தேறியும் தேறாதும் மாயோன் திறத்தனளே இத் திருவே" என்கிறபடியே தெளிந்த நிலையோடு கலங்கின நிலையோடு வாசியற இருவகை நிலைகளிலும் அடிமைத் தன்மையான, சொரூபம்-சொரூபம், குலையாது - நிலை குலையாது என்றபடி. (33)

---

1. *பிரேமம் - அன்பு; பக்தி.*
2. *ஸ்வரூபம் - உயிரின் தன்மை; அடிமைத் தன்மை.*
3. *திருவாய்.* 7. 2: 5. 4. *திருவாய்.* 2. 4: 4.
5. *திருவாய்.* 4. 4: 7.

## 120

அடியோம் தொடர்ந்து குற்றேவல், அடிச்சியோம் அடிக்கீழ்க் குற்றேவலாகை அவஸ்த்தாந்தரம்.[1]

என்பது சூத்திரம்.

**வியாக் :—** ஆனால், இவர்க்கு வேறு நிலை என்று கூறப்படுவது யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, அடியோம் – [2] "அடியோம் போற்றி ஓவாதே" என்றும், தொடர்ந்து குற்றவேல் - [3] "தொடர்ந்து குற்றேவல் செய்து" என்றும் தாமான தன்மையில் சொல்லுமாறு போன்று, அடிச்சியோம் - [4] "அடிச்சியோம் தலைமிசை நீ அணியாய்" என்றும், அடிக்கீழ்க் குற்றவேல் ஆகை - [5] "திருவடிக்கீழ்க் குற்றேவல் முன் செய்ய" என்றும் சொல்லுகையாலே, அவஸ்த்தாந்தரம் - சொரூபத்திலும் சொரூபத்திற்குத் தக்கனவான காரியங்களை வேண்டிவிரும்புவதிலும் வேற்றுமை இல்லை; பிராட்டியானபாவனை யாலே, தம்பேச்சான இதுபோய்ப் பெண்பேச்சாகை இவர்க்கு நிலை வேறுபாடாவது என்றபடி.

"அடியோம் தொடர்ந்து குற்றேவல்" என்று தம்பேச்சாலே சொல்லுகிற இது, "அடிச்சியோம் அடிக்கீழ்க் குற்றறேல்" என்று பெண் பேச்சாகையே இங்கு நிலைவேறுபாடு என்பது என்றபடி. (34)

## 121

[6] வித்யை தாயாகப் பெற்று, பாலும் அமுதுமான திருநாமத்தாலே திருமகள் போல வளர்த்த தஞ்சமாகிய தந்தை, மற்றொருவர்க்குப் பேச்சுப் படாமல், விச்வபதி லோகபர்த்தா என்னும் மணவாளரை, நாலிரண்டு இழைகொண்டு முப்புரியான

1. அவஸ்த்தாந்தரம் - நிலை வேறுபாடு.
2. திருவாய். 9. 2: 9. 3. திருவாய். 9. 2: 3.
4. திருவாய். 10. 3: 6. 5. திருவாய். 1. 4: 2.

6. பெற்று வளர்த்த தந்தை மற்றொருவர்க்குப் பேச்சுப்படாமல் லோகபர்த்தா என்னும் மணவாளரைப் பிரஹ்ம சூத்ரபந்தத்தோடே வரிப்பிக்க, பரம்புருடன் கைக்கொண்டபின், சதுர்த்தியுள்புக்கு, நடுக் கிடக்கும் நாள் கழித்து, ஜன்ம பூமியை விட்டு அகன்று, உடன் சென்று, நீராடி, வைகுந்தம் புக்கிருந்து, வாய் மடுத்து, போகம் உண்டு, கட்டில் மிதித்து ஆரோகித்து, மணிமிகுமார்பிலே குருமாமணியாய் அணையும் வஸ்து என்றும், நீராடியபின் நோக்கியர் அலங்கரித்துப் பல்லாண்டிசைத்துக் கவரி செய்ய, இளமங்கையர் நிறைகுட விளக்கம் ஏந்தி எதிர்கொள்ள, வைகுந்தம் புகும் வஸ்து என்றும் தனித்தனியே கூட்டுக. கூட்டி, அந்த வஸ்துவுக்கு மணிவல்லிப் பேச்சு வந்தேறியன்று என முடிக்க. 'பரத அக்ரூர மாருதிகளைப் பரிஷ்வங்கித்த' என்பது, 'மணி மிகுமார்பிற்கு' அடைமொழி. வஸ்து - ஆன்மா. மணிவல்லிப் பேச்சு- பெண் பேச்சு. வரிப்பிக்க - மணம் செய்துவைக்க. ஆரோகித்து - ஏறி. பரிஷ்வங்கித்த - அணைந்த.



பிரஹ்மசூத்ர பந்தத்தோடே வரிப்பிக்க, பரம்புருடன் கைக்கொண்டபின், சதுர்த்தியுள் புக்கு, இடையீடு நடுக்கிடக்கும் நாள்கழித்து, ஜன்ம பூமியை விட்டகன்று, சூழ்விசும்பிற்படியே உடன் சென்று, குடைந்து நீராடி, வியன்துழாய் அஞ்சனத்தின் நீறு நானப்பொடி பீதகவாடை பல்கலன்கொண்டு நோக்கியர் அலங்கரித்துப் பல்லாண்டிசைத்துக் கவரி செய்ய, நிறைகுட விளக்கம் ஏந்தி இளமங்கையர் எதிர் கொள்ள, வைகுந்தம் புக்கிருந்து, வாய்மடுத்துப் பெருங்களிச்சியாக வானவர் போகம் உண்டு, கோப்புடைய கோட்டுக்கால் கட்டில் மிதித்து ஆரோஹித்து, பரத அக்ரூர மாருதிகளைப் பரிஷ்வங்கித்த மணிமிகு மார்பிலே குருமாமணியாய் அணையும் வஸ்துவுக்கு மணிவல்லிப்பேச்சு வந்தேறி அன்று.

என்பது சூத்திரம்.

**வியாக் :—** ஆயின், இவர்க்கு இயல்பாகவே அமைந்தது தம் பேச்சே அன்றோ? பிராட்டிமார் நிலையை அடைந்து பேசும் பெண் பேச்சு வந்தேறி தானே? என்ன, பகவானுக்கே பரதந்திரப்பட்டது மாய்ப் பகவானுக்கே இனியதுமாய் இருக்கும் இவ் ஆன்மாவிற்குப் பெண்ணோடு ஒத்த தன்மை சொரூபத்தைப் பற்றியதாகையாலே அதனடியாகவரும் அப்பெண்பேச்சு இவர்க்கு வந்தேறி அன்று என்னுமிடத்தை உருவகமூலமாக அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, வித்யை தாயாகப் பெற்று - [1] "அந்த ஆசாரியன் அவனைக் கல்வியால் பிறக்கச் செய்கிறான்; அந்தப்பிறவி உயர்ந்தது" என்கிறபடியே ஆசாரியன் திருமந்திரமூலமாகச் சொரூபஞானத்தை

1. "ஸஹி வித்யாத: தம் ஜநயதி" என்பது, ஆபஸ்தம்ப சூத். 16: 17.

உண்டாக்கினபோது இவ் ஆன்மா உள்ளது ஆகின்றதாகையாலே, கல்வியைத் தாயாகக் கொண்டு இவ்வான்மாவினைப் பிறப்பித்து, பாலும் அமுதுமான திருநாமத்தாலே - [1] "தேனும்பாலும் அமுதுமாய திருமால் திருநாமம்" என்கிறபடியே இனியபொருளான திருமந்திரத்தாலே, திருமகள்போல வளர்த்த- [2] "திருமகள்போல வளர்த்தேன்" என்கிறபடியே வேறு ஒருவர்க்குரியளாகாது அவனுக்கே அடிமைப்பட்டிருத்தல் முதலிய தன்மைகளாலே திருமகளுக்கு ஒப்பாக வளர்த்துக்கொண்டு போந்த, தஞ்சமாகிய தந்தை - சரீரம் உண்டாவதற்குக் காரணனாய் [3] "அந்தக் காகாசுரன் தந்தையாலும் தாயாலும் மஹ ரிஷிகளுடன் கூடின தேவர்களாலும் கைவிடப்பட்டவனாய் மூன்று உலகங்களிலும் நன்றாகத் திரிந்து மீண்டு வந்து அப்பெருமானையே சரணம் அடைந்தான்" என்கிறபடியே ஆபத்துக் காலங்களில் கை விடும் தந்தையைப் போல் அன்றிக்கே, [4] "எல்லாஉயிர்களுக்கும் அழிவில்லாத தந்தை எவனோ" என்கிறபடியே சம்பந்தம் கண்ணழி வற்றிருக்க, [5] "திருவரங்கநாதனே! தேவரீராலேயே ஒருவன் பிறவிக்கும் மோக்ஷத்திற்கும் உரியவனாகச் செய்யப்படுகிறான்" என்கிறபடியே பிறவிக்கும் மோக்ஷத்திற்கும் பொதுவாக இருக்கும் தந்தையைப்போலு மன்றிக்கே, சொரூபத்தை உண்டு பண்ணுகின்றவனாய் எந்த நிலையிலும் கைவிடாமல் நலத்தில் விருப்பமுள்ளவனாய் உய்விப்பதிலேயே நோக்குள்ளவனாய்க் கொண்டு மோக்ஷத்திற்கே காரணமாக இருக்கையாலே ஆபத்துக்களிலே காப்பாற்றுகின்றவனான ஆசாரியனாகிற தந்தை,

மற்றொருவர்க்குப் பேச்சுப் படாமல் - [6] "மற்றொருவர்க்கு என்னைப் பேசல் ஒட்டேன்", [7] "மானிடவர்க்கு என்று பேச்சுப்படில்" என்கிறபடியே பிறர் ஒருவர்க்கு உரிமையாக இருக்கும் தன்மையது என்ற பேச்சு வாராதபடி, விச்வபதி லோகபர்த்தா என்னும் - [8] "உல

1. பெரியதிருமொழி, 6.10:6. 2. பெரியாழ்வார் திரு. 3.8:4.
3. ஸபித்ராச பரித்யக்த: ஸுரைச்ச ஸமஹர்ஷிபி:
த்ரீந்லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ சரணம்கத:
என்பது, ஸ்ரீராமா. சுந். 38: 32.
4. "பூதாநாம்யோவ்யய: பிதா"
என்பது, சஹஸ்ரநாமம்.
5. "பவமோக்ஷணயோஸ்த்வயைவஜந்து: க்ரியதே"
என்பது, ஸ்ரீரங்கராஜஸ்தவம் உத்தரசத. 88.
6. பெரியாழ்வார் திரு. 3. 4: 5. 7. நாய்ச்சியார் திரு. 1: 5.
8. "பதிம் விச்வஸ்ய"
என்பது, புருஷ சூக்தம்.



கிற்குப்பதி" என்று 'பதி' என்னும் சொல்லாலும், [1] "பரந்த மனத்தையுடைய கௌசல்யாதேவியார் உலகங்கட்கெல்லாம் கணவனான எவரைப் பெற்றாரோ" என்று 'கணவன்' என்ற சொல்லாலும் எல்லா உலகங்கட்கும் நாயகராகச் சொல்லப்படுகின்ற, மணவாளரை - [2] "பணவாள் அரவணைப் பற்பல காலமும் பள்ளி கொள்ளும் மணவாளரை" என்கிற அழகிய மணவாளரை, நால்இரண்டு இழை கொண்டு முப்புரியான பிரஹ்மசூத்ர பந்தத்தோடே - [3] "எட்டிழையாய் மூன்று சரடாய் இருப்பது ஒரு மங்களசூத்ரம் போலே" எட்டு எழுத்தாய் மூன்று பதமாய் ஈச்வரனுடைய சம்பந்தத்தை விளக்கிக் கொண்டிருப்பதான திருமந்திரமாகிற மங்கள சூத்திரத்தோடே, வரிப்பிக்க - [4] "தேவரீர் திருக்கரத்தால் இவளுடைய திருக்கரத்தைப் பிடித்துக் கொள்ளும்" என்று கைப்பிடிக்கும்படி செய்ய, பரம்புருடன் கைக்கொண்ட பின் - [5] "பறவை ஏறு பரம்புருடா! நீ என்னைக் கைக்கொண்ட பின்" என்று சொல்லப்படுகின்ற பரம்புருடனான மணவாளர் ஏற்றுக்கொண்ட பின்னர்,

சதுர்த்தியுள்புக்கு - திருமணம் ஆனபின்னர் சேட ஓமத்தை முடிவாக உள்ள நான்கு நாள்களிலும் அகலுதலும் அணுகுதலும் அற்று, அவனுக்கே அடிமையாந்தன்மைக்குச் சேர கலவிக்குத் தக்கது என்னும் அளவையினைப் பிரகாசிப்பித்துக் கொண்டிருக்குமாறு போலே, பிரணவத்தில் சொல்லப்பட்டதான அவனுக்கே அடிமையாம் தன்மையில் கண்ணழிவற அங்கீகரிக்கையாலும், அதற்குத் தகுதியாகக் கிட்டிப் பரிமாறப் பெறுமையாலும், அகலுதலும் அணுகுதலும் அற்று, கைங்கர்யப் பிரார்த்தனையோடே செல்லும் "நாராயணாய" என்ற பதத்திலே உள்ள 'ஆய' என்ற நான்காம் வேற்றுமையுருபின் பொருளிலே புகுந்து, இடையீடு நடுக் கிடக்கும் நாள் கழித்து - மணமக்கள் இருவரும் ஒரே படுக்கையிலே இருக்கச்செய்தேயும் ஒருவர்க்கு ஒருவர் தொடுவதற்குத் தகுதி இல்லாதபடி

1. "கௌஸல்யா லோக பர்த்தாரம்"
என்பது, ஸ்ரீராமா. சுந். 38: 55.
2. நாய்ச்சியார் திரு. 10: 6. 3. முமுட்சுப்படி,
4. "பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா"
என்பது, ஸ்ரீராமா. பால. 73: 26.
5. பெரியாழ்வார் திரு. 5. 4: 2.

[1] இடையீடரான சந்திரன் முதலானவர்கள் நடுவே கிடக்கும் நாள்கள் போல, அடிமை ஞானமும் அடிமைத்தொழிலாம் கைங்கரியப் பிரார்த்தனையும் உண்டாகையாலே இரண்டு தலைக்கும் அண்ணிமை உண்டாயிருக்கவும் சேர்ந்து செயல் புரிய ஒண்ணுதபடி [2] "நண்ணியும் நண்ணகில்லேன் நடுவே ஓர் உடம்பிலிட்டு" என்கிறபடியே அநுபவவிரோதியாய் இடையீடான சரீரம் நடுவே கிடக்கிற நான்கு நாள்களையும் [3] "நாள் கடலைக் கழிமினே" என்கிறபடியே கழித்து,

ஜன்ம பூமியை விட்டு அகன்று - [4] "முற்றிலும் பைங்கிளியும் பந்தும் ஊசலும் பேசுகின்ற, சிற்றில் மென்பூவையும் விட்டகன்ற செழுங்கோதை" என்கிறபடியே ஒருவராலும் விடுதற்கு அரிதான பிறப்பிற்கு இடமான இவ்வுலகத்தை முன்பு விருப்பத்திற்கு இடமாகப் போந்த பொருள்களோடே கூடப் புரிந்து பாராமல் விட்டு நீங்கி, அன்றிக்கே, [5] "அன்று நான் பிறந்திலேன்" என்னும்படி கிடந்த தனக்கு, ஆசாரியன் திருமந்திரத்தினுல் உண்டாக்கின பிறவியைப் பெற்றது இங்கே யாகையாலே பிறப்பிற்கிடமான இவ் உலகத்தினை, பகவானை அநுபவிக்கும் ஆசையாலே "முற்றிலும் பைங்கிளியும்" என்ற திருப்பாசுரத்தின்படியே முன்பு விருப்பத்திற்கு இடமாகப் போந்த பொருள்களோடே கூட விட்டு என்னலுமாம். இப்பொருள் பிறந்தகத்தை விட்டுப் புக்ககத்துக்குப் போகிறதாகச் சொல்லுகிற இந்த உருவகத்திற்குச் சாலப்பொருந்துவதாம்.

சூழ்விசும்பிற்படியே - [6] "சூழ்விசும்பு" என்கிற திருவாய்மொழியில் சொல்லுகிறபடியே அர்ச்சிராதி மார்க்கத்தாலே வழி

1. "கரணத்தின் அமைந்து முடிந்த காலை - ஆதிக்கரணமும் ஐயர் யாத்த கரணமும் என்னும் இருவகைச் சடங்கானும் ஓர் குறைபாடு இன்ருய், மூன்று இரவின் முயக்கம் இன்றி ஆன்ரோர்க்கு அமைந்தவகையால் பள்ளி செய்து ஒழுகி நான்காம் பகல் எல்லை முடிந்த காலத்து. ஆன்ரோராவார் - மதியும் கந்தர்வரும் அங்கியும். அது முதல் நாள் தண்கதிர்ச் செல்வற்கும், இடை நாள் கந்தர்வர்க்கும், பின்னுள் அங்கியங்கடவுட்கும் அளித்து, நான்காம் நாள் அங்கியங்கடவுள் எனக்கு நின்னை அளிப்ப யான் நுகரவேண்டிற்று, அங்ஙனம் வேதம் கூறுதலால் எனத் தலைவிக்கு விளக்கம் கூறல்" என்ற தொல்காப்பியச் சூத்திரப் பகுதியையும் அதற்கு நச்சினர்க்கினியர் கூறியுள்ள உரைப்பகுதியையும் இங்கு நோக்கல் தகும். (தொல். பொருள். 5.)

2. திருவாய். 5. 1: 5. 3. திருவாய். 1. 6: 7.

4. பெரியதிருமொழி, 3. 7: 8. 5. திருச்சந்தவிருத். 64.

6. திருவாய். 10. 9. 1.



யில் உள்ளாரடைய உபசரிக்க, உடன் சென்று - [1] "அங்கவனோடும் உடன் சென்று" என்கிறபடியே [2] "கொண்டுசெல்கிறேன்" என்கிற நாயகன் முன்னேசெல்ல, பின்னே சென்று, குடைந்து நீராடி- [3] "குள்ளக் குளிரக் குடைந்து நீராடி" என்கிறபடியே நாயகன் வீட்டிற்குச் செல்லுகிற புதுப்பெண் அவ்வூர் எல்லையில் சென்றவாறே அவர்கள் நீராட்டுவிக்க நீராடுமாறுபோலே, அமுதவாருன விரசையிலே இப்பால் உள்ள அழுக்கு அறும்படி நீராடி,

வியன்துழாய், அஞ்சனத்தின் நீறு, நானப்பொடி, பீதகவாடை, பல்கலன் கொண்டு-நீராடிக் கரை ஏறின பெண்ணை நாயகன் பந்துக்களான பெண்கள் வந்து அலங்கரிக்குமாறு போலே, [4] "வியன் துழாய் கற்பு என்று சூடும்" என்றும், [5] "ஆரார் அயில் வேற்கண் அஞ்சனத்தின் நீறணிந்து" என்றும், [6] "மெய் திமிரும் நானப் பொடி" என்றும், [7] "உடுத்துக் களைந்த நின்பீதகவாடை" என்றும், [8] "பல்கலனும் யாம் அணிவோம்" என்றும் சொல்லப்படுகின்றபடியே, அணிசெய்வதற்குக் கருவிகளான தெய்வத் தன்மைவாய்ந்தவைகளான மாலை அஞ்சனம் பொடி புடைவை ஆபரணங்கள் என்னுமிவற்றை, நோக்கியர் அலங்கரித்து – [9] "அந்த முத்தனை நூறு தெய்வப் பெண்கள் எதிர் கொள்ளுகிருர்கள், நூறு பெண்கள் மாலைகளைக் கையில் ஏந்தினவர்களாய், நூறு பெண்கள் அஞ்சனத்தைக் கையில் ஏந்தினவர்களாய், நூறுபெண்கள் ஸ்ரீசூர்ணத்தைக் கையில் ஏந்தினவர்களாய், நூறு பெண்கள் வஸ்திரத்தைக் கையில் ஏந்தினவர்களாய், நூறு பெண்கள் திருஆபரணங்களைக் கையில் ஏந்தினவர்களாய்" [10] "மானேய் நோக்கிய" ரான தெய்வப்பெண்கள் எதிரே வந்து, [11] "அவனைப் பிரம்ம அலங்காரத்தால் அலங்கரிக்கின்ருர்கள்" என்கிறபடியே, அநுபவிக்கின்ற சர்வேச்வரனுடைய அநுபவத்துக்கு இனியதாம்படி அலங்கரித்து,

1. நாய்ச்சியார் திரு. 6. 10:
2. "நயாமி" ஸ்ரீவராகசரமம். 3. திருப்பாவை, 13.
4. மூன்ருந் திருவந். 69. 5. சிறியதிருமடல், 10.
6. பெரியாழ்வார் திரு. 1. 4: 9. 7. திருப்பல்லாண்டு, 9.
8. திருப்பாவை, 27.
9. "தம்பஞ்ச சதாந்யப்ஸரஸாம் ப்ரதிதாவந்தி,
சதம்மாலா ஹஸ்தா:, சதம்அஞ்சந ஹஸ்தா:,
சதம் சூர்ண ஹஸ்தா:, சதம் வாஸோ ஹஸ்தா:,
சதம் பூஷண ஹஸ்தா:."
என்பது, கௌஷீதகி.
10. திருவாய். 5. 8: 11.
11. "தம்ப்ரஹ்மாலங்காரேணலங்குர்வந்தி"
என்பது, கௌஷீதகி.

பல்லாண்டு இசைத்துக் கவரிசெய்ய - [1] "தொக்குப் பல்லாண்டிசைத்துக் கவரி செய்வர் ஏழையரே" என்கிறபடியே இவர்களுக்கு இவ்விஷயத்தில் தொண்டு செய்வதில் உண்டான ஆசை தோன்ற திரள நின்று போற்றி செய்து சாமரம் பணிமாற, நிறைகுட விளக்கம் ஏந்தி இளமங்கையர் எதிர்கொள்ள - அலங்கரிக்கப்பட்டவளாய்க் கொண்டாட்டத்தோடு செல்லுகிற பெண், நாயகன் வீட்டினை அணுகச்சென்றவாறே அங்குள்ளபெண்கள் மங்களதீபம் முதலியவற்றை ஏந்திக்கொண்டு எதிரே வந்து உபசரிக்குமாறு போலே, [2] "நிதியும் நற்சுண்ணமும் நிறைகுட விளக்கமும், மதிமுக மடந்தையர் ஏந்தினர்" என்கிறபடியே மங்களத்தை விளைப்பதான பூர்ணகும்பம் தீபம் முதலானவற்றைத் தரித்துக்கொண்டு [3] "சதிரிள மங்கையர் தாம் வந்து எதிர்கொள்ள" என்கிறபடியே புதிய இளமையினை எப்பொழுதுமே இயல்பாகவுடையவர்களான வேறு தெய்வப் பெண்கள் சிலர் எதிர் கொள்ள,

வைகுந்தம் புக்கிருந்து-அலங்காரத்தோடு கூடி மகிழ்ச்சியோடு சென்ற பெண் நாயகன் வீட்டிலே புகுருமாறு போலே, [4] "மன்னிய மாதவனோடு வைகுந்தம் புக்கிருப்பார்" என்கிறபடியே திருமகள் கேள்வனுடைய பேரின்பத்திற்கு நிலைக்களமான ஸ்ரீவைகுண்டத்தை அடைந்து அவனோடே கூடியிருந்து, வாய்மடுத்துப் பெருங்களிச்சியாக - நாயகன் வீட்டிற்குப் பெண்வந்தபிறகு தம்பதிகளும் மற்றும் உள்ள உறவினர்களும் கூடியிருந்து பெருங்களிச்சி உண்ணுமாறு போலே, [5] "அடியார்கள் குழாங்களும்" அவனுமாக இருக்கிற சேர்த்தியிலே [6] "அடியேன் வாய்மடுத்துப் பருகிக் களித்தேனே" என்று பெருங்களிச்சியாக முழுமிடறு செய்து, வானவர் போகம் உண்டு - [7] "கட்டெழில் வானவர்போகம் உண்பாரே" என்கிறபடியே நித்தியசூரிகள் அநுபவிக்கிற போகத்தை [8] "இவன் எல்லாக் குணங்களையும் அந்தப் பரமாத்மாவோடு அநுபவிக்கிறான்" என்கிறபடியே அநுபவித்து,

1. திருவாய். 7. 6: 11. 2. திருவாய். 10. 9. 10.
3. திருவாய். 10. 9: 10. 4. நாய்ச்சியார் திரு. 3. 10.
5. திருவாய். 2. 3: 10. 6. திருவாய். 2. 3: 9.
7. திருவாய். 6. 6: 11.
8. "ஸோஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதா" என்பது, தைத்திரியோபநிட.



கோப்புடைய கோட்டுக்கால் கட்டில் மிதித்து ஏறி - நாயகனுடைய கலவிக்குப் படுக்கையிலே ஏறுமாறு போலே, [1] "கோப்புடைய சீரிய சிங்காசனம்" என்றும், [2] "கோட்டுக்கால் கட்டில்" என்றும் சொல்லுகிறபடியே உபயவிபூதியும் தொழிலாக வகுப்புண்டு எல்லாப் பொருள்கட்கும் புகலிடமான தெய்வத்தன்மை பொருந்திய கட்டிலிலே [3] "அவனை இப்படி அறிந்தவன் தனது காலால் அவனுடைய கட்டிலில் ஏறுகிறான்" என்கிறபடியே பாதபீடத்திலே அடியிட்டேறி, பரத அக்ரூர மாருதிகளைப் பரிஷ்வங்கித்த மணிமிகு மார்பிலே - [4] "காகுத்தன், தலையால் முன்னால் விழுந்துள்ள அந்தப் பரதனை நன்கு எடுத்துத் துடைமீதுவைத்து மகிழ்ந்தவராய் நன்றாகத் தழுவினார்" என்றும், [5] "அந்தக் கிருஷ்ணனும் துவஜம் வச்சிரம் தாமரை என்னும் ரேகைகளையுடைய தமது கைகளால் நன்றாகத் தொட்டும் இழுத்தும் அன்பாலே மிகவும் கெட்டியாக அக்ரூரனை ஆலிங்கனம் செய்து கொண்டார்" என்றும், [6] "இரண்டு சரீரத்தை உதவிய மஹாத்மாவான அந்த அநுமானுக்கு, தடுக்காத சமயம் பார்த்து என்னால் கொடுக்கப்பட்ட இந்த ஆலிங்கனமானது எல்லாக் கொடைகளுக்கும் ஒப்பாகக் கடவது" என்றும் சொல்லுகிறபடியே ஸ்ரீபரதாழ்வானையும் அக்ரூரனையும் திருவடியையும் ஆதரித்து அணைத்துக் கொண்ட [7] "மணி மிகு மார்பு" என்கிறபடியே கௌஸ்துபம் நிறம் பெறும்படி அழகியதான திருமார்பிலே,

குரு மா மணியாய் அணையும் வஸ்துவுக்கு - [8] "குருமாமணிப் பூண்" என்று சிறப்பித்துச் சொல்லப்படுவதாய் இறைமைத் தன்மைக்கு அடையாளமான ஸ்ரீகௌஸ்துப மணியைப்போன்று இனிய

1. திருப்பாவை, 23. 2. திருப்பாவை, 19.
3. "தமேவம்வித் பாதேநாத்யாரோஹதி" என்பது, கௌஷீதகி. 1. 5.
4. தம் ஸமுத்தாப்ய காகுத்ஸ்த: சிரஸ்யாக்ஷிபதம் கதம்
அங்கே பரதமாரோப்யமுதித: பரிஷஸ்வஜே.
என்பது, ஸ்ரீராமா. யுத். 130: 39.
5. ஸோப்யேநம் த்வஜ வஜ்ராப்ஜக்ருத சிந்ஹேந பாணிநா
ஸம்ஸ்ப்ருஶ் யாக்ருஷ்யச ப்ரீத்யா ஸுகாடம்பரிஷஸ்வஜே.
என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 5. 13: 5.
6. ஏஷஸர்வஸ்வபூதஸ்து பரிஷ்வங்கோ ஹநுமத:
மயாகாலமிமம் ப்ராப்ய தத்தஸ்தஸ்ய மஹாத்மந:
என்பது, ஸ்ரீராமா. யுத். 1. 13.
7. திருவாய். 10. 3: 5. 8. பெரியாழ்வார் திரு. 1. 3. 10:

தாய் ஒளியையுடையதாய்க் கொண்டு அணைகிற ஆன்மாவிற்கு, மணிவல்லிப் பேச்சு வந்தேறி அன்று - [1]வண் பூ மணிவல்லி'' என்கிறபடியே வள்ளன்மையுடையதாய் இனியதாய்த் தனக்குத் தானே ஆபரணமாம்படி அழகியதாய், கொள்கொம்பு பெருவிடில் தலையெடுக்க மாட்டாமை தரைப்பட்டுக் கிடக்கும் கொடி போன்றவள் என்கிற பெண் தன்மையோடு கூடியதாய் வரும் பேச்சு வந்தேறி அன்று; இயல்பாகவே அமைந்தது என்றபடி.

'பெண்பேச்சு' என்ன அமைந்திருக்க 'மணிவல்லிப் பேச்சு' என்றது, 'மணிமிகு மார்பில் மணியாய் அணையும்' என்றதோடு ஒக்க 'மணிவல்லி' என்ருல் சொற்கட்டளையால் வரும் சுவை உண்டாகையாலே. இதனுல் பெண்தன்மை ஆன்மாவிற்கு இயல்பாகவே அமைந்தது ஆகையாலே அதனை உள்ளபடி அறிந்த இவர்க்கு, அந்தப் பெண் தன்மையால் வந்த பேச்சு இயல்பு என்று சொல்லிற்ருயிற்று.

(35)

## 122

*[2]இன்பும் அன்பும் முற்படுவது கொழுந்து விடுவதாகிறது, கடிமாமலர்ப்பாவையோடு உள்ள சாம்ய ஷட்கத்தாலே.*

என்பது சூத்திரம்.

**வியாக்:**— இப்படிக் கேவலம் ஒப்புமை அன்றிக்கே, பெண்களுக்குள் உயர்ந்தவளான பிராட்டியோடே ஒப்புமையும், பரிசுத்தமான ஆன்ம சொரூபத்துக்கு உண்டு என்னுமதனைத் தெளிவுபட அருளிச் செய்கிருர் இச் சூத்திரத்தால்.

அதாவது, இன்புமுற்படுவது - [3]"நமக்கும் பூவின்மிசை நங்கைக்கும் இன்பனே'' என்கிறபடியே இன்று அடைந்த நமக்கும், நித்தியசூரிகளுக்கும் அவ்வருகாய் உருவகுணத்தாலும் ஆன்ம குணத்தாலும் நிறைந்தவளாக இருக்கிற பிராட்டிக்கும் இன்பனுமிடத்தில், [4]முற்பட இங்கே இன்பனுய், பின்பாயிற்று அவளிடத்தில் இன்பனுக இருப்பது என்னும்படி பிராட்டிக்கு முன்னே இவர் பக்கல்

1. *திருவிருத்தம், 9.*

2. *'முற்படுவது' என்பதனை, 'இன்பு முற்படுவது' என்று முன்னே கூட்டுக. சாம்யம் - ஒப்புமை. ஷட்கம் - ஆறுதன்மைகள்.*

3. *திருவாய். 4. 5: 8.*

4. *'நமக்கும்' எனத் தம்மை முன்னர் அருளிச்செய்வதனுல் இப்பொருள் போதருகின்றது.*



இன்பனுவது, அன்பு கொழுந்து விடுவதாகிறது - [1]"கோலமலர்ப் பாவைக்கு அன்பாகிய என் அன்பேயோ'' என்கிறபடியே எல்லையற்ற இனியளான பிராட்டிக்கு அன்பனுகையாலே அவளால் ஏற்றுக் கொள்ளப்பட்ட என் பக்கலிலும் அன்பனுனவனே என்னும்படி அவள் பக்கல் பண்ணின சிநேகம் இவரளவும் வளர வருவதாய், இப்படி இன்பு முற்படுவது அன்பு கொழுந்து விடுவதாகிறது, கடி மா மலர்ப் பாவையோடு உள்ள - [2]"கடிமாமலர்ப்பாவை ஒப்பாள்'' என்கிறபடியே வாசனை மிக்கிருந்துள்ள மலரில் பிறப்பாலும் ஒருகாரணம் பற்றி வாராத பெண் தன்மையாலும் எல்லை அற்ற இனியளான பிராட்டியோடு ஒக்கச் சொல்லலாமவள் என்னும்படி பிராட்டியோடு இத்தலைக்கு உள்ள, சாம்ய ஷட்கத்தாலே-ஒப்புமைக்குக் காரணமான [3]அநந்யார்ஹசேஷத்வம், அநந்யசரணத்வம், அநந்யபோக்யத்வம், சம்ஶ்லேஷத்தில் தரிக்கை, விஶ்லேஷத்தில் தரியாமை, ததேகநிர்வாஹ்யத்வம் ஆகிற ஆறுவகைகளாலே.

'இன்பன்' என்றது சிநேகிதன் என்றபடி. ஆகையாலே அன்பு என்ற சொல்லைப் போன்று இன்பு என்ற சொல்லும் சிநேகத்தைக் கூறுவதாகையாலே, சிநேகம் முற்படுவது கொழுந்து விடுவதாகிறது என்றபடி. 'இன்பு' என்றும், 'அன்பு' என்றும் இரண்டு வெவ்வேறு சொற்களாகச் சொல்லிற்று, முற்படுதலும் கொழுந்து விடுதலும் சொல்லுகிற இடங்களில் சிநேகத்தைச் சொல்லுவனவாகச் சொல்லப்பட்ட சொற்கள் இவை ஆகையாலே இரண்டு சொற்களும் தோற்றுகைக்காக. 'பிராட்டியோடு உள்ள' என்ன அமைந்திருக்க, அங்ஙனம் கூருது "கடிமாமலர்ப்பாவையோடுள்ள'' என்று கூறியது, அந்தத் திருப்பாசுரத்திலே பிராட்டி ஒப்புமை வெளிப்படையாகச் சொல்லியிருக்கையாலும், கந்தல் கழிந்த சொரூபத்தையுடையவர்கள் எல்லாரையும் இப்படிச்சொல்லுகிறது, சொரூபத்தோடு கட்டுப்பட்டிருக்கின்ற இவ்வறுவகையான ஒப்புமையாலே என்று அறிவிக்கைக்காகவும்.

'ஒப்புமையாலே' என்னுமல் '**அறுவகையான ஒப்புமை**

1. *திருவாய். 10. 10: 7.* 2. *பெரியதிருமொழி. 3. 7: 9*

3. *அநந்யார்ஹசேஷத்வம் - அவன் ஒருவனுக்கே அடிமைப்பட்டிருத்தல். அநந்ய சரணத்வம் - அவன் ஒருவனையே புகலாக நம்பியிருத்தல். அநந்யபோக்யத்வம் - அவன் ஒருவனுக்கே இனியளாக இருத்தல். சம்ஶ்லேஷத்தில் தரிக்கை - சேர்க்கையில் தரித்திருத்தல். விஶ்லேஷத்தில் தரியாமை - பிரிவில் தரியாதிருத்தல். ததேக நிர்வாஹ்யத்வம் - அவன் ஒருவனுலேயே காப்பாற்றப்படுதல்.*

யாலே' என்று விதந்து கூறியது, [1] நிருபகத்வம், அநுரூபத்வம், அபிமதத்வம், சேஷத்வசம்பந்ததுவாரா பாவம், புருஷகாரத்வம், பிராப்ய பூரகத்வம் முதலாக உள்ள தன்மை விசேடங்கள் பிராட்டிக்கே உரியவைகள் ஆகையாலே. (36)

**123**

[2] உண்ணுது கிடந்து ஓர் மாயையினுல் என்னும் வீறுடைய முடிக்குரியாரோடு, இத்திரு மண்ணேரன்னஒண்ணுதல் பின்னைகொல் என்கிற ஒப்பு, தென்பால் நெடுமாடம் கடுஞ்சிலை அம்புளரி ஊட்டி நீறெழ எரித்த பெருந்தோற்றத்து ஆருயிர்க்காகுத்தன், ஆதியம்காலம் மண்புரை பொன்மாதின் துகளாடி, எருதேழ்தழீஇச் சறையினுர் என்னுமவற்றிலே தோன்றும்.

என்பது சூத்திரம்.

**வியாக் :—** பரிசுத்தமான ஆன்ம சொருபத்துக்கு இப்படி ஆறு வகைகளாலே பிராட்டியோடு ஒப்புமை உண்டு ஆகையாலே பிராட்டியின் நிலை இவர்க்கு வந்தேறி அல்லாமையை விளக்கினவராய் நின்ருர் மேல். இப்படிப்பட்ட தன்மைகளாலே பெரியபிராட்டியாரோடு உள்ள ஒப்புமை அன்றிக்கே, தம்முடைய தன்மை விசேடங்க

---

1. நிருபகத்வம் - இறைவனுக்கே அசாதாரண தருமமாக இருப்பது. அநுரூபத்வம் - அவனுக்கு ஒத்த வடிவினையுடையவளாக இருப்பது. அபிமதத்வம் - அவனுக்கு விருப்பமானவளாக இருப்பது. சேஷத்வ சம்பந்த துவரா பாவம் - உயிர்கள் இறைவனுக்கு அடிமைப்படுவதற்கு இவள் வழியாக இருப்பது. புருஷகாரத்வம் - இறைவனேடு உயிர்களைச் சேர்த்து வைக்கும் தன்மை. பிராப்ய பூரகத்வம் - உயிர்கள் செய்யும் கைங்கரியத்தை இறைவன் திருவுள்ளத்தில் நிரம்பச் செய்வது.

2. உண்ணுது என்னும் வீறுடைய முடிக்குரியாரோடு இத்திரு என்கிற ஒப்பு, தென்பால் நெடுமாடம் கடுஞ்சிலை அம்பெரி ஊட்டி நீறெழ எரித்த பெருந்தோற்றத்து ஆருயிர்க் காகுத்தன் என்னுமவற்றிலே தோன்றும் என்றும்; கிடந்து என்னும் வீறுடைய முடிக்குரியாரோடு மண்ணேரன்ன ஒண்ணுதல் என்கிற ஒப்பு, ஆதியங்காலம் மண்புரை பொன்மாதின் துகளாடி என்னுமவற்றிலே தோன்றும் என்றும்; ஓர் மாயையினுல் என்னும் வீறுடைய முடிக்குரியாரோடு பின்னை கொல் என்கிற ஒப்பு, எருதேழ்தழீஇ சறையினுர் என்னுமவற்றிலே தோன்றும் என்றும் பிரித்துக் கூட்டிப் பொருள் காண்க.



ளாலே, பகவானுடைய காதலுக்குரியவர்களான பட்டத்துத்தேவிமார்கள் மூவரோடும் இவர்க்கு உண்டான ஒப்புமை இவர் திருப்பாசுரங்களிலே பிரகாசிக்கும் என்கிருர் இச்சூத்திரத்தால்.

உண்ணுது என்னும் - [1] "உண்ணுது உறங்காது ஒலிகடலை ஊடறுத்துப் பெண்ணுக்கை யாப்புண்டு தாமுற்ற பேதெல்லாம்" என்கிறபடியே ஜனகசுல சுந்தரியான தன்னைப் பிரிந்தபோது [2] "தீரோதாத்த நாயகனுகையாலே தான் வேறுபடுதற்குரிய காரணங்கள் உண்டானாலும் தைரியத்தாலே புறம் தோற்றுமல் இருக்கும் சக்கரவர்த்தித் திருமகனை [3] "இராகவன் மாம்சத்தை உண்ணவில்லை" என்றும், [4] "ஸ்ரீராமபிரான் எப்பொழுதும் உறக்கம் இல்லாதவராக இருக்கிருர்" என்றும், [5] "காட்டு ஈக்களையும் கொசுக்களையும் சரீரத்திலிருந்து ஓட்ட மாட்டார்" என்றும் சொல்லுகிறபடியே ஊணும் உறக்கமும் அற்று, கடித்ததும் ஊர்ந்ததும் அறியாதபடி செய்யவல்ல சிறப்பினுல் வந்த, வீறுடைய முடிக்கு உரியாரோடு-வீறுடையளாய்ச் சர்வேச்வரனுடைய சாம்ராச்சியத்திலே அவனேடு ஒக்க முடிசூடுகையாலே முடிக்கு உரியளான பெரியபிராட்டியாரோடு, இத்திரு என்கிற ஒப்பு - [6] "மாயோன் திறத்தனளே இத்திரு" என்றும், [7] "சூரியனேடு உள்ள ஒளியைப்போன்று இராகவனேடு நான் வேறுபட்டவள் அல்லள்" (பிரியாதவள்) என்றும் சொல்லுகிறவாறே எல்லா நிலைகளிலும் அவன்திறம் அல்லது அறியாளாய் நேரே இலக்குமியோடு விகல்பிக்கலாம்படி தன்மையையுடைய இவள் என்று சொல்லும்படி இவர்க்கு உண்டான ஒப்பு,

---

1. நாய்ச்சியார் திரு. 11: 7.

2. "கம்பீர: ஸத்ய ஸம்பந்ந: க்ருபாவாந் அவிகத்தந:, பரகீய குணக்ராஹீ தீரோதாத்தோ நிகத்யதே" என்கிறபடி இருப்பவன் தீரோதாத்த நாயகன் ஆவன். இவற்றுள் அவிகத்தனுவது, தன்னை ஒருவன் கொண்டாடுகையில் அதில் கண்வையாதிருப்பவன். மேற்கூறிய குணங்கள் ஸ்ரீராமபிரானிடம் பொருந்தியிருந்தமை அனைவரும் அறிந்தது ஒன்று.

3. "நமாம்ஸம் ராகவோ புங்க்தே" என்பது, ஸ்ரீராமா. சுந். 36: 42.

4. "அநித்ரஸ் ஸததம் ராம:" என்பது, ஸ்ரீராமா. சுந். 36: 44.

5. "நைவதம்சாந் ந மசகாந்" என்பது, ஸ்ரீராமா. சுந். 36: 42.

6. திருவாய். 4' 4: 7.

7. "அநந்யா ராகவேணுஹம்" என்பது, ஸ்ரீராமா. சுந். 21: 15.

தென்பால் நெடுமாடம் கடுஞ்சிலை அம்பெரி ஊட்டி நீறு எழ எரித்த பெருந்தோற்றத்து ஆருயிர்காகுத்தன் என்னுமவற்றிலே தோன்றும்-தென்பால் - [1] "தென்பால் இலங்கை, வெங்களம் செய்த நம் விண்ணோர் பிரானார் துழாய் துணையா, நங்களை மாமை கொள்வான் வந்து தோன்றி நலிகின்றதே" என்று, சக்கரவர்த்தித் திருமகனைப் பிரிந்து, துன்புறுத்தும் பொருள்களாலே நோவுபடுவது, நெடுமாடம் - [2] "வழா நெடும் துன்பத்தள் என்றிரங்கார் அம்மனோ இலங்கை, குழா நெடுமாடம் இடித்த பிரானார் கொடுமைகளே" என்று, காதல் இல்லையானால் பொதுவான அருளும் இல்லையோ என்று கொடுமை சொல்லுவது, [3] கடுஞ்சிலை-"காயுங் கடுஞ்சிலை என் காகுத்தன் வாரானால்" என்று எதிரிகளிடம் தான் கருணை செய்யிலும் கருணை செய்யாத வில்லையுடைய காகுத்தன் இந்நிலையில் வரவில்லையே என்று வெறுப்பது, [4] அம்பெரி - "இலங்கைநகர், அம்பெரி உய்த்தவர் தாளிணைமேல் அணி, வம்பவிழ் துழாய் மலர்க்கே இவள், நம்பும்" என்று, இலங்கையை அம்புகளாகிய நெருப்பினாலே சாம்பலாக்கினவர் திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்படுவது, ஊட்டி - [5] "தீமுறத் தென்னிலங்கை ஊட்டினான் தாள் நயந்த, யாமுற்றதுற்றாயோ" என்று, இலங்கையை எல்லாம் நெருப்பிற்கு விருந்திட்டவன் திருவடிகளை ஆசைப்பட்டநான் பட்டதுபட்டாயோ என்று தம்மோடுஒத்த துக்கமுடையவர்களைக் கட்டிக் கொண்டு அழுவது, நீறு எழ - [6] "மாறில் போர் அரக்கன் மதிள் நீறு எழச் செற்றுகந்த, ஏறு சேவகனார்க்கு என்னையும் உளள் என்மின்களே" என்று, எதிர் இல்லாத போரையுடைய இராவணன் தனக்கு அரணாக விட்ட மதிளைத் துகளாக்கிப் பொகட்ட பிரசித்தமான வீரத்தையுடையவர்க்குக் காப்பாற்றத் தகும் பொருள்களிலே நானும் ஒருத்தி உண்டு என்று சொல்லுங்கோள் என்று தூதுவிடுவது, எரித்த - [7] "கிளர் அரக்கன் நகர் எரித்த, களி மலர்த்துழாய் அலங்கல் கமழ் முடியன்-கவராத அறிவினால் குறை இலம்" செல்வத்தினால் மேம்பட்ட இராவணனுடைய நகரத்தைச் சாம்பலாக்கி, முடி சூடி வளையம் வைத்திருக்கிறவன் விரும்பாத அறிவினால் என்ன காரியம் உண்டு என்று அவனுக்கு உறுப்பு அல்லாததை வெறுப்பது, பெரும்தோற்றத்து - [8] "காண்பெரும் தோற்றத்து என்காகுத்த நம்பிக்குஎன்,பூண்புனை மென்முலை தோற்றது பொற்பே" என்று, கண்ணுக்கு இனிதாய் அளவிட்டு அறிய முடியாத இனியதான தோற்றத்தையும் குணநிறைவினையுமுடைய சக்கரவர்த்தித் திருமகனுக்கு இவள் தன்னழகினை இழந்தாள் என்னும்படி அவனை ஆசைப்பட்டு அழகு அழிவது, ஆருயிர்க்காகுத்தன்-[1] "என் ஆருயிர்க் காகுத்தன் நின் செய்யவாய் ஒக்கும் வாயன் கண்ணன் கைகாலினன், நின் பசுஞ்சாம நிறத்தன் கூட்டுண்டு நீங்கினான், சிறு கிளிப்பைதலே இன்குரல் நீ மிழற்றேல்" என்று, பிரிவிலே தரிக்க ஒண்ணாதபடி எனக்கு உயிராக உள்ளவனான சக்கரவர்த்தித்திருமகன் என்னோடே கலந்து வைத்துப் பிரிந்தான்; இந் நிலையிலே அவனுக்குப் போலியான உன்வடிவாலே நலிகிறதற்குமேலே பேச்சாலும் நலியாதே கொள் என்று கிளியைப் பார்த்து விலக்குவதாய்க்கொண்டு பேசின திருப்பாசுரங்களிலே தோன்றும்.

1. திருவிருத்தம், 77.
2. திருவிருத்தம், 36.
3. திருவாய். 5. 4: 3.
4. திருவாய். 4. 2: 8.
5. திருவாய். 2. 1: 3.
6. திருவாய். 6. 1: 10.
7. திருவாய். 4. 8: 5.
8. திருவாய். 6. 6: 9.



கிடந்து என்னும் வீறுடைய முடிக்கு உரியாரோடு - கிடந்து என்னும் - [2] "கிடந்து இருந்து நின்று அளந்து" என்கிற திருப்பாசுரத்தின்படியே முற்றறிவினனாய் எல்லாவிருப்பமும் முற்றுப் பெற்றவனுமான சர்வேச்வரனை, பலபல விதமாகத் தன்னை அநுபவத்தாலும் நிறைவு பெற்றவனாகாதபடி பிச்சேற்றவல்ல சிறப்புடைமையால் வந்த, வீறுடைய முடிக்குரியாரோடு - வீறுடையளாய்ப் பெரிய பிராட்டியாரைப் போன்று முடிக்கு உரியளான ஸ்ரீபூமிப்பிராட்டியாரோடு, மண்ணோரன்ன ஒண்ணுதல் என்கிற ஒப்பு - [3] "மண்ணோரன்ன ஒண்ணுதலே" என்கிறபடியே ஸ்ரீபூமிப்பிராட்டியாரோடு ஒத்த சிறப்பினையுடையவள் என்று சொல்லும்படி இவர்க்கு உண்டான ஒப்புமை, ஆதிஅம்காலம், மண்புரை, பொன்மாதின், துகளாடி என்னுமவற்றிலே தோன்றும் - ஆதிஅம்காலம் - [4] "ஆதியம் காலத்து அகலிடம்கீண்டவர், பாதங்கள் மேலணி பைம்பொன்துழாய் என்றே, ஓதுமால் எய்தினள்" என்கிறபடியே வராக கல்பத்தின் ஆதியிலே இந்த மிகப்பெரிய பூமியை அண்டபித்தியில் நின்றும் ஒட்டு விடுவித்து எடுத்தவனுடைய திருவடிகளில் திருத்துழாய் என்றே பலகாலும் சொல்லும்படி பிச்சு ஏறுவது, மண்புரை-[5] "மண்புரைவையம் இடந்த வராகற்கு என், கண்புனை கோதை இழந்தது கற்பே" என்னும்படி அவனை ஆசைப்பட்டு அறிவு இழப்பது, பொன் மாதின்- [6] "ஞாலப் பொன்மாதின் மணாளன் துழாய் நங்கள் சூழ் குழற்கே,

1. திருவாய். 9. 5: 6.
2. திருவாய் 2. 8: 7.
3. திருவிருத்தம், 49.
4. திருவாய். 4. 2: 6.
5. திருவாய். 6. 6: 5.
6. திருவிருத்தம், 40.

ஏலப் புனைந்து என்னைமார் எம்மை நோக்குவது என்றுகொல்'' என்
கிறபடியே ஸ்ரீபூமிப்பிராட்டி செவ்வி கொள்ள இட்டுப் பிறந்தவன்
சூடின திருத்துழாயை உறவினர்கள் ஏற்கவே கொண்டு வந்து
நம் குழலிலே சூட்டி நம்மைப் பாதுகாப்பது என்றோ என்பது, துகளாடி-
[1] "ஏனம் ஒன்றாய்," மண்துகள் ஆடி வைகுந்தம் அன்றாள் குழல்
வாய் விரைபோல், விண்டு கள் வாரும் மலர் உளவோ நும் வியலி
டத்தே'' என்கிறபடியே ஒப்பு இல்லாத வராகமாய்ப் பெருவெள்ளத்
திலே மூழ்கிக்கிடந்த பூமியை எடுத்தபோது வடிவின் பெருமையாலே
திரு எயிற்றிலே கிடக்கிற பூமி ஒருதுகள் மாத்திரம் என்னும்படி
நின்றவனுடைய வீரச்செயலை அநுபவித்திருக்கிற இவள் இனிமை,
பரமபதம் என்ன, மற்றைய உலகங்கள் என்ன ஆகிய இருவகைப்
பட்ட உலகங்களிலும் உண்டோ என்று பெரியோர்கள் சிறப்பித்துப்
பேசும்படியை எல்லாரும் அறியும்படி பேசின திருப்பாசுரங்களிலே
தோன்றும்.

ஓர் மாயையினால் என்னும் வீறுடைய முடிக்குரியாரொடு - ஓர்
மாயையினால் என்னும் - [2] "ஓர்மாயையினால் ஈட்டிய வெண்ணெய்''
என்கிற திருவிருத்தப்பாசுரத்தில் கூறியவாறே நித்தியசூரிகள் திரு
வாராதனம் செய்துகொண்டு நிற்க, அவர்கள் அறியாதபடி அவ்வாரா
தனத்தில் விருப்பில்லாதவனாய், தாழ்விற்கு எல்லையான ஆயர்
குலத்திலே கிருஷ்ணனாக வந்து பிறந்து, தன்னைப் பெறுகைக்குச்
சுல்கமாக இட்ட யமனை ஒத்தவையான இடபங்களின் கொம்புகளி
னிடையிலே கருமாறி பாய்ந்தாற்போலே தன்னைப்பேணாமல் சென்று
விழும்படி செய்யவல்ல, வீறுடைய முடிக்குரியாரோடு - வேறுபட்ட
சிறப்பினையுடையளாய் முற்பட்ட தேவிகளைப் போன்று முடிக்குரிய
ளான, பின்னை கொல் என்கிற ஒப்பு - [3] "பின்னை கொல்'' என்கிற
படியே நப்பின்னைப் பிராட்டியோ என்றும் சொல்லும்படி இவர்க்கு
உண்டான ஒப்புமை,எருது ஏழ் தழீஇச் சறையினார் என்னுமவற்றிலே
தோன்றும் - எருது ஏழ் தழீஇ - [4] "எருதுஏழ் தழீஇ, கோளியார்
கோவலனார் குடக் கூத்தனார், தாளிணைமேல் அணி தண்ணம் துழாய்
என்றே, நாளுநாள் நைகின்றது'' என்னும்படி ஏறுதழுவுகை முதலான
வீரச்செயல்களையுடைய கிருஷ்ணன் திருவடிகளில் திருத்துழாயினை
ஆசைப்பட்டு நாள்தோறும் சரீரம் நிலைகெடுவது, சறையினார் -

1. திருவிருத்தம், 55.
2. திருவிருத்தம், 21.
3. திருவாய். 6. 5: 10.
4. திருவாய். 4. 2: 5.



[1] "கறையினார் துவர் உடுக்கைக் கடையாவின் கழிகோல்கை, சறை
யினார் கவராத தளிர் நிறத்தால் குறையிலமே'' என்கிறபடியே ஆயர்
களின் வேடத்தைத் தரித்தவனாய்க் காக்கப்படவேண்டிய பொருள்
களைக் காப்பதற்காகத் தன் உடம்பு பேணாமல் திரியும் கிருஷ்ணன்
விரும்பாத தளிர் போன்ற நிறம் எனக்கு வேண்டா என்பதாகப்
பேசின பாசுரங்களிலே தோன்றும்.

இதனால் தேவிமார் மூவரோடும் இவர்க்கு உண்டான ஒப்புமை,
சீதாபிராட்டிக்கே உரியதான இராமாவதாரத்திலும் அவ்வவதாரத்
தில் செய்து போந்த வீரச் செயல்களிலும், ஸ்ரீபூமிப்பிராட்டிக்கே
உரியதான வராகாவதாரத்திலும் அவ்வவதாரத்தில் செய்து போந்த
வீரச்செயலிலும், நப்பின்னைப்பிராட்டிக்கே உரியதான கிருஷ்ணாவ
தாரத்திலும் அவ்வவதாரத்தில் செய்து போந்த வீரச்செயல்களிலும்
அப் பிராட்டிமார்களைப் போன்றே கழி பெருங் காதலராய் அருளிச்
செய்த அவ்வத் திருப்பாசுரங்களிலே விளங்குவனவாம் என்ற
தாயிற்று. (37)

## 124

*[2] இவர்கள் தேடி நிற்க, பொய்கை முது மணல்
முல்லைப் பந்தர் முற்றம் மச்சொடு மாளிகை அவ்வவ்
விடம் புக்கு வாரிச் சிதைத்துப் பறித்துக் கிழித்துக்
கோயின்மை குறும்புசெய்து அல்லல் விளைத்துக்
கவரும் உகக்கு நல்லவர் முழுசி ஆவர் என்னும்
தேன்மொழியாலே கோகுலத்தை மறப்பிக்கும்
நகரஸ்திரீகள் நரகனைத் தொலைத்துக் கவர்ந்த
பதினாறு பல்லாயிரம் எண்ணிறந்தார் பாவம் - கடல்
ஞாலம் மின்னிடை மல்லிகை வேய்மரு பேய்முலை
முனிந்து, மற்பொரு விறல் கஞ்சனை, மங்க நூற்ற
வாயும் தீர்ப்பார் என்னுமவற்றிலே தோன்றும்.*

என்பது, சூத்திரம்.

1. திருவாய். 4. 8: 4.

2. இதனை, இவர்கள் தேடி நிற்க, பொய்கை முதுமணல் முல்லைப் பந்தர் முற்றம் மச்சொடு மாளிகை அவ்வவ்விடம்புக்கு வாரிச் சிதைத்துப் பறித்துக் கிழித்துக் கோயின்மை குறும்பு செய்து அல்லல் விளைத்துக் கவரும் உகக்கு நல்லவர் பாவம்-கடல் ஞாலம் மின்னிடை மல்லிகை வேய் மரு பேய்முலை முனிந்து என்னுமவற்றிலே தோன்றும் என்றும், முழுசி ஆவர் என்னும் தேன்மொழியாலே கோகுலத்தை மறப்பிக்கும் நகர ஸ்திரீகள் பாவம் - மற்பொரு விறல் கஞ்சனை என்னுமவற்றிலே தோன்றும் என்றும், நரகனைத் தொலைத்துக் கவர்ந்த பதினாறு பல்லாயிரம் எண்ணி றந்தார் பாவம் - மங்கநூற்ற வாயும் தீர்ப்பார் என்னுமவற்றிலே தோன் றும் என்றும் கூட்டிப் பொருள் காண்க.

**வியாக் :—** இப்படிப் பட்டத்துத் தேவிமார் மூவரோடு உள்ள ஒப்புமையே அன்றி, இவர்களை வெறுத்தாயினும் தங்களை விரும்பும்படி அவனுடைய காதலுக்கு உரியவர்களான திருவாய்ப்பாடியில் பெண்களுடையவும், அப்பெண்களையும் அவன் மறக்கும்படி தங்கள் பேச்சின் இனிமையாலே மயங்கச் செய்யும் ஸ்ரீமதுரையில் பெண்களுடையவும், நரகாசுரனைக் கொன்றபின் அவன் ஊரினின்றும் கொணர்ந்த ஸ்ரீமத் துவாரகையில் பதினாறுயிரம் தேவிமாருடையவும் தன்மைகள் இவர்க்கு உண்டு என்னுமிடம் இவர்தம் பேச்சிலே தோன்றும் என்கிறார் இச்சூத்திரத்தால்.

இவர்கள் தேடி நிற்க-[1] "தேடித் திருமாமகள் மண்மகள்நிற்க" என்கிறபடியே பட்டத்துத் தேவிமார்களான இவர்கள் தன்னைத் தேடி நிற்கும்படி இவர்களிடத்தில் விருப்பு இன்றி, பொய்கை முதுமணல் முல்லைப்பந்தர் முற்றம் மச்சொடுமாளிகை அவ்வவ்விடம் புக்கு - [2] "இப்பொய்கைக்கு எவ்வாறு வந்தாய்" என்றும், [3] "முதுமணல் குன்று ஏறி" என்றும், [4] "முல்லையின் பந்தர் நீழல் மன்னியவளைப் புணரப்புக்கு" என்றும், [5] "முற்றத்தூடு புகுந்து" என்றும், [6] "மச்சொடு மாளிகை ஏறி" என்றும், [7] "அவ்வவ்விடம்புக்கு அவ்வாயர் பெண்டிர்க்கு அணுக்கனாய்" என்றும் சொல்லுகிறபடியே, இவர்கள் புனல் விளையாடுமிடம், மற்றும் அவர்கள் விருப்பத்திற்குத் தகுதியாகத் திரளவும் தனியவும் இருக்குமிடங்களான பொய்கை, மணற்குன்று, முல்லைப் பந்தல், முற்றம், மச்சொடு மாளிகை ஆகிய அவ்வவ்விடங்களிலே சென்று புக்கு, வாரிச் சிதைத்துப் பறித்துக் கிழித்து-[8] "துகில்வாரியும் சிற்றில் சிதைத்தும்" என்றும், [9] "பந்து பறித்துத் துகில்பற்றி" என்றும், [10] "கச்சொடு பட்டைக் கிழித்து" என்றும் வருகின்றவாறே குடைந்து நீராடுகிறவர்கள் கூறைகளை வாரிக்கொள்வது, இட்டமா விளையாடுகிறவர்கள் இழைத்த சிற்றிலைச் சிதைப்பது, பந்து கழல் முதலான விளையாட்டுக் கருவிகளைப் பறிப்பது, அவர்களோடே இட்டீடு கொண்டு பட்டுகள் கச்சுகள்

'இவர்கள்' என்றது, மேற் சூத்திரத்தில் கூறிய பிராட்டிமார் மூவரையும். உகக்கும் நல்லவர் என்றது, ஆயர்குலத்துக் கோபிமார்களை. நகரஸ்திரீகள் என்றது, வட மதுரையிற் பெண்களை.

1. பெரியதிரு. 10. 8: 9.
2. நாய்ச்சியார் திரு. 3: 2.
3. பெரியாழ்வார் திரு. 1. 10. 8.
4. பெருமாள் திரு. 6: 8.
5. நாய்ச்சியார் திரு. 2: 9.
6. பெரியாழ்வார் திரு. 2.7: 3.
7. பெரியாழ்வார் திரு. 3. 2: 5.
8. பெரியதிருமொழி, 3. 8 : 8.
9. பெரியதிருமொழி, 10. 7: 5.
10. பெரியாழ்வார் திரு. 2.7: 3.



எட்டினவற்றைப் பற்றி வலித்துக் கிழிப்பதாய், கோயின்மை குறும்பு செய்து - [1] "கோயின்மை செய்து கன்மம் ஒன்றில்லை" என்றும், [2] "குறும்பு செய்வான் ஓர் மகனைப் பெற்ற" என்றும் வருகின்றவாறே தன்னை ஏவுவார் மற்றொருவர் இல்லாமையால் தனக்குத் தானே உரியவனான ஒருவன் செய்யுமதனையும், ஒருதலைவன் கீழ் அடங்கி நிற்காமல் மூலையடியே நடத்துவார் செய்யுமதனையும் செய்து, அல்லல் விளைத்து - [3] "அல்லல் விளைத்த பெருமானை" என்று, பேர் ஆரவாரம் விளைத்து, கவரும் - [4] "ஆயர்பாடிக் கவர்ந்து உண்ணும்" என்று திருவாய்ப்பாடியில் பெண்களை அடைய முற்றூட்டாக விரும்பி உண்ணும் என்கிறபடியே அவனாலே விரும்பப்படுமவர்களாய், அதனாலே, உகக்கு நல்லவர் பாவம் - [5] "நீ உகக்கு நல்லவர்" என்கிறபடியே அவனுடைய உகப்புக்கு விஷயமான அழகினையுடையவர்கள் என்று அறிகுறியாகக் கருதப்படுகின்ற திருவாய்ப்பாடியில் பெண்களுடைய தன்மை இவர்க்குஉண்டு என்னுமிடம்,

கடல் ஞாலம் – கிருஷ்ணனைப் பிரிந்த பிரிவு ஆற்றமாட்டாமல் [6] "ஏ துஷ்டகாளியனே! இங்கு நில், நான் கிருஷ்ணன் என்று மற்றவள் சொன்னாள்" என்றும், [7] "நான் கிருஷ்ணன், இத்தகைய நான் அழகாக நடக்கப்போகின்றேன், அந்த நடை உங்களால் காணத்தக்கது" என்றும் கூறி அவர்கள் அநுகரித்தாற்போன்று, இவர் அவனைப் பிரிந்த பிரிவு ஆற்றாமையாலே அநுகரித்த [8] 'கடல் ஞாலம்" என்ற திருவாய்மொழியிலும், மின்னிடை - வேறு காரியங்களை மிகுதியுமுடையனாகையாலே அப் பெண்கள் விரும்பின சமயத்தில் வாராமல் அவன் விளம்பித்து வந்தால் அவர்கள் ஊடுமாறு போலே, இவர் அவனோடு ஊடின [9] "மின்னிடை மடவார்" என்ற திருவாய்மொழியிலும், மல்லிகை - பகல் எல்லாம் பசு மேய்க்கப் போய் மாலையில் அவற்றுடனே வரும் கிருஷ்ணனைப் பசுக்களின் முற்கொழுந்திலே காணாமல் பிற்குழையிலே வருகிற அவன் வரப் பற்று

1. திருவாய். 6. 2: 6.
2. நாய்ச்சியார் திரு. 12: 3.
3. நாய்ச்சியார் திரு. 13: 10.
4. நாய்ச்சியார் திரு 14: 2.
5. திருவாய். 10. 3: 8.
6. துஷ்டகாளிய திஷ்டாத்ர க்ருஷ்ணோஹமிதிசாபரா.
என்பது, ஸ்ரீவிஷ்ணுபு. 5. 13: 27.
7. க்ருஷ்ணோஹம் ஏஷலலிதம் வ்ரஜாம்யாலோக்யதாங்கதி:
என்பது, ஸ்ரீவிஷ்ணுபு. 5. 13: 27.
8. திருவாய். 5. 6: 1.
9. திருவாய். 6. 2: 1.

மல் ஒரு மாலை நேரத்திலே ஐந்து லக்ஷம் குடியில் பெண்களும் துன் புறுத்தும் பொருள்களுக்கு இடைந்து கூப்பிட்டாற் போலே, இவர் கூப்பிட்ட மாலைப்பூசலான [1]"மல்லிகை கமழ்தென்றல்" என்ற திருவாய்மொழியிலும், வேய்மரு - இரவெல்லாம் கண்ணனோடே கூடவிருந்து போது விடிந்தவாறே அவன் பசு மேய்க்கப் போகும் காலம் என்னும் நினைவாலே அவனை அணைத்துக்கொண்டிருக்கச் செய்தே பிரிந்து சென்றானாகவே கருதி, துன்புறுத்தும் பொருள்களும் கலவிக் காலத்து அவன் செய்த செயல்களும் புறம்பும் உள்ளும் நின்று நலிகிற நலிவினை அப்பெண்கள் அவனுக்குச் சொல்லிக் கூப் பிட்டாற் போலே, இவர் கூப்பிட்ட காலைப் பூசலான [2]"வேய்மரு தோளிணை" என்ற திருவாய்மொழியிலும், பேய்முலை முனிந்து - விரோதிகளாய்த் தன்னை வந்து கிட்டின பூதனை சகடம் இரட்டை மருதமரங்கள் முதலாயினவற்றினுடைய நினைவினை அவை தம்மோடே போக்கித் தன்னை நமக்காக நோக்கித் தந்த உபகாரகனை நான் கிட்டு வது என்றோ என்றும், அப்படிச் செய்த கிருஷ்ணனாகிற உபகாரக னுக்கு என் பெண் தன்மையை இழந்தேன் என்றும் சொன்ன [3]"பேய்முலை உண்டு", [4]"முனிந்து சகடம் உதைத்து" என்ற திருப்பாசுரங்களிலும் தோன்றும்.

முழுசி ஆவர் என்னும் தேன்மொழியாலே கோகுலத்தை மறப் பிக்கும் நகர ஸ்திரீகள் பாவம் - ஸ்ரீமாலாகாரரும் கூனியும் கொடுத்த திருமாலையையும் சாந்தையும் சாத்திக்கொண்டு பெருந் தெருவின் வழியாலே எழுந்தருளி, குவலயாபீடத்தைக் கொன்று நிற்கிறபோது [5]"முழுசி வண்டு ஆடிய" என்றும், [6]"ஆவர் இவர் செய்தறியார்" என்றும் வருகிற திருப்பாசுரங்களிற் சொல்லுகிறபடியே ஒப்பனை அழகிலும் வடிவழகிலும் குவலயாபீடத்தைக் கொன்ற செயலிலும் தோற்று, [7]"தோழிகளே! மிகச் சிவந்த திருக்கண்களையுடையதும் யானையோடு போர் செய்ததால் உண்டான வருத்தத்தால் வியர்வைத் துளிகள் நிரம்பியதுமான கிருஷ்ணன் முகத்தைப் பாருங்கள்" என்று

1. திருவாய். 9. 9: 1.
2. திருவாய். 10. 3: 1.
3. திருவாய். 5. 3: 8.
4. திருவாய். 7. 3: 5.
5. பெரியதிருமொழி, 2. 8: 7.
6. பெரியதிருமொழி, 3. 3: 7.
7. ஸக்ய: பச்யத க்ருஷ்ணஸ்ய முகமத்யருணேக்ஷணம்,
கஜயுத்த க்ருதாயாஸஸ்வேதாம்பு கணிகாசிதம்.
என்பது, ஸ்ரீவிஷ்ணுபு. 5. 20: 53.



தம்மில் தாங்கள் பேசுகிற [1]"மழறு தேன்மொழி" என்கிறபடியே மழலைத்தேன்போலே இனிதான பேச்சுக்களாலே [2]"மதுரையம் பதியை அடைந்து அந்நகரத்துப் பெண்களுடைய இனிமை பொருந் திய வார்த்தைகளாகிய தேனைக் காதுகளினாலே பருகுகின்ற கண் ணன் இனி எப்படிக் கோகுலத்திற்கு வருவார்?" என்று கோகுலத் தில் பெண்கள் பேசும்படி கோகுலத்தை அவன் மறக்கும்படி செய்யும் ஸ்ரீ மதுரையில் பெண்களுடைய தன்மை இவர்க்கு உண்டு என்னுமிடம், மற்பொரு விறல் கஞ்சனை என்னுமவற்றிலே தோன்றும்- மற்பொரு - [3]"மற்பொரு தோளுடை மாயப்பிரானுக்கு-என், கற்புடை யாட்டி இழந்தது கட்டே" என்கிறபடியே பிரபலரான மல்லரோடே தோளில் சாந்து அழியாதபடி போரைச் செய்து கொன்ற ஆச்சரி யத்தையுடையனான உபகாரகனுக்கு அறிவுடையளாய் இருக்கிற என் பெண் தனக்கு உள்ளவை அடங்கலும் இழந்தாள் என்றும், விறல் கஞ்சனை - [4]"விறல், கஞ்சனை வஞ்சனை செய்தீர் உம்மை, தஞ்சம் என்றிவள் பட்டனவே" என்கிறபடியே பெருமிடுக்கனான கம்சனை அவன் செய்த வஞ்சனை அவனோடே போம்படி செய்தவரே! உம்மையே தனக்குத் தஞ்சமென்று கொண்டிருந்த இவள் பட்ட வெள் ளம் என்தான்! என்றும் தம்மாட்டு அன்புடையார்கள் சொன்ன பாசுரங்களாலே மல்லரையும் கம்சனையும் அழித்த கிருஷ்ணனை அந் தச் சுவட்டோடே அநுபவிக்க ஆசைப்பட்டமையைப் பேசின பாசுரங் களிலே தோன்றும்.

நரகனைத் தொலைத்துக் கவர்ந்த பதினாறு பல்லாயிரம் எண்ணி றந்தார்பாவம்-நரகனைத் தொலைத்துக் கவர்ந்த-[5]"நரகனைத்தொலைத்த கரதலத்து" என்றும், [6]"நரகன் தன்னைச் சூழ்போகி வளைத்து எறிந்து, கன்னிமகளிர் தம்மைக் கவர்ந்த" என்றும் சொல்லுகிற படியே நரகாசுரன் கன்னிப்பெண்களாகக் கொணர்ந்து வந்து திரட்டி வைக்க, அவனைக் கொன்று, கவர்ந்த தன்னாலே அங்கீகரிக்கப்பட்ட வர்களாய், பதினாறு பல்லாயிரம் எண்ணிறந்தார் பாவம் -[7]"பதினாரு

1. திருவாய். 6. 2: 5.
2. மதுராம் ப்ராப்ய கோவிந்த: கதம்கோகுலமேஷ்யதி
நகரஸ்த்ரீகலாலாப மதுஶ்ரோத்ரேண பாஸ்யதி.
என்பது, ஸ்ரீவிஷ்ணுபு. 5. 18: 13.
3. திருவாய். 6. 6: 10.
4. திருவாய். 2. 4: 8.
5. பெரியதிருமொழி, 10. 9: 4.
6. பெரியாழ்வார்திரு. 4. 3: 3.
7. பெரியாழ்வார்திரு. 4. 9: 4.

மாயிரவர் தேவிமார்'' என்றும், [1]''பல்லாயிரம் பெருந்தேவிமார்'' என்றும், [2]''எண்ணிறந்த பெருந்தேவிமார்'' என்றும் சொல்லுகின்றபடியே ஆயிரம் இரண்டாயிரம் அல்லாமையாலே 'பல்லாயிரம்' என்றும், 'எண்ணிறந்த' என்றும் சொல்லப்படுமவர்களாய் [3]''பதினறுயிரம் பெண்கள்'' என்று புராணங்களிலே கூறப்பட்டவர்களான பதினறுயிரம் தேவிமார்களுடைய தன்மை இவர்க்கு உண்டு என்னுமிடம், மங்கநூற்ற வாயும் தீர்ப்பார் என்னுமவற்றிலே தோன்றும் - மங்கநூற்ற - [4]''நூற்றுவரை அன்று மங்கநூற்ற, நிகர் இல் முகில்வண்ணன் நேமியான் என் நெஞ்சம் கவர்ந்து எனை ஊழியான்'' என்று, துரியோதனன் முதலியோர் மண்ணுண்ணும்படி மந்திரித்த கிருஷ்ணனுக்கு நெஞ்சு பறி கொடுத்தமை சொன்ன திருப்பாசுரத்திலும், வாயும்-துரியோதனன் முதலியோரை அழிப்பதற்காக அவன் எழுந்தருளினபோது பிரிவாற்றுமையாலே கண்ணுஞ்சுழலையிட்டு அவர்கள் [5]''ஓ அன்றிலே! இரவில் இறைவனலே மறைக்கப்பட்ட அறிவையுடைய உலகமானது உறங்கும்போது நீ உறக்கம் அற்ற தாய்க் கதறுகிருய், படுக்கையில் படுக்கிருய் இல்லை, தாமரைபோன்ற திருக்கண்களையும் புன்முறுவலையும் கம்பீரமான செயல்களையும் சிறந்த பார்வையையுமுடைய கிருஷ்ணனலே எங்களைப்போன்று நீயும் மிகமிகப் புண்பட்ட மனத்தையுடையையானயோ'' என்பது போன்று புலம்பினற் போன்று, நாரை அன்றில் முதலானவற்றிற்கு வெண்மை பிரிவினலே கூப்பிடுதல் முதலானவை எப்பொழுதும் இயல்பாகவே அமைந்தவை என்று அறியாமல், இறைவனைப் பிரிந்த பிரிவாலே தமக்கு உண்டான பசலைநிறம் முதலியவைகளைப் போன்றவையாம் அவையும் எனக் கருதி அவற்றுக்குமாகத் தாம் நோவுபட்டுப் புலம்பின [6]''வாயும் திரையுகளும்'' என்ற திருவாய்மொழியிலும், தீர்ப்பார் - [7]''தேர்ப்பாகனர்க்கு இவள் சிந்தை துழாய்த் திசைக்கின்றதே'' என்று, அடியார்க்காகத் தேர்ப்பாகனுக இருந்த

1. *பெரியாழ்வார்திரு.* 4. 1: 6.  2. *பெரியாழ்வார்திரு.* 4.2:10.

3. ''*ஷோடஶஸ்த்ரீ ஸஹஸ்ராணி*''
*என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா.* 5. 31: 18.

4. *திருவாய்.* 7. 3: 10.

5. *குரரிவிலபஸித்வம் வீதநித்ராநஶேஷே*
*ஸ்வபதி ஜகதிராத்ர்யாமீஶ்வரக்ரஸ்த போதே*
*வயமிவஸகிகச்சித்காட நிர்விண்ண சேதா*
*நயந நளிந ஹாஸோதார லீலேக்ஷணேந.*
*என்பது, ஸ்ரீபாகவதம்,* 10. 90: 15.

6. *திருவாய்.* 2. 1: 1.  7. *திருவாய்.* 4. 6: 1.



வனை அனுபவிப்பதற்காக இவள் மனம் கலங்கி அறிவு கெடுகிருள் என்று தொடங்கி [1]''வண்துவராபதி மன்னனை ஏத்துமின் ஏத்துதலும் தொழுது ஆடுமே'' என்று ஸ்ரீமத் துவாரகைக்கு அரசனுனவனை வாழ்த்தினுல் இவள் நோய் தானே தீரும் என்று தலைக்கட்டின ''தீர்ப்பாரை யாம் இனி எங்ஙனம் நாடுதும்'' என்ற திருப்பதிகத்திலும் தோன்றும் என்றபடி. (38)

## 125

*[2]இரான்எனில் நசவாகக் குழைத்தவன் பின்தொடர இருந்த வன்சிறையிலும், விதிதன் புணைவன் என்று, ஜீவிதாதிகளாலே குறை இன்றி, மாயும் வகை விஷ சஸ்த்ரங்கள் தேடி, வில்வலவா ஹா என்று, இரக்கம் எழாக் கொடுமைகள் சங்கித்து, என்னையும் ஜீவந்தீம் என்று ஆள்விட்டு, சுடரை அடைந்து, அகலகில்லா முற்றுவமை பெருமகளோடே.*

என்பது சூத்திரம்.

**வியாக்:—** இப்படிப் பட்டத்துத் தேவிமார் மூவரோடும், மற்றும் பகவானலே அங்கீகரிக்கப்பட்ட தேவிமார்களோடும் இவர்க்கு ஒப்புமை உண்டேயாகிலும், மற்றையோர் அனைவரும் இவர்க்கு ஒரு வகைக்கு ஒப்பாமத்தனையாகையாலே, முற்றுவமை சனக குலத்தில் அவதரித்த பிராட்டியோடேயாம் என்கிருர் இச்சூத்திரத்தால்.

இரான் எனில் நச ஆக - [3]''இராகவனே! உம்மால் விலக்கப்பட்ட சீதாபிராட்டி உயிர் வாழார்; நானும் உயிர் வாழேன்; உயிர் வாழ்வோமானுல் தண்ணீரினின்றும் எடுக்கப்பட்ட மீன்கள் போன்று ஒரு கணநேரமே வாழ்வோம்'' என்கிறபடியே தண்ணீரினின்றும் எடுக்கப்பட்ட மீன் போன்று பிரிவிலே உயிர்க்குக் கேடு பிறக்கும்படி, குழைத்தவன் - [4]''பெரிய மனம் படைத்தவன், பிராட்டியை அடைந்

1. *திருவாய்.* 4. 6: 10.

2. *'நசஆக' - 'நச' என்ற் ஸ்ரீராமாயண சுலோகத்திற் கூறியவாறு ஆகும்படி. விளக்கம் உரைக்கிடை காண்க.*

3. *நச ஸீதா த்வயா ஹீநா நசாஹமபி ராகவ*
*முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந் மத்ஸ்யா விவோத்த்ருதௌ.*
*என்பது, ஸ்ரீராமா. அயோத்.* 53: 31.

4. ''*மநஸ்வீ தத்கத:*''
*என்பது, ஸ்ரீராமா. பால.* 77: 25.

தவன் '' என்கிறபடியே சாதி குணங்கள் பொருள்களுக்கு விசேடணமாய்ப் பிரிக்க ஒண்ணாதபடி இருக்குமாறு போன்று, பிரிக்க ஒண்ணாதபடி ஒரு நீராகக் கலந்த சக்கரவர்த்தித் திருமகன், பின் தொடர - [1] "உண்ணாது உறங்காது ஒலிகடலை யூடுஅறுத்து '' இலங்கையின் வாசல் அளவும் பின் தொடர்ந்துவரும்படியாக, இருந்த - [2] "தனிச் சிறையில் விளப்புற்ற '' என்கிறபடியே 'ஒருத்தி சிறையிருந்து காக்கும்படியே' என்று உலகமடையக் கொண்டாடும்படி தேவமாதர்கள் சிறையை விடுவிக்கைக்காகப் பிராட்டி இலங்கையிலே தனிப்பட்டுச் சிறையிருந்தாற் போலே, இரான் எனில் நச ஆக - [3] "மராமரம் எய்த மாயவன் என்னுள், இரான் எனில் பின்னை யான் ஒட்டுவேனோ'' என்று சக்கரவர்த்தித்திருமகன் என் பக்கல் இரேன் என்று அகலுமாகில் பின்னை யான் தொங்குவேனோ என்று பிரிவினாலாய விரகத்தில் உயிர்க்குக் கேடு பிறக்கும்படியாக, குழைத்தவன்- [4] "இலங்கை செற்றாய் - உன்னை என்னுள்ளே குழைத்த எம் மைந்தா '' என்கிறபடியே ஒரே பொருள் என்னலாம்படி கலந்தவன், பின்தொடர - பிரிவில் தம் ஆற்றாமை குளப்படியாம்படி கடல்போன்ற ஆற்றாமையோடே விண்ணுலகம் தர விரைந்து தாம் இருந்த இடத்து ஏற வரும்படி, இருந்த வன் சிறையிலும் - [5] "வன்சிறையில் அவன் வைக்கில் '' என்கிறபடியே இம் மக்களுடைய சிறையை விடுவிக்கைக்காக அவன் இவ்வுலகத்திலே வைக்க இருந்த வலிய சிறையிலும்,

விதிதன் என்று - அச்சிறை இருப்பிலேயும் அவள், எதிரியான இராவணனுக்கு [6] "ஸ்ரீராமபிரான் நியாயம் அறிந்தவர், சரணம் புகுந்தவர்களிடத்தில் அன்புடையவர் என்று எல்லாராலும் அறியப்பட்டவர்; ஆதலால், உயிர் வாழ்வதற்கு ஆசைப்படுவாயேயானால் நீ அவரோடு சிநேகம் செய்துகொள் '' என்கிறபடியே நீ உயிரோடு இருக்கவேண்டியிருந்தாயாகில் சரணாகதி தருமத்தை அறிந்தவர் என்றும் சரணாகதி செய்தவர்களிடத்தில் அன்புடையவர் என்றும் எல்லாராலும் அறியப்பட்டவராய் இருக்கின்ற ஸ்ரீராமபிரானோடு உறவு செய்துகொள் என்று நலத்தை உபதேசம் செய்தாற் போலே, இவரும், புணைவன் என்று - பகவானிடத்தில் பக்தி இல்லாமலிருக்

1. *நாய்ச்சியார் திரு.* 11: 7.
2. *திருவாய்.* 4. 8: 5.
3. *திருவாய்.* 1. 7: 6.
4. *திருவாய்.* 2. 6: 9.
5. *திருவாய்.* 1. 4: 1.
6. *விதித: ஸஹிதர்மஜ்ஞ: ஶரணாகதவத்ஸல:*
   *தேநமைத்ரீபவது தேயதி ஜீவிது மிச்சஸி.*

*என்பது, ஸ்ரீராமா. சுந்.* 21: 20.



கின்ற மக்களுக்கு [1] "புணைவன் பிறவிக்கடல் நீந்துவார்க்கே '' என்று பிறவிப் பெருங்கடலை நீந்த விருப்பமுள்ளவர்கட்கு அதனை நீந்துவதற்கு உரிய உபாயம் அவன் என்று நலத்தை உபதேசிக்கையாலும்,

ஜீவித ஆதிகளால் குறையின்றி - பிராட்டி, [2] "மகாரதனான ஸ்ரீராமபிரானைப் பிரிந்து அரக்கியர் நடுவில் இருக்கின்ற எனக்கு உயிரினால் பயன் இல்லை, செல்வங்களால் பயன் இல்லை, ஆபரணங்களாலும் ஒரு பயன் இல்லை '' என்கிறபடியே ஸ்ரீராமபிரானைப் பிரிந்து அரக்கியர் நடுவே இருக்கிற எனக்குப் பிராணன் முதலியவற்றால் என்ன பயன் என்று, அவன் அநுபவத்திற்குப் புறம்பாமவற்றை வெறுத்தாற் போலே, இவரும், [3] "மாறாளன் கவராத மணிமாமை குறையிலமே'' என்று தொடங்கி அத்தலைக்கு உறுப்பு அல்லாத உயிரினையும் உயிரோடு சம்பந்தப்பட்ட பொருள்களையும் வெறுக்கையாலும்,

மாயும் வகை விஷ சஸ்த்ரங்கள் தேடி - பிராட்டி, ஆற்றாமையின் மிகுதியினாலே - [4] "அரக்கனாகிய இராவணனுடைய வீட்டில் எனக்கு விஷத்தையோ அல்லது வாள் முதலிய கருவிகளையோ கொடுப்பவர் ஒருவரும் இலர் '' என்கிறபடியே உயிர்க் கொலையாக்கி வைத்தவனுடைய வீட்டிலே நற்கொலையாக்குவது இத்தனை விஷம் தருவார் இலரோ? விஷம் போன்று சிறிது போது நின்று கொல்லுகை அன்றிக்கே அப்போதே முடிப்பதாகிய வாள் தருவார் இலரோ? என்று முடியும் வகை தேடினாற் போலே, இவரும், [5] "மாயும் வகை அறியேன் வல்வினையேன் பெண்பிறந்தே '' என்று முடியும் வகை தேடுகையாலும்,

ஹா வில்வலவா என்று - பிராட்டி மிக்க துக்கத்தாலே பீடிக்கப்பட்டவளாய்க் காப்பவரான ஸ்ரீராமபிரானுடைய சூரத்தன்மை

1. *திருவாய்.* 2. 8: 1.
2. *நஹிமே ஜீவிதேநார்த்தோ நைவார்த்தை: நசபூஷணை:*
   *வஸந்த்யா ராக்ஷஸீமத்யே விநாராமம் மஹாரதம்.*

*என்பது, ஸ்ரீராமா. சுந்.* 26: 5.

3. *திருவாய்.* 4. 8: 1.
4. *"விஷஸ்யதாதா நஹிமேஸ்தி கஶ்சிச்சஸ்த்ரஸ்யவா வேஶ்மநிராக்ஷஸஸ்ய."*

*என்பது, ஸ்ரீராமா. சுந்.* 28: 16.

5. *திருவாய்.* 5. 4: 3.

முதலியவற்றை நினைத்து [1] "ஹா ராம" என்று கூப்பிட்டாற் போலே, இவரும், - [2] "புணரா நின்ற மரமேழ் அன்று எய்த ஒரு வில்வலவாவோ" என்று அவன் வீரப்பாட்டினைச் சொல்லிக் கூப்பிடுகையாலும்,

இரக்கம் எழாக் கொடுமைகள் சங்கித்து - பிராட்டி, தன்னுற்ற மைக்கு உதவ வந்து முகம் காட்டாமையாலே, [3] "ஸ்ரீராமபிரான் குற்றமுடையவர்கள்பக்கலிலும் குணத்தைக் கொள்ளுகின்றவர், செய்ந்நன்றி அறிகின்றவர், அருளோடு கூடினவர், நல்லொழுக்க முடையவர் என்று மக்களால் சொல்லப்படுகின்றவராயினும் எனது புண்ணியக் குறைவால் அருள் இல்லாதவராய் இருக்கிறார் என்று ஐயப்படுகின்றேன்" என்கிறபடியே ஸ்ரீராமபிரானை அருள் இல்லாத வராக ஐயப்பட்டது போன்று, இவரும், [4] "இரக்கம் எழீர் இதற்கு என்செய்கேன், அரக்கன் இலங்கை செற்றீருக்கே", [5] "வழா நெடும் துன்பத்தள் என்று இரங்கார் அம்மனோ! இலங்கை, குழாம் நெடு மாடம் இடித்த பிரானார் கொடுமைகளே" என்று இந்நிலையில் அருள் செய்யாமல் இருக்கிற கொடுமையாலே, [6] "அறிவொன்றும் சங்கிப்பன்" என்கிறபடியே அருள் அற்றவர் என்று ஐயப் படுகையாலும்,

ஜீவந்தீம் என்னையும் என்று ஆள்விட்டு - பிராட்டி, [7] "ஏ அநுமன்! சீர்த்தியையுடைய அந்த ஸ்ரீராமபிரான் நான் உயிர் வாழ்ந்திருப்பவளாக என்னை எப்படி நினைப்பரோ அப்படியே உம்மால் வார்த்தை சொல்லத்தக்கவர்; இத்தகைய வார்த்தைகளைச் சொல்லி வாக்கின் தர்மத்தை அடையக் கடவீர்" என்கிறபடியே உயிரோடே கிடக்கிற என்னை இவ்வுயிர் போவதற்கு முன்னே யாதொருபடி

1. "ஹா ராம" என்பது, ஸ்ரீராமா. சுந். 28: 8.
2. திருவாய். 6. 10: 5.
3. க்யாத: ப்ராஜ்ஞ: க்ருதஜ்ஞ: சஸாநுக்ரோஶஶ்ச ராகவ:
ஸத்வ்ருத்தோ நிரநுக்ரோஶஶ் ஶங்கே மத்பாக்ய ஸங்க்ஷயாத்.
என்பது, ஸ்ரீராமா. சுந். 26: 13.
4. திருவாய். 2. 4: 3.
5. திருவிருத்தம், 36.
6. திருவாய். 8. 1: 7.
7. ஜீவந்தீம் மாம்யதா ராம: ஸம்பாவயதி கீர்த்திமாந்
தத்த்வயா ஹநுமந் வாச்யோ வாசா தர்மமவாப்நுஹி.
என்பது, ஸ்ரீராமா. சுந். 39: 10.



ஸ்ரீராமபிரான் வந்து நோக்கிக் கொள்வர் அப்படி அவர்க்கு விண்ணப்பம் செய் என்று தூது விட்டாற் போலே, இவரும், [1] "ஏறு சேவகனார்க்கு என்னையும் உளள் என்மின்களே" என்று என் உயிர் கிடந்தமையை அவர்க்கு அறிவியுங்கோள் என்று ஆற்றாமை தோற்றத் தூது விடுகையாலும்,

சுடரை அடைந்து - பிராட்டி, [2] "சூரியனோடுள்ள ஒளியைப் போன்று நான் ஸ்ரீராமபிரானை விட்டுப் பிரிக்கப் படாதவள்" என்கிற படியே சூரியனோடு ஒளியைப் போன்று, நான் ஸ்ரீராமபிரானோடு வேறுபடாதவளாய் இருப்பேன் என்றாற்போலே, இவரும், [3] "அரக்கியை மூக்கு ஈர்ந்தாயை சுடரை - அடியேன் அடைந்தேன் முதல் முன்னமே" என்று தொன்றுதொட்டுச் சரீரமாக இருக்கிற சேட மாம் தன்மையாலே அவனோடு தாம் எப்பொழுதும் சேர்ந்திருப்பவ ராகப் பேசுகையாலும்,

அகலகில்லா - பிராட்டி, [4] "அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல்மங்கை உறைமார்பா" என்கிறபடியே உன்னை ஒரு கண நேரமும் அகல்வதற்கு ஆற்றலை யுடையேன் அல்லேன் என்னுமாறு போலே, இவரும், [5] "அடியேன் உனபாதம் அகலகில்லேன் இறை யுமே" என்று உன்னை ஒரு கணநேரமும் பிரிய ஆற்றலையுடையேன் அல்லேன் என்கையாலும்,

முற்றுவமை பெருமகளோடே - இவருக்கு எல்லா வகையாலும் ஒப்பாந்தன்மை [6] "பெருமகள் பேதை மங்கை" என்கிற பெரிய பிராட்டியாரோடே என்றபடி.

இச்சூத்திரத்தில் சொல்லப்பட்ட முக்கியமான கருத்து "இரான் எனில் நச வாக" என்று தொடங்கி "அகலகில்லா" என்று தலைக் கட்டுகையாலும், "ஜீவிதாதிகளால் குறையின்றி" முதலாக "ஆள் விட்டு" ஈறாக நடுச் சொன்னவையும் பிரிவினாலாய துக்கத்தைப் பொறுத்தன் காரியங்கள் ஆகையாலும் பிரியில் தரியாமையேயாம். (39)

1. திருவாய். 6. 1: 10.
2. "அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபாயதா" என்பது, ஸ்ரீராமா. சுந். 21: 15.
3. திருவாய். 2. 3: 6.
4. திருவாய். 6. 10: 10.
5. திருவாய். 6. 10: 9.
6. பெரியதிருமொழி, 4. 5: 5.

## 126

[1] பிரியில் இலேனுக்கு இளங்கோவும் அக் குளத்தில் மீனிறே.

என்பது சூத்திரம்.

**வியாக்:—** இப்படிப் பிராட்டியைப் போன்று பிரியில் தரியாமையுடையார் இவர் ஒருவருமேயோ? பின்னையும் உளரோ? என்னும் அவாய்நிலையிலே அருளிச்செய்கிறார் 'பிரியில்' என்று தொடங்கி.

அதாவது, பிரியில் இலேனுக்கு - ஒரு காரணமும் பற்றாமல் இயல்பாகவே சேஷியாக உள்ள எம்பெருமானைப் பிரியில் [2] "நின்னலால் இலேன்காண்" என்கிறபடியே இலர் ஆகைக்கு, இளங்கோவும் - [3] "நேரிழையும் இளங்கோவும் பின்பு போக" என்கிறபடியே பிராட்டியைப் போன்று பின்தொடர்ந்து போன இளையபெருமாளும், அக்குளத்தில் மீனிறே - நிறுத்திப் போவதாக ஸ்ரீராமபிரான் அருளிச்செய்த போது [4] "இரகுவம்சத்தில் அவதரித்தவரே! உம்மாலே விலக்கப்படுகின்ற பிராட்டியார் உயிர் வாழார்; நானும் உயிர் வாழேன்; உயிர் வாழ்வோமானால் தண்ணீரினின்றும் எடுக்கப்பட்ட மீன்கள் போன்று ஒரு கணநேரமே வாழ்வோம்" என்கையாலே அந்தத் தண்ணீரில் மீன் ஆவர் அன்றோ என்கை. (40)

## 127

([5] அழும் தொழும் ஸ்நேஹ பாஷ்பாஞ்சலியோடே ருசிர ஸாநுக்களில் கூவிக்கொள்ளும் பிரியாஅடிமைக்குச் சரணே சரண் என்று வாளும் வில்லும் கொண்டு பந்துவும் பிதாவும் அவரே என்கையும்,) (அன்னே என் செய்யில் என் ராஜ்யமும் யானே என்று பெருஞ்செல்வமும் இச்சியாமல் வேண்டிச் சென்று திருவடியே சுமந்து விரைந்து வருமளவும் கண்ணநீர் பங்கமாக நிலம் துழாவிக் குடிக்கிடந்த கையறவும்,) (கோதில் அடிமை உறுமோ என்பித்த புலன்கொள் நித்ய சத்ரு விசிந்தநமுமான) ப்ராதாக்கள், அப்பொழுதைக்கு அப்பொழுது போனாய் என்னும் மாதா பிதாக்கள், செந்தீத் தண்காற்று இளநாகம் முதலான பகை அறச் சிந்தை செய்து எங்குமுளன் என்னும் பள்ளிப்பிள்ளை, முற்றவிட்டு மற்றிலேன் என்னும் தர்மாத்மா, வாளிபொழிந்த நிர்க்குண விச்வாத்மா உள்ளே உறைய வீரசரிதம் ஊனுகக் கற்பார் பாவம் மற்றிலேன் என்னும் ராமதாசன், பல்வகையும் கண்டு வெண்சங்கு ஏந்தின ரூபபரனான சுவேதன் முதலானார் படிகளும் காணலாம்.

என்பது சூத்திரம்.

**வியாக்:—** இனி, மேல், பகவானுக்கு வேறு ஆகாதவர்களாய் இயல்பாகவே அமைந்த பக்தியையுடையவர்களாய் இருக்கும் இலக்குமணன் பரதன் சத்துருக்கனன் என்னும் இவர்கள்படியும், பகவானிடத்தில் சம்பந்தமுள்ளவர்களாய் அவனிடத்திலேயே பக்தியையுடையவர்களான தசரதன், யசோதை, பிரஹ்லாதன், விபீஷணன், மாருதி, பார்த்தன் என்னும் இவர்கள் படிகளும் இவரிடத்திலே உண்டு என்னுமதனைத் தனித்தனியே அடைவே காட்டுகிறார் இச்சூத்திரத்தால்,

உபமான உபமேயங்கள் இரண்டனுக்கும் தனித்தனியே சொற்களை இடாமல் இரண்டும் ஒரு சந்தர்ப்பத்திலே பலிக்கும்படி வாக்கியத்தைச் சுருக்கி அருளிச்செய்திருக்கையாலே உபமானத்திலாதல்

1. இளங்கோ - இளையபெருமாள்; இலக்குமணன். 'அக்குளம்' என்றது, மேற் சூத்திரத்தில் அருளிச்செய்த "ந ச ஸீ தா" என்ற ஸ்ரீராமாயணச் சுலோகத்தில் கூறப்பட்ட தண்ணீரைக் குறிக்கின்றது.

2. திருவாய். 2. 3: 7. 3. பெருமாள் திருமொழி, 9: 2.

4. இச்சுலோகத்தை மேலே பக். 311. காண்க.

5. இச் சூத்திரத்தின் ஈற்றிலே உள்ள 'படிகளும்' என்ற சொல்லை, முன்னே உள்ள ப்ராதாக்கள், மாதா பிதாக்கள், பள்ளிப்பிள்ளை, தர்மாத்மா, ராமதாசன், சுவேதன் என்ற சொற்களோடு தனித்தனியே கூட்டுக. ப்ராதாக்கள் என்றது, இலக்குமணன் பரதாழ்வான் சத்ருக்நாழ்வான் என்னும் இவர்களை. சூத்திரத்தில், அழும் தொழும் ஸ்நேக பாஷ்பாஞ்சலியோடே ருசிரசாநுக்களில் கூவிக் கொள்ளும் பிரியா அடிமைக்குச் சரணே சரண் என்று வாளும் வில்லும் கொண்டு பந்துவும் பிதாவும் அவரே என்கை என்பது முடிய, இலக்குமணன் தன்மையைக் கூறுவது, அன்னே என் செய்யில் என் ராஜ்யமும் யானே என்று பெரும் செல்வமும் இச்சியாமல் வேண்டிச் சென்று திருவடியே சுமந்து விரைந்து வருமளவும் கண்ணநீர் பங்கமாக நிலம் துழாவிக் குடிக்கிடந்த கையறவும் என்பது முடிய, ஸ்ரீபரதாழ்வான் தன்மையைக் கூறுவது. கோதில் அடிமை உறுமோ என்பித்த புலன்கொள் நித்யசத்ரு விசிந்தநமும் என்பது முடிய, ஸ்ரீசத்ருக்நாழ்வான் தன்மையைக் கூறுவது. மாதா பிதாக்கள் என்றது, யசோதைப் பிராட்டியையும் தசரத சக்கரவர்த்தியையும். 'பள்ளிப்பிள்ளை' என்றது, ஸ்ரீபிரஹ்லாதாழ்வானை. 'தர்மாத்மா' என்றது, ஸ்ரீவிபீஷணாழ்வானை. 'ராமதாசன்' என்றது, சிறிய திருவடியை, 'சுவேதன்' என்றது, அருச்சுனனை.

உபமேயத்திலாதல் சொற்கள் இல்லாதவற்றிற்கு மறுதலைக்குத் தகுதியாகச் சொற்களைக் கூட்டிப் பொருள் காண்க. இந்த நியாயம் இந் நூலில் இப்படி வருமிடங்களுக்கெல்லாம் ஒக்கும்,

அழும் தொழும் ஸ்நேஹபாஷ்ப அஞ்சலியோடே [1] ருசிர ஸாநுக்களில் கூவிக்கொள்ளும் பிரியா அடிமைக்குச் சரணே சரண் என்று வாளும் வில்லும் கொண்டு பந்துவும் பிதாவும் அவரே என்கை(யையுடைய) பிராதாவின் படியும் - இளையபெருமாள் [2] "பெரியதமையனான சக்கரவர்த்தித்திருமகனிடத்தில் தொட்டில் பருவமே தொடங்கி மிகவும் பக்தியுள்ளவராக இருந்தார்" என்கிறபடியே இளமைப்பருவம் தொடங்கிப் பிரியில் தரியாத சிநேகத்தாலே, [3] "கண்ண நீரால் கலங்கிய முகமுடைய" என்றும், [4] "வணங்கினவரும் அஞ்சலி செய்யும் கைகளையுடையவரும்" என்றும் சொல்லுகிறபடியே பிரிவு காரணமாக உண்டான சோக வேகத்தாலே சொரிகிற கண்ணநீரோடே அடியவன் என்னும் சொரூபத்தை விளக்கிக் காட்டுகின்ற அஞ்சலியும் கையுமாகக் கொண்டு [5] "திருவுள்ளத்துக்குப் பாங்கான இடத்திலே இங்ஙனம் கட்டுவாய் என்று தேவரீரே நியமித்தருள வேண்டும்" என்றும், [6] "தேவரீர் பிராட்டியோடுகூட மலைத்தாழ்வரைகளில் இன்பத்தை நுகர்வீராக; நான் பகல் இரவு எந்நேரத்திலும் தங்களுக்கு எல்லா அடிமைகளையும் செய்வேன்" என்றும் சொல்லுகிறபடியே திருச்சித்திரகூட மலையின் தாழ்வரை முதலான இனிய இடங்களிலே பிராட்டியோடுகூடத் தேவரீர் இன்பத்தை நுகர்ந்து கொண்டிருக்க, அடியேன் எல்லாவிதமான கைங்கரியங்களையும் செய்யவேண்டும்; அது செய்யுமிடத்தில் ஏவிக் கொண்டருளவேண்டும் என்று பிரார்த்தித்து, அப்படி ஏவிக்

1. ருசிரம் - மனோகரமான; அழகிய. ஸாநு - மலைத்தாழ்வரைகள்.

2. "பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:"
என்பது, ஸ்ரீராமா. பால. 18: 27.

3. "பாஷ்பர்யாகுலமுக:"
என்பது, ஸ்ரீராமா. அயோத். 31: 1.

4. "ப்ரஹ்வாஞ்சலிபுடம் ஸ்திதம்"
என்பது, ஸ்ரீராமா. அயோத். 16: 26.

5. "ஸ்வயம்து ருசிரே தேஸே க்ரியதாமிதிமாம்வத."
என்பது, ஸ்ரீராமா. ஆரண். 15: 7.

6. "பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷுரம்ஸ்யதே
அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரத: ஸ்வபதஸ்சதே."
என்பது, ஸ்ரீராமா. அயோத். 31: 25.



கொள்ளச் செய்யப்படுமதாய், [1] "அடியவனை என்னைத் தேவரீரோடு கூடவே சஞ்சரிக்கும்படியாகச் செய்தருள வேண்டும்" என்கிற படியே இடையீடு இல்லாமல் பின் தொடர்ந்து செய்யும் அடிமைத் தொழிலைப் பெறுகைக்காக, [2] "மிக்க சீர்த்தியையுடைய இலக்குமணன் தன் தமையனுருடைய இரண்டு திருவடிகளையும் உறுதியாகப் பிடித்துக் கொண்டு பிராட்டியைப் பார்த்துச் சொன்னர்; ஸ்ரீராமபிரானையும் பார்த்துச் சொன்னர்" என்கிறபடியே புருஷகாரம் முன்னுகத் திருவடிகளைக் கட்டிக் கொண்டு, [3] "ஸ்ரீராமபிரான் முன்னே சென்றுர், அழகிய இடையையுடைய பிராட்டி நடுவில் (சென்றுர்), இலக்குமணன் வில்லும் கையுமாய்ப் பின்னே தொடர்ந்து சென்றுர்" என்கிறபடியே ஆயுதத்தைத் தரித்தவராய்க் கொண்டு ஸ்ரீராமபிரானைப் பின் தொடர்ந்து சென்று, [4] "உடன் பிறந்தவரான ஸ்ரீராமபிரானே தமப்பன், ஸ்வாமியும் அவரே, எல்லாவிதமான உறவினர்களும் அவரே" என்கிறபடியே தமக்கு எல்லாவிதமான உறவும் ஸ்ரீராமபிரானே என்றுற் போலே,

இவரும், [5] "அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து" என்கிறபடியே பருவம் நிரம்புவதற்கு முன்னரே பிரியில் தரியாதபடி பிறந்த சிநேகத்தாலே [6] "அழும் தொழும்" என்கிற படியே பிரிவு பொறுமல் கண்ணும் கண்ணநீரும் கையும் அஞ்சலியுமாய், [7] "திருவேங்கடத்து எழில் கொள் சோதி எந்தை தந்தை தந்தைக்கு, ஒழிவில் காலமெல்லாம் உடனுய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டும்" என்று, [8] "மொய்த்த சோலையும் மொய் பூம்தடம் தாழ்வரை"யுமான இனிய இடங்களையுமுடைய திருமலையிலே [9] "அலர்மேல் மங்கையுறை மார்பன்" ஆகையாலே பிராட்டியோடே கூடிப் பேரின்பத்துடன் இருக்கிற பரமசேஷியானவனுக்கு

1. "குருஷ்வமாம் அநுசரம்"
என்பது, ஸ்ரீராமா. அயோத். 31: 23.

2. ஸப்ராதுஸ் சரணௌகாடம் நிபீட்ய ரகுநந்தந:
ஸீதா முவாசாதியஸா ராகவஞ்சமஹாவ்ரதம்.
என்பது, ஸ்ரீராமா. அயோத். 31: 2.

3. அக்ரத: ப்ரயயௌ ராம: ஸீதாமத்யே ஸுமத்யமா
ப்ருஷ்டதஸ்து தநுஷ்பாணி: லக்ஷ்மணோநுஜகாமஹ.
என்பது, ஸ்ரீராமா. ஆரண். 11: 1.

4. ப்ராதா பர்த்தாச பந்துஸ்ச பிதாச மமராகவ:.
என்பது, ஸ்ரீராமா. அயோத். 58: 31.

5. திருவாய். 2. 3: 3.
6. திருவாய். 7. 2: 8.
7. திருவாய். 3. 3: 1.
8. திருவாய். 3. 3: 10
9. திருவாய். 6. 10: 10.

எல்லாக் காலங்களிலும் எல்லா இடங்களிலும் எல்லா நிலைகளிலும் எல்லா அடிமைகளையும் செய்ய வேண்டும்; அங்ஙனம் செய்யுமிடத்தும் [1] "முகப்பே கூவிப் பணி கொள்ளாய்" என்று திருமுன்னரே ஏவிக் கொள்ளவும் வேண்டும் என்று பிரார்த்தித்து, அப்படி ஏவிக் கொள்ளப்படுமதாய், [2] "பிரியா அடிமை" என்கிறபடியே உயிர் உள்ள வரையிலும் தொடர்ந்து வருகின்ற கைங்கர்யத்தைப் பெறுகைக்கு வ ழி யா க [3] "நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு" என்று புருடகாரம் முன்னாக அவன் திருவடிகளைப் பற்றி [4] "வாளும் வில்லும் கொண்டு பின் செல்வார் மற்றில்லை" என்று திவ்விய ஆயுதங்களைக் கொண்டு தாம் பின்னே திரிய ஆசைப் பட்டு, [5] "சேலேய் கண்ணியரும் பெரும் செல்வமும் நன்மக்களும், மேலாத் தாய்தந்தையும் அவரே" என்று சேஷியான சர்வேச்வரனே தமக்குத் தாய் தந்தை முதலான எல்லாவித உறவினர்களும் என்கையாலே இளையபெருமாள் தன்மையும்,

அன்னை என் செய்யில் என் ராஜ்யமும் யானே என்று பெருஞ் செல்வமும் இச்சியாமல் வேண்டிச் சென்று திருவடியே சுமந்து விரைந்து வருமளவும் கண்ணநீர் பங்கமாக நிலம் துழாவிக் குடிக் கிடந்த கையறவுடைய பிராதாவின்படியும் - அன்னை என் செய்யில் என் ராஜ்யமும் யானே என்று - ஸ்ரீபரதாழ்வான், ஸ்ரீராமபிரான் முடி சூடியிருக்கத் தாம் அடிமைசெய்து வாழப் பெறுதபடி அவரைக் காட்டிலே அகல அடித்துத் தம்மேலே அரசனும் தன்மையை ஏற்றிய கொடுமையாலே [6] "நான் தீய செயலையுடைய மகாபாவியாகிய இந்தக் கைகேசியைக் கொன்று விடுவேன்" எள்கிறபடியே தாயைச் சீறி வெறுத்து, தனக்குரியனும்தன்மை இன்மை தோற்ற, [7] "இந்த இராச்சியமும் யானும் ஸ்ரீ இராமபிரானுடைய உடைமை" என்கிற படியே இராச்சியமும் நானும் ஸ்ரீராமபிரானுக்குச் சேடம் என்றாற் போன்றும், பெருஞ்செல்வமும் இச்சியாமல் [8] - அந்தத் தசரத சக்கரவர்த்தி இறந்த போது, இராச்சியத்தைப் பரிபாலனம் செய்யத்தக்க ஆற்றலையுடைய பரதன், வ சி ஷ் ட ர் முதலான அந்தணர்களால்

1. திருவாய். 8. 5: 7.
2. திருவாய். 5. 8: 7.
3. திருவாய். 5. 10: 11.
4. திருவாய். 8.3 : 3.
5. திருவாய். 5. 1: 8.
6. "ஹந்யாமஹமிமாம் பாபாம் கைகேயீம் துஷ்டசாரிணீம்" என்பது, ஸ்ரீராமா. அயோத். 78: 22.
7. "ராஜ்யஞ்ச அஹஞ்ச ராமஸ்ய" என்பது, ஸ்ரீராமா. அயோத். 82: 12.
8. ம்ருதேது தஸ்மிந் பரதோ வஸிஷ்டப்ரமுகை: த்விஜை:
நியுஜ்யமானோ ராஜ்யாய நைச்சத் ராஜ்யம் மஹாபல:
என்பது, ஸ்ரீராமா. பால. 1: 33,



அரசினை நடத்துவதற்கு நி ய மி க் க ப் பட்டவனாயினும் அரசனாக இருத்தற்கு விரும்பவில்லை" என்கிறபடியே வ சி ட் ட ர் முதலான புரோகிதர்கள் நீ அரசனாக வேண்டும் என்று நியமிக்க, [1] "மலை சிறியகாடு பெரியகாடு இவைகளோடு கூடின இந்தப் பூமி இக்ஷ்வாகு குலத்து அரசர்களுக்கு உரியது" என்னும் படியான மிகப் பெரிய செல்வத்தையும் விரும்பாதது போன்றும்,

வேண்டிச் சென்று - ஸ்ரீராமபிரானை மீட்டுக் கொண்டு வந்து திருமுடி சூட்டுவிப்பதில் விருப்பம் தோன்ற [2] "நான் இந்த மந்திரிமார்களோடு கூடத் தேவரீரைத் தலையாலே இரக்கின்றேன்" என்கிற படியே அவர் திருவடிகளிலே சென்று, [3] "தமையனான ஸ்ரீராம பிரானைப் பரதன் வேண்டிக் கொண்டான்" என்கிறபடியே மீண்டு எழுந்தருள வேண்டும் என்று வேண்டிக் கொண்டது போன்றும்,

திருவடியே சுமந்து - அவர் அது செய்யாதே, [4] "இராமபிரான் இந்தப் பரதனுக்கு இராச்சியத்தை ஆள்வதற்குத் திருவடிநிலைகளைப் பிரதிநிதியாகக் கொடுத்து மீண்டும் மீண்டும் சொன்னார்" என்கிற படியே திருவடி நிலையைக் கொடுத்து விட, [5] "பிறகு ஸ்ரீபரதாழ்வான் திருவடி நிலைகளைத் தலையில் வைத்துக் கொண்டு அப்பொழுது ஆனந்தம் அடைந்தவராய்ச் சத்துருக்கனாழ்வானோடு கூடினவராய்த் தேரில் ஏறினார்" என்கிறபடியே அத் திருவடி நிலையைத் தலையிலே வைத்துக் கொண்டு ஆனந்தத்தையுடையவராய் மீண்டும் போந்தது போன்றும்,

விரைந்து வருமளவும் கண்ணநீர் பங்கமாக நிலம் துழாவி - [6] "தலையால் வணங்கி இரந்த அந்தப் பரதாழ்வானுடைய வேண்டுகோள் என்னால் முடிக்கப் படவில்லையே" என்கிற இழவு திருவுள்ளத்

1. "இக்ஷ்வாகூணாமியம் பூமிஸ்ஸசைல வநகாநநா" என்பது, ஸ்ரீராமா. கிஷ். 18: 6.
2. "ஏபிச்ச ஸசிவைஸ் ஸார்த்தம்" என்பது, ஸ்ரீராமா. அயோத். 104: 12.
3. "அயாசத் ப்ராதரம் ராமம்" என்பது, ஸ்ரீராமா. பால. 1: 35.
4. "பாதுகே சாஸ்ய ராஜ்யாய ந்யாஸம் தத்வா புந: புந:" என்பது, ஸ்ரீராமா. பால. 1: 37.
5. ததஸ்து சிரஸா க்ருத்வா பாதுகே பரதஸ்ததா
ஆருரோஹரதம் ஹ்ருஷ்ட: சத்ருக்நேநஸமந்வித:
என்பது, ஸ்ரீராமா. அயோத். 113: 1.
6. "சிரஸா யாசதஸ்தஸ்யவசநம் நக்ருதம்மயா" என்பது, ஸ்ரீராமா. யுத். 124: 19.

திலே கிடக்கையாலே [1] "கைகேசியின் புத்திரனும் தர்மத்தைச் செய்கிறவனுமான அந்தப் பரதனைவிட்டு நான் நீராடுதலை விரும்ப வில்லை, அதன்பின் வரும் ஆடைகளையும் ஆபரணங்களையும் விரும்ப வில்லை, இந்த வழியாலே அயோத்தியா நகரத்தைக் குறித்து விரை வில் செல்லுகிறேன், இந்த வழி அயோத்தியையை அடைந் திருக்கிறது, (இந்த வழி நீண்ட தூரம் இருப்பதால்) விரைவில் அடையமுடியாதது" என்கிறபடியே நாம் பிள்ளை பரதனை ஒழியக் குளித்தல் ஒப்பித்தல் செய்யக் கடவோம் அல்லோம்; விரைவில் நாம் அங்கே செல்லலாம்படி என் என்று ஸ்ரீராமபிரான் விரைவோடு மீண்டும் எழுந்தருளும் அளவும் [2] "பரதன் சடைமுடியையுடைய வனுய்ச் சரீரமுழுதும் அழுக்கு அடைந்தவனுய்" என்கிறபடியே கண்ணநீரால் உண்டான சேற்றிலே தரைக்கிடை கிடக்கையாலே சேற்றிலே மூழ்கினவராய் இருந்தது போன்றும்,

குடிக்கிடந்த கையறவும்-மூத்தார் இருக்க இளையார் முடி சூடக் கடவர் அல்லர் என்கிற இக்ஷ்வாகுகுல மர்யாதை தப்பாமல் நோக் கிக் கொண்டு [3] "அந்தப் பரதன் தனக்கு விருப்பமான இராம கைங் கர்யத்தை அடையாமலே" என்கிறபடியே தாம் ஆசைப் பட்ட பொருள் கைபுகுராத இழவோடே இருந்தாற் போன்றும்,

இவரும், பகவானிடத்து உள்ள பக்தியின் மிகுதியாலே வழி யல்லா வழியேயாகிலும் கிட்டுமத்தனை என்கிற விரைந்த செயலுக்கு இடம் கொடாமல் விலக்கும் தாயாரை விரோதிகளின் கூட்டமாகக் காண்கையாலே, அன்னை என் செய்யில் என்-[4] "அன்னை என்செய்யில் என்" என்கிறபடியே உயிர் வாழில் என்? முடியில் என்? என்று அன்னையைச் சீறி வெறுத்து, ராஜ்யமும் யானே என்று - [5] "யானே என்தனதே" என்கிற தன்வசப்பட்டிருக்குந் தன்மையைப் பொருதவ

1. நமேஸ்நாநம் பஹுமதம் வஸ்த்ராண்யாபரணநிச
தம்விநா கைகயீபுத்ரம் பரதம்தர்மசாரிணம்
இதஏவ யாதாக்ஷிப்ரம் ப்ரதிகச்சாம தாம் புரீம்
அயோத்யா மாகதோ ஹ்யேஷ பந்தா: பரமதுர்கம:

என்பன, ஸ்ரீராமா. யுத். 124: $6\frac{1}{2}$, $7\frac{1}{2}$.

2. "பங்கதிக்தஸ்து ஜடிலோபரத:"

என்பது, ஸ்ரீராமா. யுத். 127: 4.

3. "ஸகாமம் அநவாப்யைவ"

என்பது, ஸ்ரீராமா. பால. 1: 38.

4. திருவாய். 5. 3: 6. 5. திருவாய். 2. 9: 9.



ராய்க் கொண்டு [1] "யானே நீ என்னுடைமையும் நீயே" என்கிற படியே ஆன்மாவும், ஆன்மாவோடு சம்பந்தப்பட்ட பொருள்களும் அங்குத்தைக்குச் சேடம் என்று, பெரும் செல்வமும் இச்சியாமல் - [2] "கொள்ளென்று கிளர்ந்து எழுந்த பெருஞ் செல்வம் நெருப்பு" என்று, மேன்மேலும் நிறைந்து வருகின்ற எல்லை இல்லாத செல்வத் தையும் நெருப்பிற்குச் சமமாகக் கொண்டு, வேண்டிச் சென்று - [3] "வேங்கட வாணனை வேண்டிச்சென்று" என்கிறபடியே, திருச் சித்திர கூடத்தில் இருந்தாற் போன்று திருமலையில் இருக்கிற அவனைத் தன் விருப்பின்படி அநுபவிப்பதற்காக வேண்டிச் சென்று, திருவடியே சுமந்து - தம் விருப்பத்தை அவன் அப்போது செய் யாதே ஒரு தெளிந்த ஞானமூலமாக [4] "திருவடியே சுமந்துழலக் கூட்டரிய திருவடிக்கண் கூட்டினை" என்கிறபடியே திருவடிகளைத் தந்தாய் என்று பேரானந்தமுடையராம்படி செய்து விட, அப்படி அவன் கொடுத்த திருவடிகளைத் தலைமேலே தாங்கி, விரைந்து வருமளவும் - வீடு திருத்தப்போனவன் விண்ணுலகம் தர விரைந்து வருமளவும், கண்ணநீர் பங்கமாக நிலம் துழாவி - [5] "கண்ணநீர் கைகளால் இறைக்கும் - இருநிலம் கைதுழாவிருக்கும்" என்கிற படியே கண்ணநீர் வெள்ளத்தால் உண்டான சேற்றிலே இருந்து ஆற்றாமையாலே நிலம் துழாவி, குடிக்கிடந்த கையறவும் - [6] "குடிக் கிடந்து ஆக்கம் செய்து" என்கிறபடியே பிரபந்ந குலத்தில் செய்து போரும் மரியாதை தப்பாமல் [7] "காமுற்ற கையறவோடு" என்கிற படியே தாம் ஆசைப்பட்டபொருள் கைபுகுராத இழவோடே இருக் கையால் ஸ்ரீபரதாழ்வான் தன்மையும்;

3 கோதில் அடிமை உறுமோ என்பித்த புலன்கொள் நித்ய சத்ரு விசிந்தனமுமான பிராதா படியும் - ஸ்ரீசத்துருக்கனுழ்வான், [8] "குற்றம் இல்லாதவராயும் ஐம்பொறிகளையும் அடக்கினவராயும் இருக்கிற ஸ்ரீ சத்துருக்கனுழ்வான், அன்பினாலே முன்னே தூண்டப்பட்டவராய் மாமன் யுதாஜித்தினுடைய வீட்டிற்கு அப்போது செல்கின்ற பரதாழ் வானாலே அழைத்துச் செல்லப்பட்டார்" என்கிறபடியே பாகவதர்

1. திருவாய். 2. 9: 9. 2. திருவாய். 4. 9: 4.
3. திருவாய். 8. 2: 1. 4. திருவாய். 4. 9: 9.
5. திருவாய். 7. 2: 1. 6. திருவாய். 9. 2: 2.
7. திருவாய். 2. 1: 3.

8 கச்சதா மாதுலகுலம் பரதேந ததாநக:.
சத்ருக்நோ நித்யசத்ருக்நோநீத: ப்ரீதிபுரஸ்க்ருத:

என்பது, ஸ்ரீராமா. அயோத். 1: 1.

களுக்கு அடிமைப்பட்டிருத்தலே மேலான பேறு என்று ஸ்ரீ பரதாழ்வானுக்கே அடிமைப்பட்டவராய் அவருடைய தூய்மையிலும் இனிமையிலும் கால் தாழ்ந்து, [1] "தன்னுடைய குணங்களாலே ஆடவர்களுடைய கண்களையும் மனத்தையும் கவர்கின்றவரான ஸ்ரீராமபிரான்" என்கிறபடியே வயிரவுருக்காய் ஆண்களையும் பெண்ணுடை உடுத்தச் செய்யும் ஸ்ரீராமபிரானுடைய வடிவழகில் துவக்குண்ணுதே, பரதனுக்குத் தொண்டு செய்வதில் போகாதபடி தன் பக்கலிலே துவக்கவற்று என்னுமத்தாலே தம்முடைய நிலைக்கு ஸ்ரீராமபிரானுடைய வடிவழகு நித்தியசத்துரு என்று அறுதியிட்டிருக்கச் செய்தே, ஸ்ரீ பரதாழ்வானுக்கு உகப்பு ஆகையாலே அவனுக்குப் பிரீதி என்று புரிந்து, ஸ்ரீராமபிரானுடைய வடிவிலே நெஞ்சு சென்று [2] "விசேடமாக மனத்திலே கொண்டிருப்பவன்" என்கிறபடியே எப்பொழுதும் ஸ்ரீராமபிரானுடைய அந்த வடிவழகினை மனத்திலே கொண்டிருக்குமாறு போன்று,

இவரும், கோதில் அடிமை - [3] "கோதில் அடியார்" என்கிறபடியே, முதற்படியின் நிலைபோல் அன்றிக்கே, ஆன்ம சொரூபத்தினுடைய எல்லைநிலமாகையாலே [4] "கோதில் அடிமை" என்று சொல்லப்படுகின்ற பாகவதர்களுக்கு அடிமைப்பட்டிருத்தலினுடைய சுவை, உறுமோ என்பித்த - [5] "அவன் அடியார் சிறு மாமனிசராய் என்னை ஆண்டார் இங்கே திரிய" அவர்களைத் தவிர்ந்து, [6] "செந்தாமரைக்கண் திருக்குறளன் நறுமாவிரை நாண்மலரடிக்கீழ்ப்புகுதல்-பாவியேனுக்கு உறுமோ" என்று சொல்லுவிக்கப்பட்டதாய், புலன் கொள் நித்ய சத்ரு விசிந்தனமான - ஐம்பொறிகளையும் கவரத்தக்க ஆற்றலையுடையதாகையாலே, பாகவதர்களுக்கு அடிமைப்பட்டிருத்தலாகிய நிலைக்கு விரோதியான பகவானுடைய விக்கிரகத்தை, தமக்கு உத்தேசியமானவர்களுக்கு உகப்பு என்னுமதனைப்பற்ற, [7] "திரிதந்தாகிலும்" என்ற திருப்பாசுரத்தின்படியே மீண்டு, [8] "புலன் கொள் வடிவு என் மனத்ததாய்" என்கிறபடியே எப்போதும் தம் மனத்திற்கு விஷயமாகக் கொண்டிருக்கையாலே ஸ்ரீ சத்துருக்கனுழ்வான் தன்மையும் இவர் பக்கலிலே காணலாம்.

---

1. "ரூபௌதார்யகுணை: பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்" என்பது, ஸ்ரீராமா. அயோத். 3: 28.
2. "விசிந்தயந்" என்பது, ஸ்ரீராமா. அயோத். 89: 3.
3. திருவாய். 8. 10: 9.
4. திருவாய் 8. 10: 9.
5. திருவாய். 8. 10: 3.
6. திருவாய். 8. 10: 3.
7. கண்ணிநுண்சிறுத்தாம்பு, 3.
8. திருவாய். 8, 10: 4,



[1] "விசிந்தநம்" என்ற இதற்கு இப்படி வியாக்கியானம் பண்ணிற்று, இதன் பட்டோலையான அதிலே "உறுமோ" என்று நித்யசத்துருவை வென்று புலன்கொள் வடிவை விசிந்தயனுய் இருக்கும் என்று "விசிந்தயந்" என்று ஒரு சொல் உண்டாகவும் எடுத்து இப்படி இவர்தாமே அருளிச்செய்து வைக்கையாலே. இவ்விடத்திலும் "சிந்தநம்" என்னுமல் "விசிந்தநம்" என்றது அச் சொல்லினைக் குறிப்பதற்காகவன்றோ. "விசிந்தயந்" என்ற சொல் இன்ன விடத்திலே உள்ளது என்று தெரிகிறதில்லை; வந்த இடத்திலே கண்டுகொள்வது.

அப்பொழுதைக்கு அப்பொழுது போனுய் என்னும் மாதா பிதாக்கள் படியும் காணலாம் - அப்பொழுதைக்கு அப்பொழுது என்னும் பிதா - தசரதசக்கரவர்த்தி [2] "வருகிற ஸ்ரீராமபிரானைப் பார்த்துக் கொண்டிருக்கிற சக்கரவர்த்தி மனம் நிறைவு பெறவில்லை" என்கிறபடியே வைத்த கண் வாங்காதே மேலும் மேலும் அநுபவியாநிற்கச் செய்தே ஒருகாலும் மனம் நிறைவுபெறுமல் பின்னும் கண்டு அனுபவிக்க விரும்பினுற்போலே, இவரும், [3] "எப்பொழுதும் நாள் திங்கள் ஆண்டு" என்ற திருப்பாசுரத்திற் கூறுகிறபடியே காலம் உள்ள வரையிலும் அநுபவியாநின்றுலும் "அப்பொழுதைக்கு அப்பொழுது என் ஆராவமுதம்" என்கிறபடியே கணந்தோறும் எனக்கு மன

---

1. "விசிந்தநம்" என்ற சொல்லானது, ஸ்ரீராமாயணத்தில் அயோத்தியா காண்டத்தில் 89-வது சர்க்கத்தில் 3-வது சுலோகத்தில் இருக்கின்றது. இச் சுலோகம் முதலில் "நாஹம் ஸ்வபிமி ஜாகர்மி தமேவார்யம் **விசிந்தயந்**" என்ற பாடத்தில் வழங்கி வந்தது. பின், "நாஹம் ஸ்வபிமி ஜாகர்மி ராமமேவா**நுசிந்தயந்**" என்ற பாடத்தில் வழங்கி வருகின்றது. அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர் காலத்தில் முதலில் கூறிய பாடமே வழக்காற்றில் இருந்தது; அதுகொண்டு அப்பெரியார் அச்சொல்லை எடுத்து ஆண்டனர். மணவாள மாமுனிகள் காலத்தில் அப்பாடம் மறைந்து இரண்டாவதாகக் கூறிய பாடமே வழங்கி வந்ததனுலும், கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியான அரும் பதவுரையில் இரண்டாவதாகக் கொண்ட பாடமே எடுத்து ஆளப்பட்டிருப்பதனுலும் மணவாள மாமுனிகள் இங்ஙனம் அருளிச்செய்ய நேர்ந்தது என்று ஸ்ரீமத். பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள் அருளிச்செய்வர்.

2. "ந ததர்ப்ப ஸமாயாந்தம் பஶ்ய மாநோநராதிப:" என்பது, ஸ்ரீராமா: அயோத். 3: 29.

3. திருவாய். 2. 5: 4.

நிறைவினை உண்டுபண்ணாத இனிய பொருள் என்று, மேன் மேலும் வேட்கைப் பெருக்கினையுடையவராகையாலும், போனாய் என்னும் மாதா - [1] "இரட்டை மருதமரங்களின் நடுவே சென்றார்" என்கிற படியே ஒரே காரியத்தைச் செய்வதில் தமக்குள் ஒத்த நோக்குடைய வர்களாய் நலிய வந்து நின்ற இரட்டை மருத மரங்களின் நடுவே கிருஷ்ணன் போனபோது யசோதைப்பிராட்டி ஓடிச்சென்று எடுத்துக் கொள்ளா நிற்க, மருதமருதங்களின் பெருமையையும் இவன் இளமையையும் கண்டு வயிறு எரிகொளுந்தி முகத்தைப் பார்த்து "இப்பெரிய மருதுகளின் நடுவே போனாயே" என்று வெறுத்தாற் போலே, இவரும், சென்ற காலத்திலே நடந்ததாக இருக்கவும் சமகாலத்தில் போலே தோன்றுகையாலே அப்படி வயிறு எரிந்து கொண்டு [2] "போனாய் மாமருதின் நடுவே" என்கையாலும் தமப்பனும் தாயுமான அவ்விருவர் படிகளும் இவர் பக்கலிலே காணலாம்.

செந்தீத் தண்காற்று இளநாகம் முதலான பகை அறச் சிந்தை செய்து எங்கும் உளன் என்னும் பள்ளிப்பிள்ளை படியும் காணலாம் - ஸ்ரீபிரஹ்லாதன் [3] "இவனை நெருப்பு எரிக்கவில்லை, இந்தப் பிரஹ்லாதன் ஆயுதங்களாலும் வெட்டுப்பட்டான் இல்லை, அந்த விடத்தாலும் இறந்தான் இல்லை, பூதங்களாலும் நாசத்தை அடையவில்லை" என்றும், [4] "கிருஷ்ணனிடத்தில் பக்தி நிறைந்த மனத்தையுடைய அந்தப் பிரஹ்லாதன் பெரிய பாம்புகளால் கடிபட்டானாயினும் அந்தக் கிருஷ்ணனுடைய நினைவினால் உண்டான சந்தோஷத்திலே கூடினவனாய்த் தன் சரீரத்தை அறிந்தான் இல்லை" என்றும் வருகின்றவாறே நெருப்பு முதலானவை தீமையைச் செய்யாதபடி,

1. "யமளார்ஜுநயோர்மத்யே ஜகாம"
என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 5. 6: 15.

2. திருவாய். 5. 1: 2.

3. நாக்நி: தஹதி நைவாயம் சஸ்த்ரைஶ்சிந்நோ நசோரகை:
க்ஷயம்நீதோ நவாதேந நவிஷேண நக்ருத்யயா.
என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 1. 19: 58.

4. ஸத்வாஸக்தமதி: க்ருஷ்ணே தஶ்யமாநோமஹோரகை:
நவிவேதாத்மநோகாத்ரம் தத்ஸ்ம்ருத்யாஹ்லாத ஸம்ஸ்தித:.
என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 1. 17: 38.



[1] "ஏ தந்தையே! எல்லா உயிர்களையும் சரீரமாகவுடையவனும் உலகத்திற் கெல்லாம் தலைவனும் பரமாத்மாவுமான கோவிந்தன் இந்த உலகமே உருவமாக இருக்க, நட்டோன் என்றும் பகைவன் என்றும் சொல்லுகிற சொல் எங்கிருந்து உண்டாகும்?" என்கிற படியே, நட்டோன் பகைவன் என்ற சொல்லுக்கும் இடம் இராதபடி எல்லாப் பொருள்களும் பகவானுக்குச் சரீரமாக இருப்பதனாலே அநுகூலமாக நினைத்து, [2] "எங்கும் உளன் கண்ணன்" என்கிற படியே, [3] "பூமியில் இருக்கிறான்" என்று தொடங்கி [4] "எல்லா இடங்களிலும் இருக்கிறான்" என்று பிறர்க்கும் உபதேசித்தாற் போன்று,

இவரும், செந்தீத் தண் காற்று இளநாகம் முதலான பகை அற- [5] "அறியும் செந்தீயைத் தழுவி அச்சுதன் என்னும் மெய்வேவாள், எறியும் தண்காற்றைத் தழுவி என்னுடைக் கோவிந்தன் என்னும்", [6] "போம் இளநாகத்தின் பின் போய் அவன் கிடக்கை ஈது என்னும்" என்கிறபடியே, நெருப்பு முதலான துன்புறுத்தும் பொருள்கள் பகவானை உயிராகக் கொண்டு இருப்பதனாலே அநுகூலமாம்படி, சிந்தை செய்து - [7] "என் முன்னைக் கோளரியே! உன்னைச் சிந்தை செய்து செய்து, என் முன்னைத் தீவினைகள் முழுவேர் அரிந்தனன் யான், முடியாதது என் எனக்கு" என்கிறபடியே, எப்பொழுதும் நினைந்து, எங்கும் உளன் என்னும் - [8] "கரந்த சில்லிடந்தொறும் இடம் திகழ் பொருள் தொறும் கரந்து எங்கும் பரந்து - உளன்" என்று, அவன் எங்கும் பரந்து நிறைந்திருக்கும் தன்மையைப் பிறரும் அறியும்படி அருளிச்செய்கையாலே, பள்ளிப் பிள்ளை படியும் காணலாம் - [9] "பள்ளியில் ஓதி வந்த தன் சிறுவன்" என்றும், [10] "பிள்ளையைச் சீறி" என்றும் சொல்லப்பட்ட பள்ளிப் பிள்ளையான பிரஹ்லாதன் படியும் இவர் பக்கலிலே காணலாம்.

1. ஸர்வபூதாத்மகே தாத ஜகந்நாதே ஜகந்மயே
பரமாத்மநி கோவிந்தே மித்ராமித்ரகதா குத:.
என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 1. 19: 36.

2. திருவாய். 2. 8: 9.

3. "உர்வ்யாமஸ்தி"
என்பது, ஸ்ரீவிஷ்ணுபு.

4. "ஸர்வத்ராஸ்தி"
என்பது, ஸ்ரீவிஷ்ணுபு.

5. திருவாய். 4. 4: 3.
6. திருவாய். 4. 4: 5.
7. திருவாய். 2. 6: 6.
8. திருவாய். 1. 1: 6.
9. பெரியதிருமொழி, 2. 3: 8.
10. பெரியதிருமொழி, 2. 3: 8.

7 முற்ற விட்டு மற்றிலேன் என்னும் தர்மாத்மா படியும் காணலாம் - ஸ்ரீவிபீஷணுழ்வான் [1] "பிள்ளைகளையும் மனையாளையும் நீக்கி விட்டு ஸ்ரீராமபிரானையே சரணமாக அடைந்தேன்" என்றும், [2] "இலங்கை என்னுல் விடப்பட்டது, சிநேகிதர்களும் விடப் பட்டார்கள், செல்வங்களும் விடப்பட்டன, எனக்கு இராச்சியமும் உயிரும் தேவரீருக்கு உரிமைப் பட்டனவாக இருக்கின்றன, இம்மை மறுமை இன்பங்களும் தேவரீர் உடைமையாக இருக்கின்றன" என்றும் வருகின்றவாறே இலங்கையோடுகூட பிள்ளைகள் மனைவி முதலான எல்லாப் பொருள்களையும் விட்டு, சக்கரவர்த்தித்திருமகனையே தமக்கு எல்லாமாகப் பற்றிஞற் போன்று, இவரும், முற்றவிட்டு - [3] "பாதம் அடைவதன் பாசத்தாலே மற்றவன் பாசங்கள் முற்ற விட்டு" என்கிறபடியே இவ்வுலகவாழ்க்கையில் உளவாய எல்லாப் பற்றுக்களையும் வாசனையோடு விட்டு, மற்றிலேன் என்னும் - [4] "தயரதற்கு மகன்தன்னையன்றி மற்றிலேன் தஞ்சமாகவே" என்று சக்கரவர்த்தித்திருமகனையே எல்லாவகையாலும் காப்பாற்றுமவராகப் பற்றுகையாலே, தர்மாத்மா படியும் காணலாம் - [5] "விபீஷணன் தர்மபுத்தியுள்ளவன்" என்கிறபடியே தர்மபுத்தியுடையவன் என்கிற மாத்திரமன்றிக்கே, [6] "ஸ்ரீராமபிரான் உருவெடுத்த தர்மம்" என்று சொல்லப்பட்ட தருமசொரூபனுன சக்கரவர்த்தித்திருமகனையே தனக்குத் தாரகமாகவுடையவனுகையாலே **"தர்மாத்மா"** என்று பெரியோர்களால் சொல்லப்படுகின்ற ஸ்ரீவிபீஷணுழ்வான் தன்மையும் இவர் பக்கலிலே காணலாம்.

8 வாளி பொழிந்த நிர்க்குண விச்வாத்மா உள்ளே உறைய வீர சரிதம் ஊணுகக் கற்பார் பாவம் மற்றிலேன் என்னும் ராமதாசன் படியும் காணலாம் - திருவடி, [1] "தாழ்ந்த குணங்கள் இல்லாத அந்தப் பரமாத்மா உன்னுடைய சரீரத்தில் பரந்து நிறைந்து இருக்கிருர்" என்கிறபடியே, பகைவர்கள் கூட்டத்தைக் கிழங்கு எடுக்கையாலே ஏறிட்ட நாணி இறக்கிட்டு, [2] "நீர் நாராயணன் என்ற தேவர்" என்கையாலே 'பரமாத்மா' என்ற பெயரால் சொல்லப்படுகின்றவனுய்க் கொண்டு, [3] "உலகத்துக்கும் ஆத்மாவாக இருக்கிறவனே" என்கிறபடியே உலகத்துக்கும் ஆன்மாவாக இருக்கிற சக்கரவர்த்தித்திருமகனைத் தன்னுள்ளே உடையவனுய், [4] "அந்த மாருதி உயர்ந்த மோக்ஷத்தைப் புத்தியோடு உதறித் தள்ளி விட்டுத் தேவரீருடைய வீரசரிதத்தை இங்கேயே சேவிக்கிருன்; ஆச்சரியம்" என்கிறபடியே சக்கரவர்த்தித் திருமகனுடைய வீர சரிதத்தையே பேரின்பமாகவுடையனுய், [5] "ஸ்வாமி! மிக உயர்ந்த பிரீதியானது எனக்குத் தேவரீரிடத்தில் நிலையாக இருக்கிறது; பக்தியும் அப்படியே; வீர! என் மனமானது வேறிடத்தில் (மோக்ஷத்தில்) செல்லுகிறது இல்லை" என்கிறபடியே குணத்தாலும் சரத்தாலும் வேண்டியவர்களையும் வேண்டாதவர்களையும் வெல்லும் வீரரான சக்கரவர்த்தித்திருமகனளவிலே எப்போதும் நிலைத்திருப்பதாய், இதற்குமேல் இல்லை என்னும்படி இருக்கிற அன்பினுலும் எப்பொழுதும் இருக்கிற பக்தியாலும் இவ்விஷயத்தை விட்டுப் பரத்துவத்தில் தன்நெஞ்சுபோகாமைசொல்லுகிற இடத்தில் பரத்துவத்தின் பெயரும் சொல்லுவதில் விருப்பமில்லாமல் "வேறிடம்" என்னும்படி சக்கரவர்த்தித்திருமகனை அல்லது அறியேன் என்று இருந்தாற் போன்று,

---

1. *"த்யக்த்வா புத்ராம்ஸ்ச தாராம்ஸ்ச ராகவம் ஸரணம்கத:"*
என்பது, ஸ்ரீராமா. யுத். 17: 14.

2. *பரித்யக்தாமயாலங்கா மித்ராணிச தநாநிச*
*பவத்கதம் மே ராஜ்யஞ்ச ஜீவிதஞ்ச ஸுகாநிவை.*
என்பது, ஸ்ரீராமா. யுத். 19: 5.

3. திருவாய். 8. 2: 11.

4. திருவாய். 3. 6: 8.

5. *"விபீஷணஸ்து தர்மாத்மா நதுராக்ஷஸ சேஷ்டித:*
என்பது, ஸ்ரீராமா. ஆரண். 17: 23.

6. *"ராமோ விக்ரஹவாந்தர்ம:"*
என்பது, ஸ்ரீராமா. ஆரண். 37: 13.

---

1. *"நிர்க்குண:பரமாத்மாஸௌ தேஹந்தே வ்யாப்யதிஷ்டதி".*
என்பது, பாரதம். ஆரண். 149: 8.

2. *"பவாந் நாராயணோ தேவ:"*
என்பது, ஸ்ரீராமா. யுத். 130: 13.

3. *"விஸ்வாத்மாநம்"*
என்பது, தைத்திரீயம்,

4. *ஸோத்ரைவஹந்த ஹநுமாந் பரமாம் விமுக்திம்*
*புத்யாவிதூய சரிதம் தவ ஸேவதேஸௌ.*
என்பது, அதிமாநுஷஸ்தவம், 32.

5. *ஸ்நேஹோமே பரமோராஜந் த்வயிநித்யம் ப்ரதிஷ்டித:*
*பக்திஸ்ச நியதாவீர பாவோ நாந்யத்ரகச்சதி.*
என்பது, ஸ்ரீராமா. உத். 40: 15.

இவரும், வாளி பொழிந்த நிர்க்குண விச்வாத்மா உள்ளே உறைய - [1] “செருக்கடுத்தன்று திகைத்த அரக்கரை, உருக்கெட வாளி பொழிந்த ஒருவன், திருக்கடித்தானமும் என்னுடைச் சிந்தையும், ஒருக்கடுத்துள்ளே உறையும் பிரான் கண்டீர்” என்கிறபடியே மூலபலம் முதல் அறும்படி சரமழை பொழிந்த கூட்டு ஒருவரையும் வேண்டாத கொற்றவனை சக்கரவர்த்தித்திருமகனைத் தம்முள்ளே உடையராய், வீர சரிதம் ஊணுகை - [2] “கணை நாணில், ஓவாத் தொழில் சார்ங்கன் தொல் சீரை நன்னெஞ்சே, ஓவாத ஊணுகை உண்” என்கிறபடியே அவனுடைய வீர சரிதத்தைப் பேசுதலையே பேரின்பமாகவுடையராய், கற்பார் பாவம் மற்றிலேன் என்னும் - [3] “கற்பார் இராமபிரானை அல்லால் மற்றும் கற்பரோ” என்கிறபடியே பிரியத்தையும் நலத்தையும் பற்ற ஒன்றைக் கற்குமவர்கள் மனத்துக்கு இனியனுமாய் உபகாரகனுமான சக்கரவர்த்தித்திரு மகனை ஒழியப் பரத்துவம் முதலானவற்றையும் மற்றைய அவதாரங்களையும் கற்பரோ என்று, தமக்கு ஸ்ரீராமபிரானிடத்துள்ள பேரன்பினாலே பரத்துவம் முதலானவற்றைக் கழிக்கிற இடத்தில் அவற்றின் பெயரைச் சொல்லுவதற்கும் விருப்பம் இல்லாமல் “மற்றும்” என்னும்படி, [4] “தயரதற்கு மகன்தன்னையன்றி மற்றிலேன்” என்று இருக்கையாலே, ராமதாசன் படியும் காணலாம் - [5] “நான் கோசல தேசத்து அரசரான ஸ்ரீராமபிரானுக்குத் தாசன்” என்கிறபடியே இராமதாசனாய் இருக்கும் திருவடியுடைய தன்மையும் இவர் பக்கலிலே காணலாம்.

பல்வகையும் கண்டு வெண்சங்கு ஏந்தின ரூபபரனை சுவேதன் படியும் காணலாம் - அருச்சுனன் [6] “ஏ தேவனே! உன்னுடைய விச்வரூபமான சரீரத்தில் பலவகைப்பட்ட தேவர்களையும் அப்படியே மற்றைய உயிர்க் கூட்டங்களையும் பிரமனையும் அவனுடைய அதீனத்தில் இருக்கிற சிவனையும் தேவலோகத்தில் உள்ள எல்லா இருடிகளையும் பாம்புகளையும் பார்க்கிறேன்” என்கிறபடியே விச்வரூபம்

1. திருவாய். 8. 6: 2. 2. பெரியதிருவந். 78.
3. திருவாய். 7. 5: 1. 4. திருவாய். 3. 6: 8.
5. “தாஸோஹம் கோஸலேந்த்ரஸ்ய” என்பது, ஸ்ரீராமா. சுந். 43: 9.
6. பஶ்யாமி தேவாம்ஸ்தவ தேவதேஹே
ஸர்வாம் ஸ்ததாபூதவிஶேஷஸங்காந்
ப்ரம்ஹாணமீஶம் கமலாஸநஸ்தம்
ருஷீம்ஶ்ச ஸர்வாநுரகாம்ஶ்ச திவ்யாந்.
என்பது, ஸ்ரீகீதை, 11: 15.



கண்டபின்னர் [1] “முன்பு காணப்படாததும் ஆச்சரியம் மிகுந்த உக்கிரத்தையுடையதுமான உருவத்தைப் பார்த்துப் பிரீதியுடையவன் ஆனேன்; என்னுடைய மனம் வருத்தமும் அடைந்திருக்கிறது; உன்னுடைய முன்னைய உருவத்தையே காண்பித்தருளவேண்டும்; பிரமன் முதலான தேவர்களுக்கும் உலகத்திற்கும் இருப்பிடமானவனே! எனக்குத் திருவருள்புரியவேண்டும்” என்றும், [2] “முன்பு பார்த்தபடியே உன்னைக் கிரீடத்தையுடையவராயும் கதையையுடையவராயும் கையில் சக்கரத்தையுடையவராயும் பார்ப்பதற்கு நான் விரும்புகிறேன்; ஓ ஆயிரம் கைகளையுடையவரே! விச்வரூபத்தையுடையவரே! நான்கு கரங்களுடன் கூடின முன்னைய உருவத்துடன் கூடினவராக ஆகக்கடவீர்” என்றும் சொல்லப்படுகின்றபடியே ஞானக் கண்களாலே இப்பொழுது கண்ட விச்வரூபம் முன்பு பார்க்கப்படாததாகையாலும் உக்கிரத்தோடு கூடியதாகையாலும் உவகையையும் அச்சத்தையும் விளைக்கையாலே எப்பொழுதும் மகிழ்ச்சிக்கே காரணமாய் முன்பு பார்க்கப்பட்டதுமான அழகோடுகூடின திருமேனியைக் காண ஆசைப்பட்டு, நான்கு தோள்களையுடையதாய்ச் சங்கு சக்கரம் கதை இவற்றைத் தரித்ததுமான திவ்வியத் திருமேனியைக் காட்டவேண்டும் என்று, அந்தத் திருமேனியைக் காண்பதில் ஈடுபட்டவனாய் அதனைக் காண விரும்பினாற்போன்று,

இவரும், பல்வகையும் கண்டு - [3] “நல்குரவும்” என்று தொடங்கி “பல்வகையும் பரந்த பெருமானை - திருவிண்ணகர்க் கண்டேனே” என்று தம்முள் ஒன்றற்கொன்று மாறுபட்ட பொருள்கள் அமைந்த உலகத்தையுடையவனாய்க் கொண்டு அந்தப் பொருள்களையுடைய இவ்வுலகத்தாலே பலபடியாக விரிந்திருக்கின்றவனைக் கண்டு, வெண்சங்கு ஏந்தின ரூபபரனை - [4] “நீராய் நிலனாய்” என்று தொடங்கிச் “சிவனாய் அயன் ஆனாய்” என்கிறபடியே காரிய காரணங்கள் இரண்டனையும் சரீரமாகக் கொண்டு நீ உலகமே உருவமாக இருக்கின்ற இருப்பினை எனக்குக் காட்டித் தந்தாயாகிலும், இதனால் நான் பெற்றது உன்னதான பொருள்களை என்னது

1. அத்ருஷ்ட பூர்வம் ஹ்ருஷிதோஸ்மி த்ருஷ்ட்வாபயேந ச ப்ரவ்யதிதம் மநோமே
தேதேவமேதர்சய தேவரூபம் ப்ரஸீத தேவேச ஜகந்நிவாஸ.
என்பது, ஸ்ரீகீதை, 11, 45.

2. கிரீடிநம் கதிநம் சக்ரஹஸ்தமிச்சாமி த்வாம்த்ருஷ்டு மஹம்ததைவ
தேநைவ ரூபேண சதுர்புஜேந ஸஹஸ்ரபாஹோபவ விச்வ மூர்த்தே.
என்பிது, ஸ்ரீகீதை, 11: 46.

3. திருவாய். 6. 3: 1: 4. திருவாய். 6. 9: 1.

என்றும் பிறரது என்றும் இருக்கும் மாறுபட்ட எண்ணம் நீங்கி எல்லாம் உன்னுடைமையே என்னுமளவேயாம்; இது எனக்கு ஈடுபடுத்துவதாய் அநுபவிக்கத்தக்கதாய் இருக்கிறதில்லை; ஆனபின்பு, “கூரார் ஆழி வெண்சங்கு ஏந்தி வாராய்” என்கிறபடியே சங்கு சக்கரங்களைத் தரித்துக்கொண்டிருக்கின்ற உனக்கேயுரியதான விக்கிரகத்தோடே என்முன்னே வரவேண்டும் என்று அவனுக்கேஉரியதான விக்கிரகத்தை அநுபவிக்கும் அநுபவத்திலே ஈடுபட்டவராய் அதனை விரும்புகையாலே, சுவேதன்படியும் காணலாம் - [1] “சினப்போர்ச் சுவேதனை” என்று சொல்லப்பட்ட அருச்சுனன்படியும் இவர் பக்கலிலே காணலாம் என்கை.

சுவேதன் என்றது, சுவேதவாகனன் என்றபடி. ‘முதலானோர்’ என்றது, [2] “பெருமக்கள் எல்லார்க்கும் எப்பொழுதும் உபமானமாக யாதொரு பிரஹ்லாதன் இருந்தானோ” என்கிறபடியே, தம்முடைய ஒவ்வொரு தன்மையாலே எல்லார்க்கும் உபமான பூமியாய் இருக்குமவராகையாலே இன்னமும் ஞானிகளானவர்கள் பலர்படியும் இவர் பக்கலிலே காணலாம் என்று தோற்றுகைக்காக. இச் சூத்திரத்தில் இலக்குமணன் பரதன் சத்துருக்நன் என்னும் இவர்களோடு ஒப்புமை சொன்ன பின்பு, தசரதன் முதலாயினர்களோடு இவர்க்கு ஒப்புமை சொன்ன இதனை, மேற்சூத்திரங்களிலே பிராட்டிமாரோடு ஒப்புமை சொன்ன பின்பு ஸ்ரீகோபிமார் முதலாயினரோடு ஒப்புமை சொன்னது போன்று கொள்க. (41)

## 128

[3] குழலில்நெஞ்சும் அருகலில்சுவையுமான இவர்,
அவர்கள் அளவு அல்லர்.

என்பது சூத்திரம்.

**வியாக்:—** ஆக, இப்படி நித்தியசூரிகளில் தலைவராய்த் தொடர்ந்து அடிமை செய்யப் பிறந்த இலக்குமணன் முதலாயினரோடும், இவ்வுலக மக்களிலே ஒருவராக இருந்தும் பகவானிடத்தில் பக்தியோடு கூடின தசரதன் முதலாயினர்களோடும் இவர்க்கு உண்டான ஒப்புமையை அருளிச்செய்தார் மேல். அவர்கள் அனைவரிலும் இவர்க்கு உள்ள ஏற்றத்தை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

1. நான்முகன் திருவந். 24.

2. “உபமாநமசேஷாணாம் ஸாதூநாம் யஸ்ஸதாபவத்” என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 1. 15: 156.

3. ‘குழலில்’ என்பது ‘குழல்’ என்ற மொழியை முதலாகவுடைய திருப்பாசுரத்தையும், ‘அருகலில்’ என்பது ‘அருகலில்’ என்றதனை முதலாகவுடைய திருப்பாசுரத்தையும் காட்டுகின்றது.



அதாவது, குழலில் நெஞ்சும் - [1] “குழற்கோவலர் மடப்பாவையும்” என்ற திருப்பாசுரத்திற் சொல்லுகிறபடியே பிராட்டிமாரும் நித்தியசூரிகளும் அவனுமான திரளிலே பற்றின நெஞ்சினையுடையராய், அருகலில் சுவையும் ஆன இவர் - [2] “அருகலில் ஆய பெருஞ்சீர் அமரர்கள் ஆதிமுதல்வன்” என்கிற திருப்பாசுரத்திற் சொல்லுகிறபடியே பிராட்டிமாரோடும் திருவடி திருவனந்தாழ்வான் முதலான நித்தியசூரிகளோடும் ஒரோவகையாலே கலக்குமவன், அவர்களோடே கலக்குமாறு போலே ஒருவழியாய் வந்த சுவையைத் தந்து விடுகின்றிலன் என்னளவில்; அவர்கள் எல்லார் பக்கலிலும் செய்யும் ஆதரத்தை என் பக்கலிலே செய்யாநின்றான் என்னும்படி எல்லா வழிகளாலும் உள்ள கலவியின் சுவையைத் தமக்கு அவன் விளைக்கையாலே [3] இன்பச் சுவையும் விஞ்சப் பெற்றவரான இவர், அவர்கள் அளவு அல்லர் - ஒவ்வோர் அவதாரமாத்திரத்திலும் கேவலம் எம்பெருமான் தன்னளவிலும் பற்றின நெஞ்சினையுடையராய், பகவத்பக்தி ஒரு கால விசேடத்திலேயாய், சிற்றின்ப விருப்பமும் கலசியிருப்பாரும், இதர விஷய வைராக்கியம் முன்னாக எப்போதும் நடந்து செல்லும் பகவத்பக்தி உண்டாகியும் அவன் அடியாரும் அவனுமான சேர்த்தியில் சுவை அறியாதாருமான தசரதன் முதலாயினாரும், பரத்துவம் அவதாரம் என்னும் வேற்றுமை இன்றி அவ்விரண்டிலும் ஈடுபட்ட நெஞ்சினையுடையவராயும் ஒரு வழியால் வந்த சுவையைப் பெற்றிருக்கும் இலக்குமணன் முதலாயினருமான அவர்களில் மிகமிக வேறுபட்டவர்; உயர்ந்தவர் என்றபடி.

ஆக, இலக்குமணன் முதலாயினரோடும், தசரதன் முதலாயினரோடும் இவர்க்கு உள்ள ஒப்புமையைக் கூறியது போன்று, அவர்களைக் காட்டிலும் இவர்க்கு உண்டான உயர்வினையும் கூறினாராயிற்று. (42)

## 129

[4] எற்றைக்கும் என்றது தோன்றப் பிறந்து ஒப்பித்து வீசிக் காப்பிட்டுக் காட்டுக்கு முற்பட்டுத் தர்மம் சொல்லி, கேட்டுச் சிஷ்யா தாஸீ பக்தை

1. திருவிருத்தம், 3. 2. திருவாய். 1. 9: 3.

3. ‘இன்பச்சுவையும்’ என்ற உம்மை, மேலே கூறிய ‘பற்றின நெஞ்சினையுடையவராய்’ என்பதனைத் தழுவுகின்றது.

4. இச் சூத்திரத்தில், ‘வந்து என்பாரையும்’ என்றது முடியப் பிராட்டிமாரைக் கூறுகின்றது. அவற்றிலும், ‘காட்டுக்கு முற்பட்டுத் தர்மம் சொல்லி’ என்றது முடியச் சீதாபிராட்டியையும், அதற்குமேல் ‘கேட்டுச் சிஷ்யா தாஸீ பக்தைகளாய்ப் பாடி வருடி இன்று வந்து’ என்றது முடியப் பூமிப்பிராட்டியையும் கூறுகின்றது. ‘சென்றால் ஊரும் நிவாஸ

களாய்ப் பாடி வருடி இன்று வந்து என்பாரையும்,
சென்றால் ஊரும் நிவாச தாஸ பேதம் கொள்வாரை
யும் தாம் அவராகப் பாவிப்பர்.

என்பது சூத்திரம்.

வியாக்:— இப்படிப்பட்ட நெஞ்சினையும் சுவையையுமுடைய இவர், தம்முடைய காதற்பெருக்காலே, அவன் பிறவிகளுக்குத் தகுதியாகப் பிறந்து பலவிதமான தொண்டுகளைச் செய்யும் பிராட்டிமாரையும், செய்யவேண்டிய கைங்கர்யங்களில் ஒன்றும் குறைவின்றியே அவற்றைச் செய்வதில் விருப்பமுள்ளவர்களாய் அவ்வவ்விடங்கட்கு வேண்டிய பல வடிவங்களைக் கொண்டு பலவித கைங்கர்யங்களைச் செய்யும் திருவனந்தாழ்வான் திருவடி முதலானவர்களையும், அவர்கள் தாம் என்னலாம்படி பாவிப்பர் என்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, எற்றைக்கும் என்றது தோன்ற - ஸ்ரீ பூமிப்பிராட்டி அவதாரமான ஆண்டாளுடைய வேண்டுகோள் பிராட்டிமார் மூவர்க்கும் ஒக்கும் ஆகையாலே [1] "எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு உற்றோமே ஆவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்" என்கிறபடியே பல பிறப்புக்கள் பிறந்து உன்னோடே சேஷசேஷிபாவமாகிற உறவையுமுடையோமாய், உனக்கே உகப்பான அடிமைகளை நாங்கள் செய்யவேண்டும் என்று ஆசைப்பட்டமை தோன்ற, பிறந்து - [2] "அவன் தேவனாகப் பிறக்கும்போது இந்தப்பிராட்டி தேவசரீரத்தைக் கொண்டும், மனிதனாகப் பிறக்கும்போது தான் மனித சரீரத்தைக் கொண்டும், இறைவனுடைய சரீரத்திற்குத் தகுதியாக இந்தப் பிராட்டி தன் சரீரத்தை அமைத்துக்கொள்ளுகிறாள்" என்கிறபடியே இறைவன் உலக பாலனத்திற்காகத் தேவர் மனிதர் முதலிய ஜாதிகளில் அவ்வவ் சாதியைச் சார்ந்தவனாய் அவதரிக்குமளவில், அவன் கொண்ட வடிவிற்குத் தகுதியான வடிவுகொண்டு தோற்றுமவ

---

*தாஸபேதம் கொள்வார்' என்றது, திருவனந்தாழ்வானையும் திருவடியையும் கூறுகின்றது. சென்றால் நிவாஸபேதம் கொள்வார் என்றும், ஊரும் தாஸபேதம் கொள்வார் என்றும் நிரல் நிறையே கொள்க. "சென்றால்" "நிவாஸ" என்ற சொற்களும், "ஊரும்", "தாஸ" என்ற சொற்களும் அந்த அந்தச் சொற்களை முதலாகவுடைய திருப்பாசுரங்களையும் சுலோகங்களையும் காட்டுகின்றன.*

1. *திருப்பாவை, 29.*
2. *தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வேச மாநுஷீ*
   *விஷ்ணோர்தேஹாநுரூபாம் வை கரோத்யேஷாத்மநஸ்தநும்.*
*என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 1. 9: 145,*



ளாகையாலே [1] "இறைவன் ஸ்ரீராமபிரானாக அவதரித்தபோது இறைவி சீதையாக அவதரித்தாள்" என்கிறபடியே அவன் சக்கரவர்த்தித் திருமகனாய் அவதரித்தபோது தானும் ஸ்ரீஜனகராஜன் திருமகளாய் அவதரித்து,

ஒப்பித்து - [2] "பன்றி இரத்தம் போன்று செந்நிறம் பொருந்தியதும் பிராட்டியின் சம்பந்தத்தால் தூய்மையுடையதும் நல்லவாசனையுள்ளதும் சிறந்ததுமான சந்தனத்தைப் பிராட்டியால் பூசப்பட்டவரும் பகைவரைக் கொளுத்துபவருமான ஸ்ரீராமபிரானை" என்கிறபடியே திருமுடி சூட்டுவதற்காக அலங்கரித்து, வீசி - [3] "பின்னரும் பக்கத்தில் நின்றுகொண்டிருப்பவளும் சாமரத்தைக் கையில் ஏந்தினவளுமான பிராட்டியால் சித்திரை மாதத்துச் சித்திரை நக்ஷத்திரத்தால் கூடப்பட்ட சந்திரனைப் போன்று ஆலிங்கனம் பண்ணிக் கொள்ளப்பட்டவரான ஸ்ரீராமபிரான்" என்கிறபடியே அப்போது அருகே சேவித்து நின்று திருவெண்சாமரம் பணிமாறி, பின்னர் சக்கரவர்த்தியின் மாளிகைக்கு எழுந்தருளுகிறபோது [4] "ஸ்ரீராமபிரானால் கௌரவிக்கப்பட்டவளும் கறுத்த திருக்கண்களையுடையவளும் ஆன பிராட்டி மங்களங்களைச் சொல்லிக் கொண்டு வாசற்படியளவும் ஸ்ரீராமபிரான்பின் சென்றாள்" என்றும், [5] "இந்திரன் தேவரீருடைய கிழக்குத் திக்கினைப் பாதுகாக்க, இயமன் தெற்குத் திக்கைப் பாதுகாக்க, வருணன் மேற்குத்திக்கையும் குபேரன் வடக்குத்திக்கையும் பாதுகாக்க" என்றும் சொல்லப்படுகிறபடியே ஸ்ரீராமபிரானுடைய வடிவழகினைக் கண்டு இது நமக்குத் தொங்கப் புகுகிறதோ என்னும் வயிறு பிடியாலே அந்தப் புரத்தின் வாசல்

---

1. *"ராகவத்வேபவத்ஸீதா"*
*என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 1. 9: 144.*

2. *வராஹருதிராபேண ஶுசிநாச ஸுகந்திநா*
   *அநுலிப்தம் பரார்த்யேநசந்தநேந பரந்தபம்.*
*என்பது, ஸ்ரீராமா. அயோத். 16: 9.*

3. *ஸ்திதயாபார்வதஶ்சாபி வாலவ்யஜந ஹஸ்தயா*
   *உபேதம் ஸீதயாபூய: சித்ரயாஶஶிநம்யதா.*
*என்பது, ஸ்ரீராமா. அயோத். 16: 10.*

4. *பதிஸம்மாநிதா ஸீதா பர்த்தாரம் அஸிதேக்ஷணா*
   *ஆத்வாரமநுவவ்ராஜமங்களாந்யபிதத்நுஷீ.*
*என்பது, ஸ்ரீராமா. அயோத். 16: 21.*

5. *பூர்வாம்திஶம் வஜ்ரதரோ தக்ஷிணம் பாதுதேயம:*
   *வருண: பஶ்சிமாமாஶாம் தநேஶஸ்தூத்தராம்திஶம்.*
*என்பது, ஸ்ரீராமா. அயோத்: 16: 24.*

அளவும் பின் சென்று மங்களாசாசனம் செய்து, காட்டுக்குமுற்பட்டு-அதன் பின்னர் காட்டுக்கு எழுந்தருளுகிறபோது [1] "தருப்பைக் கட்டைகளையும் முட்களையும் அழித்துக் கொண்டு உமக்கு முன்னே நான் செல்வேன்" என்கிறபடியே தான் முற்பட்டு, தர்மம் சொல்லி-ஸ்ரீதண்டகாரண்யத்தில் எழுந்தருளியிருக்கிறபோது அவர் ஆயுதங்களைத் தரித்துக்கொண்டு நிற்கிற நிலையைக் கண்டு, [2] "ஓ வீரரே! தண்டகாரண்யத்தைக் குறித்துச் செல்வது எனக்குப் பிடிக்கவில்லை, அதற்குக் காரணம் சொல்லுகிறேன், என்னுடைய வார்த்தையைக் கேட்க வேண்டும், தேவரீர் அம்புகளுடன்கூடிய வில்லைக் கையில் ஏந்தினவராய்த் தம்பியுடன் காட்டினை அடைந்திருக்கின்றீர், காட்டில் வசிக்கும் பொருள்களைப் பார்த்து அவற்றின்மேல் ஒருவேளை அம்புகளை விடுவீர், அரசர்களுக்கு அருகில் இருக்கும் வில்லானது ஒளியாகிய வலிமையை மிக மிக அதிகரிக்கச் செய்கிறது, நெருப்பிற்கு அருகில் இருக்கும் விறகு ஒளியை அதிகரிக்கச் செய்யும்" என்கிறபடியே இவர் ஆயுதத்தைத் தரித்துக்கொண்டு நிற்கில் யாரையேனும் மேல்விழுந்து போர் மூளக்கூடும் என்று அஞ்சி, [3] 'தருமத்தால் பொருள் உண்டாகிறது, தருமத்தால்இன்பம் உண்டாகிறது" என்பனபோன்றவைகளால் எல்லாவற்றிற்கும் தருமமே மூலம் என்னுமிடத்தைநினைப்பித்து, ஆனபின்பு ஆயுதத்தைக் கீழேவைத்துவிட்டுத் தவவேடத்தோடே தருமத்தைச் செய்யஅமையும் என்று தரும உபதேசத்தையும் செய்த பெரியபிராட்டியாரையும்,

கேட்டுச் சிஷ்யா தாசீ பக்தையாய் - [4] "பிரபுவே! மாதவனே! நான் தேவரீரிடத்தில் மாணவியாகவும் வேலைக்காரியாகவும் பக்தியுடையவளாகவும் இருக்கிறேன்; எனக்காக எல்லா உயிர்களுக்கும்

1. "அக்ரதஸ்தேகமிஷ்யாமி ம்ருத்நந்தீ குஶகண்டகாந்" என்பது, ஸ்ரீராமா. அயோத். 27: 6.

2. "நஹிமேரோசதேவீர கமநம்தண்டகாந்ப்ரதி
காணம்தத்ர வக்ஷ்யாமிவதந்த்யாஶ்ருயதாம்மம"
"த்வம்ஹிபாண தநுஷ்பாணி: ப்ராத்ரா ஸஹவநம்கத:
த்ருஷ்ட்வா வநசராந் ஸர்வாந்கச்சித் குர்யாச்சரவ்யயம்"
"க்ஷத்ரியாணுஞ்சஹி தநுர் ஹுதாசஸ்யேந்தநாநிச
ஸமீபதஸ்ஸ்திதம் தேஜோபல முச்ச்ர்யதே ப்ருசம்"
என்பன, ஸ்ரீராமா. ஆரண். 9. 13, 14, 15.

3. "தர்மாதர்த்த: ப்ரபவதே தர்மாத் ப்ரபவதே ஸுகம்" என்பது, ஸ்ரீராமா. ஆரண். 9: 30.

4. "அஹம்சிஷ்யாச தாஸீச பக்தாச த்வயி மாதவ
மத்க்ருதே ஸர்வபூதாநாம் லகூபாயம் வதப்ரபோ"
கைசிக புராணம்.



எளிதான உபாயத்தை அருளிச்செய்ய வேண்டும்" என்கிறபடியே ஸ்ரீவராககாயனர் பக்கலிலே உயர்ந்த தருமத்தைக் கேட்டு அதன் காரணமாக மாணவியாகவும் வேலைக்காரியாகவும் பக்தியையுடையவளுமாய், பாடி- [1] "உன் தன்னைப் பாடி" என்கிறபடியே கவிபாடி, வருடி- [2] "திருமகளும் புவியும் செம்பொன் திருவடியின்இணை வருட" என்கிறபடியே பெரியபிராட்டியைப் போன்று அவன் திருவடிகளைப் பிடித்து, இன்று வந்து - [3] "இன்று வந்து இத்தனையும் அமுது செய்திடப் பெறில் நான் ஒன்று நூறுயிரமாகக் கொடுத்துப் பின்னும் ஆளும் செய்வன்"என்கிறபடியே தன்னைக் கைங்கரியம் கொண்டால் அதற்குப் பிரதி உபகாரமும் செய்வேன், என்பாரையும் - என்ற ஸ்ரீபூமிப் பிராட்டியாரையும்,

சென்றால் நிவாஸ பேதம் கொள்வாரையும் - [4] "சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம், நின்றால் மரவடியாம் நீள்கடலுள் - என்றும், புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும், அணையாம் திருமாற்கு அரவு" என்கிற திருப்பாசுரத்திலும், [5] "இருப்பிடம் படுக்கை உட்காரும் ஆசனம் பாதுகை திருப்பரியட்டம் தலையணை மழை வெய்யில் இவற்றைத் தடுக்கும் குடை முதலிய வெவ்வேறு வடிவங்களால் அவர் செய்யும் கைங்கரியத்துக்குத் தக்கபடி மக்களால் சேஷன்என்று சொல்லப்படுகிற திருவனந்தாழ்வான்" என்னும் பொருளையுடைய சுலோகத்திலும் சொல்லுகிறபடியே பகவானுடைய கைங்கர்யத்திற்குத் தகுதியாகக் குடை சிங்காதனம் பாதுகை திருப்பரியட்டம் முதலான வேறுபட்ட சரீரங்களைக்கொண்டு எல்லாவித மான கைங்கர்யங்களையும் செய்யும் திருவனந்தாழ்வானையும்,

ஊரும தாஸ பேதம் கொள்வாரையும் - [6] "ஊரும் புள்; கொடி

1. திருப்பாவை, 27. 2. பெரிய திருமொழி, 7. 8: 1.

3. நாய்ச்சியார் திரு. 9: 7. 4. முதல் திருவந். 53.

5. நிவாஸ ஶய்யாஸந பாதுகாம்ஶுக
உபதாநவர்ஷாதபவாரணுதிபி:
ஶரீரபேதைஸ்தவ ஶேஷதாம்கதை:
யதோசிதம் ஶேஷஇதீரிதேஜநை:
என்பது, தோத்திரரத்தினம், 40.

6. திருவாய். 10. 2: 3.

யும் அஃதே" என்ற திருப்பாசுரத்திலும் [1] "வேதங்களை உறுப்புக்களாகவுடைய பெரிய திருவடியானவர் தேவரீருக்கு அடியவனும் சிநேகிதனும் வாகனமாயும் சிங்காதனமாயும் கொடியாகவும் மேற்கட்டியாகவும் விசிறிபோன்று சிறகுகளால் சிரம பரிஹாரம் செய்விக்குமவனும் இருக்கிற" என்ற பொருளையுடைய சுலோகத்திலும் சொல்லுகிறபடியே வாகனம் கொடி மேற்கட்டி சிரமபரிஹாரம் செய்விக்கும் விசிறி முதலான வேறுபட்ட சரீரங்களைக்கொண்டு எல்லா விதமான கைங்கர்யங்களையும் செய்யும் பெரியதிருவடியையும்,

தாம் அவராகப் பாவிப்பர் - [2] "பின்னைகொல் நிலமாமகள் கொல் திருமகள்கொல் பிறந்திட்டாள்" என்கிறபடியே பிறந்து பிராட்டிமார் நிலைகளிலே நின்று பேசும்படியான பல தன்மை விசேடங்களையும், [3] "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்" என்கிறபடியே எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் எல்லா நிலைகளிலும் உசிதமான எல்லாக் கைங்கர்யங்களையும் செய்ய வேண்டும் என்னும் காதற் பெருக்கினையுமுடையவராகையாலே, பிராட்டிமாரையும் திருவனந்தாழ்வான் முதலிய நித்திய சூரிகளையும், அவர்களுக்கும்தமக்கும் ஒரு வேறுபாடு இன்றி அவர்கள் தாமாகவே பாவிப்பர்என்றபடி. (43)

## 130

[4] எழுவதோர் உரு அழிக்க, செய்கிற வழுவிலா அடிமைக்கு, பாஞ்சாலிபடுத்துமதும் கௌசல்யா அநுவிருத்தியும் ஒப்பாக்குகை பரிசு.

என்பது சூத்திரம்.

1. தாஸஸ்ஸகா வாஹநமாஸநம் த்வஜோ
   யஸ்தேவிதாநம் வ்யஜநம் த்ரயீமய:
   உபஸ்திதம்தேநபுரோ கருத்மதா
   த்வதங்க்ரிஸம்மர்த்த கிணாங்கஶோபிநா.

என்பது, தோத்திரரத்தினம், 41.

2. திருவாய். 6. 5: 10.
3. திருவாய். 3. 3: 1.
4. இதனை, எழுவது ஓர்உரு அழிக்க, (அதற்கு) பாஞ்சாலிபடுத்துமது ஒப்பாக்குகை பரிசு என்றும், செய்கிற வழுவிலா அடிமைக்குக் கௌசல்யா அநுவிருத்தி ஒப்பாக்குகை பரிசு என்றும் கூட்டுக. பாஞ்சாலி-திரௌபதி. பரிசு - சிறுபான்மை; ஸ்தூலம்; மேலெழுந்தவாரியாக என்றபடி. அநுவிருத்தி - குற்றேவல்.



வியாக் :— இப்படி இவர்க்கு இந்நிலை விளையும்படி, சர்வேச்வரனுடைய விக்கிரகத்தின் வேறுபட்ட அழகின் தன்மை இவரது ஆண்தன்மையை அழித்துப் பெண்தன்மையை இவர்க்கு உண்டாக்கியதற்கும், இத் திருமேனியோடே எம்பெருமான் விஷயத்தில் பலவிதமான கைங்கர்யங்களை இவர் செய்வதற்கும், திரௌபதி கௌசல்யை என்னும் இவர்கள் தன்மைகளை ஒப்பாகச் சொல்லலாமோ என்னும் அவாய்நிலையிலே மேலெழுந்த வகையில் இவற்றிற்கு அவற்றை ஒப்பாகக் கூறுதலாம் என்னுமிடத்தைக் கூறுகிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, எழுவது ஓர் உரு அழிக்க - [1] "குழுமித் தேவர் குழாங்கள் கைதொழச் சோதி வெள்ளத்தினுள்ளே, எழுவதோர் உரு என் நெஞ்சினுள்ளே எழும்" என்கிறபடியே ஒளியின் திரள்களின் நடுவே ஆராய்ந்து அறியும்படி இருப்பதாய், [2] "ஆடவர்களுடைய கண்களையும் மனத்தையும் கவர்கின்றவனை" என்கிறபடியே வயிரவுருக்காய் ஆண்களையும் பெண்ணுடை உடுத்தச்செய்யுமவனுடைய திவ்விய திருமேனி, இவருடைய ஆண்தன்மையை அழித்துப் பெண்தன்மையை விளைத்ததற்கு, பாஞ்சாலி படுத்துமது ஒப்பாக்குகை பரிசு - [3] "தாமரை இதழ்போன்ற கண்களையுடையவளாய் நீராடுகின்ற திரௌபதியினுடைய கடிதடத்தைக் கண்ட பெண்கள் ஆண்களின் தன்மையை மனத்தால் அடைந்தார்கள்" என்கிறபடியே இவ்வுலக சம்பந்தத்தையுடையதாய் ஊன் குருதி முதலியவற்றின் மயமான தேகத்தையுடைய திரௌபதி தன்னுடைய சரீரத்தின் அழகாலே தன் இனத்துப் பெண்களின் பெண்தன்மையை அழித்து ஆண்தன்மையை அடைவித்ததை ஒப்புச் சொல்லுவோம் என்றால் இதற்கு அது நன்கு ஒப்புமைப்பட்டதன்றாகையால் பொருந்தாது.

செய்கிற வழுவிலா அடிமைக்கு - ஒருகாரணமும் பற்றாமலே சேஷியாக இருக்கின்ற எம்பெருமான் விஷயத்திலே எல்லை இல்லாத பக்தியாலே [4] "வழுவிலா அடிமை செய்ய" என்கிறபடியே தம்

1. திருவாய். 5. 5: 10.
2. "பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்"
என்பது, ஸ்ரீராமா. அயோத். 3: 28.
3. பாஞ்சால்யா: பத்மபத்ராக்ஷ்யா: ஸ்நாயந்த்யாஜகநம்கநம்
   யாஸ்த்ரியோத்ருஷ்ட வத்யஸ்தா: பும்பாவம்மநஸாயயு:
என்பது, ஸ்ரீபாரதம்.
4. திருவாய். 3, 3; 1,

முடைய நிலை வேறுபாடுகளால் இவர் செய்கிற பலவிதமான கைங்கரியங்களுக்கு, கௌசல்யா அநுவிருத்தி ஒப்பாக்குகை பரிசு - [1] "கௌசல்யையானவள் காலம்தோறும் வேலையாள் போன்றும் தோழிபோன்றும் மனைவி போன்றும் தங்கை போன்றும் தாய் போன்றும் வேண்டிய காரியங்களைச் செய்து வந்தாள்" என்கிறபடியே கௌசலையார் காரணம் பற்றி வந்த கணவனை சக்கரவர்த்தியிடத்தில் அந்த அந்த நிலைகளுக்குத் தகுதியாகச் செய்து போந்த தன்மை விசேடங்களாலே வந்த ஒருசில தொண்டுகளை உவமானமாகச் சொல்லுதல் மிகவும் ஒப்பு அல்லாமையாலே தூலம் என்றபடி. இதனால், ஒருபுடை ஒப்புச் சொல்லுவோம் என்றாலும் இவற்றிற்கு அவை பற்றா என்றதாயிற்று. (44)

## 131

[2] பெருக்காறு பல தலைத்து, கடலை நோக்குமா போலே, நெக்கு ஒசிந்து கரைந்து அலைந்து இடிந்து உடையப் பெருகுகாதல், கடல் இடம் கொண்ட கடலைப் பஹுமுகமாக அவகாஹிக்கும்.

என்பது சூத்திரம்.

வியாக் :— இப்படிப் பல நிலை வேறுபாடுகளை அடைந்தவரானாலும் தாமான தன்மையால் செல்லும் காதலும் இவர்க்குக் குறையாது என்னுமதனைத் திருஷ்டாந்தத்தோடு அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

அதாவது, பெருக்காறு பல தலைத்து-கிண்ணகம் எடுத்த ஆறு பலதலையாய்ப் பாய்ந்து செல்லா நிற்கத் தனக்கு ஒருகுறைவு இன்றியே, கடலை நோக்குமா போலே - [3] "பெயரும் கருங்கடலே நோக்கும் ஆறு" என்கிறபடியே தனக்குப் புகலான கடலை நோக்கிச் சென்று புகுமாறுபோலே, நெக்கு ஒசிந்து கரைந்து அலைந்து இடிந்து உடைய-நெக்கு ஒசிந்து கரைந்து - [1] "நெக்கு ஒசிந்து கரையும்" என்றும், அலைந்து - [2] "நீராய் அலைந்து கரைய உருக்குகின்ற நெடுமாலே" என்றும், இடிந்து [3] "நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சு இடிந்துகும்" என்றும், உடைய - [4] "என்மனம் உடைவதும் அவற்கே" என்றும், சொல்லப்படுகின்றவாறே உடைகுலைப்பட்டுஉருக்குலைந்தவராய்ப் பரவசப்பட்டவராய் நீராய் நிலைகலங்கி நெஞ்சு கட்டுஅழிந்து உருக்குலைந்துபோம்படி, பெருகு காதல் - [5] "பெருகுமால் வேட்கை" என்றும், [6] "கழியமிக்கதோர் காதல்" என்றும் சொல்லப்படுகிறபடியே கரை அழியப் பெருகுகிற காதலானது, கடல் இடம்கொண்ட கடலை - [7] "கடல் இடம்கொண்ட கடல்வண்ணா" என்கிறபடியே ஒருகடல் ஒருகடலிலே சாய்ந்தாற்போலே திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகின்ற சிரமத்தைப் போக்குகின்றவடிவையுடைய பெரிய பெருமாளாகிற அளவிட்டு அறிய முடியாத பொருளை, பஹுமுகமாக அவகாஹிக்கும் - தாமானதன்மையாலும் நற்றாய் தோழி முதலிய நிலை வேறுபாட்டினை அடைவதனாலும் உண்டான வேற்றுமையாலே பலமுகமாகச் சென்று சேரும் என்கை. இதனால், சொல்லப்பட்டனவும் சொல்லப்படுவனவுமான நிலைவேறுபாடுகளுக்கு எல்லாம் உடலான இவருடைய பக்தியின் பெருமை சொல்லப்பட்டது. (45)

## 132

[8] அச்சேத்யம் என்னுமது, ஈரும் வேம் ஈரியாய் உலர்த்த என்னப்பட, சித்தம் சித்தாய் அல்லேன் என்று நீங்க, கரணங்கள் முடியானேயில் அவையாக, உடலம் ஆத்மதர்மம் கொள்ள, காற்றும் கழியும் கட்டி அழ, கொண்ட பெருங்காதலுக்குப் பத்திமை நூல் வரம்பு இல்லையே.

என்பது சூத்திரம்.

வியாக்:—இவருடைய பக்திதான், நூல்களில் கூறியபடி முறையோடு கூடியதாய்ச் செய்யப்படுமதாய் ஒரேதன்மையாய் இராமல்,

---

1. யதாயதாஹி கௌசல்யா தாஸீவச்ச ஸகீவச
பார்யாவத் பகிநீவச்ச மாத்ருவச்சோபதிஷ்டதி.

என்பது, ஸ்ரீராமா. அயோத். 12: 68.

அன்னை தயையும் அடியாள் பணியும் மலர்ப்
பொன்னின் அழகும் புவிப்பொறையும்—வன்னமுலை
வேசி துயிலும் விறன் மந்திரி மதியும்
பேசி விவையுடையாள் பெண்.

என்றார் பிறரும்.

2. கடல் இடம் கொண்ட கடல் - திருபாற்கடலை இடமாகக் கொண்டு அறிதுயில் புரிகின்ற பெரியபெருமாள். பஹுமுகமாக - பல வழிகளாக. அவகாஹிக்கும் - சென்றுசேரும்.

3. முதல்திருவந். 67.

1. திருவாய். 6. 5: 2.
2. திருவாய். 5. 8: 1.
3. திருவாய். 9. 6: 2.
4. திருவாய். 9. 3: 6.
5. திருவாய். 9. 6: 1.
6. திருவாய். 5. 5: 10.
7. திருவாய். 7. 2: 7.
8. அச்சேத்யம் - இரண்டு துண்டுகளாக வெட்டப்படமாட்டாதவன்; உயிர்.

இப்படி, கட்டுக்கு அடங்காததாய்ச் செய்யவியலாததாய்ப் பலமுகமாய் நடப்பான் என் ? என்னும் அவாய் நிலையிலே அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தை.

அச்சேத்யம் என்னுமது - [1] "இந்த ஆன்மா வெட்டத்தகாதவன், கொளுத்தப்படாதவன், நனைக்கப்படாதவன், உலர்த்தப்படாதவன்" என்கிறபடியே கத்தியால் வெட்டப்படுதற்கும் நெருப்பால் கொளுத்தப்படுதற்கும் நீரால் நனைக்கப்படுதற்கும் வெயிலால் உலர்த்தப்படுதற்கும் ஒண்ணுததாகச் சொல்லப்படுகின்ற ஆன்மாவானது, ஈரும் - [2] "சிவனொடு பிரமன் வண்திருமடந்தை சேர்திருவாகம் எம் ஆவி ஈரும்" என்கிறபடியே பிராட்டியோடு சிவன் முதலாயினர்களோடு வேற்றுமைஅற உடம்பு கொடுக்குமவனுடைய சீலகுணம் நினைக்கப்படுகின்ற காலத்தில் என் ஆன்மாவை ஈராநின்றது என்றும், வேம் - [3] "வேம் எமதுஉயிர் அழல் மெழுகில் உக்கு" என்கிறபடியே என் ஆன்மாவானது நெருப்பில் இட்ட மெழுகுபோல் உருக்குலைந்து வேவாநின்றது என்றும், ஈரியாய் - [4] "காரியம் நல்லனகள் அவை காணில் என்கண்ணனுக்கு என்று, ஈரியாய் இருப்பாள்" என்கிறபடியே நல்லது கண்டால் கிருஷ்ணனுக்கு என்று நினைக்கும் நினைவால் நீர்ப்பண்டமாகும் என்றும், உலர்த்த - [5] "வேட்கைநோய் மெல்லாவி உள் உலர்த்த" என்கிறபடியே வேட்கை நோயானது மென்மைத் தன்மையையுடைய ஆன்மாவைக் குருத்துவற்றுக உலர்த்த என்றும், என்னப்பட - இப்படி வெட்டப்படுதல் முதலியவற்றிற்குத் தகுதி ஆயிற்று என்று தாமே சொல்லும்படியாக,

சித்தம் சித்தாய் அல்லேன் என்று நீங்க - [6] "என்னெஞ்சு என்னை, நின்னிடையேன் அல்லேன் என்று நீங்கி" என்கிறபடியே அறிவில்லாத நெஞ்சமானது அறிவுடைப்பொருளின் நிலையை அடைந்து, அவனுலே பிரிந்துபோகப்பட்ட உனக்குக் கரணம் ஆவேன் அல்லேன் என்று, [7] "என்னால் நன்ருக விடப்பட்டது" என்கிறபடியே உறவறச் சொல்லித் தம்மை விட்டு நீங்க, கரணங்கள் முடியானேயில்

1. "அச்சேத்யோய மதாஹ்யோயம் அக்லேத்யோ பேபாஷ்யஏவச" என்பது, ஸ்ரீகீதை, 2: 24.
2. திருவாய். 9. 9: 6.
3. திருவாய். 10. 3: 7.
4. திருவாய். 6. 7: 9.
5. திருவாய். 2. 1: 10.
6. திருவாய். 8. 2: 10.
7. "ஸம்ந்யஸ்தம் மயா" என்பது, பிரமாணம்.



அவையாக - புறஉறுப்புக்கள் [1] "முடியானே" என்ற திருவாய்மொழியின்படியே அறிவுடைப்பொருளைப் போன்று ஒரு உறுப்பினுடைய செயலை மற்றைய உறுப்புக்கள் ஆசைப்படும்படி விடாய்க்க, உடலம் ஆத்ம தர்மம் கொள்ள - [2] "உடலம் நின்பால் அன்பாயே, நீராய் அலைந்து கரைய" என்கிறபடியே பகவானிடத்துக் கொண்ட அன்பின்வசப்பட்டுவிட்ட காரணத்தாலே ஆன்மா உருக்குலைந்து போகாதபடி கட்டின கரையான சரீரம், பொன்இருந்த குகையும் உருகுமாறு போலே, அன்பும் அது தங்கியிருக்கும் இடமும் என்று இரண்டு இல்லாமல் அன்புதானே ஒரு வடிவு கொண்டது போலேயாய், மேலும் மேலும் உருக்குலைந்து ஆன்மதருமத்தை ஏறிட்டுக் கொள்ள,

காற்றும் கழியும் கட்டி அழ - [3] "கடலும் மலையும் விசும்பும் துழாய்" என்ற திருப்பாசுரத்திலும், [4] "இருளின் திணிவண்ணம் மா நீர்க்கழியே" என்ற திருப்பாசுரத்திலும் சொல்லுகிறபடியே காற்றுக்கு எப்பொழுதும் அசைந்துகொண்டிருக்கிற தன்மையும், உப்பங்கழிக்கு ஏறுவது வடிவதாகையும் என்றும் உள்ள தன்மை என்று அறியாமல், அவற்றுக்கு அத் தன்மைகள் பகவானைப் பிரிந்த பிரிவின் கிலேசத்தால் உண்டானவையாகக் கருதி, அறிவில்லாத அவற்றைத் தம்மைப்போன்ற துக்கம் உடையனவாகக் கொண்டு, [5] "எம் ஆற்றுமை சொல்லி அழுவோமை" என்கிறபடியே தாம் அவற்றைக் கட்டிக் கொண்டு கிடந்து கதறும்படியாக, கொண்ட பெரும் காதலுக்கு பத்திமை - [6] "அலர்தூற்றிற்றது முதலாக் கொண்ட என்காதல்" என்றும், [7] "மயல் பெருங்காதல்" என்றும் சொல்லுகிறபடியே [8] பிறர் பழி சொன்னதுவே எருவாகப் பணைத்துச் செல்லுமதாய்ச் செய்வன தவிர்வன தெரியாதபடி அறிவு கேட்டை விளைவிப்பதுமான எல்லை

1. திருவாய். 3. 8: 1.
2. திருவாய். 5. 8: 1.
3. திருவாய். 2. 1: 4.
4. திருவாய். 2. 1: 8.
5. திருவாய். 2. 1: 7.
6. திருவாய். 7. 3: 8.
7. திருவாய். 4. 4: 10.
8. ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல் நீராக நீளுமிந் நோய். என்பது, திருக்குறள்.

இல்லாத பக்திக்கு, நூல்வரம்பு இல்லையே - [1] “மிகுந்த பக்தியை யுடையவனுக்குச் சாஸ்திரம் இல்லை; முறையும் இல்லை” என்கிற படியே பரமபதத்திலே அநுபவத்திற்கு உறுப்பான பக்திபோலே சென்றபடி கண்டிருக்குமத்தனை அல்லது [2] “பத்திமைக்கு அன்புடையேன் ஆவதே” என்கிறபடியே நூல் பிடித்துச் செயல் புரியும்படி வரம்புகட்ட ஒண்ணுதே யன்றே என்றபடி.

இத்தால், [3] “பரமாத்மா கேட்கத் தக்கவன், மனனம் செய்யத் தக்கவன், தியானம் செய்யத்தக்கவன், பார்க்கத்தக்கவன்” என்கிற படியே ஒரு விதியினாலே தூண்டப்பட்டதாய் மக்களாலே சாதிக்கப் படுவதாய் முறையிலே தோன்றுகின்ற பக்தியைப்போல் அன்றிக்கே, அதற்கு எதிர்த்தட்டாய்க் கரை அழிந்து செல்லுகிற இது சாஸ்திர மரியாதையின்கீழ் அடங்காது என்றதாயிற்று.

ஆக, “ஞானத்தில் தம்பேச்சு” என்ற சூத்திரம் முதல் இச்சூத்திரம் முடிய, ஞானநிலையில் தாமான தன்மையாலும் அன்பு நிலையில் பெண்ணின்தன்மையாலும் பேசுவர் என்றும், பெண்தன்மை ஆன்மாவிற்கு வந்தேறி அல்லாமையாலே இது இவர்க்கு இயல்பாகவே யமைந்த தன்மை என்றும், அதுதான் பொதுவாதல் அன்றிக்கே, ஆறு தன்மைகளாலே பெரிய பிராட்டியாரோடு ஒப்பர் என்றும், மற்றைப்பிராட்டிமார் மற்றும் பகவானுல் கைக்கொள்ளப்பட்டவர்கள் எல்லாரோடும் ஒப்புமை உடையர் என்றும், முற்றுவமை இவர்க்குப் பெரியபிராட்டியாரோடே என்றும், மற்றும் பகவானைப் பிரியாதவர்களாயும் பகவானை நெருங்கியுள்ளவர்களாயும் உள்ள இலக்குமணன் முதலானோர் தசரதன் முதலானோர் தன்மைகளும் இவர்க்கு உண்டு என்றும், அவர்களில் இவர் வேறுபட்டவர் என்றும், பிராட்டிமாரையும் திருவனந்தாழ்வான் முதலாயினோர்களையும் அவர்கள் தாமாகவே பாவிப்பர் என்றும், இந்தத்தன்மைகட்குக் காரணமான இவருடைய பெண்தன்மையின் ஒழுகலாற்றிற்கும் செய்கின்ற தொண்டுகளில் காதலுக்கும் திரௌபதி கௌசல்யைகளின் தன்மைகளைத் திருஷ்டாந்தமாகச் சொல்லுதல் ஒருபுடை ஒப்புமையும் ஆகாது என்றும், இந்தத் தன்மையோடு கூடிய செயல்களுக்கு மூலமான பக்தியின் வகைகளையும் சொல்லிற்றாயிற்று. (46)

---

1. “அத்யந்த பக்தியுக்தாநாம் நஸாஸ்த்ரம் நைவசக்ரம:” என்பது, பிரமாணம்.

2. திருக்குறுந்தாண்டகம், 10.

3. “வாஆத்மா அரே த்ரஷ்டவ்ய: ஸ்ரோதவ்ய: மந்தவ்ய: நிதித்யாஸி என்பது உபநிடதம்,
[தவ்ய:



## 133

[1]சம்பந்த உபாய பலங்களில் உணர்த்தி துணிவு பதற்றம் ஆகிற பிரஜ்ஞாவஸ்தைகளுக்கு, தோழி தாயார் மகள் என்று பேர்.

என்பது சூத்திரம்.

**வியாக்:—** இந்த விதமான பக்திநிலையில் இவர் பெண்பேச்சாகப் பேசுமிடத்தில் தோழி, தாய், மகள் என்று மூன்றுவிதமாகப் பேசுகிற இதற்குக் கருத்து என் என்னும் வினவிற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, சம்பந்தத்தில் உணர்த்திஆகிற பிரஜ்ஞா அவஸ்தைக்குத் தோழி என்று பேர் - தோழியாவாள் தலைவன் தலைவியை இணக்கிச் சேர்க்குமவள் ஆகையாலே, திருமந்திரத்தில் முதற்பதமான [2] ஓம் என்னும் பிரணவத்தால் சர்வேச்வரனோடு ஆன்மாவிற்குச் சொல்லப்பட்ட ‘அவன் ஒருவனுக்கே அடிமை’ என்பது முதலான சம்பந்த ஞானமே அவ்வெம்பெருமானோடு இவ்ஆன்மா சேர்வதற்குக்காரணம் ஆகையாலே அந்தச்சம்பந்தஞானமாகிற பிரஜ்ஞாவஸ்த்தையைத் தோழி என்றும்,

---

1. இதனை, சம்பந்தத்தில் உணர்த்தி, உபாயத்தில் துணிவு, பலத்தில் பதற்றம் ஆகிற பிரஜ்ஞாவஸ்தை என்று பிரித்துக் கூட்டுக. அங்ஙனம் கூட்டி, சம்பந்தத்தில் உணர்த்தியாகிற பிரஜ்ஞாவஸ்தைக்குத் தோழிஎன்று பேர் என்றும், உபாயத்தில் துணிவாகிற பிரஜ்ஞாவஸ்தைக்குத் தாயார் என்று பேர் என்றும், பலத்தில் துணிவாகிற பிரஜ்ஞாவஸ்தைக்கு மகள் என்று பேர் என்றும் கூட்டிப் பொருள்முடிவு காண்க. பிரஜ்ஞாவஸ்தை - மூன்று காலத்தையும் அறியும் அறிவின் நிலை. இம்மூன்று அவஸ்தைகளுள், முதல் அவஸ்தை நடக்கும்படியைத் தோழி கூற்றாகவும், இரண்டாம் அவஸ்தை நடக்கும்படியைத் தாயார் கூற்றாகவும், மூன்றாம் அவஸ்தை நடக்கும்படியை மகள் (தலைவி) கூற்றாகவும் வெளியிடுவர் என்றபடி.

2. அகாரத்தின் பொருளான ஸ்ரீமந் நாராயணனுக்கே அடிமை, மகாரத்திற்குப் பொருளான இவ்ஆன்மாக்கள் எல்லாம் என்பது பிரணவத்தின் பொருள். ஆகையாலே இறைவனுக்கும் இவ்வுயிர்கட்கும் உள்ள சம்பந்தம் சேஷிசேஷ சம்பந்தம் என்பது பெறப்படும். “இதுதான் எட்டுத் திருவக்ஷரமாய் மூன்று பதமாயிருக்கும்”, “மூன்று பதமும் மூன்று அர்த்தத்தைச் சொல்லுகிறது”, “அதாவது, சேஷத்வமும் பாரதந்த்ரயமும் கைங்கர்யமும்”, “இதில் முதற்பதம் பிரணவம்”, “இது அ என்றும், உ என்றும், ம என்றும் மூன்று திருவக்ஷரம்”, “அகாரம் சகல சப்தத்

உபாயத்தில் துணிவுஆகிற பிரஜ்ஞாவஸ்த்தைக்குத் தாயார் என்று பேர் - தாயானவள், பெற்றுவளர்த்து, பெண்பிள்ளை தக்கவயதுடையவளாய், தலைவனிடத்தில் கொண்ட கழிபெருங்காதலாலே அவன் இருந்த இடத்தில் ஏறப்போகவேண்டும் என்று பதறுமளவிலும், அவன்தானே வரக் கண்டிருக்கை ஒழியப் படிகடந்து புறப்படுகை குலமரியாதைக்குப் போராதென்று விலக்கிப்போருமவளாகையாலே, சர்வேச்வரனாகிய உபாயத்தைப் பற்றினார்க்கு அவனை அடைவதில் காலம் நெடுகுவதற்குக்காரணம் இல்லாமையாலே, விரைவிலே பேற்றினைப் பெறவேண்டும் என்கிற அந்த விரைவு உண்டாதல் முதலியவற்றிற்கு முதற்காரணமாய், அந்தவிரைவு, பெறப்படும் பேற்றினுடைய வேறுபட்ட சிறப்பினைக்காண்கையாலே கிடைக்கவேண்டிய முறையிலே கிடைக்குமளவும் பொருமல் முறுகிநடக்குமளவில், இது பிரபந்ந குலமரியாதைக்குச் சேராது என்று விலக்கி, சேஷியானவன் தானேவந்து அங்கீகரிக்கக் கண்டிருக்கவேண்டும் என்று இதன்துடிப்பை அடக்கப்பார்க்கிற, திருமந்திரத்திலே நடுவிலேஉள்ள [1] "நம:" பதத்தாலே சொல்லப்படுகின்ற உபாயத்திலேஉறுதிஆகிற பிரஜ்ஞாவஸ்த்தையைத் தாயார் என்றும்,

---

துக்கும் காரணமாய், நாராயண பதத்துக்குச் சங்க்ரஹமாகையாலே, சகல ஜகத்துக்கும் காரணமாய் ஸர்வரக்ஷகனை எம்பெருமானைச் சொல்லுகிறது", "இதிலே சதுர்த்தி ஏறிக்கழியும்", "சதுர்த்தி ஏறினபடி என்னென்னில்", "நாராயண பதத்துக்குச் சங்க்ரஹமாயிருக்கையாலே", "இத்தால் ஈச்வரனுக்குச் சேஷம் என்கிறது", "சேஷத்வமே ஆத்மாவுக்குச்சொரூபம்", "ஸ்தாநப்ரமாணத்தாலே உகாரம் அவதாரணார்த்தம்", "இத்தால் பிறர்க்குச் சேஷம் அன்று என்கிறது", "அதிலும், அந்ய சேஷத்வம் கழிகையே ப்ரதாநம்", "மறந்தும் புறந்தொழா மாந்தர் என்கையாலே", "இத்தால் தனக்கும் பிறர்க்கும் உரித்து அன்று என்கிறது", "மகாரம் இருபத்தஞ்சாம் அக்ஷரமாய் ஜ்ஞாநவாசியுமாயிருக்கையாலே, ஆத்மாவைச் சொல்லுகிறது", "இதுதான் ஸமஷ்டி வாசகம்", "ஜாதிஏக வசநம்", "இத்தால், ஆத்மா ஜ்ஞாதா என்று தேஹத்தில் வ்யாவ்ருத்தி சொல்லிற்றாயிற்று", "ஆக, பிரணவத்தால் 'கண்ணபுரமொன்றுடையானுக்கடியேன் ஒருவர்க்குரியேனோ' என்கிறபடியே ஜீவபரசம்பந்தம் சொல்லிற்று" என்ற முமுக்ஷுப்படி ஸ்ரீசூக்திகள் இங்கு நினைக்கத்தகும்.

1. நான் என்னுடைய இரக்ஷணத்திற்குச் சம்பந்தப்பட்டவன் அல்லன் என்பது "நம:" என்ற சொல்லிற்குப் பொருள். இப்பொருளால், மேலே கூறிய அகாரத்தின் பொருளான ஸ்ரீமந்நாராயணனால் இரக்ஷிக்கப்படுமவன் என்ற பொருள் போதரும்; போதரவே, இறைவனே உபா



பலத்தில் பதற்றமாகிற பிரஜ்ஞாவஸ்த்தைக்கு மகள்என்றுபேர்- தலைமகள் ஆவாள், இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து, தலைவனுடைய ஒப்புயர்வற்ற வனப்பு முதலியவற்றிலே ஈடுபட்டுக் குலமரியாதைகளையும் பாராதே தலைவனை அடைந்தால் அல்லது தரியேன் என்னும் பதற்றத்தையுடையவள் ஆகையாலே, திருமந்திரத்தில் பிரணவத்தாலும் நமஸ்ஸாலும் அறுதியிடப்பட்ட சேஷியாய் எல்லார்க்கும் புகலிடமானவனுக்கு, திருமந்திரத்தில் முடிவிலே உள்ள [1] நாராயண பதத்தாலே சொல்லப்பட்ட சொரூப ரூப குண விபூதிகளால் வந்த ஒப்புயர்வற்ற உயர்வினை நினைந்து அவனை அநுபவிக்கும்வரையிலும் இடையிலேஉண்டாகும் காலவிளம்பத்திற்குப் பொறுக்காமல், அவனே உபாயம் என்று அறுதியிட்டிருக்கும் உறுதியையும் மீறி, அவனைக்கிட்டி அநுபவித்தல்லது தரியாதபடி நடக்கின்ற, பலத்திலே பதற்றமாகிற பிரஜ்ஞாவஸ்த்தையை மகள்என்றும் பெயர்இட்டுச் சொல்லக்கடவது என்கை.

---

யம் என்ற துணிவுபிறக்கும். இதனையே இங்கு 'உபாயத்தில் உறுதி' என்கிறார். "நமஸ்ஸு 'ந' என்றும் 'ம' என்றும் இரண்டுபதம்", "'ம' என்கிற இத்தால் தனக்குரியன் என்கிறது; 'ந' என்று அத்தைத் தவிர்க்கிறது". "ஆக, 'நம:' என்கிற இத்தால் தனக்குரியன் அன்று என்கிறது", "இத்தால் விரோதியைக்கழிக்கிறது". "விரோதிதான் மூன்று" "அதாவது, ஸ்வரூபவிரோதியும், உபாயவிரோதியும், பிராப்யவிரோதியும்". "ஸ்வரூபவிரோதிகழிகையாவது, 'யானே நீ என்னுடைமையும் நீயே' என்றிருக்கை; உபாயவிரோதிகழிகையாவது, 'களைவாய் துன்பம், களையாதொழிவாய்,களைகண் மற்றிலேன் என்றிருக்கை; பிராப்ய விரோதி கழிகையாவது 'மற்றை நம் காமங்கள் மாற்று' என்றிருக்கை". "ஈச்வரன் தனக்கேயாயிருக்கும்; அசித்துப் பிறர்க்கேயாயிருக்கும்; ஆத்மா தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருக்கும் என்று முற்பட்ட நினைவு; அங்ஙனன்றிக்கே, அசித்தைப்போலே 'தனக்கேயாக எனைக்கொள்ள வேணும்' என்கிறது நமஸ்ஸால்" என்னும் முமுக்ஷுப்படி ஸ்ரீசூக்திகள் இங்குஓர்தல்தகும்.

1. இறைவன் சித்தோபாயமாகையாலே பலம் விளம்பத்திற்குக் காரணம் இல்லாமையாலே தாம் நினைத்த பலத்தை இப்பொழுதே பெறவேண்டும் என்று பேற்றினைப் பெறுவதிலே பதற்றம் உண்டாகின்றது என்றபடி. சாத்தியோபாயமாக இருந்தால் தான் செய்யும் சாதனங்கள் முடிவுற்ற பின்னரே சாத்தியமாகிற பேறு கிடைக்கக்கூடியதாதலால் அதுகாறும் ஆறியிருக்கலாம். இது அங்ஙனம் அன்று. "நாராயணன் என்றது நாரங்களுக்கு அயநம் என்றபடி", "நாரங்களாவன-நித்யவஸ்துக்களினுடைய திரள்", "அயநம் என்றது இவற்றுக்கு ஆச்ரயம் என்றபடி",

'ஞானவஸ்த்தைகள்' என்னாமல் 'பிரஜ்ஞாவஸ்த்தைகள்' என்றது, மூன்றுவிதமான நிலைகளும் இவர்க்கு எல்லாக் காலங்களிலும் உண்டு என்னுமிடம் தோற்றுகைக்காக. [1] "மூன்று காலத்தையும் அறியும் அறிவு பிரஜ்ஞை என்று சொல்லப்படுகிறது" என்னக்கடவதன்றோ. திருவெட்டெழுத்தின் முப்பதப் பொருளைப் பற்றிய ஞானமும் இவர் திருவுள்ளத்தில் எப்பொழுதும் நிலைத்தேயன்றோ இருப்பது. (47)

## 134

சகி வெறிவிலக்கி ஆசைஅறுத்து அறத்தொடு நின்ற மூன்றில் அநந்யார்ஹத்வமும், வாடி மெலிந்து பித்தேறி ஏறப்பேசிக் கட்டிழந்து அகன்று சார்வதே வலித்தமை சாதனமாமோ என்று மாதா அஞ்சி முறைப்பட்டு முறை இடுகிற ஏழில் அத்யவசாயமும், புத்ரி பலகால் ஆள்விட்டு ஆற்றாமை சொல்லிக் கவராதவைவிட்டு இரைக்க மடல் எடுத்துக் கண்புதையப் போக்கற்று உரு நெஞ்சுள்எழக் கூடுநாள் தேடித் தாழ்த்ததுக்கு ஊடி உசாத்துணை அற்றுச் சூழவும்பகைமுகம்செய்யத் தடை நில்லாதே புயக்கற்று மாலையும் காலையும் பூசலிடுகிற பதினேழில் த்வரையும் தெரியும்.

என்பது சூத்திரம்.

**வியாக்:—** இம்மூன்று நிலைகளும் இவர் பேச்சிலே தோற்றுமோ என்னும் வினாவிற்கு விடையாக, தோழி தாய் தலைவி என்னும் இவர்கள் கூற்றாக வருகின்ற திருவாய்மொழிகளிலே இவை தெரியும்

---

"அங்ஙனன்றிக்கே இவைதம்மை ஆச்ரயமாகவுடையன் என்னவுமாம்", "இவை இரண்டாலும் பலித்தது பரத்வசௌலப்யங்கள்", "எம்பிரான் எந்தை' என்கையாலே ஈச்வரனே எல்லாவுறவு முறையும் என்கிறது", "ஆய என்ற இத்தால் 'சென்றாற் குடையாம்' என்கிறபடியே எல்லா அடிமைகளும் செய்யவேணும் என்று அபேக்ஷிக்கிறது", "ஆகையால் 'வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்' என்கிற பிரார்த்தனையைக் காட்டுகிறது", "ஆக, திருமந்திரத்தால், எம்பெருமானுக்கே உரியேனான நான், எனக்குரியன் அன்றிக்கே ஒழியவேணும், சர்வசேஷியான நாராயணனுக்கே எல்லா அடிமைகளும் செய்யப் பெறுவேனாகவேணும் என்றதாயிற்று". என்னும் முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்திகள் இங்குக் குறிக்கொள்ளத்தகும்.

1. "ப்ரஜ்ஞா த்ரைகாலிகீமதா" என்பது, பிரமாணம்.



என்னுமதனை எளிதில் அறியும்படி அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, வெறிவிலக்கி ஆசை அறுத்து அறத்தொடுநின்ற மூன்றில் [1] அநந்யார்ஹத்வம் தெரியும் - வெறிவிலக்கி - எம்பெருமானோடே இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து பிரிந்து ஆற்றாமையாலே மயங்கினவளாய்க் கிடக்கிற பிராட்டியின் நிலையைக்கண்டு, தாய்மார் கலங்கி, இவள் நோயினையும் அதற்குக்காரணத்தையும் மருந்தினையும் அறியாமல், தோன்றியதைச் சொல்லுவாளாய் இருப்பாள் ஒருகட்டுவிச்சி சொல்லைக்கொண்டு, இந்நோய்க்கு மருந்தாகக் கருதி வெறியாடல் உற, இவள் தன்மையினை அறியும் உயிர்த்தோழி 'அவ்விறைவனுக்கே உரியவளான இவளுக்கு வேறொரு சம்பந்தம் பொறாது; நாம் இதனை விலக்காதொழியில் இவளை இழக்கவரும்' என்று பார்த்து, அப்போது ஆராய்ந்து அறிந்தாளாக இவள்நோயினையும் அதற்குக்காரணத்தையும் அவர்களுக்குச் சொல்லி, அதற்குத்தக்க மருந்துகளையும் விதித்து, "அங்கு ஓர்கள்ளும் இறைச்சியும் தூவேன்மின்", "உணங்கல் கெடக்கழுதை உதடு ஆட்டம் கண்டுஎன்பயன்" என்பனபோன்ற திருப்பாசுரங்களாலே வெறியைவிலக்கின [2] "தீர்ப்பாரை யாம் இனி எங்ஙனம் நாடுதும்" என்ற திருவாய்மொழியாலே, பேற்றினைப்பெறுதற்குப் பதறுகின்ற நிலையில், துன்பம் அடியாக, உபாயத்திலே உள்ள உறுதி கலங்கி, [3] "பலத்தில் விருப்பம் இல்லாமலே கர்மங்களைச் செய்வதனால் பாவத்தைப் போக்கடிக்கிறான்" என்கிறபடியே தர்மங்களைச் செய்வதனாலே துக்கங்களுக்குக் காரணமாயவற்றைப் போக்க

---

1. 'அநந்யார்ஹத்வம் தெரியும்' என்றது, சம்பந்தஞானம் தோன்றும் என்றபடி. தோழி பாசுரமாக நிகழ்ந்துள்ள திருப்பதிகங்கள் மூன்று. 1. தீர்ப்பாரையாமினி, 2. துவளில் மாமணிமாடம், 3. கருமாணிக்கமலை. இம்மூன்றிலும் அநந்யார்ஹசேஷத்வம் (இறைவன் ஒருவனுக்கே இவ்வுயிர் அடிமை என்னும் தன்மை)தோன்றுகிறது. யாங்ஙனம்? எனில், தோழியானவள் "தீர்ப்பாரையாமினி" என்ற திருப்பதிகத்தில் வெறிவிலக்கியும், "துவளில்மாமணிமாடம்" என்ற திருப்பதிகத்தில் ஆசை அறுத்தும், "கருமாணிக்கமலைமேல்" என்ற திருப்பதிகத்தில் அறத்தொடு நின்றும் 'இவ்வுயிர் பிறதெய்வங்கட்கு அடிமைப்பட்டது மன்று; தனக்குத்தானே உரியது மன்று; பகவான் ஒருவனுக்கே உரியது' என்று கூறியபடியால் சம்பந்தஞான நிலையில் நின்று பேசின பேச்சாகிய இம்மூன்று திருப்பதிகங்களிலும் அநந்யார்ஹசேஷத்வம் விளங்குகின்றது என்க. விளக்கத்தை வியாக்கியானத்திற் காண்க.

2. திருவாய். 4. 6: 1.

3. "தர்மேண பாபம் அபநுததி" என்பது, தைத்திரீயஉப,

லாம் என்பார் வார்த்தையைக்கொண்டு இந்தத்துன்பத்தைப் போக்க லாமோ என்று தேவதைகளுக்கு அந்தர்யாமியாக இருக்கின்ற சர்வேச்வரன் பரமானகருமங்களின் கூட்டங்களைச் செய்வதற்குத் தேட, அவ்வளவிலே சம்பந்தஞானமானது, இத்துன்பம், செய்து போந்த கருமங்களின் பலத்தால் ஆயதன்று; பகவானலே எதிர்பாராமலே செய்யப்படுகின்ற திருவருளின் காரியமாய், தனக்கே உரியதான திருமேனியையுடைய எம்பெருமானை அநுபவிக்கையில் உண்டான பேரன்பின் காரியமாகையாலே இதற்கு அது மருந்தும் அன்று; அவனுக்கே அடிமைப்பட்டிருக்கின்ற தன்மைக்கு விரோதம் ஆகையாலே சொரூபத்தை நாசம் செய்வதும் ஆம் என்று மற்றையோருடைய சம்பந்தத்தை நீக்குவித்த "தீர்ப்பாரை யாம் இனி" என்ற திருவாய்மொழியிலும்,

ஆசை அறுத்து - திருத்தொலைவில்லிமங்கலத்திலே பேரன்பு கொண்டிருக்கின்ற பெண்பிள்ளையை மீட்கப் பார்க்கிற தாய்மாரைக் குறித்துத் தோழியானவள் "இவளை நீர் இனி அன்னைமீர் உமக்கு ஆசைஇல்லைவிடுமினோ" என்கிறபடியே திருத்தொலைவில்லிமங்கலத்திலே கொண்டுபுக்கு இத்தகைய காதலை விளைத்தது நீங்களே அன்றோ, வகுத்த எம்பெருமானிடத்தில் காதல் கொண்ட இவளை இனி உங்களால் மீட்கப்போகாது; ஆனபின்பு, இவள்பக்கல் உங்களுக்கு ஆசைஅற அமையும் என்ற [1] திருப்பாசுரத்தாலே, எளியதான அர்ச்சாவதாரமே உபாயமாகையாலே எப்போதும் இதிலே நோக்காக இருக்கும் [2] உபாயத்திலே உள்ள உறுதி, அவ்வர்ச்சாவதாரத்தின் எளிமையை அறிந்ததனுல் உளதாய காதலின் காரியமான பதற்றம் உபாயத்திலே சேர்ந்து விடுமோ என்னும் ஐயத்தாலே அதனை நீக்குவிக்கத் தேட, அவ்வளவிலே சம்பந்தஞானம் அடிமையாக உள்ள இவ்வான்மாவிற்கு இயல்பாகவே அமைந்த இந்தப்பக்தி இறைவனுடைய உகப்புக்கு விஷயமாமித்தனை அல்லது உபாயங்களின் வகையில் சேராது; வகுத்த எம்பெருமானுடைய உயர்வற உயர்ந்த தன்மை காரணமாக வந்ததாகையாலே நீக்குவிக்கவும் போகாது; இதனைத்

1. 'திருப்பாசுரத்தாலே' என்னுமிதனை, பின்னே வருகின்ற 'தன்னுடைய சம்பந்தத்தை நீக்குவித்த' என்ற வாக்கியத்தோடு முடிக்க.

2. 'உபாயத்திலே உள்ள உறுதி' என்னுமிதனை, பின்னேவருகின்ற 'அதனை நீக்குவிக்கத் தேட' என்றதனேடுமுடிக்க. உறுதி - தேட என்க.



தன்னலே நீக்கப்படுவதாக நினைத்திருக்கிற [1] சுவாதந்திரியம், அத்யந்தபாரதந்திரியம் ஆகிற சொரூபத்துக்கு விரோதம் ஆகையாலே விடத்தக்கது என்று தன்னுடைய சம்பந்தத்தை நீக்குவித்த "துவளில்மாமணிமாடமோங்கும்" என்ற திருவாய்மொழியிலும்,

அறத்தொடுநின்ற-தலைமகள் பருவத்தைக் கண்ட தாய்தந்தையர்கள் சுயம்வரத்துக்கு அரசர்களைத்திரட்டுவதற்குமணமுரசு அறைவிக்க, திருப்புலியூரில் நாயனரோடே இவளுக்குக் கலவி உண்டாயிற்று என்னுமிடத்தை இவள் வடிவிலும் பேச்சிலும் உண்டான வேறுபாட்டாலே அறிந்த உயிர்த்தோழியானவள், இந்த ஒலி பெண்பிள்ளை செவிப்படுமாகில் [2] "மானிடவர்க்கு என்று பேச்சுப்படில் வாழாத" தன்மையளாய் இருக்கிற இவளைக் கிடையாது; முன்னரே நீக்கவேண்டும் என்று, இவள் உறவினர்களைக்குறித்து இவளுக்குத் திருப்புலியூரில் நாயனரோடே கலவி உண்டாயிற்றுப்போலும்; அவனுடைய குணங்களையும் செயல்களையுமே வாய்புலற்றுநின்ருள்; ஆனபின்பு, நீங்கள் செய்கிறது தருமம் அன்று; என்ன, ஆகில், இவளுக்குத் தக்க அவயவசோபை ஆபரண ஒளி முதலான தலைவனுக்கு வேண்டிய இலக்கணங்கள் அவனுக்கு உண்டோ? என்ன, அவை ஒன்றும் குறைஇல்லை; அவை ஒன்றும் இல்லையேயாகிலும் இவள் அவனுக்கு உரிமைபூண்டமைக்கு அடையாளம் விளங்கக்காணலாம்; ஆனபின்பு, இதனைத் தவிருங்கோள் என்று நடுநிலையளாய் நின்று தருமம் சொல்லுகிருளாய் அந்த மணத்தினை விலக்கின [3] திருப்பாசுரத்தாலே, பேற்றிலே பதற்றத்தினுடைய பரிபாகத்தை உபாயத்தின் உறுதிநிலையிலே நின்று கண்டபின்னர், அது பகவானுக்கே உரிமைப்பட்டமையை அறியாதே, மற்றையோர்க்கும் உரிமை ஆமோ என்று ஆராய, அவ்வளவிலே சம்பந்தஞானம், இதற்கு வேறு ஒருவர்க்கு அடிமைஎன்ற பேச்சும்கூட சொரூபத்தை நாசம்செய்வதாகும்; சேஷியானவனுடைய இனிமையாலும் அதுவேஅன்றி வேறுஒருகாரணமும் பற்றிவாராத அடிமைத்தன்மையாலும் இவ்ஆன்மா அவனுக்கே அடி

1. சுவாதந்திரியம் - விடத்தக்கது என்க.

2. நாய்ச்சியார் திரு. 1: 5.

3. 'திருப்பாசுரத்தாலே' என்னுமிதனை, பின்னே வருகின்ற 'அடிமைஎன்று அறுதியிட்ட' என்ற வாக்கியத்தோடு முடிக்க. திருப்பாசுரத்தாலே அறுதியிட்ட என்க.

மை என்று அறுதியிட்ட [1] "கருமாணிக்கமலைமேல்" என்ற திருவாய்மொழியிலும்,

மூன்றிலும் அநந்யார்ஹத்வம் தெரியும் - ஆக, தோழிவார்த்தைகளான மேலேகூறிய இம்மூன்று திருவாய்மொழிகளிலும் வேறு ஒருவர்க்கும் உரியதன்று; அவனுக்கே உரியது - அடிமையாக உள்ளது இவ்வான்மா என்னும் தன்மை தோன்றும்.

ஆக, இதனால், தோழியானவள் வெறிவிலக்கியும், ஆசை அறுத்தும், அறத்தொடு நின்றும், இவ்வான்மா பிறர் ஒருவர்க்கு அடிமைப்பட்டதும் அன்று; தனக்குத்தானே உரியதும் அன்று; பகவானுக்கே அடிமைப்பட்டது என்று சொன்ன இம்மூன்று திருவாய்மொழிகளும், சம்பந்தஞானத்தில் பேசும் வார்த்தைகள் என்னுமிடம் நன்கு விளங்கக்கூடியது என்றதாயிற்று.

வாடி, மெலிந்து, பித்தேறி, ஏறப்பேசி, கட்டிழந்து, அகன்று, சார்வதேவலித்தமை சாதனமாமோ என்று மாதா அஞ்சி முறைப்பட்டு முறைஇடுகிற ஏழில் அத்யவசாயம் தெரியும் - வாடி - [2] "ஆடியாடி" என்ற திருவாய்மொழியிலே "வாடிவாடும்" என்கிறபடியே அடியார்கள் குழாங்களை உடன் கூடப்பெறாமையால் வந்த துன்பத்தாலே கொம்பை இழந்த தளிர்போலே வாடி, மெலிந்து - [3] "பாலனாய் ஏழுலகு" என்ற திருவாய்மொழியிலே "கண்ணன்கழல் துழாய் பொன்செய்பூண் மென்முலைக்கு என்று மெலியும்" என்கிறபடியே கை கழிந்தவற்றை ஆசைப்பட்டு மெலிந்து, பித்தேறி - [4] "மண்ணை இருந்து துழாவி" என்ற திருவாய்மொழியிலே "என் பெண்கொடி ஏறிய பித்தே" என்கிறபடியே ஒப்புமை உள்ள பொருள்களையும் அப்பொருள்களோடு சம்பந்தப்பட்ட பொருள்களையும் அவனாக நினைத்துக் கிட்டும்படி பித்தேறி, ஏறப்பேசி - [5] "கடல் ஞாலம்" என்ற திருவாய்மொழியிலே "ஈசன் வந்தேறக்கொலோ" என்கிறபடியே ஆற்றாமையாலே அநுகரிக்கிறமையை அறியாதே, இறைவன் ஆவேசித்தானோ என்னும்படி அவனாகவே பேசி, கட்டிழந்து - [6] "மாலுக்கு வையம் அளந்த மணாளற்கு" என்கிற திருவாய்மொழியிலே "கற்புடையாட்டி இழந்தது கட்டே" என்கிறபடியே பகவானைப் பிரிந்த கிலேசத்தாலே கட்டடங்க இழந்து,

---

1. திருவாய். 8. 9: 1. 2. திருவாய். 2. 4: 1.
3. திருவாய். 4. 2: 1. 4. திருவாய். 4. 4: 1.
5. திருவாய். 5. 6: 1. 6. திருவாய். 6. 6: 1.



அகன்று - [1] "உண்ணும் சோறு" என்ற திருவாய்மொழியிலே "இன்று எனக்கு உதவாது அகன்ற" என்கிறபடியே தன்னைப் பிரிந்து துன்பப்படுகின்ற இவ்வாபத்து நிலையிலே எனக்கு உதவாதே போனாள் என்னும்படி அகன்று, சார்வதே வலித்தமை - [2] "கங்குலும் பகலும்" என்ற திருவாய்மொழியிலே "சந்தித்து உன்சரணம் சார்வதே வலித்த தையலை" என்கிறபடியே அவனைக்கிட்டி அவன் திருமுன்னரே முடியவேண்டும் என்று உறுதிபூண்டமை, சாதனம் ஆமோ என்று - உபாசகர்க்குப் பரபக்தி தசையில் உண்டாம் வாட்டம் மெலிதல் முதலியவைகள் போலே சாதனத்திலே முதலிடுமோ என்று, மாதா அஞ்சி முறைப்பட்டு - தாயானவள் அஞ்சி, அவனையும் வினவ வந்தவர்களையும் குறித்து, வாடாநின்றாள், மெலியா நின்றாள் என்பன போலே முறைப்பட்டு, முறைஇடுகிற ஏழில் - [3] "முறையோ அரவணைமேல் பள்ளிகொண்ட முகில்வண்ணனே" என்கிறபடியே அத்தலையில் கிருபை ஒழிய இவள்பக்கல் உள்ளவை ஒன்றும் உபாயம் அன்று; ஆனபின்பு, இப்படித் துடிக்கவிட்டிருக்கை உம்முடைய கிருபைக்கும் பாதுகாக்கும்தன்மைக்கும் போருமோ என்று கூப்பிடுகிற ஏழு திருவாய்மொழிகளிலும், அத்யவசாயம் தெரியும் - உபாயத்திலே உறுதி தோன்றும் என்கை.

இதனால், தாயார் கூற்றாக உள்ள [4] ஏழு திருவாய்மொழிகளும் உபாயத்தில் உறுதிபூண்டிருக்கும் நிலையிலே எழுந்த பேச்சுகள் என்னுமிடம் தெளிவாம்.

புத்திரி பலகால் ஆள்விட்டு, ஆற்றாமை சொல்லி, கவராதவை விட்டு, இரைக்க மடல்எடுத்து, கண்புதையப் போக்கற்று, உரு நெஞ்சுள் எழ, கூடுநாள் தேடி, தாழ்த்ததுக்கு ஊடி, உசாத்துணை அற்று, சூழவும் பகைமுகம் செய்ய, தடை நில்லாதே, புயக்கற்று, மாலையும் காலையும் பூசலிடுகிற பதினேழில் த்வரையும் தெரியும் - புத்திரி பலகால் ஆள்விட்டு - தலைவியானவள், [5] "அஞ்சிறைய மடநாராய்", [6] "வைகல்பூங்கழிவாய் வந்து", [7] "பொன்னுலகாளீரோ", [8] "எங்கானல் அகம்கழிவாய்" என்கிற நான்கு திருவாய்மொழிகளிலும்

---

1. திருவாய். 6. 7: 1. 2. திருவாய். 7. 2: 1.
3. திருவிருத்தம், 62.
4. "ஆடியாடி", "பாலனாயேழுலகு", "மண்ணையிருந்து", "கடல்ஞாலம்", "மாலுக்கு", "உண்ணும்சோறு" "கங்குலும் பகலும்" என்னும் சீர்களை முதலாகவுடைய ஏழுதிருப்பதிகங்கள்.
5. திருவாய். 1. 4: 1. 6. திருவாய். 6. 1: 1.
7. திருவாய். 6. 8: 1. 8. திருவாய். 9. 7: 1

அவன் வருகிறவரையிலும் இருந்து பார்ப்பதற்குப் பொறுமலே பதறித் தூதுவிட்டு, ஆற்ருமை சொல்லி - [1] "வாயும் திரையுகளும்" என்ற திருவாய்மொழியில் "ஆற்ருமைசொல்லி அழுவோமை" என்கிற படியே எல்லாப்பொருள்களும் பகவானைப்பிரிந்த காரணத்தால் நோவு படுகிறனவாகக் கருதி அவற்றைத் தம்மைப்போன்று துக்கமுடையன வாகக் கொண்டு அழுது, கவராதவைவிட்டு - [2] "ஏருளும் இறையோ னும்" என்ற திருவாய்மொழியில் "மாருளன் கவராத மணிமாமை குறையிலம்" என்கிறபடியே அவன் விரும்பாதவற்றை வெறுத்து, இரைக்க மடல்எடுத்து – [3] "மாசறுசோதி" என்ற திருவாய்மொழி யில் "நாடும் இரைக்கவே யாம் மடல் ஊர்தும்" என்கிறபடியே உல கம் இரைக்கும்படி மடல்ஊர்வேன் என்று, கண்புதையப் போக்கற்று- [4] "ஊரெல்லாம் துஞ்சி" என்ற திருவாய்மொழியிலே "பின்னின்ற காதல்நோய் நெஞ்சம் பெரிதடுமால், முன்நின்று இராஊழி கண் புதைய மூடிற்ருல்" என்கிறபடியே காதல் நோயும் இராவாகிய கல்ப மும் ஒரே காரியத்தில் நோக்குள்ளவைகளாய்ச் சூழப் பொருகை யாலே போக்கடிஅற்று, உரு நெஞ்சுள் எழ [5] "எங்ஙனேயோ அன்னை மீர்காள்" என்ற திருவாய்மொழியிலே "சோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோர் உரு என் நெஞ்சுள் எழும்" என்கிறபடியே ஒளி அலை களின் நடுவே ஊகித்துக் காணப்படுகின்ற, இந்தப் பிரகிருதி சம்பந் தம் இல்லாத திருஉருவம், அன்பும் அன்பு இன்மையும் சமமாம்படி உருவெளிப்பாடாய் நெஞ்சிலே பிரகாசிக்க,

கூடுநாள் தேடி - [6] "மானேய் நோக்கு நல்லீர்" என்ற திருவாய் மொழியிலே "திருவல்லவாழ் உறையும் கோனுரை அடியேன் அடி கூடுவது என்று கொல்" என்கிறபடியே அவனைக் கூடும் நாளைப் பிரார்த்தித்து, இப்படிப் பிரார்த்தியாநிற்கவும் தாழ்த்து வந்தவாறே, தாழ்த்ததுக்கு ஊடி - [7] "மின்னிடை மடவார்" என்ற திருவாய்மொழி யிலே "போகு நம்பி" என்று பிரணயரோஷத்தாலே ஊடி, உசாத் துணை அற்று - [8] "வெள்ளைச் சுரிசங்கு" என்ற திருவாய்மொழி யிலே "என்நெஞ்சினுரும் அங்கே ஒழிந்தார் இனி யாரைக்கொண்டு என் உசாகோ" என்கிறபடியே அவனுலே கவரப்பட்ட மனத்தினை யுடையவளாகையாலே உசாத்துணையுமின்றி, சூழவும் பகைமுகம்

1. திருவாய். 2. 1: 1.
2. திருவாய். 4. 8: 1.
3. திருவாய். 5. 3: 1.
4. திருவாய். 5. 4: 1.
5. திருவாய். 5. 5: 1.
6. திருவாய். 5. 9: 1.
7. திருவாய். 6. 2: 1.
8. திருவாய். 7. 3: 1.



செய்ய - [1] "ஏழையர் ஆவி உண்ணும்" என்கிற திருவாய்மொழி யிலே "கண்ணன் கோளிழை வாண்முகமாய்க் கொடியேன் உயிர் கொள்கின்றதே" என்கிறபடியே உருவெளிப்பாட்டாலே துன்புறுத் தும் பொருள்கள் ஒருமுகமாய் நலிய, தடைநில்லாதே - [2] "நங்கள் வரிவளை" என்ற திருவாய்மொழியிலே "காலம் பலசென்றும் காண் பது ஆணை உங்களோடு எங்கள் இடை இல்லை" என்கிறபடியே நலம் சொல்லுகிற தாய்மார் தோழிமார்களையும் மீறி, புயக்கற்று - [3] "இன்னுயிர்ச்சேவலும்" என்ற திருவாய்மொழியிலே "இழை நல்ல ஆக்கையும் பையவே புயக்கற்றது" என்கிறபடியே போலியான பொருள்களைக் கண்டு நொந்து முடிகையிலே துணிந்தவளாய், மாலை யும் காலையும் பூசல் இடுகிற - [4] "மல்லிகை கமழ் தென்றல்" என்ற திருவாய்மொழியிலே மாலைக்காலத்தில் பசுக்களின் முற்கொழுந்தில் கிருஷ்ணன் வரக்காணுமல் துன்புறுத்தும் பொருள்களாலே நலிவு பட்டு, [5] "வேய்மருதோளிணை" என்ற திருவாய்மொழியிலே காலைப் பொழுதிலே கிருஷ்ணன் பசுமேய்க்கப் போனுகை எண்ணி, அவன் முகத்தைப் பார்த்து, நீ பசுமேய்க்கப் போனுல் நலியக்கூடிய பொருள் கள் நலியாநின்றன என்று கூப்பிட்டும் போருகிற, பதினேழில் துவரையும் தெரியும் - மேற்கூறிய பதினேழு திருவாய்மொழிகளிலும் பேற்றிலே பதற்றம் தோன்றும் என்கை.

இதனுல், தலைவி கூற்றுன [6] பதினேழு திருவாய்மொழிகளும் பேற்றில் பதற்ற நிலையில் பேசும் வார்த்தைகள் என்னுமிடம் தெளி வாம் என்றபடி.

(48)

1. திருவாய். 7. 7: 1.
2. திருவாய். 8. 2: 1.
3. திருவாய். 9. 5: 1.
4. திருவாய். 9. 9. 1.
5. திருவாய். 10. 3: 1.

6. "அஞ்சிறைய", "வைகல்பூங்கழிவாய்", "பொன்னுலகாளீரோ", "எங்கானலகங்கழி", "வாயும்திரை", "எருளுமிறையோனும்", "மாசறு சோதி", ஊரெல்லாம்துஞ்சி", "எங்ஙனேயோ", "மானேய்நோக்கு", "மின்னிடைமடவார்", "வெள்ளைச்சுரிசங்கு", "ஏழையராவி", "நங் கள்வரிவளை", "இன்னுயிர்ச் சேவல்", "மல்லிகை கமழ் தென்றல்", "வேய்மருதோளிணை" என்னும் முதற் சீர்களையுடைய பதினேழு திருப் பதிகங்கள்.

## 135

*[1] தோழிமார் அன்னையர் என்ற பன்மை, ரக்ஷகத்வாதிபந்த வாத்சல்யாதி வ்யவசாய புத்திபேதத்தாலே.*

என்பது சூத்திரம்.

வியாக்:— ஆனல், தோழி என்றும் தாய் என்றும் சொல்லுகிறது சம்பந்தஞானத்தையும் உபாயத்தில் துணிவினையும் ஆகில், தோழியர் அன்னையர் என்னும் பன்மைச்சொற்களுக்குக் கருத்து என்? என்னும் வினவிற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

அதாவது, தோழிமார் என்கிற பன்மை - [2] "தோழிமார்களும்" என்றும், [3] "தோழியரும்" என்றும், [4] "தோழிமார் விளையாடப் போதுமின் என்ன" என்றும், [5] "ஊர் என்சொல்லில் என்? தோழிமீர்" என்றும் இப்படித் தோழி விஷயமாகச் சொல்லும் பன்மை, ரக்ஷகத்வாதி பந்த புத்தி பேதத்தாலே - திருமந்திரத்திற் சொல்லுகிறபடியே இவ்வான்மாவோடு இறைவனுக்கு இரக்ஷகத்வம், சேஷித்வம், காரணத்வம், சரீரித்வம் முதலான சம்பந்தங்கள் பலவும் உண்டாகையாலே [6] அவ்வவ் சம்பந்தங்களைப் பற்றிய ஞானத்தினுடைய வேற்றுமையால் என்க. அன்னையர் என்ற பன்மை - [7] "அன்னையரும்" என்றும், [8] "அன்னையரும்" என்றும், [9] "அன்னையர் நாண" என்றும், [10] "எங்ஙனேயோ அன்னைமீர்காள்" என்றும் இப்படித் தாய் விஷயமாகச் சொல்லுகிற பன்மை, வாத்சல்யாதி வியவசாய புத்திபேதத்

1. இதனை, தோழிமார் என்ற பன்மை, ரக்ஷகத்வாதிபந்த புத்திபேதத்தாலே என்றும், அன்னையர் என்ற பன்மை, வாத்சல்யாதி வியவசாய புத்திபேதத்தாலே என்றும் பொருளுக்கு இயையச் சொற்களைப் பிரித்துக் கூட்டிக்கொள்க.

2. திருவாய். 5. 5: 9. 3. திருவாய். 5. 4: 5.

4. திருவாய். 6. 2: 8. 5. திருவாய். 5. 3: 6.

6. என்றது, சம்பந்தஞானங்கள் பலவாகையாலே அந்த அந்தச் சம்பந்தங்களையுடைய ஞானங்களின் பன்மையைக்கொண்டு தோழிமார் என்று பன்மையில் அருளிச்செய்கிருர் என்றபடி. இரக்ஷகத்வம், காரணத்வம், சேஷித்வம் இம்மூன்றும் பிரணவத்திலே அகாரத்தாலே கிடைக்கின்றன; சரீரித்வம் நாராயணபதத்தாலே போதரும்.

7. திருவாய். 5. 5: 9. 8. திருவாய். 5. 4: 5.

9. திருவாய். 5. 3: 8. 10. திருவாய். 5. 5: 1.



தாலே - உபாயமாக இருக்கிற சர்வேச்வரனுடைய [1] வாத்சல்யம் ஸ்வாமித்வம் சௌசீல்யம் சௌலப்யம் ஞானம் சக்தி கிருபை முதலானவற்றைப் பற்றி வரும் [2] துணிவின் உருவமான ஞானத்தின் வேற்றுமையால் என்க. புத்தி என்ற சொல் ஈண்டு ஞானத்தைக் காட்டுகிறது; [3] "புத்தி முதலான சொற்கள் ஞானம் என்ற பொருளைக் காட்டும்" என்பது அமரம்.

இதனல், சம்பந்தஞானத்திற்கும் உபாயத்தில் துணிவிற்கும் விஷயவேற்றுமைகளால் உருவ வேறுபாடு உண்டாகையாலே 'தோழிமார், அன்னையர்' என்ற பன்மைப்பிரயோகத்திற்குக் குற்றம் இல்லை என்றபடி. (49)

## 136

*[4] அபிலாஷா சிந்தநா அநுஸ்மிருதி இச்சா ருசி பரபரமபக்திகளிலே பேதை முதலான பர்வம் கொள்ளும்.*

என்பது, சூத்திரம்.

1. வாத்சல்யமாவது, அன்றுஈன்ற கன்றின் உடலில் உள்ளவழுவை விரும்பிஉண்ணும் பசுவினைப்போன்று, அடியார்களுடைய தோஷங்களை இனியனவாகக் கொள்ளுதல். ஸ்வாமித்வமாவது, எல்லாப்பொருள்களுக்கும் இறைவனுக இருக்கும் தன்மை. சௌசீல்யமாவது, பெரியவன் தாழ்ந்தவர்களோடு புரையறக் கலக்கும் தன்மை; இதுவே சீலகுணம் என்பது. ஞானமாவது, எல்லாவற்றையும் ஒருகாலே எப்போதும் உள்ளபடி அறிதல். சக்தியாவது, பொருந்தாதனவற்றையும் பொருத்துவிக்கும் ஆற்றல்; அகடிதகடநாசாமர்த்தியம். கிருபையாவது, துன்பப்படுகின்றவர்களைக்கண்டு ஐயோஎன்று இரங்குதல்.

2. என்றது திருக்குணங்களைப் பற்றி வரும் துணிவின் உருவமான ஞானம்பலவாதலின், அந்தஞானங்களின் பன்மையைக்கொண்டு 'அன்னையர்' என்ற பன்மையில் அருளிச்செய்கிருர் என்றபடி. "அவையாவன-வாத்சல்யமும், ஸ்வாமித்வமும், சௌசீல்யமும், சௌலப்யமும், ஞாநமும், சக்தியும்", "குற்றம்கண்டு வெருவாமைக்கு வாத்சல்யம்; காரியம்செய்யும் என்று துணிகைக்கு ஸ்வாமித்வம்; ஸ்வாமித்வம்கண்டு அகலாமைக்கு சௌசீல்யம்; கண்டுபற்றுகைக்கு சௌலப்யம்; விரோதியைப்போக்கித் தன்னைக்கொடுக்கைக்கு ஞானசக்திகள்." என்ற முமுட்சுப்படி ஸ்ரீசூக்திகளை இங்கு நினைவுகூர்க. 137, 138. சூ.

3. "புத்திர் மநீஷா திஷணா தீ: ப்ரஜ்ஞா சேமுஷீ மதி:" என்பது, அமரம்.

4. சூத்திரத்திலே "பரபரமபக்தி" என்ற இடத்திலே உள்ள பக்தி என்பதனை, பரபக்தி, பரமபக்தி என்று தனித்தனியே கூட்டுக.

**வியாக் :**—பேற்றினைப் பெறுதலில் உண்டாகும் பதற்றத்தைத் தலைமகள் என்று கூறின், தலைமகளுக்குச் சொல்லும் ஏழு பருவங்களையும் இங்குக் கொள்ளுமாறு யாங்ஙனம்? என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, அபிலாஷா - அநுபவிக்கப்படும் விசேடப்பொருளை முதலில் பார்த்தவாறே பிறக்கும் ஆசையாகிற அபிலாஷையும், சிந்தநா - பார்க்கப்பட்ட அப்பொருளைப் பற்றிய நினைவாகிற சிந்தனையும், அநுஸ்மிருதி - அந்த நினைவு இடைவிடாமல் செல்லுதலாகிற அநுஸ்மிருதியும், இச்சா - அப்பொருளை அவசியம் அநுபவித்தே நிற்க வேண்டும் என்னும் ஆசையாகிற இச்சையும், ருசி - அவ்வாசைதான் வேறு இனிமைப்பொருள் ஒன்றால் மாற்றவொண்ணாதபடி முதிருகையாகிற ருசியும், பரபக்தி - அப்பொருளின் கலவியும் பிரிவுமே இன்ப துன்பங்களாகையாகிற பரபக்தியும், பரமபக்தி - அப்பொருளைப் பிரியும் பிரிவிலே மூச்சு அடங்கும்படியான பரமபக்தியும் ஆகிற ஏழு நிலைகளிலும், பேதை முதலான பருவம்கொள்ளும் - பேதை பெதும்பை மங்கை மடந்தை அரிவை தெரிவை பேரிளம்பெண் என்கிற ஏழு பருவமும் பேற்றிலே பதற்றமாகிற தலைமகளுக்குக் கொள்ளப்படும் என்றபடி.

இதனால், பக்தியின் வடிவமாகிய பேற்றில் பதற்றத்துக்கு, [1] பக்தியினுடைய முதல்நிலை தொடங்கி முடிவுநிலை ஈறான நிலை விசேடங்களிலே ஏழு பருவங்களையும் கொள்ளலாம் என்றதாயிற்று. (50)

## 137

*[2] மயில் பிறை வில் அம்பு முத்து பவளம் செப்பு*
*மின் தேர் அன்னம் தெய்வவுரு, விகாச சுத்தி தாந்தி*
*ஞான ஆனந்த அநுராக பக்தி அணுத்வ போக்யதா*
*கதிகளையுடைய அகமேனியின் வகுப்பு.*

என்பது, சூத்திரம்.

---

1. *பக்தியின்முதல்நிலை - அபிலாஷை; முடிவுநிலை - பரமபக்தி.*

2. *தலைமகளான நிலைமையில் வருணிக்கும் அவயவவிசேடங்கட்கு உள்ளுறைப் பொருள் கூறுகிறது இச்சூத்திரம். இதனை, 'மயில்' என்றது முதல் 'அன்னம்' இறுதியாகவுள்ள சொற்களை, 'விகாஸம்' என்றது முதல் 'கதி' என்பது இறுதியாகவுள்ள சொற்களோடு மயில் - விகாசம், பிறை - சுத்தி, வில் - தாந்தி, அம்பு-ஞானம், முத்து-ஆனந்தம், பவளம்-அநுராகம், செப்பு - பக்தி, மின் - அணுத்வம், தேர் - போக்யதை என நிரல் நிறையே கூட்டுக.*



**வியாக் :**— தலைமகளான நிலையில் கற்பித்துப் பேசப்படும் அவயவ விசேடங்களுக்கு உள்ளுறைப்பொருள் யாவை? என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, மயில் விகாசம் - [1] "தோகை மா மயிலார்கள்" என்கிறபடியே பெண்களை மயிலாகச் சொல்லுகிறது கூந்தலின் பரப்பையிட்டு ஆகையாலே, அதனால் இங்கு ஆன்மாவினுடைய ஞானவிரிவினைச் சொல்லுகிறது. பிறை சுத்தி - [2] "பிறையுடைவாணுதல்" என்று நெற்றியைப் பிறையாகச் சொல்லுகையாலே, அதன் வெண்மையை இட்டு, தனக்குத்தானே வசப்பட்டிருத்தல் பிறர்க்கு உரியவனாதல் என்னும் குற்றங்கள் அற்றிருக்கும் தூய்மையைச் சொல்லுகிறது. வில்தாந்தி - [3] "விற்புருவக்கொடி" என்று புருவத்தை வில்லாகச் சொல்லுகிறது வளைந்திருக்கும் தன்மையைக்கொண்டே ஆதலாலே, அதனால், புறக்கரணங்களையும் அகக்கரணத்தையும் அடக்கி ஆளுதலாகிற சாந்தியைச் சொல்லுகிறது. அம்புஞானம் - [4] "அம்பன்ன கண்ணாள்" என்று கண்களைக் குறித்த இலக்கிலே சென்று விழுகின்ற அம்பாகச் சொல்லுகையாலே, [5] "தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு" என்கிறபடியே தனக்கு அடைத்த பொருளைப்பற்றுகின்ற ஞானத்தைச் சொல்லுகிறது.

முத்து ஆனந்தம் - [6] "முத்தன்னவெண்முறுவல்" என்று முறுவலை முத்தாகச் சொல்லுகையாலே, [7] "முத் என்பது பிரீதி என்றும், பிரமத: என்றும், ஆனந்தம் என்றும் கூறப்படும்" என்கிறபடியைக் கொண்டு, அப்பொருளை அநுபவிப்பதனால் உண்டாகும் ஆனந்தத்தைச் சொல்லுகிறது. பவளம் அநுராகம் - [8] "பவளவாயாள்" என்று உதட்டினைப் பவளமாகச் சொல்லுகிறது செந்நிறத்தைக்கொண்டேயாகையாலே, அப்பொருள் காரணமாக வருகின்ற அன்பினைச் சொல்

---

*மயில் பிறை என்பன முதலாகப் புனைந்துரைக்கப்பட்ட தெய்வஉரு, விகாசம் முதலியவற்றையுடைய அகமேனியின் வகுப்பு என்க. விகாசம்-மலர்ச்சி. தாந்தி - ஐம்பொறிகளையும் மனத்தையும் அடக்கினவன். அநுராகம் - ஆசை. அணுத்வம் - அணுவின் தன்மை; ஆன்மசொரூபத்தின் தன்மை. போக்யதை - இனிமை. அகமேனி - ஆன்பசொரூபம்.*

1. *திருவாய்.* 6. 2: 2.
2. *பெரியதிருமொழி,* 2. 9: 9.
3. *திருவாய்.* 6. 6: 6.
4. *பெரியதிருமொழி,* 6. 8: 6.
5. *முதல்திருவந்.* 67.
6. *நாய்ச்சியார் திரு.* 5: 6.
7. *"முத்ப்ரீதி: ப்ரமதோஹர்ஷ:" என்பது, அமரம்.*
8. *பெரியதிருமொழி,* 4. 8: 1.

லுகிறது. செப்புபக்தி - [1] "செப்பன்னமென்முலை" என்று பரிபக்குவ மான முலையைச் செப்பாகச் சொல்லுகையாலே, இறைவன் விரும்பி மேல் விழும்படி பரிபக்குவமான பக்தியைச் சொல்லுகிறது. மின் அணுத்வம் - [2] "மின்னனைய நுண்மருங்குல்" என்று இடையை மின்னலாகச் சொல்லுகிறது நுண்மை காரணமாக ஆகையாலே, மேலேகூறிய ஞானத்தின் நிலைவேறுபாடுகளுக்கெல்லாம் ஆதாரமான ஆன்மசொரூபத்தின் அணுத்தன்மையைச் சொல்லுகிறது. தேர்போக்யதை - [3] "தேர் அணங்கு அல்குல்" என்கிற அல்குலின் அழகு அநுபவிக்கிறவனுக்கு இனிய பொருளாக இருக்குமதாகையாலே, [4] "தேனும் பாலும் கன்னலும் அமுதுமாகித் தித்தித்து" என்கிறபடியே இறைவனுக்கு இனியபொருளாக இருக்கிற ஆன்மாவினுடைய இனிமையைச் சொல்லுகிறது. அன்னம் கதி - [5] "அன்னமன்ன நடையாள்" என்று அன்னத்தை உவமையாகச் சொல்லுகிறது நடை அழகுக்கு ஆகையாலே, இறைவனும் அவன் அடியார்களும் சிறப்பித்துப் பேசும்படி சொரூபத்திற்குத் தகுதியாக நடக்கையாகிற ஒழுக்கத்தைச் சொல்லுகிறது.

ஆக, இப்படி, மயில்பிறை என்பனபோன்று புனைந்து பேசுவதற்குத் தக்க அவயவ விசேடங்களையுடையதாய், [6] "என் தெய்வவுருவின் சிறுமான்" என்று இவ்வுலக சம்பந்தம் இல்லாததாகச் சொன்ன உருவமானது, அகமேனியின் வகுப்பு - ஞானம் விகாசம் சுத்தி முதலானவற்றிற்கு இருப்பிடமாய், [7] "அகமேனி" என்கிறபடியே உள்ளே இருக்கிற ஆன்மசொரூபத்தின் வகுப்பு என்றபடி. வகுப்பாவது-தர்மி தருமங்களுடைய சேர்க்கையாகையாலே இந்தவிதமான உருவத்திற்குத் தகுதியாம்படி இருக்கிற கட்டளை.

நன்று; [8] "மேலே, பேற்றில் பதற்றத்தைஅன்றோ தலைமகளாகச் சொல்லிற்று; அவயவங்களை வர்ணிக்குமிடத்து 'அகமேனிவகுப்பு' என்று ஆன்மசொரூபபரமாகச்சொல்லுவான் என்? என்னில், மேலே கூறிய மூன்று நிலைவேறுபாடுகளும் இவர் தமக்கே ஆகையாலும், அந்த அந்த நிலைகளோடு சேர்ந்த தன்மையாலே மூன்று நிலைகளும் இவர்தாமேயாய் நின்று பேசுகையாலும், பேற்றில் பதற்றத்தையடைந்து நிற்கிற இவர் சொரூபத்திற்கே தலைமகளான நிலை ஆகையாலும் அப்படிச் சொல்லக் குறை இல்லை. (51)

1. *திருப்பாவை*, 20.
2. *பெரியதிருமொழி*, 3. 9: 5.
3. *பெரியதிருமொழி*, 1. 4: 6.
4. *திருவாய்*. 4. 3: 10.
5. *பெரியதிருமொழி*, 3. 7: 9.
6. *திருவாய்*. 4. 4: 2.
7. *திருவாய்*. 9. 7: 10.
8. *'மேல்' என்றது*, 133 *ஆம் சூத்திரத்தை*.



## 138

சூழ்ச்சி அகற்றினீர் என்னும் பழி, இணக்கி எங்ஙனே என்னும் மேலெழுத்து, முன்னின்றாய் இவளை நீர் என்னும் இருபடை மெய்க்காட்டு, நீர் என்னே என்னும் உடன்பாடு, இடையில்லை என்னும் உதறுதல், இருந்திருந்து நடந்தாள் என்னும் கொண்டாட்டம் அவஸ்த்தா த்ரய வ்ருத்தி.

என்பது, சூத்திரம்.

வியாக் :— ஆக, தோழி தாய் என்னும் நிலைகளில் சொல்லும் பன்மைக்கு விஷயங்களையும், தலைமகளான நிலையில் சொல்லும் பருவங்களையும், அவயவ வருணனைகளையும் விளக்கி அருளிச்செய்தார் இதுகாறும். தோழி தாய் தலைமகள் என்னும் மூன்று நிலைகளிலேஉள்ள செயல் வேறுபாடுகளை எல்லாரும் அறியும்படி விளக்கி அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, சூழ்ச்சி அகற்றினீர் என்னும் பழி - [1] "தோழிமார் பலர் கொண்டுபோய்ச் செய்த சூழ்ச்சியை யார்க்கு உரைக்கேன்" என்கிறபடியே இவளைக் கொடுபோய் அவ்வெம்பெருமானிடத்திலே அகப்படுத்தி இப்படி ஆக்கினவர்கள் தோழிமார் அன்றோ என்று தாயானவள் தோழிமார்மேலே பழியிடுவது, [2] "தொலைவில்லிமங்கலம் கொண்டுபுக்கு அமுத மென்மொழியாளை நீர் உமக்கு ஆசைஇன்றி அகற்றினீர்" என்கிறபடியே அவ்வூரிலே கொண்டுபுக்கு அவ்விறைவனைக் காட்டி இவளை இப்படிக் கைகழியப் பண்ணினவர்கள் நீங்களே அன்றோ என்று தோழியானவள் தாய்மார்மேல் பழியிடுவது ஆகிற இதுவும்;

இணக்கி எங்ஙனே என்னும் மேலெழுத்து - [3] "இணக்கி எம்மை எம்தோழிமார் விளையாடப்போதுமின் என்னப் போந்தோமை" என்கிறபடியே இணக்குப்பார்வையாய் நின்று உன்பக்கலிலே அகப்படுத்தின தோழிமாராலே வந்ததன்றோ இது; ஆதலின், உன்னை வெறுக்கின்றது என்? என்பது, [4] "எங்ஙனேயோ அன்னைமீர்காள் என்னை முனிவது நீர்" என்கிறபடியே, எனக்கு அவ்வெம்பெருமானைக் காட்டி இக் கழிபெருங்காதலை விளைத்த தாய்மாரான நீங்கள் என்னைப் பொடிகிறபடி எங்ஙனேதான் என்பதாய், மேலே கூறிய பழி இரண்டற்கும் ஒக்கும் என்று தலைமகள் மேலெழுத்திடுகையும்;

1. *பெரியாழ்வார்திரு*. 3. 7. 4.
2. *திருவாய்*. 6. 5: 2.
3. *திருவாய்*. 6. 2: 8.
4. *திருவாய்*. 5. 5: 1.

முன்னின்றாய் இவளை நீர் என்னும் இருபடைமெய்க்காட்டு - [1] “முன்னின்றாய் என்று தோழிமார்களும் அன்னையரும் முனிதிர்” என்னும்படி இதற்கு முன்னர் ஒருவர் கண்படாமல் வளர்ந்து போந்த நீ இப்போது எல்லாரும் காணப் புறப்பட்டு முன்னே நின்றாய் என்று, தோழி, தாய்மாரோடே கூடிநின்று தலைமகளைப் பொடிவது, [2] “இவளை நீர் இனி அன்னைமீர் உமக்கு ஆசையில்லை விடுமினோ” என்கிற திருப்பாசுரத்தால் தாய்மார்க்குக் காரியஉபதேசம் செய்வாரைப் போலே, தோழி, தலைமகளுக்குத் துணை செய்வதாகக் கொண்டு இரண்டு தலைக்கும் ஒவ்வொருபோதிலே துணைசெய்தலாகிற [3] இருபடைமெய்க்காட்டும்;

நீர் என்னே என்னும் உடன்பாடு - [4] “அன்னையரும் தோழியரும் நீர் என்னே என்னாதே நீள்இரவும் துஞ்சுவரால்” என்கிற திருப்பாசுரத்தால் தாய்மாரும் தோழிமாரும் இந்நிலையில் என்னைத் தேற்றாமல் இரவுமுழுதும் உறங்காநின்றார்கள் என்று தாய்மாரோடும் தோழிமாரோடும் தலைமகளுக்கு உண்டான உடன்பாடும், (ஈண்டு, உடன்பாடு என்றது, உறவு கொண்டாடுதலை,) இடையில்லை என்னும் உதறுதல் - [5] “அன்னைமீர்காள் என்னுடைத் தோழியர்காள் என்செய்கேன்” என்ற அளவில், அவர்கள், எங்களைக் கேட்கில் மீளஅமையும் என்ன, [6] “உங்களோடு எங்களிடை இல்லை” என்ற திருப்பாசுரத்தால் இவ்விஷயத்தில் நின்றும் மீட்க நினைக்கின்ற உங்களோடு எனக்கு ஒரு சம்பந்தம் இல்லை என்று இரண்டுதலையையும் உதறுகையும்;

இருந்து இருந்து நடந்தாள் என்னும் கொண்டாட்டம்- [7] “இருந்து இருந்து அரவிந்தலோசந என்றென்றே நைந்து இரங்கும்” என்ற திருப்பாசுரத்தால் ஒருகால் அரவிந்தலோசந என்னும்போது வலிமை குறைவாலே நடுவே பலகால் இளைத்து இருந்து இருந்து அவன் கண்ணழகினை அறிவிக்கும் அத்திருப்பெயரை இப்படிப் பலகாலும் சொல்லி உருக்குலைந்தவளாய் அழிகின்றாள் என்று இவளுடைய

---

1. *திருவாய்.* 5. 5: 9.  2. *திருவாய்.* 6. 5: 1.

3. *இருபடைமெய்க்காட்டு-இரண்டுபக்கங்களிலும் சேர்ந்துபேசுதல்; ஒருசமயம் தாய்பக்கல் சேர்ந்துகொண்டு தலைவியை முனிவது, ஒருசமயம் தலைவிபக்கல் சேர்ந்துகொண்டு தாயைவெறுப்பதுஎன்றபடி.*

4. *திருவாய்.* 5. 4: 5.  5. *திருவாய்.* 8. 2: 7.

6. *திருவாய்.* 8. 2: 7.  7. *திருவாய்.* 6. 5: 8.



கழிபெருங்காதலைக் கண்டு தோழி கொண்டாடுவது, [1] “திருக்கோளூர்க்கே நேரிழை நடந்தாள்” என்ற திருப்பாசுரத்தால் அவன் வசிக்கின்ற தேசத்தைக் குறித்துப் போனாள் என்ன அமைந்திருக்க, பகவானிடத்தில் கொண்ட பரமபக்தியை நோக்கி உயர்வுதோன்ற நடந்தாள் என்று தாயார் கொண்டாடுகிற இதுவும், அவஸ்த்தாதிரய விருத்தி - தோழி தாய் மகள் என்கிற மூன்று நிலைகளினுடைய செயல்கள் என்றபடி.

மேலே கூறியவற்றுள் பழி, மேலெழுத்து என்ற இரண்டாலும் “கைங்கரியம் செய்யாதவனுக்கு அடிமைத் தன்மை சித்தியாது” என்கிறபடியே கைங்கர்யத்தில் சம்பந்தம் இல்லாதபோது அடிமைத்தன்மையை அடைவதற்கு வழி இல்லாமையாலே கைங்கயர்த்திலே நோக்காகவிருக்கும் சம்பந்தஞானம், கைங்கர்யம் செய்யவேண்டும் என்ற ஆசைக்குக் காரணம் ஆகையாலும், மிகச்சிறந்த குணங்களோடும் விக்கிரகத்தோடும் கூடியதாய் அடையப்படுவதாய் இருக்கும் அப்பரம்பொருளை, அடைவதற்குச் சாதனமாகப் பற்றுகையாலே உபாயத்தில் துணிவு, அடையப்படுகின்ற அப்பரம்பொருளின் குணங்களையும் விக்கிரகத்தையும் முன்னிட்டுக்கொண்டிருக்கையாலே அடையத்தக்க பொருளிடத்து உண்டாகும் ஆசைக்குக் காரணமாகையாலும், இவற்றில் ஒவ்வொன்றைப் பார்த்தாலும், இதுபேற்றில் பதற்றத்துக்குக் காரணம் என்னும்படி இருக்கையும், பேற்றில் பதற்றத்தின் தன்மையை நிரூபித்தாலும் சம்பந்தஞானம் உபாயத்தில் துணிவு என்னும் அவை இரண்டும் அடியாக இதுவந்தது என்று தோற்றும்படி இருக்கையும் சொல்லுகிறது. இப்படி, சம்பந்த ஞானமும், உபாயத்தில் துணிவும் ஆகிற இவை இரண்டும், பேற்றில் பதற்றத்திற்குக் காரணமாக இருக்கிற இது முதல்நிலை.

இருபடைமெய்க்காட்டு, உடன்பாடு என்கிற இரண்டாலும், சம்பந்தஞானமானது அடிமைத்தன்மை சொரூபமான பின்பு இறைவன் தானேவந்து அங்கீகரிக்கக் கண்டிருக்கை ஒழிய, தான் பதறுதல் தன்னுடைய பிரயோசனத்திலே முதலிடுகையால் சொரூபத்திற்கு முரண் என்னும் தன்மையாலே தன் முயற்சியை விலக்குவதான உபாயத்தில் துணிவிற்குத் துணைபுரிந்தும், இக்கழிபெருங்காதல் உபாயத்திலே முதலிடில் செய்வதுஎன் என்று இந்தப் பதற்றத்தை விலக்கப் பார்க்கின்ற உபாயத்தில் துணிவை, வகுத்த விஷயத்தில் உண்டாகும் கழிபெருங்காதல் சொரூபத்திற்குப் புறம்பு அல்லாமையாலே இது விலக்கத்தக்கதும் அன்று; விலக்கினாலும் போகாது என்று

---

1. *திருவாய்.* 6. 7: 9.

விலக்கும் முயற்சியைக் குலைத்துப் பேற்றில் பதற்றத்துக்குத் துணை புரிந்தும், இப்படி உபாயத்தில் துணிவிற்கும் பேற்றில் பதற்றத்திற்கும் அநுகூலம் செய்யத்தக்கதாய் இருக்கும்படியும், இறைவனுக்கு மகிழ்ச்சியை உண்டாக்குகின்ற கைங்கர்யத்தில் சேர்வது எப்போதோ என்னுமதனுலும் சித்தோபாயமாய இறைவனைப் பற்றினர்க்கு விளம்பத்திற்குக் காரணம் இல்லாமையாலே விரைவிலே பேற்றினைப் பெறவேண்டும் என்னுமதனுலும் செல்லுகிற பேற்றில் பதற்றத்திற்கு, சம்பந்தஞானமும் உபாயத்தில் துணிவும் அநுகூலமாய் இருக்கும்படியையும் சொல்லுகிறது. இப்படி, சம்பந்தஞானம் இரண்டற்கும் துணைபுரிவதாவது, பேற்றில் பதற்றத்துக்குத் தடைகளான சம்பந்தஞானமும், உபாயத்தில் துணிவும் இடவேறுபாட்டாலே அதற்கு அநுகூலமாக இருப்பது; இது இடைநிலை.

உதறுதல், கொண்டாட்டம் என்கிற இரண்டாலும், அநுகூலமாய்த் தோற்றியிருக்கிற சம்பந்தஞானமும், உபாயத்தில் துணிவும், இறைவன் தானேவந்து அங்கீகரிக்குமளவும் ஆறியிருத்தலே அமையும் என்று பேற்றில் பதற்றத்திற்குத் தடையாமளவில், பேற்றில் பதற்றமானது, சம்பந்தஞானம் உபாயத்தில் துணிவு என்னும் இரண்டனையும் மீறிப்போம்படியையும், அப்படி மீறியகாலத்தில், பேற்றில் பதற்றமாகிற அது, சம்பந்தஞானத்துக்கும் உபாயத்தில் துணிவிற்கும் தாழ்வினை உண்டாக்குவதாகத் தோற்றுமல் கொண்டாடத் தக்கதாக இருக்கும்படியையும் சொல்லுகிறது. இப்படி, பேற்றில் பதற்றமானது சம்பந்தஞானத்தையும் உபாயத்தில் துணிவையும் மீறுதலும், அங்ஙனம் மீறுவதுதான் கொண்டாடத் தக்கதாகையுமாகிற இது இறுதி நிலை.

ஆக, சம்பந்தஞானம், உபாயத்தில் துணிவு, பேற்றில் பதற்றம் ஆகிற மூன்று நிலைகளினுடைய செயல்விசேடங்களை எல்லாரும் அறிந்து சொல்லும்படி சுருக்கமாகக் காண்பித்தாராயிற்று. (52)

### 139

[1] *தாயார், ஏதலர் உற்றீர்கள் என்னும்; சாத்ய சித்த சாதந நிஷ்டரை. மகள், நம்முடை ஏதலர் யாமுடைத்துணை என்னும்; சித்தசாதந சாத்ய பரரை.*

என்பது, சூத்திரம்.

1. *தாயும்மகளுமாகப்பேசும் நிலைமைகளில் பகைவர்களாகவும் உறவினர்களாகவும் பேசுவதற்கு உள்ளுறைப்பொருள் கூறுகின்றது இச்சூத்திரம். இதனை, தாயார், ஏதலர்என்னும் சாத்யசாதநநிஷ்டரை என்றும், தாயார். உற்றீர்கள்என்னும் சித்தசாதநநிஷ்டரைஎன்றும்; மகள், நம்முடை ஏதலர்என்னும் சித்தசாதநபரரைஎன்றும், மகள், யாமுடைத்துணைஎன்னும் சாத்தியபரரைஎன்றும் சொற்களைப் பிரித்துக் கூட்டிப் பொருள்காண்க. சாத்தியசாதநநிஷ்டர் - செய்யப்படுகின்ற சாதநங்களில் ஊன்றிநிற்கும் பெரியோர்கள்; செய்யப்படும் சாதனங்களாவன– கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம், பிரபத்தியோகம் என்பன. இவற்றைச் செய்வதிலே ஊன்றிநிற்பவர்கள்என்றபடி. சித்தசாதநநிஷ்டர் - சித்தோபாயமான இறைவனையே பலத்திற்குச்சாதநமாகக்கொண்டு, மேற்கூறிய கர்மஞான பக்தி பிரபத்தியோகங்களைப் பலத்திற்குச் சாதனமாகக் கொள்ளாத பெரியோர்கள். சித்தசாதநபரர் - இறைவனே உபாயம் என்ற நோக்குள்ளவர்கள். சாத்தியபரர்ஆவார் - இறைவனையே பலமாகக்கொண்டு அதிலே ஊன்றிநிற்பவர்கள்.*



வியாக்:— இம்மூன்று நிலைகளில், தாய் என்றும் மகள் என்றும் சொல்லுகிற நிலைகளில் தங்கள் தங்களுக்குப் பகைவர்களும் உறவினர்களுமாகச் சொல்லுகிறது யாரை? என்னும் வினவிற்கு விடை அருளிச்செய்கிறர் இச்சூத்திரத்தால்.

தாயார் ஏதலர் என்னும் சாத்யசாதந நிஷ்டரை - தாயாரான உபாயத்தின் துணிவுநிலையில் [1] "ஏதலர்முன்னுஎன் நினைந்திருந்தாய்" என்று பகைவர்களாகச் சொல்லும்; சித்தசாதநநிலைக்கு விரோதிகளான சாத்தியசாதந நிலையினர்களை. தாயார் உற்றீர்கள் என்னும் சித்தசாதநநிஷ்டரை - [2] "உற்றீர்கட்கு என் சொல்லிச் சொல்லுகேன் யான்" என்று உறவினர்களாகச் சொல்லும்; அநுகூலரான சித்தசாதநநிலையினரை.

மகள் நம்முடை ஏதலர் என்னும் சித்தசாதநபரரை - மகளான பேற்றில் பதற்றநிலையில் [3] "நம்முடை ஏதலர் முன்பு நாணி" என்று அந்தரங்க பகைவர்களாகச் சொல்லும்; பகவானையே பற்றியிருப்பவர்களாயிருக்கச்செய்தே, அவனது உபாயத்தன்மையிலே ஊன்றிநின்று, இந்தப் பதற்றம் [4] பாரதந்திரியத்துக்குச் சேராது என்று விலக்கும் சித்தசாதநபரரை. மகள் யாமுடைத்துணை என்னும் சாத்தியபரரை - [5] "யாமுடைத்துணை என்னும் தோழிமாரும்" என்று தன்னுடைய இன்பதுன்பங்களையே தங்களுடைய இன்பதுன்பங்களாகக் கொள்

1. *பெரியதிருமொழி, 2. 7: 5.* 2. *திருவாய். 5. 6: 7.*

3. *திருவாய். 8. 2: 1.*

4. *பாரதந்திரியம் - பிறன் ஒருவனைப்பிரதானமாகக்கொண்டு தான் அவனைச்சார்ந்திருக்கும் தன்மை. இத்தன்மையையுடையவன் பரதந்திரன்.*

5. *திருவாய். 9. 9: 5.*

ளும் உறவினர்களாகச் சொல்லும்; தன்னைப்போலே [1] உபேயபாவத்திலே ஊன்றி உடன்பாடராய் இருக்கும் சாத்யபரரை.

மேல்சூத்திரத்திலே 'சூழ்ச்சி' என்றும், இச்சூத்திரத்தில் 'ஏதலர்' என்றும், மற்றை ஆழ்வார்கள் திருப்பாசுரப் பகுதிகளையும் சேர்த்து எடுத்தது, ஆழ்வார்கள் எல்லாரும் ஒத்தசொற்களைக் கூறுபவர்கள் ஆகையாலே அவர்களுடைய அருளிச்செயல்களுக்கும் இந்த உள்ளுறை ஒக்கும் என்று தோற்றுகைக்காக. (53)

## 140

*[2] நாலயலார் அயற்சேரியார், உபாயசதுஷ்டய அந்தர்யாமித்வபரர்.*

என்பது, சூத்திரம்.

**வியாக்:**—இந்தச் சந்தர்ப்பத்தில் அருளிச்செயலில் வரும் பல [3] அந்யாபதேசங்களுக்கும் உள்ளுறை அருளிச்செய்கிறார் இச்சூத்திரம் முதல் மேல் எல்லாம்.

அதாவது, நாலயலார் உபாயசதுஷ்டயபரர் - [4] "நாலயலாரும் அறிந்தொழிந்தார்" என்கிற நாலயலார் என்றது, கருமம் ஞானம் பக்தி பிரபத்தி என்னும் நால்வகை உபாயங்களிலும் ஊன்றியிருக்குமவர்கள். அயற்சேரியார் அந்தர்யாமித்வபரர் - [5] "நானக்கருங்குழல் தோழிமீர்காள் அன்னையர்காள் அயற்சேரியீர்காள்" என்கிற அயற்சேரியார் என்றது, அர்ச்சாவதாரம் முதலியவற்றில் விருப்பம் இன்றி, பிரமன் சிவன் முதலிய தேவர்களுக்குள் அந்தர்யாமியாய் இருக்கும் நிலையிலே ஊன்றியிருக்குமவர்கள். (54)

---

1. உபேயம் - அடையத்தகும் பொருள். அப்பொருளை அடைவதற்கு வழியாகஇருப்பது எதுவோ அது உபாயம் எனப்படும்.

2. நாலயலார், அயற்சேரியார் என்பனவற்றிற்கு உள்ளுறை கூறுகிறது இச்சூத்திரம். இதனை, நால்அயலார் உபாயசதுஷ்டயபரர் என்றும், அயற்சேரியார் அந்தர்யாமித்வபரர் என்றும் பிரித்துக்கூட்டிக் கொள்க. நால்அயலார் - கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம், பிரபத்தியோகம் என்னும் நால்வகைப்பட்ட உபாயங்களில் ஊன்றிநிற்கும் எனையோர். உபாயசதுஷ்டயம் - மேற்கூறிய நால்வகைப்பட்ட உபாயங்கள். அந்தர்யாமித்வபரர்என்றது, இறைவனுடைய ஐவகைநிலைகளைச் சார்ந்தஅர்ச்சாவதாரம் (கோயில்களில் விக்கிரகரூபமாக எழுந்தருளியிருக்கும்நிலை) முதலியவற்றை நேரே வணங்குதல்செய்யாது, பிரமன்முதலிய தேவர்களுக்கு உள்ளுயிராய்நிற்கும் அப்பரமனை அவர்களைவழிபடும் வழிபாட்டின்மூலம் வணங்குமவர்கள்.

3. அந்யாபதேசம் - தான்கூறப்புகும் பொருளை நேரேகூறாது, பிறிதொன்றன் மூலமாகக்கூறுவது. பிறிதுமொழிதல் என்றபடி.

4. நாய்ச்சியார் திருமொழி, 12: 2. 5. திருவாய். 7. 3; 2.



## 141

*[1] கீழை மேலை வடக்கிலவை புறம்பாக, தன்பற்று உள்ளசல்.*

என்பது, சூத்திரம்.

**வியாக்:**—பிரபத்திநிஷ்டரை, அயலாராகச் சொல்லலாமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, கீழை, மேலை வடக்கிலவை புறம்பு அசல்ஆக-[2]"கீழையகத்துத் தயிர்கடைய" என்றும், [3] "மேலையகத்து நங்காய் வந்து காண்மின்கள்" என்றும், [4] "வடக்கிலகம்புக்கிருந்து, மின்போல் நுண்ணிடையாள் ஒரு கன்னியை வேற்றுருவம் செய்துவைத்த" என்றும் வருகின்ற திருப்பாசுரங்களில் சொல்லப்படுகின்ற [5] செயலும் காட்சியும் அநுபவமும் ஆகிற கர்மயோகமும் ஞானயோகமும் பக்தியோகமும், பிரபத்தி நிஷ்டர்க்குப் புறம்பே பகைகளாக இருக்க, தன்பற்று உள்ளசல் - அந்த இறைவனைத் தான் பற்றுகின்ற பற்றானது உட்பகையாக இருக்கும் என்றபடி. (55)

---

1. இதனை, கீழை மேலை வடக்கில்அவை புறம்பு அசல்ஆக, தன்பற்று உள்ளசல் என்று சொற்களைப்பிரித்துக்கூட்டுக. 'அவை' என்பதனை மேலே உள்ள சொற்களோடு தனித்தனியே கூட்டுக. கீழையது, மேலையது, வடக்கிலது என. தன்பற்று - தன்முயற்சியாலே இறைவனைப் பற்றுதல்; ஸ்வகதஸ்வீகாரத்தைத்தெரிவித்தபடி. முயற்சியின்றி அவன் அருளே பார்த்திருத்தலாகிற சாஸ்திரார்த்தத்திற்கு மாறுபட்டது இது. மேம்பொருள்போகவிட்டு, மெய்ம்மையை மிகஉணர்ந்து, ஆம் பரிசு அறிந்துகொண்டு, ஐம்புலன் அகத்தடக்கி, காம்பறத்தலைசிரைத்து, உன் கடைத்தலை இருந்து வாழும்சோம்பராம் நிலைக்கு முரண்பட்டது ஆதலால், 'தன்பற்றுஉள்ளசல்' என்கிறார் என்க. அசல் - அயல்; பகை.

2. பெருமாள் திருமொழி, 6: 2. 3. பெரியதிருமொழி, 10. 7: 2.

4. பெரியாழ்வார் திருமொழி, 3. 1: 2.

5. மேலேகாட்டப்பட்ட மூன்று திருப்பாசுரப்பகுதிகளுள் 'தயிர்கடைய' என்னும் தொழிலால் கர்மயோகமும், 'வந்துகாண்மின்' என்பதனால் காண்டலாகிய ஞானயோகமும், 'ஒருகன்னியை வேற்றுருவம் செய்துவைத்த' என்பதில் வேற்றுருவம் அடைதலால் அறியப்படுகிற அநுபவமாகிற பக்தியோகமும் காட்டப்பட்டமை அறிக. இங்குக்கூறிய இம்மூன்றும் சித்தோபாயபரர்க்குப் புறப்பகைகளாக, பிரபத்திநெறியில் தன் பற்றாகிய ஸ்வகத ஸ்வீகாரமானது உட்பகையாக இருக்கும் என்பதனைத் தெரிவித்தபடி.

## 142

[1] *ஊரார் நாட்டார் உலகர், கேவல ஐச்வர்யகாம ஸ்வதந்த்ரர்.*

என்பது, சூத்திரம்.

**வியாக் :**—ஊரார் கேவலர் - [2] "ஊரார் இகழிலும்" என்றும், [3] "ஊரவர் கவ்வை எருவிட்டு" என்றும் வருமிடங்களில் ஊரார் என்றது, ஆன்ம இன்பத்தை விரும்புகிற கேவலரை. நாட்டார் ஐச்வர்ய காமர் - [4] "நாட்டாரோடு இயல்வொழிந்து" என்றவிடத்தில் நாட்டார் என்றது, பெண்டு பிள்ளைகள் ஆடு மாடு சோறு முதலிய இவ்வுலக இன்பங்களை விரும்புகின்றவர்களை. உலகர் ஸ்வதந்த்ரர் - [5] "எங்கள் கண்முகப்பே உலகர்கள் எல்லாம்" என்றும், [6] "இம்மட உலகர்" என்றும், [7] "ஊரும் நாடும் உலகமும்" என்றும் வருகின்ற இடங்களில் உலகர் என்றது, சுவர்க்கம் முதலான மேல் உலகங்களின் செல்வத்தை விரும்புகிற [8] சுவதந்திரரை என்க. (56)

## 143

[9] இறுகல் இறப்புக்கும், இறந்தால் தங்கும் ஊர் ஒக்குமே.

என்பது, சூத்திரம்.

**வியாக் :**—கேவலரை [10] ஓர் ஊராகச் சொல்லலாமோ? என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

---

1. ஊரார்நாட்டார் உலகர் என்பனவற்றிற்கு உள்ளுறை கூறுகின்றது இச்சூத்திரம். ஊரார் நாட்டார் உலகர் என்னும் இம்மூன்றற்கும், மேலே வருகின்ற கேவலர் ஐச்வர்யகாமர் ஸ்வதந்திரர் என்னும் மூன்றனையும் நிரல் நிறையே கொள்க. ஈண்டு 'ஊர்' என்றது பரமபதத்தை. அப்பரமபதத்தில் ஒருசாரில் இருந்துகொண்டு கேவலர்கள் ஆத்மஇன்பத்தை அநுபவிக்கின்றார்கள் ஆதலின் அவர்களை ஊரார்என்ற சொல்லால் குறிக்கின்றார்.

2. சிறியதிருமடல், 77. 3. திருவாய். 5. 3: 4.

4. திருவாய். 10. 6: 2. 5. திருவாய். 9. 2: 8.

6. திருவாய். 9. 2: 7. 7. திருவாய். 6. 7: 2.

8. சுவதந்திரர் - தன்னைப்பிரதானமாகக் கொண்டிருப்பவர்.

9. இறுகல்இறப்பு-கைவல்யமோக்ஷம். இறுகல்-சுருங்கிய; குறைந்த. இறப்பு - மோக்ஷம்.

10. 'ஓர் ஊராராக' என்றபாடம் இருப்பின் பொருள்சிறக்கும்.



அதாவது, இறுகல் இறப்புக்கும் - அளவிற்கு அறியமுடியாத சொரூப ரூப குண விபூதிகளையுடைய பரம்பொருள் அநுபவம்போலன்றிக்கே, அணு அளவினதான ஆன்மாவின் அநுபவம் ஆகையாலே, [1] "இறுகல் இறப்பு" என்கிறபடியே குறைந்த வடிவினதான மோக்ஷத்துக்கும், இறந்தால் தங்கும் ஊர் ஒக்கும் - [2] "முதுமை மரணம் முதலியவற்றினின்றும் விடுபடும்பொருட்டு என்னை அடைந்து யாவர் சிலர் முயற்சிசெய்கிறார்களோ" என்கிறபடியே, முதுமை மரணம் இவைகளில் சேர்க்கை நீங்கி அநுபவிக்கும்போது, படைத்தல் அழித்தல்களால் செயல்படுகின்ற பிரகிருதிமண்டலத்திற்கு அவ்வருகான பரமாகாசத்திலே இருந்து அநுபவிக்கவேண்டுகையாலே, [3] "சனகன் முதலான யோகிகளுக்கு அமிருதம் என்று சொல்லப்பட்ட இடம் எதுவோ அந்த இடமே, தன் ஆன்மாவின் அனுபவத்தை ஆசைப்பட்டு அதற்குவேண்டிய உபாயத்தைச் செய்கின்றவர்களுக்கும் இடம்" என்கையாலே [4] "இறந்தால் தங்கும் ஊர் அண்டமே" என்கிறபடியே இவ்வுடலின் சம்பந்தம் அற்றால் போய்வசிக்கும் தேசம் ஒக்கும் என்றபடி. (57)

## 144

[5] *சிறு சீரார் சுளகுகள், உபய விவேக பரிகரம்.*

என்பது, சூத்திரம்.

**வியாக் :**—சிறுசுளகு - [6] "சிறுசுளகு மணலும் கொண்டு" என்று சொல்லுகிற இடத்தில் 'சிறு சுளகு' என்றது, உபய விவேக பரிகரம் - சுளகு என்பது பெருமணலையும் சிறுமணலையும் பிரிப்பது ஒன்று ஆகையாலே, தேகம்வேறு, ஆன்மாவேறு என்று பகுத்தறிவதற்குக் கருவியான பிரமாணம். சீரார்சுளகு - [7] "சீரார்சுளகில் சிலநெல் பிடித்தெறியா" என்கிற இடத்தில் சொல்லிய சீரார்சுளகு என்பது,

---

1. திருவாய். 4. 1: 10.

2. "ஜராமரணமோக்ஷாயமாமாச்ரித்யயதந்தியே" என்பது, ஸ்ரீகீதை, 7: 29.

3. "யோகிநாம் அம்ருதம் ஸ்தாநம் ஸ்வாத்மஸந்தோஷகாரிணாம்" என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 1. 6: 38.

4. பெரியதிருமொழி, 10. 2: 10.

5. சிறுசுளகு, சீரார்சுளகு என்பனவற்றிற்கு உள்ளுறை கூறுகின்றது இச்சூத்திரம். 'சுளகு' என்பதனை, சிறு என்பதனோடும் கூட்டுக. கூட்டி, சிறுசுளகு உபயவிவேகபரிகரம் என்றும், சீரார்சுளகு உபயவிவேக பரிகரம் என்றும் முடிக்க. பரிகரம் - உபகரணம்; கருவி.

6. நாய்ச்சியார்திருமொழி, 2: 8. 7. சிறியதிருமடல், 21.

இவளுக்கு இந்தக் கழிபெருங்காதலை விளைத்தவர் யாவர் என்று ஆராய்கிறவளவிலே “சிலநெல் பிடித்தெறியா” என்று தொடங்கி “பேராயிரமுடையான் என்றுள்” என்று மற்றைத்தெய்வங்கள் அல்லர்; சர்வேச்வரன் என்று பகுத்தறியும் போதைக்குக் கருவியாகையாலே, [1] ஆன்மா வேறு, பரமாத்மா வேறு என்று பகுத்தறிவதற்குக் கருவியான பிரமாணம் என்கை.

உபய விவேகமாவது, தள்ளத் தக்கதும், பற்றத் தக்கதுமான இரண்டுவகையினையும் பகுத்தறியும் அறிவு ஆகையாலே இடத்திற்குத் தகுதியாக இப்படிச் சொல்லத் தட்டு இல்லை. (58)

### 145

[2] *மாலை கங்குல் காலை பகல், ரஜஸ் தமஸ் ஸத்வ சுத்த சத்வஜ்ஞானங்கள்.*

என்பது, சூத்திரம்.

**வியாக் :**—மாலை - [3] “செங்களம்பற்றிநின்று எள்குபுன்மாலை” என்றும், [4] “செல்கதிர்மாலை” என்றும் வருகின்ற இன்னோரன்ன திருப்பாசுரங்களில் சொல்லுகிற மாலையாவது, ரஜஸ்ஞானம் - ஆசையை வளர்ப்பதாய், பொருள்கள் தெளிவாக விளங்காமையாலே மாறுபட்ட எண்ணத்திற்கு உறுப்பாய் இருக்கும் சந்தியாகாலமாகையாலே, பொருள்களில் மாறுபட்டவுணர்வுக்கு உறுப்பாகவிருக்கும் இராஜசஞானம். கங்குல் - [5] “சூழ்கின்றகங்குல்” என்றும், [6] “செல்கின்றகங்குல்” என்றும், [7] “கங்குல்நாழிகை” என்றும் வருகின்ற இன்னோரன்ன திருப்பாசுரங்களில் சொல்லுகிற கங்குலாவது, பொருள்கள் ஒன்றும் தோற்றாதபடியாய், யாதேனும் தோற்றுமது உண்டாகில் விபரீதமாகத் தோற்றும்படி இருள்மூடி இருக்கும் இராக்காலமாகையாலே, தமஸ்ஞானம் - அறியத்தக்க பொருள்களை அறிவிக்காமல் திரிபுஉணர்வைப் பிறப்பிக்குமதாய் இருக்கும் தாமசஞானம்.

காலை சத்வஞானம் - [1] “காலை எழுந்திருந்து” என்றும், [2] “காலை நன்ஞானத்துறை படிந்து” என்றும் வருகின்ற இன்னோரன்ன திருப்பாசுரங்களில் சொல்லுகிற காலையாவது, பிரஹ்ம முகூர்த்தமாகையாலே, சத்துவகுணத்தை வளர்ப்பதாய், இருள்நீங்கி வெளிச்செறித்து வருகின்ற வைகறையாலே பொருள்களை உள்ளவாறே உணர்தற்கு உறுப்பாகாநிற்கும் சாத்விகஞானம். பகல் சுத்த சத்துவம் [3] “பகல் கண்டேன்” என்பதுபோன்ற திருப்பாசுரங்களில் சொல்லுகிற பகலாவது, ஐயவுணர்ச்சி திரிபுணர்ச்சிகட்கு இடமின்றிப் பொருள்களைத் தெளிவாக விளக்கிக்காட்டும் காலமாகையாலே, [4] “நாரணனைக் கண்டேன்” என்கிறபடியே எல்லாக் குணங்களோடும் விக்கிரகத்தோடும் ஐச்வர்யத்தோடும் கூடினவனான சர்வேச்வரனைத் தெளிய அறிகின்ற சுத்தசத்துவஞானம் என்கை.

இதனால், விளக்கமில்உணர்வு, திரிபுணர்வு, உண்மையுணர்வு, அதன்பலமான நேரே தெளிய அறிகின்ற காண்டலாகின்ற அறிவு என்கிறவற்றைச் சொன்னபடி. (59)

### 146

[5] *நிலா முற்றம், ப்ரஜ்ஞாப்ராசாதம் என்னும் எல்லைநிலம்.*

என்பது, சூத்திரம்.

**வியாக் :**—நிலா முற்றம் - [6] “நீணிலா முற்றத்து நின்றிவள் நோக்கினள்” என்கிற திருப்பாசுரத்திற் சொல்லுகிற நிலாமுற்றமாகிறது, ப்ரஜ்ஞாப்ராசாதம் என்னும் எல்லைநிலம் - [7] “திருமந்திரத்தினுடைய உயர்ந்த ஞானமாகிற மாடியில்ஏறி, தன்னைப்பற்றிய வருத்தம்

---

1. “ஆன்மாவேறு” என்றது, மேலேகூறிய ‘மற்றைத்தெய்வங்கள் அல்லர்’ என்பதிலே நோக்கு. இறைவனைத்தவிர, மற்றைத்தெய்வங்கள் எல்லாம் ஆன்மகோடியில் சேர்ந்தவை ஆகையாலே இங்ஙனம் அருளிச்செய்கிறார்.

2. மாலை கங்குல் காலை பகல் என்பனவற்றிற்கு உள்ளுறை கூறுகின்றது இச்சூத்திரம். மாலைகங்குல் காலைபகல் என்ற நான்கற்கும், பின்னே வருகின்ற நான்கனையும் முறைநிரல் நிறையாகக்கொள்க. ஞானம் என்றதனை முன் உள்ள சொற்களோடு தனித்தனியே கூட்டுக.

3. திருவிருத்தம், 77. 4. திருவாய். 9. 9: 1

5. திருவிருத்தம், 72. 6. திருவாய். 5. 4: 10.

7. பெரியதிருமொழி, 9. 5: 3.

---

1. நாய்ச்சியார்திரு. 9: 8. 2. திருவிருத்தம், 93.

3. இரண்டாந்திருவந். 81. 4. இரண்டாந்திருவந். 81.

5. நிலாமுற்றம் என்பதற்கு உள்ளுறைகூறுகின்றது இச்சூத்திரம், பிரஜ்ஞா - ஞானம். பிராசாதம் - மாடி; உயர்ந்தநிலம்.

6. பெரிய திருமொழி, 8. 2: 2.

7. ப்ரஜ்ஞா ப்ராஸாதமாருஹ்ய அசோச்ய: சோசதோ ஜநாந்
பூமிஸ்தாநிவ சைலஸ்தோஹ்யஜ்ஞாந் ப்ராஜ்ஞ: ப்ரபச்யதி.
என்பது பாரதம் சாந். 150: 11.

தீர்ந்த ஞானியானவன், அறிவில்லாமல் வருத்தப்படுகின்ற இவ்வுலக மக்களை மலைமேல் இருப்பவன் பூமியில் இருப்பவர்களைப் பார்ப்பது போன்று பார்க்கின்றான்'' என்கிறபடியே மிக உயர்ந்த இடத்திலே நின்று எல்லாப் பொருள்களையும் பார்ப்பதற்கு உறுப்பாகச் சொல்லப் படுவதாய், அதிலே நின்று கண்டவளவில் [1] "காணுமோ கண்ணபுரம் என்று காட்டினாள்'' என்கையாலே அவன் சம்பந்தமுடைய பொருளை அடைதலே அடையத்தக்க பேறுகளில் மிக உயர்ந்தபேறு என்று பிறர்க்கும் வணங்கும்படி எல்லைநிலமான பேற்றின்ஞானம் என்கை. (60)

## 147

[2] *கலை வளை, அஹம் மம க்ருதிகள்.*

என்பது, சூத்திரம்.

வியாக் :— கலை வளை - [3] "கைவளையும் மேகலையும் காணேன்'' என்றும், [4] "கலையாளா அகல் அல்குல் கனவளையும் கையாளா'' என்றும் வருகின்ற இடங்களில் சொல்லுகிற கலையும் வளையும் ஆவன, அஹம் கிருதி மம கிருதி - பகவானுடைய அநுபவத்திற்கு விரோதியான அகங்காரமும் மமகாரமும் என்கை.

யான் எனது என்னும் செருக்கு இரண்டும் பகவானுடைய அநு பவத்துக்கு விரோதியாகையாலே, திருமந்திரத்தில் [5] 'நம:' என்னும் பதத்தாலே இவைஇரண்டையும் கழித்துவிட்டு 'நாராயணாய' பதத் தாலே பகவானுடைய அநுபவம் சொல்லப்பட்டது.

[6] "கழல்வளைபூரிப்ப யாம்கண்டு கைதொழக் கூடுங்கொல்'' என் றும், [7] "ஈண்டிய சங்கும் நிறையும் கொள்வான்'' என்றும், [8] "தூது உரைத்தல் செப்புதிரேல் சுடர்வளையும் கலையும்'' என்றும் வருகிற இடங்களில் விடத்தக்கனவான அகங்கார மமகாரங்கள் அல்லாமை

1. *பெரியதிருமொழி*, 8. 2: 2.

2. *கலைவளை என்பனவற்றிற்கு உள்ளுறை கூறுகின்றது இச்சூத்தி ரம். இங்கு; 'கிருதி' என்றசொல்லை 'அஹம்' என்ற சொல்லோடும் கூட்டுக. அஹம்கிருதி, மமகிருதி-அகங்கார மமகாரங்கள்; யான், எனது என்னும் செருக்குகள்.*

3. *திருநெடுந்தாண்டகம்*, 22. 4. *பெரியதிருமொழி*, 5. 5: 2.

5. *இதன்விளக்கத்தை மேலேகாண்க. பக்.* 346.

6. *திருவாய்*. 5. 9: 9. 7. *திருவாய்*. 8. 2: 2.

8. *திருவாய்*. 9. 7: 6.



யாலே, [1] "நான் அடியவன்'', [2] "என்னுடைய திருவரங்கர்'' என்பன போன்ற இடங்களிலே உள்ள அகங்கார மமகாரங்களைச் சொல்லிற் றுகக்கொள்ளலாம் ஆகையாலே அங்குத்தைக்கும் இதுவே உள்ளு றையாகக் குறைஇல்லை. (61)

## 148

[3] பட்டம் சூடகமாவன, பராவரம் குருக்கள் பூட் டும் ஆத்மபூஷணங்கள்.

என்பது, சூத்திரம்.

வியாக்:— பட்டம்சூடகம்ஆவன - [4] "பட்டம் கட்டிப் பொற் றோடு பெய்து இவள் பாடகமும் சிலம்பும், இட்டமாக வளர்த்தெடுத்தே னுக்கு'' என்றும், [5] "சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே, பாடகமே என்றனைய பல்கலனும் யாம்அணிவோம்'' என்றும் சொல்லு கிற ஆபரணங்களாவன, பர அவரம் குருக்கள் பூட்டும் ஆத்மபூஷ ணங்கள் - [6] "கண்ணபிரான் திருவடிகளில் அணிந்த திருத்துழாய் கிரீடம், அவனைச்சேவிப்பது பட்டாடை, அவன் சரித்திரங்களைக் கேட் பது குண்டலங்கள், அவனைக் கைகூப்பி வணங்குவது கைகளுக்கு வளையல்'' என்கிறபடியே இவ்ஆன்மாவை அங்கீகரித்த ஆசாரியன்

1. *சேஷோஹம்.* 2.

3. *பட்டம்சூடகம் என்பனவற்றிற்கு உள்ளுறை கூறுகின்றது இச் சூத்திரம். பராவரம் - பரஅவரம்; முன்னரும் பின்னரும். ஈண்டு 'முன்னர்' என்றது, பஞ்சசம்ஸ்காரம் செய்கின்ற காலத்தைக்குறித்தது. ஈண்டு, பின்னர் என்பதற்கு, பஞ்சசம்ஸ்காரம் செய்துகொண்டு அடியவ னைபின்னர் என்பது பொருள். குருக்கள் என்ற பன்மைப்பெயர், ஈண்டு ஒருமையின்கண் வந்தது. 'குருக்கள் வந்தார்' என்பதுபோன்று, இப்பெயர் ஒருமையில் வழங்குவதனை இன்றும் உலகவழக்கில் காணலாம். இது, "ஒருவரைக்கூறும் பன்மைக்கிளவி'' யைப்போன்றதொரு உயர்சொல்.*

4. *பெரியாழ்வார்திருமொழி*, 3. 7: 6.

5. *திருப்பாவை*, 27.

6. *க்ருஷ்ணங்க்ரி துளஸீமௌளி: பட்டம்க்ருஷ்ணபிவந்தநம குண்டலேக்ருஷ்ண சரிதஶ்ரவணம் கங்கணேஞ்ஜலி:*

*என்பது, பிரமாணம்.*

முன்னர் உண்டாக்கும் [1] நாம ரூபங்களும் பகவானை வணங்கும் வணக்கம் முதலானவைகளும், பின்னர் அவ்வாசார்யனுடைய வைபவத்தை உணர்த்தி, ஆன்மாக்கள் எல்லாம் ஈச்வரனுக்கு அடிமை என்று அவனால் உண்டாக்கப்படுகின்ற [2] ஞானம் முதலானவைகளும் ஆத்ம அலங்காரங்கள் என்கை. (62)

## 149

[3] பந்து கழல் பாவை குழமணன் யாழ் தென்றல் மதியம் அடிசில் சாந்தம் பூண் அகில் சிற்றில் தூதை முதலாவன, குணத்ரய விசித்ர கர்ம சூத்ரத்தாலே கட்டி லீலையாகப் பிரேரிக்க, விழுந்து எழுந்தும் சுழன்று உழன்றும் பறிபட்டும், அற்பசாரமாமவையுமாய், மதீயம் என்னில் விட்டகலவும் ததீயம் என்னில் இகழ்வறவும், முனிவதும் இக்காலம் ஈதோ என்னப்படும் பொங்கைம்புலனில் போக்யாதி சமூகம்.

என்பது, சூத்திரம்.

வியாக் :— பந்து கழல் என்பன போன்று சொல்லப்படுகின்ற விளையாட்டுக் கருவிகளுக்கு உள்ளுறை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

1. நாமம் என்றது, 'இராமாநுசதாசன்' என்று ஆசாரியன் இடும் தாஸ்யநாமத்தை. ரூபம் என்றது, ஆசாரியன் சிஷ்யனுக்குப் பன்னிரண்டு ஊர்த்துவபுண்டரங்களை அணிந்து வைணவ வடிவாக மாற்றுகின்ற வைணவ உருவத்தினை. 'பகவானை வணங்கும் வணக்கம்' என்றது, ஆசாரியனிடத்தினின்றும் சிஷ்யன் திருவாராதனம் பெறுதலை. இவைமூன்றும் பஞ்சசம்ஸ்காரத்தில் சேர்ந்தவை. ஏனை இரண்டாவன, ஓமத்தீயில்ஒற்றிய திருவாழி திருச்சங்குகளைத் தோள்களிற் பொறித்தல், திருமந்திரத்தை உபதேசித்தல் என்பன. "தாபம் புண்ட்ர ஸ்ததா நாம மந்த்ரோ யாகஸ்ச பஞ்சம:".

2. ஞானம் என்றது, சேஷத்வஞானத்தினை.

3. கழல், அம்மானை - ஆடும்கருவிகள். குழமணன் - மரப்பாவை. தூதை - மண்முதலியவற்றால் செய்த ஒருசிறியபாத்திரம். குணத்ரயம் - மூன்று குணங்கள். பிரேரித்தல் - ஏவுதல். மதீயம் - தன்சம்பந்தமுடைய பொருள். ததீயம் - இறைவன் சம்பந்தமுடைய பொருள். போக்யம் - இனியபொருள். சமூகம் - கூட்டம்.



அதாவது, பந்துகழல் பாவை குழமணன் யாழ்தென்றல் மதியம் அடிசில் சாந்தம் பூண் அகில் சிற்றில் தூதை முதலாவன - [1] "பந்தும் கழலும் தந்து போகு நம்பீ" என்றும், [2] "கன்மம் அன்று எங்கள்கையில் பாவை பறிப்பது" என்றும், [3] "குழகி எங்கள் குழமணன் கொண்டு" என்றும், [4] "யாழ்நரம்பு" என்றும், [5] "தைவந்த தண் தென்றல்" என்றும், [6] "மேவுதண்மதியம்" என்றும், [7] "இன்னடிசிலொடுபால் அமுது ஊட்டி" என்றும், [8] "சாந்தமும் பூணும்" என்றும், [9] "சீர்உற்ற அகில்புகை" என்றும், [10] "எங்கள் சிற்றிலும்" என்றும், [11] "வட்டவாய்ச் சிறுதூதை" என்றும் இன்னோரன்னவைகளால் சொல்லப்படுகிற விளையாட்டுக்கருவிகளும் இனிய பொருள்களும் இன்பநுகர்ச்சிக்குக் கருவிகளாக உள்ள பொருள்களும் முதலானவை யாவை? எனின்,

குணத்ரய விசித்ர கர்ம சூத்திரத்தாலே கட்டி - [12] "சிவந்தும் வெளுத்தும் கறுத்தும் இருப்பதாய் ஒன்றான பிரகிருதியை" என்கிறபடியே செந்நூல் வெண்ணூல் கருநூலினுடைய இடத்திலேயான மூன்று குணங்களோடே [13] "கர்மமாகிற கயிற்றாலே கட்டுப்பட்ட" என்கிறபடியே விசித்திரமான கருமசூத்திரத்தாலே கட்டி, லீலையாகப் பிரேரிக்க - "விளையாட்டுக்கு உரிய பந்துபோல் இருக்கிற இந்த உயிர்களைக்கொண்டு இறைவனாகிய நீர் விளையாடுகிறீர்" என்கிறபடியே சர்வேச்வரன் தன்னுடைய விளையாட்டுக்கு உறுப்பாக [14] "இந்த ஆன்மா அறிவில்லாதவனும் தன் இன்பதுன்ப விஷயங்களிலும் ஆற்றல் இல்லாதவனும் இருக்கிறான்; இறைவனால் தூண்டப்பட்டு

1. திருவாய். 6. 2: 1.
2. திருவாய். 6. 2: 7.
3. திருவாய். 6. 2: 6.
4. திருவாய். 9. 9: 7.
5. திருவாய். 5. 4: 8.
6. திருவாய். 9. 9: 4.
7. நாய்ச்சியார்திரு. 5: 5.
8. பெரியதிருமொழி, 2. 7: 3.
9. திருவாய். 9. 9: 7.
10. திருவாய். 6. 2: 9.
11. நாய்ச்சியார்திரு. 2: 8.

12. "அஜாமேகாம் லோஹித சுக்லக்ருஷ்ணாம்"
என்பது, தைத்திரீயஉப.

13. ஹரே விஹரஸி க்ரீடா கந்துகைரிவஜந்துபி:
த்வம் ந்யஞ்சத்பிருதஞ்சத்பி: கர்மசூத்ரோபபாதிதை:
என்பது விஷ்ணுதர்மம்.

14. அஜ்ஞோஜந்துரநீஸோய மாத்மநஸ்ஸுகதுக்கயோ:
ஈச்வர ப்ரேரிதோ கச்சேத்ஸ்வர்க்கம்வாச்வப்ரமேவவா.
என்பது, பாரதம் சாந்திபர். 12: 36.

மேலுலகம் அல்லது கீழுலகம் செல்லுகிறான்" என்கிறபடியே அறிவில்லாதவனாய் ஆற்றல் இல்லாதவனான இவன் தான்செய்த கருமங்களுக்குத் தகுதியாக மேல்உலகம் முதலானவைகளிலே போவது மீளுவதாம்படி தன்னுடைய சங்கல்பத்தாலே ஏவ,

விழுந்து எழுந்தும் - [1] "நீ விழுகின்றவற்றாலும் எழுகின்றவற்றாலும்" என்கிறபடியே தாழ விழுந்தும் உயர எழுந்தும், சுழன்று உழன்றும் - [2] "இவ்விதமாகச் சம்சாரமாகிற சக்கரத்தில் இருந்துகொண்டும் தான்செய்த கருமங்களால் சுழன்றுகொண்டும் இருக்கிற" என்கிறபடியே சக்கரத்தின் சுழற்சிபோலே சுழன்றுகொண்டும், என்றது, [3] "ஏ முனிவரே! இந்த உயிருக்கு, யமனுடைய நகரத்திலே உள்ள மகாசூலத்திலும் தாயினுடைய வயிற்றிலும் பலமுறை போவதற்கும் வருவதற்கும் சாதனம்" என்கிறபடியே ஒருகால் போனதிலே பலமுறை போவது வருவதாயும் உழன்றும் போருகிற ஆன்மாவினுடைய சேர்க்கையாலே விழுந்தெழுகை முதலான இயல்போடு கூடியதாய் என்றபடி. பறிபட்டும் - [4] "பந்துபறித்து" என்கிறபடியே சர்வேச்வரன் தன்னுடைய போகத்திற்குத் தடைஎன்று வலிய விடுவிக்க விடுபட்டும்,

அல்ப சாரங்கள் ஆமவையுமாய் - [5] "அல்ப சாரங்கள் அவை சுவைத்து அகன்றொழிந்தேன்" என்கிறபடியே பகவானிடத்தில் நின்றும் அகற்றுமதொழியத் தன்பக்கல் அநுபவிக்கலாவதொன்றில்லாதபடி சுவை சிறிதே உள்ளனவைகளாயிருக்குமவையுமாய், மதீயம் என்னில் விட்டகலவும் - எனக்கு உரியது என்று தன்னுடைய சம்பந்தத்தை இட்டுப் பார்க்கும்போது [6] "சிற்றில் மென்பூவையும் விட்டகன்ற" என்கிறபடியே விடத்தக்கனவாய், ததீயம் என்னில் இகழ்வு அறவும் - அவனுடைய உடைமைப்பொருள் என்று அவனுடைய சம்பந்தத்தை இட்டுக் காணும்போது [7] "இகழ்வில் இவ்வனைத்தும்" என்கிறபடியே கட்டடங்கக் கொள்ளத்தக்கவையாயுமாய்,

---

1. "த்வம் ந்யஞ்சத்பிருதஞ்சத்பி:" என்பது விஷ்ணுதர்மம்.
2. "ஏவம் ஸம்ஸ்ருதி சக்ரஸ்தே ப்ராம்யமாணே ஸ்வகர்மபி:" என்பது, அஹிர்புத்ந்யசம்ஹிதை.
3. யமாலய மஹாசூலே மாதுர்ஜடரதோல்பத:
யாதாயாத ஸஹஸ்ராணாம் முநே ஜீவஸ்ய ஸாதநம்.
என்பது, பிரமாணம்.
4. பெரியதிருமொழி, 10. 7: 5.
5. திருவாய். 3. 2: 6.
6. பெரியதிரு. 3. 7: 8.
7. திருவாய். 3. 4: 1.



முனிவதும் இக்காலம் - [1] "அன்னை முனிவதும் அன்றிலின் குரல் ஈர்வதும்" என்றும், [2] "பனிப்பியல்வாகவுடைய தண் வாடை இக்காலம் இவ்வூர், பனிப்பியல் வெல்லாம் தவிர்ந்து எரிவீசும்" என்றும் வருகின்ற இன்னோரன்ன திருப்பாசுரங்களின்படியே அவனை ஒழியக் கண்டபோது பகையுள்ளனவாகவும், ஈதோ - [3] "அவ்வாடை ஈதோ வந்து தண்ணென்றதே" என்கிறபடியே அவனோடு சேர்த்துக் கண்டபோது இனிய பொருளாகவும், என்னப்படும் - என்று சொல்லப்படுமவையான, பொங்கைம்புலனில் போக்யஆதிசமூகம் - [4] "பொங்கைம்புலனும்" என்ற திருப்பாசுரத்தில் சொல்லப்பட்ட இனிய பொருள்கள்; இன்பத்தை நுகர்தற்குக் கருவிகள்; இன்பத்தை நுகரும் இடம் என்பனவற்றின் கூட்டம் என்றபடி.

இதில் செந்நூல் வெண்ணூல் கருநூல்களாலே சமைக்கப்பட்ட பந்தாகச் சொல்லப்பட்டது போகத்திற்கு இடமான சரீரத்தை என்னுமிடம் மேல் இவர் புனைந்துரைத்த வருணனையிலே தெரியும். கழலாவது, சிறியதாய் ஐந்தாய் இருக்குமதாகையாலே போகத்திற்குக் கருவிகளான இந்திரியங்களைந்தனைச் சொல்லுகிறது. பாவை குழமணங்களாவன, விளையாட்டுக்குஉரிய கருவி விசேடங்கள். யாழ் தென்றல் மதியம் அடிசில் சாந்தம் பூண் அகில் ஆவன, இனிய பொருள்களான சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் ஆகிய ஐம்புல இன்பங்கள். இவற்றுள் பூண் அகில் என்பவை, உருவத்திலும் வாசனையிலும் வேறுபாடு. சிற்றிலாவது, கொட்டகமாகையாலே போகஸ்தானம். உடலும் வசித்தற்குரிய வீடு முதலானவைகளும் போகஸ்தான விசேடம் ஆம். தூதையாவது, சிறுசோறு அடுகைக்குக் கருவி ஆகையாலே இந்திரியங்களுக்கு வேறுபட்டவைகளான போகஉபகரணங்களுக்கு உபலக்ஷணம். போகஸ்தானமான சரீரத்தையும், போக உபகரணமான இந்திரியங்களையும் பந்துகழல் என்பன போல்வனவற்றால் விளையாட்டுக் கருவிகளாகச் சொல்லுகிறது; விளையாட்டாவது, அப்பொழுது தோன்றும் இன்பமான செயல் ஆகையாலே அத்தகைய

---

1. பெரியதிருமொழி, 11. 2: 5.
2. திருவிருத்தம், 5.
3. திருவிருத்தம், 27.
4. திருவாய். 10. 7: 10.
மங்கவொட்டுன்மாமாயை; திருமாலிருஞ்சோலைமேய
நங்கள்கோனே! யானேநீயாகி என்னை அளித்தானே!
பொங்கைம்புலனும் பொறியைந்தும் கருமேந்திரியம்ஐம்பூதம்
இங்கிவ்வுயிரேய் பிரகிருதி மானாங்கார மனங்களே.

செயலுக்கு இவை கருவிகளாக இருக்கையாலே. ஆகையால் இவை அனைத்தும் [1] "பொங்கைம்புலனில் போக்யாதி சமூகம்" என்னக் குறை இல்லை. (63)

## ஆசாரிய ஹிருதய வியாக்கியானம்

## இரண்டாம் பகுதி முற்றிற்று.

அழகியமணவாளப்பெருமாள் நாயனர் திருவடிகளே அரண்.

பெரிய சீயர் திருவடிகளே பேறு.

மாறன் மலரடி வாழ்க.

---

2-1-1992 ல் இரண்டாம் முறை சேவிக்கப்பட்டது.
13-11-2006-ல் மூன்றாம் " "



1. "பொங்கைம்புலன்" என்ற திருப்பாசுரப் பகுதியில் சொல்லப் பட்ட இனிய பொருள்களின் கூட்டம்.

ஸ்ரீ :

மாறன் மலரடி வாழ்க

### பிற்சேர்க்கை I

# ஐம்பத்தோராம் சூத்திரத்தின் விளக்கம்

திருவிருத்தத்திலே உள்ள எந்த எந்தத் திருப்பாசுரம், திருவாய்மொழியில் எந்த எந்தத் திருப்பதிகமாக விரிந்தது என்பது ஈண்டுக் காட்டப்பட்டிருக்கின்றது.

| திருவிருத்தத் திருப்பாசுரங்களின் முதற்குறிப்பு | செய்யுள் எண் | | திருவாய்மொழி திருப்பதிகங்களின் முதற்குறிப்பு | திருப்பதிகம் எண் |
|---|---|---|---|---|
| பொய்ந்நின்ற - | 1 | இதன் விரிவு | ஒழிவில்காலம் - | 23 |
| செழுநீர்த்தடம் - | 2 | " | கோவைவாயாள் - | 33 |
| குழற்கோவலர் - | 3 | " | வெள்ளைச்சுரிசங்கு - | 63 |
| தனிநெஞ்சம் - | 4 | " | ஓடும்புள்ளேறி - | 8 |
| பனிப்பியல்வாக - | 5 | " | மாயாவாமனனே - | 68 |
| தடாவியவம்பும் - | 6 | " | உண்ணுஞ்சோறு - | 57 |
| ஞாலம் பனிப்ப - | 7 | " | இன்னுயிர்ச்சேவல் - | 85 |
| காண்கின்றனகளும் - | 8 | " | கையார்சக்கரம் - | 41 |
| திண்பூஞ்சுடர் - | 9 | " | பொலிக பொலிக - | 42 |
| மாயோன்வடதிரு - | 10 | " | நெடுமாற்கடிமை - | 80 |
| அரியனயாமின்று - | 11 | " | மாலுக்கு வையம் - | 56 |
| பேர்கின்றதுமணி - | 12 | " | மாசறுசோதி - | 43 |
| தனிவளர் செங்கோல் | 13 | " | மல்லிகை கமழ் - | 89 |
| சர்வனவேலும் - | 14 | " | துவளில் மாமணி - | 55 |
| கயலோநுமகண்கள் - | 15 | " | கண்ணன் கழலிணை - | 95 |
| பலபல ஊழிகளாய் - | 16 | " | பயிலும் சுடரொளி - | 27 |
| இருள்விரிந்தாலன்ன - | 17 | " | அணைவதரவணை - | 18 |
| கடல்கொண்டு - | 18 | " | சூழ்விசும்பணிமுகில் - | 99 |
| காரிகையார்நிறை - | 19 | " | பாலனுயேழுலகு - | 32 |
| சின்மொழிநோயோ - | 20 | " | தீர்ப்பாரை யாமினி - | 36 |
| சூட்டுநன்மாலைகள் - | 21 | " | வீற்றிருந்தேழுலகு - | 35 |
| கொம்பார்தழை - | 22 | " | நல்குரவும் செல்வும் - | 53 |
| புனமோபுனத்து - | 23 | " | கடல் ஞாலம் - | 46 |

| | | | | |
|---|---|---|---|---|
| மைப்படிமேனியும் - | 94 | இதன்விரிவு | இருத்தும் வியந்து - | 77 |
| யாதானுமோர் - | 95 | ,, | திருமாலிருஞ்சோலை - | 98 |
| வணங்கும் துறைகள் - | 96 | ,, | ஒன்றும்தேவும் - | 40 |
| எழுவது மீண்டே - | 97 | ,, | பரிவதிலீசனை - | 6 |
| துஞ்சாமுனிவரும் - | 98 | ,, | கெடுமிடராய - | 92 |
| ஈனச்சொல்லாயினும் - | 99 | ,, | செஞ்சொற்கவி - | 97 |
| நல்லார் நவில் - | 100 | ,, | முனியே நான்முகனே- | 100 |

மேலே காட்டப்பெற்ற திருவிருத்தத் திருப்பாசுரங்களுக்கும் திருவாய்மொழித் திருப்பதிகங்களுக்கும் உள்ள பொருள் ஒற்றுமையைச் சத்சம்பிரதாயம் வல்லார்வாய்க் கேட்டுணர்தல் தகும்.

மாறன் மலரடி வாழ்க.





## பிற்சேர்க்கை II

ஐந்தாம் பக்கத்தில் "மாதவத்தோன்மாறன்" என்ற பாசுரத்தின் குறிப்புரையில் ஒரு திருத்தம் :

அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் தாம் அருளிச்செய்த ஆசாரிய ஹிருதயம் என்னும் இந்நூலை, தோதவத்தித் தூய்மறையோரான பெற்றார்க்கு அளித்தார். அப்பெரியார், திருநாராயணபுரத்து ஆயிக்கு அளித்தார். அப்பெரியாரிடமிருந்து மணவாள மாமுனிகளுக்குக் கிடைத்தது இந்நூல் என்று, இந்நூல் வந்த வழிவகையினைக் கூறுகின்றது குருபரம்பராப் பிரபாவம். அதற்குத் தக, இப்பாசுரத்தின் குறிப்புரையைத் திருத்திக் கோடல்வேண்டும்.

அத் திருத்தம்: முதல் இரண்டு அடிகட்கும் முற்கூறியுள்ள பொருளே கொள்க. மூன்றும் அடியிலுள்ள "ஆங்கவர் தாள் சேர் பெற்றார் ஆயி" என்பதற்கு, ஆங்கு அப் பெற்றாருடைய திருவடிகளைச் சேர்ந்து பெற்றவராகிய ஆயி என்று பொருள் கொள்க. "பெற்றார்" என்பது வினையாலணையும் பெயர். இனி, 'பெற்றார்' என்பதனை முற்றாக்கலும் ஒன்று. அப்பொழுது, ஆயி பெற்றார் என்பது பொருள்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க.

# ஆசாரிய ஹ்ருதய மூலம்

## மணவாளமாமுனிகள் அருளிச்செய்த
## வியாக்கியானத்தின் தமிழாக்கம்

### பகுதி 3-4


சென்னைப் பல்கலைக் கழகம்
தமிழ்த்துணைப்பேராசிரியர்
பண்டித வித்வான்
**B. R. புருஷோத்தம நாயடு**
ஆக்கியது.



சென்னைப் பல்கலைக் கழகம்.

1965

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க.

அழகிய மணவாளப் பெருமாள் நாயனர் அருளிச்செய்த

# ஆசாரிய ஹ்ருதயமும்

மணவாள மாமுனிகள் அருளிச்செய்த

வியாக்கியானத்தின்

# தமிழாக்கமும்.

# மூன்றும் பகுதி

## 150

[1] சேர்ப்பாரைப் பக்ஷிகள் ஆக்கி, ஜ்ஞாந கர்மங்களைச் சிறகு என்று, குரு ஸப்ரஹ்மசாரி புத்ர சிஷ்ய ஸ்தாநே பேசும்.

என்பது, சூத்திரம்.

வியாக் :—இனி, பகவானிடத்தில் தூதாக விடுகிற பறவைகளுக்கு உள்ளுறைப்பொருள் யாது? என்னும் வினவிற்கு, இச் சூத்திரம் முதற்கொண்டு விடை அருளிச்செய்கிறார்.

அதாவது, சேர்ப்பாரைப் பக்ஷிகள் ஆக்கி - பகவானிடத்தில் சேர்க்கின்றவர்களைப் பறவைகளாக நினைத்து, ஞான கர்மங்களைச் சிறகு என்று - [2] "வீசும்சிறகால் பறத்தீர்" என்றும், [3] "அஞ்சிறைய

1. ஆக்கி, என்று, ஸ்தாநே பேசும் என்க. என்று - என்று கொண்டு. ஸபிரஹ்மசாரி - ஒருசாலை மாணுக்கர். ஸ்தாநே - இடத்தில்.

2. திருவிருத்தம், 54. 3. திருவாய். 1. 4; 1.

மடநாராய்'' என்றும் வருவனபோல்வனவற்ருலே [1] "பறவைகளின் இரண்டு சிறகுகளாலே பறவைகளுக்கு ஆகாயத்தில் எப்படிப் பறந்து செல்லுதல் உளதாகிறதோ அப்படியே ஞானம் கருமம் என்னும் இந்த இரண்டாலும் புருஷோத்தமனை இறைவன் அடையப்படுகிருன்'' என்கிறபடியே பகவானை விரைவில் அடைதற்கு உறுப்பான அவர்களுடைய ஞானத்தையும் ஒழுக்கத்தையும் சிறகுகளாகச் சொல்லி, குரு ஸப்ரஹ்மசாரி புத்ர சிஷ்ய ஸ்தாநே பேசும் - [2] "நீயும் நின் அஞ்சிறைய சேவலுமாய் ஆஆ என்று எனக்கருளி'' என்றும், [3] "இது சொல்லியருள் ஆழி வரிவண்டே'' என்றும், [4] "வந்துமேயும் குருகினங்காள் கைகள் கூப்பிச்சொல்லீர்'' என்றும், [5] "உடன்மேயும் மடஅன்னங்காள் - அடியேனுக்கும் போற்றுமினே'' என்றும், [6] "நன்னலப் புள்ளினங்காள் வினையாட்டியேன் நான் இரந்தேன்'' என்றும், [7] "என்முல்லைகள்மேல் தும்பிகாள் யாம் இதுவோ தக்கவாறு என்ன வேண்டும் கண்டீர்'' என்றும், [8] "செங்காலமடநாராய் குடக்கூத்தற்கு என்தூதாய் நுமரோடே நும்கால்கள் என்தலைமேல் கெழுமீரோ'' என்றும், [9] "கொக்கினங்காள் குருகினங்காள் தக்கிலமே கேளீர்கள்'' என்றும் வருகின்ற இன்னேரன்ன திருப்பாசுரங்களாலே குருக்களுடையவும் ஒருசாலை மாணுக்கர்களுடையவும், [10] "இளங்கிளியே யான் வளர்த்த நீஅலையே'' என்றும், [11] "நீஅலையே சிறுபூவாய்'' என்றும், [12] "யான் வளர்த்த கிளிகாள்'' என்றும், [13] "தீவினையேன் வளர்த்த சிறு பூவைகளே'' என்றும் வருகின்ற இன்னேரன்ன திருப்பாசுரங்களாலே புத்திரர்களுடையவும் மாணுக்கர்களுடையவும் இடத்திலே சொல்லும் என்கை. (1)

---

1. உபாப்யாமேவ பக்ஷாப்யாம் ஆஸாசே பக்ஷிணுங்கதி:
   ததைவ ஜ்ஞாந கர்மப்யாம் ப்ராப்யதே புருஷோத்தம:
என்பது, பிரமாணம்.

2. திருவாய். 1. 4: 1.
3. திருவாய். 1. 4: 6.
4. திருவாய். 6. 1: 1.
5. திருவாய். 6. 1: 5.
6. திருவாய். 6. 8: 1.
7. திருவாய். 6. 8: 4.
8. திருவாய். 9. 7: 1.
9. திருவாய். 9, 7: 3.
10. திருவாய். 1. 4: 7.
11. திருவாய். 1. 4: 8.
12. திருவாய். 6. 8: 5.
13. திருவாய். 6. 8: 6.



## 151

> [1] விவேகமுகராய், நூலுரைத்து, அள்ளலில் ரதி இன்றி, அணங்கின் நடையைப் பின்சென்று, குடைநீழலிலே கவரி அசையச் சங்கமவை முரல வரிவண்டு இசைபாட மாநசபத்மாசனத்திலே யிருந்து, விதியினுல், இடரில், அந்தரமின்றி, இன்பம்பட, குடிச்சீர்மையிலேயாதல் பற்றற்ற பரமஹம்சராதல் ஆன நயாசலன், மெய்ந்நாவன், நாத யாமுநர் போல்வாரை அன்னம் என்னும்.

என்பது, சூத்திரம்.

வியாக் :—தூதாக விடுகிற பலவகைப்பட்ட பறவைகளுக்கும் உள்ளுறை அருளிச்செய்வதற்குத் திருவுள்ளம்பற்றி, அவற்றுள் அன்னமாகச் சொல்லப்பட்டவர்கள் இன்னுர்இன்னுர்போன்றவர்கள் என்று அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

அதாவது, விவேக முகராய்-[2] "அன்னம் நீரோடு கலந்த பாலில் நீரை நீக்கிப் பாலைமாத்திரம் பிரிப்பதுபோல்'' என்கிறபடியே அன்னமானது நீரையும் பாலையும் வெவ்வேருகப் பிரிப்பதுபோன்று, சாரத்தையும் அசாரத்தையும் பிரிப்பதில் முன்னேக்கமுள்ளவராய், நூல் உரைத்து - [3] "அன்னமதாய் இருந்து அங்கு அறநூல் உரைத்த'' என்கிறபடியே அன்னத்தின் உருவமாய் இருந்து சாஸ்திரங்களைக் கொடுத்தாற்போலே, கேட்பார்களை நோக்கிச் சாஸ்திரங்களை உபதேசித்து, அள்ளலில் ரதி இன்றி - [4] "அன்னம் சேற்றுநீரில் ஒருபோதும் ஆசைவைப்பது இல்லை'' என்கிறபடியே அன்னமானது சேற்றுநீரில்

---

1. விவேகமுகர் - பகுத்தறிவதில் நோக்குள்ளவர்கள். அள்ளல் - சேறு. ரதி - ஆசை. குடிச்சீர்மையிலேயாதலான நயாசலன் மெய்ந்நாவன் என்றும், பற்றற்ற பரமஹம்சராதலான நாத யாமுநர் என்றும் நிரல் நிறையாகக் கொள்க. நயாசலன் - செல்வநம்பி. மெய்ந்நாவன் - பெரியாழ்வார். நாதயாமுநர் - நாதமுனிகளும் ஸ்ரீ ஆளவந்தாரும். இவர்கள் இருவரும் துறவறத்தை மேற்கொண்டவர்கள்.

2. "ஹம்ஸோயதா க்ஷீரமிவாம்புமிஸ்ரம்''
என்பது, பிரமாணம்.

3. பெரியதிருமொழி, 11. 4: 8.

4. "நபத்நாதிரதிம்ஹம்ஸ: கதாசித்கர்த்தமாம்பஸி''
என்பது, பிரமாணம்.

பொருந்தாதவாறு போன்று, [1] "வன்சேற்றுஅள்ளல் பொய்ந்நிலத்து அழுந்தார்" என்கிறபடியே இவ்வுலக வாழ்க்கையாகிற சேற்றிலே பொருத்தமுடையரன்றிக்கே, அணங்கின் நடையைப் பின்சென்று - [2] "அன்னம் பெய்வளையார்தம் பின்சென்று" என்கிறபடியே அன்னமானது பெண்களின் நடை அழகினைக் கண்டு தானும் அப்படி நடப்பதற்காகப் பின்செல்லுமாறு போலே, [3] "அன்னநடைய அணங்கு" என்கிறபடியே அன்னத்தின் நடையையுடைய [4] பிராட்டியுடைய அநந்யார்ஹசேஷத்வம் முதலியவைகளும் புருஷகாரத்தன்மையும் ஆகிற நடையை மேற்கொண்டு,

குடைநிழலிலே கவரிஅசைய சங்கமவைமுரல வரிவண்டுஇசை பாட - [5] "அன்னமென்கமலத் தணிமலர்ப்பீடத்து அலைபுனல் இலைக் குடைநீழல்-வீற்றிருக்கும்" என்றும், [6] "செந்நெல் ஒண்கவரி அசைய வீற்றிருக்கும்" என்றும், [7] "சங்கமவை முரலச்செங்கமல மலரைஏறி" என்றும், [8] "வரிவண்டு இசைபாட அன்னம் பெடையோடுடன் நாடும்" என்றும் சொல்லுகிறபடியே மேலே எழுந்த தாமரையிலை குடையாகவும், காய்த்திருக்கின்ற செந்நெற்பயிர்களின் அசைவு கவரியாகவும், சங்குகளின் ஒலி வெற்றிமுழக்கமாகவும், வண்டுகளின் மிடற்றோசை பாட்டாகவும் பெற்று, மாநசபத்மாசனத்திலே இருந்து - [9] "மன்னுமுதுநீர் அரவிந்தமலர்மேல்" என்கிறபடியே மானசமடுவில் தோன்றிய தாமரையை ஆசனமாகக் கொண்டிருக்குமாறுபோலே, [10] "அக்கமலத்து இலைபோலும் திருமேனி அடிகள்" என்கிறபடியே தாமரைஇலை போன்று சாமளமான எம்பெருமானது திருமேனியைச் சம்சாரதுக்கத்தாலாய தாபம் வாராதபடி தங்களுக்கு ஒதுங்கநிழலாகவுடையராய், [11] "நான் இனியன்" என்னும்படி பரிபக்குவத்தையுடைய ஞானிகள் தொண்டுகளைச் செய்ய, [12] தூய்மைத் தன்மையையுடைய

1. *திருவிருத்தம்*, 100. 2. *பெரியதிருமொழி*, 6. 5: 5.
3. *பெரியதிருமடல்*, 7.
4. 122-ஆம் *சூத். குறிப்புரையைக் காண்க.*
5. *பெரியதிருமொழி*, 9. 1: 5. 6. *பெரியதிருமொழி*, 9. 1: 5.
7. *பெரியதிருமொழி*, 7. 8: 2. 8. *பெரியதிருமொழி*, 7. 5: 9.
9. *பெரியதிருமொழி.*
10. *இப்பொருள், 'குடைநீழலிலே' என்றதிலே நோக்கு. இது, திருவாய்.* 9. 7: 3.
11. *இப்பொருள் 'கவரியசைய' என்றதிலே நோக்கு. "அஹம் அந்நம்" இது தைத்திரீயம்.*
12. *இப்பொருள் 'சங்கமவைமுரல' என்றதிலே நோக்கு.*



வர் துதிக்க, [1] அசாரத்தை நீக்கிச் சாரத்தைமாத்திரம் எடுத்துரைக்கின்ற பெரியோர்கள் சாமகானம் செய்ய, [2] "ஆசாரியனுடையதிருவடித் தாமரைகளைத் தியானிக்கவேண்டும்" என்கிறபடியே ஆசாரியனுடைய திருவடிகள் இரண்டையும் எப்பொழுதும் மனத்திற்குள்ளே கொண்டிருக்கும் [3] சிஷ்யர்களுடைய, பிரமகுருவுக்கு இருப்பிடமான [4] "போதிற்கமல வன் நெஞ்சம்" என்கிற மனமாகிற தாமரையை வசிக்குமிடமாகவுடையராய்,

விதியினால் இடரில் அந்தரம் இன்றி இன்பம்பட- [5] "விதியினால் பெடை மணக்கும் மென்னடைய அன்னங்காள்" என்றும், [6] "இடரில் போகம் மூழ்கி இணைந்தாடும் மடவன்னங்காள்" என்றும், [7] "அந்தரம் ஒன்றும் இன்றி அலர்மேல் அசையும் அன்னங்காள்" என்றும், [24] "மிகஇன்பம் படமேவும் மென்னடைய அன்னங்காள்" என்றும் சொல்லுகிறபடியே [8] சாஸ்திரங்களிலே சொல்லி உள்ள முறையிலே, இவ்வுலக வாழ்க்கையில் உண்டாகும் துன்பங்கள் யாவும் தட்டாதபடியாகவும், ஒருவித தடங்கலும் வாராதபடியாகவும், மேன்மேலும் ஆனந்தம் பெருகும்படியாகவும், குடிச்சீர்மையிலேயாதல் - [9] "குடிச்சீர்மையில் அன்னங்கள்" என்கிறபடியே மனைவி மக்களோடே

1. *இப்பொருள், 'வரிவண்டிசைபாட' என்றதிலே நோக்கு.*
2. *இப்பொருள், 'மானஸபத்மாசனத்திலே இருந்து' என்றதிலே நோக்கு.*
"*குருபாதாம்புஜம் த்யாயேத்*"
*என்பது, பிரமாணம்.*
3. *சிஷ்யர்களுடைய மனம், பிரமகுருவுக்கு இருப்பிடமான மனம் என்று கூட்டுக.*
4. *பெரியாழ்வார் திருமொழி*, 5. 2: 8.
5. *திருவாய்.* 1. 4: 3. 6. *திருவாய்.* 6. 1: 4.
7. *திருவாய்.* 6. 8: 10. 8. *திருவாய்.* 9. 7: 10.
8. *இங்கு, 'விதியினால்' என்றும், 'இடரில்' என்றும், 'அந்தரம்' என்றும், 'மிகஇன்பம்' என்றும் தொடங்கி உவமைக்குக் கூறும் அடைமொழிகளால், முறையே சாஸ்திர முறைப்படி இல்லறத்தில் இருக்கும் தன்மையையும், சம்சாரசம்பந்தமானதாபம் ஒன்றும்தட்டாதபடி பகவானை அநுபவிக்கும் தன்மையையும், இடையூறு ஒன்றுமில்லாமல் இறைவனது திருவடித்தாமரைகளிலே பொருந்தியிருக்கும் தன்மையையும், சதாசார்யன் சந்நிதியில் சிறந்த அர்த்தவிசேடங்களைப் பெற்று ஆனந்திக்கும் தன்மையையும் உபமேயத்திற்கும் கொள்க. இதனையே 'சாஸ்திரங்களிலே' என்று தொடங்கிச் சுருக்கமாக அருளிச்செய்கிறார்.*
9. *திருவிருத்தம்*, 29. *இதனால் குலப்பெருமை கூறியவாறு.*

இருந்து பகவானை அநுபவித்துக் கொண்டிருக்கிற, நயாசலன் - [1]"நளிர்ந்த சீலன் நயாசலன்" என்று சொல்லப்பட்ட செல்வநம்பி, மெய்ந்நாவன் - [2]"மெய்ந்நாவன் மெய்யடியான் விட்டுசித்தன்" என்று சொல்லப்பட்ட பெரியாழ்வார்போல்வாரையும், பற்றற்ற பரமஹம்ஸராதல் ஆன - [3]"பற்றற்றார்கள்" என்றும், [4]"சிற்றெயிற்று முற்றல் மூங்கில் மூன்று தண்டர் ஒன்றினர், அற்ற பற்றர்" என்றும் சொல்லுகிறபடியே இவ்வுலக வாழ்க்கையாலாய பற்று முற்றும் அற்றுத் துறவிகளாய் [5]பரமஹம்ஸர் என்ற சொல்லுக்கு இலக்கியமாக உள்ள, நாதயாமுனர் போல்வாரை - நாதமுனிகள் ஸ்ரீ ஆளவந்தார் போல்வாரையும், அன்னம் என்னும் - மேலே கூறிப்போந்த குணஒப்புமையை இட்டு அன்னம் என்று சொல்லும் என்கை. (2)

## 152

[6]என்பெறுதி என்ன பிரமியாது, உள்ளத்துள் ஊறிய மதுவிரதமாய், தூமது வாய்கள் கொண்டு, குழல்வாய் வகுளத்தின் சாரம் கிரஹித்து, தேதென என்று ஆளம்வைத்து, சிறுகால் எல்லியம்போது குறிஞ்சி மருள் காமரம் கந்தாரம் தலைக்கொள்ளப் பாடி, துன்னிட்டு நெருக்க நீக்கு என்று கடந்து புகும் தகைவறப்புக்கு, வண்டொத்த இருண்ட குழலிலே சங்கைஅற மருவி, அருளாத யாம் என்று ஓடி வந்து வாசமேஊதி, வண்டே கரியாய தெய்வ வண்டோடே சேர்விக்கும் சேமமுடை நாரதன், முனிவாஹநர், தம்பிரான்மார் போல்வாரை வண்டு தும்பி என்னும்.

என்பது, சூத்திரம்.

**வியாக்:**—வண்டு, தும்பி என்ற சொற்களுக்கு உள்ளுறை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

1. பெரியாழ்வார்திரு. 4 4:8. 2. பெரியாழ்வார்திரு. 4.9:11.
3. பெருமாள்திரு. 1: 4. 4. திருச்சந்தவிருத். 52.

5. பரமஹம்சர் - சந்நியாசிகள் நால்வகையினரில் பரமஹம்சநிலையில் உள்ள துறவிகள். உலகநிலையில் ஈடுபடாது பகவத்தியானத்திலேயே இருப்பவர்கள்.

6. பிரமியாது, விரதமாய், கொண்டு, கிரஹித்து, ஆளம் வைத்து, பாடி, புக்கு, மருவி, ஊதி, சேர்விக்கும் நாரதன் முனிவாஹனர் தம்பிரான்மார் போல்வார் என எச்சங்களை முடிக்க. முனிவாஹனர் - திருப்பாணாழ்வார். தம்பிரான்மார் - அரையர்.



அதாவது, என்பெறுதி என்ன பிரமியாது - [1]"கோல்தும்பீ ஏரார்மலர் எல்லாம் ஊதி நீ என் பெறுதி" என்று மீட்கவேண்டும்படி தகாத பொருள்களை இனியபொருள்கள் என்று மயங்காதே, உள்ளத்துள் ஊறிய மதுவிரதமாய் - [2]"உளம் கனிந்திருக்கும் அடியவர் தங்கள் உள்ளத்துள் ஊறிய தேனை" என்கிறபடியே இறைவனாகிய தன்னுடைய அழகு சீலம் முதலியவைகளை நினைத்து உள்ளம் கனிந்திருக்கும் அடியார்களுடைய மனத்திலே 'ஊறியதேன்' என்கிற பகவானாகிற தேனை [3]விரும்பி, [4]"தேனையே உணவாகவுடைய வண்டு, தேன் நிறைந்த தாமரைமலர் இருந்துகொண்டிருக்க, அதனை விட்டு, அடைவதற்கே அரியதாய் அடைந்தாலும் நாவினை நனைப்பதற்கும் போராதே இருக்கிற தேனையுடைய முள்ளிப்பூவைக் கண்ணாலும் பாராததைப்போன்று, தேவரீருடைய தேனேமலரும் திருவடித்தாமரைகளினுடைய இனிமையில் மனம் அழுந்தின ஒருவன் மற்றொரு அற்ப இன்பத்தை விரும்பமாட்டான்" என்கிறபடியே மற்றொன்றனைப் புரிந்து பாராதே இத்தேனை உண்ணுதலையே விரதமாகவுடையராய், தூமது வாய்கள் கொண்டு - [5]"சூடிய தண் துளபம் உண்ட தூமது வாய்கள் கொண்டு" என்கிறபடியே பகவானாகிய இனிய பொருளை

1. பெரியதிருமொழி, 8. 4: 5. "என்பெறுதி" என்று சொல்லி மீட்கவேண்டும்படி, தகாத பொருள்களிலே செல்வது உண்டு வண்டுகளும் தும்பிகளும். அப்படி மீட்கவேண்டும்படியான தன்மை இவர்களுக்குக் கிடையாது. இது ஒன்றுமே வண்டுகளுக்கும் இவர்களுக்கும் வேறுபாடு. மற்றைய விஷயங்களில் எல்லாம் ஒப்புமை கூறப்படுகிறது மேல்.

2. வண்டுகட்கு 'மதுவிரதம்' என்று ஒருபெயர். தேனைத்தவிர மற்றொன்றனையும் உணவாகக் கொள்ளாதது என்பது பொருள். அது போன்ற தன்மையர் அடியார்களும் என்கிறார் 'உளம் கனிந்திருக்கும்' என்று தொடங்கி. இது, பெரியதிருமொழி, 4. 3: 9.

3. 'விரும்பி' என்னும் இவ்வெச்சத்தை, பின்னர் வருகின்ற 'மற்றொன்றனைப் புரிந்து பாராதே' என்றதனோடு முடிக்க.

4. தவாம்ருதஸ்யந்திநி பாதபங்கஜே
நிவேசிதாத்மா கதமந்யதிச்சதி
ஸ்திதேரவிந்தே மகரந்த நிர்ப்பரே
மதுவ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே.

என்பது, தோத்திரரத்நம், 27.

5. "வண்டினங்காள்! தண்துளபம் உண்ட தூ மது வாய்கள்கொண்டு என்குழல்மேல் ஒளிமாமலர் ஊதீரோ" என்பதற்கு, நாட்கமழ் மகிழ்மாலை மார்பராகையாலே வகுளாபரணரான ஆழ்வாருடைய "வைகுந்தமன்னாள் குழல்வாய் விரைபோல் விண்டுகள்வாரும் மலருளவோ நும் வியலிடத்தே" என்று பரத்துவம் முதலிய நிலைகளில் இனிமையும் குறைந்தது என்னும் படியான திருக்குழலில் வைத்த மாமலரான வகுளமலரின் சாரத்தை நுகர்ந்து அவ்வழியாலே ஆழ்வாருடைய இனிமையை அநுபவிப்பவர் என்பது கருத்து.

அநுபவிக்கும் அநுபவத்தாலே பரிசுத்தமாய் இனிதான வாயிலைக் கொண்டு, குழல்வாய் வகுளத்தின் சாரம் கிரஹித்து - [1] "என்குழல் மேல் ஒளி மாமலர் ஊதீரோ" என்கிறபடியே [2] "நாட்கமழ் மகிழ்மாலை மார்ப" ராகையாலே வகுளமாலையைத் தரித்த ஆழ்வாருடைய [3] "வைகுந்தமன்னாள் குழல்வாய் விரைபோல், விண்டு கள் வாரும் மலர்உளவோ நும் வியலிடத்தே" என்கிறபடியே பரத்துவம் முதலான வற்றின் இனிமையும் அளவிற்குட்பட்டது என்னும்படியான திருக் குழலில் வைத்த ஒளிமாமலரான வகுளத்தின் சாரத்தை எடுத்து அவ் வழியாலே இத்தலையில் இனிமையை அநுபவித்து,

[4] தேதென என்று ஆளம் வைத்து - [5] "வரிவண்டு தேதென என்றிசைபாடும்", [6] "யாழினிசை வண்டினங்கள் ஆளம் வைக்கும்" என்கிறபடியே இப்படிப் பகவானுடையவும் பாகவதர்களுடையவும் இனிமைகளை அநுபவித்த செருக்குக்குப் போக்குவீடாக ஆளத்தி வைத்து, [7] சிறுகால் எல்லியம்போது குறிஞ்சி மருள் காமரம் கந்தாரம் தலைக்கொள்ளப் பாடி - [8] "அறுகால் வரி வண்டுகள் ஆயிரநாமம் சொல்லிச் சிறுகாலைப் பாடும்" என்றும், [9] "எல்லியம்போது இரும் சிறைவண்டு எம்பெருமான் குணம்பாடி" என்றும், [10] "வண்டு குறிஞ்சி மருள் இசை பாடும்" என்றும், [11] "வண்டினங்கள் காமரங் கள் இசைபாடும்" என்றும், [12] "கந்தாரம் அம்தேன் இசைபாட" என்றும், வருகின்றவாறே காலங்கட்குத் தகுதியான பண்களை [13] "பண்கள் தலைகொள்ளப் பாடி" என்கிறபடியே தலைமைபெறும்படி பாடி,

1. திருவாய். 6. 8: 3: 2. திருவாய். 4. 10: 11.

3. திருவிருத்தம், 55.

4. இதனால் யாழினிசை வேதத்தியல்களை வாயாரப் பாடிக்கொண் டிருக்கும்படியைச் சொன்னவாறு.

5. பெரியதிருமொழி, 4. 1: 1. 6. பெரியாழ்வார் திரு. 4. 8: 6.

7. இதனால், "எம்மானை சொல்லிப்பாடி" என்றும், "பண்கள் தலைக் கொள்ளப் பாடி" என்றும், "வேதமுதல்வனைப்பாடி" என்றும் சொல்லுகிறபடியே அவர்கள் பாடிக்கொண்டிருத்தலைக் குறித்தபடி.

8. பெரியாழ்வார்திரு. 4.2:8. 9. பெரியாழ்வார்திரு. 4.8:8.

10. பெரியதிரு. 2. 1: 2. 11. பெருமாள்திரு. 8: 4.

12. பெரியதிரு. 3. 8: 1. 13. திருவாய். 3. 5: 2.



[1] "துன்னிட்டு நெருக்க - [2] "பின்னிட்ட சடையானும் பிரமனும் இந்திரனும், துன்னிட்டுப் புகல் அரிய வைகுந்த நீள்வாசல்" என்றும், [3] "சுந்தரர் நெருக்க" என்றும் சொல்லுகிறபடியே திருவாசல்களிலே சேவிக்கவந்தவர்கள் நிறைந்து தலைபுக ஒண்ணாதபடி நெருக்க, நீக்கு என்று - [4] "நேய நிலைக்கதவம் நீக்கு" என்கிறபடியே திருவாசல் காப் பானைத் திருக்கதவு திறக்கவேண்டும் என்று விரும்பிக் கேட்டு, புகும் தகைவு அறப் புக்கு - [5] "பொன்னியலும் மாடம் கவாடம் கடந்துபுக்கு" என்கிறபடியே கண்களையும் மனத்தையும் கவர்கின்ற திருவாசலில் அழகில் துவக்குண்ணாதே அதனைக் கடந்து, புகவேண்டுகையாகிற தகைவுஅற, பாடுவாராக இருக்கின்ற அந்தரங்கத் தன்மையாலும் ஒன்றிலேயே நோக்குடைய மனத்தினையுடைமையாலும் போய்ப்புக்கு, வண்டு ஒத்து இருண்ட குழலிலே சங்கைஅற மருவி - [6] "வண்டு ஒத்து இருண்ட குழல்" என்கிறபடியே தனக்கு ஒத்த விஷயமுள்ள விடத்திலே சேர்ந்து, [7] "நீ மருவி அஞ்சாதே நின்று" என்கிறபடியே அச்சம் இல்லாமல் அவனுடைய அண்மையில் இருப்பவர்களாய்,

அருளாத யாம் என்று - [8] "அருளாத நீர் அருளி அவர்ஆவி துவராமுன்" என்றும், [9] "யாம்இதுவோ தக்கவாறு" என்றும் வரு கின்றவாறே இத்தலையில் துன்பத்தை அவனுக்கு அறிவித்து, ஓடி வந்து - [10] "ஓடிவந்து என்குழல்மேல் ஒளிமாமலர் ஊதீரோ" என்கிற படியே அவனோடே கூடி வர இராதே, முந்துறவே ஓடிவரவேண்டும் என்று விரும்பிவிட்டபடியே, இத்தலையில் துன்பத்துக்குத் தகுதியாக, அவன் வரவினை அறிவிக்க விரைந்து வந்து, தங்கள் வரவாலே இத் தலையில் பிறந்த செவ்வியை அநுபவித்து, வாசமே ஊதி - [11] "பூந் துளவின் வாசமே வண்டு கொண்டு வந்து ஊதுமாகில்" என்கிறபடியே

1. இதனால், வண்டுகள், மிக நெருக்கமாக உள்ள இடங்களிலும் தடைஇன்றிச் செல்லும்; தன்னினமான பொருள்களோடே நட்புக்கொள் ளும்; இறைவன் சந்நிதியிலே அச்சம் சிறிதும்இன்றி நிற்கும். அவ்வாறே, இவர்களும் எந்த நிலையிலும் நேசநிலைக்கதவம் நீக்கு என்று சொல்லி, பொன்னியலும் மாடக்கவாடம் கடந்துபுக்கு, அங்குள்ள ஸ்ரீ வைஷ்ணவர்க ளோடே சேர்ந்து, அஞ்சவேண்டிய அபராதம் ஒன்றும் இல்லாதவர்க ளாகையாலே சங்கை இன்றியே, ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி நிற்பர்கள் என்பதனைத் தெரிவித்தபடி.

2. பெருமாள்திரு. 4: 3. 3. திருப்பள்ளிஎழுச்சி, 7.

4. திருப்பாவை, 16. 5. பெரியதிருமடல், 73.

6. பெரியாழ்வார்திரு. 2. 5: 7. 7. திருநெடுந்தாண்டகம், 26.

8. திருவாய். 1. 4: 6. 9. திருவாய். 6. 8: 4.

10. திருவாய். 6. 8: 3. 11. பெரியதிரு. 11. 1: 9.

அத்தலையில் தாங்கள் அநுபவித்த இனிமையை தங்கள் வரவாலே இத்தலைக்கு விளக்கிக்கொண்டு தரிக்கச்செய்து,

வண்டே கரியான தெய்வ வண்டோடே சேர்விக்கும் - [1] "கொங்குண் வண்டே கரியாக வந்தான்" என்கிறபடியே சாகைகளின் மேலே உள்ள சாரத்தைக் கிரகிக்குமவர்களாய் ஆறுபதநிஷ்டர்களாய் இரண்டு சிறகுகளோடு கூடியிருப்பதனாலே தடையின்றி எங்கும் செல்லக்கூடியவர்களை முன்னிட்டு அங்கீகரிக்குமவனாய் [2] "தூவியம்புள்ளுடை தெய்வவண்டு"என்கிறபடியே வேதாந்தங்களாலே அறியப்படுமவன் என்று தோற்றும்படி கருடவாகனனாய் சாரத்தையே எடுக்கின்ற சர்வேச்வரனோடே சேர்விக்கும், சேமமுடைநாரதன் - [3] "சேமமுடை நாரதன்" என்கிறபடியே பிரஹ்ம பாவனையாகிற சேமத்தையுடையனாய்ப் பகவானுடைய குணங்களை அநுபவித்தலால் உளதாய பேர் ஆனந்தத்தையுடையனாய் அந்த ஆனந்தத்தின் மிகுதியால் நடனம் ஆடிக்கொண்டேயும் பாக்களைப் பாடிக்கொண்டேயுமிருக்கும் ஸ்ரீநாரத மாமுனிவன், முனிவாகநர் - உலோகசாரங்கமஹாமுனிகளாலே தாங்கப்படுகையாலே முநிவாகநர் என்று கூறப்படுகின்ற திருப்பாணாழ்வார், தம்பிரான்மார் - திருவாய்மொழி இசையினையே தங்களுக்கு இனிய பொருளாகக் கொண்டிருக்கின்ற தம்பிரான்மார், (அரையர்). போல்வாரை - போன்றவர்களை, வண்டு தும்பி என்னும் - மேலே கூறிய குணங்களின் ஒப்புமையாலே வண்டு என்றும் தும்பி என்றும் சொல்லும்.

[4] தும்பி என்பது, வண்டு இனங்களில் ஒரு சாதிவிசேடம். ஆகையால் அன்றோ, [5] "வண்டினங்காள் தும்பிகாள்" என்று இரண்டனையும் பிரித்து ஓரிடத்திலே அருளிச்செய்தது. (3)

---

1. "கொங்குண் வண்டே" என்ற திருப்பாசுரத்தில் வண்டே கரியாக இறைவன் வந்தான் என்று சொல்லப்படுகிறது. இதனால், சாரத்தையே தேர்ந்தெடுக்குமவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களை முன்னிட்டு இறைவன் இவ்வுயிர்களை அங்கீகரிக்கிறான் என்பது போதரும் பொருளாதலால் புருஷகாரத்தன்மை சொன்னபடி. 'கொங்குண்' என்பது பெரியதிருமொழி, 9. 3: 4. சாகைகள் - வேதசாகைகள். ஆறுபத நிஷ்டர் - துவயநிஷ்டர், துவயம் ஆறுபதங்களோடு கூடியது. ஆறு கால்களையுடையவை வண்டுகள். இரண்டுசிறகு - ஞான அநுட்டானங்கள்.

2. திருவாய். 9. 9: 4. 3. பெரியாழ்வார்திரு. 4. 9: 5.

4. "நண்டும் தும்பியும் நான்கறிவினவே, பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே" என்பது, தொல். பொருள். மரபு. 31. 'இவற்றுக்குக் கிளை என்பன வண்டும் தேனீயும் குழவியும் போல்வன' என்பர் பேராசிரியர்.

5. திருவாய். 9. 7: 8.



## 153

கண்வலைப்படாதே அகவலைப்பட்டு, வளர்த்தெடுப்பார் கையிருந்து, தயிர் நெய்யமர் பால்அமுது உண்டு, ஒருமிடறாய், போற்றி ஒருவண்ணம் திருந்த நுவலாததுக்கு என்பிழைக்கும் நீ அலையே நல்வளம் துரப்பன் என்னுமவற்றுக்கு முகந்து, சொல்லெடுத்துச் சோர்ந்தவாறே கற்பியாவைத்த மாற்றம் கை கூப்பி வணங்கப் பாடி, ஆலியா அழையா, பராபிமானத்திலே ஒதுங்கின நம்பிக்கு அன்பர், தலைமீதடிப் பொடி, உடையவருடையார் போல்வாரைக் கிளி பூவை குயில் மயில் என்னும்.

என்பது, சூத்திரம்.

வியாக்:—கிளி பூவை முதலானவற்றிற்கு உள்ளுறைப்பொருள் அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, [1] கண்வலைப்படாதே அகவலைப்பட்டு - [2] "மாதரார் கயற்கண் என்னும் வலையுள்பட்டு" என்கிறபடியே பெண்களுடைய கண்களாகிற வலையிலே அகப்பட்டுக் கேட்டினை அடையாமல், [3] "தாமரைத் தடம்கண் விழிகளின், அகவலைப் படுப்பான்" என்கிறபடியே தப்பாமல் அகப்படுத்திக்கொள்ளும் சர்வேச்வரனுடைய தாமரை போன்ற திருக்கண்களின் நோக்கமாகிற வலைக்குள்ளே அகப்பட்டு, [4] வளர்த்து எடுப்பார் கை இருந்து - [5] "வளர்த்ததனால் பயன் பெற்றேன்" என்றும், [6] "எடுத்த என்கோலக் கிளியை" என்றும், [7] "மங்கைமார் முன்பு என்கையிருந்து" என்றும் சொல்லுகிறபடியே சொரூபத்தை வளர்ப்பவர்களாய்க் கொண்டாடி நோக்கிக்கொண்டு

---

1. கிளி வலையில் அகப்படுமாறு போன்று, இவர்கள் இறைவனுடைய திருக்கண்நோக்கமாகிற வலையில் அகப்படுமவர்கள் என்பது தெரிவிக்கப்படுகின்றது இதனால்.

2. திருமாலை, 16. 3. திருவாய். 6. 2: 9.

4. கிளி தன்னை வளர்க்கின்றவர்களுடைய கையிலே இருப்பது போன்று, இவர்களும் தமக்கு ஞானவளமூட்டிவளர்க்கின்ற ஆசாரியர்களுடைய அதீனத்தில் இருப்பவர்கள் என்பதனை இதனால் தெரிவித்தபடி.

5. திருநெடுந்தாண்டகம், 14, 6. நாய்ச்சியார் திரு. 5: 5.

7. திருவாய். 6. 8: 2.

இட்டமாக வளர்த்தெடுத்துப் போருமவர்கள் கைவசமாய், [1] தயிர் நெய் அமர்பால் அமுது உண்டு - [2] "தயிர்ப்பழஞ் சோற்றொடு பாலடிசிலும் தந்து" என்றும், [3] "நெய்யமர் இன்னடிசில் நிச்சல் பாலொடு மேவீரோ" என்றும், [4] "இன்னடிசிலொடு பாலமுதூட்டி" என்றும் சொல்லுகிறபடியே, அவர்கள் காலங்கட்குத் தகுதியாகவும் பக்குவங்கட்குத் தகுதியாகவும் [5] "ஞானிகள் உனக்கு ஆன்மவிஷயமான ஞானத்தை உபதேசம் செய்வார்கள்" என்கிறபடியே உபதேச மூலமாகத் தாரக போக்யங்களான பகவானுடைய் குணங்கள் முதலானவற்றை அநுபவிப்பிக்க அநுபவித்து, ஒருமிடறாய் - [6] ஆசார்யர்களோடு ஒருமிடறாய்,

[7] போற்றி ஒருவண்ணம் திருந்த (என்னுமதற்கும்) - [8] "போற்றி யான் இரந்தேன் புன்னைமேலுறை பூங்குயில்காள்" என்றும், [9] "ஒருவண்ணம் சென்றுபுக்கு எனக்கு ஒன்று உரை ஒண்கிளியே" என்றும், [10] "திருந்தக் கண்டு எனக்கு ஒன்று உரையாய் ஒண்சிறு பூவாய்" என்றும் தலைவனோடு சேர்க்கவேண்டும் என்றுகூறி ஆதரித்த நிலையிலும், நுவலாததுக்கு என் பிழைக்கும் நீ அலையே நல்வளம் (என்னுமதற்கும்) - [11] "நோயெனது நுவல்" என்று விரைவில் சென்று என்

1. மங்கைமார் உண்பிக்கக் கிளி உண்ணுமாறுபோன்று, இவர்களும் பகவத் விஷயத்தை ஆசாரியன் அநுபவிப்பிக்க அநுபவிப்பவர்கள் என்பதனை இதனால் தெரிவித்தவாறு.

2. திருவாய். 9. 5: 8. 3. திருவாய். 6. 8: 2.

4. நாய்ச்சியார் திரு. 5: 5.

5. "உபதேக்ஷ்யந்திதே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ் தத்வதர்ஶிந:" என்பது, ஸ்ரீகீதை, 4: 34.

6. கிளி கற்பித்ததனையே சொல்லுமாறு போன்று, இவர்களும் முன்னோர் மொழிந்த முறைதப்பாமல் கேட்டுப்பின்னோர்ந்து தாமதனையே பேசுமவர்கள் என்பதனை இதனால் தெரிவித்தபடி.

7. 'போற்றி ஒரு வண்ணம் திருந்த நுவலாததுக்கு என்பிழைக்கும் நீயலையே நல்வளம் தூரப்பன் என்னுமவற்றுக்கும் உகந்து' என்னும் வாக்கியத்தால், ஆசாரியனுடைய நிக்கிரஹத்தோடு அநுக்கிரஹத்தோடு வாசியற எல்லாம் நமக்கு நன்மையே என்று கொண்டு உகந்திருக்குமவர்கள் என்பதனைத் தெரிவித்தபடி. போற்றி ஒரு வண்ணம் திருந்த என்னுமதுக்கும், நுவலாததுக்கு என் பிழைக்கும் நீயலையே நல்வளம் என்னுமதுக்கும், தூரப்பன் என்னுமதுக்கும் உகந்து என்று மூன்று வாக்கியங்களாக இதனைப் பிரித்துக்கொள்க.

8. திருவாய். 6. 1: 6. 9. திருவாய். 6. 1: 7.

10. திருவாய். 6. 1: 8. 11. திருவாய். 1. 4: 8.



துன்பத்தை அவனுக்கு அறிவி என்னச்செய்தே செய்யாததற்கு [1] "என் பிழைக்கும் இளங்கிளியே யான் வளர்த்த நீயலையே", [2] "நீஅலையே சிறுபூவாய் நுவலாதேயிருந்தொழிந்தாய்" என்றும், அவன் நினைவினை ஊட்டுகின்ற பொருள்கள் துன்புறுத்துகிறவளவிலே அருகே இருந்து திருநாமத்தைச் சொன்னதைப் பொறாமல், [3] "சொல், பயிற்றிய நல்வளம் ஊட்டினீர் பண்புடையீரே" என்றும் இன்னாதான நிலையிலும், தூரப்பன் என்னுமதற்கும் - [4] "இன்று நாராயணனை வரக்கூவாயேல் இங்குத்து நின்றும் துரப்பன்" என்று அநாதரவு செய்யும் நிலையிலும், உகந்து-மேலேகூறிய மூன்று நிலைகளிலும் கூறிய இன்சொற்களும் கடுஞ்சொற்களுமாகியவற்றுக்கு "தக்காருடைய வெறுப்பு விருப்புகள் ஆகிய இரண்டும் அவர்கள் ஆட்கொள்ளுதலின் வகையாம்" என்னும் நினைவாலே உகந்து,

[5] சொல்லெடுத்துச் சோர்ந்தவாறே கற்பியாவைத்த மாற்றம் கைகூப்பி வணங்கப் பாடி - சொல்லெடுத்துச் சோர்ந்தவாறே - [6] "சொல்லெடுத்துத் தன் கிளியைச் சொல்லே என்று துணைமுலைமேல் துளிசோரச் சோர்கின்றாளே" என்கிறபடியே திருப்பெயரைச் சொல்லத் தொடங்கி ஒருசொல் சொல்லும்போது பலக்குறைவாலே மலை எடுக்குமாறு போலேயாய் அதுவும் மாட்டாதே தன்நிலைஇழந்த சரீரத்தையுடையவளானவாறே, கற்பியாவைத்த மாற்றம் - [7] "கன்மின்கள் என்று உம்மை யான் கற்பியாவைத்த மாற்றம்" என்கிறபடியே முன்பே கற்பித்துவைத்த சொல்லான திருப்பெயரைச் சொல் என்ன, கைகூப்பி வணங்கப் பாடி - [8] "திருமாலைப் பாடக் கேட்டு வளர்த்ததனால் பயன் பெற்றேன் வருக என்று மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாளே" என்கிறபடியே கற்பித்தவர்கள் தாங்கள் செய்ந்நன்றி பாராட்டி வணங்கி ஒழுகும்படி பிரீதியினாலே தூண்டப்பட்டவர்களாய்ச் சொல்லி,

1. திருவாய். 1. 4: 7. 2. திருவாய். 1. 4: 8.

3. திருவாய். 9. 5: 8. 4. நாய்ச்சியார் திரு. 5: 10.

5. "சொல்லெடுத்துச் சோர்ந்தவாறே கற்பியா வைத்த மாற்றம் கைகூப்பி வணங்கப் பாடி" என்னும் இவ்வாக்கியத்தால் சீடர்கள், ஆசாரியர்களும் கைகூப்பி வணங்கும்படி பாடுமவர்கள் என்பதனைத் தெரிவித்தபடி.

6. திருநெடுந்தாண்டகம், 13. 7. திருவாய். 6. 8: 6.

8. திருநெடுந்தாண்டகம், 14.

[1] ஆலியா அழையா - [2] "ஆலியா அழையா அரங்கா என்று" என்கிறபடியே ஆனந்தத்தோடே திருப்பெயரைக் கொண்டு போது போக்குமவர்களாய், [3] பராபிமானத்திலே ஒதுங்கின - [4] "தேவுமற்று அறியேன்" என்கிறபடியே ஆசார்ய அபிமானமாதல் பாகவத அபிமானமாதல்ஆகிற பிறருடைய அபிமானத்திலே ஒதுங்கினவர்களான,

நம்பிக்கு அன்பர் - [5] "தென்குருகூர்நகர் நம்பிக்கு அன்பன்" என்கிறபடியே ஆசாரியரான ஆழ்வார் விஷயத்தில் அன்பே அறிகுறியாம்படியிருக்கும் ஸ்ரீ மதுரகவிகள், தலைமீது அடிப்பொடி - [6] "நாவலிட்டு உழிதருகின்றோம் நமன்தமர் தலைகள்மீதே" என்கிறபடியே திருப்பெயரை அண்டைகொண்ட பலத்தாலே யமன் முதலாயினோர் தலைகளிலே அடியிடும்படி செருக்கினையுடையராய்ப் பாகவதர்களுக்குப் பாததூளிபோலே பரதந்திரராய் இதுவே அறிகுறியான தொண்டரடிப்பொடியாழ்வார், உடையவர் உடையார் - 'இராமாநுசனுடையார்' என்றே நிரூபகமாம்படி உடையவர்க்குப் பரதந்திரர்களான **ஆழ்வான், ஆண்டான், எம்பார், அருளாளப்பெருமாள்எம்பெருமானார்** முதலாயினோர்கள், போல்வாரை - போன்றவர்களை, கிளி பூவை குயில் மயில் என்னும் - குண ஒப்புமை காரணமாகக் கிளி என்றும், பூவை என்றும், குயில் என்றும், மயில் என்றும் சொல்லும் என்றபடி.

பூவை - நாகணவாய்ப்புள். மயிலைத் தூதுவிட்டமை இன்றிக்கே இருக்க, அதனையும் ஒருசேரச் சொன்னது, [7] "யான்வளர்த்த கிளிகாள்! பூவைகள்காள்! குயில்காள்! மயில்காள்!" என்று வேறோரிடத்திலே அருளிச்செய்கையாலே அதற்கும் இதுவே உள்ளுறைப்பொருள் என்று அறிவிக்கைக்காக. (4)

1. மயில்கள் மேகத்தைக் கண்டவாறே தோகையை விரித்துக் கொண்டு ஆனந்தமாக விளையாடும்; அதுபோன்று இவர்களும் கார்முகில் போல் வண்ணன் கண்ணன் எம்மானைக் கண்டு கூத்தாடுமவர்கள் என்பதனைத் தெரிவித்தபடி.

2. பெருமாள் திரு. 3: 2.

3. குயில்களுக்கு, பரப்ருதம் என்று வடமொழியில் ஒரு பெயர் உண்டு. பிறரால் வளர்க்கப்படுவது என்று பொருள். அதுபோன்று, ஆசாரியர்கள் பாகவதர்கள் என்னும் இவர்களுடைய அபிமானத்திலே ஒதுங்கி, அவர்களால் வளர்க்கப்படுமவர்கள் இவர்கள் என்பதனைத் தெரிவித்தவாறு.

4. கண்ணிநுண் சிறுத்தாம்பு, 2.

5. கண்ணிநுண் சிறுத்தாம்பு, 11.

6. திருமாலை, 1. 7. திருவாய். 8, 2: 8.



## 154

ஆசறு தூவி என்னும் பாஹ்யாப்யந்தர சுத்தியோடே, திரையுகளும் வியசந வியதை யற்று, தாய் வாயில் உண்ணும் பிள்ளைக்கு இரைதேடி, வைகல் உடன் மேய்ந்து, நுங்கால் பைங்கானம் என்று ப்ரஹ்மரதம்பண்ணிக் கொடுத்தவைகொண்டு, நல்ல பதத்தையும் வேண்டேன் என்னும் தனிப்பெரும் பித்தர், நம்முதலிகள் போல்வாரை நாரை கொக்கு குருகு என்னும்.

என்பது, சூத்திரம்.

வியாக் :— நாரை கொக்கு குருகு என்பனவற்றிற்கு உள்ளுறைப்பொருள் அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, [1] ஆசு அறு தூவி என்னும் பாஹ்ய அப்யந்தர சுத்தியோடே - [2] "ஆசறு தூவி வெள்ளைக்குருகே" என்கிறபடியே பழிப்பு அற்ற சிறகினையுடைத்தாய் உள்ளும் புறம்பும் ஒக்கக் குற்றம் அற்றிருக்கின்ற குருகே! என்றதனால் சொல்லப்பட்ட [3] "எவன் செந்தாமரைக் கண்ணனை எம்பெருமானைத் தியானம் செய்கிறானோ அவன் உள்ளும் புறம்பும் தூயன்" என்கிறபடியே உள்ளும் புறம்பும் தூய்மையோடு கூடி, [4] திரை உகளும் வியசந வியதை அற்று - [5] "வாயும் திரையுகளும் கானல் மடநாராய்" என்கிறபடியே உணவாகிற மீன்களைக் கவரவேண்டும் என்னும் ஒரே எண்ணத்தாலே நாரையானது திரைகள் வந்து கிட்டி மேலே தாவிப்போகாநிற்கிற கானலிலே சலி

1. குற்றமற்ற சிறகினையுடையதாய் உள்ளும் புறமும் வெண்மையாக இருக்கின்ற குருகே! என்றதனால் சொல்லப்பட்ட பொருள், தூய்மை வாய்ந்த மன மொழி மெய்களையுடையவர்கள் இவர்கள் என்பது. பாஹ்யாப்யந்தரம் - மெய்யும் மனமும்.

2. திருவாய். 6. 8: 8.

3. "ய:ஸ்மரேத் புண்டரீகாக்ஷம் ஸ பாஹ்யாப்யந்தரஶ்ஶுசி:" என்பது, பிரமாணம்.

4. 'திரையுகளும்' என்று தொடங்கும் வாக்கியத்தால், இறைவன் பக்கல் மனத்தை ஊன்றவைத்து நிற்பதனால், இவ்வுலக வாழ்க்கையால் உண்டாகின்ற மூவகைத் துன்பங்கள் மேன்மேலும் வந்து தாக்கினாலும் அவற்றிற்கு வருந்தாதே இருக்குமவர்கள் என்பதனைத் தெரிவித்தவாறு.

5. திருவாய். 2. 1: 1.

யாமல் இருக்குமாறு போலே, [1] "பகவானை மனத்திலுடையவர்கள் துக்கங்களாலே மூடப்பட்டவர்களாக இருந்தாலும் எப்படி வருந்த மாட்டார்களோ அப்படியே மலைகள் மழையின் தாரைகளாலே நன்ருக அடிபட்டும் சலிக்கின்றன இல்லை" என்கிறபடியே பகவானிடத்தி லேயே வைத்த மனத்தினையுடைமையாலே இவ்வுலக வாழ்க்கை யாகிற கடலின் தரங்கங்களான [2] மூவகைத் துன்பங்கள் மேலும் மேலும் வந்து மேலிடாநின்ருலும் அதற்கு இடையாதே,

[3] தாய் வாயில் உண்ணும் பிள்ளைக்கு இரைதேடி - [4] "தாய் வாயில், கொக்கின் பிள்ளை வெள்ளிற உண்ணும்" என்றும், [5] "பழனக் கழனியதனுள்போய்ப் புள்ளுப் பிள்ளைக்கு இரைதேடும்" என்றும் சொல்லுகிறபடியே கொக்கானது தன் வாயாலே எடுத்துக்கொடுக்க வாழ்ந்திருக்கும் தன் பிள்ளைக்கு வாய்க்கு அடங்கும் இரைதேடி இடு மாறுபோலே, தங்கள் வாக்காலே கொடுக்கும் பகவத்விஷயத்தைப் பற்றி வாழ்ந்திருக்கும் குழைச்சரக்கான சிஷ்யர்களுக்கு அறிவு முதிர்ச்சிக்குத் தகுதியாகப் பொறுக்கக்கூடிய இறைவன் விஷயமான அர்த்தங்களைச் சாஸ்திரங்களிலே ஆராய்ந்து உதவிசெய்து,

வைகல் உடன்மேய்ந்து - [6] "வைகல் பூங்கழிவாய் வந்து மேயும் குருகினங்காள்" என்றும், [7] "காதல் மென்படையோடு உடன்மேயும் கருநாராய்" [8] என்றும் சொல்லுகிறபடியே எல்லாக் காலங்களிலும் இன்பம் நுகரும் இடங்களுக்குத் தாங்களே சென்று தங்களைப் பிரியில்

---

1. *கிரயோவர்ஷ தாராபிர் ஹந்யமாநா ந வ்யது:*
   *அபிபூயமாநா வ்யஸநை: யதாதோக்ஷஜசேதஸ:*

*என்பது, ஸ்ரீபாதவதம், 10. 20: 15.*

2. *மூவகைத் துன்பங்கள் - தன்னுல் வருவனவும், பிறஉயிர்களால் வருவனவும், தெய்வத்தால் வருவனவும் ஆம்.*

3. *ஆசாரியர்கள், தங்கள் வாக்கால் உபகரிக்கும் பகவத்விஷயத்தை நம்பி வாழ்ந்திருக்கும் சிஷ்யர்களுக்கு, அவர்களுடைய அறிவிற்குத் தகுதி யாகப் பொருந்தக்கூடிய அர்த்த விசேடங்களைச் சாஸ்திரங்களிலே ஆராய்ந்து உதவும் தன்மையைத் தெரிவித்தவாறு இவ்வாக்கியத்தால்.*

4. *பெரிய திருமொழி*, 9. 6: 1. 5. *பெரியதிரு*. 5. 1: 2.

6. *திருவாய்*. 6. 1: 1. 7. *திருவாய்*. 6. 1: 2.

*மேலே காட்டப்பட்ட இரண்டு திருப்பாசுரங்களின் கருத்து, பேடைக ளுடனே இனிய நீர் நிலங்களில் தங்கியிருக்கும் நாரைகள் என்பது. இதனுல் கூறப்படும் மேம்பொருளை வியாக்கியானத்தில் காண்க.*



தரியாத அன்புடைய சிஷ்யர்களுடனேகூடப் பகவானுடைய குணங் களை அநுபவம்பண்ணி, நுங்கால் பைங்கானம் என்று பிரஹ்மரதம் பண்ணிக் கொடுத்தவை கொண்டு - [1] "நுங்கால்கள் என் தலைமேல் கெழுமீரோ நுமரோடே" என்றும், [2] "பைங்கானம் ஈதெல்லாம் உனதேயாகப் பழனமீன் கவர்ந்து உண்ணத் தருவன்" என்றும் சொல்லுகிறபடியே தங்கள்பக்கல் உபகாரம் கொண்டு வாழ்கின்ற சிஷ்யர்கள் செய்ந்நன்றியறிவாலே தலைமேல் தாங்குதலாகிற பிரஹ்ம ரதம்பண்ணி, [3] "தன் சரீரத்தையும் பொருளையும் உயிரையும் ஆசாரி யனுக்குக் கொடுக்கவேண்டும்" என்கிற முறையிலே அன்போடு கொடுத்தவற்றை அங்கீகரித்து,

நல்ல பதத்தையும் வேண்டேன் என்னும் தனிப்பெரும்பித்தர் - [4] நல்ல பதத்தால் மனைவாழ்வர்" என்கிறபடியே பாகவதகைங்கர்யத் துக்கு உறுப்பான இல்லறத்தையும், இவ்வுலக வாழ்க்கையின் துன் பத்தாலுண்டாகும் அச்சத்தாலே [5] "இன்பமரும் செல்வமும் இவ்வர சும் யான் வேண்டேன்" என்று வெறுக்குமவர்களாயுள்ள [6] "அங்கை யாழி அரங்கன்அடிஇணை, தங்கு சிந்தைத் தனிப்பெரும்பித்த"ரான ஸ்ரீகுலசேகரப்பெருமாள், நம்முதலிகள் போல்வாரை - ஆசார்யபதத் தில் நின்றவர்களான நம்முதலிகள் போல்வாரை, நாரை கொக்கு குருகு என்னும் - குண ஒப்புமையாலே நாரை என்றும் கொக்கு என் றும் குருகு என்றும் சொல்லும் என்கை.

[7] "நன்னீலமகன்றில்காள்" என்று மகன்றிலையும் தூதுவிட்டிருக் கச் செய்தே அதற்கு உள்ளுறைப்பொருள் அருளிச்செய்யாதொழிந் தது, அதற்கு இப்படிப் பரக்கச்சொல்லத்தக்கதில்லாமையாலும்,

---

1. *திருவாய்*. 9. 7: 1. 2. *திருநெடுந்தாண்டகம்*, 27.

*தமரோடு கூடின நாரையின் கால்களைத் தம் தலைமேலே வைக்கும் படி சொல்லுகிற இதனுல், தங்களிடத்தில் அர்த்த விசேடங்களைக் கேட்டு வாழ்ந்துபோந்த சிஷ்யர்கள் செய்ந்நன்றியறிவினுல் சிரசாவகிக்கையாகிற பிரஹ்மரதம் பண்ணிக்கொடுத்தல் கூறப்படுகிறது. "செங்காலமட நாராய்" என்ற திருப்பாசுரத்தால், சிஷ்யர்கள் பக்தியோடு கொடுக்கும் பொருள்களை ஆசாரியர்கள் வாங்கிக்கொள்வார்கள் என்பது கூறப் படுகிறது.*

3. *"ஶரீரமர்த்தம் ப்ராணஞ்ச ஸத்குருப்யோ நிவேதயேத்"* *என்பது, பிரமாணம்.*

4. *திருவாய்*. 8. 10: 11. 5. *பெருமாள்திரு*. 4: 5.

6. *பெருமாள் திரு*. 3: 9.

7. *திருவாய்மொழி*, 1. 4: 4.

இந்த நியாயத்திலே அதுபோன்ற குணமுடையவற்றையும் சொல்லிக் கொள்ளுமித்தனையன்றோ என்னுமதனைப் பற்றவும், மகன்றில் என்பது, அன்றில் இனத்தில் ஓர் உட்பிரிவுடையதொரு பறவை விசேஷடம். ஆக, இப்படித் தூதுவிடுகிற கட்டத்திலே வருகின்ற பலவகைப் பறவை விசேடங்களுக்கு உள்ளுறை அருளிச்செய்தாராயிற்று. (5)

## 155

பூண்டநாள் சீர்க்கடலை உட்கொண்டு, திருமேனி தன்னிறமொத்து, உயிரளிப்பான் தீர்த்தகரராய் எங்கும் திரிந்து, ஜ்ஞாநஹ்ரதத்தைப் பூரித்து, தீங்கின்றிவாழ நிதிசொரிந்து, கொடுத்தது நினையாதே லஜ்ஜித்து, வெளுத்து ஒளித்து, கண்டு உகந்து பரசம் ருத்தியே பேருன அன்புகூரும் அடியவர், உறையில் இடாதவர், புயற்கைஅருள்மாரி, குணம்திகழ் கொண்டல் போல்வாரை மேகம் என்னும்.

என்பது, சூத்திரம்.

வியாக் :—இனி, மேல் இத் தூது கட்டத்தில் சொல்லப்படுகிற மேகத்திற்கு உள்ளுறை அருளிச்செய்கிறுர் இச்சூத்திரத்தால்.

அதாவது, பூண்டநாள் சீர்க்கடலை உட்கொண்டு - மழைபெய்ய வேண்டிய காலங்களிலே கடலிலே புக்கு அதில் நீரைப் பருகிக் கொண்டிருக்கும் மேகம்போலே, [1] "நீண்ட தோள் மால் கிடந்த நீள் கடல் நீராடுவான், பூண்டநாள் எல்லாம்புகும்" என்றும், [2] "திருமால்-சீர்க்கடலை உட்பொதிந்த சிந்தனையேன்" என்றும், சொல்லுகிற படியே விடிந்த நாள் எல்லாம் அவன் கண்வளர்ந்தருளுகிற கடலிலே புகுந்து, திருமகள் கணவனுன அவனுடைய கல்யாண குணக்கடலை [3] "மனஉள்கொண்டு" என்கிறபடியே உள்ளே அடக்கிக்கொண்டு, திருமேனி நல்நிறம் ஒத்து - [4] "திருமால் திருமேனி ஒக்கும்" என்றும், [5] "கண்ணன்பால் நல்நிறம் கொள்கார்" என்றும் சொல்லுகிறபடியே மேகமானது அவன் திருமேனியோடு ஒத்த நிறத்தையுடைத்தா யிருக்குமாறு போலே, உள்ளே தியானிக்கப்படுகின்ற முகில்வண்ண னுடைய நிழலீட்டாலே அவனேடு ஒத்த நிறத்தையுடையவர்களாய்,

1. மூன்றும் திருவந். 69. 2. பெரிய திருவந். 69.
3. 4. திருவிருத்தம், 32.
5. பெரிய திருவந். 85.



உயிர் அளிப்பான் தீர்த்தகரராய் எங்கும் திரிந்து - [1] "உயிர் அளிப்பான், மாகங்கள் எல்லாம் திரிந்து" என்கிறபடியே மேகமானது மழைமூலமாக உயிர்களைப் பாதுகாப்பதற்காக விரிந்திருக்கின்ற ஆகாசப் பரப்பு எங்கும் சஞ்சரிக்குமாறுபோலே, பிறப்பு இறப்புகளிலே உழலுகின்ற ஆன்மாக்களைப் பாதுகாப்பதற்காக [2] "தீர்த்தகரர் ஆமின் திரிந்து" என்றும், [3] "தீதில் நன்னெறி காட்டி எங்கும் திரிந்து" என்றும் சொல்லுகிறபடியே உலகத்தைத் தூய்மை செய்யுமவர்களாய் உய்யும் வழியைக் காட்டுமவர்களாய் எவ்விடத்தும் திரிந்துகொண்டு, ஞான [4]ஹ்ரதத்தைப் பூரித்து-மேகம் மழையாலே தடாகத்தை நிறைக்குமாறுபோலே, [5] "ஞானமாகிற மடுவினையுடையதும் தியானமாகிற நீரையுடையதும் ஆசை துவேஷம் என்னும் அழுக்கைப் போக்குவதும் ஆன மனத்தில்உளவாகிய தீர்த்தத்தில் எவன் நீராடுகிறுனே அவன் உயர்ந்த கதியை அடைகிறுன்" என்று மனத்திலுள்ள தீர்த்தத்தைச் சிறப்பித்துக் கூறுவதில் சொன்ன ஞானமாகிற மடுவைத் தாங்கள் பெய்கிற பகவானுடைய குணங்களாகிற தண்ணீரால் நிறைத்து, தீங்கு இன்றி வாழ நிதி சொரிந்து - [6] "தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து" என்றும், "வாழ உலகினில் பெய்திடாய்" என்றும், [7] "மா முத்து நிதி சொரியும்" என்றும் சொல்லுகிறபடியே கேடு சிறிதும் இன்றிக்கே அனைவரும் வாழும்படி பகவானுடைய குணங்களாகிற மணிகளைப் பொழிந்து,

கொடுத்தது நினையாதே லஜ்ஜித்து - வள்ளற்றன்மையின் மிகுதியினுலே கொடுத்ததனை நினையாதே 'இன்னமும் கொடுக்கப்பெற்றிலோம், நாம் செய்தது போருமோ!' என்று வெட்கி, வெளுத்து ஒளித்து - மேகமானது மழை பெய்யாதபோது வெளுத்துப் போய்க் கண்களுக்குப் புலப்படாமல் இருப்பதுபோலே, அர்த்தவிசேடங்களை

1. திருவிருத்தம், 32. 2. இரண்டாந் திருவந். 14.
3. பெருமாள் திரு. 2: 6. 4. ஹ்ரதம் - மடு.
5. ஜ்ஞாநஹ்ரதே த்யாநஜலே ராகத்வேஷ மலாபஹே
யஸ்நாதி மாநஸே தீர்த்தே ஸயாதிபரமாங்கதிம்.
என்பது, பிரமாணம்.
6. திருப்பாவை, 3. 7. நாய்ச்சியார் திரு. 8: 2.

உபதேசிக்கப் பெருதபோது உடம்புவெளுத்து மறைந்து [1] வெளியே முகம் காட்டாதவர்களாய், கண்டு உகந்து பரஸம்ருத்தியே பேருன - மேகமானது தனக்கு என்று காரியம் செய்யாது பிறர் நலத்தைக் கண்டு உகப்பதற்கே செய்வதுபோன்று, கொடுக்குமிடத்து சிஷ்யர்களுடைய நிறைவினைக் கண்டுமகிழ்ந்து அந்த நிறைவினையே தங்களுக்குப் பயனுகக்கொண்டு இருக்குமவர்களான, அன்புகூரும் அடியவர் - [2] "ஆங்கரும்பிக் கண்ணீர் சோர்ந்து அன்புகூரும் அடியவர்க"ளான முதலாழ்வார்கள், உறையில் இடாதவர் - [3] உருவின வாள் உறையில் இடாதே முதல் நடு இறுதிகளிலே மற்றைத் தேவர்களின் பிற்பாட்டினைக் கூறுதல் முன்னுக எம்பெருமானுடைய முதன்மையை எடுத்துக் கூறும் திருமழிசைப்பிரான், புயல் கை அருள்மாரி - [4] "காரார் புயல்கை கலிகன்றி" என்றும், [5] "அருள்மாரி" என்றும் வள்ளற்றன்மையில் மேகத்தைப் போன்றவராய் அருளைப்பெய்யும் திருமங்கையாழ்வார், குணம் திகழ் கொண்டல் - [6] "குணம் திகழ் கொண்டல் இராமாநுசன்" என்று குணங்கள் ஒளிவீசுகின்ற மேகமாகச் சொல்லப்பெற்ற எம்பெருமானுர், போல்வாரை - போன்றவர்களை, மேகம் என்னும் - குணங்களின் ஒப்புமையைக் கொண்டு மேகம் என்று சொல்லும் என்கை.

பேற்றுக்கு அடி இவர்கள் ஆகையாலே, பேற்றில் பதற்றம் தோன்றப் பலகாலும் தூதுவிடுவர். (6)

---

1. 'வெளியே முகங்காட்டாதவர்களாய்' என்றதனுல், ஆசாரியர்கள் உபதேச காலங்களில் சீரிய சிங்காதனத்திருந்து சேவை சாதிப்பர்கள்; மற்றைக் காலங்களில் சுவாநுபவபரர்களாய் ஏகாந்த சீலர்களாய் இருப்பர்கள் என்பதனைத் தெரிவித்தபடி.

2. பெரியதிருமொழி, 2. 10: 4.

3. 'உறையிலிடாதவர்' என்றது, திருமழிசைப்பிரானை. யாங்ஙனமெனின்? உலகில் உருவின வாளை உறையில் இடாதவர்கள் தாங்கள் கைக்கொண்ட, பகைவர்களைக் கோறலாகிற செயலைச் செய்தபடியே இருப்பது போன்று, திருமழிசைப்பிரானும் மற்றைத் தெய்வங்களினுடைய தாழ்வினையும் எம்பெருமானுடைய முதன்மையினையும் தம்முடைய திவ்வியப் பிரபந்தங்களில் ஆதியோடு அந்தமாக மிக்க ஊற்றத்தோடு அருளிச்செய்து போந்தவர் ஆதலாலே நம்முதலிகள் இவரை 'உறையிலிடாதவர்' என வழங்கினர் என்க.

4. பெரியதிருமொழி, 3. 2: 10. 5: பெரிய திரு. 3. 4: 10.

6. இராமாநுசநூற்றந். 60.



## 156

[1] தம்பிழையும் சிறந்தசெல்வமும் படைத்த பரப்பும் தமரோட்டைவாசமும் மறப்பித்த க்ஷமாதீக்ஷா சாரஸ்ய ஸௌந்தர்யங்களை உணர்த்தும் வியூஹ விபவ பரத்வதுவய அர்ச்சைகள் தூது நாலுக்கும் விஷயம்.

என்பது, சூத்திரம்.

வியாக் :—இனி, இப்படி இவர் தூதுவிடும்படி [2] முகம் காட்டாமைக்குக் காரணத்தையும், தூதுவிடுகைக்குப் பற்ருசையும், அதற்கு விஷயத்தையும் தூதுநாலுக்கும் வகைஇட்டு அருளிச்செய்கிருர் இச் சூத்திரத்தால்.

அதாவது, தம்பிழை மறப்பித்த க்ஷமையை உணர்த்தும் வியூகம் தூது நான்கனுள் முதல் தூதுக்கு விஷயம் - [3] "அஞ்சிறைய மடநாராய்" என்ற திருவாய்மொழியில் [4] "என்பிழையே நினைந்தருளி" என்றதனுல் தன்மேன்மையாலே இத்தலையில் தண்மைபாராதே வந்து

---

1. இச்சூத்திரத்தை, தம்பிழையை மறப்பித்த க்ஷமையை உணர்த்தும் வியூகம் தூது (நான்கனுள் முதல் தூதுக்கு) விஷயம் என்றும், சிறந்த செல்வத்தை மறப்பித்த தீக்ஷையை உணர்த்தும் விபவம் தூது (நான்கனுள் இரண்டாவது தூதுக்கு) விஷயம் என்றும் படைத்த பரப்பை மறப்பித்த சாரஸ்யத்தை உணர்த்தும் பரத்துவ துவயம் தூது (நான்கனுள் மூன்ருவது தூதுக்கு) விஷயம் என்றும், தமரோட்டைவாசத்தை மறப்பித்த ஸௌந்தர்யத்தை உணர்த்தும் அர்ச்சை தூது (நான்கனுள் நான்காவது தூதுக்கு) விஷயம் என்றும் நிரல் நிறையாகக் கொள்க. 'மறப்பித்த' 'உணர்த்தும்' என்ற சொற்களை முன்னே உள்ள சொற்களோடு தனித்தனியே கூட்டுக. 'தூது நாலுக்கும்' என்றது, தூது விடுகின்ற "அஞ்சிறையமடநாராய்", "வைகல் பூங்கழிவாய்", "பொன்னுலகு ஆளீரோ", "எம்கானல் அகம் கழிவாய்" என்னும் தலைப்புகளையுடைய நான்கு திருப்பதிகங்களை.

2. முகம் காட்டாமைக்குக் காரணம், தம்பிழை, சிறந்த செல்வம், படைத்த பரப்பு, தமரோட்டைவாசம். 'தூது விடுகைக்குப் பற்ருசு' என்றது. க்ஷமா தீக்ஷா ஸாரஸ்ய ஸௌந்தர்யங்களை. 'அதற்கு விஷயம்' என்றது, வியூக விபவ பரத்துவ துவய அர்ச்சைகளை. 'பரத்துவதுவயம்' என்றது, பரமபதத்திலிருக்கும் நிலையினையும், கரந்தசில்லிடம் தொறும் இடம்திகழ் பொருள்தொறும் கரந்து எங்கும் பரந்துறையும் நிலையினையும். இவ்விரண்டும் முதன்மைக்கு அறிகுறிகள் ஆதலின் 'பரத்துவதுவயம்' என்கிருர். துவயம் - இரண்டு.

3. திருவாய். 1. 4: 1. 4. திருவாய். 1. 4: 7.

கலந்தான்; அங்ஙனம் கலந்து நம் குற்றங்களை நினைந்து பிரிந்து நம்
குற்றங்களையே பார்த்துத் தன் பொறுமையை மறக்கையாலே இத்
தலையை நினையாதிருந்தானத்தனை; அவனுடைய பொறுமையை அவ
னுக்கு அறிவிக்க அவன்வரும் என்று அறுதியிட்டு, "என் பிழைத்
தாள் திருவடியின் தகவினுக்கு" என்று அவனுடைய பொறுமை
பற்றாசாக, [1] "கடலாழி நீர்தோற்றி அதனுள்ளே கண்வளரும் அட
லாழி அம்மானைக் கண்டக்கால் இது சொல்லியருள்" என்று படைப்
பின்பொருட்டுப் பெருவெள்ளத்திலே கண்வளர்ந்தருளினவனுக்குப்
படைப்புக்குப் பயன் [2] "எம்பெருமானைப் பூசித்துவணங்கும்பொருட்
டுக் கை கால் முதலிய உறுப்புக்களுடன் கூடின ஆச்சரியமான இச்
சரீரமானது ஆதிகாலத்தில் உண்டாக்கப்பட்டது" என்கிறபடியே
திருவடிகளிலே அடிமைகொள்ளுகைஅன்றோ என்று இதனைச்
சொல்லவேண்டும் என்று வியூகத்திலே தூதுவிடுகையாலே தம்பிழை
மறப்பித்த பொறுமையை உணர்த்திவிட்ட வியூகம் முதல்தூதுக்கு
விஷயம்.

சிறந்த செல்வம் மறப்பித்த தீக்ஷையை உணர்த்தும் விபவம்
இரண்டாம் தூதுக்கு விஷயம் - [3] "வைகல்பூங்கழிவாய்" என்ற திரு
வாய்மொழியில் [4] "சிறந்த செல்வம் மல்கு திருவண்வண்டூர் உறை
யும்" என்கிறபடியே துன்புறுகிறவர்களைப் பாதுகாத்து வாராநிற்கச்
செய்தே, திருவண்வண்டூரின் செல்வத்தைக் கண்டு கால்தாழ்ந்து,
'துன்புறுகிறவர்களைப் பாதுகாப்பது' என்னும் தன் விரதத்தை மறக்
கையாலே நம்மை நினையாதிருந்தானத்தனை; துன்புறுகிறவர்களைப்
பாதுகாப்பது ஒருதலையானால் மற்றொன்றில் கால்தாழுமவன் அல்லா
மையாலே அதனை அறிவிக்கவரும் என்று, [5] "புணர்த்த பூந்தண்
துழாய்முடி நம்பெருமானைக் கண்டு" என்கிறபடியே 'துன்புறுகின்ற
வர்களைப் பாதுகாப்பது' என்னும் அவன் விரதத்தையே பற்றாசாகக்
கொண்டு [6] "மாறில் போர்அரக்கன் மதிள் நீறு எழச் செற்று உகந்த
ஏறுசேவகனார்க்கு என்னையும் உளள் என்மின்களே" என்று பிராட்டி
காரணமாக இராவணனுக்கு இருப்பிடமான இலங்கையில் அரணைத்
துகள் ஆக்கின துணைவேண்டாச் செருவென்றியனான சக்கரவர்த்தித்

1. திருவாய். 1. 4: 10.
2. "விசித்ரா தேஹ ஸம்பத்தி: ஈச்வராய நிவேதிதும்" என்பது, ஸ்ரீவிஷ்ணுதர்மம்.
3. திருவாய். 6. 1: 1.
4. திருவாய். 6. 1: 3.
5. திருவாய். 6. 1: 5.
6. திருவாய். 6. 1: 10.



திருமகனுக்குக் காப்பாற்றத் தகும் பொருள்களிலே நானும் ஒருத்தி
உண்டு என்று சொல்லுங்கோள் என்று விபவத்திலே தூதுவிடுகை
யாலே, சிறந்தசெல்வம் மறப்பித்த விரதத்தை உணர்த்திவிட்ட விப
வம் இரண்டாம் தூதுக்கு விஷயம்.

படைத்த படைப்பு மறப்பித்த சாரஸ்யத்தை உணர்த்தும் பரத்வ
துவயம் மூன்றாம்தூதுக்கு விஷயம் - [1] "பொன்னுலகாளீரோ" என்ற
திருவாய்மொழியில் "முன்உலகங்கள் எல்லாம் படைத்த முகில்வண்
ணன் கண்ணன் என்னலம் கொண்டபிரான் தனக்கு" என்கிறபடியே
படைக்கப்பட்ட உலகத்தைக் காப்பாற்றுகின்ற பராக்காலே அடியார்
களோடு தனக்கு உண்டான ஒத்தஇன்பத்தை மறந்து, அதுகொண்டு
தம்மை நினையாதிருந்தானத்தனை; [2] "தன்மன்னு நீள்கழல்மேல் தண்
துழாய் நமக்குஅன்றி நல்கான்" என்கிறபடியே அடியார்களோடு
ஒத்தஇன்பத்தையுடையனாதலாலே அதனை அறிவிக்க வரும் என்று
ஒத்தஇன்பம் பற்றாசாக [3] "வானவர்கோனைக் கண்டு யாம் இதுவோ
தக்கவாறு என்னவேண்டும்" என்று பரத்துவத்திலும், [4] "எங்குச்
சென்றாகிலும் கண்டு இதுவோ தக்கவாறு என்மின்" என்று கண்
களால் காணமுடியாமையாலே பரத்துவத்திற்கு ஒத்ததான அந்தர்
யாமித்வத்திலும் தூதுவிடுகையாலே படைத்த பரப்பு மறப்பித்த ஒத்த
சுவைத்தன்மையை உணர்த்திவிட்ட பரத்வதுவயம் மூன்றாம்தூதுக்கு
விஷயம்.

தமரோட்டை வாசம் மறப்பித்த சௌந்தர்யத்தை உணர்த்தும்
அர்ச்சை நாலாம் தூதுக்கு விஷயம் - [5] "எம்கானல்அகம் கழிவாய்"
என்ற திருவாய்மொழியிலே [6] "தமரோடு அங்குறைவார்க்கு" என்
கிறபடியே தம்மைஉகந்த பாகவதர்களுடைய சேர்த்தியில் இனிமை
யாலே, பிரிந்தார்க்கு உயிர்கொண்டிருக்க ஒண்ணாதபடியான தன்
அழகினை மறந்து, அதுகொண்டு பிரித்திட்டு வைத்துப்போய் நம்மை
நினையாதிருந்தானத்தனை; இவ்வடிவழகினைப் பிரிந்தார் தரிப்பரோ
என்று அவ்வழகினை அறிவித்துவிட்டால் வாராதிரார் என்று, [7] "செக்
கமலத்தலர்போலும் கண் கை கால் செங்கனிவாய், அக்கமலத்து இலை
போலும் திருமேனி அடிகளுக்குத் தக்கிலமே கேளீர்கள்?" என்றும்,

1. திருவாய். 6. 8: 1.
2. திருவாய். 6. 8: 6.
3. திருவாய். 6. 8: 4.
4. திருவாய். 6. 8. 5.
5. திருவாய். 9. 7: 1:
6. திருவாய். 9. 7: 2.
7. திருவாய். 9. 7: 3.

[1] "பூந்துழாய் முடியார்க்கு" என்று தொடங்கி "தாம் தம்மைக் கொண்டு அகல்தல் தகவுஅன்று" என்று அழகே பற்றாசாகத் "திருமூழிக்களத்தார்க்கு" என்று அர்ச்சாவதாரத்திலே தூதுவிடுகையாலே தமருடைய வாசம் மறப்பித்த அழகினை உணர்த்திவிட்ட அர்ச்சை நாலாம் தூதுக்கு விஷயம். (7)

## 157

[2] பகல் ஓலக்கம் இருந்து, கறுப்புடுத்துச் சோதித்து, காரியம் மந்திரித்து, வேட்டைஆடி, ஆராமங்களிலே விளையாடும் ராஜநீதி, ஆதும் சோராமல் செங்கோல் நடாவுகிற பார்அளந்த என்னும் மூன்று முடிக்கு உரிய இளவரசுக்கு, விண்மீது என்கிற ஐந்திலும் காணலாம்.

என்பது, சூத்திரம்.

வியாக் :—இப்படிப் பல இடங்களிலும் தூதுவிட்டால் அடையத் தக்க பொருள் ஒன்றே என்னும் தன்மை குலையாதோ? என்னும் வினாவிற்கு விடையாகப் பரத்துவம் முதலிய ஐந்து நிலைகளில் இடத்தின் வேற்றுமையே ஒழியப் பொருளில் வேற்றுமை இல்லை என்னுமதனை எடுத்துக்காட்டோடு கூறுகிறார் இச்சூத்திரத்தால்.

1. திருவாய். 9. 7: 9.

2. இச்சூத்திரத்துள்ள 'ராஜநீதி' என்னும் தொடர்மொழியை, பகலோலக்கமிருக்கும் ராஜநீதி, கறுப்புடுத்துச் சோதிக்கும் ராஜநீதி, காரியம் மந்திரிக்கும் ராஜநீதி, வேட்டையாடும் ராஜநீதி என்று முன்னுள்ளனவற்றோடும் தனித்தனியே கூட்டுக. ராஜநீதி - முறை; பிரகாரம். 'விண்மீது என்கிற ஐந்திலும்' என்றது, "விண்மீதிருப்பாய்" என்ற திருப்பாசுரத்தில் கூறப்பட்ட பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சை என்ற ஐந்து நிலைகளிலும் என்றபடி. 'காணலாம்' என்றது, மேலே கூறியுள்ள ஐந்து தன்மைகளையும் ஐந்து நிலைகளிலே காணலாம் என்றபடி. அரசவீற்றிருத்தல், நகரசோதனை செய்தல், மந்திரிகளோடு மந்திராலோசனை செய்தல், வேட்டையாடுதல், பூம்பொழிலில் இன்ப நுகர்தல் இவை வேறு வேறு இடங்களில் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு வேடத்தோடு அரசன் செய்யினும், இங்ஙனம் செய்கின்றவன் அரசன் ஒருவனேயாயவாறு போன்று, இங்கும், இறைவன் ஐவகை நிலைகளிலே இருந்துகொண்டு ஐவகைத் தொழில்களைச் செய்யினும், செய்கின்றவன் இறைவன் ஒருவனேயாதலின் அங்ஙனம் தூது விடுவதனால் குற்றம் இன்று என அறிவித்தவாறு.



அதாவது, பகல் ஓலக்கம் இருந்து - எல்லாராலும் சேவிக்கப்படுகிறவனாய்க்கொண்டு தன் வீறு தோற்றப் பகல்ஓலக்கம் இருக்கையும், கறுப்புடுத்துச் சோதித்து - இராச்சியத்தில் உள்ளாருடைய குணங்களையும் குற்றங்களையும் அறிகைக்காக இரவிலே பிறர் அறியாதபடி மாறுவேடம்பூண்டு நகரசோதனம் செய்கையும், காரியம் மந்திரித்து - இராச்சியத்தில் நல்லோரை நலம்புரிந்து காத்தற்காகச் செய்யும் காரியத்தை ஆராய்தலும், வேட்டைஆடி - பின்பு துஷ்ட மிருகங்களைக் கொல்லுவதற்காக வேட்டை ஆடுகையும், ஆராமங்களிலே விளையாடும் - அந்தக் களைப்பு நீங்கப் பூந்தோட்டங்களிலே தன் பட்டத்துத் தேவி முதலாயினார்களோடு விளையாடுகையும் ஆகிற, ராஜநீதி - அரசர்களுக்கு உரிய முறையை,

[1] ஆதும்சோராமல் செங்கோல்நடாவுகிற - [2] "பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும், அங்காதும் சோராமே ஆள்கின்ற எம்பெருமான், செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்" என்றும், [3] "அருளார் திருச்சக்கரத்தால் அகல் விசும்பும் நிலனும், இருளார் வினை கெடச் செங்கோல் நடாவுதிர்" என்றும் சொல்லுகிறபடியே உபய விபூதியிலும் ஒருசிறிதிடமும் குறையாதபடி தன்னுடைய திவ்விய ஆணையை நடத்துமவனாய், பார்அளந்த என்னும் மூன்று முடிக்குரிய இளவரசுக்கு - [4] "பார்அளந்த பேரரசே! எம்விசும்பு அரசே! எம்மை நீத்து வஞ்சித்த ஓர் அரசே!" என்று சொல்லப்பட்ட எளிமை, முதன்மை, காதல் என்னும் இவற்றாலே வந்த மூன்று முடிக்குஉரியவான் இளவரசான சர்வேச்வரனுக்கு,

விண்மீது என்கிற ஐந்திலும் காணலாம் - [5] "விண்மீது இருப்பாய்" என்று, [6] "நினைவிற்கு எட்டாத சொரூபத்தையுடைய, உலகங்

1. இவ்வாக்கியத்தால் இறைவன் சக்கரவர்த்தி என்று நிரூபிக்கப் படுகின்றது.

2. நாய்ச்சியார்திரு. 11: 3. 3. திருவிருத்தம், 33.

4. திருவிருத்தம், 80. 'பார் அளந்த பேரரசே' என்றதனால் சௌலப்யத்தையும், 'விசும்பரசே' என்றதனால் பரத்துவத்தையும், 'வஞ்சித்த ஓர் அரசே' என்றதனால் காதலையும் குறித்தபடி.

5. விண்மீதிருப்பாய்! மலைமேல் நிற்பாய்! கடற்சேர்ப்பாய்!
மண்மீதுழல்வாய்! இவற்றுள் எங்கும் மறைந்துறைவாய்!
எண்மீதியன்ற புறவண்டத்தாய்! எனதாவி
உண்மீதாடி உருக்காட்டாதே ஒளிப்பாயோ.

என்பது, திருவாய். 6. 9: 5.

6. வைகுண்டேது பரேலோகே ஸ்ரீயாஸார்த்தம் ஜகத்பதி:
ஆஸ்தேவிஷ்ணு: அசிந்த்யாத்மா பக்தைர்பாகவதைஸ்ஸஹ.

என்பது, பிரமாணம்.

கட்கு எல்லாம் தலைவரான விஷ்ணுவானவர் நித்தியமுக்தர்களோடும் பிராட்டியோடும்கூட வைகுண்டம்என்கிற மேலான உலகத்திலே எழுந்தருளியிருக்கிறார்" என்று சொல்லுகிறபடியே [1] "பகல்கண்டேன்" என்கிற ஒருபகலான பரமபதத்திலே [2] "ஒண்டொடியாள் திருமகளும்" தானுமாய் நித்தியரும் முக்தரும் சேவிக்க [3] ஓலக்கம் இருக்கையும், [4] "இவற்றுள் எங்கும் மறைந்துறைவாய்" என்று, [5] "எந்தப் பரம் பொருளை இந்த உயிர் அறியவில்லையோ" என்று சொல்லுகிறபடியே தான்பரந்து உறைகின்ற பொருள்களுக்குத் தெரியாதபடி அந்தர்யாமியாய் [6] உள்ளுவார் உள்ளிற்றெல்லாம் அறிகையும், [7] "கடல்சேர்ப்பாய்" என்று, பாற்கடல் யோகநித்திரை செய்து ஆன்மாக்களைக் காப்பாற்றும் வழியைச் சிந்திக்கையும் பின்னர் [8] "மண்மீது உழல்வாய்" என்று பாதுகாப்பதற்காக வந்து அவதரித்து [9] "களிறும் புள்ளும் உடன்மடிய வேட்டையாடி வருவான்" என்கிறபடியே அடியார்களுக்கு விரோதிகளான துஷ்டர்களைக்கொல்லுதலாகிற வேட்டையாடுகையும், [10] "மலைமேல் நிற்பாய்" என்று, விரோதிகளைக்கொன்ற களைப்புநீங்க எல்லையில்லாத இனிமையையுடையனவான [11] "ஆராமம் சூழ்ந்த கோயில் திருமலை முதலான திவ்யதேசங்களிலே இன்பம் தலைப்பட வசிக்கையும் ஆகிற இவை ஐந்திலும் காணலாம் என்கை.

இதனால் பரத்துவம் முதலான நிலைகளில் இடவேற்றுமை ஒழியப் பொருள்வேற்றுமை இல்லாமை காட்டப்பட்டது. (8)

---

1. இரண்டாந் திருவந். 81. 2. திருவாய். 4. 9: 10.

3. 'ஓலக்கமிருக்கையும்' என்னுமிதனால் பரமபதத்தில் அரசிருத்தலைக் கூறியபடி.

4. 'இவற்றுள்' என்றது முதல் 'அறிகையும்' என்றது முடிய, கறுப்புடுத்து நகரசோதனை செய்தலைக் கூறியபடி. இது அந்தர்யாமித்வம்.

5. "யம்ஆத்மாநவேத"
என்பது, உபநிடதம்.

6. திருமாலை, 34.

7. 'கடல் சேர்ப்பாய்' என்றது முதல் 'சிந்திக்கையும்' என்றது முடிய, மந்திராலோசனை செய்தலைக் கூறியபடி. இது வியூகம்.

8. 'மண்மீதுழல்வாய்' என்றது முதல் வேட்டையாடுகையும்' என்றது முடிய, வேட்டையாடுதலைக் கூறியபடி. இது விபவம்-அவதாரம்.

9. நாய்ச்சியார் திருமொழி, 14: 9.

10. 'மலைமேல் நிற்பாய்' என்றது முதல் 'வசிக்கையும்' என்றது முடிய, பூம்பொழில்களில் இன்பநுகர்தல். இது, அர்ச்சாவதாரம்.

11. சிறியதிருமடல், 71.



## 158

[1] தமர்உகந்த அடியோமுக்கே என்னும் பின்னானார் வணங்கும் இடத்திலே எல்லாம் பூர்ணம்.

என்பது, சூத்திரம்.

வியாக் :—ஆனால், ஐந்துநிலைகளிலும் ஒத்திருக்கை அன்றிக்கே அர்ச்சாவதாரத்திலே இவர் மண்டியிருப்பான் என்? என்னும் வினாவிற்கு விடையாக, அர்ச்சாவதாரத்தின் குணநிறைவினை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, தமர்உகந்த - [2] "தமர்உகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே, தமர்உகந்தது எப்பேர் மற்றப்பேர்" என்கிறபடியே அடியார்கள் விரும்பிய பொருள்களையே தனக்குத் திருமேனியாகவும், அவர்கள் உகந்த திருப்பெயர்களே தனக்குத் திருப்பெயராகவும் கொண்டிருக்கும் என்றும், அடியோமுக்கே என்னும் - [3] "அடியேமுக்கே எம்பெருமான் அல்லீரோ நீர் இந்தளூரீரே" என்று தேசத்தாலும் காலத்தாலும் உறுப்புக்களாலும் சேய்மையனவாதலின், பரத்துவம் முதலான நான்கு நிலைகளில் அணுகுவதற்கு ஆள் அன்றிக்கே வேறு கதி இல்லாதவர்களாக இருக்கின்ற எங்களுக்கு ருசி பிறந்தபோதே நினைத்தவகைகள் எல்லாம் அநுபவிப்பிக்கைக்காக அன்றோ திருவிந்தளூரிலே வந்து நிற்கிறது என்றும் சொல்லப்பட்ட, பின்னானார் வணங்குமிடத்திலே - [4] "பின்னானார் வணங்கும்சோதி திருமூழிக்களத்தானாய்" என்கிறபடியே அவதாரங்களுக்குப் பிற்பாடர் ஆனவர்களுக்கு அநுபவிக்கத்தகுந்த அர்ச்சாவதாரத்திலே, எல்லாம் பூர்ணம் - [5] "காக்கும்பொருளான இறைவன்மாட்டு எல்லாம்கூடி நிறைந்துளது" என்கையாலே பரத்துவம் முதலான நிலைகளில் அநுபவிக்கத் தக்கனவான குணங்கள் எல்லாம் நிறைந்திருக்கும் என்கை.

ஆக, இப்படி அடியார்களுக்கு வசப்பட்டிருக்கின்ற சொரூபத்தையும் இருத்தல் முதலிய நிலைகளையுமுடையதாய் "அடியோமுக்கே"

---

1. 'தமருகந்த' என்பதும், 'அடியோமுக்கே' என்பதும், 'பின்னானார் வணங்கும்' என்பதும் ஒவ்வொரு பாசுரப்பகுதிகள். இம்மூன்று பகுதிகளும் அர்ச்சாவதாரத்தைக் குறிப்பன.

2. முதல் திருவந். 44. 3. பெரிய திருமொழி, 4. 9: 5.

4. திருநெடுந்தாண்டகம், 10.

5. "ஸர்வம் பூர்ணம் ஸஹோம்"
என்பது, உபநிடதம்.

என்னும்படி கறைவிழுந்த இடமான அர்ச்சாவதாரத்திலே [1] முற்பட்ட நிலைகளில் உள்ள குணங்களையும் காணலாம் ஆகையாலே [2] "சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லாத் தன்மை தேவபிரான் அறியும்" என்னும்படி மண்டியிருப்பர் என்று கருத்து. (9)

## 159

[3] வன் பெரு வானகம் முதல்உய்ய இனிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற திருவாளன் திருப்பதி, வடிவுடை கடலிடம் கட்கிலீ என்னுமவற்றில், இவள் திறத்து என்கொலோ என்பிக்கிற வியூக சௌகார்த்தப் பிரதானம்.

என்பது, சூத்திரம்.

**வியாக்** :—இப்படி அர்ச்சாவதாரத்திலே எல்லாக் குணங்களும் நிறைந்திருக்குமாகில், எல்லாத் திருப்பதிகளிலும் எல்லாக் குணங்களும் ஒருசேரப் பிரகாசிக்குமோ என்னும் வினாவிற்கு விடையாக, பரத்துவம் முதலிய நிலைகளில் ஒவ்வொரு நிலைக்கே உரியதாயும், ஐவகை நிலைகட்கும் பொதுவாயும் இருக்கும் குணங்களில், ஒவ்வொரு குணம் ஒவ்வொரு திருப்பதியில் முதன்மையாக விளங்கும்படியை [4] இவ்வாழ்வார் மங்களாசாசனம் செய்த திருப்பதிகள்தோறும் காட்டுகிறார் மேல்: அவற்றுள், முதன்முதலிலே, பரத்துவம் முதலான ஐவகை நிலைகளில் ஒவ்வொரு நிலைக்கே உரியதான ஒவ்வொரு குணம் முதன்மையாகப் பிரகாசிக்கிற திருப்பதிகளை அருளிச்செய்யத்

1. 'முற்பட்ட நிலைகள்' என்றது, பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்வம் என்னுமவற்றை.

2. திருவாய். 7. 10: 10.

3. இச்சூத்திரத்தை, திருவாளன் திருப்பதி, வியூக ஸௌகார்த்தப் பிரதாநம் என முடிக்க. 'வன்பெருவானகம் முதல் உய்ய இனிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற' என்பது, திருப்பதிக்கு அடைமொழி. திருப்பதி - திருவரங்கம் பெரிய கோயில். வியூகம் - திருப்பாற்கடலில் அறிதுயில் கொள்ளும் நிலை. ஸௌகார்த்தம் - எப்பொழுதும் உயிர்களின் நன்மையையே சிந்தித்துக்கொண்டிருத்தல். திருவரங்கம் பெரிய கோயிலில் வியூகத்தின் குணமான ஸௌகார்த்தம் முதன்மைபெற்று விளங்கும் என்கிறார் இச்சூத்திரத்தால்.

4. திருவாய்மொழியில் மங்களாசாசனம் செய்யப்பட்ட திருப்பதிகள் முப்பது.



திருவுள்ளம்பற்றி, எல்லாத் திவ்வியதேசங்களிலும் முதன்மை பெற்றதான திருவரங்கம் பெரியகோயிலிலே பிரகாசிக்கிற குணத்தை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, வன்பெருவானகம் முதல் உய்ய - [1] "வன்பெரு வானகம்உய்ய அமரர்உய்ய மண்ணுய்ய மண்ணுலகில் மனிசர்உய்ய" என்கிறபடியே முதலிலே [2] பிரமலோகத்தில் எழுந்தருளிப் பின்பு பூலோகத்திலே எழுந்தருளின கட்டளையிலே, நைமித்திக பிரளயத்துக்கு இளையாத பிரமலோகம் முதலாக இவ்வருகு உண்டான மேல் உலகங்களும் அங்குள்ள பிரமன் முதலான தேவர்களும், பூமியும் இங்குள்ள மனிதர்களும் உய்யும்படியாக, இனிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற திருவாளன் திருப்பதி - [3] "திருவாளன் இனிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற திருவரங்கம்" என்றும், [4] "திருவாளன் திருப்பதி" என்றும் சொல்லுகிறபடியே திருவுள்ளம் உகந்து திருக்கண் வளர்ந்தருளுகின்ற திருவாளனுடைய திருப்பதியான கோயிலானது,

[5] வடிவுடை கடலிடம் கட்கிலீ என்னுமவற்றில் - "வடிவுடை வானோர் தலைவனே என்னும்" என்றும், "கடலிடம்கொண்ட கடல்

1. பெருமாள் திருமொழி, 1: 10.

2. திருவரங்கத்து இறைவன், முதலில் பிரமலோகத்தில் பிரமனுடைய திருவாராதனத்திலிருந்து, பின்னர் திருவயோத்யையைக்கு எழுந்தருளி, அங்குச் சூரியவம்சத்து அரசர்களால் ஆராதனம் செய்யப்பட்டுவந்து, பின், ஸ்ரீராமபிரான் விபீஷணாழ்வானுக்கு அளிக்க, அவன் இலங்கைக்கு எழுந்தருளப் பண்ணிக்கொண்டு போகும் வழியில், திருவரங்கத்திலேயே தங்கிவிட்டார் என்னும் சரிதவரலாற்றினை இங்கு நினைத்தல் தகும்.

> பிணியரங்க வினையகலப் பெருங்காலம் தவம்பேணி,
> மணியரங்க நெடுமுடியாய்! மலரயனை வழிபட்டுப்
> பணியரங்கப் பெரும்பாயல் பரஞ்சுடரை யாம்காண
> அணியரங்கம் தந்தானை அறியாதார் அறியாதார்.
> (கம்பரா. குலமுறைகிளத்துப் படலம்.)

> "கொடியாடு மணிமாட அயோத்தி மூதூர்
> குடிதுறந்து திருவரங்கம் கோயில்கொண்ட
> நெடியோனே" (திருவரங்கக் கலம்பகம்)

என்னும் திருப்பாசுரங்கள் இங்குக் குறிக்கொள்ளத் தகும்.

3. பெரியாழ்வார் திருமொழி, 4. 9: 10.

4. பெரியாழ்வார் திருமொழி, 4. 8: 10.

5. திருவரங்கம் திருப்பதி விஷயமான "கங்குலும் பகலும்" என்ற திருப்பதிகத்தில், வடிவுடைவானோர் தலைவனே" என்கையாலே பரத்துவ அநுபவமும், "கடலிடம் கொண்ட கடல்வண்ணா" என்கையாலே

வண்ணு '' என்றும், '' கட்கிலீ உன்னைக்காணுமாறு அருளாய் '' என்றும், [1] '' காகுத்தா '' என்றும் சொல்லும்படி தோன்றும் பரத்துவம் முதலான ஐவகைநிலைகளில் வைத்துக்கொண்டு, இவள் திறத்து என்கொலோ என்பிக்கிற - '' இவள் திறத்து என்சிந்தித்தாய் '' என்றும், '' என்கொலோ முடிகின்றது இவட்கே '' என்றும் இவள் இடையாட்டத்தில் தேவரீர் சிந்தித்தது என்? இவள் காரியம் என்னுய் முடியக்கடவது? என்று சொல்லும்படிபண்ணுகிற, வியூக சௌகார்த்தம் பிரதாநம் - [2] பாற்கடல் யோகநித்திரை சிந்தைசெய்யும் வியூகத்தின் குணமான சௌகார்த்தத்தை முதன்மையாக உடைத்தாயிருக்கும் என்கை.

திருவரங்கம்பெரியகோயிலிலே, வியூகநிலையிலே உள்ள சௌகார்த்த குணம் முதன்மையாகப் பிரகாசிக்கும் என்றபடி. (10)

## 160

[3] மண்ணோர் விண்ணோர் வைப்பில், போகின்ற
ஏழுலகுக்குஉயிர் பாசம்வைத்த நிகர்இல் வாத்சல்
யம் உஜ்வலம்.

என்பது, சூத்திரம்.

---

வியூக அநுபவமும், '' கட்கிலீ உன்னைக் காணுமாறு அருளாய் '' என்கையாலே அந்தர்யாமிய அநுபவமும், '' காகுத்தா கண்ணனே '' என்கையாலே அவதார அநுபவமும் பெறப்படுகின்றன. இங்ஙனம் ஐவகை நிலைகளையும் அநுபவித்தாலும், வியூக அநுபவமே மிக்குத் தோன்றுகின்றது என்கிறுர். அதற்குக் காரணம், அங்கு யோக நித்திரை சிந்தை செய்தல் போன்று, இங்கும் யோக நித்திரை சிந்தை செய்தலேயாம். இதனையே அருளிச்செய்கிறுர் ' வடிவுடை ' என்று தொடங்கி.

1. வியாக்கியானத்தில், ' காகுத்தா ' என்று வருவதனுலே, மூல பாடமும் ' வடிவுடை கடலிடம் கட்கிலீ காகுத்தா என்னுமவற்றில் ' என்று இருந்திருக்கும் என்று தோன்றுகிறது.

2. திருவாய். 2. 6: 5.

3. வைப்பில் வாத்சல்யம் உஜ்வலம் என முடிக்க. வைப்பு - திருமலை. வாத்சல்யம் - அன்று ஈன்ற கன்றின் உடம்பிலுள்ள வழுவை ஆதரித்து உண்ணும் பசுவைப்போன்று, அடியார்களுடைய தோஷங்களை இனியனவாகக்கொள்ளும் குணம். உஜ்வலம்-மிக்குப் பொலிதல். 'போகின்ற ஏழுலகுக்குயிர் ' என்றது, எல்லார்க்கும் உயிராக இருக்கின்ற அந்தர்யாமியைத் தெரிவித்தபடி. அந்த அந்தர்யாமியின் குணம் வாத்சல்யம். ' பாசம் வைத்த, நிகரில் ' என்பவை, இந்த வாத்சல்யத்தை விளக்கவந்த சொற்கள்.



வியாக்:—கோயிலுக்குப் பின் சொல்லப்படுவதான திருமலையில் விளங்குகிற குணத்தை அருளிச்செய்கிறுர் இச்சூத்திரத்தால்.

அதாவது, மண்ணோர் விண்ணோர் வைப்பில் - [1] '' கண்ணுவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு '' என்றும், [2] '' தண்ணருவிவேங்கடமே வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு '' என்றும் இருவகையான உலகங்களில் உள்ளார்க்கும் சேமித்துவைத்த நிதிபோலே அடையத்தக்க பேருக இருக்கின்ற திருமலையிலே, போகின்ற - [3] '' போகின்ற காலங்கள் போயகாலங்கள் போகுகாலங்கள் தாய்தந்தை உயிர் ஆகின்ருய் '' என்றும், ஏழுலகுக்கு உயிர் - [4] '' கண்ணுய் ஏழுலகுக்கு உயிராய எங்கார்வண்ணனே '' என்றும், சொல்லுகிறபடியே எல்லாக் காலங்களிலும் எல்லா உயிர்களுக்கும் எல்லாவித உறவுமாய்க் கொண்டு எல்லார்க்கும் உயிராக இருக்கின்ற அந்தர்யாமியினுடைய குணமாக இருப்பதாய், பாசம்வைத்த நிகரில் வாத்சல்யம் - [5] '' என் கண் பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதி '' [6] '' நிகரில் புகழாய் '' என்கிறபடியே மிகவும் தண்ணியனுய் இருக்கின்ற என்பக்கலிலே அன்பினை வைத்தான் என்றும், ஒப்பிலாப்புகழை உடையவனே என்றும் சொல்லப்பட்ட வாத்சல்யம், உஜ்வலம் - '' பரஞ்சுடர்ச்சோதி '' என்று வடிவிலே தொடைகொள்ளலாம்படி பிரகாசமாய் இருக்கும் என்கை.

[7] '' பாசம் வைத்த-நிகரில் வாத்சல்யம் '' என்கையாலே '' ஒழிவில் காலமெல்லாம் '' என்ற திருவாய்மொழியினையும், '' உலகம் உண்ட பெருவாயா '' என்ற திருவாய்மொழியையும் சேர்த்துப் பிடித்து அருளிச்செய்தமை தோற்றுகிறது.

கோயிலுக்குப் பின்னர், திருமலையைச் சொல்லுகை தேட்டமாகில், திருவேங்கடமலை அழகர்மலை என்னும் இரண்டு மலைகளும் ஒவ்வாதோ? தெற்குத் திருமலையான அழகர்மலை விஷயமான ''கிளர்

---

1. திருவாய். 1. 8: 3. 2. நான்முகன்திருவந். 45.
3. திருவாய். 2. 6: 10. 4. பெரியதிருமொழி, 1. 9: 10.
5. திருவாய். 3. 3: 4. 6. திருவாய். 6. 10: 10.

ஈண்டு, ' நிகரில் புகழ் ' என்பது வாத்சல்ய குணத்தைக் குறிக்கின்றது.

7. ' பாசம் வைத்த ' என்ற பாசுரப்பகுதி, '' ஒழிவில் காலமெல்லாம் '' என்ற திருப்பதிகத்திலும், ' நிகரில் புகழாய் ' என்ற பகுதி '' உலகமுண்ட பெருவாயா '' என்ற திருப்பதிகத்திலும் இருப்பதனுல் இங்ஙனம் அருளிச்செய்கிறுர்.

ஒளி இளமை" என்ற திருவாய்மொழி இரண்டாம்பத்தில் இருந்து கொண்டிருக்க, மூன்றாம்பத்திலே உள்ள "ஒழிவில் காலமெல்லாம்" என்ற திருவாய்மொழியிற் சொன்ன திருவேங்கடத்தை முன்னர் அருளிச்செய்வான்என்? என்னில், பரத்துவம் முதலான நிலைகள் ஒவ்வொன்றிற்கே உரியதான குணங்கள் விளங்கிக்கொண்டிருக்கின்ற திவ்யதேசங்களை அருளிச்செய்கிற இடம் ஆகையாலே, அழகர் மலையில் பிரகாசிக்கின்ற குணம் இதற்குச் சேர்த்தி இல்லாமை கொண்டு, "கிளரொளி இளமை" என்ற திருவாய்மொழியை [1] "செஞ்சொற்கவிகாள்" என்ற திருவாய்மொழியோடு சேர்த்து அருளிச்செய்வதாக விட்டுவைத்து, திருவேங்கடத்தை முதலாக அருளிச்செய்கிறாரித்தனை. (11)

## 161

*[2] உபயப் பிரதாந பிரணவமான உறைகோயிலில்
எத்தேவும் என்னும் பரேசத்வம் பொலியும்.*

என்பது, சூத்திரம்.

வியாக் :— "ஒழிவில் காலம்" என்ற திருவாய்மொழிக்குப் பின்பு திவ்விய தேசம் சம்பந்தமான திருவாய்மொழி "ஒன்றும் தேவும்" என்னும் திருவாய்மொழியாகையாலே அத்திருவாய்மொழியில் பேசப்படுகிற [3] திருநகரியில் பிரகாசிக்கின்ற குணத்தை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, உபயப் பிரதாந பிரணவமான - [4] "ஓம் என்று சொல்லி, ஆத்மாவினைத் தியானம் செய்யக் கடவன்" என்று சொல்லுகிற

---

1. 'செஞ்சொற்கவிகாள்' என்ற திருப்பதிகம், திருமாலிருஞ்சோலைமலையைப் பற்றியது.

2. 'உபயப்பிரதாந பிரணவம்' என்றது ஜீவாத்மாவும் பரமாத்மாவுமான இருவருடைய முதன்மையையும் பேசுகிற பிரணவம் என்றபடி. இதன் விரிவை வியாக்கியானத்திற் காண்க. 'பிரணவமான உறைகோயில்' என்றது, நம்மாழ்வாருடையவும் பொலிந்து நின்ற பிரானுடையவும் முதன்மை தோற்ற நின்ற கோயில் என்றபடி. இதனால் ஆழ்வார் திருநகரியைக் குறித்தபடி. "திருக்குருகூரதனுள் பரன்", "திருக்குருகூரதனுள் ஈசன்" என்னும் இரண்டு திருப்பாசுரப் பகுதிகளையும் திருவுள்ளம் பற்றிப் 'பரேசத்வம்' என்கிறார். பர ஈசத்வம் - பரேசத்வம். இறைமைத்தன்மை என்பது பொருள். 'பொலிந்து நின்ற பிரான்' என்ற அவ்விறைவனது திருநாமத்திற்குச் சேரப் 'பொலியும்' என்கிறார்.

3. திருநகரி - திருக்குருகூர்.

4. "ஓம் இதி ஆத்மாநம் யுஞ்ஜீத" என்பது பிரமாணம்.



படியே சொல்லாற்றலின் முதன்மையால் உயிரைக் காட்டுகின்ற சொல்லாயும், [1] "ஓம் என்பது பகவானாகிய விஷ்ணு" என்று சொல்லுகிறபடியே பொருள் ஆற்றலின் முதன்மையால் இறைவனைக் காட்டுகின்ற சொல்லாயும் இருந்துகொண்டு, சீவாத்மா பரமாத்மா என்னும் இருவருடைய முதன்மையையும் காட்டுகின்ற ஓம் என்னும் பிரணவம் போலே, ஆழ்வாருடையவும் பொலிந்து நின்ற பிரானுடையவுமான ஆணை இரு புரிந்து நடக்கையாலே இருவருடைய முதன்மையும் தோற்றும்படி இருப்பதாய், உறைகோயில் - [2] "அவன்மேவி உறைகோயில்" என்கிறபடியே இவ் வுலகமக்கள் இழவினை நினைந்து பரமபதத்தில் உள்வெதுப்போடே இருக்குமாறுபோல் அன்றிக்கே அவர்களுக்கு அணித்தாக வந்து நிற்கப் பெறுகையாலே உள்வெதுப்பு நீங்கி வசிக்கின்ற தலமான திருநகரியில், எத்தேவும் என்னும் - [3] "எத்தேவும் எவ்வுலகங்களும் மற்றும் தன்பால், மறுவில் மூர்த்தியோடொத்து இத்தனையும் நின்றவண்ணம் நிற்கவே, திருக்குருகூரதனுள், மாணுருவாகிய நீள்குடக்கூத்தன்" என்கிறபடியே தன்னையொழிந்த எல்லாப் பொருள்களும் தனக்கே உரியதான விக்கிரகத்தைப் போன்று தனக்குப் பிரகாரமாம்படி இருக்கிற இறைமைத் தன்மையோடுகூடத் திருக்குருகூரிலே எளியனாய் வந்துநின்றான் என்று சொல்லப்பட்ட, பராஈசத்வம் - [4] "திருக்குருகூர் அதனுள், பரன்" என்றும், [5] "திருக்குருகூர் அதனுள், ஈசன்" என்றும் வருகின்றவாறே எளியனான நிலையிலே பிரகாசிக்கின்ற பரத்துவலக்ஷணமான ஈச்வரத் தன்மை, பொலியும் - [6] "பொலிந்துநின்ற பிரான்" என்கையாலே விளங்காநிற்கும் என்கை. (12)

## 162

**[7] வைஷ்ணவ வாமநத்தில் நிறைந்த நீலமேனி
யின் ருசி ஜநக விபவ லாவண்யம் பூர்ணம்.**

என்பது, சூத்திரம்.

---

1. "ஓங்காரோ பகவாந் விஷ்ணு:"
என்பது, பிரமாணம்.

2. திருவாய். 4. 10: 2.    3. திருவாய். 4. 10: 10.

4. திருவாய். 4. 10: 3.    5. திருவாய். 4. 10: 4.

6. திருவாய். 4. 10: 5.

7. வைஷ்ணவ வாமநம் - திருக்குறுங்குடி. ருசி ஜனக விபவ லாவண்யம் - ருசியை உண்டாக்குகின்ற இராமகிருஷ்ணாதி அவதாரங்களின் அழகு.

வியாக்:— இதற்குப்பின்பு திவ்விய தேச சம்பந்தமான திருவாய் மொழி "எங்ஙனேயோ" என்பதாகையாலே அத்திருவாய்மொழியிற் கூறிய திருக்குறுங்குடியில் பிரகாசிக்கின்ற குணத்தை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

வைஷ்ணவ வாமநத்தில் - திருக்குறுங்குடியில் என்னாமல் 'வைஷ்ணவ வாமநத்தில்' என்றது, கருத்துடையடை. அதாவது, வாமன அவதாரத்தில் தன்னுடைமை பெறுகைக்கு இரப்பாளனான் போலே, இரப்பாளனாய் நின்று [1] ஸ்ரீ பாஷ்யகாரர் பக்கலிலே வேதாந் தார்த்தம் கேட்டுச் சிஷ்யனாய் 'நாமும் நம் இராமாநுசனையுடை யோம்' என்கையாலே ஸ்ரீ வைஷ்ணவநம்பி என்று திருப்பெயராய், வாமன அவதார அம்சமாகப் புராணத்தாலே கூறப்பட்டவராயிருக்கிற [2] நம்பியுடைய திருப்பதி என்பது அறிவித்தபடி. அன்றிக்கே, [3] "அறி யக் கற்று வல்லார் வைட்டணவர் ஆழ்கடல் ஞாலத்துள்ளே" என்று இத் திவ்வியதேச விஷயமான திருவாய்மொழியைக் கற்றவர்கள் வைஷ்ணவர் ஆவர் என்கையாலே, வைஷ்ணவர்களுடையதாய் வாமநக்ஷேத்திரமாய் இருக்கிற தேசம் ஆகையாலே என்னவுமாம். வாமந அவதாரத்தை ஈண்டுக் கூறியதற்குப் பயன், 'விபவ லாவண்யம் பூர்ணம்' என்றதற்கு உறுப்பாக விபவத்தின் சம்பந்தத்தை உணர்த்து கையும், [4] 'குறியவன்குடி - குறுங்குடி' என்னும் பொருளைத் தெரி விக்கையுமாம்.

ஆக, இப்படியிருந்துள்ள திருக்குறுங்குடியுள், நிறைந்த நீல மேனியின் - [5] "நிறைந்த சோதிவெள்ளம் சூழ்ந்த நீண்டபொன்மேனி யொடும், நிறைந்து என்னுள்ளே நின்றொழிந்தான்" என்றும், [6] "நீல மேனியும் நான்கு தோளும் என்னெஞ்சம் நிறைந்தனவே" என்றும் சொல்லுகிறபடியே இவர்திருவுள்ளத்திலே வேறு ஒன்றற்கு இடம் இல்லாதபடி பிரகாசிக்கின்ற காளமேகம் போன்ற நிறம் அமைந்த விக்கிரகத்தினுடைய, ருசி ஜநகம் - [7] "செல்கின்றது என்னெஞ்சம்" என்னும்படி மேன்மேலும் அநுபவ ருசியை விளைக்குமதாய், விபவ

1. இங்குக் கூறிய வரலாற்றினை, குருபரம்பரையில் எம்பெரு மானார் வைபவத்தில் காண்க.

2. 'நம்பி' என்றது, அந்நகரத்தில் எழுந்தருளியிருக்கிற இறைவன் திருப்பெயர்.

3. திருவாய். 5. 5: 11.

4. குறியவனான வாமன பகவானுடைய குடி - குறுங்குடி என்றபடி.

5. திருவாய். 5. 5: 7. 6. திருவாய். 5. 5: 6.

7. திருவாய். 5. 5: 1.



லாவண்யம் - [1] "உருவத்தையுடையவன் அழகுள்ளவன் ஒளியையுடை யவன்" என்றும், [2] "ஸ்ரீ ராமபிரானுடைய உருவத்தின் அமைப்பை யும் அழகையும் மிருதுத்தன்மையையும் பார்த்தார்கள்" என்றும் அவதாரத்தில் பிரகாசிக்குமதாகச் சொன்ன சமுதாய சோபையான அழகு, பூர்ணம் - [3] "நிறைந்த சோதிவெள்ளம் சூழ்ந்த" என்கை யாலே நிறைந்திருக்கும் என்கை. (13)

## 163

[4] ருசி விவசர்க்குப் பாதமே சரண் ஆக்கும் ஔதார்யம், வானமாமலையிலே கொழுந்துவிடும்.

என்பது, சூத்திரம்.

வியாக்:—இப்படிப் பரத்துவம் முதலிய நிலைகளுக்கே உரியன வான ஒரோகுணங்கள் முதன்மைபெற்று விளங்குகின்ற திவ்விய தேசங்களை அருளிச்செய்தபின்னர் மற்றும் உண்டான குணங்களில் ஒரொன்று முதன்மைபெற்றுப் பிரகாசிக்கின்ற திவ்வியதேசங்களைச் சிரீவரமங்கை முதலாகத் திருப்பேர் என்னும் திவ்வியதேசம் எல்லை யாகத் திருவாய்மொழி அடைவிலே அருளிச்செய்கிறார் மேல்:

அதாவது, ருசி விவசர்க்கு - மேலேகூறிய லாவண்யத்தாலே (அழகு) ஒருவராலும் தடுக்க ஒண்ணாதபடி பிறந்த ருசியாலே பரவச ராய் வேறுகதி இல்லாதவர்களுக்கு, பாதமே சரண் ஆக்கும் - [5] "ஆறு

1. "ரூபவாந் ஸுபக: ஸ்ரீமாந்"
என்பது, ஸ்ரீராமா.சுந். 34: 30.

2. ரூபஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் ஸுவேஷதாம்
தத்ருஶு: விஸ்மிதாகாரா ராமஸ்ய வநவாஸிந:
என்பது, ஸ்ரீராமா. ஆரண். 1: 13.

3. திருவாய். 5. 5: 7. "நிறைந்த சோதி" என்றதனைத் திருவுள் ளம்பற்றிப் 'பூர்ணம்' என்கிறார் என்றபடி.

4. ருசிவிவசர் - மேற்கூறிய அழகின் ருசியினாலே பரவசப்பட்ட வர்கள். அதாவது, தன்வசம் இழந்தவர்கள் என்றபடி. ஔதார்யம் - வள்ளல் தன்மை. திருவாய்மொழியில் வருகின்ற "கருளப்புட்கொடி சக்கரப்படை வானநாட! எம் கார்முகில் வண்ண!" என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம்பற்றி 'ஔதார்யம்' என்கிறார். "என்னெஞ்சிடம் கொண்ட வானவர் கொழுந்தே!" என்ற திருப்பாசுரப் பகுதியைத் திரு வுள்ளம்பற்றிக் 'கொழுந்து விடும்' என்கிறார்.

5. திருவாய். 5. 7: 10.

எனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்'' என்னும்படி திருவடிகளையே உபாயமாகக் கொடுக்கும், ஔதார்யம் - [1] ''கார்முகில் வண்ணன்'' என்னும் ஔதார்யகுணம், வானமாமலையிலே கொழுந்துவிடும் - [2] ''சிரீவரமங்கலத்தவர் கைதொழ உறை, வானமாமலை'' என்கிறபடியே சிரீவரமங்கையில் எழுந்தருளியிருக்கின்ற வானமாமலைபக்கலிலே, [3] ''வந்தருளி என்னெஞ்சு இடம் கொண்ட வானவர் கொழுநதே'' என்கிறபடியே தானேவந்து இடம் கொண்டு தன்னைக் கொடுக்கும்படி கொழுந்துவிட்டு வளரும் என்கை. (14)

## 164

[4] *களைகண் அற்றாரை உருக்கும் மாதுர்யம், குடமூக்கிலே பிரவஹிக்கும்.*

என்பது, சூத்திரம்.

வியாக் :—களைகண் அற்றாரை - [5] ''களைவாய்துன்பம்; களையாதொழிவாய்; களைகண் மற்றிலேன்.'' என்கிறபடியே காப்பாற்றத் தக்க தெய்வம் வேறொன்றையுடையோம் அல்லோம் என்னும் திடமான எண்ணமுடையவர்களை, உருக்கும் மாதுர்யம் - [6] ''நீராய் அலைந்து கரைய உருக்குகின்ற நெடுமாலே'' என்கிறபடியே உருக்குலையச்செய்கின்ற ஆராவமுதான இனிமை, குடமூக்கிலே பிரவஹிக்கும் - [7] ''குடமூக்கு'' என்ற கும்பகோணத்திலே மேன்மேலும் ஆராமல் உண்ணும்படி பெருகாநிற்கும் என்கை. (15)

---

1. *திருவாய். 5. 7. 3.*　　2. *திருவாய். 5. 7: 6.*

*சிரீவரமங்கல நகர் என்று அத்திவ்யதேசத்திற்குப் பெயர். வானமாமலை என்பது, அங்கு எழுந்தருளியிருக்கின்ற இறைவன் திருப்பெயர்.*

3. *திருவாய். 5. 7: 7.*

4. *''குடமூக்குக் கோயிலாக்கொண்டு'' (இரண்டாந் திருவந். 97) என்ற பூதத்தாழ்வார் திருப்பாசுரத்தைத் திருவுள்ளம்பற்றிக் 'குடமூக்கு' என்கிறார். குடமூக்கு - கும்பகோணம். 'ஆராவமுதன்' என்பது அப்பெருமான் திருப்பெயராதலின் 'மாதுரியம்' என்கிறார். மாதுரியம் - இனிமை. ஆராவமுது ஆகையாலே 'பிரவஹிக்கும்' என்கிறார். பிரவஹித்தல் - பெருக்கு எடுத்தல்.*

5. *திருவாய். 5. 8: 8.*　　6. *திருவாய். 5. 8: 1.*

7. *இரண்டாந் திருவந். 97.*



## 165

[1] மெலிவிலும் சேமம் கொள்விக்கும் கிருபை, தென்னகரிலே நித்யம்.

என்பது, சூத்திரம்.

வியாக் :—மெலிவிலும் - மேலேகூறிய எல்லையில்லாத இனிமையையுடைய ஆராவமுதை விரைவிலே கிட்டி அநுபவிக்கப் பெருமையாலே [2] ''வைகலும் வினையேன் மெலிய'' என்கிறபடியே நாள்தோறும் மெலியுமளவிலும், சேமம் கொள்விக்கும் - [3] ''அடிமேல், சேமம்கொள் தென்குருகூர்ச் சடகோபன்'' என்கிறபடியே காப்பாற்றுமவன் அவனே என்று துணிவுகொண்டிருக்கும்படி செய்யும், கிருபை - [4] ''பெருமானது தொல்லருளே'' என்னும் அருளானது, தென்னகரிலே நித்யம் - [5] ''திருவல்லவாழ், சேமம்கொள் தென்னகரி''லே நித்தியமாக இருக்கும்.

தொன்மை பழமை ஆகையாலே, 'தொல்' என்பது ஈண்டு என்றும் உள்ள தன்மையைக் காட்டுகிறது. (16)

## 166

[6] வியவஸாயஜ்ஞர் ரக்ஷணஸ்தைர்யம், பம்போத்தர தேசஸ்தம்.

என்பது, சூத்திரம்.

---

1. *''திருவல்லவாழ் சேமம்கொள்தென்னகர்மேல்'' என்ற திருப்பாசுரத்தை அடிஒற்றித் 'தென்னகர்' என்கிறார். தென்னகர் - திருவல்லவாழ் என்னும் திவ்வியதேசம். ''சுழலில்மலி சக்கரப்பெருமானது தொல்லருளே'' என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம்பற்றி 'நித்யம்' என்கிறார். தொல் - பழமை. அதாவது என்றும் உள்ள தன்மை. சேமம்-காவல்.*

2. *திருவாய். 5. 9: 1.*　　3. *திருவாய். 5. 9: 11.*

4. *திருவாய். 5. 9: 9.*　　5. *திருவாய். 5. 9: 11.*

6. *வியவஸாயஜ்ஞர் ரக்ஷணஸ்தைர்யம் - வியவசாயஜ்ஞர்களைக் காப்பாற்றுவதில் உறுதி. வியவஸாயஜ்ஞர் - இறைவனுகிய அவனுடைய எண்ணத்தை உள்ளபடி அறிந்திருப்பவர்கள். ஸ்தைர்யம் - அடியார்களை எக்காலத்தும் கைவிடமாட்டாத உறுதி. ''புணர்த்த பூந்தண் துழாய்முடி நம்பெருமானைக் கண்டு'' என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம் பற்றி 'ரக்ஷணஸ்தைர்யம்' என்கிறார். அடியார்களைக் காப்பாற்றும் பொருட்டே தனிமாலை இட்டிருப்பவன் என்பது அத்திருப்பாசுரப் பகுதிக்குப் பொருள். பம்போத்தரம் - பம்பை என்னும் நதிக்கு வடகரையில் உள்ளது, திருவண்வண்டூர் என்னும் திவ்யதேசம். தேசஸ்தம் - நகரிலே நிலைபெற்று நிற்கும்.*

வியாக் :— வியவசாயஜ்ஞர் ரக்ஷணம் - [1]"ஸ்ரீராமபிரானுடையவும் இலக்குமணனுடையவும் எண்ணங்களின் உறுதியை அறிந்த பிராட்டியானவள், மழைக்காலத்தில் கங்கையைப் போன்று, அதிகமாகக் கலங்கவில்லை" என்று சொல்லப்பட்ட பிராட்டியைப்போலே [2]"ஏறுசேவகனுர்க்கு என்னையும் உளள் என்மின்களே" என்கிறபடியே துன்புறுகின்றவர்களைக் காப்பாற்றுவதில் தன்னுடைய உறுதியான எண்ணத்தை உண்மையாக அறிந்திருக்குமவர்களைக் காப்பாற்றுவதில், ஸ்தைர்யம் - [3]"வெறுப்பு இல்லாதவனுய் என்னை வந்து அடைந்த இவனை விடமாட்டேன்" என்றும், [4]"காப்பாற்றுதல் எனக்கு விரதம்" என்றும் சொல்லப்படுகின்றவாறே வேண்டியவர்களாலும் அசைக்கஒண்ணுதபடியிருக்கும் அவனுடைய ஸ்தைரிய குணம், பம்ப உத்தர தேசஸ்தம் - [5]"தேறு நீர்ப்பம்பை வடபாலைத் திருவண்வண்டூர்" என்கிறபடியே பம்பையாகிற ஆற்றுக்கு வடகரையான திருவண்வண்டூரிலே நிலைபெற்று நிற்கும் என்கை. (17)

## 167

[6] விளம்ப விரோதம் அழிக்கும் விருத்த கடநா
சாமர்த்தியம், நன்னகரிலே விஸ்தீர்ணம்.

என்பது, சூத்திரம்.

---

1. ராமஸ்ய வ்யவஸாயஜ்ஞா லக்ஷ்மணஸ்யச தீமத:
நாத்யர்த்தம் க்ஷுப்யதே தேவீ கங்கேவ ஜலதாகமே.
என்பது, ஸ்ரீராமா. சுந். 16: 4.

2. திருவாய். 6. 1: 10.

3. "மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயம் கதம்சந"
என்பது, ஸ்ரீராமா. யுத். 18: 3.

4. "ஏதத் வ்ரதம் மம"
என்பது, ஸ்ரீராமா. யுத். 18: 33.

5. திருவாய். 6. 1: 10.

6. விளம்ப விரோதம் - விளம்பம் காரணமாக வந்த விரோதத்தை. விளம்பம் - காலதாமதம். அழிக்கும் சாமர்த்தியம் எனக் கூட்டுக. சாமர்த்தியம் - ஆற்றல். 'விருத்தகடநா' என்பது சாமர்த்தியத்திற்கு அடைமொழி. விருத்தம் - மாறுபட்டவைகள். கடநா - சேர்த்தல். அதாவது, சேராதனவற்றைச் சேர்க்கும் ஆற்றல் என்றபடி. 'நன்னகர்' என்றது, திருவிண்ணகரத்தைக் குறித்தபடி. "பல்வகையும் பரந்த" என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம்பற்றி 'விஸ்தீர்ணம்' என்கிருர். விஸ்தீர்ணம் - பரப்பு. இறைவன் திருவிண்ணகரிலே தன்னுடைய அகடிதகடநா சாமர்த்தியத்தைக் காட்டியே ஆழ்வார் நாயகியின் பிரணய ரோஷத்தைத் தவிர்த்தனனுதலால் அந்தப் பிரணயரோஷத்தை நீக்கிய விருத்தகடநா சாமர்த்தியம் திருவிண்ணகரிலே விளங்கும் என்கிருர். அகடிதகடநா சாமர்த்தியம் - சேராதனவற்றையும் சேர்த்துவைக்கும் ஆற்றல்.



வியாக் :— விளம்ப விரோதம் - முறையிலே பெறுவோம் என்று நினையாமல் படுகிற பதற்றத்துக்குத் தகுதியாகக் கடுகவந்து முகம் காட்டாமல் காலம் தாழ்த்து வருகையாலே [1]"போகு நம்பீ" என்றும், [2]"கழகம் ஏறேல் நம்பீ" என்றும் கூறும்படி பிரணய கோபத்தால் பிறந்த விரோதத்தை, அழிக்கும் விருத்த கடநாசாமர்த்தியம்- [3]"அழித்தாய் உன் திருவடியால்" என்று அழித்துப் போகட்ட மாறுபாடுகளைச் சேர்க்கவல்ல ஆற்றல், நன்னகரிலே விஸ்தீர்ணம் - [4]"நல்குரவும் செல்வும்" என்று தொடங்கித் தன்னில்தான் சேராதவற்றைச் சேர்த்துக்கொண்டு நிற்கிற மாறுபாட்டோடு கூடிய உலகின் சேர்க்கையைப் பிரகாசிப்பித்த [5]"திருவிண்ணகர் நன்னகரே" என்கிறபடியே நன்னகரான திருவிண்ணகரிலே [6]"பல்வகையும் பரந்த" என்கிறபடியே பரந்திருக்கும் என்கை. (18)

## 168

[7]கடித கடக விகடநாபாந்தவம், அவ்வூரிலே
துவி குணம்.

என்பது, சூத்திரம்.

வியாக் :— கடித கடக - [8]"பிரான் இருந்தமை காட்டினீர்" என்கிறபடியே சேர்க்கின்றவர்களாலே தன்பக்கல் சேர்க்கப்பட்டவர்களுக்கும் அங்ஙனம் சேர்க்கின்றவர்களுக்கும், விகடநாபாந்தவம் - [9]"இவளை நீர் இனி அன்னைமீர் உமக்கு ஆசை இல்லை விடுமினோ" என்னும்படி பொருந்தாமையைச் செய்கின்றதான, [10]"தேவபிரானையே, தந்தை தாய் என்று அடைந்த" என்னும்படியான அவனுடைய உற

---

1. திருவாய். 6. 2: 1. 2. திருவாய். 6. 2: 6.
3. திருவாய். 6. 2: 9. 4. திருவாய். 6. 3: 1.
5. திருவாய். 6. 3: 2. 6. திருவாய். 6. 3: 1.

7. கடிதர் - சேர்க்கப்படுகிறவர்கள். கடகர் - சேர்ப்பவர்கள். விகடநாபாந்தவம் - பொருந்தாமையைச் செய்கின்ற உறவுமுறை. விகடனை - பொருந்தாமை. அவ்வூர் - தொலைவில்லிமங்கலம். "அவ்வூர்த்திருநாமம் கேட்பது சிந்தையே" என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம்பற்றி 'அவ்வூர்' என்கிருர். இறைவன் இங்கு, தேவபிரானும் அரவிந்தலோசனனுமாக நின்று இருந்து உறையும் காரணம்பற்றி இந்தத் திவ்வியதேசம் 'இரட்டைத் திருப்பதி' என்று வழங்கப்பெறுதலால், அதற்குத்தக 'துவி குணம்' என்கிருர்.

8. திருவாய். 6. 5: 5. 9. திருவாய். 6. 5: 1.
10. திருவாய். 6. 5: 11.

வுத் தன்மை, அவ்வூரிலே துவிகுணம் - [1] "அவ்வூர்த் திருநாமம் கேட்பது சிந்தையே" என்று [2] தோழியானவள், திருத்தொலைவில்லிமங்கலம் என்று தான் சொல்லும்போது தலைவி சொன்னாற்போல் இனிதாய் இராமையாலே 'அவ்வூர்' என்று சொன்ன தேசத்திலே தேவ பிரானும் அரவிந்தலோசனனுமாய் நின்று இருந்து உறையும் இரட்டைத் திருப்பதியாகையாலே இரட்டித்திருக்கும் என்கை. விகடநா பாந்தவம் என்றது, பொருந்தாமையைச் செய்கின்ற உறவு என்றபடி. (19)

## 169

[3] கைம்முதல் இழந்தார் உண்ணும் நிதியின் ஆபத்சகத்வம், புகும் ஊரிலே சம்ருத்தம்.

என்பது, சூத்திரம்.

---

1. திருவாய். 6. 5: 10.

நாம் பந்துக்களாக நினைத்திருக்கும் அனைவரும் போலி பந்துக்கள் என்பதும், இறைவன் ஒருவனே உண்மையான பந்து என்பதும் நூற் கொள்கை. இவ்விஷயம் தொலைவில்லிமங்கலத்தைப்பற்றிய திருப்பதிகத்தில் "சிந்தையாலும் சொல்லாலும் செய்கையாலும் தேவபிரானையே, தந்தை தாய் என்று அடைந்த வண் குருகூர்ச் சடகோபன்" என்ற திருப்பாசுரத்தால் மெய்ப்பிக்கப்பட்டது. ஆதலால், இத்திவ்யதேசத்தில் இறைவனுடைய பாந்தவகுணம் விளங்குகின்றது என்கிறார். இங்குக் 'கடிதர்' என்றது, ஆழ்வாரை. 'கடகர்' என்றது, தோழிமாரை. இவர்களுக்குள் பரஸ்பரம் பொருந்தாமையை விளைத்திட்டது அந்தப்பகவானுடைய உறவு. "தொலைவில்லிமங்கலம் தொழும், இவளை நீர் இனி அன்னைமீர்! உமக்கு ஆசையில்லை விடுமினோ" என்பதுபோன்ற திருப்பாசுரப் பகுதிகளால் தெளிவு.

2. பட்டர் "அழகிய மணவாளப்பெருமாள்" என்றும், சோமாசியாண்டான் "எம்பெருமானார்" என்றும், அனந்தாழ்வான் "திருவேங்கடமுடையான்" என்றும், ஆழ்வார்நாயகி "தொலைவில்லிமங்கலம்" என்றும் சொல்லும்போது உண்டாகும் இனிமை, இவள் சொல்லும்போது உண்டாகாமையாலே 'அவ்வூர்' என்கிறாள் என்பது கருத்து.

3. திருக்கோளூர் இறைவனுக்கு வைத்தமாநிதிப்பெருமாள் என்பது திருப்பெயராதலாலும், நிதி ஆபத்திற்கு உதவுமதாகையாலும், மேல் திருப்பதிகத்தால் கைம்முதல் இழந்தமை கூறி, 'உண்ணும் சோறும்' என்று இத்திருப்பதிகம் தொடங்குவதனாலும் இத்திவ்ய தேசத்தில் ஆபத்சகத்வம் என்ற குணம் விளங்கும் என்கிறார். கைம்முதல் இல்லாதவர்கள் எடுத்து உண்ணும் தகையதாக இருப்பது நிதி ஆகையால், இந்த வைத்தமாநிதியும், மேல் திருப்பதிகத்தில் "ஏலக்குழலி இழந்தது சங்கே" என்று



வியாக் :— கைம்முதல் இழந்தார் - [1] "ஏலக்குழலி இழந்தது சங்கே" என்று தொடங்கி [2] "கற்புடையாட்டி இழந்தது கட்டே" என்று அடையத்தக்க தலைவனை அடையாத காரணத்தால் உண்டான துன்பத்தால் வந்த பரவசப்பட்டிருத்தலாலே போலிப்பேறுகளும் போலி வழிகளும் எல்லாம் தன்னடையே விட்டுக் கழிகையாலே கைம்முதல் அற்றவர்கள், உண்ணும் - [3] "உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்" என்கிறபடியே தாரக போஷக போக்கியங்கள் எல்லாம் தானேயாக உண்ணும், நிதியின் - [4] "வைத்த மாநிதியாம் மதுசூதனை" என்கிறபடியே ஆபத்துக் காலத்தில் உதவுவதற்காக ஈட்டி வைத்த மகாநிதி போலே இருக்கிறவனுடைய, ஆபத்சகத்வம் - ஆபத்துக்குதவுதலாகிற பெருங்குணம், புகும் ஊரிலே - [5] "திண்ணம் என் இளமான் புகுமூர் திருக்கோளூரே" என்று பேற்றிலே ருசி பிறந்தார்க்குச் சென்று சேரத்தக்கதாக இருக்கும் திருக்கோளூரிலே, சம்ருத்தம் - [6] "செல்வம் மல்கி அவன் கிடந்த திருக்கோளூர்க்கே" என்கிறபடியே காப்பாற்றத்தகும் பொருள்களைக் காப்பாற்றுதலே தனக்கு எல்லை இல்லாத செல்வமாக நினைத்து வந்து கிடக்கையாலே நிறைந்திருக்கும் என்கை. (20)

## 170

[7] சென்று சேர்வார்க்கு உசாத்துணை அறுக்கும் சௌந்தர்யம், மாநகரிலே கோஷிக்கும்.

என்பது, சூத்திரம்.

---

தொடங்கி, "கற்புடையாட்டி இழந்தது கட்டே" என்று முடிக்கையாலே போலி உபாய உபேயங்கள் எல்லாம் தன்னடையே விட்டுக் கழிந்தமை பெறப்படும். இத்திருப்பதிகத்தில் தொடங்கும் முதற்றிருப்பாசுரம் 'உண்ணுஞ் சோறு' என்பதாகையாலே 'உண்ணும் நிதி' என்கிறார். "திண்ணம் என் இளமான் புகுமூர் திருக்கோளூரே" என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம்பற்றிப் 'புகுமூர்' என்கிறார். "செல்வமல்கியவன் கிடந்த கோளூர்" என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம்பற்றி 'சம்ருத்தம்' என்கிறார். சம்ருத்தம் - நிறைவு.

1. திருவாய். 6. 6: 1.
2. திருவாய். 6, 6: 10.
3. திருவாய். 6. 7: 1.
4. திருவாய். 6. 7: 11.
5. திருவாய். 6. 7: 1.
6. திருவாய். 6. 7: 4.
7. இத்திவ்ய தேசத்தின் திருப்பதிகத்தில் "செங்கனிவாயின் திறத்ததாயும் செஞ்சுடர் நீண்முடி தாழ்ந்ததாயும், சங்கொடு சக்கரம் கண்டுகந்தும் தாமரைக் கண்களுக்கு அற்றுத்தீர்ந்தும்" என்று வருகின்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம்பற்றி, இத்திவ்ய தேசத்தில் சௌந்தர்ய குணம் விளங்கும் என்கிறார். "தென் திருப்பேரெயில்மாநகரே" என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுளம்பற்றி 'மாநகர்' என்கிறார். "எங்கும் எழுந்த நல்வேதத்தொலி நின்றோங்கும்" என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம்பற்றிக் 'கோஷிக்கும்' என்கிறார். கோஷிக்கும் - ஒலிக்கும்.

வியாக்:— சென்று சேர்வார்க்கு - [1] "தென்திருப்பேரெயில் சேர்வன் சென்றே" என்கிறபடியே முறையிலே அடைதல் பொருத அன்பின் மிகுதியாலே தோழிமார் முதலியவர்களுடைய வார்த்தைகளைக் கேளாமல் சென்று சேர்வது என்னும்படியானவர்களுக்கு, உசாத்துணை அறுக்கும் - [2] "என்னெஞ்சினாரும் அங்கே ஒழிந்தார் உழந்து இனி யாரைக் கொண்டு என் உசாகோ" என்னும்படி உசாத்துணையான நெஞ்சினைக் கவரும்படியான, சௌந்தர்யம் - [3] "செங்கனிவாயின் திறத்ததாயும் செஞ்சுடர் நீள்முடித் தாழ்ந்ததாயும், சங்கொடு சக்கரம் கண்டு உகந்தும் தாமரைக் கண்களுக்கு அற்றுத் தீர்ந்தும்" என்பது போன்றவைகளால் சொல்லப்பட்டவனுடைய அழகானது. மாநகரிலே கோஷிக்கும் - [4] "தென்திருப்பேரெயில் மாநகரே" என்கிறபடியே மாநகரமான தென்திருப்பேரெயிலிலே [5] "எழுந்த நல் வேதத்து ஒலி நின்று ஓங்கு" என்கிறபடியே எம்பெருமானை அநுபவித்த மிக்க மகிழ்ச்சியினாலே அங்குள்ளார் பாடுகிற சாமவேத ஒலியிலே தெரியும் என்றபடி. (21)

## 171

[6] பிரவண சித்தம் பரத்வவிமுகம் ஆக்கும் ஆநந்த
விருத்தி, நீணகரிலே.

என்பது, சூத்திரம்.

வியாக்:— பிரவண சித்தம் - [7] "தீவினை உள்ளத்தின் சார்வல்லவாகித் தெளிவிசும்பு ஏறலுற்றால், திருவாறன்விளையதனை மேவி வலம்

---

1. திருவாய். 7. 3: 8.
2. திருவாய். 7. 3: 4.
3. திருவாய். 7. 3: 3.
4. திருவாய். 7. 3: 9.
5. திருவாய். 7. 3: 4.
6. நீணகர் - திருவாறன்விளை. "நீணகரமதுவே மலர்ச்சோலைகள் சூழ் திருவாறன்விளை" என்னும் திருப்பாசுரப்பகுதியை நோக்கி அதனை 'நீணகர்' என்கிறார். இங்கு விளங்கும் குணம் 'ஆனந்த வளர்ச்சி'. "இன்பம் பயக்க எழில் மலர்மாதரும் தானும் இவ்வேழுலகை, இன்பம் பயக்க இனிதுடன் வீற்றிருந்தாள்கின்ற எங்கள் பிரான்" என்ற திருப்பாசுரப் பகுதியினைத் திருவுள்ளம்பற்றி 'ஆநந்த விருத்தி' என்கிறார். விருத்தி - வளர்ச்சி. 'பிரவண சித்தம் பரத்வ விமுகம் ஆக்கும்' என்பது, ஆனந்த விருத்திக்கு அடைமொழி. பிரவணம் - அன்பு. விமுகம் ஆக்குதல் - வேறுபடுத்துதல்; விரும்பாதபடி செய்தல். "சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லாத் தன்மை தேவபிரான் அறியும்" என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம்பற்றி 'விமுகமாக்கும்' என்கிறார். மற்றொன்று - பரத்துவம்.
7. திருவாய். 7. 10: 9.



செய்து கைதொழக் கூடுங்கொல் என்னும் என் சிந்தனை" என்கிறபடியே, தீவினை முதலானவைகள் தனக்குத்தானே விளங்கத்தக்க உயிரிலே பற்று அறப் போய்த் தெளிவினை விளைப்பதான பரமபதத்தை அடைதல் வந்து பொருந்தினாலும் என் நெஞ்சானது திருவாறன் விளையாகிற அந்த நகரினைக் கிட்டி நலம் பயக்கும் தொண்டுகளைச் செய்து கையாலே தொழுதற்கு முடியுமோ என்னா நிற்கும் என்று தன் பக்கல் அன்பினர்களுடைய மனத்தினை, பரத்வவிமுகம் ஆக்கும் - [1] "சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லாத் தன்மை தேவபிரான் அறியும்" என்கிறபடியே பரமபதத்தின் பெயர் சொல்லுகையும் பொருதபடி பரத்துவத்தில் விருப்பு இன்மையை உண்டாக்கும், ஆநந்த விருத்தி - [2] "இன்பம் பயக்க எழில் மலர்மாதரும் தானும் இவ்வேழுலகை, இன்பம் பயக்க இனிதுடன் வீற்றிருந்து" என்கிற ஆனந்த வளர்ச்சி, நீள்நகரிலே - [3] "திருவாறன் விளை என்னும் நீள்நகரமதுவே" என்கிறபடியே நீள்நகரான திருவாறன்விளையிலே தெளிவாம் என்கை. (22)

## 172

[4] சாதரரைப் பரிசழிக்கும் சேஷ்டிதாச்சர்யம்,
குளத்தே கொடிவிடும்.

என்பது, சூத்திரம்.

வியாக்:— சாதரரை - [5] "ஆழிவலவனை ஆதரித்து, கூடச் சென்றேன்" என்கிறபடியே தன்பக்கல் ஆதரத்தோடே கூடியிருப்

---

1. திருவாய். 7. 10: 10.
2. திருவாய். 7. 10: 1.
3. திருவாய். 7. 10: 6.
4. திருக்குளந்தை என்னும் திவ்விய தேசத்தில் சேஷ்டிதாச்சரியம் என்னும் குணம் விளங்கும் என்கிறார். "வைகல் பல்வளையார் முன் பரிசழிந்தேன், மாடக்கொடிமதிள் தென்குளந்தை வண்குடபால் நின்ற மாயக்கூத்தன், ஆடல் பறவை உயர்த்த வெல்போர் ஆழிவலவனை ஆதரித்தே" என்ற திருப்பாசுரப் பகுதியில் 'பரிசழிந்தேன்' என்கையாலே பெண்களுக்குரிய நாணம் முதலியவற்றை அழிக்கும் மாயக்கூத்தன் என்கிற சேஷ்டிதாச்சரியம் இத்திருப்பதியில் விளங்கும் என்கிறார். 'மாயக்கூத்தன்' என்னும் திருப்பெயரை நோக்கி 'சேஷ்டிதாச்சரியம்' என்கிறார். சேஷ்டிதம் - செயல். சேஷ்டிதாச்சரியம் இத்தகையது என்பதனை விளக்கவந்த அடைமொழி, 'சாதரரைப் பரிசழிக்கும்' என்பது. சாதரர் - அன்பினையுடையவர்கள். குளந்தை என்ற திருப்பெயர் இப்பொழுது 'பெருங்குளம்' என வழங்குகிறது. "மாடக்கொடிமதிள்" என்ற திருப்பாசுரப் பகுதியை நோக்கிக் 'கொடிவிடும்' என்கிறார். கொடிவிடும் - மிக்குத் தோன்றும். கொடி என்பதற்கு நீட்சி என்பது பொருள்.
5. திருவாய். 8. 2: 4.

பாரை, பரிசு அழிக்கும் - [1] "பல்வளையார் முன் பரிசு அழிந்தேன்" என்கிறபடியே பெண்மைக்கு உறுப்பான நாணத்தை அழிக்கும், சேஷ்டித ஆச்சர்யம் - [2] "மாயக்கூத்தன்" என்கிற செயல்களின் ஆச்சரியம், குளத்தே கொடிவிடும் - [3] "மாடக்கொடி மதிள் தென் குளந்தை" என்கிற திருக்குளந்தையிலே இதற்கு என்னக் கட்டின மாடக்கொடி மூலமாகப் பிரகாசிக்கும் என்கை. (23)

## 173

*[4] சிரம மனம் சூழும் ஸௌகுமார்ய பிரகாசம், ஆய்ச்சேரியிலே.*

என்பது, சூத்திரம்.

வியாக்:— சிரமம் - [5] "பணியா அமரர் பணிவும் பண்பும்" என்கிற திருப்பாசுரத்தின்படியே மிக்க பேரன்பினையுடையவர்களான நித்திய சூரிகள் உபசரிக்கப் பரமபதத்திலே இருக்குமவன், மிக்க மிருதுத் தன்மையையுடைய திருமேனியோடே இவ்வுலக மக்களுடைய துக்கத்தைப் போக்குகைக்காகத் தன் வாசி அறியாத இந்த உலகத்திலே வந்து அவதரித்து, [6] "அடியார் அல்லல் தவிர்ப்பது இப்படிதான் நீண்டு தாவுவது ஆகையால் வந்த சிரமத்தை, மனம் - நினைத்த மனமானது, சூழும் - [7] "என்மனம் சூழ வருவாரே" என்கிறபடியே வியாகுலத்தை அடைந்து மயங்கும்படியாய், சௌகுமார்ய பிரகாசம் - [8] "ஆழியும் சங்கும் சுமப்பார்தாம்" என்கிறபடியே [9] பூ ஏந்தினாற்போலே இருக்

1. திருவாய். 8. 2: 4. 2. திருவாய். 8. 2: 4.
3. திருவாய். 8. 2: 4.

4. திருவண்பரிசாரத்தில் சௌகுமார்யம் என்னும் குணம் விளங்கும் என்கிறார். சௌகுமார்யம் - மிருதுத்தன்மை. இந்தச் சௌகுமார்யத்திற்கு அடைமொழி, 'சிரமமனம் சூழும்' என்பது. இறைவனுடைய சிரமத்தை நினைத்த ஆழ்வாருடைய மனமானது சுழலும்படியாக - மயங்கும்படியாக என்பது பொருள். "கொடியார் மாடக் கோளூரகத்தும் புளிங்குடியும், மடியாதின்னே நீதுயில்மேவி மகிழ்ந்ததுதான், அடியார் அல்லல் தவிர்த்த அசைவோ? அன்றேல் இப், படிதான் நீண்டு தாவிய அசைவோ பணியாயே" என்ற திருப்பாசுரத்தில் 'என்ன சிரமமோ' என்று வினவுகையாலே ஆழ்வாருடைய மனம் இறைவனுடைய சிரமத்தை நினைத்து வருந்துதல் காண்க. ஆய்ச்சேரி - ஆழ்வாருடைய திருத்தாயார் திருவவதரித்த திருவண்பரிசாரம். ஆய் - தாய்.

5. திருவாய். 8. 3: 6. 6. திருவாய். 8. 3: 5.
7. திருவாய். 8. 3: 6. 8. திருவாய். 8. 3: 3.

9. 'பூ ஏந்தினாற் போலே' என்று தொடங்கும் வாக்கியத்திலே அவன் சௌகுமார்யத் தன்மை விளங்குதல் காண்க.



கும் திருவாழி திருச்சங்கை ஏந்துகிறதும் மலை சுமந்தாற்போலே வன் பாரமாகத் தோற்றும்படி இருக்கிற அவன் சௌகுமார்யப் பிரகாசம், ஆய்ச்சேரியிலே - [1] உடையநங்கையார் பிறந்த அகமாகையாலே ஆழ்வார்க்கு ஆய்ச்சேரியாக இருப்பதான, [2] "உருவார் சக்கரம் சங்கு சுமந்து இங்கு உம்மோடு, ஒருபாடு உழல்வான் ஓர் அடியானும் உளன் என்று, வண்பரிசாரத்து இருந்த என், திருவாழ்மார்பற்கு என்திறம் சொல்லார்" என்ற திருவண்பரிசாரத்திலே காணப்படும் என்கை. (24)

## 174

*[3] மஹாமதிகள் அச்சம் கெட்டு அமரும் சௌர்யாதிகள், சிற்றாற்றிலே கொழிக்கும்.*

என்பது, சூத்திரம்.

வியாக்:— மஹாமதிகள் - [4] "ஸ்ரீ கண்ணபிரானுடைய படுக்கையை மஹாபுத்திமானான ஸ்ரீவிதுரர் நன்றாகத் தடவிப்பார்த்தார்" என்கிறபடியே அவனுடைய மென்மையை நினைக்கும் நினைவாலே அவனுக்கு எங்கே என்ன தீங்கு வருகிறதோ என்று அஞ்சவேண்டாத இடத்திலும் அஞ்சும் மஹாமதிகள், அச்சம் கெட்டு - [5] "எங்கள் செல்சார்வு" என்று தங்களுக்கு அச்சம் இல்லாத இடமான புக

1. உடைய நங்கையார் - ஆழ்வாருடைய திருத்தாயார்.
2. திருவாய் 8. 3: 7.
3. திருச்சிற்றாறு என்னும் திவ்விய தேசத்தில் சூரம் வீரம் முதலிய குணங்கள் விளங்கும் என்கிறார் இச்சூத்திரத்தில். மஹாமதிகள் அச்சம் கெட்டு அமர்தற்குக் காரணமான சௌர்யாதிகள் என்க. சௌர்யம் - சூரனது தன்மை. மஹாமதிகள் என்றது, ஸ்ரீவிதுராழ்வான் போல்வாரை. இவரது தன்மையை வியாக்கியானத்தில் காண்க. இத்திவ்ய தேசத்தைப் பற்றிய திருப்பதிகத்தின் முதல் திருப்பாசுரத்தைத் திருவுள்ளம் பற்றி 'சௌர்யாதிகள்' என்கிறார்.
4. "ஸம்ஸ்ப்ருஶந்நாஸநம் ஶௌரே: விதுரஸ்ஸ மஹாமதி:" என்பது, பாரதம் உத்யோகபர்.
5. திருவாய். 8. 4: 1.

"அங்கமரர் பேண அவர் நடுவே வாழ்திருமாற்கு, இங்கோர் பரிவரிலை என்றஞ்ச" என்ற திருப்பாசுரத்தால் மங்களாசாசனபரரான ஆழ்வார்க்கு அச்சமுண்டானமையும், "வாராமல் அச்சமினி மால்தன் வலியினையும் சீரார் பரிவருடன் சேர்த்தியையும் - பாருமென, தானுகந்த மாறன்" என்ற திருப்பாசுரத்தால் அந்த அச்சம் கெட்டமையையும் நோக்கல் தகும். திருவாய்மொழி நூற்றந். 73, 74.

லாக நினைத்து அச்சம் கெட்டு,அமரும்[1]-"திருச்சிற்றாற்றங்கரையானை, முக்கண்ணமானை நான்முகனை அமர்ந்தேன்" என்கிறபடியே பிரமன் சிவன் என்னும் இவர்களுடைய இருப்பு, நிலை முதலியவைகள் தன் அதீனமாம்படி இவர்களைச் சரீரமாகவுடைய பெருமையையுடையனாய் வைத்து எளியனாய் வந்து நிற்கிறவனை 'அவனுக்கு என் வருகிறதோ' என்று அடைந்த மறுகுதல் தீர்ந்து கிட்டி அநுபவிக்கப்பெற்றேன் என்று மகிழ்ச்சியினராம்படியான, சௌர்யாதிகள் - [2]"வார்கடா அருவி யானை" என்ற திருப்பாசுரத்தால் சொல்லப்பட்ட குவலயா பீடம் சாணூரன் முஷ்டிகன் கம்சன் முதலாயினரைக் கொன்று வெளிப் படுத்திய சூரத்தனம் முதலானவைகள், சிற்றாற்றிலே கொழிக்கும் - திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு என்கிற திவ்விய தேசத்திலே, [3]ஆற்றுக்குள்ளில் மணிமுத்து முதலானவைகள் கரையிலே கொழித் துத் தோற்றுமாறுபோலே பிரகாசிக்கும் என்கை.

சூத்திரத்தில் 'சௌர்யாதிகள்' என்றவிடத்திலே உள்ள 'ஆதி' என்பதனால் வீரியம் பராக்கிரமம் என்னுமவற்றைச் சொல்லுகிறது. 'ஆறு' என்னும் சொல்லிற்கு ஏற்பக் 'கொழிக்கும்' என்கிறார். (25)

## 175

[4]ஸாத்ய ஹ்ருதிஸ்தனாயும் ஸாதநம் ஒருக்கடுக்
கும் க்ருதஜ்ஞதா கந்தம், தாயப்பதியிலே.

என்பது, சூத்திரம்.

---

1. திருவாய். 8. 4. 10. 2. திருவாய். 8. 4: 1.

3. 'திருச்சிற்றாற்றிலே கொழிக்கும்' என்ற பதச்சேர்த்திக்கு, பத சாரம் அருளிச்செய்கிறார் 'ஆற்றுக்குள்ளில்' என்று தொடங்கி.

4. திருக்கடித்தானம் என்னும் திவ்யதேசத்தில் க்ருதஜ்ஞத்துவம் என்னும் குணம் விளங்கும் என்கிறார். தாயப்பதி என்றது, திருக்கடித் தானத்தை. "திருக்கடித்தான நகரும் தனதாயப்பதியே" என்ற திருப் பாசுரப் பகுதியைத் திருவுள்ளம்பற்றித் 'தாயப்பதி' என்கிறார். க்ருதஜ் ஞதா கந்தம் - செய்ந்நன்றியறிதலாகிற வாசனை. அந்தச் செய்ந்நன்றி யறிதலை விளக்குகிறார் 'ஸாத்ய ஹ்ருதிஸ்தனாயும் ஸாதநம் ஒருக்கடுக்கும்' என்று. சாத்ய ஹ்ருதிஸ்தனாயும் - ஆழ்வாருடைய மனத்தில் வசித்தலா கிற பலம் கிடைத்திருக்கச்செய்தேயும். ஸாத்யம் - பலம். சாதநம் - ஆழ்வாருடைய மனத்தில் வசிப்பதற்குச் சாதநமாக இருந்த திவ்வியதேசம். ஒருக்கடுத்தல் - மனத்தில் வசிப்பதைப் போலவே திவ்விய தேசத்திலும் ஆசை கொண்டு வசித்தல். ஒருங்க அடுத்தல் - ஒருக்கடுத்தல்.

" 'திருமாலிருஞ் சோலைமலையே' என்கிறபடியே உகந்தருளின நிலங் கள் எல்லாவற்றினும் பண்ணும் விருப்பத்தை இவனுடைய சரீரைகதேசத் திலே பண்ணும். அங்குத்தை வாசம் சாதநம்; இங்குத்தை வாசம் சாத்யம்,



வியாக் :— சாத்ய ஹ்ருதிஸ்தனாயும் - பலம் கைப்பட்டால் அப் பலத்தைப் பெறுதற்குரிய வழியிலே இழிவார் இன்றிக்கே இருக்க, [1]"திருக்கடித்தானமும் என்னுடைச் சிந்தையும், ஒருக்கடுத்துள்ளே உறையும் பிரான்" என்கிறபடியே ஆழ்வார் திருவுள்ளத்தில் வசித்த லாகிற பலம் கிடைத்திருக்கச்செய்தேயும், சாதநம் ஒருக்கடுக்கும் க்ருதஜ்ஞதாகந்தம் - ஆழ்வார் திருவுள்ளத்தில் வாசத்தைப் பெற்றது, அத்திவ்வியதேசத்தின் வாசத்தால் அன்றோ என்று சாதனமான திருக்கடித்தானத்தையும் அடுத்துப்பிடித்து வசிக்கும்படியான செய்ந் நன்றி அறிதலாகிற வாசனை, தாயப்பதியிலே - [2]"திருக்கடித்தான நகரும் தன தாயப்பதியே" என்கிறபடியே தனக்குத் தாயமாக அடை யத்தக்கதான இடமாக நினைத்திருக்கும் திருக்கடித்தானத்திலே என்கை. (26)

## 176

[3]அவகாஹித்தாரை அநந்யார்ஹம் ஆக்கும்
நாயக லக்ஷணம், வளம்புகழும் ஊரிலே குட்டமிடும்.

என்பது, சூத்திரம்.

---

'கல்லும் கனைகடலும்' என்கிறபடியே இது சித்தித்தால் அவற்றில் ஆதரம் மட்டமாய் இருக்கும். 'இளங்கோயில் கைவிடேல்' என்று இவன் பிரார்த் திக்க வேண்டும்படியாய் இருக்கும்" (ஸ்ரீவசநபூஷணம்) என்பது சாஸ்தி ரார்த்தமாதலின், ஆழ்வார் திருவுள்ளத்தில் வசித்தலாகிற பலத்தைப் பெறுதற்காகவே திருக்கடித்தானத்தில் எழுந்தருளியிருத்தலாகிற சாத னத்தை மேற்கொண்டான் இறைவன். ஆழ்வார் திருவுள்ளத்தில் எழுந் தருளியிருத்தலாகிற பலத்தைப் பெற்றான்; ஆனால் திருக்கடித்தானத்தில் எழுந்தருளியிருத்தலில் விருப்பம் குறைந்திலன்; "திருக்கடித்தானமும் என்னுடைச் சிந்தையும், ஒருக்கடுத்துள்ளே உறையும் பிரான் கண்டீர்" என்கிறார் ஆழ்வார். சாத்யத்தைப் பெற்றபின்பும் சாதன வஸ்துவில் விருப்பம் வைப்பது மிகச்சிறந்த செய்ந்நன்றியறிதல் அன்றோ என்பது இதன் கருத்து. ஆகவே, இத்திவ்விய தேசத்தில் இறைவனுடைய க்ரு தஜ்ஞதை என்ற குணம் விளங்கும் என்கிறார்.

கடித்தானம் என்பதற்கு, மணத்தையுடைய இடம் என்பது பொருள் ஆதலின், அதற்குச்சேர, சூத்திரத்தில் 'க்ருதஜ்ஞதா கந்தம்' என்கிறார்.

1. திருவாய். 8. 6: 2. 2. திருவாய். 8. 6: 8.

3. திருப்புலியூர் என்னும் திவ்விய தேசத்திலே தலைவனுக்கு உரிய இலக்கணங்கள் விளங்கும் என்கிறார். 'வளம்புகழும் ஊர்' என்றது, திருப் புலியூரை. "திருப்புலியூர் வளம்புகழும் இவள்" என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம் பற்றித் திருப்புலியூரை 'வளம்புகழும் ஊர்' என் கிறார். 'அவகாஹித்தாரை அநந்யார்ஹம் ஆக்கும்' என்றது, நாயக லக்ஷணத்திற்கு அடைமொழி. அவகாஹித்தல் - மூழ்குதல். அநந்யார்ஹ மாக்குதல் - பிறர்க்கு ஆகாமல் அவன் ஒருவனுக்கே உரித்தாக்குதல். குட்டமிடும் - நிறைந்திருக்கும்.

வியாக் :— அவகாஹித்தாரை - [1]"அப்பன் திருவருள் மூழ்கினள்" என்கிறபடியே தன் திருவருளில் மூழ்குகிறவர்களை, அநந்யார்ஹம் ஆக்கும் - [2]"அருமாயன் பேர் அன்றிப் பேச்சிலள்" என்றும், [3]"திருப்புலியூர்ப் புகழ் அன்றி மற்று, பரவாள் இவள் நின்று இராப்பகல்" என்றும், [4]"திருப்புலியூர், நின்ற மாயப்பிரான் திருவருளாம் இவள் நேர்பட்டது" என்றும் கூறும்படி மற்றொருவர்க்கு அன்றித் தனக்கே உரியதாக்குமதாய, நாயக லக்ஷணம் - [5]"கருமாணிக்க மலை மேல் மணித்தடம் தாமரைக்காடுகள் போல்" என்றும், [6]"துன்னு சூழ் சுடர் ஞாயிறும் அன்றியும் பல் சுடர்களும்போல்" என்பனபோன்றவைகளால் சொன்ன அவயவசோபை ஆபரணசோபை முதலான தலைவனுக்கு உரிய இலக்கணம், வளம்புகழும் ஊரிலே - [7]"திருப்புலியூர் வளம், புகழும்" என்று இவர் கொண்டாடும்படியான செல்வத்தையுடைய திருப்புலியூரிலே, குட்டமிடும் - நிறைந்திருக்கும் என்கை.

'குட்டம் இடும்' என்றது, குட்டநாடு என்னுமதனை நினைத்து. அருள் மூழ்கினாரை என்னாதே 'அவகாஹித்தாரை' என்கிறார், கலந்தவர்களை 'தனக்கே உரியவர் ஆக்கும்படி இருக்கவேண்டும் தலைவன் இலக்கணம்' என்று உத்தம நாயகனுடைய இலக்கணத்தைப் பொதுவாகக் கூறி, அந்த இலக்கணம் ஈச்வரனுக்குத் திருப்புலியூரிலே நிறைந்து விளங்கும் என்று அருளிச்செய்கிறவர் ஆகையாலே. (27)

## 177

[8]போக்ய பாகத்வரை, தெளிந்த சந்தைக்கு முன்னில் மூன்றிலும் பிரகடம்.

என்பது, சூத்திரம்.

---

1. திருவாய். 8. 9: 5.
2. திருவாய். 8. 9: 1.
3. திருவாய். 8. 9: 9.
4. திருவாய். 8. 9: 10.
5. திருவாய். 8. 9: 1.
6. திருவாய். 8. 9: 2.
7. திருவாய். 8. 9: 3.

8. மிக்க பசியையுடையான் ஒருவன் சோறு வேவுதற்கு முன்னே பதற்றத்தினால் அதன் அருகே வந்து நிற்பது இருப்பது கிடப்பாதாமாறு போன்று, தனக்கு இனியரான ஆழ்வார்க்குப் பரமபக்தியாகிற பாகம் பிறக்குமளவும், அதனை அநுபவிக்க இருக்கின்ற இறைவனுக்கு உண்டான பதற்றம் திருப்புளிங்குடியிலும் வரகுணமங்கையிலும் ஸ்ரீவைகுண்டத்திலும் விளங்கும் என்கிறார் இச்சூத்திரத்தால். போக்யம் - இனிய பொருள். த்வரை-பதற்றம். தெளிந்த சந்தைக்கு முன்னில் மூன்றிலும் - "தெளிந்த



வியாக் — போக்ய பாகத்வரை - பசி மிக்கவன் சோறு சமைப்பதற்கு முன்னே பதற்றத்தாலே சமைக்கும் இடத்திற்கு அணித்தாக வந்து கிடப்பது இருப்பது நிற்பது ஆமாறுபோலே, இனியவரான ஆழ்வார்க்குப் பரம பக்தியாகிற பாகம் பிறக்குமளவும் சர்வேச்வரனுக்கு உண்டான பதற்றம், தெளிந்த சந்தைக்கு - [1]"தெளிந்த என் சிந்தையகம் கழியாதே" என்கிற திருப்பாசுரத்திற்கு, முன்னில் மூன்றிலும் - முன்னே சொன்ன "புளிங்குடிக் கிடந்து, வரகுணமங்கையிருந்து, வைகுந்தத்துள் நின்று" என்கிறபடியே கிடப்பது இருப்பது நிற்பது ஆன திருப்புளிங்குடி, திருவரகுணமங்கை, திருவைகுந்தம் என்னும் திவ்விய தேசங்கள் மூன்றிலும், பிரகடம் - தெரியும் என்கை. (28)

## 178

[2]போகத்தில் தட்டுமாறும் சீலம், காட்கரையிலே கரை அழிக்கும்.

என்பது, சூத்திரம்.

வியாக் :— போகத்தில் தட்டுமாறும் சீலம் - இப்படி இனியவரான ஆழ்வாருடனே கலந்து பரிமாறுமிடத்தில் [3]"ஆட்கொள்வான் ஒத்து என் உயிர் உண்ட மாயன்" என்றும், [4]"ஆருயிர் பட்டது எனது உயிர் பட்டது" என்றும் பேசும்படி அத்தலை இத்தலையாய்ச் சேஷ சேஷி பாவம் மாறாடிப் பரிமாறும் சீல குணம், காட்கரையிலே - [5]"திருக்காட்கரை, மருவிய மாயன் மாயம் நினைதொறே" என்று ஈடுபட்டவராய்ப் பேசின திருக்காட்கரையிலே, கரை அழிக்கும் - கரை அழியப் பெருகும் என்கை. காட்கரை என்ற திவ்விய தேசத்தின் பெயருக்கு ஏற்பக் 'கரை அழிக்கும்' என்கிறார். (29)

---

என் சிந்தையகங்கழியாதே" என்ற திருப்பாசுரப் பகுதிக்கு முன் உள்ள அடியில் கூறப்படும் திவ்யதேசங்கள் மூன்றிலும். ப்ரகடம் - தெரியும். இறைவன், ஆழ்வாரை மிக மிக இனிய பொருளாகக் கொண்டுள்ளான் என்பது "என்னில் முன்னம் பாரித்துத் தான் என்னை முற்றப்பருகினான்" (9. 6: 10.) முதலிய திருப்பாசுரப் பகுதிகளால் விளங்கும்.

1. திருவாய். 9. 2: 4.

2. திருக்காட்கரை என்னும் திவ்யதேசத்திலே சீலம் என்னும் குணம் விளங்கும் என்கிறார். தட்டுமாறுதல் - முறைமாறுதல். சீலமாவது, பெரியவன் தாழ்ந்தவர்களோடே புரையறக் கலக்கும் தன்மை. "வாரிக் கொண்டு" என்ற திருப்பாசுரத்தை நோக்கிக் 'கரையழிக்கும்' என்கிறார்.

3. திருவாய். 9. 6: 7.
4. திருவாய். 9. 6: 9.
5. திருவாய். 9. 6: 1.

## 179

[1] மஹாத்மாக்கள் விரஹம் சஹியாத மார்த்தவம், வளத்தின்களத்தே கூடுபூரிக்கும்.

என்பது, சூத்திரம்.

வியாக் :— மஹாத்மாக்கள் - [2] "தமரோடு அங்கு உறைவார்க்கு" என்கிறபடி தம் பந்து ஜனங்களோடே அங்கே நித்திய வாசம் செய்கிறவர்க்கு என்னும்படி [3] "ஒருமுறை உன்னுடைய திவ்வியமங்கள விக்கிரகத்தைக் காணவேண்டும் என்னும் ஆசையாலே, மிக மேலானதான பிரமன் முதலான உலகங்களின் இன்பத்தையும் மோக்ஷத்தையும் துரும்பாக நினைக்கின்ற மஹாத்மாக்களான பாகவதர்களால் நான் கடாக்ஷிக்கப்பட்டவனும்படி, சர்வசக்தியையுடைய நீ என்னைக் கடாக்ஷிக்கவேண்டும்; எந்தப் பாகவதர்களுடைய பிரிவு உனக்கும் கணப்பொழுதும் பொறுக்கமுடியாததாக இருக்கும்" என்கிறபடியே தம்முடைய விக்கிரகத்தை ஒருகால் காணவேண்டும் என்னும் ஆசையால், உயர்ந்தனவான பிரமன் முதலான தேவர்களின் உலக இன்பங்களையும் மோக்ஷத்தையும் துரும்பாக நினைக்கும் மஹாத்மாக்களுடைய, விரஹம் சகியாத மார்த்தவம் - பிரிவினைப் பொறாமல் இருக்கையாகிற சௌகுமார்யகுணம், வளத்தின் களத்தே - [4] 'மூழிக்களத்து வளத்தினை" என்கிறபடியே அடியார்களுக்குச் செல்வமாக இருக்கும் தன்மையனானவனுடைய திருமூழிக்களத்திலே, கூடுபூரிக்கும் - கூடுகட்டி நிற்கும் என்கை. 'களம்' என்ற பெயருக்கு ஏற்பக் 'கூடுபூரிக்கும்' என்கிறார். (30)

1. திருமூழிக்களம் என்கிற திவ்வியதேசத்தில் சௌகுமார்ய குணம் விளங்கும் என்கிறார். இங்குக் கூறிய சௌகுமார்யம் திவ்யாத்ம சொரூபத்தைப் பற்றியது. மேலே கூறியது திவ்யமங்கள விக்கிரஹத்தைப் பற்றியது. "தமரோடு அங்குறைவார்க்கு" என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம் பற்றி இங்ஙனம் அருளிச் செய்கிறார். "வானவர்தம் முன்னவனை மூழிக்களத்து வளத்தினை" (பெரிய திருமடல்) என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம் பற்றி 'வளத்தின்' என்கிறார். வளம் - அடியார்கட்குச் செல்வமாக உள்ளவன். வளம் - செல்வம். களம் - திருமூழிக்களம். வளத்தினுடைய களம் என்க. கூடுபூரிக்கும்-நிறைந்திருக்கும்.

2. திருவாய். 9. 7: 2.

3. ஸக்ருத் த்வதாகார விலோகநாஶயா
த்ருணீக்ருதா நுத்தம புக்திமுக்திபி:
மஹாத்மபிர்மாமவலோக்யதாம்நய
க்ஷணே பிதேயத் விரஹோதி துஸ்ஸஹ:
என்பது, தோத்திர ரத்நம், 55.

4. பெரிய திருமடல், 129. இங்கு, 'விளக்கினை' என்ற பாடபேதமும் காண்கிறது.



## 180

[1] பிரிந்த துன்பக்கடல் கடத்தும் விஷ்ணுபோத ஆந்ருசம்ஸ்யம், நாவாயிலே நிழல் எழும்.

என்பது, சூத்திரம்.

வியாக் :—பிரிந்த துன்பக்கடல் - [2] "அன்புடையாரைப் பிரிவுறு நோய்" என்றும், [3] "துன்பக்கடல்புக்கு" என்றும் சொல்லுகிறபடியே [4] "எமராலும் பழிப்புண்டு, அணிமூழிக்களத்துறையும் தம்மால் இழிப்புண்டு இங்குளன்" என்றும், [5] "தாம் தம்மைக் கொண்டு அகல்தல் தகவு அன்று என்று உரையீரே" என்றும், [6] "மிகமேனி மெலிவெய்தி மேகலையும் ஈடுஅழிந்து என், அகமேனி ஒழியாமே திருமூழிக்களத்தார்க்கு, தகவு அன்று என்று உரையீர்" என்றும் இப்படி மேன்மேலும் ஆள்விடவேண்டும்படி தன்னைப் பிரிகையால் வந்த துன்பக் கடலை, கடத்தும் விஷ்ணுபோதம் - [7] "விஷ்ணுவாகிற ஓடத்தைத்

1. திருநாவாய் என்னும் திவ்யதேசத்தில் இறைவனுடைய பேரருள் விளங்கும் என்கிறார். "நாவாய் உறைகின்ற நாரண நம்பீ! ஆ ஆ அடியான் இவன் என்று அருளாயே" என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம்பற்றிப் 'பேரருள் விளங்கும்' என்கிறார். கடல் கடப்பதற்கு உறுப்பாக இருக்கும் கப்பல்போன்று, பிரிந்த துன்பக்கடல் கடப்பதற்கு இத்தலத்து இறைவனும் நாவாயாக இருக்கின்றான் என்றபடி. பிரிவுத்துன்பம் மேல் திருவாய்மொழியிலே கூறப்பட்டது. நாவாய் போன்ற இறைவன் அங்கு எழுந்தருளியிருத்தலால் அத்தலமும் நாவாய் எனப்பட்டது. நாவாய் - கப்பல். "துன்பக்கடல் புக்கு வைகுந்தன் என்பதோர் தோணி பெறாது உழல்கின்றேன்" என்ற திருப்பாசுரத்தில் இறைவன் துன்பக்கடல் கடத்தும் தோணியாகவே அருளிச்செய்யப்பட்டுள்ளான். விஷ்ணுபோதம்- விஷ்ணுவாகிற ஓடம். ஆந்ருசம்ஸ்யம் - அடியார்களுக்குச் செய்யும் அருள்.

2. 'பிரிந்த துன்பம்' என்றது, மேல் திருவாய்மொழியில் கூறப்பட்ட பிரிவுத்துன்பம் என்பதனை விளக்குகிறார் 'அன்புடையாரை' என்று தொடங்கி. இது, நாய்ச்சியார் திருமொழி, 5: 4.

3. நாய்ச்சியார் திரு. 5: 4.
4. திருவாய். 9. 7: 2.

5. திருவாய். 9. 7: 9.
6. திருவாய். 9. 7: 10.

7. "விஷ்ணுபோதம் விநாநாந்யத் கிஞ்சிதஸ்தி பராயணம்" என்பது, விஷ்ணுதர்மம்,

தவிர வேறு ஒருசாதனம் இல்லை" என்கிறபடியே கடத்துகின்ற விஷ்ணுபோதமான அவ்வெம்பெருமானுடைய, ஆந்ருசம்ஸ்யம் - [1] "ஆஆ அடியான் இவன்என்று அருளாய்" என்று விரும்பும்படியாக இருக்கும் அடியார்கள் விஷயத்தில் செய்கிற திருவருள், நாவாயிலே நிழல்எழும் - [2] "நாவாய் உறைகின்ற" என்று அவன் நித்தியவாசம் செய்கின்ற திருநாவாயிலே, உள்ளே நிற்கின்ற இறைவனது தன்மை இதுவோ என்று அறியலாம்படி அவ்வூரின் பெயராலே நிழல் எழும் என்கை.

நாவாய்போலே இருக்கின்ற அவ்விறைவன் நித்தியவாசம் செய்யும் தேசமாகையாலே நாவாய் என்று ஊருக்குப் பெயராயிற்று. விஷ்ணு ஓடமாயிருக்குந் தன்மை இதனால் பிரகாசித்தால் அதற்கு உறுப்பான அருள் தன்னடையே போதருமன்றோ. [3] "கருணையாலும் அடியார்கள் விஷயத்தில் செய்யும் அருளாலும்" என்று வேறுபடுத்திச் சொல்லி, [4] "பெண்காப்பாற்றப்படவில்லையே என்ற கருணையாலும் நம்மை அடைந்தவர்களைக் காப்பாற்றவில்லையே என்ற ஆந்ருசம்ஸ்யத்தாலும் ஸ்ரீராமபிரான் வருந்தினார்" என்கையாலே ஆந்ருசம்ஸ்யமாவது - அடியார்கள் விஷயமான அருள். (31)

## 181

[5] சரண்யமுகுந்தத்வம், உத்பலாவதகத்திலே பிர
சித்தம்.

என்பது, சூத்திரம்.

1. திருவாய். 9. 8: 7.  2. திருவாய். 9. 8: 7.

3. அருள்வேறு, ஆந்ருசம்ஸ்யம் வேறு என்பதனைப் பிரமாணங்கொண்டு விளக்குகிறார் 'கருணையாலும்' என்று தொடங்கி.

"காருண்யே நாந்ருஶம்ஸ்யேந"

என்பது, ஸ்ரீராமா. சுந். 15: 49.

4. "ஸ்திரீ ப்ரணஷ்டேதி காருண்யமாஶ்ரிதேத் யாந்ருஶம்ஸதா" என்பது, ஸ்ரீராமா. சுந். 15: 50.

5. திருக்கண்ணபுரம் என்னும் திவ்யதேசத்தில் மோக்ஷத்தைக் கொடுக்கும் முதன்மைக்குணம் விளங்கும் என்கிறார். சரண்யன் - இறைவன். "சரணமாகும் தனதாள் அடைந்தார்க்கெல்லாம்" என்றதனை நோக்கிச் 'சரண்யன்' என்கிறார். "மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'முகுந்தத்வம்' என்கிறார். முகுந்தத்வம் - மோக்ஷத்தைக் கொடுக்கும் தன்மை. உத்பலாவதகம் - முமுக்ஷுக்களைக் காப்பாற்றும் இடம்; திருக்கண்ணபுரம். உத்பல அவத் அகம் என்று பிரித்துக்கொள்க. அவத் - காப்பாற்றுதல். இத்தன்மை புராணத்திலும் விளக்கப்பட்டிருத்தலால் 'பிரசித்தம்' என்கிறார்.



வியாக் :— சரண்ய முகுந்தத்வம் - [1] "சரணமாகும் தனதாள் அடைந்தார்க்கெல்லாம், மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்" என்று மேலே சொன்ன விசேடத்தாலே எல்லார்க்கும் புகலாகப் பற்றுவதற்குத் தக்கவனாயிருக்குமவனுடைய மோக்ஷத்தைக் கொடுக்கும் தன்மை, உத்பலாவதகத்திலே பிரசித்தம் - [2] "உத்பலாவதகம் என்ற திவ்விய விமானத்திலே தாமரைக்கண்ணனும் எப்போதும் சர்வாங்க சுந்தரனுமான சௌரிராஜனைச் சேவிக்கிறேன்" என்கிறபடியே திருக்கண்ணபுரத்தில் உத்பலாவதகம் என்னும் பெயரையுடைத்தான திவ்விய விமானத்தில் நிற்கிற நிலையிலே எல்லாரும் அறியலாம்படி பிரசித்தம் என்கை.

முகுந்தத்வமாவது, மோக்ஷபூமியைக் கொடுக்கும் முதன்மை. "வைகுந்தம் கொடுக்கும் பிரான்" என்னும் திருப்பாசுரத்தைத் திருவுள்ளம்பற்றியாயிற்று இவர் இப்படி அருளிச்செய்தது. பலம் என்றது மாம்சம். உத்பலர் என்றது மாம்சம் நீங்கினவர். அதாவது, மாம்ச சரீரத்தையுடையராய் அன்றிக்கே சரீரத்தை உலர்த்துகையாலே நீங்கிய மாம்சத்தையுடையராய்க் கொண்டு சரீரத்தில் விருப்பின்றியிருக்கும் முமுக்ஷுக்களைக் குறிக்கின்றது. [3] "அவர்களை அதாவது - மாம்சம் இல்லாத சரீரத்தையுடைய முமுக்ஷுக்களைக் காப்பாற்றுகின்ற என்னுடைய இருப்பிடத்தை உத்பலாவதகம் என்று சொல்லுகிறார்கள்" என்கிறபடியே முமுக்ஷுக்களைக் காப்பாற்றுகிறவன் எழுந்தருளியிருக்கையாலே அங்குத்தை திவ்யவிமானத்துக்கு உத்பலாவதகம் என்று பெயராகையாலே மோக்ஷத்தைக் கொடுக்கும் தன்மை அந்தத்தலத்திலே பிரசித்தம் என்கிறார் என்றபடி. (32)

## 182

[4] மார்க்கபந்து சைத்யம், மோஹநத்தே மடு
விடும்.

என்பது, சூத்திரம்.

1. திருவாய். 9. 10: 5.

2. உத்பலாவதகே திவ்யே விமாநே புஷ்கரேக்ஷணம்
ஶௌரிராஜம் அஹம்வந்தே ஸதா ஸர்வாங்க ஸுந்தரம்.

என்பது, புராணம்.

3. "தேஷாம்மமாவதோ வாஸ முத்பலாவதகம்விது:"

என்பது, பிரமாணம்.

4. திருமோகூர் என்னும் திவ்ய தேசத்தில் இறைவனுடைய தண்மை என்ற குணம் விளங்கும் என்கிறார் இச்சூத்திரத்தால். "காளமேகத்தை அன்றி மற்றொன்றிலம் கதி", "ஆத்தன் தாமரைஅடி அன்றி

வியாக் :—மார்க்கபந்து - மேலே கூறியபடி மோக்ஷத்தைக் கொடுக்குமவனை தன்னுடைய திருவருளாலே மோக்ஷத்தை அடைவார்க்குக் [1] "காளமேகத்தை அன்றி மற்றொன்றுஇலம் கதி" என்றும், [2] "ஆத்தன்தாமரை அடிஅன்றி மற்றிலம் அரணே" என்றும் வருகின்றவாறே நம்பத்தகுந்தவனாய்க் கூடக் கொண்டுபோம்வழித்துணையானவனுடைய, சைத்யம் - [3] "சுரிகுழல் கமலக்கண் கனிவாய்க் காளமேகம்" என்றும், [4] "அவன்அடி நிழல்தடம்" என்றும், [5] "மரதகமணித்தடம்" என்றும் சொல்லும்படியிருந்துள்ள, பிறப்பு இறப்புக்களில் உழன்று திரிவதால் உளவாய எல்லாத்தாபங்களையும் போக்கும்படியான குளிர்ச்சி, மோஹனத்தே - அமுதத்தைக் கொடுக்கும் சமயத்தில் அசுரர்களை மயங்கச்செய்த இடம் ஆகையாலே மோஹநக்ஷேத்திரமான திருமோகூரிலே, மடுவிடும் - நிறைந்து நிலைபெற்றிருக்கும் என்கை.

"மரதகமணித்தடம்" என்ற திருப்பாசுரப் பகுதியை நோக்கி "மடு விடும்" என்கிறார். (33)

## 183

[6] ஸஸைன்ய புத்ர சிஷ்ய ஸாத்ய சித்த பூசுர (அர்ச்சனத்துக்கு) முக நாபி பாதங்களைத் துவாரத்ரயத்தாலே காட்டும் சாம்யம், அநந்தசயனத்திலே வியக்தம்.

என்பது, சூத்திரம்.

மற்றிலம் அரண்" என்பனவற்றைத் திருவுள்ளம்பற்றி 'மார்க்கபந்து' என்கிறார். மார்க்கபந்து - வழித்துணைவன். "சுரிகுழல் கமலக்கண் கனிவாய்க் காளமேகம்" என்றும், "அவனடி நிழல் தடம்" என்றும், "மரதக மணித்தடம்" என்றும் வருகின்ற திருப்பாசுரப் பகுதிகளைத் திருவுள்ளம்பற்றிச் 'சைத்யம்' என்கிறார். சைத்யம் - குளிர்ச்சி. தேவர்களுக்கு அமுதம் அளித்த சமயத்தில் அசுரர்களை மயங்கச்செய்த செயலோடே இறைவன் சேவை சாதிக்கும் இடமாதலால் இத்தலத்தை 'மோஹனம்' என்கிறார். "தயரதன் பெற்ற மரதகமணித்தடம்" என்னும் திருப்பாசுரப் பகுதிக்குச்சேர 'மடுவிடும்' என்கிறார்.

1. திருவாய். 10. 1: 1.
2. திருவாய். 10. 1. 6.
3. திருவாய். 10. 1: 1.
4. திருவாய். 10. 1: 2.
5. திருவாய். 10. 1: 8.

6. திருவனந்தபுரத்தில் சாம்யம் என்ற குணம் விளங்கும் என்கிறார் இச்சூத்திரத்தால். சாம்யம் - வேறுபாடு கருதாது ஒரே தன்மையாகப் பார்க்கும் குணம்.



வியாக் :—சசைன்ய சாத்ய - [1] "அமரர்கோன் அர்ச்சிக்கின்று அங்ககப்பணி செய்வர் விண்ணோர்" என்கிற சேனையோடு கூடின சேனை முதலியாராகிற [2] "அநாதிகாலமாக இருந்துவரும் நித்தியர்கள் என்று சொல்லப்படும் சூரிகள் எவ்விடத்தில் இருக்கிறார்களோ" என்கிறபடியே நித்தியசூரிகளில் தலைவரான சேனை முதலியாராகிற சாத்தியருடையவும், புத்ர சித்த - [3] "அமரராய்த் திரிகின்றார்கட்கு ஆதி" என்கையாலே புத்திரர்களான பிரமன் முதலியோர் ஆகிற

இச்சூத்திரத்தை, சசைன்ய சாத்ய அர்ச்சனத்துக்கு முகத்தையும், சபுத்ர சித்த அர்ச்சனத்துக்கு நாபியையும், சசிஷ்ய பூசுர அர்ச்சனத்துக்குப் பாதங்களையும் துவாரத்திரயத்தாலே காட்டும் சாம்யம் என்று நிரல்நிறையே கொள்க. 'ஸ சைன்ய' என்பதிலே உள்ள 'ஸ' என்னும் எழுத்தினைப் பிரித்து 'புத்ர, சிஷ்ய' என்ற சொற்களோடும் கூட்டுக. 'ஸ' என்பதற்குக் கூடிய என்பது பொருள்.

இத்திவ்யதேசத்தில் திருமுகம், திருநாபி, திருவடி என்னும் இவற்றை மூன்று திருவாசல்களாலே சேவிக்கவேண்டுமாதலின் 'முகநாபி பாதங்களைத் துவாரத்திரயத்தாலே காட்டும்' என்கிறார். துவாரத்திரயம்- மூன்று திருவாசல்கள். இத்திவ்யதேசத்தைப்பற்றிய திருப்பதிகத்தில் "அனந்தபுரத்து, அமரர்கோன் அர்ச்சிக்கின்று அங்கு அகப்பணி செய்வர் விண்ணோர்" என வருகின்ற திருப்பாசுரப் பகுதியை நோக்கி, 'சசைன்ய சாத்ய அர்ச்சனத்துக்கு முகத்தைக் காட்டும் அனந்தசயனம்' என்கிறார். சாத்யர் - சேனை முதலியார். இவர் சேனை முதலியாராதலின் இறைவனுடைய திருமுகம் நோக்கிப் பேசும் தகுதியை நோக்கி இவர்க்குத் திருமுகவாசல் கூறப்படுகின்றது. "அமரராய்த் திரிகின்றார்கட்கு ஆதி சேர் அனந்தபுரம்" என்ற திருப்பாசுரப்பகுதியைத் திருவுள்ளம்பற்றி 'ச புத்ர அர்ச்சனத்துக்கு நாபியைக் காட்டும் அனந்தசயனம்' என்கிறார். புத்ரன் - பிரமன். இவன் திருவுந்தித் தாமரையில் அவதரித்தவனாதலின் இவனுக்குத் திருநாபிவாசல் கூறப்படுகின்றது. "படமுடையரவிற் பள்ளிபயின்றவன் பாதம் காண, நடமினோ நமர்கள் உள்ளீர்" என்ற திருப்பாசுரப்பகுதியைத் திருவுள்ளம்பற்றி 'ச சிஷ்யபூசுர அர்ச்சனத்துக்குப் பாதம் காட்டும்' என்று கூறப்படுகிறது. சிஷ்யர் - ஆழ்வாருடைய சிஷ்யர்கள். சிஷ்யராகிற பூசுரர் என்க. பூசுரர் - நிலத்தேவர். இவர்கள் பாதம் காண நடப்பவர்கள் ஆதலின் இவர்கட்குப் பாதவாசல் கூறப்படுகின்றது. வியக்தம் - தெளிவு.

1. திருவாய். 10. 2: 6.
2. "யத்ரபூர்வே ஸாத்யா:" என்பது புருஷ சூக்தம்.
3. திருவாய். 10. 2: 6.

சித்தர்களுடையவும், சிஷ்ய பூசுர - [1] "படமுடையரவில் பள்ளி பயின்றவன் பாதம் காண, நடமினோ நமர்கள்உள்ளீர்" என்கிறபடியே இவ்வாழ்வாருடைய உபதேசம் கேட்ட சிஷ்யர்களான அந்தணர்களுடையவும்ஆனஇவர்களுடைய, அர்ச்சனத்துக்கு - அருச்சனைக்கு, முகம் நாபி பாதங்களைத் துவாரத் திரயத்தாலே காட்டும் - திருமுகமும் திருநாபியும் திருவடிகளும் ஆகிற இவற்றைத் திருவாசல்கள் மூன்றாலும் காட்டுகின்ற, சாம்யம் - நித்தியசூரிகள் என்றும், இவ்வுலக மக்கள் என்றும் வேறுபாடுபாராத ஒத்திருக்கும் குணம், அனந்தசயனத்திலே வியக்தம் - திருவனந்தபுரத்திலே திருக்கண்வளர்கின்ற வகையிலே தெளிவாக இருக்கும் என்கை. (34)

## 184

[2] மோக்ஷதானத்தில் பிரணத பாரதந்த்ர்யம், வளம்மிக்க நதியிலே கரைபுரளும்.

என்பது, சூத்திரம்.

வியாக் :—மோக்ஷதானத்தில் பிரணதபாரதந்த்ர்யம் - [3] "அருள் தருவான் அமைகின்றான் அது நமது விதிவகையே" [4] "விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான் விதிவகையே" என்றும் சொல்லுகிறபடியே மேல் திருவாய்மொழியில் கூறியவாறே எள்கல் இராகம் இலாத இறைவன் அடியார்கட்கு மோக்ஷத்தைக் கொடுக்குமளவில் அவர்கள் விதித்தபடி செய்வானாய் நிற்கிற அடியார்கட்குப் பரதந்திரப்பட்டிருக்கும் தன்மை, வளம் மிக்க நதியிலே - [5] "வளம் மிக்க வாட்டாற்றான்" என்கிறபடியே பாதுகாக்கப்படும் பொருள்கள் குறைவில்லாத தேசம் ஆகையாலே அவனுக்கு வளம்மிக்கு இருக்கிற திருவாட்டாற்றிலே, கரைபுரளும்-எல்லைகடந்து வெள்ளமிடும் என்கை.

வாட்டாறு என்ற பெயருக்கு ஏற்பக் '**கரைபுரளும்**' என்கிறார். (35)

---

1. திருவாய். 10. 2: 8.
2. திருவாட்டாறு என்னும் திவ்யதேசத்தில், அடியார்கட்கு அந்தமில் பேரின்பவீடு அருளும்போது, அவர்கட்கு வசப்பட்டுக் கொடுக்கும் பாரதந்திரிய குணம் விளங்கும் என்கிறார் இச்சூத்திரத்தால்.
"அருள் தருவான் அமைகின்றான் அது நமது விதிவகையே" என்றும், "விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான் விதிவகையே" என்றும் வருகின்ற திருப்பாசுரப் பகுதிகளைத் திருவுள்ளம்பற்றி 'மோக்ஷதானத்தில் பிரணத பாரதந்த்ர்யம்' என்கிறார். மோக்ஷதானத்தில் - மோக்ஷத்தைக் கொடுப்பதில். பிரணதர் - அடியார்கள். வளமிக்க நதி - திருவாட்டாறு. வாட்டாறு என்ற திருப்பெயருக்குப் பொருந்த 'கரைபுரளும்' என்கிறார்.
3. திருவாய். 10. 6: 1.
4. திருவாய். 10. 6: 3.
5. திருவாய். 10. 6: 3.



## 185

[1] தியாஜ்ய தேஹ வியாமோஹம், மருள்கள் கடியும் மயல்மிகு பொழிலிலே தழைக்கும்.

என்பது, சூத்திரம்.

வியாக்:—தியாஜ்ய தேஹ வியாமோஹம் - முமுக்ஷுக்களுக்கு விடத்தக்கதான சரீரத்தில், பிறவிமுடிவுறும் சரீரமாகையாலே, மனைவியினுடைய எச்சிலைவிரும்பும் அரசகுமாரனைப்போலே, [2] "வஞ்சக்கள்வனாய் நெஞ்சும் உயிரும் உள்கலந்து" என்றும், [3] "மாய ஆக்கை இதனுட்புகுந்து" என்றும் சொல்லுகிறபடியே இச்சரீரத்தின் இழிவினைப் பாராமல் உள்புகுந்தவனாய், [4] "திருமாலிருஞ்சோலைமலையே திருப்பாற்கடலே என்தலையே" என்ற திருப்பாசுரத்தின்படியே உகந்தருளின திவ்வியதேசங்கள் எல்லாவற்றிலும் செய்யும் விருப்பத்தை இச்சரீரத்தில் ஒருகூற்றிலே செய்து, [5] "மங்கவொட்டு உன்மாமாயை" என்கிறபடியே அவனைக் கால்கட்டி விடுவிக்கவேண்டும்படி அவனுக்கு உண்டான மாபெருங்காதல், மருள்கள்கடியும் - [6] "மருள்கள்கடியும் மணிமலை திருமாலிருஞ்சோலைமலையே" என்கிறபடியே எல்லாருடைய அறிவின்மையை அடியோடு போக்குமதாய், மயல்மிகு - [7] "மயல்மிகுபொழில்சூழ் மாலிருஞ்சோலை" என்கிறபடியே இனிமையின் மிகுதியாலே அநுபவிக்கின்றவர்களைப் பிச்சேற்றவற்றான, பொழிலிலே - சோலையையுடைய தெற்குத் திருமலையிலே, தழைக்கும் - நிறைந்து செல்லும் என்கை. பொழில் என்ற சொல்லுக்கு ஏற்பத் '**தழைக்கும்**' என்கிறார். (36)

---

1. திருமாலிருஞ்சோலைமலை என்னும் திவ்யதேசத்தில் வியாமோகம் என்ற குணம் விளங்கும் என்கிறார். வியாமோகம் - கழிபெருங்காதல். "செஞ்சொற் கவிகாள்", "திருமாலிருஞ் சோலைமலையே", "மங்கவொட்டு" என்று தொடங்கும் திருப்பாசுரங்களைத் திருவுள்ளம்பற்றி 'தியாஜ்ய தேஹ வியாமோகம்' என்கிறார். தியாஜ்யம் - விடத்தக்கது. மருள்கள் கடியும் மயல்மிகு பொழில் - திருமாலிரும் சோலைமலை.
2. திருவாய். 10. 7: 1.
3. திருவாய். 10. 7: 3.
4. திருவாய். 10. 7: 8.
5. திருவாய். 10. 7: 10.
6. திருவாய். 10. 7: 7.
7. திருவாய். 2. 10: 3.

## 186

[1]அங்கீகரிக்க அவகாசம் பார்க்கும் ஸ்வாமித்வம்,
பெருநகரிலே பேர் பெற்றது.

என்பது, சூத்திரம்.

**வியாக் :**—அங்கீகரிக்க அவகாசம் பார்க்கும் ஸ்வாமித்வம் - [2] "திருமாலிருஞ்சோலைமலை என்றேன் என்னத் திருமால்வந்து என் நெஞ்சு நிறையப் புகுந்தான்" என்கிறபடியே தன்னுடைய அங்கீகாரத்துக்கு உறுப்பான புண்ணியம் சிறிதும் இல்லாதாரையும் மடிமாங்காய் இடுமாறுபோலே 'என்னூரைச் சொன்னாய்' என்பதுபோன்றன வான தன்நினைவின்றியே வரும்புண்ணியங்களை ஏற்றியும் அங்கீகரிப்பதற்கு இடம் பார்க்குமவனுடைய ஸ்வாமித்வம், பெருநகரிலே பேர் பெற்றது - [3] "பெருவரை மதிள்கள்சூழ்ந்த பெருநகர் அரவணைமேல்" என்கிறபடியே திருக்கண்வளர்ந்தருளுகிற திருப்பேர்நகரிலே பிரசித்தமாயிற்று என்கை.

ஆக, திருப்பதிகள்தோறும் ஒரோகுணம் முதன்மையாகப் பிரகாசிக்கும் என்னுமதனை இவர் மங்களாசாசனம் செய்த திவ்விய தேசங்கள் எல்லாவற்றிலும் காட்டினாராயிற்று. (37)

## 187

[4]இவற்றில் ப்ராவண்யம் இவள்பரமே என்ன
உண்டாய், ஷோடசகலாபூர்ணமான சந்த்ரமண்ட
லம்போலே,பதினாறு திருநக்ஷத்திரம் நிரம்பினவாறே,
தேவபோக்யமான அதில் அம்ருதம்போல் அன்
றிக்கே, என்னுத் தமிழர் இசைகாரர் முதற்பத்தர்
வானவர் என்னம்மான் பார் பரவு என்னும்படி
சேச்வர விபூதி போக்யமான பாலோடு அமுதன்ன
மென்மொழி முகஞ்செய்தது.

என்பது, சூத்திரம்.

1. திருப்பேர்நகர் என்னும் திவ்யதேசத்தில் ஸ்வாமித்வம் என்னும் குணம் விளங்கும் என்கிறார். "திருமாலிருஞ்சோலைமலை என்றேன்என்ன, திருமால் வந்து என்நெஞ்சு நிறையப் புகுந்தான்" என்ற திருப்பாசுரத்தைத் திருவுள்ளம்பற்றி 'அங்கீகரிக்க அவகாசம் பார்க்கும் ஸ்வாமித்வம்' என்கிறார். இவ்வழியாலேயாகிலும் அங்கீகரிக்கப் பார்ப்பது தன்னுடைமையை விடமாட்டாமையாலே யாகையால் 'ஸ்வாமித்வம்'என்கிறார். அவகாசம் - சமயம். ஸ்வாமித்வம் - ஸ்வம்மையுடையவனும் தன்மை. ஸ்வம் - சொத்து, உடைமை.

2. திருவாய். 10. 8: 1.    3. பெரியதிருமொழி, 5. 9: 3.

4. ஷோடசகலா - பதினாறுகலைகள். சேச்வரவிபூதி - ஈச்வரனோடு கூடிய உலகம். முகம் செய்தது - அவதரித்தது



**வியாக் :**—[1] "இத் திவ்வியதேசங்களில் இவர்க்கு ஊற்றம் உண்டாயது எப்போது? இவர் பிரபந்தம் அருளிச்செய்யத் தொடங்கியது எந்த வயதிலே? இப் பிரபந்தத்திற்கு அதிகாரி நியமம் உண்டோ? இப் பிரபந்தத்தின் இனிமைதான் இருக்கும்படி எங்ஙனே? என்ன, அவற்றிற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

இவற்றில் ப்ராவண்யம் - இவ் வர்ச்சாவதார திவ்விய தேசங்களில் அன்பு, இவள்பரமே என்ன உண்டாய் - [2] "முலையோ முழுமுற்றும் போந்தில, பெருமான்மலையோ திருவேங்கடம் என்று கற்கின்ற வாசகம் - இவள்பரமே" என்னும்படி பருவம் நிரம்புவதற்கு முன்னே உண்டாய், ஷோடச கலாபூர்ணமான சந்த்ரமண்டலம் போலே - பதினாறு கலைகளும் நிறைந்த சந்திரமண்டலம்போலே, பதினாறு திருநக்ஷத்திரம் நிரம்பினவாறே - பதினாறு வயது நிறைந்தவாறே, தேவ போக்யமான அதில் அம்ருதம்போல் அன்றிக்கே - [3] "கிருஷ்ணபக்ஷத்தில் அமுதமயமான சந்திரன் தேவர்களால் அடிக்கடி உண்ணப்படுகிறான்" என்கிறபடியே தேவர்களுக்கு இனிய உணவாகையாலே அதிகாரி நியமமுடைத்தான அந்தச் சந்திரமண்டலத்தில் அமுதம்போல் அல்லாமல், என்னு - [4] "என்நாவில் இன்கவி"

1. "இவற்றில் ப்ராவண்யம் இவள்பரமே என்ன உண்டாய்" என்பது முடிய, இத்திவ்யதேசங்களில் இவர்க்கு ஊற்றம் உண்டாயது எப்போழ்து என்பதற்கு விடை. "ஷோடச கலா பூர்ணமான சந்திர மண்டலம் போலே பதினாறு திருநக்ஷத்திரம் நிரம்பினவாறே" என்பது முடிய, இவர் பிரபந்தம் அருளிச்செய்யத் தொடங்கியது எந்த வயதிலே என்பதற்கு விடை. "தேவபோக்யமான அதில் அம்ருதம்போல் அன்றிக்கே என்னுத் தமிழர் இசைகாரர் முதல்பத்தர் வானவர் என்னம்மான் பார் பரவு என்னும்படி சேச்வரவிபூதி" என்பது முடிய, இப்பிரபந்தத்திற்கு அதிகாரி நியமம் உண்டோ என்பதற்கு விடை. "பாலோடு அமுதன்ன மென்மொழி" என்பது முடிய, இப்பிரபந்தத்தின் இனிமைதான் இருக்கும்படி எங்ஙனே என்பதற்கு விடை.

2. திருவிருத்தம், 60.

3. "க்ருஷ்ணபக்ஷே அமரை: ஸம்பீயதே வைஸுதாமய:" என்பது, ஸ்ரீவிஷ்ணு புரா. 2. 11: 22.

> "பொருந்த வானுறை நாள்களை நாடொறும் புணர்வோன்
> அருந்த வானவர்க் காரமுது அன்புடன் அளிப்போன்"

என்பது, வில்லிபாரதம் ஆதிபர். குருகுலச் சர்க்கம்.

4. திருவாய். 3. 9: 1.

இத்திருப்பாசுரத்தால், இத்திருவாய்மொழி, இதனை அருளிச்செய்த ஆழ்வார்தமக்கே இனியதாக இருப்பது என்பதனை அறிகின்றோம்.

என்றும், தமிழர் இசைகாரர் - [1] "பாலேய்தமிழர் இசைகாரர் பத்தர் பரவும் ஆயிரம்" என்றும், முதல்பத்தர் - [2] "தூமுதல் பத்தர்க்குத் தான் தன்னைச் சொன்ன" என்றும், வானவர் - [3] "கேட்டுஆரார் வானவர்கள் செவிக்கு இனிய செஞ்சொல்லே" என்றும், என்னம்மான் - [4] "தென்ன என்னும் என்னம்மான் திருமாலிருஞ்சோலையானே" என்றும், பார்பரவு - [5] "பார்பரவு இன்கவிபாடும் பரமரே" என்றும், என்னும்படி-என்று சொல்லுகிறபடியே தான் பிறர் என்னும் வேறுபாடு, நித்தியசூரிகள் இவ்வுலகமக்கள் என்னும் வேறுபாடு, எல்லாப் பொருள்களையும் நியமிக்கின்ற இறைவன் நியமிக்கப்படும் பொருளான இவ்வுலகம் என்னும் வேறுபாடு நீங்க, சேச்வர விபூதி போக்யமான - சர்வேச்வரனேடேகூட இரண்டுவகைப்பட்ட உலகங்களும் அநுபவிப்பதற்குத் தகுதியாக, பாலோடு அமுதன்ன மென்மொழி - [6] "பாலோடு அமுதுஅன்ன ஆயிரம்", [7] "அமுதமென்மொழி" என்கிறபடியே [8] பொருளும் சொல்லும் கலந்த சுவையாலே பாலும் அமுதும் கலந்தாற்போலேயாய், இனிமையின் மிகுதியாலும் தன்னை உண்பாரை என்றும் உள்ளவராகச் செய்யும் தன்மையாலும் அமுதத்தை ஒத்ததாய், அதனினின்றும் வேறுபட்டதான மென்மையையுடைத்தான சொற்கள், முகம் செய்தது-இவர் திருவாயினின்றும் தோன்றியது என்கை.

(38)

---

1. *திருவாய். 1. 5: 11.* 2. *திருவாய். 7. 9: 3.*

*இங்குக் காட்டப்பட்ட இவ்விருதிருப்பாசுரங்களும் இத்திருவாய்மொழி, தன்னைக் கற்குமவர்களுக்கு இனியதாக இருப்பது என்பதற்கு மேற்கோள்.*

3. *திருவாய். 10. 6: 11.*

*இத்திருப்பாசுரம், நித்தியர்கட்கும் முக்தர்கட்கும் இனியதாக இருப்பது இத்திருவாய்மொழி என்பதற்கு மேற்கோள்.*

4. *திருவாய். 10. 7: 5.*

*இத்திருப்பாசுரத்தால் சர்வேச்வரனுக்கும் இனியதாக இருப்பது இத்திருவாய்மொழி என்பதனை அறிகிறோம்.*

5. *திருவாய். 7. 9: 5.*

*இத்திருப்பாசுரத்தால் பார் முழுதும் அனுபவிப்பதற்குத் தகுதியானது இத்திருவாய்மொழி என்பதனை நாம் அறிகிறோம்.*

6. *திருவாய். 8. 6: 11.* 7. *திருவாய். 6. 5: 2.*

8. *நற்குணக் கடலும் தன்னிகரில்லாத் தலைவனுமான இறைவன் பொருளாகவும், மிகச்சிறந்த இவர் அருளிச்செயல் சொற்களாகவும் அமைந்த அமைப்பினாலே என்றபடி.*



## 188

*[1] நீர்பால் நெய் அமுதாய் நிரம்பின ஏரி நெளிக்குமாபோலே, பரபக்தியாதிமய ஜ்ஞாநாம்ருத அப்தி நிமிகிற வாய்கரை மிடைந்து, மொழிபட்டு அவாவில் அந்தாதி என்று பேர்பெற்றது.*

என்பது, சூத்திரம்.

வியாக் :—இவர்பக்கல் இப்பிரபந்தம் அவதரிக்கத் தொடங்கின காலத்தை அருளிச்செய்தார் மேல். இப்பிரபந்தம் அவதரிக்கிற அளவில் 'இப்படி நாம் அவனைக் கவிபாடவேண்டும்' என்று நினைத்திருந்து பாடினரோ என்னும் வினவிற்கு விடையாக, இப்பிரபந்தம் அவதரித்த முறையை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

நீர் பால் நெய் அமுதாய் நிரம்பின ஏரி - நீர்பாலாய் பால்நெய்யாய் நெய்அம்ருதமாய் அதனாலே நிரம்பினது ஓர்ஏரி, நெளிக்குமாபோலே - பொறுமல் நெளிந்து உடையுமாறு போலே, பரபக்திஆதிமய ஜ்ஞாந அம்ருத அப்தி - [2] "மயர்வற மதிநலம் அருளினன்" என்கிற இடத்தில் கர்மத்தாலும் ஞானத்தாலும் உண்டாகின்ற பக்தியின் கட்டத்திலே பகவானுடைய திருவருளாய், அது காரணமாகப் பரபக்தி தொடங்கிப் பிறக்கையாலே ஞானம் முதலிலே பரபக்திரூபமாய், பரபக்தியானது பரஞானமாய், பரஞானமானது பரமபக்தியாய்,

---

1. *திருவாய்மொழி அவதரித்த முறையை இச்சூத்திரத்தால் அருளிச்செய்கிறார். நீர் பாலாய், பால் நெய்யாய், நெய் அமுதமாய், அதனாலே நிரம்பின ஓர்ஏரிக்கு ஆழ்வாரை உவமிக்கிறார் இச்சூத்திரத்தில். "மயர்வற மதிநலம் அருளினன்" என்ற இடத்தில் கர்மத்தாலும் ஞானத்தாலும் உண்டாகின்ற பக்தியின் நிலையிலே இறைவனுடைய திருவருள் நிற்க, அது காரணமாகப் பரபக்தி தொடங்கிப் பிறக்கையாலே, ஞானம் முதலிலே பரபக்தி ரூபமாய், பரபக்தியானது பரஞானமாய், பரஞானமானது பரமபக்தியாய் முதிர்ந்தபடியை நோக்குங்கால், நீர் பால் நெய் அமுதாய் நிரம்பின ஓர் ஏரியாக ஆழ்வாரைக் கொள்ளத்தட்டில்லை. நீரின் நிலையிலே ஞானம், பாலின்நிலையிலே பரபக்தி, நெய்யின் நிலையிலே பரஞானம், அமுதின் நிலையிலே பரமபக்தி. இவற்றின் தன்மைகளை இந்நூலில் 230, 231, 232-ஆம் சூத்திரங்களில் காண்க.*

*"நிமியும் வாயொடு கண்கள் நீர்மல்க நெக்கொசிந்து கரையுமே" என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம்பற்றி 'பரபக்தியாதி மய ஞாநாம்ருத அப்தி வாய்கரை' என்று அருளிச்செய்கிறார். ஞானஅம்ருத அப்தி - ஞான அமுதக் கடல். "மொழிபட்டோடும் கவிஅமுதம்" என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம்பற்றி 'மொழிபட்டு அவாவில் அந்தாதி என்று பேர் பெற்றது' என்கிறார். அங்ஙனம் உள்ளே தேங்கியிருந்த அமுதவெள்ளமே திருவாய்மொழி ரூபமான பேர்யாறு பெருகி வந்தது என்றபடி.*

2. *திருவாய். 1. 1: 1.*

[1] "இறைவனிடத்துள்ள பக்தி என்ன, உண்மையான ஞானம் என்ன, இவைகளாகிற அமிருதக்கடலின் வெள்ளம்போலே மங்களமான திருவாக்குகளால்" என்கிறபடியே அந்தப் பரபக்தி முதலியவைகளால் நிறைந்த ஞானமாகிற அமுதக்கடலானது, நிமிகிற வாய்கரை - தாம் தரித்திருக்கும்பொருட்டு வெள்ளமிடவேண்டுமென்ற விருப்பம் பிறந்து [2] "நிமியும் வாயொடு கண்கள் நீர்மல்க" என்கிறபடியே நெளிகிற வாய்கரையாலே, மிடைந்து - [3] "மிடைந்த சொல் தொடை" என்கிறபடியே சொற்கள் தாம் 'நாம் இங்குத்தைக் குத் தொண்டு செய்தோமாக வேண்டும்' என்று 'என்னைக்கொள்க, என்னைக்கொள்க' என்று மேல்விழுகையாலே நெருங்கிக்கொண்டு, மொழிபட்டு - [4] "மொழிபட்டு ஓடும் கவியமுதம்" என்கிறபடியே சொற்கள் உருவகமாகப் பெருக்கு எடுத்து, இப்படிப் பரபக்தி முதலிய மூன்று நிலைமையை அடைந்த பக்தியினால் தூண்டப்பெற்று அவதரிக்கையாலே, அவாவில் அந்தாதி என்று பேர்பெற்றது - [5] "அவாவில் அந்தாதிகளால் இவை ஆயிரமும்" என்கிறபடியே பக்தி பலாத்காரத்தால் பிறந்த அந்தாதியான ஆயிரம் என்று பேராயிற்று என்கை.

ஆக, இவர் இப்பிரபந்தம் அருளிச்செய்கைக்கு அடியான அன்பு பிறந்த காலத்தையும், அருளிச்செய்யத் தொடங்கின காலத்தையும், இது எல்லார்க்கும் பொது என்பதனையும், இதனுடைய இனிமையினையும், அவதரித்த முறையினையும் சொல்லிற்றாயிற்று. *(39)*

### 189

[6]மனம்செய் எல்லையில் ஞானஇன்பத்தை நின்மலமாக வைத்தவர், ஞானப்பிரானை ஞானத்து வைம்மின் என்ற இது, தத்வவிவேக நித்யத்வ அநித்யத்வ நியந்த்ருத்வ ஸௌலப்ய ஸாம்ய அகங்கார இந்த்ரிய தோஷ பல மந:ப்ராதாந்ய கரணநியமந ஸுக்ருதி பேத தேவாஸுரவிபாக விபூதியோக விச்வரூப தர்சந ஸாங்கபக்தி ப்ரபத்தி துவைவித்யாதிகளாலே அன்று ஓதிய கீதா ஸமம் என்னும்.

என்பது, சூத்திரம்.

---

1. "அச்யுத பக்தி தத்வஜ்ஞாநாம்ருதாப்தி பரிவாஹ ஸுபைர் வசோபி:" என்பது, தோத்திர ரத்நம், 3.
2. திருவாய். 6. 5: 2.
3. திருவாய். 1. 7: 11.
4. திருவாய். 8. 10: 5.
5. திருவாய். 10. 10: 11.
6. இச்சூத்திரத்தை, வைம்மின் என்ற இது, கீதா சமம் என்னும்



வியாக் :—இனி மேல் இப்பிரபந்தத்தில் சொல்லப்படுகின்ற அர்த்த விசேடங்களை எல்லாம் விரிவாக அருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றி, அவற்றில் முதலிலே, பகவத் தத்துவத்தை உள்ளங்கை நெல்லிக்கனியாக நேரே அறிந்த ஆழ்வார், இவ்வுலகமக்கள் உய்வுபெறும்பொருட்டு உபதேசித்த இப்பிரபந்தம், சொல்லப்படுகிற பொருள்களின் ஒப்புமையாலே பகவானால் சொல்லப்பட்ட கீதையாகிய உபநிடதத்திற்கு ஒப்பாகச் சொல்லப்படும் என்கிறார் இச்சூத்திரத்தால்.

[1] மனம் செய் எல்லையில் ஞானஇன்பத்தை நின்மலமாக வைத்தவர் - மனம்செய் - [2] "எல்லாப் பொருள்கட்கும் வித்தாய் முதலில் சிதையாமே மனம்செய் ஞானத்து உன்பெருமை" என்று சொல்லுகிறபடியே எல்லாப் பொருள்கட்கும் காரணனாய், எல்லையில் - [3] "எல்லையில் ஞானத்தன் ஞானம்ஃதே கொண்டு எல்லாக் கருமங்களும் செய்" என்கிறபடியே எல்லை இல்லாத நினைவின் உருவமான ஞானத்தையுடையனாய், ஞானஇன்பத்தை - [4] "சூழ்ந்ததனில் பெரிய சுடர் ஞானஇன்பமேயோ" என்கிறபடியே மூலப்பகுதியும் புருடனும் ஆகிற தத்துவங்கள் இரண்டும் தனக்குள்ளேஆம்படி பரந்து, தான் அளவிட்டு அறியமுடியாததாய் ஒளிமயமாய் ஞானஆனந்த லக்ஷணமாய் இருக்கிற சொரூபத்தையுடையனை சர்வேச்வரனை, நின்மலமாக வைத்தவர் - [5] "எனது ஆவியுள்ளே நிறைந்த ஞானமூர்த்தியாயை நின்மலமாக வைத்து" என்கிறபடியே நிறைந்த ஞானசொரூபனை உன்னை என் நெஞ்சிற்குள்ளே மிகத் தெளிவாக அநுபவித்த என்னும்படி நேரே அறிந்த ஆழ்வார்.

---

என்று முடிக்க. 'தத்வவிவேகம்' என்று தொடங்கி நடுவில் கூறப்படுமவை எல்லாம், சமம் என்பதற்குக் கூறப்படும் காரணங்கள்.

1. பிறர்க்கு உபதேசம் செய்வதற்கு வேண்டிய தகுதிகள் நிறைந்தவர் ஆழ்வார் என்பதனை இவ்வாக்கியத்தால் தெரிவிக்கிறார். ஞானானந்தமயனான இறைவனைத் தமது திருவுள்ளத்தால் மிகத் தெளிவாக அநுபவித்து நேரே அறிந்தவர் ஆழ்வார் என்பதனைத் தெரிவித்தபடி. இதனால் அருச்சுனனுக்கு உபதேசித்த ஸ்ரீ கண்ணபிரானை ஒத்தவர் ஆழ்வார் என்பதனைத் தெரிவித்தவாறு.

நின்மலம் - குற்றம் இல்லாமை; மிகத் தெளிவாக என்றபடி.

2. திருவாய். 1. 5: 2.
3. திருவாய். 3. 10: 8.
4. திருவாய். 10. 10: 10.
5. திருவாய். 4. 7: 7.

[1] ஞானப்பிரானை ஞானத்து வைம்மின் என்ற இது - ஞானப்பிரானை - [2] "இருங்கற்பகஞ்சேர், வானத்தவர்க்கும் அல்லாதவர்க்கும் மற்றெல்லாயவர்க்கும், எறிதிரை வையமுற்றும் ஏனத்து உருவாய் இடந்த, ஞானப்பிரானை அல்லால் இல்லை நான் கண்ட நல்லது" என்கிறபடியே பிரளயவெள்ளத்திலே மூழ்கின பூமியை மஹாவராகமாய் மேலே கொண்டுவந்து நிறுத்திய ஞானசக்திகளையும், உடைமை உடையனும்தன்மை ஆகிற சம்பந்தத்தையுமுடையனாய், வராக சரம சுலோகங்கள் இரண்டன் உபதேசமுகத்தாலே சரமோபாயத்தை வெளியிடுகையாலே ஞானஉபகாரகனுமாய் இருக்கிறவனை ஒழிய, எல்லார்க்கும் உய்வுபெறுதற்குக் காரணமாய் இருப்பது ஒன்று இல்லை; இது நான் அறுதியிட்ட மிக மிக உயர்ந்த பொருள் என்று முதல் பிரபந்தமான திருவிருத்தத்தில் அருளிச்செய்த விஷயத்தை உபாயமாகப் பற்றச் சொல்லுகிற அளவில், ஞானத்து வைம்மின் என்ற இது - [3] "திருக்குருகூரதனை, உளங்கொள் ஞானத்து வைம்மின் உம்மை உய்யக்கொண்டு போகுறிலே" என்கிறபடியே உய்வுபெற வேண்டியிருந்தீர்கோளாகில் அவன் நித்தியவாசம் செய்கிற தேசத்தை உங்கள் மனத்தின் ஞானத்துக்கு விஷயமாக்குங்கோள் என்று இவ்வுலக மக்களைக் குறித்து உபதேசித்த இப்பிரபந்தம்,

[4] தத்வ விவேகம் - தர்மத்தை நிலைநிறுத்தும் பொருட்டு வந்து அவதரித்தருளின ஸ்ரீ கிருஷ்ணன் [5] "தகுதியில்லாத இடத்தில் உண்டான பந்து சிநேகம் கருணை ஆகியவற்றாலும் தன் தர்மத்தில் அதர்மபுத்தியாலும் கலங்கித் தன்னைச் சரணம் அடைந்த அருச்சுனனுக்காக ஸ்ரீ கீதா சாஸ்திரம் செய்யப்பட்டது" என்கிறபடியே இடம் அல்லாத இடத்தில் உண்டான பந்துக்கள்பக்கல் வைத்த சிநேகம் கருணை ஆகியவற்றாலும் தன்னுடைய க்ஷத்திரிய தர்மத்தில்

1. 'ஞானப்பிரானை' என்று தொடங்கும் இவ்வாக்கியத்தால், தாம் அறுதியிட்ட மிகச் சிறந்த ஞான இன்பத்தையே உய்வுபெறுவதில் விருப்பமுள்ள பிறர்க்கும் உபதேசிக்கிறார். இதற்காகவே திருவாய்மொழி அவதரித்தது என்பது தெரிவிக்கப்படுகிறது.

2. திருவிருத்தம், 99.

3. திருவாய். 4. 10: 9.

4. சீவான்மாக்களுக்கும் பரமான்மாவுக்கும் உள்ள பேதம், உயிர்களுக்குள்ளே ஒன்றற்கொன்று உள்ள பேதம், சரீரத்தைக் காட்டிலும் உயிர்களுக்குள்ள பேதம் என்னும் இம்மூன்றனுடைய பகுத்தறிவு ஞானத்தையே ஈண்டுத் 'தத்துவ விவேகம்' என்ற தொடர்மொழியால் குறிக்கிறார்.

5. அஸ்தாந ஸ்நேஹ காருண்ய தர்மாதர்மதியாகுலம்
பார்த்தம் ப்ரபந்ந முத்திஸ்ய ஶாஸ்த்ராவதரணம் க்ருதம்.
என்பது, ஸ்ரீ கீதார்த்தசங்கிரஹம், 5.



அதர்மபுத்தியாலும் கலங்கி, [1] "போர் புரியமாட்டேன்" என்கிறபடியே போரைச் செய்யாதவனாய், [2] "எனக்கு எது நல்லது என்று தங்களால் நிச்சயிக்கப்பட்டிருக்கிறதோ அதனைச் சொல்லவேண்டும்; நான் தங்களுக்குச் சிஷ்யன்; சரணம் அடைந்த என்னை நியமிக்கவேண்டும்" என்ற அருச்சுனனைத் தெளிவித்துப் போரினைச் செய்யுமவனுக்குதல் காரணமாக, [3] "அறிவினால் குறைஇல்லா அகல்ஞாலத்தவர் அறிய நெறியெல்லாம் எடுத்து உரைத்த நிறைஞானத்து ஒருமூர்த்தி" என்கிறபடியே உலகத்தார் தீதில் நன்னெறி எய்தத் தக்க சாஸ்திரமாம்படி எல்லாப்பொருளும் விரித்த ஸ்ரீ கீதையில் முதலிலே சரீரத்தையே ஆத்மாவாக நினைத்ததனால் உண்டான பந்து சினேகத்தையும் கொல்லுதற்கு அஞ்சின அச்சத்தையும் மாற்றுகைக்காகத் தத்துவ ஞானத்தை உபதேசிக்கத் தொடங்கின அளவிலே [4] "நான் முன் சென்ற காலத்தில் இல்லை என்கிறது இல்லை, இருந்தேன்; நீயும் இல்லை என்கிறது இல்லை, இருந்தாய்; இங்கு வந்திருக்கிற அரசர்களும் இல்லை என்கிறது இல்லை, இருந்தார்கள்; நானும் நீயும் அரசர்களும் ஆகிற எல்லோரும் இனி வரும் காலத்தில் இல்லையாவோம் என்பது இல்லை, இருப்போம்" என்கிறபடியே சர்வேச்வரனை தன்னைப்போன்று எல்லா ஆன்மாக்களும் நித்தியமாக உள்ளவர்கள் என்று அருளிச்செய்கிற வழியாலே சீவான்மாவுக்கும் பரமான்மாவுக்கும் வேறுபாடு, சீவான்மாக்களுக்குள் ஒன்றற்கொன்று வேறுபாடு

1. "நயோத்ஸ்யாமி" என்பது ஸ்ரீ கீதை, 2: 6.

2. யச்ச்ரேயஸ்ஸ்யாந்நிஶ்சிதம் ப்ரூஹி தந்மே
சிஷ்யஸ்தேஹம் சாதிமாம் த்வாம் ப்ரபந்நம்.
என்பது ஸ்ரீ கீதை, 2: 7.

3. திருவாய்: 4. 8: 6.

4. நத்வேவாஹம் ஜாதுநாஸம் நத்வம் நேமே ஜநாதிபா:
நசைவ நபவிஷ்யாம: ஸர்வேவயமத: பரம்.
என்பது, ஸ்ரீகீதை, 2. 12.

இச்சுலோகத்தில் 'நான், நீ, இவர்கள்' என்று பிரித்து அருளிச்செய்வதனால், ஜீவான்மாவும் பரமான்மாவும் வேறுபட்டவைகள் என்னும் ஜீவபரபேதமும், ஆன்மாக்களுக்குள் ஒன்றற்கு ஒன்று வேறுபட்டிருக்கின்ற பேதமும் அறிகின்றோம்.

ஆகிய இவற்றை அருளிச்செய்து, [1]"ஒரு சரீரத்தில் இருக்கிற ஆன்மாவிற்கு அந்தச் சரீரத்தில் வருகிற இளமையும் யௌவனமும் முதுமையும் பற்றி எப்படி வருத்தமில்லையோ அப்படியே வேறு சரீரத்தை அடைகிறதும் வருத்தமில்லை; அந்த விஷயத்தில் தைரியமுள்ளவன் மயக்கத்தை அடையமாட்டான்" என்பது போன்றவைகளாலே சரீரம்வேறு, ஆன்மாவேறு என்பதனையும் சொல்லுகையாலே தத்துவ விவேகம் ஸ்ரீ கீதையில் சொல்லப்பட்டிருக்கின்றது. அது போன்று, இவ்வாழ்வாரும் [2]"அடியேன் உள்ளான் உடல் உள்ளான்" என்ற திருப்பாசுரத்தில் 'அடியேன், உள்ளான்' என்ற சொற்களால் சீவான்மா வேறு, பரமான்மா வேறு என்பதனையும், அச்சொற்களின் பொருள் ஆற்றலால் அச்சீவான்மாக்களும் ஒன்றற்கொன்று வேறு பட்டவை என்பதனையும், [3]"சென்று சென்று பரம்பரமாய்" என்ற திருப்பாசுரத்தில் ஆன்மாவானது சரீரம் முதலியவற்றினின்றும் வேறு பட்டது என்பதனையும் சொல்லுகையால் தத்துவ விவேகத்தையும்,

நித்யத்வ அநித்யத்வம் - ஸ்ரீகீதையில், [4]"நித்தியனும் அழிவில்லாதவனும் அறிகின்றவனும் இருக்கின்ற ஆன்மாவினுடைய இந்தச் சரீரங்கள் அழியக்கூடியவைகளாகச் சொல்லப்பட்டிருக்கின்றன; ஆகையால் பரத குலத்தில் பிறந்தவனே! போரினைச் செய்வாய்" என்றும், [5]"இவ்வான்மா ஒருகால் பிறப்பதும் இல்லை, இறப்பதும் இல்லை; இவ்வான்மா கல்பாதியில் தோன்றி மீண்டும் கற்பத்தின் முடிவில் இல்லாமல் போகிறான் என்பது இல்லை; இவ்வான்மா பிறப்பில்லாதவன்; என்றுமுள்ளவன்; ஒரு நிலையாயிருப்பவன்; முன்பும் இருக்கிறவன்; ஆதலால் சரீரம் கொல்லப்பட்டாலும் ஆன்மா கொல்

1. தேஹிநோஸ்மிந் யதாதேஹே கௌமாரம் யௌவனம்ஜரா
   ததா தேஹாந்தர பிராப்தி: தீர: தத்ர நமுஹ்யதி.

என்பது, ஸ்ரீகீதை, 2: 13.

இந்தச் சுலோகத்தில் 'தேஹிந, தேஹே' என்ற பதங்களால் சரீரம் வேறு, ஆன்மா வேறு என்று நாம் அறிகின்றோம்.

2. திருவாய். 8. 8: 2:   3. திருவாய். 8. 8: 5.

4. அந்தவந்த இமேதேஹா நித்யஸ்யோக்தா: சரீரிண:
   அநாசிநோப்ரமேயஸ்ய தஸ்மாத் யுத்யஸ்வபாரத.

என்பது, ஸ்ரீகீதை, 2: 18.

5. நஜாயதே ம்ரியதேவா கதாசித் நாயம் பூத்வாபவிதாவாநபூய:
   அஜோநித்ய: சாச்வதோயம் புராணோ நஹந்யதே ஹந்யமாநே

என்பது, ஸ்ரீகீதை, 2: 20.

[சரீரே.



லப்படமாட்டான்" என்றும், [1]"மனிதன் எப்படிக் கிழிந்துபோன உடைகளை விட்டு நீக்கி வேறான புதிய உடைகளை எடுத்துக்கொள்ளுகிறானோ அப்படியே ஆன்மாவும் பழையதான சரீரத்தை விட்டுவிட்டுப் புதியதாயும் வேறாயும் இருக்கிற சரீரத்தை அடைகிறது" என்றும் ஆன்மா நித்தியமாக இருப்பது என்றும் சரீரம் அழிந்துபோவது என்றும் கூறியிருப்பது போன்று, இவ்வாழ்வாரும் [2]"மின்னின் நிலையில மன்னுயிர் ஆக்கைகள்" என்றும், [3]"உள்ளதும் இல்லதும்" என்றும் உயிர் உடல்களின் நிலையுதலையும் நிலையாமையையும் கூறியிருத்தலானும்,

[4] நியந்த்ருத்வம் - [5]"பூமி தண்ணீர் தீ காற்று ஆகாயம் மனம் புத்தி அகங்காரம் என்று எட்டு வகையாக வேறுபட்டிருக்கின்ற இந்த மூலப்பகுதி என்னுடையது என்று அறிவாயாக; தோள்வலி பொருந்திய அருச்சுனா! இம்மாயை தாழ்ந்தது; இதைக்காட்டிலும் வேறானதும் எதனால் இந்த உலகம் தரிக்கப்படுகிறதோ அப்படிப்பட்டதுமான என்னுடைய ஆன்ம சொரூபமான சரீரம் இதனிலும் சிறப்புடையது என்று அறிந்துகொள்" என்கிறபடியே உயிர்ப்பொருள் உயிரல்பொருள்கட்கெல்லாம் ஆன்மாவாய் [6]"எல்லாப் பொருள்களினுடைய உள்ளத்தில் நான் இருக்கிறேன்; என்னிடத்திலிருந்தே நினைவும் அறிவும்

1. வாஸாம்ஸி ஜீர்ணாநியதாவிஹாயநவாநிக்ருஹ்ணாதிநரோபராணி
   ததாசரீராணி விஹாய ஜீர்ணாந்யந்யாநி ஸம்யாதிநவாநிதேஹீ.

என்பது, ஸ்ரீகீதை, 2: 22.

2. திருவாய். 1. 2: 2.   3. திருவாய். 1. 2: 8.

4. நியந்த்ருத்வம்—எல்லாப் பொருள்களையும் ஏவுகின்ற—கட்டளையிடுகின்ற—நியமிக்கின்ற தன்மை.

5. பூமிராபோநலோவாயு: கம்மநோ புத்திரேவச
   அஹங்கார இதீயம்மே பிந்நா ப்ரக்ருதிரஷ்டதா.
   அபரேயமிதஸ்த்வந்யாம் ப்ரகிருதிம் வித்திமேபராம்
   ஜீவபூதாம் மஹாபாஹோயயேதம் தார்யதேஜகத்.

என்பன, ஸ்ரீகீதை, 7: 4, 5.

6. "ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸ்ந்நிவிஷ்டோ மத்த: ஸ்மிருதி:
   ஜ்ஞாநமபோஹநஞ்ச"

என்பது, ஸ்ரீகீதை, 15: 15.

அறிவின்மையும் உண்டாகின்றன" என்றும், [1] "தன்னால் உண்டாக்கப்பட்டதாயும் மூலப்பகுதி என்ற பெயருடையதாயும் இருக்கிற இந்தச் சரீரத்தில் இருக்கிற எல்லா உயிர்களையும் மாயையாலே கர்மங்கட்குத் தகுதியான காரியங்களைச் செய்வித்துக்கொண்டு சர்வேச்வரன் எல்லா உயிர்களுடைய மனங்களில் இருக்கிறான்" என்றும் சொல்லுகிறபடியே எல்லா உயிர்களுடைய மனங்களிலும் தங்கியிருப்பவனாய் நின்று, தொழில் செய்தல் செய்யாமைகளாகிற எல்லாக் காரியங்களையும் செய்வித்தலாகிற இறைவனுடைய நியந்த்ருத்வத்தைச் சொல்லியிருத்தல்போன்று, இவ்வாழ்வாரும் [2] "உடல்மிசை உயிர் எனக்கரந்து எங்கும் பரந்து" என்றும், [3] "கரந்த சில் இடம் தொறும் இடம்திகழ் பொருள்தொறும் கரந்து எங்கும் பரந்துளன் இவை உண்ட கரனே" என்றும் உயிர்ப்பொருள் உயிரல்பொருள்கட்கெல்லாம் தான் உயிராய், [4] "நின்றனர் இருந்தனர் கிடந்தனர் திரிந்தனர், நின்றிலர் இருந்திலர் கிடந்திலர் திரிந்திலர்" என்கிறபடியே பொருள்களின் தொழில் செய்தல் செய்யாமைகளாகிற அனைத்தும் தனக்கு உரியதாம்படி இருக்கிற அவனுடைய நியந்த்ருத்வத்தைச் சொல்லுகையாலும்,

சௌலப்யம் - ஸ்ரீகீதையில் [5] "எப்போதும் என்னிடம் இருக்க வேண்டும் என்று ஆசை கொண்டிருக்கிற அந்த ஞானிக்கு நான் எளிமையாய் அடையத்தக்கவன்" என்றும், [6] "நல்லோரை நலம் புரிந்து காத்தற்கும் தீயோரைப் பொன்றுநெறி போக்கற்கும் எல்லாம் முந்தை அறத்தை நிலைநிறுத்துவதற்கும் யுகம்தோறும் இசைந்து நான் பிறப்பன்" என்றும் பக்திமான்கள் நிமித்தமாகவும் அவதாரம் காரணமாகவும் அவனுடைய சௌலப்யம் சொன்னது போன்று, இவ்வாழ்

---

1. ஈச்வரஸ் ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேசேர்ஜுந திஷ்டதி
   ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநி மாயயா.

என்பது, ஸ்ரீகீதை, 18: 61.

2. திருவாய். 1. 1: 7. 3. திருவாய். 1. 1: 10.

4. திருவாய். 1. 1: 6.

5. "தஸ்யாஹம் ஸுலப: பார்த்த நித்யயுக்தஸ்ய யோகிந:"

என்பது, ஸ்ரீகீதை, 8: 14.

6. பரித்ராணாய ஸாதூநாம் விநாசாயசதுஷ்க்ருதாம்
   தர்மஸம்ஸ்த்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே.

என்பது, ஸ்ரீகீதை, 4: 8.



வாரும் [1] "பத்துடையடியவர்க்கு எளியவன்" என்றும், [2] "பலபிறப்பாய்-எளிவரும் இயல்வினன்" என்றும் சிறிது ஆசையுடையாரைப் பற்றவும் அவதாரம் காரணமாகவும் உண்டான அவனுடைய சௌலப்யத்தைக் கூறுகையாலும்,

[3] சாம்யம் - ஸ்ரீகீதையில் [4] "நான் எல்லா உயிர்களிடத்திலும் சமனாய் இருக்கிறேன், எனக்குப் பகைவனும் இல்லை, நட்டோனும் இல்லை, பக்தியோடு யாவர் என்னை வணங்குகிறார்களோ அவர்கள் என்னிடத்தில் இருக்கிறார்கள், நானும் அவர்களிடத்தில் இருக்கிறேன்" என்று அவனை வணங்கும் முறையில் அவன் எல்லார்க்கும் சமனாக இருத்தல் கூறப்பட்டுள்ளது போன்று, இவ்வாழ்வாரும் [5] "பற்றிலன் ஈசனும், முற்றவும் நின்றனன்" என்று அவனை அடையும் முறையில் அவன் சமனாக உள்ள தன்மையைக் கூறுகையாலும்,

அகங்கார தோஷம் - ஸ்ரீகீதையில் [6] "மூலப்பகுதியினுடைய மூன்று குணங்களால் பலவகையாகச் செய்யப்படுகின்ற காரியங்களை அறிவில்லாத இந்தச் சீவன் அகங்காரத்தால் 'நான் செய்கிறேன்' என்று நினைக்கிறான்" என்று அகங்காரத்தின் குற்றத்தைக் கூறியுள்ளது போன்று, இவ்வாழ்வாரும் [7] "நீர் நுமது என்றிவை, வேர் முதல் மாய்த்து" என்று பிறப்பிற்குக் காரணம் அதுவேயாகச் சொல்லுகையாலே அகங்காரத்தினுடைய குற்றத்தைக் கூறியிருத்தலாலும்,

---

1. திருவாய். 1. 3: 1. 2. திருவாய். 1. 3: 2.

3. சாம்யம்—எல்லார்க்கும் ஒத்திருத்தல்.

4. "ஸமோஹம் ஸர்வபூதேஷு நமே த்வேஷ்யோஸ்திநப்ரிய:"

என்பது, ஸ்ரீகீதை, 9: 29.

5. திருவாய். 1. 2: 6.

   "போற்றா ருயிரினும் போற்றுந ருயிரினும்
   மாற்றே மாற்றல் இலையே, நினக்கு
   மாற்றோரும் இலர் கேளிரு மிலர்எனும்
   வேற்றுமை இன்றது போற்றுநர்ப் பெறினே"

என்பது, பரிபாடல். 4, 51 - 54.

6. "அஹங்கார விமூடாத்மா கர்த்தாஹமிதி மந்யதே"

என்பது, ஸ்ரீகீதை, 3: 27.

7. திருவாய். 1. 2: 3.

இந்த்ரிய பலம் - [1] "இந்திரியங்களை வெல்ல வேண்டும் என்று முயற்சி செய்கின்ற ஒரு மனிதனுடைய மனத்தினை, கலங்கச் செய்கின்ற இந்திரியங்கள் வலியனவாய் இழுத்துக்கொண்டு போகின்றன" என்று இந்திரியங்களினுடைய வலிமையைச் சொன்னது போன்று, இவ்வாழ்வாரும் [2] "விண்ணுளார் பெருமாற்கு அடிமை செய்வாரையும் செறும் ஐம்புலன்" என்று இந்திரியங்களினுடைய வலிமையைச் சொல்லுகையாலும், மந: பிராதாந்யம் - [3] "காற்றினைப் போன்று அந்த மனத்தை அடக்குதலும் செய்யமுடியாத காரியம் என்று நான் நினைக்கிறேன்" என்றும், [4] "அருச்சுனா! மனத்தினை அடக்குதல் மிக மிக அரிது, சஞ்சலம் உள்ளது என்பதில் ஐயம் இல்லை, அப்படியிருப்பினும் பயிற்சியாலும் வைராக்கியத்தாலும் அடக்கப்படுகிறது" என்றும் மற்றை இந்திரியங்களைக் காட்டிலும் மனத்தினுடைய முதன்மையினைக் கூறியது போன்று, இவ்வாழ்வாரும் [5] "மனத்தை வலித்து" என்று மனத்தினை அடக்குதலின் அருமை சொல்லுமுகத்தால் மனத்தின் முதன்மையைச் சொல்லுதலாலும்,

கரண நியமனம் - ஸ்ரீகீதையில் [6] "அத்தகைய எல்லா இந்திரியங்களையும் அடக்கி என்னுடைய திருமேனியில் மனத்தினை நிறுத்தி நிதானமாக என்னையே நினைத்துக்கொண்டிருக்கக்கடவன், எவனுக்கு இந்திரியங்கள் தன்வசத்தில் இருக்கின்றனவோ அவனுக்குப் புத்தியானது ஒரே நிலையில் நிலைத்திருக்கிறது" என்றும்; [7] "ஞானத்திற்கு வழியான எல்லா இந்திரியங்களையும் விஷயங்களில் போகாமல்

1. *யததோஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபஶ்சித:*
*இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம்மந:*
என்பது, ஸ்ரீகீதை, 2: 60.

2. *திருவாய்.* 7. 1. 6.

3. *சஞ்சலம்ஹிமந: க்ருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம்*
*தஸ்யாஹம் நிக்ரஹம்மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்.*
என்பது, ஸ்ரீகீதை, 6: 34.

4. *அஸம்சயம் மஹாபாஹோமநோதுர்நிக்ரஹம் சலம்*
*அப்யாஸேநது கௌந்தேய வைராக்யேணச க்ருஹ்யதே.*
என்பது, ஸ்ரீகீதை, 6: 35.

5. *திருவாய்.* 5. 1: 4.

6. *தாநிஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீதமத்பர:*
*வஶேஹியஸ்யேந்த்ரியாணிதஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா.*
என்பது, ஸ்ரீகீதை, 2: 61.

7. *"ஸர்வத்வாராணி ஸம்யம்ய மநோஹ்ருதி நிருத்த்யச"*
என்பது, ஸ்ரீகீதை, 8: 12.



அடக்கி மனத்தினை இதயத்தில் நிறுத்தியும்" என்றும் கரணங்களை அடக்குதல் சொன்னதுபோன்று, இவ்வாழ்வாரும் [1] "உள்ளம் உரை செயல், உள்ள இம்மூன்றையும், உள்ளிக்கெடுத்து" என்று கரணங்களை அடக்குதலைப் பற்றி அருளிச்செய்கையாலும்,

[2] சுக்ருதி பேதம் - [3] ஸ்ரீகீதையில் "ஏ அருச்சுனா! தன்னினின்றும் நீங்கிய செல்வத்தை மீண்டு விரும்புகிறவனும், கைவல்யத்தை விரும்புகிறவனும், வறியனாக இருந்து செல்வத்தை விரும்புகிறவனும், பகவானை அடைய விருப்பமுள்ளவனும் ஆன நால்வகைப்பட்ட நல்வினையையுடைய மக்கள் என்னை வணங்குகிறார்கள்" என்று நல்வினையையுடைய மக்கள் வேறுபாட்டினைச் சொன்னது போன்று, இவ்வாழ்வாரும் [4] "பெருநாடு காண இம்மையிலே பிச்சைதாம் கொள்வர்" என்கையாலே நீங்கிய செல்வத்தை விரும்புகிற ஆர்த்தனும், [5] "இறுகல் இறப்பென்னும்" என்கையாலே கைவல்யத்தை விரும்புகிற ஜிஜ்ஞாசுவும், [6] "குணங்கொள் நிறைபுகழ் மன்னர்" என்கையாலே புதிய செல்வத்தை விரும்புகிற அர்த்தார்த்தியும், [7] "திருநாரணன் தாள் காலம்பெறச் சிந்தித்து உய்ம்மின்" என்கையாலே பகவானை விரும்புகிற ஞானியும் ஆன நால்வகைப்பட்ட நல்வினையாளர்களைச் சொல்லுகையாலும்,

தேவாசுர விபாகம் - ஸ்ரீகீதையில் [8] "இவ்வுலகத்தில் தெய்வம் என்றும் ஆசுரம் என்றும் கர்மங்களைச் செய்யும் மக்களுடைய பிறப்பு இரண்டு வகை" என்றும், [9] "தெய்வப் பிறப்பாகிற செல்வமானது இப்பொழுது இருக்கும் பிறப்பினைப் போக்கி, என்னிடம் வருவதற்கு, படிப்படியாக உதவுகிறது; அசுர செல்வமானது கீழான கதியை

1. *திருவாய்.* 1. 2: 8.

2. *சுக்ருதி—புண்ணியத்தைச் செய்த மக்கள்.*

3. *சதுர்விதா பஜந்தே மாம்ஜநா: ஸுக்ருதிநோர்ஜுந*
*ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீசபரதர்ஷப*
என்பது, ஸ்ரீகீதை, 7: 16.

*ஜிஜ்ஞாசு - பகவானை அறியவேண்டும் என்னும் விருப்பமுள்ளவன்.*

4. *திருவாய்.* 4. 1: 1.

5. *திருவாய்.* 4. 1: 10.

6. *திருவாய்.* 4. 1: 8.

7. *திருவாய்.* 4. 1. 1.

8. *"த்வௌ பூதஸர்கௌ லோகேஸ்மிந் தைவ ஆஸுரஏவச"*
என்பது, ஸ்ரீகீதை, 16: 6.

9. *"தைவீஸம்பத் விமோக்ஷாய நிபந்தாயாஸுரீமதா"*
என்பது, ஸ்ரீகீதை, 16: 4.

அடையும்படி செய்யும் என்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது'' என்றும் தேவர்கள் அசுரர்கள் என்னும் வேறுபாட்டினைச் சொல்லியிருப்பது போன்று, இவ்வாழ்வாரும் [1] ''அரக்கர் அசுரர் பிறந்தீர்உள்ளீரேல்'' என்றும், [2] ''நண்ணு அசுரர் - நல்ல அமரர்'' என்றும் தேவ அசுர வேறுபாட்டினைச் சொல்லியிருக்கையாலும்,

[3] விபூதி யோகம் - ஸ்ரீகீதையில் [4] ''குருகுலத்திற் பிறந்தவனே! என்னுடைய நல்லவையும் தீயவையுமான செல்வங்களைச் சொல்லுகிறேன்; அந்தோ! என்னுடைய செல்வத்தின் முடிவிற்கு எல்லை இல்லை'' என்றும், [5] ''பன்னிரண்டு சூரியர்களுள் விஷ்ணு என்ற சூரியன் நான், இருளைப் போக்குகிற பொருள்களுள் கிரணங்களையுடைய சூரியன் நான்'' என்றும் வருகின்ற இன்னோரன்னவைகளால் விபூதியோகத்தைச் சொன்னது போன்று, இவ்வாழ்வாரும் [6] ''புகழும் நல்லொருவன் என்கோ'' என்ற திருவாய்மொழியிலும் [7] ''நல்குரவும் செல்வும்'' என்ற திருவாய்மொழியிலும் [8] ''மாயா வாமனனே'' என்ற திருவாய்மொழியிலும் அவனுடைய விபூதி யோகத்தைச் சொல்லுகையாலும்,

விச்வரூப தர்சநம் - ஸ்ரீகீதையில் [9] ''ஓ தேவனே! உலகமே உருவமான உன்னுடைய சரீரத்தில் எல்லாவிதமான தேவர்களையும் அப்படியே பிராணி விசேடங்களின் கூட்டங்களையும் பிரமனையும் பிரமனுடைய அதீனத்தில் இருக்கிற சிவனையும் தெய்வலோகத்திலுள்ள எல்லா இருடிகளையும் பாம்புகளையும் பார்க்கிறேன்'' என்பது போன்ற

1. திருவாய். 5. 2: 5. 2. திருவாய். 10. 7: 5.
3. விபூதி - ஐச்வரியம்; செல்வம்.
4. ஹந்ததே கதயிஷ்யாமி விபூதீராதமநஸ்ஸுபா
ப்ராதாந்யத: குருச்ரேஷ்ட நாஸ்த்யந்தோவிஸ்தரஸ்யமே.
என்பது, ஸ்ரீகீதை, 10: 19.
5. ''ஆதித்யாநாமஹம் விஷ்ணு: ஜ்யோதிஷாம் ரவிரம்சுமாந்''
என்பது, ஸ்ரீகீதை, 10: 21.
6. திருவாய். 3. 4: 1. 7. திருவாய். 6. 3: 1.
8. திருவாய். 7. 8: 1.
9. பச்யாமி தேவாம்ஸ்தவ தேவதேஹே ஸர்வாம் ஸ்ததாபூத விசேஷஸங்காந்
ப்ரஹ்மாணம் ஈசம் கமலாஸநஸ்த்தம் ருஷீம்ப்ச ஸர்வாந் உரகாம்ப்ச திவ்யாந்.
என்பது, ஸ்ரீகீதை, 11, 15.



வைகளாலே விச்வரூப தரிசனத்தைச் சொல்லியிருப்பதுபோன்று, இவ்வாழ்வாரும் [1] ''நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய், சீரார் சுடர்கள் இரண்டாய்ச் சிவனாய் அயனானாய்'' என்று விச்வரூப தரிசனத்தைச் சொல்லுகையாலும்,

[2] சாங்கபக்தி - [3] ஸ்ரீகீதையில் ''என்னிடத்தில் மனத்தினை வைத்தவனும் என்னிடத்தில் பக்தியையுடையவனும் என்னை ஆராதிக்கிறவனும் என்னை நமஸ்காரம் செய்கிறவனும் என்னைச் சரணம் அடைந்தவனும் இவ்விதமான மனத்தையுடையவனாய் என்னையே அடைவாய்'' என்று அங்கத்தோடு கூடிய பக்தியைச் சொன்னது போன்று, இவ்வாழ்வாரும் [4] ''வணக்குடைத் தவநெறி வழி நின்று புறநெறி களைகட்டு, உணக்குமின் பசை அற'' என்றும், [5] ''மேவித் தொழுது உய்ம்மின் நீர்கள் வேதப் புனித இருக்கை, நாவிற் கொண்டு அச்சுதன் தன்னை ஞானவிதி பிழையாமே'' என்றும், [6] ''மாலை நண்ணி - காலை மாலை கமல மலர் இட்டு—தொழுது எழுமினோ'' என்றும் அங்கத்தோடு கூடிய பக்தியைச் சொல்லுகையாலும்,

[7] பிரபத்திதுவைவித்யம் - ஸ்ரீகீதையில் [8] ''எந்தக் காரணத்தால் என்னுடைய இந்த மாயையானது, படைத்தல் முதலிய காரியங்களை விளையாட்டாகச் செய்கிற என்னால் செய்யப்பட்டதோ (அதனால்) தாண்ட முடியாதது; என்னையே எவர்கள் சரணம் அடைகிறார்களோ

1. திருவாய் 6: 9: 1.
2. சாங்கபக்தி - அங்கங்களுடன் கூடின பக்தி.
3. மந்மநாபவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு
மாமேவைஷ்யஸி யுக்த்வைவமாத்மாநம் மத்பராயண:
என்பது, ஸ்ரீகீதை, 9: 34.
4. திருவாய். 1. 3: 5. 5. திருவாய். 5. 2: 9.
6. திருவாய். 9. 10: 1.
7. 'பிரபத்தி த்வைவித்யம்' என்றது, அங்கப் பிரபத்தி என்றும், ஸ்வதந்திரப் பிரபத்தி என்றும் பிரபத்தி இரண்டு வகைப்படும். அதனைத் தெரிவித்தபடி. பக்திக்கு அங்கமாகச் செய்யப்படும் பிரபத்தி அங்கப் பிரபத்தியாகும். அங்கன் அன்றிக்கே, ஸ்வதந்திரமாகவே செய்யப்படும் பிரபத்தி ஸ்வதந்திரப் பிரபத்தியாகும்.
8. தைவீஹ்யேஷா குணமயீமம மாயாதுரத்யயா
மாமேவயே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்திதே.
என்பது, ஸ்ரீகீதை, 7: 14.

அவர்கள் இந்த மாயையைத் தாண்டுகிருர்கள்'' என்றும், [1]'' எல்லா வுலகங்களேயும் ஏவுகின்றவனுயும் அடியார்கள் பக்கல் வைத்த அன்பிஞல் உனக்குச் சாரதியாயும் முன்னே நின்று உன்னே ஏவுகின்றவனுயும் இருக்கிற அவனேயே எல்லாவகையாலும் சரணமாக அடைவாய்'' என்றும் பக்திக்கு அங்கமாகச் செய்யப்படும் பிரபத்தியாகிய அங்கப் பிரபத்தியும் [2]'' எல்லாத் தர்மங்களேயும் விட்டு என்னேயே சரணமாக அடைவாய்'' என்பது போன்றவைகளால் ஸ்வதந்திர பிரபத்தியும் ஆன இரண்டு வகைப்பட்ட பிரபத்திகள் சொல்லப்பட்டது போன்று, இவ்வாழ்வாரும் [3]'' அவனுடை உணர்வு கொண்டு உணர்ந்து'' என்று அவன் அருளிச்செய்த பிரபத்தி ரூபமான ஞானத்தைத் துணேயாகக் கொண்டு அதனே அறிந்து என்கையாலே பக்திக்கு அங்கமாகச் செய்யப்படும் பிரபத்தியும், [4]'' மற்ருென்றில்லே சுருங்கச் சொன்னேம்'' என்ற திருப்பாசுரத்தாலும் [5]'' சரணமாகும் தன தாள் அடைந்தார்க்கெல்லாம்'' என்ற திருப்பாசுரத்தாலும் ஸ்வதந்திர பிரபத்தியும் ஆன இருவகையான பிரபத்தியை உபதேசிக்கையாலும், அன்று ஓதிய கீதா சமம் என்னும் - தம்மில் சொல்லப்பட்ட இந்த விதமான பொருள்களின் ஒற்றுமையைக் கொண்டு [6]'' மாயன் அன்று, ஓதிய வாக்கு'' என்கிற ஸ்ரீகீதையோடு ஒக்கச் சொல்லப்படும் என்கை.

'துவைவித்யாதி' என்ற இடத்திலே உள்ள 'ஆதி' என்ற சொல்லாலே, மேலே கூறப்படாத [7]'' அருச்சுனு! என்னுடைய அவதாரமும் அவதாரங்களில் செய்யப்படும் செயல்களும் தெய்வத்தன்மை வாய்ந்தவை என்று எவன் ஒருவன் இந்த விதமாக உண்மையாக அறிகிருனே அவன் இப்பொழுது இருக்கும் சரீரத்தை விட்டால் மீண்டும் வேறு பிறவியை அடைகிருன் இல்லே; என்னேயே அடைகிருன்''

1. '' தமேவ சரணம் கச்ச ஸர்வபாவேந பாரத ''
என்பது, ஸ்ரீகீதை, 18: 62.

2. ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம்வ்ரஜ
அஹம் த்வா சர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:
என்பது, ஸ்ரீகீதை, 18: 66.

3. திருவாய். 1. 3: 5. 4. திருவாய். 9. 1: 7.

5. திருவாய். 9. 10: 5. 6. நான்முகன் திருவந். 71.

7. ஜந்மகர்மசமேதிவ்யம் ஏவம்யோவேத்தி தத்வத:
த்யக்த்வாதேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதிஸோர்ஜுந.
என்பது, ஸ்ரீகீதை. 4: 9.



என்றும், [1]'' எல்லாருக்கும் எளிதில் கிடைக்கக்கூடிய இலேயோ மலரோ பழமோ தண்ணீரோ என்னும் இவற்றை எவன் பக்தியுடன் எனக்குக் கொடுக்கிருனே, தூய்மையான மனத்தையுடைய அவனுல் பக்தியுடன் உபகாரமாகக் கொடுக்கப்பட்ட அவற்றை நான் உண்ணுகிறேன்'' என்றும் ஸ்ரீகீதையில் சொல்லியிருப்பதுபோன்று, இவ்வாழ்வாரும் [2]'' இவை பத்தும் வல்லார், அமரரோடு உயர்விற் சென்று அறுவர் தம் பிறவி அஞ் சிறையே'' என்றும் [3]'' பிரிவகையின்றி நன்னீர் தூஉய்ப் புரிவதுவும் புகைபூவே'' என்றும் அவனுடைய அவதார ரஹஸ்ய வைபவத்தையும் எளிதில் ஆராதிக்கத்தகும் அவன் தன்மையையும் அருளிச்செய்திருத்தலேயும் கொள்க. மற்றும், சரீரத்தையே ஆன்மாவாக நினேத்திருக்கும் மக்களே முறையிலே பேற்றினே அடைதற்குரிய சாதனங்களின் எல்லேயிலே மூட்டுகையையும், சாத்ய உபாயங்களிலே பரந்து சித்தோபாயத்தை மறைத்து உபதேசிக்குமிடத்தில் வைபவம் தோற்ற வெளியிடுகையையும் கொள்க. (40)

## 190

[4]அது தத்வ உபதேசம்; இது தத்வதர்சி வசநம்.

என்பது, சூத்திரம்.

வியாக் :— ஸ்ரீகீதையோடு திருவாய்மொழிக்கு உண்டான ஒப்புமையை அருளிச்செய்தார் மேற் சூத்திரத்தால். இனி, பல காரணங்களால் ஸ்ரீகீதையைக் காட்டிலும் திருவாய்மொழிக்கு உண்டான ஏற்றத்தை அருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றி முதலில் நம்மாழ்வாரின் பெருமையால் வந்த இதன் ஏற்றத்தை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

அது - ஸ்ரீகீதையாகிய பிரபந்தமானது, தத்வ உபதேசம் - [5]'' பல முகங்களான காரணங்களால் உண்மையான பரம்பொருளே அறிய விரும்பின மஹரிஷிகளுக்கு, பெரிய யோகியும் பாபங்களேப் போக்கு

1. பத்ரம் புஷ்பம் பலம்தோயம் யோமே பக்த்யாப்ரயச்சதி
ததஹம் பக்த்யுபஹ்ருதமச்நாமி ப்ரயதாத்மந:
என்பது, ஸ்ரீகீதை, 9: 26.

2. திருவாய். 1. 3: 11. 3. திருவாய். 1. 6: 1.

4. அது - அந்த பகவத்கீதை. தத்வஉபதேசம் - தத்துவத்தாலே செய்யப்பட்ட உபதேசம். தத்வம் - கண்ணபிரான். இது - திருவாய்மொழி. தத்வதர்சி - தத்துவத்தை அறிந்தவர்; நம்மாழ்வார்.

5. தத்வம் ஜிஜ்ஞாஸமாநாநாம் ஹேதுபிஸ்ஸர்வதோ முகை:
தத்வமேகோ மஹாயோகீ ஹரி: நாராயண: பர:
என்பது, பாரதம் சாந்திபர். 347: 83.

பவருமான நாராயணன் ஒருவனே பரம்பொருள் என்று ஏற்பட்டது'' என்கிறபடியே உண்மைப் பொருளான இறைவன் தானே உபதேசித்தது; இது - இத்திருவாய்மொழி, தத்வ தர்சி வசநம் - [1]'' ஆன்ம விஷயமான ஞானத்தை நமஸ்காரத்தாலும் கேள்வியாலும் தொண்டிஞலும் ஞானிகளிடமிருந்து அறிந்துகொள்; பரம்பொருளைப் பார்க்கின்றவர்களான ஞானிகள் உனக்கு ஆன்ம விஷயமான ஞானத்தை உபதேசம் செய்வார்கள்'' என்கிறபடியே ஞான உபதேசத்திற்கு நம்பத்தக்கவர்களில் தலைவராக அவன்தான் அருளிச்செய்த ஞானிகளில் தலைவரான ஆழ்வார் வசநம் என்கை.

இதனுல் என் சொல்லியவாருே எனின், [2]'' எல்லா உலகங்கட்கும் காரணம் நானே, எல்லா உலகங்கள் லயப்படுவதும் என்னிடத்திலேயே, சேஷியும் நான்தான், ஆதலால், நானே பரம்பொருள், என்னைக் காட்டிலும் வேருன பரம்பொருள் ஒன்றும் இல்லை'' என்றும், [3]'' என்னையே சரணமாகப் பற்று'' என்றும், இப்படித் தன்னுடைய வைபவத்தைத் தானே அருளிச்செய்கையாலே தன் பெருமையைத் தானே அருளிச்செய்வதுபோலே இருக்கையாலே அது சிற்றறிவினர்கட்கு ஆதரிக்கத் தக்கதாக இராது. சுத்த சத்வஞானத்தையுடைய இவர் [4]''மண்ணும் விண்ணும் எல்லாம் உடன் உண்ட நம் கண்ணன் கண்; அல்லது இல்லையோர் கண்ணே'' என்றும், [5]'' கறுத்த மனம் ஒன்றும் வேண்டா; கண்ணன் அல்லால் தெய்வம் இல்லை'' என்றும், [6]'' கண்ணன் அல்லால் இல்லை கண்டீர் சரண், திண்ணமா நும் உடைமை உண்டேல் அவன் அடி சேர்த்து உய்ம்மினோ'' என்றும் இப்படி நடு நிலையிலே நின்று அவனுடைய வைபவத்தை உபதேசிக்கையாலே, இது சிற்றறிவினர்கட்கும் ஆதரிக்கத் தக்கதாக இருக்கும் என்பது இங்கு இதற்குக் கூறப்படும் சிறப்பாம். (41)

1. தத்வித்தி ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா
உபதேக்ஷ்யந்தி தேஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ்தத்வதர்சிந:
என்பது, ஸ்ரீகீதை, 4: 34.

2. அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரளயஸ்ததா
மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தனஞ்சய.
என்பது, ஸ்ரீகீதை, 7: 6.

3. ''மாமேகம் சரணம் வ்ரஜ''
என்பது, ஸ்ரீகீதை, 18: 66.

4. திருவாய். 2. 2: 1.

5. திருவாய். 5. 2: 7.

6. திருவாய். 9. 1: 10.



## 191

[1] அது, ஐவரை வெல்வித்துப் பதிற்றைந் திரட்டி படச்சொன்னது; இது, நாடாகத் தோற்ருேம் என்று ஐயைந்து முடிப்பான் சொன்னது.

என்பது, சூத்திரம்.

வியாக் :— [2]'' திருவாய்மொழி அவதரித்த காரணம் அடியாக வந்த ஏற்றத்தைச் சொல்லுகிருர் இச்சூத்திரத்தால்.

அது - அந்த ஸ்ரீகீதையானது, ஐவரை வெல்வித்து - [3]'' அன்று ஐவரை வெல்வித்த'' என்கிறபடியே [4]'' பாண்டவர்கள் ஐவரும் திரௌபதியுடன் கூடி ஸ்ரீ கிருஷ்ணனை வணங்கினுர்கள்'' என்கிறபடியே இராச்சியத்தில் விருப்புள்ளவர்களாய்ச் சரணம்புக்கு நின்ற பாண்டவர்கள் ஐவரையும் [5]'' கிருஷ்ணு வெற்றியை நான் விரும்பவில்லை'' என்ற அருச்சுனனை [6]'' உன் வார்த்தையின்படி செய்கிறேன்'' என்னச்செய்து, போரிலே மூட்டி வெற்றியுடையவர்கள் ஆக்கி, பதிற்றைந்துஇரட்டி படச் சொன்னது [7]'' பதிற்றைந்திரட்டிப் படை வேந்தர் பட'' என்கிறபடியே அந்த ஐவர்களுக்குப் பகைவர்களான துரியோதநாதிகள் நூற்றுவரையும் முடிக்கைக்காகச் சொன்னது.

1. ஐவரை - பாண்டவர்களை. பதிற்றைந்து இரட்டி - நூறு. இங்குத் துரியோதனுதியர்கள் நூற்றுவரைக் குறித்தது. ஐயைந்து - இருபத்தைந்து. இங்கு இத்தொகை, இருபத்து நான்கு தத்துவங்களாலாய சரீரத்தையும், இருபத்தைந்தாம் தத்துவமாகிய ஆன்மாவினையும் குறிக்கின்றது. இவற்றில் உள்ள ஆசையை அறுப்பதற்காகத் திருவாய்மொழி அவதரித்தது என்றபடி.

2. ஸ்ரீகீதையும் திருவாய்மொழியும் மோக்ஷ சாஸ்திரங்களேயாகிலும் அவதரித்த முறையால் ஸ்ரீகீதையைக் காட்டிலும் திருவாய்மொழிக்கு ஏற்றம் உண்டு என்றபடி. அது பதிற்றைந்து இரட்டியைப் படுப்பதன் காரணமாக அவதரித்தது. இது ஐயைந்தினை முடிப்பதற்காக அவதரித்தது.

3. திருவாய். 4. 6: 1.

4. ''திரௌபத்யாஸ் ஸஹிதாஸ் ஸர்வேநமச்சக்ரு: ஜநார்த்தநம்''
என்பது, பாரதம் ஆரண்யபர். 192: 56.

5. ''நகாங்க்ஷே விஜயம் க்ருஷ்ண''
என்பது, ஸ்ரீகீதை, 1: 32.

6. ''கரிஷ்யே வசநம் தவ''
என்பது, ஸ்ரீகீதை, 18: 73.

7. பெரிய திருமொழி, 2. 4: 4.

இது - இத்திருவாய்மொழி அவதரித்தபடி எங்ஙனே என்னில், நாடாகத் தோற்றோம் என்று - [1] "தோற்றோம் மடநெஞ்சம் எம்பெருமான் நாரணற்கு" என்கிறபடியே வகுத்த சேஷிபக்கலிலே எல்லாரும் கொள்ளை கொள்ளப்பட்ட மனத்தினையுடையராய்ப் போம்படியாக, ஐயைந்து முடிப்பான் சொன்னது - [2] "முடிப்பான் சொன்ன ஆயிரத்து" என்கிறபடியே அதற்கு விரோதியாயிருந்துள்ள [3] "பொங்கு ஐம்புலனும் பொறியைந்தும்" என்ற திருப்பாசுரத்தில் சொன்ன இருபத்துநான்கு தத்துவங்களோடு கூடின சரீரத்திலும் ஞானானந்தலக்ஷணமாய்க்கொண்டு தன்னுடைய இனிமையாலே தன்பக்கலிலே கால் தாழப்பண்ணும் ஆன்மாவிலும் உண்டான பற்றினை முடிப்பதாகச் சொன்னது என்கை.

இதனால், ஸ்ரீ கீதை மோக்ஷ சாஸ்திரமேயாகிலும் அவதரிக்கிறபோது வேறொன்றற்காக அவதரித்த குற்றம் உண்டு அந்த ஸ்ரீ கீதைக்கு; மோக்ஷத்தின் பொருட்டே அவதரித்த ஏற்றம் உண்டு இத் திருவாய்மொழிக்கு என்றதாயிற்று. (42)

## 192

[4] அங்கு 'நம்பி சரண்' என்று தொடங்கி, முடிவில் 'அப்ரியம்' என்றது ; இங்குப் 'பரமே' என்று இழிந்து 'பொலிக' என்று உகந்தது.

என்பது, சூத்திரம்.

வியாக் :- அங்கு - அந்த ஸ்ரீ கீதையில், நம்பி சரண் என்று தொடங்கி [5] "நாந்தகம் ஏந்திய நம்பி சரண் என்று, தாழ்ந்த தனஞ்சயற்காகி" என்கிறபடியே [6] "நான் தேவரீருக்குச் சிஷ்யன், தேவரீரைச் சரணம் அடைந்த என்னை நியமிக்க வேண்டும்" என்ற அருச்சுனனுடைய வேண்டுகோளைக் கேட்டுப் பிரீதியோடே ஆரம்பித்து, முடிவில் அப்ரியம் என்றது - [1] "அருச்சுனா ! நிச்சயம் சிரத்தையில்லாதவனாயிருக்கிறாய், கெட்டபுத்தியையுடையவனாயும் இருக்கிறாய், எக்காரணத்தால் அறிவின்மையால் அறியவில்லையோ அது எனக்குப் பெரிதும் விருப்பம் இல்லாதது ஆகும்" என்கிறபடியே அவன் பக்கல் நினைவின்மை காண்கையாலே வெறுப்போடே தலைக்கட்டிற்று. இங்கு - இத்திருவாய்மொழியில், பரமே என்று இழிந்து - விருப்பம் இல்லாதாரைப் பார்த்துப் பேரருளாலே உபதேசிக்கையாலே உபதேசத்தின் ஆரம்பத்திலே [2] "ஏ பாவம் ! பரமே ! ஏழுலகும், ஈ பாவம்செய்து அருளால் அளிப்பார் ஆர்" என்று வெறுப்போடே ஆரம்பித்து, பொலிக என்று உகந்தது - அந்த உபதேசத்தைக் கேட்டு உலக முழுதும் திருந்துகையாலே இப்படித் திருந்தினவர்களைக் கண்டு [3] "பொலிக பொலிக" என்று மங்களாசாசனம் செய்து [4] "உகந்து பணி செய்து" என்னும்படி பிரீதியோடே தலைக்கட்டிற்று என்கை.

இதனால், அருச்சுனன் போரைச் செய்யத் தொடங்கினான் என்னுமளவே ஒழியச் சித்தோபாயம் வரையிலும் உபதேசத்தின் பலம் வாய்க்கப்பெறுமையாலே உபதேசம் பயன் பெறவில்லை அங்கு; உபதேசம் பயன் பெற்றதும் திருவாய்மொழியிலே என்றபடி (43)

## 193

[5] அதில் சித்த தர்ம விதி ; இதில் விதி அனுஷ்டானங்கள்.

என்பது, சூத்திரம்.

வியாக்:- ஸ்ரீ கீதையினும், திருவாய்மொழியில் சொல்லப்பட்ட பொருளின் கௌரவத்தால் வந்த ஏற்றம் சொல்லுகிறது இச்சூத்திரத்தால்.

---

1. திருவாய். 2. 1: 7.
2. திருவாய். 8. 7: 11.
3. திருவாய். 10. 7: 10.
4. ஸ்ரீகீதை, மகிழ்ச்சியிலே தொடங்குகிறது, வருத்தத்திலே முடிகிறது. இவ்வருத்தத்தையே 'அப்ரியம் என்றது' என்கிறார். அப்ரியம் - விருப்பம் இல்லாமை. திருவாய்மொழி "ஏபாவம்பரமே" என்று கஷ்டத்திலே தொடங்கி "உகந்துபணிசெய்து" என்று மகிழ்ச்சியிலே முடிகிறது. இங்ஙனம் முடிகின்ற வகையாலும் இதற்கு ஏற்றமுண்டு என்கிறார் இச்சூத்திரத்தால்.
5. பெரியாழ்வார்திரு. 1. 9: 4.
6. "சிஷ்யஸ்தேஹம் சாதிமாம் த்வாம் ப்ரபந்நம்" என்பது, ஸ்ரீகீதை, 2: 7.



1. நூநமச்ரத்ததாநோஸி துர்மேதாச்சாஸிபாண்டவ
   அபுத்த்யாயந்ந ஜாநீஷே தந்மே ஸுமஹதப்ரியம்.
   என்பது, அநுகீதை.
2. திருவாய். 2. 2: 2.
3. திருவாய். 5. 2: 1.
4. திருவாய். 10. 8: 10.
5. சித்த தர்மம் - கண்ணபிரான்.

அதில் - அந்த ஸ்ரீ கீதையில், சித்த தர்ம விதி - [1] "என்னையே சரணமாகப் பற்று" என்று, இறைவனைப் பற்றுக என்ற விதி மாத்திரமே உள்ளது; இதில் - இத்திருவாய்மொழியில், விதி அநுஷ்டானங்கள் - [2] "திருநாரணன் தாள் காலம் பெறச் சிந்தித்து உய்ம்மினோ" என்று விதியும், [3] "புகல்ஒன்றில்லாஅடியேன் உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே" என்று அநுஷ்டானமும் என்னும் இரண்டும் காணலாம் என்கை.

இதனால், விதி மாத்திரத்தைச் சொல்லுகின்ற ஸ்ரீ கீதையைக் காட்டிலும், விதி அநுஷ்டானம் என்னும் இரண்டையும் சொல்லுகிற இத்திருவாய்மொழிக்கு ஏற்றம் உண்டு என்றதாயிற்று. (44)

## 194

'பகவன், ஞான விதி, பணி வகை' என்று இவர் அங்கீகாரத்தாலே அதுக்கு உத்கர்ஷம்.

என்பது, சூத்திரம்.

வியாக்:- இனி அந்த ஸ்ரீ கீதைக்கு ஏற்றமும் இவர் அங்கீகாரத்தாலே என்னுமதனை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

பகவன் - [4] "அந்தமில் ஆதியம்பகவன், வணக்குடைத் தவநெறி வழிநின்று" என்றும், ஞான விதி - [5] "ஞான விதி பிழையாமே" என்றும், பணி வகை - [6] "பண்டே பரமன் பணித்த பணிவகையே, கண்டேன் கமலமலர்ப் பாதம்" என்றும், என்று இவர் அங்கீகாரத்தாலே - என்று பரம வைதிகரான இவர் ஸ்ரீ கீதையைப் பிரமாணமாகக் கொள்ளுகையாலே ஆயிற்று, அதுக்கு உத்கர்ஷம் - அந்த ஸ்ரீ கீதைக்கு ஏற்றம் உண்டாயிற்று என்கை,

புத்த முனியாய் நின்று சொன்ன பௌத்தசாஸ்திரமும் கபில முனியாய் நின்று சொன்ன சாங்கிய சாஸ்திரமும் அவனே அருளிச்செய்ததாயிருக்கச்செய்தே, வைதிகர்களால் ஏற்றுக்கொள்ளப்படாமையாலன்றோ அவை இரண்டும் பிரமாண நூல்களாகத் திகழ

---

1. "மாமேகம் ஶரணம் வ்ரஜ" என்பது, ஸ்ரீகீதை, 18: 66.
2. திருவாய். 4. 1: 1.
3. திருவாய். 6. 10: 10.
4. திருவாய். 1. 3: 5.
5. திருவாய். 5. 2: 9.
6. திருவாய். 10. 4. 9.



வில்லை. [1] "இப்படிப் பிறரை மயங்கச்செய்கின்ற, தேவரீராலேயே செய்யப்பட்ட வேதங்கட்குப் புறம்பான மதங்களைப் புல்லுக்குச் சமமாக நினைக்கிறேன்" என்கிறபடியே பகவானாலே சொல்லப்பட்டதேயாகிலும் வேதங்கட்கு முரண்பட்டவற்றை வைதிகர்கள் அங்கீகரியார்களே. வேதங்கட்கு முரண் இல்லாதது என்னும் தன்மை விளங்குவது வைதிகர்களுடைய அங்கீகாரத்தாலே அன்றோ. ஆகையால், ஸ்ரீ கீதைக்கு ஏற்றம் இவர் அங்கீகாரத்தாலே என்னக் குறை இல்லை.

இதனால், ஸ்ரீ கீதைக்கு ஏற்றம் இவர் அங்கீகாரத்தைக்கொண்டு சொல்லவேண்டும்; இவர் திருவாக்கில் பிறந்த இதற்கு அதுவும் வேண்டா என்று இவ்வழியாலும் ஓர் ஏற்றம் சொல்லிற்றாயிற்று. ஆக, ஸ்ரீ கீதையிலும் இத்திருவாய்மொழிக்கு உண்டான ஏற்றத்திற்குரிய காரணங்கள் எல்லாம் சொல்லிற்றாயிற்று. (45)

## 195

[2] வேத வேத்ய வைதிக உபதேசம் ஆவித்யர் அளவிலே; அஜ்ஞர் ஜ்ஞாநிகள் ஜ்ஞாநவிசேஷ யுக்தர் ஸர்வஜ்ஞன் என்னுமல் இவர் திருத்துவர்.

என்பது, சூத்திரம்.

வியாக்:- இப்படி, ஈச்வரனுடைய உபதேசத்தைக் காட்டிலும் இவர் உபதேசத்திற்கு ஏற்றம் சொன்ன சமயத்திலே, பிரமாணங்களால் அறியத்தக்க இறைவனோடே பிரமாண பிரமாதாக்களையும் கூட்டி, 'அவர்கள் எல்லாருடைய உபதேசங்களும் ஒரு சிலர் பொருட்டு; இவர் உபதேசம் எல்லார் பொருட்டும்' என்று இவ்வழியாலே உபதேசிக்கின்றவரான ஆழ்வார்க்கு ஒரு பெருமை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

---

1. "இதிமோஹந வர்ஷ்மணா த்வயாபி
க்ருதிதம் பாஹ்யமதம் த்ருணாய மந்யே"
என்பது, ஸ்ரீரங்கராஜஸ்தவம்.

2. உபதேச முகத்தாலும் ஆழ்வார்க்கு ஏற்றம் உண்டு என்கிறார் இச்சூத்திரத்தால். பிரமாணம் - வேதம். பிரமாதா - பிரமாணங்களை அறிந்தவர்; மகரிஷிகள். வேதஉபதேசம், வேத்யஉபதேசம், வைதிக உபதேசம் என்று உபதேசம் என்னும் சொல்லை முன்புள்ளவற்றோடும் கூட்டுக. வேத்யன் - வேதங்களாலே அறியப்படுமவன்; எம்பெருமான், ஆவித்யர் - அறிவில்லாதவர்களான இவ்வுலக மக்கள்,

அதாவது, வேத உபதேசம் - நலத்தையே சொல்லுமவையான வேதங்களுடைய உபதேசமும், வேத்ய உபதேசம் - [1] "வேதங்களால் அறியப்படும் பரம்புருடன்" என்கிறபடியே வேதங்களாலேயே அறியப்படுமவனான சர்வேச்வரனுடைய உபதேசமும், வைதிக உபதேசம் - [2] "எந்த அந்தணர்கள் வேதத்தின் பூர்வபாகத்தை அறிந்தவர்களோ, எவர்கள் வேதாந்தம் அறிந்தவர்களோ" என்கிறபடியே வேதத்தில் பூர்வபாக உத்தரபாகங்களின் பொருள்களை அறிந்தவர்களாய் வைதிகர் என்று பேர் பெற்றவர்களாயிருக்கும் மகரிஷிகளுடைய உபதேசமும், ஆவித்யர் அளவிலே - [3] "தத்வம் ஹிதம் புருஷார்த்தம் என்னுமவற்றின் ஞானம் இல்லாமையாகிற அறியாமையோடு கூடிய இவ்வுலக மனிதன் ஆவித்யன் என்று சொல்லப்படுகிறான்" என்கிறபடியே தத்வம் ஹிதம் புருஷார்த்தம் என்பனவற்றின் ஞானம் இன்மையாலே இறைவனுடைய தன்மையை அறியாதவர்களான சம்சாரிகள் அளவிலேயாம்.

இவர் - ஆழ்வார், அஜ்ஞர் - தத்வ ஹித புருஷார்த்தங்களில் அறிவில்லாத சம்சாரிகளோடு, ஜ்ஞாநிகள் - பகவானே உபாயம் என்று கடைப்பிடித்திருக்கும் ஞானிகளோடு, ஜ்ஞாந விசேஷ யுக்தர் - பகவானுடைய சொரூப ரூப குண விபூதிகளை நேரே அறிந்து பேற்றிலே நோக்குள்ளவர்களாய்ப் பகவானுடைய அநுபவமே போது போக்காகக் கொண்டிருக்கும் விசேடமான ஞானத்தையுடையவர்களோடு, சர்வஜ்ஞன் என்னுமல் - [4] "உனக்குக் காணப்படாத பொருள் ஒன்றுமில்லை" என்றும், [5] "யாவன் ஒரு பொழுதில் எல்லாவற்றையும் அறிகிறான்" என்றும் சொல்லுகிறபடியே முற்றறிவினனான சர்வேச்வரனோடு வாசி அற எல்லார்க்கும் வேண்டும் கூறுகளை உபதேசித்து, திருத்துவர் - திருத்துவர் என்கை. (46)

---

1. "வேதவேத்யே பரே பும்ஸி"
என்பது, ஸ்காந்தம்.

2. "யேசவேதவிதோ விப்ராயேசாத்யாத்மவிதோஜநா:"
என்பது, பிரமாணம்.

3. "ஆவித்ய: ப்ராக்ருத: ப்ரோக்த:"
என்பது, பிரமாணம்.

4. "நைவகிஞ்சித் பரோக்ஷம்தே"
என்பது, பிரமாணம்.

5. "யோவேத்தியுகபத்ஸர்வம்"
என்பது, பிரமாணம்.



## 196

[1] அறியாதார்க்கு உய்யப்புகுமாறும், இக்கரை ஏறினார்க்கு இன்பவெள்ளமும், நிலை அறியாதார்க்கு ஆழங்காலும், கரை ஏற்றுமவனுக்கு நாலாறும் அறிவிக்கவேணும்.

என்பது, சூத்திரம்.

வியாக்:- இப்படி இவர் எல்லார்க்கும் அறிவின்மையைப் போக்குதல் செய்யவேண்டுமோ? என்னும் வினாவிற்கு விடையாக, மேலே கூறிய நால்வர்க்கும் இவர் அறிவிக்கவேண்டும் அர்த்த விசேடங்கள் இன்னவை எனக் காட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

அறியாதார்க்கு - [2] "செங்கண் நெடியானைச் சிந்தித்து, அறியாதார் என்றும் அறியாதார்" என்கிறபடியே முதலிலே பகவானைப் பற்றிய ஞானம் இல்லாத இவ் வுலகமக்கட்கு, உய்யப் புகுமாறும் - [3] "அஃதே உய்யப் புகுமாறு" என்று [4] "திருநாரணன் தாள்" என்கிற அதுவே உய்வுபெறுவதற்கு உபாயம் என்று, பிறவிப் பெருங்கடலைத் தாண்டுதற்கு உபாயம் அறிவிக்கவேண்டும். இக் கரை ஏறினார்க்கு - [5] "அக் கரை என்னும் அனத்தக் கடலுள் அழுந்தி உன் பேரருளால், இக் கரை ஏறி இளைத்திருந்தேனை" என்கிறபடியே பிறவிப் பெருங்கடலில் அழுந்துகிறவர்களுக்கு, பகவான் ஒருவனே உபாயம் என்ற ஞானம் பிறந்தால் இங்கே இருக்கச்செய்தே அக் கரை இக் கரை என்னும்படி இவ்வுலகவாழ்வு தூரமாய்ப் பரமபதம் அண்மையாம்படி இருக்கையாலே, பகவான் ஒருவனே உபாயம் என்னுமதிலே துணிவுடையராய்த் தன் முயற்சி நீங்கியிருக்கிறவர்களுக்கு அந்தத் துணிவு குலைந்து பதறும்படி, இன்ப வெள்ளமும் - [6] "முகில்வண்ண வானத்து இமையவர் சூழ இருப்பர் பேரின்ப வெள்ளத்தே" என்று பேற்றின் ஒப்புயர்வற்ற சிறப்பினை அறிவிக்கவேண்டும்.

நிலை அறியாதார்க்கு - ஆற்றிலே இழிந்து போகாநிற்கச்செய்தே நிலைக்குமிடமும் நிலையாதஇடமும் அறியாதாரைப் போன்று, பேற்றினைப் பெற்றவர்களாய் அநுபவியாநிற்கச்செய்தே அதில் நிலை கொள்ளலாமிடமும் ஆழங்கால்படுத்துமிடமும் அறியாதவர்களுக்கு,

---

1. 'அறிவிக்க வேணும்' என்னும் சொல்லை மேலே உள்ள வாக்கியங்களோடு தனித்தனியே கூட்டுக.
2. பெரியதிருமொழி, 11, 7: 8.
3. திருவாய். 4. 1. 11.
4. திருவாய். 4. 1: 1.
5. பெரியாழ்வார்திரு. 5. 3. 7.
6. திருவாய். 7. 2: 11.

ஆழங்காலும் - [1] "செஞ்சொற்கவிகாள் உயிர் காத்து ஆட்செய்ம்மின்" என்று சீல குணமாகிற ஆழங்காலை அறிவிக்க வேண்டும். கரை ஏற்றுமவனுக்கு - [2] "வித்வான்கள், கொடியதும் எல்லை இல்லாத துக்கத்திற்கு நிலைக்களமானதுமான பிறவிப் பெருங்கடலை, தேவரீரையே சரணம் அடைந்து தாண்டுகிருர்கள்" என்கிறபடியே பிறவிப் பெருங்கடலைக் கடத்தி அக்கரைப்படுத்தும் இறைவனுக்கு, நாலாறும் - [3] "பொங்கைம்புலனும் பொறிஐந்தும்" என்ற திருப்பாசுரத்தாலே இருபத்துநான்கு தத்துவங்களின் தன்மையையும், அறிவிக்கவேணும் - அறிவிக்கவேண்டும் என்கை.

ஆக, அறிவு கேடரை உபாயத்திலே மூட்டுவர்; உபாயத்திலே ஊன்றினவர்களைப் பேற்றிலே ஊன்றச்செய்வர்; பேற்றிலே ஊன்றினவர்களுக்கு ஆழங்கால் அறிவிப்பர்; பேற்றினைக் கொடுக்கும் சர்வேச்வரனுக்கு விடத்தக்கனவற்றை அறிவிப்பர் என்றதாயிற்று. (47)

## 197

[4] அவன் முனிந்தார்க்குத் தாம் கண்டது; தம்மை முனிவார்க்குத் தம் கண்; காணுதது காண்பார்க்குக் கண்மாறுமிடம்; ராகாந்தகனுக்கு மாயா தோஷம்; இவர் காட்டுமவை.

என்பது, சூத்திரம்.

**வியாக்:-** இவர்களுக்கு இவ்வர்த்தங்களை உபதேசிப்பதற்கு உறுப்பான காரணங்களோடே இவற்றை இன்னம் ஒரு வகையில் விளக்கமாக அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

அவன் முனிந்தார்க்கு-[5] "தள்ளுகிறேன்", "பொறுக்கமாட்டேன்" என்கிற அவன் முனிவிற்கு இலக்காய் அறிவில்லாதவர்களான இவ்

1. திருவாய். 10. 7: 1.
2. ஸம்ஸார ஸாகரம் கோரமநந்தக்லேசபாஜநம்
   த்வாமேவ ஶரணம் ப்ராப்ய நிஸ்தரந்தி மநீஷிண:
என்பது, பிரமாணம்.
3. திருவாய். 10. 7: 10.
4. 'இவர் காட்டுமவை' என்னுமதனை மேலே உள்ள வாக்கியங்களோடு தனித்தனியே கூட்டிக்கொள்க. அவன் முனிந்தார்க்கு இவர் காட்டுமது தாம் கண்டது என்றும், தம்மை முனிவார்க்கு இவர் காட்டுமது தம் கண் என்றும், காணுதது காண்பார்க்கு இவர்காட்டுமது கண் மாறுமிடம் என்றும்; ராகாந்தகனுக்கு இவர்காட்டுமது மாயாதோஷம் என்றும்.
5. "க்ஷிபாமி", "நக்ஷமாமி" என்பன, பிரமாணங்கள்.



வுலக மக்களுக்கு, தாம் கண்டது - [1] "ஞானப்பிரானை யல்லால் இல்லை நான் கண்ட நல்லது" என்று, கீழ் நிலையில் உள்ளவர்களை உயர்நிலைக்குக் கொண்டு வரும் ஆற்றலையுடையனும் ஞானத்தை உபதேசித்தவனுனவனை ஒழிய, எல்லார்க்கும் உய்வு பெறும் உபாயம் இல்லை என்று தாம் அறுதியிட்ட சிறந்த பொருளை இவர் காட்டுவர். தம்மை முனிவார்க்கு - [2] "எங்ஙனேயோ அன்னைமீர்காள் என்னை முனிவது நீர்" என்னும்படி உபாய நிலையில் துணிவுள்ளவர்களாய் நின்று,தம் முயற்சியால் அடையவிரும்புவதில் அச்சமுள்ளவர்களாய்ப் பேற்றினுடைய சிறப்பினை அறியாதவர்களாய் இத்துணை கழி பெருங் காதல் ஆகாது என்று நலம் சொல்லுமவர்களுக்கு, தம் கண் - [3] "என் நெஞ்சினல் நோக்கிக் காணீர்" என்று பேற்றினுடைய சிறப்பிலே மூழ்கியிருக்கின்றவளான என் நெஞ்சினுல் பார்க்கமாட்டீர்களோ என்று தம்முடைய உட்கண்ணுன ஞானத்தைக் காட்டுவர்.

காணுதது காண்பார்க்கு - [4] "செஞ்சொற்கவிகாள், உயிர்காத்து ஆட்செய்ம்மின்" என்கிறபடியே, கவிகளாய்க் கூர்க்கக் காணுமவர்களாகையாலே புறம்பே ஒருவர் காணுததும் காணவல்லவர்களுக்கு, கண்மாறுமிடம் - அவன் சீல குணத்திலே கண்வையாதேகொள்ளுங்கோள் என்று கண்மாறுமிடம் காட்டுவர். [5] ராகாந்தகனுக்கு - ஆழ்வாராகிய தம்பக்கல் வைத்த ஆசையாலே முன்னடிதோற்றுமையாலே விடத்தக்கதான இச்சரீரத்தின் குற்றம் காணமாட்டாத இறைவனுக்கு, மாயா தோஷம் - [6] "மங்க ஒட்டு உன் மாமாயை" என்கிறபடியே இச்சரீரத்தின் குற்றங்களை இவர் காட்டுவர், (48)

1. திருவிருத்தம், 99.
2. திருவாய். 5. 5: 1.
3. திருவாய். 5. 5: 2.
4. திருவாய். 10. 7: 1.
5. ராகாந்தகன் - ஆசையாலே கண்மூடப்பட்டவன்; இறைவன்.
6. திருவாய். 10. 7: 10.

*தாய்மார்கள் சர்வேச்வரனுடைய ஒப்புயர்வற்ற சிறப்பினை அறியாமல் தம்மை முனியப் புகுந்தபடியால் அவர்களுக்கு உபதேசிக்க வேண்டியதாயிற்று. செஞ்சொற் கவிகள் இறைவனுடைய சீல குணத்தை அறியாமல் பகவத் விஷயத்தில் இழியப் புகுந்தார்களாதலின் அவர்களுக்கு உபதேசிக்க வேண்டியதாயிற்று. இறைவன் முற்றறிவினனுயினும் இவருடைய சரீரத்தின் குற்றத்தைக் காணமாட்டாமையாலே அவனுக்கும் உபதேசிக்க வேண்டியதாயிற்று.*

## 198

[1] ஸாதந ஸாத்யஸ்த மத்யஸ்தரை விட்டு, அவற்றில் கலங்கும் ஜீவ ஈஸ்வரர்க்கு, வீடுமின், நினைமின்; பிடித்தேன், விடுவேனோ; வைத்தெழ ஊது; வாடி நிற்க, கன்மமன்று, ஆன்பின், கைகழியேல்; உழிதராய், என்சொற்கொள் என்று, இவர் பலகாலும் ஹித அஹிதங்கள் சொல்லுவர்.

என்பது, சூத்திரம்.

வியாக்:-ஆனால், அறிவில்லாதவர்களான இவ்வுலகமக்கட்கு உபதேசிப்பது போன்று, ஏனை மூவர்க்கும் பலகாலும் உபதேசிப்பரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

சாதந சாத்யஸ்த மத்யஸ்தரை விட்டு - சாதனமான உபாயம் கைப்பட்டவர்களுக்கும் சாத்யமானபேறு கைப்பட்டவர்களுக்கும் அறிவிக்கவேண்டுவது சிறிதாகையாலே, மேலே கூறப்பட்ட நால்வரில், உபாயத்தில் ஊன்றியிருப்பவர்களாகவும் பேற்றில்ஊன்றியிருப்பவர்களாகவும் நடுவிலே சொன்ன ஞானிகளும் விசேடமான ஞானத்தையுடையவர்களும் ஆகிற அவர்கள் இருவரையும் விட்டு, அவற்றில் கலங்கும் சீவர்கட்கு - இறைவனை அடைவதற்குரிய வழி இன்னது என்றும், அவ்வழியால் அடைதற்குரிய பயன் இன்னது என்றும் வினவயப்பட்டு அறியாதே கலங்கி நிற்கிற இவ்வுலகமக்கட்கு,

1. சாதந சாத்யஸ்தர்களாகிய மத்யஸ்தரை விட்டு, அவற்றில் கலங்கும் ஜீவ ஈச்வரர்க்கு இவர் பலகாலும் ஹித அஹிதங்கள் சொல்லுவர் என முடிக்க. 'வீடுமின்' என்றது முதல் 'என்சொற்கொள்' என்பது முடிய, அவர்கட்கு இவர் கூறும் நலத்தையும் தீங்கையும் விவரிக்கின்றது. சாதந சாத்யஸ்தர்களாகிய மத்யஸ்தர் என்க. மத்யஸ்தர் என்றது, மேற் சூத்திரத்தில் கூறிய நால்வரில் நடுவிலே கூறப்பட்ட இருவரை. அவர்கள் - சாதநபரரும், சாத்யபரரும். சாதநபரர் என்றது, மேற்கூறிய தாய்மார்களை. இவர்கள், உபாய அத்யவசாய நிலையிலே நின்று தம் முயற்சியில் அஞ்சினவர்களாய்ப் பேற்றினுடைய சிறப்பினை அறியாதவர்களாய் இத்துணை மிக்க காதல் தகாது என்று நலம் சொல்லுகின்றவர்களாகையாலே அவர்களை சாதநஸ்தர் என்கிறார். சாத்யபரர் என்றது, "உயிர் காத்து ஆட்செய்மின்" என்று உபதேசிக்கப்படுகிற செஞ்சொற்கவிகளை. இவர்கள், பேற்றினுடைய சிறப்பினை நன்கறிந்து அதன் அநுபவத்தில் இழிந்தவர்களாகையாலே அவர்களை சாத்யஸ்தர் என்கிறார். 'அவற்றில்' என்ற சுட்டு, மேலே கூறிய சாதனத்தையும் சாத்யத்தையும் குறிக்கின்றது. 'வீடுமின், நினைமின்' என்ற இரண்டும் சீவர்களைக் குறித்த உபதேசம்.



[1] வீடுமின் நினைமின் என்று இவர் பலகாலும் ஹித அஹிதங்கள் சொல்லுவர் - முதற்பத்தில் "வீடுமின்முற்றவும்" என்று தொடங்கி, பத்தாம்பத்தில் "கண்ணன் கழலிணை" என்னும் திருவாய்மொழியில் "சுனை நன்மலர் இட்டு, நினைமின் நெடியானே "என்பது முடிய, விடத்தக்கவை இன்னவை பற்றத்தக்கவை இன்னவை என்று பலபடியாலும் உபதேசிப்பர்.

அவற்றில் கலங்கும் ஈச்வரனுக்கு - அன்பின்வசப்பட்டவனாய் உபாயம் இன்னது என்றும் பேறு இன்னது என்றும் அறியாதே கலங்கும் சர்வேச்வரனுக்கு, [2] பிடித்தேன், விடுவேனோ - 'தாழ்ந்தவர் என்றும் தம்மை நினைக்கும் நினைவாலே இவர் நம்மை விடில் செய்வது என்?' என்று ஐயம்கொண்டு அலமருகிறஅளவிலே [3] "உன்னை நான் பிடித்தேன்கொள் சிக்கெனவே" என்றும், [4] "உன்னை நான் அடைந்தேன் விடுவேனோ" என்றும் சொல்லுகிறபடியே 'வருந்தாதே' என்பது; வைத்து எழ ஊது - [5] "தோகைமாமயிலார்கள் செவி யோசை வைத்தெழ ஆகள் போகவிட்டுக் குழல் ஊது" என்று வழியினையும் வழியால் அடையும் பயனையும் அறிவிப்பது; வாடி நிற்க - [6] "மழறு தேன்மொழியார்கள் நின்னருள் சூடுவார் மனம் வாடி நிற்க, எம் குழறு பூவையொடும் கிளியோடும் குழகேல்" என்றும், கன்மம் அன்று- [7] "கன்மம் அன்று எங்கள் கையில் பாவை பறிப்பது" என்றும், ஆன்பின், கை கழியேல்-[8] "ஆன்பின் போகேல்" என்றும், [9] "என் கை கழியேல்" என்றும் செய்யத்தகாத காரியங்களைச் செய்யாதே என்பது; உழிதராய், என்சொற்கொள் - [10] "நீ உகக்கும் நல்லவ

1. இவ்வுலக மக்கட்கு உபதேசிக்கிற இடங்கள் திருவாய்மொழியில் பிரசித்தமானவையே. ஒவ்வொரு பத்திலும் ஒவ்வொரு திருப்பதிகம் பரோபதேசமாக அமைந்திருக்கின்றது. முதலும் முடிவும் மாத்திரமே இங்குக் காட்டப்படுகிறது. 'வீடுமின்' என்பது, முதற்பத்தில் இரண்டாவது திருப்பதிகம். 'நினைமின்' என்பது, பத்தாம் பத்தில் ஐந்தாம் திருப்பதிகத்தில் பத்தாவது திருப்பாசுரம்.

2. 'பிடித்தேன், விடுவேனோ' என்ற இவ்விரண்டு திருப்பாசுரப் பகுதிகளும், 'ஆழ்வார் நம்மைவிட்டு நீங்கின் செய்வது என்?' என்று கலங்கி நின்ற ஈச்வரனுடைய கலக்கத்தை நீக்குவதற்குக் கூறியவை.

3. திருவாய். 2. 6: 1. 4. திருவாய். 2. 6. 10.

5. திருவாய். 6. 2: 2. 6. திருவாய். 6. 2: 5.

7. திருவாய். 6. 2: 8. 8. திருவாய். 10. 3. 8.

9. திருவாய். 10. 3: 8. 10. திருவாய். 10. 3: 8.

ரொடும் உழிதராய்" என்றும், [1] "அவத்தங்கள் விளையும் என் சொற்கொள்" என்றும் செய்யத் தகுவனவற்றைச் செய் என்பதாய், என்று இவர் பலகாலும் ஹித அஹிதங்கள் சொல்லுவர் - என்று இவர் பலகாலும் நன்மை தீமைகளைச் சொல்லுவர். ஆக, இப்படிப் பலவிடங்களிலும் உபதேசிக்கையாலே முன்பு கூறின நால்வரில் முதலிலும் ஈற்றிலும் சொல்லப்பட்டவர்களான உலகமக்கட்கும் முற்றறிவினனான சர்வேச்வரனுக்கும் பலகாலும் நன்மை தீமைகளைச் சொல்லுவர் என்றபடி.

'சாதந சாத்யங்களில் கலங்கும் ஈச்வரனுக்கு' என்று தொடங்கி, 'பிடித்தேன், விடுவேனே, வாடிநிற்க' என்பன போன்றவைகளை எல்லாம் அருளிச்செய்வான் என்? என்னில், [2] உபாயத்தில் ஊன்றினவர்களையும் உபேயத்தில் ஊன்றிநிற்பவர்களையும் சொன்னதற்கு எதிர்த்தட்டாக, உபாயத்தில் கலக்கமும் உபேயத்தில் கலக்கமும் ஆன்மாக்களுக்கும் ஈச்வரனுக்கும் ஒரோ வழிகளால் உண்டு என்று காட்டுவதற்காகச் சொன்னதுஇத்தனைஒழிய, மேல் சொல்லுகிற நலன்கள் தீங்குகள் எல்லாம் உபாய விஷயமாகவும் உபேய விஷயமாகவுமே இருக்கவேண்டும் என்ற நிர்ப்பந்தம் இல்லாமையாலே விரோதம் இல்லை. அன்றியும், மக்களை நோக்கி உபதேசிக்கிற உபதேசங்களிலும் ஐம்பொருள்களையும் உபதேசிக்கையால் அந்த உபாய உபேயங்கள் என்ற இரண்டுமே என்கிற நிர்ப்பந்தம் இல்லையே அன்றோ.

அங்ஙன் அன்றிக்கே, மக்கள் விஷயமான உபதேசங்களிலும் "வீடுமின் முற்றவும்" என்ற திருவாய்மொழி பக்திரூபமான உபாயத்தை உபதேசித்ததாகையாலும், "கண்ணன் கழலிணை" என்ற திருவாய்மொழி பக்திமான்களுடைய செயல்கள் இருக்கும்படி உபதேசித்ததாகையாலும், நடுவே உள்ள உபதேசங்களை ஆராய்ந்தாலும், பக்தி ரூப உபாய உபதேசமும், பிரபத்தி ரூப உபாய உபதேசமும், பகவானை அநுபவிக்கின்ற கைங்கர்ய ரூப பலத்தின் உபதேசமும் மிகுதியாய், அடையத்தக்க பரம்பொருளின் சொரூபத்தையும் அடைகின்ற இவ்வான்மாவின் சொரூபத்தையும் அடைதற்குத் தடைகளாக உள்ள விரோதிசொரூபத்தையும் சொன்னதிருவாய்மொழிகள் இந்த உபாய உபேயங்களில் ஊன்ற வைக்கைக்குக் காரணமாகையாலே இவற்றிற்கு உறுப்புக்களாய் முடிகையாலும், உபாய உபேயங்களில் கலக்கம் தீர்க்கையே உபதேசத்துக்கு முக்கிய பயன் என்று ஒருங்கவிட்டு, சர்வேச்வரன் விஷயமான உபதேசமும், உபாய உபேயங்களில் கலக்கம் தீர்க்கையை நினைத்தேஎன்று கொள்ளவேண்டுமாகில்,

"பிடித்தேன்", "விடுவேனே" என்கிற இரண்டும், தனக்குப் பேறாக இருக்கிற இவ்வாழ்வாரோடே வந்து கலந்து பெரும்பேறு பெற்றானாயிராநிற்கச்செய்தே, 'இவர் தம்மைச் சீலமில்லாச் சிறியன் என்று நினைத்து அகலில் செய்வது ஏன்?' என்று ஐயம் கொண்டு அலமாக்கிறபடியை நீக்குவதற்காகச் சொன்னவையாகையாலே, பேறு விஷயமான கலக்கத்தைத் தெளிவிப்பதற்காகச் சொன்னவை ஆகலாம். பேற்றில் கலக்கமாவது, பேறு இன்னதுஎன்று அறியாமல் கலங்குகையாலும், பேற்றைப்பற்றிய கலக்கம் என்கிற மாத்திரத்தைக் கொண்டு இதற்கு இப்படிப் பொருள் கூறினால் விரோதம் இல்லை.

"வைத்தெழ ஊது" என்கிற இது, தனக்குப் பிரியமானவர்களைப் பிரிந்து கண்ணுஞ்சுழலை இட்டு ஒன்றை ஒன்றாக நினைத்துத் தங்கள் குழலைக் கொண்டாடினானாகக் கருதி, நாங்கள் அவர்கள் அல்லோம் காண், அவர்கள் பக்கலிலே போ என்கிற நினைவாலே "தோகை மா மயிலார்கள் செவி ஓசை வைத்தெழ" என்று பயனையும், "ஆகள் போகவிட்டுக் குழல் ஊது" என்று அதற்கு வழியையும் அவனுக்கு அறிவிக்கிறதாகையாலே உபாயத்திலும் உபேயத்திலும் கலங்கினவனுக்குச் சொல்லுகிறது என்பது தெளிவாம்.

"வாடிநிற்க" என்கிற இது, "மழறு தேன் மொழியார்கள்" என்று தொடங்கி உனக்குப் பிரியமானவர்கள் உன்னைப் பிரிந்து உருவிக்கிடக்க, உன்னுடைய வெறுப்புக்கு இடமான எங்கள் பூவை கிளிகளோடே கலந்து பேசாதேகொள் என்கிறதாகையாலே பேற்றில் கலக்கம் கண்டு சொன்னதாம்.

"கன்மம் அன்று" என்கிற இது, தங்களோடே இட்டீடு கொண்டு தங்கள் எண்ணத்தைக் குலைத்துத் தங்களை வசீகரிப்பதற்கு வழியாக நினைத்துத் தங்களுக்கு விருப்பம் இல்லாதது என்று அறியாமல் கையில் பாவையைப் பறிக்கிற அவனைக் குறித்து 'உனக்கு இது காரியம் அன்று' என்கிறதாகையாலே உபாயத்தில் கலக்கம் கண்டு சொன்னதாகலாம்.

---

1. திருவாய். 10. 3: 10.

2. உபாய உபேயங்களில் கலக்கம் சம்சாரிகளுக்கு இருக்கலாம்; முற்றறிவினனான சர்வேச்வரனுக்கு அது இருக்கக் காரணம் இல்லையே? அங்ஙனமிருக்க, 'அவற்றில் கலங்கும் ஜீவ ஈச்வரர்க்கு' என்று அருளிச்செய்தது என்? என்னும் வினாவிற்கு இரண்டு விதமாக விடை அருளிச்செய்கிறார் 'உபாயத்தில்' என்று தொடங்கியும், 'அங்ஙன் அன்றிக்கே' என்று தொடங்கியும்.

"ஆன்பின் போகேல், கைகழியேல்" என்கிற இவை, பசுமேய்க்கப்போன இடத்தே தனக்கு என்ன தீங்கு வருகிறதோ என்றும், பிரிவாற்ருமலும் இத்தலை படுகிற துன்பம் அறிந்தால் பிரியாதே இத்தலையோடே கூடியிருக்கை புருஷார்த்தமாகவிருக்க, சாதிக்குஉரிய தர்மம் என்கிற மாத்திரத்தைக்கொண்டு பசுமேய்க்கப் போக ஒருப்படுகிறவனைக் கண்டு "ஆழும் என் ஆருயிர்; ஆன்பின் போகேல்" என்றும், "கலவியும் நலியும்; என் கைகழியேல்" என்றும் சொல்லுகிறவை யாகையாலே பேற்றில் கலங்கினவனுக்குச் சொன்னவையாகலாம்.

"உழிதரு" என்கிற இது, "வசிசெய் உன் தாமரைக்கண்ணும் வாயும் கைகளும் பீதகவுடையும் காட்டி" என்று வசீகரிப்பதற்குரிய கருவிகளையும், "உகக்கும் நல்லவரொடும் உழிதரு" என்று தன்னால் காதலிக்கப்பட்டவர்களோடு கலத்தலாகிற பயனையும், அவற்றை அறியாமல் நிற்கிறவனுக்கு அறிவித்ததாக அன்றோ இருக்கிறது.

"என்சொற்கொள்" என்கிறஇது, பசுமேய்க்கப் போகவேண்டா என்று விலக்குகிறது நமக்கு ஒரு தீங்குவராமைக்காக என்று அறியாமல், அன்பு உடையவளான தன் வார்த்தையை அநாதரிக்கின்றவனைக் குறித்து "அவத்தங்கள் விளையும் என்சொற்கொள்" என்றதாகையாலே இதுவும் பேற்றில் கலங்குகிறவனுக்குச் சொன்னதாகலாம்.

ஆனபின்பு 'இவற்றில் கலங்கும் ஈச்வரனுக்குப் பலகாலும் ஹித அஹிதங்கள் சொல்லுவர்' என்றதற்குத் தகுதியாக, இத் திருப்பாசுரங்களுக்கெல்லாம் இப்படிப் பொருள் சொன்னாலும் குறைஇல்லை. (49)

## 199

[1] கதிர் ஞானமூர்த்திக்கு உணர்த்துவது பிரேமத்
தாலே; தமம் மூடுவார்க்கு வேட்கை எழுவிப்பது
ஞானத்தாலே.

என்பது, சூத்திரம்.

**வியாக்:-** இப்படி இவர்கள் இருவர்க்கும் பலகாலும் உபதேசிப்பதற்குக் காரணம் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

---

1. கதிர்ஞானமூர்த்தி - எம்பெருமான்; இறைவன். பிரேமம் - அன்பு; பக்தி. தமம் - இருள்; அறிவின்மை.



கதிர்ஞானமூர்த்திக்கு - [1] "பிணக்கி யாவையும் யாவரும் பிழையாமல் பேதித்தும் பேதியாததோர், கணக்கில் கீர்த்தி வெள்ளக் கதிர்ஞான மூர்த்தியினய்" என்கிறபடியே அழிக்கும் காலத்தில் அறிவுடைப்பொருள் அறிவில்பொருள்கள் அனைத்தையும் ஒரு சேரக் கலந்து, படைப்புக் காலத்தில் ஒருவர் செய்த நல்வினை தீவினைகள் மற்றொருவர் பக்கல் கலவாதபடி, பிரித்தவிடத்திலும் தன் சொரூபத்துக்கு ஒரு விகாரம் இன்றிக்கே ஒப்பற்றதாய், அளவிடமுடியாத தான கீர்த்தியாகிற கடலையுடைத்தாயிருக்கின்ற ஒளிரூபமான ஞானத்தைவடிவாகவுடையனுகையாலே முற்றறிவினனுயிருக்கிற சர்வேச்வரனுக்கு, உணர்த்துவது - [2] "உனக்கு ஒன்று உணர்த்துவன்" என்று உபதேசிப்பது, பிரேமத்தாலே - அவனிடத்துள்ள பக்தியினலே.

தமம் மூடுவார்க்கு - [3] "கொள்ளென்று கிளர்ந்தெழுந்த பெரும் செல்வம் நெருப்பாக, கொள்ளென்று தமம் மூடும்" என்கிறபடியே செல்வம் அழிவிற்குக் காரணமாகக் காணநிற்கச்செய்தே பின்னையும் அதனை ஏற்கும்படி அறிவின்மையினல் மூடப்படுகிற இவ்வுலக மக்களுக்கு, வேட்கை எழுவிப்பது - [4] "நின்கண் வேட்கை எழுவிப்பன்" என்கிறபடியே தம் உபதேசத்தாலே பகவானிடத்தில் பக்தியை உண்டாக்குவது, ஞானத்தாலே - அவன் சம்பந்தம் காரணமாக அவர்களை விடமாட்டாதே திருத்தி, தம்மைப்போன்று பகவானை அநுபவிக்கின்றவர்கள் ஆக்கவேண்டும் என்கிற ஞானத்தாலே என்கை. (50)

## 200

[5] 'உயிர் மாய்தல், ஆழும் என்னுருயிர்' என்னும்
பர துக்கம் சஹியாமை, இரண்டிலும் உண்டு.

என்பது, சூத்திரம்.

**வியாக் :-** ஞானம் பிரேமம் என்னும் இரண்டனையும் காரணமாகச் சொல்லுவான் என்? பரதுக்கம்பொருமை அன்ரோ பரோபதேசத்துக்கு முக்கியமான கரரணம்? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிருர் இச்சூத்திரத்தால்.

---

1. திருவாய். 6. 2: 8.
2. திருவாய். 6. 2: 5.
3. திருவாய். 4. 9: 4.
4. திருவிருத்தம், 96.
5. இதனை, உயிர்மாய்தல் என்னும் பரதுக்கம் சஹியாமை ஞானத்திலும் உண்டு. ஆழும் என் ஆர்உயிர் என்னும் பரதுக்கம் சஹியாமை பிரேமத்திலும் உண்டு என்று விரித்துக்கொள்க. பரதுக்கம் என்பதற்கு, பரம்பொருள் சம்பந்தமான துக்கம் என்றும், பிறருடைய துக்கம் என்றும் இருபொருள். 'இரண்டிலும்' என்றது, மேற்சூத்திரத்தில் கூறிய பிரேமத்தையும் ஞானத்தையும்.

உயிர்மாய்தல் என்னும் பரதுக்கம் சஹியாமை - [1] "கொண்டாட்டும் குலம் புனைவும் தமர் உற்றார் விழுநிதியும், வண்டார் பூங்குழலாளும் மனை ஒழிய உயிர் மாய்தல், கண்டு ஆற்றேன்" என்று இவ்வுலக மக்கள் பாரிக்கிற பாரிப்பும் முடிந்துபோகிறபடியும் கண்டு ஆற்றமாட்டுகிறிலேன் என்கையாலே பிறருடைய துக்கம்பொறாமையும், ஆழும் என் ஆர்உயிர் என்னும் பரதுக்கம் சஹியாமை - [2] "அசுரர்கள் தலைப்பெய்யில் எவன்கொல் என்று ஆழும் என் ஆருயிர்" என்று அசுரர்கள் உன்னை வந்து கிட்டினால் அங்கு என்னாய் விளையுமோ என்று என் ஆன்மாவானது தரைப்படாநின்றது என்கையாலே பரனான சர்வேச்வரனுடைய துக்கம் பொறாமையும், இரண்டிலும் உண்டு- உலக மக்களுக்கும் சர்வேச்வரனுக்கும் உபதேசிப்பதற்குக் காரணமாக மேற் சூத்திரத்துச் சொன்ன ஞானம் பிரேமம் என்னும் இரண்டிலும் உண்டு என்கை.

இதனால் ஞானம், பிரேமம் என்னும் இரண்டும், பரதுக்கம் பொறாமையை ஒழிந்து இராது என்றதாயிற்று. (51)

## 201

*'என்னது உன்னது ஆவி'யிலே 'அறிவார் ஆத்மா' என்று அவன் மதம் தோன்றும்.*

என்பது, சூத்திரம்.

**வியாக் :-** இப்படி அன்பு மாத்திரத்தால் அன்றிக்கே, சர்வேச்வரன் நினைவாலே, அவனுக்கு ஆழ்வாராகிற தாம், ஆன்மாவாகையாலும் அவனுக்கு ஒரு தீங்கு வரப் பொறுக்கமாட்டார் என்னுமதனைக் காட்டுகிறார் இச்சூத்திரத்தால்.

என்னது உன்னது ஆவியிலே - [3] "என்னது உன்னது ஆவியும்" என்று, உன்னுடைய திவ்யாத்ம சொரூபம் நான் இட்ட வழக்கு என்றவிடத்திலே, அறிவார் ஆத்மா என்று - [4] "அறிவார் உயிரானாய்" என்று அறிவாரை உயிராகவுடையவன் என்னும்படி,

1. திருவாய். 4. 9: 3.
2. திருவாய். 10. 3: 8.
3. திருவாய். 4. 3: 8.
4. திருவாய். 6. 9: 8.

*"அறிவார் உயிரானாய்" என்பதற்கு, அறிவாரை உயிராகவுடையவன் என்று பொருள் கோடலே சிறப்பு. மேல் வருகின்ற ஸ்ரீகீதை சுலோகத்தைக் காண்க.*



அவன் மதம் தோன்றும் - [1] "ஞானியானவன் என்னுடைய ஆன்மா என்பது என்னுடைய மதம்" என்று ஞானியானவன் என்னுடைய உயிர் என்பதே என் மதம் என்று அருளிச்செய்தபடியே இவரை அவன் தனக்கு ஆன்மாவாக நினைத்திருக்கிற தன்மை தோன்றும் என்றபடி. ஆகையால் அவனுக்கு ஒரு துன்பம் வர இவர் பொறுக்க மாட்டார் என்பது கருத்து. (52)

## 202

*இருத்தும், எண்தானாய், பொய் கலவாது, அன்பு செய்து, பற்றிலனாய், க்ஷுத் த்ருட்பீடித நிர்த்தநரைப்போலே கண்டு கொண்டு உண்டு பருகி, பரிஜநாதிகளோடே தன்னைத் தந்து, என்செய்வன் என்றே இருந்து, அகில பரத்தையும் சமர்ப்பிக்க, அது சுமந்து, அல்லு நன்பகலும் போகு என்றாலும் அகல்வானும் அல்லனாய், போகேல் என்றால் உகப்பையும் தவிர்ந்து, விதி வகையே நடத்துமவனே உபதேச சத்பாத்ரம்.*

என்பது, சூத்திரம்.

**வியாக்:-** ஆக, மக்களுக்கும் சர்வேச்வரனுக்கும் பலகாலும் நலம் தீங்குகளைச் சொல்லுகைக்குக் காரணங்களைக் காட்டினாராய் நின்றார் மேல். இப்படி இவர் உபதேசிப்பாரானாலும் சிஷ்யனுடைய இலக்கணமாகிற தகுதி இல்லாத சர்வேச்வரன் உபதேசத்திற்கு முக்கிய பாத்திரம் அன்றே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

அதாவது, உத்தம சிஷ்யனானவன், தன் ஆசாரியனை அவனுக்கு விருப்பமான இடத்திலே வைத்து, அவன் விருப்பின்படி

1. "ஜ்ஞாநீது ஆத்மைவமேமதம்"
என்பது, ஸ்ரீகீதை, 7: 18.

*"உன்னதென்னதாவியும் என்னதுன்னதாவியும்" என்னும் இத்திருப்பாசுரத்திற்கு ஸ்ரீ ஆளவந்தார் பொருள் அருளிச்செய்யக் கேட்டிருந்த முதலிகளில் சிலர் 'இவ்வாத்மாவின் சொரூபம் பரமாத்மா இட்ட வழக்கு என்பது கூடும்; பரமாத்மாவின் சொரூபம் ஜீவாத்மா இட்ட வழக்கு என்பது என்?' என்று கேட்க, 'இவன் தன்னை அவனுக்கு ஆக்குவன்' என்ற அன்று கர்மம் தடைசெய்யவும் கூடும்; சர்வேச்வரன் தன்னை இவன் இட்ட வழக்கு ஆக்கும் அன்று தடை செய்பவர் இலர்; ஆனபின்பு அதுவே நிலைநிற்பது. மேலும், 'இவன் சொரூபம் அவன் இட்ட வழக்கு ஆகக்கூடுமோ? என்று இதிலே காணும் சந்தேகிக்கவேண்டுவது' என்று அருளிச்செய்தார் ஸ்ரீ ஆளவந்தார்.*

நடந்து, அவனுடைய திருமேனியிலே புரை அற்ற விருப்பமுடைய வனாய், எல்லாச் சிநேகத்தையும் அவன் பக்கலிலே செலுத்தி, வேறான விஷயங்களிலே பற்று அற்று, மிடியன் செல்வத்தைப் பெற்றாற் போலவும் பசியன்சோற்றைப் பெற்றாற்போலவும் நீர் வேட்கையுடை யவன் தண்ணீரைப் பெற்றாற்போலவும் மிக்க காதலோடே அவனை அநுபவித்து, [1] "தன் சரீரத்தையும் பொருளையும் உயிரையும் நல்ல ஆசாரியர்களுக்குக் கொடுக்கவேண்டும்" என்கிறபடியே தன் னுடைய உயிரையும் தனது பொருள்களையும் ஆசாரியனுக்குக் கொடுத்து, எல்லாம் செய்தாலும், [2] "நிறைந்த பூமியைக் கொடுத் தாலும் ஆசாரியன் செய்த உபகாரத்துக்கு ஈடாகமாட்டாது" என் கிறபடியே ஆசாரியன் செய்த மிகப்பெரிய உபகாரத்துக்கு ஒப்பு அல்லாமையாலே குறைவாளனாய், ஆசாரியன் தன்னுடைய குடும்ப பாரமெல்லாம் தன் மேலே பொகட்டிருக்கத் தான் அப் பாரத்தை எல்லாம் சுமந்து, பகல் இரவு எந்நேரத்திலும் அவனைப் பிரியாமல், அவன் சீற்றம் கொண்டு போ என்றாலும் போகாதவனாய், அவனுக்கு விருப்பம் இல்லையானால் தான் உகந்தவற்றையும் விட்டு, ஆசாரியன் விதித்தபடியே நடத்துமவன் ஆவன்.

எம்பெருமானும், இருத்தும் - [3] "இருத்தும் வியந்து என்னைத் தன் பொன்னடிக் கீழ்" என்கிறபடியே இவர்க்கு விருப்பமான இடத்தே இவரை இருத்தி, எண்தானாய் - [4] "என்எண் தான் ஆனான்" என்கிறபடியே இவர் நினைவிலே ஒழுகுவானாய், பொய் கலவாது - [5] "பொய் கலவாது என் மெய் கலந்தானே" என்கிற படியே இவர் திருமேனியிலே செய்த விருப்பத்திலே புரை இன்றிக்கே, அன்பு செய்து - [6] "அந்தாமத்து அன்புசெய்து" என்கிறபடியே பரமபதத்தில் செய்யும் விருப்பத்தை இவர் பக்கலிலே செய்து, பற்றி லனாய் - [7] "பற்றிலன் ஈசனும் முற்றவும் நின்றனன்" என்கிறபடியே இவர் பக்கல் வைத்த அன்பினாலே பரமபதத்திலுள்ளார் பக்கல் அன்

---

1. "சரீரமர்த்தம் ப்ராணஞ்ச ஸத்குருப்யோ நிவேதயேத்" என்பது, விஹகேச்வரஸம்ஹிதை.

2. "க்ருத்ஸ்நாம்வாப்ருதிவீம் தத்யாத் நதத்துல்யம் கதஞ்சந" என்பது, பிரமாணம்.

3. திருவாய். 8. 7: 1. 4. திருவாய். 1. 8: 7.

5. திருவாய். 1. 8: 5. 6. திருவாய். 2, 5: 1.

7. திருவாய். 1. 2: 6.



பையும் விட்டு, [1] க்ஷுத்பீடிதனைப்போலே த்ருட்பீடிதனைப்போலே நிர்த் தநனைப்போலே உண்டு பருகிக்கண்டுகொண்டு - [2] "நாளும் நாள் வந்து என்னை முற்றவும் தான் உண்டான்" என்கிறபடியே பசித்தவன் சோறு கண்டாற்போலவும், [3] "தான் என்னை முற்றப் பருகினான்" என்கிற படியே நீர்வேட்கைகொண்டவன் தண்ணீரைக் கண்டாற்போலவும், [4] "இருந்தான் கண்டு கொண்டு" என்கிறபடியே வறியன் நிதியி னைக் கண்டாற்போலவும் கழிபெருங்காதலோடே இவரை அநுபவித்து.

பரிஜநாதிகளோடே தன்னைத் தந்து - [5] "வரதனே! பரிஜனங் களும் சாமரம் முதலியவைகளும் திரு ஆபரணங்களும் திவ்வியாயுதங் களும் தேவரீருடைய ஞானம் சக்தி முதலிய குணங்களும் ஸ்ரீ வைகுண்டமும் மற்றய அண்டங்களும் தேவரீருடைய திருமேனியும் அப்படியே தேவரீரும் ஆகிய எல்லாப்பொருள்களும் அடியார்களுக் காகவே இருக்கின்றன" என்றும், [6] "எனக்கே தன்னைத் தந்த கற்பகம்" என்றும் சொல்லுகிறபடியே தன்னுடைய செல்வத்தையும் தன்னையும் இவர்க்குக் கொடுத்து, என் செய்வன் என்றே இருந்து- [7] "உன் அடியார்க்கு என் செய்வன் என்றே இருத்தி" என்கிற படியே இவர்க்கு எல்லாம் செய்தாலும் தான் இழவாளனாய், அகில பரத்தையும் சமர்ப்பிக்க - ஆன்மாவோடு சம்பந்தப்பட்ட பொருள்கள் ஆகிய எல்லாப் பாரத்தையும் 'நம:' என்ற சொல்லின் மூலம் இவர் சமர்ப்பிக்க, [8] "வேங்கடத்து உறைவார்க்கு நம என்னலாம் கடமை

---

1. 'க்ஷுத் த்ருட்பீடித நிர்த்தநரைப்போலே கண்டுகொண்டு உண்டு பருகி' என்னும் இவ்வாக்கியத்தை க்ஷுத்பீடிதனைப் போலே உண்டு, த்ருட்பீடிதனைப் போலே பருகி, நிர்த்தநரைப் போலே கண்டுகொண்டு என மயக்கநிரல்நிறையாகக் கூட்டுக. க்ஷுத்பீடிதன் - பசியுள்ளவன். த்ருட்பீடிதன் - நீர்வேட்கை யுள்ளவன். நிர்த்தனன் - வறியவன்.

2. திருவாய். 9. 6: 8. 3. திருவாய். 9. 6: 10.

4. திருவாய். 8. 7: 2.

5. பரிஜநபரிபர்ஹா பூஷணாந்யாயுதாநி
ப்ரவரகுணகணாச்ச ஜ்ஞாந சக்த்யாதயஸ்தே
பரமபதமதாண்டாந்யாத்ம தேஹஸ்ததாத்மா
வரத ஸகலமேதத் ஸம்ச்ரிதார்த்தம் சகர்த்த.

என்பது, வரதராஜஸ்தவம், 63.

6. திருவாய். 2. 7: 11. 7. பெரியதிருவந். 53.

8. திருவாய். 3. 3: 6.

அது சுமந்தார்கட்கே" என்னும்படி, [1] "நம என்னும் சொல்லே மிகப் பெரியதாக நினைத்திருக்கும் கருத்தாலே உமக்குச் சொல்லுகிறேம்" என்கிறபடியே 'நம' என்னும் சொல் தனக்குப் பாரமாகத் தோற்று கையாலே அவ்வழியாலே அந்த எல்லாப்பாரத்தையும் சுமந்து,

அல்லு நன்பகலும் போகு என்றுலும் அகல்வானும் அல்லனுய் - [2] "அல்லும் நன்பகலும் இடைவீடின்றி நல்கி, என்னை விடான்" என்று இவர் பக்கல் வைத்த சிநேகத்தாலே பகல் இரவு என்னும் வேறுபாடு இல்லாமல் இவரை விடமாட்டாதே, [3] "போகு நம்பீ" என்று சீறிப் போகச் சொன்னலும் [4] "அகல்வானு அல்லன் இனி" என்கிறபடியே அகலாதானுய், போகேல் என்றுல் - [5] "ஆன்பின் போகேல்" என்று இவர் விலக்கினுல், உகப்பையும் தவிர்ந்து - [6] "திவத்திலும் பசுநிரை மேய்ப்பு உவத்தி" என்கிறபடியே தனக்கு உகப்பான காரியத்தையும் தவிர்ந்து, விதி வகையே நடத்துமவனே - [7] "அருள் தருவான் அமைகின்ருன் அது நமது விதி வகையே" என்று இவர் விதித்தபடியே நடத்துகிற சர்வேச்வரனே, உபதேச சத்பாத்ரம் - உபதேசத்துக்குச் சிறந்த உண்மையான பாத்திரம் என்கை. (53)

## 203

[8] நண்ணுதார் மெய்யில் ஊன் ஆசை நிர்வேதத் தோடே ஆஸ்திக்ய அமாநித்வாதிகள் விஞ்சின பிரணிபாத அபிவாதந பரிப்ரச்ந சேவாபரர்க்கு, உளம்கொள் பேசுமளவன்று என்னும் அர்த்தத்தை, வம்மின் விரோதம் ஈனச்சொல் எவ்வுயிர்க்கும் அறிய என்று அடைவுகெட அதபஸ்கர்க்கு உபதேசிக் கிறது, ஞாலத்தார் பந்தபுத்தியும் அநர்த்தம் கண்டு ஆற்றுமையும் மிக்க கிருபையுமிறே.

என்பது, சூத்திரம்.

1. "பூயிஷ்டாம்" என்பது, யஜுர்வேதம்.
2. திருவாய். 1. 10: 8.
3. திருவாய். 6. 2: 2.
4. திருவாய். 2. 6: 7.
5. திருவாய். 10 3: 8.
6. திருவாய். 10. 3: 10.
7. திருவாய். 10 6: 1.
8. நிர்வேதம் - வெறுப்பு. ஆஸ்திக்யம் - சாஸ்திரங்களில் நம்பிக்கை யுண்மை. அமாநித்வம் - மேன்மக்களை உபேக்ஷை செய்யாமல் இருப் பது. பிரணிபாதம் - சாஷ்டாங்கமாக வணங்குதல். அபிவாதநம் - ஆசீர் வாதத்தைக் கோருதல். பரிப்ரச்நம் - கேட்டல். சேவாபரர் - அடி மைத்தொழில் செய்கின்றவர்கள். அதபஸ்கர் - தவம்இல்லாதவர். பந்தம் - இறைவனுக்கும் உயிர்களுக்குமுள்ள உறவு.



வியாக்:- ஆனுல், இங்ஙன் அன்றிக்கே, அறிவில்லாதவர்களான இவ் வுலகமக்களுக்கு உபதேசிக்கும்போது, இவ்வுலக வாழ்வில் விரக்தராய் ஆன்மகுணங்களையுடையராய் அணுகி வந்து ஆதரத்தோடு விரும்புகிறவர்களுக்கு உபதேசிக்கத் தக்க சீரிய பொருளை, பகவானிடத்தில் பக்தியில்லாதவர்களாய் வேறு பயன்களை விரும்புகின்றவர்களாய் விரும்பி அருகிலும் வாராதவர்களுக்கு வலியப் பிடித்து உபதேசிப்பான் என்? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிருர் இச்சூத்திரத்தால்.

நண்ணுதார் மெய்யில் ஊன் ஆசை நிர்வேதத்தோடே - [1] "நண்ணுதார் முறுவலிப்ப" என்ற திருவாய்மொழியிலும் [2] "மெய்யில் வாழ்க்கையை", [3] "ஊனேறு செல்வத்துடற்பிறவி" என்ற திருமொழிகளிலும், [4] "ஆசைவாய்ச் சென்ற சிந்தையராகி" என்ற திருமொழியிலும் சொல்லுகிறபடியே பகவானிடத்தில் பக்தி இல்லாத உலக வாழ்விலும், தோல் இரத்தம் இறைச்சி முதலிய தாதுக்களால் ஆக்கப்பட்ட சரீரத்திலும், நல்வினை தீவினைகள் காரணமாக வந்த சரீர சம்பந்தமான பொருள்களிலும் உண்டான குற்றங்களைக் கண்ட காட்சியாலே, [5] "செய்யும் செயல்களால் ஈட்டப்படும் பலன்களை ஆராய்ந்த பிராமணன், செய்யும் செயல்களால் பரம்பொருள் அடையப்படுகிருன் இல்லை என்று வெறுப்பை அடைவான்" என்கிறபடியே பிறந்த வெறுப்போடே,

ஆஸ்திக்ய அமாநித்வ ஆதிகள் விஞ்சின - [6] "சாஸ்திரங்களில் நம்பிக்கைஉள்ளவனும் தர்மங்களைச் செய்யவேண்டும் என்ற தன்மையுடையவனும் ஒழுக்கமுடையவனும் விஷ்ணு பக்தியுடையவனும் தூய தன்மையுடையவனும் காம்பீர்யத்தையுடையவனும் சாதுர்யத்தை யுடையவனும் தைரியமுடையவனும் ஆன ஒருவன் சிஷ்யன் என்று

1. திருவாய். 4. 9: 1.
2. பெருமாள்திரு. 3: 1.
3. பெருமாள்திரு. 4: 1.
4. பெரியாழ்வார்திரு. 4. 5: 1.
5. "பரீக்ஷ்ய லோகாந் கர்மசிதாந் ப்ராம்ஹணோ
   நிர்வேத மாயாத் நாஸ்தி அக்ருத: க்ருதேந"
   என்பது முண்டகோபநிட. 2: 11.
6. ஆஸ்திகோ தர்மசீலச்ச சீலவாந் வைஷ்ணவச்சுசி:
   கம்பீர: சதுரோதீர: சிஷ்ய இத்யபிதீயதே.
   என்பது, பிரமாணம்.

சொல்லப்படுகிறான்'' என்றும், [1]"உயர்ந்தவர்களை அலக்ஷியம் செய்யாமலிருப்பது, கர்மாநுஷ்டானங்களைப் பெருமைக்காகச் செய்யாமலிருப்பது, முக்கரணங்களாலும் பிறர்க்குத் துன்பம் செய்யாமலிருப்பது, பொறுமையோடிருப்பது, எல்லாரிடத்திலும் சமமாக இருப்பது, ஆசாரியனை வணங்குவது, சாஸ்திரங்களில் சொல்லியபடி பரிசுத்தமாக இருப்பது, சாஸ்திரங்களில் சொல்லியவைகளில் உறுதியுடன் இருப்பது, ஆன்மாவிலியே மனத்தினை வைப்பது'' என்றும் சொல்லப்படுகின்றபடியே ஆஸ்திக்யம் முதலானவைகளும் அமாநித்வம் முதலானவைகளும் ஆகிற சிஷ்யனுடைய இலக்கணமான ஆத்மகுணங்களில் மேம்பட்டவர்களாய், பிரணிபாத அபிவாதந பரிப்பிரச்ந சேவாபரர்க்கு - [2]"கைகூப்பி வணங்கியும் அபிவாதநம் செய்தும்'' என்றும், [3]"ஆத்ம விஷயமான ஞானத்தை நமஸ்காரத்தாலும் கேட்பதாலும் தொண்டு செய்வதனாலும் ஞானிகளிடமிருந்து அறிந்துகொள்'' என்றும் சொல்லுகிறபடியே செருக்கு அற்றவர்களாய்க் கொண்டு நமஸ்கரித்தல் அபிவாதநம் சொல்லுதல் கேட்டல் தொண்டு செய்தல் ஆகிற இவற்றிலே ஊன்றினவர்களாய்ப் பல காலம் தன்னைச் சார்ந்தவர்களுக்கு,

உளம்கொள் பேசும் அளவன்று என்னும் அர்த்தத்தை - [4]"உளம்கொள் ஞானத்து வைம்மின் உம்மை உய்யக்கொண்டு போகுறிலே'' என்றும், [5]"பேசும் அளவன்று இது வம்மின் நமர்! பிறர் கேட்பதன்முன்'' என்றும் இப்படி ஆறு காதுகள் இல்லாமல் ஒருவர் கேட்க உபதேசிக்கவேண்டும் அர்த்த விசேடத்தை,

வம்மின் - [6]"வம்மின்புலவீர்'' என்று வலிய அழைத்து, விரோதம் - [7]"சொன்னால் விரோதமிது ஆகிலும் சொல்லுவன் கேண்மினோ'' என்று நான் சொல்லுகிற இது உங்களுக்கு விரோதமாய்த் தோற்றியிருந்ததாகிலும் நான்சொல்லுவன் இதனைக் கேளுங்கோள்

---

1. *அமாநித்வமதம்பித்வமஹிம்சா க்ஷாந்திரார்ஜவம்*
*ஆசார்யோபாஸநம் சௌசம் ஸ்தைர்யமாத்ம விநிக்ரஹ:*
என்பது, ஸ்ரீகீதை, 13: 7.

2. *"ப்ரணிபத்யாபிவாத்யச"*
என்பது, ஸ்ரீவிஷ்ணுபு. 1. 1: 1.

3. *"தத்வித்தி ப்ரணிபாதேந பரிப்ரச்நேநஸேவயா"*
என்பது, ஸ்ரீகீதை, 4: 34.

4. *திருவாய்.* 4. 10: 9.
5. *பெரியதிருமொழி,* 2. 4: 9.
6. *திருவாய்.* 3. 9: 6.
7. *திருவாய்.* 3. 9: 1.



என்று விரும்பி, ஈனச்சொல்—[1]"ஈனச்சொல் ஆயினும் ஆக'' என்கையாலே "ஆகிலுமாக'' என்று பொகடுபொருளாகவும், எவ்வுயிர்க்கும் அறிய என்று - [2]"மற்றொன்றில்லை சுருங்கச் சொன்னோம் மாநிலத்து எவ்வுயிர்க்கும்'' என்றும், [3]"திண்ணம் நாம் அறியச் சொன்னோம்'' என்றும் எல்லார்க்கும் பிரசித்தமாம்படியாகவும், அடைவுகெட - இப்படி முறை கேடாக, அதபஸ்கர்க்கு உபதேசிக்கிறது - [4]"இந்தக்கீதையின் தத்துவப்பொருள் தவம் இல்லாதவனுக்கு ஒருபோதும் உன்னால் சொல்லத்தக்கது அன்று, பக்தியில்லாதவனுக்கும் சொல்லத்தக்கது அன்று, தவம் பக்தி என்னும் இவை இருந்தாலும் ஆசாரியனுக்குப் பணிவிடை செய்யாதவனுக்குச் சொல்லத்தக்கது அன்று, என்னை நிந்திப்பவனுக்கும் சொல்லத்தக்கது அன்று'' என்று ஸ்ரீ கீதையில் சொல்லப்பட்டபடியே உள்ள அதிகாரிகள் அல்லாதவர்கட்கு உபதேசிக்கிறது,

ஞாலத்தார் பந்த புத்தியும் - [5]"ஞாலத்தார் தமக்கும் வானத்தவர்க்கும் பெருமானை'' என்கிறபடியே பரமபதத்தில் உள்ளாரைப் போன்று இவ்வுலகில் உள்ளவர்கட்கும் அவனோடு சம்பந்தம் ஒத்திருக்க, இவர்கள் இழந்து கிடக்க ஒண்ணாது என்கிற சம்பந்த ஞானமும், அநர்த்தம் கண்டு ஆற்றாமையும் - [6]"கண்டு ஆற்றேன் உலகியற்கை கடல் வண்ணா'' என்கிறபடியே இவர்கள் இவ்வுலக வாழ்க்கையில் படும் கேட்டினைக் கண்டு பொறுக்கமாட்டாத தன்மையும், மிக்க கிருபையுமிறே - அதுமாத்திரமன்றிக்கே, [7]"அருள் கண்டீர் இவ்வுலகினில்மிக்கதே'' என்கிறபடியே [8]"தள்ளுகிறேன்'', "பொறுக்கமாட்டேன்'' என்று ஈச்வரன் கைவிட்டவர்களையும் திருத்தி அல்லது நிற்கமாட்டாத கரைபுரண்ட பேரருளும் அன்றோ என்கை.

---

1. *திருவிருத்தம்,* 99.

2. *திருவாய்.* 9. 1: 7.

3. *திருவாய்.* 10. 2: 5.

4. *இதம்தே நாதபஸ்காய நாபக்தாய கதாசந*
*நசாஶுஶ்ருஷவேவாச்யம் நசமாம் யோப்யஸூயதி.*
என்பது, ஸ்ரீகீதை, 18: 67.

5. *திருவாய்.* 4. 5: 8.
6. *திருவாய்.* 4. 9: 3.

7. *கண்ணிநுண் சிறுத்தாம்பு,* 8.

8. *"க்ஷிபாமி" "நக்ஷமாமி"*
என்பன, பிரமாணங்கள்.

ஞாலத்தார் பந்தபுத்தியும் கேட்டினைக்கண்டு பொறுக்கமாட்டாமையும் என்னும் இரண்டும், இவர்தாம் அருளிச்செய்த திருவாய்மொழியால் நமக்குப் போதருகையாலும், மிக்க கிருபை, இவர் சிஷ்யரான ஸ்ரீ மதுரகவிகள் திருவார்த்தையால் நமக்குப் போதருகையாலும் ஆயிற்று,[1] இப்படிப் பிரசித்திதோற்ற அருளிச்செய்தது. (54)

## 204

[2] தாய்க்கும் மகனுக்கும் தம்பிக்கும் இவர்க்கும்
இவர் அடிபணிந்தவர்க்குமே இவை உள்ளது.

என்பது, சூத்திரம்.

வியாக் :—மற்றும் இப்படி உபதேசித்தவர்கள் பிறரும் உளரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் இச்சூத்திரத்தால்.

தாய்க்கும் - உலக மாதாவாகிய தன்பக்கலிலே தீய சிந்தையைச் செய்து நிற்கின்ற மாபாவியாகிய இராவணனைக் குறித்துப் [3] "புருஷ சிரேஷ்டரான இந்த ஸ்ரீராமபிரான், இராச்சியத்தை இச்சிக்கிறவனும் கொடிய கொலையை விரும்பாதவனும் இருக்கிற உன்னுல் சிநேகம் செய்துகொள்ளப்படுதற்குத் தகுந்தவர்" என்றும், [4] "ஸ்ரீராமபிரான் நியாயம் அறிந்தவர், சரணம் புகுந்தவர்களிடத்தில் அன்புடையவர், எல்லாராலும் அறியப்பட்டவர், ஆகையால், உய்ந்து போவதற்கு விரும்புவாயேயாகில் உனக்கு அவரோடு சிநேகம் உண்டாகட்டும்" என்றும் வருவன போல்வனவற்ருல் நலத்தை உபதேசித்த [5] "இந்த இலக்ஷ்மியானவள் எப்போதும் இருப்பவள், உலகங்கட்கு எல்லாம் தாய், ஒருபோதும் விஷ்ணுவை விட்டுப் பிரியாதவள்" என்கிறபடியே எல்லா உலகங்கட்கும் தாயான பிராட்டிக்கும்,

1. "மிக்க கிருபையுமிறே" என்பதிலுள்ள 'இறே' என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'இப்படிப் பிரசித்திதோற்ற அருளிச் செய்தது' என்கிருர்.

2. தாய் - சீதாபிராட்டி. மகன் - பிரகலாதன். தம்பி - விபீஷணன். இவர் - ஆழ்வார். அடிபணிந்தவர் - இராமாநுசர்.

3. மித்ரமௌபயிகம் கர்த்தும் ராம: ஸ்தாநம் பரீப்ஸதா
வதம்சாநிச்சதா கோரம் த்வயாஸௌபுருஷர்ஷப:
என்பது, ஸ்ரீராமா. சுந். 21: 19.

4. விதித: ஸஹிதர்மஜ்ஞ: ஶரணாகதவத்ஸல:
தேநமைத்ரீபவது தே யதிஜீவிது மிச்சஸி.
என்பது, ஸ்ரீராமா. சுந். 21: 20.

5. "நித்யைவைஷா ஜகந்மாதா விஷ்ணோ: ஸ்ரீ: அநபாயிநீ"
என்பது, ஸ்ரீவிஷ்ணுபு. 1. 8: 17.



மகனுக்கும் - திருப்பெயர் சொன்னதுவே காரணமாகச் சீறி மிகக் கொடிய தண்டங்களைச் செய்யும்படி, பகவானிடத்தில் மீளாத பகையைக் கொண்டவனும் மாபாவியர்கட்கெல்லாம் முதல்வனை இரணியனைக் குறித்து, [1] "தந்தையே! எல்லா உயிர்களையும் சரீரமாக உடையவனும் உலகநாதனும் பரமாத்மாவுமான கோவிந்தன் உலக உருவமாக இருக்க, பகைவன் நட்டோன் என்கிற கதை எங்கிருந்து உண்டாகும்" என்றும், [2] "பூமியில் இருக்கிருன், எங்கும் இருக்கிருன்" என்றும் வருவன போல்வனவற்ருல் நலத்தை உபதேசித்தும், இறைவனிடத்தில் விருப்பம் இல்லாத அசுர புத்திரர்களைக் குறித்து, [3] "அசுரர்களே! சாரம் இல்லாத இவ்வுலக வாழ்வில் உள்ள, சுழல் போன்று வருகின்ற தேவ மனித திரியக்குப்பிறவிகளில் மகிழ்ச்சியை அடையாதீர்கள், உறுதியாகச் சொல்லுகிறேன், எங்கும் ஒரே தன்மையாய் இருப்பதை அடையுங்கள், ஒரே தன்மையாக இருப்பதானது இறைவனுக்குப் பிரீதியை உண்டுபண்ணும்" என்றும் வருவன போல்வனவற்ருல் நலத்தை உபதேசித்தும் போந்த [4] "மீள அவன் மகனை" என்கிற இரணியன் மகனுன ஸ்ரீ பிரஹ்லாதனுக்கும்,

தம்பிக்கும் - [5] "மலைச்சிகரம் போன்ற அளவுள்ளவைகளும் தெத்துப் பற்களை ஆயுதங்களாக உடையவைகளும் நகங்களை ஆயுதங்களாக உடையவைகளும் ஆன குரங்குகள் இலங்கையை வந்து அடைவதற்குள் சீதாபிராட்டி ஸ்ரீராமபிரானிடத்தில் கொடுக்கப்பட

1. "ஸர்வபூதாத்மகேதாத ஜகந்நாதே ஜகந்மயே."
என்பது, ஸ்ரீவிஷ்ணுபு 1. 19. 37.

2. "உர்வ்யாமஸ்தி"
என்பது, பிரமாணம்.

3. அபார ஸம்ஸார விவர்த்தநேஷு மாயாததோஷம் ப்ரஸபம் ப்ரவீமி
ஸர்வத்ரதைத்யாஸ்ஸமதாமுபேத்ய ஸமத்வமாராதநம் அச்யுதஸ்ய.
என்பது, ஸ்ரீவிஷ்ணுபு 1. 17: 89.

4. பெரியாழ்வார்திரு. 1. 6: 2.

5. யாவந்நலங்கா ஸமபித்ரவந்தி வலீமுகா: பர்வதகூடமாத்ரா:
தம்ஷ்ட்ராயுதாஸ்சைவ நகாயுதாச்சப்ரதியதாம் தாசரதாயமைதிலீ.
என்பது, ஸ்ரீராமா. யுத். 14: 3.

வேண்டும்'' என்றும், [1]''ஸ்ரீராமபிரானால் விடப்பட்டனவும் வச்சிரத்துக்குச் சமமானவைகளும் காற்றினை ஒத்த வேகத்தையுடையனவுமான அம்புகள் உயர்ந்த அரக்கர்களுடைய தலைகளை அறுப்பதற்கு முன்பு சீதாபிராட்டி ஸ்ரீராமபிரானிடத்தில் கொடுக்கப்படவேண்டும்'' என்றும் இப்படித் தனக்கு நலம் சொன்னது பொருமல் [2]''அரக்கர் குலத்துக்குக் கெடுதியைச் செய்கிற உன்னைப் பழிக்கவேண்டும்'' என்று தள்ளிய கொடியனான இராவணனைக் குறித்து, [3]''அரசனே! எப்போதும் பிரியத்தைச் சொல்லும் புருடர்கள் எளிதில் கிடைப்பார்கள்; பிரியம் இல்லாத நன்மையைச் சொல்லுபவனும் கேட்பவனும் கிடைப்பது அரிது'' என்றும், [4]''அருள் இன்றி எல்லா உயிர்களையும் கவர்கின்ற யமனுடைய பாசத்தால் கட்டுண்டவனும் நாசமடைகிறவனுமான உன்னைப் பற்றி, எரிகிற வீட்டினைப் போன்று வெறுக்க மாட்டேன்'' என்றும் தொடங்கி நலத்தை உபதேசித்த [5]''அவன் தம்பிக்கே'' என்கிற இராவணனுக்குத் தம்பியான ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கும்,

இவர்க்கும் - பகவானிடத்தில் பக்தி இல்லாதவர்களாய் வேறு ஒன்றிலே நோக்கு உள்ளவர்களாய்த் திரிகிற இவ்வுலகமக்களை விட மாட்டாமல் [6]''வீடுமின் முற்றவும்'' என்று தொடங்கிப் பல இடங்களிலும் பல படியாலும் உபதேசித்த இவ்வாழ்வார்தமக்கும், இவர் அடிபணிந்தவர்க்குமே - ஓராண்வழியாக முன்னோர் உபதேசித்துப் போந்த முறையைக் குலைத்துப் பலரையும் உபதேசிக்கும்படி செய்தும், பல கால் நடந்து துவண்டு கேட்ட உயர்ந்த உண்மைப் பொருளை

1. யாவந் நக்ருஹ்ணந்தி சிராம்ஸிபாணாராமேரிதா ராக்ஷஸ புங்கவாநாம்
வஜ்ரோபமா வாயு ஸமாந வேகா: ப்ரதியதாம் தாசரதாயமைதிலீ.
என்பது, ஸ்ரீராமா. யுத். 14: 4.

2. ''த்வாம்து திக் குலபாம்ஸநம்''
என்பது, ஸ்ரீராமா. யுத். 16: 15.

3. ஸுலபா: புருஷாராஜந் ஸததம் ப்ரியவாதிந:
அப்ரியஸ்யது பத்யஸ்ய வக்தா ச்ரோதாச துர்லப:
என்பது, ஸ்ரீராமா. யுத்: 16: 20.

4. பத்தம் காலஸ்ய பாசேந ஸர்வபூதாபஹாரிணா
நநச்யந்த முபேக்ஷேயம் ப்ரதீப்தம் சரணம் யதா.
என்பது, ஸ்ரீராமா. யுத். 16: 21.

5. திருவாய். 7. 6: 9. 6. திருவாய். 1. 2: 1.



ஓலக்கமாக வைத்து உபதேசித்தும், [1]''உனக்குத் தொடர்ந்து வருகிற பல பிறவிகள் பயன் அற்றுப் போயின; அவற்றுள் இது ஒரு பிறவி என்று நினைத்து இறைவனைச் சரணம் அடைவாய்'' என்று ருசி இல்லாதவர்களையும் நம்பிக்கை இல்லாதவர்களையும் நிர்ப்பந்தித்துச் சரமோபாய நிலையினராக்கியும், இப்படி அதிகாரம் பாராமல் அவர்களுடைய தீய நிலையைப் பார்த்து உபதேசித்தருளும் தன்மையராய், [2]''பாமன்னு மாறன் அடிபணிந்து உய்ந்தவன்'' என்று பேசப்படுகிற எம்பெருமானார்க்குமே, இவை உள்ளது - இத்தன்மைகள் உள்ளவைகள் என்கை.

'இவை' என்றது, மேற்சூத்திரத்தில் கூறிப்போந்த 'சம்பந்த ஞானம், அநர்த்தம் கண்டு ஆற்றாமை, மிக்க கிருபை' என்னும் மூன்றனையும் சுட்டுகிறது. (55)

## 205

[3]கியாதி லாப பூஜாபேக்ஷை அற, மலர் நாடி ஆட்செய்ய, உய்யக்கொண்டு ஆரைக்கொண்டு வாளும் வில்லும் கொண்டு என்கிற இழவுகள் தீரப்பெற்றது.

என்பது, சூத்திரம்.

வியாக்:—இப்படிப் பகவானிடத்தில் பக்தி இல்லாத இவ்வுலக மக்களைக் குறித்து இவ்வாழ்வார் உபதேசித்த உபதேசம் பயன் பெற்றதோ? என்ன, [4]அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

1. வ்ருதைவ பவதோயாதா பூயஸீ ஜந்மஸந்ததி:
தஸ்யாமந்யதமம் ஜந்ம ஸஞ்சிந்த்ய சரணம் வ்ரஜ.
என்பது, சாண்டில்யஸ்மிருதி.

2. இராமாநுச நூற்றந்தாதி, 1.

3. இச்சூத்திரத்தை, கியாதி அபேக்ஷை அற்று, பூஜா அபேக்ஷை அற்று, லாப அபேக்ஷை அற்று, மலர்நாடி ஆட்செய்ய, உய்யக்கொண்டு என்கிற இழவும், ஆரைக்கொண்டு என்கிற இழவும், வாளும் வில்லும் கொண்டு என்கிற இழவும் தீரப்பெற்றது என்று சொற்களைப் பிரித்துக் கூட்டி எச்சங்களை முடித்துக்கொள்க.

4. ஆழ்வார்க்கு, கியாதி லாபம் பூஜை என்னும் இவற்றில் விருப்பம் சிறிதும் இல்லாமையாலும், இவ்வுலக மக்கள் உய்யவேண்டும், நமக்கு உசாத்துணை கிடைக்கவேண்டும், எம்பெருமானுக்குக் காப்பிடுவார் நிரம்ப வேண்டும் என்னும் விருப்பமே நிறைந்திருந்தமையாலும் இவருடைய உபதேசம் பலித்தது என்கிறார் இச்சூத்திரத்தால்.

கியாதி அபேக்ஷை அற - [1] "நீசனேன் நிறைவொன்றுமிலேன்" என்று தண்மைக்கு எல்லையாகத் தம்மை நினைத்திருக்கையாலே கீர்த்தியில் விருப்பம் இன்றி, லாப அபேக்ஷை அற - [2] "கொள்ளென்று கிளர்ந்து எழுந்த பெரும் செல்வம் நெருப்பாக" என்று செல்வத்தை நெருப்பிற்குச் சமமாகக் காண்கையாலே இலாபத்தில் ஆசைஅற்று, பூஜாஅபேக்ஷை அற - [3] "தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்" என்று பாகவதர்களுடைய அடிமை என்னும் எல்லையிலே நிற்கிறவர்களுக்குத் தம்மை அடிமையாக நினைத்தும், [4] "ஓதவல்ல பிராக்கள் நம்மை ஆளுடையார்கள் பண்டே" என்று இத்திருவாய்மொழியினைக் கற்கின்றவர்களைத் தமக்குத் தலைவர்களாக நினைத்தும் போருகையாலே பூஜையில் விருப்பம் அற்று, மலர் நாடி ஆள் செய்ய - [5] "நறிய நன்மலர் நாடி" என்கிறபடியே அடிமையாகிற பரிமளத்தோடு கூடியதாய்ச் சிறந்ததான ஆத்ம புஷ்பங்களைத் தேடி, [6] "ஆட்செய்து ஆழிப்பிரானைச் சேர்ந்தவன்" என்று ஆட்செய்கையாகிற உபதேசத்தைச் செய்கையால் உலக முழுதும் திருந்துகையாலே,

உய்யக் கொண்டு என்கிற இழவும் - [7] "உளம் கொள் ஞானத்து வைம்மின் உம்மை உய்யக் கொண்டு போகுறிலே" என்கிறபடியே இவ்வுலக மக்கள் உய்வின் காரணமாக உண்டான இழவும், ஆரைக் கொண்டு என்கிற இழவும் - [8] "உழந்து இனி யாரைக் கொண்டு என் உசாகோ" என்கிறபடியே தமக்கு உசாத்துணை இல்லாமையால் வந்த இழவும், வாளும் வில்லும் கொண்டு என்கிற இழவும் - [9] "வாளும் வில்லும் கொண்டு பின்செல்வார் மற்றில்லை" என்கிறபடியே அவனுடைய மிருதுத்தன்மை அறிந்து அன்பு செலுத்துவதற்கு ஒருவரும் இல்லை என்கிற இழவும், தீரப்பெற்றது - தீர்ந்தது என்கை.

என்றது, எல்லாரும் உய்வு பெற்றுத் தமக்கு உசாத் துணையாய் அவனுக்கு வாழ்த்தும் கூறுகையாலே மூன்று இழவுகளும் தீரப் பெற்றன என்றபடி.

---

1. திருவாய். 3. 3: 4.
2. திருவாய். 4. 9: 4.
3. திருவாய். 8. 9: 11.
4. திருவாய். 9. 1: 11.
5. திருவாய். 5. 5: 11.
6. திருவாய். 4. 10: 11.
7. திருவாய். 4. 10: 9.
8. திருவாய். 7. 3: 4.
9. திருவாய். 8. 3: 3.



"மலர்நாடி" என்கிற இதற்கு "நறிய நன்மலர்நாடி" என்ற திருப்பாசுரப் பகுதியைச் சொல்லும்போது எல்லா வியாக்கியானங்களிலும் "பரிமளத்தையுடைத்தாய்ச் சிலாக்கியமான புஷ்பங்கள் போலே ஆராய்ந்து சொன்ன ஆயிரம்" என்று திருவாய்மொழிக்கு விசேடணமாகச் சொல்லியிருக்கையாலே, இவர்க்கு நினைவு ஆத்ம புஷ்பங்களைத் தேடி என்கிற இது என்று கொள்ளவேண்டும். அன்றிக்கே, "மலர் நாடி" என்ற இத்தொடர்மொழியை [1] "நாடாத மலர் நாடி" என்ற திருப்பாசுரப் பகுதியை நினைத்து அருளிச்செய்தார் என்று கொள்ளில் ஒரு விரோதமும் இல்லை. "வாடாத மலரடிக் கீழ் வைக்கவே வகுக்கின்று" என்று கைங்கரிய விஷயமும் உண்டாகையாலே "ஆட்செய்ய" என்ற அதனோடும் சேரும். (56)

## 206

[2] *பிரஹ்மநிஷ்டரும் சம்வத்சரவாசிகளுமாகில்*
*'ஏபாவம், பயன்அன்றாகிலும்' சேராது.*

என்பது, சூத்திரம்.

வியாக் :—இப்படி உபதேசம் பலித்ததாகில், [3] "கர்மங்களைச் செய்வதனால் ஈட்டப்படும் பலன்கள் சிறியவை நிலைநில்லாதவை என்று அறிந்து, இறைவன், கர்மங்களைச் செய்வதனால் பெறத்தக்கவன் அல்லன் என்று அறிந்த பிராமணன் வெறுப்புக்கொண்டு" என்கிறபடியே, கர்மங்களின் பலன்களான இவ்வுலக இன்பங்களின் சிறுமை நிலைநில்லாமை முதலிய குற்றங்களையும், நித்தியனான பரமாத்மாவானவன், கர்மங்களைச்செய்வதனால் அடையமுடியாதவன் என்பதனையும் நினைத்தலால் உண்டான வெறுப்போடே ஐம்பொறிகளையும் மனத்தினையும் அடக்குதல் முதலிய ஆத்ம குணங்களையுடையவனாய், கையுறை கொண்டவனாய்க்கொண்டு வேதங்களைக் கற்ற மறையோன், பிரஹ்ம நிஷ்டனான ஆசாரியனை வழிபட, அவ்

---

1. திருவாய். 1. 4: 9.

2. இச்சூத்திரத்தை, உபதேசிக்கும் ஆழ்வார் பிரஹ்ம நிஷ்டராகில் 'ஏபாவம்' சேராது என்றும், உபதேசம் கேட்கும் மக்கள் சம்வத்சரவாசிகளாகில் 'பயன் அன்றாகிலும்' சேராது என்றும், இடையே சில சொற்கள் பெய்தும், 'சேராது' என்னும் சொல்லை முன்னர்க் கூட்டியும் பொருள் முடிவு காண்க.

3. இப்பொருள் அமைந்த உபநிடதவாக்கியத்தை மேலே பக். 481. காண்க.

வாசாரியனும் [1] "ஒரு வருடம் குருகுலவாசம் செய்யாதவனுக்குச் சொல்லக்கூடாது" என்கிறபடியே, ஓர் யாண்டு பரீட்சை செய்து பின்னை உபதேசிக்கக்கடவன் என்று சொல்லுகிற நூன்முறையிலே இவ்வுலகமக்கள் வழிபட்டு வந்து கேட்க, இவர் உபதேசித்தார் என்று கொண்டால் என்னை? என்னும் வினவிற்கு விடை அருளிச் செய்கிறார் இச்சூத்திரத்தால்.

பிரஹ்ம நிஷ்டர் ஆகில் - உபதேசிக்கின்றவரான இவர் முறையாக வந்து சேர்ந்தவனுக்கொழிய மற்றையோருக்கு உபதேசியோம் என்றிருக்கும் பிரஹ்மநிஷ்டராகில், ஏ பாவம் சேராது - அப்படி வந்து வழிபாடு செய்கின்றவர்களுக்குப் பிரீதியோடே உபதேசித்தல் தவிர, அதிகாரிகள் அல்லாதவர்கட்கு உபதேசிக்கப்புக்கு [2] "ஏ பாவம் பரமே" என்கிறபடியே 'ஓ பாவம்! எனக்கு இது பரம் ஆவதே!' என்று உபதேசத்தின் தொடக்கத்திலே வெறுத்துச் சொன்ன திருப் பாசுரம் சேராது.

சம்வத்சரவாசிகள் ஆகில் - இவர் பக்கல் உபதேசம் கேட்டவர்கள் ஓர் யாண்டு குருகுல வாசம் செய்தவர்களாகில், கையுறை தந்து வழிபாடு செய்தன்றோ நாம் பெற்றோம் என்றிருக்கை ஒழிய, பயன் அன்றாகிலும் சேராது - இவருடைய பிரதம சிஷ்யரான ஸ்ரீமதுரகவிகள் [3] "பயன் அன்றாகிலும் பாங்கலராகிலும், செயல் நன்றாகத் திருத்திப் பணி கொள்வான்" என்கிறபடியே பயன் இல்லாதவர்களாகிலும் குணக்கேடர் ஆகிலும் தம்முடைய செயலாலே எல்லாம் நன்றாம்படி திருத்திக் கொள்வார் இவர் என்று நன்றியறிதலாலே உகந்து சொன்ன திருப்பாசுரமும் சேராது.

இப்படி ஆசாரியரான ஆழ்வாருடைய திருப்பாசுரமும், சிஷ்யரான ஸ்ரீமதுரகவிகள் திருப்பாசுரமும் ஆகையாலே முன் கூறிய 'ஞாலத்தார் பந்த புத்தியும், அனர்த்தம் கண்டு ஆற்றாமையும், மிக்க கிருபையும்' ஆகிற காரணங்களாலே பக்தி இல்லாதவர்களைக் குறித்து உபதேசிக்க, உபதேசத்தின் தூய்மையாலே எல்லாரும் திருந்த இவருடைய குறைகளும் தீர்ந்தன என்றே கொள்ள வேண்டும் என்றதாயிற்று.

(57)

1. "நாஸம்வத்ஸர வாஸிநே ப்ரப்ரூயாத்" என்பது, பிரமாணம்.

2. திருவாய். 2. 2: 2.

3. கண்ணிநுண் சிறுத்தாம்பு, 10.



## 207

[1] 'மெய்ந்நின்று, மங்கஒட்டு' க்கு நடுவு, அநுபவ கர்ப்ப உபதேசம்.

என்பது, சூத்திரம்.

வியாக்:— இனி, இவர் இப்படிப் பரோபதேசம் செய்கின்ற வராம்போது பகவானை அநுபவிக்கும் அநுபவத்துக்கு இடையீடு வாராதோ? என்னும் வினவிற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

மெய்ந்நின்று மங்க ஒட்டுக்கு நடுவு - [2] "மெய்ந்நின்று கேட்டருளாய் அடியேன் செய்யும் விண்ணப்பம்" என்றது முதல் [3] "மங்க ஒட்டு உன் மா மாயை" என்பது முடிவாக நடுவில் அடங்கி உள்ள நான்கு பிரபந்தங்களும், அநுபவ கர்ப்ப உபதேசம் - அநுபவம் உள்ளே செல்லாநிற்கச்செய்தே உண்டான பரோபதேசம் என்கை.

இவர்க்கு அநுபவ கர்ப்பமான உபதேசமும், உபதேச கர்ப்பமான அநுபவமுமாய்ச் செல்லும் என்றே அன்றோ நம் முதலிகள் அருளிச் செய்வது. ஆதலால், இவருடைய அநுபவத்திற்கு இடையீடு ஒருபொழுதும் இல்லையே அன்றோ.

ஆக, இப்படி இவருடைய பரோபதேச விஷயங்களும், உபதேசத் திற்குக் காரணங்களும், உபதேசம் பயன்பெற்றதும், அந்த உபதேசம் தான் அநுபவத்தை விட்டு இராது என்னுமிடமும் சொல்லிற்று யிற்று.

(58)

## 208

[4] இவற்றுக்கு, மந்த்ர விதி அநுசந்தாந ரஹஸ்யங்களோடே சேர்த்தி.

என்பது, சூத்திரம்.

வியாக்:— இப்படி இவ்வாழ்வாருடைய அநுபவ உபதேச ரூபமான நான்கு பிரபந்தங்களும், மூன்று மந்திரங்களினுடைய பொருள்

1. அநுபவ கர்ப்ப உபதேசம் - அநுபவம் மனத்திலே நடந்து கொண்டிருக்கும் போதே செய்யும் உபதேசம். கர்ப்பம் - உட்கொண்டது.

2. திருவிருத்தம், 1.

3. திருவாய். 10. 7: 10.

4. மந்திர ரஹஸ்யம், விதி ரஹஸ்யம், அநுசந்தாந ரஹஸ்யம் என்று கூட்டுக. மந்திர ரஹஸ்யம் - திருமந்திரம். விதிரஹஸ்யம் - சரமச் சுலோகம். அநுசந்தான ரஹஸ்யம் - துவயம்.

களைச் சொல்லுகின்றனவாக இருக்கும்படியைத் தெளிவுபடுத்து வதற்குத் திருவுள்ளம்பற்றி ‘ இவற்றுக்கு ’ என்று தொடங்குகிறார் இச்சூத்திரத்தால்.

இவற்றுக்கு - “ மெய்ந்நின்று, மங்க ஒட்டுக்கு நடுவு ” என்று மேலே சொல்லப்பட்ட [1]இப்பிரபந்தங்கள் நான்கற்கும், மந்திர ரஹஸ்யத்தோடு - எல்லாச் சாஸ்திரங்களுக்கும் தாத்பர்யமான ஐம்பொருள்களையும் ஐயம் திரிபு அறச் சொல்லுகின்றனவான [2] “ வேதங்கள் முதலியன எல்லாம் திருவட்டாக்ஷரத்தினுள் இருக்கின்றன ” என்னும்படி எல்லாச் சாத்திரங்களின் சுருக்கமான திருமந்திரமும், விதி ரஹஸ்யத்தோடு - இறைவனை உபாயமாகப் பற்றுவதனை அங்கத்தோடு விதிக்கிற சரமச்சுலோகமும், அநுசந்தாந ரஹஸ்யத்தோடே - இறைவனைப் பற்றும் முறையையும் பேறான கைங்கர்யப் பிரார்த்தனையையும் முறையாகத் தெளிவுபடுத்திக்கொண்டிராநின்ற, போதுபோக்கிற்கும் போகத்திற்குமாக, சாரத்தை அறிந்த பெரியோர்களாலே எப்பொழுதும் அநுசந்தானம் செய்யப்படும் துவயமும் ஆகிற இந்த இரஹசியங்கள் மூன்றனோடே, சேர்த்தி - சேர்த்தி என்கை. (59)

## 209

([3] அளிப்பான் அடியேன் அடைக்கலம் சூடிய பொய் யாதானும் அழுந்தார் என்று ஸ்வரூப விரோதி நிவ்ருத்திகளையும்,) (தாமரை உந்திப் பெரு மா மாயன் ஆளாகவே வாழிய என்று ப்ராப்ய பலன்களையும்,) (நெறிகாட்டி மனத்துக்கொண்டு கண்ணனால் அடித்துக் கண்டிலமால் யாதாகில் என்று உபாயத்தையும் சொன்னவை மந்த்ர ச்லோகங்களோடே சேரும்.)

என்பது, சூத்திரம்.

1. ‘இப்பிரபந்தங்கள்’-திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்பன.

2. “ ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்த்தம் ” என்பது, ஸ்ரீபாஞ்சராத்திரம்.

3. இச்சூத்திரத்தில், ‘ஸ்வரூப விரோதி நிவ்ருத்திகளையும்’ என்பது முடிய உள்ளவை, திருமந்திரத்தின் முதல் இரண்டு பதங்களின் பொருள். இப்பொருள் கூறப்பட்டிருப்பது திருவிருத்தம் என்னும் பிரபந்தத்தில். அதற்குமேல் ‘பிராப்ய பலன்களையும்’ என்பது முடிய உள்ளவை, திருமந்திரத்தில் ‘நாராயணாய’ பதத்தின் பொருள். இப்பொருள் கூறப்பட்டிருப்பது திருவாசிரியம் என்னும் பிரபந்தத்தில். அதற்குமேல் ‘உபாயத்தையும் சொன்னவை’ என்பது முடிய உள்ளவை, சரமச்சுலோகத்தின் பொருள். இப்பொருள் கூறப்பட்டிருப்பது பெரியதிருவந்தாதி என்னும் பிரபந்தத்தில். ‘மந்திரச் சுலோகங்கள்’ என்றது, திருமந்திரத்தையும், சரமச் சுலோகத்தையும். மந்திரம் - திருமந்திரம். சுலோகம் - சரமச்சுலோகம்.



வியாக்:— அவற்றுள் எந்தப் பிரபந்தத்தில் எந்த இரஹஸ்யத்தின் பொருள் சொல்லப்பட்டிருக்கின்றது? என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் இரண்டு சூத்திரங்களால்.

அதாவது, அளிப்பான் - [1] “ உயிர் அளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய் ” என்றதனால், பிரணவத்தில் முதல் எழுத்தான அகாரத்தில் ‘ அவ-ரக்ஷணே ’ என்ற தாதுவின் பொருளான இறைவனுடைய காக்குந்தன்மையைக் கூறினாராவர். அடியேன் - “ மெய்ந்நின்று கேட்டருளாய் அடியேன் செய்யும் விண்ணப்பமே ” என்றதனால், அவனால் பாதுகாக்கப்படும் பொருளாய், அகாரத்தில் ஏறிக் கழிந்த ‘ஆய’ என்னும் நான்காம்வேற்றுமையாலும் பிரணவத்தில் இரண்டாம் எழுத்தான உகாரத்தாலும் சொல்லுகிறபடியே வேறொருவர்க்கும் ஆகாது அவனுக்கே அடிமையாய், சரீரத்தின் வேறுபட்டதாய், ஞான ஆனந்த வடிவாகவுள்ள, மூன்றாம் எழுத்தான ‘மகார’த்தால் சொல்லப்படுகிற ஆத்மசொரூபத்தைச் சொல்லினாராவர். அடைக்கலம் - பிரணவத்தில் அகாரத்தின்மேல் ஏறிக் கழிந்த நான்காம் வேற்றுமையானது வியாகரண சாஸ்திரத்தின்படி கொடைப்பொருளில் வந்ததாய், [2] “ மஹானும் பிரஹ்மனுமாகிய தேவரீரை அடைவதற்கு ஓம் என்ற பிரணவத்தால் ஆன்மாவைச் சமர்ப்பிக்கக்கடவன் ” என்கிறபடியே பிரணவத்திற்கு ஆன்மாவைக் கொடுத்தல் என்பதும் பொருளாகையாலே விரோதி பயத்தாலே கலங்கின நிலையில் [3] “ அடியேன் அடி ஆவி அடைக்கலம் ” என்று அந்த ஆன்ம சமர்ப்பணத்தையும் அருளிச்செய்தாராவர். சூடிய - பிரணவத்தில் சொல்லப்பட்ட பகவான் ஒருவனுக்கே அடிமை என்னுமது, அவன் அடியார்களுக்கு அடிமை என்னுமளவும் செல்லும் என்று ‘நம:’ என்றதன் பொருளாற்றலால் கூறப்படுகிற அவன் அடியார்களுக்கு அடிமை என்னுமதனை [4] “ திருமால் திருப்பேர் வல்லார் அடிக்கண்ணி சூடிய மாறன் ” என்றதனால் தெரிவித்தவராவர்.

1. திருவிருத்தம். 1.

2. “ ப்ரஹ்மணே த்வாமஹஸ ஓம் இத்யாத்மாநம்யுஞ்ஜீத ” என்பது தைத்திரீயஉபநி.

3. திருவிருத்தம், 85.

4. திருவிருத்தம், 100.

பொய் யாதானும் - [1]"பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும்", [2]"யாதானும் ஓர் ஆக்கையில் புக்கு அங்கு ஆப்புண்டும் ஆப்பவிழ்ந்தும்" என்ற திருப்பாசுரங்களால், "நம:" பதத்தில் ஆறும் வேற்றுமையை இறுதியிலேயுடைய மகாரத்தால் சொல்லப்பட்ட அகங்கார மமகாரங்களாகிற, ஆத்மா வல்லாத தேகத்தில் ஆத்மவுணர்ச்சி முதலாகிய அறியாமையையும் அவற்றின் காரியமாய் வருகின்ற தீயனசெய்தல் முதலானவைகளையும் அவற்றின் காரியமாக வருகின்ற தேவ மனித முதலிய பிறப்புக்களாலாய சரீர சம்பந்தத்தையும் கூறினாராவர். அழுந்தார் - [3]"அழுந்தார் பிறப்பாம், பொல்லா அருவினை மாய வன் சேற்று அள்ளல் பொய்ந்நிலத்தே" என்ற திருப்பாசுரத்தால், அவற்றின் மறுதலையைக் காட்டும் சொல்லான 'ந' என்பதனால் சொல்லப்பட்ட அவித்யை முதலாக இவ்வுலக வாழ்க்கையாகிற சேறு ஈறாக உள்ள விரோதிகள் நீங்குதலைச் சொன்னாராவர்.

என்று ஸ்வரூப விரோதி நிவ்ருத்திகளை - ஆக, சர்வ ரக்ஷகனை சர்வேச்வரனுக்கு அவன் ஒருவனுக்கே உரிய அடிமையாய் ஞான ஆனந்த வடிவமாய் அவனுடைய அடியார்களுக்கு அடிமை என்னுமளவாய் இருக்கும் ஆன்ம சொரூபத்தையும், பிறப்பு இறப்புகட்குக் காரணமாக இருக்கின்ற அறியாமை முதலாய விரோதி நீக்கத்தையும் சொல்லுகிற திருவிருத்தம், திருமந்திரத்தில் "ஓம் நம:" என்னும் முதல் இரண்டு பதங்களின் பொருள்களோடு சேர்ந்திருக்கும் என்கை.

தாமரை உந்திப் பெரு மா மாயன் - [4]"தாமரை உந்தித் தனிப் பெரு நாயக" என்று தொடங்கி [5]"எம் பெரு மா மாயன்" என்று முடிக்கையாலே திருமந்திரத்தில் 'நாராயண' பதத்தால் சொல்லப்படுகிற நித்திய விபூதியாகிற பரமபதம் என்ன, லீலாவிபூதியாகிற இவ்வுலகங்கள் என்ன, ஆகிய இவ்விருவகைப்பட்ட உலகங்களோடு கூடின, நம்மால் அடையப்படும் பரம்பொருளையும், ஆளாகவே வாழிய என்று - [6]"தனி மாத் தெய்வத்து அடியவர்க்கு இனி நாம் ஆளாகவே, இசையுங் கொல்" என்றும், [7]"ஊழிதோறு ஊழி ஓவாது வாழிய என்று, யாம் தொழ இசையும் கொல்" என்றும் அந்த 'நாராயண' பதத்தில் நான்காம் வேற்றுமையின் பொருளான

1. திருவிருத்தம், 1.
2. திருவிருத்தம், 95.
3. திருவிருத்தம், 100.
4. திருவாசிரியம், 1.
5. திருவாசிரியம், 7.
6. திருவாசிரியம், 3.
7. திருவாசிரியம், 4.



கைங்கரியமாகிற பயனையும் சொல்லுகையாலே, பரம்பொருள், பரம்பொருளுக்குச் செய்யப்படும் கைங்கரியம் என்னும் இரண்டனையும் சொல்லுகிற திருவாசிரியம், பகுதியாலும் உருபிடைச் சொல்லாலும் அவ்விரண்டனையும் சொல்லுகின்ற மூன்றும்பதமான 'நாராயண' பதத்தின் பொருளோடு சேர்ந்திருக்கையாலே திருமந்திரத்தில் மூன்றும் பதமான 'நாராயண' பதத்தோடு சேர்ந்திருக்கும் என்கை.

ஆக, திருவிருத்தம், திருவாசிரியம் என்ற இரண்டு பிரபந்தங்களும், திருமந்திரத்தின் பொருளைச் சொல்லுவனவாக இருக்கும் என்றபடி.

நெறிகாட்டி - இனி, [1]"நெறிகாட்டி நீக்குதியோ" என்றதனால் வேறு உபாயங்களைக் காட்டி என்னை அகற்றப் பார்க்கிறாயோ என்பதனாலே, சரமச்சுலோகத்தில் [2]"எல்லாத் தர்மங்களையும் முற்றவும் விட்டு" என்கிற இறைவனையொழிந்த உபாயங்களை நீக்குதலைச் சொன்னாராவர். மனத்துக்கொண்டு - [3]"வெம் கோட்டேறு ஏழ் உடனே, கொன்றானையே மனத்துக்கொண்டு" என்றதனால், சரமச்சுலோகத்தில் [4]"என்னையே சரணமாகப் பற்று" என்கிற மனத்தால் பற்றுதலாகின்ற சரணடைதலைத் தெரிவித்தாராவர். கண்ணனால் அடித்து - [5]"சீரார், மனத்தலைவன் துன்பத்தை மாற்றினேன் வானோர், இனத்தலைவன் கண்ணனால் யான்" என்றும், [6]"எம்மிறையார் தந்த - அருள் என்னும் தண்டால் அடித்து - வல்வினையைக் கானும் மலையும் புகக் கடிவான்" என்றும் வரும் திருப்பாசுரங்களால், சரமச் சுலோகத்தில் [7]"நான் உன்னை எல்லாப் பாவங்களிலிருந்து விடுவிக்கிறேன்" என்று உபாயமாக இருக்கிற கண்ணபிரான் எல்லாப்பாவங்களினின்றும் விடுவித்தலைத் தெரிவித்தாராவர். கண்டிலமால் - [8]"வானோ மறிகடலோ" என்று தொடங்கி "வன்

1. பெரிய திருவந். 6.
2. "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்பது, ஸ்ரீகீதை, 18: 66.
3. பெரிய திருவந். 48.
4. "மாமேகம் ஶரணம் வ்ரஜ" என்பது, ஸ்ரீகீதை, 18 : 66.
5. பெரிய திருவந். 25.
6. பெரிய திருவந். 26.
7. "அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்பது, ஸ்ரீகீதை, 18: 66.
8. பெரிய திருவந். 54.

துயரை மருங்கு கண்டிலமால்'' என்று பாவங்களானவை போன விடம் தெரியாதபடி தன்னடையே விட்டுப் போயின என்கையாலே, 'நானும் வேண்டா, நீயும் வேண்டா, அவை தன்னடையே விட்டுப் போம்' என்கிற 'இஷ்யாமி' என்றதன் [1] ணிச்சின் பொருளைக் கூறி ஞராவர். யாதாகில் என்று - [2] "அடர்பொன் முடியானை'' என்று தொடங்கி "யாதாகில் யாதே இனி'' என்று, இனி, கர்மம் இருந்து என்? நசித்து என்? யாதானுல் நமக்கு என் வரும்? என்றதனுல், [3] "துக்கப்படாதே'' என்ற பதத்தாலே போதருகின்ற பாரம் அற்றிருத்தலைச் சொல்லுகையாலே, உபாயத்தைச் சொன்னது சுலோகத்தோடே சேரும் - உபாயத்தைச் சொல்லுகிற பெரியதிருவந்தாதி, சரமச்சுலோகத்தோடே சேரும் என்கை. (60)

## 210

[4] துவயார்த்தம் தீர்க்க சரணுகதி என்றது, சார சங்க்ரஹத்திலே.

என்பது, சூத்திரம்.

வியாக்:—நான்காம் பிரபந்தமான திருவாய்மொழியில் துவயத்தின் பொருள் சொல்லப்படுகிறது என்பதனை விரிவாகச் சொல்ல வேண்டுகையாலும், அது விஷயமாகத் தம்முடைய திருத்தமையனுர் ஆன பிள்ளை ஒரு பிரபந்தம் முன்பே அருளிச்செய்திருப்பதாலும் அதனைக் காட்டிவிடக் கடவோம் என்று திருவுள்ளம்பற்றி அதனை அருளிச்செய்கிறுர் இச்சூத்திரத்தால்.

துவயார்த்தம் தீர்க்கசரணுகதி என்றது - திருமகள் கேள்வனுக இருத்தல் முதலாக, கைங்கரிய விரோதி நீங்குதல் முடிவாகத் துவயத்தில் சொல்லப்படுகிற பத்து அர்த்தங்களையும் திருவாய்மொழியில் பத்துப் பத்துக்களாலும் சொல்லப்படுகையாலே, துவயத்தின் பொருளாய்க்கொண்டு தீர்க்கசரணுகதியாய் இருக்கும் என்று சொல்லப் பட்டது, சாரசங்க்ரஹத்திலே - பிள்ளைலோகாசார்யர் அருளிச் செய்த சாரசங்கிரகமாகிற பிரபந்தத்திலே என்கை.

---

1. இதற்கு விளக்கத்தினை மேலே காண்க. பக். 261.
2. பெரிய திருவந். 70.
3. "மாஶுச:'' என்பது, ஸ்ரீகீதை, 18: 66.
4. 'தீர்க்க சரணுகதி' என்றது, திருவாய்மொழியினை. என்றது - என்று அறுதியிட்டு உரைத்திருப்பது. 'சாரசங்க்ரஹம்' என்பது, இவர் திருத்தமையனுரான பிள்ளை லோகாசார்யர் அருளிச்செய்த பதினெட்டு ரஹஸ்யங்களுள் ஒன்று.



அந்தப் பிரபந்தமாவதுதான் யாது? என்னில், எல்லா உலகங்கட்கும் நலத்தையே கூறுகின்ற வேதங்களிலும் அந்த வேதங்கட்கு விரிவுரைகளாக வெளிப்போந்த ஸ்மிருதி இதிகாசம் புராணம் முதலான எல்லாச் சாத்திரங்களிலும் பிரசித்தமாய், சர்வேச்வரனுக்கு எல்லாச் செல்வமுமாய், நம் ஆசாரியர்களுக்கு ஆபத்தனமாய் இருந்துள்ள இரண்டு அர்த்த விசேடங்களைச் சொல்லுகையாலே 'துவயம்' என்று திருப்பெயரை உடைத்தாய் இருந்துள்ள இரண்டு வாக்கியங்களும் பத்து அர்த்தங்களைச் சொல்லுகின்றன. அவை: திருமகள்கேள்வனுக இருத்தல், நாராயணனுக இருத்தல், நாராயணனுடைய எல்லா உலகங்கட்கும் புகலிடமான இரண்டு திருவடித்தாமரைகள், அத்திருவடிகளே உபாயமாக இருத்தல், அத்திருவடிகளைப்பற்றிய ஆன்மாவிலுள்ள வேண்டுதலை உள்ளடக்கியுள்ள துணிவு, திருமகள் அவளுடைய நாயகன் இவர்களுடைய சகல ஆத்மாக்களுக்கும் கைங்கர்யத்தைக் கொடுப்பதற்குரிய நித்ய சம்பந்தம், கைங்கர்யத்துக்கு எதிர்த்தலையான சர்வேச்வரனுடைய எல்லை இல்லாத இனிமை, எல்லாப்பொருள்கட்கும் தலைவனுக இருத்தல், நித்தியகைங்கர்யம், கைங்கர்யத்திற்குத் தடைகளாக உள்ள அனைத்தும் நீங்குதல் ஆகிற அர்த்த விசேடங்கள்.

இத்தகைய அர்த்த விசேடங்களைத் தெளிவாக்குகின்ற மந்திர விசேடமான துவயத்தினுடைய விவரணமாய் ஒருவரால் செய்யப் பட்டதாய் இருந்துள்ள உபநிடதமான திருவாய்மொழியில் பத்துப் பத்துக்களாலும் இப் பத்து அர்த்த விசேடங்களையும் நம்பூர்வாசாரியர்கள் அடைவே சேர்த்துச் சொல்லிப்போருவர்கள். அவற்றுள்,

முதற்பத்தால், [1] "மலர்மகள் விரும்பும் நம் அரும் பெறல் அடிகள்'' என்றும், [2] "மலராள் மைந்தன்'' என்றும், [3] "திருமகளார் தனிக்கேள்வன்'' என்றும், [4] "திருவின் மணுளன்'' என்றும், [5] "பூமகளார் தனிக்கேள்வன்'' என்றும், [6] "மைந்தனை மலராள் மணவாளனை'' என்றும் திருமகள் கேள்வனுதல் சொல்லப்பட்டது.

இரண்டாம் பத்தால், [7] "எம்பெருமான் நாரணற்கு'' என்றும், [8] "எம்பிரான் எம்மான் நாராயணனுலே'' என்றும், [9] "நாரணன்

---

1. திருவாய். 1. 3: 1
2. திருவாய். 1. 5: 9.
3. திருவாய். 1. 6: 9.
4. திருவாய். 1. 9: 1.
5. திருவாய். 1 .9: 3.
6. திருவாய். 1. 10: 4.
7. திருவாய். 2. 1: 7.
8. திருவாய். 2. 7: 1.
9. திருவாய். 2. 7: 2.

முழுவேழுலகுக்கும் நாதன்" என்றும் நாராயணனுக இருத்தல் சொல்லப்பட்டது.

மூன்ரும் பத்தால், [1] "நாண் மலராம் அடித்தாமரை" என்றும், [2] "அங்கதிர் அடியன்" என்றும், [3] அவன் பாதபங்கயம்" என்றும், [4] "அன்று தேர் கடவிய பெருமான் கனைகழல்" என்றும், [5] "மூவுலகும் தொழுது ஏத்தும் சீர் அடியான்" என்றும் நாராயணனுடைய எல்லா உலகங்கட்கும் புகலிடமான திருவடித் தாமரைகள் இரண்டும் சொல்லப்பட்டன.

நான்காம் பத்தால், [6] "இலங்கை நகர் அம்புளரி உய்த்தவர்" என்றும், [7] "வல்வினை தீர்க்கும் கண்ணனை" என்றும், [8] "தொல்வினை தீர" என்றும், [9] "வெய்ய நோய்கள் முழுதும் வியன் ஞாலத்து வீயவே" என்றும், [10] "மேவி நின்று தொழுவார் வினைபோக" என்றும், [11] "பிறந்தும் செத்தும் நின்று இடறும் பேதைமை தீர்ந்தொழிந்தேன்" என்றும், [12] "நோயே மூப்பிறப் பிறப்புப் பிணியே என்றிவை ஒழிய" என்றும், [13] "வேட்கை எல்லாம் விடுத்து - கூட்டரிய திருவடிக்கண் கூட்டினை" என்றும், [14] "அஃதே உய்யப்புகுமாறு" என்றும், [15] "உய்வு உபாயம் மற்று இன்மை தேறி" என்றும் விருப்பு இல்லாதனவற்றை நீக்கி விருப்பு உள்ளனவற்றைப் பெறுதல் செய்தலாகிற தன்மையையுடைய உபாயத் தன்மை சொல்லப்பட்டது.

ஐந்தாம் பத்தால், [16] "தமியேனுக்கு அருளாய்" என்றும், [17] "ஆறு எனக்கு நின்பாதமே சரணுக" என்றும், [18] "உன்னுல் அல்லால்" என்றும், [19] "கழல்கள் அவையே சரணுகக் கொண்ட" என்றும், [20] "நம்பெருமான் அடிமேல் சேமம்கொள் தென் குருகூர்ச் சடகோபன்" என்றும், [1] "நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு என்று நாடொறும், ஏக சிந்தையனுய்" என்றும், உபாயத்தைப்பற்றிய சேதனன்மாட்டுள்ள வேண்டுதலையுட்கொண்ட துணிவு சொல்லப்பட்டது.

1. திருவாய். 3. 3: 9.
2. திருவாய். 3. 4: 3.
3. திருவாய். 3. 6: 4.
4. திருவாய். 3. 6: 10.
5. திருவாய். 3. 8: 1.
6. திருவாய். 4. 2: 8.
7. திருவாய். 4. 4: 11.
8. திருவாய். 4. 4: 11.
9. திருவாய். 4. 5: 2.
10. திருவாய். 4. 5: 4.
11. திருவாய். 4. 7: 7.
12. திருவாய். 4. 9: 7.
13. திருவாய். 4. 9: 9.
14. திருவாய். 4. 1: 11.
15. திருவாய். 4. 3: 11.
16. திருவாய். 5. 7: 2.
17. திருவாய் 5. 7: 10.
18. திருவாய். 5. 8: 3.
19. திருவாய். 5. 8: 11.
20. திருவாய். 5. 9: 11.



ஆறும் பத்தால், [2] "திருமாமகளிரும் தாம் மலிந்திருந்து" என்றும், [3] "அடிமை செய்வார் திருமாலுக்கே" என்றும், [4] "ஒசிந்த ஒண்மலராள் கொழுநன்" என்றும், [5] "என் திருமார்வற்கு" என்றும், [6] "கோலத் திருமாமகளோடு உன்னை" என்றும் கைங்கர்யத்தைத் தந்தருளுவதற்கு உறுப்பான திருமகள் அவளுடைய நாயகன் இவர்களுடைய நித்திய சம்பந்தம் கூறப்பட்டது.

ஏழாம் பத்தால், [7] "கன்னலே அமுதே" என்றும், [8] "கொடியேன் பருகு இன்னமுதே" என்றும், [9] "அலைகடல் கடைந்த ஆர் அமுதே" என்றும், [10] "திருமாலின் சீர் இறப்பு எதிர்காலம் பருகிலும் ஆர்வனே" என்றும், [11] "இவ்வேழுலகை இன்பம் பயக்க" என்றும் கைங்கர்யத்துக்கு எதிர்த்தலையான சர்வேச்வரனுடைய எல்லை இல்லாத இனிமை கூறப்பட்டது.

எட்டாம் பத்தால், [12] "அடியேன் பெரிய அம்மானே" என்றும், [13] "விண்ணவர் கோன்நங்கள் கோனை" என்றும், [14] "அமர்ந்த நாதனை" என்றும், [15] "மூவுலகாளி" என்றும், [16] "நேர்பட்டநிறை மூவுலகுக்கும் நாயகன்" என்றும் எல்லாப் பொருள்கட்கும் தலைவனுதல் சொல்லப்பட்டது.

ஒன்பதாம் பத்தால், [17] "பண்டை நாளாலே நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளும்கொண்டு நின்கோயில் சீய்த்து" என்றும், [18] "நின்தீர்த்த அடிமைக்குற்றேவல்" என்றும், [19] "தொடர்ந்து குற்றேவல் செய்து" என்றும், [20] "கொடுவினையேனும் பிடிக்க" என்

1. திருவாய். 5. 10: 11.
2. திருவாய். 6. 5: 8.
3. திருவாய். 6. 5: 11.
4. திருவாய். 6. 7: 8.
5. திருவாய். 6. 8: 10.
6. திருவாய். 6. 9: 3.
7. திருவாய். 7. 1: 2.
8. திருவாய். 7. 1: 7.
9. திருவாய். 7. 2: 5.
10. திருவாய். 7. 9: 9.
11. திருவாய். 7. 10. 1.
12. திருவாய். 8. 1: 3.
13. திருவாய். 8. 2: 2.
14. திருவாய். 8. 4: 10.
15. திருவாய். 8. 9. 5.
16. திருவாய். 8. 9: 11.
17. திருவாய். 9. 2: 1.
18. திருவாய். 9. 2: 2.
19. திருவாய். 9. 2: 3.
20. திருவாய். 9. 2: 10.

றும், [1] "உறுவது இது என்று உனக்கு ஆட்பட்டு" என்றும், [2] "ஆட்கொள்வான் ஒத்து" என்றும், [3] "நானும் மீளா அடிமைப் பணி செய்யப் புகுந்தேன்" என்றும் நித்தியமாய் உளதான தொண்டு சொல்லப்பட்டது.

**பத்தாம் பத்தால்,** [4] "துயர் கெடும் கடிது" என்றும், [5] "கெடும் இடராய" என்றும், [6] "எழுமையும் ஏதம் சாரா" என்றும், [7] "தீரும் நோய்வினைகள் எல்லாம்" என்றும், [8] "இப் பிறப்பு அறுக்கும்" என்றும், [9] "உன்தன் திருவுள்ளம் இடர் கெடும்தொறும் நாங்கள் வியக்க இன்புறுதும் எம்பெண்மை ஆற்றோம்" என்றும், [10] "பிணி ஒன்றும் சாரா பிறவி கெடுத்து ஆளும்" என்றும், [11] "பிறவித் துயர் கடிந்தோம்" என்றும், [12] "விண்டே ஒழிந்த வினை ஆயின எல்லாம்" என்றும், [13] "அமரா வினைகளே" என்றும், [14] "கடுநரகம் புகல் ஒழித்த" என்றும், [15] "பிறவி கெடுத்தேன்" என்றும், [16] "தடுமாற்ற வினைகள் தவிர்த்தான்" என்றும், [17] "அந்திதொழும் சொல்லு" என்றும், [18] "அவாஅற்று வீடு பெற்ற" என்றும் கைங்கர்யத்துக்குத் தடைகளாக உள்ளவை அனைத்தும் அடியோடு ஒழிந்தமை சொல்லப்பட்டது.

இப்படித் திருமகள் கேள்வனுக இருத்தல் முதலாக, கைங்கர்யத்துக்குத் தடைகளாக உள்ளவை அனைத்தும் அடியோடு ஒழிந்தமை ஈறுக இருந்துள்ள கொள்ளத்தக்க அர்த்தவிசேடங்களைச் சொல்லக் கூடியதாக இருக்கின்ற இரண்டு வாக்கியங்களாகிய துவயமும், திருவாய்மொழியும், பகவானுடைய திருவடிகளை விரும்பினவர்களாய் வேறு உபாயங்களை நோக்காதவர்களாய் இருக்கும் அதிகாரிகளுக்கு, போது போக்குவதற்கு உறுப்பாயும் போகத்திற்குக் காரண

1. *திருவாய்.* 9. 4: 4.
2. *திருவாய்.* 9. 6: 7.
3. *திருவாய்.* 9. 8: 4.
4. *திருவாய்.* 10. 1: 8.
5. *திருவாய்.* 10. 2: 1.
6. *திருவாய்.* 10. 2: 2.
7. *திருவாய்.* 10. 2: 3.
8. *திருவாய்.* 10. 2: 5.
9. *திருவாய்.* 10. 3: 9.
10. *திருவாய்.* 10. 4: 7.
11. *திருவாய்.* 10. 4: 3.
12. *திருவாய்.* 10. 4: 9.
13. *திருவாய்.* 10. 5. 9.
14. *திருவாய்.* 10. 6: 11.
15. *திருவாய்.* 10. 8: 3.
16. *திருவாய்.* 10. 8: 5.
17. *திருவாய்.* 10. 8: 7.
18. *திருவாய்.* 10. 10: 11.



மாயும் ஈச்வரனுடைய பிரீதிக்கு உறுப்பாயும் இச்சரீரம் உள்ளவரையிலும் அநுசந்திக்கத்தக்கனவாயும் உள்ளவை என்றபடி.

இப்படித் திருவாய்மொழி, துவயத்தின் பொருளைக் கூறுகின்றது என்பதனைத் தெளிவாக ஆசார்யர்கள் அருளிச்செய்து வைக்கையாலே, தம்முடைய இந்தப் பிரபந்தத்தில் சொல்லவேண்டிய விஷயத்தைப் பிள்ளையினுடைய பிரபந்தத்திலே காட்டினாராயிற்று. (51)

## 211

[1] மூன்றில் சுருக்கிய ஐந்தையும் உயர் திண் அணை ஒன்று, பயில் ஏறு கண் கரு, வீடு சொன்னல் ஒரு கொண்ட, நோற்ற நாலும், எம்மா ஒழிவில் நெடு வேய் என்கிற இருபதிலே விசதமாக்கி எண்பதிலே பரப்புகையாலே ஐந்தையும், அருளினன் வீடுபெற்ற என்கையாலே ஐந்திலும் இரண்டையும், தொழுது களித்தேன் சொல்லுப்பெற்றேன் பணிசெய் என்கிற முக்தலக்ஷண விருத்தியாலே இரண்டில் ஒன்றையும் இதுக்குப் பிரமேயம் என்னும்.

என்பது, சூத்திரம்.

**வியாக் :—** ஆக, இப்படித் துவயத்தின் பொருளைச் சொல்லுகின்ற தீர்க்கசரணுகதியாய் இருக்கிற திருவாய்மொழிக்கு, மற்றும் உள்ள ஆசாரியர்கள் அருளிச்செய்யும் அர்த்த விசேடங்களையும் அருளிச்செய்கிறுர் இச் சூத்திரத்தால்.

1. *மூன்றில் சுருக்கிய ஐந்தையும் உயர், திண், அணை, ஒன்று, பயில், ஏறு, கண், கரு, வீடு, சொன்னல், ஒரு, கொண்ட, நோற்றநாலும், எம்மா, ஒழிவில், நெடு, வேய் என்கிற இருபதிலே விசதமாக்கி எண்பதிலே பரப்புகையாலே ஐந்தையும் இதுக்குப் பிரமேயம் என்னும் என்றும், அருளினன், வீடுபெற்ற என்கையாலே இரண்டையும் இதுக்குப் பிரமேயம் என்னும் என்றும், தொழுது, களித்தேன், சொல்லுப் பெற்றேன், பணிசெய் என்கிற முக்தலக்ஷண விருத்தியாலே இரண்டில் ஒன்றை இதுக்குப் பிரமேயம் என்னும் என்றும் என்று சூத்திரத்தைப் பிரித்துக் கொள்க. 'மூன்றில்' என்றது, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்னும் பிரபந்தங்களை. 'ஐந்தையும்' என்றது, பரசொருபம், ஆன்மசொருபம், உபாய சொருபம், விரோதி சொருபம், புருஷார்த்த சொருபம் என்னுமிவற்றை. 'இரண்டையும்' என்றது, உபாயத்தையும் உபேயத்தையும். 'ஒன்றையும்' என்றது, உபேயத்தை. விசதமாக்குதல் - தெளிவாக்குதல். பிரமேயம் - சொல்லப்பட்ட பொருள்.*

மூன்றில் சுருக்கிய ஐந்தையும் - திருமந்திரத்திலும் சரமச் சுலோகத்திலும் சுருங்கச் சொல்லப்பட்ட அர்த்த விசேடங்களைத் துவயம் என்னும் மந்திரத்திலே விவரிக்குமாறு போலே, முன்னே அருளிச்செய்த திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி என்னும் மூன்று பிரபந்தங்களிலும் சுருக்கமாக அருளிச்செய்யப் பட்ட பரஸ்வரூபம் (இறைநிலை) ஆன்மஸ்வரூபம் (உயிர்நிலை) உபாய ஸ்வரூபம் (நெறியியல்) விரோதிஸ்வரூபம் (தடையியல்) புருஷார்த் தஸ்வரூபம் (வீட்டின் இயல்) என்னும் ஐம்பொருள்களையும், உயர் திண் அணை ஒன்று - வேதச்சாயையாலே, உடன்பாட்டால் சுவாநுபவமுகத்தால் பரத்துவத்திலே பரத்துவத்தை (முதன்மை) அருளிச்செய்த [1]"உயர்வற உயர்நல முடையவன்" என்ற திரு வாய்மொழியும், இதிகாச புராணங்களின் கூற்றாலே உடன்பாட்டா லும் எதிர்மறைமுகத்தாலும் பரோபதேசமுகத்தாலே அவதாரத்திலே பரத்துவத்தை அருளிச்செய்த [2]"திண்ணன் வீடு" என்ற திருவாய் மொழியும், மோக்ஷத்தைக் கொடுக்கும் தன்மையைக் கூறுகையாலே பரத்துவத்தை அருளிச்செய்த [3] "அணைவது அரவணை" என்ற திருவாய்மொழியும், அர்ச்சாவதாரத்திலே (கோயில்களிலே இருக்கும் விக்கிரகநிலை) பரத்துவத்தை அருளிச்செய்த [4]"ஒன்றும் தேவும்" என்ற திருவாய்மொழியும் ஆகிற நான்கு திருவாய்மொழிகளாலும் **பரஸ்வரூபமும்,**

பயில் ஏறு கண் கரு - பகவானுக்கு அடிமைப்பட்டிருக்கும் அடிமையைக் காட்டிலும் அவனுடைய அடியார்களுக்கு அடிமைப் பட்டிருக்கும் அடிமையே ஆன்மாவிற்கு உரியது என்பதனைக் கூறிய [5]"பயிலும் சுடர்ஒளி" என்ற திருவாய்மொழியும், அடிமைக்குப் புறம்பாக உள்ளவையான ஆன்மா, ஆன்மாவோடு சம்பந்தப்பட்ட பொருள்கள் எல்லாம் விடத்தக்கவை என்கிற எதிர்மறை முகத் தாலே அடிமையே ஆன்மாவிற்குச் சொரூபம் என்பதனைக் கூறிய [6]"ஏறாளும் இறையோனும்" என்ற திருவாய்மொழியும், பகவானுக்கு இந்த ஆன்மா சரீரமாக இருப்பதனாலே அடிமையாய் சரீரத்தைக் காட்டிலும் வேறாய் ஞான ஆனந்த லக்ஷணமாய் இருக்கும் என்னு மதனைக் கூறிய [7] "கண்கள் சிவந்து" என்ற திருவாய்மொழியும், வேறொரு பொருளுக்கு அடிமை என்று கூறுதலும் மிகையாம்படி யான இவ்வான்மாவினுடைய அவன் ஒருவனுக்கே உரிமையாம்

1. திருவாய். 1. 1: 1.
2. திருவாய். 2. 2: 1.
3. திருவாய். 2. 8: 1.
4. திருவாய். 4. 10. 1.
5. திருவாய். 3. 7: 1.
6. திருவாய். 4. 8: 1.
7. திருவாய். 8. 8: 1.



தன்மையைக் கூறிய [1]"கருமாணிக்க மலை மேல்" என்ற திரு வாய்மொழியும் ஆகிற நான்கு திருவாய்மொழிகளாலும் **ஆன்ம சொரூபமும்,**

வீடு சொன்னால் ஒரு கொண்ட - பகவானுக்கு வேறுபட்ட பொருள்களைப் பற்றுகைக்கு உறுப்பான அகங்கார மமகாரங்கள் விடத்தக்கவை என்பதனைக் கூறிய [2]"வீடுமின் முற்றவும்" என்ற திருவாய்மொழியும், அடிமை செய்யத்தகாதவர்களுக்கு அடிமை செய்தல் விடுதற்குரியது என்பதனைக் கூறிய [3]"சொன்னால் விரோ தம்" என்ற திருவாய்மொழியும், ஐச்வர்யமும் கைவல்யமும் விடத் தக்கன என்பதனைக் கூறிய [4]"ஒரு நாயகமாய்" என்ற திருவாய் மொழியும், சரீரசம்பந்தம் காரணமாக வருகின்ற உறவு முறையினர் விரும்பத்தக்கவர் அல்லர் என்பதனைக் கூறிய [5]"கொண்ட பெண் டிர்" என்ற திருவாய்மொழியும் ஆகிற நான்கு திருவாய்மொழி களாலும் விரோதி சொரூபமும்,

நோற்ற நாலும் - [6]"நோற்ற நோன்பிலேன்" என்று கைம் முதல் இல்லாமை முன்னாக "ஆறு எனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்" என்று கூறிய "நோற்ற நோன்பிலேன்" என்ற திருவாய்மொழியும், "களைவாய் துன்பம் களையாதொழிவாய் களை கண் மற்றிலேன்" என்று வேறு கதி இல்லாமை முன்னாக "கழல் கள் அவையே சரணாகக் கொண்ட" என்று கூறிய [7]"ஆரா அமுதே" என்ற திருவாய்மொழியும், "வைகலும் வினையேன் மெலிய" என்று பக்தியின் வசப்பட்டமை முன்னாக "நம் பெருமான் அடிமேல் சேமம் கொள் தென்குருகூர்ச் சடகோபன்" என்று கூறிய [8]"மானேய் நோக்கு மட நல்லீர்" என்ற திருவாய்மொழியும், "எனது ஆவியை நின்று நின்று உருக்கி உண்கின்ற இச் சிறந்த வான் சுடரே" என்று தரித்து நின்று அவன் குணங்களை நினைக்க முடியாதவாறு உருக்குலைந்தமை செல்லாநிற்க "நாகணை மிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு என்று நாடொறும் ஏக சிந்தை யனாய்" என்று கூறிய [9]"பிறந்தவாறும்" என்ற திருவாய்மொழி யும் ஆகிற நான்கு திருவாய்மொழிகளாலும் உபாய சொரூபமும்,

1. திருவாய். 8. 9: 1.
2. திருவாய். 1. 2: 1.
3. திருவாய். 3. 9: 1.
4. திருவாய். 4. 1: 1.
5. திருவாய். 9. 1: 1.
6. திருவாய். 5. 7: 1.
7. திருவாய். 5. 8: 1.
8. திருவாய். 5. 9: 1.
9. திருவாய். 5. 10. 1.

எம்மா ஒழிவில் நெடு வேய் - "தனக்கேயாக" என்று கைங்கர்யத்தில் என் பொருட்டாகச் செய்தலாலாய இன்பம் வேண்டா என்று விரும்பிய [1] "எம் மா வீட்டுத்திறமும் செப்பம்" என்ற திருவாய்மொழியும், ஒழிவில் காலம் எல்லாம் உடனாய் மன்னி எல்லா அடிமைகளையும் செய்யவேண்டும் என்று பாரித்த [2] "ஒழிவில் காலம் எல்லாம்" என்ற திருவாய்மொழியும், அந்தக் கைங்கர்யம் தான் பாகவதர்களுக்குச் செய்யும் தொண்டின் அளவாக முடிய வேண்டும் என்று எண்ணிய [3] "நெடுமாற்கு அடிமை" என்ற திருவாய்மொழியும், அது தன்னிலும் "உன்தன் திருவுள்ளம் இடர் கெடும் தோறும்" என்று அவனுடைய மனநிறைவே பேறாக இருக்கும் படியைச் சொன்ன [4] "வேய்மருதோளிணை" என்ற திருவாய்மொழியும் ஆகிற நான்கு திருவாய்மொழிகளாலும் பல சொரூபத்தையும், ஆக, ஐம் பொருள்களையும்,

இருபதிலே விசதமாக்கி - இருபது திருவாய்மொழிகளாலும் மிகத் தெளிவாக அருளிச்செய்து, எண்பதிலே பரப்புகையாலே - மற்றை எண்பது திருவாய்மொழிகளாலும் அவ் வைம்பொருள் தன்னையே விரித்துப் பேசுகையாலே, ஐந்தையும் இதுக்குப் பிரமேயம் என்னும் - அவ்வைந்து பொருள்களும் இத்திருவாய்மொழியில் சொல்லப்பட்ட பொருள்கள் என்று கூறுவர்கள்.

அருளினன் வீடுபெற்ற என்கையாலே, ஐந்திலும் இரண்டை இதுக்குப் பிரமேயம் என்னும் - "மயர்வற மதி நலம் அருளினன்" என்று தொடங்கி "அவாவற்று வீடுபெற்ற" என்று முடிக்கையாலே அவ் வைந்து பொருள்களிலும் வைத்துக்கொண்டு, பிரதானமான உபாய உபேயங்கள் (நெறியும், பலமும்) இரண்டும் இதில் சொல்லப் பட்ட பொருள்கள் என்றும் கூறுவர்கள்.

தொழுது, களித்தேன், சொல்லுப்பெற்றேன் என்கிற முக்த லக்ஷணத்தால் - [5] "தொழுது எழு என்மனனே" என்றும், [6] "விருப்பேபெற்று அமுதம் உண்டுகளித்தேன்" என்றும், [7] "மேலைத் தொண்டு உகளித்து, அந்திதொழும் சொல்லுப்பெற்றேன்" என்றும் சொல்லப்படு

1. திருவாய். 2. 9: 1.
2. திருவாய். 3. 3: 1.
3. திருவாய். 8. 10. 1.
4. திருவாய். 10. 3. 1.
5. திருவாய். 1. 1: 1.
6. திருவாய். 10. 8: 6.
7. திருவாய். 10. 8: 7.



கிற [1] "எப்பொழுதும் கையைக் கூப்பிக்கொண்டே இருத்தல், மகிழ்ச்சியாயிருத்தல், நம: என்று சொல்லிக்கொண்டே இருத்தல் ஆகிற முக்தர்களுடைய இலக்ஷணத்தாலும், பணிசெய் என்கிற விருத்தியால் - [2] "துதித்தலையே தன்மையாகக் கொண்டவர்கள்" என்கிற அவர்களைப்போலே [3] "சொல் பணிசெய் ஆயிரம்" என்று சொல்லப்படுகிற திருவாய்மொழி பாடுதலாகிற வாக்கினால் செய்யும் தொண்டாலும், இரண்டில் ஒன்றை இதுக்குப் பிரமேயம் என்னும் - அவ்விரண்டிலும் வைத்துக்கொண்டு உபேயம் (பலம்) ஒன்றையுமே இத் திருவாய்மொழியிற் சொல்லப்பட்ட பொருள் என்றும் சொல்லுவர்கள்.

'இருபதிலே விசதமாக்கி எண்பதிலே பரப்புகையாலே ஐந்தையும் இதுக்குப் பிரமேயம் என்னும்' என்ற இது; "இப்பிரபந்தங்களில் சூக்திகள், பிராப்யனான எம்பெருமானுடைய ஸ்வரூப பிரதிபாதக பரமாயிருக்கும் சில ; பிராப்தாவான பிரத்யக்ஆத்ம ஸ்வரூப பரமாயிருக்கும் சில ; பிராப்தி உபாயத்தைச் சொல்லும் சில ; பலத்தைச் சொல்லும் சில ; பிராப்தி விரோதியைச் சொல்லும் சில ; அவசிஷ்டமானவை இவற்றுக்கு உபபாதகங்களாயிருக்கும்" என்று [4] ஈட்டில் யோஜித்தமுறை.

'உபாய உபேயங்கள் இரண்டையும் இதுக்குப் பிரமேயம் என்னும்' என்ற இது, அவை இரண்டும் பிரதானமாகச் சொல்லப் பட்ட பொருள் ; இந்த உபாய உபேயங்களுக்கு அதிகாரி இன்னான் என்கைக்காக ஆன்மாவின் சொரூபம் சொல்லப்படுகிறது ; உபாயமாக இருப்பவனும் பலத்துக்கு விஷயமாக இருப்பவனும் இன்னான் என்கைக்காகப் பரம்பொருளின் சொரூபம் சொல்லப்படுகிறது ; பலத்திற்கு இடையூறாய் உபாயத்தினால் விலக்கக் கூடியது இன்னது என்கைக்காக விரோதி சொரூபம் சொல்லப்படுகிறது என்பதனைத் திருவுள்ளம்பற்றி.

'உபேயம் ஒன்றும் இதுக்குப் பிரமேயம்' என்ற இது, "இவற்றில் உத்தேசியம் பலம் ; தத் அர்த்தமாக மற்றுள்ள நால் அர்த்தமும் சொல்லுகிறது" என்று ஈட்டில் சொன்னபடியே கைங்கரியமே

1. "பத்தாஞ்சலி புடா ஹ்ருஷ்டா நம இத்யேவ வாதிந:" என்பது, பிரமாணம்.
2. "விபந்யவ:" என்பது, பிரமாணம்.
3. திருவாய். 1. 10: 11.
4. ஈடு என்றது, திருவாய்மொழியின் வியாக்கியானங்கள் ஐந்தனுள் ஒன்றான முப்பத்தாறாயிரப்படியினை.

முக்கியம். மற்றை நான்கனையும் சொன்னது கைங்கரியத்தை ஏற்றுக் கொள்ளுகின்றவனையும், கைங்கரியத்தைச் செய்கின்றவனையும், அதற்குத் தடையாக இருப்பனவற்றையும், அத் தடையை நீக்குகின்ற வழியையும், அறிவிக்கைக்காக ஆகையாலே அப்பலத்திற்கு உறுப்பாகச் சொன்னது இத்தனை என்று திருவுள்ளம்பற்றி. (52)

## 212

[1] ரஹஸ்யத்துக்கு ஒரெழுத்தும் அதுக்கு ஓர் உருவும் போலேயானவற்றிலே, இமையோர் அதிபதி, அடியேன் மனனே, பொய் மயர்வு, பிறந்து அருளினன், விண்ணப்பம் தொழுது எழு என்ற பஞ்சகத்தோடே, அவித்யாதி ஸ்வரூபஸ்வபாவ, ஆத்மேச்வர பந்த, ரக்ஷண க்ரம, குண விக்ரஹ விபூதியோக, ததீயாபிமாந, உபதேச விஷய, அந்யாபதேச ஹேத்வாதிகளும் ஸங்க்ருஹீதம்.

என்பது, சூத்திரம்.

வியாக் :—இனி, முதல் பிரபந்தமான திருவிருத்தத்தின் சுருக்கமான அதன் முதல் திருப்பாசுரத்திலும், ஈற்றுப் பிரபந்தமான திருவாய்மொழியின் சுருக்கமான அதன் முதல் திருப்பாசுரத்திலும் சொல்லப்பட்ட அர்த்த விசேடங்களை விளக்கமாக அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

ரஹஸ்யத்துக்கு ஓர் எழுத்துப் போலே - [2] "ஓர் எழுத்து ஓர் உருவானவனே" என்னும்படி திருமந்திரமாகிற இரஹஸ்யத்துக்குச்

1. 'ரஹஸ்யத்துக்கு ஓர் எழுத்தும் அதுக்கு ஓர் உருவும் போலே ஆனவற்றிலே' என்றது, திருவெட்டெழுத்தாகிய திருமந்திரத்திற்குச் சுருக்கமாகப் பிரணவம் அமைந்தாற் போன்றும், அந்தப் பிரணவத்திற்குச் சுருக்கமாக அகரம் அமைந்தாற் போன்றும், திருவிருத்தம் நூறு திருப்பாசுரங்கட்கும் சுருக்கமாக அமைந்த 'பொய்ந்நின்ற ஞானமும்' என்ற முதல் திருப்பாசுரத்திலும், திருவாய்மொழி ஆயிரம் திருப்பாசுரங்கட்கும் சுருக்கமாக அமைந்த 'உயர்வறவுயர்நலம்' என்ற முதல் திருப்பாசுரத்திலும் என்றபடி. ரஹஸ்யம் - திருமந்திரம். ஒரெழுத்து - பிரணவம். அதுக்கு - அந்தப் பிரணவத்திற்கு. ஓர்உரு - ஓர் உறுப்பாக அமைந்த அகரம். போலேயானவற்றிலே - போலே இருந்துள்ள 'பொய்ந்நின்ற', 'உயர்வற' என்ற இரண்டு திருப்பாசுரங்களிலே.

2. பெரியதிருமொழி, 6. 1: 5.



சுருக்கமாய் [1] "ஓம் என்னும் இது ஓர் எழுத்து" என்று சொல்லுகிற படியே ஒரெழுத்தாக இருக்கிற பிரணவம் போலேயும், அதுக்கு ஓர் உரு போலே - [2] "எல்லா ஒலிகட்கும் அந்தப் பிரணவத்திற்கும் மூலமாக இருக்கின்ற அகரம்போலேயும்" என்கிறபடியே அந்தப் பிரணவத்திற்குச் சுருக்கமாக இருக்கின்ற அகாரம்போலேயும், ஆனவற்றிலே - திருவிருத்தத்திற்குச் சுருக்கமான அதன் முதல் திருப்பாசுரத்திலும், திருவாய்மொழிக்குச் சுருக்கமான அதன் முதல் திருப்பாசுரத்திலும்,

[3] இமையோர் அதிபதி - திருவிருத்தத்தில் "இமையோர் தலைவா" என்றும், திருவாய்மொழியில் "அயர்வறும் அமரர்கள் அதிபதி" என்றும் நித்தியசூரிகளாலே சேவிக்கப்படுமதாய் எல்லாப்பொருள்கட்கும் அறப்பெரியதாய் இருக்கும் பரம்பொருளின் சொரூபத்தையும், [4] அடியேன் மனனே - திருவிருத்தத்தில் "அடியேன்" என்றும், திருவாய்மொழியில் "என்மனனே" என்றும் அடிமையாய்ப் பரிசுத்தமான அந்தக்கரணத்தையுடையதாய் இருக்கும் ஆன்ம சொரூபத்தையும், [5] பொய் மயர்வு - திருவிருத்தத்தில் "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாஒழுக்கும் அழுக்கு உடம்பும்" என்றும், திருவாய்மொழியில் "மயர்வு" என்றும் அறிவின்மை முதலான விரோதி சொரூபத்தையும், [6] பிறந்து அருளினன் - திருவிருத்தத்தில் "உயிரளிப்பான் எந் நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்" என்றும், திருவாய்மொழியில் "மயர்வற மதி நலம் அருளினன்" என்றும் உலகத்தைக்

1. "ஓமித்யேகாக்ஷரம்"
என்பது, பிரமாணம்.

2. "தஸ்ய ப்ரக்ருதிலீநஸ்ய"
என்பது, பிரமாணம்.

3. 'இமையோர் அதிபதி' இதனால் பரஸ்வரூபம் - இறைநிலை உணர்த்தப்படுகின்றது. "இமையோர் தலைவா" என்பது திருவிருத்தம். "அமரர்கள் அதிபதி" என்பது திருவாய்மொழி. இரண்டனையும் சேர்த்து 'இமையோர் அதிபதி' என்கிறார்.

4. "அடியேன் மனனே" என்னுமிதனால் ஆன்மசொரூபம் உணர்த்தப்படுகிறது. 'அடியேன்' என்றது திருவிருத்தம்; 'மனனே' என்றது திருவாய்மொழி.

5. "பொய்மயர்வு" என்னுமிதனால் விரோதி சொரூபம் (தடைநிலை) உணர்த்தப்படுகிறது. 'பொய்' என்றது திருவிருத்தம்; 'மயர்வு' என்றது திருவாய்மொழி.

6. "பிறந்து அருளினன்" என்னுமிதனால் உபாயசொரூபம் உணர்த்தப்படுகிறது. 'பிறந்து' என்றது, திருவிருத்தம்; 'அருளினன்' என்றது, திருவாய்மொழி.

காக்கும் பொருட்டுப் பல அவதாரங்களைச் செய்த சர்வேச்வரனுடைய திருவருளே உபாயம் என்று உபாய சொரூபத்தையும், [1] விண்ணப்பம் தொழுது எழு - திருவிருத்தத்தில் "செய்யும் விண்ணப்பம்" என்றும், திருவாய்மொழியில் "தொழுது எழு" என்றும் இறைவன் விஷயத்தில் முக்கரணங்களாலும் செய்யும் கைங்கரியமே மேலான புருஷார்த்தம் என்று பலத்தின் சொரூபத்தையும், என்ற பஞ்சகத்தோடே - ஆகக் கொண்டு சுருக்கிச் சொன்ன ஐம்பொருளோடே,

[2] அவித்யாதி ஸ்வரூபம் ஸ்வபாவம் - "பொய்ந்நின்ற ஞானம்" என்பனபோன்றவைகளாலே அறிவின்மை முதலானவற்றைச் சொல்லுகிற அளவில், தோன்றுதல் அழிதல் முதலியவற்றையுடைத்தாகையாலே இல்லது என்னும் சொற்குப் பொருளான சரீரத்தில் ஆன்மபுத்தியும், சரீரமே ஆன்மா என்று எண்ணும் எண்ணம் அடியாக உலகவாழ்விலே உளதான தீவினைகளைச் செய்தலும், அத்தீவினைகள் அடியாக வரக்கூடியதான தீண்டா வழும்பும் செந்நீரும் சீயும் நரம்பும் செறிதசையும் வேண்டா நாற்றமிகும் உடலின் சம்பந்தமும் என்ற இவற்றினுடைய சொரூபங்களும், விபரீத ஞானத்திற்குக் காரணமாயிருத்தல், இவ்வுலக வாழ்விற்குக் காரணமாயிருத்தல், சொரூபத்தை மறைத்தல், மேலே மேலே வரக்கூடியனவற்றிற்கு முன்னையது முன்னையது காரணமாகவிருத்தல், "இனி யாம் உறுமை" என்கையாலே அவற்றினுடைய அநாதியாக இருக்கும் தன்மை, ஓர் காரணம் பற்றிவருதல், "மயர் வற மதி நலம் அருளினன்" என்கையாலே நன் ஞானத்தினுல் அவை விலக்கக் கூடியனவாக இருத்தல் முதலான தன்மைகளும்,

ஆத்ம ஈச்வர பந்தம் - திருவிருத்தத்தில் "இமையோர் தலைவா - அடியேன்" என்றும், திருவாய்மொழியில் "அதிபதி - அடிதொழுது" என்றும் கூறுகையாலே ஆன்மாவிற்கும் ஈச்வரனுக்கும் உண்டான சேஷ சேஷி பாவ சம்பந்தமும்,

---

1. "விண்ணப்பம் தொழுது எழு" என்னுமிதனுல் புருஷார்த்த சொரூபம் (பலம்) உணர்த்தப்படுகிறது. ஆக, 'ரஹஸ்யத்துக்கு' என்றது முதல் 'பஞ்சகத்தோடே' என்றது முடிய, முதல் திருப்பாசுரங்களில் ஐம்பொருள்களையும் உணர்த்தியிருக்கும் முறையைத் தெரிவித்தார். பஞ்சகம் - ஐம்பொருள். 'விண்ணப்பம்' என்றது திருவிருத்தம்; 'தொழுது எழு' என்றது திருவாய்மொழி.

2. இனி, 'அவித்யாதி சொரூபம்' முதலானவற்றை உணர்த்தியிருக்குமாற்றையும் தெரிவிக்கிறுர் 'அவித்யாதி' என்று தொடங்கி.



ரக்ஷணக்ரமம் - திருவிருத்தத்தில் "உயிர்அளிப்பான்எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்" என்றும், திருவாய்மொழியில் "மயர் வற மதி நலம் அருளினன்" என்றும் சொல்லுகையாலே, பல அவதாரங்களைச் செய்து பாதுகாக்கும் படியும், பிறப் பிறப்புகட்குக் காரணமான அறிவின்மையைப் போக்கி உய்வதற்குக் காரணமான ஞான பக்திகளைத் தன் பேரருளாலே தந்த படியும் ஆன இறைவனுடைய பாதுகாக்கும் முறையும்,

குண விக்ரஹ [1] விபூதியோகம் - "உயர் வற உயர் நலம்" "துயர் அறு சுடர் அடி" என்கையாலே குணங்களும் திருமேனியும், "இமையோர் தலைவா" என்றும், "அயர்வறும் அமரர்கள் அதிபதி" என்றும் சொல்லுகையாலே உலகங்களையுடையனுயிருத்தலும், [2] ததீய அபிமானம் - "இமையோர்" என்றும், "அயர் வறும் அமரர்கள்" என்றும் அந்த நித்தியசூரிகளை முன்னிடுகையாலே அடியார்கள் அபிமானமும்,

உபதேச விஷயம்-"நின்று கேட்டருளாய்" என்றும், "தொழுது எழு என் மனனே" என்றும் சொல்லுகையாலே மனம் போலே தனக்கு அடங்கியுள்ள ஈச்வரனும் அப்படி அடங்கியிருப்பவர்களும் உபதேசத்திற்கு விஷயம் என்னுமதுவும்,

அந்யாபதேச ஹேது ஆதிகளும் - "நலம் அருளினன்" என்று பக்தியைத் தந்தான் என்கையாலே, தாயார் கூற்றுகவும் தோழி கூற்றுகவும் தலைவி கூற்றுகவும் இங்ஙனம் அந்யாபதேச முறையில் திருப்பாசுரங்கள் அவதரிப்பதற்குக் காரணமான பக்தி முதலானவைகளும், சங்க்ருஹீதம் - சுருக்கமாகச் சொல்லப்பட்டன என்கை.

'ஹேது ஆதிகளும்' என்ற இடத்தில் 'ஆதி' என்பதனுலே வேதாந்தங்களின் சுருக்க தாத்பர்யங்களான பொருள்கள் பலவும் இவற்றிலே சுருக்கமாகச் சொல்லப்பட்டன என்னுமிடம் காட்டப்பட்டது. (53)

## 213

[3] 'அடிதொழுது எழு' என்ற இதிலே, வஸ்துநிர்த்தேச நமஸ்கார ஆசீஸ்ஸுக்களும் உண்டு.

என்பது, சூத்திரம்.

---

1. இங்குள்ள 'யோகம்' என்ற சொல்லை, குணம் விக்கிரஹம் என்பனவற்றேடும் கூட்டுக, யோகம் - கூடியிருத்தல்.

2. ததீயர் - அடியார்கள்.

3. இச்சூத்திரத்தை முறை நிரல் நிறையே கொள்க. 'அடி' என்ற இதிலே வஸ்து நிர்த்தேசமும், 'தொழுது' என்ற இதிலே நமஸ்காரமும், 'எழு' என்ற இதிலே ஆசீசும் உண்டு என்று கூட்டுக. ஆசீ: - வாழ்த்து.

வியாக் :— நூல் இடையூறு இன்றி இனிது முடிதற்காகவும் விரிவு அடைதற்காகவும் நூலின் தொடக்கத்தில் சொல்லப்படும் வாழ்த்து, வணக்கம், வருபொருள் உரைத்தல் ஆகிற மங்களங்கள் செய்தல், இப்பிரபந்தத்தில் உண்டோ ? என்னும் வினவிற்கு விடை அருளிச்செய்கிருர் இச் சூத்திரத்தால்.

அடி என்ற இதிலே வஸ்துநிர்த்தேசம் - "துயர்அறு சுடர் அடி" என்கையாலே வருபொருள்உரைத்தலும், தொழுது என்ற இதிலே நமஸ்காரம் - "தொழுது" என்கையாலே வணக்கமும், எழு என்ற இதிலே ஆசீஸ் - "எழு" என்கையாலே வாழ்த்தும், உண்டு-உண்டு என்றபடி.

நாம் இப்படி ஒரு பிரபந்தம் செய்யவேண்டும் என்று கருதியிருந்து இவர் இந்நூலைச் செய்தது அல்லாமையாலே, நிரம்பின ஏரி நெளிக்குமாறு போலே, நிமிகிற வாய்கரைமிடைந்து புறப்பட்ட சொற்கள், இவர் திருப்பாசுரங்களாலே உலகத்தைத் திருத்தக் கோலுகிற சர்வேச்வரன் நினைவாலே எல்லா இலக்கணங்களும் நிரம்பின்தாய்த் தலைக்கட்டின பிரபந்தமாகையாலே, வாழ்த்து வணக்கம் வருபொருள்உரைத்தல் ஆகிற இம் மங்களங்களும் கோல்விழுக் காட்டாலே பலித்தன ஆதலின் 'அடி தொழுது எழு என்ற இதிலே இவையும் சொல்லப்பட்டன' என்னுது 'உண்டு' என்கின்றனர். (54)

## 214

[1] சாதுசனம் நண்ணு, மயர்வற மாசறுக்கும்
தெருள்கொள்ளப் பத்தராவர், அடிமை அற உரிய,
நோய்கள் அறுக்கும் உடைந்து, ஏற்றரும் வானின்,
தாளின்கீழ் அடிக்கீழ், இன்பக்கதிபயக்கும், ஊடுபுக்கு
மூவுலகும் உருகாநிற்பர் என்னும் சாம்யத்தாலே
வாச்யன் பத்திலுய தோற்றம்போலே, தோற்றங்கள்
ஆயிரத்தின் பத்துப்பத்தான இதின் ஆவிர்ப்பாவம்.
என்பது, சூத்திரம்.

வியாக் :—இனி மேல் இப்பிரபந்தம் பத்துப் பத்தாக அவதரித்த தன்பயனைத் திருஷ்டாந்தத்தோடு அருளிச்செய்கிருர் இச் சூத்திரத்தால்.

1. நல்லார்கள்தம்மை நலம்புரிந்து காத்தல், பொல்லாரைப் பொன்று நெறி போக்கல் முதலிய காரியங்களைச் செய்வதற்காக இறைவன் பத்து அவதாரங்களை எடுத்தது போன்று, இத்திருவாய்மொழியும் பத்துப் பத்தாக அவதரித்தது என்கிருர் இச்சூத்திரத்தால்.



சாதுசனம் - [1] "சாதுசனத்தை நலியும் கஞ்சனைச் சாதிப்பதற்கு" என்றும், [2] "நல்லார்கள் தம்மை நலம் புரிந்து காத்தற்கும் பொல்லாரைப் பொன்றி நெறி போக்கற்கும் இந்த யுகம்தோறும் இசைந்து நான் பிறப்பன்" என்றும் வருகின்றவாறே, நல்லோர்களைப் பாதுகாத்தற்கும் தீயோர்களை அழிப்பதற்குமாக அவன் அவதரித்தாற் போலே, இத் திருவாய்மொழியும், நண்ணு - [3] "நண்ணு அசுரர் நலிவெய்த நல்ல அமரர் பொலிவெய்த" என்கிறபடியே, பகவானிடத்தில் பக்தி இல்லாத எதிரிகளான அசுரத் தன்மை வாய்ந்தவர்கள் மண்ணுண்ணவும் பகவானிடத்தில் பக்திஉள்ளவர்களான தெய்வத் தன்மை வாய்ந்தவர்கள் வாழவும் அவதரித்தலாலும்,

மயர்வற - [4] "மயர்வற மதிநலம் அருளினன்" என்கிறபடியே அவன் அறிவின்மையைப் போக்கி ஞானத்தையும் பக்தியையும் கொடுக்குமாறுபோலே, இத் திருவாய்மொழியும், மாசறுக்கும் தெருள்கொள்ள பத்தர் ஆவர் - [5] "ஒலி புகழ் ஆயிரத்து இப்பத்து உள்ளத்தை மாசறுக்குமே" என்கிறபடியே, மனத்திற்குக் குற்றமான அறிவின்மையைப் போக்கி, [6] "தெருள்கொள்ளச் சொன்ன ஓராயிரம்" என்றும், [7] "தூய ஆயிரத்து இப்பத்தால் பத்தர் ஆவர்" என்றும் சொல்லுகிறபடியே ஞானத்தையும் பக்தியையும் கொடுத்தலாலும்,

அடிமைஅற - [8] "அடிமை அறக்கொண்டாய்" என்கிறபடியே அவன் வேறுஒருவர்க்குஅன்றித் தனக்கேஉரியஅடியவனுக அங்கீகரிக்குமாறு போலே, இத் திருவாய்மொழியும், உரிய - [9] "உரிய தொண்டர்ஆக்கும் உலகம் உண்டாற்கே" என்கிறபடியே, வேறு ஒருவருக்கு அன்றி அவனுக்கே உரிய அடியவர் ஆக்குதலாலும்,

நோய்கள் அறுக்கும் - [10] "அறிந்தனர் நோய்கள் அறுக்கும் மருந்தே" என்கிறபடியே, அவன் பிறப்பிறப்பாகிற நோய்க்கு மருந்து

1. திருவாய். 3. 5: 5.
2. பரித்ராணுய ஸாதூநாம் விநாஶாயச துஷ்க்ருதாம்
தர்மஸம்ஸ்த்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே.
என்பது ஸ்ரீ கீதை, 4: 8.
3. திருவாய். 10. 7: 5.
4. திருவாய். 1. 1: 1.
5. திருவாய். 5. 2: 11.
6. திருவாய். 2. 10: 11.
7. திருவாய். 6. 4: 11.
8. திருவாய். 4. 9: 6.
9. திருவாய். 6. 9: 11.
10. திருவாய். 9. 3: 3.

ஆனுற்போலே, இத் திருவாய்மொழியும், உடைந்து - [1] "உடைந்து நோய்களை ஓடுவிக்குமே" என்கிறபடியே இவ் உலக வாழ்வால் உளவாய எல்லாப் பாவங்களும் உருமாய்ந்து போம்படி செய்கை யாலும்,

ஏற்றரும் - [2] "ஏற்றரும் வைகுந்தத்தை அருளும் நமக்கு" என்கிறபடியே தங்கள் முயற்சியால் அடைய முடியாத பரமபதத்தை அவன் கொடுக்குமாறுபோலே, இத் திருவாய்மொழியும், வானின் - [3] "வானின்மீது ஏற்றி அருள் செய்து" என்கிறபடியே பரமபதம் அடைதலைச் செய்வித்தலாலும்,

தாளின்கீழ் - [4] "தன் தாளின்கீழ்ச்சேர்த்து அவன் செய்யும் சேமத்தை" என்கிறபடியே அவன் தன் பாதத்திற்கு அணைபோன்று திருவடிகளின் கீழே சேர்த்துக்கொள்ளுமாறு போன்று, இத் திருவாய் மொழியும், அடிக்கீழ் - [5] "ஆயிரத்துள் இப்பத்தால் அருளி அடிக்கீழ் இருத்தும்" என்கிறபடியே அவன் திருவடிகளின் கீழே சேர்த்து வைத்தலாலும்,

இன்பக்கதி - [6] "இன்பக்கதிசெய்யும் தெளிவுற்ற கண்ணனை" என்கிறபடியே தன்னைச் சேர்ந்தார்க்குத் தன்னுடைய அநுபவமாகிற எல்லை இல்லாத ஆனந்தத்தோடு கூடிய பேற்றினை அவன் கொடுக்கு மாறுபோலே, இத் திருவாய்மொழியும், இன்பம் பயக்கும் - [7] "எங் ஙனே சொல்லிலும் இன்பம் பயக்குமே" என்கிறபடியே தன்னைக் கற்கும் மக்களுக்குப் பகவானுடைய அநுபவமான ஆனந்தத்தை உண்டாக்குதலாலும்,

ஊடுபுக்கு - [8] "ஊடுபுக்கு எனது ஆவியை உருக்கி உண்டிடு கின்ற நின் தன்னை" என்கிறபடியே அவன் தன்னை அநுபவிக்க இழிந்தாரை நீர்ப்பண்டம் ஆம்படி உருக்குமாறுபோலே, இத் திரு வாய்மொழியும், மூஉலகும் உருகாநிற்பர் - [9] "ஒன்பதோடு ஒன்றுக்கும் மூவுலகும் உருகுமே" என்றும், [10] "ஊற்றின்கண் நுண்மணல்போல் உருகாநிற்பர் நீராய்" என்றும் சொல்லுகிறபடியே தன்னை அநு பவிக்க இழிந்தாரை நீர்ப்பண்டம் ஆக்குதலாலும்,

1. திருவாய். 1. 7: 11.
2. திருவாய். 7. 6: 10.
3. திருவாய். 8. 4: 11.
4. திருவாய். 7. 5: 10.
5. திருவாய். 8. 8: 11.
6. திருவாய். 7. 5: 11.
7. திருவாய். 7. 9: 11.
8. திருவாய். 5. 10: 10.
9. திருவாய். 9. 5: 11.
10. திருவாய். 6. 8: 11.



என்னும் சாம்யத்தாலே - என்று சொல்லப்படுகிற இத்தகைய ஒப்புமையாலே, [1] வாச்யன் பத்தினைய தோற்றம் போலே - இத் திரு வாய்மொழியில் சொல்லப்பட்ட பொருளான சர்வேச்வரனுடைய [2] "பத்தினைய தோற்றம்" என்கிற பத்து அவதாரம் போலே, தோற் றங்கள் ஆயிரத்தின் பத்துப் பத்தான இதின் ஆவிர்ப்பாவம் - [3] "தோற் றங்கள் ஆயிரம்" என்கிற இதனுடைய பத்துப் பத்தான தோற்றம் என்கை.

இதனுல், இதன் பொருளான ஈச்வரனேடு பல படியாலும் ஒப்புமை உடைத்தாகையாலே அவன்தான் உலகத்தைக் காக்கும் நிமித்தம் பத்து அவதாரமாக அவதரித்தாற்போலே, இத் திருவாய் மொழியும் உலகத்தைக் காக்கும் நிமித்தமாகப் பத்துப் பத்தாக அவ தரித்தது என்றபடி. (55)

## 215

[4] 'ஐந்தினேடு, ஒன்பதோடு, ஒருபத்து' என்னு மவை போலே, 'நூறே சொன்ன, பத்து நூறு, ஓரா யிரம்' என்றதும் ஸாபிப்பிராயம்.

என்பது, சூத்திரம்.

வியாக்:— இனி, இப்பத்துக்களையும் இப்பத்துக்களின் தொகுதி யான இப்பிரபந்தத்தையும் ஆழ்வார் சிறப்பித்துப் பேசின திருப்பா சுரங்களில் அவருடைய திருவுள்ளக்கருத்தினை, திருஷ்டாந்தத் தோடு அருளிச்செய்கிருர் இச் சூத்திரத்தால்.

ஐந்தினேடு என்னுமது போலே - முன்னில் ஐந்து திருப்பாசுரங் களுக்கு ஒருகருத்தும் பின்னில் ஐந்து திருப்பாசுரங்களுக்கு ஒரு கருத்து மாகையாலே [5] "ஐந்தினேடு ஐந்தும் வல்லார்" என்னுமது போலேயும், ஒன்பதோடு என்னுமது போலே - ஒன்பது திருப்பா சுரங்களுக்கு ஒருகருத்தும் ஒருதிருப்பாசுரத்துக்கு ஒருகருத்து மாகையாலே [6] "ஒன்பதோடு ஒன்றுக்கும்" என்னுமதுபோலேயும்,

1. வாச்யன் - சொல்லப்பட்ட பொருள்; இறைவனுகிய ஸ்ரீமந் நாராயணன்.
2. திருச்சந்தவிருத்தம், 79.
3. திருவாய். 6. 8: 11.
4. ஐந்தினேடு என்னுமதுபோலே, ஒன்பதோடு என்னுமதுபோலே, ஒருபத்து என்னுமதுபோலே என்றும், நூறே சொன்ன என்றதும், பத்து நூறு என்றதும், ஓராயிரம் என்றதும் என்று 'என்னுமதுபோலே, என்றதும்' என்னும் இரண்டு சொற்களையும் முன்னும் கூட்டுக. சாபிப்பிரா யம் - ஒருகருத்தை உட்கொண்டது.
5. திருவாய். 10. 2: 11.
6. திருவாய். 9. 5: 11.

ஒருபத்து என்னுமதுபோலே - பத்துத் திருப்பாசுரங்களுக்கும் சேர ஒரு கருத்து ஆகையாலே [1] "பாடல் ஓராயிரத்துள் இவையும் ஒரு பத்து" என்னுமதுபோலேயும், நூறே சொன்ன என்றதும் - [2] "நூறே சொன்ன ஓராயிரம்" என்று கிழி கிழியாகக் கொடுப்பாரைப்போலே நூறு நூறாகச் சொன்ன ஆயிரம் என்றும், பத்து நூறு என்றதும் - [3] "பத்து நூற்றுள் இப்பத்து" என்று பத்துநூறு என்றும் இப்படிப் பத்துக்களைப் பிரித்துச் சொன்னதும், ஓராயிரம் என்றதும் - [4] "தெரியச் சொன்ன ஓராயிரம்", [5] "மிக்க ஓராயிரம்", [6] "அவாவில் அந்தாதிகளால் இவை ஆயிரமும்" என்று ஆயிரத்தையும் சேரச்சொன்னதும், சாபிப்பிராயம் - பத்துக்கள்தோறும் வெவ்வேறு கருத்தாயும் ஆயிரத்துக்கும்சேர ஒருகருத்தாயும் இருக்கும்படியை நினைத்து ஆகையாலே கருத்துடை மொழிகளாகும் என்கை. (56)

## 216

[7] பாட்டுக்குக் கிரியையும் பத்துக்குக் கருத்தும்
போலே, நூற்றுக்கு உபதேசப்பத்து.

என்பது, சூத்திரம்.

**வியாக் :—** இனி, பத்துக்கள்தோறும் அறிவுரையான ஒவ்வொரு திருப்பதிகம் முக்கியமானதாய், அவ்வப் பத்துக்களுக்கு அவ்வத் திருப்பதிகத்திலே நோக்காக இருக்கும் படியைத் திருஷ்டாந்தத்தோடு அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

---

1. திருவாய். 3. 4: 11.
2. திருவாய். 9. 4: 11.
3. திருவாய். 6. 7: 11.
4. திருவாய். 6. 9: 11.
5. திருவாய். 7. 6: 11.
6. திருவாய். 10. 10: 11.

"நூறே சொன்ன" "பத்து நூறு" என்று கூறியதன் கருத்தைப் பின்வருகின்ற 219 முதல் 228 முடிய உள்ள சூத்திரங்களில் காண்க. "தெரியச்சொன்ன ஓராயிரம்" "மிக்க ஓராயிரம்" என்றதன் கருத்தை 234-ஆம் சூத்திரத்தால் உணர்க. "ஐந்தினோடு ஒன்பதோடு" "ஒரு பத்து" என்று கூறியதன் கருத்தை அருளிச்செய்திலர்; ஆசாரியர் மூலமாக அறிந்து கோடல் வேண்டும் என்பது பேராசிரியர் திருவுள்ளம்.

7. ஒவ்வொரு பத்திலும் உபதேசம் செய்கின்ற திருப்பதிகம் ஒன்று உண்டு. அந்தத் திருப்பதிகமே, அந்த நூறு திருப்பாசுரங்களிலே முதன்மையை யுடையது என்கிறார் இச்சூத்திரத்தால். அதனைத் திருஷ்டாந்த மூலம் விளக்குகிறார் 'பாட்டுக்குக் கிரியை போன்றும் பத்துக்குக் கருத்துப் போன்றும்' என்று. கிரியை - வினைமுற்று. 'பத்து' என்றது, பத்துத் திருப்பாசுரங்களையுடைய திருப்பதிகத்தை.



பாட்டுக்குக் கிரியை போலே - ஒரு பாட்டு ஆனால் பயனிலையோடே முடியவேண்டுகையாலே பாட்டுக்கள்தோறும் பயனிலையைக் காட்டும்சொல் முக்கியமாக இருக்குமாறுபோலேயும், பத்துக்குக் கருத்து போலே - [1] ஒவ்வொரு திருப்பதிகத்திற்குப் பரத்துவம், வழிபாட்டினைப் பெறுமவனாதல், எளியனாதல், குற்றங்களைப்பொறுக்கும் பொறையுடையனாதல் என்பனபோன்று தனித்தனியே கருத்துக்கள் ஆகையாலே, பத்துத் திருப்பாசுரங்களுக்குக் கருத்தான நிதானம் சொல்லும் திருப்பாசுரம் முக்கியமாக இருக்குமாறுபோலேயும், நூற்றுக்கு உபதேசப் பத்து - [2] நூறு திருப்பாசுரங்களுக்குப் பரோபதேசத்தைச்செய்யும் பத்துத்திருப்பாசுரங்கள் முக்கியமாகஇருக்குமென்கை.

இதனால், பாட்டுக்களுக்குப் பயனிலையிலும், பத்துத்திருப்பாசுரங்களுக்கு நிதானம் சொல்லும் திருப்பாசுரத்திலும் கருத்தாக இருக்குமாறுபோன்று, நூறு திருப்பாசுரங்களுக்கும் பரோபதேசத்தைச் செய்யும் பத்துத்திருப்பாசுரங்களிலே கருத்தாக இருக்கும் என்றதாயிற்று. [3] "பிணங்கி அமரர்பிதற்றும், குணங்கெழு கொள்கையினானே" என்கிறபடியே பேரளவுடையரான நித்தியசூரிகள் தாங்கள் தாங்கள் அநுபவிக்கின்ற குணங்களின் ஏற்றத்தாழ்வுகளைச் சொல்லிச் சரச விவாத கோலாகலம் பண்ணும்படி இருக்கிற அவனுடைய முதன்மை எளிமை முதலியவற்றோடு கூடிய குணவிசேடங்களைத் தனித்துத் தம்மால் அநுபவித்துத் தலைக்கட்ட ஒண்ணாமையாலே [4] "அடியார்கள் குழாங்களை - உடன் கூடுவது என்று கொலோ" என்கிறபடியே கூட்டரான சுவையுணர்வாரைத் தேடின அளவில், கிடையாதபடி அவர்கள் சேய்ஞராக, அண்ணியரான இவ்வுலக மக்களுடைய தாழ்ந்த குணங்களைப்

---

1. 'உயர்வறவுயர்நலம்' என்று தொடங்கும் திருப்பதிகம் பரத்துவத்திலே நோக்கு. இதனைத் தெரிவிப்பது முதல் திருப்பாசுரம். இரண்டாம் திருப்பதிகம், வழிபாடுபெறுமவனாதலிலே நோக்கு. இதனைத் தெரிவிப்பது பத்தாம்திருப்பாசுரம். மூன்றும் திருப்பதிகம் எளிமையில் நோக்கு. இதனைத் தெரிவிப்பது, முதல் திருப்பாசுரம். நான்காம் திருப்பதிகம் பொறையுடைமையில் நோக்கு. இதனைத் தெரிவிப்பது ஏழாம் திருப்பாசுரம்.

2. ஒவ்வொரு பத்திலும் பரோபதேசம் செய்யும் திருப்பதிகங்கள் கீழே காட்டப்படுகின்றன:

முதற்பத்தில் - வீடுமுன் முற்றவும். இரண்டாம்பத்தில் - கிளரொளியிளமை. மூன்றும்பத்தில் - சொன்னால் விரோதம். நான்காம் பத்தில் - ஒன்றும் தேவும். ஐந்தாம்பத்தில் - பொலிக பொலிக. ஆறும் பத்தில் - நல்குரவும் செல்வும். ஏழாம்பத்தில் - இன்பம் பயக்க. எட்டாம்பத்தில் - எல்லியும் காலையும். ஒன்பதாம்பத்தில் - மாலை நண்ணி. பத்தாம்பத்தில் - கண்ணன் கழலிணை.

3. திருவாய். 1. 6: 4.
4. திருவாய். 2. 3: 10.

பாராமல், பகவானுடைய குணங்களிலே மூட்டித் திருத்திக் கூட்டிக் கொள்கை தேட்டமாய் உபதேசத்திலே ஒருப்படுகையாலே, அதிலே நோக்காக வேண்டுமாகையால் 'நூற்றுக்கு உபதேசப் பத்து' முக்கியம் என்கிறார். (57)

## 217

[1] பகவத் பக்த பரங்கள், ஆச்ரயணவிதி சேஷங்கள்.

என்பது, சூத்திரம்.

வியாக் :— இத்திருவாய்மொழியில் பகவானுடைய பக்தர்களைப் பற்றி வருகின்ற திருப்பாசுரங்களுக்குக் கருத்து யாது? என்னும் வினவிற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

பகவத் பக்தபரங்கள் - "பயிலுஞ்சுடரொளி" முதலான, பாகவதர்களைப்பற்றிக்கூறுகிற திருவாய்மொழிகள், [2] "சுவர்க்கத்தை விரும்புகிறவன் ஜ்யோதிஷ்டோமம் என்ற யாகத்தால் யாகத்தைச் செய்யக் கடவன்" என்கிற விதிக்குப் பிரயாஜம் முதலிய யாகங்களைப் பற்றிக் கூறும் விதிகள் உறுப்புக்களாய் அவற்றினுடைய செய்கையோடே அது பலத்தின் அளவாய்த் தலைக்கட்டுமாறுபோலே, ஆச்ரயணவிதி சேஷங்கள் - [3] "திருநாரணன்தாள் காலம் பெறச் சிந்தித்து உய்ம்மினோ" என்றும், [4] "நலம் அந்தம் இல்லதோர் நாடு புகுவீர், பலமுந்து சீரில் படிமின் ஓவாதே" என்றும் விதிக்கப்படுகின்றபடியே, பகவானை அடைதல், பாகவதர்களை அடைதலை விட்டு நீங்கித் தலைக்கட்டாமையாலே, பகவானை அடையும்படி விதிக்கும் விதிக்கு, பாகவதர்களை வணங்கும் வணக்கங்கள் உறுப்புக்கள் என்கை.

---

1. இச்சூத்திரத்தை, ஆச்ரயண விதிக்கு, பகவத் பக்த பரங்கள் சேஷங்கள் என்று கூட்டுக. பகவத் பக்த பரங்கள் – பகவானுடைய அடியார்களைப்பற்றிக் கூறுகின்ற திருப்பாசுரங்கள். சேஷங்கள் - உறுப்புக்கள்.

2. "ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்ககாமோ யஜேத" என்பது, ஆப. சிரௌ. 8: 2.

"ஜ்யோதிஷ்டோமம் என்ற யாகத்திற்கு விதி கூறப்படுகின்ற வேதத்தில் பிரயாஜம் முதலிய சிறு யாகங்களுக்கும் விதிகள் கூறப்பட்டிருக்கின்றன; பிரயாஜம் முதலிய யாகங்களில் அநுஷ்டானம் இல்லையாகில், ஜ்யோதிஷ்டோமம் முதலிய யாகங்களைச் செய்வதில் பயன் இல்லை; ஆதலால், பிரயாஜம் முதலிய யாகங்களின் விதிகள் ஜ்யோதிஷ்டோம விதிக்கு அங்கமாகக் கொள்ளப்படுகிறது. அது போன்று, பாகவதர்களை வணங்கும் வணக்கத்தை, பகவானை வணங்கும் வணக்கத்திற்கு அங்கமாக்கிக்கொள்ள வேண்டும் என்பது கருத்து.

3. திருவாய். 4. 1: 1.  4. திருவாய். 2. 8: 4.



அன்றிக்கே, [1] பரோபதேசத்தைச் செய்கிற இத்திருவாய்மொழியில் பகவானுடைய குணங்களையும் அடியார்களுடைய குணங்களையும் கூறுதற்குப் பயன் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால் என்னவுமாம். அதாவது, பகவானுடைய குணங்களைப்பற்றியும் அவனுடைய அடியார்களான உயிர்களுடைய குணங்களைப்பற்றியும் சொல்லுகிற திருவாய்மொழிகள், அடையப்படுகிற இறைவனைப்பற்றியும் அடையும் உயிர்களைப்பற்றியும் சொல்லுமவை ஆகையாலே, அடையும்படி விதிக்கிற விதிக்கு, உறுப்புக்களாமத்தனை என்னுதல். (58)

## 218

[2] பரத்வ காரணத்வ வியாபகத்வ நியந்த்ருத்வ காருணிகத்வ சரண்யத்வ சக்தத்வ சத்யகாமத்வ ஆபத்சகத்வ ஆர்த்திஹரத்வ விசிஷ்டன், மயர்வை அறுக்க, தத்வவேதந மறப்பு அற்று, ஜ்ஞப்தி பல முக்தி தலை சேர நிஷ்கர்ஷித்து, மோக்ஷ பல விருத்தி செய்ய அர்த்தித்து, புருஷார்த்த பல அந்யருசி ஒழிந்து, விரக்தி பல ராகம் கழியமிக்கு, பிரேமபல உபாயத்தே புகுந்து, சாதநபல உபகாரக் கைம்மாறு இன்றி, கிருதஜ்ஞதாபல பிரதிகிருதமானத்தை உணர்ந்து, ஆத்மதர்சநபல பிராப்தி மரணுவதியாகப் பெற்று, காலாஸத்தி பல கதிக்குத் துணைகூட்டின தம்பேற்றை, பிறர் அறியப் பத்துத்தோறும் வெளியிடுகிறார்.

என்பது, சூத்திரம்.

---

1. இரண்டாவதாகக் கூறுகின்ற பொருளுக்கு, சூத்திரப் பொருளை ஆற்றொழுக்காகக் கொள்க.

2. ஒவ்வொரு பத்திலும், இறைவனுக்குள்ள குணங்களில் இந்த இந்தக் குணம் சொல்லப்படுகிறது என்பதும், அந்த அந்தக் குணத்தோடு கூடின இறைவன் ஒவ்வொரு பத்திலும் ஆழ்வார்க்கு உண்டாக்கின பேறு இன்னது என்பதும் இச் சூத்திரத்தில் சுருக்கமாகத் தெரிவிக்கப்படுகின்றன.

முதற் பத்தில் பரத்வம், இரண்டாம் பத்தில் காரணத்வம், மூன்றாம் பத்தில் வியாபகத்வம், நான்காம் பத்தில் நியந்திருத்வம், ஐந்தாம் பத்தில் காருணிகத்வம், ஆறாம் பத்தில் சரண்யத்வம், ஏழாம் பத்தில் சக்தத்வம், எட்டாம் பத்தில் சத்யகாமத்வம், ஒன்பதாம் பத்தில் ஆபத்சகத்வம், பத்தாம் பத்தில் ஆர்த்தி ஹரத்வம் என்னும் குணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இவற்றின் விளக்கத்தை மேலே வருகின்ற பத்துச் சூத்திரங்களில் காண்க. விசிஷ்டன் - கூடினவன்.

வியாக் :— இப்படிப் பத்துத்தோறும் உள்ள அர்த்தங்களைப் பரோபதேசத்துக்கு உறுப்பாக ஒருங்கவிட்டு, விரிவாக மேல் அருளிச் செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, பரத்துவம் முதலான குணங்களோடு கூடின சர்வேச்வரன் தமக்குப் பிறப்பித்த நிலை வேறுபாடுகளைப் பத்துத்தோறும் வெளியிடுகிறார் என்று சுருக்கமாக வாக்கியார்த்தம் அருளிச்செய்கிறார் இச் சூத்திரத்தால்.

பரத்வம் - எல்லாப் பொருள்கட்கும் மேலானவனாதல், காரணத்வம் - அந்த முதன்மைக்கு விளக்கமாம்படி எல்லாப் பொருள்கட்கும் காரணனாதல், வியாபகத்வம் - உலகத்தில் காரிய காரணங்களைப் போலன்றிக்கே முதற்காரணமும் தானே ஆகையாலே காரியமாக மாறின எல்லாப் பொருள்கள்உள்ளும் பரந்து தங்குகிறவனாதல், நியந்த்ருத்வம் - அங்ஙனம் பரந்திருக்கும் அப்பரப்புத்தான் ஆகாசத்தின் பரப்புப்போலன்றிக்கே உயிருக்குள் உயிராக இருக்கும் தன்மை காரணமாக ஆகையாலே எல்லாப்பொருள்களையும் நியமிக்கின்றவனாதல், காருணிகத்வம் - அந்தப் பரத்துவம் முதலான குணங்களைக் கண்டு வெருவவேண்டாதபடி பேரருளாளனாதல், சரண்யத்வம் - இப்படிப் பேரருளாளனாகையாலே எல்லாப்பொருள்களுக்கும் புகலிடனாதல், சக்தத்வம் - எல்லாப்பொருள்கட்கும் புகலிடமானவன் விருப்பு இல்லாதனவற்றை நீக்கி விருப்புள்ளனவற்றைக் கொடுத்தலுக்கு ஈடாம்படி அளவிலாத சக்தியையுடையனாதல், சத்யகாமத்வம் - அந்தச்சக்தியாலே என்றும் உள்ளவர்களாக ஆக்கப்படுகின்ற தேவியர், நித்தியசூரிகள், இவர்கள் முதலான பரிசனங்கள் முதலியனவுடையனாகையாலே சத்தியகாமனாதல், ஆபத்சகத்வம்- என்றும் உள்ள அந்தப் பேரின்பத்தில் கருத்து ஊன்றினவனாய் இருந்துவிடாமல் பிரளயம் முதலான ஆபத்துக்களிலே உபகாரத்தைச் செய்து இவ்வுலகத்தைக் காப்பாற்றுகையாலே ஆபத்திலே துணை செய்யுமவனாதல், ஆர்த்தி ஹரத்வம் - இப்படி ஆபத்திலே துணை செய்யுமவனாகையாலே இவ்வுலகவாழ்வாகிற தாபத்தாலே துன்பப்பட்ட அடியவர்களுக்குப் பிறவித் துன்பத்தை நீக்குமவனாதல், விசிஷ்டன் - இப்படிப் பத்துப் பத்துக்களாலும் சொல்லப்படுகிற பத்துக் குணங்களோடும் கூடியிருக்கின்ற சர்வேச்வரன், மயர்வை அறுக்க - "மயர் வற மதி நலம் அருளினன்" என்கிறபடியே பக்தியின் உருவத்தை அடைந்த ஞானத்தைக் கொடுத்தல் மூலமாக அறிவின்மையை வாசனையோடு போக்க,

[1] தத்வவேதந மறப்புஅற்று - அதனால் அவன்விஷய ஞானமாகிற உண்மை அறிவில் "மறப்பனோஇனியான்என்மணியை" என்கிறபடியே மறப்பு அற்று, [2] ஜ்ஞப்திபலமுக்தி தலைசேர நிஷ்கரிஷித்து- அந்தஞானத்தின் பலமான மோக்ஷத்தை "நின்செம்மாபாதபற்புத்தலை சேர்த்து" என்கிறபடியே சொரூபத்திற்குச்சேர்ந்ததாக அறுதியிட்டு, [3] மோக்ஷ பல விருத்தி செய்ய அர்த்தித்து - அந்த மோக்ஷத்தின் பலமான கைங்கர்யத்தை "வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்" என்கிறபடியே விரும்பி, [4] புருஷார்த்தபலஅந்ய ருசி ஒழிந்து - அந்தக் கைங்கர்யத்துக்குப் பலம் மற்றைப்பொருள்களிலே உள்ள ருசி நீங்குதலாகையாலே அந்தக் கைங்கர்யத்தின் பலமாக "ஐங்கருவிகண்ட இன்பம் - சிற்றின்பம் ஒழிந்தேன்" என்கிறபடியே மற்றைய பேறுகளில் ருசியைத் தவிர்ந்து, [5] விரக்திபல ராகம் கழியமிக்கு - அந்த இதர

---

1. *இனி, தாம் பெற்ற பேற்றினை ஒவ்வொரு பத்திலும் வெளியிடுகிறபடியைத் தெரிவிக்கிறார் 'தத்வவேதந' என்று தொடங்கி. தத்வவேதநம் - உண்மை அறிவு.*

*தத்துவ ஞானத்தில் மறப்பு இல்லாமையாகிற பேறு தாம் பெற்ற படியை முதற்பத்தில் வெளியிடுகிறார். "மறப்பனோ இனியான் என்மணியையே" (திருவாய். 1. 10: 10.) என்றதிலே நோக்கு.*

2. *இதனால், இரண்டாம் பத்தில் ஆழ்வார் பெற்றபேறு தெரிவிக்கப்படுகிறது. அதாவது, தம் சொரூபத்திற்குத் தகுதியாக மோக்ஷத்தை அறுதியிடுதலாகிற பேறு இதனால் தெரிவிக்கப்படுகிறது என்றபடி. இது, "எம் மா வீட்டுத் திறமும் செப்பம்" (திருவாய். 2. 9: 1.) என்ற திருப்பாசுரத்திலே நோக்கு. மோக்ஷம் என்பது தத்துவ ஞானத்தால் அடைய வேண்டுவதொன்றாகையாலும் மேல் பத்தில் தத்துவஞானம் பெற்றமை கூறப்பட்டமையாலும் 'ஜ்ஞப்திபலமுக்தி' என்கிறார். ஜ்ஞப்திபலமுக்தி - ஞானத்தின் பலனான மோக்ஷம். நிஷ்கரிஷித்து - அறுதி யிட்டு.*

3. *இதனால் மூன்றாம் பத்தில் தாம் பெற்ற பேறு தெரிவிக்கப்படுகிறது. இரண்டாம் பத்தில் அறுதியிட்ட மோக்ஷத்திற்குப் பலன் கைங்கர்யம் செய்தலாகையாலே அந்தக் கைங்கர்யத்தைப் பிரார்த்தித்தலாகிற பேறு மூன்றாம் பத்தில் தெரிவிக்கப் பெறுகிறது என்றபடி. இது, "ஒழிவில் காலமெல்லாம்" (திருவாய். 3. 3: 1.) என்ற திருப்பாசுரத்திலே நோக்கு. மோக்ஷ பல விருத்தி - மோக்ஷத்தின் பலனான கைங்கரியம். அர்த்தித்து - விரும்பி.*

4. *இதனால் நான்காம் பத்தில் தாம் பெற்ற பேறு தெரிவிக்கப்படுகிறது. அந்தக் கைங்கர்யத்திற்குப் பலன், உலக வாழ்க்கையிலே உள்ள மற்றைப் பொருள்களில் ருசி நீங்குதலாகையாலே, அங்ஙனம் நீங்கிய தன்மை கூறப்படுகிறது என்றபடி. இது, (திருவாய். 4. 9: 10.) ஆம் திருப்பாசுரத்திலே நோக்கு.*

5. *இதனால் ஐந்தாம் பத்தில் பேசப்படும் பேறு தெரிவிக்கப்படுகிறது. மேலே கூறப்பட்ட உலக வாழ்வில் விரக்திக்குப் பலன், பகவானிடத்தில் பக்தி மிகுதல் ஆதலால் அங்ஙனம் காதல் மிகுதலாகிற பேறு இதனால் தெரிவிக்கப்படுகிறது. இது, "கழிய மிக்கதோர் காதலள் இவள்" (திருவாய். 5. 5: 10.) என்ற திருப்பாசுரத்திலே நோக்கு. விரக்தி பல ராகம் - விரக்திக்குப் பலனான (பகவானிடத்தில்) ஆசை.*

விஷய விரக்திக்குப் பலமான பகவானிடத்தில் பக்தியானது "கழிய மிக்கதோர் காதல்" என்னும்படி மிக்கு, [1] பிரேமபல உபாயத்தே புகுந்து - அந்த எல்லை இல்லாத பக்தியின் பலமான, கால தாமதத்தைப் பொறுக்காமையால் வந்த பதற்றத்தாலே "அலர்மேல் மங்கை உறை மார்பா! உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்" என்று உபாயத்தைப்பற்றி,

[2] சாதநபல உபகாரக் கைம்மாறுஇன்றி - அந்த உபாயத்தின்பலமான உபகாரத்துக்குப் பிரதி உபகாரமாக "உதவிக்கைம்மாறு என்னுயிர்" என்கிறபடியே ஆன்மாவினைக் கொடுக்கத் தேடி, அந்த ஆன்மவஸ்து அவனுடையது என்று அறிகையாலே, "அதுவும் மற்று ஆங்கவன் தன்னது - எதுவும் ஒன்று இல்லை செய்வது இங்கும் அங்கே" என்கிறபடியே பிரதியுபகாரம் காணாமல் தடுமாறி, [3] கிருதஜ்ஞதாபல பிரதி கிருதமானத்தை உணர்ந்து - அந்தச்செய்ந்நன்றி

---

1. இதனால் ஆறாம் பத்தில் பேசப்படும் பேறு தெரிவிக்கப்படுகிறது. மேல் பத்தினால் கூறப்பட்ட எல்லை இல்லாத பக்திக்குப்பலன், உபாயமாக இருக்கும் இறைவனைப் பற்றுதலே யாதலால், அங்ஙனம் பற்றுதலாகிற பேறு இதனால் தெரிவிக்கப்படுகிறது. இது, "அகலகில்லேன் இறையும்" (திருவாய். 6. 10: 10.) என்ற திருப்பாசுரத்திலே நோக்கு. பிரேம பல உபாயம் - அந்தக் காதலுக்குப் பயன் உபாயமாக இருக்கின்ற இறைவனைப் பற்றுதல்.

2. இதனால் ஏழாம் பத்தில் கூறப்படும் பேறு பேசப் படுகிறது. மேல்பத்தில் கூறப்பட்ட சரணாகதியில் உபாயமாக இருக்கின்ற இறைவனாலே கிடைத்த பலனான உபகாரத்திற்குக் கைம்மாறாக ஆன்மாவினைக் கொடுக்கத் தேடி, அவ்வான்மாவும் அவனுடையதே என்று அறிகையாலே, கைம்மாறு காணாமல் தடுமாறுதலாகிற பேறு பெற்றமையைத் தெரிவிக்கிறார் என்றபடி. இது, "உதவிக்கைம்மாறு" (திருவாய். 7. 9: 10.) என்ற திருப்பாசுரத்திலே நோக்கு. சாதந பல உபகாரம் - இறைவனால் கிடைத்த பலனான உபகாரம். சாதநம் - இறைவன்.

3. இதனால் எட்டாம் பத்தில் பேசப் படுகின்ற பேறு தெரிவிக்கப்படுகிறது. மேல் பத்தில் பேசின செய்ந்நன்றி யறிதலுக்குப் பலமான பிரதியுபகாரமாக, பக்தியினாலே கலங்கிக் கொடுத்த ஆன்மாவின் தன்மையை உணர்தலாகிற பேறு பெற்றமையைத் தெரிவிக்கிறார் என்றபடி. இது, "தாள்களை எனக்கே" (திருவாய். 8. 1: 10.) "யானும் தானாய் ஒழிந்தானை" (8. 8: 4.) என்ற திருப்பாசுரங்களை நோக்கியது. கிருதஜ்ஞதா பல - செய்ந்நன்றி யறிதலுக்குப் பயனான. பிரதி கிருதமானம் - பிரதியுபகாரமாகக் கொடுக்கப்பட்ட ஆன்மாவின் தன்மையை.



அறிதலுக்குப் பலமான பிரதியுபகாரமாக "தோள்களை ஆரத் தழுவி என்னுயிரை அறவிலைசெய்தனன்" என்கிறபடியே பிரீதியாலே கலங்கிக் கொடுத்த ஆன்மாவினை "நின்ற ஒன்றை உணர்ந்தேன்" என்கிறபடியே சரீரம் முதலானவற்றினின்றும் வேறுபட்டதாய் அவனுக்குச் சரீரமாக இருக்கையாலே சேஷமாய்க்கொண்டு வேறொருவர்க்கும் உரித்தன்றி அவனுக்கே உரியதாக இருக்கும் என்று அறிந்து, [1] ஆத்ம தர்சந பல பிராப்தி மரண அவதியாகப் பெற்று - அங்ஙனம் ஆன்மாவின் தன்மையைக் கண்டதன்பலமான பகவானை அடைதலை, "மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்" என்கிறபடியே சரீரத்தின் முடிவிலே பண்ணித்தருகிறோம் என்று அவன் நாள்இட்டுக் கொடுக்கப்பெற்று, [2] காலஆசத்தி பல கதிக்குத் துணைகூட்டின தம்பேற்றை - இங்ஙனம் அவனை அடையும் காலம் அணித்தானதற்குப் பலம் அர்ச்சிராதிமார்க்கத்தாலே பரம பதத்து ஏறப்போவதாகையாலே, அவ் வர்ச்சிராதிகதிக்குக் "காளமேகத்தைஅன்றி மற்றொன்றிலம் கதி" என்றும், "ஆத்தன்தாமரை அடியன்றி மற்றிலம் அரணே" என்றும் பரம ஆப்தனானவன் தன்னையே துணையாகக்கூட்டினதம்முடையபேற்றினை, பிறர் அறியப்பத்துத் தோறும் வெளியிடுகிறார் - பிறர் அறிந்து வாழும்படி முதல்பத்தே தொடங்கிப் பத்துப்பத்துக்களாலும் விளக்கமுற அருளிச்செய்கிறார் என்றபடி.

---

1. இதனால் ஒன்பதாம் பத்தில் பேசப் படுகின்ற பேறு தெரிவிக்கப்படுகிறது. மேல் பத்தில் பேசின ஆன்ம சொரூப ஞானத்திற்குப் பயன், பகவானை அடைதலே யாகையாலே, அதனை இச் சரீரத்தின் முடிவிலே செய்கிறோம் என்று அவன் நாளிட்டுக் கொடுக்கப் பெறுதலாகிற பேற்றைப் பெற்றமை தெரிவிக்கப்படுகிறது. இது, "சரணமாகும் தனதாள் அடைந்தார்க்கெல்லாம்" (திருவாய். 9. 10: 5.) என்ற திருப்பாசுரத்தை நோக்கியது.

2. மேல் பத்தில் நாள் இடப்பெற்ற எல்லை நாள் அணித்தானதற்குப் பலன், அர்ச்சிராதி மார்க்கத்தாலே போவதாகையாலே அந்த அர்ச்சிராதி மார்க்கத்திற்குப் பரம ஆப்தனான அவ் விறைவனையே துணையாகக் கொண்டமை பேசப் படுகிறது பத்தாம் பத்தால், இது, "தாளதாமரை", "கூத்தன் கோவலன்" (திருவாய். 10. 1: 1, 6.) என்ற திருப்பாசுரங்களை நோக்கியது.

இதனால், பரத்துவம் முதலான குணங்களோடு கூடின ஈச்வரன் தமக்குச் செய்து கொடுத்த பேறுகளைப் பலரும் அறிந்து வாழவேண்டும் என்று பத்துப்பத்துக்களாலும் தெளிவுபடுத்துகிறார் என்று பத்துப்பத்துக்களுக்கும் வாக்கியார்த்தம் சொல்லப்பட்டதாயிற்று.

(59)

ஆசாரிய ஹிருதய வியாக்கியானம்

மூன்றும் பகுதி முற்றிற்று.

அழகிய மணவாளப் பெருமாள் நாயனர் திருவடிகளே அரண்.

பெரிய சீயர் திருவடிகளே பேறு.

---

# நான்காம் பகுதி

## 219

[1] பரபரனாய் நின்ற வளவேழ் வைப்பாம் அவையுள் உம்பர் வானவர் அதிபதி, மயர் வற மன்னி மனம் வைக்கத் திருத்தி, மறக்கும் என்று நல்கி விடாதே மன்ன, அயர்ப்பிலன் அறுத்தேன் என்சொல்லி மறப்பனோ என்னும்படி தத்வஜ்ஞரானவர், சுடரடி எம்பிரானை விடாது கண்டாய் நீயும் நானும் என்கிற ஸஹ்ருதய அநுபவம் சம்சாரிகளுக்கும் ஆம்படி, வீடுமின் என்று தியாஜ்ய உபாதேய தோஷ குண பரித்யாக சமர்ப்பண கிரமத்தை சாலம்பந மந்திர மாக உபதேசித்து, எளிதாக அவதரித்துப் பிழைகளைச் சகித்துப் புரைஅறக்கலந்து அல்பசந்துஷ்டனாய் அம்ருதமே ஔஷதமாக்கி நீர்புரையத் தன்னை நியமித்துப் போகத்தைச் சாத்மிப்பித்து, பக்தி கணைகளுக்கு ஒக்கவருமவனுடைய சேவைக்கு எளிமையும் இனிமையும் உண்டு; தொழுதால் அரும்பயனாய தரும்; உத்யோகத்தே வினைகளும் மாளும்; அவன் உரைத்த மார்க்கத்தே நின்று, இருபசை மலமற உணர்வுகொண்டு நலம்செய்வது என்று, தாம் மயர்வற மதிநலம் அருளி பஜநத்திலே சேர்க்கிறார் முதற்பத்தில்.

என்பது, சூத்திரம்.

**வியாக்:**—இதில் முதல் பத்தாலே, எல்லாப்பொருள்கட்கும் உயர்ந்தவனாய், பரபரனான சர்வேச்வரன், ஒருகாரணத்தையும் பற்ற

---

1. மேற்சூத்திரத்தில் சுருக்கமாகப் பேசிய விஷயங்களை இச்சூத்திர முதலாக விரித்து அருளிச்செய்கிறார். இச்சூத்திரத்தை மூன்று பகுதிகளாகப் பிரித்துக் கோடல்வேண்டும். முதற்பகுதியில், இப்பத்தில் ஆழ்வார் முக்கியமாக எடுத்துப்பேசின இறைவன் குணம் இன்னது என்பது பேசப்படுகிறது. இரண்டாம் பகுதியில் அவ்விறைவன் ஆழ்வார்க்குச் செய்த உபகாரம் இன்னது என்பது பேசப்படுகிறது. மூன்றும் பகுதியில் ஆழ்வார் தம்முடைய அநுபவத்தளவிலே நில்லாமல் இவ்வுலக மக்களுக்கும் உபதேசித்து அவர்களையும் திருத்தித் தமக்குத் துணைவர்களாகக் கூட்டிக்கொள்ள விரும்பி உபதேசித்தவை இன்ன இன்ன விஷயங்கள் என்று பேசப்படுகின்றன.

மல் செய்கின்ற தன்னுடைய பேரருளாலே ஆழ்வார்க்கு அகஇருளைப் போக்கிப் பக்தியாக வடிவத்தை எடுத்த ஞானத்தைக்கொடுத்து, இன்னமும் இவர் நம்மை மறந்துவிடக்கூடும் என்று எண்ணி, அங்ஙனம் மறவாமைக்காக, இடைவிடாதே இவர்தம்முடைய திருவுள்ளத்திலே வசிக்கத்தொடங்கினான். அதனாலே இவர், ஐயம் திரிபு மறதி இல்லாத தத்துவஞானத்தையுடையராகி, அவனுடைய திருக்கல்யாண குணங்களைத் தம்முடைய திருவுள்ளத்தோடே அநுபவித்தார்.

அங்ஙனம் அநுபவித்தவர், அவ்விஷயம் தனிஇருந்து அநுபவிக்க ஒண்ணாமையாலே, இவ்வுலகமக்களையும் கூட்டிக்கொண்டு திரள்திரள்ஆக இருந்து அநுபவிக்க விரும்பினாராகையாலே, அவர்களை நோக்கி விடத்தக்கதான இவ்வுலகவாழ்வின் குற்றத்தையும் அதனை விடுதற்குரிய வழிகளையும் பற்றத்தக்க பகவானுடைய குணங்களையும் அவனை வணங்கவேண்டிய வகையினையும் வணங்குவதற்குப் பற்றுக்கோடான மந்திரத்தையும் உபதேசித்து, வணங்கத்தக்கவனான அவனுடைய எளிமை என்ன, குற்றங்களைப் பொறுக்கும் பொறுமை என்ன, தாழ்ந்தவர்களோடும் கலந்து பரிமாறும் சீலகுணம் என்ன, எளிதாக ஆராதிக்கப்படும் தன்மை என்ன, அவனைப் பற்றும்பற்று இனியதாக இருக்கும் தன்மை என்ன, பலவகைப்பட்ட இவ் வுலகமக்களோடும் செவ்வியனாய்ப் பரிமாறும் ஆர்ஜவகுணம் என்ன,தன் இன்பத்தைப் பொறுக்கப் பொறுக்க அடைவே கொடுத்தருளும் தன்மை என்ன, பரமபக்திக்கும் ஒன்று இரண்டு என்பன போன்று எண்ணுகின்ற எண்களுக்கும் ஒக்க முகம் காட்டுதலாகிற ஒப்பு என்ன, ஆகிற இந்தக்குணங்களை ஒவ்வொரு திருவாய்மொழியிலும் கூறிக்கொண்டு, அவ்வழியாலே ஆராதனத்தின் எளிமை இனிமைகளையும், வணங்கவே எல்லாப்பலன்களும் கைகூடும் என்பதனையும், வணங்குதற்குத் தொடங்கியமாத்திரத்தில் வணங்குதற்குத் தடைகளாக இருக்கும் அனைத்தும் அழிந்துபோம் என்னுமதனையும் அறிவித்து,

ஆனபின்பு, ஸ்ரீகீதையில் அவன் அருளிச்செய்த பக்திநெறியிலே நின்று, மற்றைத்தேவர்கள் பரம்பொருள் என்னும் எண்ணம் இன்மையோடு அவன் விஷயமான ஞானத்தைக்கொண்டு, அவன் பக்கலிலே வேறொரு பயனையும் கருதாத பக்தியைப் பண்ணுங்கோள் என்று, அவன் தமக்கு மயர்வற மதிநலம் அருளினாற்போலே, இவரும் இவர்களுக்கு அகவிருளை நீக்கி ஞானபக்திகளை உபதேசத்தாலே உண்டாக்கி வணங்கும்செயலிலே மூட்டுகிறார்.



[1] பரபரன் ஆய்நின்ற வளவேழ் வைப்பாம் அவையுள் உம்பர் வானவர் அதிபதி - முதற்பத்தில், சர்வேச்வரனுடைய பரத்துவம் - முதன்மை கூறப்படுகிறது என்பதனை இங்குத் தெரிவிக்கிறார். அதாவது, [2] "வரன் முதலாய் அவைமுழுது உண்ட பரபரன்" என்றும், [3] "ஆய் நின்ற பரன்" என்றும், [4] "வளவேழ்உலகின் முதலாய வானோர் இறை" என்றும், [5] "வைப்பாம் மருந்தாம் நலத்தால் உயர்ந்து உயர்ந்து அப்பாலவன்" என்றும், [6] "அவையுள்தனிமுதல்" என்றும், [7] "உம்பர்வானவர் ஆதி அம்சோதி" என்றும், [8] "அயர்வறும் அமரர்கள் அதிபதி" என்றும் வருகின்ற திருப்பாசுரங்களிற் சொல்லப்படுகின்றபடியே, [9] எல்லா உலகங்களையும் படைத்தல் காத்தல் அழித்தல் என்ற முத்தொழில்களையும் செய்யும் கருத்தாவாதலானும், உபய விபூதிகளையுமுடையனாதலானும், உபய விபூதிகட்கும் தலைவனாதலானும், பேறும் நெறியுமாய் இருத்தலானும், எல்லையில்லாத ஆனந்தத்தையுடையனாதலானும், இயங்கியற்பொருள் நிலையியற்பொருள்கள் எல்லாவற்றையும் சரீரமாகவுடையனாதலாலே எல்லாச்சொற்களுக்கும் பொருளாய் இருக்கும் தன்மையனாதலாலும், நித்தியசூரிகட்கு நிர்வாஹகனாதலானும், என்றும் குறைவின்றியே நிறைந்துள்ள ஞானத்தையுடைய நித்தியசூரிகள் எப்பொழுதும் அநுபவித்துக் கொண்டிருந்தாலும் எல்லைகாண ஒண்ணாத பெருமையையுடையனாதலானும் உயர்வற உயர்ந்த சர்வேச்வரன்,

மயர்வுஅறமன்னி மனம்வைக்கத் திருத்தி மறக்கும் என்று நல்கி விடாதே மன்ன - இதனால், அத்தகைய இறைவன் ஆழ்வார்க்கு அருள்புரிந்த வகை கூறப்படுகிறது. அதாவது, மயர் வற மன்னி -

---

1. 'பரபரன் ஆய்நின்ற வளவேழ் வைப்பாம் அவையுள் உம்பர் வானவர் அதிபதி' என்பது முடிய, முதற்பத்தில் கூறப்பட்ட இறைவனுடைய திருக்குணம் இன்னது என்பதனை அருளிச்செய்கிறார். இதில் பேசப்பட்ட திருக்குணம் இறைவனுடைய பரத்துவம். அதனைக் காட்டும் திருப்பாசுரப் பகுதிகளை ஒருசேர எடுத்து அருளிச்செய்கிறார் 'பரபரன்' என்று தொடங்கி.

2. திருவாய். 1. 1: 8.
3. திருவாய். 1. 1: 11.
4. திருவாய். 1. 5: 1.
5. திருவாய். 1. 7: 2.
6. திருவாய். 1. 9: 1.
7. திருவாய். 1. 10: 9.
8. திருவாய். 1. 1: 1.

9. மேலே எடுத்துக்காட்டிய திருப்பாசுரப் பகுதிகளுக்கு முறையே பொருள் அருளிச்செய்கிறார் 'எல்லா உலகங்களையும்' என்று தொடங்கி.

[1]“மயர்வற மதி நலம் அருளினன்” என்றும், [2]“மயர் வற என் மனத்தே மன்னினுன்” என்றும் சொல்லப்படுகின்றபடியே தன்னுடைய பேரருள்மாத்திரத்தாலே [3]பொருளைப் பற்றிய அறிவு பிறவாமை, பொருளின்தன்மைபற்றிய அறிவின்மை, ஒன்றனை மற்றொன்ருக அறிகின்ற அறியாமை ஆகிற அகஇருளை இவர்க்கு அடியோடே போக்கிப் பக்தியாக வடிவு எடுத்த ஞானத்தைக் கொடுத்து, இவர் திருவுள்ளத்திலே புகுந்து, மனம் வைக்கத் திருத்தி-[4]“சார்ந்த இருவல்வினைகளும்சரித்து மாயப்பற்று அறுத்துத் தீர்ந்து தன்பால் மனம் வைக்கத் திருத்தி” என்கிறபடியே பிரிக்க ஒண்ணுதபடி இவரோடே பொருந்திக் கிடக்கிற வலியனவான நல்வினை தீவினைகளையும் புறப்பொருள்களிலே உள்ள ருசி வாசனைகளையும் போக்கி, தாழ்ந்தவர் என்று நினைத்து இவர் அகன்ற அளவிலும் தன்சீலகுணத்தைக் காட்டி இவரை மீட்டு, அல்லேன் என்று அகலாதே தனக்கே தீர்ந்து தன்பக்கலிலே மனத்தை வைக்கும்படி, தரிசுகிடந்த நிலத்தைச் செய்காலாகத் திருத்துவாரைப்போலே திருத்தி, மறக்கும் என்று நல்கி விடாதே மன்ன - [5]“மறக்கும் என்று செந்தாமரைக் கண்ணொடும்” என்றும், [6]“நல்கி என்னை விடான் நம்பி நம்பியே” என்றும், [7]“மறப்பற என்னுள்ளே மன்னினுன்” என்றும் வருகின்ற திருப்பாசுரங்களின்படியே, இன்னமும் இவர் நம்மை மறக்கக்கூடும் என்று எண்ணி, எல்லை இல்லாத சிநேகத்தைச்செய்து, இவரை விடாதே, அழகிய திருக்கண்களாலே குளிர நோக்கிக்கொண்டு ஒருநாளும் மறக்க ஒண்ணுதபடி இவர் திருவுள்ளத்திலே நிலையியற்பொருளைப்போன்று இருக்க,

அயர்ப்பிலன் அறுத்தேன் என்சொல்லி மறப்பனே என்னும்படி தத்துவஜ்ஞரானவர் - இறைவன் திருவருள்புரிந்தபின்னர் ஆழ்வார்க்கு உண்டான நிலை சொல்லப்படுகிறது இதனல். அதாவது,

---

1. திருவாய். 1. 1: 1.  2. திருவாய். 1. 7: 4.

3. பொருளைப் பற்றிய அறிவு பிறவாமையாவது, தேகமே ஆன்மா என்றிருத்தல். பொருளின்தன்மைபற்றிய அறிவின்மையாவது, இவ்வான்மாவை மற்றைத் தெய்வங்கட்கும் அடிமை என்றிருத்தல். ஒன்றனை மற்றொன்ருக அறிகின்ற அறியாமையாவது, ஸ்வதந்திரமாகவும் போக்கியமாகவும் நினைத்திருக்கும் கேவலனுடைய அறிவு.

4. திருவாய். 1. 5: 10.  5. திருவாய். 1. 10: 10.

6. திருவாய். 1. 10: 8.  7. திருவாய். 1. 10: 10.



அயர்ப்பிலன் - [1]“பெருநிலம்கடந்த நல்லடிப்போது அயர்ப்பிலன்” என்றும், அறுத்தேன் - [2]“தூய அமுதைப் பருகிப் பருகி என், மாயப் பிறவி மயர்வு அறுத்தேன்” என்றும், என்சொல்லிமறப்பனே - [3]“எம்பிரானை என்சொல்லி மறப்பனே” என்றும் வருகின்ற திருப்பாசுரங்களின்படியே, நல்லோர் தீயோர் என்று நினையாதே பூமிப்பரப்பை அளந்த மிகஇனியனவான திருவடிகளை ஒருகாலும் மறவேன், எல்லை இல்லாத இனியன் ஆனவனை எப்பொழுதும் அநுபவித்து ஆச்சர்யமான பிறவி காரணமாக வரும் அகஇருள் போகப் பெற்றேன், எனக்கு உபகாரகனுனவனை எதனைச்சொல்லிமறப்பது என்னும்படி ஐயம் திரிபு மறதி கலவாத தத்துவஞானத்தையுடையவரான ஆழ்வார்,

சுடர்அடி எம்பிரானை விடாது கண்டாய் நீயும் நானும் என்கிற [4]ஸஹ்ருதய அநுபவம் சம்சாரிகளுக்கும் ஆம்படி - அத்தகைய ஆழ்வார் தம் திருவுள்ளத்தோடு அநுபவித்த அநுபவம், இவ்உலகமக்களுக்கும் கிடைக்கவேண்டும் என்று நினைத்தார் என்பது கூறப்படுகிறது இதனல். அதாவது, சுடரடி - [5]“சுடர்அடி தொழுதுஎழு என் மனனே” என்றும், எம்பிரானை - [6]“எம்பிரானைத் தொழாய் மடநெஞ்சமே” என்றும், விடாது - [7]“நெஞ்சமே! நல்லைநல்லை - மலராள்மணவாளனைத் துஞ்சும்போதும் விடாது தொடர்கண்டாய்” என்றும், கண்டாய் - [8]“கண்டாயே நெஞ்சே! கருமங்கள் வாய்க்கின்று” என்றும், நீயும் நானும் - [9]“நீயும் நானும் இந்நேர்நிற்கில் மற்றோர், நோயும் சார் கொடான் நெஞ்சமே சொன்னேன்” என்றும் வருகின்ற திருப்பாசுரங்களின்படியே எல்லை இல்லாத ஒளிஉருவமான அவன் திருவடிகளிலே என்றும் கைங்கரியத்தைச் செய்து உய்வுபெறப் பாராய் என் நெஞ்சே! எனக்கு அடங்கிய மனமே! நமக்கு உபகாரகனுனவனைத் தொழப்பாராய்; நெஞ்சே! நீ செய்தபடி மிகநன்று, நான் நீசனேன் என்று சொல்லி அகலும்போதும் திருமகள் கேள்வனை விடாதே காண்; நெஞ்சே! ஒரு காரணமும் இன்றியே

---

1. திருவாய். 1. 3: 10.  2. திருவாய். 1. 7: 3.

3. திருவாய். 1. 10: 9.

4. ஸஹ்ருதயம் - மனத்தோடு கூடியது.

5. திருவாய். 1. 1: 1.  6. திருவாய். 1. 10: 3.

7. திருவாய். 1. 10: 4.  8. திருவாய். 1. 10. 5.

9. திருவாய். 1. 10: 6.

இயல்பாகவே செய்யும் அவனுடைய அங்கீகாரம் இருந்தபடி கண்டாயே; தொழச்சொல்லலாம்படி இருக்கிற நீயும் தொழச்சொல்லுகிற நானும் "நீசனேன் நிறைவொன்றுமிலேன்" என்று நினைத்து அகலாமல் இப்படியே நிற்கப்பெறில், பல காலமாக ஈட்டப்பெற்ற நல்வினை தீவினைகள், இவ்வுலகவாழ்வில் ஈடுபாடு, வேறுபயன்களில் முயற்சி, வேறு உபாயங்களில் பற்று முதலான குற்றங்கள் ஒன்றனையும் சேரவிட்டுக்கொடான்; நெஞ்சே! உனக்கு மிக மேலான இந்த அர்த்த விசேடத்தைச் சொன்னேன் என்று இப்படித் திருவுள்ளத்தைக் குறித்து உபதேசித்து, திருவுள்ளமும் தாமும் கூடி அநுபவித்த பகவானுடைய அநுபவம் தனியே அநுபவிக்க ஒண்ணாமையாலும் [1] "இனியபொருளை ஒருவன் தனியே இருந்து உண்ணலாகாது" என்கிறபடியே தனியே அநுபவிக்கவல்லர் அல்லாமையாலும் அவனோடு உள்ள தொடர்பு அனைவருக்கும் பொதுவாகையாலும் பிறருடைய கேட்டினைக் காணப்பொறுத பேரருளாலும் இவ்அநுபவம் இவ்உலக மக்களுக்கும் கிடைக்கவேண்டும் என்று எண்ணினார்.

[2] வீடுமின் என்று தியாஜ்ய உபாதேய தோஷ குண பரித்யாக ஸமர்ப்பணக்கிரமத்தை ஸாலம்பந மந்த்ரமாக உபதேசித்து - அங்ஙனம் எண்ணின ஆழ்வார், உலகமக்களுக்கு உபதேசித்த முறையை விரிவாக அருளிச்செய்கிறார் 'வீடுமின்' என்று தொடங்கி, அதாவது, வீடுமின் என்று தியாஜ்யத்தையும் - [3] "வீடுமின்முற்றவும்" என்ற திருவாய்மொழியாலே "வீடுமின்முற்றவும்" என்று விடத்தக்கனவற்றின் தன்மையையும், தோஷம் - "மின்னின்நிலையில மன்னுயிர் ஆக்கைகள்" என்று அவற்றினுடைய சிறுமை நிலையின்மை முதலிய குற்றங்களையும், பரித்யாகம் - "நீர்நுமது என்றிவை வேர்முதல் மாய்த்து" என்று அவற்றை விடுகின்ற முறையினை

---

1. *"ஏக:ஸ்வாது ந புஞ்ஜீத"* *என்பது, பிரமாணம்.*

2. *'வீடுமின்' என்று தொடங்கும் வாக்கியத்தை, வீடுமின் என்று தியாஜ்யத்தையும் அவற்றின் தோஷத்தையும் அவற்றின் பரித்யாகத்தையும் உபதேசித்து என்றும், 'வீடுடையான்' என்று உபாதேயத்தையும் அதன் குணத்தையும் அதனிடத்தில் சமர்ப்பணகிரமத்தையும் ஸாலம்பந மந்த்ரமாக உபதேசித்து என்றும் பிரித்துக்கூட்டுக. 'வீடுமின்' என்றது "வீடுமின் முற்றவும்" என்ற திருப்பதிகத்திலே என்றபடி. தியாஜ்யம் - விடத்தக்கவை, உபாதேயம் - பற்றத்தக்கது. சாலம்பநம் - பற்றுக்கோடு.*

3. *திருவாய். 1. 2: 1.*



யும், உபாதேயம் - "வீடுடையானிடை" என்று பற்றத்தக்க பகவானுடைய சொரூபத்தையும், குணம் - "எல்லையில் அந்நலம்" என்று அந்தப் பகவானுடைய குணத்தையும், சமர்ப்பணகிரமம் - "வீடு செய்ம்மின்" என்றும், "இறைசேர்மின்" என்றும், "இறை பற்று" என்றும், "திண் கழல் சேர்" என்றும் அந்தப் பகவானிடத்தில் ஆன்மாவைச் சேர்க்கும் முறையினையும், சாலம்பந மந்திரமாக - "வண்புகழ்நாரணன்" என்று சேர்க்கும்தன்மைவடிவான வணக்கத்துக்குப் பற்றுக்கோடான திருமந்திரத்தோடே, உபதேசித்து - உபதேசித்து,

இனி, "பத்துடைஅடியவர்" என்னும் திருப்பதிகம்முதல் மேலே உள்ள எட்டுத் திருப்பதிகங்களிலும் சொல்லப்பட்ட பொருள்களைச் சுருக்கி அருளிச்செய்கிறார் 'எளிதாக அவதரித்து' என்றுதொடங்கி.

எளிதாக அவதரித்து - வந்து அடையும் அடியார்கள், "கண்களால் காணமுடியாதவன்" என்று இருயாதபடி [1] "பலபிறப்பாய் எளிவரும் இயல்வினன்" என்கிறபடியே இராமன், கிருஷ்ணன் முதலிய அவதாரமுகத்தாலே அவர்களுக்கு எளியனாய், (இது மூன்றாம் திருப்பதிகம்.) பிழைகளைச்சகித்து - பற்றுகின்ற காலத்தில் எளியனாய்க் குற்றம் கண்டவாறே கைவிடாமல் [2] "என்பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு" என்றுகூறும்படி குற்றங்களைப்பொறுக்குமவனாய், (இது நான்காம் திருப்பதிகம்.) புரைஅறக்கலந்து - குற்றம் கண்டு தான் இகழாத அளவன்றிக்கே, "நீசனேன் நிறைவொன்றும் இலேன்" என்று தங்கள் தாழ்வினை நினைத்துத் தாங்களே அகலுவாரையும் [3] "திசைகள் எல்லாம் திருவடியால் தாயோன் தான் ஓர் உருவனே" என்கிறபடியே தன் குணத்தைக் காட்டி அணுகச்செய்து அவர்களோடே புரைஅறக்கலக்கும் சீலவானாய், (இது ஐந்தாம் திருப்பதிகம்.)

அல்பசந்துஷ்டனாய் - அடியார்களோடு ஒருநீராகக் கலக்குமேயானாலும், அவன் உகக்கும்படி பச்சை இடப்போகாமையாலே அவனை அடைதல் அரிது என்னாதபடி, இவன் இட்டது கொண்டு மனம் நிறைவுபெற்றவனாகாதபடி, எல்லாம் நிறைந்தவனாகையாலே

---

1. *திருவாய். 1. 3: 2. இதனால் சௌலப்யகுணம் தெரிவித்தபடி.*
2. *திருவாய். 1. 4: 7. இதனால் பொறையுடைமை தெரிவித்தபடி.*
3. *திருவாய். 1. 5: 3. இதனால் சீலகுணம் தெரிவித்தபடி.*

[1] "புரிவதுவும் புகை பூவே" என்கிறபடியே இவன்பக்கல் பெற்றது கொண்டு மகிழ்கின்ற எளியமுறையில் ஆராதிக்கப்படுகின்றவனாய், (இது ஆறாம் திருப்பதிகம்.) அம்ருதமே ஔஷதமாக்கி - அருமை இல்லையாகிலும் உள்ளது தேவையாக இருக்குமோ என்னாதபடி, அமுதையே ஔடதம் ஆக்குமாறு போலே, [2] "தூய அமுதைப்பருகிப்பருகி என், மாயப்பிறவி மயர்வறுத்தேனே" என்கிறபடியே எல்லை இல்லாத இனியனான தன்னைப் பற்றும் பற்றாகையாலே, மிகவும் இனியனாயிருக்கிற தன்னையே பிறப்பாகிய நோய்க்கு மருந்தாக்கி, (இது ஏழாந்திருப்பதிகம்.)

நீர்புரையத் தன்னை நியமித்து - இனியனாயிருக்குமாகிலும், அவன் நினைவறிந்து செயல் புரிதல் அரிது என்னாதபடி, இவர்களைத் தன் நினைவிலே செயல் புரிவித்துக்கொள்ளப் பாராமல், [3] "நீர்புரை வண்ணன்" என்கிறபடியே மேட்டிலே நீரை விரகாலே ஏற்றுமாறுபோலே இவர்கள் செவ்வைக்கேடும் செவ்வையாம்படி தன்னைச் செவ்வியனாக நியமித்து, (இது எட்டாந் திருப்பதிகம்.) போகத்தைச் சாத்மிப்பித்து - இப்படியானாலும் குளப்படியிலே கடலை மடுத்தாற்போலே பொறுக்க ஒண்ணாதவாறு செயல்புரியுமோ என்னாதபடி, [4] "என்னுடைச் சூழலுளான்" என்று தொடங்கி [5] "உச்சியுளானே" என்னும்படி பொறுக்கப் பொறுக்கத் தன்னை அனுபவிப்பித்து, (இது ஒன்பதாம் திருப்பதிகம்.) பக்தி கணனைகளுக்கு ஒக்க வருமவனுடைய - இப்படி அனுபவிக்கைக்குத் தகுதியாக முகம் காட்டுமளவில் இவனுடைய பக்திக்குத் தகுதியாகவோ செய்வது என்னாதபடி [6] "கண்ணுள்ளே நிற்கும் காதன்மையால் தொழில், எண்ணிலும் வரும்" என்கிறபடியே பரமபக்திக்கும் பரிகணனைக்கும் ஒக்கவந்து முகம் காட்டுமவனுடைய. [7] பரிகணனைக்கு முகம் காட்டுதலாவது, ஒன்று இரண்டு என்று தொடங்கி எண்ணிக்கொண்டே சென்று இருபத்தைந்து இருபத்

1. *திருவாய். 1. 6: 1.* 2. *திருவாய். 1. 7: 3.*
3. *திருவாய். 1. 8: 11. இதனால் ஆர்ஜவகுணம் தெரிவித்தபடி.*
4. *திருவாய். 1. 9: 1.* 5. *திருவாய். 1. 9: 10.*
6. *திருவாய். 1. 10: 2.*

7. *"பொங்கைம் புலனும்" (திருவாய். 10. 7: 10.) என்ற திருப்பாசுரப்படியே இருபத்துநான்கு தத்துவங்களுக்கு மேல் இருபத்தைந்தாவது தத்துவம் சீவாத்மா; இருபத்தாறாவது தத்துவம் பரமாத்மா என்பது நூற்கொள்கையாதலால், ஒருவன் இதனை அறியாமல் யாதோ ஒரு காரியப்பாடாக ஒன்று முதலாக எண்ணிக்கொடு போந்து, இருபத்தாறு அளவிலே வந்தால் அந்த எண் தன்னைக் குறித்ததாகக்கொண்டு இறைவன் வந்து தோன்றுவன் என்பதனை இங்குத் தெரிவித்தபடி. பரிகணனை - எண்ணுதல்.*



தாறு என்று எண்ணும்போது, இருபத்தாறாவது தத்துவமான தன்னைக் குறித்ததாகக் கொண்டு 'இருபத்தாறு' நானே என்று வந்து முகம் காட்டுவன் என்பதாம். (இது பத்தாம் திருப்பதிகம்.)

சேவைக்கு - ஆக, இப்படித் திருவாய்மொழிதோறும் வெளியிடப்பட்ட தன்மைகளையுடைய எம்பெருமானை வணங்கும் வணக்கத்துக்கு, எளிமையும் இனிமையும் உண்டு - எளிதாய் இனிமையற்றிருத்தல், இனியதாய் அருமையாயிருத்தல் அன்றிக்கே, மேலேகூறிய குணவிசேடங்களையுடையவனை வணங்கும் வணக்கமாகையாலே எளியதுமாய் இனியதுமாய் இருக்கும்; [1] "பத்துடை அடியவர்க்கு எளியவன்" என்றும், [2] "அமுதிலும் ஆற்ற இனியன்" என்றும் சொல்லப்படுகின்ற அவன்தன்னைப் போலே ஆயிற்று அவனை வணங்கும் வணக்கமும். இத்தகைய வணக்கத்தால் கிடைக்கும் பலம் இருக்கும்படி என்? என்னில், தொழுதால் அரும் பயனாய தரும் - [3] "அவனைத் தொழுதால் வழிநின்ற வல்வினைமாள்வித்து, அழிவின்றி ஆக்கம் தரும்" என்றும், [4] "தருமவரும்பயனாய" என்றும் சொல்லப்படுகின்றவாறே அவனை வணங்கினால் பேற்றிற்குத் தடைகளாக உள்ளனவற்றையும் அடியோடு போக்கி, அழிவில்லாத பெறுதற்கு அரிய பயன்களையும் தரும். நன்று; வணங்கினால் அன்றோ தருவது! வணங்குதற்குத் தடைகளும் பலப்பல உண்டே? எனின், உத்யோகத்தே வினைகளும் மாளும் - [5] "நாளும் நின்று அடும் நம பழமைஅம் கொடுவினை உடனே மாளும்" என்கிறபடியே நாள்தோறும் நின்று இவ் ஆன்மாவினை முடிக்கிற அநாதியாய் மிகக் கொடியனவான தீவினைகள் வணங்கத் தொடங்கின அளவிலே அழியும்.

நன்று; வணங்கும் வழி யாது? எனின், [6] அவன் உரைத்த மார்க்கத்தே நின்று - [7] "பிணக்கற அறுவகைச் சமயமும்" என்று தொடங்கி "அம்பகவன் வணக்குடைத் தவ நெறி வழி நின்று" என்கிறபடியே வைதிக சமயத்துக்கும் வேதத்திற்குப் புறம்பான ஆறு சமயங்களுக்கும் தன்னில்தான் உண்டான பிணக்கு அறும்படி வேத நெறியை உள்ளவாறே நிரூபணம் பண்ணி அருளிச்செய்த எல்லையில்லாத வாத்சல்ய குணத்தையுடையனாய், ஞானம் முதலான ஆறு குணங்களும் நிறைந்தவனான கிருஷ்ணன் திருத்தேர்த்தட்டிலே அருச்சுனன்

1. *திருவாய். 1. 3: 1.* 2. *திருவாய். 1. 6: 6.*
3. *திருவாய். 1. 6: 8.* 4. *திருவாய். 1. 6: 9.*
5. *திருவாய். 1. 3: 8.*

6. *'அவன் உரைத்த பக்திமார்க்கத்தே நின்று' என்றும் பாடபேதமுண்டு.* 7. *திருவாய். 1. 3: 5,*

காரணமாக ஸ்ரீகீதை மூலமாக [1] "என்னிடத்திலேயே வைக்கப்பட்ட பக்தியினாலேயே உண்மையாக அறிதற்கும் பார்ப்பதற்கும் என்னை அடைவதற்கும் தகுந்தவனாக இருக்கிறேன்" என்றும், [2] "என்னிடத்தில் மனத்தை வைத்தவனாயும் என்னிடத்தில் பக்தியையுடையவனாயும் என்னையே ஆராதிக்கிறவனாயும் ஆகக்கடவாய்; என்னை நமஸ்காரம் செய், என்னைச் சரணமடைந்தவனாய், இவ்விதமான மனத்தை அடைந்தால் என்னையே அடைவாய்" என்றும் அருளிச்செய்த நெறியிலே நின்று,

இருபசைமலம்அற - [3] "நும் இருபசை அறுத்து" என்றும், [4] "மனனக மலமறக் கழுவி" என்றும் சொல்லுகின்றவாறே மற்றைத் தேவர்கள்பக்கல் உங்களுக்கு உண்டான பற்றினை அறுத்து, 'பற்றத் தக்கவர்கள் இவனோ அவர்களோ' என்கிற ஐயத்தையும் மனத்தினின்றும் வாசனையோடு போக்கி, உணர்வு கொண்டு - [5] "அவனுடை உணர்வுகொண்டு உணர்ந்து" என்கிறபடியே அவன் விஷயமான ஞானத்தைக்கொண்டு, நலம் செய்வதுஎன்று - [6] "நன்று என நலம் செய்வது அவனிடை" என்கிறபடியே வேறொரு பயனைக் கருதாத பக்தியைச் செய்யுங்கோள் என்று, தாம் மயர்வற மதிநலம் அருளி பஜனத்திலே சேர்க்கிறார் முதற்பத்தில் - அதாவது, சர்வேச்வரன் தமக்கு மயர்வறமதிநலம் அருளினாற்போலே, இவ்வுலக மக்களுக்குத் தம்முடைய பேரருளாலே [7] தத்துவம் ஹிதம் புருஷார்த்தம் என்னும் இவ்விஷயத்தில் உண்டான அறியாமையைப்போக்கி ஞான பக்திகளை உபதேசித்துப் பகவானை வணங்கும் வணக்கத்திலே மூட்டுகிறார் முதற்பத்தால் என்கை, (1)

---

1. பக்த்யாத்வநந்யயா ஶக்ய: அஹமேவம்விதோர்ஜுன
ஜ்ஞாதும்த்ருஷ்டும்ச தத்வேந ப்ரவேஷ்டும்ச பரம்தப.
என்பது, ஸ்ரீகீதை, 11: 54.

2. மந்மநாபவ மத்பக்த: மத்யாஜீமாம்நமஸ்குரு
மாமேவைஷ்யஸி யுக்த்வைவமாத்மாநம் மத்பராயண:
என்பது, ஸ்ரீகீதை, 9: 34.

3. திருவாய். 1. 3. 7. 4. திருவாய். 1. 3: 8.

5. திருவாய். 1. 3: 5. 6. திருவாய். 1. 3: 7.

7. தத்வம் - இறைவனுடைய உண்மை நிலை. ஹிதம் - உய்யும் உபாயம். புருஷார்த்தம் - உயிர்கள் அடையும் பேறு.



## 220

*சோராத மூவா வேர்முதலாய் உலகம்படைத்தவன் என்கிற சித்அசித் த்ரய த்ரிவித காரணமானவன், அறியாதன அறிவிக்க, உள்ளம் தேறி, தூமனம் மருளில் என்னும் ஞானபலமான ஒளிக்கொண்ட மோக்ஷம் தேடி வாட, உலராமல் ஆவிசேர்ந்து சிக்கெனப் புகுந்து, சம்பந்திகளும் சேர்தல் மாறினர் என்ன வாழ்வித்து, உபகரிக்கிற நீந்தும் கெடலில் எம் மா வீட்டை உபய அநுகுணமாக்கினவர், ஆச்ரயணீயனுக்குப் பூர்வ(ம்)உக்த பரத்வத்தை ஸ்தாபிக்கிற சகலபல பிரதத்வ காரணத்வ சேஷசாயித்வ ஸ்ரிய:பதித்வ சௌலப்யாதிகளைத் 'திண்ணன், அணைவது' என்று வெளியிட்டு, 'கள்வா, தீர்த்தன்' என்று வசந பிரத்யக்ஷங்களும் காட்டி, 'புலன் ஐந்து' என்று சம்ஸார மோக்ஷ சாதநதுக்கு ஆநந்தரசம் முன்னாக விதிக்கிற அந்தர்கதகுண உபாசநத்தை, மதித்துப் பெருக்கி மூழ்கி அழுந்திக் கீழ்மை வலம் சூதும் செய்து இளமை கெடாமல் செய்யும் க்ஷேத்ரவாச சங்கீர்த்தந அஞ்சலி பிரதக்ஷிண கதி சிந்தநாதி அங்க யுக்தமாக்குகிறார் இரண்டாம்பத்தில்.*

என்பது, சூத்திரம்.

வியாக் :-இரண்டாம் பத்தால், எல்லாப் பொருள்கட்கும் காரணனான சர்வேச்வரன் மேல் சென்ற பத்திலே இவர்க்கு அறியாதனவற்றை அறிவித்தருள, அவனாலே கொடுக்கப்பட்ட ஞானத்தை அடைந்த இவ் ஆழ்வார், அந்த ஞானத்திற்குப் பலமான மோக்ஷத்தை அப்போதே பெறவேண்டும் என்று ஆசைப்பட்டுப் பெருமையாலே துக்கத்தை அடைந்தவரானார். இவருடைய அந்தத் துக்கமெல்லாம் தீரும்படி அவன் வந்து இவரோடு கலந்து அதனால் பிரீதன் ஆனான். அந்தப் பிரீதி இவர் ஒருவர் அளவில் நில்லாமல் இவரோடு முறை முறை தொடர்ந்து வருகின்ற சம்பந்தமுடையாரளவும் வெள்ளமிட்டது. அந்தப் பிரீதியாலே தன்னின் மிக்கதின்றி உயர்ந்த பேறான மோக்ஷத்தை இவர்க்கு அவன் கொடுக்கப்புகுந்தான். ஆழ்வார் அந்த மோக்ஷத்தை அவனுடைய சேஷியாம் தன்மைக்கும் தம்முடைய சேஷமாம் தன்மைக்கும் தகுதியாம்படி அறுதியிட்டார். அதன் பின்னர் எல்லாராலும் பணியத் தக்கவனான அவ்விறைவனுக்கு மேல்பத்தில் கூறிய பரத்துவத்தை நிலைபெறுத்துவனவான அறிகுறியாம் தன்மைகளை வெளியிட்டு, அவற்றிற்குப் பொருத்தமான வசனத்தையும்

காட்சியையும் காட்டி, பற்றுகின்ற அடியார்கட்கு ருசி பிறப்பதற்காக விடத்தக்கதான இவ் உலகவாழ்வின் துக்கமும், அடையத்தக்கதான மோக்ஷத்தினுடைய ஆநந்தமும், இவ் உலகவாழ்வினை நீக்குதல் முன்னாக மோக்ஷத்தினை அடைதற்கு உறுப்பான உபாயத்தினுடைய சுவையையும் முன்னிட்டுக்கொண்டு, குணங்களோடு கூடிய பிரஹ்மத்தை வழிபடும் வழிபாட்டினை விதித்து, அதற்கு உறுப்பாகத் தீய ஒழுக்கங்களை நீக்குதலோடு திவ்விய தேசவாசம் முதலானவற்றையும் செய்தல் வேண்டும் என்று அருளிச்செய்கிறார் என்கிறார்.

[1] சோராத மூவா வேர் முதலாய் உலகம் படைத்தவன் என்கிற - [2] "சோராத எப்பொருட்கும் ஆதியாம் சோதி" என்றும், [3] "மூவாத் தனிமுதலாய்" என்றும், [4] "எப்பொருட்கும் வேர்முதலாய் வித்தாய்" என்றும், [5] "பொருள் என்று இவ்வுலகம் படைத்தவன் புகழ்மேல்" என்றும் வருகின்ற திருப்பாசுரங்களில் சொல்லப்படுகின்ற, [6] சித்து அசித்து திரய திரிவித காரணமானவன்-சித்துத் திரயதிரிவிதகாரணமானவன் - பத்தர் முத்தர் நித்தியர் என்னும் மூவகையான சேதநர்கட்கும் மூன்று வகைப்பட்ட காரணமும் தானேயானவன்; அசித்துத் திரய திரிவித காரணமானவன் - பிராகிருதம் அப்ராகிருதம் காலம் என்னும் மூவகையான அசேதனங்கட்கும் மூன்றுவகைப்பட்ட காரணமும் தானேயான சர்வேச்வரன். மூவகைப்பட்ட காரணங்களாவன : முதற்காரணம், துணைக்காரணம், நிமித்த காரணம் என்பன. லீலா விபூதியில் (இவ்வுலகம்) சூக்கும சித்து அசித்துக்களோடு கூடியிருக்கும் தன்மையாலே முதற் காரணமாயும், ஞானம் சக்தி முதலிய குணங்களோடு கூடியிருக்கும் தன்மையாலே துணைக்காரணமாயும், சங்கல்பத்தோடு கூடியிருக்கும் தன்மையாலே நிமித்த காரணமாயும்; நித்திய விபூதியில் (பரமபதத்தில்) அப்ராகிருத சேதன அசேதனங்

1. இச்சூத்திரத்தையும் மூன்று பகுதிகளாகப் பிரித்துக்கோடல் வேண்டும். இப்பத்தில் ஆழ்வார் அருளிச்செய்த முக்கியமான குணம், காரணனாக இருக்கும் தன்மை. அதாவது, இறைவனுடைய காரணத்வம். அதற்குரிய திருப்பாசுரப் பகுதிகளை அருளிச்செய்கிறார் 'சோராத' என்று தொடங்கி.

2. திருவாய். 2. 1: 11. 3. திருவாய். 2. 8: 5.

4. திருவாய். 2. 8: 10. 5. திருவாய் 2. 10: 11.

6. இவ்வாக்கியத்தை, சித்துத் திரய திரிவிதகாரணமானவன், அசித்துத் திரய திரிவிதகாரணமானவன் என்று பிரித்துக் கூட்டுக. சித்துத்திரயம் - நித்தியர் முத்தர் பத்தர் என்னும் மூன்று வகைப்பட்ட உயிர்கள். திரயம் - மூன்று. அசித்துத்திரயம் - பிராகிருதம் அப்ராகிருதம் காலம் என்னும் மூன்று வகைப்பட்ட அறிவில் பொருள்கள். திரிவிதகாரணம் - முதற்காரணம், துணைக்காரணம், நிமித்தகாரணம் என்பன.



களோடு கூடியிருக்கும் தன்மையாலே முதற்காரணமாயும், விநியோகம் கொள்ளுகைக்குத் தகுதியான ஞானம் சக்தி முதலிய குணங்களோடு கூடியிருக்கும் தன்மையாலே துணைக்காரணமாயும், இச்சையோடு கூடியிருக்கும் தன்மையாலே நிமித்தகாரணமாயும் இருக்கிறான் எம்பெருமான் என்க. ஆக, பத்த முக்த நித்யர்களான மூவகை ஆன்மாக்களும், பிராகிருதம் அப்ராகிருதம் காலம் என்கிற மூவகை அறிவில்பொருள்களும் ஆன உபய விபூதிகட்கும் மூன்று வகையான காரணங்களும் தானேயாய் இருக்கின்ற சர்வேச்வரன் என்றபடி.

[1] அறியாதன அறிவிக்க - [2] "அறியாதன அறிவித்த அத்தா" என்கிறபடியே இவர் அறியாதனவான தத்துவ ஹித புருஷார்த்தங்களை மிகத் தெளிவாக இவர்க்கு அறிவிக்க, [3] உள்ளம் தேறி - [4] "அடியை அடைந்து உள்ளம் தேறி" என்கிறபடியே அதனாலே இவரும் அவனைக் கிட்டி நெஞ்சில் தெளிவையுடையவராய்,

[5] தூமனம் மருளில் என்னும் ஞானபலமான ஒளிக்கொண்ட மோக்ஷம் தேடி வாட - தூமனம் மருளில் - [6] "தூமனத்தனாய்" என்றும், [7] "மருளில் வண்குருகூர் வண் சடகோபன்" என்றும் சொல்லுகிறபடியே மோக்ஷம் ஒன்றனுக்கே காரணமாக இருக்கும் தன்மையாலே தூய்மைபொருந்திய மனத்தினையுடையராய் அவனுடைய கல்யாண குணவிஷயமான அறியாமை சிறிதும் இல்லாதபடி, ஞானபலமான ஒளிக்கொண்ட மோக்ஷம் தேடி வாட - மேல் பத்தில் பிறந்த தம்முடைய ஞானத்துக்குப் பலம் மோக்ஷமாகையாலே, [8] "களிப்பும் கவர்வும் அற்றுப் பிறப்புப் பிணி மூப்பு இறப்பு அற்று, ஒளிக்கொண்ட சோதியமாய் - அடியார்கள் குழாங்களை உடன்கூடுவது என்று கொலோ" என்கிறபடியே இவ்வுலக விஷய

1. இத்தகைய இறைவன் ஆழ்வார்க்குச் செய்த உதவியை அருளிச்செய்கிறார் 'அறியாதன அறிவிக்க' என்று.

2. திருவாய். 2. 3: 2.

3. அங்ஙனம் அறிவித்ததனால் ஆழ்வார் அடைந்த பயனைத் தெரிவிக்கிறார் 'உள்ளம்தேறி' என்று.

4. திருவாய். 2. 6: 8:

5. உள்ளம் தேறியபின் ஆழ்வார் அடைந்த நிலையைத் தெரிவிக்கிறார் 'தூமனம்' என்று தொடங்கி.

6. திருவாய். 2. 7: 8. 7. திருவாய் 2. 10: 11.

8. திருவாய். 2. 3: 10.

லாபாலாபங்களால் வரும் செருக்கும் கிலேசமும் [1] அறுவகைப்பட்ட விகாரங்களும் போய், சுத்த சத்வமுள்ளதாகையாலே எல்லையில் ஒளி வடிவமான விக்கிரஹத்தையுடையோமாய், நித்தியசூரிகள் திரளிலே கூடப்பெறுவது எப்போதோ என்று, அந்த மோக்ஷத்தைப் பெறுகையில் ஆசையாலே தேடி, அப்போதே கிடையாமையாலே [2] "வாடி வாடும்" என்கிறபடியே கொடியை இழந்த தளிர்போலே வாட,

[3] உலராமல் ஆவி சேர்ந்து - [4] "உள்ளுள் ஆவி உலர்ந்து உலர்ந்து" என்கிற தாபம் ஆறும்படி [5] "அந்தாமத்து அன்புசெய்து என் ஆவி சேர் அம்மானுக்கு" என்கிறபடியே பரமபதத்தில் செய்யும் அன்பினை இவர் பக்கலிலே செய்து, கமர்பிளந்த தரையிலே நீர்பாய்ச்சுவாரைப்போலே இவரோடே எல்லை இல்லாத கலவியைச்செய்து, சிக்கெனப்புகுந்து - [6] "சிறிதோரிடமும் புறப்படாத் தன்னுள்ளே உலகுகள் ஒக்கவே விழுங்கி-சிக்கெனப் புகுந்தான்" என்கிறபடியே மிகச் சிறியதொரு பொருளும் தன்பக்கல் நின்றும் பிறிகதிர்ப்பட்டு நோவுபடாதபடி தன் நினைவின் ஆயிரத்தில் ஒரு கூற்றிலே உலகங்கள் அனைத்தையும் ஒருக்காலே வைத்து, இனிப் பேராதபடி இவர் மனத்திலே புகுந்து,

சம்பந்திகளும் சேர்தல் மாறினர் என்ன வாழ்வித்து - [7] "எமர் கீழ் மேல் எழுபிறப்பும், விடியா வெந்நரகத்து என்றும் சேர்தல் மாறினர்" என்கிறபடியே இவருடைய சம்பந்த சம்பந்திகளையும் இவ்வுலகத்திலிருந்து முக்தராம்படி செய்து, அதனாலே [8] "எமர் ஏழெழு பிறப்பும் கேசவன் தமர் மாசதிர் இதுபெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா" என்கிறபடியே என்னோடு பரம்பரையாகச் சம்பந்தமுடையாரும் என்னுடைய சம்பந்தமே காரணமாகப் பகவானுக்கு

---

1. அறுவகைப்பட்ட விகாரங்கள்: உண்டாதல், பிறத்தல், வளர்தல், பெருத்தல், குறைதல், நசித்தல் என்பன.

2. திருவாய். 2. 4: 1.

3. அங்ஙனம் வாடிய வாட்டத்தைத் தீர்த்து, ஆழ்வார் விரும்பிய மோக்ஷத்தை இறைவன் கொடுக்கப்புகுந்தபடியை அருளிச்செய்கிறார் 'உலராமல்' என்று தொடங்கி.

4. திருவாய். 2. 4: 7.

5. திருவாய். 2. 5: 1.

6. திருவாய். 2. 6: 2.

7. திருவாய். 2. 6: 7.

8. திருவாய். 2. 7: 1.



அடியரானார்கள்; ஒரு காரணமும் இன்றியே செய்கின்ற பகவானுடைய கிருபையாகிற பெரும்சதிரைப் பெற்று ஸ்ரீவைஷ்ணவச் செல்வமானது ஊற்றுமாறாமல் பெருகுகிறபடியே! என்று இவர் தாமே ஆச்சர்யப்படும்படி இவரை வாழ்வித்து, [1] உபகரிக்கிற - இப்படித் தம்முடைய சம்பந்தி பரம்பரை அளவும் வெள்ளம் இடுகிற அவனுடைய பிரீதியாலே தமக்கு அவன் கொடுக்கத் தேடுகிற, நீந்தும் கெடலில் எம் மா வீட்டை - நீந்தும் - "நீந்தும் துயரில்லா வீடு" என்கிறபடியே துக்கம் என்பது சிறிதும் இல்லாததாய், கெடலில் - "கெடலில் வீடு" என்கிறபடியே அழிவு என்பது சிறிதும் இல்லாததாய், எம்மாவீட்டை-"எம் மா வீடு" என்கிறபடியே எல்லா வகையாலும் உயர்ந்ததான மோக்ஷத்தை,

[2] உபய அநுகுணம் ஆக்கினவர் - எனக்கு என்று தரில், அங்ஙனம் தருகின்ற மோக்ஷம் அகங்காரத்தை உட்கொண்டதாகையாலே செல்வம் முதலியவற்றைப்போன்று சொரூபத்திற்கு விரோதம் ஆகையாலே அதனுடைய பேச்சும் என்றால் பொறுக்கமுடியாதது; ஆனபின்பு, எனக்கு மோக்ஷம் தரப் பார்த்ததாகில் [3] "நின்செம்மா பாதபற்புத் தலைசேர்த்து ஒல்லை, அம்மா அடியேன் வேண்டுவ தீதே" என்கிறபடியே சேஷியான உன்னுடைய, உட்புறம் சிவந்து மேற்புறம் கரியனவாய் மேலாக பூசிக்கத் தக்கனவாய் இனிமை சிறந்தனவான திருவடிகளை அடியவனான என்னுடைய தலையிலே கொக்குவாயும் படுகண்ணியும்போலே விரைவிலே சேர்க்கவேண்டும்; சேஷியான உன்னிடத்தில் அடியவனான நான் விரும்பிப் பெறுவது இதுவே

---

1. 'உபகரிக்கிற' என்னும் எச்சத்தை, மேலே வருகின்ற 'வீட்டை' என்ற சொல்லோடு முடிக்க. இடையிலே உள்ள 'நீந்தும்' முதலிய சொற்கள் மூன்றும் வீட்டிற்கு அடைமொழிகள். 'நீந்தும்' என்பது "நீந்தும் துயரில்லா வீடு" (திருவாய். 2. 8: 2.) என்ற திருப்பாசுரப் பகுதியையும், 'கெடலில்' என்பது, "கெடலில் வீடு செய்யும்" (திருவாய். 2. 9: 11.) என்ற திருப்பாசுரப் பகுதியையும், 'எம்மா' என்பது "எம் மா வீட்டுத் திறமும்" (திருவாய். 2. 9: 1.) என்ற திருப்பாசுரப் பகுதியையும் குறிக்கின்றன.

2. அவன் கொடுக்கப்புகுந்த மோக்ஷத்தை ஆழ்வார் அறுதியிட்டபடியை அருளிச்செய்கிறார் 'உபய அநுகுணமாக்கினவர்' என்று. அதாவது, சேஷியான இறைவனுடைய சொரூபத்திற்கும் அடியவரான தம்முடைய சொரூபத்திற்கும் தகுதியாக அம் மோக்ஷம் இருக்க வேண்டும் என்று அறுதியிடுகிறார் என்றபடி. உபயம் - இரண்டு. அநுகுணம் - தகுதி.

3. திருவாய். 2. 9: 1.

என்றும், [1]"தனக்கேயாக எனைக்கொள்ளும் ஈதே" எனறும் இருவருடைய தன்மைகளுக்கும் தகுதியாக அறுதியிட்ட ஆழ்வார்,

[2]"ஆச்ரயணீயனுக்கு பூர்வ உக்த பரத்வத்தை ஸ்தாபிக்கிற - எல்லாராலும் தொழத்தக்கவனான எம்பெருமானுடைய, முதற்பத்தில் சொல்லப்பட்ட முதன்மையை நிலைபெறுத்துவனவான, [3] சகல பல பிரதத்வ காரணத்வ சேஷசாயித்வ ஸ்ரிய:பதித்வ சௌலப்ய ஆதிகளைத் திண்ணன் அணைவது என்று வெளியிட்டு - சகல பல பிரதத்துவம் - "வீடுமுதல் முழுதுமாய்" என்பதனால் மோக்ஷம் முதலான எல்லாப் பேறுகளையும் கொடுப்பவன் என்கையாலே எல்லாப் பலன்களையும் கொடுக்கின்றவனாதலையும், காரணத்வம் - "மிகும் தேவும் எப்பொருளும் படைக்கத் தகும்", "கருத்தில் தேவும் எல்லாப் பொருளும் வருத்தித்த", "தன்னுந்தியுள்ளே வாய்த்த திசைமுகன் இந்திரன் வானவர் ஆக்கினான்" என்பனவற்றால் காரணனாதலையும் [4]"திண்ணன்வீடு முதல் முழுதுமாய்" என்ற திருவாய்மொழியில் வெளியிட்டு, சேஷசாயித்வம் - "அணைவது அரவணைமேல்" என்பதனால் ஆதிசேஷசயனனாதலையும், ஸ்ரிய: பதித்வம் - 'பூம்பாவைஆகம் புணர்வது" என்பதனால் திருமகள்கேள்வனாதலையும், சௌலப்யம் - "இணைவனும் எப் பொருட்கும்" என்பதனால் அவதாரத்தின் எளிமையையும், 'ஆதி' என்ற சொல்லால் "வீடு முதலாம்" என்று மோக்ஷம் கொடுக்கின்றவனாதலையும், "நலமந்தம் இல்லதோர் நாடு புகுவீர் - பல முந்து சீரில்படிமின் ஓவாதே" என்ப

1. *திருவாய். 2. 9: 4.*

*இத்திருப்பாசுரங்களுக்கு வடக்குத்திருவீதிப் பிள்ளை எழுதிய ஈட்டின் வியாக்கியானத்தைப் படித்து இன்புறல் தகும்.*

2. *இங்ஙனம் மோக்ஷத்தை அறுதியிட்ட ஆழ்வார், உலக மக்களுடைய நல்வாழ்விற்காக உபதேசித்தவற்றை அருளிச்செய்கிறார் 'ஆச்ரயணீயனுக்கு' என்று தொடங்கி. பூர்வம் - முன். உக்தம் - கூறிய. அதாவது முதல்பத்தில் அருளிச்செய்த பரத்துவத்தை என்றபடி.*

3. *சகலபல பிரதத்வ காரணத்வங்களை, 'திண்ணன்' என்ற திருப்பதிகத்திலே வெளியிட்டு, சேஷசாயித்வ ச்ரிய:பதித்வ சௌலப்ய ஆதிகளை 'அணைவது' என்ற திருபதிகத்தாலே வெளியிட்டு என்று வாக்கியத்தைப் பிரித்துக்கொள்க. அன்றிக்கே, மேலேகூறப்பட்ட ஐந்தனையும் 'திண்ணன்', 'அணைவது' என்ற இரண்டு திருப்பதிகங்களிலும் அருளிச்செய்து என்று கோடலுமாம். மேலே காட்டியன எல்லாம் பரத்துவத்தை விளக்குவன. சகலபலபிரதத்வம் - எல்லாப்பலன்களையும் கொடுத்தல். சேஷசாயித்வம் - ஆதிசேடன்மேல் படுத்திருத்தல். ச்ரிய:பதித்வம் - திருமகள் கேள்வனாக இருத்தல்.*

4. *திருவாய். 2. 2: 1.*



தனால் முமுக்ஷுக்களால் உபாசிக்கப்படுகின்றவனாதலையும் [1]"அணைவது அரவணைமேல்" என்ற திருவாய்மொழியில் வெளியிட்டு, இவ்வுரை, இதன் பட்டோலையான நூலில் இவர் அருளிச்செய்ததற்குச் சேர்வது.

[2] அன்றிக்கே, "வீடுமுதல் முழுதுமாய்" என்றதனால் எல்லாப் பலன்களையும் கொடுக்கின்றவனாதலையும், "தேவும் எல்லாப் பொருளும் கருத்தில் வருத்தித்த மாயப்பிரான்", "ஆக்கினான் தெய்வ உலகுகள்" என்பனவற்றால் எல்லாப்பொருள்கட்கும் காரணனாதலையும், "ஆழியம்பள்ளியாரே" என்பதனால் இலக்கணையாலே ஆதிசேஷசயனனாதலையும், "பூமகள்தன்னை வேறின்றி விண்தொழத் தன்னுள்வைத்து" என்பதனால் திருமகள் கேள்வனாதலையும், "கண்ணன்கண்", "கோபாலகோளரியேறு" என்பனவற்றால் அவதாரத்தால் எளியனாதலையும், "ஆதி" என்ற சொல்லால் "தகும் கோலத் தாமரைக்கண்ணன்" என்பதனால் புண்டரீகாக்ஷனாதலையும், "பள்ளியாலிலை ஏழுலகும்கொள்ளும் வள்ளல்வல்வயிற்றுப்பெருமான்" என்பதனால் அகடிதகடநாசாமர்த்தியனாதலையும் "திண்ணன் வீடு முதல்" என்ற திருவாய்மொழியிலும்; [3]"அணைவது அரவணை மேல்" என்பதனால் ஆதிசேஷசயனனாதலையும், "பூம்பாவைஆகம் புணர்வது" என்பதனால் திருமகள்கேள்வனாதலையும், "இருவர் அவர் முதலும் தானே" என்பதனால் காரணனாதலையும், "இணைவனும் எப்பொருட்கும்" என்பதனால் அவதாரத்தால் எளியனாதலையும், "வீடுமுதலாம்" என்பதனால் எல்லாப் பலன்களையும் கொடுக்க வல்லனாதலையும், 'ஆதி' என்ற சொல்லால் "பிறவிக்கடல் நீந்துவார்க்குப் புணைவன்" என்பதனால் மோக்ஷத்திற்கு உபாயமாக இருத்தலையும், "ஆனை இடர் கடிந்த" என்பதனால் ஆபத்திற்குத் துணைவனாதலையும், "மூவுலகும் காவலோன்" என்பதனால் எல்லாப்

1. *திருவாய். 2. 8: 1.*

2. *சகல பல பிரதத்வம் காரணத்வம் என்னும் இரண்டையும் 'திண்ணன்' என்ற திருப்பதிகத்திலும், ஏனைய மூன்றையும் 'அணைவது' என்ற திருப்பதிகத்திலும் அருளிச்செய்தார் என்று இதுகாறும் கூறி, இனி அந்த ஐந்தனையும் மேற்கூறிய இரண்டு திருப்பதிகங்களிலும் தனித் தனியே அருளிச்செய்கிறார் என்பதனைக் காட்டுகிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. 'திண்ணன் வீடு' என்ற திருப்பதிகத்தில் அந்த ஐந்தனையும் அருளிச்செய்திருப்பதனைக் காட்டுகிறார் 'வீடுமுதல் முழுதுமாய்' என்றது முதல் 'திண்ணன்வீடு முதல் என்ற திருவாய்மொழியிலும்' என்றது முடிய.*

3. *இனி, 'அணைவது அரவணைமேல்' என்ற திருப்பதிகத்தில் இந்த ஐந்தனையும் அருளிச்செய்திருப்பதனைக் காட்டுகிறார் 'அணைவது அரவணைமேல்' என்றது முதல் 'திருவாய்மொழியிலும் வெளியிட்டு' என்றது முடிய.*

பொருள்களையும் காப்பவனாதலையும் "அணைவது அரவணைமேல்" என்ற திருவாய்மொழியிலும் வெளியிட்டு என்று கோடலுமாம்.

[1] இப்பொருளில் "ஆழி யம் பள்ளியாரே" என்பதற்கு ஆதி சேஷசயனன் என்னும் பொருளை இலக்கணையினால் கொள்ளவேண்டுகையும், "வீடு முதலாம்" என்று மோக்ஷத்திற்குக் காரணமாம் என்பதனை இடத்திற்குச் சேராதபடி மோக்ஷம் முதலான பேறுகளைக் கொடுப்பவன் என்று சொல்லுகையும், 'சகல பல பிரதத்வம்' என்று தொடங்கி இவர் எண்ணின அடைவிற்குச் சேர "திண்ணன் வீடு" "அணைவது அரவணை" என்ற இரண்டு திருவாய்மொழிகளிலும் சொல்லப்போகாமையும் ஆகிற நயமின்மைகளும் உண்டு.

[2] கள்வா தீர்த்தன் என்று வசந பிரத்யக்ஷங்களும் காட்டி - கள்வா என்று வசநம் காட்டி - [3] "கள்வா" என்கிற திருப்பாசுரத்திலே, 'அவதரித்து உன்னுடைய முதன்மை தெரியாதபடி நின்றாயேயாகிலும் எங்களுக்குக் காரணனான சேஷி நீயே' என்று தேவர்களில் தலைவர்களான பிரமன் சிவன் முதலானவர்கள், தங்களுக்குக் காட்சி கொடுப்பதற்குப் பெரிய திருவடியை மேற்கொண்டு புறப்பட்டால் அவனுடைய திருவடிகளிலே விழுந்து கூப்பிடாநிற்பர்கள் என்று, 'அவனே பரம்பொருள்' என்னும் இவ்வர்த்தத்திற்கு' மற்றைத் தேவர்களுடைய வார்த்தையைக்காட்டி, தீர்த்தன் என்று பிரத்யக்ஷம் காட்டி - [4] "தீர்த்தன் உலகளந்த" என்ற திருப்பாசுரத்திலே, பாசுபதாஸ்திரம் ஒன்றனைப் பெறுவதற்காக மலர் முதலியவற்றைக் கொண்டு சிவனை ஆராதிக்கப் புகுகிற அருச்சுனனைப் பார்த்து 'அம்மலர்களை நம் காலிலே பொகடு' என்று கிருஷ்ணன் அருளிச் செய்ய, அவனும் தூயோனாக இருக்கின்றவனுடைய திருஉலகு அளந்தருளின திருவடிகளிலே அம் மலர்களைப் பணிமாற, [5] "வெற்றி வீரனான அருச்சுனன் ஸ்ரீ கிருஷ்ணனுடைய திருவடித்தாமரைகளில் அணிந்த அழகிய அம்மலரை சிவன் முடியின் நடுவில் கண்டான்;

1. இரண்டாவதாக அருளிச்செய்த இந்த யோஜனையில் உள்ள சில குறைகளைக் காட்டுகிறார் 'இப்பொருளில்' என்று தொடங்கி.

2. இவ்வாக்கியத்தை, கள்வா என்று வசநம் காட்டி, தீர்த்தன் என்று பிரத்யக்ஷம் காட்டி என்று கூட்டுக.

3. திருவாய். 2. 2: 10. 4. திருவாய். 2. 8: 6.

5. பார்த்தோ விஜேதா மதுசூதநஸ்ய பாதாரவிந்தார்ப்பித சித்ரபுஷ்பம்
ததர்ச கங்காதர மௌலிமத்யே பூவவீர: க்ருதநிச்சிதார்த்த:
என்பது, பிரமாணம்.



வீரனாகிய அருச்சுனன், நிச்சயிக்கப்பட்ட அர்த்தத்தையுடையவனானன்" என்கிறபடியே தான் திருவடிகளில் அணிந்த மலர்களோடு ஒத்த வேறுமலர்களை அல்லாமல் அம்மலர்களையே, பாடே பக்கே அன்றிக்கே சிவன் தலைமேலே, பெரியோர்களுடைய வார்த்தைகளால் அன்றிக்கே தானே நேரில் கண்டு [1] "பெரிய மனத்தையுடைய அந்த அருச்சனன்" என்கிறபடியே மிகப்பெரிய ஞானத்தையுடையனான அவன் நிர்ணயித்த பரத்துவம் சிற்றறிவினர்களாலே இன்று ஆராயும்படி இருந்ததோ என்று காட்சி அளவையும் காட்டி,

[2] புலன்ஐந்து என்று சம்சார மோக்ஷ சாதந துக்க ஆனந்த ரசம் முன்னாக விதிக்கிற - "புலன் ஐந்து" என்னும் திருப்பாசுரத்திலே அவனைத் தொழுவதற்கு இழிகின்றவர்களுக்கு விடத்தக்கனவற்றிலே வெறுப்பும், பேற்றிலே பேரவாவும், சாதனத்தில் ருசியும் உண்டாகும்படி "புலன்ஐந்து மேயும் பொறி ஐந்தும் நீங்கி - என்று, அளவிற்கு உட்பட்ட பொருள்களைப் பற்றுதற்குக் கருவிகளான இந்திரியங்களுக்கு வசப்பட்டவராதல் தவிர்ந்து என்கையாலே, சிறியவை நிலையற்றவை முதலான குற்றங்களால் மூடப்பட்டனவான ஐம்புல இன்பங்களை அநுபவித்திருக்கும் இவ்வுலக வாழ்வின் துக்கமும், "நலம் அந்தம் இல்லது ஓர் நாடு புகுவீர்" என்று, நன்மைக்கு முடிவில்லாத திருநாட்டிலே புகுவீர் என்கையாலே, மோக்ஷத்தினுடைய ஆனந்தமும், "பலமுந்து சீரில் படிமின்" என்று, [3] "செய்வதற்குச் சுகமாக இருக்கும்" என்கிறபடியே நினைக்கப்படுகின்ற விஷயத்தின் இனிமையாலே பேற்றின் நிலையைப்போலே உபாய நிலையிலும் இனிதாய் இருக்கையாலே [4] பலம் முற்பட்டிருக்கின்ற கல்

1. "ஸது பார்த்தோ மஹா மநா:"
என்பது, ஸ்ரீகீதாபாஷ்யம்.

இறைவனுடைய பரத்துவத்தை அருச்சுனன் நேரே கண்டானாதலின் 'காட்சியளவையும் காட்டி' என்கிறார்.

2 இவ்வாக்கியத்தை, புலன் ஐந்து என்று சம்சார துக்க, மோக்ஷ ஆநந்த, சாதந ரசம் முன்னாக விதிக்கிற என்று மாற்றிக் கூட்டுக. 'புலனைந்து' என்னும் திருப்பாசுரத்தில் 'புலனைந்து மேயும் பொறியைந்து' என்கையாலே சம்சார துக்கத்தையும், 'நலமந்தமில்லதோர் நாடு' என்கையாலே மோக்ஷ ஆனந்தத்தையும், 'பலமுந்து சீரில் படிமின் ஓவாதே' என்கையாலே சாதன ரசத்தையும் தெரிவித்திருத்தல் காண்க. இத்திருப்பாசுரம், திருவாய். 2. 8: 4.

3. "ஸுஸுகம் கர்த்தும்"
என்பது, ஸ்ரீகீதை, 9: 2.

4. சிலகாரியங்கள் முதலிலே மிக வருத்தமாய் முடிவிலே இன்பமயமாக இருக்கும்; பகவானுடைய நற்குணங்களை அநுபவிக்கும் அநுபவ

யாண குணங்களிலே ஆசையுடையீர் ஆகுங்கோள் என்கையாலே, உபாயத்தினுடைய இனிமை முன்னாக இவ்வுலக வாழ்வினை நீக்கிக் கொண்டு மோக்ஷத்தை அடையவேண்டியிருப்பார், அசுரக் கூட்டத்தைத் தடுமாறி முடிந்துபோம்படி செற்றவனாகையாலே பிரபலமான விரோதிகளை வருத்தமின்றிப் போக்கவல்லவனுடைய குணங்களிலே காதலுடையீராகுங்கோள் என்று விதிக்கிற, அந்தர்குண உபாசனத்தை - [1] "அந்தப் பரம்பொருளிடத்தில் எந்தக் குணம் உள்ளிருக்கின்றதோ அது உபாசிக்கத் தக்கதாம்" என்கிறபடியே பரப்பிரஹ்ம சொரூபத்திற்குள் இருக்கும் [2] அபஹதபாப்மத்வம் முதலான குணங்களை வழிபடும் வழிபாட்டினை,

பரம்பொருளை வழிபடுவதற்கு, சாஸ்திரங்களில் விலக்கியனவற்றை நீக்க வேண்டுதலின் அவற்றை நீக்கிக்கொண்டு, திவ்விய தேசங்களில் வசித்தல் முதலானவை அங்கங்கள் ஆகையாலே அவற்றோடு கூட்டி உபதேசிக்கிறார் மேல் :

[3] மதித்துப் பெருக்கி மூழ்கி அழுந்திக் கீழ்மை வலம் சூதும் செய்து இளமை கெடாமல் - இவ் விரண்டாம்பத்தில் பரோபதேசத்தைச் செய்யும் திருவாய்மொழி "கிளர் ஒளி இளமை கெடுவதன் முன்னம்" என்ற திருப்பதிகம் ஆகையாலே அதில் உபதேசித்த விஷயங்களை விளக்குகிறார் இவ்வாக்கியத்தால். மதித்து - "சதிரிளமடவார் தாழ்ச்சியை மதித்து", பெருக்கி - "திறமுடை வலத்தால் தீவினைபெருக்கி", மூழ்கி - "வல்வினைமூழ்கி", அழுந்தி - "நரகுஅழுந்தி", கீழ்மை - "கீழ்மை செய்து", வலம் - "வலம் கழித்து", சூதும் செய்து - "சூதென்று களவும் சூதும் செய்து", இளமைகெடாமல் - "கிளர்ஒளி இளமை கெடுவதன் முன்னம்"

---

*மானது அங்ஙனமன்றிக்கே ஆனந்தமயமாகவே இருப்பதாலே ஆரம்ப நிலையிலிருந்தே பலனாகவே இருக்குமாதலின் 'பலம் முற்பட்டிருக்கின்ற' என்கிறார்.*

1. *"தஸ்மிந் யதந்தஸ்ததுபாஸிதவ்யம்"*
*என்பது, தைத்திரீயஉப.*

2. *அபஹதபாப்மத்வம் - பாபங்கள் இல்லாத தன்மை.*

3. *மதித்து, பெருக்கி, மூழ்கி, அழுந்தி, கீழ்மை செய்து, வலம் கழித்து, சூதும் செய்து என வரும் எச்சங்களை, 'இளமை கெடாமல்' என்பதிலுள்ள கெடாமல் என்னும் எச்சத்தோடு முடிக்க. கெடாமல் - கெடுக்காமல். மேலே காட்டப்பட்டவையும் கீழே காட்டப்படுமவையும் "கிளரொளி இளமை"என்ற திருப்பதிகத்திலே உள்ள திருப்பாசுரப் பகுதிகள்.*



என்று, வணங்குதற்கு விரோதியான இவ்வுலக வாழ்வில் காதலைச் செய்து, அதனாலே பாவங்களைக் கூடுபூரித்து, அவற்றிலே மறுநனைய மூழ்கித் தறைப்பட்டுத் தண்மையைச் செய்து பலத்தைப் பாழ்போக்கிக் கள்ளனாய் வஞ்சகனாய் இளமையைப் பாழே போக்காதே, செய்யும் க்ஷேத்ரவாச சங்கீர்த்தந அஞ்சலி பிரதக்ஷிண கதி சிந்தநா ஆதி அங்கயுக்தம் ஆக்குகிறார் இரண்டாம் பத்தால் - [1] "இளமையிலே தருமத்தைச் செய்யவேண்டும்" என்றும், [2] "ஆகையால் அறிவுபொருந்திய மனத்தையுடையவன் எப்பொழுதும் இளமையிலேயே சீர்த்திக்காக முயற்சி செய்யக்கடவன்" என்றும் சொல்லுகிறபடியே இளமையிலே செய்யத்தக்கனவான "மாலிருஞ்சோலை சார்வது சதிரே" என்றும், "போதவிழ்மலையே புகுவது பொருளே" என்றும் சொல்லுகிற திவ்வியதேச வாசம், "பதியது ஏத்தி" என்கிற துதி, "தொழக்கருதுவதே" என்கிற தொழுகை, "வலம் செய்து நாளும் மருவுதல் வழக்கே" என்கிற வலம் வருதல், "நெறிபட அதுவே நினைவது நலமே" என்கிற நெறியை நினைத்தல் ஆகிற இவை முதலான வழிபாட்டின் அங்கங்களோடே சேர்க்கிறார் இரண்டாம் பத்தில். (2)

## 221

*[3] முழுதுமாய் எங்கணும் ஒழிவற அருவாகி நின்று*
*தோய்விலன் ஆம் சர்வ வியாபகன்; தீர்ந்த அடியார்*
*களைத் தாளிணைக்கீழ்க் கொள்ளும் தன்படிக்கும்,*
*நீ தந்த மாமாயப் புணர்வினைப் பிறப்பழுந்தி அல*

---

1. *"பால்ய ஏவ சரேத் தர்மம்"*
*என்பது, பிரமாணம்.*

2. *"தஸ்மாத் பால்யே விவேகாத்மா யதேத ச்ரேயஸே ஸதா"*
*என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 1. 17: 75.*

*ஆக, இரண்டாம்பத்தால் இறைவனுடைய காரணத்வத்தை வெளியிட்டமை, அந்த இறைவனாலே ஆழ்வார் தாம் அறியாதன அறிவிக்கப் பெற்று உள்ளம் தேறினமை, ஞானத்தின் பலமான மோக்ஷத்தைத் தேடி வாடினமை, அந்த வாட்டம் தீர இறைவன் விசேஷாநுக்கிரஹம் செய்து மோக்ஷத்தையும் கொடுப்பதாக இருந்தமை, அந்த மோக்ஷத்தின் தன்மையை ஆழ்வார் அறுதியிட்டுப் பேசினமை, இவ்வுலக மக்களுக்கு உபதேசிக்க ஒருப்பட்டுச் சகுணபிரஹ்ம வழிபாட்டினை அங்கத்தோடு விதித்தமை ஆகிற இவையெல்லாம் தெரிவித்தபடி.*

3. *இச்சூத்திரத்தை மூன்று பகுதிகளாகப் பிரித்துக் கோடல் வேண்டும். முதற்பகுதியில் இம் மூன்றாம்பத்தில் பேசப்படுகின்ற இறைவனுடைய குணம் தெரிவிக்கப்படுகின்றது. இரண்டாவது பகுதியில் இறைவன் ஆழ்வார்க்குச் செய்த அருளும், அதனால் ஆழ்வார் அடைந்த*

மருகின்றேன் வேரற அரிந்து எந்நாள் எங்கு வந்து தலைப்பெய்வன் என்று கழித்துப் புகும் தம் காதலுக்கும் சத்ருசமாக, கண்டுகொள் என்னும் ஊனமில் மோக்ஷ பலமான முடிச்சோதியில் அநுபவத்தாலே நித்யவஸ்து நீடுபெற்று, அவச்சேதம் அற்ற அடிமை செய்யவேண்டும்படி சர்வாத்ம பாவத்தைப் புகழ்ந்து, சொல்லிப் பாடி ஏத்திப் பிதற்றி எழுந்தும் பறந்தும் துள்ளிக் குனித்துத் தடுகுட்டக் கும்பிடு நட்டமிட்டுச் சிரிக்கக் குழைந்து நையும் பிரீதி உகள, தம் அடியார் என்ன உடன்கூடும் சாத்யம் வளர, பைகொள் பாம்புபோலே இந்த்ரிய விருத்தி நியமம் அற, பாட வந்த கவி அன்றிக்கே படைத்தான் சுலோகக்கிருத்தாய், குறை முட்டுப் பிரிவு இடர் துயர் துன்பம் அல்லல் துக்கம் தளர்வு கேடுகள் இன்றி அம்ருதாநந்த மக்நரானவர்,) 'செய்ய தாமரைக் கண்ணன், அமரர் குலமுதல்' என்று அஞ்சாதபடி, எளிவரும் இணைவனும் என்றவை பரத்வமாம்படி 'அவனுகும்' சௌலப்ய காஷ்டையைக் காட்டி, வழியைத் தருமவன் நிற்க, இழியக் கருதுவது என்னுவது, வேண்டிற்றெல்லாம் தரும், தன்னுகவே கொள்ளும், கவி சொல்ல வம்மின் என்று, முக்த ஐச்வர்யத்தை முன்னிட்டு, ச்வவிருத்தியை மாற்றி ஸ்வவிருத்தியிலே மூட்டுகிறுர் மூன்றும்பத்தில்.

என்பது, சூத்திரம்.

வியாக் :— [1] "எல்லாப் பொருள்களையும் படைத்து அவற்றிற்குள்ளே அநுப்பிரவேசித்தான்" என்கிறபடியே காரியவடிவமான உயிர்ப்பொருள் உயிரல்பொருள்கள் அடையப் பரந்து உறைந்து அவற்றினுடைய குற்றங்கள் தன்னைத் தீண்டப்பெருதவனுயிருக்கையினுலே, எல்லாப் பொருள்களிலும் பரந்து உறைபவனுன சர்வேச்வரன், மேற்பத்தில், எம்பெருமானும் ஆழ்வாரும் என்னும் இவ் இருவ

தன்மையும் தெரிவிக்கப்படுகின்றது. மூன்றும் பகுதியில் அத்தன்மையை அடைந்த ஆழ்வார் மக்களுக்குச் செய்த பரோபதேசம் உணர்த்தப்படுகிறது. 'ஸர்வவியாபகன்' என்பது முடிய முதற்பகுதி. அதற்குமேல் 'அம்ருதாநந்த மக்நரானவர்' என்பது முடிய இரண்டாம் பகுதி. அதற்குமேல் உள்ளன வெல்லாம் மூன்றும் பகுதி.

1. "தத் ஸ்ருஷ்ட்வா ததேவாநுப்ராவிசத்" என்பது, தைத்திரீயோபநிடதம்.



ருடைய சொரூபத்திற்குத் தகுதியாக, ஆழ்வாராகிய தாம் அறுதியிட்ட மோக்ஷத்துக்குப் பலனுன தன்னுடைய திவ்வியமங்கள விக்கிரக அநுபவத்தை இவர் பெற்றவராம்படி செய்த அளவில், இவரும் அநுபவித்துத் தரித்து, அவ்வநுபவத்தால் உண்டான உவப்பின் மிகுதியாலே எல்லாவிதமான கைங்கரியங்களையும் செய்யவேண்டும்படியான ஆவல் மிக்கவராய், அந்த ஆவலுக்குத் தகுதியாக, அப்பெருமான் காட்டிக்கொடுத்த அவனுடைய எப்பொருள்கட்கும் உயிராயிருக்குந் தன்மையினைப் பேசி, அதனுலே வந்த உவப்பின் உகளிப்பையுடையராய், அந்தப்பிரீதி அவன் அளவும் அடங்கி நில்லாது, பாகவதர்களுக்கு அடிமை என்னும் எல்லை நிலமளவும்சென்று, அந்தப் பாகவதர்களுக்கு நிரூபகம்ஆன பகவானுடைய வேறுபட்ட சிறப்பினைச் சொல்லுமுகத்தால், ஒரு கரணத்தின் செயலை மற்றொரு கரணம் ஆசைப்படும்படி, அறிவுடையார் தன்மையை அடைந்த உறுப்புக்களின் கூட்டமும் தாமும் தனித்தனி அநுபவிக்கவேண்டும் பெருவிடாயை உடையராய், இறைவனை அன்றி மற்றைய எவரையும் துதித்தற்குத் தகுதியற்றனவான உறுப்புக்களையுடையராய், அவ்வளவின்றி இறைவனைத் துதிப்பதற்குத் தக்க கரணங்களையுடையருமாய், இறைவனை அநுபவிப்பதற்குத் தமக்கு ஒருவகை இடையூறு முதலானவையும் இன்றி எல்லை இல்லாத ஆனந்தத்தையுடைய ஆழ்வார்,

'தாமரைக் கண்ணனுய் நித்தியசூரிகளால் சேவிக்கப்படுகின்றவனை நம்மால் தொழப்போமோ' என்று இவ்வுலக மக்கள் அஞ்சிக் கைவாங்காமல் மேல்விழுந்து வணங்கும்படி, மேல் இரண்டு பத்துக்களாலும் உபதேசித்த அவதாரத்தின் எளிமையும் பரத்துவத்தின் நிலையிலே உள்ளது என்னும்படி உள்ள அர்ச்சாவதாரத்தின் எளிமையை அவர்களுக்கு உபதேசித்து, அர்ச்சிராதி மார்க்கத்தாலே பரமபதத்தை அடைவிக்குமவனுன எம்பெருமானை ஒழிய, மற்றையோரைத் துதிப்பதிலே தாழஇழிதல் பயன் அற்றது; ஆனபின்பு, நீங்கள் எல்லாப் பலன்களையும் கொடுக்கின்றவனுமாய்த் தன்னையே ஒக்க அருள்செய்பவனுமான அவ்விறைவன் விஷயத்திலே வாசிகமான அடிமையைச் செய்யுங்கோள் என்று பிறரைக் கவிபாடுதல் ஆகிற இழிதொழில்களை நீக்குவித்து, தம்முடைய செயலான வாசிக கைங்கர்யத்திலே மூட்டுகிறுர் என்கிறுர்.

[1] முழுதுமாய் எங்கணும் ஒழிவற அருவாகிநின்று தோய்விலனும் சர்வவியாபகன் - முழுதுமாய் - [2] "முழுதுமாய் முழுதியன்றுய்" என்

1. இறைவனுடைய 'சர்வவியாபகத்வம்' என்ற குணம் மூன்றும் பத்தில் சொல்லப்படுகிறது என்கிறுர் 'முழுதுமாய்' என்று தொடங்கும் முதல் வாக்கியத்தால். 2. திருவாய். 3: 1: 8.

றும், எங்கணும் - [1]"ஏழ்ச்சிக் கேடு இன்றி எங்கணும் நிறைந்த எந் தாய்'' என்றும், ஒழிவற - [2] "எஞ்ஞான்றும் எங்கும்ஒழிவற நிறைந்து நின்ற '' என்றும், அருவாகி நின்று - [3] "அளவுடையைம்புலன்கள் அறியாவகையால் அருவாகி நிற்கும் '' என்றும் சொல்லுகிறபடியே, தேசத்தாலும் காலத்தாலும் பொருள்களாலும் அளவிட்டு அறியமுடி யாதபடி, காரியமான அறிவுடைப்பொருள் அறிவில்பொருள்கள் எல்லாவற்றிலும் பரந்து, தோய்விலனும் சர்வவியாபகன் - [4] "யாவை யும் எவரும் தானுய் அவர் அவர் சமயம்தோறும், தோய்விலன் உணர் வின் மூர்த்தி'' என்றும், [5]"இவனின் வேருன இறைவன் கர்மங் களின் பலனை அனுபவியாமல் மிக அதிகமாகப் பிரகாசிக்கிருன் '' என்றும் சொல்லுகிறபடியே, அவற்றின் குற்றங்கள் தன்னைத் தீண்டப் பெருதவனுயிருக்கையாலே எங்கும் பரந்திருக்கிற சர்வேச்வரன்,

[6] தீர்ந்த அடியார்களைத் தாள்இணைக்கீழ்க் கொள்ளும் தன்படிக் கும் - [7] "தீர்ந்த அடியவர்தம்மைத் திருத்திப் பணிகொள்ளவல்ல '' என்கிறபடியே, அடையும் பேறும் அடைவிக்கும் வழியும் எம்பெரு மானே என்று திடமான உறுதிகொண்டவர்களான அடியவர்களை, [8] "சன்ம சன்மாந்தரம் காத்து அடியார்களைக் கொண்டுபோய்த் தன்மை பெறுத்தித் தன் தாளிணைக்கீழ்க் கொள்ளும் அப்பனை '' என்கிறபடியே, தொடர்ந்து வருகிற பிறவிகளிலே புகாதபடி பாது காத்து, எடுத்துள்ள இந்தச் சரீரத்தின் முடிவிலே அர்ச்சிராதி மார்க் கத்தாலே பரமபதத்திலே கொண்டு சென்று, தன் உருவத்தைப் பெறுகின்ற தன்மையைச் செய்துகொடுத்து, திருவடிகளுக்கு அணை யைப்போலுமதாகத் தன் திருவடிகளின்கீழே இட்டுக்கொள்ளும் சேஷி யான அவனுடைய வள்ளல் தன்மைக்கும்,

---

1. திருவாய். 3. 2: 4.
2. திருவாய். 3. 2: 7.
3. திருவாய். 3. 10: 10.
4. திருவாய். 3. 4: 10.
5. "அநச்நந்அந்யோ அபிசாகசீதி'' என்பது, கடோபநிட.
6. இறைவன் ஆழ்வார்க்குக் காட்டிக் கொடுத்த மோக்ஷத்தின் தன்மை எத்தன்மைத்தென்னில், தீர்ந்த அடியார்களைத் தன் தாளிணைக் கீழ்க்கொள்ளும் தன் படிக்குத் தக்கதாகவும், ஆழ்வாருடைய காதலுக் குத் தக்கதாகவும் காட்டிக் கொடுத்தான் என்கிருர் 'தீர்ந்த' என்று தொடங்கி.
7. திருவாய். 3. 5: 11.
8. திருவாய். 3. 7: 7.



நீதந்த மாமாயப் புணர்வினைப் பிறப்புஅழுந்தி அலமருகின்றேன் வேர்அற அரிந்து எந்நாள் எங்குவந்து தலைப்பெய்வன் என்று கழித் துப் புகும் தம்காதலுக்கும் - நீதந்த - [1] "அந்நாள் நீ தந்த ஆக்கையின் வழிஉழல்வேன் '' என்கிறபடியே படைப்புக் காலத்திலே உன்னைப் பெறுகைக்கு உறுப்பாக நீதந்த சரீரத்தைக் கொண்டு உன்னைப்பெறு தற்குப் பாராமல் நான் அதன் வழியே சென்று கேட்டினைச் சூழ்த்துக் கொண்டு, மா மாய - [2] "பல்மாமாயப்பல்பிறவியில் படிகின்ற யான்'' என்கிறபடியே முக்குணங்களின் வேறுபாட்டாலே பலவகைப்பட்டுத் தாண்ட முடியாததான மூலப்பகுதியின் காரியமான தெய்வவுடல் முதலான சரீரங்களிலே மூழ்கி, புணர்வினை - [3] "பொல்லா ஆக்கை யின் புணர்வினை அறுக்கலறு '' என்கிறபடியே இழிந்த இந்தச் சரீரத் திற்குக் காரணமாய் ஒன்ருேடு ஒன்று பிணைந்திருக்கிற, பிறப்பு அழுந்தி - [4] "வினையியல் பிறப்பு அழுந்தி '' என்கிறபடியே கர்மங் கள் காரணமாக மீண்டும் பாவங்களிலே கொண்டுபோய் மூட்டக் கடவதான தொடர்ந்து வருகிற பிறவிகளிலே அழுந்தி, அலமருகின் றேன் - [5] "கொடுவினைத் தூற்றுள் நின்று பாவியேன் பலகாலம் வழி திகைத்து அலமருகின்றேன் '' என்கிறபடியே என்னுல் அடிஅறுக்க வும் அடிகாணவும் ஒண்ணுதே புகுரவழி தெரியுமதொழியப் புறப்பட வழிதெரியாத தீவினைகளாகிற மிடைந்த தூற்றிலே அகப்பட்டு நின்று உன்னை அடைதற்கு ஈடான வழி காணுமல் கூப்பிட்டு அலமாவா நின்றேன், வேர்அற அரிந்து - [6] "வினைகளை வேர்அறப் பாய்ந்து'' என்றும், [7] "தொன்மா வல்வினைத் தொடர்களை முதல் அரிந்து '' என்றும் சொல்லுகிறபடியே அநாதியாய் அளவிட்டு அறியமுடியாத தாய்த் தம் முயற்சியால் நீக்கஒண்ணுதபடி மிக்க பிரபலமான பாவங் களினுடைய தொடர்களை மறுகிளை வாராமல் வேர் அற்றுப்போம்படி ஊசிவேரோடே அறுத்துப் பொகட்டு, எந்நாள் எங்குவந்து தலைப்பெய் வன் என்று - [8] "எந்நாள் யான் உன்னை இனிவந்து கூடுவன் '' என் றும், [9] "எங்கு வந்து அணுகிற்பன் '' என்றும், [10] "எங்கு இனித் தலைப்பெய்வன் '' என்றும் சொல்லுகிறபடியே நான் உன்னைக் கிட்டு வது ஒருநாள் அறுதியிட்டுத் தரவேண்டும், நான் உன்னை எங்கே வந்து கிட்டக்கடவேன், இனி கிட்டுகை என்று ஒருபொருள்

---

1. திருவாய். 3. 2: 1.
2. திருவாய். 3. 2: 2.
3. திருவாய். 3. 2: 3.
4. திருவாய். 3. 2: 7.
5. திருவாய். 3. 2: 9.
6. திருவாய். 3, 2: 1.
7. திருவாய். 3. 2: 2.
8. திருவாய். 3. 2: 1.
9. திருவாய். 3. 2: 5.
10. திருவாய். 3, 2: 9.

உண்டோ என்று சரீர சம்பந்தத்திற்கு நொந்து, அதில் உண்டான வெறுப்போடே, கழித்துப் புகும் தம் காதலுக்கும் - [1] "காயம் கழித்து அவன் தாளிணைக்கீழ்ப் புகும் காதலன்" என்கிறபடியே பகவானுடைய குணங்களை அநுபவித்துக்கொண்டே காலத்தைக் கழித்துச் சரீரத்தை விட்டு அவன் திருவடிகளின் கீழே புகவேண்டும் என்னும் படியான அடியவரான தம்முடைய காதலுக்கும்,

சத்ருசமாக - இப்படியான இருவர் படிக்கும் தகுதியாக,

நீ கண்டுகொள் என்னும் ஊனமில் மோக்ஷ பலமான முடிச் சோதியில் அநுபவத்தாலே - நீ கண்டுகொள் என்னும் - [2] "வானவர் நாட்டையும், நீ கண்டுகொள் என்று வீடும் தரும் நின்று நின்றே" என்கிறபடியே ஈச்வரன் காட்டிக்கொடுக்கிற, ஊனம்இல் மோக்ஷபலமான - [3] "ஊனம்இல் மோக்கம் என்கோ" என்கிறபடியே அவனுக்குச் சரீரமான ஆத்மஅநுபவமாத்திரத்தில் அன்றிக்கே, உயிராய் நின்ற அவன் அளவும் செல்ல அநுபவிக்கையாலே குறைவு இல்லாத தாய்ச் சொரூபத்துக்குத் தகுதியாக மேலே கூறிய பத்தில் அறுதி இட்ட பரமபுருஷார்த்தமான மோக்ஷத்திற்குப் பலம் பகவானை அனுபவிக்கும் அநுபவமும் கைங்கர்யமுமே ஆதலால், முடிச்சோதியில் அநுபவத்தாலே - [4] "முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ" என்ற திருவாய்மொழியில் அவன் வடிவழகையும் ஆபரணச் சேர்த்தியையும் அநுபவித்து,

[5] நித்யவஸ்து நீடுபெற்று - அவற்றை அளவிற்குட்படுத்தி அநுபவிக்க முடியாமையாலே இது தம்முடைய கரணங்களின் குறைவு காரணமாக வந்தது என்று நினைத்து இவர் வருத்தமுற்றிருக்க, ஈச்வரன், 'ஆழ்வீர்! நீர் ஏன் வருந்துகின்றீர்? நம்மைப் பூரணமாக அனுபவிக்கமுடியாமைக்குக் காரணம் கரணங்களின் குறைவு என்று நீர் நினைக்கின்றீர்; அங்ஙனம் நினைக்கவேண்டா; நம்முடைய அழகு முதலியன அளவிடமுடியாதனவாகையாலே பரிபூரண அநுபவம் செய்யமுடியவில்லையே என்ற தளர்ச்சி, நித்திய

1. *திருவாய். 3. 9: 8.*

2. *திருவாய். 3. 9: 9.* 3. *திருவாய். 3. 4: 7.*

4. *திருவாய். 3. 1: 1.*

5. *நித்யவஸ்து - ஆன்மா. நீடுபெற்று - தரிக்கப்பெற்று. ஆன்மா சரீரத்திலே தரித்து நின்று என்பது பொருள். இது, மூன்றும் பத்தின் இரண்டாம் திருப்பதிகத்திற் சொல்லப்பட்ட பொருள். அதாவது, இரண்டாம் திருப்பதிகத்தின் கருத்துப்பொருள் என்றபடி.*



முக்தர்களுக்கும் உண்டு காணும்' என்று அறிவித்து ஆழ்வாருடைய வருத்தத்தை மாற்ற, அதனால் ஒருவாறு மகிழ்வுற்ற ஆழ்வார், அவ்வநுபவத்தாலே "நிலைபெற்று என்நெஞ்சம் பெற்றது நீடுயிரே" என்கிறபடியே நித்தியமான ஆன்மா தரிக்கப்பெற்று,

[1] அவச்சேதம் அற்ற அடிமை செய்யவேண்டும்படி-உயிர் தரித்திருத்தலுக்குரிய காரியமும் பலிக்கவேண்டுகையாலே "ஒழிவில் காலம் எல்லாம் உடனாய்மன்னி, வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்" என்கிறபடியே இன்ன காலத்திலே என்றும், இன்ன இடத்திலே என்றும், இன்ன நிலையிலே என்றும், இன்ன கைங்கர்யம்தான் என்றும் வரையறுத்துக்கொள்ளாதபடி எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் எல்லா நிலைகளிலும் எல்லாவிதமான கைங்கர்யங்களையும் செய்யவேண்டும்படியான பேராவலாலே,

[2] சர்வாத்ம பாவத்தைப் புகழ்ந்து - "ஒழிவில் காலம்" என்ற திருப்பதிகத்தில் எல்லாவிதமான அடிமைகளையும் செய்யவேண்டும் என்று விரும்பிய தம்முடைய பாரிப்புக்கு ஈடாக, தம்மை அடிமை கொள்ளும்படி கோலி, அவன் காட்டிக்கொடுத்த சர்வாத்ம பாவத்தைப் "புகழும் நல் ஒருவன் என்கோ" என்ற திருவாய்மொழியிலே ஐம்பெரும்பூதங்கள், அப்பூதங்களின் சேர்க்கையாலாய பொருள்கள், ஒளிபொருந்திய மாணிக்கங்கள் முதலானவை, இனிய சுவையுள்ள பொருள்கள், இசைநூல் முதலான நூல்கள், மோக்ஷம் முதலான பேறுகள், உலகத்திற்கு முதல்வரான பிரமன் சிவன் முதலானவர்கள், இவற்றுக்கெல்லாம் காரணமான மூலப்பகுதியும் புருஷனும், ஆகிற இவற்றை எல்லாம் ஆளப்படும் செல்வமாக உடையனாய், இவற்றிலே அந்தராத்மாவாகப் பரந்துறைந்து இவற்றின் குற்றங்கள் தன்னைத் தீண்டாதபடியனாய் இருக்கிறபடியைப் பேசி, அவ்வநுபவத்தாலே பிரீதராய்,

[3] சொல்லி பாடி ஏத்தி பிதற்றி எழுந்தும் பறந்தும் துள்ளி குனித்து தடுகுட்டம் கும்பிடு நட்டமிட்டு சிரிக்க குழைந்துநையும் பிரீதி உகள - சொல்லி - "எம்மானைச் சொல்லிப் பாடி" என்றும்,

1. *இவ்வாக்கியம், "ஒழிவில் காலமெல்லாம்" என்ற மூன்றும் திருப்பதிகத்தில் சொல்லப்பட்ட பொருள். அவச்சேதம் - பிரிவு.*

2. *இவ்வாக்கியம், நான்காம் திருப்பதிகத்தில் சொல்லப்பட்ட பொருள். சர்வாத்ம பாவம் - கரந்த சில்லிடம்தொறும் இடம்திகழ் பொருள்தொறும் கரந்து எங்கும் பரந்து உறையும் தன்மை.*

3. *இவ்வாக்கியத்தால் "மொய்ம்மாம் பூம்பொழில்" என்ற ஐந்தாம் திருப்பதிகத்தில் சொல்லப்பட்ட பொருளைத் தெரிவிக்கிறார்.*

பாடி - "பண்கள் தலைக்கொள்ளப் பாடி" என்றும், ஏத்தி - "முனி வின்றி ஏத்தி" என்றும், பிதற்றி - "பேர்பல சொல்லிப் பிதற்றி" என்றும், எழுந்தும் பறந்தும் துள்ளி - "எழுந்தும் பறந்தும் துள்ளா தார்" என்றும், குனித்து - "ஏத்திக் குனிப்பார்" என்றும், தடுகுட் டம் - "தடுகுட்டமாய்ப் பறவாதார்" என்றும், கும்பிடுநட்டமிட்டு - "கும்பிடு நட்டமிட்டாடிக் கோகுகட்டுண்டுழலாதார்" என்றும், சிரிக்க - "உலோகர் சிரிக்க நின்றாடி ஆர்வம் பெருகிக் குனிப்பார்" என்றும், குழைந்து நையும் பிரீதி உகள - "நெஞ்சம் குழைந்து நையாதே ஊன் மல்கி மோடு பருப்பார்" என்றும் சொல்லுகிறபடியே வாக்கு மனம் காயம் என்னும் இவற்றின் செயல்களாலே களிக்கும் படி "புகழும் நல் ஒருவன்" என்ற திருவாய்மொழியில் உண்டான அந்தப் பிரீதி தலைமண்டையிட்டுச் செல்ல,

[1] தம் அடியார் என்ன உடன் கூடும் சாத்யம் வளர - இப்படி உண்டான பிரீதி அவன் அளவில் நில்லாமல் "தம்மடியார் அடியார் தமக்கு, அடியார் அடியார் தம்மடியார் அடியோங்களே" என்கிற படியே அவன் அடியார்கட்கு அடிமைப்பட்டிருத்தலின் எல்லையிலே நிற்கிறவர்கள் நாம் பற்றத்தகுவார் என்னும்படி "அடியார்கள் குழாங் களை உடன்கூடுவது என்று கொலோ" என்று மேல் இரண்டாம் பத்தில் வேண்டிக்கொண்ட பேறு அவர்களோடே கூடி அவனை அநுபவிக்கும் அளவன்றிக்கே அவன் அடியாருடைய அடிமையின் எல்லை அளவும் செல்ல வளர,

[2] பைகொள் பாம்புபோலே இந்திரிய விருத்தி நியமம் அற - "பை கொள் பாம்பு ஏறி உறை பரனே" என்கிறபடியே அனைவருக்கும் பெரியனும் அவனுடைய தன்மைக்குப் பிரகாசகமான படுக்கையா

---

1. இவ்வாக்கியம் "பயிலும் சுடரொளி" என்ற ஏழாம் திருப்பதி கத்தில் சொல்லப்படும் பொருளைத் தெரிவிக்கிறது. இங்கு ஐந்தாம் திருப்பதிகத்திற்கு அடுத்ததான "செய்ய தாமரைக் கண்ணனாய்" என்ற ஆறும் திருப்பதிகத்தில் கூறிய பொருள் இன்னது என்று கூறவேண்டி யிருக்க, அதனை விடுத்து, ஏழாம் திருப்பதிகத்தின் பொருளை அருளிச்செய் கிறார். காரணம் என்? எனின், "செய்ய தாமரைக் கண்ணன்" என்ற திருப்பதிகம் பரோபதேசம் செய்யும் திருப்பதிகம் ஆதலாலே, பரோப தேசம் செய்யும் திருப்பதிகமான "சொன்னால் விரோதம்" என்ற திருப் பதிகத்தோடு இதனையும் சேர்த்துப் பின்னர் அருளிச்செய்யத் திருவுள் ளம்பற்றி ஈண்டு அருளிச்செய்திலர்.

2. 'பைகொள்' என்று தொடங்கும் இவ்வாக்கியம், "முடியானே" என்று தொடங்கும் எட்டாம் திருப்பதிகத்தின் பொருளைத் தெரிவிக் கின்றது.



யிருக்கும் திருவனந்தாழ்வான், [1]"கண்களைக்காதுகளாகவுடையவன்" என்கிறபடியே ஓர் உறுப்பினாலே வேறோர் உறுப்பின் செயலையும் கொள்ளுமாறுபோலே, "நெஞ்சமே நீள்நகராக இருந்த என் தஞ்சனே" என்றும், "வாசகமே ஏத்த அருள்செய்யும் வானவர்தம் நாயகனே" என்றும், "கைகளால் ஆரத் தொழுது தொழுது உன்னை" என்றும், "கண்களால் காண வரும்கொல்" என்றும் வருகின்ற இன்னோ ரன்ன திருப்பாசுரங்களாலே வாக்கின் செயலை மனமும், கையின் செயலை வாக்கும், கண்களின் செயலைக் கைகளும், காதுகளின் செய லைக் கண்களும் ஆசைப்படும்படி ஆகையாலே இந்திரியங்களின் செயல்கள் நியமம் இன்றிக்கே அவனை அநுபவிக்கவேண்டும்படியான பெருவிடாயை யுடையராய்,

[2] பாட வந்த கவி அன்றிக்கே படைத்தான் சுலோகக் கிருத்தாய் "வாய்கொண்டு மானிடம் பாட வந்த கவியேன் அல்லேன்" என்கிற படியே மற்றையோரைப் பாடற்குத் தகுதிஅற்ற உறுப்பினையுடையவ ராய், "ஒன்றிஒன்றி உலகம் படைத்தான் கவி ஆயினேற்கு" என் கிறபடியே உலகத்தைப் படைத்தல் மூலமாக, தாம் உய்வுபெறுதற்கு உரிய செயலைச் செய்த சர்வேச்வரன் விஷயத்திலே [3] "நான் கவி பாடுகிறவன், நான் கவிபாடுகிறவன்" என்கிற உபநிடத வாக்கியத் தின்படியே கவிபாடுமவராய்,

[4] குறை முட்டுப் பரிவு இடர் துயர் துன்பம் அல்லல் துக்கம் தளர்வு கேடுகள் இன்றி அம்ருதாநந்தமக்நரானவர் - பரமபதத்திலே சென்று அநுபவிக்கப்பெற்றிலேன் என்கிற குறை இல்லை, இவ்வநு பவத்திற்கு எனக்கு ஒரு முட்டு இல்லை, அவன் விஷயத்திலேயான பின்பு என் மனத்தில் துக்கம் சிறிதும் இல்லை, வகுத்த சேஷி என்று பற்றுகையாலே எனக்கு ஒருதுக்கமும் இல்லை, ருசிமுன்னாகப் பரம பதத்திற்குச் செல்ல இருக்கிற எனக்கு வைதிக புத்திரர்களைப்போலே மீளில் செய்வது என் என்கிற துக்கம் இல்லை, இங்கே அவன்

---

1. "சக்ஷுச்ச்ரவா:" என்பது, பிரமாணம்.

2. 'பாட வந்த' என்று தொடங்கும் இவ்வாக்கியம், "சொன்னால் விரோதம்" என்று தொடங்கும் ஒன்பதாம் திருப்பதிகத்தின் பொருளைத் தெரிவிக்கின்றது.

3. "அஹம் ச்லோக க்ருத் அஹம் ச்லோக க்ருத்" என்பது, உபநிடதம். சுலோககிருத் - செய்யுளைச் செய்தவர்.

4. இந்த வாக்கியம், "சன்மம் பலபல" என்னும் பத்தாம் திருப்பதி கத்தின் பொருளைத் தெரிவிக்கிறது. இவ்வாக்கியத்திலே உள்ள 'இன்றி' என்னும் சொல்லை, 'குறை' முதலிய சொற்களோடும் கூட்டிக்கொள்க.

குணங்களை நெருங்க அநுபவித்த எனக்குப் பூர்ணாநுபவம் செய்யக் கூடிய தேசத்தில் போகப் பெற்றிலேன் என்கிற துக்கம் இல்லை, இது அவன் லீலா விபூதி என்று அறிந்த எனக்கு இனி இந்த உலகத்தில் சேர்ந்திருத்தலாகிற துக்கம் இல்லை, தன் நினைவினாலே படைத்தல் முதலிய காரியங்களைச் செய்யவல்ல ஆச்சரியமான ஆற்றலையுடைய வனானவனைப்பற்றின எனக்கு ஒரு துக்கம் இல்லை, அகடிதகடனா சமர்த்தனானவனைப்பற்றின எனக்கு ஒரு தளர்த்தி இல்லை, அவன் மாட்டு அன்பு இல்லாத நிலையில் எங்கும் பரந்திருக்கும்தன்மையாலும், பக்தியுள்ள நிலையில் அவதாரத்தாலும் காப்பாற்றுமவனைப் பற்றின எனக்கு ஒரு கேடுஇல்லை என்று இப்படி "சன்மம் பல பல செய்து" என்ற திருவாய்மொழியில் பத்துத் திருப்பாசுரங்களாலும் [1] அடைவே தாமே பேசும்படி எல்லாத் துக்கங்களும் நீங்கினவராய், மீண்டு வருதல் இல்லாதவர்களான முக்தர்கள், பகவானுடைய அநுபவத்தாலே ஆனந்திக்குமாறு போலே அவ்வானந்தமாகிற கடலில் மூழ்கின ஆழ்வார்,

[2] செய்ய தாமரைக் கண்ணன், அமரர்குலமுதல் என்று அஞ்சாதபடி - "செய்ய தாமரைக் கண்ணனாய்" என்று தொடங்கி "எஞ்சல் இல் அமரர்குலமுதல் மூவர் தம்முள்ளும் ஆதியை, அஞ்சி நீர் உலகத்துள்ளீர்கள்" என்கிறபடியே தாமரைக்கண்ணனாதல் முதலிய பரத்துவத்திற்குரிய அங்கங்களையுடைய அவன், எப்பொழுதும் ஞானத்தில் குறைதல் இல்லாதவர்களான நித்தியசூரிகள் திரளுக்கு முதல்வன் அன்றோ! இவ்வுலக வாழ்விலே உழல்கின்றவர்களான நம்மால் அவனைப் பற்றப்போமோ! என்று அஞ்சாதபடி,

1. 'அடைவே தாமே பேசும்படி' என்றது, "சன்மம் பலபல" என்கிற திருப்பதிகத்திலே முறையே "குறைவிலனே" "முட்டிலனே" "பரிவிலனே" "இடரிலனே" "துயரிலனே" "துன்பமிலனே" "அல்லலிலனே" "துக்கமிலனே" "தளர்விலனே" "கேடிலனே" என்று பத்துத் திருப்பாசுரங்களிலும் அருளிச்செய்திருத்தலைத் திருவுள்ளம்பற்றி.

2. "செய்யதாமரைக் கண்ணனாய்" என்ற திருப்பதிகமும், "சொன்னால் விரோதம்" என்ற திருப்பதிகமும் உபதேசத்தைச் செய்யும் திருப்பதிகங்களாகையாலே அவ்விரண்டனையும் சேர்த்து, அவற்றில் சொல்லப்பட்ட பொருள்களை அருளிச்செய்கிறார் 'செய்ய' என்று தொடங்கி.

புண்டரீகாக்ஷத்வம் முதலிய பரத்வ லக்ஷணங்களை யுடையவன் ஞானக்குறைவில்லாதவர்களான நித்தியசூரிகளின் திரளுக்கு நிர்வாஹகன் அன்றோ! சம்சாரிகளான நம்மால் அவனை அடையப்பேமோ! என்று அஞ்சவேண்டா என்று சொல்லி, அர்ச்சாவதாரத்தின் எளிமையை உபதேசித்தபடியாலே 'செய்யதாமரைக்கண்ணன் அமரர் குலமுதல் என்று அஞ்சாதபடி' எனப்பட்டது.



[1] எளிவரும் இணைவனும் என்றவை பரத்வமாம்படி - "பத்துடை அடியவர்க்கு" என்ற திருவாய்மொழியில் "எளிவரும் இயல்வினன்" என்றும், "அணைவது அரவணைமேல்" என்ற திருவாய்மொழியில் "இணைவனும் எப்பொருட்கும்" என்றும் தாம் வெளியிட்ட அவதாரத்தின் எளிமை, அர்ச்சாவதாரத்தை நோக்க, அது பரத்துவத்துக்குச் சமமாகுமே ஒழிய எளிமை அன்று என்னலாம்படியாக, அவனாகும் [2] சௌலப்ய காஷ்டையைக் காட்டி - "நெஞ்சினால் நினைப்பான் எவன் அவனாகும் நீள்கடல் வண்ணனே" என்கிறபடியே மனத்தினாலே யாதொன்றனைத் திருமேனியாகக் கோலினீர்கோள், அளவிடமுடியாத பெருமையனான சர்வேச்வரன் அதனையே தனக்கு அசாதாரண விக்கிரஹமாக விரும்பும் என்று, [3] "எவர்கள் எவ்விதமாய் என்னை வணங்குகிறார்களோ, நான் அவர்களை அவ்விதமாகவே அடைகிறேன்" என்றும், [4] "ஆராதிக்கத் தகுந்தவராய் எல்லாக் குற்றங்களையும் பொறுக்குமவராய்த் தனது நிலைகள் எல்லாம் அர்ச்சகன் இட்ட வழக்காம்படி இருப்பவராய்" என்றும் சொல்லப்படுகிற அர்ச்சாவதாரமாகிற எளிமையின் எல்லை நிலத்தைக் காட்டி,

[5] வழியைத் தருமவன் நிற்க இழியக் கருதுவது என்னுவது - "ஒழிவு ஒன்று இல்லாத" என்று தொடங்கி "இழியக் கருதி ஓர்

1. எம்பெருமானுடைய எளிமை, முதற்பத்தில் 'பத்துடையடியவர்க்கு' என்ற திருவாய்மொழியில் "எளிவருமியல்வினன்" என்ற திருப்பாசுரப்பகுதியாலும், இரண்டாம் பத்தில் 'அணைவதரவணைமேல்' என்ற திருவாய்மொழியில் "இணைவனும் எப்பொருட்கும்" என்ற திருப்பாசுரப் பகுதியாலும் அருளிச்செய்யப்பட்டிருந்தாலும் 'செய்ய தாமரைக் கண்ணன்' என்ற திருவாய்மொழியில் அருளிச்செய்யப்படும் அர்ச்சாவதார எளிமை மிகச்சீரியதாதலால், அந்தத் திருவாய்மொழிகளில் அருளிச்செய்யப்பட்ட அவதாரசௌலப்யம் இந்த அர்ச்சாவதாரத்தின் எளிமையை நோக்கப் பரத்துவத்திற்குச் சமானமாதலால் 'எளிவரும் இணைவனும் என்றவை பரத்வமாம்படி' என்கிறார்.

2. 'சௌலப்ய காஷ்டை' என்பது, அர்ச்சாவதாரத்தை. காஷ்டை - எல்லைநிலம்.

3. "யேயதாமாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவபஜாம்யஹம்" என்பது, ஸ்ரீகீதை, 4: 11.

4. அர்ச்ச்யஸ்ஸர்வஸஹிஷ்ணு: அர்ச்சக பராதீந அகிலாத்மஸ்திதி: என்பது, ஸ்ரீரங்கராஜஸ்தவம், 74.

5. "சொன்னால் விரோதம்" என்ற திருப்பதிகத்தினால் உபதேசித்த விஷயத்தைத் தெரிவிக்கிறார் 'வழியைத் தரும்' என்று தொடங்கி.

மானிடம் பாடல் என்னுவதே" என்கிறபடியே உயிர் உள்ளவரையிலும் பகவானுடைய அநுபவத்தோடே வாழ்கின்ற அவ்வநுபவம் தான் ஒரு சிருங்கை என்னும்படியான அர்ச்சிராதி நெறியையும் தருகிறவன், தன்னை ஒரு சொல் சொல்லுவார் யாரோ என்று காலத்தை எதிர் நோக்கினவனாய் நிற்க, அவனை விட்டுப் புறம்பே கவி பாடுகைக்கு விஷயம் தேடிப்போய் ஒரு சொல்லுக்குப் பாத்தம் போராத சிறு மானிடரைக் கவிபாடி முன்பு நின்ற நிலையைக் காட்டிலும் தாழ இழிய நினைக்கிற இதனால் என்ன பயன் உண்டு? அதனால் சொரூபம் பெற்றிலீர்கோள்! நீங்கள் விரும்பிய பயனும் பெற்றிலீர்கோள்; வேண்டிற்று எல்லாம் தரும் - [1]"எல்லாப் பலன்களையும் கொடுப்பவர் விஷ்ணு" என்கிறபடியே விரும்பியவை அனைத்தையும் தரும்; தன்னாகவே கொள்ளும் - [2]"பூர்ணமான ஒப்புமையை அடைகிறான்" என்கிறபடியே தம்மையே ஒக்க அருள் செய்வர்; கவி சொல்ல வம்மின் என்று - இதற்கு நீங்கள் செய்ய வேண்டுவது ஒன்றும் இல்லை, பிறரைத் துதி செய்து உங்கள் உறுப்புக்களைப் பாழேபோக்காதே வாய்படைத்த பயன் பெறும்படி எம்பெருமானைக் கவி சொல்ல வாருங்கோள் என்று,

முக்த ஐச்வர்யத்தை முன்னிட்டு - "வழியைத் தரும் நங்கள் வானவர் ஈசன் நிற்க" என்றும், "தன்னாகவே கொண்டு சன்மம் செய்யாமையும் கொள்ளுமே" என்றும் சொல்லுகையாலே எம்பெருமானைக் கவிபாடினால் கிடைக்கக்கூடியவை: பகவானை அநுபவிக்கை, அவனோடு பூர்ணமான ஒப்புமையை அடைதல் முதலானவைகள் என்று முக்த ஐச்வர்யமான பேற்றை முன்னிட்டு, ச்வவிருத்தியை மாற்றி ஸ்வவிருத்தியிலே மூட்டுகிறார் - இப்படித் தம்முடைய உபதேசத்தாலே [3]"பிறரிடம் சேவை செய்வது இழிந்த செயலாகச் சொல்லப்பட்டது, ஆதலால் அதனை விட்டுவிடவேண்டும்" என்று தாழ்ந்த தன்மையாலே இழிதொழிலாகச் சொல்லப்பட்ட தகுதி

---

1. *"ஸகலபல ப்ரதோஹி விஷ்ணு:"*
*என்பது, விஷ்ணுதர்மம்,* 43: 47.

2. *"பரமம் ஸாம்யம் உபைதி"*
*என்பது, முண்டகோபநிடதம்.*

3. *"ஸேவா ச்வவ்ருத்தி ராக்யாதா"*
*என்பது, மநுஸ்மிருதி,*



யில்லாத விஷயத்தில் பணியை மாற்றி, [1]"நிழல்போன்று அவனை விடாது தொடர்க" என்றும், [2]"வாசுதேவனாகிற மரத்தின் நிழலானது ஏன் அடையப்படவில்லை" என்றும் வருகிறவாறே எம்பெருமானைச் சேவிக்கக்கடவன் என்றும், என்ன காரணத்தைப் பற்ற எம்பெருமான் சேவிக்கப்படாதொழிகிறான் என்றும் விதிக்கும்படி வகுத்த இவ்விறைவன் விஷயத்திலே "புகழும் நல் ஒருவன்" என்கிற திருவாய்மொழியிற் கூறுகிறபடியே தம்முடைய வாசிகமாக அடிமை செய்கையாகிற செயலிலே மூட்டுகிறார் மூன்றாம் பத்திலே என்கை. (3)

## 222

[3]ஈசனை ஈசன் ஈசன்பால் என்ன, ஏர்கொள் வானத்தும் ஆயே என்கிற வியாப்தி நிறம்பெறத் தனிக்கோல் செலுத்தும் சர்வநியந்தா, ஒழிவில் காலத்துக்குச் சேர, பூர்வபோகங்களை ஓதும் மால் எய்தின சாபலத்துக்குச் சேரச் சமகாலமாக்கி, போதால்

---

1. *"சாயாவா ஸத்வமநுகச்சேத்"*
*என்பது, மூலசம்ஹிதை.*

2. *"ஸா கிமர்த்தம் ந ஸேவ்யதே"*
*என்பது, விஹகேச்வரஸம்ஹிதை,* 24: 14.

*ஆக, மூன்றாம் பத்தில், எம்பெருமானுடைய சர்வ வியாபகத்வம் வெளியிட்டமை, எம்பெருமானுடைய ஔதார்யத்திற்கும் ஆழ்வாருடைய ஆசைக்கும் பொருத்தமாக மோக்ஷத்தைக் காட்டிக் கொடுத்தமை, அம்மோக்ஷத்திற்குப் பலமான பகவதநுபவ கைங்கர்யங்களை ஆழ்வார் ஒருவாறு பெற்றமை, அதனால் பெற்ற உவப்பு உள்ளடங்காமல் களிப்பு தலைமண்டையிட்டுச் சென்றமை, இப்படி உண்டான பிரீதி எம்பெருமான் அளவோடு நில்லாமல் அவன் அடியார்கள் அளவும் செல்ல வளர்ந்தமை, மீண்டும் பகவானுடைய அநுபவத்திலே பெருவிடாயையுடையரானமை, எம்பெருமானையே துதித்து அளவுகடந்த ஆனந்தம் பெற்றமை, பரோபதேசம் செய்து முடித்தமை ஆகிய இவையெல்லாம் பேசப்பட்டன என்பதாம்.*

3. *இச்சூத்திரத்தையும் மூன்று பகுதிகளாகப் பிரித்துக் கோடல் வேண்டும். 'ஈசனை' என்றது முதல் 'சர்வநியந்தா' என்றது முடிய முதல் பிரிவு. இப்பிரிவில் இறைவனுடைய நியந்திருத்வம் என்ற குணம் பேசப்படுகின்றது. அதற்குமேல் 'உடையரானவர்' என்பது முடிய இரண்டாம் பிரிவு; இப்பிரிவில் இறைவன் ஆழ்வார்க்குச் செய்த திருவருளும் அதனால் ஆழ்வார் அடைந்த தன்மையும் பேசப்படுகிறது. அதற்குமேல் உள்ளனவெல்லாம் மூன்றாம் பிரிவு; அத்தன்மையரான ஆழ்வார் மக்களுக்குச் செய்யும் உபதேசம் பேசப்படுகின்றது இப்பிரிவில்.*

வணங்காமை தீர்த்த பிரணயித்வத்திலே காதல் மையல் ஏறிய பித்தாய், தேச தூரத்துக்குக் கூவியும் கொள்ளாய் என்றது தீர, கண்ட சதிரையும் ஒரு நிலமாகக் காட்ட, வீவில் இன்பம் கூட்டினை என்று முக்த போக மாநச பிராப்தி பலமான தேவ தாந்தர ஆத்ம ஆத்மீய லோகயாத்ர ஐச்வர்ய அக்ஷரங்களில் வைராக்கியம், உன்னித்து உயிர் உடம்பினுல் கொடுஉலகம் வேட்கை எல்லாம் ஒழிந்தேன் என்ன உடையரானவர், ஒரு நாயகம் என்று ராஜ்ய ஸ்வர்க்க ஆத்மா அநுபவ அல்ப அஸ்திரத்வ சாவதிகத்வாதிகளையும், ஆடு கள் இறைச்சி கருஞ் செஞ்சோறு ஆகிற நிந்தியங்களாலே இளந்தெய்வத்துக்கு இழைத்து ஆடும் நிஹீநதையையும், பேச நின்ற தேவதா அஜ்ஞாந அசக்தி சாபேக்ஷத்வாதிகளையும், இலிங்கத்து விளம்பும் பாஹ்ய குத்ருஷ்டி மத தமோ நிஷ்டதையையும் சொல்லி, ஓடிக் கண்டீர்; கண்டும் தெளியகில்லீர்; அறிந்தோடுமின்; ஆட் செய்வதே உறுவதாவது என்று விரக்தி பூர்வகமாக ஆச்ரயணத்தை ருசிப்பிக்கிறார் நாலாம் பத்தில்.

என்பது, சூத்திரம்.

வியாக்:— மேலே போந்த மூன்றும்பத்தில் கூறிய எங்கும் பரந்துறையும் குணம், ஆகாசத்தின் பரப்புப்போல் அன்றிக்கே நிறம் பெறும்படி, [1]"ஆத்மாக்கள் அனைத்தினுடைய உள்ளும் பிரவேசித்து அவற்றை நியமனம் செய்கிறான்" என்றும், [2]"சீவான்மாவிற்குள் இருந்துகொண்டு நியமிக்கின்றான்" என்றும், [3]"எல்லா உலகங்களையும் நியமிக்கின்றவன் விஷ்ணுவே" என்றும், [4]"சராசரங்களோடு கூடின இவ்வுலகங்களை எல்லாம் ஒருவனுன விஷ்ணுவே நியமனம் செய்கின்றவன்" என்றும் வருவனபோல்வனவற்றில்

1. "அந்த: ப்ரவிஷ்ட: சாஸ்தா ஜநாநாம்"
என்பது, ஆரணம், 3: 20.

2. "ய ஆத்மாநமந்தரோ யமயதி"
என்பது, பிரு. உப.

3. "சாஸ்தா விஷ்ணு: அசேஷஸ்ய ஜகத:"
என்பது, ஸ்ரீவிஷ்ணுபு. 1. 17: 20.

4. "சாஸ்தா சராசரஸ்யைக:"
என்பது, பிரமாணம்.



சொல்லுகிறபடியே, தன்னினின்றும் வேறுபட்ட எல்லாப் பொருள்களினுடைய தொழில்செய்தல் மீளுதல் அனைத்தும் தன் வசமாம்படி நியமித்துக்கொண்டு போருகையாலே எல்லாப்பொருள்களையும் நியமிக்கின்றவனுன இறைவன், "ஒழிவில் காலமெல்லாம்" என்ற திருவாய்மொழியில் கூறிய கைங்கரியஆசையைப் போலே, வேறு தேசங்களிலும் வேறு காலங்களிலும் கைகழிந்துபோன அவதாரங்களின் பெருஞ்செயல்களை அந்த அந்தத் தேச காலங்களிற்போலவே அநுபவிக்கவேண்டும் என்று கழிபெருங்காதல் கொள்ள, அங்ஙனம் காதல் கொண்ட இவர்க்குக் கால வேறுபாட்டிற்குரிய ஏதுவைக் கழித்து, சமகாலமாக்கி இவரை அநுபவிப்பித்து, இவருடைய குறைபாட்டினைத் தீர்த்து, இவருடைய முக்கரணங்களின் செயல்களையும் இனியனவாகக் கொள்ள,

இவரும், அங்ஙனம் இனியனவாகக் கொண்ட அவனுடைய கழிபெருங்காதல் குணத்திலே தோற்று, காதலனைப் பிரிந்த ஒரு காதலியின் நிலையை அடைந்து, பிரிவு நிலையில் எம்பெருமானை ஒத்திருக்கும் பொருள்களையும் அவனோடு சம்பந்தமுள்ள பொருள்களையும் அவனுகக் கருதும்படி பித்துஏறி, பரமபதத்தில் அநுபவத்தையும் ஆசைப்பட்டுக் கூப்பிட, அவ்விழவு தீரும்படி, [1]"உலகங்கட்கு எல்லாம் தலைவரான விஷ்ணுவானவர் பிராட்டியோடு கூட எல்லா உலகங்கட்கும் மேலே இருக்கின்ற பரமபதத்தில் எழுந்தருளியிருக்கின்றார்" என்கிறபடியே பரமபதத்தில் பெரிய பிராட்டியாரும் தானுமே அநுபவிக்கும் பொருள்களாக இருக்கிற இருப்பைக் கிட்டி அநுபவித்தாற்போலே காட்சியளவிலேயாம்படி அநுபவிப்பிக்க, அநுபவித்து, இப்படி முக்தர்கள் அநுபவிக்கும் இன்பத்தை மனத்தினுலே பெற்று, அதற்குப் பலனுன வேறு தேவர்களிடத்தில் வைராக்கியத்தையுடையரான இவ்வாழ்வார்,

ஐச்வர்ய கைவல்யங்களின் சிறுமை, நிலை இன்மை, ஓர் எல்லையோடு கூடியிருத்தல் முதலான குற்றங்களையும், பழிக்கக்கூடிய பொருள்களாலே சிறு தெய்வங்களை வணங்குவதனுடைய தாழ்வினையும், புனைந்துரையாகக் கூறுகின்ற வாக்கியங்களாலே சொல்லப்பட்டுப் பகவானுக்கு உடைமைப்பொருள்களாயிருக்கச்செய்தே அவனோடே முதன்மை கூறலாம்படி அவன் கொடுத்த ஐச்வர்யத்தை

1. வைகுண்டேது பரே லோகே ஶ்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:
ஆஸ்தேவிஷ்ணு: அசிந்தியாத்மா பக்தை: பாகவதை: ஸஹ
என்பது, பிரமாணம்.

யுடையராயிருக்கின்ற பிரமன் சிவன் என்னுமிவர்களுடைய அஜ்ஞானம் முதலானவற்றையும், புறச்சமயங்களும் குத்ருஷ்டி சமயங்களும் தமோ குணத்தில் ஊன்றியிருத்தலையும் வெளியிட்டு,

மற்றைத் தெய்வங்களை அடைந்து வணங்கி அதனாலாய பலன்களையும் கைகண்டீர்கோள்; உலகத்தையெல்லாம் உட்கொள்ளல் முதலிய திவ்விய செயல்களாலே சர்வேச்வரனே காப்பவன், மற்றை யார் அனைவரும் அவனாலே காக்கப்படுகின்றவர்கள் என்னும் அர்த்தத்தைச் சாஸ்திர முகத்தாலே கண்டுவைத்தும் தேறமாட்டுகிறிலீர்கோள்; இப்படி நீங்கள் தேறாமைக்கு அடி அவன் இட்ட வழக்கான இச்சரீரத்தின் சம்பந்தம்; இந்தச் சரீரத்தை விடுதற்கு வழியும் அவன் திருவடிகளை அடைதல் என்று அறிந்து, அதனைச் செய்து இதனைத் தப்பப் பாருங்கோள்; அவன் திருவடிகளிலே செய்யும் கைங்கரியமே உங்களுக்குச் சீரிய பேறு என்று, வேறு பயன்களையும் வேறு தெய்வங்களையும் விரும்பாமை முன்னாக, பரதெய்வமும், பரமப்பிரயோஜனமும், அவனே, அவன் மாட்டுச் செய்கின்ற கைங்கரியமுமே என்று உபதேசித்துப் பகவானை வணங்கும் வணக்கத்தை இனிமை ஆக்குகிறார் நான்காம் பத்தில்.

[1] ஈசனை ஈசன் ஈசன்பால் என்ன ஏர்கொள் வானத்தும் ஆயே என்கிற வியாப்தி நிறம்பெறத் தனிக்கோல் செலுத்தும் சர்வ நியந்தா - ஈசனை - [2] "மறுகல்இல் ஈசனை" என்றும், ஈசன் - [3] "ஈசன் ஞாலம் உண்டு உமிழ்ந்த" என்றும், ஈசன்பால் என்ன - [4] "ஈசன் பால் ஓர் அவம் பறைதல் என்னாவதுஇலிங்கியர்க்கே" என்றும் நியமிக்கிறவன் என்னும் பொருளைக் கொடுக்கும் சொல்லாலே சொல்

---

1. *மேல் பத்தில் எம்பெருமானுடைய வியாபகத்வத்தை அருளிச்செய்தார். இப்பத்தில் அவனுடைய நியாமகத்வத்தை அருளிச்செய்கிறார். நியாமகத்வத்தோடு கூடிய வியாபகத்வத்திற்கே பயன் உண்டாதலின், வியாபகத்வத்திற்குப் பின் நியாமகத்வத்தை அருளிச்செய்கிறார். நியமிக்கின்றவன் என்ற பொருளைக் காட்டுவதே 'ஈசன்' என்ற பெயர். இப்பெயரை இப்பத்தில் பலவிடங்களில் ஆழ்வார் ஆளுதல் இதனைக் காட்டுதற்கே என்க. "வீற்றிருந்தேழுலகும் தனிக்கோல் செல்ல வீவில் சீர், ஆற்றல் மிக்கு ஆளும் அம்மான்" என்று 'ஈசன்' என்ற பெயரின் பொருளை விளக்கியும் அருளிச்செய்திருத்தல் காண்க. இக்கருத்தையே விவரிக்கிறார் 'ஈசனை' என்று தொடங்கி.*

2. திருவாய். 4. 1: 10. 3. திருவாய். 4. 3: 2.

4. திருவாய். 4. 10: 4.



லும்படி, ஏர்கொள் - [1] "ஏர்கொள் ஏழுலகமும், துன்னி முற்றுமாகி நின்ற சோதி ஞானமூர்த்தியாய்" என்றும், வானத்தும் - [2] "வானத்தும் வானத்துள் உம்பரும் மண்ணின்கீழ்த் தானத்தும் எண்திசையும் தவிராது நின்றான்" என்றும், ஆயே என்கிற வியாப்தி - [3] "ஆயே! இவ்வுலகத்து நிற்பனவும் திரிவனவும் நீயே" என்றும் மேல்பத்தில் சொல்லிய வியாப்தி, (எங்கும் பரந்திருத்தல்). நிறம்பெற - ஆகாசத்தின் பரப்புப் போலாகாமல் விளக்கம் பெறும்படியாக, தனிக்கோல் செலுத்தும் சர்வ நியந்தா - [4] "வீற்றிருந்து ஏழுலகும் தனிக்கோல் செல்ல" என்கிறபடியே, லீலாவிபூதியும் நித்தியவிபூதியும் ஆகிற இரண்டு உலகங்களும் தன் நியமனத்திலே ஆம்படி தன்னுடைய ஆணையைச் செலுத்துகின்ற எல்லாப்பொருள்களையும் நியமிக்கின்றவனான சர்வேச்வரனானவன்,

ஒழிவில் காலத்துக்குச் சேர பூர்வ போகங்களை ஓதும் மால் எய்தின சாபலத்துக்குச் சேர சமகாலம் ஆக்கி - ஒழிவில் காலத்துக்குச் சேர - [5] "ஒழிவில் காலம் எல்லாம் உடனாய் மன்னி, வழுவிலா அடிமை செய்யவேண்டும்" என்று அடிமைசெய்யப் பாரிக்குமளவில், எல்லா இடங்களிலும் செய்யவேண்டும் எல்லாநிலைகளிலும் செய்ய வேண்டும் என்று விரும்பியதைப் போன்று, எல்லாக் காலங்களிலும் செய்யவேண்டும் என்று, மேலே கழிந்துபோன காலத்தில் செய்யும் அடிமையையும் ஆசைப்பட்டதற்குச் சேரும்படி, பூர்வ போகங்களை ஓதும் மால் எய்தின சாபலத்துக்குச் சேர - [6] "பாலனாய் ஏழ்உலகு உண்டு" என்று தொடங்கி, காலத்தால் தேசத்தால் கைகழிந்து சால அரிதான அவனுடைய பெருஞ்செயல்களை அந்த அந்தத் தேசத்திலும் காலத்திலும் கூடியதாக அநுபவிப்பதற்கு ஆசைப்பட்டு, அந்த ஆசையாலே [7] "ஆதியம் காலத்து அகலிடம் கீண்டவர், பாதங்கள் மேல் அணி பைம் பொன் துழாய் என்றே, ஓதும் மால் எய்தினள்" என்கிறபடியே முன்பு நடந்துபோன இன்பங்களையே வாய் புலற்றும்படி மயக்கத்தை அடைந்த ஆசைக்குத் தகுதியாக, சம

---

1. திருவாய். 4. 3: 8.
2. திருவாய். 4. 5: 9. 3. திருவாய். 4. 9: 7.
4. திருவாய். 4. 5: 1. 5. திருவாய். 3. 3: 1.
6. திருவாய். 4. 2: 1. 7. திருவாய். 4. 2: 6.

*ஆக, 'ஒழிவில் காலத்துக்கு' என்று தொடங்கும் இவ்வாக்கியத்தால் "பாலனாய் ஏழுலகு" என்ற இரண்டாம் திருப்பதிகத்தின் பொருளை அருளிச்செய்தபடி.*

காலம் ஆக்கி - காலத்தினுடைய வேற்றுமைக்கு உடலான காரணங்களைக் கழித்து ஒரு போகி ஆக்குகையாலே சமகாலமாக்கி அநுபவிப்பித்து,

[1] போதால் வணங்காமை தீர்த்த பிரணயித்வத்திலே காதல் மையல் ஏறிய பித்தாய் - போதால் வணங்காமை - “பூவை வீயா நீர் தூவிப் போதால் வணங்கேனேலும் நின், பூவை வீயா மேனிக்குப் பூசும் சாந்து என் நெஞ்சமே” என்று தொடங்கி “ஏகமூர்த்திக்கே” “பூத்தண் மாலை கொண்டு உன்னைப் போதால் வணங்கேனேலும் நின், பூத்தண் மாலை நெடுமுடிக்குப் புனையும் கண்ணி எனதுயிரே” என்று, பகைவர்களை அழிக்கின்ற அவ்வக் காலங்களில் உதவி, மலர் முதலிய உபகரணங்களைக் கொண்டு குளிர்ந்த உபசாரத்தைச் செய்திலேனாயினும், சீரிய திருமேனியையுடையனாய்ச் சர்வேச்வரனாயிருக்கிறவன் என்னுடைய முக்கரணங்களின் செயல்கள் முதலானவற்றையே தனக்கு இனிய பொருள்கள் எல்லாமுமாகக் கொள்வதே! என்று இவர்தாமே ஈடுபடும்படி செய்து, அவ்வக் காலங்களில் தனக்கு உதவி அடிமை செய்யப்பெறாத இழவை, தீர்த்த பிரணயித்வத்திலே - அவன் தீர்த்த காதல் குணத்திலே, காதல் மையல் - “காதல் மையல் ஏறினேன்” என்கிறபடியே அன்பு மேலிட்டு அறிவு கலங்கினவாறே வெள்ளக் கேடாக ஒண்ணாது என்று அவன் சிறிது பேர நிற்க,

---

1. *இத்த வாக்கியத்தால் “கோவை வாயாள்” என்ற மூன்றாம் திருப்பதிகத்தின் பொருள் பேசப்படுகின்றது. மலர் முதலிய உபகரணங்களைக் கொண்டு உபசாரம் செய்யப் பெற்றிலேனே என்று குறைபட்ட ஆழ்வாருடைய குறையை எம்பெருமான் தீர்த்தருளினன். இங்ஙனம் ஆழ்வாருடைய குறையை எம்பெருமான் நீக்கியது அவனுடைய காதல் குணத்தாலே யாதலின், அக் காதல் குணத்திலே ஆழ்வார் ஈடுபட்டார். அதனை “உரைக்கவல்லேனல்லேன் உன்உலப்பில் கீர்த்திவெள்ளத்தின், கரைக்கண் என்று செல்வன் நான் காதல் மையல் ஏறினேன்” என்ற திருப்பாசுரத்தால் தாமே வெளியிட்டார். நன்று; ஆழ்வாருடைய குறையை எம்பெருமான் தீர்த்தமையை நாம் அறியுமாறு யாங்ஙனம்? எனின், “போதால் வணங்கேனேலும்” என்றதன்பின் “நின்பூவை வீயா மேனிக்குப் பூசும்சாந்து என் நெஞ்சமே” என்றும், “நின்பூத்தண் மாலை நெடுமுடிக்குப் புனையும் கண்ணி எனதுயிரே” என்றும் தம்முடைய முக்கரணங்களின் செயல்களையே இறைவன் தனக்கு இனியபொருள்கள் எல்லாமுமாகக் கொள்வதே! என்று ஆழ்வார் தாமே ஈடுபட்டுப் பேசியிருத்தலால் அறியலாம்.*



[1] ஏறிய பித்தாய் - அவனை ஒத்த பொருள்களையும் அவனுடைய சம்பந்தமுடைய பொருள்களையும் அவனாகவே கருதிப் பேசும்படியாக “பேய்ச்சி முலைசுவைத்தார்க்கு என்பெண்கொடி ஏறிய பித்தே” என்னும்படி பித்து ஏறி,

தேச தூரத்துக்குக் கூவியும் கொள்ளாய் என்றது தீரக் கண்ட சதிரையும் ஒரு நிலமாகக் காட்ட - [2] தேச தூரத்துக்குக் கூவியும் கொள்ளாய் என்றது தீர - பரமபதத்தில் அநுபவத்தை ஆசைப்பட்டு,தேச தூரத்தை நினைத்துக் “கோல மேனி காண வாராய் கூவியும் கொள்ளாயே” என்கிறபடியே நீ வந்து உன் வடிவழகினை அநுபவிப்பித்தருளுதல் அல்லது என்னை அங்கே அருளப்பாடிடுதல் செய்கின்றிலை என்று கூப்பிட்ட இழவும் தீர,

[3] கண்ட சதிரையும் ஒரு நிலம் ஆகக் காட்ட - “ஒண்தொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக் கண்ட சதிர் கண்டொழிந்தேன்” என்கிறபடியே பரமபதத்தில் பெரியபிராட்டியாரும் நீயுமே அநுபவிக்கும் பொருள்களாக அப்பரமபதத்திலுள்ளார் அனைவரும் இன்பம் நுகர்தற்கு உறுப்பாம் கோடியிலேயாம்படி கண்டுவைத்த நேர்பாட்டை நான் கண்டேன் என்னும்படி, மேலே காலத்தின் காரணங்களைக் கழித்துச் சமகாலம் ஆக்கினாற்போலே, அப் பரமபதத்தில் அநுபவத்தையும் இங்கே இருந்தே அநுபவிக்கலாம்படி ஒருபோகியாகப் பிரகாசிப்பிக்க,

வீவில் இன்பம் கூட்டினை என்று முக்த போக மாநச பிராப்தி பலமான தேவதாந்தர ஆத்ம ஆத்மீய லோகயாத்ரா ஐச்வர்ய அக்ஷரங்களில் வைராக்யம் - வீவில் இன்பம் கூட்டினை என்று - [4] “வீவில் இன்பம் மிக எல்லை நிகழ்ந்தனன் மேவியே” என்றும், [5] “கூட்டரிய திருவடிக்கண் கூட்டினை நான் கண்டேனே” என்றும் கூறுகின்றபடியே அவனைக் கிட்டி அழிவில்லாத ஆனந்தமுடையவனாகப் பெற்

---

1. *‘ஏறியபித்தாய்’ என்னுமிதனால் “மண்ணையிருந்து துழாவி” என்ற நாலாம் திருப்பதிகத்தின் பொருள் பேசப்படுகின்றது.*

2. *இதனால் “சீலமில்லாச் சிறியனேலும்” என்ற ஏழாம் திருப்பதிகத்தின் பொருள் பேசப்படுகின்றது.*

3. *“நண்ணாதார் முறுவலிப்ப” என்ற ஒன்பதாம் திருப்பதிகத்தின் பொருள் பேசப்படுகின்றது இவ்வாக்கியத்தால்.*

4. *இவ்வாக்கியத்தால் “வீற்றிருந்தேழுலகும்” என்ற ஐந்தாம் திருப்பதிகத்தின் பொருள் பேசப்படுகின்றது.*

5. *திருவாய். 4. 9: 8.*

றேன், எத்தகைய சிலர்க்கும் தந்தாமால் சேர்த்துக்கொள்ள அரிய திருவடிகளை நான் சேரும்படி என்னைச் சேர்த்துக்கொண்டாய், நான் அநுபவிக்கப்பெற்றேன் என்ற அது மனத்தின் அநுபவமாகை யாலே, முக்த போக மானச பிராப்தி பலமான - இப்படி முக்தருடைய இன்பமான அவ்வநுபவத்தில் மானசமாக உண்டான பேற்றிற்குப் பலமான, தேவதாந்தர வைராக்யம் - [1] "உன்னித்து மற்றொரு தெய் வம் தொழாள்" என்கிறபடியே தன் நெஞ்சாலே மதித்து வேறு ஒரு தெய்வத்தைத் தொழுது அறியாள் என்னும்படி வேறு தெய்வங் களில் வைராக்கியத்தையும், ஆத்ம ஆத்மீய வைராக்யம் - [2] "உயிரி னால் குறையிலமே", [3] "உடம்பினால் குறை இலமே" என்னும்படி ஆன்மா, ஆன்மாவோடு சம்பந்தபட்ட பொருள்கள் என்னுமிவற்றில் வைராக்கியத்தையும், லோக யாத்ரா வைராக்யம் - [4] "கொடு உலகம் காட்டேலே" என்னும்படி இவ்வுலக வாழ்வில் வைராக்கியத்தையும், ஐச்வர்ய அக்ஷரங்களில் வைராக்யம் - [5] "வேட்கை எல்லாம் விடுத்து" என்று தொகுதியாகவும் [6] "ஐங்கருவி கண்ட இன்பம் ஒழிந்தேன்", "சிற்றின்பம் ஒழிந்தேன்" என்று பகுத்துத் தனித்தனி யாகவும் சொல்லும்படி செல்வத்திலும் அக்ஷரம் என்ற சொல்லின் பொருளான ஆத்ம அநுபவத்திலும் உண்டான வைராக்கியத்தையு முடையரான இவ்வாழ்வார்,

[7]ஒரு நாயகம் என்று ராஜ்ய ஸ்வர்க்க ஆத்மாநுபவ அல்ப அஸ்திரத்வ சாவதிகத்வ ஆதிகளையும் - ஒரு நாயகம் என்று ராஜ்ய அல்பத்வத்தையும் - [8] "ஒரு நாயகமாய் ஓட உலகு உடன் ஆண்டவர், கருநாய் கவர்ந்த காலர் சிதைகிய பானையர், பெரு நாடு காண இம்மையிலே பிச்சைதாம் கொள்வர்" என்று தொடங்கி

1. திருவாய். 4. 6: 10.
2. திருவாய். 4. 8: 10.
3. திருவாய். 4. 8: 9.
4. திருவாய். 4. 9: 7.
5. திருவாய். 4. 9: 9.
6. திருவாய். 4. 9. 10.
7. இனிப் பரோபதேசம் செய்தபடிகளை அருளிச்செய்கிறார் மேல்: 'ஒருநாயகம்' என்று தொடங்கும் இவ்வாக்கியத்தை, ஒருநாயகம் என்று ராஜ்ய அல்பத்வத்தையும், ஸ்வர்க்கம் என்று அஸ்திரத்வத்தையும், ஆத் மாநுபவம் என்று சாவதிகத்வத்தையும் என்று முறை நிரல்நிறையாகக் கூட்டிக்கொள்க. அஸ்திரத்வம் - நிலையில்லாதது. சாவதிகத்வம் - ஓர் எல்லையுடன் கூடியது.
8. திருவாய். 4. 1: 1.



[1] "இராச்சியம் என்பது மருத்துவம் செய்யமுடியாததும் நாசம் உண்டுபண்ணத் தக்கதுமான ஒரு பெருநோய், அதற்காக அரசர்கள் உடன் பிறந்தவர்களையும் பிள்ளைகளையும் விடுகிறார்கள்" என்கிற அரசச் செல்வத்தின் சிறுமையையும், ஸ்வர்க்க அஸ்திரத்வத் தையும் - [2] "குடி மன்னும் இன்சுவர்க்கம் எய்தியும் மீள்வர்கள்" என்று, [3] "அவர்கள் பரந்த அந்தச் சுவர்க்கலோக இன்பத்தை அநு பவித்துப் புண்ணியம் குறைந்த அளவில் பூலோகத்தை அடைகிறார் கள்" என்கிற சுவர்க்கலோக அநுபவத்தின் நிலையின்மையையும், ஆத்மாநுபவ சாவதிகத்வத்தையும் - [4] "இறுகல் இறப்பு" என்று ஆத்மாநுபவத்தினுடைய அளவுடையதாம் தன்மையினையும், 'ஆதி' என்றதனாலே துக்கத்தோடு கூடியிருத்தல், வருந்திப் பெறவேண்டுந் தன்மை, இன்பமின்மை ஆகியவற்றைக் கூறுகின்றது.

[5]ஆடு கள் இறைச்சி கரும் செஞ்சோறு ஆகிற நிந்தியங்களாலே இளம் தைவத்துக்கு இழைத்து ஆடும் நிஹீநதையையும் - [6] "பூசைக் குரியபொருள் உலகத்தாரால் பழிக்கப்படுகின்ற கள் முதலியன, தெய் வமோ மிகத் தாழ்ந்த தெய்வம், சாஸ்திரம் வேதங்கட்குப் புறம் பான காமிகம் முதலான ஆகமங்கள், ஆசிரியர்களோ பூசாரிகள், இப்படிப்பட்டவர்களுடைய முறை மிகவும் பழிக்கத்தக்கது" என்கிற படியே, [7] "அங்கு ஓர் ஆடும் கள்ளும்", [8] "அங்கு ஓர் கள்ளும் இறைச்சியும்", [9] "கருஞ்சோறும் மற்றைச் செஞ்சோறும்" என்கிற கள் இறைச்சி முதலிய பழிக்கத்தக்க பொருள்களைக்கொண்டு [10] "நீர் அணங்கு ஆடும் இளம்தெய்வம்" என்கிற சிறு தெய்வங்களுக்குக்

1. ராஜ்யம் நாம மஹாவ்யாதி ரசிகித்ஸ்யோ விநாசந:
ப்ராதரம்வா ஸுதம்வாபி த்யஜந்திகலு பூமிபா:
என்பது, பிரமாணம்.
2. திருவாய். 4. 1: 9.
3. தே தம்புக்த்வா ஸ்வர்க்கலோகம் விசாலம்
க்ஷீணேபுண்யே மர்த்தயலோகம் விசந்தி.
என்பது, ஸ்ரீகீதை, 9: 21.
4. திருவாய். 4. 1: 10.
5. 'ஆடு கள் இறைச்சி' என்று தொடங்கும் வாக்கியத்தால் "தீர்ப் பாரை" என்ற திருப்பதிகத்தின் பொருள் கூறப்படுகிறது.
6. த்ரவ்யம் நிந்த்ய ஸுராதி தைவதமதிக்ஷுத்ரஞ்ச பாஹ்யாகமோ
த்ருஷ்டிர் தேவலகாச்ச தேசிகஜநா திக்திக்திகேஷாம்க்ரமம்.
என்பது, பிரமாணம்.
7. திருவாய். 4. 6: 7.
8. திருவாய். 4. 6: 3.
9. திருவாய். 4. 6: 4.
10. திருவாய்.4. 6: 2,

[1]"களன் இழைத்து" என்கிறபடியே அவ்வத் தெய்வங்கள் வசிக்கும் இடங்களிலே பலிஇட்டு [2]"நீர் அணங்கு ஆடுதல் கீழ்மையே" என் கிறபடியே தெய்வம் ஏறினவர்களாய்க் கொண்டு ஆடுமதனுடைய தண்மையையும்,

[3]பேச நின்ற தேவதா அஞ்ஞாந அசக்தி சாபேக்ஷத்வாதிகளேயும்- [4]"பின்பு சீற்றம் கொண்டவனும் சிவந்த கண்களையுடையவனும் இருக்கிற என்னால் இடது கை கட்டவிரலின் நகத்தின் நுனியால் அந்தப் பிரமனுடைய தலையானது கிள்ளப்பட்டது" என்றும், [5]"ஒரு குற்றமும் செய்யாத என்னுடைய தலையானது எந்தக் காரணத்தால் உன்னால் அறுக்கப்பட்டதோ அந்தக் காரணத்தால் நீ சாபத்துடன் கூடினவனாய் மண்டை ஓட்டினைக் கையில் ஏந்தின வனாக ஆவாய்" என்றும், [6]"அங்குப் பிராட்டியோடு கூடின நாராயணன் என்னால் பிச்சை யாசிக்கப்பட்டான்" என்றும், [7]"அழ கிய பார்வதியே ! திருமாலின் அருளால் அந்த மண்டை ஓடானது ஆயிரம் துண்டுகளாக வெடித்தது, கனவில் கண்ட செல்வம் போன்று பலவகையாகச் சென்றது" என்றும் சொல்லுகிறபடியே பிரமன், சிவனாலே தலை அறுப்புண்டு துன்புற்றவனாய்ச் சிவனைச் சபிக்க, சிவன், குருவான பிரமனுடைய தலையைக் கிள்ளிய காரணத் தால் மாபாவியாய், பிரமனது சாபத்தைத் தன்னால் போக்கிக் கொள் ளப்போகாமையாலே திருமகள்கேள்வனை சர்வேச்வரனை யாசிக்க, அவன் அந்தச் சாபத்தைப் போக்கினமையாலே [8]"பேச நின்ற சிவனுக்கும் பிரமன் தனக்கும் பிறர்க்கும் நாயகன் அவனே; கபால நன்மோக்கத்துக் கண்டு கொண்மின்" என்றபடியே, வேதத்தில்

1. திருவாய். 4. 6: 4. 2. திருவாய். 4. 6: 8.

3. 'பேசநின்ற' என்றது முதல் "ஒன்றும் தேவும்" என்ற பத்தாம் திருப்பதிகத்தின் பொருள் பேசப்படுகிறது.

4. தத: க்ரோதபரீதேந ஸம்ரக்த நயநேநச
வாமாங்குஷ்ட நகாக்ரேணசிந்நம் தஸ்யசிரோமயா.
என்பது, மாத்சபுராணம்.

5. யஸ்மாதநபராதஸ்ய சிரச்சிந்நம் த்வயாமம
தஸ்மாச் சாபஸமாயுக்த: கபாலீத்வம் பவிஷ்யஸி.
என்பது, மாத்சபுராணம்.

6. தத்ரநாராயண: ஸ்ரீமாந்மயாபிக்ஷாம் ப்ரயாசித:
என்பது, மாத்சபுராணம்.

7. விஷ்ணு பிரஸாதாத் ஸுச்ரோணி கபாலம்தத் ஸஹஸ்ரதா
ஸ்புடிதம் பஹுதாயாதம் ஸ்வப்நலப்தம் தநம்யதா.
என்பது, மாத்சபுராணம்.

8. திருவாய். 4. 10: 4.



புனைந்துரைக்கின்ற வாக்கியங்களாலும் இராசத தாமத புராணங் களாலும் பரம்பொருளாகப் பேசலாம்படி முட்டுப் பொறுத்து நின்ற பிரமன் சிவன் முதலான தேவர்கள் ஒருவர்க்கொருவர் தங்களுக்கு வருகிற துன்பங்களை அறியாமையும், அந்தத் துன்பங்களைத் தாங்கள் தவிர்த்துக் கொள்ளமாட்டாமையும், அதனைத் தவிர்த்துக் கொடுக் கைக்கு ஈச்வரன் வேண்டுகையும் ஆகிற அறிவின்மையையும், ஆற் றல் இன்மையையும், சர்வேச்வரனை விரும்பியிருத்தலையும், 'ஆதி' என்ற சொல்லால் கர்மங்கட்கு வசப்பட்டிருத்தலையும் கொள்க.

இலிங்கத்து விளம்பும் பாஹ்ய குத்ருஷ்டி மத தமோநிஷ்டதை யையும் சொல்லி - [1]"இலிங்கத்திட்ட புராணத்தீரும்", [2]"விளம்பும் ஆறு சமயமும்" என்கிற திருப்பாசுரங்களில் சொல்லுகிற புறச்சம யங்களும் குதிருஷ்டிசமயங்களும் ஆவன: [3]"பராசர முனிவரே ! இந்த உலகம் எதனை ஆத்மாவாக உடையது" என்று பொதுவிலே கேட்க, [4]"இந்த உலகங்கள் எல்லாம் மகாவிஷ்ணுவினிடமிருந்து உண்டாயின, அந்த விஷ்ணுவினிடத்திலேயே லயப்பட்டு இருக் கின்றன" என்று கோல்விழுக்காட்டாலே விடையாதல் அன்றிக்கே, எருமையை யானையாகக் கவிபாடித் தரவேண்டும் என்பாரைப் போலே, இலிங்கம் என்ற ஒரு உருவுடைப்பொருளைக் குறித்துக் காட்டி இதற்கு ஏற்றம் சொல்லித் தரவேண்டும் என்று கேட்கிற வனும் தமோ குணத்தால் மூடப்பட்டவனாய்க் கேட்க, சொல்லுகிற வனும் தமோ குணத்தால் மூடப்பட்டவனாய்ச் சொல்ல, இப்படித் தோன்றிப் பரந்த இலிங்கபுராணம் முதலான [5]குதிருஷ்டி ஸ்மிருதி களும், சிலவற்றைச் சொல்லாநின்றால் தாங்களும் சில தர்க்கங் களைச் சொல்லாநிற்குமத்தனை போக்கிப் பிரமாணத்தை அநுசரித்த தர்க்கம் அல்லாமையாலே கேவலம் சொல்நயமேயாயிருக்கிற புறச் சமயங்கள் ஆறும் என்ற சமணம் பௌத்தம் முதலியவற்றினுடைய ஸ்மிருதிகளும் ஆகையாலே [6]"வேதங்கட்குப் புறம்பான ஸ்மிருதி கள் எவையோ, குதிருஷ்டிகளான மதங்கள் எவையோ, அவைகள்

1. திருவாய். 4. 10: 5. 2. திருவாய். 4. 10: 9.

3. "யந்மயம் ச ஜகத்ஸர்வம்"
என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 1. 1: 5.

4. "விஷ்ணோஸ் ஸகாசாத்உத்பூதம்"
என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 1. 1: 41.

5. குத்ருஷ்டி - வேதவாக்கியங்களுக்கு நேர் பொருள் காணாமல் மாறுபட்ட பொருளைக் காண்கின்றவர்கள்.

6. யாவேதபாஹ்யாஸ் ஸ்ம்ருதய: யாச்ச காச்ச குத்ருஷ்டய:
தாஸ்ஸர்வாநிஷ்பலா: ப்ரேத்ய தமோ நிஷ்டாஹிதா:ஸ்ம்ருதா:
என்பது, மநுஸ்மிருதி, 12: 95.

எல்லாம் மறுமையில் பலன்களைக் கொடுப்பன அல்ல; அவைகள் தாமத நிலைகளாக உள்ளன என்று சொல்லப்பட்டன" என்கிற படியே அவற்றினுடைய தாமதநிலையினையும் சொல்லி,

ஓடிக்கண்டீர் - [1]"ஓடி ஓடிப் பல பிறப்பும் பிறந்து" என்று தொடங்கி "வழி ஏறிக் கண்டீர்" என்று, [2]"சுவர்க்கம் முதலான உலகங்களில் விருப்பமுள்ளவர்கள் போவதையும் வருவதையும் அடைகிறார்கள்" என்கிறபடியே, சுவர்க்க நரகங்களில் போவது, கருப்பத்தேற வருவதாய்க் கொண்டு பலபல பிறவிகளில் பிறந்து, மற்றைத் தெய்வங்களை முக்கரணங்களாலும் பலமுறை அவர்களை அடைகிற முறையைச் சொல்லுகிற சாஸ்திர நெறியாலே அடைந்து, அங்ஙனம் அடைதலாலாய பலன்களையும் கண்டீர்கோள். [3] கண்டும் தெளியகில்லீர் - உலகங்களை உண்ணுதல் முதலிய அவனுடைய தெய்வச் செயல்களைச் சாஸ்திர மூலமாக அறிந்தும் இவனே அடையத்தக்கவன் என்று தெளியமாட்டுகிறிலீர்கோள். [4] அறிந்து அறிந்து ஓடுமின் - உங்களை இங்ஙனே வைத்தது, நல்வினை தீவினைகளைச் செய்கின்ற உயிர்கள் அந்த அந்தக் கர்மங்களுக்குத் தகுதியான பலன்களை அநுபவிக்கக்கடவதான சாஸ்திர மரியாதை அழியும் என்று, அதுதான், [5]"என்னுடைய மாயையானது ஒருவராலும் தாண்டமுடியாதது" என்கிற மாயையினைக்கொண்டு அவன் மயக்கி வைத்தபடி காணுங்கோள். ஆனபின்பு, அது அவன் மாயை என்று அறிந்து, "எவர்கள் என்னையே சரண் அடைகிறார்களோ அவர்கள் இந்த மாயையினைத் தாண்டுகிறார்கள்" என்கையாலே இம் மாயையினைத் தாண்டும் உபாயமும் அவன் திருவடிகளைப் பற்றுகை என்று அறிந்து, அவனை அடைந்து இம் மாயையினைத் தப்பப் பாருங்கோள்.

ஆள் செய்வதே உறுவது ஆவது என்று - [6]"நீள்குடக்கூத்தனுக்கு ஆள்செய்வதே உறுவது ஆவது" என்கையாலே, எல்லை இல்லாத இனியதான குடக்கூத்து ஆடுதலாகிற செயலையுடையவனுக்கு அடிமை செய்கையே இவ்வான்மாவுக்குச் சீரியதும் எளிதில் செய்

1. திருவாய். 4. 10: 7.

2. "கதாகதம் காம காமா லபந்தே" என்பது, ஸ்ரீகீதை, 9: 21.

3. திருவாய். 4. 10: 3.

4. திருவாய். 4. 10: 6.

5. "மம மாயா துரத்யயா" என்பது, ஸ்ரீகீதை, 7: 14. மாயை - பிரகிருதி சம்பந்தம்.

6. திருவாய். 4. 10: 10.



யத்தக்கதும் என்று இப்படி உபதேசித்து, விரக்திபூர்வகமாக ஆச்ரயணத்தை ருசிப்பிக்கிறார் நாலாம்பத்தில் - அதாவது, வேறு பயன்களை விரும்பாமை முன்னாக, வேறு தெய்வங்களை விரும்பாமை முன்னாக, புறச்சமயங்களையும் குத்ருஷ்டி சமயங்களையும் விரும்பாமை முன்னாக, உலககாரணனாக இருத்தல் முதலான பிரமாணப் பொருத்தங்களாலே பகவானைப் பற்றுதலின் சுவையை இவ்வுலகமக்களுக்கு உண்டாக்குகின்றார் என்கை. (4)

## 223

[1]ஆவா என்று தானே தன்னடியார்க்குச் செய்யும் தொல்லருள் என்று, பரத்வாதிகளையுடையவன் 'எவ்விடத்தான்' என்னும் பாவியர்க்கும் இரு கரையும் அழிக்கும் கிருபாபிரவாஹமுடையவன், பொய் கூத்து வஞ்சக்களவு தவிர, முற்றவும்தானாய், உன்னைவிட்டு என்னப்பண்ணின விரக்தி பல பரமாத்ம ராகம், பேரமர் பின்னின்று கழியமிக்கு, யானே என்ன வாய்ந்து, ஆற்றகில்லாது நீராய் மெலிய ஊடுபுக்கு வளர, விஷவிருக்ஷ பலங்கள் கைகூடினவர், அடிமைபுக்காரையும் ஆட்செய்வாரையும் காண, லோக த்வீபாந்தரங்களில் நின்றும் போந்த தேவர் குழாங்களைக் கண்டு காப்பிட்டு, பிரஹ்லாத விபீஷணர் சொற்கேளாத அரக்கர் அசுரர்போல்வரைத் தடவிப் பிடித்து, தேச கால தோஷம் போக எங்கும் இடம் கொண்டவர்களை மேவித் தொழுது உஜ்ஜீவியுங்கோள்; நீங்கள் நிறுத்துகிறவர்களைத் தேவதைகளாக நிறுத்தினவனை மேவிப் பரம்பும் அவரோடு ஒக்கத்தொழில் யுகதோஷம் இல்லையாம் என்று விஷ்ணு பக்திபரராக்கி, கண்ணுக்கு இனியன காட்டலாம்படியானார் கண்ணிலே நோக்கிக்காணும் பக்தி சித்தாஞ்ஜனத்தை இடுகிறார் அஞ்சாம்பத்தில்.

என்பது, சூத்திரம்.

1. சூத்திரத்தில் 'கிருபாபிரவாஹமுடையவன்' என்னும் துணையும் ஒரு பகுதி; இதனால் இறைவன் பேரருட்கடல் என்பதனை வெளியிடுகிறார். அதற்குமேல் 'விஷ விருக்ஷ பலங்கள் கைகூடினவர்' என்னும் துணையும் ஒரு பகுதி; இதனால் இறைவன் செய்த திருவருளால் ஆழ்வார் அடைந்த தன்மையைத் தெரிவிக்கிறார். அத்தன்மையரான ஆழ்வார் செய்த காரியங்களைத் தெரிவிக்கிறார் அதற்குமேலுள்ள பகுதிகளில் எல்லாம்.

வியாக் :— மேலே போந்த நான்கு பத்துக்களிலும் சொல்லப்
பட்ட பரத்துவம், காரணத்துவம், வியாபகத்வம், நியாமகத்வம் ஆகிற
குணங்களால் வந்த தன்னுடைய உயர்வற உயர்ந்த உயர்வினையும்,
தங்கள் தங்களுடைய தாழ்வினையும் நினைந்து அகன்றுபோக நினைக்கு
மவர்கள் திறத்திலும் மேல் விழுந்து அங்கீகரிக்கும்படி பரமகாரு
ணிகனான சர்வேச்வரன், மேல்பத்தில் இவர்க்குப் பிறப்பித்த விரக்
திக்குப் பலமான தன் விஷயமான பக்தியைத் தொடர்ந்து வளரச்
செய்ய, அந்தப்பக்தியையும் பாகவதர்களுடைய கூட்டுறவையுமுடை
யரான இவ்வாழ்வார், தாம் திருத்தத் திருந்தின ஸ்ரீவைஷ்ணவர்களை
யும், திருத்தின தம்மையும் காண்கைக்கு வந்த நித்தியசூரிகளை
யும், சுவேதத்வீபத்தில் வசிக்கின்ற சித்தர்களையும் கண்டு மங்களா
சாசனம் செய்து, திருந்தாத அசுர இராக்கதத் தன்மை வாய்ந்தவர்க
ளையும், பகவானுடையவும் பாகவதர்களுடையவுமான வைபவத்தை
உபதேசித்துத் திருத்தி, பாகவதர்களுடைய கூட்டுறவைக் காணுதல்
இனிதாம்படியான ஞானம் பிறந்தார்க்குப் பேற்றிலே பதற்றத்
துக்கு அடியான பக்தியையும் உபதேசித்துத் தலைக்கட்டுகிறார்
இந்த ஐந்தாம்பத்தில்.

[1] ஆ ஆ என்று தானே தன் அடியார்க்குச் செய்யும் தொல்லருள்
என்று - ஆ ஆ என்று - [2] "ஆஆ என்று அருள் செய்து" என்கிற
படியே, ஐயோ! ஐயோ! என்று என்பக்கலிலே கிருபையைச்செய்து
என்றும், தானே- [3] "தானே இன்னருள் செய்து" என்கிறபடியே நான்
விரும்பாமலிருக்கத் தானே தன்பேறாகத் திருவருளைச்செய்து என்றும்,
தன் அடியார்க்குச் செய்யும் - [4] "கலியுகம் ஒன்றும்இன்றிக்கே தன்
னடியார்க்கு அருள் செய்யும்" என்கிறபடியே தன்பக்கலிலே தங்கள்
பாரத்தை வைத்த அடியார்களுக்குக் கலிதோஷங்கள் ஒன்றும் வாராத
படியாகத் திருவருள்செய்யும் என்றும், தொல் அருள் என்று -
[5] "பெருமானது தொல்லருளே" என்கிறபடியே சர்வேச்வரனுடைய
இயல்பிலே அமைந்த திருவருள் என்றும் சொல்லுகிறபடியே; பரத்வ

---

1. *ஐந்தாம் பத்தில் பேசப்பட்ட எம்பெருமானுடைய குணம்* **கிருபை** *என்பது. மேலே போந்த நான்கு பத்துக்களாலும் தெரிவிக்கப்பட்ட பரத்துவம், காரணத்வம், வியாபகத்வம், நியாமகத்வம் என்னும் குணங்களைக் கண்டு மக்கள் அஞ்சவேண்டாதபடி இப்பத்தால் அவனுடைய கிருபை என்னும் குணத்தை வெளியிடுகிறார் என்றபடி. அருட்குணத்தை வெளி யிடும் திருப்பாசுரப் பகுதிகளைச் சேர்த்து அருளிச்செய்கிறார் 'ஆ ஆ' என்று தொடங்கி.*

2. *திருவாய்.* 5. 1: 9.    3. *திருவாய்.* 5. 1: 10.

4. *திருவாய்.* 5. 2: 11.    5. *திருவாய்.* 5. 9: 9.



ஆதிகளையுடையவன் எவ்விடத்தான் என்னும் பாவியர்க்கும் இரு
கரையும் அழிக்கும் கிருபாபிரவாஹமுடையவன் - பரத்வ ஆதிகளை
யுடையவன் எவ்விடத்தான் என்னும் பாவியர்க்கும் - [1] "அம்மான்
ஆழிப்பிரான் அவன் எவ்விடத்தான் யான் ஆர், எம் மா பாவியர்க்கும்
விதிவாய்க்கின்று வாய்க்கும் கண்டீர்" என்கிறபடியே கையும் திரு
வாழியுமான அழகை நித்தியசூரிகளுக்குக் காட்சிகொடுத்துக்
கொண்டு அங்குள்ளாருடனே கலந்திருக்கின்ற சர்வேச்வரன் எவ்
வளவிலே! இங்கே பிறப்பு இறப்புக்களிலே உழன்று திரிந்துகொண்
டிருப்பவர்களுக்கும் இவ்வருகான நான் எவ்வளவிலே! என்று, மேலே
கூறிய தன்னுடைய அறப்பெரியவனாக இருத்தல், உலக காரணனாக
இருத்தல், எங்கும் பரந்திருத்தல், எல்லாப்பொருள்களையும் நியமிக்
கின்றவனாக இருத்தல் முதலியவற்றால் வந்த உயர்வினையும், தங்களு
டைய தாழ்வினையும் நினைந்து அகலும்படி எத்தனையேனும் மாபாவியர்
களாக இருந்தாலும் அவர்கள் அளவிலும், [2] இருகரையும் அழிக்கும்
கிருபாபிரவாகமுடையவன் - மக்களுடைய கர்மங்கட்குத் தகுந்தபடி
நடத்துவதற்கு உடலான தடைஇல்லாத தன்னுடைய சுவாதந்திரிய
மாகிற கரையும், இறைவனுடைய திருவருள் தங்கள்பக்கல்வாராதபடி
தீவினைகளையே செய்யும் இம்மக்களுடைய செருக்கினாலாய சுவாதந்
திரியமாகிற கரையும் அழியும்படி பெருகுகின்ற திருவருள்வெள்ளத்
தையுடைய சர்வேச்வரன்,

[3] பொய் கூத்து வஞ்சக்களவு தவிர - "பொய்யே கைம்மை
சொல்லிப் புறமே புறமேஆடி" என்றும், [4] "தேனே! இன்னமுதே! என்
றென்றே சில கூத்துச் சொல்ல" என்றும், [5] "வள்ளல்! மணிவண்
ணனே! என்றென்றே உன்னையும் வஞ்சிக்கும் கள்ளமனம் தவிர்ந்தே"

---

1. *திருவாய்.* 5. 1: 7.

2. *இருகரையாவது; அவர் அவர்களுடைய நல்வினை தீவினைகட்குத் தக்கவாறு காப்பாற்றுதற்குக் காரணமான எவ்விதமான தடையும் இல்லாத இறைவனாகிய தன்னுடைய சுவாதந்திரியம் ஒரு கரை. இறைவனுடைய திருவருள் தங்கள்பக்கல் வராதபடி பாவங்களையே செய்யும் இம்மக்களுடைய சுவாதந்திரியம் மற்றொருகரை. ஆக, இவ்விருகரையும் அழியும்படி பெருகாநிற்கின்ற கிருபாவெள்ளம் என்றபடி.*

3. *'பொய்கூத்து' என்றது முதல் 'என்னப் பண்ணின' என்பது முடிய 'கையார் சக்கரம்' என்ற திருப்பதிகத்தின் பொருள் பேசப்படுகிறது. திருவாய்.* 5. 1: 1.

4. *திருவாய்.* 5. 1: 2.    5. *திருவாய்.* 5. 1: 3.

என்றும் சொல்லுகிறபடியே, மெய்கலவாத பெரும்பொய்யைச் சொல்லி, பக்தியினாலே பரவசப்பட்டவரைப் போலே பாவித்து, மனம் புறப்பொருள்களிலே அன்புற்றிருக்க, வேறுபயனைக் கருதாதாரைப் போலே உன்னுடைய வள்ளன்மையையும் வடிவழகையும் மனத்தோடு பட்டுச் சொல்லுகிறார் என்று தோன்றும்படி பலகாலும் சொல்லிக் கொண்டு, முற்றறிவினனான உன்னையும் பகட்டும் கள்ளமனத்தினைத் தவிர்ந்து என்று, அவற்றை இவர் தவிரும்படி,

முற்றவும் தானாய் - [1]“ ஆனான் ஆளுடையான் என்று அ:தே கொண்டு உகந்து வந்து, தானே இன்னருள் செய்து என்னை முற்றவும் தானானான் ” என்கிறபடியே இவர்க்கு எல்லாவித இனிய பொருள்களும் தானாய், உன்னைவிட்டு என்னப் பண்ணின - [2]“ வெள்ளத்து அணைக் கிடந்தாய் இனி உன்னை விட்டு என்கொள்வனே ” என்கிறபடியே நான் விட்ட அன்றும் விடமாட்டாத உன்னை ஒழிய வருந்தி ஆராதிக்கத்தக்கதாய், வருந்தி ஆராதித்தாலும் கிடைக்கும் பயன் ஒன்றில்லாத புறவிஷயங்களைப் பற்றவோ என்று இவர் தாமே பேசும்படி செய்த, விரக்தி பலம் - [3]கண்டசதிர்கண்டு, கண்டுகேட்டு உற்று மோந்து உண்டு உழலும் ஐங்கருவி கண்ட இன்பம், தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம் ஒழிந்தேன் ” என்கிறபடியே அவனுடைய இனிமையாலே சிற்றின்பத்தையும் கைவல்யத்தையும் அடைய வெறுக்கும்படி மேல்பத்தில் பிறந்த விரக்திக்குப் பலமான, பரமாத்ம ராகம் - [4]“ எவன் பரம்பொருளிடத்தில் மிக்க பக்தியை யுடையவனாய் ” என்கிற பரமாத்ம விஷயத்தில் ஆசையானது,

[5]பேரமர் பின்னின்று கழியமிக்கு யானேஎன்ன வாய்ந்து-பேரமர்- [6]“ பேரமர் காதல் கடல்புரைய விளைவித்த ” என்கிறபடியே அளவிட்டு அறிய முடியாததாய்ப் பொருந்தி, பின்னின்று - [7]“ பின்நின்ற காதல் நோய் நெஞ்சம் பெரிதடுமால் ” என்கிறபடியே பிடரி பிடித்துநின்று நெஞ்சினை முடிக்கும்படியாய், கழிய மிக்கு - [8]“ கழிய மிக்கதோர் காதலள் இவள் ” என்கிறபடியே பக்கத்திலுள்ளவர்கள்

1. திருவாய். 5. 1: 10.    2. திருவாய். 5. 1: 3.
3. திருவாய். 4. 9, 10.
4. “ பரமாத்மநி யோரக்த: ”
என்பது, பார்ஹஸ்பத்ய ஸ்மிருதி.
5. ‘பேரமர், பின்னின்று, கழியமிக்கு’ என்பனவற்றால், 3, 4, 5-ஆம் திருப்பதிகங்களின் கருத்துக் கூறப்படுகிறது.
6. திருவாய். 5. 3: 4.    7. திருவாய். 5. 4: 6.
8. திருவாய். 5. 5: 10.



பேசும்படி மிகவும் கைகழிந்து, யானேஎன்ன வாய்ந்து - [1]“ கடல் ஞாலம் செய்தேனும் யானே என்னும் ” என்று தொடங்கி “ வாய்ந்த வழுதி வளநாடன் ” என்று அவனுடைய உலக காரணனாக இருத்தல் முதலிய ஆச்சரியமான செயல்களை நானே செய்தேன் என்று அநுகார முகத்தாலே விஷயத்தைக் கிட்டிப் பேசும்படியாய்,

ஆற்றகில்லாது நீராய் மெலிய ஊடுபுக்கு வளர - ஆற்றகில்லாது - [2]நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன் ஆகிலும் இனி உன்னைவிட்டு ஒன்றும் ஆற்றகிற்கின்றிலேன் ” என்கிறபடியே அவனை ஒழிய ஒரு கணமும் தரித்திருக்கமாட்டாதபடியாய், [3]நீராய் - “ ஆராவமுதே அடியேன் உடலம் நின்பால் அன்பாயே நீராய் அலைந்து கரைய ” என்கிறபடியே எம்பெருமானுடைய இனிமை மிகுதியால் வந்த அன்பினாலே ஞானத்திற்கு நிலைக்களமான ஆன்மாவாதல், ஞானம் செல்லுதற்கு வழியான மனமாதல் அன்றிக்கே, ஆன்மாவிற்கு நிலைக்களமான சரீரமும் நிலைகுலையும்படியாய், [4]மெலிய - “ மானேய் நோக்கு நல்லீர்! வைகலும் வினையேன் மெலிய ” என்கிறபடியே சரீரத்தின் அந் நிலைகுலைவுதான் ஒரு காலத்தில் அன்றிக்கே எல்லாக் காலமும் மெலியும்படியாய், ஊடு புக்கு வளர - [5]“ நிறந்தனூடு புக்கு எனதாவியை நின்று நின்று உருக்கி உண்கின்ற ” என்கிறபடியே பகவானுடைய குணங்கள் மார்பிலே புகுந்து ஆன்மாவை இடைவிடாமல் நீர்ப்பண்டமாக்கும்படி வளர,

விஷ விருக்ஷ பலங்கள் கைகூடினவர் - இப்படிப் பகவானிடத்தில் அன்பு வளருகையாலும் பாகவதர்களோடே கூடப் பெறுகையாலும் [6]“ இவ் வுலகவாழ்வாகிற நச்சுமரத்திற்கு அமிருதத்திற்கு ஒப்பான இரண்டு கனிகள் உண்டு ; அவை எவை? எனில், ஒரே

1. ‘கடல் ஞாலம்’ என்ற ஆறும் திருப்பதிகத்தின் கருத்துக் கூறப்படுகின்றது. திருவாய். 5. 6: 1.

2. “ நோற்ற நோன்பிலேன் ” என்ற ஏழாம் திருப்பதிகத்தில் சொல்லப்பட்ட பொருளின் கருத்து இந்த வாக்கியம்.

3. இந்த வாக்கியம் “ ஆராவமுதே ” என்ற எட்டாம் திருப்பதிகத்தில் கூறப்பட்ட பொருளின் கருத்து.

4. ‘மெலிய’ என்பது, “ மானேய் நோக்கு நல்லீர் ” என்ற ஒன்பதாம் திருப்பதிகத்தின் கருத்து.

5. இந்த வாக்கியம் “ பிறந்தவாறும் ” என்ற பத்தாம் திருப்பதிகத்தின் கருத்து.

6. ஸம்ஸார விஷவ்ருக்ஷஸ்ய த்வேபலே ஹ்யம்ருதோபமே
கதாசித் கேசவேபக்தி: தத்பக்தைர்வா ஸமாகம:.
என்பது, பிரமாணம்.

காலத்தில் கேசவனிடத்தில் பக்தியும், அவன் அடியார்களோடே கூடி யிருத்தலுமே ஆம்'' என்கிறபடியே சம்சாரமாகிற விஷமரத்தில், அமிருதத்தோடு ஒத்த கனிகளாகச் சொல்லப்பட்ட பகவானிடத்தில் பக்தியும், பாகவதர்களின்கூட்டுறவும் ஆகிற கனிகள் இரண்டும் கைபுகுந்த இவ்வாழ்வார்,

அடிமைபுக்காரையும் ஆட்செய்வாரையும்-அடிமைபுக்காரையும்- "ஒன்றும் தேவும்'' என்ற திருவாய்மொழியில், "மற்றைத் தெய்வம் நாடுதிரே'' என்றும், "பாடி ஆடிப் பரவிச் சென்மின்கள்'' என்றும், "தெய்வம் மற்றில்லை'' என்றும், "பேசநின்ற சிவனுக்கும் பிரமன் தனக்கும் பிறர்க்கும் நாயகன் அவனே'' என்றும், "ஒன்றும் பொய் யில்லை போற்றுமினே'' என்றும், "அறிந்து அறிந்து ஓடுமினே'' என் றும், "ஆதி மூர்த்திக்கு அடிமை புகுவதுவே'' என்றும், "மற்றைத் தெய்வம் விளம்புதிரே'' என்றும், "உளம்கொள் ஞானத்து வைம் மின் உம்மை உய்யக்கொண்டு போகுறிலே'' என்றும், "ஆட்செய் வதே உறுவதாவது'' என்றும் மற்றைத் தெய்வங்கள் நாயகர் அல்லர் என்பது முன்னாகப் பகவானுடைய முதன்மையையும், பகவானை அடைவதற்குரிய வகையையும், பகவானுக்குச் செய்யும் தொண்டே புருஷார்த்தம் என்னுமதனையும் தெளிய உபதேசிக்கக் கேட்டுத் திருந்தி அடிமைபுக்க ஸ்ரீ வைஷ்ணவர்களையும், ஆட்செய்வாரையும் - "ஆட்செய்து ஆழிப்பிரானைச் சேர்ந்தவன்'' என்கிறபடியே இப்படித் திருத்துகையாலே அடிமை செய்தவரான தம்மையும்,

[1] காண லோக த்வீபாந்தரங்களில் நின்றும் போந்த தேவர் குழாங்களைக் கண்டு காப்பிட்டு - காண - காண்கைக்கு, லோக த்வீபாந்தரங்களில் நின்றும் போந்த தேவர் குழாங்களை - "வைகுந்தன் பூதங்களேயாய்'' என்றும், "தடம் கடல் பள்ளிப்பெருமான் தன்னுடைப் பூதங்களேயாய்'' என்றும், "தேவர்கள் தாமும் புகுந்து'' என்றும் சொல்லுகிறபடியே அவ்வுலகமான ஸ்ரீ வைகுண்டத்திலுள்ளாராயும், வேறு தீவகமான சுவேதத் தீவகத்திலுள்ளாராயும், "நேமிப்பிரான் தமர் போந்தார்'' என்கிறபடியே வந்த நித்தியசூரிகளும் முக்தர்களைப் போன்றவர்களுமான தேவர்களுடைய திரள்களை, கண்டு - "கண்டோம் கண்டோம் கண்டோம்'' என்கிறபடியே கண்களுக்கு இனியதாய்

1. "பொலிக பொலிக'' என்ற திருப்பதிகத்திற் கூறும் பொருளை அருளிச்செய்கிறார் 'காண லோக த்வீபாந்தரங்களில்' என்று தொடங்கி 'விஷ்ணு பக்திபரராக்கி' என்பது முடிய.



இருக்கையாலே கண்டோம் என்று பலகாலும் சொல்லும்படி கண்டு, காப்பிட்டு - "பொலிக பொலிக பொலிக'' என்கிறபடியே அத் திரள் மேன்மேலும் வளர்க என்று மங்களாசாசனம் செய்து,

பிரஹ்லாத விபீஷணர் சொல் கேளாத அரக்கர் அசுரர் போல்வாரைத் தடவிப் பிடித்து - [1] "உன்னிடத்திலும் இருக்கிறான், என்னிடத்திலும் இருக்கிறான்'' என்று பிரஹ்லாதன் உபதேசிக்கக் கேட்டுத் திருந்தாத அசுரனான இரணியனையும், [2] "ஸ்ரீராமபிரானிடத்தில் சீதாபிராட்டியை ஒப்புவித்திடுக'' என்று ஸ்ரீவிபீஷணாழ்வான் உபதேசிக்கக் கேட்டும் திருந்தாத அரக்கனான இராவணனையும்போலே, மேலே தாம் உபதேசித்த உபதேசத்தில் திருந்தாமல் கிடந்த அரக்கர் தன்மை வாய்ந்தவர்களும் அசுரர்தன்மை வாய்ந்தவர்களுமாக உள்ளவர்களை "அரக்கர் அசுரர் பிறந்தீர் உள்ளீரேல்'' என்று தேடிப் [3] பிடித்து,

தேச கால தோஷம் போக எங்கும் இடம் கொண்டவர்களை மேவித்தொழுது உஜ்ஜீவியுங்கோள் - தேச தோஷம் போக - "கொன்று உயிர் உண்ணும் விசாதி பகை பசி தீயன எல்லாம், நின்று இவ்வுலகில் கடிவான் நேமிப்பிரான் தமர் போந்தார்'' என்கிறபடியே சரீரத்தை முடித்து உயிரைக் கவரக்கூடியதான நோய், அப்படிச் செய்யும் பகை, பசி முதலான தேசத்தின் குற்றங்கள் தங்கள் சஞ்சாரத்தாலே போம்படியும், காலதோஷம் போக - "திரியும் கலியுகம் நீங்கித் தேவர்கள் தாமும் புகுந்து'' என்கிறபடியே பொருள்களின் தன்மைகள் வேறுபடும்படியான கலிபுருஷனால் வருகின்ற காலத்தின் குற்றகங்ள் தங்கள் சஞ்சாரத்தாலே போம்படியாகவும், எங்கும் இடம் கொண்டவர்களை - "இரியப் புகுந்து இசைபாடி எங்கும் இடம் கொண்டன'' என்கிறபடியே பகவானை அநுபவிக்கின்ற அநுபவத்தின் பெருமகிழ்ச்சியாலே பெரிய ஆரவாரத்தோடே புகுந்து, பகவத் பக்தி இல்லாதார்க்கு இடம் இல்லாதபடி, எல்லாஇடங்களிலும் பரவியிருக்குமவர்களை, மேவித் தொழுது உஜ்ஜீவியுங்கோள் - "மேவித் தொழுது உய்ம்மினீர்கள்'' என்கிறபடியே நீங்கள் வேறு பயன்களைக் கருதாதவர்களாய்க்கொண்டு அடைந்து உய்வுபெறுங்கோள் ;

1. "த்வயி அஸ்தி மயி அஸ்திச''
என்பது, பிரமாணம்.

2. "ப்ரதீயதாம் தாசரதாய மைதிலீ''
என்பது, ஸ்ரீராமா. யுத். 14: 34.

3. 'பிடித்து' என்னும் இவ்வெச்சத்தை, பின்னே வருகின்ற 'விஷ்ணுபரராக்கி' என்றதனோடு முடிக்க.

நீங்கள் நிறுத்துகிறவர்களைத் தேவதைகளாக நிறுத்தினவனை - நீங்கள் நிறுத்துகிறவர்களை - அவ்வளவு போகமாட்டாமல் வேறு தேவர்களிடத்து வைத்த அன்பினாலே பகவானுடைய பெருமையை அறிகைக்குத் தகுதியான ஞானம் இல்லாதவர்கள் ஆகில், "நிறுத்தி நும் உள்ளத்துக் கொள்ளும் தெய்வங்கள்" என்கிறபடியே அவை தமக்கு இயல்பாகவே உயர்வு இல்லாமையாலே போலிவார்த்தைகளாலும் போலியுக்திகளாலும் நீங்கள் சேமம் சாத்தி நிறுத்திப் புறம்பே சிலர் அறியில் பரிகசிப்பர்கள் என்று உங்கள் நெஞ்சுக்குள்ளே நீங்கள் அறிந்ததாக வணங்கும் தெய்வங்களை, தேவதைகளாக நிறுத்தினவனை - "நிறுத்தினான் தெய்வங்களாக அத் தெய்வ நாயகன் தானே" என்கிறபடியே அரசனானவன் ஊர்தோறும் கூறு செய்வார்களை நிறுத்துமாறுபோலே உங்களால் அடையத்தக்கவர்களாக நிறுத்தின சர்வேச்வரனை,

மேவிப் பரம்பும் அவரோடு ஒக்கத் தொழில் யுகதோஷம் இல்லையாம் என்று - "நக்கபிரானோடு அயனும் இந்திரனும் முதலாகத் தொக்க அமரர் குழாங்கள் கண்ணன் - திருமூர்த்தியை - மேவி - மிக்க உலகுகள் தோறும் - எங்கும் பரந்தன - ஒக்கத் தொழகிற்றிராகில் கலியுகம் ஒன்றும் இல்லையே" என்கிறபடியே சிவனோடே பிரமனும் இந்திரனும் முதலாகத் திரண்ட தெய்வங்களின் கூட்டங்கள், கிருஷ்ணனுடைய அவனுக்கே யுரியதான திருமேனியை நன்மைக்கிடமாகப் பற்றி, விரிந்திருக்கின்ற உலகங்கள் எங்கும் ஒக்கப்பரந்து, உலகங்கள் எங்கும் நிறைந்திருக்கின்றன ; அக்கூட்டங்களைப் போன்று நீங்களும் அவனை அடையப்பெறில் தீமைகளை விளைக்கின்ற கலியுகத்தின் குற்றம் உங்களைத் தட்டாது என்று உபதேசித்து, விஷ்ணு பக்தி பரராக்கி - "விஷ்ணுவிடம் பக்தி உள்ளவன் தெய்வப் பிறவியையுடையவன்" என்கிறபடியே "அரக்கர் அசுரர்" என்னுமதுபோய், தேவர் என்ற சொல்லுக்குரியராம்படி பகவானிடத்தில் பக்தியுடையவராம்படி திருத்தி,

[1] கண்ணுக்கு இனியன காட்டலாம்படி ஆனார் கண்ணிலே நோக்கிக்காணும் பக்தி சித்தாஞ்சனத்தை இடுகிறார் ஐந்தாம்பத்தால் - கண்ணுக்கு இனியன காட்டலாம்படியானார் கண்ணிலே - அதாவது,

---

1. 'கண்ணுக்கு இனியன காட்டலாம்படியானார்' என்றது, உபாய அத்யவசாய நிலையிலே நிற்பவர்களை. கண்ணிலே—ஞானத்திலே. அதாவது, உபாயஅத்யவசாயருடைய ஞானத்தின் மேலே என்றபடி. 'நோக்கிக் காணும்பக்தி சித்தாஞ்ஜனம்' என்றது, "என் நெஞ்சினால் நோக்கிக்காணீர் என்னை முனியாதே" என்கிறபடியே, காணக்கூடாத பொருளைச் சித்தாஞ்ஜனம் போலே விளங்கக்காட்டுமதாய்ப் பேற்றின் சிறப்பினை விஷயீகரித்



திருந்தாதாரைத் திருத்தின அளவன்றிக்கே, முன்பே திருந்தி, "கண்ணுக்கு இனியன கண்டோம் தொண்டீர் எல்லீரும் வாரீர்" என்னும்படி பாகவதர்களுடைய கூட்டத்தைக் காணும் காட்சி இனிதாம்படி அவர் மாட்டு ஆசை மிக்குடையராய் உபாயத்திலே துணிவுடைமை என்னும் [1] நிலையிலே நின்று, பேற்றினைப் பெறும் நிலையிலே நிற்கும் தம்மைப் பொடியும்படியானவர்களுடைய உபாயத்தில் துணிவுடைமையாகிற ஞானத்தின் மேலே, நோக்கிக் காணும் பக்தி சித்தாஞ்ஜனத்தை இடுகிறார் - "என் நெஞ்சினால் நோக்கிக் காணீர் என்னை முனியாதே" என்றும், [2] "பக்தியாகிற சித்தாஞ்சனத்தையுடைய மனத்தில் விளங்குகிற யோகக் கண்ணால் வேதாந்தத்தில் மறைந்திருக்கிற நிதிபோன்ற உன்னுடைய பெருமையைப் பார்ப்பவர்கள்" என்றும் சொல்லுகிறபடியே சித்தாஞ்சனம்போலே, மறைந்திருக்கும் உட்பொருளை விளக்குவதாய்ப் பேற்றினுடைய பெருமையை அறியத்தக்கதான பக்தியை உபதேசமூலமாக உண்டாக்குகிறார் ஐந்தாம்பத்தால். (5)

## 224

*[3] என்னையும் யாவர்க்கும் சுரர்க்காய் அடியீர் வாழ்மின் என்று கருணையாலே 'ஸர்வலோகபூதேப்ய:' என்றவை கடலோசையும் கழுத்துக்குமேலும் ஆகாமல் உபாயத்வம் கல்வெட்டு ஆக்குகிற சரண்யன், அஜ்ஞான அசக்தி யாதாத்மிய ஜ்ஞானங்கள் அளவால் அன்றிக்கே, அங்குற்றேன் என்னான் புணராய் என்னும்படி மெய்யமர் பக்திபூம பலமாகவும் அநந்ய கதித்துவமுடைய தமக்கு, பாதமே சரண் ஆக்க, அவையே சேமம் கொண்டு ஏகசிந்தையராய்த் திரி*

---

திருக்குமதான பக்தியை. அதனை உபதேசமுகத்தாலே உண்டாக்குகிறார் என்றபடி. மறைந்து கிடக்கிற பொருள்களையும் காண்பிப்பது சித்தாஞ்ஜனமாவது. அதனைக் கண்ணிலே அணிந்துகொண்டு பார்த்தால் மறைந்து உள்ளே கிடக்கும் எத்தகைய பொருள்களையும் எளிதில் காணலாம்.

1. 'நிலையிலே நின்று' என்பதனை, பின்னே வருகின்ற 'பொடியும்படியானவர்கள்' என்றதனோடு கூட்டுக.

2. "மநஸி விலஸதாக்ஷ்ணா பக்திஸித்தாஞ்ஜநேந" என்பது, ஸ்ரீகுணரத்நகோசம், 12.

3. இச் சூத்திரத்தை மூன்று பிரிவுகளாகப் பிரித்துக் கோடல் வேண்டும். 'கல்வெட்டாக்குகிற சரண்யன்' என்பது முடிய ஒரு பிரிவு. அதற்குமேல் 'பூர்வ வாக்கியம் அநுசந்தித்தவர்' என்பது முடிய இரண்டாம் பிரிவு. 'அதற்குமேல் காட்டுகிறார் ஆறாம் பத்தால்' என்பது முடிய மூன்றாம் பிரிவு.

யக்குகளை இட்டு ஸ்வாபிப்பிராயத்தை நிவேதித்து, விளம்பரோஷம் உபாயத்தாலே அழிய, உருகாமல் வரித்ததும் நண்ணிவணங்கப் பலித்தவாறே, சப்ர காரமாகச் சக்ருத்கரணீயம் என்று புராண பௌரா ணிகர் தியாஜ்ய அம்சமாக்கின சித்அசித் பிராப்பிய பிராபக ஆபாசங்களை, கைவலிந்து கைகழலக் கண்டும் எல்லாம் கிடக்க நினையாது அகன்றும், ஆளீர் மேவீர் ஊதீர் என்று ததீயசேஷம் ஆக்கியும், புறத்திட்டுக் காட்டி என்று பிரசங்கிக்கில் முடியும் படிவிட்டு, தந்தைதாய் உண்ணும் சோறு மாநிதி பூவையாவையும் ஒன்றேயாக்கி, தளர்வேனே திரிவேனே குறுகாதோ முதல்வாவோ என்னும் ஆர்த்தியோடே, திரிவிக்கிரமனைக் குறள்கோலப் பிரானைய் அடியை மூன்றை இரந்த வன்கள்வன் கண் முகப்பே அகல்கொள் திசை வையம் விண்ணும் தட வந்த தடம்தாமரைகளை, இணைத்தாமரைகள் காண இமையோரும் வரும்படி சென்று சேர்ந்த உலகத்திலதத்தே கண்டு, அகலகில்லேன் என்று பூர்வ வாக்கியம் அநுசந்தித்தவர், "பிணக்கற"த் தொடங்கி "வேதப்புனித" இறுதி சொன்ன சாத்ய உபாய சிரவண சசோக சஜாதீயர்க்கு, "தந்தனன், மற்றோர் களைகண் இலம், புகுந்தேன்" என்று ஸ்வசித் தோபாயநிஷ்டையை உக்தி அநுஷ்டானங்களாலே காட்டுகிறார் ஆறும்பத்தில்.

என்பது, சூத்திரம்.

வியாக் :- மேல்பத்திலே சொல்லப்பட்ட அவனுடைய குண மான பரம கிருபையாலே, எல்லாரும் வந்து அடையும்படி இருக் கின்ற எல்லாப் பொருள்கட்கும் புகலிடமான சர்வேச்வரன், பக்திக் குப் பரவசப்பட்ட தன்மையாலே வேறு புகலிடம் இல்லாத ஆழ் வார்க்குத் தன் திருவடிகளையே வேறு ஒன்றையும் வேண்டாத உபாயமாகக் காட்டிக் கொடுத்தான்; அங்ஙனம் காட்டிக்கொடுக்கப் பெற்ற ஆழ்வார், அவ்வுபாயத்திலே நிலைபெற்று நடக்கிற சிந்தையை யுடையராய், தம்முடைய அந்த எண்ணத்தைத் தூதுவிடும் முகத் தாலே எம்பெருமானுக்கு அறிவித்தார்; அறிவித்தவுடனே அவன் வந்திலன்; அவன் வரவு தாழ்த்தமையாலே பிரணய ரோஷத்தை யுடையவரானார் ஆழ்வார்; அந்தப் பிரணய ரோஷத்தை இறைவன் வந்து நீக்கினான்; நீக்கியவாறே அவனுடைய பேராற்றலை நினைந்து,



மேலே ஐந்தாவது பத்தில் "பிறந்தவாறும்" என்ற திருவாய்மொழி யில் அவனுடைய குணங்களைத் தரித்து நின்று அநுபவிக்க வல்லே னும்படி செய்தருளவேண்டும் என்று பண்ணின பிரபத்தியும் "குரவை ஆய்ச்சியர்" என்ற திருவாய்மொழியிலே பலித்தது; அது பலித்த வாறே பேற்றிற்குப் பிரபத்தி பண்ணுவதாகக் கோலினார்;

பேற்றிற்குப் பிரபத்தி செய்யும்போது மற்றைப் பொருள்களின் பற்றுக்களை எல்லாம் முற்றத் துறந்தே செய்யவேண்டுகையாலே பௌராணிகர் கூற்றின்படி பிரபத்திக்கு விரோதிகளான துறக்கத் தகுவனவற்றை எல்லாம் அவற்றைப் பற்றின வார்த்தைகளையும் கேட்கப் பொருதவாறு வாசனையோடு துறந்தார்; துறந்தவை எல்லாம் தமக்குப் பற்றுகிற விஷயமேயாக நினைத்துப் பரம ஆர்த்தி யோடே, தமக்குத் தஞ்சமாக நினைத்திருக்கும், திருஉலகு அளந் தருளின, எல்லார்க்கும் எளியனவான திருவடிகளை, நித்திய சூரி களும் வந்து அநுபவிக்கும்படி நிற்கிற திருமலையிலே கண்டு கொண்டு, துவயத்தில் முன் வாக்கியத்தில் கூறியபடி சரணம் புகுந்தார்; அங்ஙனம் சரணம் புகுந்தவர், "பத்துடையடிவர்க்கு" என்ற திருவாய்மொழி தொடங்கி ஐந்தாம்பத்து முடிய உபதேசித்த பக்தி உபாயத்தின் 'செய்தற்கு அருமை' முதலான செயல்களை நினைத்தலாலே சோகம் தோன்றும்படியான நிலை பிறந்தவர்களுக்குத் தம்முடைய பிரபத்தி நிஷ்டையைத் தெளிவுபடுத்துகிறார் இந்த ஆறும்பத்தில்.

[1] என்னையும் யாவர்க்கும் சுரர்க்காய் அடியீர் வாழ்மின் என்று கருணையாலே சர்வலோக பூதேப்ய: என்றவை கடலோசையும் கழுத்துக்கு மேலும் ஆகாமல் உபாயத்வம் கல்வெட்டு ஆக்குகிற

---

1. முதற்பத்தால் இறைவனுடைய பரத்துவத்தையும், (முதன்மை) இரண்டாம் பத்தால் காரணத்வத்தையும், (உலகத்திற்குக் காரணன்) மூன்றாம் பத்தால் வியாபகத்வத்தையும், (எங்கும் பரந்திருத்தல்) நான் காம் பத்தால் நியந்திருத்வத்தையும், (ஏவுதல்) ஐந்தாம் பத்தால் காருணி கத்வத்தையும், (அருளுடைமை) அருளிச்செய்த ஆழ்வார், இந்த ஆறும் பத்தில் அவனுடைய சரண்யத்வத்தை (எல்லாப் பொருள்கட்கும் புகலிட மாக இருத்தல்) அருளிச்செய்கிறார் என்கிறார். அந்தச் சரண்யத்வத்தைக் காட்டுகின்ற திருப்பாசுரப் பகுதிகளை எடுத்து அருளிச்செய்கிறார் 'என் னையும்' என்று தொடங்கி.

சரண்யன் - என்னையும் - [1]"ஏறு சேவகனார்க்கு என்னையும் உளள் என்மின்களே" என்கிறபடியே துன்புறுகின்றவர்களைக் காப்பாற்று வதில் விரதம் பூண்டிருக்குமவனுக்குக் காப்பாற்றத்தக்க பொருள் களிலே யானும் ஒருத்தி உளேன் என்று சொல்லுங்கோள் என்றும், யாவர்க்கும் - [2]"திருவிண்ணகர் சேர்ந்தபிரான் வரம்கொள் பாதம் அல்லால் இல்லை யாவர்க்கும் வன்சரணே" என்கிறபடியே திரு விண்ணகரில் நின்றருளினவன் திருவடிகள் அல்லது எல்லார்க்கும் வலிய புகல் இல்லை என்றும், சுரர்க்கு ஆய் - [3]"வன்சரண் சுரர்க் காய்" என்கிறபடியே தேவர்களுக்கு வலிய இரக்ஷகனாய் என்றும், அடியீர் வாழ்மின் என்று - [4]"அடிக்கீழ் அமர்ந்து புகுந்து அடியீர் வாழ்மின் என்று என்று அருள் கொடுக்கும்" என்கிறபடியே நமக்கு அடியவர்களாக உள்ளார் எல்லாரும் நம் அடிகளின் கீழே வேறு பயன் ஒன்றையும் கருதாதவராய்ப் புகுந்து வாழ்மின் என்று தன் அருளைச் செய்யாநிற்கும் என்றும் சொல்லுகிறபடியே, கருணை யாலே - தன்னுடைய பேருளாலே, [5]சர்வலோக என்றது கடல் ஓசை ஆகாமல் - [6]"எல்லா உலகங்கட்கும் புகலிடமாக உள்ளவரும் மகாத்மாவுமான ஸ்ரீராமபிரான் முன்னிலையில், அருகில் வந்து நிற்கிற விபீஷணனாகிய என்னை விரைவில் சென்று தெரிவியுங்கோள்" என்கிறபடியே வந்து புகல் புகுந்தவனான ஸ்ரீ விபீஷணாழ்வான் '**சர்வலோக சரண்யன்** - எல்லா உலகங்கட்கும் புகலிட மானவன்' என்ற வார்த்தை கடல் ஓசைபோன்று பொருள் இல்லாதது ஆகாத படியும், பூதேப்ய: என்றது கழுத்துக்குமேல் ஆகாமல் - [7]"ஒரு முறை பிரபத்தி செய்தவன் பொருட்டும், நான் உனக்காக இருக் கிறேன் என்று யாசிக்கிறவனுக்கும் எல்லா உயிர்களிடமிருந்தும் அச்சம் இன்மையைக் கொடுக்கிறேன், இது என்னுடைய விரதம்,

1. திருவாய். 6. 1: 10. 2. திருவாய். 6. 3: 7.

3. திருவாய். 6. 3: 8. 4. திருவாய். 6. 10: 11.

5. 'ஸர்வலோக' என்றது கடலோசையாகாமல், 'பூதேப்ய:' என்றது கழுத்துக்குமேலாகாமல் என்று வாக்கியத்தை மாற்றிக் கூட்டுக.

6. ஸர்வலோக சரண்யாய ராகவாய மஹாத்மநே
நிவேதயதமாம் க்ஷிப்ரம் விபீஷண முபஸ்திதம்.

என்பது, ஸ்ரீராமா. யுத். 17: 14.

7. ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதிச யாசதே
அபயம் ஸர்வபூதேப்ய: ததாமி ஏதத் வ்ரதம் மம.

என்பது, ஸ்ரீராமா. யுத் 18: 33. பூதேப்ய: - எல்லா உயிர்களாலும் வரு கின்ற அச்சம்.



எந்நிலையிலும் விடக்கூடாதது" என்கிறபடியே, புகல் புகுந்தவர் களைக் காப்பதில் விரதம் பூண்டவனாய், எல்லார்க்கும் புகலிடமான தான் சொன்ன வார்த்தை கழுத்துக்குமேல் ஆகாதபடியாகவும்,

உபாயத்வம் கல்வெட்டு ஆக்குகிற சரண்யன் - [1]"வானவர் கோனொடும் நமன்றெழும் திருவேங்கடம்" என்றும், [2]"எழுவார் விடை கொள்வார் ஈன் துழாயானை, வழுவாவகை நினைந்து வைகல்- தொழுவார், வினைச்சுடரை நந்துவிக்கும் வேங்கடம்" என்றும், [3]"போதறிந்து வானரங்கள்" என்றும், [4]"கண்டு வணங்கும் களிறு" என்றும் சொல்லுகிறபடியே நித்தியசூரிகள், இவ்வுலக மக்கள், ஒரு பயனைப்பெற விரும்புகிறவர்கள், வேறு பயன் ஒன் றையும் விரும்பாதவர்கள், மனிதர்கள், திரியக்குகள் என்கிற வேறு பாடு இல்லாமல் அடைந்து வணங்கும்படி நிற்கையாலே தான் உபாய மாக இருக்கும் தன்மை கல்லில் எழுதிய எழுத்தாகும்படி திருமலை யிலே எழுந்தருளி நிற்கிற, சிந்தனைக்கு எட்டாத விசேடங்களை யுடையனாய் எல்லா உலகங்கட்கும் புகலிடமான சர்வேச்வரன்,

[5]அஜ்ஞாந அசக்தி யாதாத்மிய ஞானங்கள் அளவாலன்றிக்கே, அங்குற்றேன் என்னான் புணராய் என்னும்படி மெய்யமர் பக்திமூம பலமாகவும் அநங்யகதித்வமுடைய தமக்கு - [5]அஜ்ஞாந அசக்தி யாதாத்மிய ஞானங்கள் அளவால் அன்றிக்கே - [6]"அஞ்ஞானத் தாலாவது, அளவிட்டு அறிய ஒண்ணாதவன் என்ற இறைவன் மாட்டு ஞானத்தாலாவது, தன் பக்தியினுடைய மேன்மையாலாவது, இவ் வுலகில் பகவானைத்தவிர வேறு உபாயம் உண்டு என்று அறியாதவர் களுக்கு இந்தப் பகவான் பேருகவும் பேற்றினை அடைதற்குரிய வழி

1. திருவாய். 3. 3: 7. 2. முதல்திருவந். 26.

3. இரண்டாந்திருவந். 72. 4. மூன்றாந்திருவந். 70.

5. அஞ்ஞானமாவது, இறைவனைத்தவிர வேறு உபாயங்களை அறி யத்தக்க ஞானம் இல்லாமை. அசக்தியாவது, அவற்றைச் செய்யத்தக்க சக்தி இல்லாமை. சொரூப யாதாத்மிய ஞானமாவது, எம்பெருமானுக்கே அடிமைப்பட்டிருக்கிற ஆன்மாவிற்கு அவனையே உபாயமாகப் பற்றியிருத் தல் ஒழிய, அவனைத் தவிர்த்து வேறு உபாயங்களைப் பற்றுதல் தகாது என்கிற உண்மையை உணர்கின்ற அறிவு. ஆக, அஞ்ஞானத்தாலேயாதல், அசக்தியாலேயாதல், சொரூபயாதாத்மிய ஞானத்தாலேயாதல் வேறு கதிஇல்லாதவர்களாக இருப்பதொரு முறை உண்டு. அதனைத் தெரிவிக் கிறார் "அஞ்ஞான அசக்தி" என்று தொடங்கி.

6. அவித்யாதோ தேவே பரிப்ருடதயாவாவிதிதயா
ஸ்வபக்தே: பூம்நாவா ஜகதி கதிமந்யாமவிதுஷாம்
கதிர்கம்யஶ்சாஸௌ ஹரிரிதி ஜிதந்தாஹ்வயமநோ:
ரஹஸ்யம் வ்யாஜஹ்ரே ஸகலுபகவாந் சௌநகமுநி:

என்பது, பட்டர் ஸ்ரீஸூக்தி.

யாகவும் ஆகிறான் என்று, பகவானாகிய சௌநகமகரிஷியானவர் ஜிதந்தை என்ற பெயரையுடைய மந்திரத்தின் உட்பொருளை விரித்துரைத்தார்'' என்கிறபடியே, வேறு உபாயங்களை அறியத்தக்க ஞானம் இல்லாமையாலேயாதல், அதனை அநுஷ்டிக்கத்தக்க ஆற்றல் இல்லாமையாலேயாதல், பகவானுக்கே பரதந்திரப்பட்டிருக்கிற ஆன்மாவிற்கு அவன் ஒருவனே உபாயமாக இருத்தல் ஒழிய அவனுக்கு வேறுபட்ட பொருள்களை உபாயமாக நினைத்தல் கூடாது என்று [1]"உன்னால் அல்லால் யாவராலும் ஒன்றும் குறைவேண்டேன்'' என்னும்படியான சொரூப யாதாத்மியஞானத்தாலேயாதல் வேறுகதி இல்லாதவராம் அளவு அன்றிக்கே,

[2] அங்குற்றேன் என்நான் புணராய் என்னும்படி - [3]" அங்குற்றேன் அல்லேன் இங்குற்றேன் அல்லேன் உன்னைக் காணும் அவாவில் வீழ்ந்து நான், எங்குற்றேனும் அல்லேன் '' என்கிறபடியே ஓர் உபாயத்தைச் செய்து முக்தனைப் போன்றிருக்கிறேன் அல்லேன், சாதனங்களைச் செய்யுமவர்களிலே ஒருவனாயிருக்கிறேன் அல்லேன், மேலும் சாதனத்தைச் செய்ய ஒண்ணாதபடி உன் அழகு முதலியவைகளிலே ஈடுபட்டு உன்னைக் காண வேண்டும் என்னும் ஆசையால் வலி குன்றினவனாய்த் தளர்ந்து இனிச் சாதனங்களைச் செய்யும் ஆற்றலை யுடையேன் அல்லேன் என்றும், [4] " என் நான் செய்கேன் யாரே களைகண் '' என்கிறபடியே உன்திருவடிகளைப் பெறுகைக்கு என்னால் செய்யலாவது இல்லை, எனக்கும் செயலுக்கும் என்ன சேர்த்தி உண்டு, முன்பு ஏற்படுத்திய சாதனங்கள் ஒன்றும் என்பக்கல் இல்லை என்றும், [5] " பூவார்கழல்கள் அருவினையேன் பொருந்துமாறு புணராயே '' என்கிறபடியே எல்லை இல்லாத இனியனவான உன் திருவடிகளை நான்கிட்டும் வழி கல்பிக்க வேண்டும் என்றும் சொல்லும்படி, மெய் அமர் பக்திபூம பலமாகவும் - [6] " மெய்யமர்காதல் '' என்கிறபடியே அவனுடைய சொரூபத்தை நினைத்தாதல் குணங்களை நினைத்தலாலேயாதல் தரிக்க ஒண்ணாதபடியாய்த் திருமேனியிலே அணைய வேண்டும்படியான காதல் என்னும்படி மேல்பத்தில் தமக்குப் பிறந்த மிகுந்த பக்தியின் பயனாகவும் வேறு உபாயங்களுக்கு ஆள் அல்லாமல்,

1. திருவாய். 5. 8: 3.

2. மேலே கூறிய மூன்று காரணங்கள் அடியாக வேறு கதி இல்லாமை மாத்திரமன்றிக்கே, வேறு காரணங்களாலும் ஆழ்வார் வேறு கதி இல்லாதவரானார் என்கிறார் 'அங்குற்றேன்' என்று தொடங்கி.

இங்கு, ஸ்ரீவசனபூஷணம், 41-49. சூத். காண்க.

3. திருவாய். 5. 7: 2.
4. திருவாய். 5. 8: 3.
5. திருவாய். 6. 10: 4.
6. திருவாய். 6. 8: 2.



அநந்யகதித்வமுடைய தமக்கு - [1] " களைவாய் துன்பம், களையாதொழிவாய், களைகண் மற்றிலேன் '' என்கிறபடியே வேறுகதியையுடையரல்லாத தமக்கு,

பாதமே சரண் ஆக்க - [2] " ஆறு எனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய் '' என்னும்படி தன்திருவடிகளை வேறு சாதனங்களை விரும்பாத சாதனமாகக் காட்டிக்கொடுக்க, அவையே சேமம் கொண்டு ஏக சிந்தையராய் - [3] " கழல்கள் அவையே சரணாகக் கொண்ட '' என்றும், [4] " அடிமேல் சேமம்கொள் தென்குருகூர்ச்சடகோபன் '' என்றும், [5] " நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு என்று நாடோறும் ஏகசிந்தையனாய் '' என்றும் சொல்லுகிறபடியே விரோதிகளை அழிக்கும் தன்மையனானவனுடைய திருவடிகளையே வேறு சாதனங்களை வேண்டாத உபாயமாகக்கொண்டு, மாறுபடாத எண்ணத்தையுடையராய், [6] திரியக்குகளை இட்டு ஸ்வ அபிப்பிராயத்தை நிவேதித்து- [7] "வைகல் பூங்கழிவாய் வந்துமேயும் குருகினங்காள் ! கனிவாய்ப் பெருமானைக்கண்டு வினையாட்டியேன் காதன்மை கைகள் கூப்பிச் சொல்லீர் '' என்று தொடங்கி [8] " ஏறு சேவகனார்க்கு என்னையும் உளள் என்மின்கள் '' என்னுமது அளவாகப் பெற்றன்றித் தரியாத கழிபெருங்காதல் உண்டாயிருக்கவும் தம்மைக் காத்துக் கொள்வதில் தாம் ஈடுபடுதலைப்பொறுக்கமாட்டாத சொரூப பாரதந்திரியத்தாலே அவன் ஒருவனாலேயே காக்கப்படவேண்டும் என்னும் துணிவுடைய தமது எண்ணத்தை, [9] " எப்படி இரண்டு சிறகுகளாலே பறவைகள் ஆகாயத்தில் பறக்கின்றனவோ, அப்படியே, ஞானம் கர்மம் என்னும் இந்த இரண்டாலும் புருடோத்தமனான இறைவன் அடையப்படுகிறான் '' என்கிறபடியே ஞானம் அநுஷ்டானம் என்னும் இரண்டு சிறகுகளையுடைமையாலே அடையத் தகுந்த இறைவனை விரைவில் அடைவதற்குத் தகுந்த தகுதியையுடையரான சேர்ப்பாரை இட்டு அறிவித்து,

1. திருவாய். 5. 8: 8.
2. திருவாய். 5. 7: 10.
3. திருவாய். 5. 8: 11.
4. திருவாய். 5. 9: 11.
5. திருவாய். 5. 10: 11.

6. 'திரியக்குகளை இட்டு' என்று தொடங்கும் வாக்கியத்தால் "வைகல் பூங்கழிவாய்'' என்ற முதல் திருப்பதிகத்தின் பொருளைத் தெரிவித்தபடி.

7. திருவாய். 6. 1: 1.
8. திருவாய். 6. 1. 10.

9. "உபாப்யாமேவ பக்ஷாப்யாம்'' என்பது, பிரமாணம்.

[1] விளம்ப ரோஷம் உபாயத்தாலே அழிய - இப்படி அறிவித்த அளவிலும் அவன் வரவு தாழ்க்கையால் உண்டான பிரணயரோஷத்தாலே, அவன் வந்து மேல் விழுந்த அளவிலும் "போகு நம்பி" என்றும், "கழகம் ஏறேல் நம்பி" என்றும் உபேக்ஷித்து, அவன் முகம் பாராமல் இருப்போம் என்று சிற்றில்இழைப்பது சிறுசோறு அடுவது ஆக, அவை தன்னுடைய இன்பத்திற்கு விரோதம் ஆகையாலே "அழித்தாய் உன்திருவடியால்" என்கிறபடியே அவன், அந்த ஆதரம்இன்மை, வேறொன்றிலே நோக்குடைத்தா யிருத்தல்களை, தனக்கும் முடிந்த உபாயமான திருவடிகளாலே [2] உபலக்ஷிக்கப்படுகின்ற திருமேனியினுடைய அழகினாலே குலைக்க, அவனோடே பொருந்தி,

உருகாமல் வரித்ததும் - மேல் ஐந்தாம்பத்தில் "பிறந்தவாறும்" என்ற திருவாய்மொழியிலே அவதார அநுபவம் பெறாத இழவாலே பதற, அந்த அவதாரங்களின் குணங்களையும் செயல்களையும் நினைத்தாகிலும் தரிப்போம் என்று இழிந்த அளவில், "நிறம்தன் ஊடுபுக்கு எனதாவியை நின்று நின்று உருக்கி உண்கின்ற" என்றும், "பையவே நிலையும் வந்து என்நெஞ்சை உருக்குங்கள்" என்றும், "உள்ளம் உள்குடைந்து என் உயிரை உருக்கி உண்ணும்" என்றும் "ஊடுபுக்கு எனது ஆவியை உருக்கி உண்டிடுகின்ற" என்றும் சொல்லுகிறபடியே அவை மிகவும் நிலைகுலைதற்குக் காரணம் ஆகையாலே தரித்து நின்று அநுபவிக்கவல்லேனும்படி செய்தருளவேண்டும் என்று [3] அவனை உபாயமாக வரித்ததும், நண்ணி வணங்கப் பலித்தவாறே - "குரவையாய்ச்சியர்" என்ற திருவாய்மொழியிலே "என்ன குறை எனக்கு" என்று தொடங்கி, "நண்ணி நான் வணங்கப்பெற்றேன்

1. விளம்பரோஷம் - விளம்பம் காரணமாக வந்த பிரணயகோபம். விளம்பம் - காலதாமதம். உபாயம் - திருவடி. ஈண்டுத் திருவடி என்றது, உபலக்ஷணத்தால் திவ்வியமங்கள விக்கிரகத்தைக் காட்டுகிறது. திவ்விய மங்கள விக்கிரகத்தின் அழகாலே பிரணய கோபத்தை நீக்கினான் என்றபடி. பிரணயகோபம் என்பது, காதல் காரணமாக வருகின்ற சிறிய கோபம். இந்த வாக்கியத்தால் "மின்னிடை மடவார்" என்ற திருப்பதிகத்தின் பொருளைத் தெரிவித்தபடி.

2. உபலக்ஷிதம் - உபலக்ஷணத்தால் கொள்ளப்படுதல்.

3. 'அவனை உபாயமாக வரித்ததும்' என்றது, பிறந்துலகம் காத்தளிக்கும் பேரருட் கண்ணா! உன் சிறந்த குணத்தால் உருகும் சீலத்திறம் தவிர்ந்து சேர்ந்து அநுபவிக்கும் நிலை செய் என்று "பிறந்தவாறும்" என்ற திருப்பதிகத்திலே சரண்புக்கதும் என்றபடி.

இதனால் நான்காம் திருப்பதிகத்தின் பொருளை அருளிச்செய்தபடி.



எனக்கு ஆர் பிறர் நாயகரே" என்று பிரீதிமுன்னாக அவதாரங்களின் குணங்களையும் செயல்களையும் எல்லாக்காலத்திலும் கிட்டி அனுபவிக்கப் பெற்ற எனக்கு நாயகர் யார் தான் என்று செருக்கிப் பேசும்படி பலித்தவாறே,

[1] ஸப்ரகாரமாக ஸக்ருத்கரணீயம் என்று - மற்றை உபாயங்களை விடுகையாகிற முறையோடேகூட, இறைவன்மாட்டுச்சரண்புகுதலைச் செய்தல் "ஒரே முறை" என்கிறபடியே அவனை அடைதற்காகவும் ஒருக்கால் செய்ய வேண்டும் என்று பார்த்து, [2] புராணபௌராணிகர் தியாஜ்ய அம்சம் ஆக்கின - [3] "தந்தையையும் தாயையும் மனைவியையும் பிள்ளைகளையும் பந்துக்களையும் தோழர்களையும் ஆசிரியர்களையும் இரத்தினங்களையும் செல்வங்களையும் தானியங்களையும் வயல்களையும் வீடுகளையும் எல்லாத்தருமங்களையும் கைவல்யம் உட்பட விரும்பப்படும் எல்லாப்பயன்களையும் முற்றத்துறந்து, ஓ பிரபுவே! உன்னுடைய உலகத்தை அளந்த திருவடிகளைச் சரணமாக அடைந்தேன்" என்கிற வசனம் [4] "ஆக்நேயம் எட்டாவதாகும்; பவிஷ்யத் புராணம் ஒன்பதாவது புராணமாக நினைக்கத்தக்கது" என்கிறபடியே பதினெண் புராணங்களிலும் வைத்துக்கொண்டு ஒன்பதாம் புராணமாகச் சொல்லப்பட்ட பவிஷ்யத் புராணத்தில் சொல்லப்பட்டுள்ளது ஆகையாலும், புராணஞானி ஆகையாலே பௌராணிகரான ஸ்ரீபாஷ்யகாரர் கத்யத்திலே இப்புராணவசனத்தைக் கொண்டே விடத்தக்கனவற்றை

1. 'ஸப்ரகாரமாக' என்ற இவ்வாக்கியத்தில் உள்ள 'என்று' என்னும் எச்சத்தைப் பின்னே வருகின்ற 'அகலகில்லேன் என்று பூர்வ வாக்கியம் அநுசந்தித்தவர்' என்ற வாக்கியத்திலே உள்ள 'அநுசந்தித்தவர்' என்றதனோடு முடிக்க. "ஸக்ருதேவ" இச்சுலோகத்தை மேலே பக். 578. காண்க. ஸக்ருத்கரணீயம் - ஒருமுறை செய்யவேண்டியது.

2. புராணம் தியாஜ்யாம்சமாக்கின என்றும், பௌராணிகர் தியாஜ்யாம்ச மாக்கின என்றும் கூட்டுக. புராணம் - பௌஷ்யத் புராணம். பௌராணிகர் - இராமாநுசர். தியாஜ்யாம்சமாக்கின - துறக்கவேண்டிய பொருள்களாகக் கூறிய.

3. பிதரம் மாதரம் தாராந் புத்ராந் பந்தூந் ஸகீந் குரூந்
ரத்நாநி தநதாந்யாநி க்ஷேத்ராணிச க்ருஹாணிச.
ஸர்வதர்மாம்ச்ச ஸம்த்யஜ்ய ஸர்வகாமாம்ச்ச ஸாக்ஷராந்
லோகவிக்ராந்த சரணௌ சரணம் தே வ்ரஜம் விபோ.

என்பது, புராணம்.

4. "ஆக்நேயமஷ்டமஞ்சைவ பவிஷ்யந்நவமம் ஸ்மிருதம்" என்பது, பிரமாணம்.

விடுதல் முன்னாகப் பிரபத்தியைப் பண்ணுகையாலும் 'புராண பௌராணிகர் தியாஜ்யாம்சம் ஆக்கின' என்கிறார். அங்ஙன் அன்றிக்கே, இப்பொருள் புராணத்தில் சொல்லப்பட்டதாகையாலும், அது தான் பண்டைய பெரியோர்களுடைய அநுஷ்டானமாகச் சொல்லப்படுகையாலும் அங்ஙனம் அருளிச்செய்தார் ஆகவுமாம்.

[1] சித்து அசித்துப் பிராப்ய பிராபக ஆபாசங்களை - ஆக, இப்படிப் புராணமும் பௌராணிகரும் "பிதரம்மாதரம் - தந்தைதாய்" என்று தொடங்கி "ஸாக்ஷராந் - கைவல்யம் உட்பட" என்னுமது அளவாக, "ஸந்த்யஜ்ய - முற்றவிட்டு" என்னுமிதற்குச் செயப்படுபொருள்கள் ஆகையாலே, மேலே கூறப்படுகின்ற பிரபத்தியைச் செய்வதற்கு அங்கமாக விடத்தகுவனவாகச் சொல்லிய அறிவுடைப்பொருள்களும் அறிவில் பொருள்களுமாக உள்ள போலிப்பேறுகளையும் போலி வழிகளையும்,

இதில் [2] "ஸர்வதர்மாம்ச்ச" என்ற தொடர்மொழிக்குமேல் உள்ளவை, வேறு உபாயங்களுக்குத் துணையுமாய், தானே பயனாகையாலே பேறுமாய் இவ்விரண்டற்கும் பொதுவாக உள்ளனவற்றைச் சொல்லுகின்றன. எங்ஙனே? என்னில் [3] "தாயைத் தெய்வமாக உடையை ஆவாய், தந்தையைத் தெய்வமாக உடையை ஆவாய்" என்றுகொண்டு ஈச்வரனுக்குச் செய்யும் தொண்டினைப்போன்று தாய் தந்தையர்களுக்குச் செய்யும் தொண்டினையும் வழிபாட்டிற்கு அங்கமாகச் சாஸ்திரம் விதிக்கையாலே, தாய்தந்தையர்கள், வேறு உபாயங்களுக்குத் துணைவருமாய், அவ்வளவன்றிக்கே இவர்களுடைய பிரிவு பொறுக்கமுடியாததாக இருக்கையாலே தாமே பயனாகவும் இருப்பார்கள். மனைவியும், இல்வாழ்க்கை நடத்துவதற்குத் துணையாக இருக்கையாலே வேறு உபாயங்களுக்குத் துணையுமாய், காதலுக்கு உரியவளாயுமிருக்கையாலே உபேயமாகவும் இருப்பாள். புத்திரனும்

---

1. ஆக்கின சித்து அசித்துப் பிராப்ய பிராபக ஆபாசங்கள் என்க. சித்து பிராப்ய பிராபக ஆபாசங்களை, அசித்துப் பிராப்ய பிராபக ஆபாசங்களை என்று கூட்டுக. ஆபாசம் - போலிப் பொருள்கள்.

2. மேலே கூறிய அறிவுடைப்பொருள்களும் அறிவில்பொருள்களுமாய இரண்டும், போலிப்பேறுகளும் போலிவழிகளும் ஆமாறு யாங்ஙனம்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஸர்வதர்மாம்ச்ச' என்று தொடங்கி.

3. "மாத்ரு தேவோ பவ பித்ரு தேவோ பவ" என்பது, தைத்திரீயோபநிட.



[1] "புத் என்னும் நரகத்தினின்றும் காப்பாற்றுகிறான், ஆதலால் புத்திரன் என்று பெயர்" என்கிறபடியே நரகத்தைக் காணுதற்குக் காரணமான பாவங்கள் நீங்குவதற்குக் காரணமாகுமுகத்தாலே வேறு உபாயங்களுக்குத் துணையுமாய், தன்னுடைய பிரிவு பொறுக்க ஒண்ணாததாய் இருக்கையாலே உபேயமுமாய் இருப்பன்.

உறவினர்கள், இவன், குடிக்குப் பழி உண்டாகுமாறு ஒழுகாதபடி இவனை நியமித்து நல்வழியே நடத்துமவர்களாகையாலே வேறு உபாயங்களுக்குத் துணைவர்களுமாய், பெருங்குடிப் பாட்டத்தே பிறந்தோம் என்கிற செருக்காலே உபேயருமாய் இருப்பர்கள். தோழனும், இவனுக்கு நலத்தைச் செய்பவனாய் இவனை நலத்திலேயே ஒழுகச் செய்பவனுமாகையாலே வேறு உபாயங்களுக்குத் துணைவனுமாய், காதலுக்கு உரியவனுமாய் இருக்கையாலே உபேயமுமாய் இருப்பன். ஆசிரியராகிறார், வேறு உபாயங்களை உபதேசித்துப் போருகையாலே வேறு உபாயங்களுக்குத் துணைவருமாய், உதவியைச் செய்பவர்கள் ஆகையாலே உபேயமுமாய் இருப்பார்கள். இரத்தினங்கள், மற்றைய உபாயங்களைச் செய்வதற்கும் செயல்படுமுறைபற்றிக் காரணமாக இருத்தலாலே துணையாயும், மேலே சொல்லப்பட்டனவற்றை அழிய மாறியாகிலும் கொள்ளப்படுவன ஆகையாலே உபேயமுமாய் இருக்கும். தனமும் தான்யமும் வயல்களும் அப்படியே. வீடுகள் வசிப்பதற்கு இடமாகு முகத்தாலே வேறு உபாயங்களுக்குத் துணையுமாய், மாட மாளிகையாக எடுக்கப்படும்படியான ஆசைக்கு உரிய பொருளாக இருப்பதனாலே உபேயமுமாய் இருக்கும்.

மேல் "சர்வ தர்மாம்ச்ச - எல்லாத் தருமங்களையும்" என்பது போன்றவைகளாலே நேரே வேறு உபாயங்களாய் இருப்பனவற்றையும், வேறு உபேயங்களாய் இருப்பனவற்றையும் சொல்லுகிறது. அவற்றில் "ஸர்வ தர்மாம்ச்ச" என்பது கர்மயோகம் முதலான உபாயங்களைச் சொல்லுகிறது. "ஸர்வகாமாந்ச - எல்லா விரும்பப்படும் பொருள்களை" என்று இவ்வுலகிலும் மேலுலகிலும் உள்ள செல்வ வேறுபாடுகளைச் சொல்லுகின்றது. "ஸாக்ஷராந் - கைவல்யம் உட்பட" என்பது அக்ஷரம் என்ற சொல்லுக்குப் பொருளான கைவல்யத்தையும் அவற்றைப் போன்றே விடத்தக்கது என்கிறது. ஆக, இப்படி உபாயமாக இருத்தல் உபேயமாக இருத்தல்பற்றி ஒரு நிலை இன்றிக்கே மேற்கூறியபடியே வேறு உபாயங்களுக்குத் துணை

---

1. புந்நாம்நோ நரகாத் த்ராயத இதிபுத்த்ர: என்பது, பிரமாணம்.

யாகும்தன்மையாலும், விரும்பப்படுதல் முதலிய தன்மைகளாலும் உண்டான உபாய உபேயமாகும் தன்மைகளையுடைய தாய் தந்தையர் முதலானவர்களை, அறிவுடைப்பொருள்களாகிற போலி உபாய உபேயங்கள் என்கிறது. இரத்தினம் தனம் தானியம் முதலானவைகளை அறிவில்பொருள்களாகிற போலி உபாய உபேயங்கள் என்கிறது.

அன்றிக்கே, "ஸர்வதர்மாம்ச்ச" என்பது போன்றவைகளும் சர்வேச்வரனாகிற உபாயத்தையும் உபேயத்தையும் நோக்கும்போது போலிகள் ஆகையாலே அவற்றையும் கூட்டிக் கொண்டு சொல்லவுமாம். "கைவலிந்து" என்பது போன்றவைகளுக்குத் தகுதியாக இவையும் தள்ளவேண்டியவைதாமே. மேற் சொல்லுகிற பிரபத்திக்கு அங்கமான துறவு, உபாயத்திற்கு விரோதிகளான அனைத்தையும் விஷயமாக வுடைத்தாகையாலே 'கைவலிந்து' என்பது போன்றவைகளால் சொன்னவை, விடப்படுவனவான அனைத்திற்கும் உபலக்ஷணமாம். இப்படியானாலே அன்றோ 'பிரகாரத்தோடுகூட ஒரு முறை செய்யத்தக்கது பிரபத்தி' என்பதற்குச் சேருவது.

ஆக, இப்படியிருந்துள்ள அறிவுடைப்பொருள்களாகிற உபாயப்போலிகளையும் உபேயப்போலிகளையும், அறிவில் பொருள்களாகிற உபாயப்போலிகளையும் உபேயப்போலிகளையும்,

[1] கைவலிந்து கைகழலக் கண்டும் எல்லாம் கிடக்க நினையாது அகன்றும் - [2] "அன்னைமீர் அணிமாமயில் சிறுமான் இவள் நம்மைக் கைவலிந்து" என்றும், [3] "இழந்தது சங்கே" என்றும், [4] "இதெல்லாம் கிடக்க இனிப் போய்" என்றும், [5] "எம்மை ஒன்றும் நினைத்திலளே" என்றும், [6] "இன்று எனக்கு உதவாது அகன்ற" என்றும் அறிவுடைப்பொருள் அறிவில்பொருள்களின் கூட்டமான இவற்றைக் கைவிட்டு, உறங்குவான் கைப்பண்டம்போலே பகவானிடத்தில்

1. மேலே கூறப்பட்ட போலிப்பொருள்களைத் தாமாகக் கைவிடுவதுமுண்டு; அப்பொருள்கள் தாமே கையொழிந்து போவதுமுண்டு; அப்பொருள்களை ஒன்றாக மதியாமல் உபேக்ஷித்துப்போவதுமுண்டு. இம்மூன்று வகைகளையும் 'கைவலிந்து' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். இம்மூன்று வகையையும் முறையே "துவளில் மாமணி மாடம்", "மாலுக்கு வையம்", "உண்ணும் சோறு" என்ற மூன்று திருவாய்மொழிகளிலும் காணலாம்.

2. திருவாய். 6. 5: 7. 3. திருவாய். 6. 6: 1.

4. திருவாய். 6. 7: 9. 5. திருவாய். 6. 7: 9.

6. திருவாய். 6. 7: 6.



கொண்ட அன்பின் வசப்பட்டமையாலே தன்னடையே தன்கையில் நின்றும் நெகிழ்ந்துபோகக் கண்டும், [1] "எல்லாப் போகங்களையும் முற்றத் துறந்து" என்கிறபடியே இவற்றை ஒன்றாக நினையாமல் உபேக்ஷித்து அகன்று சென்றும்,

ஆளீர் மேவீர் ஊதீர் என்று ததீயசேஷமாக்கியும் - மேற்கூறிய பொருள்களில் அவன் அடியார்கட்கு இனியனவாகக் கொடுக்கத் தகுவனவற்றை [2] "பொன்னுலகு ஆளீரோ புவனமுழுது ஆளீரோ" என்றும், "நெய்யமர் இன்னடிசில் நிச்சல் பாலொடு மேவீரோ" என்றும், "ஓடிவந்து என்குழல்மேல் ஒளிமாமலர் ஊதீரோ" என்றும் தமக்குப் பேறாகவிருக்கின்ற பரமபதத்தோடு ஒக்க, சேர்க்குமவர்க்குப் பரிசிலாகக் கொடுத்தும்,

புறத்திட்டுக் காட்டி என்று பிரசங்கிக்கில் முடியும்படி விட்டு - [3] "என்னைப் புறத்திட்டு இன்னம் கெடுப்பாயோ" என்கிறபடியே உனக்கு வேறாகும்படி விஷயங்களிலே என்னைத் தள்ளி இன்னம் கெடுக்கப் பார்க்கிறாயோ என்றும், [4] "பல நீ காட்டிப் படுப்பாயோ" என்கிறபடியே உலகத்தார் காணுவிடில் பிழையோம் என்கிற மகளிர் முதலானவர்களைத் தாம் காணில் முடிவன் என்னும்படி நனிபெரிதும் பொறுக்க இயலாதவராய் இருக்கையாலே விஷயங்களைக் காட்டி என்னையும் முடிக்கப்பார்க்கிறாயோ என்றும் சொல்லுகையாலே அவற்றைப்பற்றிப் பேசும்போதே ஏங்கி மூச்சு அடங்கும்படி அச்சம் கொண்டவராய் அவற்றை விட்டு,

தந்தை தாய் உண்ணும் சோறு மாநிதி பூவை யாவையும் ஒன்றே ஆக்கி - [5] "தேவதேவனே! எனக்கு நீயே தாயும், தந்தையும் நீயே, நீயே உறவும், ஆசாரியனும் நீயே, நீயே கல்வியும், செல்வமும் நீயே,

1. "ஸர்வாந் போகாந் பரித்யஜ்ய" என்பது, சரணாகதிகத்யம்.

2. "பொன்னுலகாளீரோ" என்ற திருவாய்மொழியின் பொருள் கூறப்படுகின்றது 'ஆளீர்' என்று தொடங்கும் வாக்கியத்தால். ததீயசேஷமாக்குதல் - அடியார்களுக்கு உரியனவாக்குதல்.

3. திருவாய். 6. 9: 8. 4. திருவாய். 6. 9: 9.

5. த்வமேவ மாதாச பிதா த்வமேவ
த்வமேவ பந்துர்ச்ச குருஸ்த்வமேவ
த்வமேவ வித்யா த்ரவிணம் த்வமேவ
த்வமேவ ஸர்வம் மம தேவதேவ.
என்பது, கத்யத்ரயம்.

நீயே எல்லாமும்'' என்கிறபடியே [1] "தேவபிரானையே தந்தை தாய் என்று அடைந்த'' என்று அயர்வறும் அமரர்கள் அதிபதியே தாய் தந்தை முதலான எல்லாவித உறவும் என்றும், [2] "உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்'' என்று தாரக போஷக போக்கியங்கள் எல்லாம், அனைவருக்கும் மிக எளியனான கிருஷ்ணனே என்றும், [3] "வைத்த மா நிதியாம் மதுசூதனையே'' என்று ஆபத்திற்குச் சேமமாகச் சேமித்து வைத்த அழிவில்லாத நிதியும் அவனே என்றும், [4] "பூவை பைங்கிளிகள் பந்து தூதை பூம்புட்டில்கள் யாவையும் திருமால் திருநாமங்களே கூவி எழும்'' என்று விளையாட்டுக்குரிய கருவிகளால் பிறக்கும் சுவை எல்லாம் திருமாலினுடைய திருப்பெயர்களைச் சொல்லவே உண்டாகாநிற்கும் என்றும் இப்படி மேலே விட்டவை அனைத்தும் பற்றுகிற பகவத் விஷயம் ஒன்றுமேயாக நினைத்து,

[5] தளர்வேனே திரிவேனே குறுகாதோ முதல்வாவோ என்னும் ஆர்த்தியோடே - "கோலத் திருமா மகளோடு உன்னைக் கூடாதே, சாலப் பலநாள் அடியேன் இன்னம் தளர்வேனே'' - உலகத்தைப் பல வகையாலும் காப்பாற்றுகின்றவனாய், [6] "ஸ்ரீவைகுண்டத்தில் பெரிய பிராட்டியாரோடுகூட'' என்கிறபடியே பெரியபிராட்டியாரோடு எழுந்தருளியிருக்கின்ற உன்னைக் கிட்டப்பெறாமல் இவ்வுலகத்திலேஇருந்து இன்னம் எத்தனை காலம் இப்படித் துன்புறக் கடவேன் என்றும், "தீயோடு உடன்சேர் மெழுகாய் உலகில் திரிவேனே'' - திரிவிக்கிரம அவதார முகத்தாலே நீயே வந்து எல்லார் தலைகளிலும் திருவடிகளை வைத்த உன்னைக் காண ஆசைப்பட்டுக் கிடையாமையாலே தீயின் சேர்க்கையில் மெழுகுபோலே பிழைக்கவும் பெறாமல் முடியவும் பெறாமல் இவ்வுலகத்தில் இப்படித் திரியக்கடவேனே என்றும், "கூவிக் கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ'' - மிக எளியனவாய் எல்லையில்லாத இனியனவான திருவடிகளிலே என்னை அருளப்பாடு இடும் காலம் இன்னம் அணித்தாகாதோ என்றும், "புணரேய் நின்ற மரம் இரண்டின் நடுவே போன முதல்வாவோ'' - விரோதிகளின் கையில் அகப்படாமல் உலகத்துக்கு வேர்ப்பற்றான உன்னை நோக்கித் தந்த

1. திருவாய். 6. 5: 11.
2. திருவாய். 6. 7: 1.
3. திருவாய். 6. 7: 11.
4. திருவாய். 6. 7: 3.
5. 'தளர்வேனே' என்று தொடங்கும் வாக்கியத்தால் "நீராய் நிலனாய்'' என்ற திருவாய்மொழியின் பொருள் பேசப்படுகின்றது.
6. "ச்ரியா ஸார்த்தம்'' இச் சுலோகத்தை மேலே காண்க.



வனே என்றும் சொல்லுகிறபடியே, மனத்தின் அநுபவம் மாத்திரம் அன்றிக்கே உன் திருவடிகளைக் கண்கூடாகக் கிட்டுவது என்றோ என்கிற [1] ஆசையோடே,

[2] திரிவிக்கிரமனாகக் குறள் கோலப்பிரானாய் அடியை மூன்றை இரந்த வன்கள்வன் கண்முகப்பே அகல்கொள் திசை வையம் விண்ணும் தடவந்த தடம் தாமரைகளை - "லோக விக்ராந்த சரணௌ சரணம் தே வ்ரஜம் விபோ - உலகங்களை அளந்த உன்னுடைய திருவடிகளை இறைவா! சரணமடைந்தேன்'' என்கிறபடியே வசிஷ்டன் என்றும் சண்டாளன் என்றும் சொல்லும் வேற்றுமைஅற வரையாதே திருவடிகளை வைக்கையாலே சௌசீல்யமும், உறங்குகிற குழந்தையின் முதுகைக் கட்டிக்கொண்டு கிடக்கும் தாயைப்போலே பக்தி இல்லாதார் தலைகளிலும் திருவடிகளை வைக்கையாலே வாத்சல்யமும், அவதரித்து முன்னே நின்று காரியம் செய்கையாலே சௌலப்யமும், 'தே' என்கையாலே தன்பேறாகச் செய்கைக்கு உறுப்பான ஸ்வாமித்வமும், 'விபோ' என்கையாலே ஞானம் சக்தி முதலிய குணங்களின் நிறைவும் சொல்லுகையாலே, திரிவிக்கிரமன் செயல்களிலே பற்றுவதற்குக் காரணமாகவும் காரியங்களைச் செய்வதற்குத் துணையாகவும் உள்ள குணங்கள் எல்லாம் பிரகாசிக்கையாலே [3] "தெய்வநாயகன் நாரணன் திரிவிக்கிரமன்'' என்றும், [4] "மாண்குறள் கோலப்பிரான்'' என்றும், [5] "அடியை மூன்றை இரந்தவாறும்'' என்றும், [6] "மின் கொள் சேர் புரிநூல் குறளாய் அகல்ஞாலம் கொண்ட வன்கள்வன்'' என்றும் சொல்லுகிறபடியே சர்வேச்வரனாய் அடியார்களிடத்தில் அன்புள்ளவனான தான் மூன்றுஅடிவைத்தலாகிற பெருஞ்செயல்களைச் செய்கைக்காகப் பெருவிலையனான அழகைச் சிறுங்கித்து அநுபவிக்கலாம்படி வாமன வேடத்தை மேற்கொண்டு மஹாபலியி

1. இந்த ஆசையோடே ஆழ்வார் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே பூர்வ வாக்கியத்தை அநுசந்தித்தார் என்று மேலே கூட்டுக.

2. ஆழ்வார் கண்ட தடம்தாமரைகளின் தன்மையை விளக்குகிறார் 'திரிவிக்கிரமனாக' என்று தொடங்கி. மேலே 'புராண பௌராணிகர் தியாஜ்யாம்சமாக்கின' என்ற இடத்தில் "லோகவிக்ராந்த சரணௌ'' என்பது முக்கியமாகச் சொல்லப்பட்ட விஷயமாகையாலே, ஆழ்வாரும் உலகம் அளந்த அந்தத் திருவடிகளிலேயே சரணம் புகுகிறார் என்று காட்டுவதற்குத் தக்கனவான திருப்பாசுரப் பகுதிகளை எடுத்துச் சேர்க்கிறார் 'திரிவிக்கிரமனாக' என்று தொடங்கி.

3. திருவாய். 5. 7: 11.
4. திருவாய். 5. 9: 6.
5. திருவாய். 5. 10: 9.
6. திருவாய். 6. 1: 11.

னுடைய வேள்விச் சாலையிலே சென்று [1] "மூன்று அடி" என்று இரந்து,தான் சொன்னபடியே அவன் செய்யும்படி, வணக்கமுள்ளதாய் மனத்தினைக் கவரும்படியான வடிவைக் காட்டி வசீகரித்து நின்ற மஹா வஞ்சகன், [2] "காண்மின்கள் உலகீர் என்று கண்முகப்பே நிமிர்ந்த" என்கிறபடியே நோக்குவித்யை காட்டுவாரைப் போலே இது ஓர் ஆச்சரியம் பாருங்கோள் என்று உலகமக்கள் எல்லாருடைய கண்ணெதிரே [3] "அகல்கொள் வையம் அளந்த மாயன்" என்றும், [4] "திசை ஞாலம் தாவி அளந்ததும்" என்றும், [5] "வையம் அளந்த மணாளன்" என்றும், [6] "மண்ணும் விண்ணும் கொண்ட மாய அம்மான்" என்றும், [7] "ஓரடியால் எல்லா உலகும் தடவந்த" என்றும், [8] "தாவி வையம்கொண்ட தடம் தாமரைகள்" என்றும் சொல்லுகிறபடியே விரிவினையுடையதாய்த் திசைகளோடு கூடின பூமியையும் மேல் உலகங்களையும் தென்றல் உலாவியது போன்று இனிமை பயக்கும்படி எங்கும் ஒக்கப் பரப்பி அளந்துகொண்ட மிக எளியனவாய் எல்லை இல்லாத இனியனவான திருவடிகளை,

இணைத்தாமரைகள் காண இமையோரும் வரும்படி சென்று சேர்ந்த உலகத்திலதத்தே கண்டு - இணைத்தாமரைகள் காண இமையோரும் வரும்படி - [9] "எந்நாளே நாம் மண்ணளந்த இணைத்தாமரைகள் காண்பதற்கு என்று" என்பது போன்று வருகின்றபடியே திரு உலகு அளந்தருளின, மிக எளியனவாய் எல்லை இல்லாத இனியனவாய்ச் சேர்த்தி அழகையுமுடைத்தான திருவடிகளை நாம் காண்பது எப்போதோ என்று நித்தியசூரிகளும் அநுபவிக்க ஆசைப்பட்டு வரும்படி, சென்று சேர்ந்த - [10] "அன்று ஞாலம் அளந்தபிரான் பரன்,சென்று சேர் திருவேங்கடமாமலை" என்கிறபடியே திருஉலகு அளந்த செயலாலே பிரகாசிக்கின்ற பரபரனாக இருப்பவன், அந்தச் சிரமம் தீர,

1.
2. திருவாய். 6. 3: 11.
3. திருவாய். 6. 4: 6.
4. திருவாய். 6. 5: 3.
5. திருவாய். 6. 6: 1.
6. திருவாய். 6. 9: 2.
7 திருவாய். 6. 9. 6.
8. திருவாய். 6. 9: 9.

9. "எந்நாளே நாம்" என்ற திருப்பாசுரத்தால் திருவேங்கடமுடையான் திருவடிகள் உலகம் அளந்த திருவடிகள் என்பது பெறப்படும்.

10. "அன்று ஞாலம்" என்ற திருப்பாசுரம் ஆறும் பத்தில் இல்லை; மூன்றும் பத்தில் "ஒழிவில் காலமெல்லாம்" என்ற திருவாய்மொழியில் உள்ளதாயினும், அத்திருப்பாசுரத்திலும் உலகம் அளந்த செயலே பேசப்பட்டிருத்தலாலும், அதுவும் திருவேங்கடமுடையான் விஷயமாகவே இருத்தலாலும் அத் திருப்பாசுரமும் பொருந்தும் என்று திருவுள்ளம்பற்றி அதனையும் ஈண்டு சேர்த்து அருளிச்செய்தார் என்க.



விடாயர் மடுவிலே சேருமாறு போலே உகந்து நிற்கின்ற, உலகம் திலதத்தே கண்டு - "திலதம் உலகுக்காய் நின்ற திருவேங்கடம்" என்கிறபடியே உலகத்துக்கு முக்கிய ஆபரணமான திருமலையிலே கண்டு,

அகலகில்லேன் என்று பூர்வ வாக்கியம் அநுசந்தித்தவர் - "அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல்மங்கை உறைமார்பா" என்கிறபடியே புருஷகாரவடிவையான பெரியபிராட்டியாரை முன்னிட்டு, "நிகரில் புகழாய்! உலகம் மூன்றுடையாய்! என்னை ஆள்வானே! நிகரில் அமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே" என்று [1] வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், சௌசீல்யம், சௌலப்யம் ஆகிற குணங்களை அடைவே சொல்லிக்கொண்டு, "புகல் ஒன்று இல்லா அடியேன்" என்று தம்மிடத்தில் கைம்முதல் இல்லாமையையும் தமக்கு வேறு கதி இல்லாமையையும் முன்னிட்டுக் கொண்டு, "உன்னடிக்கீழ்" என்று "சரணௌ" என்றதன் பொருளான திருவடிகளையும், "அமர்ந்து புகுந்தேன்" என்று "சரணம் பிரபத்யே" என்றதன் பொருளையும் சொல்லுகையாலே துவயத்தில் முன்வாக்கியத்தில் கூறியவாறே பூரண பிரபத்தியைச் செய்த ஆழ்வார்,

பிணக்கறத் தொடங்கி வேதப்புனித இறுதிசொன்ன [2] சாத்ய உபாய சிரவண சசோக சஜாதீயர்க்கு - பிணக்குஅறத் தொடங்கி வேதப்புனித இறுதி சொன்ன - "பத்துடையடியவர்க்கு" என்ற திருவாய்மொழியிலே "பிணக்கு அற அறுவகைச் சமயமும்" என்கிற திருப்பாசுரத்திலே "வணக்குடைத் தவநெறி வழி நின்று" என்று தொடங்கி [3] "வேதப்புனித இருக்கை நாவில் கொண்டு ஞானவிதி பிழையாமே அச்சுதன் தன்னை மேவித் தொழுது உய்ம்

1. "அகலகில்லேன்" என்ற அத் திருப்பாசுரத்தில் "நிகரில் புகழாய்" என்றதனால் வாத்ஸல்யமும், "உலக மூன்றுடையாய்" என்றதனால் ஸ்வாமித்வமும், "என்னை ஆள்வானே" என்றதனால் சௌசீல்யமும், "திருவேங்கடத்தானே" என்றதனாலே சௌலப்யமும் கூறப்பட்டுள்ளன என அறிக.

2. சாத்ய உபாய சிரவண - பேற்றிற்கு உபாயமான சாதன பக்தியைக் கேட்டதனாலே, சசோக - (அது செய்ய முடியாதது என்றும் சொரூபத்திற்கு விரோதி என்றும் நினைத்தலால் பிறந்த) சோகத்தையுடைய, சஜாதீயர்க்கு - தன்னை ஒத்த அதிகாரிகட்கு.

3. திருவாய். 5, 2: 9.

மினீர்கள் " என்பது முடிய மேல் உபதேசித்த, சாத்யஉபாய சிரவண சசோக சஜாதீயர்க்கு - சாத்ய சாதன பக்தியைக் கேட்டதனுலே, அந்தப் பக்தியைச் செய்தற்கு அருமையையும் அது சொருபத்திற்கு விரோதியாக இருக்கும் தன்மையையும் நினைத்துப் பிறந்த சோகத் தோடே கூடி, அதனுலே [1] " எய்தக் கூவுதல் ஆவதே எனக்கு " [2] " என் நான் செய்கேன் " என்று இருக்கும் தம்மோடு ஒத்தவராம் படியான அதிகாரம் பிறந்தவர்களுக்கு,

[3] தந்தனன் மற்றேர் களைகண்இலம் புகுந்தேன் என்று ஸ்வ சித்தோபாய நிஷ்டையை உக்தி அநுஷ்டானங்களாலே காட்டுகிறுர் ஆரும்பத்தில் - " திருவிண்ணகர் சேர்ந்த அப்பன் தன்ஞெப்பார்இல் அப்பன் தந்தனன் தன தாள் நிழலே ", " திருவிண்ணகர் மன்னு பிரான் கழல்கள் அன்றி மற்றேர் களைகண் இலம் காண்மின்களே " என்கிற தம்முடைய வார்த்தைகளாலும், " அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன் " என்கிற தம்முடைய அநுஷ்டானத்தாலும் தமக்கு இந்தச் சித்தோபாயத்தில் உண்டான நிஷ்டையைப் பிரகாசிப்பிக்கிறுர் ஆரும்பத்தில் என்கை. (6)

### 225

[4] எண்ணிலாக் குணங்கள் பால துன்ப வேறவன் மாயாப் பல்யோகு செய்தி என்னும் ஆச்சர்ய சக்தி யோகத்தாலே தெளிவுற்றவர்க்கு ஏற்றரும் வைகுந் தத்தை அருளும் பிராபகத்வம், புற்பா எறும்பு பகை வனுக்கும் ஆக்கவல்ல சர்வசக்தி, பாதம் அகலகில் லாத தம்மை, அகற்றுமவற்றின் நடுவே இருத்தக் கண்டு, நலிவான் சுமடு தந்தாய் ஓ என்று சாதன பலமான ஆக்ரோசத்தோடே பழி இட்டு, கங்குலும் பகலும் அடைவற்ற ஆர்த்தியைக் கோயில் திருவாச லிலே முறைகெட்ட கேள்வி ஆக்கி, தேற்ற ஒண்

1. திருவாய். 5. 7: 5. 2. திருவாய். 5. 8: 3.

3. இந்த ஆரும் பத்தில் உபதேசபரமான திருவாய்மொழி " நல்குர வும் செல்வும் " என்ற திருப்பதிகம். அதில், " திருவிண்ணகர் மன்னுபிரான் கழல்கள் அன்றி மற்றேர் **களைகணிலம் காண்மின்களே** " என்று முன் னிலையாக வினைமுற்று காண்கையாலே அதற்கு உபதேசத்திலே நோக்கு என்பது தெளிதல் தகும். உக்தி - தமது வார்த்தை. அநுஷ்டானம் - தமது செயல்.

4. இச் சூத்திரத்தையும் மூன்று பிரிவுகளாகப் பிரித்துக் கோடல் வேண்டும். 'ஆக்கவல்ல சர்வசக்தி' என்பது முடிய முதற் பிரிவு. இத ஞல் இப்பத்தில் கூறப்படுகின்ற இறைவனுடைய குணம் இன்னது என்று தெரிவிக்கப்படுகிறது. பிராபகத்வத்தை ஆக்கவல்ல சர்வசக்தி என்க. அதற்கு மேல் 'மறந்தவர்' என்பது முடிய இரண்டாம் பிரிவு. இதனுல்,



ணுதபடி தோற்று, ஒன்றி நிற்கப்பண்ணின பலா தாநம் மற்றும் கற்பார் இழவிலே சுவறி, பழைய தனிமைக்கூப்பீடு தலையெடுத்து, சூழவும் பகைமுகம் செய்ய, எடுப்பும் சாய்ப்புமான கிலேசம் நடக்க, உபாய அதிகாரதோஷம் ஒழிய, மாயங்கள் செய்து வைத்த வைசித்திரியைக் கேட்க, ஐச்சமாக இருத்தி உறக்கொண்ட ஸ்வ பர பிரயோஜனத்தை அருளிச் செய்ய, என்சொல்லி எந்நாள் பார்விண் நீர் இறப்பு எதிர் எதுவும் என்கிற உபகார ஸ்மிருதியோடே, தன் சரிதை கேள்வி ஆகாமல், இன்பம் பயக்க இருந்த நிலத்தேவர் குழுவிலே பாட்டுக் கேட்பிப்பதாகக் காநகோஷ்டியையும் தேவபிரான் அறிய மறந்தவர், சரமோபாயபரரானுர்க்கு நீணகரம் அது; துணித் தான் சரண் அன்றி மற்ருென்றிலம்; உள்ளித் தொழு மின் என்று பிராப்ய சாதந அவதியைப் பிரீதியாலே பிரகாசிப்பிக்கிறுர் ஏழாம்பத்தில்.

என்பது, சூத்திரம்.

வியாக் :— உபாயம் ஆகிற செயலுக்கு இன்றியமையாமல் வேண்டப்படுவதான ஆச்சரியமான ஆற்றலையுடைமையாலே, உண்மை ஞானம் பிறந்தவர்களுக்குக் கொடுக்கக் கடவதான பரம

இறைவன் ஆழ்வார்க்குச் செய்த திருவருளும், அத் திருவருளால் ஆழ்வார் அடைந்த தன்மையும் தெரிவிக்கப்படுகின்றன. சர்வசக்தி, தம்மை நலியு மவற்றின் நடுவே இருத்த, கண்டு, ஆக்ரோசத்தோடே பழியிட்டு, முறை கெட்ட கேள்வியாக்கி, தோற்று, சுவறி, தலையெடுத்து, வைத்த வைசித் திரியைக் கேட்க என்றும், பகைமுகம் செய்யவும், கிலேசம் நடக்கவும் வைத்த வைசித்திரியைக் கேட்க என்றும், உபாய அதிகாரதோஷம் ஒழிய வும் வைத்த வைசித்திரியைக் கேட்க என்றும் தனித்தனியே கூட்டுக. பலாதானம் - நீராய் அலைந்து கரைய உருகாமல், உடலிலே தரித்து நின்று தன்னை நினைப்பதற்கு இறைவனுல் கொடுக்கப்பட்ட வலிமை. அதற்கு மேல் உள்ளனவெல்லாம் மூன்ரும் பிரிவு. இதனுல், அங்ஙனமாய ஆழ்வார் செய்யும் பரோபதேசம் கூறப்படுகின்றது. ஐச்சமாக இருத்தி உறக் கொண்டது, ஸ்வ பர பிரயோஜனத்திற்காக என்று இறைவன் விடை இறுக்க, அதனைக் கேட்டு, எதுவும் என்கிற உபகார ஸ்மிருதியோடே, நிலத்தேவர் குழுவிலே பாட்டுக் கேட்பிப்பதாகக் காநகோஷ்டியையும் மறந்தவர் என்க. ஐச்சம் - இச்சை. ஸ்வபர பிரயோஜனம் - தனக்கும் பிறர்க்கும் உண்டாகும் பயன். காநகோஷ்டி - பரமபதம். மறந்தவர் - ஆழ்வார்.

பதத்தை, தானே உபாயமாய்க் கொடுக்குமிடத்தில் விலங்குகட்கும் புல் பூண்டு முதலிய தாவரங்கட்கும் பகைவர்களுக்கும் உட்படக் கொடுக்கவல்ல சர்வேச்வரன், தன் திருவடிகளைக் கணநேரமும் பிரியமாட்டாமல் அதற்குரிய அங்கத்தோடு பிரபத்தியைச் செய்த தம்மை, விஷயங்களிலே மூட்டித் தன்பக்கல் சேராதபடி அகற்று மவையான இந்திரியங்கள் நடையாடுகிற இவ்வுலக வாழ்விலே வைக்கக் கண்டு வருத்தமுற்றவராய்க் கூப்பிட்டு, தம் நிலை தாம் பேசமாட்டாதபடி தளர்ந்து, பிறரால் மீட்க ஒண்ணுதபடி பறியுண்ட சிந்தையரானர்;

அங்ஙனம் ஆன சிந்தையையுடைய ஆழ்வாரை, அவன், தன் னுடைய வெற்றிச் செயல்களைக் காட்டித் தரிப்பித்தான்; அங்ஙனம் தரிப்பித்த தரிப்பும், இவ்வுலக மக்கள் இழவினை நினைத்தலால் சுவறிப் போய்ப் பழைய துன்பமே தலையெடுத்து, அவனுடைய அவயவங்கள் எல்லாம் நினைவிற்கு விஷயமாகி ஒருமுகம் செய்து நலிய, நோவு பட்டு, இப்படி எடுப்பும் சாய்ப்புமாகத் துன்பம் செல்லச்செய்தே, "உபாயமாக இருக்கிற நீ ஞானத்திலும் சக்தியிலும் குறை வற்றிருக்க, நான் கைம்முதல்இல்லாமையிலும் வேறுகதி இல்லாமையிலும் ஆர்த்தியிலும் குறைவற்றிருக்க, என்னை இவ் வுலக வாழ்விலே வைப்பதற்கு அடி என்?" என்று கேட்க, அவனும் "நமக்கும் நம்முடையார்க்கும் இனிதாகத் திருவாய் மொழி பாடுவிக்க வைத்தோம் காணும்" என்று அருளிச்செய்ய;

வியாசர் முதலான முனிவர்கள், முதலாழ்வார்கள் கவிபாடு கைக்கு உளராயிருக்க, நம்மைக் கொண்டு கவிபாடுவித்துக் கொள் வதே! என்று அவன் செய்த உபகாரத்தைச் சொல்லி, அதற்குப் பிரதியுபகாரம் தேடிக் காணமையாலே 'இனி இஃது ஒழியச் செய்ய லாவது ஒன்று இல்லை' என்று திருவாறன்விளையிலே பெரிய பிராட்டியாருடனே எழுந்தருளியிருக்கின்ற பேரோலக்கத்திலே திருவாய்மொழி கேட்பித்து அடிமை செய்வதாக நினைத்து, அங்கே தம் திருவுள்ளம் அன்புறுகையாலே, பரமபதத்தில் இருப்பையும் விரும்பாதபடியான ஆழ்வார், மேலே தம்முடைய பிரபத்தி நிஷ் டையை வெளியிடும்படி புகுரநின்றவர்களுக்கு, அடையத்தக்க பேறு, திருவாறன்விளையே; அங்கு எழுந்தருளி நிற்கிறவனே அதனை அடைதற்குரிய வழி என்று தாம் அறுதியிட்ட உபாய உபேயங் களினுடைய முடிவைத் தம் உகப்பாலே வெளியிடுகிருர் இந்த ஏழாம் பத்தில்.



[1] எண்ணிலாக் குணங்கள் பால துன்பம் வேறவன் மாயாப் பல்
யோகு செய்தி என்னும் ஆச்சர்ய சக்தி யோகத்தாலே - எண்ணிலா -
[2] "எண்ணிலாப் பெருமாயனே" என்று எண்ணிறந்த ஆச்சர்ய
மான குணங்களையுடையவனே என்றும், குணங்கள் - [3] "குணங்கள்
கொண்ட மூர்த்தி ஓர் மூவராய்ப் படைத்து அளித்துக் கெடுக்கும்"
என்று சத்துவம் முதலான குணங்களுக்குத் தகுதியாக மூர்த்தி
களைக்கொண்டு படைத்தல் முதலியவற்றைச் செய்யுமவன் என்றும்,
பாலதுன்பம் - [4] "பாலதுன்பங்கள் இன்பங்கள் படைத்தாய்" என்று
இடம் அறிந்து இன்பதுன்பங்களைக் கல்பித்தவனே என்றும், வேற
வன் - [5] "ஊழிதோறுஊழி உருவும் பேரும் செய்கையும் வேறவன்
வையம் காக்கும்" என்று கல்பந்தோறும் திருஉருவம் திருப்பெயர்
செயல்கள் என்னும் இவற்றை வேருகவுடையனுய்க்கொண்டு உல
கத்தைக் காப்பாற்றும் என்றும், மாயா - [6] "மாயா வாமனனே"
என்று ஆச்சர்யமான செயல்களையுடையவனே என்றும், பல்யோகு
செய்தி - [7] "உள்ளப் பல்யோகு செய்தி" என்று திருவுள்ளத்திலே
பலவகையாகப் பாதுகாக்கும் உபாயங்களைச் சிந்தை செய்யாநிற்றி
என்றும், என்னும் ஆச்சர்ய சக்தி யோகத்தாலே - இப்படிப் பலவித
மாகச் சொல்லப்பட்ட, உபாயத்தைச் செய்வதற்கு வேண்டத்தக்க
தான ஆச்சரியமான சக்தியையுடைமையாலே,

தெளிவுற்றவர்க்கு ஏற்றரும் வைகுந்தத்தை அருளும் பிரா
பகத்வம், புற்பா எறும்பு பகைவனுக்கும் ஆக்கவல்ல சர்வசக்தி -
தெளிவுற்றவர்க்கு ஏற்றரும் வைகுந்தத்தை அருளும் [8] பிராபகத்வம் -
[9] "தெளிவுற்று வீவின்றி நின்றவர்க்கு இன்பக்கதி செய்யும்"
என்றும், [10] "ஏற்றரும் வைகுந்தத்தை அருளும்" என்றும் சொல்லு
கிறபடியே உபாயமும் பலமும் அவனே என்று எண்ணி, பின்பு உல
கத்தார் செயல்களைக் கண்டாதல், போலியுக்திகளைக் கொண்டாதல்

---

1. இப்பத்தில் கூறப்படுகின்ற இறைவனுடைய சக்தி என்னும் குணத்தைத் தெரிவித்தற்குரிய திருப்பாசுரப் பகுதிகளைச் சேர எடுக்கிருர் 'எண்ணிலா' என்று தொடங்கி.
2. திருவாய். 7. 1: 1
3. திருவாய். 7. 1: 11.
4. திருவாய். 7. 2: 7.
5. திருவாய். 7. 3: 11.
6. திருவாய். 7. 8: 7.
7. திருவாய். 7. 8: 4.
8. பிராபகத்வம் - உபாயமாக இருக்கும் தன்மை, வழியாக இருக்கும் தன்மை. சர்வசக்தி - இறைவன்.
9. திருவாய். 7. 5: 11.
10. திருவாய். 7. 6: 10.

பிற்காலியாதே நின்றவர்களுக்கு, தனக்கு மேல் ஒன்று இல்லாத தான ஆனந்தத்தையுடையதாய், ஒருவராலும் தன் முயற்சியால் அடைய ஒண்ணாததாய் இருக்கிற ஸ்ரீ வைகுண்டத்தைத் தன்னருளாலே கொடுக்கிற தன் உபாயமாம் தன்மையை, புற்பா எறும்பு பகைவனுக்கும் ஆக்கவல்ல சர்வசக்தி - [1] "புற்பா முதலாப் புல்லெறும்பு ஆதி ஒன்றின்றியே நற்பாலுக்கு உய்த்தனன்" என்றும், [2] "நாட்டை அளித்து உய்யச்செய்து" என்றும், [3] "சேட்பால் பழம்பகைவன் சிசுபாலன் திருவடி தாட்பால் அடைந்த" என்றும் சொல்லுகிறபடியே, ஞானம் சிறிதும் இல்லாத விலங்குகட்கும் பறவைகட்கும் புல்பூண்டு முதலிய தாவரங்களுக்கும் விரோதத்தில் முதிர நின்ற பகைவனுக்குமாம்படி செய்யவல்ல அளவிலா ஆற்றலையுடைய இறைவன்,

பாதம் அகலகில்லாத தம்மை அகற்றுமவற்றின் நடுவே இருத்தக் கண்டு, நலிவான் சுமடு தந்தாய் ஓ என்று சாதனபலமான ஆக்ரோசத்தோடே பழியிட்டு - பாதம் அகலகில்லாத தம்மை - [4] "அடியேன் உனபாதம் அகலகில்லேன் இறையுமே" என்கிறபடியே தன் திருவடிகளைக் கணநேரமும் அகல ஆற்றலையுடையவரன்றிக்கே [5] "அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே" என்கிறபடியே சரணம் புகுந்த தம்மை, அகற்றுமவற்றின் நடுவே இருத்த - [6] "அகற்ற நீ வைத்த மாய வல் ஐம்புலன்களாமவை" என்கிறபடியே தன் திருவடிகளைக் கிட்டாதபடி அகற்றவற்றான இந்திரியங்களின் நடுவே இவ்வுடம்பிலே இருக்கும்படி வைக்க, கண்டு - பார்த்து, நலிவான் சுமடு தந்தாய் ஓ என்று சாதனபலமான ஆக்ரோசத்தோடே பழிஇட்டு - [7] "நலிவான் இன்னும் எண்ணுகின்றாய்" என்றும், [8] "அன்புருகி நிற்குமது நிற்கச் சுமடு தந்தாய்" என்றும், [9] "விண்ணுளார் பெருமானேயோ" என்றும், [10] "முன்பரவை கடைந்து அமுதம் கொண்ட மூர்த்தியோ" என்றும் சொல்லுகிறபடியே விளம்பத்திற்குக் காரணம் இல்லாத உபாயத்தைப் பற்றினால் அது பலமாகும்தனையும் கிடந்து கூப்பிடுமித்தனை யல்லது வேறு ஒன்றும் செய்யலாவது இல்லாமையாலே,

1. திருவாய். 7. 5: 1.
2. திருவாய். 7. 5: 2.
3. திருவாய். 7. 5: 3.
4. திருவாய். 6. 10: 9.
5. திருவாய். 6. 10: 10.
6. திருவாய். 5. 7: 8.
7. திருவாய். 7. 1: 1.
8. திருவாய். 7. 1: 10.
9. திருவாய். 7. 1: 5.
10. திருவாய். 7. 1: 10.



மேலே தாம் செய்த உபாயத்தின் பலமாக [1] வந்ததாய், கலங்காப் பெருநகரம் கலங்கி அவனுக்கு அங்குக் குடியிருப்பு அரிதாய் வந்து விழவேண்டும்படியான, இவ்வுலக வாழ்வில் அடிக்கொதிப்பாலே வந்த பெரிய கூப்பீட்டோடே கூடிக்கொண்டு, [2] தம் தலையால் வந்ததனையும் அவன் தலையிலே ஏறிடும்படியான சம்பந்தத்தை உணர்ந்தவராகையாலே இந்திரியங்களை இட்டு நலிவிக்கிறாய் நீ என்று அவன் மேலே பழி இட்டு,

[3] கங்குலும் பகலும் அடைவற்ற ஆர்த்தியைக் கோயில் திருவாசலிலே முறை கெட்ட கேள்வி ஆக்கி - கங்குலும் பகலும் அடைவற்ற ஆர்த்தியை - இப்படிக் கூப்பிடவும் ஆற்றல் இன்றிக்கே துன்பம் உற்றவராய்க் கொண்டு ஒரு பிராட்டி நிலையை அடைந்து, "கங்குலும் பகலும் கண் துயில் அறியாள்" என்றும், "இட்டகால் இட்ட கைகளாயிருக்கும்" என்றும், "சிந்திக்கும் திசைக்கும்" என்றும் வருகின்ற இன்னோரன்ன திருப்பாசுரங்களின்படியே பகல் இரவு என்னும் வேறுபாடு அற, அழுவது தொழுவது மோஹிப்பது புலம்புவது அடைவுகெடப்பேசுவது நெடுமூச்சுஎறிவது அது தானும் மாட்டாதொழிவது செயலற்றிருப்பது இப்படித் துன்பம் விஞ்சிச் செல்லுகையாலே [4] "ஆசை, சிந்தை, நினைவு, பேசுதல், அழுதல், பித்துப்பிடித்தது போன்றிருத்தல், மயக்கம், மோஹம், வியாதி, சாதல் என்று சொல்லப்படும் இப் பத்தும் காமத்தால் உண்டாகும் விகாரங்கள்" என்றாற்போன்ற நிலை வேறுபாடுகட்கு அடைவு பிடிக்க ஒண்ணாதவாறு நடக்கிற துன்பத்தை, கோயில் திருவாசலிலே [5] முறை கெட்ட கேள்வியாக்கி - பெரியபெருமாள் திருக்கண்வளர்கின்ற

1. வந்ததாய் விழவேண்டும்படியான கூப்பீடு என்க. ஆக்ரோசம் - கூப்பீடு.

2. 'தம்தலையால்' என்று தொடங்கும் இவ்விடத்தில் 'பிரஜை தெருவிலே இடறித் தாய் முதுகில் குத்துமாறு போலே' என்ற ஸ்ரீவசன பூஷண ஸ்ரீசூக்தி நினைத்தல் தகும்.

3. "கங்குலும் பகலும்" என்ற திருப்பதிகத்தின் பொருள் இங்குப் பேசப்படுகின்றது.

4. ஆசா சிந்தா ஸ்மிருதி: கீர்த்தி: விலாபோந்மாத விப்ரமா:
மோஹோ வ்யாதிர் ம்ருதிச்சேதி விகாரா: காமஜாதச.

என்பது, பிரமாணம்.

5. திருவிருத்தத்தில் "இறையோ இரக்கினும்" என்ற திருப்பாசுரமும் தாயார் கூற்று ஆகையாலே, அத் திருப்பாசுரத்தில் "முறையோ அரவணைமேல் பள்ளிகொண்ட முகில்வண்ணனே" என்றதைத் திருவுள்ளம் பற்றி இங்கு 'முறை கெட்ட' என்று அருளிச்செய்கிறார். திருவிருத்தம் நூறு திருப்பாசுரங்களே திருவாய்மொழி நூறு திருப்பதிகங்

கோயில் திருவாசலிலே பெண் பிள்ளையைப் பொகட்டுத் திருத்தாயார் கூச்சமுறை தவிர்ந்து, தானே இவள் நிலையை அவர்க்குச் சொல்லி, "திருவரங்கத்தாய் இவள் திறத்து என்செய்கின்றாய்" என்றும், "என்செய்திட்டாய்" என்றும், "என்சிந்தித்தாய்" என்றும், "என் செய்கேன் என் திருமகட்கே" என்றும் அவர் தம்மையே கேட்கும்படி மிகப் பெரிய துன்பத்தை அடைந்து,

'அடைவு அற்ற அரதியை' என்று பாடமானபோது "கங்குலும் பகலும்" என்பது போன்றவைகளில் சொல்லுகிறபடியே பகல் இரவு என்னும் வேறுபாடு அற அழுவது தொழுவது என்பன போன்றவைகளாலே "ஆசா சிந்தா" என்ற சுலோகத்திற் சொல்லுகிறபடியே நிலைகளுக்கு ஓர் அடைவு பிடிக்க ஒண்ணாதபடி நடக்கிற துன்பத்தை என்று பொருள் கூறுக.

தேற்ற ஒண்ணாதபடி தோற்று, ஒன்றி நிற்கப் பண்ணின பலாதாநம் மற்றும் கற்பார் இழவிலே சுவறி - [1] தேற்ற ஒண்ணாதபடி தோற்று - "அன்னையர்காள் என்னைத் தேற்ற வேண்டா" என்றும், "கண்ணபிரானுக்கு என் பெண்மை தோற்றேன்" என்றும் சொல்லுகிறபடியே அண்மையில் உள்ளவர்களாலும் தேற்றித் தரிப்பிக்க ஒண்ணாதபடி நெஞ்சு பறியுண்டு பாரதந்திரியத்தையும் இழக்க, [2] ஒன்றிநிற்கப் பண்ணின பலாதாநம் - இப்படிப் பிரிவுத் துன்பத்தாலே மிகவும் தளர்ந்திருக்கிற இவரைத் தரிப்பிக்கைக்காகத் தன் வெற்றிச் செயல்களைக் காட்டிக் கொடுக்க, கண்டு பிரீதராய், "குன்றம் எடுத்தபிரான் அடியாரொடும் ஒன்றிநின்ற சடகோபன்" என்கிறபடியே தன் வெற்றிச் செயல்களிலே தோற்றிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களோடே பொருந்தி நிற்கும்படி கொடுத்த வலிமையானது, [3] மற்றும் கற்பார் இழவிலே சுவறி - "கற்பார் இராமபிரானை அல்லால் மற்றும் கற்பரோ" என்கிறபடியே அவதாரத்தால் வந்த எளிமையையுடையனாய்ப் பிரியத்தைச் செய்யுமவனாய் ஹிதத்தைச் செய்யுமவனாய், தான் அங்கீகரிக்க நினைத்தாரை ஒரு காரணமும் பற்றாமலே ஸ்ரீவைகுண்டமளவாக நடத்துமவனுமாய் இருக்கிற இவனை ஒழிய மற்றும் ஒரு பொருளைக் கற்பரோ! இப்படிச் சுலபனான இவனை இவ்வுலக மக்கள் இழப்பதே! என்று அவர்கள் இழவை நினைத்தலாலே அவ்வலிமை சுவறி,

பழைய தனிமை கூப்பீடு தலை எடுத்து, சூழவும் பகைமுகம் செய்ய, எடுப்பும் சாய்ப்புமான கிலேசம் நடக்க, உபாய அதிகார தோஷம் ஒழிய, மாயங்கள் செய்துவைத்த வைசித்திரியைக் கேட்க - பழைய தனிமைக் கூப்பீடு தலைஎடுத்து - [1] "பாமரு மூஉலகும் படைத்த பற்பநாபாவோ" என்று தொடங்கி "தனியேன் தனி ஆளாவோ" என்று ஒருதுணையும் இன்றிக்கே இருந்து, 'உலக காரணனாக இருத்தல்' முதலிய அவனுடைய செயல்களைச் சொல்லிக் கூப்பிடும்படி, முன்புத்தை "உண்ணிலாவிய" என்னும் திருவாய்மொழியில் கூப்பீடே மீளவும் தலையெடுத்து, [2] சூழவும் பகைமுகம் செய்ய - "சூழவும் தாமரை நாண்மலர் போல் வந்து தோன்றும்" என்றும், "இணைக்கூற்றம் கொலோ அறியேன்" என்றும், "கண்ணன் கோளிழை வாண்முகமாய்க் கொடியேன் உயிர் கொள்கின்றதே" என்றும் சொல்லுகிறபடியே, முன்பு அனுபவித்தவனுடைய முகத்தின் சோபையானது தெளிந்த நினைவிற்கு விஷயமாய்ப் பார்த்த பார்த்த இடம் எங்கும் தோன்றி நலிய, 'எடுப்பும் சாய்ப்புமான கிலேசம் நடக்க' என்றது, வெற்றிச் செயல்களைக் காட்டித் தரிப்பித்தபோது தலை சாய்ந்தும், மீளவும் கூப்பிடும்படி தலை எடுத்தும் இப்படி எடுப்பும் சாய்ப்புமாய்ச் செல்லுகிற துன்பமானது [3] நடவா நிற்கச் செய்தே, என்றபடி.

---

களாகப் பரம்பினவாகையாலும் "இறையோ இரக்கினும்" என்ற திருப்பாசுரமே "கங்குலும் பகலும்" என்ற திருப்பதிகமாக விரிந்ததாகையாலும் அங்ஙனம் அருளிச்செய்தார். சூத். 51. பார்க்கவும்.

1. இங்கு, "வெள்ளைச் சுரிசங்கு" என்ற திருப்பதிகத்தின் பொருள் கூறப்படுகிறது.

2. இங்கு "ஆழியெழச் சங்கும்" என்ற திருப்பதிகத்தின் பொருள் கூறப்படுகிறது.

3. "கற்பார் இராமபிரானை" என்ற திருப்பதிகத்தின் பொருள் இங்குக் கூறப்படுகின்றது.



1. "பாமரு மூவுலகும்" என்ற திருப்பதிகத்தின் பொருள் கூறப்படுகின்றது இங்கு.

2. சூழவும் - நான்கு பக்கங்களிலும், பகை - பகைவர்கள், முகம் செய்ய - தோன்றி நலிய. இங்கு "ஏழையராவியுண்ணும்" என்ற திருப்பதிகத்தின் பொருள் பேசப்படுகின்றது. திருமுகமண்டலத்தில் உள்ள உறுப்புக்களான திருக்கண்கள், திருமூக்கு, திருவாய், திருப்புருவம், திருக்காது, திருநெற்றி முதலியவை தோன்றி நலிகிறபடியை "ஏழையராவி" என்ற திருவாய்மொழியில் அருளிச்செய்திருக்கையாலே 'பகை முகம் செய்ய' என்கிறார்.

3. நடவா நிற்கச் செய்தே என்பதனை மேலே வருகின்ற 'வைசித்திரியைக் கேட்க' என்றதனோடு கூட்டுக.

[1] உபாய அதிகார தோஷம் ஒழிய - உபாயமாக இருக்கிற உனக்கு அறியாமை, ஆற்றல் இன்மைகள் ஆகிற குற்றம் இன்றிக்கே இருக்க, உன்னைச் சரணம் பூண்ட எனக்குக் கைம்முதல் இன்மை வேறுகதி இன்மைகளும், ஆர்த்தியும் உண்டாகையாலே அதிகார குற்றம் இன்றிக்கே இருக்க, மாயங்கள் செய்து வைத்த வைசித்திரியைக் கேட்க - "பாசங்கள் நீக்கி என்னை உனக்கே அறக்கொண்டிட்டு நீ - மாயங்கள் செய்து வைத்தி இவை என்ன மயக்குக்களே" என்கிறபடியே அவித்யை கர்மம் வாசனை ருசிகளை வாசனையோடே போக்கி உனக்கே உரிய அடியவனாகக் கொண்ட பின்பு, பிறப்பு இறப்பு முதலிய ஆச்சரியங்களை உண்டாக்கி என்னை இவ்வுலகத்திலே வைத்த ஆச்சரியத்தை அருளிச்செய்யவேண்டும் என்று கேட்க,

[2] ஐச்சமாக இருத்தி உறக்கொண்ட ஸ்வ பர பிரயோஜனத்தை அருளிச்செய்ய - ஐச்சமாக இருத்தி - அவன் 'நமக்கும் நம்முடையார்க்கும் போது போக்காக உம்மைக் கொண்டு திருவாய்மொழி பாடுவித்துக்கொள்ள வைத்தோம் காணும்' என்று, கர்மம் காரணமாக அன்றிக்கே தன் இச்சையாலே ஆழ்வாரை இவ்வுலகிலே இருக்கச்செய்து, உறக்கொண்ட - "என்னைத் தன்னாக்கி என்னால் தன்னை, உறப்பல இன்கவி சொன்ன" என்கிறபடியே தனக்குத் தகுதியான கவிகளைப் பாடுவித்துக்கொண்ட, ஸ்வ பர பிரயோஜனத்தை அருளிச்செய்ய - தனக்குப் பயனும், பிறர்க்குப் பயனுமான இதனை இவ்வுலகில் வைத்ததற்குக் காரணமாக அருளிச்செய்ய,

---

1. *உபாயதோஷம் அதிகாரதோஷம் என்று கூட்டுக. உலகத்தில் ஒருவன் மற்றொருவனிடத்தில் ஒரு காரியத்தை வேண்டினால் அது நிறைவேறாமல் போவதற்கு இரண்டு காரணங்கள் உண்டாகலாம். காரியத்தை முடித்துத் தரவேண்டியவனிடத்தில் அதனை முடித்துத் தருவதற்கு வேண்டிய ஆற்றல் முதலாயின இல்லாமல் இருத்தல் ஒன்று. குறை வேண்டுபவனிடத்தில் யாதாயினும் குறை இருத்தல் மற்றொன்று. அதுபோல், இங்கு 'அடியேனை இக் கொடுவுலகத்தில் வைக்காமல் விரைவில் திருவடி சேர்த்துக்கொள்ள வேண்டும்' என்று வேண்டின ஆழ்வாருடைய வேண்டுகோள் நிறைவேறாமைக்கு இறைவனிடத்திலாவது குறை இருக்கவேண்டும்; அல்லது ஆழ்வாரிடத்திலாவது குறை இருக்கவேண்டும்; இவ்விரண்டும் இல்லை என்பதனை இவ்வாக்கியத்தால் தெளிவுபடுத்துகிறார். இவ்வாக்கியம், "மாயாவாமனனே" என்ற திருப்பதிகத்தின் பொருள்.*

2. *மேலே ஆழ்வார் கேட்ட வினாவிற்கு விடை கூறப்படுகிறது இவ்வாக்கியத்தால். ஐச்சமாக - இச்சை காரணமாக. வைத்தது கருமம் காரணமாக அன்று என்றபடி. இதுமுதல் 'உபகார ஸ்மிருதியோடே' என்பது முடிய, "என்றைக்கும் என்னை" என்ற திருப்பதிகத்தில் பேசப்படும் பொருள்.*



என்சொல்லி எந்நாள் பார்விண்நீர் இறப்பு எதிர் எதுவும் என்கிற உபகார ஸ்மிருதியோடே - என்சொல்லி எந்நாள் பார்விண்நீர் இறப்பு எதிர்-வியாசர் பராசரர் வால்மீகி முதலிய மகரிஷிகளும், முதலாழ்வார்களும் உளராயிருக்க, தம்மைக்கொண்டு கவி பாடுவித்துக்கொண்ட உபகாரத்தை நினைந்து, "என்சொல்லி நிற்பனோ" என்றும், "எந்நாள் சிந்தித்து ஆர்வனோ" என்றும், "பார்விண்நீர் முற்றும் கலந்து பருகிலும் ஆர்வனோ" என்றும், "இறப்பு எதிர் காலம் பருகிலும் ஆர்வனோ" என்றும் சொல்லுகிறபடியே, அவன் செய்த உபகாரத்தை நினைந்தால் எங்ஙனே நான் தரையில் கால் பாவுவது, அவ்வுபகாரத்தைக் காலம் என்னும் ஒரு பொருள் உள்ள வரையிலும் நினைத்தாலும் நிறைவுபெற்றவன் ஆகிறிலேன்; எல்லா இடங்களிலும் உண்டான எல்லா மக்களுடையவும் வாக்கு முதலான உறுப்புக்களை நான் ஒருவனுமே உடையேனுமாய் மூன்று காலங்களிலும் பேசி அநுபவித்தாலும் மனம் நிறைவுபெற்றவன் ஆவனோ! எதுவும் என்கிற உபகார ஸ்மிருதியோடே - "உதவிக் கைம்மாறு" என்று தொடங்கி "எதுவும் ஒன்றும் இல்லை செய்வது இங்கும் அங்கே" என்கிறபடியே, இதற்குக் கைம்மாறாக ஆன்மாவினைக் கொடுப்போம் என்னில், அதுவும் அவனுக்கு உடைமை ஆகையாலே, இவ்வுலகம் அவ்வுலகமாகிற உபய விபூதியிலும் செய்யலாவது ஒன்றுஇல்லை என்னும்படியான செய்ந்நன்றியறிதலோடு கூடிக் கொண்டு,

[1] தன் சரிதை கேள்வி ஆகாமல் இன்பம் பயக்க இருந்த நிலத்தேவர் குழுவிலே பாட்டுக் கேட்பிப்பதாகக் கானகோஷ்டியையும் தேவபிரான் அறிய மறந்தவர் - தன் சரிதை கேள்வி ஆகாமல் - [2] "மிதிலைச்செல்வி உலகுய்யத் திருவயிறு வாய்த்த மக்கள் செம்பவளத்திரள்வாய் தன்சரிதை கேட்டான்" என்கிறபடியே, பிராட்டியை ஒழியப் பெருமாள் தனியிருந்த இருப்பிலே குசலவர்கள் ஸ்ரீ ராமாயணம் கேட்பித்தாற்போல் அன்றிக்கே, இன்பம் பயக்க இருந்த - "இன்பம் பயக்க எழில் மலர்மாதரும் தானும் இவ்வேழுலகை, இன்பம் பயக்க இனிதுடன் வீற்றிருந்து" என்கிறபடியே, ஆனந்த மயனான தனக்கும் ஆனந்தத்தை வளர்க்கின்றவளான பிராட்டியும் தானுமான சேர்த்தியிலே உலகமடங்க வாழும்படி உபய விபூதிகட்கும் தலைவனும் தன்மையால் வந்த வேறுபாடு தோற்ற

---

1. *இவ்வாக்கியத்தால் "இன்பம் பயக்க" என்ற பத்தாம் திருப்பதிகத்தின் பொருள் பேசப்படுகின்றது.*

2. *பெருமாள் திரு.* 10: 8.

எழுந்தருளியிருந்த, நிலத்தேவர் குழுவிலே பாட்டுக் கேட்பிப்பதாக - "நிலத்தேவர்குழு வணங்கும் சிந்தைமகிழ் திருவாறன்விளை" என்கிறபடியே, நிலத்தேவர்களான ஸ்ரீ வைஷ்ணவர்கள் திரளிலே கைம்மாறாகத் திருவாய்மொழி கேட்பித்து அடிமைசெய்யப் பாரித்து, [1]காநகோஷ்டியையும் தேவபிரான் அறிய மறந்தவர் - பரத்துவத்திலும் விருப்பம் செல்லாதபடி திருவாறன்விளையிலே விருப்பம் செல்லுகையாலே "திருவாறன்விளை யுறை தீர்த்தனுக்கு அற்றபின், சிந்தை மற்றொன்றின் திறத்தது அல்லாத் தன்மை தேவபிரான் அறியும்" என்கிறபடியே, பகவானை அநுபவிக்கும் அநுபவத்தால் உண்டாகும் பெருமகிழ்ச்சிக்குப் போக்குவீடாக "ஹாவு ஹாவு ஹாவு" என்று சாமகானம் பண்ணும் பரமபதத்தில் கூட்டத்தையும், இயல்பாகவே முற்றறிவினனும், நினைவிற்கு வாய்த்தலையிலே இருந்து எல்லாருடைய நினைவுகளையும் அறியும் அயர்வறும் அமரர்கள் அதிபதி அறிய மறந்தவர்,

சரமோபாயபரர் ஆனார்க்கு நீள்நகரமது; துணித்தான்சரண் அன்றி மற்றொன்றிலம்; உள்ளித்தொழுமின் என்று பிராப்ய சாதன அவதியைப் பிரீதியாலே பிரகாசிப்பிக்கிறார் ஏழாம்பத்தில் - சரமோபாயபரர் ஆனார்க்கு - [2]மேல், தாம் அருளிச்செய்யக் கேட்ட பிரபத்தி நெறியிலே ஊன்றியிருக்குமவர்களுக்கு, [3]நீள்நகரம் அது, துணித்தான் சரண் அன்றி மற்றொன்றிலம், உள்ளித் தொழுமின் என்று - "நீணகரமதுவே மலர்ச்சோலைகள் சூழ் திருவாறன்விளை, வாணனை ஆயிரம் தோள் துணித்தான் சரண் அன்றி மற்றொன்றிலம்" என்றும், "உள்ளித்தொழுமின் தொண்டீர்" என்றும் சொல்லுகிறபடியே

1. அடிமை செய்யப் பாரித்த சமயத்தில் எம்பெருமான் ஆழ்வாருடைய திருவுள்ளத்தைச் சோதிக்க விரும்பினான். திருவாய்மொழி கேட்பிப்பதிலேயே இவர் ஊன்றியிருக்கின்றாரோ, அல்லது பரமபதத்திலும் ஆசை வைத்திருக்கின்றாரோ பார்ப்போம் என்று நினைத்து 'ஆழ்வீர்! உமக்குப் பரமபதம் கொடுப்பதாக இருக்கிறோம்' என்ன, அதற்கு விடையாக எழுந்த வாக்கியம் இது.

2. 'மேல்' என்றது, 'அகலகில்லேன் இறையும்' என்னும் திருப்பாசுரத்தை.

3. பிரபத்தி நெறியில் ஊன்றி நிற்கும் அடியார்கட்கு, பேற்றினுடைய எல்லையையும், அதனையடைதற்குரிய வழியின் முடிந்த எல்லையையும் இங்கு அருளிச்செய்கிறார் என்றபடி. எம்பெருமானைக் காட்டிலும் அவனுடைய சம்பந்தம் பெற்ற ததீய விஷயமே பேற்றினுடைய எல்லை நிலமாகையாலே திருவாறன்விளை என்னும் அத்திவ்விய தேசமே பேறு என்றும், அர்ச்சாவதார சுலபனானவனே உபாயத்தினுடைய எல்லையாகையாலே 'துணித்தான் சரண் அன்றி மற்றொன்றிலம் - உள்ளித் தொழுமின் தொண்டீர்' என்று உபாயத்தின் எல்லையையும் வெளியிடுகிறார் என்றபடி.



தனக்குமேல் ஒன்றில்லாத இனிமையையுடையதான திருவாறன்விளையாகிற மகாநகரமே அடையத்தக்க பேறு; அங்கு எழுந்தருளி நிற்கிற, உஷையையும் அநிருத்தனையும் சேர்த்தவனான கண்ணபிரானே அந்தப் பேற்றினை அடைதற்கு வழியாவான்; இவ்வர்த்தத்தில் மாறாட்டம் இல்லை; ஆகையால், இவ்வர்த்தத்தில் சுவையுடையார் புத்தி பண்ணுங்கோள் என்று, பிராப்யசாதந அவதியை பிரீதியாலே பிரகாசிப்பிக்கிறார் ஏழாம்பத்தில் - பேற்றினுடைய எல்லை நிலம் அவனுடைய சம்பந்தம் பெற்ற பொருள் என்றும், உபாயத்தினுடைய எல்லை நிலம் அர்ச்சாவதார சுலபனானவனே என்றும் இவ்வர்த்தத்தைத் தம்முடைய உகப்பாலே வெளியிட்டருளுகிறார். ஏழாம்பத்தில் என்கை. (7)

## 226

[1]தேவிமார் பணியா நேர்பட்ட நல்லகோட்பாடு என்னும்படி சக்தியாலே நித்யமாகக் கல்பித்த பத்நீ பரிஜந ஆதிகளையுடைய சத்யகாமன் கொண்ட வாக் விருத்தியையும் மறப்பிக்கும் கலக்கமும் சங்கையும் அச்சமும் தீர, தலைச்சிறப்பத் தந்தவதில், கிருதஜ்ஞதா பல பிரதியுபகாரமாக, வேந்தர் தலைவன் கன்யகாதானம் போலே, ஆரத்தழுவி அறவிலை செய்த ஆத்மலாபத்தாலே அதீவ விளங்கிப் பணைத்து, ஜன்மபாசம் விட்டு ஆத்வாரம் ஆளும் ஆளார் என்று பரிந்து அநுரூபனோடே அமர்ந்து

1. இச் சூத்திரத்தில் 'சத்யகாமன்' என்பது முடிய ஒரு பிரிவு. இதனால், இப்பத்தில் சொல்லப்படுகின்ற இறைவனுடைய குணம் இன்னது என்று தெரிவிக்கப்படுகிறது. அதற்கு மேல், 'பெருமையைக் காட்ட' என்பது முடிய ஒரு பிரிவு. இப்பிரிவில் இறைவன் ஆழ்வார்க்குச் செய்த உதவி தெரிவிக்கப்படுகிறது. அதற்குமேல் உள்ளனவெல்லாம் ஒரு பிரிவு. இப்பிரிவில் ஆழ்வாருடைய தன்மையும், அவர் செய்த உபதேசமும் கூறப்படுகின்றன.

சத்யகாமன், ஆத்மலாபத்தாலே அதீவ விளங்கி, பணைத்து, பிரீதி வர்த்தித்து, உறைந்து, கண்டுகொண்டிருந்து அமாநுஷ போகம் ஆக்கினான்; (அங்ஙனம் ஆக்கினவனாகி) நோய் மறுவலிடாமல் சிறியேன் என்றதின் பெருமையைக் காட்டினான்; (காட்டக் கண்டு) அநுசந்தித்த ஆழ்வார், ஸ்வசாதனசாத்யஸ்தர் இருகரையராகாமல் (அவர்களை) பிராப்யைகபரராக்குகிறார் எனச் சூத்திரத்தை முடிக்க.

கொண்ட வாக்கு விருத்தியையும் மறப்பிக்கும் கலக்கமும் சங்கையும் அச்சமும் (ஆழ்வாருக்குத்) தீர, தலைச்சிறப்பத் தனதாள்களை இறைவன் தந்தான் என்க. (தந்ததற்குக்) கிருதஜ்ஞதா பிரதியுபகாரமாக (ஆழ்வார்

பிரிவில் கிருபணதசையாகத் துவரும் சீதா குணங்களாலே பிரீதி வர்த்தித்து, தித்திக்க உள்ளே உறைந்து, கண்டுகொண்டிருந்து அமாநுஷபோகமாக்கினவன், மூன்று தத்துக்குப் பிழைத்த அருவினை நோய் மறுவல் இடாமல், 'சிறியேன்' என்றதின் பெருமையைக் காட்ட) தேகாதிகளில் பரமாய், நின்று நினைக்கில் லக்ஷ்மீதுல்யமாய், அவர்க்கே குடிகளாம் பரதந்த்ர ஸ்வரூபத்தை அநுசந்தித்தவர், ஸ்வ சாதன சாத்யஸ்தர் இருகரையர் ஆகாமல், மண்ணவரும் வானவரும் நண்ணுமத்தையே குறிக்கொண்மின் உள்ளத்து என்று பிராப்யைகபரர் ஆக்குகிறார் எட்டாம்பத்தில்.

என்பது, சூத்திரம்.

வியாக் :—மேலே கூறிய [1] சர்வசக்தி யோகத்தாலே நித்தியமாகக் கல்பிக்கப்பட்ட போக்யங்கள், போக உபகரணங்கள், போக ஸ்தானங்கள் ஆகிற மூன்றனையுமுடையனுகையாலே சத்தியகாமனுன சர்வேச்வரன், ஆழ்வாரைத் தரிப்பிக்க நினைத்தான்; என்னை? எனின், ஆழ்வார், மேலே தமக்கு உண்டான வாசிகமான அடிமையையும் மறந்து, பகவானுடைய அநுபவம் கிடையாமையாலே கலங்கி, பகவானுடைய குணங்களிலும் அவனுடைய சொரூபத்திலும் ஐயம்கொண்டு, இவ்வுலக வாழ்வினை நினைந்து அஞ்சினுர்

தன் உயிரை) ஆரத்தழுவி அறவிலை செய்தனர் என்க. 'வேந்தர் தலைவன் கன்யகாதானம் போலே' என்பது, ஆழ்வார் அறவிலை செய்ததனை விளக்க வந்த உவமை. வேந்தர் தலைவன் - ஜநகமகாராஜன். தனக்குக் கிடைத்த ஆத்மலாபத்தாலே இறைவன் அதீவ விளங்கி, பணைத்து, பிரீதி வர்த்தித்து, உள்ளே உறைந்து, கண்டுகொண்டிருந்து, அமாநுஷ போகம் ஆக்கினுன் ஆழ்வார்க்கு என்க. இடையிலே உள்ள 'ஜந்மபாசம் விட்டு' என்பது முதல் 'சீதா குணங்களாலே' என்பது முடிய உள்ளவை பிரீதி வர்த்தித்தலுக்குரிய காரணங்கள். இவ்வாக்கியம் பிராட்டியோடு ஆழ்வார்க்குள்ள ஒற்றுமையை விளக்க வந்தது. அமாநுஷ போகம் - தேவ போகம். ஆக்கினவன் பெருமையைக் காட்ட என்க. 'சிறியேன்' என்றதின் பெருமையைக் காட்டுகிறார், 'தேஹாதிகளில்' என்றது முதல் 'பரதந்த்ர ஸ்வரூபத்தை' என்றது முடிய. பெருமையை அநுசந்தித்தவர் குறிக்கொண்மின் உள்ளத்து என்று பிராப்யைகபரர் ஆக்குகிறார் என்க.

1. சர்வசக்தியோகம் - எல்லாவிதமான ஆற்றலையுமுடைமை. நித்தியமாகக் கல்பிக்கப்பட்ட - எப்பொழுதும் இருப்பவைகளாகக் கூறப்படுகின்ற. போக்கியம் - இனிய பொருள்கள். உபகரணம் - கருவிகள். போகஸ்தாநம் - இன்பம் நுகர்தற்குரிய இடம்; பரமபதம். சத்தியகாமன் - எப்பொழுதும் உள்ளனவான பொருள்களையுடையவன்.



ஆகையாலே அவரைத் தரிப்பிக்க நினைத்தான்; அதற்காக, முன் தான் செய்துபோந்த உபகாரத்தை நினைப்பு ஊட்டினுன்; அதனுலே ஆழ்வாரும் செய்ந்நன்றியறிதலையுடையராய் அதற்குப் பலனுக ஆன்மாவினை அவன் திருவடிகளில் சமர்ப்பித்தார்; அதனுலே எம்பெருமான் பெருப்பேறு பெற்றுனுய், இவருடைய ஆன்ம குணங்களைக்கண்டு மிகமகிழ்ந்தவனுய், ஆழ்வார் திருவுள்ளத்திலே இருந்து, தனக்கு மேல் ஒன்று இல்லாததான அநுபவத்தை அநுபவிப்பித்து, இனி இவர், தம்மைத் 'தாழ்ந்தவர்' என்று நினைத்து அகலாமைக்காக ஆன்ம சொரூபத்தின் சிறப்பினைப் பிரகாசிப்பித்தான்; அப்போது ஆன்ம சொரூபத்தின் உண்மை நிலையை நினைந்த ஆழ்வார், மேலே தாம் உபதேசித்த பேற்றினையும் அதனை அடைதற்குரிய வழியினையும் கேட்டு உகந்தவர்கள், பலன் ஒன்றும், பலனை அடைதற்குரிய வழி வேறொன்றுமாய் இருகரையராய் அலையாதபடி பலமாகச்சொன்ன விஷயம் ஒன்றிலேயே அவர்களை ஊன்றச் செய்தருளுகிறார் இந்த எட்டாம்பத்தில்.

[1] தேவிமார் பணியா நேர்பட்ட நல்லகோட்பாடு என்னும்படி சக்தியாலே நித்தியமாகக் கல்பித்த பத்நீ பரிஜந ஆதிகளையுடைய சத்யகாமன் - தேவிமார் - [2] "தேவிமாராவார் திருமகள் பூமி ஏவ மற்று அமரர் ஆட்செய்வார், மேவிய உலகம் மூன்று அவை ஆட்சி" என்றும், பணியா - [3] "பணியா அமரர் பணிவும் பண்பும் தாமேயாம்" என்றும், நேர்பட்ட - [4] நேர்பட்ட நிறை மூஉலகுக்கும் நாயகன்" என்றும், நல்லகோட்பாடு என்னும்படி - [5] "நல்ல கோட்பாட்டுலகங்கள் மூன்றினுள்ளும் தான் நிறைந்த" என்றும் சொல்லுகிறபடியே பெரிய பிராட்டியார் முதலான தேவிமார்கட்கு நாயகனுய், ஏவிற்றுச்செய்யும் நித்தியசூரிகளுடைய தொண்டுகளுக்கும் ஞானம் முதலானவற்றிற்கும் தானே விஷயமாய், தன்னோடே பொருந்திப் பூரணமாகக் கட்டளைப்பட்டிருக்கின்ற மூன்று உலகங்கட்கும் நிர்வாஹகனுய் இருக்கும் என்னும்படி, சக்தியாலே - மேலே கூறிய தன்னுடைய ஆற்றலாலே, நித்தியமாகக் கல்பித்த - என்றும் உள்ளனவாகக் கல்பிக்கப்பட்ட, பத்நீ பரிஜந ஆதிகளையுடைய - தேவிமார், அமரர், இடம், இனியபொருள்கள், கருவிகள் ஆகியவற்றை உடையவனுகையாலே, சத்யகாமன் - சத்யகாமனுய் இருக்கிற சர்வேச்வரன்,

1. ஆழ்வார் இந்தப்பத்தில் அருளிச்செய்கிற எம்பெருமானுடைய சத்தியகாமத்வம் என்ற குணத்தைக் காட்டுகிற திருப்பாசுரப்பகுதிகளைச் சேர அடுக்குகிறார் 'தேவிமார்' என்று தொடங்கி.

2. திருவாய். 8. 1: 1
3. திருவாய். 8. 3: 6.
4. திருவாய். 8. 9: 11.
5. திருவாய். 8. 10: 11.

கொண்ட வாக்விருத்தியையும் மறப்பிக்கும் கலக்கமும் சங்கையும் அச்சமும் தீர - கொண்ட வாக்விருத்தியையும் மறப்பிக்கும் - "உம்மைக்கொண்டு கவிபாடுவித்துக்கொள்ள வைத்தோம்" என்று தான் இவரைக் கொண்டு கவிபாடுவித்துக் கொள்ளுதலாகிற சொற்களால் செய்யும்தொண்டு யாதொன்று உண்டு; அதனையும் மறக்கும்படி ஆக்கின, கலக்கமும் - [1] "காணுமாறு அருளாய் என்று என்றே கலங்கி" என்கிறபடியே தன்னைக்கண்டால் கண்டு அநுபவிக்கப் பெருமையால் வந்த கலக்கமும், அவ்வளவன்றியே, சங்கையும் - [2] "உமர் உகந்து உகந்த உருவம் நின்னுருவமாகி உன் தனக்கு அன்பரானுர், அவர் உகந்து அமர்ந்த செய்கை உன்மாயை அறிவொன்றும் சங்கிப்பன் வினையேன்" என்கிறபடியே அவனுடைய அடியார்கட்குப் பரதந்திரப்பட்டிருத்தலாகிற குணத்திலும், [3] "இறந்ததும் நீயே எதிர்ந்ததும் நீயே நிகழ்வதோ நீ இன்னேயானுல், சிறந்தநின்தன்மை அது இது உது என்று அறிவொன்றும் சங்கிப்பன் வினையேன்" என்கிறபடியே எல்லாப் பொருள்களையும் தனக்குச் சரீரமாகக் கொண்டு தான் சரீரியாய் இருக்கும் சொருபத்திலும் செய்த ஐயமும், அச்சமும் - [4] "நன்றும் அஞ்சுவன் நரகம் நான் அடைதல்" என்கிறபடியே இவ்வுலக வாழ்வை நினைத்தலால் வந்த அச்சமும், தீர - நீங்கும்படியாக,

தலைச்சிறப்பத் தந்த அதில் கிருதஜ்ஞுதா பல பிரதியுபகாரமாக - [5] "மலரடிப்போதுகள் என்னெஞ்சத்து எப்பொழுதும் இருத்தி வணங்க, பலர் அடியார் முன்பு அருளிய" என்கிறபடியே பராசரர் முதலான முனிவர்களும் முதலாழ்வார்களும் உளராயிருக்கத் தம்மைக் கொண்டு சொல்தொண்டினைக் கொண்ட முன்செய்த உபகாரத்தை

1. திருவாய். 8. 1: 2. 2. திருவாய். 8. 1: 4.
3. திருவாய். 8. 1: 7. 4. திருவாய். 8. 1: 9.

ஆக. எம்பெருமான் அடியார்கட்குப் பரதந்திரன் என்று சொல்லிப் போருவது ஒன்று உண்டு; அடியார்கட்குப் பரதந்திரனுக இருக்கிற அந்தத் தன்மையில் தமக்கு ஐயம் உண்டானதாக "உமர் உகந்து" என்ற திருப்பாசுரத்திலும், எல்லாப் பொருள்களையும் இறைவன் தனக்குச் சரீரமாக வுடையவன் என்று சொல்லிப் போருவதொன்று உண்டு; அங்ஙனம் சரீரமாகக் கொண்டிருக்கும் அத்தன்மையிலும் தமக்கு ஐயம் உண்டானதாக "இறந்ததும் நீயே" என்ற திருப்பாசுரத்திலும், தாம் அடைந்த அச்சத்தை "நன்று நான்" என்ற திருப்பாசுரத்திலும் அருளிச்செய்திருத்தல் காண்க.

5. திருவாய். 7. 10: 5.



நினைப்பிக்க, [1] "தாள்களை எனக்கே தலைத்தலைச் சிறப்பத் தந்த பேருதவி" என்று அதனை நினைத்து, அப்படி மிகச் சிறக்கும்படி உபகரித்த அதில் தமக்கு உண்டான செய்ந்நன்றியறிதலுக்குப் பலன், தகுதியான கைம்மாறு செலுத்துகை ஆகையாலே அதற்குப் பிரதியுபகாரமாக,

வேந்தர் தலைவன் கன்யகாதானம்போலே ஆரத்தழுவி அறவிலைசெய்த ஆத்மலாபத்தாலே - வேந்தர் தலைவன் கன்யகாதானம் போலே - [2] "வேந்தர் தலைவன் சனகராசன்" என்கிறபடியே அரசர்களில் தலைவனுய் ஞானிகளில் சிறந்தவனுன சனகராசன், சிவபிரானுடைய வில்லை முறித்த பெருமாளுடைய ஆண்பிள்ளைத் தனத்தைக் கண்ட பெருமகிழ்ச்சியாலே கலங்கி, [3] "விஷ்ணுவைவிட்டு ஒரு போதும் பிரியாதவள்" என்கிறபடியே, அவனைவிட்டுப் பிரிந்து நில்லாதவளாய், [4] "இறைவன் இராமபிரானுக அவதரித்தபோது பிராட்டி சீதையாக அவதரித்தாள்" என்கிறபடியே, அந்த அவதாரத்திற்குத் தகுதியாக அவதரித்த பிராட்டியை [5] "என்னுடைய மகளான இந்தச் சீதை உம்முடன்கூட இருந்து தர்மாநுஷ்டானங்களைச் செய்யத் தகுந்தவள்; இவளை அங்கீகரித்துக் கொள்ளும்; உமக்கு மங்களம் உண்டாகக்கடவது; உம்முடைய கையினுல் இவளுடைய கையினைப் பிடித்துக்கொள்ளும்" என்கிறபடியே, "என்னுடைய மகள் இவள்" என்று சொல்லிக் கன்யாதானம் செய்தாற்போலே, ஆரத்தழுவி அறவிலை செய்த ஆத்மலாபத்தாலே - [6] "உதவிக் கைம்மாறு என் உயிர் என்ன உற்று எண்ணில், அதுவும் மற்று ஆங்கவன் தன்னது" என்று, மேலே பிரதியுபகாரமாக ஆன்மாவினைக் கொடுக்கத் தேடி, 'அதுவும் எம்பெருமான் உடைமை அன்றோ' என்ற எண்ணத்தாலே கொடாமலிருந்தமையையும் அறியாதபடி, செய்ந்நன்றியறிதலால் வந்த பெருமகிழ்ச்சியாலே கலங்கி, [7] "பேருதவிக் கைம்மாறு, தோள்களை ஆரத்தழுவி என் உயிரை

1. திருவாய். 8. 1: 10.
2. பெரியாழ்வார் திரு. 4. 1: 2.
3. "விஷ்ணோச் ச்ரீரநபாயிநீ"
என்பது ஸ்ரீ விஷ்ணு பு. 1. 8: 17.
4. "ராகவத்வேபவத் ஸீதா"
என்பது, ஸ்ரீ விஷ்ணு பு. 1. 9: 144.
5. இயம் ஸீதாமமஸுதா ஸஹதர்மசரீ தவ
ப்ரதீச்ச சைநாம் பத்ரம் தே பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா.
என்பது, ஸ்ரீராமா. பால. 73: 26.
6. திருவாய். 7. 9: 10. 7. திருவாய். 8. 1: 10.

அறவிலை செய்தனன்" என்கிறபடியே ஆன்மாவானது உருவம் இல்லாததாக இருக்கச்செய்தே, செய்ந்நன்றியறிதலால் வந்த பெரு மகிழ்ச்சியாலே தம்முடைய ஆன்மாவானது தாளும் தோளுமாகப் பணைத்துத்தோன்ற பாவனையின் மிகுதியாலே அதனை அணைத்துக் கொண்டு மிக்க ஆதரத்தோடே அவனுக்கே உரியதாகக் கொடுத்த ஆன்மாவினை அவன் பெறுகையாலே,

அதீவ விளங்கிப் பணைத்து - [1]"இராமன் மிகவும் விளங்கினன்" என்றும், [2]"அந்தச் சீதாபிராட்டி எவருக்கு மனைவியாக இருக்கி ருளோ அவருடைய பராக்கிரமம் அளவிடமுடியாதது" என்றும் சொல்லுகிறபடியே, சனகமகாராசனுல் கொடுக்கப்பெற்ற சீதா பிராட்டியைப் பெற்றுப் பெருமாள் மிக விளங்கினுற்போன்று, [3]"சோதி" என்று இவர் பேசும்படி, இவர் தம்மது அல்லாதது ஒன்றைத் தம்மதாக மயங்கிக் கொடுத்தாற்போன்று அவ்வெம் பெருமானும் தன்னது அல்லாதது ஒன்றைப் பெற்றுற்போலே மயங்கிப் பேரொளியையுடையனுய்த் [4]"தோள்கள் ஆயிரத்தாய்! முடிகள்ஆயிரத்தாய்! துணைமலர்க்கண்கள்ஆயிரத்தாய்! தாள்கள் ஆயிரத்தாய்! பேர்கள்ஆயிரத்தாய்!" என்னும்படி நூறு கிளைகளாகப் பணைத்து,

ஜன்மபாசம்விட்டு, ஆத்வாரம் ஆளும் ஆளார் என்று பரிந்து, அநுரூபனேடே அமர்ந்து, பிரிவில் கிருபண தசையாகத் துவரும் சீதா குணங்களாலே பிரீதி வர்த்தித்து, தித்திக்க உள்ளே உறைந்து, கண்டுகொண்டிருந்து அமாநுஷபோகமாக்கினவன் - ஜன்ம பாசம் விட்டு - ஸ்ரீ ஜனகராசன்திருமகள் பெருமாளைக் கைப்பிடித்த பின்பு அவர்அளவில் அன்பினுலே, பிறப்பிடமான ஸ்ரீமிதிலையை நினையாதுபோன்று, இவரும், [5]"பாதம் அடைவதன் பாசத்தாலே மற்ற வன்பாசங்கள் முற்றவிட்டு" என்கிறபடியே திருவடிகளைக் கிட்டுகையில் உண்டான பக்தியினுலே புறம்பு உண்டான வலிய பாசங்களை அடியோடு விட்டு,

1. "அதீவ ராம: சுசுபே"
என்பது, ஸ்ரீராமா.

2. அப்ரமேயம் ஹிதத்தேஜோ யஸ்யஸா ஜநகாத்மஜா.
என்பது, ஸ்ரீராமா. ஆரண். 37: 18.

3. திருவாய். 8. 1: 10. 4. திருவாய். 8. 1: 10.

5. திருவாய். 8. 2: 11.



ஆத்வாரம் ஆளும்ஆளார் என்று பரிந்து - [1]"கருத்த திருக் கண்களையுடையவளான பிராட்டி மங்களங்களைச் சொல்லிக் கொண்டு வாசற்படி அளவும் பெருமாளைப் பின் தொடர்ந்து சென் ருள்" என்கிறபடியே அவள் பெருமாளுடைய வடிவழகினைக் கண்டு மங்களாசாசனம் செய்தாற்போலே, இவரும், [2]"ஆளும் ஆளார் ஆழியும் சங்கும் சுமப்பார் தாம்" என்கிறபடியே தம்மிடத்தில் பரிகைக்கு ஓராளும் ஆளுகிறிலர், மலை சுமந்தாற்போலே திருவாழி யினையும் ஸ்ரீ பாஞ்சஜன்யத்தையும் தரிப்பார் தாமாய் இராநின்றது என்று அவன் சௌகுமார்யத்தைக் கண்டு பரிந்து,

அநுரூபனேடே அமர்ந்து - பிராட்டி பெருமாளுடைய வீரம் முதலியவற்றை நினைந்து அச்சம் கெட்டு, [3]"தகுந்த சீலத்தையும் வயதினையும் நடத்தையினையும் ஒத்த குலத்தினையும் அரச இலக் கணங்களையும் உடையவளான பிராட்டிக்குப் பெருமாள் தகுந்தவர்; பெருமாளுக்குக் கருத்த கண்களையுடையவளான இந்தப் பிராட்டியும் தகுந்தவள்" என்கிறபடியே பிராட்டி தனக்கு ஒத்தவரான பெரு மாளோடே கூடி அநுபவித்தாற்போலே, இவரும், [4]"வார்கடா அருவி யானை" என்று தொடங்கி அவனுடைய வீரம் முதலியவற்றை நினைந்து அச்சம் நீங்கினவராய் "அமர்ந்த மாயோனை முக்கண் அம்மானை நான்முகனை அமர்ந்தேனே" என்கிறபடியே அவனேடே பொருந்தி அநுபவித்து,

பிரிவில் கிருபணதசையாகத் துவரும் - பிரிவு நிலையில் பிராட்டி, [5]"பனியால் தாக்கப் பெற்ற தாமரைப் பொய்கையைப் போன்று அழகினை இழந்தவளாய், மிக்க துக்கத்தாலே பீடிக்கப்பட்டவளாய், துணையைப் பிரிந்த பெண்சக்கரவாகப் பறவையைப்போன்று வருந்தத் தக்க நிலைமையை அடைந்திருக்கிருள்" என்கிறபடியே அருள் இல்

1. "ஆத்வாரமநுவவ்ராஜ மங்களாந்யபிதத்யுஷீ"
என்பது, ஸ்ரீராமா. அயோத். 16: 21. ஆத்வாரம் - வாசலளவும்.

2. திருவாய். 8. 3: 3.

3. துல்ய ஶீல வயோ வ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணம்
ராகவோர்ஹதி வைதேஹீம் தஞ்சேய மஸிதேக்ஷணு.
என்பது, ஸ்ரீராமா. சுந். 16: 5.

4. திருவாய். 8. 4: 1.

5. ஹிமஹதநலிநீவ நஷ்டஶோபா வ்யஸந பரம்பரயாதிபீட்யமாநா
ஸஹசர ரஹிதேவ சக்ரவாகீ ஜநகஸுதா க்ருபணும்தசாம்
என்பது, ஸ்ரீராமா. சுந். 16: 30. [ப்ரபந்நா.

லாதவரும் இரங்கவேண்டும்படியான நிலையை அடைந்தாற் போலே, இவரும், [1] "காண வாராய் என்று என்று கண்ணும் வாயும் துவர்ந்து" என்கிறபடியே அவனைக் காண ஆசைப்பட்டுத் திசைகள் தோறும் பார்ப்பது கூப்பிடுவதாகையாலே கண்ணும் வாயும் நீர்ப் பசை அறும்படி ஆகையால்,

சீதா குணங்களால் பிரீதி வர்த்தித்து - ஜனககுல சுந்தரியின் குணங்கள் எல்லாம் இவர் பக்கலிலே காண்கையாலே [2] "தன்னுடைய தந்தையாரால் திருமணம் செய்விக்கப்பட்ட மனைவி என்ற காரணத்தால், சீதாபிராட்டி பெருமாளுடைய விருப்பத்திற்கு உரியவள் ஆனாள்; உத்தம குணங்களாலும் திருமேனியின் அழகு நற்குடிப் பிறப்பு இவைகளாலும் அந்த அன்பானது மேலும் மேலும் வளர்ந்தோங்கியது" என்கிறபடியே குணங்களைக் கண்ட காரணத்தாலே பிராட்டி பக்கல் பெருமாளுக்கு அன்பு வளர்ந்தாற் போன்று, இவ்வாழ்வாரளவில் அன்பு வளர்ந்து,

தித்திக்க உள்ளே உறைந்து - [3] "சீதாபிராட்டியின் நெஞ்சில் எப்போதும் தங்கியிருப்பவன் ஸ்ரீராமன்" என்கிறபடியே, பெருமாள் எப்போதும் பிராட்டி நெஞ்சிற்கு இனிதாம்படி இருந்தாற்போலே, [4] "உருவு கரந்து உள்ளுந்தோறும் தித்திப்பான்" என்றும், [5] "ஒருக்கடுத்து உள்ளே உறையும் பிரான் கண்டீர்" என்றும் சொல்லுகிறபடியே நினைக்கும்தோறும் தனக்குமேல் ஒன்று இல்லாத இனிமையையுடையனாய்க்கொண்டு இவர் திருவுள்ளத்திலே நித்தியவாசம் செய்து, கண்டுகொண்டிருந்து - [6] "இருந்தான் கண்டுகொண்டு" என்கிறபடியே வறியவன் நிதிபெற்றால் பார்த்துக்கொண்டிருக்குமாறு போன்று, இவரைப் பெற்ற பிரீதியாலே வைத்த கண் மாறாமல் பார்த்துக்கொண்டிருந்து,

---

1. *திருவாய். 8. 5: 2.*

2. *ப்ரியாது ஸீதா ராமஸ்யதாரா: பித்ருக்ருதா இதி*
   *குணத்ரூப குணச்சாபி ப்ரீதி: பூயோப்யவர்த்தத.*
*என்பது, ஸ்ரீராமா. பால.* 77: 25.

3. *மநஸ்வீ தத்கதஸ்தஸ்யா நித்யம் ஹ்ருதிஸமர்ப்பித:*
*என்பது, ஸ்ரீராமா. பால.* 77: 25.

4. *திருவாய். 8. 6: 3.*   5. *திருவாய். 8. 6: 2.*

6. *திருவாய். 8. 7: 2.*



அமாநுஷ போகம் ஆக்கினவன் - [1] நான் அயோத்யையில் ஸ்ரீ ராமபிரானுடைய திருமாளிகையில் பன்னிரண்டு ஆண்டுகள் முடிய மனிதர்களுக்கு உரித்தல்லாத தேவ போகத்தை அநுபவித்தவளாய் எல்லா விருப்பமும் நிறையப்பெற்றவளாய் இருந்தேன்" என்கிறபடியே பிரிந்திருக்கும் காலத்தும் நடந்த செயலைச் சொல்லிக் கொண்டு தரிக்கலாம்படி பிராட்டியை மனிதபோகம் அன்றிக்கே திவ்வியமாக இருந்துள்ள தேவ போகங்களை அநுபவிப்பித்தாற் போலே, இவரையும், [2] "தரும் தான் அருள்தான் இனி யான் அறியேனே" என்றும், [3] "செவ்வாய் முறுவலோடு எனதுள்ளத்திருந்த, அவ்வாய் அன்றி யான் அறியேன் மற்றருளே" என்றும் ஈடுபட்டுப் பேசும்படி தேவபோகங்களை அநுபவிப்பித்தவன்,

[4] மூன்று தத்துக்குப் பிழைத்த அருவினைநோய் மறுவலிடாமல் சிறியேன் என்றதின் பெருமையைக் காட்ட - மூன்று தத்துக்குப் பிழைத்த-"வளவேழ் உலகின்" என்ற திருவாய்மொழியிலே "களவேழ் வெண்ணெய் தொடுவுண்ட கள்வா! என்பன் அருவினையேன்", "வணங்கினால் உன்பெருமை மாசூணாதோ", "அடியேன் காண்பான் அலற்றுவன் இதனின் மிக்கோர் அயர்வுண்டே" என்றும் "பொரு மா நீள்படை" என்ற திருவாய்மொழியிலே "சிந்தையுள் வைப்பன் சொல்லுவன் பாவியேன்" என்றும், "அந்தாமத்தன்பு" என்ற திருவாய்மொழியிலே "அல்லாவி உள்கலந்த", "என்முடிவு காணாதே என்னுள் கலந்தானை" என்றும் இப்படி மூன்று இடங்களிலே வந்த மூன்று கண்டங்களையும் எம்பெருமான் நீக்க நீங்கிய இவர்க்கு,

---

1. *ஸமா த்வாதச தத்ராஹம் ராகவஸ்ய நிவேசநே*
   *புஞ்ஜாநா* **அமாநுஷாந்** *போகாந் ஸர்வகாம ஸம்ருத்திநீ.*
*என்பது, ஸ்ரீராமா. சுந்.* 33: 17.

2. *திருவாய். 8. 7: 2.*   3. *திருவாய். 8. 7: 7.*

4. *'மூன்று தத்து' என்றது மூன்று கண்டங்களை என்றபடி. அவை யாவை? எனின், "வளவேழ் உலகின்" என்ற திருப்பதிகத்திலும், "பொருமா நீள்படை" என்ற திருப்பதிகத்திலும், "அந்தாமத்தன்பு" என்ற திருப்பதிகத்திலும் ஆழ்வார் தம்மைத் தாழ்வாக நினைத்து அருளிச் செய்திருப்பவை. இம் மூன்று கண்டங்களையும் அவ்வப்போது இறைவன் நீக்கி யிருக்கிறான். "வளவேழ்" என்பது, 1. 5: 1. "பொருமா நீள்படை" என்பது, 1. 10: 1. "அந்தாமத்தன்பு" என்பது, 2. 5: 1.*

அருவினைநோய் மறுவலிடாமல் - [1] "இருத்தும் வியந்து" என்ற திருவாய்மொழியிலே "மருள்தான் ஈதோ" என்றும், "பின்னை யார்க்கு அவன் தன்னைக் கொடுக்கும்" என்றும், "அருள்தான் இனி யான் அறியேன் அவன் என்னுள், இருள்தான் அற வீற்றிருந் தான்" என்றும் சொல்லுகிறபடியே உகப்புச் செல்லாநிற்கச் செய்தே "சிறியேனுடைச் சிந்தையுள் மூவுலகும் தன், நெறியா வயிற்றிற்கொண்டு நின்றொழிந்தார்" என்று இவர்தாம் தம் சிறு மையை நினைந்தவாறே, எம்பெருமான் இவர் தம் சிறுமையை நினைந்து மீண்டும் அகலில் செய்வது என்? என்று அஞ்சி, 'இனி இவர் தாம் அகலுகிறது வந்தேறியான சரீரசம்பந்தத்தையிட்டு இது நமக்குத் தகாதது என்றே அன்றோ ஆதலால், இவ்வான்மாவினு டைய உண்மைத் தன்மையைக் கண்டால் அகலமாட்டார்' என்று பார்த்து 'அச் சிறியேன்' என்ற நோய் மறுவலிடாதபடி,

சிறியேன் என்றதின் பெருமையைக் காட்ட - 'நமக்குக் கௌஸ் துபம் போலவும் ஸ்ரீதனம்போலவும் ஒளியைத் தருவதாய் இனியது மாய் இருக்கும் பிரிக்கமுடியாத விசேஷணமாய்க் காணும் உம் முடைய ஆன்மாவின் தன்மை இருப்பது' என்று, சிறிதாக இவர் நினைந்த ஆன்மாவின் சிறப்பினை [2] "யானும் தானாய் ஒழிந்தான்" என்றும், "தேனும் பாலும் கன்னலும் அமுதுமாகித் தித்தித்து" என்றும் சொல்லுகிறபடியே தன்னைவிட்டுப் பிரிக்கமுடியாத விசே ஷணமாகவும் தனக்கு எல்லை இல்லாத இனிமையையுடைய பொரு ளாகவும் நினைக்கும்படி காட்டிக்கொடுக்க,

[3] தேஹாதிகளில் பரமாய், நின்று நினைக்கில் லக்ஷ்மீதுல்யமாய், அவர்க்கே குடிகளாம் பரதந்த்ர ஸ்வரூபத்தை அநுசந்தித்தவர் - தேஹாதிகளில் பரமாய் - "சென்று சென்று பரம்பரமாய்" என்கிற படியே சரீரம் என்ன, இந்திரியங்கள் என்ன, இவை முதலானவற் றிற்கு வேறுபட்டதாய், ஞான ஆனந்தமயமாய், நின்று நினைக்கில்

1. திருவாய். 8. 7: 1.   2. திருவாய். 8. 8: 4.

3. அங்ஙனம் இறைவனால் காட்டப்பட்ட ஆன்மாவின் தன்மையை இவர் நினைந்த முறையை அருளிச்செய்கிறார் 'தேஹாதிகளில்' என்று தொடங்கி. 'தேஹாதிகளில்' என்றது முதல் 'லக்ஷ்மீதுல்யமாய்' என்றது முடிய 'கருமாணிக்கமலைமேல்' என்ற திருப்பதிகத்தின் பொருள் பேசப்படுகின்றது. பரம் - வேறுபட்டது. துல்யம் - ஒப்பு. அதற்குமேல் 'பரதந்திர சொரூபத்தை' என்றது முடிய "நெடுமாற் கடிமை" என்ற திருப்பதிகத்தின் பொருள் பேசப்படுகிறது.



லக்ஷ்மீதுல்யமாய் - "நினையும் நீர்மையது அன்று இவட்கு இது நின்று நினைக்கப்புக்கால்" என்றும், "அருமாயன் பேரன்றிப் பேச்சிலள்" என்றும், "மற்றோர் உபாயம் என் இவள் அம் தண் துழாய் கமழ்தல்" என்றும் சொல்லுகிறபடியே உண்மையை நிரூபித்துப் பார்க்கில் பிராட்டியைப்போன்று அவனுக்கே உரியதாய், அவர்க்கே குடிகள் ஆம் பரதந்த்ர ஸ்வரூபத்தை அநுசந்தித்தவர் - அத்துணையுமன் றிக்கே, "மாகாயாம்பூக்கொள்மேனி நான்குதோள் பொன்னாழிக்கை என்னம்மான் நீக்கமில்லா அடியார் தம்மடியார் அடியார் அடியார் எம்கோக்கள் அவர்க்கே குடிகளாய்ச் செல்லும் நல்லகோட்பாடே - ஊழிதோறு ஊழி வாய்க்க தமியேற்கு" என்று சொல்லுகிறபடியே தெய்வத்தன்மை வாய்ந்த திருமேனியையுடைய சர்வேச்வரனைப் பிரிவதற்கு இயலாதவரான பாகவதர்களுடைய அடிமையின் எல்லையிலே நிற்கிறவர்கள் எனக்குத் தலைவர்கள்; [1] இருகரையர் அன்றிக்கே என் குடியிலுள்ளாரோடு நான் அவர்களுக்கே உரிய அடிய வனாகச் செல்லும் நல்ல கோட்பாடு காலமுள்ளவரையும் எனக்குக் கிடைக்கவேண்டும் என்று, இப்படி அவன் அடியார்கட்கு அடிமை என்னும் எல்லையளவும் செல்ல நிற்கும்படி பரதந்திரப்பட்டிருக்கின்ற சொரூபத்தை நினைத்துப் பேசியவர்,

ஸ்வ ஸாதந ஸாத்யஸ்தர் இருகரையர் ஆகாமல், மண்ணவரும் வானவரும் நண்ணுமத்தையே குறிக்கொண்மின் உள்ளத்து என்று பிராப்யைகபரர் ஆக்குகிறார் எட்டாம்பத்தில் :

ஸ்வ சாதன சாத்யஸ்தர் - ஆழ்வார்க்கு உபாய உபேயங்கள் எவையோ அவையே தங்களுக்கும் என்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள், இருகரையர் ஆகாமல் - பகவானை உபாயமாகவும் அவன் சம்பந்த முடைய பொருளை உபேயமாகவும் கொண்டு இப்படி [2] இருகரைய ராய் அலையாதபடி, மண்ணவரும் வானவரும் நண்ணுமத்தையே குறிக்கொண்மின் உள்ளத்து என்று - [3] "திருக்கடித்தானத்தை ஏத்த நில்லா; குறிக்கொண்மின் ; இடரே," என்றும், [4] "கோவிந்தன், மண்

1. இறைவனைப்பற்றியும், அவன் அடியார்களைப்பற்றியும் இருப் பவர்கள் 'இருகரையர்' எனப்படுவர். "வடுகநம்பி, ஆழ்வானையும் ஆண்டா னையும் இருகரையர் என்பர்" என்பது, ஸ்ரீவசனபூஷணம், சூத். 411.

2. 'இருகரையராய் அலையாதபடி' என்றது, உபாயம் வேறு, உபேயம் வேறு என்று இருகரையராகாதபடி. இறைவன் உபாயம், அவ னுடைய திவ்வியதேசம் உபேயம் என்று உபாய உபேயங்களை வெவ்வே றாகக் கொள்ளாமல் என்றபடி.

3. திருவாய். 8. 6: 6.   4. திருவாய். 8. 6: 7.

விண் முழுதும் அளந்த ஒண்தாமரை, மண்ணவர்தாம்தொழ வானவர்தாம் வந்து, நண்ணு திருக்கடித்தான நகரே - இடர்கெட உள்ளத்துக்கொண்மின் '' என்றும் சொல்லுகிறபடியே திருக்கடித்தானத்தைத் துதிசெய்த அளவிலே துக்கங்கள் எல்லாம் நிலேகுலேந்துபோம், இதனைக் குறிக்கொள்ளுங்கோள், சர்வேச்வரனுடைய எல்லார்க்கும் எளிதான திருவடிகளை இரண்டு உலகத்திலுள்ளாரும் வந்து அநுபவிக்கும்படியான திருக்கடித்தானநகரை எல்லாத் துக்கங்களும் போம்படி உங்கள் நெஞ்சிலே கொண்டு நினையுங்கோள் என்று, பிராப்யஏகபரர் ஆக்குகிறார் எட்டாம்பத்தில் - மேல்பத்தில் உபேயமாக உபதேசித்த அர்ச்சாவதாரபூமியே துக்கத்தைப் போக்குவதும் என்கையாலே உபேயமான அப்பொருளே உபாயமுமாகும் என்று கூறி, உபேய விஷயம் ஒன்றிலுமே ஈடுபடும்படி ஆக்குகிறார் எட்டாம் பத்தில் என்கை. (8)

**227**

[1] எண்திசையும் அகல்ஞாலம் எங்கும் அளிக்கின்ற ஆலின்மேல் என்னும்படி நித்யபோக பாதலீல உபகரணத்தின் லயாதிகளைப் போக்கும் ஆபத்சகன் ஆருயிர் என்னப்படுத்தின ஆத்மதர்சந பல அநுபவ பரம்பரையைக் 'கூவுதல் வருதல்' என்று முடுகவிட்டு, ஏகம் எண்ணி, காணக் கருதி, எழ நண்ணி, நினைதொறும் உருகி, அலற்றி, கவையில் மனம் இன்றி, பதினாலாண்டு பத்துமாசம் ஒருபகல் பொறுத்தவர்கள், ஒருமாச தின சந்த்யையில் படுமது, க்ஷணத்திலேயாக இரங்குகிற த்வரைக்கு ஈடாக, இனிப் 'பத்தில் ஒன்று தசம தசையிலே பேறு' என்று,

1. இச் சூத்திரத்தில் 'ஆபத்சகன்' என்பது முடிய ஒரு பகுதி. அதற்குமேல் 'நாளிடப்பெற்றவர்' என்பது முடிய ஒரு பகுதி. அதற்கு மேல் உள்ளனவெல்லாம் ஒரு பகுதி. முதற்பகுதியில் எம்பெருமானுடைய திருக்குணம் பேசப்படுகிறது. இரண்டாம் பகுதியில் இறைவன் ஆழ்வார்க்குச் செய்த உபகாரம் பேசப்படுகிறது. மூன்றும் பகுதியில் மக்களுக்கு ஆழ்வார் செய்த உபதேசம் பேசப்படுகிறது. ஆபத்சகன், முடுகவிட்டு, துவரைக்கு ஈடாக **நாள் இட** என்றும், எண்ணி, கருதி, நண்ணி, உருகி, அலற்றி, மனமின்றி, இரங்குகிற துவரைக்கு ஈடாக நாள் இடப் **பெற்றார்** என்றும் கூட்டுக. முன்னையது இறைவன் செயல். பின்னையது ஆழ்வார் செயல். 'பதினாலாண்டு பத்து மாசம் ஒருபகல் பொறுத்தவர்கள், ஒரு மாச தின சந்த்யையில் படுமது' என்பது, ஆழ்வார் படும் துன்பத்தின் மிகுதியை விளக்க வந்தது. 'இனிப் பத்தில் ஒன்று தசம தசையிலே பேறு



நாட்கடலாகத் தம்பிக்கு இட்டதாகாமல் நாளை வதுவை போலே நாள் இடப் பெற்றவர் இம்மட உலகர் கண்டதோடுபட்ட அபாந்தவ அரக்ஷக அபோக்ய அசுக அநுபாய பிரதிசம்பந்தியைக் காட்டி மற்றொன்று கண்ணன் அல்லால் என்கிற வைகல்வாழ் தலான சித்தோபாயம், அதில் துர்ப்பல புத்திகளுக்கு மாலை நண்ணி காலை மாலை விண்டு தேனை வாடா மலர் இட்டு அன்பராம் சாங்கபக்தி, அதில் அசக்தர்க்குத் தாள் அடையும் பிரபத்தி, அதில் அசக்தர்க்கு உச்சாரண மாத்ரம், சர்வோபாய சூந்யர்க்கு இப்பத்தும்பாடி இடும் தெண்டன் என்று, கீதாசாரியனைப் போலே அதிகார அநுகுணம் நெறி எல்லாம் உரைக்கிறார் ஒன்பதாம் பத்தில்.

என்பது, சூத்திரம்.

**வியாக் :**—இப்படி விரும்பப்படுவன எல்லாம் நிறைவுபெற்றவன் ஆகையாலே இத்தலையில் ஒன்றையும் விரும்பாமல், பிரளயம் முதலிய ஆபத்துக்களிலே துணைசெய்து காக்கும் ஆபத்திற்குத் துணைவனான சர்வேச்வரன், மேலே பிரகாசிப்பித்த ஆன்ம சொரூபத்தின் உண்மையைக் கண்டதற்குப் பலன், சொரூபத்திற்குத் தக்கதான பேற்றினை அநுபவிக்கை ஆகையாலே, அந்த அநுபவத்தில் உண்டான பதற்றத்தாலே நொடிப்பொழுதும் விளம்பம் பொறுக்கமாட்டாமல் ஆழ்வார் துடிக்க, அவ்வளவிலே எம்பெருமான் 'இந்தச் சரீரத்தின் முடிவிலே பேறு தப்பாது' என்று நாள் அவதி இட்டுக் கொடுக்க, அதனைப் பெற்ற ஆழ்வார், மேல் தம் உபதேசத்தால் திருந்தினவர்கள் ஒழிய, அல்லாதாரையும் விடமாட்டாத பேரருளாலே அவர் அவர்களுடைய தகுதிகளுக்குத் தகுதியாக எல்லா உபாயங்களையும் அருளிச்செய்கிறார் இவ்வொன்பதாம்பத்தில்.

என்று' என்பது, இடும் நாளினை விளக்க வந்தது. 'நாட்கடலாகத் தம்பிக்கு இட்டதாகாமல் நாளை வதுவை போலே' என்ற வாக்கியம் நாளிடுதலை உவமை முகத்தால் விளக்க வந்தது.

அங்ஙனம் நாளிடப்பெற்ற ஆழ்வார், இம்மடவுலகர்க்குப் பிரதிசம்பந்தியைக் காட்டிச் சித்தோபாயத்தை உணர்த்தி, அதில் துர்ப்பலர்க்குச் சாங்கபக்தியை உணர்த்தி, அதில் அசக்தர்க்குப் பிரபத்தியை உணர்த்தி, அதில் அசக்தர்க்கு உச்சாரணமாத்திரத்தை உணர்த்தி, மேற்கூறிய உபாயங்களில் ஒருவித உபாயமும் இல்லாதவர்க்குப் பாடி தண்டன் இடுவது என்று உணர்த்திக் கீதாசாரியனைப் போல் நெறியெல்லாம் உரைக்கின்றார் என முடிக்க.

[1] எண்திசையும் அகல்ஞாலம் எங்கும் அளிக்கின்ற ஆலின் மேல் என்னும்படி நித்யபோக பாத லீலா உபகரணத்தின் லயாதிகளைப் போக்கும் ஆபத்சகன் - எண்திசையும் - [2] "எண்திசையும் கீழும் மேலும் முற்றவும் உண்ட பிரான்" என்றும், அகல்ஞாலம் - [3] "அவனே அகல்ஞாலம் படைத்து இடந்தான், அவனே அஃது உண்டு உமிழ்ந்தான் அளந்தான்" என்றும், எங்கும் அளிக்கின்ற - [4] "அகலிடம் படைத்து இடந்து உண்டு உமிழ்ந்து அளந்து எங்கும் அளிக்கின்ற ஆயன்" என்றும், ஆலின்மேல் என்னும்படி - [5] "ஆலின்மேலால் அமர்ந்தான்" என்றும் சொல்லுகிறபடியே எல்லா உலகங்களையும் பிரளயம் கொள்ளாமல் முன்னரே திருவயிற்றிலே வைத்து நோக்கி, அழிந்தவற்றை மீண்டும் உண்டாக்கியும், இரணியாக்கனாலே தள்ளுண்டு அண்டபித்தியிலே சேர்ந்த பூமியை ஒட்டுவிடுவித்து எடுத்தும், மாவலி தன்வலிமையினாலே ஆளுகிற தசையிலே எல்லை நடந்து மீட்டும், இப்படிப் பிரளயம் முதலான ஆபத்துக்களிலே உதவிக்காத்தவன் என்னும்படி மேலே கூறிய சத்யகாமத்வத்தால் வந்த 'ஒன்றையும் விரும்பாமை' தோற்ற இத்தலையில் விருப்பம்அறப் பிரதியுபகாரம் நினையாமல் வரையாதே தன் பேறாக, நோவுபடுமளவிலே உதவி, நித்யபோக பாத லீலா உபகரணத்தின் லயாதிகளைப் போக்கும் ஆபத்சகன் - [6] "இந்தப்பரம புருடனுக்கு எல்லாச் சராசரங்களும் ஒரு **பாதம்**; (கால்பாகம்) பரமபதத்தில் நித்யமானது **மூன்று பாதம்**" (முக்கால் பாகம்) என்கிறபடியே அம்ருதம் என்ற சொல்லால் சொல்லும்படி அழிவில்லாத இன்பமான பரமபதத்தை நோக்க, இவ்வுலகம் மிகச் சிறிது ஆகையாலே பாதம் என்ற சொல்லால் சொல்லப்பட்ட, விளையாட்டுக்குக் கருவியான இவ் உலகத்தின் அழிவு முதலானவற்றைப் போக்கும் ஆபத்துக்குத் துணைவனான சர்வேச்வரன்,

1. *இந்த ஒன்பதாம் பத்தில் இறைவனுடைய ஆபத்சகத்வம் என்ற திருக்குணம் பேசப்படுகிறது. ஆபத்சகத்வம் - ஆபத்திற்குத் துணைவனாக இருத்தல். அதற்குரிய திருப்பாசுரப் பகுதிகளை ஒருசேர அருளிச்செய்கிறார் 'எண்திசையும்' என்று தொடங்கி. நித்யபோகம் - பரமபதம். பாத லீலா உபகரணம்-'பரமபதத்தை நோக்கக்' கால்கூறாக இருக்கின்ற, விளையாட்டுக்கு உபகரணமாக இருக்கின்ற இந்த உலகம். லயஆதிகள் - பிரளயம் முதலானவைகள்.*

2. *திருவாய்.* 9. 1: 1.
3. *திருவாய்.* 9. 3: 2.
4. *திருவாய்.* 9. 9: 2.
5. *திருவாய்.* 9. 10: 1.
6. *"பாதோஸ்ய விச்வாபூதாநி, த்ரிபாதஸ்யாம்ருதம் திவி" என்பது, புருஷ ஸூக்தம்.*



ஆருயிர் என்னப் படுத்தின ஆத்ம தர்சன பலம் அநுபவ பரம்பரையைக் கூவுதல் வருதல் என்று முடுகவிட்டு - ஆருயிர் என்னப்படுத்தின ஆத்மதர்சன பலம் - [1] "இருத்தும் வியந்து" என்ற திருவாய்மொழியிலே தம்மோடு கலந்த கலவியை நினைப்பூட்டினவளவிலே அதிலே ஈடுபட்டவராய்ப் பேசுகிறவளவில், அவன் தட்டுமாறி நின்று கலந்த சீலகுணத்திலே ஆழங்கால் பட்டு [2] "ஆருயிர்பட்டது எனதுயிர்பட்டது" என் உயிரானது பட்ட தன்மையை நித்தியமாக அநுபவித்துக்கொண்டிருக்கிற நித்தியசூரிகளுடைய உயிர்கள்தாம் பட்டனவோ என்னும்படியாக இறைவன் தான் மேல்விழுந்து அநுபவித்த தம்முடைய ஆன்மாவின் தன்மையை மேல்பத்திலே உள்ளதை உள்ளவாறே காட்டக் கண்டதற்குப் பலம், ஆன்மாவிற்குத் தக்கதான பேற்றினை அநுபவித்தல் ஆகையாலே,

[3] அநுபவ பரம்பரையை - "பண்டைநாளாலே" என்கிற திருவாய்மொழியிலே, "தொண்டரோர்க்கு அருளிச் சோதிவாய் திறந்து உன் தாமரைக்கண்களால் நோக்காய்" என்றும், "பாதபங்கயமே தலைக்கு அணியாய்" என்றும், "உன் தாமரை மங்கையும் நீயும் இடம்கொள் மூவுலகும் தொழ இருந்தருளாய்" என்றும், "கனிவாய் சிவப்ப நீ காணவாராய்" என்றும், "நின் பல் நிலாமுத்தம் தவழ்கதிர் முறுவல் செய்து நின் திருக்கண்தாமரை தயங்க நின்றருளாய்" என்றும் சொல்லுகிறபடியே திருப்பவளத்தைத் திறந்து ஒரு வார்த்தை அருளிச்செய்யவேண்டும், திருக்கண்களாலே குளிர நோக்கியருளவேண்டும், திருவடிகளை என் தலைமேலே வைத்தருளவேண்டும், தேவரும் பிராட்டியும் கூட எழுந்தருளியிருக்கிற இருப்பை எனக்குக் காட்டியருளவேண்டும், என்முன்னே நாலடி உலாவியருளவேண்டும், வேண்டுவாரைக் கண்ட காலத்திலே பிறக்கும் புன்முறுவல் காணவேண்டும் என்று இப்படித் தொடர்ந்து வருகின்ற அநுபவங்களை ஆசைப்பட்டு, 'காலக்கிரமத்திலே இவையெல்லாம் பெறலாகும்' என்று ஆறியிருக்கப் பெருமையாலே, கூவுதல் வருதல் என்று முடுகவிட்டு - "வடிவிணை இல்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடியை, கொடுவினையேனும் பிடிக்க நீ ஒரு நாள் கூவுதல் வருதல் செய்யாயே" என்கிறபடியே தனக்கு மேல்

1. *திருவாய்.* 8. 7: 1.
2. *திருவாய்.* 9. 6: 9.
3. *இதிலிருந்து 'முடுகவிட்டு' என்றது முடிய ஒன்பதாம் பத்தில் 'பண்டை நாளாலே' என்ற இரண்டாம் திருப்பதிகத்தின் பொருள் கூறப்படுகிறது.*

ஒன்றில்லாததான இனிமையையுடைய உன் திருவடிகளிலே நானும் வந்து அடிமை செய்யும்படி என்னை அங்கே அழைத்தல் அல்லது நீ இங்கே வருதல் செய்தருளவேண்டும் என்று இரக்கும்படி வளர விட்டு,

ஏகம் எண்ணிக் காணக்கருதி எழநண்ணி நினைதொறும் உருகி அலற்றிக் கவை இல் மனம் இன்றி - [1] ஏகம் எண்ணி - "மாக வைகுந்தம் காண்பதற்கு என் மனம், ஏகம் எண்ணும் இராப்பகல் இன்றியே" என்று அவன் நித்தியவாசம் செய்யும் பரமபதத்தைக் காண்கையிலே எல்லாக் காலங்களிலும் ஒரே தன்மையாக எண்ணி, [2] காணக்கருதி - "காணக் கருதும் என் கண்ணே" என்று பெரிய பிராட்டியாரோடும் திவ்விய ஆயுதங்களோடும் திவ்விய விக்கிரஹத்தோடும் கூடியிருக்கிறவனைக் காணவேண்டும் என்று ஆசைப்பட்டு, [3] எழ நண்ணி - "எழ நண்ணி நாமும் நம் வான நாடனோடு ஒன்றினோம்" என்று எம்பெருமானை நினைப்பூட்டும் பொருள்களைக் காண்கையிலே நோவுபடுகையாலே முடிந்துபோகையிலே ஒருப்பட்டு, [4] நினைதொறும் உருகி - "திருக்காட்கரை மருவிய மாயன்தன் மாயம் நினைதொறும் நெஞ்சம் உருகுமால்" என்று அவன் அநுபவ காலங்களில் செய்த சீலம் முதலியவற்றை நினைக்கும்தோறும் அநுபவத்திற்குக் கருவியான நெஞ்சு சிதிலமாய்க் கரைந்து, [5] அலற்றி - "தமரோடு அங்குறைவார்க்குத் தக்கிலமே கேளீரே" என்று தூது அநுப்பும் முகத்தால் "கிளிமொழியாள் அலற்றிய சொல்" என்று ஆற்றாமையாலே முறைகேடாகக் கூப்பிட்டு, [6] கவையில் மனம் இன்றி - "கவையில் மனம் இன்றிக் கண்ணீர்கள் கலுழ்வன்" என்று இருதலைத்த நெஞ்சு இன்றிக்கே ஒன்றிலேயே நோக்கமான மனத்தினையுடையராய்,

---

1. இது, 'ஓராயிரமாய்' என்ற மூன்றும் திருப்பதிகத்தின் பொருள்.

2. இது, 'மையார் கருங்கண்ணி' என்ற நான்காம் திருப்பதிகத்தின் பொருள்.

3. இது, 'இன்னுயிர்ச் சேவலும்' என்ற ஐந்தாம் திருப்பதிகத்தின் பொருள்.

4. இது, 'உருகுமால் நெஞ்சம்' என்ற ஆறும் திருப்பதிகத்தின் பொருள்.

5. இது, 'எங்கானலகங்கழிவாய்' என்ற ஏழாம் திருப்பதிகத்தின் பொருள்.

6. இது, 'அறுக்கும் வினையாயின' என்ற எட்டாம் திருப்பதிகத்தின் பொருள்.



[1] பதினாலாண்டு பத்துமாசம் ஒருபகல் பொறுத்தவர்கள் ஒரு மாச தின சந்த்யையில் படுமது க்ஷணத்திலேயாக இரங்குகிறதுவரைக்கு ஈடாக - பதினாலாண்டு பொறுத்தவர் ஒரு தினத்தில் படுமது - பெருமாளைப் பிரிந்து பதினன்கு ஆண்டுகள் பொறுத்திருந்த ஸ்ரீபரதாழ்வான் [2] "பதினன்கு ஆண்டுகள் நிறைந்தபோது" என்ற எல்லை கழிந்த பின்னர் ஒருநாளில் பட்டவருத்தமும், பத்துமாசம் பொறுத்தவர் ஒருமாசத்தில் படுமது - பத்து மாதங்கள் பொறுத்திருந்த பிராட்டி [3] "ஒரு மாதத்திற்கு மேல் நான் பிழைத்திருக்கமாட்டேன்" என்று திருவடியிடம் சொல்லிவிட்ட பின்னர் அவ்வொரு மாதத்தில் பட்ட வருத்தமும், ஒரு பகல் பொறுத்தவர்கள் ஒரு சந்த்யையில் படுமது - கிருஷ்ணன் பசுமேய்க்கப்போக ஒரு பகல் எல்லாம் பொறுத்திருந்த ஸ்ரீ கோபிமார்கள் அவன் பசுக்களின் பிற்குழையிலே வாராநிற்க, முற்கொழுந்தில் காணாமையாலே ஒரு மாலை நேரத்தில் பட்ட வருத்தமும் எல்லாம், க்ஷணத்திலேயாக இரங்குகிறதுவரைக்கு ஈடாக - ஒரு நொடிப்பொழுதிலே ஆம்படி "அவனை விட்டு அகல்வதற்கே இரங்கி" என்று ஈடுபடுகிற பதற்றத்துக்குத் தகுதியாக,

[4] இனிப் பத்தில் ஒன்று தசம தசையிலே பேறு என்று நாட்கடலாகத் தம்பிக்கு இட்டது ஆகாமல் நாளை வதுவை போலே நாள்

---

1. 'பதினாலாண்டு' என்றது முதல் 'த்வரைக்குஈடாக' என்றது முடிய 'மல்லிகை கமழ்தென்றல்' என்ற ஒன்பதாம் திருப்பதிகத்தின் பொருள். இந்த வாக்கியத்தை, பதினாலாண்டு பொறுத்தவர் ஒரு தினத்திலே படுமது, பத்துமாசம் பொறுத்தவர் ஒரு மாசம் படுமது, ஒரு பகல் பொறுத்தவர்கள் ஒரு சந்த்யையில் படுமது என்று பிரித்துக்கூட்டுக. பதினாலாண்டு பொறுத்தவர் - ஸ்ரீபரதாழ்வான். பத்து மாசம் பொறுத்தவர் - சீதாபிராட்டியார். ஒரு பகல் பொறுத்தவர்கள் - கோபிமார்கள். க்ஷணத்திலேயாக இரங்கினவர் - ஆழ்வார் நாயகி.

2. "பூர்ணே சதுர்தஸே வர்ஷே பஞ்சம்யாம் லக்ஷ்மணாக்ரஜ:" என்பது, ஸ்ரீராமா. யுத் 127: 1.

3. "மாஸாத் ஊர்த்வம் ந ஜீவிஷ்யே" என்பது, ஸ்ரீராமா. சுந். 40: 10.

> இன்ன மீண்டொரு திங்கள் இருப்பல்யான்
> நின்னை நோக்கிப் பகர்ந்தது நீதியோய்!
> பின்னை ஆவி பிடிக்கின் றிலேனந்த
> மன்ன னாணை இதனை மனக்கொள் நீ.

என்பது, கம்பராமாயணம்.

4. 'இனி' என்றது முதல் 'நாளிடப் பெற்றவர்' என்றது முடிய 'சரணமாகும்' என்ற பத்தாம் பதிகத்தின் கருத்து கூறப்படுகிறது.

இடப்பெற்றவர் - இனிப் பத்தில் ஒன்று தசம தசையிலே பேறு என்று - [1] "முதலில் பார்த்தலால் உண்டாகும் பிரீதி, பின் அதிக நினைவு, அதே நினைவு, உறக்கம் இன்மை, இளைத்தல், மற்றைப் பொருள்களில் வெறுப்பு, நாணமின்மை, பித்துப்பிடித்ததுபோல்இருத்தல், மூர்ச்சை, சாக்காடு என்னுமிவை மன்மதனுடைய பத்து நிலைகள்" என்றும், [2] "முதலில் ஆசை உண்டாகும், இரண்டாவது சிந்தை உண்டாகும், மூன்றாவது அதே நினைவு உண்டாகும், நான்காவது அவள் குணங்களைச் சொல்லுவது, ஐந்தாவது முயற்சி என்று கூறப்படும், ஆறாவது பிதற்றுதல் என்று சொல்லப்படும், ஏழாவது பைத்தியம் என்று அறியப்படும், எட்டாவது நோய் என்று சொல்லப்படும், ஒன்பதாவது செயல்அற்றிருக்கை, அவ்வாறே பத்தாவது சாக்காடு" என்றும் சொல்லுகிறபடியே காமுகர்கட்குப் பத்தாவது தசையிலே மரணமாமாறுபோலே, நம்பக்கல் பரபக்தியையுடைய உமக்கும் நம்மைப் பெறுவிடில் முடியும்படியான பரமபக்தி தசை பத்தாம் பத்திலே பிறக்கத் தேடுகிறது, ஆகையால் மேலே கூறிய விளம்பம் இல்லை, இனி உள்ளது பத்து அவஸ்தைகளில் ஒன்றான இறுதி அவஸ்தையாக உள்ள மரணவஸ்தையிலே பேறு என்று, நாள்

1. நயநப்ரீதி: ப்ரதமம் சிந்தாபோக: ததோநுஸங்கல்ப:
நித்ராச்சேதஸ் தநுதாவிஷய விரக்தி: த்ரபாநாச:
உன்மாதோமூர்ச்சா ம்ருதி ரித்யேதா: ஸ்மரதசா தசைவ ஸ்யு:
என்பது, பிரமாணம்.

2. ப்ரதமஸ்த்வபிலாஷ: ஸ்யாத் த்விதீயம் சிந்தநம்பவேத்
அநுஸ்மிருதி: த்ருதீயந்து சதுர்த்தம் குணகீர்த்தநம்
உத்யோக: பஞ்சம: ப்ரோக்த: ப்ரலாப: ஷஷ்டஉச்யதே
உன்மாதஸ் ஸப்தமோ ஜ்ஞேய: அஷ்டமோ வ்யாதிருச்யதே
நவமேஜடதாசைவ தசமம் மரணம் ததா.
என்பது, பிரமாணம்.

காட்சி முதலாச் சாக்காடு ஈறாக்
காட்டிய பத்தும் கைவரு மெனினே
மெய்யுறு புணர்ச்சி எய்துதற் குரித்தே.
என்பது, நம்பியகப்பொருள்.

வேட்கை, ஒருதலை உள்ளுதல், மெலிதல்,
ஆக்கம் செப்பல், நாணுவரை யிறத்தல்,
நோக்குவ வெல்லா மவையே போறல்,
மறத்தல், மயக்கம், சாக்காடு என்றச்
சிறப்புடை மரபினவை களவென மொழிப.
என்பது, தொல்காப்பியம்.



கடலாகத் தம்பிக்கு இட்டது போல் ஆகாமல் - [1] "நாள் கடலைக் கழிமினே" என்கிறபடியே பிரிவுத் துன்பத்தாலே ஒருநாள் ஒரு கடல் போலே தாண்டமுடியாதபடி [2] "பதினான்கு ஆண்டுகள் நிறைவில்" என்று தம்பியான ஸ்ரீ பரதாழ்வானுக்கு நாள் இட்டுக் கொடுத்தாற் போலே ஆகாமல், நாளை வதுவை போலே நாள்இடப்பெற்றவர் - [3] "நாளை வதுவை மணம் என்று நாள் இட்டு" என்று, இன்று என்னில் வெள்ளக்கேடாம், சிலநாள்கள் கழித்து என்னில் வறட்கேடாம் என்று நினைத்து நாளை என்று நாய்ச்சியார்க்கு நாள் இட்டாற் போலே, [4] "மரணமானால்" என்று இந்தச் சரீரத்தின் முடிவிலே பேறாக அவன் தானே நாள் இட்டுக் கொடுக்கப்பெற்று மகிழ்ச்சி கொண்ட ஆழ்வார்,

[5] இம் மடஉலகர் கண்டதோடு பட்ட அபாந்தவ அரக்ஷக அபோக்ய அசுக அநுபாய பிரதிசம்பந்தியைக் காட்டி - சரமோபாயம் சரமோபேயம் வரையிலும் தாம் அருளிச்செய்த நல்லுரைகளைக் கேட்டுத் திருந்தினவர்களை ஒழிய, அல்லாதாரையும் விடமாட்டாத தம்முடைய பரம கிருபையாலே [6] "இம் மடஉலகர்" என்று இவ்வுலக வாழ்விலே அறிவு கேடரானவர்களுக்கு, கண்டதோடு பட்ட அபாந்தவ பிரதிசம்பந்தியைக் காட்டி - "கொண்டபெண்டிர்" என்று தொடங்கி, கண்டபோது அன்புடையவர்களைப் போன்று நடிப்ப தொழியக் காணாதபோது அன்பு என்பது சிறிதுமின்றியே இருக்கிற மனைவி மக்கள் முதலாயினார் உறவினர்கள் அன்று; பிரளய ஆபத்திலே துணையாக இருந்தவனே மேலான உறவினன் என்றும்,

1. திருவாய். 1. 6: 7.

2. "பூர்ணே சதுர்த்தசே வர்ஷே"
என்பது, ஸ்ரீராமா. யுத். 127: 1.

3. நாய்ச்சியார் திரு. 6: 2.

4. திருவாய். 9. 10: 5.

5. 'இம்மடவுலகர்' என்றது முதல் 'சித்தோபாயம்' என்றது முடிய, பரோபதேசமாக அருளிச்செய்கின்ற "கொண்டபெண்டிர்" என்னும் திருப்பதிகத்தின் பொருள் கூறப்படுகின்றது. அபாந்தவம் - உறவினராகாமை. அரக்ஷகம் - இரக்ஷராகாமை. அபோக்யம் - இனியராகாமை. அசுகம் - சுகமில்லாமை. அநுபாயம் - உபாயமாகாமை. பிரதிகோடி - மறுதலை; எதிர்த்தட்டு. சரமோபாயம் - உபாயங்களில் முடிவான உபாயம்; அடியார்கட்கு அடிமைப்பட்டிருத்தல். சரமோபேயம் - பேறுகளில் முடிவான பேறு; அர்ச்சாவதாரம்.

6. திருவாய். 9. 2: 7.

அரக்ஷக பிரதிசம்பந்தியைக் காட்டி - "துணையும் சார்வும்", "பொருள் கைஉண்டாய்", "அரணமாவர்" என்னும் திருப்பாசுரங்களாலே அவனை ஒழிந்தார் உதவி செய்வாரைப் போன்று பயன் உள்ளபோது பந்துக்களாகக் கொண்டாடி, ஆபத்து வந்தவாறே கண்ணற்று வெறுப்பார்கள்; ஆகையால், அவர்கள் காப்பவர் அல்லர்; தன்னுடைய காப்பிலே ஐயம் கொண்டாரையும் ஐயத்தை நீக்கி நம்பச்செய்து காக்குமவனுய் அவதார முகத்தாலே எளியனுய்க் காத்தலுக்குத் தகுதியான குணங்களையுமுடையவனுனவனை ஒழியக் காப்பவர் வேறு ஒருவரும் இலர் என்றும், அபோக்கிய பிரதிசம்பந்தியைக் காட்டி - "சதிரம் என்று தம்மைத்தாமே சம்மதித்து" என்று தொடங்கி, தங்களுக்கு இன்பத்தைத் தருமவர்களாகக்கொள்ளப்பட்ட பெண்கள் ஆபத்து வந்தவாறே வெறுப்பார்கள்; ஒரே தன்மையாக அன்புள்ளவன் அவனே; ஆனபின்பு, அவர்கள் இனியர் அல்லர்; அவனே அளவற்ற இனியன் என்றும், அசுக பிரதிசம்பந்தியைக் காட்டி - "இல்லை கண்டீர் இன்பமந்தோ" என்று தொடங்கி, துக்கங்களிலே சிலவற்றை இன்பம் என்று மயங்குவதித்தனை போக்கி, அவனை ஒழிய இன்பரூபமாக இருப்பது ஒன்று இல்லை என்றும், அநுபாய பிரதிசம்பந்தியைக் காட்டி - "யாதும் இல்லை மிக்கதனில்" என்று தொடங்கி, அவனை ஒழியக் காக்கும் பொருளாக வேருென்றனைப் பற்றினவர்கள் பண்டை நிலையும் கெட்டுப் பயன் அற்றுப் போவர்கள்; ஆனபின்பு, அவனை ஒழிய உபாயம் இல்லை என்றும், இப்படி அவனை ஒழிந்தாரனைவரும் பந்துவாகாமையையும் காப்பவர் ஆகாமையையும் இனியராகாமையையும் சுகத்தைத் தருமவராகாமையையும் உபாயமாகாமையையும், அதற்கு எதிர்த்தலையான அவன் பந்துவாதலையும் காப்பவனுதலையும் இனியனுதலையும் சுகத்தைத் தருமவனுதலையும் உபாயமாதலையும் அவர்களுக்குக் காட்டி,

மற்றொன்று கண்ணன் அல்லால் என்கிற வைகல் வாழ்தலான சித்தோபாயம் - மற்றொன்று - "மற்றொன்றில்லை சுருங்கச் சொன்னேம் மாநிலத்து எவ்வுயிர்க்கும், சிற்றவேண்டா சிந்திப்பே அமையும் கண்டீர்கள்" என்று, இதற்குமேல் சொல்லலாவது ஒன்றில்லை; இதனைச் சுருங்கச் சொன்னேம்; இப்பெரிய பூவுலகில் உள்ள எல்லா உயிர்களுக்கும் இதனைப் பெறுதற்குப் பரக்க முயற்சி செய்ய வேண்டா; சிந்திப்பே அமையும் கேளீர்கோள் என்கையாலே, தனக்கு மேல் ஒன்று இல்லாமல் இருப்பதாய், சுருங்க உபதேசிக்கத்தக்கதாய், எல்லாரும் செய்தற்குரியதாய், பற்றுதற்கு எளியதுமாயிருப்பதாயும், கண்ணன் அல்லால் என்கிற - "கண்ணன் அல்லால் இல்லை



கண்டீர் சரண்" என்றும், [1] "என்னையே சரணமாகப் பற்று" என்றும் கிருஷ்ணனை ஒழிய வேறு உபாயம் இல்லை என்கையாலே எப்பொழுதும் உள்ளதாய்ப் பரமசேதனமாய்ச் சர்வசக்தியாய் அபாயம் இல்லாததாய் ஆன்மாவிற்குத் தக்கதாய் வேறு துணை வேண்டாததாய் இருக்குமதாகவும் சொல்லப்படுமதாய், வைகல் வாழ்தலான சித்தோபாயம் - "வடமதுரைப் பிறந்தான் குற்றம் இல் சீர் கற்று வைகல் வாழ்தல்" என்கிற, உயிர் உள்ளவரையிலும் உளதாகிய குணங்களை அநுபவிப்பதற்கு உறுப்பான சித்தோபாயத்தை உபதேசித்தும்,

[2] அதில் துர்ப்பல புத்திகளுக்கு மாலை நண்ணி காலை மாலை விண்டு தேனை வாடா மலர் இட்டு அன்பராம் சாங்கபக்தி - [3] "இந்தச் சாஸ்திரத்தின் உட்பொருளான பிரபத்தி ஒரு முறையே செய்யத்தக்கதாய், செய்யும் மனிதனை இச் சம்சாரத்தினின்றும் தாண்டச் செய்யும்; மனிதர்களுக்குப் புத்தியில் திடமின்மையாலே இதனையொழிந்த சாதனம் விரும்பப்படுகின்றது" என்கிறபடியே, அந்தச் சித்தோபாயத்தில் மகா விச்வாசம் பிறப்பதற்கு அடியான புண்ணியம் இல்லாமையாலே, மற்றைய உபாயங்களை விடுதல் முன்னுக இதில் இழிகையில் நம்பிக்கை இல்லாமையாகிற சிற்றறிவினையுடையவர்களுக்கு "மாலை நண்ணித் தொழு தெழுமினே, காலை மாலை கமல மலர் இட்டு நீர்" என்றும், "விண்டு வாடா மலர் இட்டு நீர் இறைஞ்சுமின்" என்றும், "தேனை வாடா மலரிட்டு நீர் இறைஞ்சுமின்" என்றும் "தனதன்பர்க்கு அன்பாகும்" என்றும் பக்தியையுடையவர்களாய்க் கொண்டு எல்லாக் காலங்களிலும் மலர் முதலான உபகரணங்களாலே அவனை ஆராதித்து அவன் பக்கல் பக்தியிலே நின்றவர்கள் ஆகுங்கோள் என்று அங்கத்துடன் கூடியதான பக்தியை உபதேசித்தும்,

அதில் அசக்தர்க்குத் தாள் அடையும் பிரபத்தி - அதனைச் செய்தற்கு அருமை, அது காலம் தாழ்த்துப் பயன் கொடுத்தலுக்கு அஞ்சுதல் ஆகிற இவற்றாலே அதனைச் செய்ய ஆற்றல் இல்லாதவர்க்குச் "சரணமாகும் தனதாள் அடைந்தார்க்கு எல்லாம், மரணமானல் வைகுந்தம் கொடுக்கும்" என்று எல்லாவற்றையும் விடுதலால்

---

1. "மாமேகம் ஶரணம் வ்ரஜ".
என்பது, ஸ்ரீகீதை. 18: 66.

2. இதிலிருந்து 'இடும் தெண்டன்' என்றது முடிய, பரோபதேசபரமான 'மாலை நண்ணி' என்ற திருப்பதிகத்தின் பொருள் கூறப்படுகின்றது. 'மாலை நண்ணி' என்பது, பத்தாம் திருப்பதிகம். ஸாங்கபக்தி - அங்கங்களுடன் கூடிய பக்தி.

3. ஸக்ருதேவ ஹி சாஸ்த்ரார்த்த: க்ருதோயம் தாரயேந்நரம்
நராணாம்புத்தி தௌர்பல்யாத் உபாயாந்தரமிஷ்யதே.
என்பது, பிரமாணம்.

பெறுமது ஆகையாலே செய்தற்கு எளியதாய், எல்லார்க்கும் உரியதாய், சரீரத்தின் முடிவிலே பலத்தைக் கொடுப்பதான பிரபத்தியை உபதேசித்தும்,

அதில் அசக்தர்க்கு உச்சாரண மாத்ரம் - உபாயம் சிறியதாய், பலன் பெரியதாய், தடைகளும் பலவாய் இருக்கச் செய்தே எங்ஙனே கூடும்படி என்னும் மூன்று வகையான ஐயத்தாலே அந்தப் பிரபத்தியை நம்புதற்கு உடலான அறிவின் ஆற்றல் இல்லாதார்க்குத் "திருக்கண்ணபுரம் சொல்ல நாளும் துயர் பாடு சாராவே" என்று சொல்லைப் பற்றாசாகப் பிடித்து அவன் திருத்திக்கொள்ளும்படியான சொல் மாத்திரத்தை உபதேசித்தும்,

சர்வ உபாய சூந்யர்க்கு இப்பத்தும் பாடி இடும் தெண்டன் என்று - சொல்லுதலுக்கும் தாமாக ஒரு பாசுரம் இட்டுச் சொல்ல ஆற்றல் இன்றிக்கே, மேலே கூறிய உபாயங்கள் எல்லாவற்றிலும் தகுதி இல்லாதார்க்கு "இப்பத்தும் பாடி ஆடிப் பணிமின் அவன் தாள்களே" என்று இத்திருவாய்மொழியை அன்பினாலே தூண்டப்பட்டவராய்க்கொண்டு பாடி அவன் திருவடிகளிலே விழுங்கோள் என்று உபதேசித்தும்,

கீதாசார்யனைப் போலே அதிகார அநுகுணம் நெறியெல்லாம் உரைக்கிறார் ஒன்பதாம்பத்தில் - அதாவது, கீதோபநிடத ஆசாரியனான கண்ணபிரான் தன்னுடைய பரமகிருபையாலே [1] "நெறியெல்லாம் எடுத்துரைத்த" என்கிறபடியே மக்களுடைய ருசிக்குத் தகுதியாக உபாயங்கள் எல்லாவற்றையும் உபதேசித்தாற்போலே, இவரும், பேறு அணித்தானவாறே இவ்வுலகமக்கள் ஒருவரும் இழக்க ஒண்ணாது என்கிற பரமகிருபையாலே எல்லாம் எடுத்து உரைத்து அவர் அவர்களுடைய அதிகாரத்துக்குத் தகுதியாக உபாயங்கள் எல்லாவற்றையும் உபதேசித்தருளுகிறார் ஒன்பதாம்பத்தில். (9)

**228**

*[2] சுரிகுழல் அஞ்சனம் புனல் மைந்நின்ற பொல்லாப் புனக்காயா என்னும் ஆபத்திற் கொள்ளும் காமரூப கந்தரூபத்தாலே பிரபந்ந ஆர்த்திஹரனானவன், அருள்பெறும்போது அணுகவிட்டதற்குப் பலமான வானேறும் கதிக்கு, அண்டமூவுலகும் முன்னோடிக் கால்விழுந்திடத்தே நிழல் தடங்கள் ஆக்கி, அமுதம் அளித்த தயரதன் பெற்ற கோவலன் ஆகையாலே, வேடன் வேடுவிச்சி பக்ஷி குரங்கு சராசரம் இடைச்சி இடையர் தயிர்த்தாழி கூனி மாலாகாரர் பிணவிருந்து வேண்டடிசிலிட்டவர் அவன் மகன் அவன் தம்பி ஆனை அரவம் மறையாளன் பெற்றமைந்தன் ஆகிற பதினெட்டுநாடன் பெருங்கூட்டம் நடத்தும் ஆத்தனை வழித்துணையாக்கி, அறியச்சொன்ன சுப்ரபாதத்தே துணைபிரியாமல் போக்கு ஒழித்து, மீள்கின்றதில்லை என்று நிச்சித்திருந்தவர், சஞ்சிதம் காட்டும் தசையானவாறே முந்துற்ற நெஞ்சுக்குப் 'பணி மறவாது மருள்ஒழி நகு கைவிடேல்' என்று கிருத்யாகிருத்தியங்களை விதித்து, நெஞ்சுபோல்வாரைத் 'தொண்டீர்' என்று அழைத்து 'வலஞ்செய்து எண்ணுமின் பேசுமின் கேண்மின் காண்மின் நடமின் புகுதும்' என்று கர்த்தவ்யம் ஸ்மர்த்தவ்யம் வக்தவ்யம் சுரோதவ்யம் திரஷ்டவ்யம் கந்தவ்யம் வஸ்தவ்யம் எல்லாம் வெளியிட்டு, பிணக்கறவைச் சார்வாக நிகமித்து, எண்பெருக்கில் எண்ணும் திருநாமத்தின் சப்தார்த்தங்களைச் சுருக்கி மாதவன் என்று துவயமாக்கி, கரணத்திரய பிரயோகவிருத்தி சம்சாரிகளுக்குக் கையோலை செய்து கொடுத்து, செஞ்சொற்*

---

1. திருவாய். 4. 8: 6.

2. அருள் பெறும்போது அணுகவிட்டதற்குப் பலமான வானேறும் கதிக்கு, ஆத்தனை வழித்துணையாக்கி, துணைபிரியாமல் போக்கொழித்து, மீள்கின்றதில்லை என்று நிச்சித்திருந்தவர், சஞ்சிதம் காட்டும் தசை ஆனவாறே, முந்துற்ற நெஞ்சுக்குக் கிருத்தியாகிருத்தியங்களை விதித்து, நெஞ்சுபோல்வார்க்கு வஸ்தவ்யம் எல்லாம் வெளியிட்டு, சார்வாக நிகமித்து, சம்சாரிகளுக்குக் கையோலை செய்து கொடுத்து, கள்ளவழி காவலிட்டு, சபலனுக்குத் தேஹதோஷம் அறிவித்து, இன்று அஹேதுகமாக ஆதரித்த நீ அநாதி அநாதரஹேது சொல் என்று (இறைவனை) மடியைப் பிடிக்க, (அவன்) நிருத்தரமென்று கவிழ்ந்து நிற்க, (அச்சமயத்தில்) கோலாஹலம் செவிப்பட்டவாறே, தாள்களைப் பூண்டு, தடுத்து, திருவாணையிட்டு, (அவ்வாணையை) பெறாவாணை அல்லவாக்கின (இவருடைய) பேரவா, குளப்படியாம்படி, பிரபந்ந ஆர்த்திஹரனான இறைவன் (வந்து) கடல் போன்ற ஆதரத்தோடே சூழ்ந்து (தம்முடைய) தாபங்களை அரித்தமையை வெளியிடுகிறார் பத்தாம் பத்தில் என்று எச்சங்களைக் கொண்டு கூட்டி முடிக்க. அர்ச்சிராதி மார்க்கத்திற்கு இறைவன் துணையாகும் தன்மையை விளக்கி, துணையாக விருந்து நடத்தியதை மெய்ப்பிக்கிறார் 'அண்டமூவுலகும்' என்பது முதல் 'பெருங்கூட்டம் நடத்தும்' என்பது முடிய. ஆக்கி நடத்தும் ஆத்தன் என்றும், பதினெட்டு நடனாகிய ஆத்தன் என்றும்

கவிகளுக்குக் கள்ளவழி காவலிட்டு, மனம் திருத்தி வீடு திருத்தப்போய் நாடு திருந்தினவாறே வந்து விண்ணுலகம் தர விரைந்து, அத்தை மறந்து, குடிகொண்டு, தாம் புறப்பட்ட ஆக்கையிலே புக்குத்தான நகர்களை அதிலே வகுத்து, குரவை துவரைகளில் வடிவு கொண்ட சபலனுக்குத் தேக தோஷம் அறிவித்து, மாயையை மடித்து, வானே தரக்கருதிக் கருத்தின்கண் பெரியனானவனை, 'இன்று அஹேதுகமாக ஆதரித்த நீ அநாதி அநாதர ஹேது சொல்' என்று மடியைப் பிடிக்க, "இந்த்ரிய கிங்கரராய்க் குழி தூர்த்துச் சுவைத்து அகன்றீர் என்னில், அவை யாவரையும் அகற்ற நீ வைத்தவை என்பர்; அது தேக யோகத்தாலே என்னில், அந்நாள் நீ தந்த சுமடு என்பர்; முன் செய்த முழு வினையாலே என்னில், அது துயரமே உற்ற இருவினை உன் கோவமும் அருளும் என்பர்; ஈவிலாத மதியிலேன் என்னும் உம்மதன்றோ கர்த்ருத்வ போக்த்ருத்வங்கள் என்னில், ஆங்காரமாய்ப் புக்குச் செய்கைப்பயன் உண்பேனும் கருமமும் கருமபலனுமாகிய நீ கர்த்தா போக்தா என்பர்; யானே எஞ்ஞான்றும் என்றத்தாலே என்னில், அயர்ப்பாய்ச் சமய மதி கொடுத்து உள்ளம் பேதம் செய்கை உன் தொழில் என்பர்; ஜீவப் பிரக்ருதி சைதன்யம் நீங்கும் விரதஹேது, அகமேனியில் அழுக்கு அறுக்கை அபிமாநிகிருத்யம், தான் நல்கும் பந்தம் நிருபாதிகம், சௌகார்த்தம் எஞ்ஞான்றும் நிற்கும், பிணக்கிப் பேதியாத ஞானாதி வைகல்யம் இல்லை, ஏகமூர்த்தியில் அல்லல் மாய்த்த யத்ந பலித்வங்கள் நம்மது, நாம் தனிநின்ற ஸ்வதந்த்ரர் என்று அவனே அறிந்தனமே என்னும் சர்வஜ்ஞர் இவர்;

கூட்டுக. 'மனம் திருத்தி' என்பது முதல் 'குரவை துவரைகளில் வடிவு கொண்ட' என்பது முடிய உள்ளவை 'சபலனுக்கு' அடைமொழிகள். சபலன் - ஆசையையுடையவன்; இறைவன். 'இந்திரிய கிங்கரராய்' என்பது முதல் 'சர்வஜ்ஞர் இவர்' என்பது முடிய உள்ளவை ஆழ்வார் வினைய வினவிற்குக் கூறவேண்டிய விடையை இறைவன் தனக்குள்ளே ஆராய்ந்து நிரூபித்து முடிவுகட்டுதலைக் கூறுகின்றன. இவை பன்னிரண்டு பிரிவுகளாக அமைந்திருக்கின்றன. முதல் ஐந்து பிரிவுகளும் ஒருவகை. பின்னுள்ள எழு பிரிவுகளும் ஒருவகை.



'நெறிகாட்டி, அருகும் சுவடும்' போலே இதுவும் நிருத்தரம்' என்று கவிழ்ந்து நிற்க, அமந்த்ரஜ்ஞ உத்ஸவ கோஷம் போலே ஏறப்பெறுகிற எழுச்சியைச் சூசிப்பிக்கிற மேக சமுத்ர பேரீ கீத காஹள சங்குஆசீஸ் துதி கோலாஹலம் செவிப்பட்டவாறே, சாக்ஷாத்கரித்த பரப்பிராப்திக்குத் தலைமிசையாய் வந்த தாள்களைப் பூண்டு போகாமல் தடுத்துத் திருஆணை இட்டு, கூசம் செய்யாது செய்திப்பிழை, பற்றுக்கொம்பற்ற கதிகேடு, போரவிட்ட பெரும்பழி, புறம் போனால் வரும் இழவு, உண்டிட்ட முற்றீம்பு, அன்பு வளர்ந்த அடி உரம், உயிர்உறவு முதல் அளவு துரக்கைகளாலே பெரு ஆணை அல்ல ஆக்கின பேரவா, குளப்படியாம்படி, கடல் போன்ற ஆதரத்தோடே சூழ்ந்து தாபங்களை ஹரித்தமையை வெளியிடுகிறார் பத்தாம் பத்தில்.

என்பது, சூத்திரம்.

வியாக் :— இப்படி ஆபத்திற்குத் துணைவன் ஆகையாலே அவ் வாபத்துக்களிலே காப்பாற்றுவதற்குத் தகுதியாக மேற்கொள்ளும் வடிவங்கட்கெல்லாம் மூலமாய்த் தனக்குமேல் ஒன்று இல்லாத தான சிறப்பினையுடைய திவ்விய திருமேனியோடே வந்து தோன்றி, தன்மாட்டு இரக்ஷணபரத்தை வைத்த அடியார்கள் இவ்வுலகவாழ்வில் அடிக்கொதிப்பாலும் தன் திருவடிகளைக் கிட்டி அநுபவிக்கப் பெறுமையாலும் படும் துன்பத்தைப் போக்கும் தன்மையனானவன், மேல் பத்திலே தம்முடைய பதற்றத்துக்குத் தகுதியாக நாள் இட்டுக் கொடுத்ததற்குப் பலன், அர்ச்சிராதி மார்க்கத்தாலே பரமபதத்திற்கு ஏறப்போகை ஆகையாலே, அதற்கு ஆப்ததமனான அவன்தன்னை வழித்துணையாகப் பற்றி, இனிப் பேற்றில் கண்ணழிவில்லை என்று தமக்கு ஏற நிச்சயித்தார்;

அங்ஙனம் நிச்சயித்த ஆழ்வார், இதுகாறும் மறைத்து வைத்த மற்றைய அர்த்த விசேடங்களையும் வெளியிடவேண்டும்படியான நிலையானவாறே, முதல் உபதேசத்திற்குப் பாத்திரமான தம் திருவுள்ளத்திற்குச் செய்வன தவிர்வனவற்றை விதித்தார்;

அங்ஙனம் ஆராய்ந்த இறைவன் தக்கவிடை இறுக்க இயலாதவனாகிக் கவிழ்ந்து நின்றதைத் திருஷ்டாந்த மூலம் விளக்குகிறார் 'நெறி காட்டி' என்று தொடங்கி. பெருவாணை அல்லவாக்கின பேரவா - ஆழ்வாருடையது. ஆழ்வாருடைய அத்தகைய அவாவும் குளப்படியாம்படி கடல் போன்ற ஆதரத்தோடு வந்து சூழ்ந்து தாபங்களை அரித்தான் இறைவன் என்க.

தம் திருவுள்ளம் போன்ற அடக்கமுடையவர்களான ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குச் செய்யத்தகுவன முதலானவற்றை வெளியிட்டார்;

முதலிலே "பிணக்கற அறுவகைச் சமயமும்" என்ற திருப்பாசுரத்தில் தொடங்கின பக்தியோகத்தைச் "சார்வே தவ நெறி" என்ற திருவாய்மொழியிலே முடித்தார்;

இவ்வுலக மக்களுக்கு எளிதாக இறைவனை அடையும் தன்மையை உபதேசித்தார்;

அநுபவ கைங்கர்யங்களிலே நிற்கிறவர்களுக்குச் சீல குணமாகிற ஆழங்காலையும் காட்டினர்;

தம் பக்கல் விருப்பத்தாலே தம் திருமேனியில் மிக்க காதலைச் செய்கிற சர்வேச்வரனுக்கு இச்சரீரத்தின் குற்றங்களை உணர்த்தினர்;

உணர்த்தி, பின்னர், தமக்குப் பரதந்திரனாய்த் தம்மைப் பரமபதத்திற்குக் கொண்டுபோவதாகக் கழிபெருங்காதலை இப்போது செலுத்துகிற அச் சர்வேச்வரனை, அநாதி காலம் இவ்வுலக வாழ்விலே பிறந்து இறந்து உழலும்படி தம்மை விட்டுவைத்து விருப்பம் இன்றியே இருந்ததற்குக் காரணம் என்? என்று கேட்க,

அவனும், இந்திரியங்களுக்கு வசப்பட்டிருத்தல் முதலான பல பல காரணங்களை எண்ணி, அவையும் நம் அதீனம் என்று அறியும் முற்றறிவினரான இவர்க்குப் போக்கடி சொல்லுகை அரிது என்று விடை கூருதவனாய், அர்ச்சிராதி மார்க்கத்தையும் ஆங்காங்குள்ளார் செய்யும் உபசாரத்தையும் அவ்வழியாலே சென்று பெறும் பேருகிய தன் திருவடித்தாமரைகளை அடைதல் அளவாகக் காட்டிக் கொடுத்தான்.

அதனை நேரே அறிந்து, அது மானச அநுபவ மாத்திரமாய்ப் புறக்கரணங்களாலே பார்க்க முடியாமையாலே அதனை உள்ளவாறே அடையவேண்டும் என்று பதறி, அவனுக்கு மறுக்க ஒண்ணுத திரு ஆணை இட்டுத் தடுத்து, அது பெரு ஆணை அல்லாமைக்குக் காரணங்களையும் சொல்லுகின்ற தம்முடைய பரம பக்தி எல்லாம் குளப்படி ஆம்படியான கழிபெருங்காதலோடே இறைவன் வந்து, தம்முடைய தாபங்களைப் போக்கின வகையை வெளியிடுகிருர் பத்தாம் பத்தில் என்கிருர்.



[1] சுரிகுழல் அஞ்சனம் புனல் மைந்நின்ற பொல்லாப் புனக்காயா என்னும் ஆபத்தில் கொள்ளும் காம ரூப கந்த ரூபத்தாலே பிரபந்நஆர்த்தி ஹரனனவன் - சுரிகுழல் அஞ்சனம் புனல் மைந்நின்ற பொல்லாப் புனக்காயா என்னும் - [2] "சுரிகுழல் கமலக்கண் கனிவாய்" என்றும், [3] "அஞ்சனமேனி" என்றும், [4] "புனல், மைந்நின்ற வரை போலும் திருஉருவம்" என்றும், [5] "பொல்லாக் கனிவாய்த் தாமரைக்கண் கருமாணிக்கம்" என்றும், [6] "புனக்காயா நிறத்த புண்டரீகக்கண் செங்கனிவாய்" என்றும் சொல்லப்படுகின்றவாறே ஒன்றற்கொன்று மேன்மையையுடையதாய் மனத்தினைக்கொள்ளை கொள்ளுமதாய் அநுபவிக்கின்றவர்களைத் தனித்தனியே ஆழங்கால் படுத்தவல்ல அவயவ சோபையையும் அதற்குப் [7] பரபாகமாய் மிகப் பேரொளியதாய் விடாயர் முகத்திலே நீர்வெள்ளத்தைத் திறந்துவிட்டாற்போலே எல்லாத் துன்பங்களும் ஆறும்படி இருக்கும் திருநிறத்தையுமுடையதாகச் சொல்லப்படுமதாய், ஆபத்தில் கொள்ளும் காம ரூப கந்த ரூபத்தாலே -[8] "காமரூபம் கொண்டு எழுந்து அளிப்பான்" என்று அடியார்களுடைய ஆபத்தினைப் போக்குதற்குத் தகுதியாக வேண்டினபடி மேற்கொள்ளும் உருவங்கட்கெல்லாம் மூலமாக இருக்கும் திவ்ய திருமேனியைக் கொண்டு, பிரபந்ந ஆர்த்திஹரனனவன் - பாரத்தை எல்லாம் தன் பக்கல் வைத்த அடியார்களான பிரபந்நர்கள், விருப்பம் இல்லாத இவ்வுலக வாழ்வில் இருப்பாலும் விருப்பமான தன் திருவடிகளைக் கிட்டாமையாலும் படும் துன்பத்தைத் தீர்க்கும் தன்மையனன சர்வேச்வரன்,

[9] அருள் பெறும்போது அணுகவிட்டதுக்குப் பலமான வான் ஏறும் கதிக்கு - அருள் பெறும்போது - [10] "அவனுடை அருள் பெறும்

---

1. 'சுரிகுழல்' என்று தொடங்கும் இத் தொடரால், இப்பத்தில் வெளியிடப்படுகின்ற இறைவனுடைய ஆபத்சகத்வம் என்ற திருக்குணத்தைக் காட்டுதற்குரிய திருப்பாசுரப் பகுதிகளை வெளியிடுகிருர். காம ரூபம் - விரும்பத்தக்க அழகிய உருவம். கந்தம் - மூலம்; காரணம்.

2. திருவாய். 10. 1: 1. 3. திருவாய். 10. 3: 3.

4. திருவாய். 10. 6: 8. 5. திருவாய். 10. 10: 1.

6. திருவாய். 10. 10: 6.

7. பரபாகம் - பல நிறங்கள் கலத்தலால் உண்டாகும் சோபை.

8. திருவாய். 10. 1: 10.

9. 'அருள் பெறும்போது' என்னும் இதிலிருந்து 'வழித்துணையாக்கி' என்றது முடிய "தாள தாமரை" என்ற முதல் திருப்பதிகத்தின் பொருள் கூறப்படுகின்றது.

10. திருவாய். 9. 9. 6.

போது அரிதால்'' என்றும், [1] "அவன் அருள் பெறுமளவு ஆவி நில்லாது'' என்றும் மேல்பத்தில் நொடிப்பொழுதும் விளம்பம் பொருத படி துன்புற்ற தமக்கு, அனுகவிட்டதுக்குப் பலமான - [2] "மரணமானால்'' என்று இந்தச் சரீரத்தின் முடிவிலே மோக்ஷம் தருகிறேம் என்று அணித்தாக நாள் இட்டுக் கொடுத்ததற்குப் பலம், வானேறும் கதிக்கு - [3] "வான் ஏற வழிதந்த வாட்டாற்றான்'' என்று அடையத் தக்க பூமியான பரமபதத்திலே சென்று புகுருகைக்கு வழியாக அவன் காட்டிக்கொடுத்த அர்ச்சிராதிமார்க்கத்தாலே சென்று சேர்தல் ஆகையாலே அந்த அர்ச்சிராதிகதிக்கு,

அண்டமூவுலகும் முன்னோடிக் கால்விழுந்திடத்தே நிழல் தடங்கள் [4] ஆக்கி - அண்ட மூவுலகும் முன்னோடி - அரசகுமாரன் வழி போம்போது வழிக்குக் கடவார் முன்னோடி நிலம் சோதித்து நிழலும் தடாகமும் பண்ணிப் பின்னை அரசகுமாரனைக் கொண்டுபோமாறு போலே, [5] "அண்ட மூவுலகு அளந்தவன்'' என்கிறபடியே திருவுலகு அளத்தல் என்ற ஒரு வியாஜத்தாலே முன்னோடி நிலம் சோதித்து, கால் விழுந்த இடத்தே நிழல் தடங்கள் ஆக்கி - [6] "அவன் அடிநிழல் தடம்'' என்கிறபடியே [7] காளமேகமான தன் கால் விழுந்த இடத்தே நிழலும் தடாகமுமாகச் செய்து,

[8] அமுதம் அளித்த தயரதன் பெற்ற கோவலன் ஆகையாலே - அமுதம் அளித்தவன் ஆகையாலே - திருமோகூரில் எழுந்தருளியிருக்கும் இறைவன் அமுதம் அளித்த பெருமான் ஆகையாலே

---

1. *திருவாய். 9. 9: 6.* 2. *திருவாய். 9. 10: 5.*

3. *திருவாய். 10. 6. 5.*

4. *'ஆக்கி' என்னும் எச்சத்தை, பின்னே வருகின்ற 'பெருங் கூட்டம் நடத்தும் ஆத்தன்' என்றதிலேயுள்ள 'நடத்தும்' என்னும் எச்சத்தோடு முடிக்க.*

5. *திருவாய். 10. 1: 5.* 6. *திருவாய். 10. 1: 2.*

7. *இவ்வாக்கியத்திலுள்ள பொருள் நயம் கண்டு மகிழ்தல் தகும்.*

8. *இவ்வாக்கியத்தில் உள்ள 'ஆகையாலே' என்பதனை, அமுதம் அளித்தவன் ஆகையாலே, தயரதன் பெற்றவன் ஆகையாலே, கோவலன் ஆகையாலே என்று மேலே உள்ள சொற்களோடும் கூட்டுக. கூட்டி, 'ஆகையாலே' என்பதனைப் பின்னே வருகின்ற 'நடத்துமாத்தன்' என்பதனோடு முடிக்க.*



[1] "தாமரைக்கண்ணன் ஆகிற எம்பெருமானுடைய திருநாம சங்கீர்த்தனமாகிற அமுதம் வழியில் உண்ணும் உணவு'' என்கிறபடியே வழியில் உண்ணும் உணவாகத் தன் திவ்ய குணமாகிற அமுதத்தைப் பொழியுமவனாய், தயரதன் பெற்றவன் ஆகையாலே - [2] "தயரதன் பெற்ற மரதகமணித்தடம்'' என்கிறபடியே சக்கரவர்த்தித்திருமகனாக வந்து அவதரித்தவன் ஆகையாலே, கோவலன் ஆகையாலே - [3] "கூத்தன் கோவலன்'' என்கிறபடியே கிருஷ்ணனாக வந்து அவதரித்தவன் ஆகையாலே,

வேடன், வேடுவிச்சி, பக்ஷி, குரங்கு, சராசரம், இடைச்சி, இடையர், தயிர்த்தாழி, கூனி, மாலாகாரர், பிணவிருந்து, வேண்டடிசில் இட்டவர், அவன் மகன், அவன் தம்பி, யானை, அரவம், மறையாளன், பெற்ற மைந்தன் ஆகிற பதினெட்டு நாடன் பெருங்கூட்டம் நடத்தும் ஆத்தனை வழித்துணையாக்கி - வேடன் - [4] "தர்மாத்மாவான ஸ்ரீ ராமபிரான், அன்பிற்குரியவனும் வேடர்களுக்குத் தலைவனுமான குகனை அடைந்து'' என்னும்படி [5] "மாழைமான் மடநோக்கி உன் தோழி உம்பி எம்பி'' என்கிறபடியே பிராட்டியையும் இளைய பெருமாளையும் முன்னிட்டு "உகந்த தோழன் நீ'' என்று அங்கீகரிக்கப்பெற்ற ஸ்ரீகுகப்பெருமாள்.

வேடுவிச்சி - [6] "பேரொளியையுடையனான ஸ்ரீ ராமபிரான் அந்தச் சபரியிடம் சென்றார்'' என்கிறபடியே தானே சென்று கிட்டி விருந்து உண்டு [7] "ஏ இரகுநந்தனா! தேவரீருடைய அழகிய திருக்கண்களால் தூய்மை செய்யப்பட்டவளாக ஆனேன்'' என்னும்படி தன் விசேட கடாக்ஷத்தாலே தூயள் ஆக்கப்பட்ட சபரி,

---

1. *"பாதேயம் புண்டரீகாக்ஷ நாமஸங்கீர்த்தநாம்ருதம்" என்பது, காருடம்.*

2. *திருவாய். 10. 1: 8.* 3. *திருவாய். 10. 1: 6.*

4. *"குஹமாஸாத்ய தர்மாத்மா நிஷாதாதிபதிம் ப்ரியம்." என்பது, ஸ்ரீராமா. பால. 1: 29.*

5. *பெரியதிரு. 5. 8: 1.*

6. *ஸோப்யகச்சந் மஹாதேஜா: சபரீம்" என்பது, ஸ்ரீராமா. பால. 1: 58.*

7. *"சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி ரகுநந்தந" என்பது, ஸ்ரீராமா, ஆரண். 74: 14.*

பக்ஷி - கைங்கரியத்தின் பொருட்டுச் சரீரத்தை அழியமாறினவர் என்னும் உகப்பாலே [1] "வேள்வி செய்தலையே தன்மையாக உடையவர்களுக்கு அடையும் உலகம் எதுவோ, பஞ்சாக்கினியின் மத்தியில் நின்று தவம் செய்கிறவர்களுக்கு அடையும் உலகம் எதுவோ, என்னால் கட்டளை இடப்பட்டவனான நீ மிகச் சிறந்த அந்த உலகத்தை அடைக" என்று அங்கீகரிக்கப்பட்ட ஸ்ரீ ஜடாயு மஹாராஜர்,

குரங்கு - குரங்கு என்ற இது சாதி ஒருமை. [2] "உலகநாதனான ஸ்ரீ ராமபிரான் சுக்கிரீவனை நாதனாக விரும்புகிறார்" என்கிறபடியே அத்தலை இத்தலையாகச் சென்று அங்கீகரிக்கப்பெற்ற மஹாராஜரும் அவரது சேனையான குரங்குக் கூட்டமும்,

சராசரம் - [3] "ஒன்று இன்றியே நற்பாலுக்கு உய்த்தனன்" என்கிறபடியே ஒரு காரணமும் இன்றிக்கே இருக்கச்செய்தே தன்னுடைய சேர்க்கையே சுகமாகவும் தன்னுடைய பிரிவே துக்கமாகவும் ஆம்படியாக அங்கீகரிக்கப்பெற்ற "அயோத்தியில் வாழும் சராசரம்",

இடைச்சி - [4] "பரம்பொருளும் உலககாரணனுமான கண்ணபிரானைத் தியானம் செய்துகொண்டு மூச்சு இல்லாமல் மற்றொரு

---

1. "யாகதிர்யஜ்வ சீலாநாம் ஆஹிதாக்நேஶ்ச யாகதி:
அபரார்வர்த்திநாம் யாச யாசபூமி ப்ரதாயிநாம்."
"மயாத்வம் ஸமநுஜ்ஞாதோ கச்சலோகாந் அநுத்தமாந்."
என்பன, ஸ்ரீராமா. ஆரண். 68: 29, 30.

2. "ஸுக்ரீவம் நாதம் இச்சதி"
என்பது, ஸ்ரீராமா. கிஷ். 4: 18.

அத்தலை - முப்பரம்பொருளுக்கும் முதல்வனான ஸ்ரீராமபிரான். மஹாராஜர் - சுக்கிரீவன். சுக்கிரீவனை மஹாராஜர் என்பது வைணவமரபு.

3. திருவாய். 7. 5: 1.
ஆவும் பயமும் அமுதும் ஒப்பான அரங்கருக்கு
மேவும் புகழ்இன்னும் மேவும் கொலோஅவர் மெய்அருளால்
தாவும் தரங்கத் தடம்சூழ் அயோத்திச் சராசரங்கள்
யாவும் கிளையுடன் வைகுந்த லோகத்தில் ஆர்ந்திட்டவே.
என்பது, திருவரங்கத்துமாலை.

4. சிந்தயந்தீ ஜகத்ஸூதிம் பரப்ரஹ்ம ஸ்வரூபிணம்
நிருச்ச்வாஸதயாமுக்திம் கதாந்யா கோபகந்யகா.
என்பது, ஸ்ரீவிஷ்ணுபு. 5. 10: 22.

"உபேயத்துக்கு இளையபெருமாளையும் பெரியவுடையாரையும் பிள்ளை திருநறையூர்அரையரையும் சிந்தயந்தியையும் போலே இருக்க



கோப கன்னியானவள் மோக்ஷத்தை அடைந்தாள்" என்கிறபடியே திருமேனியின் அழகு வேறுபாடே உபாயமாக வீடு கொடுக்கப்பெற்ற சிந்தயந்தி,

[1] இடையர் - வெண்ணெய் களவு காணப் புக்கவிடத்தே தொடுப்புண்டு வந்து தம்மகத்தேபுக, படலைத் திருகிவைத்து மோக்ஷம் தாராவிடில் காட்டிக்கொடுப்பேன் என்று மோக்ஷம் பெற்ற ததிபாண்டர், தயிர்த்தாழி - பெயர் உருவம் உள்ளவற்றுக்கெல்லாம் உயிர் இருப்பு உண்டாகையாலே இதற்கு மோக்ஷம் கொடுக்க வேண்டும் என்ற ததிபாண்டன் நிர்ப்பந்தத்திற்காக மோக்ஷம் கொடுக்கப்பெற்ற தயிர்த்தாழி,

கூனி - [2] "அழகிய முகமுடையவளே! இது வாசனை கலந்தது, இது அரசனுக்குத் தகுந்தது, இது மனோகரமாக இருப்பது, எங்கள் இருவருடைய சரீரத்துக்குத் தகுதியான சந்தனத்தைக் கொடு" என்று பூசும் சாந்தினை விரும்ப, வேறு ஒரு பயனையும் கருதாமல் கொடுத்த பிரீதியாலே விசேட கடாக்ஷத்திற்கு உரியவளான கூனி,

மாலாகாரர் - [3] "திருவருள் புரிதலையே இயல்பாகவுடைய கிருஷ்ண பலராமர்கள் இருவரும் என் வீட்டிற்கு வந்தார்கள்; ஆதலால் நான் பேறு பெற்றவன் ஆனேன்; கைங்கரிய ரூபமான பூசையைச் செய்யப்போகிறேன்" என்று வேறொரு பயனையும் கருதாமல்

---

வேணும்", "பெரியவுடையாரும் பிள்ளை திருநறையூர்அரையரும் உடம்பை உபேக்ஷித்தார்கள்; சிந்தயந்திக்கு உடம்பு தன்னடையே போய்த்து." என்பன ஸ்ரீவசனபூஷண ஸ்ரீசூக்திகள். 80, 84.

"'மதியிலேன் வல்வினையே மாளாதோ' என்றதனால் மதியினையுடைய ஒருத்தியின் வல்வினை மாண்டது என்பது உட்கோள். அதாவது, சிந்தயந்தி என்பாள் சதுரப்பாட்டினையுடையளாய் மாமியார் முதலாயினருடைய முன்னிலையிலேயே இருவினைகளையும் நீக்கி மோக்ஷத்தினை அடைந்தாள் என்பது" என்பது ஈட்டுவாக்கியம். திருவாய். 1. 4: 3.

1. சிந்திக்க நெஞ்சில்லை; நாஇல்லை நாமங்கள்செப்ப; நின்னை
வந்திக்க மெய்யில்லை வந்திருபோதும்; மொய்ம்மாமலர்ப்பூம்
பந்தித் தடம்புடை சூழ் அரங்கா! ததிபாண்டன் உன்னைச்
சந்தித்த நாள் முக்திபெற்றதென்னோ தயிர்த்தாழியுமே.
என்பது, திருவரங்கத்துமாலை.

2. ஸுகந்தமேதத் ராஜார்ஹம் ருசிரம் ருசிராநநே
ஆவயோ: காத்ர ஸத்ருசம் தீயதாமநுலேபநம்.
என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 5. 20: 6.

3. ப்ரஸாத பரமௌ நாதௌ மமகேஹமுபாகதௌ
தந்யோஹம் அர்ச்சயிஷ்யாமி இத்யாஹ மால்யோபஜீவந:
என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 5. 19: 21.

பூவினைக் கொடுத்த உகப்பாலே [1] "மங்களம் உள்ளவனே! உன்னுடைய மனம் எல்லாக் காலத்திலும் தர்மத்திலேயே நிலைத்திருக்கப் போகிறது, உன் வம்சத்தில் பிறந்தவர்கள் நீண்ட ஆயுளைப் பெறுவார்கள்" என்று விசேஷ கடாக்ஷம் செய்யப்பெற்ற ஸ்ரீ மாலாகாரர்,

பிண விருந்து - [2] "இது புதிய பிணம், புண்ணியமானது, வேதத்தின் கரை கண்டது, வேள்வி செய்தலையே இயல்பாகவுடைய பெரிய ஞானியான பிராமணன், உத்தமமான பிணம்" என்கிறபடியே [3] "எந்த வுணவை ஒருவன் கொள்ளுகிறானோ அந்த வுணவை அவனுடைய தெய்வங்களும் கொள்ளுகின்றன" என்று கூறிய முறைப்படி பிணத்தை விருந்தாக இட்ட கண்டாகர்ணன்,

வேண்டடிசில் இட்டவர் - [4] "வேண்டடிசில் உண்ணும்போது ஈதென்று, பார்த்திருந்து நெடுநோக்குக் கொள்ளும் பத்த விலோசனத்தில்" பக்தி முன்னாக அடிசில் கொண்டு வந்திட்ட முனிவர் மனைவிகள்,

அவன் மகன் - [5] "மீள அவன் மகனை" என்கிறபடியே இரணியனுடைய புத்திரனாய்வைத்துத் தன் அருளுக்கு விஷயமாம்படி பக்தனான ஸ்ரீ பிரஹ்லாதன்,

அவன் தம்பி - [6] "அவன் தம்பிக்கு" என்னும்படி இராவணனுக்குத் தம்பியாய் [7] "நான் இராவணன் தம்பி, அவனாலே

---

1. தர்மே மநஶ்ச தே பத்ர ஸர்வகாலம் பவிஷ்யதி
   யுஷ்மத்ஸந்ததி ஜாதாநாம் தீர்க்கமாயுர்பவிஷ்யதி.

என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா. 5. 9: 26.

2. நவம் சவமிதம் புண்யம் வேதபாரகமச்யுத
   யஜ்ஞசீல மஹாப்ராஜ்ஞ ப்ராஹ்மணம் சவமுத்தமம்.

என்பது, ஹரிவம்சம்.

3. "யதந்ந: புருஷோபவதி"

என்பது, ஸ்ரீராமா. அயோத். 102: 30.

'ஞானக்கண்தா; கனவுஒக்கும் பவம்துடை; நஞ்சிருக்கும்
தானக்கண்டா! கனற்சோதி!' என்றேத்தும் வன்தாலமுடன்
வானக்கண்தா; கனவண்ணா! என்றோது ஒலி வந்தடையா
ஈனக்கண்டாகனற்கு மீந்தான் பரகதி என்னப்பனே.

என்பது, திருவேங்கடத்தந்தாதி.

4. நாய்ச்சியார்திரு. 12: 6. 5. பெரியாழ். 1. 5: 2.
6. பெருமாள். 10. 7
7. அநுஜோ ராவணஸ்யாஹம் தேநசாஸ்மி அவமாநித:

என்பது, ஸ்ரீராமா. யுத். 19: 4.



அவமானப் படுத்தப்பட்டேன்" என்கிறபடியே தன் தாழ்வினை முன்னிட்டுக்கொண்டு [1] "இராகவனைச் சரணமாக அடைந்தேன்" என்று திருவடிகளை அடைந்த ஸ்ரீ விபீஷணாழ்வான்,

ஆனை - [2] "பெரிய ஆபத்தினை அடைந்தவனாய் நாராயணனையே தியானம் செய்துகொண்டிருந்த அந்தக் கஜேந்திராழ்வான் மனத்தால் எம்பெருமானை நினைத்தான்" என்கிறபடியே தன் முயற்சியை விட்டுப் பிரபந்நனாய்த் தன்னால் விரும்பப்பட்ட கைங்கரியத்தைப் பெற்ற ஸ்ரீ கஜேந்திராழ்வான்,

அரவம் - [3] நஞ்சு சோர்வதோர் வெஞ்சின அரவம் வெருவி வந்து நின் சரண் என" என்கிறபடியே பெரியதிருவடிக்கு அஞ்சி வந்து திருவடிகளைச் சரணமாக அடைந்த சுமுகன்,

மறையாளன் - [4] "மாக மாநிலம் முழுதும் வந்து இறைஞ்சும் மலரடி கண்ட மாமறையாளன்" என்கிறபடியே கிருஷ்ணாவதாரத்தில் தன்னுடைய இளமைப்பருவத்தில் செய்த திருவிளையாடல்களை நேரே பார்க்கவிரும்பித் தவம் செய்து, அப்படியே காட்டியருளக் கண்டு அநுபவித்த பின்னர், நித்தியமான அநுபவத்தை விரும்பிய கோவிந்தஸ்வாமி,

பெற்ற மைந்தன் - [5] "மாமுனி பெற்ற மைந்தன்" என்கிறபடியே மிருகண்டு புத்திரனாய் மோக்ஷத்தின் பொருட்டுத் தன்னை வந்து அடைந்த மார்க்கண்டேயன்,

ஆகிற [6] பதினெட்டுநாடன் பெருங்கூட்டம் நடத்தும் ஆத்தனை வழித்துணை ஆக்கி - மேற்கூறியவர்கள் ஆகிற பலவகைப்பட்ட சாதித்தன்மைகளாலும், இப்படிப் பதினெட்டாக எண்ணலாம்படி இருக்கையாலும், பதினெட்டு நாடன் பெருங்கூட்டம் போலே இருந்துள்ள இத்திரளை அர்ச்சிராதி மார்க்கத்தாலே தானே துணையாய் இருந்து நடத்துமவனாய், [7] "திருமோகூர், ஆத்தன் தாமரை அடி

---

1. "ராகவம் ஶரணம் கத:"

என்பது, ஸ்ரீராமா. யுத். 17: 14.

2. பரமாபதமாபந்நோ மநஸாசிந்தயத்தரிம்
   ஸதுநாகவர: ஸ்ரீமாந் நாராயண பராயண:"

என்பது, விஷ்ணுதர்மம்.

3. பெரியதிருமொழி, 5. 8: 4. 4. பெரியதிருமொழி, 5. 8: 5.
5. பெரியதிருமொழி, 5. 8: 6.
6. 'பதினெட்டு நாடன்' என்றதன் கருத்து நன்கு விளங்கவில்லை.
7. திருவாய். 10. 1: 6.

அன்றி மற்றிலம் அரண்'' என்றும், [1] ''காளமேகத்தை அன்றி மற்றொன்று இலம் கதி'' என்றும் சொல்லுகிறபடியே திருமோகூரிலே நின்றருளின பரமஆப்தனை காளமேகத்தை வழித்துணையாகக் கொண்டு,

[2] அறியச் சொன்ன சுப்ரபாதத்தே துணைபிரியாமல் போக்கு ஒழித்து - அறியச் சொன்ன - [3] ''நாம் உமக்கு அறியச் சொன்ன நாள்களும் நணியவான'' என்றும், [4] ''நாளேல் அறியேன்'' என்றும், [5] ''மரணமானால்'' என்றும் நான் உங்களுக்குச் சொன்ன நாள் அணித்தாயிற்று என்று பிறர்க்கும் பேசும்படியாய், சுப்ரபாதத்தே - [6] ''இரவும் எனக்கு நல்விடிவையுடையதாக ஆகப்போகிறது'' என்றும், [7] ''மதுரையில் வசிக்கும் பெண்களுக்கு இப்போது இரவு நல்விடிவாக ஆகப்போகிறது'' என்றும் சொல்லுகிறபடியே மோக்ஷம் அணித்தானவாறே நல்விடிவான நாளிலே, துணைபிரியாமல் போக்கு ஒழித்து - [8] ''துணை பிரிந்தார் துயரமும் நினைகிலை'' என்றும், [9] ''பசு மேய்க்கப் போகேல்'' என்றும், [10] ''என் கை கழியேல்'' என்றும், [11] ''அவன் பசு நிரை மேய்ப்பு ஒழிப்பான் உரைத்தன'' என்றும் தமக்குத் துணையான அவனைப் பசு மேய்க்கையாகிற அவன் விருப்பத்திற்காகவும் போகாதபடி செய்து,

மீள்கின்றதில்லை என்று நிச்சித்திருந்தவர் - [12]''மீள்கின்றதில்லைப் பிறவித் துயர் கடிந்தோம்'' என்றும், [13] ''நிலைபேர்க்கலாகாமை நிச்சித்திருந்தேன்'' என்றும் இவ்வுலக வாழ்வாகிற குற்றம் மறுவல்

---

1. *திருவாய்.* 10. 1, 1.

2. *இவ்வாக்கியத்தால், ''வேய்மருதோளிணை'' என்ற மூன்றாம் திருப்பதிகத்தின் பொருளை வெளியிடுகிறார். சுப்ரபாதம் - நல்விடிவு.*

3. *திருவாய்.* 10. 2: 9.

4. *திருவாய்.* 9. 8: 4.

5. *திருவாய்.* 9. 10: 5.

6. *''ஸுப்ரபாதாச மே நிசா''*
*என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா.* 5. 17: 3.

7. *''ஸுப்ரபாதாத்ய ரஜநீமதுராவாஸ யோஷிதாம்''*
*என்பது, ஸ்ரீவிஷ்ணுபுரா.* 6. 18: 24.

8. *திருவாய்.* 10. 3: 4.

9. *திருவாய்.* 10. 3: 9.

10. *திருவாய்.* 10. 3: 8.

11. *திருவாய்.* 10. 3: 11.

12. *திருவாய்.* 10. 4: 3.

13. *திருவாய்.* 10. 4: 4.



இடாதென்று [1] ''ஆனந்தமயமான பரம்பொருளைத தியானிப்பவன் எங்கும் அச்சம் கொள்ளுகிறான் இல்லை'' என்கிறபடியே ஒன்றுக்கும் அஞ்சாதபடி நிச்சயித்திருந்தவர்,

சஞ்சிதம் காட்டும் தசையானவாறே - மரணதசைஆன அளவிலே, ஈட்டப்பட்டதாய்ப் புதைத்துக் கிடக்கும் மஹாநிதிகளைப் புத்திரன் முதலாயினார்க்குக் காட்டுவாரைப் போலே, தமக்கு மோக்ஷம் அணித்தானவாறே, ஒருவரும் இழக்க ஒண்ணாது, எல்லார்க்கும் நலம் தீங்குகளை அறிவிக்கவேண்டும் என்று பார்த்து, சஞ்சிதம் - முன்னே சேர்த்து வைத்தவை.

முந்துற்ற நெஞ்சுக்குப் பணி மறவாது மருள்ஒழி நகு கைவிடேல் என்று [2] கிருத்ய அகிருத்யங்களை விதித்து - முந்துற்ற நெஞ்சுக்கு - [3] ''தொழுது எழு என் மனனே'' என்று முதன் முதலிலே உபதேசிக்கும்படி [4] ''முந்துற்ற நெஞ்சே'' என்கிறபடியே தம்மிலும் பகவத்விஷயத்திலே முற்பட்டு நிற்கிற தம் திருவுள்ளத்துக்கு, பணி மறவாது மருள்ஒழி நகு கைவிடேல் என்று - [5] ''பணி நெஞ்சே நாளும் பரம பரம்பரனை'' என்றும், [6] ''வாழி என் நெஞ்சே மறவாது வாழ்கண்டாய்'' என்றும், [7] ''மருள் ஒழி நீ மட நெஞ்சே'' என்றும், [8] ''நரகத்தை நகு நெஞ்சே'' என்றும், [9] ''வாழி மனமே கைவிடேல்'' என்றும் நம்முடைய தடைகளை எல்லாம் தானே போக்கி அடிமை கொள்ளும் பரம பரம்பரனை அநுபவிக்கப் பார்; உனக்கு அநுபவித்தலாகிய இவ்வாழ்வு மாறாதே சென்றிடுக; கை புகுந்தது என்று மற்றைய விஷயங்களில் செய்யுமதனை இவ்விஷயத்திலும் செய்யாதே கொள்; [10] ''திருவாறன்விளையதனை, மேவி வலஞ் செய்து கைதொழக் கூடுங்கொல்'' என்று அடையத்தக்க பொருள் கிட்டிற்றாகில் இங்கே அடிமை செய்ய அமையாதோ என்று உகந்தருளின நிலங்களில் நசையாலே மயங்குவது ஒன்று உண்டு உனக்கு; அதனைத் தவிரப் பார்; நாம் நினைத்த பொருள் அண்மையில் இராநின்றது என்று இதனையே பார்க்குமித்தனையோ! நம்மையும்

---

1. *''நபிபேதி குதச்சந''*
*என்பது, தைத்திரீய உபநிடதம்.*

2. *கிருத்யம் - செய்யத்தகுவன. அகிருத்யம் - தவிரத்தகுவன.*

3. *திருவாய்.* 1. 1: 1.

4. *பெரியதிருவந்.* 1.

5. *திருவாய்.* 10. 4: 7.

6. *திருவாய்.* 10. 4: 8.

7. *திருவாய்.* 10. 6: 1.

8. *திருவாய்.* 10. 6: 5.

9. *திருவாய்.* 10. 7: 9.

10. *திருவாய்.* 7. 10: 9.

பார்க்க வேண்டாவோ! நான் பரமபதத்திற்கு ஏறப்போகாநின்றேன்; நெடுநாள் நம்மைக் குடிமக்களாக்கி எளிவரவு படுத்தின இவ்வுலக வாழ்வினைப் புரிந்து பார்த்துச் சிரித்துப் போருகிடாய்; நமக்கு இப்பேறு எல்லாம் திருமலையாலே வந்ததாயிற்று; அத்திருமலையைக் கைவிடாதே கொள் என்று, கிருத்ய அகிருத்யங்களை விதித்து - செய்வனவற்றைச் செய்யுமாறும் தவிர்வனவற்றைத் தவிருமாறும் விதித்து,

நெஞ்சுபோல்வாரைத் தொண்டீர் என்று அழைத்து வலம் செய்து எண்ணுமின் பேசுமின் கேண்மின் காண்மின் நடமின் புகுதும் என்று கர்த்தவ்யம் ஸ்மர்த்தவ்யம் வக்தவ்யம் சுரோதவ்யம் திரஷ்டவ்யம் கந்தவ்யம் வஸ்தவ்யம் எல்லாம் வெளியிட்டு - நெஞ்சுபோல்வாரைத் தொண்டீர் என்று அழைத்து - தம் திருவுள்ளம் போன்று அந்தரங்கரான ஸ்ரீ வைஷ்ணவர்களை [1] "தொண்டீர் வம்மின்" என்று பகவானிடத்தில் ஆசையுடையவர்களே வாருங்கோள் என்று அழைத்து, வலஞ்செய்து என்று கர்த்தவ்யம் - [2] "கொண்ட கோயிலை வலம் செய்து இங்கு ஆடுதும் கூத்தே" என்று அவன் எழுந்தருளியிருக்கிற தேசத்தைக் குறித்து வலம் வந்து மகிழ்ச்சியுடையராவோம் வாருங்கோள் என்கையாலே கர்த்தவ்யமும், (கர்த்தவ்யம் - செய்யத்தக்கது.) [3] எண்ணுமின் என்று ஸ்மர்த்தவ்யம் - [4] "எண்ணுமின் எந்தைநாமம்" என்று எந்தையினுடைய நாமத்தை எண்ணுங்கோள் என்கையாலே ஸ்மர்த்தவ்யமும், (ஸ்மர்த்தவ்யம் - நினைக்கத்தக்கது). பேசுமின் என்று வக்தவ்யம் - [5] "பேசுமின் கூசமின்றி" என்று உங்கள் தாழ்வினைப் பார்த்துக் கூசாதே திருவனந்தபுரத்திலே அன்போடு எழுந்தருளியிருக்கிறவனைப் பேசுங்கோள் என்கையாலே வக்தவ்யமும், (வக்தவ்யம் - பேசத்தக்கது). கேண்மின் என்று சுரோதவ்யம் - [6] "நமர்களோ சொல்லக் கேண்மின்" என்று நம்மோடு சம்பந்தமுடையீர் நாம் சொல்வனவற்றைக் கேளுங்கோள் என்கையாலே சுரோதவ்யமும், (சுரோதவ்யம் - கேட்கத்தக்கது). காண்மின் நடமின் என்று திரஷ்டவ்யம் கந்தவ்யம் - [7] "படமுடை அரவில் பள்ளிபயின்றவன் பாதம் காண நடமினோ" என்று திருவனந்தபுரத்தில் திருக்கண்வளர்ந்தருளுகிற சர்வேச்வரனுடைய திருவடிகளைக் காண்பதற்குப் போருங்கோள் என்கையாலே திரஷ்டவ்

1. *திருவாய். 10. 1: 4.* 2. *திருவாய். 10. 1: 5.*
3. *இதிலிருந்து இரண்டாம் திருப்பதிகத்தின் பொருள் பேசப்படுகிறது.*
4. *திருவாய். 10. 2: 5.* 5. *திருவாய். 10. 2: 4.*
6. *திருவாய். 10. 2: 8.* 7. *திருவாய். 10. 2: 1.*



யமும் கந்தவ்யமும், (திரஷ்டவ்யம் - பார்க்கத்தக்கது, கந்தவ்யம் - செல்லத்தக்கது). புகுதும் என்று வஸ்தவ்யம் - "அனந்தபுரநகர் புகுதும் இன்றே" என்று இச்சை பிறந்த இன்றே திருவனந்தபுரத்திலே சென்றுபுக வாருங்கோள் என்கையாலே வஸ்தவ்யமும், (வஸ்தவ்யம் - வாசம் பண்ணத்தக்கது). எல்லாம் வெளியிட்டு - ஆகின்றவை எல்லாம் அவர்களுக்கு வெளியிட்டு,

[1] "பிணக்கறவைச் சார்வாக நிகமித்து - முதலில் தொடங்கிய பொருளை ஈற்றில் முடித்தல் சாஸ்திர முறையாகையாலே, [2] "பத்துடையடியவர்" என்ற திருவாய்மொழியிலே "பிணக்கற" என்ற திருப்பாசுரத்திலே "வணக்குடைத் தவநெறி" என்று தொடங்கிய பக்தியோகத்தை, [3] "சார்வே தவநெறிக்குத் தாமோதரன் தாள்கள்" என்று தன் பேற்றோடே பொருந்தினபடியைச் சொல்லி முடித்து, நன்று; இதன் பட்டோலையான நூலில் [4] "'வீடுமின் முற்றவும்', 'பத்துடையடியவ' ரிலே உபதேசிக்கத் தொடங்கின சாத்ய சித்த ரூபமான சாதந துவயத்தையும் 'தவநெறிக்குப் பரமன் பணித்த' என்று நிகமித்து" என்றவர், இந்நூலில் இப்படி அருளிச்செய்வான் என்? என்னில், அங்கே "வீடுமின் முற்றவும்" என்ற திருவாய்மொழியைப் பிரபத்திபரமாகவும், "பத்துடையடியவர்" என்ற திருவாய்மொழியைப் பக்திபரமாகவும் முன்னோர்கள் நிர்வஹித்த கட்டளையைப் பின்பற்றி அருளிச்செய்தார். இங்கே, "வீடுமின் முற்றவும்" என்ற

1. *இதனால் நான்காம் திருப்பதிகத்தின் பொருள் கூறப்படுகிறது. 'பிணக்கறவை' என்றது, "பிணக்கற அறுவகைச் சமயமும்" என்ற திருப்பாசுரத்தில் கூறிய பக்தியோகத்தை என்றபடி. 'சார்வாக' என்றது "சார்வேதவநெறிக்கு' என்ற திருப்பாசுரத்தில் என்றபடி. நிகமித்து - முடித்துக்காட்டி.*
2. *திருவாய். 1. 3: 1* 3. *திருவாய். 10. 4: 1.*
4. *'வீடுமின் முற்றவும் பத்துடையடியவரிலே' என்றது, வீடுமின் முற்றவும், பத்துடையடியவர் என்ற திருப்பதிகங்களிலே என்றபடி. 'சாத்யசித்த ரூபமான சாதந துவயத்தையும்' என்றது, சாத்ய ரூபமான சாதனம், சித்தரூபமான சாதனம் என்றபடி. சாத்யரூபமான சாதனம் - பக்தி. நம்முடைய கர்மத்தாலும் ஞானத்தாலும் சாதித்துக்கொள்ளப் படுவது என்றபடி. சித்தரூபமான சாதனம் - பிரபத்தி. சாதனம் - கருவி; உபாயம். துவயம் - இரண்டு. பக்தி பிரபத்தி ஆகிற இரண்டையும் குறித்தபடி.*

*இங்கு, "வீடுமின்முற்றவும்" என்ற திருப்பாசுரத்திற்கும், "பிணக்கற வறுவகைச் சமயமும்" என்ற திருப்பாசுரத்திற்கும் எழுதியுள்ள ஈடு முப்பத்தாறாயிரப்படி முன்னுரையையும் வியாக்கியானத்தையும் படித்தறிதல் தகும்.*

திருவாய்மொழியையும் பக்திபரமாக்கி அருளிச்செய்த எம்பெருமானார் நிர்வாஹக் கட்டளையைப் பின்பற்றி அருளிச்செய்கிறார். இதுவே அன்றோ எல்லா வியாக்கியானங்களிலும் கூறப்படுவதாய் ஈட்டு வியாக்கியானத்திலும் முதலிலே அருளிச்செய்த பொருளுமாய் இருப்பது. இந்த முறையிலேயே இவர் தாமும் [1] 'முதல் பத்தில் பக்தியை உபதேசிக்கிறார்' என்று அருளிச்செய்ததும்.

ஆகையால் அங்கு [2] முன்னைய பெரியோர்கள் அருளிச்செய்தபடியைப் பின்பற்றி அருளிச்செய்தார்; இங்கு எம்பெருமானார் அருளிச்செய்ததாய்ப் பின்புள்ளார் எல்லாரும் அருளிச்செய்து கொண்டு போந்த மரியாதையைப் பற்ற அருளிச்செய்தார் என்று கொள்ளுமித்தனை.

நன்று; "வணக்குடைத் தவநெறி" என்கிற இதற்குப் பிரபத்திபரமாகவும் ஒரு பொருள் ஈட்டு வியாக்கியானத்திலே தோன்றியிருக்கையாலே "பிணக்கற" என்கிற திருப்பாசுரத்திலே பக்தி பிரபத்திகள் இரண்டனையும் கூட்டிக்கொண்டு, "சார்வே தவநெறி" என்ற திருவாய்மொழியிலே "சார்வே தவநெறிக்குத் தாமோதரன் தாள்கள்" என்றதனால் பக்திநெறியையும், "பண்டே பரமன் பணித்த பணிவகையே, கண்டேன் கமலமலர்ப்பாதம்" என்றதனால் பிரபத்தி நெறியையும் ஆகிய இரண்டனையும் நிகமிக்கிறார் என்று கொண்டாலோ? என்னில், அதற்கும் பொருந்தாமை சிறுது உண்டு. "பிணக்கற" என்ற திருப்பாசுரத்திலே பிரபத்தி பரமான பொருள் கூறியதுண்டேனும் அப்பொருள் விகல்பமே ஒழியச் சேர்த்துச் சொன்னது இல்லாமையாலே.

ஆகையாலே, எல்லா வியாக்கியானங்களுக்கும் சேர, "பிணக்கற" என்ற திருப்பாசுரத்தில் உபதேசித்த பக்தியை நிகமிக்கிறார் என்ன அமையும்.

ஆனால், பக்தி உபதேசத் தொடக்கம் "வீடுமின் முற்றவும்" என்ற திருவாய்மொழியிலேயாயிருக்க "பிணக்கற" என்ற திருப்பா

---

1. *'முதல் பத்தில் பக்தியை உபதேசிக்கிறார் என்று அருளிச்செய்ததும்' என்றது, இந்நூலில் 219-ஆம் சூத்திரத்தில் அருளிச்செய்ததனை.*

2. *'முன்னைய பெரியோர்கள்' என்றது, முதலியாண்டான், ஸ்ரீ ஆளவந்தார் முதலாயினாரை. 'பின்புள்ளார்' என்றது, திருக்குருகைப்பிரான்பிள்ளான், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை முதலாயினாரை.*



சுரத்தில் என்பான் என்? என்னில், [1] "வீடுமின் என்று தியாஜ்ய உபாதேய தோஷகுண பரித்யாக சமர்ப்பண கிரமத்தைச் சாலம்பந மந்த்ரமாக உபதேசித்து" என்று அத்திருவாய்மொழியையும் இதற்கு உறுப்பாக ஒருங்கவிட்டுக்கொண்டு வந்து "அவன் உரைத்த மார்க்கத்தே நின்று, இருபசை மலமற உணர்வு கொண்டு நலம் செய்வது" என்று தாம் முன்பு அருளிச்செய்த முறையைப் பிடித்து, 'முதல்பத்தில் தொடங்கின பக்தியோகத்தை' என்கிறார் என்றபடி. "பிணக்கற என்று தொடங்கி வேதப்புனித இறுதி சொன்ன" என்றே அன்றோ [2] மேலும் அருளிச்செய்தது. ஆக, இப்படி முதல்பத்தில் தொடங்கின பக்தியை முடித்துக்கொண்டு,

எண்பெருக்கில் எண்ணும் திருநாமத்தின் சப்தார்த்தங்களைச் சுருக்கி - எண்பெருக்கில் - [3] "எண்பெருக்கு அந்நலத்து, ஒண்பொருள் ஈறில, வண்புகழ் நாரணன்" என்று முதல்பத்திலே பஜனம் செய்வதற்குப் பற்றுக்கோடாகச் சொல்லப்பட்டதாய், எண்ணும் திருநாமத்தின் சப்த அர்த்தங்களைச் சுருக்கி - [4] "எண்ணும் திருநாமம்" என்று பஜனம் செய்யுமிடத்தில் சொல்லப்படும் திருநாமமான திருமந்திரத்தினுடைய சொல்லையும் பொருளையும் "**நாரணம்**" என்றும், [5] "**நாரணன் எம்மான்**" என்பது முதலானவைகளாலும் எளிதில் உணரும்படி சுருங்க உபதேசித்தும், மாதவன் என்று துவயம் ஆக்கி - [6] துவயத்தில் முன்வாக்கியத்திலும் பின்வாக்கியத்திலும் உள்ள "ஸ்ரீமத்" என்ற பதங்களின் பொருள்களைத் திருவுள்ளம்பற்றிக்

---

1. *'வீடுமின்' என்று தொடங்கும் இவ்வாக்கியம் 219-ஆம் சூத்திரத்தில் உள்ளது ஆகையாலே, இதற்கு விளக்கத்தை அச்சூத்திர வியாக்கியானத்தில் கண்டுகொள்க.* P. 528.

2. *'மேலும் அருளிச்செய்தது' என்றது 224-ஆம் சூத்திரத்தில்.*

3. *திருவாய். 1. 2: 10.*  4. *திருவாய். 10. 5: 1.*

5. *திருவாய். 10. 5: 2. 'நாரணன்' என்பது சொல்லின் சுருக்கம். 'எம்மான்' என்பது முதலாயின பொருளின் சுருக்கம்.*

6. *ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே*
*ஸ்ரீமதே நாராயணாய நம:*

*என்பது துவயம். இது இரண்டு வாக்கியமாக இருப்பதனால் துவயம் என்று பெயர் பெற்றது.*

கொண்டு [1] "மாதவன் என்று என்று ஓதவல்லீரேல்" என்று மேலே கூறிய நாராயணன் என்ற பெயரோடே 'மாதவன்' என்ற இதனை இரண்டு முறை சேர்த்துச் சொல்லவல்லீர்கோளாகில் என்கையாலே அந்தத் திருமந்திரத்தை [2] அதனைத் தெளிவாகச் சொல்லக்கூடிய தான துவயம் என்னும் மந்திர வடிவமாக வெளியிட்டு,

[3] கரணத் திரயப் பிரயோகவிருத்தி சம்சாரிகளுக்குக் கையோலை செய்து கொடுத்து - சர்வேச்வரன் தம்மைக் கொண்டு போவதற்கு விரைகின்றபடியாலும் கேட்கிறவர்களுடைய அறிவிற்கு விஷயமாம் படியாகவும் சுருங்கக் கொண்டு, [4] "தாள்வாய் மலர் இட்டு, நாள்வாய் நாடீர்" என்றும், [5] "பாடீர் அவன் நாமம்" என்றும், [6] சுனைநன் மலர் இட்டு, நினைமின் நெடியானே" என்றும் இப்படி முக்கரணங்களாலும் செய்யப்படும் பகவானை அடைதலாகிற செயலை, பரந்த சடங்குகளைச் சுருங்க அநுஷ்டிக்கத்தக்க பொருள்களைக் காண்பிக்கின்ற பிரயோகவிருத்தியாக்கிக் கையோலை செய்து கொடுக்குமாறு போலே இவ்வுலக மக்கட்குக் காட்டி,

---

1. திருவாய். 10. 5: 7. 'மாதவன்' என்பதும், 'ஸ்ரீமத்' என்பதும் ஒரு பொருளன.

2. திருமந்திரத்தில் 'ஓம்' என்னும் பிரணவத்தின் பொருளை விரிப்பது 'நம:' பதமும், 'நாராயண' பதமும். இவற்றின் பொருளைத் தெளிவுற விரிப்பது துவயம் என்னும் மந்திரமாதலின் 'அதனைத் தெளிவாகச் சொல்லக்கூடியதான' என்கிறார்.

3. கரணத்திரய பிரயோக விருத்தி - மனம் வாக்குக் காயம் என்னும் முக்கரணங்களைக் கொண்டு செய்யப்படுகின்ற செயல்.

4. திருவாய். 10. 5: 4. இதனால் சரீரத்தால் செய்யப்படும் செயலை விதித்தார்.

5. திருவாய். 10. 5: 5. இதனால் நாவால் செய்யப்படும் செயலை விதித்தார்.

6. திருவாய். 10. 5: 10. இதனால் மனத்தின் தொழில் விதிக்கப்பட்டது.

ஆக, 'எண்பெருக்கில்' என்றது முதல் 'கையோலை செய்து கொடுத்து' என்பது முடிய "கண்ணன் கழலிணை நண்ணு மனமுடையீர்" என்ற ஐந்தாம் திருப்பதிகத்தின் பொருள் விளக்கப்பட்டது.



[1] செஞ்சொற் கவிகளுக்குக் கள்ளவழி காவல் இட்டு - [2] "செஞ்சொற் கவிகாள் உயிர்காத்து ஆட்செய்மின்" என்று, அவனுக்கு அடிமை செய்வீர்! அவனுடைய சீலம் முதலான குணங்களிலே அகப்பட்டு அழுந்திப்போகாமல், உங்கள் உயிரை நோக்கிக்கொண்டு அடிமை செய்யப் பாருங்கோள் என்று உபதேசிக்கையாலே, அநுபவ கைங்கர்யங்களோடே நடக்கிற ஒரு குடிப்பிறந்தவர்களுக்கு, 'அரண் அழியாமல் கள்ளவழி காவல் இடுவாரை'ப் போலே, சீல குணமாகிற ஆழங்காலில் இழியாதே கொள்ளுங்கோள் என்று, வஞ்சக் கள்வன் உள் கலந்து அழிக்கும் வழிக்குக் காவல் இட்டு,

[3] மனம் திருத்தி, வீடு திருத்தப் போய் நாடு திருந்தினவாறே, வந்து, விண்ணுலகம் தர விரைந்து, அத்தை மறந்து, குடி கொண்டு, தாம் புறப்பட்ட ஆக்கையிலே புக்கு, தான நகர்களை அதிலே வகுத்து, குரவை துவரைகளில் வடிவுகொண்ட சபலனுக்குத் தேஹ தோஷம் அறிவித்து - மனம் திருத்தி - [4] "தன்பால் மனம் வைக்கத் திருத்தி" என்கிறபடியே, [5] "வளவேழ் உலகின்" என்ற திருவாய் மொழியிலே 'தாழ்ந்தவர்' என்று அகன்ற தம்மைத் தன் சீல குணத்தைக் காட்டி மனத்தினைத் திருத்திச் சேர்த்துக்கொண்டு, வீடு

---

1. 'செஞ்சொற் கவிகளுக்கு' என்றது முதல் 'தேஹதோஷம் அறிவித்து' என்றது முடிய, "செஞ்சொற் கவிகாள்" என்ற ஏழாந் திருப்பதிகத்தின் பொருள் பேசப்படுகிறது. அநுபவ கைங்கர்யங்களிலே தமக்குத் தோள் தீண்டிகளாகவிருப்பவர்களைச் "செஞ்சொற் கவிகாள்' என்று அழைக்கிறார். கள்ளவழி - வஞ்சக் கள்வன் வந்து உள் கலந்து அழிக்கும் வழி. வஞ்சக்கள்வன் - இறைவன்.

2. திருவாய். 10. 7: 1.

3. மனம் திருத்தி, வீடு திருத்தப்போய் நாடு திருந்தினவாறே வந்து, விரைந்து, மறந்து, குடிகொண்டு புக்கு, வகுத்து, சபலன் ஆனவனுக்கு என எச்சங்களை முடிக்க. மேற்கூறியனவெல்லாம் இறைவன் செயல்கள். அங்ஙனம் சபலனான இறைவனுக்குத் தேஹ தோஷம் அறிவித்து என முடிக்க. அறிவித்தல் ஆழ்வாருடைய செயல். குடிகொண்டு - தன்னுடைய பரிவாரங்களையும் கூடக்கொண்டு; தன்னுடைய பரிவாரங்களோடு என்றபடி. 'தாம்' என்றது, ஆழ்வாரை. 'புறப்பட்ட ஆக்கை' - விரைவுபற்றி நிகழ்காலம் இறந்தகாலம் ஆயிற்று; காலமயக்கம். சபலன் - மனத்தை அடக்கும் ஆற்றல் இல்லாதவன்.

4. திருவாய். 1. 5: 10. 5. திருவாய். 1. 5: 1.

திருத்தப் போய் - 'இன்னமும் இவர் இங்கே இருக்கில் தம்மைத் தாழ்ந்தவராக நினைத்து அகலுவர், அகல ஒண்ணாத பரமபதத்தே கொண்டுபோக வேண்டும்' என்று, [1] "வீடு திருத்துவான்" என்கிற படியே பரமபதத்தைக் கோடிப்பதாகப் போய் அது செய்து மீண்டு வருவதற்கு முன்னே, நாடு திருந்தினவாறே - [2] "ஊரும் நாடும் உலக மும் தன்னைப் போல் அவனுடைய பேரும் தார்களுமே பிதற்ற" என்கிறபடியே தம் உபதேசத்தாலே உலகம் எங்கும் திருந்தி, தான் இங்கே தம்மை வைத்துக்கொள்ள நினைத்த காரியமும் தலைக்கட்டின வாறே, வந்து விண்ணுலகம் தர விரைந்து - [3] "வந்து இன்று விண் ணுலகம் தருவானாய் விரைகின்றான்" என்கிறபடியே மீளவந்து பரம பதத்து ஏறக் கொடு போகையிலே விரைந்து, அத்தை மறந்து - சரம (முடிவான) சரீரமாகையாலே தம்முடைய திருமேனியில் அவனுக்கு உண்டான காதலாலே கொடுபோக நினைத்ததனையும் அவன் மறந்து, குடிகொண்டு, தாம் புறப்பட்ட ஆக்கையிலே புக்கு - [4] "கோவிந்தன் குடி கொண்டான்" என்கிறபடியே பரிவாரங்களோடு கூடியவனாய்க் கொண்டு [5] "என் மாய ஆக்கை இதனுள் புக்கு" என்கிறபடியே 'விடத்தக்கது' என்று குந்தி அடியிட்டுத் தாம் சரக்குக்கட்டிப் புறப்பட்டு நிற்கிற இச்சரீரத்தினுள்ளே தான் புகுந்து,

தானநகர்களை அதிலே வகுத்து - [6] "திருமாலிருஞ்சோலைமலையே" என்கிற திருப்பாசுரத்தின்படியே [7] "தான நகர்கள்" என்று தனக்கு வசிக்கும் இடங்களான திவ்விய நகரங்களில் செய்யும் விருப்பத்தை எல்லாம் இவருடைய திருமேனியின் ஒவ்வோர் உறுப்புக்களில் வைத்து எல்லாம் இதற்குள்ளேயாக வகுத்து, குரவை துவரைகளில் வடிவு கொண்ட சபலனுக்கு - [8] "ஒவ்வொரு பெண்ணிற்கு நடுவே கண்ணன், ஒவ்வொரு கண்ணனுக்கும் நடுவில் ஒவ்வொரு பெண்" என்கிறபடியே திருக்குரவையிலே பெண்களோடே பல பல திருமேனி

1. திருவாய். 1. 5: 10.
2. திருவாய். 6. 7: 2.
3. திருவாய். 10. 6: 3.
4. திருவாய். 10. 6: 7.
5. திருவாய். 10. 7: 3.
6. திருவாய். 10. 7: 8.
7. திருவாய். 8. 6: 8.
8. "அங்கநா மங்கநா மந்தரே மாதவோ மாதவம் மாதவம் சாந்தரேணாங்கநா"
என்பது, சர்ணம்ருதம்.



களைக்கொண்டு அநுபவித்தாற்போலவும், [1] "ஓ முனிவரே! கிருஷ்ணன் ஒரே காலத்தில் வெவ்வேறு வீடுகளில் இருந்துகொண்டு சாஸ்திரங்களில் கூறிய தருமத்தின்படி அவர்களைத் திருமணம் செய்துகொண்டார்" என்றும், [2] "இரவில் அவர்கள் வீடுகளில் கண் ணன் பல சரீரங்களை எடுத்துக்கொண்டு வசித்தார்" என்றும்சொல் லுகிறபடியே ஸ்ரீமத்துவாரகையில் தேவிமாருடனே பதினாறாயிரம் திருமேனி கொண்டு அநுபவித்தாற்போலவும், பல திருமேனிகளைக் கொண்டு தம்முடைய அவயவங்கள்தோறும் அநுபவிக்கும்படி தம் திருமேனியிலே மிக்க காதல் கொண்ட இறைவனுக்கு, தேஹதோஷம் அறிவித்து - [3] "பொங்கைம்புலனும் பொறியைந்தும் கருமேந்திரியம் ஐம்பூதம் இங்கு இவ்வுயிர் ஏய்பிரகிருதி மான் ஆங்கார மனங்களான உன் மாமாயை மங்க ஒட்டு" என்று தம்முடைய திருமேனியின் குற்றத்தை அறிவித்து, இதனை விடுவிக்க வேண்டும் என்று அவனைக் கால் கட்டி,

[4] மாயையை மடித்து வானே தரக் கருதிக் கருத்தின்கண் பெரியனானவனை - மாயையை மடித்து - அவனும் இதனை விடுவிப்ப தாக உடன்பட, இவரும் விரும்பினவராய் [5] "மடித்தேன் மனை வாழ்க்கையுள் நிற்பதோர் மாயையை" என்கிறபடியே இவ்வுலக வாழ்க்கையிலே நிற்கைக்கு அடியான மாயை உண்டு மூலப்பிரகிருதி; அதனைத் திரிய விடுவித்தேன் என்று செருக்கி, வானே தரக் கருதி -

1. *ஏகஸ்மிந்நேவ கோவிந்த: காலேதாஸாம் மஹாமுநே ஜக்ராஹ விதிவத் பாணீந் ப்ருதக்கேஹேஷு தர்மத:*
என்பது, ஸ்ரீவிஷ்ணுபு. 5. 31: 17.
2. *"உவாஸ விப்ரஸர்வாஸம் விச்வரூபதரோஹரி:"*
என்பது, ஸ்ரீவிஷ்ணுபு. 3. 31: 20.
3. திருவாய். 10. 8: 10.
4. *'மாயையை மடித்து' என்றது முதல் 'மடியைப் பிடிக்க' என்றது முடிய, "திருமாலிருஞ் சோலைமலை" என்ற எட்டாம் திருப்பதிகத்தின் பொருள் விளக்கப்படுகின்றது. மடித்து, சொல்லென்று மடியைப் பிடிக்க என்று முடிக்க. 'தேஹ தோஷம் அறிவித்து, மடித்து, மடியைப் பிடிக்க' என்று கூட்டுக. மடித்தல் - ஆழ்வார் வினை. இனி, 'மடித்து' என்பதனை இறைவன் வினையாக்கலும் ஒன்று. அப்பொழுது மடித்துத் தரக்கருதிப் பெரியன் ஆனவன் என்க. அஹேதுகம்-காரணம் இல்லாமல். அநாதி அநாதர ஹேது - இதற்கு முன்னர் எல்லாம் என்னை ஆதரிக்காத தற்குக் காரணம்.*
5. திருவாய். 10. 8: 3.

[1] "வானே தருவான் எனக்காய்" என்கிறபடியே தமக்குப் பரமபதத்தைத் தருவானாக ஒருப்பட்டு, கருத்தின்கண் பெரியனானவனை - [2] "கருத்தின் கண் பெரியன்" என்கிறபடியே லீலாவிபூதி, நித்திய விபூதி என்னும் இரண்டு உலகங்கள் காரணமாக வருகின்ற மற்றைய எண்ணங்கள் எல்லாம் தீர்ந்து, தம்மை அவ்வருகே கொடுபோகையிலும் [3] ஆதிவாஹிகரை நியமிக்கையிலும் தான் முற்பாடனாய்க் கொண்டு பெருக்க எண்ணுகின்றவனை; அன்றிக்கே, "மாயையை மடித்து" என்பதனை [4] மேலதனோடு சேர்த்து "மனை வாழ்க்கையுள் நிற்பதோர் மாயையை மடித்தேன்" என்று தாம் பேசும்படி இந்தச் சரீர சம்பந்தத்தை அறுத்து, "வானே தருவான்" என்கிறபடியே தமக்குப் பரமபதத்தைத் தருவானாக எண்ணிய "கருத்தின்கட் பெரியன்" என்று தம்மால் எண்ணி முடிக்க ஒண்ணாதபடி தம் காரியத்தில் விரைகின்றவனை என்று கூறலுமாம். ஆக, இப்படித் தாம் சொன்னபடி செய்யக் கடவனாய், தம்மைக் கொண்டுபோகையிலே மிகவும் பாரிக்கின்றவனை என்றபடி.

இன்று அஹேதுகமாக ஆதரித்த நீ அநாதி அநாதர ஹேது சொல் என்று மடியைப் பிடிக்க - [5] "இன்று என்னைப் பொருள் ஆக்கி" என்று தொடங்கி, இன்று இப்படிக் காரணம் இல்லாமலே அடியேனை அடிமை கொண்ட நீ இத்துணைக் காலம் என்னை அடிமை கொள்ளாதிருந்ததற்குக் காரணத்தை அருளிச்செய்ய வேண்டும் என்று மடியைப் பிடித்துக் கேட்க,

இதற்குச் சொல்லலாம் விடை என்? என்று இறைவன் தனக்குள்ளே ஆராய்ந்து நிரூபித்துப் பார்த்தும் தக்க விடை ஒன்றும் கூற முடியாதவனாய், அவன் நின்றமையை விரித்தருளிச்செய்கிறார் "இந்த்ரிய கிங்கரராய்" என்றது முதல், "நிருத்தரம் என்று கவிழ்ந்து நிற்க" என்றது முடிய. சர்வேச்வரன் தனக்குள்ளே ஆராய்ந்த முறைதான் இருக்கும்படி:—

---

1. *திருவாய்.* 10. 8: 5. 2. *திருவாய்.* 10. 8: 8.

3. *ஆதிவாஹிகர் - இவ்வுடலை விட்டுப் பரமபதத்திற்குச் செல்லும் ஆன்மாவினை அழைத்துக்கொண்டு செல்லுமவர்கள்.*

4. *'மேலதனோடு' என்றது, மேல் வருகின்றதனோடு என்றபடி. அதாவது, மடித்து, கருதி, பெரியன் ஆனவன் என்று யாற்றொழுக்காகப் பொருள் கோடலைக் குறித்தபடி.*

5. *திருவாய்.* 10. 8: 9.



[1] இந்த்ரிய கிங்கரராய்க் குழி தூர்த்துச் சுவைத்து அகன்றீர் என்னில் - [2] "நீங்கள் இந்திரியங்களுக்கு வேலை செய்கின்றவர்கள்" என்கிறபடியே தொன்று தொட்டு இந்திரியங்களுக்கு வசப்பட்டவராய், [3] "தூராக்குழி தூர்த்து எனைநாள் அகன்றிருப்பன்" என்றும், [4] "அற்ப சாரங்கள் அவை சுவைத்து அகன்றொழிந்தேன்" என்றும் சொல்லுகிறபடியே 'தூர்க்க முடியாத இந்திரியங்களுக்கு இரை இட்டு எத்தனை காலம் உன்னை அகன்று இருக்கக் கடவேன்; அல்ப ரசங்களாய்ப் பலவிதமாய் இருக்கிற ஐம்புல இன்பங்களைப் பசை உண்டாக மயங்கி எதிர்ப்பசை கொடுத்துப் புசித்துச் சர்வசக்தியான உனக்கும் எட்டாதபடி இவ்வுலக வாழ்விலே கைகழியப் போனேன் என்று நீர் தாமே பேசும்படியான ஐம்புல இன்பங்களின் ஆசை அன்றோ நீர் தொன்று தொட்டு இவ்வுலக வாழ்விலே உழன்று திரிவதற்குக் காரணம்' என்னில், [5] "அவை யாவரையும் அகற்ற நீ வைத்தவை என்பர் - [6] "ஓர் ஐவர் யாவரையும் மயக்க நீ வைத்த" என்றும், [7] "அகற்ற நீ வைத்த மாய வல் ஐம்புலன்கள்" என்றும் சொல்லுகிறபடியே பொருள்களும் அவற்றில் ஆசைக்குக் காரணமான இந்திரியங்களும், எத்துணையேனும் அளவுடையாரேயாகிலும் கலங்கச்செய்து, வேண்டாதாரை அகற்றுதற்கு நீ வைத்தவை அன்றோ என்பர்.

அது தேஹயோகத்தாலே என்னில், அந்நாள் நீ தந்த சுமடு என்பர் - அந்த இந்திரியங்களுக்கு வசப்பட்டிருத்தற்குக் காரணம், மூன்று குணங்களோடு கூடின சரீர சம்பந்தம் அன்றோ என்னில், [8] "அந்நாள் நீ தந்த ஆக்கை" என்றும், [9] "அது நிற்கச் சுமடு தந்தாய்" என்றும் சொல்லுகிறபடியே அதுவும் நீ தந்ததன்றோ என்பர்.

முன் செய்த முழுவினையாலே என்னில், அது துயரமே உற்ற இருவினை உன் கோவமும் அருளும் என்பர் - அந்தச் சரீர சம்பந்தத்

---

1. *இது, இறைவன் தானே தனக்குள்ளேயே கேட்டுக்கொள்ளும் வினா.*

2. *"யூயம் இந்த்ரிய கிங்கரா:" என்பது, வில்லிபுத்தூர்பகவர் வார்த்தை.*

3. *திருவாய்.* 5. 8: 6. 4. *திருவாய்.* 3. 2: 6.

5. *இது, மேலே கூறிய வினாவிற்கு, ஆழ்வார் இங்ஙனம் விடை கூறுவர் என்பதாக இறைவன் தானே தனக்குள் கூறிக்கொள்ளும் விடை. மேலே வரும் வினாவிடைகளையும் இங்ஙனமே கொள்க.*

6. *திருவாய்.* 7. 1: 8. 7. *திருவாய்.* 5. 7: 8.

8. *திருவாய்.* 3. 2: 1. 9. *திருவாய்.* 7. 1: 10.

துக்குக் காரணம், [1] "முன் செய்த முழுவினை" என்று நீர் சொன்ன, தொன்றுதொட்டு ஈட்டப்பெற்ற நல்வினை தீவினைகள் அன்றோ என்று சொல்லுவோமாகில், [2] "துயரமே தரு துன்ப இன்ப வினைகளாய்" என்றும், [3] "உற்ற இருவினையாய்" என்றும் சொல்லுகிறபடியே அறிவில்லாதவைகளாய் ஆற்றல் இல்லாதவைகளாய் அழிந்துபோமவையாய் இருந்துள்ள நல்வினை தீவினைகளான கர்மங்கள், உன்னுடைய சீற்ற வடிவமாகவும் அருள் வடிவமாகவும் பலிக்குமவை ஆகையாலே கருமங்களும் நீ இட்ட வழக்கு என்பர்.

ஈவிலாத மதியிலேன் என்னும் உம்மதன்றோ [4] கர்த்ருத்வ போக்த்ருத்வங்கள் என்னில், ஆங்காரமாய்ப் புக்குச் செய்கைப்பயன் உண்பேனும் கருமமும் கருமபலனுமாகிய நீ கர்த்தா போக்தா என்பர் - [5] "ஈவிலாத தீவினைகள் எத்தனை செய்தனன்கொல்" என்று முடிவில்லாமல் இருக்கிற கொடிய பாவங்களிலே எத்தனை செய்தேன் என்றும், [6] "மதியிலேன் வல்வினையே மாளாதோ" என்று நான் செய்த பாவமேயோ அநுபவித்தாலும் மாளாதது என்றும் நீரே சொல்லுகையாலே நல்வினை தீவினைகளைச் செய்தலும் அவற்றின் பயனை அநுபவித்தலும் உம்மதன்றோ என்று சொல்லுவோமாயின், [7] "தான் ஆங்காரமாய்ப் புக்குத் தானே தானே ஆனான்" என்று தானே அபிமானியாய்ப் புக்கு ஆன்மாவிலும் ஆன்மாவோடு சம்பந்தப்பட்ட பொருள்களிலும் எனக்கு உண்டான அபிமானத்தைத் தவிர்த்துத் தானே அபிமானியானான் என்றும், நம்முடைய படியை அநுகரித்துச் சொல்லுகிற "கடல் ஞாலம் செய்தேனும்" என்ற திருவாய்மொழியில் [8] "செய்கைப் பயன் உண்பேனும் யானே" என்று எல்லாக் கருமங்களினுடைய பலன்களை உண்பேனும் யானே என்றும், [9] "கருமமும் கருமபலனுமாகிய" என்று நல்வினை தீவினைகளான கருமங்கட்கும் அவற்றின் பலன்கட்கும் தலைவனாய் என்றும் சொன்னவராகையாலே, கருமங்களைச் செய்கின்றவனும் அவற்றின் பலன்களை உண்பவனும் நீ இட்ட வழக்கு ஆகையாலே, கருமங்களைச் செய்கின்றவனும் அவற்றின் பலன்களை உண்பவனும் நீயே என்பர். "கருமமும் கரும பலனுமாகிய" என்கிற இதனால், கருமங்களைச்

1. திருவாய். 1. 4: 2. 2. திருவாய். 3. 6: 8.
3. திருவாய். 10. 10: 8.
4. கர்த்ருத்வம் - கருத்தாவாக இருக்கும் தன்மை. போக்த்ருத்வம் - அநுபவிக்கின்றவனாக இருக்கும் தன்மை.
5. திருவாய். 4. 7: 3. 6. திருவாய். 1. 4: 3.
7. திருவாய். 10. 7: 11. 8. திருவாய். 5. 6: 4.
9. திருவாய். 3. 5: 10.



செய்தலும் அவற்றின் பலன்களை அநுபவித்தலும் அவன் அதீநம் என்பது சொல்லப்பட்டதாகையாலே ஆயிற்று, இவ்விடத்திலே இவர் இத்திருப்பாசுரப் பகுதியை எடுத்தது.

யானே எஞ்ஞான்றும் என்றதாலே என்னில், அயர்ப்பாய்ச் சமய மதி கொடுத்து உள்ளம் பேதம் செய்கை உன் தொழில் என்பர் - [1] "யானே என்னை அறியகிலாதே, யானே என் தனதே என்றிருந்தேன்" என்றும், [2] "எஞ்ஞான்றும் நாம்" என்று தொடங்கி "மெய்ஞ்ஞானமின்றி வினையியல் பிறப்பழுந்தி" என்றும் நீர் சொன்ன அஞ்ஞானம் [3] அந்யதாஞானம் முதலியவைகளாலே காணும் உமக்கு மேற்கூறிய அந்த இரண்டு தன்மைகளும் உண்டாயின என்று சொன்னோமாகில், [4] "அயர்ப்பாய்த் தேற்றமுமாய்" என்றும், [5] "மாட்டாத பல சமயமதி கொடுத்தாய்" என்றும், [6] "உள்ளம் பேதம் செய்திட்டு உயிர் உண்ட உபாயங்களும்" என்றும் சொல்லுகிறபடியே ஞானமும் அஞ்ஞானமும் நீ இட்ட வழக்கு ஆகையாலே அஞ்ஞான அந்யதாஞானங்கள் முதலியன விளைக்கையும் உன் தொழில் என்பர்.

[7] ஜீவபிரகிருதி சைதந்யம் நீங்கும் விரதஹேது என்னும் சர்வஜ்ஞ

1. திருவாய். 2. 9: 9. 2. திருவாய். 3. 2: 7.
3. அந்யதாஞானம் - திருமாலுக்கே அடிமையான இவ்வுயிரை **வேறு** தெய்வங்களுக்கும் அடிமை என்று நினைக்கும் அறிவு.
4. திருவாய். 7. 8: 6. 5. திருவாய். 3. 1: 4.
6. திருவாய். 5. 10: 4.
7. மேலே கூறியவாறன்றி வேறு சில விஷயங்களையும் இறைவன் தானே தன் திருவுள்ளத்தில் நினைக்கலானான். அவ்வாறு நினைத்த விஷயங்களை அருளிச்செய்கிறார் 'ஜீவபிரகிருதி' என்றது முதல் 'ஸர்வஜ்ஞர் இவர்' என்றது முடிய. இதனால், ஆழ்வார் பல உண்மைகளையும் உள்ளவாறே அறிந்த மெய்ஞ்ஞானக்கனி ஆவர். ஆதலால், ஏதோ சில சமாதானங்களைச் சொல்லி, இவரை வஞ்சிக்க முடியாது என்று நினைத்தான் என்பதனைத் தெரிவித்தபடி.

இந்த வாக்கியத்தின் ஈற்றிலே உள்ள 'சர்வஜ்ஞர்' என்னும் சொல்லை 'ஜீவபிரகிருதிசைதந்யம் நீங்கும் விரதஹேது' என்பது முதலானவற்றோடும் தனித்தனியே கூட்டுக. சர்வஜ்ஞர் - முற்றும் உணர்ந்த முனிவர்.

ஜீவப்பிரகிருதி-விரதஹேது-அசித்து என்றும், ஜீவன் என்றும் கூறப்படுகின்ற இரண்டும் இறைவனுக்குச் சரீரங்கள். இவற்றுள் ஜீவனாகிற சரீரத்தில் கிடக்கின்ற அறிவானது, "யாதானும் பற்றி நீங்கும் விரதம்" என்கிறபடியே இவ்வுலகப்பொருள்களுள் யாதாயினும் ஒன்றனைப் பற்றிக்கொண்டு இறைவனாகிய நம்மை விட்டு நீங்குவதற்குக் காரணமாக இருக்குமே யன்றி, நம்மைப்பற்றி உய்வதற்கு உறுப்பாகாதது என்ற உண்மையை அறிந்தவர் இவர் என்பது இவ்வாக்கியத்தின் கருத்து.

ஞர் இவர் - [1] "யாதானும் ஓர் ஆக்கையில் புக்கு அங்கு ஆப்புண்டும் ஆப்பு அவிழ்ந்தும், மூதாவியில் தடுமாறும் உயிர் முன்னமே" என்கிறபடியே சூக்கும சரீரத்தையுடையதாய்க்கொண்டு தனது நல்வினை தீவினைகட்குத் தகுதியாகப் பலவிதமான சரீரங்களிலே ஒன்று விட்டு ஒன்றைப்பற்றித் தடுமாறித் திரியும் உயிருக்கு, உடல் வடிவாகவும் ஐம்பொறிகள் வடிவமாகவும் நுகரப்படும் பொருளாக இருக்கின்ற சரீரத்தைப் பற்றிக் கிடக்கிற அறிவானது, [2] "யாதானும் பற்றி நீங்கும் விரதம்" என்கிறபடியே இவ்வுலகப் பொருள்களுள் யாதேனும் ஒன்றனைப் பற்றிக்கொண்டு நம்மை விட்டு நீங்கும் விரதத்திற்குக் காரணமாக இருப்பது ஒன்று என்று நன்கு அறிந்தவர் இவர்.

[3] அகமேனியில் அழுக்கு அறுக்கை அபிமானி கிருத்யம் என்னும் சர்வஜ்ஞர் இவர் - [4] "அகமேனி ஒழியாமே" என்கிறபடியே நமக்கு அந்தரங்க சரீரமான இவ்வான்மாவினைப் பற்றிக் கிடக்கிற சரீர சம்பந்தத்தாலாய குற்றத்தைப் போக்குதல் இவ்வான்மாவிடத்தில் அபிமானத்தையுடைய இறைவனாகிய நம்முடைய செயல் என்று நன்கு அறிந்தவர் இவர்.

இனி, ஜீவப்பிரகிருதி சைதந்யம் நீங்கும் விரதஹேது, அகமேனியில் அழுக்கு அறுக்கை அபிமாநி கிருத்யம் என்பதற்கு, [5] "என்னுடைய உயிர்களின் உருவமான சரீரமானது சிறந்தது என்று அறிந்துகொள்" என்கிறபடியே ஜீவனாகிற சரீரத்தில் கிடக்கிற அறிவு, "யாதானும் பற்றி நீங்கும் விரதம்" என்கிறபடியே உலகப் பொருள்களுள் யாதேனும் ஒன்றனைப் பற்றிக்கொண்டு நம்மை விட்டு அகலும் விரதத்திற்குக் காரணம்; அசித்து நமக்குச் சரீரமாக இருக்கச்செய்தே அப்படி அன்றிக்கே "அகமேனி" என்கிறபடியே நமக்கு அந்தரங்க சரீரமாக இருக்கிற இவ்வான்மாவில் கிடக்கிற சரீர சம்பந்தமான குற்றத்தைப் போக்குகை இதனிடத்தில் அபி

1. *திருவிருத்தம், 95.* 2. *திருவிருத்தம், 95.*

3. *அகமேனி - ஆன்மா ; இறைவனுக்கு அந்தரங்க சரீரமாக இருப்பது என்பது பொருள். அபிமாநி - அபிமானத்தையுடைய இறைவன். கிருத்யம் - செயல்.*

4. *திருவாய். 9. 7: 10.*

5. *"இதஸ்த்வந்யாம் ப்ரகிருதிம் வித்தி மே பராம், ஜீவபூதாம்" என்பது, ஸ்ரீ கீதை, 7 : 5.*



மானத்தையுடைய நம்முடைய செயலாக இருந்தது என்று நன்கு அறிந்தவர் இவர் என்று பொருள் கூறலுமாம்.

[1] "தான் நல்கும் பந்தம் நிருபாதிகம் என்னும் சர்வஜ்ஞர் இவர் - [2] "நல்கித் தான் காத்து அளிக்கும் பொழிலேழும் வினையேற்கே, நல்கத்தான் ஆகாதோ நாரணனைக் கண்டக்கால்" என்னும்படி நாம் அன்பு முன்னாகக் காப்பதற்கு அடியான நாராயணனாக இருக்கும் தன்மையால் வந்த சம்பந்தம், ஒரு காரணம் பற்றி வந்ததன்று, இயல்பாகவே அமைந்தது என்று நன்கு அறிந்தவர் இவர்.

[3] சௌஹார்த்தம் எஞ்ஞான்றும் நிற்கும் என்னும் சர்வஜ்ஞர் இவர் - [4] "தனி மாப் புகழே எஞ்ஞான்றும் நிற்கும்படியாய்த் தான் தோன்றி" என்கிறபடியே "பெயர் உருவங்களை இழந்து தமம் என்னும் நிலையினை அடைந்துள்ள சமயத்திலே இவற்றை உண்டாக்க நினைத்த ஒப்பற்றதான மகாகுணம் என்கிற சௌகார்த்தம், '**ஒருவன் செய்யும் உபகாரமே இது**' என்று அதனையே நினைக்கின்றவர்களுடைய மனத்திலே காலம் என்னும் ஒரு பொருள் உள்ளவரையிலும் நிற்கும்படியாக" என்கையாலே அந்தச் சம்பந்தம் அடியாக எல்லார்க்கும் நன்மையை விரும்புகைக்கு அடியான சௌகார்த்த குணத்திலும் கண்ணழிவு சொல்லப்போகாது என்று நன்கு அறிந்தவர் இவர்.

[5] பிணக்கிப் பேதியாத ஞானாதி வைகல்யம் இல்லை என்னும் சர்வஜ்ஞர் இவர் - [6] "பிணக்கி யாவையும் யாவரும் பிழையாமல் பேதித்தும் பேதியாததோர், கணக்கில் கீர்த்தி வெள்ளக் கதிர்ஞான மூர்த்தியினாய்" என்னும்படி 'அழியும் சமயத்திலே அறிவுடைப் பொருள்களையும் அறிவில்பொருள்களையும் பெயரினையுடையதாதல் உருவத்தினையுடையதாதல் என்னும் வேறுபாடு இல்லாமலிருக்கும்படி கலசி, படைப்புக் காலத்திலே ஒருவர் செய்த நல்வினை தீவினைகள்

1. *நல்கும் - பாதுகாக்கும். பந்தம் - சம்பந்தம். நிருபாதிகம் - காரணம் இல்லாதது.*

2. *திருவாய். 1. 4: 5.*

3. *சௌஹார்த்தம் - சிநேகம்.*

4. *திருவாய். 8. 10: 7.*

5. *பிணக்கி - கலந்து. பேதியாத - மாறுபடாத. வைகல்யம - வேறுபாடு.*

6. *திருவாய். 6. 2: 8.*

மற்றொருவர்க்குத் தட்டாதபடி பிரித்துப் படைத்தும், தனக்கு ஒரு வேறுபாடு இன்றிக்கே இருக்கும் ஞானம் என்ன, சக்தி என்ன ஆகிய வற்றின் நிறைவினையுடையவன்' என்று பேசினவராகையாலே, நமக்கு ஞான சக்திகளில் குறைவு சொல்ல இடம் இல்லாதபடி நம்முடைய ஞான சக்திகளின் நிறைவினை நன்கு அறிந்துகொண்டவர் இவர்.

[1] ஏகமூர்த்தியில் அல்லல் மாய்த்த யத்ந பலித்வங்கள் நம்மது என்னும் சர்வஜ்ஞர் இவர் - [2] "ஏகமூர்த்தி இருமூர்த்தி மூன்றுமூர்த்தி பலமூர்த்தி, யாகி ஐந்து பூதமாய் இரண்டு சுடர்கள் அருவாகி, நாக மேறி நடுக்கடலுள் துயின்ற நாராயணனே! உன், ஆகமுற்று மகத் தடக்கி ஆவி யல்லல் மாய்த்ததே" என்ற திருப்பாசுரத்திலே 'கார ணங்களோடு காரியங்களோடு வாசிஅற எல்லாப் பொருள்களையும் படைத்து, அப்பொருள்கள் தரித்திருப்பதற்காக அந்தராத்மாவாய், படைக்கப்பட்ட பொருளைக் காப்பாற்றுவதற்காகத் திருப்பாற் கடலிலே யோக நித்திரை செய்து, இப்படி எல்லாக் காலமும் ஒரு படிப்படத் திருவருள் புரிதலையே இயல்பாகவுடையவனுகைக்கு அடியான சம்பந்தத்தையுடையவனுன நீ, உன் திருமேனிக்கு வேண்டும் போகத்திற்கு வேண்டிய கருவிகள் எல்லாம் [3] 'பூசும் சாந்து என் நெஞ்சமே' என்ற திருப்பாசுரத்திற் கூறியபடியே என் பக்கலிலே உண்டாக்கி உன் துக்கம் தீரப்பெற்றவன் ஆனுயே' என்று இவர் பேசினபடியே, இவரைப் பெறுகைக்கு முயற்சி செய்கையும் பெற்றுல் உகக்கும் பயனும் நமக்கே உள்ளது என்று நன்கு அறிந்து கொண்ட வர் இவர்.

நாம் தனிநின்ற ஸ்வதந்த்ரர் என்று அவனே அறிந்தனமே என்னும் சர்வஜ்ஞர் இவர் - [4] "தனிநின்ற சார்விலாமூர்த்தி" என்கிற படியே, இவ்வுலகமெல்லாம் அழிந்த அன்று "சத்" என்னும் சொல் லுக்குரிய பொருளாய் நின்று, [5] 'தேவர்கள் சிவனை அடைகிறுர்கள்; சிவன் பிரமனை அடைகிறுன்; பிரமன் என்னை அடைகிறுன்; நான் ஒருவரையும் அடைவதில்லை' என்கிறபடியே 'உனக்கு வேறுேர் பற் றுக்கொம்பு இல்லாதபடி இருக்கிறவனே!' என்கையாலே நாம் வேண் டிற்றுச் செய்யும் தடை இல்லாத சுவதந்திரத்தையுடையோம் என்று அறுதியிட்டு, [1] 'அவனே அகல்ஞாலம் படைத்து இடந்தான்' என்று தொடங்கி 'அவனே மற்றெல்லாமும் அறிந்தனமே' என் கிறபடியே எல்லாக் காரியங்களிலும் துணை வேண்டாதவனுய் அறி வுடைப்பொருள் அறிவில்பொருள்கள் எல்லாவற்றினுடைய சொரு பம், நிலைபேறு என்னும் இவைகள் தனக்கு உரிமைப்பட்டவைகளாக இருக்குமவன் என்று அறிந்தோம்' என்று சொல்லும்படியான முற் றறிவினையுடையராய் இருப்பார் ஒருவர் இவர்.

நெறிகாட்டி அருகும் சுவடும் போலே இதுவும் நிருத்தரம் என்று கவிழ்ந்து நிற்க - நெறிகாட்டி அருகும் சுவடும் போலே - [2] "நெறி காட்டி நீக்குதியோ" என்ற திருப்பாசுரத்தில் வேறு உபாயங்களைக் காட்டி அகற்றப் பார்க்கிறுயோ? உன்னுடைய மிகச் சிறந்த திரு மேனியை நீயே காட்டி அநுபவிப்பிக்கிறுயோ? தொன்றுதொட்டு அறி வில்லாதவனுய்ப் போருகிற என்னை என் செய்ய நினைத்தாய்? இதனை அருளிச்செய்யவேண்டும் என்றும், [3] "அருகும் சுவடும் தெரிவுண ரோம்" என்ற திருப்பாசுரத்தில் உம்முடைய அருகு வருதல் உம் முடைய சுவடு அறிதல் செய்யாதிருக்க, உம்மளவிலே அன்பானது அற மிக்குவாராநின்றது, இதற்கு அடி அருளிச்செய்யவேண்டும் என்றும் இவர் முன்பு கேட்டவற்றிற்கு விடை கூறுததைப்போன்று, இதுவும் நிருத்தரம் என்று கவிழ்ந்து நிற்க - இப்பொழுது கேட்ட இதற்கும் விடை கூற இயலாது என்று நிலத்தினைக் கீறிக் கவிழ்ந்து நிற்க,

---

1. அல்லல் - துன்பம். மாய்த்த - போக்கிய. யத்நம் - முயற்சி. பலித்வம் - பயன்பெற்ற தன்மை.
2. திருவாய். 4. 3: 3.
3. திருவாய். 4. 3: 2.
4. திருவாய்.
5. ருத்ரம் ஸ்மாச்ரிதாதேவா: ருத்ரோப்ரஹ்மாண மாச்ரித:
ப்ரஹ்மா மமாச்ரிதோ ராஜந் நாஹம் கம்சிதுபாச்ரித:
என்பது, பாரதம்ஆச். 118: 37.



---

1. திருவாய். 9. 3: 2.
2. நெறிகாட்டி நீக்குதியோ? நின்பால் கருமா
முறிமேனி காட்டுதியோ? மேல்நாள் - அறியோமை
என்செய்வான் எண்ணினுய்? கண்ணனே! ஈதுரையாய்;
என்செய்தால் என்படோம் யாம்?

என்பது, பெரிய திருவந்தாதி, 6.

3. அருகும் சுவடும் தெரிவுணரோம்; அன்பே
பெருகும்மிக; இதுஎன்? பேசீர் - பருகலாம்
பண்புடையீர்! பாரளந்தீர்! பாவியேம்கண் காண்பரிய
நுண்புடையீர்! நும்மை நமக்கு.

என்பது, பெரிய திருவந்தாதி, 8.

சுவடு - இனிமை. நிருத்தரம் - விடை இல்லாதது; விடை கூற முடியாதது என்றபடி.

[1] அமந்த்ரஜ்ஞ உத்சவ கோஷம்போலே ஏறப்பெறுகிற எழுச்சியைச் சூசிப்பிக்கிற மேக சமுத்ர பேரீ கீத காஹள சங்கா ஆசீஸ் ஸ்துதி கோலாஹலம் செவிப்பட்டவாறே சாக்ஷாத்கரித்த பரப்பிராப்திக்கு - அமந்த்ரஜ்ஞ உத்சவகோஷம் போலே - திருமணம் முதலிய விசேட காலங்களில் சடங்குகளைச்செய்யும் உபாத்தியாயர் மந்திரம் தோன்றாவிட்டால் கொட்டச்சொல்லி வாத்திய ஒலியால் அதனை மறைத்துவிடுமாறு போலே,

ஏறப்பெறுகிற எழுச்சியைச் சூசிப்பிக்கிற - இறைவனுகிய தான் விடை கூறமாட்டாது நின்றமை தோற்றுதபடி மறைப்பதற்காக, இவனாலே செய்விக்கப்பட்டதாய் [2] "நான் ஏறப்பெறுகின்றேன்" என்று தாம் மேற் சொன்னபடியே பரமபதத்திற்கு ஏறப்பெறுகிற எழுச்சியைக் குறித்துக் காட்டுகின்ற,

மேக சமுத்ர பேரீ - [3] "சூழ்விசும்பு அணிமுகில் தூரியம் முழக்கின, ஆழ்கடல் அலைதிரை கையெடுத்து ஆடின" என்கிறபடியே, அரசகுமாரர்கள் போகும்போது முரசொலி முதலான மங்களவொலிகளைச் செய்வாரைப் போலே, பரமபதத்துக்குப் போமவர்களைக் கண்ட பிரீதியாலே முழங்குவது ஒலிப்பதாகாநிற்கும் மேகமும் சமுத்திரமுமாகிற வாத்தியங்களுடையவும், கீத - [4] "கீதங்கள் பாடினர் கிந்நரர் கருடர்கள்" என்கிற கீதங்களினுடையவும், காஹள சங்க - [5] "காளங்கள் வலம்புரி கலந்து எங்கும் இசைத்தனர்" என்கிற காளங்கள் சங்கங்களினுடையவும், ஆசீ: - [6] "வாள் ஒண்கண் மடந்தையர் வாழ்த்தினர்" என்கிற வாழ்த்தினுடையவும், ஸ்துதி - [7] "தொடர்ந்து எங்கும் தோத்திரம் சொல்லினர்" என்கிற தோத்திரங்களினுடையவும், கோலாஹலம் செவிப்பட்டவாறே - கலந்து எங்கும் எழுகின்ற ஒலியாகிற கோலாஹலம் செவிப்பட்டவாறே,

---

1. 'அமந்த்ரஜ்ஞ' என்று தொடங்கும் இந்த வாக்கியத்தில் "சூழ்விசும் பணிமுகில்" என்ற ஒன்பதாம் திருப்பதிகத்தின் பொருள் பேசப்படுகின்றது. அமந்த்ரஜ்ஞ - மந்திரம் தெரியாதவனுடைய. கோஷம் - ஒலி. எழுச்சி - எழுதல்; புறப்படுதல். சூசிப்பிக்கிற - குறித்துக்காட்டுகிற. பேரீ - முரசம். காஹளம் - எக்காளம்; ஊது கொம்பு. ஆசி - வாழ்த்து. ஸ்துதி - தோத்திரம்.

2. திருவாய். 10. 6: 5.  3. திருவாய். 10. 9: 1.

4. திருவாய். 10. 9: 5.  5. திருவாய். 10. 9: 6.

6. திருவாய். 10. 9: 6.  7. திருவாய். 10. 9: 7.



[1] சாக்ஷாத்கரித்த பரப்பிராப்திக்கு - அர்ச்சிராதி நெறியையும் ஆதிவாஹிகர் செய்யும் உபசாரத்தையும் பரமபதத்தை அடைதலும் அங்குள்ளாருடைய பஹுமானத்தையும் ஆனந்தமயமான திருமாமணி மண்டபத்தில் இருப்பையும் அவனுடைய திருவடித்தாமரைகளை அடைதலையும் பெற்றாராகப் பேசும்படி ஞானக்கண்ணால் அறிந்த பரனை அடைதலுக்கு,

[2] தலைமிசையாய் வந்த தாள்களைப் பூண்டு போகாமல் தடுத்துத் திரு ஆணை இட்டு - தலைமிசையாய் வந்த தாள்களைப் பூண்டு - அப்படிக் கண்டதான பரனை அடைதலானது மனத்தினுடைய அநுபவ மாத்திரமாய்ப் புறத்திலே கண்டு அநுபவிப்பதற்கு உரிமையின்மையாலே அதனைப் பெறுகைக்காக, [3] "தலைமிசையாய் வந்திட்டு இனி நான் போகலொட்டேன்" என்று, [4] "தலைமேல் புனைந்தேன் சரணங்கள்," [5] "தலைமேல தாளிணைகள்" என்கிறபடியே மனத்தினுடைய அநுபவத்தின் தெளிவாலே தம் தலைமேல் ஆகும்படி வந்த திருவடிகளைக் கட்டிக்கொண்டு, போகாமல் தடுத்து - போகாமல் தடுத்து, திரு ஆணை இட்டு - [6] "திருவாணை நின் ஆணை கண்டாய்" என்று அவனுக்கு மறுக்க ஒண்ணாத ஆணை இட்டு,

இப்படி இவர் ஆணை இட்டவாறே, அடியவரான நீர், உம்மை அடிமை கொண்ட நாம் செய்தபடி கண்டிருக்குமத்தனை ஒழிய, நம்மை ஆணை இட்டுத் தடுத்தல் உம்முடைய தன்மைக்கு மாறுபட்டதாகையாலே இது பெரு ஆணைகாணும் என்று எம்பெருமான் கூற,

[7] கூசம் செய்யாது செய்திப் பிழை "நேசம் செய்து உன்னோடு என்னை உயிர் வேறின்றி ஒன்றாகவே கூசம் செய்யாது கொண்டாய்"

---

1. சாக்ஷாத்கரித்தல் - (ஞானக்கண்ணால்) அறிதல். பரப்பிராப்திக்கு - பரம்பொருளை அடைதற்கு.

2. 'தலைமிசையாய்' என்னும் இதிலிருந்து முடிவுவரையில் "முனியே நான்முகனே" என்ற பத்தாம் திருப்பதிகத்தின் பொருள் பேசப்படுகிறது.

3. திருவாய். 10. 10: 1.  4. திருவாய். 10. 4: 4.

5. திருவாய். 10. 6: 6.  6. திருவாய். 10. 10: 2.

7. ஆழ்வார், தாம் கூறிய ஆணை 'பெரு ஆணை அன்று' என்பதனைச் சாதிக்கிறார் 'கூசம் செய்யாது' என்று தொடங்கி. சாதிக்கும் முறையை இத்திருப்பதிகத்தில் 2 முதல் 9 முடிய உள்ள திருப்பாசுரங்களைக்கொண்டு வெளியிடுகிறார். என் தாழ்வினை நோக்கி என்னை நீக்கவேண்டியிருக்க, அங்ஙனம் நீக்காது, நேசம் செய்து உன்னோடு என்னை உயிர் வேறின்றி உயிர் ஒன்றாகவே கூசம் செய்யாது கொண்டாய். அங்ஙனம் கொண்டது உன்பிழையன்றோ? என்கிறார். இதனால், கூசம் செய்யாது செய்திப்பிழை என்க.

என்கிறபடியே முற்றறிவினனான நீ என்னுடைய முன்னைய செயல்களால் வந்த தாழ்வினைப் பார்த்துக் கூசி வேற்றுமை வையாமல் உன்னோடு ஆன்ம பேதம் இல்லாமல் என்னை அங்கீகரித்தாய்; ஆன பின்பு, காரியத்தின் குற்றம் உன்னதன்றோ என்றும்,

[1] பற்றுக்கொம்பு அற்ற கதிகேடு - "ஆவிக்கு ஓர் பற்றுக்கொம்பு நின்னலால் அறிகின்றிலேன் நான்" என்கிறபடியே, கொடி, கொள்கொம்பு ஒழியத் தரிக்கமாட்டாதது போன்று, என் ஆன்மா வாழ்வதற்குக் காரணமாக இருப்பது ஒரு பொருள் உன்னை ஒழிய வேறு காண்கின்றிலேன்; ஆதலால், நான் வேறுகதி இல்லாதவன் என்றும்,

போரவிட்ட பெரும்பழி - "எம்பரம் சாதிக்கலுற்று என்னைப் போரவிட்டிட்டாயே" என்கிறபடியே, என் காரியம் நீ செய்வதாக ஏறிட்டுக்கொண்டு, உன் பக்கல் நின்றும் பிரித்து, உன்குணங்கள் நடையாடாத இவ்வுலகத்திலே தள்ளி உபேக்ஷித்தாய்; இது உனக்கு நீக்க ஒண்ணாத பெரும் பழி அன்றோ என்றும்,

புறம்போனால் வரும் இழவு - "போரவிட்டிட்டு என்னை நீ புறம் போக்கலுற்றால் பின்னை யான் ஆரைக்கொண்டு எத்தை அந்தோ எனது என்பது என்? யான் என்பது என்?" என்கிறபடியே வேறு புகல் இல்லாத என்னை உன்பக்கல் நின்றும் பிரித்து, படைப்புக் காலமே தொடங்கி இவ்வளவும் புகுர நிறுத்தின நீ, என் காரியம் நான் செய்வேனாகப் பார்த்து என்னை உபேக்ஷித்தால், சர்வசக்தியான நீ வெறுத்த பின்பு, சக்தி இல்லாதவனான நான் எந்த உபாயத்தைக் கொண்டு என்ன பேற்றினைச் சாதிப்பது, எனக்கு உதவியாக இருப்பது ஒன்று உண்டு என்பதோர் பொருள் உண்டோ? வேறுபட்டு இருத்தலுக்குத் தகுதியாக இருப்பதொரு நான் உண்டோ? ஐயோ! என்னை என்கையிலே காட்டித் தந்தால் இழவே அன்றோ உள்ளது என்றும்,

உண்டிட்ட முன் தீம்பு - "எனது ஆவியை இன்னுயிரை மனக்கு ஆராமை மன்னி உண்டிட்டாய் இனி உண்டொழியாய்" என்கிறபடியே, என்னுடைய தாழ்ந்தசரீரத்தையும் ஆன்மாவையும் மனத்திற்கு நிறைவு பிறவாமல் எப்பொழுதும் உண்ட நீ, தொடங்கின காரியத்தைக் குறை கிடக்கவிடாமல் கைக்கொண்டு விடாய், உண்ட உணவில் குறைவைத்த உன்னதன்றோ முதல் குற்றம் என்றும்,

1. *இதனால், தம்முடைய அநந்யகதித்வத்தைத் தெரிவித்தபடி.*



[1] அன்பு வளர்ந்த அடி உரம் - கோலமலர்ப்பாவைக்கு அன்பாகிய என் அன்பேயோ" என்கிறபடியே, பெரியபிராட்டியார் பக்கல் வைத்த அன்பின் மிகுதியாலே அவள் பரிகரமான என்பக்கல் கழிபேரன்பினன் ஆனவனே! நான் அந்தப்புரபரிகரம் அன்றோ! என் பக்கல் உனக்கு உண்டான அன்பிற்கு அடி இல்லையோ! ஆகையாலே, அவள் பரிகரம் என்கிற அடி உரம் என்றும்,

[2] உயிர் உறவு - "பெற்று இனிப் போக்குவனோ உன்னை என் தனிப்பேருயிரை" என்கிறபடியே மிக்க வேற்று இனத்தானாய் இருந்து வைத்து, எனக்கு உயிரான உன்னைப் பெற்று வைத்து இனி விடுவேனோ! உயிரை விட்டு உடல் தரிக்கவற்றோ! என்கிற சரீர சரீரி பாவசம்பந்தம் என்றும்,

[3] முதல் அளவு துரக்கைகளாலே பெரு ஆணை அல்ல ஆக்கின - இப்படி "முதல் தனிவித்தேயோ" என்ற திருப்பாசுரம் இறுதியாக, அப்பெருமானுக்கு மறுவாய் திறக்க ஒண்ணாதபடி துரக்கைகளாலே தாம் இட்ட ஆணை பெரு ஆணை அல்லாமையைச் சாதித்த, [4] பேரவா குளப்படியாம்படி - "அதனில் பெரிய என் அவா" என்கிறபடியே தத்வத் திரயத்தையும் விளாக்குலைகொண்டு அவை குளப்படியாம்படி பெரிதான தம்முடைய பரமபக்தி குளப்படியாம்படி, [5] கடல் போன்ற ஆதரத்தோடே சூழ்ந்து தாபங்களை அரித்தமையை வெளியிடுகிறார் பத்தாம் பத்தில் - அதாவது, "என் அவா அறச் சூழ்ந்தாயே" என்று மேலே கூறிய அளவிடமுடியாத தம்முடைய காதற்பெருக்கையும் அவனுடைய காதற்பெருக்கையும் பார்த்தால் இது ஒரு குளப்படியும், அது ஒரு கடலும் என்னும்படியான காதலோடே

1. *அடியுரம் - மூல பலம். உரம் - வலிமை. பரிகரம் - பரிவாரம்.*

2. *இதனால், இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள சரீர சரீரிபாவத்தைக் காட்டினாராயிற்று. சரீரி - ஆன்மா.*

3. *துரக்கை - கக்ஷி; கொள்கை.*

4. *பேரவா - பெரிய ஆசை; ஆழ்வாருடைய ஆசை. குளம்பு அடி - குளப்படி. சிறியது என்பது பொருள். தத்வத்திரயம் - சித்து, அசித்து, ஈச்வரன் என்னும் மூன்று தத்துவங்கள். "அதனில் பெரிய என்னவா" என்றது, திருவாய்.* 10. 10: 10.

5. *கடல் போன்ற ஆதரம் - இறைவனுடைய ஆசை. சித்து அசித்து ஈச்வரன் என்னும் மூன்று தத்துவங்களைக் காட்டிலும் பெரியதான ஆழ்வாருடைய ஆசையும் குளப்படி என்னும் படி - சிறியது என்னும்படி கடல் போன்ற பரந்த பேராசையோடு இறைவன் வந்து ஆழ்வாருடைய துன்பத்தை நீக்கினான் என்றபடி.*

வந்து கலந்து, [1] "சந்தோஷம் அடைந்த பெருமாள் பரதாழ்வானைத் தம்முடைய மடியின்மேல் வைத்துக்கொண்டு தழுவினுர்" என்று, மீண்டு எழுந்தருளி ஸ்ரீபரதாழ்வானை மடியிலே வைத்து அணைத்து உச்சி மோந்து உகந்தாற்போலே, தம்முடைய விடாய் கெடும்படி அநுபவிப்பித்து, தன்னைப்பெருத காரணமாக வந்த இழவோடே கூப்பிட்ட திருவாயாலே "அவாவற்று வீடு பெற்ற குருகூர்ச்சடகோபன்" என்று பேசும்படி "அவா அறச் சூழ் அரியை" என்று [2] ஹரி என்ற திருப்பெயருக்குத் தகுதியாகத் தம்முடைய எல்லாத் தாபங்களையும் அழித்தமையை எல்லாரும் அறியும்படி பிரகாசிப்பிக்கிருர் பத்தாம் பத்தில் என்கை. (10)

## 229

*"உருமை" யோடே "உற்றேன்" ஆக்காதொழிந்தது நாடு திருந்த, நச்சுப்பொய்கை ஆகாமைக்கு, பிரபந்தம் தலைக்கட்ட, வேர்சூடுவார் மண்பற்றுப் போலே என்னுமவற்றிலும்; "இனி, இனி" என்று இருபதின்கால் கூப்பிடும் ஆர்த்தி அதிகார பூர்த்திக்கு என்னுமது முக்யம்.* [3]

என்பது, சூத்திரம்.

வியாக் :—இனி, மேல், இவர் முதன்முதலிலே திருவிருத்தத்திலே [4] "இந்நின்ற நீர்மை இனி யாம் உருமை" என்று துன்புற்றவராய்ச் சரணம் புக்கபோதே விரோதிகளாய் உள்ளனவற்றை நீக்கித் தன்னை அடைவித்தலைச் செய்யாமல் இவ்வளவாக இவரை இவ்வுலகில் வைத்திருந்ததற்குக் காரணம் யாது? என்னும் வினுவிற்கு, வைத்திருந்ததற்குக் காரணங்கள் பலவும் உண்டு என்னு மதனையும், அக்காரணங்கள் பலவற்றுள்ளும் தலையாய காரணம் இன்னது என்னு மதனையும் அருளிச்செய்கிருர் இச் சூத்திரத்தால்.

உருமையோடே உற்றேன் ஆக்காதொழிந்தது - "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும் இந்நின்ற நீர்மை இனி

1. *"அங்கே பரதமாரோப்ய முதித: பரிஷஸ்வஜே"* என்பது, ஸ்ரீராமா. யுத். 134: 39.

2. *அரி - பாவங்களைப் போக்குகிறவன்.*

3. *ஆர்த்தியதிகாரபூர்த்திக்கு என்றது, ஆர்த்தியால்வரும் அதிகார பூர்த்திக்கு என்றபடி. பரம ஆர்த்தியாலே அன்றே பிரபத்தியதிகாரம் நிறைவுபெறுவது. ஆர்த்தி - துன்பம்.*

4. *திருவிருத்தம்*, 1.



யாம் உருமை" என்று தன்னைப் பெறுதற்குத் தடைகளான அறிவின்மை கர்மம்வாசனை ருசி என்னும் இப்பிரகிருதிசம்பந்தங்களை விடுவிக்கவேண்டும் என்று துன்புற்றவராய்த் திருவடிகளிலே விழுந்து விரும்பியபோதே அவற்றைப் போக்கி, [1] "உற்றேன் உகந்து பணி செய்து உனபாதம் பெற்றேன்" என்கிறபடியே திருவடிகளைக் கிட்டி அன்பு முன்னுக அடிமை செய்யப்பெற்றேன் என்னும்படி ஆக்காமல் இவரை இங்கே வைத்தது, நாடு திருந்த - தன்னுடைய படைப்பினுலும் அவதாரங்கள் முதலியவற்ருலும் திருந்தாத இவ்வுலகம் இவருடைய உபதேசத்தாலே [2] "ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல் அவனுடைய, பேரும் தார்களுமே பிதற்ற" என்னும்படி திருந்துகைக்காகவும்,

நச்சுப் பொய்கை ஆகாமைக்கு - பிரபத்தி செய்த உடனே முக்தராம்படி செய்யில் பிரபத்தியை நச்சுப்பொய்கையைப் போன்று நினைத்து அஞ்சினவர்களாய் இதில் இழிவார்இலர் என்று, அது அப்படி ஆகாமைக்காகவும்,

பிரபந்தம் தலைக்கட்ட - தானும் தன் உலகமும் வாழும்படி இவரைக் கொண்டு கவிபாடுவிக்கத் தொடங்கின பிரபந்தம் முடிவு பெறுதற்காகவும்,

[3] வேர் சூடுவார் மண்பற்றுப் போலே - வேர்சூடுமவர்கள் அதன் வாசனையில் உள்ள விருப்பத்தாலே மண்பற்றுக் கழற்ருதது போலே, ஞானிகளைச் சரமசரீரத்தோடேவைத்து அநுபவிக்குமவனுகையாலே, இவருடைய ஞானம் பக்தி என்னும் வாசனை எல்லாம் தோற்றும்படி இருக்கிற திருமேனியில் தனக்கு உண்டான விருப்பத்தாலேயும், என்னுமவற்றிலும் - என்று சொல்லுமவற்றைக்காட்டிலும்,

1. *திருவாய்*. 10. 8 : 10.  2. *திருவாய்*. 6. 7: 2.

3. *"வேர் சூடுமவர்கள் மண்பற்றுக் கழற்ருதாப்போலே ஜ்ஞானியை விக்ரகத்தோடே ஆதரிக்கும். பரமார்த்தனுன இவனுடைய சரீரஸ்திதிக்கு ஹேது, கேவலபகவதிச்சையிறே. 'திருமாலிருஞ்சோலைமலையே' என்கிறபடியே உகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும் பண்ணும் விருப்பத்தை இவனுடைய சரீரைகதேசத்திலே பண்ணும். அங்குத்தை வாசம் சாதனம்; இங்குத்தைவாசம் சாத்யம்." என்னும் ஸ்ரீவசநபூஷண ஸ்ரீசூக்திகள் இங்கு நினைத்தல் தகும். "வஞ்சக்கள்வன்", "மங்கவொட்டு" என்று தொடங்கும் திருவாய்மொழிப் பாசுரங்களின் வியாக்கியானத்தையும் இங்குப் படித்தறிதல் தகும்.*

இனி இனி என்று இருபதின்கால் கூப்பிடும் ஆர்த்தி அதிகார பூர்த்திக்கு என்னுமது முக்கியம் - [1] "இனி யாம் உறுமை" என்றும், [2] "இனி வளைகாப்பார் ஆர்" என்றும், [3] "இனி உன் திருவருளால் அன்றிக் காப்பரிதால்" என்றும், [4] "இனி அவர்கண் தங்காது" என்றும், [5] "இனி உனது வாயலகில் இன்னடிசில் வைப்பாரை நாடாயே" என்றும், [6] "இனி எம்மைச் சோரேலே" என்றும், [7] "எந்நாள் யான் உன்னை இனி வந்து கூடுவனே" என்றும், [8] "எங்கு இனித் தலைப்பெய்வனே" என்றும், [9] "இனி என் ஆரமுதே கூயருளாயே" என்றும், [10] "ஆவி காப்பார் இனி யார்" என்றும், [11] "நெஞ்சு இடர்தீர்ப்பார் இனி யார்" என்றும், [12] "இனி உன்னை விட்டு ஒன்றும் ஆற்றகிற்கின்றிலேன்" என்றும், [13] "தரியேன் இனி" என்றும், [14] "இனி யாரைக் கொண்டு என் உசாகோ" என்றும், [15] "அத்தனையாம் இனி என் உயிர் அவன் கையதே" என்றும், [16] "நாரைக் குழாங்கள்காள் பயின்று என் இனி" என்றும், [17] "இனி இருந்து என் உயிர்காக்குமாறு என்" என்றும், [18] "இனி நான் போகலொட்டேன்" என்றும், [19] "உண்டிட்டாய் இனி உண்டொழியாய்" என்றும், [20] "உன்னைப்பெற்று இனிப்போக்குவனோ" என்றும் இப்படி இருபதின்கால் கூப்பிடும்படியான தொடர்ந்து வரும் துன்பத்தை விளைத்துப் பரமபக்தி பர்யந்தமான அதிகார பூர்த்தியை உண்டாக்குகைக்கு என்னுமதுவே தலையாய காரணம் என்கை.

கழிபெரும் துன்பத்தாலேயன்றோ பிரபத்தி அதிகாரம் நிறைவு பெறுவது. ஆகையாலே, மற்றைய காரணங்கள் எல்லாம் அத்துணைச் சிறப்புடைக்காரணங்கள் ஆகமாட்டா. இவரை இவ்வுலகில் வைத்ததற்குத் தலையாய காரணம் இது என்றதாயிற்று. (11)

---

1. திருவிருத்தம், 1.
2. திருவிருத்தம், 13.
3. திருவிருத்தம், 62.
4. திருவாய். 1. 4: 4.
5. திருவாய். 1. 4: 8.
6. திருவாய். 2. 1: 10.
7. திருவாய். 3. 2: 1.
8. திருவாய். 3. 2: 9.
9. திருவாய். 4. 9: 6.
10. திருவாய். 5. 4: 2.
11. திருவாய். 5. 4: 9.
12. திருவாய். 5. 7: 1.
13. திருவாய். 5. 8: 7.
14. திருவாய். 7. 3: 4.
15. திருவாய். 9. 5: 2.
16. திருவாய். 9 5: 10.
17. திருவாய். 9. 9: 2.
18. திருவாய். 10. 10: 1.
19. திருவாய். 10. 10: 6.
20. திருவாய். 10. 10: 7.



## 230

*"கமலக்கண்ணன்" என்று தொடங்கிக் "கண்ணுள் நின்று" இறுதி "கண்டேன்" என்ற பத்தும் உட்கண்ணுலேயாய், "காண்பான் அவாவுதல்" அதில் இரட்டி ஆகையாலே, "கண்டு களிப்ப" அளவும் பரஜ்ஞான கர்ப்ப பரபக்தி.* [1]

என்பது, சூத்திரம்.

வியாக் :— இத்துன்பத்துக்கு அடியான பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளின் நிலைகள் எந்த எந்தத் திருவாய்மொழிகளிலே விளங்குகின்றன என்னும் வினாவிற்கு, மேலே மூன்று சூத்திரங்களால் விடை அருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றி, அவற்றுள் பரபத்தியின் நிலை விளங்கும் திருப்பாசுரங்களை அருளிச்செய்கிறார் இச்சூத்திரத்தால்.

கமலக்கண்ணன் என்று தொடங்கி - [2] "கமலக்கண்ணன் என் கண்ணினுள்ளான்" என்று தாமரைக்கண்ணனானவன் என் கண்ணுக்குப் புலப்படலானான் என்று தொடங்கி, கண்ணுள் நின்று இறுதி- [3] "கண்ணுள் நின்று அகலான்" என்று என் கண்வட்டத்தில் நின்றும் கால்வாங்குகிறிலன் என்னுமது அளவாக, கண்டேன் என்ற பத்தும்- [4] "என் கண்ணனை நான் கண்டேனே" என்றும், [5] "கலைப் பல் ஞானத்து என் கண்ணனைக் கண்டு கொண்டு" என்றும், [6] "நறும் துழாய்க் கண்ணி அம்மா! நான் உன்னைக் கண்டு கொண்டே" என்றும், [7] "கைதொழ இருந்தாய் அது நானும் கண்டேனே" என்றும், [8] "ஏரார் கோலம் திகழக் கிடந்தாய் கண்டேன் எம்மானே" என்றும், [9] "திருவிண்ணகர்க் கண்டேனே" என்றும், [10] "தேவர்கட்கு எல்லாம் கருவாகிய கண்ணனைக் கண்டு கொண்டேனே" என்றும், [11] "கண்டேன் கமலமலர்ப்பாதம்" என்றும் சொல்லப்பட்ட இப் பத்துத்

---

1. *உட்கண் - மனமாகிய கண்; ஞானக்கண் என்றபடி. பரஜ்ஞாந கர்ப்ப பரபக்தி - பரஞானத்தை உள்ளே கொண்டிருக்கிற பரபக்தி. என்றது, மனத்திலே அநுபவம் நடவாநிற்க, பெற்றல்லது தரியாத வெளி அநுபவத்திலே விருப்பம் செல்லுகையாலே பரஞானகர்ப்ப பரபக்தி என்கிறார் என்றபடி.*
2. திருவாய். 1. 9: 9.
3. திருவாய். 10. 8: 8.
4. திருவாய். 2. 8: 10.
5. திருவாய். 3. 2: 10.
6. திருவாய். 4. 7: 7.
7. திருவாய். 5. 7: 5.
8. திருவாய். 5. 8: 1.
9. திருவாய். 6. 3: 1.
10. திருவாய். 9. 4: 8.
11. திருவாய். 10. 4: 9.

திருப்பாசுரங்களிலும் கூறிய காணுதல் [1]"நெஞ்சு என்னும் உட்கண் " என்கிற அகக்கண்ணுன மனத்தாலே உண்டானதாய்,

காண்பான் அவாவுதல் அதில் இரட்டி ஆகையாலே-[2]"கைய பொன்னுழி வெண்சங்கொடு காண்பான் அவாவுவன் நான்" என்றும், [3]"அடியேன் காண்பான் அலற்றுவன்" என்றும், [4]"உம்மைக் காணும் ஆசையுள் நலிகின்ருள்" என்றும், [5]"கூவுகின்றேன் காண்பான்" என்றும், [6]"மெய் கொள்ளக் காண விரும்பும் என் கண்களே" என்றும், [7]"கூவியும் காணப் பெறேன் உன கோலமே" என்றும், [8]"உன்னை எங் நாள் கண்டு கொள்வனே" என்றும், [9]"கோலமேனி காணவாராய்" என்றும், [10]"தடவுகின்றேன் எங்குக் காண்பன்" என்றும், [11]"பாவியேன் காண்கின்றிலேன்" என்றும், [12]"உன்னைக் காண்பான் நான் அலப்பாய்" என்றும், [13]"உலகம் பரவக் கிடந்தாய் காணவாராயே" என்றும், [14]"என்று கொல் கண்கள் காண்பதுவே" என்றும், [15]"விளங்க ஒரு நாள் காணவாராய்" என்றும், [16]"உன்னைக் காண்பான் வருந்தி எனை நாளும்" என்றும், [17]"அலைகடல் கடைந்த அப்பனே காணுமாறு அருளாய்" என்றும், [18]"ஒருநாள் காணவாராய்" என்றும், [19]"தொண்டனேன் உன் கழல் காண ஒரு நாள் வந்து தோன்ருயே" என்றும், [20]"உன்னை எங்கே காண்கேனே" என்றும், [21]"உன்னைக் காணக் கருதும் என் கண்ணே" என்றும் புறக்கண்களாலே அவனைக் காண ஆசைப்பட்டுக் கூப்பிட்ட திருப்பாசுரங்கள் இருபது உண்டு ஆகையாலே,

கண்டு களிப்ப வளவும் - [22]"கண்டு களிப்பக் கண்ணுள் நின்று அகலான்" என்கிற திருமாலிருஞ்சோலைமலை அளவாக, பரஜ்ஞான கர்ப்ப பரபக்தி-உள் அநுபவம் செல்லாநிற்க, பெற்றன்றித் தரியாத வெளி அநுபவத்திலே விருப்பம் நடக்கையாலே பரஞானத்தை உள்ளே கொண்டிருக்கிற பரபக்தி என்கை. (12)

1. பெரியதிருவந். 28.
2. திருவிருத்தம், 84.
3. திருவாய். 1. 5: 7.
4. திருவாய். 2. 4: 2.
5. திருவாய். 3. 2: 8.
6. திருவாய். 3. 8: 4.
7. திருவாய். 3. 8: 7.
8. திருவாய். 3. 8: 8.
9. திருவாய். 4. 7: 1.
10. திருவாய். 4. 7: 9.
11. திருவாய். 4. 7: 10.
12. திருவாய். 5. 8: 4.
13. திருவாய். 5. 8: 9.
14. திருவாய். 5. 9: 5.
15. திருவாய். 6. 9: 4.
16. திருவாய். 6. 9: 6.
17. திருவாய். 8. 1: 1.
18. திருவாய். 8. 5: 1.
19. திருவாய். 8. 5: 6.
20. திருவாய். 8. 5. 10.
21. திருவாய். 9. 4: 1.
22. திருவாய். 10. 8: 7.



## 231

"இருந்தமை" என்றது பூர்ண பரஜ்ஞானம்.

என்பது, சூத்திரம்.

வியாக்:- அதன்பின் பரஞானநிலையினைத் தெரிவிப்பதான திருப்பாசுரம் இன்னது என்கிருர் இச்சூத்திரத்தால்.

[1]"அடியார்கள் குழாங்களை - உடன் கூடுவது என்று கொலோ" என்று ஆசைப்பட்டபடியே [2]"அந்தமில் பேரின்பத்து அடியரோடு இருந்தமை" என்று அர்ச்சிராதி நெறியாலே பரமபதத்திற்குச் சென்று பகவானுடைய சொரூபம் முதலியவற்றைப் பரிபூர்ண அநுபவம் பண்ணுகிற நித்தியசூரிகள் திரளிலே கூடியிருந்தாராகக் கண்டு பேசின [3]"சூழ்விசும்பு அணிமுகில்" என்ற திருப்பதிகம் பூரணமான பரஞானம் என்கை. (13)

## 232

"முடிந்த அவா" என்றது பரமபக்தி.

என்பது, சூத்திரம்.

வியாக்:- அதன்பின் பரமபக்தியின் நிலையினைத் தெரிவிப்பதான திருவாய்மொழி இன்னது என்கிருர் இச்சூத்திரத்தால்.

அதாவது, "அந்த மில் பேரின்பத்து அடியரோடு இருந்தமை" யாகக் கண்ட அது தான் மனத்தின் அநுபவமாய் வெளியில் அநுபவிக்கும் அநுபவத்திற்குத் தக்கதாகஇன்மையாலே பெருவிடாய் பிறந்து கூப்பிட்டுத் தரிக்கமாட்டாமல் [4]திரு ஆணை இட்டுத் தடுத்துப் பெரு ஆணை அல்லாமையைச் சாதித்துப் பேற்ருேடே தலைக்கட்டின [5]"முடிந்த அவாவில் அந்தாதி இப்பத்து" என்கிற [6]"முனியே நான்முகனே" என்ற திருவாய்மொழி, பக்தியினுடைய முடிந்த நிலமான பரமபக்தி என்கை. (14)

## 233

இவை ஜ்ஞாந தர்சந ப்ராப்தி அவஸ்தைகள்.

என்பது, சூத்திரம்.

வியாக்:- பரபக்தி முதலியவற்றின் தன்மையைப் பகவானுடைய வார்த்தையாலே விளக்குகிருர் இச்சூத்திரத்தால்.

1. திருவாய். 2. 3: 10.
2. திருவாய். 10. 9: 11.
3. திருவாய். 10. 9: 1.
4. திருவாய். 10. 10: 2.
5. திருவாய். 10. 10: 11.
6. திருவாய். 10. 10: 1.

இந்தப் பரபக்தி பரஞான பரமபக்திகள், [1]"அருச்சுனு ! இந்த உலகமே உருவமாக இருக்கிற நான் என்னிடத்திலேயே வைக்கப் பட்ட பக்தியினுலேயே உண்மையாக அறிகிறதற்கும் பார்ப்பதற்கும் என்னை அடைவதற்கும் தகுந்தவனுக இருக்கிறேன்" என்று அருச சுனனைக் குறித்துத் திருத்தேர்த்தட்டிலும், [2]"பரபக்தி பரஞான பரமபக்தி என்னும் இவைகளையே நான் மேற்கொண்டிருக்கும்படி என்னைச் செய்தருள வேண்டும்" என்று வேண்டிக் கொண்ட ஸ்ரீ பாஷ்யகாரரைக் குறித்து [3]"என் விஷயமான ஞானம், என்னைப் பார்ப்பது, என்னை அடைவது என்னும் இவைகளில் ஒரு ஐயமும் இல்லாமல் சுகமாக இரு" என்று சேரபாண்டியன் என்னும் சீரிய சிங்காசனத்திலிருந்தும் அவன் அருளிச்செய்த ஞானதர்சன பிராப்தி அவஸ்தைகள் என்கை.

இதனுல், எம்பெருமானைக் கூடுதலும் பிரிதலுமே இன்பதுன்பங் களாம்படியான பரபக்தியானது ஞான அவஸ்தையாகவும், எம்பெரு மானுடைய சொரூப ரூப குண விபூதிகளை மிகத்தெளிவாக அறிகிற பரஞானமானது தரிசன அவஸ்தையாகவும், அப்படி அறிந்த பொருளை அப்போதே கிட்டி அநுபவிக்கப் பெருவிடில் முடிந்து போம்படியான பரமபக்தியானது பிராப்தி அவஸ்தையாகவும் சொல்லப்படும் என்றபடி. (15)

**234**

*[4]அவித்யா நிவர்த்தக ஜ்ஞாந பூர்த்தி ப்ரத பக வத்பிரசாதாத் மோக்ஷ லாபம் என்கை, "மயர்வற, வீடுபெற்ற" என்ற பிரபந்த ஐகார்த்த்யம்.*

என்பது, சூத்திரம்.

வியாக்:— [1]மேல் "நூறே சொன்ன, பத்து நூறு, ஓராயிரம் என்றதும் சாபிப்பிராயம்" என்றதில் "நூறே சொன்ன, பத்து நூறு" என்றதன் கருத்தைப் [2]பத்தின் முடிவிலே விரிவாகக் கூறி முடித்து, [3]இடைப்பிறவரலாய் அருளிச்செய்யவேண்டுவனவற்றையும் அரு ளிச்செய்தாராய் நின்ருர் இதுகாறும். இனி, கூறப்படாமல் நின்ற "ஓராயிரம்" என்றதன் கருத்தை விளக்காநின்றுகொண்டு பிரபந் தத்தை முடித்தருளுகிருர் இச்சூத்திரத்தால்.

அதாவது, அவித்தியா நிவர்த்தக ஞாநபூர்த்தி பிரத பகவத் பிரசாதாத் மோக்ஷலாபம் என்கை - பிறப்பு இறப்புகட்குக் காரணமான அஞ்ஞானத்தைப் போக்குவதான ஞானத்தின் நிறைவினைக் கொடுத்த, ஞானம் முதலான குணங்கள் நிறைந்தவனுன பகவானுலே, ஒரு காரணமும் இல்லாமலே புரிந்த திருவருளாலே, இவ்வுலக வாழ்வினை நீக்குதல் முன்னுகப் பகவானை அடைதலாகிற மோக்ஷத்தி னுடைய இலாபம் என்று சொல்லுதல், மயர்வற வீடு பெற்ற என்ற பிரபந்த ஐகார்த்தியம் - "மயர்வற மதிநலம் அருளினன்" என்று தொடங்கி "அவாவற்று வீடு பெற்ற" என்று தலைக்கட்டின இப்பிர பந்தத்துக்கு ஒன்ருன கருத்துப் பொருள் என்கை.

இதனுல், ஞானத்தைக் கொடுத்த பகவானுடைய திருவருளே, மோக்ஷத்தையும் கொடுக்கும் என்னும் இது, இப்பிரபந்தத்துக்குக் கருத்துப்பொருள் என்ருராயிற்று. (16)

ஆக, இப்பிரபந்தத்தால், சர்வேச்வரன் தன் பேரருளாலே, அறி வில்லாத மக்கள் உண்மை ஞானத்தையுடையராய் நல்லதும் தீயதும் பகுத்து அறிதற்குச் சாஸ்திரங்களைக் கொடுத்தபடியையும், அந்தச் சாஸ்திரங்களால் உண்மைஞானம் பிறப்பதில் உளவாகும் அருமையை நினைத்துச் சாஸ்திரங்களின் கருத்துப் பொருளான திரு மந்திரத்தைத் தன் பேரருளாலே வெளியிட்டபடியையும், அந்தச் சாஸ்திரங்களிலும் சாஸ்திரங்களின் கருத்துப் பொருளான திரு மந்திரத்திலும் சொல்லப்பட்ட விஷயங்களின் வேறுபாடு முதலிய வற்றையும், அந்தச் சாஸ்திரங்களிலும் திருமந்திரத்திலும் ஊன்றின வர்களான அதிகாரிகளுடைய தன்மைகளையும், அந்தக் காரணத் தாலே சொல்லவேண்டி வந்த திருவாய்மொழியினுடைய பெருமை

---

1. *பக்த்யா த்வநந்யயாசக்ய: அஹமேவம் விதோர்ஜுந, ஜ்ஞாதும் த்ரஷ்டுஞ்ச தத்வேந ப்ரவேஷ்டுஞ்ச பரந்தப.*
என்பது, ஸ்ரீகீதை, 11: 54.

2. *"பரபக்தி பரஜ்ஞாந பரமபக்தி ஏக ஸ்வபாவம் மாம் குருஷ்வ"*
என்பது, கத்யத்ரயம்.

3. *"மத்ஜ்ஞாந தர்சந ப்ராப்திஷு நிஸ்ஸம்ஶய: ஸுகமாஸ்வ"*
என்பது, கத்யத்ரயம்.

4. *அவித்யா - அஞ்ஞானம்; அறிவின்மை. நிவர்த்தகம் - போக்க வல்லதான. ஞானபூர்த்தி - தத்துவ ஞானத்தின் நிறைவு. ப்ரத - கொடுத்த; அருளின. பகவத் பிரசாதாத் - பகவானுடைய கிருபையினுலே. மோக்ஷ லாபம் - மோக்ஷத்தினுடைய பேறு. ஐகார்த்தியம் - ஒரே பொருளாக விருக்கும் தன்மை.*

1. *'மேல்' என்றது, 215ஆம் சூத்திரத்தை.*

2. *'பத்தின் முடிவிலே விரிவாகக் கூறி முடித்து' என்றது, 218ஆம் சூத்திர முதல் 228ஆம் சூத்திர முடிய கூறியுள்ளனவற்றை.*

3. *'இடைப்பிறவரலாய் அருளிச்செய்யவேண்டுவனவற்றையும்' என்றது, 229ஆம் சூத்திர முதல் 233ஆம் சூத்திரமுடிய உள்ளனவற்றை.*

யினையும், அதனை அருளிச்செய்த ஆழ்வாருடைய பெருமையினையும், அந்தப் பெருமைக்கு மூலமான பகவானுடைய திருவருளையும், அத் திருவருள் காரணமாக இவர்க்கு உண்டான ஞானத்தையும் பக்தியை யும், அந்த ஞான பக்தி நிலைகளில் இவர் பேசும் பேச்சுக்களையும், அவற்றுள் பக்தி நிலையில் பகவானுடைய அடியார் எல்லாரோடும் இவர்க்கு உண்டான ஒப்புமையினையும், பக்தி நிலையில் பேசும் அந்யா பதேசங்களுக்குச் சுவாபதேசங்களையும், அந்தப்பக்திக்கு நிலைக்கள மான திவ்ய தேசங்களில் நிற்கிற சர்வேச்வரனுடைய குணவிசேடங் களையும், அந்தக் குணங்களையுடைய எம்பெருமானிடத்தில் உண் டான அநுபவங்களால் தோன்றின அன்பினாலே தூண்டப்பட்டு இப் பிரபந்தங்கள் அவதரித்தபடியையும், சொல்லப்படுகின்ற பொருளின் ஒப்புமையாலே ஸ்ரீகீதையோடு திருவாய்மொழிக்கு உண்டான ஒப்பு மையையும், அதனைக் காட்டிலும் இதற்கு உண்டான சிறப்பினையும், இத்திருவாய்மொழியில் இவர் உபதேசிக்கிற விஷயபேதத்தையும், அந்த அந்த விஷயங்கள்தோறும் உபதேசிக்கிற அர்த்த விசேடங் களையும், அந்தக் காரணத்தாலே உபதேசத்திற்கு உரியவனான மாணாக்கன் இலக்கணத்தையும், மாணாக்கர்ஆதற்குரிய இலக்கணம் இல்லாதார்க்கும் இவர் உபதேசிப்பதற்குரிய காரணங்களையும், புகழ் பொருள் முதலியவற்றில் விருப்பம் இன்றிப் பகவானுக்குச் செய்யும் தொண்டு என்ற எண்ணத்தால் உபதேசிக்கையாலே உபதேசம் பயன் பெற்ற படியையும், உபதேசிக்கிற இப் பிரபந்தங்கள்தாம் இரஹஸ் யத்திரயத்தின் பொருள் என்னுமதனையும், அந்த இரஹஸ்யத்திரயத் தில் சொல்லப்படுகின்ற ஐம்பொருள்களும் இப்பிரபந்தங்களிலே சுருக்கமாகவும் விரிவாகவும் சொல்லப்படுகின்ற வகையினையும், நூலின் தொடக்கத்தில் சொல்லப்படவேண்டிய வாழ்த்து வணக்கம் வருபொருள்உரைத்தல் என்னும் இவைகள் இப் பிரபந்தத்தின் முதலிலே அமைந்துள்ள படியையும், நல்லார்கள்தம்மை நலம்புரிந்து காத்தல் முதலியவைகளாலே உலகத்தைக் காக்கும் பொருட்டு எடுத்த சர்வேச்வரனுடைய அவதாரங்கள்போலே இப்பிரபந்தத்தி னுடைய அவதாரம் என்னுமதனையும், இத்திருவாய்மொழியில் பத்துப் பத்துக்களாலும் சொல்லப்பட்ட சர்வேச்வரனுடைய பரத் துவம் முதலான குணங்களையும், இப்பத்துக் குணங்களோடும் கூடின சர்வேச்வரன் இப் பத்துப் பத்துக்களாலும் இவ்வாழ்வார்க் குத் தத்துவஞானம் முதலாக மோக்ஷம் அளவாகப் பிறப்பித்த நிலை விசேடங்களையும், பத்துத்தோறும் இவர் தாம் பிறர்க்கு உபதேசித்த வகைகளையும், இவர்க்கு முதன்முதலிலேயே இவ்வுலக வாழ்வில் துன்பம் பிறந்திருக்கச்செய்தே சர்வேச்வரன் இவரை இவ்வுலகில்



வைத்திருந்ததற்குச் சிறந்த காரணம் இன்னது சிறப்பில்லாத கார ணங்கள் இன்னவை என்னுமதனையும், இவர்க்குப் பிறப்பித்த பரபக்தி பரஞான பரமபக்திகளாகிற நிலை வேறுபாடுகளைக் காட்டும் திருவாய் மொழிகள் இன்னவை இன்னது என்னுமதனையும், அஞ்ஞானத்தைப் போக்குவதான நிறைந்த ஞானத்தைக் கொடுத்த பகவானுடைய பேரருளே விருப்பம் இல்லாத இவ்வுலக வாழ்வினை அறுத்து விரும்பப் படுவதான மோக்ஷலாபத்தை உண்டாக்கும் என்பது இப்பிரபந்தத் துக்கு ஒன்றான கருத்துப் பொருள் என்னுமதனையும், ஆஸ்திகர்களாய் ஆழ்வார் அபிமானத்திலே ஒதுங்கி அவருடைய திவ்ய சூக்திகளில் அன்புடையவர்களாய் வேறொன்றனையும் கருதாதவர்களாய் இருப்ப வர்கள் எல்லாரும் சொல்லி வாழும்படி மிகத் தெளிவாக அருளிச் செய்து தலைக்கட்டினார்.

**ஆசார்யஹ்ருதய மூலமும், அதன் வியாக்கியானத்தின் தமிழாக்கமும்**

முற்றுப்பெற்றன.

---

அழகியமணவாளப் பெருமாள் நாயனார்

திருவடிகளே அரண்.

---

மணவாளமாமுனிகள் மலரடி வாழ்க.

மாறன் மலரடி வாழ்க.

---

தந்தருள வேண்டும் தவத்தோர் தவப்பயனாய்
வந்த முடும்பை மணவாளா — சிந்தையினால்
நீயுரைத்த மாறன் நினைவின் பொருளனைத்தென்
வாயுரைத்து வாழும் வகை.

ஆழ்வார்கள் வாழி அருளிச் செயல்வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி — ஏழ்பாரும்
உய்ய அவர்கள் உரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

அடியார்கள் வாழ அரங்கன் நகர்வாழச்
சடகோபன் தண்தமிழ்நூல் வாழக் — கடல்சூழ்ந்த
மன்னுலகம் வாழ மணவாள மாமுனியே
இன்னுமொரு நூற்றாண் டிரும்.

---

ஸ்ரீ:

ஸ்ரீமதேராமாநுஜாய நம:

ஆசாரிய ஹிருதய சூத்திரங்களின்

# முதற்குறிப்பு அகராதி

ஸ்ரீ:

# பிழை திருத்தம்

| பக். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 15 | 21 | 5 | 4 |
| 16 | 11 | அஜ்ஞாநங்நள் - | அஜ்ஞாநங்கள் |
| 17 | 23 | என்கிறயடியே - | என்கிறபடியே |
| 17 | 27 | பெரிய திருவர் - | பெரிய திருவந். |
| 18 | 5 | உள்னன - | உள்ளன. |
| 28 | 24 | — | "ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்ககாமோ யஜேத" என்பது பிரமாணம். |
| 35 | 6 | 4 | — |
| 59 | 1 | இருக்குத் - | இருக்குந் |
| 65 | 24 | எவல் - | ஏவல் |
| 80 | 15 | 3 | 2 |
| 101 | 1 | ஒளிபின் - | ஒளியின் |
| 102 | 21 | திருபாசுரத்தில் - | திருப்பாசுரத்தில் |
| 112 | 11 | பிரளயத்தை - | பிரளயத்தைச் |
| 117 | 23 | கூநுவன - | கூறுவன |
| 122 | 24 | — | 5. திருவாய். 5. 8: 11. |
| 145 | 33 | வில்வி - | வில்லி |
| 161 | 31 | அர்ச்சாவதாத்தை - | அர்ச்சாவதாரத்தை |
| 168 | 31 | கொள்ளாமல - | கொள்ளாமல் |
| 180 | 36 | நிநுத்தல் - | நிறுத்தல் |
| 202 | 22 | முதலிவற்றின் - | முதலியவற்றின் |
| 213 | 7 | ஸ்ரீநந்தகோபாக்கும் - | ஸ்ரீநந்தகோபர்க்கும் |
| 217 | 29 | நித்தயசூரி - | நித்தியசூரி |
| 233 | 30 | திருவாய் - | திருவாய் |
| 249 | 28 | அபெடவதற்கு - | அடைவதற்கு |
| 250 | 26 | தீக்காற்று - | தீகாற்று |
| 257 | 33 | பெரும்செய - | பெரும்செய் |
| 266 | 32 | பரமாத்விற்கு - | பரமாத்மாவிற்கு |
| 281 | 32 | அதனை - | அதனை |
| 320 | 23 | எள்கிறபடியே - | என்கிறபடியே |
| 334 | 32 | முதலாகவுஸடய - | முதலாகவுடைய |
| 359 | 30 | ஆன்பசொரூபம் - | ஆன்மசொரூபம் |

| பக். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 388 | 24 | எள்னும்படி - | என்னும்படி |
| 389 | 12 | 24 | 8 |
| 390 | 13 | உள்ளுத்துள் - | உள்ளத்துள் |
| 390 | 21 | கரியாய - | கரியான |
| 391 | 27 | மற்றெென்றனே - | மற்றென்றனே |
| 392 | 21 | தலைகொள்ள | தலைக்கொள்ள |
| 392 | 25 | யாழிளிசை - | யாழினிசை |
| 392 | 28 | எம்மானே - | எம்மானைச் |
| 393 | 14 | நிள்று - | நின்று |
| 394 | 1 | இனிமையை - | இனிமையைத் |
| 394 | 7 | புள்ளுடை - | புள்ளுடைத் |
| 395 | 33 | திகுவாய் - | திருவாய் |
| 398 | 24 | நண்டவாறே - | கண்டவாறே |
| 400 | 18 | மென்படை - | மென்பெடை |
| 400 | 23 | ஸ்ரீபாதவதம் - | ஸ்ரீபாகவதம் |
| 401 | 30 | எள்பது | என்பது |
| 402 | 3 | விசேஷடம் - | விசேடம் |
| 402 | 7 | தன்னிறம் - | நன்னிறம் |
| 402 | 31 | — | பெரியதிரு. 7. 3: 1. |
| 403 | 13 | மனத்திலுன்ள - | மனத்திலுள்ள |
| 403 | 18 | மாமுத்து – | மாமுத்தம் |
| 409 | 36 | ஸ்ரீயாஸார்த்தம் – | ச்ரியாஸார்த்தம் |
| 411 | 12 | அடியேமுகஃகே - | அடியோமுக்கே |
| 412 | 6 | திருக்கண்சுள் - | திருக்கண்கள் |
| 412 | 9 | சௌகார்த்தப் - | சௌகார்த்தம் |
| 413 | 15 | கடகிலீ - | கட்கிலீ |
| 414 | 18 | யஅநுபவமும் - | யநுபவமும் |
| 424 | 17 | பட்டலு - | பட்டது |
| 425 | 36 | பேரேயில் - | பேரெயில் |
| 451 | 15 | உயரல் - | உயிரல் |
| 471 | 35 | தீருவாய் - | திருவாய் |
| 518 | 16 | குணங்கணைக் - | குணங்களைக் |
| 538 | 31 | திருபதிகுத் - | திருப்பதிகத் |
| 560 | 21 | இத்த - | இந்த |
| 573 | 23 | குற்றகங்கள் - | குற்றங்கள் |
| 579 | 18 | 5 | — |
| 640 | 20 | சிறுது - | சிறிது |